श्री:

श्रीरघुनन्दन परब्रह्मणे नमः

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

# அயோத்யா காண்டம்.

ஸஞ்சிகை 1. பக்கம் 119.

கோவிந்த ராஜீயம் முதலான வ்யாக்யானங்களை அநுஸரித்து

கண்டப்பாளையம் வித்வான்

**உ. வே. வே. ஸ்ரீநிவாஸாசாரியார் ஸ்வாமிகளால்,**

பதவுரை, பொழிப்புரை தாத்பர்யங்களுடன்

தமிழில் மொழிபெயர்த்து

கோயமுத்தூர்

**இதிஹாஸ ப்ரகடன சாலா**

மூலமாய்

கோயமுத்தூர் ரிலையன்ஸ் அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது.

முதல் பதிப்பு 1000.

1930.

श्रीः

श्रीरघुनन्दन परब्रह्मण नमः

# श्रीमद्वाल्मीकि रामायणम्

## अयोध्या काण्डम्

கோவிந்த ராஜீயம் முதலான வ்யாக்யானங்களை அநுஸரித்து
சுண்டப்பாளையம் வித்வான்

உ. வே. வே. ஸ்ரீநிவாஸாசாரியார் ஸ்வாமிகளால்,

பதவுரை, பொழிப்புரை தாத்பர்யங்களுடன்
தமிழில் மொழிபெயர்த்து

கோயமுத்தூர்

इतिहास प्रकटन शाला

மூலமாய்

கோயமுத்தூர் ரிலையன்ஸ் அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது.

முதல் பதிப்பு 1000.

1930.

श्री ।



श्रीराघवं दशरथात्मजमप्रमेयं सीतापतिं रघुकुलान्वयरत्नदीपम् ।
आजानुबाहुमरविन्ददलायताक्षं रामं निशाचरविनाशकरं नमामि ॥

7966

॥ श्री: ॥

## श्री रघुनन्दन परब्रह्मणे नमः

# முகவுரை.

ஸ்ரீய:பதியாய், அவாப்த ஸமஸ்த காமனாய், ஸமஸ்த கல்யாண குணாத்மகனான ஸர்வேச்வரன் "वैकुण्ठे तु परे लोके श्रिया सार्धं जगत्पतिः । आस्ते विष्णुरचिन्त्यात्मा भक्तैर्भागवतैस्सह ॥" என்கிறபடியே, ஸ்ரீ வைகுண்டம் என்கிற திவ்ய லோகத்தில், திருமாமணி மண்டபத்தில், ஸ்ரீ பூமி நீளாதிகளுடன் வீற்றிருந்து, அனந்த கருட விஷ்வக்ஸேனாதிகளான நித்யர்களாலும், முக்தர்களாலும், நிரந்தர பரிசர்யமாண சரணனாயிருக்கச் செய்தேயும், அப்படியே, ஸ்வசரணயுகள பரிசர்யைப்பசை இட்டுப் பிறந்திருந்தும், அதை இழந்து ப்ரளய ஸமயத்தில் ப்ரக்ருதியில் உறைபோட்டுப் போன்போலே, பரிக்ஷீண ஜ்ஞானராய், போக மோக்ஷ சூன்யராய் கிடக்கிற ஜீவாத்மாக்களைக் கடாக்ஷித்தருளி. "एवं संसृतिचक्रस्थे भ्राम्यमाणे स्वकर्मभिः । जीवे दुःखाकुले विष्णोः कृपा काप्युपजायते ॥" என்கிறபடியே தயமான மனவாய், "विचित्रा देहसंपत्तिरीश्वराय निवेदितुम् । पूर्वमेव कृता ब्रह्मन् हस्तपादादिसंयुता ॥" என்கிறபடியே மஹாகருணையாலே ஸ்ருஷ்டி காலத்திலே இவர்களுக்கு, ஸ்வசரணகமல ஸமாச்ரயணோசிதங்களான, கரணகளேபரங்களைக் கொடுத்தவிடத்திலும், அவை தன்னையே கொண்டு ஆறு கடக்கக் கொடுத்த தெப்பத்தைக் கொண்டு அவ்வாற்றின் வழியே கொண்டுபோய் ஸமுத்ரத்தில் புகுவாரைப்போலே ஸம்ஸார விஷய ப்ரவணராயிருந்த வளவில், அவர்களுக்கு, "हन्तुं तमस्सदसती च विवेक्तुमीशः मानं प्रदीपमिव कारुणिको ददाति ॥" என்கிறபடியே ஸகல லோக ரக்ஷகனாய், வேதாக்ய சாஸ்த்ரத்தை ப்ரவர்த்திப்பித்தவளவிலும், அதையும், அப்ரதிபத்தி, விப்ரதிபத்தி, அன்யதாப்ரதிபத்திகளாலே இவர்கள் காற்கடைக்கொள்ள, விசித்ர பலமான ஆஜ்ஞையை உபேக்ஷிக்கும் தேசங்களில் காடுகளை சென்று, குடிபுகும் ராஜாக்களைப்போலே, ஸ்வாசார முகத்தாலே இவர்களைத் திருத்தவேணுமென்று திருவுள்ளம்பற்றி, ஸ்ரீராமாதி ரூபத்தாலே நாலுவராய் அவதரித்தருளினான்.

இவ்விடத்தில் "ஸ்ரீராம" ரூபியாய் அவதரித்து பித்ருவசன பரிபாலநாதிரூபங்களான ஸாமான்ய தர்மங்களையும், சரணாகத ரக்ஷண ரூபமான விசேஷ தர்மத்தையும் அநுஷ்டித்தும், "லக்ஷ்மண" ரூபியாய், இந்திரஜித்தை நிரஸித்து பகவச்சேஷத்வ ரூபமான விசேஷ தர்மத்தை அறிவித்தும், "பரத" ரூபியாய் கைங்கர்ய நிஷ்டையைச் செய்து பகவத்பாரதந்த்ர்யரூபமான "गरिष्ठ-" கர்மத்தை வெளியிட்டும், "சத்ருக்ன" ரூபியாய் லவணாஸுரனை ஸம்ஹரித்து, பாகவத சேஷத்வரூபமான பரமதர்ம விசேஷத்தை நிலைநிறுத்தியும் போந்தான்.

இப்படி, ஒரு கால விசேஷத்தில் அவதீர்ணனை ஸ்ரீய:பதி அநுஷ்டித்துக் காட்டின தர்ம விசேஷங்களும், அவனுடைய திருவிளையாட்டுக்களும், உத்தர காலத்தில் உண்டானவர்களுக்கும் உஜ்ஜீவனங்களாக வேண்டுமென்று நினைத்து, ஸர்வலோக ஹிதபரனும், பகவத் தத்வ விபுல விசித்ர ஜ்ஞான ரஹஸ்யாதிகளாலே அபிஜாதனும், அவனுடைய நாபீ கமலத்தில் ஜாதனுமிருந்துள்ள சதுர்முகன், ராம சரித்ர பவித்ரிதமான "சதகோடி ப்ரவிஸ்தரம்" என்பதொரு ப்ரபந்தத்தை நிர்மித்து அதை ஸ்ரீ நாரதாதிகளைக்கொண்டு அதிகரிப்பித்து இந்த மத்யமலோகத்திலும், **मन्तत श्रीराममन्त्रानुसन्धान मधुक्षितहृदय-**னை வால்மீகி பகவானிடம் பூர்வோக்தமான ஸ்ரீராம சரித்ரத்தை ப்ரவர்த்திப்பிக்க நியமிப்பிட்டவனாய், ஸ்ரீநாரத பகவானை அனுப்பினன்

இப்படி, சதுர்முகன் அநுக்ரஹத்தால், ஸ்ரீநாரத பகவானிடம் உபதேசம் பெற்ற ஸ்ரீ வால்மீகி மஹரிஷி செய்தருளின ஸ்ரீமத் ராமாயணத்தையும், ஸ்ரீ பாகவதத்தையும் அநேக மஹான்கள்செய்த ஸம்ஸ்க்ருத வ்யாக்யானங்களுடன் அச்சிட்டு வெளியிட்டிருந்தபோதிலும், **"निर्विश्यमानविभवं निगमोत्तमाङ्गैः स्तोतु क्षमं ममच देवपते भवन्तम् । गावः पिबन्तु गणशः कलशांबुराशिं किं तेन तर्णक गणाश्चिचमाददानाः ॥"** என்கிறபடி இந்த கைங்கர்யத்தில் அன்வயிக்க ஆசைப்பட்டு, தமிழில் ப்ரதிபதமும், எளிய நடையில் தாத்பர்யமும அச்சிட்டு வெளிப்படுத்துவதாய், இறங்கியிருக்கிற இந்த **இதிஹாஸ ப்ரகடன சாலாவை** ஆஸ்திகர்கள் எல்லோரும் உண்மையாய் ஆதரித்து, அந்த பகவானுடைய க்ருபைக்கு பாத்ரர்களாக வேணுமாய் ப்ரார்த்திக்கப்படுகிறது.

இப்பொழுது வைத்திருக்கும் சந்தா தொகை அதிகமாக இருக்கிறது. இந்த இதிஹாஸ ப்ரகடன சாலா உத்தேசித்திருக்கிறபடி சந்தாதாரர்கள் சேர்ந்த உடன்காலிலே, இப்பொழுது இருக்கும் சந்தாத் தொகையை கொஞ்சம் குறைத்து விடலாமென்றும் உத்தேசித்திருக்கிறது.

**என். ஏ. ரங்கசாமி அய்யங்கார்.**



॥ श्रीः ॥

श्री सीतालक्ष्मण भरत शत्रुघ्न हनुमत्समेत श्रीरघुनन्दन

परब्रह्मणे नमः

# श्रीमद्वाल्मीकिरामायणे — अयोध्याकाण्डम्.

பாலகாண்டத்தில் एतस्मिन्नन्तरे विष्णुः இத்யாதிகளால் यतोवा इमानि என்கிற ச்ருதியில் சொல்லப்பட்ட ஜகத்காரணத்வமும், अहं वेद्मि महात्मानं என்றிவை முதலியவைகளால் புருஷஸூக்தத்தில் சொல்லப்பட்ட மஹாபுருஷத்வமும், त्वमनादिरनिर्देश्यः இத்யாதியால் அசிந்த்ய வைபவத்வமும், என்றிப்படி (உயர்வற உயர்வு) ஸர்வஸ்மாத் பரத்வமும் சொல்லப்பட்டது. अधिकं मेनिरे विष्णुं இத்யாதியால் பகவானைத் தவிர மற்றவர்கள் தாழ்ந்தவர்கள் என்றும் சொல்லப்பட்டது.

இந்த அயோத்யா காண்டத்தில் ராமனை அவதரிக்க அந்த பகவான் अखिलहेयप्रत्यनीक कल्याणगुणैकतानः கெட்ட குணங்களுக்கு எதிரிடையான நல்லகுணங்களையாவற்றிற்கும் ஒரே இருப்பிடம் என்று சொல்லப்படுகிறது. அல்லது,

பாலகாண்டத்தில் மேல்காண்டங்களில் சொல்லப்போகிற கர்மானுஷ்டானங்களுக்கு உபயோகமாயுள்ள ராமாயண புருஷர்களின் மஹாகுலப்பிறப்பு, மஹாகுருக்களால் அடையப்பட்ட தனுர்வேத ரஹஸ்யம், மஹாகுருவின் ஆஜ்ஞையால் செய்யப்பட்ட தாடகை முதலிய அரக்கர்களின் நிரஸனம், சிவதனுர்பங்கம், வைஷ்ணவ தனுஸ்வீகாரம் முதலிய குணங்களும் இல்லற வாழ்க்கைக்கு முக்கியமான இல்லாள் ஸம்பந்தமும் விவரிக்கப்பட்டன. இந்த அயோத்யாகாண்டத்தில் அவர்களால் அநுஷ்டிக்கப்பட்ட பித்ருவாக்ய பரிபாலனம் முதலாகிய ஸாமான்ய தர்மங்களும், भगवच्छेषत्व भगवत्पारतंत्र्य भागवताभिमान निष्ठारूप விசேஷ தர்மங்களும், சொல்லப்படுகின்றன.

அதாவது:— பகவானுக்கே சேஷமாயிருக்கை, பகவானுக்கே ஆளாயிருக்கை, பாகவதர்களுக்கு சேஷமாயிருக்கை, அவர்களுக்குப் பராதீனமாயிருக்கை.

|| श्रीः ||

# श्रीमद् वाल्मीकिरामायणे - अयोध्याकाण्डे

## प्रथमः सर्गः ||1||

***गच्छता मातुलकुलं भरतेन तदानघः ।**
**शत्रुघ्नो नित्यशत्रुघ्नो नीतः प्रीतिपुरस्कृतः || 1 ||**

**1** (பதவுரை)—**अनघः**- தோஷமில்லாதவரும், **नित्यशत्रुघ्नः**- நித்ய சத்ருக்களான இந்திரியங்களை ஜயித்தவருமான, **शत्रुघ्नः**- சத்ருக்னன், **मातुलकुलं**-மாமன் வீட்டைக் குறித்து, **गच्छता**- போகின்ற, **भरतेन**-பரதனால், **तदा**- அப்பொழுதே (தான் போகிற பொழுதே) **प्रीतिपुरस्कृतः**- அன்பினால் ஏவப்பட்டவராக, **नीतः**- அழைத்துக்கொண்டு போகப்பட்டார்

**1** (பொழிப்புரை)—கேகய மஹாராஜாவின் பட்டணத்திற்கு பரதன் போகும் பொழுது அவர், பாபமில்லாதவரும், நித்ய சத்ருக்களை ஜயித்தவரும், அன்பினால் ஏவப்பட்டவருமான, சத்ருக்னனைக் கூட அழைத்துக்கொண்டு போனார்.

---

* இவ்விடத்தில் "**गच्छता**" என்று நிகழ்காலத்தைக் குறித்தமையால் பரதனுடைய செல்லுகைக்கு ப்ராதான்யமும், அந்த காலத்தில் சத்ருக்னனும் சென்றான் என்று சத்ருக்னனுடைய செல்லுகைக்கு அப்ராதான்யமும், ஏற்படுவதால் பரதன் போகிற பொழுதே சத்ருக்னனும் பரதனுடைய வஸ்திரம் முதலானவைகள் போல் அவனுக்குப் பரதந்திரனாகப் போனானென்று ஏற்படுகிறது

"**भरत**" என்கிற பதத்தினால், வஸிஷ்டர் மூன்று காலத்தையுமறிந்த ஜ்ஞானியாகையால், கைகேயி வரத்தினால் பட்டாபிஷேகமில்லாமல் ராமன் காட்டிற்குப் போகும்படியும் அவரையநுஸரித்து லட்சுமணனும் ராமனுடன் போகும்படியும் இவர்களைவிட்டுப்பிரிந்த துக்கத்தினால் தசரதர் ஸ்வர்க்கம்போகும்படியும் ஏற்படும் காலத்தில் ராமனுடைய ஆஜ்ஞையினாலேயே இவன் ராஜ்ய பரிபாலனம் பண்ணப் போகிறானென்று (बिभर्ति राज्यमिति भरतः) நாமகரணம் செய்திருப்பது காணப்படுகிறது.

"**तदा**"- என்பதினால் பரதனுடைய ப்ரயாணத்திற்கு அநுகூலமான சந்திர தாராபலன்கள் பார்க்கப்பட்டனவேயொழிய சத்ருக்னனுக்கு அவைகள் பார்க்கப்படவில்லை என்று ஏற்படுகிறபடியாலும், மாமன் வீட்டைக்குறித்து பரதன் போகும் காலத்தில் என்பதில், மாமன் வீட்டைக்குறித்து என்று இரண்டாம் வேற்றுமையால் பரதனுக்கு உத்தேச்யமாயிருப்பதால்தான் சத்ருக்னனுக்கு உத்தேச்யம் என்றும் பாகவத பாரதந்திரியம் விசேஷித்துக்காட்டப்பட்டது.

"**प्रीति पुरस्कृतः**"—ஜ்யேஷ்டனை கநிஷ்டன் பின்தொடர வேண்டுமென்கிற சாஸ்திர முறை இருந்தபோதிலும் அதற்காக சத்ருக்னன் பரதனைப்பின் தொடரவில்லை. ஆனால் அவரிடத்திலுள்ள அன்பினால் ஏவப்பட்டவராகவே சென்றார். அயோத்தியிலிருந்தால் பரத கைங்கர்யத்தை எல்லோரும் பிரித்துக்கொள்ளுவார்கள்; பரதனுடன் போவோமானால் தான் ஒருவனே எல்லா கைங்கர்யத்தையும் அநுபவிக்கக்கூடுமென்று ப்ரீதியினால் ப்ரேரணம் செய்யப்பட்டவர்.

स तत्र न्यवसद्भ्रात्रा सह सत्कारसत्कृतः ।
मातुलेनाश्वपतिना पुत्रस्नेहेन लालितः ॥ 2 ॥

तत्रापि निवसन्तौ तौ तर्प्यमाणौ च कामतः ।
भ्रातरौ स्मरतां वीरौ वृद्धं दशरथं नृपम् ॥ 3 ॥

राजापि तौ महातेजाः सस्मार प्रोषितौ सुतौ ।
उभौ भरतशत्रुघ्नौ महेन्द्रवरुणोपमौ ॥ 4 ॥

2 (ப-ரை) सः- அந்த பரதன், मातुलेन-மாமனான, अश्वपतिना-யுதாஜித் ராஜாவினால், पुत्रस्नेहेन लालितः- புத்திரன்போல் அன்பு பாராட்டப்பட்டும், भ्रात्रा सह- தம்பியான சத்ருக்னனோடுகூட, सत्कारसत्कृतः- மரியாதை செய்வதினால் பெருமைப்படுத்தப்பட்டும், तत्र-அந்த கேகய நகரத்தில், न्यवसत्-வாஸம் செய்தார்.

3 (ப-ரை) तत्र- அந்த மாமன் க்ருஹத்தில், निवसन्तौ अपि- வஸித்துக்கொண்டிருந்தும், कामतः- இஷ்டமான வஸ்துக்களினால், तर्प्यमाणौच-ஸந்தோஷப்படுத்தப்பட்டிருந்தும், वीरौ-சூரர்களான, तौ भ्रातरौ- அந்த ப்ராதாக்களான பரத சத்ருக்னர்கள், वृद्धं-கிழவரான, दशरथ नृपम्-தசரத ராஜாவை, स्मरता-நினைத்துக்கொண்டிருந்தார்கள்.

4 (ப-ரை) महातेजाः—அதிகப்ரபாவமுள்ள, राजा अपि- தசரத மஹாராஜாவும், महेन्द्रवरुणोपमौ-இந்திரனுக்கும், வருணனுக்கும், ஒப்புற்றவர்களும், प्रोषितौ-தேசாந்திரம் சென்றிருக்கின்றவர்களுமான, भरतशत्रुघ्नौ-பரதன், சத்ருக்னன் ஆகிய, उभौ सुतौ- இரண்டு புத்திரர்களையும், सस्मार- நினைத்துக்கொண்டிருந்தார்.

---

2 (போ-ரை) அந்த பரதன் மாமாவாகிய கேகய ராஜாவினால் புத்திரனிடத்தில் வைக்கக்கூடிய ஸ்நேகத்தினால் சீராட்டப்பட்டும், தம்பியாகிய சத்ருக்னனுடன் மரியாதைசெய்யப்பெற்று பெருமைப்படுத்தப்பட்டும், அங்கு வஸித்தார். அல்லது (भ्रात्रासह -தமையனாகிய ஸ்ரீ ராமபிரானை எப்பொழுதும் நினைத்துக்கொண்டே வாஸம் செய்தார் என்றும் சொல்லலாம்).

3 (போ-ரை) அங்கு வஸித்துக்கொண்டிருந்த ப்ராதாக்களான பரத, சத்ருக்னர்கள், மாமாவினால் (யுதாஜித்தினால்) இஷ்டமான வஸ்துக்களைக்கொடுத்து ஸந்தோஷப்படுத்தப்பட்டிருந்தும் கிழவரான தசரத ராஜனை நினைத்துக்கொண்டிருந்தார்கள். அதாவது:—மஹாராஜா கிழவராகையால் ராஜ்ய பாரம் செய்ய சக்தியற்றவராய் ஒருக்கால் ஸ்ரீ ராமனுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்விக்கலாமென்றும், இந்த ஸமயத்தில் நாம் மஹாராஜாவுக்குக் கைங்கர்யம் செய்ய நேராமல் போய்விட்டதென்றும், மஹாராஜாவின் நினைவு அவர்களுக்கு உண்டானதென்று கருத்து.

4 (போ-ரை) மஹாப்ரபாவமுள்ள தசரத மஹாராஜாவும், இந்திர வருணர்கள் போல் குறைவற்ற அன்புள்ளவர்களும் தேசாந்திரம் சென்றிருக்கிறவர்களுமான பரத சத்ருக்னன் என்கிற இரண்டு பிள்ளைகளையும் நினைத்துக்கொண்டிருந்தார்.

सर्वे एव तु तस्येष्टाश्चत्वारः पुरुषर्षभाः ।
स्वशरीराद्विनिर्वृत्ता श्चत्वार इव बाहवः ॥ 5 ॥
तेषामपि महातेजा रामो रतिकरः पितुः ।
स्वयंभूरिव भूतानां बभूव गुणवत्तरः ॥ 6 ॥
*स हि देवैरुदीर्णस्य रावणस्य वधार्थिभिः ।
अर्थितो मानुषे लोके जज्ञे विष्णुः सनातनः ॥ 7 ॥

---

5 (ப-ரை) चत्वार:-நான்கு ப்ரகாரமாகவிருக்கிற, पुरुषर्षभाः सर्वएव-அந்த புருஷ சிரேஷ்டர்கள், எல்லோரும், (வித்யாஸமில்லாமல்) तस्य-அந்த தசரத மஹாராஜாவுக்கு, स्वशरीरात्-தன்னுடைய சரீரத்திலிருந்து, विनिर्वृत्ता:-வெளிவந்திருக்கிற, चत्वार: बाहव:इव-நான்கு கைகள்போல, इष्टा:-ப்ரியமுள்ளவர்களாக, (आसन्-இருந்தார்கள்).

6 (ப-ரை) भूतानां-ப்ராணிகளுக்குள், स्वयंभू: इव-ப்ரம்மாபோல், तेषां अपि-அந்த நால்வருக்குள், गुणवत्तर:-மிகவும் மேன்மையான குணமுள்ளவராயும், महातेजा:-அதிகமான தேஜஸ்ஸையுடையவருமான, राम:-ஸ்ரீ ராமன், पितु:-பிதாவான தசரத மஹாராஜனுக்கு, रतिकर:-மிகவும் மேன்மையான ப்ரீதியை அளிக்கிறவராக, बभूव-இருந்தார்.

7 (ப-ரை) उदीर्णस्य-மிகவும் செருக்குள்ளவனை, रावणस्य-இராவணனுடைய, वधार्थिभि:-ஸம்ஹாரத்தை விரும்பின, देवै:-தேவர்களினால் अर्थित:-ப்ரார்த்திக்கப்பட்டவரும், सनातन:-நித்தியனுமான, विष्णु: हि-வேதப்ரஸித்தமானவரும், எங்கும் நிறைந்தவருமான பகவானன்றோ! मानुषे लोके-மனுஷ்யலோகத்தில், स: அந்த ராமனாக, जज्ञे-அவதரித்தார்.

---

5 (பொ-ரை) ராம லக்ஷ்மண பரத சத்ருக்னர்களான நான்கு புருஷச்ரேஷ்டர்களும் எல்லோரும் தசரத மஹாராஜனுக்கு தன் சரீரத்தில் உண்டான நான்கு கைகளை போல் ப்ரியமாகவேயிருந்தார்கள்.

6 (பொ-ரை) ப்ராணிகளுக்குள் ப்ரும்மாபோல, அந்நால்வருக்குள், மிகவும் குணமுள்ளவராயும், மகா தேஜஸ்ஸுமுள்ளவருமான ஸ்ரீராமன் பிதாவுக்கு மேலான ப்ரீதியை விளைவித்துக்கொண்டிருந்தார்.

7 (பொ-ரை) மிகவும் அஹங்காரமுள்ள இராவணனை ஸம்ஹாரம்பண்ணவேண்டுமென்று, தேவர்களினால் ப்ரார்த்திக்கப்பட்டவரும், நித்தியருமான மஹாவிஷ்ணுவே அந்த ஸ்ரீராமனாக அவதரித்தார். (ஆகையாலன்றோ நான்கு குமாரர்களுக்குள் மிகவும் சிறந்த குணமுள்ளவரும், பிதாவுக்கு அதிக ப்ரீதி செய்பவருமாக இருந்தார்.)

---

* (7) "सः-जज्ञ"-காமரூபமான ஜென்மமில்லையென்று பரமான ப்ரஸித்தன் கர்மவச்யருக்கும் இவ்வுருகாய் வந்து பிறந்தான் என்றபடி.

இப்படிக்குப் பிறக்கைக்கு அடியென்னென்னில் अर्थित:- என்கிறது. அவர்கள் இரப்புக்காக என்றபடி.

இரப்புத்தான் இச்சையையும் பிறப்பிக்குமாகாதே. "इच्छागृहीत" விறே.

"देवै:-" தங்கள் கார்யத்திற்காக இரந்துப் பிறக்கப்பண்ணி கார்யம் தலைக்கட்டின வாறே மதிகிட்டு ईश्वरोऽहम् என்று இருப்பார்க்காகவாகக்கிறார்.

कौसल्या शुशुभे तेन पुत्रेणामिततेजसा ।
यथा वरेण देवानामदितिर्वज्रपाणिना ॥ 8 ॥

स हि रूपोपपन्नश्च वीर्यवाननसूयकः ।
भूमावनुपमः सूनुर्गुणैर्दशरथोपमः ॥ 9 ॥

8. (ப-ரை.) अमिततेजसा- அளவற்ற பராக்ரமமுள்ளவரான, तेन पुत्रेण- அந்த ராமனென்கிற பிள்ளையினால், कौसल्या- கௌஸல்யா தேவியானவள், देवानां वरेण- தேவர்களுக்குள் சிறந்தவனை, वज्रपाणिना- வஜ்ராயுதத்தைக் கையில்கொண்ட இந்திரனாலே अदितिर्यथा- அதிதி தேவிபோல, शुशुभे- விளங்கினாள்.

9. (ப-ரை) हि- ஏனென்றால், सः- அந்த ஸ்ரீராமன், रूपोपपन्नः-च- அழகுள்ளவர், वीर्यवान् விகாரமில்லாதவர், (கஸ்தூரி மணம்போல் தான் விகாரத்தையடையாமலே பிறர்களுக்கு விகாரத்தைச் செய்யக்கூடியவர்.) अनसूयकः- அஸூயை இல்லாதவர் भूमौ- பூமியில், अनुपमः- நிகரற்ற, सूनुः- பிள்ளை, गुणैः- மற்ற குணங்களினாலும், दशरथोपमः- தசரத மஹாராஜாவிற்கு ஒப்பானவர். (அல்லது दश:- பக்ஷியாகிற கருடனை, रथः- வாஹனமாக உடைய நாராயணனுக்கொப்பானவர்.)

8 (பொ-ரை) அளவற்ற பராக்ரமமுடைய அந்த ராமனென்கிற பிள்ளையினால், தேவர்களில் ச்ரேஷ்டனும், வஜ்ராயுதத்தைக்கையில் கொண்டவனுமான இந்திரனால் அதிதி தேவி போல கௌஸல்யா தேவி விளங்கினாள்.

9 (பொ-ரை) ஸ்ரீராமன் மிகவும் அழகுள்ளவர், வீர்யமுள்ளவர், அஸூயை யில்லாதவர், பூமியில் நிகரற்றபிள்ளை, குணங்களினால் தசரதருக்கு ஸமானமானவர். அஸூயை:—நல்லகுணமுள்ளவர்களிடத்தில் தோஷமிருப்பதாகச் சொல்வது.

"उदीर्णस्य रावणस्य" பயாவஹனான பையல் தானே வரபலத்தாலே அழியச்செய்ய வேணுமென்றபடி விஞ்ஜினபடி.

"वधार्थिभिः" தாங்கள் பட்ட நலிவாலே திருவுள்ளத்திற்குப் பொருந்தாதவற்றை யும் விண்ணப்பம் செய்தார்கள். ஒருவனை அழியச்செய்ய ஒரு நாடகப்பிரயோகமாகில் ஆகாதோ என்று அழியச்செய்தான் அத்தனை.

"अर्थितः" தன்னடிச்சோதிக்கு எழுந்தருளுந்தனையும், திருவுள்ளத்தில் பட்டுக் கிடந்தது இதுவே. अर्थितः- உபாஸிக்கவர்களல்ல.

"मानुषे लोके" ஆக்கரான தேவர்கள் மனுஷ்ய கந்தத்திற்குச் சக்திபண்ணி பூமியில் இழிய அருவருக்கும் ஒன்றறை யோசனைக்கு அவ்வருகே நின்று நாளில்லை கொள்ளுவர்கள். அவர்கள் மனுஷ்ய ஸ்தானத்திலே ஆம்படியான தக்ஷுமமன்றோ! இங்கு வந்து பிறந்தது என்றபடி. மனிசருக்குத் தேவர்போலத் தேவர்க்கும் தேவாவீரோ.

स च नित्यं प्रशान्तात्मा मृदुपूर्वं प्रभाषते ।
उच्यमानोऽपि परुषं नोत्तरं प्रतिपद्यते ॥10॥

*कथंचिदुपकारेण कृतेनैकेन तुष्यति ।
न स्मरत्यपकाराणां शतमप्यात्मवत्तया ॥11॥

10 (ப-ரை) सः-அந்த ஸ்ரீ ராமன், नित्यं-எப்பொழுதுமே, प्रशान्तात्मा-கோபமில்லாத ஸ்வபாவமுள்ளவர், परुषं-கடுமையாக, उच्यमानोऽपि-பிறரால் சொல்லப்பட்டபோதிலும், उत्तरं-பதிலை, न प्रतिपद्यते-சொல்லுகிறதில்லை, ஆனால், मृदुपूर्वं-இனிமையாகவே, प्रभाषते च-பேசுகிறார்.

11 (ப-ரை) आत्मवत्तया-நல்ல ஜ்ஞானமுடையவராகையால், कथंचित्-எந்தவிதமாகவாவது, कृतेन-செய்யப்பட்டிருக்கிற एकेन उपकारेण-ஒரு உபகாரத்தினாலேயே, तुष्यति-ஸந்தோஷப்படுகிறார், अपकाराणां-அபகாரங்களுடைய, शतम् अपि- அநேகத்தையும், न स्मरति- நினைக்கிறதேயில்லை.

10 (பொ-ரை) ஸ்ரீராமன் எப்பொழுதும கோபமில்லாத ஸ்வபாவமுள்ளவராகையால் பிறரால் கடிந்து பேசப்பட்டபோதிலும், அவர்களுக்கு பதில் சொல்லாதவர், அதுமாத்திரமின்றி ம்ருதுவாகவும் பேசுகிறார்.

11. (பொ-ரை) நல்ல ஜ்ஞானமுள்ளவராகையால் ஒருவன் எந்த விதமாகவாவது ஒரு உபகாரம் செய்தால், எப்பொழுதும ஸந்தோஷப்பட்டுக்கொண்டேயிருக்கிறார். மற்றவன் ஆயிரக்கணக்கான அபகாரங்களைச் செய்தபோதிலும், அவைகளை நினைக்கிறதேயில்லை.

"जज्ञे" நரஸிம்மாதி அவதாரமபோல் (ஆவிர்ப்பவித்ததல்ல) ஆவிர்பூதமான மாத்திரமன்று, நாட்டார் பத்து மாதம கர்ப்பவாஸம் அநுபவிக்கில் பன்னிரண்டு மாதமிறே இவன் அநுபவித்தது:—

"ततश्च द्वादशेमासे" என்றும், "जातोहं यत्तवोदरात्" என்றும்.

"विष्णुः" வியாபகமான வஸ்து. வியாப்யமான ஒரு வஸ்துவிற்கு என்னுடைய புத்திரனென்று அபிமானம் பண்ணும்படியாயிற்று.

"सनातनः"-நித்தியமான வஸ்து. இப்படிக்கன் ரூபத்தைமாற்றிக்கொண்டது.

* (11) "कथंचित्" எந்த விதமாகவாவது பூர்ணமாகச் செய்தாலும், குறைவாகச் செய்தாலும், தற்செயலாகவாவது அல்லது மற்றொருவனுக்காகச் செய்யுமபொழுது ஸ்ரீராமனுக்கும் நேர்ந்தாலாவது, ப்ரயோஜநாந்தரத்தைக் குறித்தாவது (பதில் ப்ர

शीलवृद्धैर्ज्ञानवृद्धैर्वयोवृद्धैश्च सज्जनैः ।
कथयन्नास्त वै नित्यमस्त्रयोग्यान्तरेष्वपि ॥ 12 ॥

बुद्धिमान्मधुराभाषी पूर्वभाषी प्रियंवदः ।
वीर्यवान्नच वीर्येण महता स्वेन विस्मितः ॥ 13 ॥

12. (ப—ரை) शीलवृद्धैः- ஸதாசாரத்தினால் முதிர்ந்தவர்களாயும், ज्ञानवृद्धैः- ஜ்ஞானத்தினால் முதிர்ந்தவர்களாயும், वयोवृद्धैः च- வயதினால் முதிர்ந்தவர்களாயுமிருக்கிற, सज्जनैः- ஸாது ஜனங்களோடு, अस्त्रयोग्यान्तरेषु अपि- அஸ்த்ர அப்யாஸ காலங்களின் இடைகளிலும், नित्यं- எப்பொழுதும், कथयन्- (அந்தந்த விஷயங்களை) சொல்லிக்கொண்டு, आस्त- இருந்தார்.

13. (ப—ரை) बुद्धिमान्- சிறந்த புத்தியுள்ளவர். मधुराभाषी- மதுரமாகப் பேசும் தன்மையுள்ளவர், पूर्वभाषी- தானே முன்னால் வார்த்தை சொல்லும் தன்மையுள்ளவர், प्रियंवदः- ப்ரியமான வார்த்தை சொல்லும் தன்மையுள்ளவர், वीर्यवान्- வீர்யமுள்ளவர், महता- மேன்மையான, स्वेन वीर्येण- தன்னுடைய வீர்யத்தினால், न विस्मितः- கர்வமில்லாதவர்.

12. (போ-ரை) அஸ்த்ரவித்தை பயிற்சி செய்யும் காலங்களின் இடையிலேயும், ஸதாசாரத்தினால் முதிர்ந்த ஸாது ஜனங்களோடு ஸூக்ஷ்மமான ஆசார விசேஷங்களையும், மோக்ஷ விஷயமான ஜ்ஞானத்தினால் முதிர்ந்தவர்களோடு வேதாந்த ரஹஸ்ய விசேஷங்களையும், வயதினால் முதிர்ந்தவர்களோடு பழைய ஸம்ப்ரதாய விசேஷங்களையும், சொல்லிக்கொண்டிருந்தார். (ஸத்ஸங்கமில்லாமல் அவர் ஒரு க்ஷணமும் இருக்கிறதில்லை.)

13 (போ-ரை) எல்லா ஜனங்களும் ஸுகமடையுமாறு லோக ஸம்ரக்ஷணத்தில் எப்பொழுதும் ஊக்கமுள்ளவர். எப்பொழுதும் இனிமையாகப் பேசும் தன்மையுள்ளவர். மிகவும் நீசனிடத்திலும் தானாகவே முன்னே வார்த்தை சொல்லும் தன்மையுள்ளவர். சத்ருக்களிடத்திலும் ப்ரியமாகவே பேசும் தன்மையுள்ளவர். தன்னை அடைந்தவர்களுடைய, விரோதியை அடக்கும் ஸாமர்த்யம் உள்ளவர். இவ்வளவு சிறந்த ஸாமர்த்யம் இருந்தும் கொஞ்சமேனும் அஹங்காரமில்லாதவர்.

---

யோஜனத்தை உத்தேசித்தாவது) மனப்பூர்வமல்லாததாகவாவது "सांकेत्यं पारिहास्यं वा स्तोभं हेलनमेव वा" கட்டுப்பாட்டுக்காகவாவது, பரிஹாஸத்திற்காகவாவது, வேறு உபகாரமாகவாவது, அனாதரமாகவாவது "कृतेन"- செய்யப்பட்ட அல்லது "आशंसायां भूतवच्च" என்ற ஸூத்ரத்தினால் செய்யவேணுமென்று இச்சிக்கப்பட்ட ஒரு உபகாரத்தினாலேயும், "तुष्यति" ஸந்தோஷப்படுகிறார்.

न चानृतकथो विद्वान्वृद्धानां प्रतिपूजकः ।
अनुरक्तः प्रजाभिश्च प्रजाश्चाप्यनुरञ्जते ॥ 14 ॥

सानुक्रोशो जितक्रोधो ब्राह्मणप्रतिपूजकः ।
दीनानुकम्पी धर्मज्ञो नित्यं प्रग्रहवाञ्छुचिः ॥ 15 ॥

**14.** (ப-ரை) (सः- அந்த ராமன்,) **न अनृतकथःच**- கட்டுக்கதைகளை நீக்கினவர், **विद्वानू**- அறிந்தவர், **वृद्धानां**- முன்சொன்ன மூன்று விதமான பெரியோர்களை, **प्रतिपूजकः**:- தானேபோய் பூஜிக்கிறவர், **प्रजाभिः**:- ப்ரஜைகளினுல், **अनुरक्तः**:- விரும்பப் பட்டவர். **प्रजाःच अपि**- ப்ரஜைகளையும், **अनुरञ्जते**- விரும்புகிருர்.

**15.** (ப-ரை) **सानुक्रोशः**:- தயையுள்ளவர், **जितक्रोधः**:- கோபத்தை ஜயித்தவர், **ब्राह्मणप्रतिपूजकः**:-ப்ராம்மணர்களை (அவர்களிருக்குமிடம்போய்) பூஜிக்கிறவர். **दीनानुकम्पी**- ஏழைகளிடத்தில் கருணையுள்ளவர், **धर्मज्ञः**:- தர்மங்களை அறிந்தவர், **नित्यं**- எப்பொழுதும், **प्रग्रहवानू**-நியமமுடையவர், **शुचिः**:- பரிசுத்தர்.

---

**14.** (பொ-ரை) ஸ்ரீராமன் பொய்யான கதைகளைப் பேசுகிறதில்லை. மிகவும் ஜ்ஞானமுள்ளவர், பெரியோர்களைத் தானே போய் பூஜிக்கிறவர். ஜனங்களிடத்தில் தான் முந்தி அன்பு வைத்து பிறகு அவர்களால் அன்பு பாராட்டப்பட்டவர்.

**15.** (பொ-ரை) தன் ப்ரயோஜனத்தை எதிர்பாராமல் பிறர்களுடைய, துக்கத்தைப்போக்க இச்சையுள்ளவர். கோபத்திற்கு தான் வசமாகாமல் அதை தனக்கு வசமாக்கிக்கொண்டிருக்கிறவர். வேதங்களை ஓதினவர்களையும், நன்றாய் அறிந்தவர்களையும் எதிர்கொண்டு பூஜிப்பவர். ஏழைகளை எந்த ஸமயத்தில் பார்ப்பாரோ அதே இடத்தில் அதே ஸமயத்தில் அவர்களுடைய ஏழைத்தன்மையைப்போக்கும் கருணையுள்ளவர். தர்மங்களை அறிந்தவர். ஸகலப்ராணிகளாயிருந்தபோதிலும் 'என்னை அடைந்தால் அவர்களுக்கு அபயப்ரதானம் செய்கிறே'னென்கிற நியமத்தை எப்பொழுதும் கொண்டவர். சுத்தியுள்ளவர். (இங்கு சுத்தியாவது பிறர்களின் பொருளை விரும்பாமை) "योऽर्थे शुचिः स हि शुचिः नमृद्वारि शुचिः शुचिः" ஜலத்தையும் மண்ணையும் போட்டு அலம்புவது சுத்தியல்ல. பிறர் பொருளை ஆசைப்படாமையன்றோ சுத்தி என்று மனுஸ்ம்ருதி.

---

"ஸந்தோஷப்படுகிருர்" என்று நிகழ்காலத்தினுல், ஒரு தடவை செய்த உபகாரத்தினுல் எப்பொழுதும் ஸந்தோஷப்பட்டுக்கொண்டேயிருக்கிருர்.

"**आत्मवत्तया**" ஜ்ஞானமுள்ளவராகையால், லோகத்தில் அபராதம் செய்தவனை தண்டிப்பது என்ருல், ஒருவரும் அபராதம் செய்யாமல் இருக்கமுடியாதாகையால் எல்லாரையும் தண்டிக்க வேண்டிவரும், என்கிற ஜ்ஞானத்தினுல்.

कुलोचितमतिः क्षात्रं धर्मं स्वं बहुमन्यते ।
मन्यते परया कीर्त्या महत्स्वर्गफलं ततः ॥ 16 ॥
नाश्रेयसि रतो विद्वान्न विरुद्धकथारुचिः ।
उत्तरोत्तरयुक्तौ च वक्ता वाचस्पतिर्यथा ॥ 17 ॥
अरोगस्तरुणो वाग्मी वपुष्मान्देशकालवित् ।
लोके पुरुषसारज्ञः साधुरेको विनिर्मितः ॥ 18 ॥

16. (ப-ரை) कुलोचितमतिः- இக்ஷ்வாகு வம்சத்திற்கு உரிய தர்மத்தில் புத்தியுடையவர், स्वंक्षात्रं धर्मं- தம்முடைய க்ஷத்திரிய தர்மத்தை, बहुमन्यते- கௌரவமுள்ளதாக அறிகிறார், ततः- அந்த க்ஷத்திரிய தர்ம அநுஷ்டானத்தாலே, परया कीर्त्या- உயர்ந்த கீர்த்திவழியாய், महत्- மேன்மையான, स्वर्गफलं- ஸ்வர்க்கமென்கிற பலம் உண்டாகிறதென்று, मन्यते- அறிகிறார்.

17. (ப-ரை) विद्वान्- எல்லாம் தெரிந்தவர், (ஆகையால்) अश्रेयसि- பயனற்ற கார்யத்தில், न रतः- பற்றுதல் அற்றவர், न विरुद्धकथारुचिः- தர்ம விருத்தமான வீண் பேச்சுக்களில் ஆசையில்லாதவர். उत्तरोत्तरयुक्तौ च- லௌகிக விஷயத்திலோ, வைதிக விஷயத்திலோ (மேன்மேலும்) யுக்தியில், वाचस्पतिर्यथा- ப்ருஹஸ்பதிபோல, वक्ता- (எல்லாம் அறிந்தவராதலால்) தடங்கலில்லாமல் வ்யவஹாரம் செய்யக்கூடியவர்.

18. (ப-ரை) अरोगः- உடல் நோய், மன நோய் அற்றவர், तरुणः- யௌவனப் பருவமுள்ளவர், वाग्मी- சிறந்த வாக்குள்ளவர், वपुष्मान्- மேன்மையான சரீரமுள்ளவர், देशकालवित्- இடம், காலம் இவைகளை அறிந்தவர், पुरुषसारज्ञः- மனிதர்களுடைய மனக்கருத்தை அறிந்தவர், लोके- இவ்வுலகத்தில், एकः- இணையற்ற, साधुः ஸாது என்று, विनिर्मितः- நிர்மாணம் செய்யப்பட்டவர்.

16. (பொ-ரை) இக்ஷ்வாகு வம்சத்திற்கு உரிய தயை, தாக்ஷிண்யம், சரணாகத ரக்ஷணம், முதலிய தர்மங்களில் நோக்குள்ளவர். துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலன ரூபமான தன்னுடைய க்ஷத்ரிய தர்மத்தை நன்குணர்ந்து அநுஷ்டானத்தினால் விசேஷமாய் கௌரவப்படுத்துகிறவர். அந்த க்ஷத்ரிய தர்மத்தினால் இஹலோகத்தில் மேலான கீர்த்தியுடன் பரலோகத்தில் பெரிதான ஸ்வர்க்க பலமும் உண்டாகிறதென்று அறிகிறார்.

17. (பொ-ரை) சூதாட்டம் முதலான சாஸ்திர நிஷித்த கர்மங்களில் எப்பொழுதும் ஆசையில்லாதவர். லௌகிக, வைதிக விஷயமான வாதங்களில் மென்மேலும் யுக்தியுடன் ப்ருஹஸ்பதிபோல் தடையில்லாமல் உபன்யாஸம் செய்யக்கூடியவர்.

18. (பொ-ரை) ரோகமில்லாதவர், யௌவனமுடையவர், சிறந்த வாக்குள்ளவர்

स तु श्रेष्ठैर्गुणैर्युक्तः प्रजानां पार्थिवात्मजः ।
बहिश्चर इव प्राणो बभूव गुणतःप्रियः ॥ 19 ॥

सम्यग्विद्याव्रतस्नातो यथावत्सांगवेदवित ।
इष्वस्त्रे च पितुः श्रेष्ठो बभूव भरताग्रजः ॥ 20 ॥

19 (ப-ரை) श्रेष्ठैः- உயர்ந்த, गुणैः- குணங்களோடு, युक्तः- கூடின, सः- அந்த, पार्थिवात्मजः- ராஜபுத்ரனை ஸ்ரீராமன், प्रजानां- ஜனங்களுக்கு, बहिश्चरः- வெளியில் ஸஞ்சரிக்கிற, प्राणः इव- ப்ராணன்போல், गुणतः- குணங்களினால், प्रियः बभूव तु- ப்ரிய மாகவே இருந்தார்.

20. (ப-ரை) भरताग्रजः- பரதனுக்கு அண்ணனாகிய ஸ்ரீராமன், सम्यक्- நன்றாக विद्याव्रतस्नातः- வித்தைகளையும் ஓதி, வ்ருதங்களையும் அநுஷ்டித்து ஸமாவர்த்தனம் செய்தவர், यथावत्- உண்மையாக, सांगवेदवित्- அங்கங்களோடு கூடிய வேதத்தை அறிந்தவர், *इष्वस्त्रे- பாணங்களிலும், அஸ்த்ரங்களிலும், पितुः- பிதாவான தசரத மஹா ராஜாவைக்காட்டிலும், श्रेष्ठः च- சிறந்தவராகவும், बभूव- இருந்தார்.

---

தேசகாலங்களை அறிந்தவர், ஒருதடவை பார்த்த மாத்திரத்திலேயே மனிதர்களுடைய மனக்கருத்து யாவற்றையும் அறிந்தவர், இந்த லோகத்தில் இவரொருவர் தான் ஸாதுவென்று எல்லோராலும், நிச்சயிக்கப்பெற்றவர்.

19. (பொ-ரை) முன்கூறிய குணங்களையும், மற்ற நற்குணங்களையும் உடைய அந்த ராஜகுமாரனை ஸ்ரீராமன், வெளியில் ஸஞ்சரிக்கிற ப்ராணன் போன்றவராய் தன்னுடைய நற்குணங்களால் ப்ரஜைகளை ஸந்தோஷப்படுத்திக் கொண்டிருந்தார்.

20. (பொ-ரை) நன்றாய் வித்தைகளை ஓதி வ்ரதங்களையும் அநுஷ்டித்து ஸமாவர்த்தனம் செய்தவர். ஸாங்கமான (சிக்ஷா, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜோதிஷம், கல்பம் என்கிற ஆறு அங்கங்களோடு கூடின) வேதத்தை உள்ளபடி அறிந்தவர். பாணங்களையும், அஸ்திரங்களையும் ப்ரயோகம் செய்யும் விஷயத்தில் பிதாவான தசரத மஹா ராஜனைக்காட்டிலும் ச்ரேஷ்டமானவர். இந்த விஷயத்தில் பரதனுக்குத் தமையன் என்றே சொல்லவேண்டும்.

* "इषु"- என்றால், மந்த்ரமில்லாத பாணம்.

"अस्त्र"- என்றால் மந்த்ரத்துடன் கூடின பாணம்.

*कल्याणाभिजनः साधुरदीनः सत्यवागृजुः ।
वृद्धैरभिविनीतश्च द्विजैर्धर्मार्थदर्शिभिः ॥ 21

धर्मकामार्थतत्त्वज्ञः स्मृतिमा*न्प्रतिभानवान् ।
लौकिके समयाचारे कृतकल्पो विशारदः ॥ 22

21. (प-रை) साधुः- தோஷமில்லாதவர், (ஆகையால்) कल्याणाभिजनः- தன் பிறப்பினால் சுபமாக்கப்பட்ட மாத்ரு, பித்ரு வம்சங்களை உடையவர், अदीनः- (மனதைக் கலக்கக்கூடிய கஷ்டம் வந்தபோதிலும்) கலங்காத மனதையுடையவர், सत्यवाक्- ஸத்தியமான வாக்குடையவர், ऋजुः- எளிதில் ஸந்தோஷப்படுத்தக் கூடியவர், धर्मार्थदर्शिभिः- தர்மம், அர்த்தம் இவைகளை அறிந்த, वृद्धैः- வ்ருத்தர்களான, द्विजैः- பிராம்மணர்களால், अभिविनीतःच- சிக்ஷிக்கப்பட்டவருமானவர்.

22. (ப-ரை) धर्मकामार्थतत्त्वज्ञः- அறம், இன்பம், பொருள் என்கிற புருஷார்த்தங்களின் உண்மையை அறிந்தவர், प्रतिभानवान्- புதிது புதிதாக வளரும் ப்ரஜ்ஞை அடைந்தவர், लौकिके- லோகத்தில் மட்டும் விளங்கிவரும், समयाचारे- கட்டுப்பாடான ஆசாரங்களில், कृतकल्पः- நிலையுடையவர், विशारदः- (லௌகிக ஆசாரங்களை அநுஷ்டிப்பதில்) ஸமர்த்தர்.

---

21. (பொ-ரை) எவ்வித தோஷமுமில்லாதவராகையால் தன் பிறப்பால் மாத்ரு, பித்ரு வம்சங்களைச் சிறப்பித்தவர். எவ்வித கஷ்டத்திலும் கலங்காத மனதை உடையவர். எவ்வித ஆபத்திலும் ஸத்தியத்தைக் கைவிடாதவர். எல்லோராலும் எளிதில் ஸந்தோஷப்படுத்தக்கூடியவர். தர்மங்களை அறிந்த பிராம்மண வ்ருத்தர்களால் தர்மார்த்தங்களில் நன்றாய் சிக்ஷிக்கப்பட்டவர்.

22. (பொ-ரை) அறம், பொருள், இன்பம் என்கிற மூன்று புருஷார்த்தங்களின் ஸ்வரூபத்தை உண்மையாக அறிந்தவர். அறிந்த விஷயத்தில் கொஞ்சமேனும் மறதியில்லாதவர். ஒவ்வொரு விஷயத்திலும் அப்போதைக்கப்போது, புதிது புதிதாக வளரும் பிரஜ்ஞையை உடையவர். லௌகிகமான ஆசாரக்கட்டுப்பாட்டை ஸ்தாபனம் பண்ணுகிறவர். தம்முடைய குலத்திற்கு ஏற்பட்ட அந்த லௌகிக ஆசாரத்தை தாமும் அனுஷ்டிப்பவர்.

(தர்மார்த்த காமங்களின் உண்மையான ஸ்வரூபமாவது, அவரவர்களுக்கு ஏற்பட்ட வர்ணாச்ரம தர்மங்களை அவரவர்கள் செய்யவேண்டியது. சாஸ்திர விருத்தமில்லாத காமத்தை அநுபவிப்பது. நல்வழியில் தனம் ஸம்பாதிப்பது என்பதுதான்)

---

* "कल्याणाभिजनः-" சுபங்களுக்கெல்லாம் இருப்பிடம். தன்னை ஆச்ரயித்தவர்களுக்கு சுபங்களை உண்டுபண்ணுகிறவர் என்றும் சொல்லலாம்.

निभृतः संवृताकारो गुप्तमन्त्रः सहायवान् ।
अमोघक्रोधहर्षश्च त्यागसंयमकालवित् ॥ 23
दृढभक्तिः स्थिरप्रज्ञो नासद्ग्राही न दुर्वचाः ।
निस्तन्द्रिरप्रमत्तश्च स्वदोषपरदोषवित् ॥ 24

23. (ப-ரை) निभृतः- வணக்கமுள்ளவர். संवृताकारः- மறைக்கப்பட்ட அபிப்பிராயத்தையுடையவர், गुप्तमन्त्रः- வெளிக்காட்டாத ஆலோசனையுடையவர், सहायवान्- சிறந்த உதவியுள்ளவர், अमोघक्रोधहर्षःच- வீணாகாத கோபத்தையும், ஸந்தோஷத்தையும் உடையவர், त्यागसंयमकालवित्- பொருளை அளிப்பதற்கும், சேர்ப்பதற்கும் உரிய காலத்தை அறிந்தவர்.

24. (ப-ரை) दृढभक्तिः- கலங்காத பக்தியுள்ளவர், स्थिरप्रज्ञः- உறுதியான தத்வஜ்ஞானமுள்ளவர், (ஆகையால்) न असद्ग्राही- சாஸ்த்ர விருத்தமான பொருளை கைக்கொள்ளாதவர், அல்லது கெட்ட ஜனங்களைச் சேர்க்காதவர், न दुर्वचाः- கடிந்து பேசாதவர், निस्तन्द्रिः- சோம்பலில்லாதவர், अप्रमत्तः च- அஜாக்கிரதையற்றவர். स्वदोषपरदोषवित्- தன்னுடைய தோஷத்தையும், பிறருடைய தோஷத்தையும் அறிந்தவர்.

23. (பொ-ரை) மிகவும் வணக்கமுள்ளவர். தன் மனதிலிருக்கும் அபிப்பிராயத்தை, முகஜாடை முதலியனவைகளால் வெளிக்காட்டாதவர். கார்யம் முடியும் வரையில் ஆலோசனை செய்த விஷயத்தை வெளியிடாதவர். சிறந்த மந்த்ராலோசனை உள்ளவர். தனது கோபத்தையும், ஸந்தோஷத்தையும், ஸபலமாகச் செய்பவர். பொருளை ஸம்பாதிப்பதற்கும், ஸத்பாத்திரத்தில் தானம் செய்வதற்கும் தகுந்த காலத்தை அறிந்தவர்

24. (பொ-ரை) தேவதா, குரு, முதலானவரிடத்தில் த்ருடமான பக்தியுள்ளவர். அவ்வித பக்தியினால் உண்டான கலக்கமில்லாத தத்வஜ்ஞானமுடையவர். ஆகையால் சாஸ்த்ர விருத்தமான பொருளை கைக்கொள்ளாதவர். ஒருவரையும் கடிந்து பேசாதவர். சோம்பலில்லாமல் எப்பொழுதும் சாஸ்த்ரப்பயிற்சி செய்பவர். ஆதலால் சாஸ்த்ரார்த்தங்களில் எப்பொழுதும் கவனமுள்ளவர் உலகத்தில் ஜனங்கள் பிறர் தோஷங்களைப் பார்ப்பார்கள், தம் தோஷங்களைப் பார்க்கமாட்டார்கள். ஸ்ரீராமனென்றால் அப்படி இல்லாமல் தன் தோஷத்தையும் பார்க்கிறார்.

---

(22-வது ச்லோகம்) * "प्रतिभानवान्"- "स्मृतिर्व्यतीतविषया मतिरागामिगोचरा बुद्धिस्तात्कालिकीप्रोक्ता प्रज्ञात्रैकालिकीमता। प्रज्ञांनवनवोन्मेष शालिनीं प्रतिभाविदुः" ॥ அதாவது,

"स्मृति"- என்பது இறந்த காலத்திய வஸ்துவை விஷயீகரிக்கும் ஜ்ஞானம்.

"मति"- என்பது எதிர்காலத்திய வஸ்துவை விஷயீகரிக்கும் ஜ்ஞானம்.

"बुद्धि"- என்பது நிகழ்காலத்திய வஸ்துவை விஷயீகரிக்கும் ஜ்ஞானம்.

"प्रज्ञा"- என்பது முக்காலத்திய வஸ்துவை விஷயீகரிக்கும் ஜ்ஞானம்.

"प्रतिभा"- என்பது புதிது புதிதாக வளரும் ப்ரஜ்ஞை.

शास्त्रज्ञश्च कृतज्ञश्च पुरुषान्तरकोविदः ।
यः प्रग्रहानुग्रहयोर्यथान्यायं विचक्षणः ॥ 25 ॥

सत्संग्रहप्रग्रहणे स्थानविन्निग्रहस्य च ।
आयकर्मण्युपायज्ञः संदृष्टव्ययकर्मवित् ॥ 26 ॥

25. (ப-ரை) शास्त्रज्ञः च- சாஸ்த்ரத்தையுமறிந்தவர், कृतज्ञः च- வ்ருத்தாந்தத்தையுமறிந்தவர், पुरुषान्तरकोविदः- ஜனங்களின் தாரதம்யங்களை அறிந்தவர், यः- மிகவும் ப்ரஸித்தமானவர், यथान्यायं- சாஸ்த்ர முறை தவறாமல், प्रग्रहानुग्रहयोः- (மித்ரர்களைச்) சேர்ப்பதிலும், சேர்க்கப்பட்டவர்களை ரக்ஷிப்பதிலும், विचक्षणः- ஸமர்த்தர்.

26. (ப-ரை) सत्संग्रहप्रग्रहणे- ஸாதுக்களைச் சேர்ப்பதிலும், (அவர்களை) ரக்ஷிப்பதிலும், (विचक्षणः- ஸாமர்த்யமுடையவர்,) निग्रहस्य- துஷ்டர்களை சிக்ஷிப்பதினுடைய, स्थानवित् च- ஸமயத்தையுமறிந்தவர், आयकर्मणि- (தனத்தை) ஸம்பாதிக்கும் விஷயத்தில், उपायज्ञः- உபாயமறிந்தவர், संदृष्टव्ययकर्मवित्- (சாஸ்த்ரத்தில்) கூறியபடி பணம் செலவு செய்யும் விதத்தை அறிந்தவர்.

25. (பொ-ரை) அங்கங்களோடு கூடின வேதங்களைத் தவிர மற்ற மீமாம்ஸை, தர்க்க சாஸ்த்ரம், புராணம், தர்ம சாஸ்த்ரம், என்று சொல்லப்பட்ட சாஸ்த்ரங்களையும் அறிந்தவர். வ்ருத்தாந்தங்களை நன்றாய் அறிந்தவர். மனிதர்களைப் பார்த்த மாத்திரத்திலேயே, இவன் நல்லவன், இவன் கெட்டவன், என்று அவரவர்களின் தாரதம்யத்தை அறிந்தவர். உலகத்தில் ப்ரஸித்திபெற்றவர். சாஸ்த்ர முறைதவறாமல் ஸ்நேஹிதர்களைச்சேர்த்து சேர்ந்தவர்களை ரக்ஷிக்க வல்லமையுடையவர். (இவ்விடத்தில் சாஸ்த்ரமாவது. அங்கங்களோடு கூடிய வேதங்களொழிய மற்ற மீமாம்ஸை, ந்யாயம், புராணம், தர்மசாஸ்த்ரம் என்கிற நான்கு வித்யாஸ்தானங்கள். ஏனெனில், सांगवेदवित्- என்று முந்தியே கூறப்பட்டிருக்கிறபடியினால்.)

26. (பொ-ரை) ஸாதுக்களைச் சேர்ப்பதிலும், ரக்ஷிப்பதிலும் ஸாமர்த்யமுடையவர். துஷ்டர்களை சிக்ஷிப்பதில் தேசகாலங்களை அறிந்தவர். ந்யாயமாகக் கிடைக்கக்கூடிய தனத்தை ஸம்பாதிக்கும் முறையில் உபாயம் தெரிந்தவர். அதாவது:— வண்டானது புஷ்பங்களுக்கு யாதொரு கெடுதலுமில்லாமல் அவைகளினின்று தேனை எடுத்து சேர்ப்பதுபோல், இவரும் ஜனங்களுக்கு யாதொரு சிரமமுமில்லாமல் கப்பம் வாங்குகிறவர். ஸம்பாதித்த தனத்தை நாலிலொரு பாகமோ, மூன்றிலொரு பாகமோ, பாதி பாகமோ செலவு செய்யலாம் அதற்கு அதிகமான செலவு செய்யக்கூடாதென்று, "कश्चिदायस्यवार्धेन चतुर्भागेनवापुनः । पादभागैस्त्रिभिर्वापिव्ययस्संचोद्यतेबुधैः॥"- என்கிற சாஸ்த்ரத்தின்படி செலவு செய்யும் வழியை அறிந்தவர்.

श्रैष्ठ्यं शास्त्रसमूहेषु प्राप्तो व्यामिश्रकेषु च ।
अर्थधर्मौ च संगृह्य सुखतन्त्रो न चालसः ॥ 27 ॥

वैहारिकाणां शिल्पानां विज्ञातार्थविभागवित् ।
आरोहे विनये चैव युक्तो वारणवाजिनाम् ॥ 28 ॥

धनुर्वेदविदां श्रेष्ठो लोकेऽतिरथसंमतः ।
अभियाता प्रहर्ता च सेनानयविशारदः ॥
अप्रधृष्यश्च संग्रामे क्रुद्धैरपि सुरासुरैः ॥ 29 ॥

27. (ப—ரை) शास्त्रसमूहेषु-வேத வேதாங்கங்களிலும், व्यामिश्रकेषु च- காவ்ய நாடக அலங்கார முதலியவைகளிலும், श्रैष्ठ्यं- உயர்ந்த ஜ்ஞானத்தை, प्राप्तः- அடைந்தவர், अर्थधर्मौ च- அர்த்தத்தையும், தர்மத்தையும், संगृह्य- விடாமல் கைக்கொண்டு, सुखतन्त्रः- ஸுகத்திற்கு அதீனராகவும், न अलसः च- சோம்பலற்றவராகவுமிருப்பவர்.

28. (ப-ரை) वैहारिकाणां- பொழுது போக்குவதை ப்ரயோஜனமாக உடைய, शिल्पानां- கைத்தொழிலை, विज्ञाता- விசேஷமாக அறிந்தவர், अर्थविभागवित्- பணத்தைச்செலவு செய்யக்கூடிய பிரிவினையை அறிந்தவர், वारणवाजिनां- யானை, குதிரைகளுடைய, आरोहे- ஏறுவதிலும், विनये च एव- அடக்குவதிலும், युक्तः- ஸமர்த்தர்.

29. (ப—ரை) धनुर्वेदविदां- தனுர்வேதம் தெரிந்தவர்களில் श्रेष्ठः- மிகவும் சிறந்தவர், लोके- உலகத்தில் (எல்லா இடத்திலும்,) अतिरथसंमतः- அதிரதர்கள் மனதிற்கு ஒப்பினவர், अभियाता- சத்ருக்களை நோக்கி எதிர்த்துப் போகிறவர், प्रहर्ता च- எதிர்த்து அவர்களை அடிக்கிறவர், सेना नय विशारदः- சேனையை நடத்தும் கிரமம் தெரிந்தவர், संग्रामे- யுத்தத்தில், क्रुद्धैः- கோபத்தோடு கூடிய, सुरासुरैः अपि- தேவாஸுரர்களாலும், अप्रधृष्यः च- ஜெயிக்க முடியாதவர்.

---

27. (பொ—ரை) வேதங்களிலும், வேத அங்கங்களிலும், உள்ள தருக்கமும், ஸம்ஸ்க்ருத, ப்ராக்ருத, பாஷா ரூபங்களான காவ்ய, நாடக, அலங்காராதிகளில், சிறந்த பாண்டித்யத்தையும், அடைந்தவர் அர்த்தத்தையும், தர்மத்தையும், கை விடாமல் காம புருஷார்த்தத்தையும் அநுபவிக்கிறவர். அர்த்த தர்மங்களை ஸம்பாதிப்பதிலும் சோம்பலில்லாதவர். (அர்த்தத்தையும், தர்மத்தையும், ஸம்பாதித்து பிறகுதான் ஸுகத்தில் பற்றுதல் உள்ளவர். தனிமையில் காமத்திற்கு வசப்பட்டவரல்ல.)

28. (பொ—ரை) பொழுது போக்குவதற்காக ஏற்பட்ட பாட்டுப்பாடுவது, வாத்யம் வாசிப்பது, சித்திரம் எழுதுவது முதலான கைத்தொழில்களை நன்றாய் அறிந்தவர். தர்மத்திற்கும், யசஸ்ஸிற்கும், அர்த்தத்திற்கும், தனக்கும், பந்துக்களுக்கும் ஆக, தனத்தை ஐந்துபாகமாகப்பிரித்து உபயோகப்படுத்தவேண்டுமென்று சாஸ்த்ரம் சொல்லியபடி பிரிவினையறிந்தவர். யானை யேறுவதிலும், குதிரை யேறுவதிலும், ஏறி அடக்குவதிலும் ஸமர்த்தர்,

29. (பொ—ரை) அதர்வண வேதத்திற்கு உபவேதமாகிய தனுர் வேதத்தை நன்

अनसूयो जितक्रोधो न दृप्तो न च मत्सरी ।
न चावमन्ता भूतानां न च कालवशानुगः॥ 30 ॥

एवं श्रेष्ठगुणैर्युक्तः प्रजानां पार्थिवात्मजः ।
संमतस्त्रिषु लोकेषु वसुधायाः क्षमागुणैः ॥
बुद्ध्या बृहस्पतेस्तुल्यो वीर्येणापि शचीपतेः ॥ 31 ॥

30. (ப-ரை) अनसूयः- அஸூயையில்லாதவர், जितक्रोधः- கோபத்திற்கு வசப்படாதவர், न दृप्तः- கர்வமில்லாதவர், नच मत्सरी- த்வேஷமில்லாதவர், भूताना- ப்ராணிகளை, न अवमन्ता च- அவமதிக்காதவர், न च कालवशानुगः-காலத்திற்கு வசப்பட்டு நடக்காதவர்.

31. (ப-ரை) एवं- இவ்வாறு, पार्थिवात्मजः- ராஜபுத்திரனான ஸ்ரீராமன், प्रजानां- ஜனங்களுக்குள், श्रेष्ठगुणैः- ச்ரேஷ்டமான குணங்களோடு, युक्तः- கூடினவர், त्रिषुलोकेषु- மூன்று லோகங்களிலும், संमतः- பூஜிக்கப்பட்டவர், क्षमागुणैः- பொறுமை என்கிற குணங்களினால், वसुधायाः- பூமிக்கும், बुद्ध्या- புத்தியினால், बृहस्पतेः- ப்ருஹஸ்பதிக்கும், वीर्येण अपि- பராக்ரமத்தினால், शचीपतेः- இந்திரனுக்கும், तुल्यः- ஸமானமானவர்.

---

ருய் அறிந்தவர்களுக்குள் சிறந்தவர். உலகமுழுவதிலும் அதிரதர்களால் புகழப்பட்டவர். (अतिरथः- எந்தத் திக்கிலும் தேரை தடையின்றி நடத்தக்கூடிய வலிமையுள்ளவர்) சத்ருக்கள் வருவதற்கு முந்தியே அவர்களிருக்குமிடம் நேரில் எதிர்த்து போகக்கூடியவர். எதிர்த்துப்போயும் ஸேனைகள் மூலமாயல்லாமல் தானே ஸேனைத் தலையில் நின்று, சத்ருக்களை அடிக்கக்கூடியவர். அப்படி அடுத்த போதிலும் சத்ருக்களுக்கு நுழைய முடியாமல் சக்ர, கருட முதலாகிய வ்யூஹங்களைச்செய்து (வ்யூஹம்-அணிவகுத்தல்) சேனைகளை நிறுத்துவதில் ஸாமர்த்தியமுள்ளவர். கோபம் கொண்டு தேவாஸுரர்கள் ஒன்று சேர்ந்து வந்த போதிலும் அவர்களால் யுத்தத்தில் ஜெயிக்க முடியாதவர்.

30. (பொ-ரை) பிறருடைய மேன்மையை ஸஹியாமையாகிற அஸூயையில்லாதவர். கோபத்திற்கு வசப்படாதவர். ஒருவிதத்தாலும் கர்வமில்லாதவர். பிறர்களுடைய பெருமை விஷயத்தில் த்வேஷமில்லாதவர். ப்ராணிகளை ஒருவிதத்தாலும் அவமதிக்காதவர். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்கிற மூன்று குணங்களை ப்ரதானமாக உடைய காலத்தை அநுஸரித்து ஸத்வாதி குணங்களை அடையாதவர். ஏனென்றால், கேவல ஸத்வ மூர்த்தியாகையால்.

31. (பொ-ரை) இவ்வாறு இராஜபுத்ரனான ஸ்ரீராமன், ப்ரஜைகளுக்குள் மேலான உத்தமமான குணங்களோடு கூடினவர். மூன்று லோகங்களிலும் பூஜிக்கப்பட்டவர். பொறுமை என்கிற குணங்களினால் பூமிக்கும், புத்தியினால் ப்ருஹஸ்பதிக்கும், பராக்கிரமத்தினால் சசீபதியாகிய இந்திரனுக்கும் ஸமானமானவர்.

तथा सर्वप्रजाकान्तैः प्रीतिसंजननैः पितुः ।
गुणैर्विरुरुचे रामो दीप्तः सूर्य इवांशुभिः ॥ 32 ॥

तमेवं व्रतसंपन्नमप्रधृष्यपराक्रमम् ।
लोकपालोपमं नाथमकामयत मेदिनी ॥ 33 ॥

---

32. (ப-ரை) तथा-அவ்வாறு, सर्वप्रजाकान्तैः-எல்லாப்ரஜைகளுக்கும் ப்ரியமாயும் पितुः-பிதாவுக்கு, प्रीतिसंजननैः- ப்ரீதியை உண்டுபண்ணுகிறதாயுமுள்ள, गुणैः- குணங்களினால், रामः- ஸ்ரீராமன், दीप्तः- ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற, सूर्यः-ஸூர்யன், अंशुभिःइव- கிரணங்களினால்போல், विरुरुचे- விளங்கினார்.

33. (ப-ரை) एवं- இப்படி, व्रतसंपन्नम्-வ்ரதத்தோடு கூடினவரும், अप्रधृष्यपराक्रमम्-தடுக்க முடியாத பராக்ரமத்தோடு கூடினவரும், लोकपालोपमं- லோகபாலருக்கு ஸமானரு மான, तं- அந்த ஸ்ரீராமனை, मेदिनी- பூமியானவள், नाथं- ராஜாவாக, अकामयत- விரும்பினாள்.

---

32. (போ-ரை) ஸ்வபாவத்தினால் ஸுந்தரமூர்த்தியான ஸ்ரீராமன், மேற்சொல்லிய குணங்களினால் பிதாவுக்கு ப்ரீதியைச்செய்வதுபோல், ஸ்த்ரீ, பால, தருணர், வ்ருத்தர்கள், ஆகிய எல்லா ஜனங்களுக்கும், ப்ரீதியைச் செய்துகொண்டு ஸ்வாபாவமாகவே ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற ஸூர்யன் தன்னுடைய கிரணங்களினால் ப்ரகாசிப்பது போல் விளங்கிக்கொண்டிருந்தார்.

33. (போ-ரை) இப்படிச்சிறந்த குணங்களோடு கூடியிருப்பதுபோல் ஆச்ரித ஸம்ரக்ஷண வ்ரதத்தோடும் கூடியவரும், ஒருவராலும் அசைக்க முடியாத பராக்ரமம் உடையவரும், இந்திரன் முதலிய ஸகல லோகபாலர்களுக்கும் ஸமானருமான அந்த ஸ்ரீராமனை, பூமியிலுள்ள ஸர்வ ஜனங்களும் ராஜாவாக விரும்பினார்.

---

இவ்விதம रामस्तु "सीतयासार्धं विजहारबहून् ऋतून्-" என்று பாலகாண்டத்தில் சொல்லியபடி ஸீதையுடன் க்ரீடாரஸத்தை ப்ரதமம்போல் தவறாமல் நடத்தினவரும், விரோதிகளைப்போக்கி தன்னுடைய போகத்தை ஆச்ரிதர்களுக்குக் கொடுப்பவரும், * போகத்திற்கு உபயோகமான ஸமஸ்த ஸாதனங்களோடு கூடினவரும், † ஸீதா ரூபையான மஹாலக்ஷ்மியை பக்கத்தில் வைத்துக்கொண்டவருமான அந்த ஸ்ரீராமனைத் தானும் அநுபவிக்க வேண்டுமென்று பூமிப்பிராட்டியும் ஆசைப்பட்டாள்

* இந்தப்பொருள் लोकपाल என்ற பதத்தின் தாத்பர்யத்தினால் கிடைத்தது.

† उपमम्- என்கிற பதத்திற்கு, उप मा यस्य सः- எவனுடைய ஸமீபத்திலே லக்ஷ்மீ இருக்கிறாளோ என்ற வ்யுத்பத்தியினால் கிடைத்த பொருள்.

एतैस्तु बहुभिर्युक्तं गुणैरनुपमैः सुतम् ।
दृष्ट्वा दशरथो राजा चक्रे चिन्तां परंतपः ॥ 34 ॥

अथ राज्ञो बभूवैवं वृद्धस्य चिरजीविनः ।
प्रीतिरेषा कथं रामो राजा स्यान्मयि जीवति ॥ 35 ॥

एषा ह्यस्य परा प्रीतिर्हृदि संपरिवर्तते ।
कदा नाम सुतं द्रक्ष्याम्यभिषिक्तमहं प्रियम् ॥ 36 ॥

---

34. (ப) एतैः- இந்த முன் சொல்லப்பட்ட, बहुभिः- அநேகங்களான, अनुपमैः- நிகரற்ற गुणैः- குணங்களோடு, युक्तं- கூடியிருக்கிற, सुतं- புத்ரனை, दृष्ट्वा- பார்த்து, परंतपः- சத்ருக்களை அடக்கவல்ல, दशरथःराजा- தசரத மஹாராஜன், चिन्ताम्- தனக்குள் ஆலோசனையை, चक्रे- செய்தார்.

35. (ப) अथ- பிறகு, मयि- நான், जीवति सति- ஜீவித்திருக்கும் காலத்திலேயே, रामः- ஸ்ரீராமன், कथं- எப்படி, राजा- அரசனாக, स्यात्- ஆவான், इति- என்று, एषा- இந்த प्रीतिः- ஆசையானது, वृद्धस्य- முதிர்ந்தவராய், चिरजीविनः- வெகுநாள் பிழைத்த राज्ञः- தசரதருக்கு, एवं- இவ்விதமாக, बभूव- உண்டாயிற்று.

36. (ப) अहं- நான், प्रियम्- இஷ்டனை, सुतं- பிள்ளையை, अभिषिक्तं- பட்டாபிஷேகம் செய்யப்பட்டவனாக, कदानाम- எப்பொழுது, द्रक्ष्यामि- பார்க்கப்போகிறேனோ, (इति- என்று) एषा- இந்த, परा- மேலான, प्रीतिः- ஆசையானது, (சிந்தையானது) अस्य- இந்த தசரதருடைய, हृदि- மனதில், संपरिवर्तते- நன்றாகத் தொடர்ச்சியாக நடையாடு கிறது.

---

34. (பொ-ரை) இவ்விதம முன் சொல்லிய அளவற்ற, ஒப்பற்ற குணங்களோடு கூடிய, தன்னுடைய புத்ரனை ஸ்ரீராமனைப்பார்த்து வெகுநாள் ராஜ்ய பரிபாலனம பண்ணி ச்ரமத்தையடைந்த அந்த தசரதன் ஒரு எண்ணம கொண்டார்

35. (பொ-ரை) இவ்விதம், ராமனுடைய குணங்களைப்பார்த்தபிறகு, "நான் ஜீவித்திருக்கும் பொழுதே ராமன் எப்படி ராஜா ஆவான்" என்று வ்ருத்தராயும் சிரஞ்சீவியுமான தசரதருக்கு இவ்விதம் ஆசை உண்டாயிற்று. எப்படி ராமன் ராஜா ஆவான் என்று தசரதருக்கு எண்ணம் உண்டானது: கைகேயிக்குத்தாம் முன் கொடுத்த வரத்தினால் ஒரு ஸமயம் இதற்கு விக்னம் உண்டாகுமோ என்ற எண்ணத்தினால்.

36. (பொ-ரை) "ப்ரியமான பிள்ளையை பட்டாபிஷேகம் செய்து நான் எப்பொழுது பார்ப்பேன்" என்ற இந்த மேலான எண்ணமானது மஹாராஜருடைய மனதில் நன்றாகத் தொடர்ந்து நடையாடுகிறது.

वृद्धिकामो हि लोकस्य सर्वभूतानुकम्पनः ।
मत्तः प्रियतरो लोके पर्जन्य इव वृष्टिमान् ॥ 37 ॥

यमशक्रसमो वीर्ये बृहस्पतिसमो मतौ ।
महीधरसमो धृत्यां मत्तश्च गुणवत्तरः ॥ 38 ॥

महीमहमिमां कृत्स्नामधितिष्ठन्तमात्मजम् ।
अनेन वयसा दृष्ट्वा यथास्वर्गमवाप्नुयाम् ॥ 39 ॥

37-38. (ப) लोकस्य- உலகத்தின், वृद्धिकामःहि-வ்ருத்தியை ஆசைப்படுகிறவனன்றோ, सर्व भूतानुकम्पनः- ஸர்வ ப்ராணிகளிடத்திலும் கருணையுள்ளவன், वृष्टिमान्- மழை பொழியும், पर्जन्य इव- மேகம்போல், लोके- உலகத்தில், मत्तः- என்னைக்காட்டிலும், प्रियतरः- மிகவும் ப்ரியமானவன், वीर्ये- பராக்ரம விஷயத்தில், यमशक्रसमः- யமனுக்கும், இந்திரனுக்கும் ஸமானமானவன், मतौ- புத்தியில், बृहस्पतिसमः- ப்ருஹஸ்பதியை யொத்தவன், धृत्यां- தைர்யத்தில், महीधरसमः- பர்வதத்திற்கு ஒப்பானவன், मत्तः- என்னைக்காட்டிலும், गुणवत्तरः-च- மிகவும் குணங்களையும் உடையவன்.

39. (ப) अहं- நான், इमा- இந்த, महीं- பூமியை, कृत्स्नां- முழுவதையும், अधितिष्ठन्तम्- ஆளுகின்ற, आत्मजं- புத்ரனை ராமனை, अनेन वयसा- இந்த வயதிலேயே, दृष्ट्वा- பார்த்து, यथास्वर्गं- எனக்குத்தக்க ஸ்வர்க்கத்தை, अवाप्नुयाम्- அடைவேனா'

37-38. (பொ-ரை) மேன்மேலும் உலகத்திற்கு நன்மையை விரும்புகிறவன். ஸர்வ ப்ராணிகளிடத்திலும் கருணையுள்ளவன். மழை பொழியும் மேகம்போல் என்னைவிட, உலகத்தில் ப்ரியமானவன். பராக்ரமத்தில் யமனுக்கும், இந்திரனுக்கும் ஒப்பானவன். புத்தியில் ப்ருஹஸ்பதிக்கு ஒப்பானவன். தைர்யத்தில் பர்வதத்திற்கு ஒப்பானவன். என்னிலும் அதிகமான குணமுள்ளவன்.

39. (பொ-ரை) "இந்தப்பூமி முழுவதையும் ஆண்டுகொண்டிருக்கிற என்னுடைய புத்ரனாகிய ராமனை, இந்த வயதோடு நான் பார்த்துவிட்டு, என்னுடைய ஸுக்ருதத்திற்குத் தகுந்த ஸொர்க்கத்தை நான் அடையவேண்டுமென்று" இந்த மேலான ஆசையானது, மனதில் குடிகொண்டிருந்தது.

इत्येतैर्विविधैस्तैस्तैरन्यपार्थिवदुर्लभैः ।
शिष्टैरपरिमेयैश्च लोके लोकोत्तरैर्गुणैः ॥ 40 ॥

तं समीक्ष्य महाराजो युक्तं समुदितैः शुभैः ।
निश्चित्य सचिवैः सार्धं युवराजममन्यत ॥ 41 ॥

दिव्यन्तरिक्षे भूमौच घोरमुत्पातजं भयम् ।
संचचक्षे च मेधावी शरीरे चात्मनो जराम् ॥ 42 ॥

40-41. (ப) इति- இவ்விதம், विविधैः- நானாவிதங்களாயும், तैस्तैः- அந்தந்த கார்ய வேகத்தில் ப்ரஸித்தங்களாயும், अन्यपार्थिवदुर्लभैः- (ராமனைத்தவிர) மற்ற அரசர்களால் அடைய முடியாதவைகளும், अपरिमेयैः- கணக்கில்லாதவைகளும், लोके- உலகத்தில், लोकोत्तरैः- சிறந்தவைகளும், समुदितैः- ஸ்வாபாவிகங்களும், शुभैः- மங்களகரங்களுமான शिष्टैः- மற்றவைகளான, एतैःगुणैः- இந்த குணங்களோடு, युक्तं- கூடியிருக்கிற, तं- அந்த ராமனை, समीक्ष्य- பார்த்து, महाराजः- (தசரத) மஹாராஜா, सचिवैः सार्धं- மந்திரிகளோடுகூட, निश्चित्य- ஆலோசித்துத் தீர்மானம் செய்து, युवराजं- இளவரசனாக, अमन्यत- எண்ணினார்.

42. (ப) मेधावी- மிகவும் புத்திமானாகிய மஹாராஜாவானவர், दिवि- ஸ்வர்க்கத்திலும், अन्तरिक्षे- ஆகாயத்திலும், भूमौच- பூமியிலும், उत्पातजं- துர்நிமித்தங்களாலுண்டான, घोरं- கடுமையான, भयम्- பயத்தையும், आत्मनः- தன்னுடைய, शरीरे- சரீரத்தில், जरांच- கிழத்தன்மையையும், संचचक्षे- (மந்திரிகளுக்கு) சொன்னார்.

40-41 (பொ-ரை) இப்படி முன் சொன்ன வண்ணம், நானாவிதங்களாயும், அந்தந்த கார்ய வேகத்தில் ப்ரஸித்தங்களாயும், அந்த ராமனைத்தவிர மற்ற அரசர்களுக்குக் கிடைக்கக்கூடாதவைகளும், கணக்கிட முடியாதவைகளும், உலகத்தில் மேலாயும் சிறந்தவைகளாயும், ஸ்வாபாவிகங்களாயும், மங்களகரங்களுமான ஸௌசீல்யம் முதலாகிய மற்ற குணங்களோடும், கூடியிருக்கிற ஸ்ரீராமனைப்பார்த்து மஹாராஜா மந்திரிகளுடன் ஆலோசித்து யுவராஜாவாகச் செய்ய நிச்சயித்தார்.

42. (பொ-ரை) ஸ்திரமான புத்தியையுடைய மஹாராஜாவானவர் ஸ்வர்க்கத்திலும், ஆகாயத்திலும், பூமியிலும், க்ரஹங்கள் மாறுவது, பெருங்காற்று அடிப்பது, திக்குக்கள் புகைவது, பூமி அசைவது, மரங்களிலிருந்து இரத்தம் பெருகுவது முதலாகிய துர்நிமித்தங்களாலுண்டான கோரமான பயத்தையும், தன் சரீரத்தின் கிழத்தன்மையையும், மந்திரிகளுக்குச் சொன்னார்.

पूर्णचन्द्राननस्याथ शोकापनुदमात्मनः ।
लोके रामस्य बुबुधे संप्रियत्वं महात्मनः ॥ 43 ॥

आत्मनश्च प्रजानां च श्रेयसे च प्रियेण च ।
प्राप्तकालेन धर्मात्मा भक्त्या त्वरितवान्नृपः ॥ 44 ॥

नानानगरवास्तव्यान्पृथग्जानपदानपि ।
समानिनाय मेदिन्याः प्रधानान्पृथिवीपतीन् ॥ 45 ॥

---

43. (ப) अथ- பிறகு, पूर्णचन्द्राननस्य- பூர்ணசந்திரன்போன்ற முகம் உடையவரும், महात्मनः- மகா புத்திசாலியுமான, रामस्य- ராமனுக்கு, लोके- ஜனங்கள் விஷயத்தில், (இருக்கிற) संप्रियत्वं- அதிகமான ப்ரீதியை, आत्मनः- தன்னுடைய, शोकापनुदम्- சோகத்தைப்போக்கக்கூடியதாக, बुबुधे- அறிந்தார்.

44. (ப) धर्मात्मा- தர்ம புத்தியுள்ள, नृपः- அரசன், आत्मनः- தன்னுடையவும், प्रजानांच- ப்ரஜைகளுடையவும், श्रेयसे- நன்மைக்காகவும், प्रियेणच- ப்ரியத்திற்காகவும், भक्त्या- ப்ரீதியினலே, प्राप्तकालेन- தகுந்த காலத்தில், त्वरितवान्- (ஸ்ரீராமன் பட்டாபிஷேகத்தைக்குறித்து) துரையுள்ளவராயிருந்தார்.

45. (ப) नानानगरवास्तव्यान्- (தம்முடைய தேசத்தில்) நானாவிதமான நகரங்களில் வஸிக்கின்றவர்களும், पृथग्जानपदान्- अपि- வேறு தேசத்திலிருப்பவர்களும், मेदिन्याः- பூமிக்கு, प्रधानान्- முக்யர்களுமான, पृथिवीपतीन्- அரசர்களை, समानिनाय- வரவழைத்தார்.

43. (பொ-ரை) பிறகு, பூர்ண சந்திரன் போன்ற முகம் உடையவரும், மஹாமதியுமான ராமன், ஜனங்கள் விஷயத்தில் மிகவும் ப்ரியமாயிருப்பதே தன்னுடைய (தசரதருடைய) சோகத்தைப் போக்கக்கூடியது என்று எண்ணினர்.

44. (பொ-ரை) தர்ம புத்தியுள்ளவரான மஹாராஜன் தனக்கும், ப்ரஜைகளுக்கும், நன்மைக்காகவும், ப்ரியத்திற்காகவும், தகுந்த காலத்தில் ராமனுக்குப்பட்டாபிஷேகம் செய்ய ப்ரீதியினல் த்வரையுடனிருந்தார். (தகுந்த காலமாவது, தான் கிழவனாய் விட்டதும், ராமனுக்குத்தகுந்த வயது வந்ததும்.)

45. (பொ-ரை) நானாவிதமான நகரங்களிலே வஸிப்பவர்களும், மற்ற வேறு தேசத்தில் இருப்பவர்களும், உலகத்தில் முக்யர்களுமான ராஜாக்களை வரவழைத்தார்.

न तु *केकयराजानं जनकं वा नराधिपः ।
त्वरया चानयामास पश्चात्तौ श्रोष्यतः प्रियम् ॥ 46 ॥

तान्वेश्मनानाभरणैर्यथार्हं प्रतिपूजितान् ।
ददर्शालङ्कृतो राजा प्रजापतिरिव प्रजाः ॥ 47 ॥

अथोपविष्टे नृपतौ तस्मिन्परबलार्दने ।
ततः प्रविविशुः शेषा राजानो लोकसंमताः ॥ 48 ॥

---

46. (ப) नराधिपः- மஹாராஜாவானவர், केकयराजानंतु- கேகய ராஜாவையும், जनकं वा- ஜனக மஹாராஜாவையும், पश्चात्- பிறகு, तौ அவ்விருவர்களும், प्रियं- தங்களுக்கு, இஷ்டமான ராமபட்டாபிஷேகத்தை, श्रोष्यतः- கேட்பார்கள் என்று, त्वरयाच-சீக்கிரமாக, न आनयामास- வரவழைக்கவில்லை.

47. (ப) राजा- தசரத மஹாராஜாவானவர், अलङ्कृतः (सन्)- அலங்காரம் செய்துகொண்டு, वेश्मनानाभरणैः- க்ருஹங்களினாலும், நானாவித ஆபரணங்களினாலும், यथार्हं- தகுந்தபடி, प्रतिपूजितान्- மரியாதை செய்யப்பட்ட, तान्- அந்த அரசர்களை, प्रजापतिः- ப்ரும்மாவானவர், प्रजाः इव- ப்ரஜைகளைப்போல, ददर्श- பார்த்தார்.

48. (ப) अथ- பிறகு, परबलार्दने- சத்ருரு ஸைந்யங்களை வருத்தக்கூடிய, तस्मिन्- அந்த, नृपतौ- அரசன், उपविष्टे (सति)- (உட்கார்ந்த வளவில்) ततः- பிறகு, लोकसंमताः- உலகத்தில் கௌரவம் பெற்ற, शेषाः- மீதியான, राजानः- அரசர்கள், प्रविविशुः-ஸபையில் நுழைந்தார்கள்.

---

46. (பொ-ரை) கேகய ராஜாவும், ஜனக மஹாராஜாவும், வெகு தூரத்தில் இருக்கிறபடியால் உடனே வரவழைக்க முடியாமல், பட்டாபிஷேகம்பண்ண பிறகு இந்த ஸந்தோஷத்தை அவர்கள் கேட்டுக்கொள்ளட்டுமென்று அவ்விருவர்களையும் வரவழைக்கவில்லை.

47. (பொ-ரை) பட்டாபிஷேகத்திற்காக, நானாவித தேசங்களிலிருந்து வந்திருக்கிற அரசர்களை, அவரவர்கள் யோக்யதையை அநுஸரித்து தகுந்த விடுதிகளாலும், நானாவித ஆபரணங்களாலும், மரியாதை செய்து, தானும் அலங்கரித்துக்கொண்டு, ப்ரும்மா தன்னுடைய ப்ரஜைகளைப்போல மஹாராஜா பார்த்தார்.

48. (பொ-ரை) சத்ருரு ஸைந்யங்களை பீடிக்கக்கூடிய அந்த தசரத மஹாராஜா ஸபையில் உட்கார்ந்தபிறகு, ஜனக மஹாராஜா, கேகய ராஜா இவர்கள் தவிர, மற்ற உலகப்ரஸித்தமான ராஜாக்கள், ஸபையில் நுழைந்தார்கள்.

---

* ஜனக மஹாராஜாவையும், பரதனுடன் கேகய ராஜாவையும், அப்போது

द्वितीयः सर्गः ॥ 2 ॥

ततः परिषदं सर्वामामन्त्र्य वसुधाधिपः ।
हितमुद्धर्षणं चैवमुवाच प्रथितं वचः ॥ 1 ॥

दुन्दुभिस्वनकल्पेन गम्भीरेणानुनादिना ।
स्वरेण महता राजा जीमूत इव नादयन् ॥ 2 ॥

राजलक्षणयुक्तेन कान्तेनानुपमेन च ।
उवाच रसयुक्तेन स्वरेण नृपतिर्नृपान् ॥ 3 ॥

---

1. (ப-ரை) ततः- பிறகு, वसुधाधिपः- அரசன், सर्वां परिषदं- ஸபையிலுள்ள எல்லோரையும், आमन्त्र्य- அழைத்து, हितं- ஹிதகரமாயும், उद्धर्षणं च- மிகுந்த ஸந்தோஷத்தை உண்டுபண்ணக் கூடியதுமான, वचः- வார்த்தையை, एवं- இவ்வாறு, प्रथितं- ப்ரகாசமாக, उवाच- சொன்னார்.

2–3. (ப-ரை) राजा- எல்லோரையும் ரஞ்ஜிப்பிக்கின்ற, नृपतिः- அரசனானவர், दुन्दुभिस्वनकल्पेन- துந்துபி வாத்யத்தின் சப்தத்திற்கு ஸமானமாயும், गम्भीरेण- கம்பீரமான அர்த்தமுள்ளதாயும், अनुनादिना- எதிரொலி உண்டுபண்ணக் கூடியதுமான, महता स्वरेण- பெரிய சப்தத்தினால், जीमूत इव- மேகம்போல், नादयन्- (திக்குகளை) சப்திக்கும்படி செய்துகொண்டு, राजलक्षणयुक्तेन- ராஜலக்ஷணம் பொருந்தியதும், कान्तेन- மதுரமாயும், अनुपमेन च- நிகரற்றதாயும், रसयुक्तेन- இனியதுமான, स्वरेण- குரலொடு, नृपान्- அரசர்களை நோக்கி, उवाच- சொன்னார்.

---

1. (பொ-ரை) இவ்விதம் அரசர் ஜனங்களுடைய நன்மைக்காக ஸபையிலுள்ள எல்லா ஜனங்களையும் அழைத்து, ப்ரகாசமாகவும், ஹிதகரமாயும், மிகுந்த ஸந்தோஷகரமுமான வார்த்தையை, எல்லா ஜனங்களும் கேட்கும்படி இவ்விதம் சொன்னார்.

2–3. (பொ-ரை) எல்லோரையும் குணங்களால் வசப்படுத்தும் அரசர், துந்துபி வாத்யத்தின் சப்தத்திற்கு ஸமானமாயும், கம்பீரமாயும், எதிரொலி உண்டாக்கக்கூடியதுமான உயர்ந்த ஸ்வரத்தினால் மேகம்போல் திக்குகளை சப்திக்கும்படி செய்துகொண்டு, ராஜலக்ஷணம் பொருந்தியதும், மதுரமாயும், நிகரற்றதாயும், இனியதுமான ஸ்வரத்தோடு அரசர்களை நோக்கிச் சொன்னார்.

विदितं भवतामेतद्यथा मे राज्यमुत्तमम् ।
पूर्वकैर्मम राजेन्द्रैः सुतवत्परिपालितम् । ॥ 4 ॥

सो ऽ हमिक्ष्वाकुभिः सर्वैर्नरेन्द्रैः परिपालितम् ।
श्रेयसा योक्तुकामोऽस्मि सुखार्हमखिलं जगत् ॥ 5 ॥

मयाप्याचरितं पूर्वैः पन्थानमनुगच्छता ।
प्रजा नित्यमनिद्रेण यथाशक्त्यभिरक्षिताः ॥ 6 ॥

4. (ப-ரை) उत्तमम्- விசாலமான, मे- என்னுடைய, राज्यं- ராஜ்யமானது, मम- என்னுடைய, पूर्वकैः- முன்னோர்களான, राजेन्द्रैः- இக்ஷ்வாகு முதலாகிய ராஜ ச்ரேஷ்டர்களினால், सुतवत्- பிள்ளைபோல், यथा- எப்படி, परिपालितम्- ரக்ஷிக்கப்பட்டது, एतत्-என்ற இது, भवताम्-உங்களுக்கு, विदितं- தெரிந்ததே.

5. (ப-ரை) सः अहं- அந்த இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த நான், इक्ष्वाकुभिः- இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த, सर्वैः नरेन्द्रैः- எல்லா அரசர்களாலும், परिपालितम्- ரக்ஷிக்கப்பட்டும், सुखार्हं- ஸுகத்தை அடையத்தக்கதுமான, अखिलं जगत्-எல்லா ராஜ்யத்தையும், श्रेयसा- ஸுகத்தோடு, योक्तुकामः अस्मि- சேர்க்க ஆசை கொண்டவனாயிருக்கிறேன்

6. (ப-ரை) पूर्वैः- முன்னோர்களான அரசர்களினால், आचरितम्- அநுஷ்டிக்கப்பட்ட, पन्थानं- வழியை, अनुगच्छता- அநுஸரித்தவனும், नित्यं- எப்பொழுதும், अनिद्रेण- தூக்கமில்லாதவனுமான, मया अपि- என்னாலும், प्रजाः- ஜனங்கள், यथाशक्ति- என்னுடைய ஸாமர்த்யத்திற்குத்தக்கபடி, अभिरक्षिताः- ரக்ஷிக்கப்பட்டார்கள்.

---

4. (பொ-ரை) விசாலமான எனது ராஜ்யமானது, என்னுடைய முன்னோர்களாகிய, இக்ஷ்வாகு முதலான ராஜச்ரேஷ்டர்களினால், பிள்ளையைப்போல் மிகவும் ப்ரியமாய் பரிபாலனம் செய்யப்பட்டதென்பது, உங்களெல்லோருக்கும் தெரிந்த விஷயமன்றோ.

5. (பொ-ரை) அந்த வம்சத்தில் பிறந்த நானும் இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த எல்லா அரசர்களாலும் பரிபாலிக்கப்பட்டும், ஸுகத்தை அடையத்தகுந்ததுமான ராஜ்யம் முழுமையையும், ராமபட்டாபிஷேகமாகிற ச்ரேயஸ்ஸோடு சேர்க்க ஆசையுள்ளவனாக இருக்கிறேன்.

6. (பொ-ரை) நானும் நம்முன்னோர்கள் நடந்த வழியிலேயே நடந்து எப்பொழுதும் என்னுடைய ஸுகத்தையே எதிர்பாராமல் ப்ரஜைகளின் ஸுகத்திலேயே விழிப்புடன் நின்று அவர்களை என்னுடைய சக்திக்குத்தகுந்தபடி நாளது வரையில் ரக்ஷித்துவந்தேன்.

इदं शरीरं कृत्स्नस्य लोकस्य चरता हितम् ।
पाण्डुरस्यातपत्रस्य छायायां जरितं मया ॥ 7 ॥

प्राप्य वर्षसहस्राणि बहून्यायूंषि जीवतः ।
जीर्णस्यास्य शरीरस्य विश्रान्तिमभिरोचये ॥ 8 ॥

राजप्रभावजुष्टां हि दुर्वहामजितेन्द्रियैः ।
परिश्रान्तोऽस्मि लोकस्य गुर्वीं धर्मधुरं वहन् ॥ 9 ॥

7. (ப-ரை) कृत्स्नस्य- ஸமஸ்தமான, लोकस्य-உலகத்திற்கு, हितम्- நன்மையை, चरता- செய்துகொண்டிருக்கிற, मया- என்னால், इदं शरीरं- இந்தசரீரமானது, पाण्डुरस्य- வெளுப்பான, आतपत्रस्य- குடையினுடைய, छायायां- நிழலில், जरितं-ஜரை உண்டானதாகச்செய்யப்பட்டது.

8. (ப-ரை) बहूनि- அநேகங்களான, वर्षसहस्राणि- ஆயிரம் வருஷங்களான, आयूंषि- வாழ்நாட்களை, प्राप्य- அடைந்து, जीवतः- ஜீவித்துக்கொண்டு, जीर्णस्य- இப்பொழுது கிழத்தனமடைந்த, अस्य- இந்த, शरीरस्य- சரீரத்திற்கு, विश्रान्ति- இளைப்பாறுதலை, अभिरोचये- அளிக்க விரும்புகிறேன்.

9. (ப-ரை) हि- ஏனென்றால், राजप्रभावजुष्टां- அரசர்களுக்குரிய தேஜஸ்ஸினால் ஸேவிக்கக்கூடியதாயும், अजितेन्द्रियैः- இந்திரியங்களை அடக்காதவர்களால், दुर्वहां- வஹிக்க முடியாததும், गुर्वीं- பெரியதுமான, लोकस्य- உலகத்தினுடைய, धर्मधुरं- தர்மத்தை நடத்தும் பாரத்தை, वहन्- ஏற்றுவந்த, अहं- நான், परिश्रान्तोऽस्मि- (இப்பொழுது) மிகவும் களைத்திருக்கிறேன்.

---

7. (பொ-ரை) இந்த என்னுடைய சரீரமானது, ஜனங்களுக்கும் நன்மை செய்துகொண்டுவந்த என்னால் வெள்ளைக்குடையின் நிழலில் கிழத்தனம் உண்டாகும்படி செய்யப்பட்டது

8. (பொ-ரை) அநேகமாயிரம் வருஷங்கள் ஆயுள் பெற்று பிழைத்தது நாளடைவில் கிழத்தனமடைந்த இந்த சரீரத்திற்கு இளைப்பாறுதலைக் கொடுக்க விரும்புகிறேன்.

9. (பொ-ரை) ஏனென்றால், அரசர்களுக்குரிய சௌர்ய, வீர்ய, பராக்ரமாதி ப்ரபாவங்களினால் அடையத்தகுந்ததாயும், இந்திரியங்களை அடக்காத விஷய சபலர்களால் வஹிக்க முடியாததாயும், அநேக ஸாதனங்களால் நடத்தக்கூடியதுமான, இந்த உலகத்தின் தர்ம பாரத்தை இதுகாறும் வஹித்து நான் மிகவும் ச்ரமத்தை அடைந்திருக்கிறேன்.

सो ऽहं विश्रममिच्छामि पुत्रं कृत्वा प्रजाहिते ।
सन्निकृष्टानिमान्सर्वाननुमान्य द्विजर्षभान् ॥ 10 ॥

अनुजातो हि मां सर्वैर्गुणैर्ज्येष्ठो ममात्मजः ।
पुरन्दरसमो वीर्ये रामः परपुरंजयः ॥ 11 ॥

तं चन्द्रमिव पुष्येण युक्तं धर्मभृतां वरम् ।
यौवराज्ये नियोक्तास्मि प्रीतः पुरुषपुङ्गवम् ॥ 12 ॥

10. (ப-ரை) स: अह- அந்த நான், प्रजाहिते- ப்ரஜைகளின் நன்மை விஷயத்தில், पुत्रं- புத்திரனை, कृत्वा- ஏற்படுத்தி, सन्निकृष्टान्- மிகவும் அந்தரங்கர்களான, इमान्- இந்த, सर्वान् द्विजर्षभान्- எல்லா ப்ராம்மணச்ரேஷ்டர்களையும், अनुमान्य- அநுமதி கொடுக்கும்படி செய்து, विश्रमम्- இளைப்பாறுதலை, इच्छामि- அடைய விரும்புகிறேன்

11. (ப-ரை) वीर्ये- வீர்ய விஷயத்தில், पुरन्दरसमः- இந்திரனுக்கு ஸமானனாயும், परपुरंजयः- சத்ரு நகரங்களை ஜெயிக்கின்றவனுமான, रामः- ராமனென்கிற, मम- என்னுடைய, जेष्ठः आत्मजः- மூத்த குமாரன், सर्वैः गुणैः- எல்லா குணங்களாலும், मां- என்னை, अनुजातो हि- அநுஸரித்தவனாகவே இருக்கிறான்.

12. (ப-ரை) धर्मभृतां- தார்மிகர்களுக்குள், वरम्- ச்ரேஷ்டனும், पुष्येण- புஷ்ய நக்ஷத்திரத்தோடு, युक्तं- கூடின, चन्द्रमिव- சந்திரன் போன்றவனுமான, तं पुरुषपुङ्गवम्- அந்த புருஷோத்தமனை ராமனை, प्रीतः- ப்ரீதியுள்ளவனாய், यौवराज्ये- இளவரசு பட்டத்தில், नियोक्तास्मि- ஏற்படுத்தப் போகிறேன்.

10. (பொ-ரை) இப்படி வெகுநாள் ராஜ்யபரிபாலனம் செய்து ச்ரமத்தை யடைந்த நான், நமக்கு மிகவும் அந்தரங்கர்களான இந்த ப்ராம்மணோத்தமர்களிடத்தில் அநுமதி பெற்றுக்கொண்டு இனிமேல் ப்ரஜைகளுக்கு நன்மை செய்யவேண்டிய விஷயத்தில் புத்திரனை ஏற்படுத்தி இளைப்பாற விரும்புகிறேன்.

11. (பொ-ரை) இந்திரனுக்கு ஸமானமான வீர்யமுடையவனாயும், சத்ருக்கள் பட்டணங்களை ஸ்வாதீனம் செய்யக்கூடியவனுமான, ராமனென்கிற எனது மூத்த குமாரன் சௌர்யம் முதலான எல்லா குணங்களாலும், எனக்கு ஒப்பாகவே இருக்கிறான்.

12. (பொ-ரை) தார்மிகர்களுக்குள் சிறந்தவனையும், புஷ்ய நக்ஷத்திரத்தோடு கூடின சந்திரன்போல் ப்ரகாசித்துக்கொண்டும், ஸர்வ கார்ய ஸித்தியில் ஸமர்த்தனுமான, அந்த புருஷோத்தமனை ஸ்ரீ ராமனை ப்ரீதியுடன் யௌவராஜ்யத்தில் நியமிக்கப்போகிறேன்.

*अनुरूपः स वै नाथो लक्ष्मीवाँल्लक्ष्मणाग्रजः ।
त्रैलोक्यमपि नाथेन येन स्यान्नाथवत्तरम् ॥ 13 ॥

13. (ப—ரை) लक्ष्मीवान्- சிறந்த லக்ஷ்மியோடு கூடியும், लक्ष्मणाग्रजः- லக்ஷ்மணனுக்குத் தமயனுமான, स वै- அந்த ராமனை, अनुरूपः- தகுந்தவனை, नाथः- நாதன், येन नाथेन- யாதொரு நாதனாகிய ராமனால், त्रैलोक्यमपि- மூன்று லோகமும், नाथवत्तरम्- உயர்ந்த நாதனுடையதாக, स्यात्- ஆகுமோ.

13. (பொ—ரை) எவன் நாதனாயிருந்தால் மூன்று லோகங்களும், உயர்ந்த நாதனை உடையவையாக ஆகுமோ, அளவில்லாத தேஜஸ்ஸோடு கூடியும், லக்ஷ்மணனைப்போல், எல்லாரிடத்திலும் அதிகப்ரீதியுடன் கூடினவனுமான அந்த ராமன் தான் தகுந்த நாதன்.

---

*இந்த ச்லோகத்தினால் ராமனுடைய பரத்வத்தை வால்மீகி சொல்லுகிறார் என்றும் ஒரு தாத்பர்யம். அந்த ஸ்ரீராமன் உலகத்திற்கு இயற்கையான சேஷி, மற்றவர்கள் கர்மானுகுணமான சேஷிகள்.

அல்லது, अनुरूपः- அநுகூலமான ரூபத்தை யுடையவர்.

அதாவது, समः समविभक्ताङ्गः चन्द्रकान्ताननम्- இது முதலியவைகளால் சொல்லப்பட்ட நிகரற்ற ஸௌந்தர்யமுள்ள, திவ்ய திருமேனியுடையவர் என்று தாத்பர்யம்.

अनुरूपः- அநுகூலமான ஸ்வரூபத்தை யுடையவர்.

அதாவது, तयेशान- என்கிற ச்ருதியில் சொல்லியபடி நூற்றுக்கணக்காகப்பெருக்கி உயர்த்தப்பட்ட ஆனந்தமயமான ஸ்வரூபத்தை யுடையவர்.

अनुरूप.- அநந்தமான ரூபத்தை யுடையவர். அதாவது, ஸர்வ வ்யாபி என்று அர்த்தம்.

अनुरूपः- तत्सृष्ट्वा तदेवानुप्राविशत्- என்கிற ச்ருதியில் சொல்லுகிறபடி தம்மால் அநுப்ரவேசம் பண்ணப்பட்ட சராசராதிகளை சரீரமாகவுடையவர்.

अनुरूपः- அநுஸ்யூதமான ரூபத்தை யுடையவர். அதாவது, பர, வ்யூஹ, விபவ, அந்தர்யாமி, அர்சாவதார, ரூபமாக கொண்ட நானாவித அவதாரங்களை யுடையவர்.

अनुरूपः-न-उ-रूप- என்று பதம். அதாவது, ருத்ரனுடைய சரீரத்தைக்காட்டிலும், விலக்ஷணமான திவ்ய திருமேனியை யுடையவர்.

स वै नाथः- वि- பக்ஷிகளுக்கு, नाथः- ராஜாவான ஹம்ஸத்தை வாஹனமாக ஸம்பாதித்தவர்- वै नाथः- அவைகளோடு கூடியவர். स वै नाथः- அதாவது:- நாபி கமலத்தில் ப்ரம்மாவை உடையவர் என்று தாத்பர்யம்.

लक्ष्मीवान्- பிராட்டியுடன் ஒருக்காலும் பிரிவில்லாதவர்.

लक्ष्मणाग्रजः- இங்கு லக்ஷ்மண சப்தமானது, கைங்கர்ய லக்ஷ்மியைச் சொல்லி அதனடியாக ஸமஸ்த கைங்கர்ய பரர்களெல்லாரையும் குறிக்கிறது. அவர்களுக்கு அண்ணான் என்று இவரை நிரூபித்தபடியால் ஆச்ரித பாரதந்த்ர்யம் சொல்லப்பட்டது.

अनेन श्रेयसा सद्यः संयोज्यैवमिमां महीम् ।
गतक्लेशो भविष्यामि सुते तस्मिन्निवेश्य वै ॥ 14 ॥

यदीदं मेऽनुरूपार्थं मया साधु सुमन्त्रितम् ।
भवन्तो मेऽनुमन्यन्तां कथं वा करवाण्यहम् ॥ 15 ॥

यद्यप्येषा मम प्रीतिर्हितमन्यद्विचिन्त्यताम् ।
अन्या मध्यस्थचिन्ता हि विमर्दाभ्यधिकोदया ॥ 16 ॥

14. (ப) इमां-இந்த, महीम्- பூமியை, तस्मिन् सुते- அந்த ராமனென்கிற குமாரனிடத்தில், निवेश्य- வைத்துவிட்டு, अनेन- இந்த, श्रेयसा- நன்மையோடு, एवं- இவ்விதம, सद्यः- உடனே, संयोज्य- சேர்ப்பித்து, गतक्लेशः- கஷ்டமொழிந்தவனாக, भविष्यामि वै- ஆகவே போகிறேன்.

15. (ப-ரை) इदं- இந்த கார்யமானது, मे- எனக்கு, अनुरूपार्थं यदि- அநுகூலமான ப்ரயோஜனகரமும, मया- என்னாலே, साधु- நன்றாய், सुमन्त्रितम्- (यदि) ஆராய்ந்து பார்க்கப்பட்டதுமானால், (तदा- அப்பொழுது), भवन्तः- நீங்கள், मे- எனக்கு, अनुमन्यन्तां- அநுமதி கொடுங்கள், अहं- நான், कथं वा- எப்படி, करवाणि- செய்யட்டும.

16. (ப-ரை) एषा- இந்த, प्रीतिः- ப்ரியமானது, मम यद्यपि- எனக்கு இருக்கவே இருக்கிறது, (तथापि- ஆகிலும்), अन्यत् हितम्- வேறு ஹிதமானது, (अस्ति चेत्- இருக்குமேயானால்), चिन्त्यताम्- (உங்களால்) ஆலோசிக்கப்படலாம், मध्यस्थचिन्ता- பொதுவானவர்கள் செய்யும ஆலோசனையானது, अन्या- வேறுவிதமானது, विमर्दाभ्यधिकोदया- பூர்வ பக்ஷ ஸிந்தாந்தங்களினால், அதிக மேன்மை யுடையதுமானது.

14. (பொ-ரை) நான் வெகுகாலம் ஆண்டுவந்த இந்த பூமியை, அந்த ஜேஷ்ட புத்திரனான ராமனிடத்தில் ஒப்புவித்துவிட்டு, இந்த சிறப்பான நன்மையை பூமிக்கும் கொடுத்து நானும ராஜ்யம வஹித்து வந்த ச்ரமத்தையும தீர்த்துக்கொள்ளப்போகிறேன்.

15. (பொ-ரை) இப்பொழுது சொன்ன இந்த ராமபட்டாபிஷேக ரூபமான கார்யம் வெகுநாள் ராஜ்யபாரம் பண்ணி ச்ரமத்தையடைந்த வ்ருத்தனாயிருக்கிற எனக்குத்தகுந்த ப்ரயோஜனத்தைக் கொடுக்குமேயானாலும், நான் செய்த ஆலோசனையும், நன்றாய் ஆராய்ந்து செய்யப்பட்டதுமேயானாலும, நீங்கள் எனக்கு அநுமதி கொடுங்கள். இதுவே எனக்கு அநுகூலமானால் வேறு எதை நான் செய்யவேண்டும்?

16. (பொ-ரை) இந்த ராமபட்டாபிஷேகமானது எனக்குரொம்பவும் ப்ரியமானதுதான். இதுதவிற வேறு ஹிதமிருந்தால் நீங்களும் ஆலோசியுங்கள். ஏனென்றால், ராகத்வேஷமில்லாத மத்யஸ்தர்கள் செய்யும் ஆலோசனை விலக்ஷணமாகவும், ஒருவருக்கொருவர் பூர்வ பக்ஷ ஸிந்தாந்தம் சொல்லி கடைசியில் உயர்ந்த க்ஷேமகரமானது மன்றோ.

इति ब्रुवन्तं मुदिताः प्रत्यनन्दन्नृपा नृपम् ।
वृष्टिमन्तं महामेघं नदन्त इव बर्हिणः ॥ 17 ॥

स्निग्धोऽनुनादी संजज्ञे तत्र हर्षसमीरितः ।
जनौघोद्घुष्टसंनादो विमानं कम्पयन्निव ॥ 18 ॥

तस्य धर्मार्थविदुषो भावमाज्ञाय सर्वशः ।
ब्राह्मणा जनमुख्याश्च पौरजानपदैः सह ॥ 19 ॥

समेत्य मन्त्रयित्वा तु समतागतबुद्धयः ।
ऊचुश्च मनसा ज्ञात्वा वृद्धं दशरथं नृपम् ॥ 20 ॥

---

17. (ப-ரை) इति- என்று, ब्रुवन्त- சொல்லுகின்ற, नृपम्- அரசனை, नृपाः- அரசர்கள், वृष्टिमन्तं- மழை பெய்கின்ற, महामेघं- பெரிய மேகத்தை, नदन्तः- சப்தித்துக்கொண்டிருக்கிற, बर्हिण इव- மயில்கள் போல, मुदिताः (सन्तः) ஸந்தோஷித்துக் கொண்டு, प्रत्यनन्दन्- புகழ்ந்து அங்கீகரித்தார்கள்.

18. (ப-ரை) तत्र- அந்த ஸபையில், स्निग्धः- ஸ்நேஹத்தை வெளியிடுவதும், अनुनादी- எதிரொலியை உண்டாக்குவதும், हर्षसमीरितः- ஸந்தோஷத்தினால் உண்டானதுமான, जनौघोद्घुष्टसन्नादः- ஜனங்களின் கூட்டத்தில் உண்டான அழகான சப்தமானது, विमान- மண்டபத்தின் விமானத்தை, कम्पयन् इव- நடுங்கும்படி செய்வது போல், सजज्ञे- உண்டானது.

19- 20. (ப-ரை) ब्राह्मणाः- ப்ராம்மணர்களும், जनमुख्याःच- அரசர்களும், पौरजानपदैः सह- நகரத்து ஜனங்களோடும் வெளிதேசத்து ஜனங்களோடு, समेत्य- கலந்து, मन्त्रयित्वातु- ஆலோசனையும் செய்து, धर्मार्थविदुषः- தர்மத்தையும், அர்த்தத்தையும் அறிந்தவரான, तस्य- அந்த அரசனுடைய, भावम्- அபிப்ராயத்தை, सर्वशः- பலபடியாக, आज्ञाय- நன்றாய் அறிந்து, समतां- ஒற்றுமையை, गतबुद्धयः (सन्तः)- அடைந்த புத்தியை உடையவர்களாய்க்கொண்டு, मनसा- மனதினாலே, ज्ञात्वाच- அறிந்தும், वृद्ध- கிழவரான, नृपम्- அரசனை (குறித்து), ऊचुः- சொன்னார்கள்.

---

17. (பொ-ரை) இவ்விதம் சொன்ன தசரதமஹாராஜாவை, ஸபையிலுள்ள அரசர்கள் மழைபெய்யும் மேகத்தைக்கண்டு சப்திக்கின்ற மயில்கள்போல் களிப்புற்று புகழ்ந்தார்கள்.

18. (பொ-ரை) அந்த ஸபையில், ஸ்நேஹத்தைத்தெரிவிக்கின்றதும், எதிரொலியைச் செய்கின்றதும், களிப்பினால் வெளிப்பட்டதுமான ஜனங்களின் கூட்டத்திலுண்டான அழகான சப்தமானது, அந்த ஸபா மண்டபத்தின் விமானத்தை நடுங்கும்படி செய்வதுபோல் உண்டானது. அதாவது:- ராஜாவின் வார்த்தையைக்கேட்டு அரசர்கள் மாத்திரமல்லாமல், அந்த ஸபையிலிருந்த எல்லா ஜனங்களும் மிகவும் களிப்புடன் மகிழ்ந்தார்கள் என்றபடி.

19- 20. (பொ-ரை) வஸிஷ்டர் முதலாகிய ப்ராம்மணர்களும், அரசர்களும்,

श्रुत्वैव वचनं यन्मे राघवं पतिमिच्छथ
राजानः संशयो ऽयं मे किमिदं ब्रूत तत्त्वतः ॥ 24 ॥

कथं नु मयि धर्मेण पृथिवीमनुशासति ।
भवन्तो द्रष्टुमिच्छन्ति युवराजं ममात्मजम् ॥ 25 ॥

ते तमूचुर्महात्मानं पौरजानपदैः सह । 25½

---

24. (ப-ரை) हे राजानः— ஓ அரசர்களே, मे— என்னுடைய, वचनं- வார்த்தையை, श्रुत्वा एव— கேட்டமாத்திரத்திலேயே, राघवं— ஸ்ரீராமனை, पतिम्— அரசனாக, इच्छथ इति यत्- விரும்புகிறீர்கள் என்ற, अयं— இது, मे— எனக்கு, संशयः- ஸந்தேகம், इदं- இது, किं- என்ன (காரணம்), तत्त्वतः- உண்மையாக, ब्रूत- சொல்லுங்கள்.

25. (ப-ரை) मयि- நான், धर्मेण- தர்மமாக, पृथिवीम्- பூமியை, अनुशासति (सति)- ஆண்டுவரும் காலத்தில், भवन्तः- நீங்கள், मम आत्मजं- என்னுடைய பிள்ளையை, युवराजं- இளவரசனாக, द्रष्टुं- பார்ப்பதற்கு, कथं नु- ஏன், इच्छन्ति- விரும்புகிறீர்கள்.

25½. (ப-ரை) ते- அந்த வஸிஷ்டர் முதலியவர்கள், पौरजानपदैः सह- நகரத்து ஜனங்களோடும், வெளிதேசத்து ஜனங்களோடும் கூட, महात्मानं- மஹா புத்தியுள்ள, तम्- அவ்வரசரை (பார்த்து), ऊचुः- சொன்னார்கள்.

ராம பட்டாபிஷேகம் அவர்களுக்குப் ப்ரியமென்று தெரிந்திருந்தும், தெரியாதவர் போல் அவர்கள் வாய்மொழியாலேயே நன்றாய் அறியவேண்டுமென்கிற எண்ணத்துடன் இந்த வார்த்தையைச் சொன்னார்.

24. (பொ-ரை) ஓ அரசர்களே, என் வார்த்தையைக் கேட்ட மாத்திரத்திலேயே முன் பின் ஆலோசிக்காமல், ஸ்ரீராமனுக்கு யௌவராஜ்ய பட்டாபிஷேகம் செய்து, பார்க்கவேண்டுமென்று நீங்கள் விரும்புவதால், எனக்கு ஸந்தேகமுண்டாயிற்று. அதாவது:— நான் ராஜ்ய பரிபாலனம் செய்வது, சரியில்லாமையாலேயோ அல்லது, ஸ்ரீராமன் மிகச் சிறந்த குணமுள்ளவனாதலாலோ இவர்கள் இவ்விதம் விரும்புவது என்று, இவையன்றி ஸ்ரீராமனுக்கு அபிஷேகம் செய்ய விரும்புவதின் காரணம் என்ன? உண்மையாய்த் தெளிவாய்ச் சொல்லுங்கள்.

25. (பொ-ரை) நான் தர்மமாக ராஜ்ய பரிபாலனம் செய்து கொண்டிருக்கும்பொழுது, என் பிள்ளையான ஸ்ரீராமனை யுவராஜனாக நீங்கள் பார்க்க விரும்புவதற்கு என்ன காரணம்?

25½. (பொ-ரை) அந்த வஸிஷ்டர் முதலிய ப்ராமணர்களும், அரசர்களும், நகரத்து ஜனங்களோடும், வெளிதேசத்திலிருந்து வந்த ஜனங்களோடும் சேர்ந்து, ஒரே அபிப்ராயமாக புத்திசாலியான அவ்வரசரைப் பார்த்துச் சொன்னார்கள்.

बहवो नृप कल्याणा गुणाः पुत्रस्य सन्ति ते ॥ 26 ॥
गुणान्गुणवतो देव देवकल्पस्य धीमतः ।
प्रियानानन्दनान्कृत्स्नान्प्रवक्ष्यामो ऽद्य ताञ्शृणु ॥ 27 ॥
दिव्यैर्गुणैः शक्रसमो रामः सत्यपराक्रमः ।
इक्ष्वाकुभ्यो ऽपि सर्वेभ्यो ह्यतिरिक्तो विशांपते ॥ 28 ॥
रामः सत्पुरुषो लोके सत्यधर्मपरायणः ।
साक्षाद्रामाद्विनिर्वृत्तो धर्मश्चापि श्रिया सह ॥ 29 ॥

---

26–27. (ப-ரை) हे नृप- ஓ அரசனே, ते- உம்முடைய, पुत्रस्य- பிள்ளையான ஸ்ரீராமனுக்கு, कल्याणाः- மங்களமுள்ளவைகளாயும், बहवः- அநேகங்களான, गुणाः- குணங்கள், सन्ति- இருக்கின்றன. हे देव- ஓ தேவனே, गुणवतः- சிறந்த குணமுள்ளவரும், देवकल्पस्य- தேவனுக்கொப்பானவரும், धीमतः- மஹா புத்தியுள்ளவருமான அந்த ராமனுடைய, प्रियान्- ப்ரியமுள்ளவர்களும், आनन्दनान्- ஆனந்தகரங்களுமான, कृत्स्नान् गुणान्- குணங்கள் முழுவதையும், अद्य- இப்பொழுது, प्रवक्ष्यामः- நன்றாயெடுத்துரைப்போம், ताञ्शृणु- அவைகளைக் கேளும்.

28. (ப-ரை) हे विशांपते- ஓ அரசனே, रामः- ஸ்ரீராமன், दिव्यैः திவ்யங்களான गुणैः குணங்களால், शक्रसमः- இந்திரனுக்கு ஸமானமானவர், सत्यपराक्रमः- பழுதில்லாத பராக்ரமத்தை உடையவர், सर्वेभ्यः इक्ष्वाकुभ्यः- இக்ஷ்வாகு வம்சத்து எல்லா அரசர்களைக்காட்டிலும், अतिरिक्तः हि- மிகவும் அதிகமானவரன்றோ?

29. (ப-ரை) लोके- உலகத்தில், रामः (एव)- ஸ்ரீராமன் ஒருவனே, सत्पुरुषः- ஸத்புருஷன், सत्यधर्मपरायणः- ஸத்யத்தையும், தர்மத்தையும் முக்யமான கதியாக உடையவர், (किंच- பின்னும்), धर्मः- தர்மமானது, श्रिया सह- ஸம்பத்துடன் கூட, रामात्- ராமனிடத்திலிருந்து, साक्षात्- நேராக, विनिर्वृत्तः- உண்டானது.

---

26–27. (பொ-ரை) ஓ அரசனே உம்முடைய பிள்ளையாகிய ஸ்ரீராமனுக்கு அநேக கல்யாண குணங்கள் இருக்கின்றன. ஓ தேவனே, சிறந்த அநேக குணமுள்ளவரும், தேவர்களுக்கொப்பானவரும், மிக்க புத்தியுள்ளவருமான, அந்த ஸ்ரீராமனுடைய இஷ்டமாயும், சத்ருக்களுக்கும், ஆனந்தத்தை செய்யக்கூடியதுமான, அந்த குணங்களை முழுமையையும், இப்பொழுது ஸமயம் வாய்த்தவாறு சொல்லுகிறோம் கேட்பீராக.

28. (பொ-ரை) ஓ அரசனே, ஸ்ரீராமன் மனுஷ்யர்களால் அடைய முடியாத சௌர்ய வீர்யாதி குணங்களால், இந்திரனுக்கு ஒப்பானவர். பழுதில்லாத பராக்ரமம் உடையவர். ஆகையால் இக்ஷ்வாகு வம்சத்து எல்லா அரசர்களிலும் மிக மேலானவரன்றோ?

29. (பொ-ரை) உலகத்தில் ஸ்ரீராமன் ஒருவன்தான் ஸத்புருஷன். அதாவது, (சத்ருக்களிடத்திலும் வாத்ஸல்யமுடையவர்), ஸத்யத்தையும், தர்மத்தையும் தவறாமல் ப்ரதானமாக நடத்துகின்றவர். பின்னும், தர்மமானது தன் பலமான அர்த்தத்துடன் கூட, ஸ்ரீராமனிடத்திலிருந்து நேராக உண்டானது.

प्रजासुखत्वे चन्द्रस्य वसुधायाः क्षमागुणैः
बुध्या बृहस्पतेस्तुल्यो वीर्ये साक्षाच्छचीपतेः || 30 ||

धर्मज्ञः सत्यसंधश्च शीलवाननसूयकः ।
क्षान्तः सान्त्वयिता श्लक्ष्णः कृतज्ञो विजितेन्द्रियः || 31 ||

मृदुश्च स्थिरचित्तश्च सदा भव्योऽनसूयकः || 32 ||

30. (ப-ரை) प्रजासुखत्वे- ப்ரஜைகளுக்கு ஸுகத்தை யுண்டுபண்ணுவதில், चन्द्रस्य- சந்திரனுக்கு, तुल्यः- ஒப்பானவர், क्षमागुणैः- பொறுமை குணங்களினால், वसुधायाः- பூமிக்கு, (तुल्यः- ஒப்பானவர்), बुध्या- புத்தியினால், बृहस्पतेः- ப்ருஹஸ்பதிக்கு, (तुल्यः- ஒப்பானவர்), वीर्ये- பராக்ரம விஷயத்தில், शचीपतेः- இந்திரனுக்கு, साक्षात्- துல்யமானவர்.

31. (ப-ரை) धर्मज्ञः- தர்மத்தையறிந்தவர், सत्यसंधः च- பழுதில்லாத ப்ரதிஜ்ஞையுள்ளவர், शीलवान्- சீலமுள்ளவர், (மிகவும் மேலானவர், மிக்கத்தாழ்ந்தவரிடத்தில் ஸ்நேஹிப்பது), अनसूयकः- அஸூயையில்லாதவர், क्षान्तः- பொறுமையுள்ளவர், सान्त्वयिता- கோபித்தவர்களையும், துக்கித்தவர்களையும் குறித்து ஸமாதானம் சொல்லுகிறவர், श्लक्ष्णः- ப்ரியமான வார்த்தை சொல்லுகிறவர், कृतज्ञः- செய்த உபகாரத்தை யறிந்தவர், विजितेन्द्रियः- ஜெயிக்கப்பட்ட இந்திரியங்களையுடையவர்.

32. (ப-ரை) मृदुः च- ஸுகமாக அணுகத்தகுந்தவர், स्थिरचित्तः च- உறுதியான மனதையுடையவர், सदा भव्यः- எப்பொழுதும் (ஆச்ரிதருக்கு) பவ்யமாயிருக்கிறவர், अनसूयकः- அஸூயையில்லாதவர்.

30. (பொ-ரை) ப்ரஜைகளுக்கு ஸுகத்தை யுண்டுபண்ணுவதில் சந்திரனுக்கும், பொறுமை விஷயத்தில் பூமிக்கும், புத்தியில் ப்ருஹஸ்பதிக்கும், வீர்யத்தில் இந்திரனுக்கும் ஸமானமானவர்.

31. (பொ-ரை) ஸாமான்யமான வர்ணாச்ரம தர்மங்களையும், விசேஷமான சரணாகத ரக்ஷண தர்மத்தையும் அறிந்தவர். பழுதில்லாத ப்ரதிஜ்ஞையுள்ளவர். பிறர்களுடைய குணங்களில் தோஷம் சொல்லாதவர். பொறுமையுள்ளவர். கோபமுள்ளவர்களுக்கும் வ்யஸனமுள்ளவர்களுக்கும், ஸமாதான வார்த்தையைச் சொல்லும் தன்மையுள்ளவர். ப்ரியத்தையே சொல்லுகிறவர். ஒருகடவைசெய்த ஸ்வல்ப உபகாரத்தையும் பெரிதாக நினைக்கிறவர். விஷய சாபல்யமில்லாதவர்.

32. (பொ-ரை) ஆச்ரித ஜனங்களை விட்டுப்பிரிவதை ஸஹியாதவர். அதி ஸங்கடத்திலும், தாம் கைக்கொண்ட விஷயத்தை விடாமையாகிற மன உறுதியுடையவர். தன்னுடைய குணங்களில் பிறர்களால் தோஷம் சொல்லுகையாகிற அஸூயையற்றவர்.

प्रियवादी च भूतानां सत्यवादी च राघवः ।
बहुश्रुतानां वृद्धानां ब्राह्मणानामुपासिता ॥ 33 ॥
तेनास्येहातुला कीर्तिर्यशस्तेजश्च वर्धते ॥ 33½ ॥
देवासुरमनुष्याणां सर्वास्त्रेषु विशारदः ॥ 34 ॥
सम्यग्विद्याव्रतस्नातो यथावत्साङ्गवेदवित् ॥ 35 ॥

33. (ப-ரை) राघवः- ஸ்ரீராமன், भूतानां- ப்ராணிகளுக்கு, प्रियवादीच- ப்ரியத்தையே சொல்லும் தன்மையுடையவர், सत्यवादीच- ஸத்யத்தையே சொல்லும் தன்மையுடையவர், बहुश्रुतानां- அநேகம் சாஸ்த்ரம் தெரிந்தவர்களும், वृद्धानां- வ்ருத்தர்களுமான, ब्राह्मणानां- ப்ராம்மணர்களை, उपासिता- உபாஸனை செய்கிறவர்.

33½. (ப-ரை) तेन- அதினல், अस्य- இந்த ராமனுக்கு, इह- இந்த லோகத்தில், अतुला- ஒப்பில்லாத, कीर्तिः- ப்ரஸித்தியும், यशः- புகழும், तेजः च- தேஜஸ்ஸும், वर्धते- வளருகிறது.

34-35. (ப-ரை) देवासुरमनुष्याणां- தேவாஸுர மனுஷ்யர்களுக்குள், सर्वास्त्रेषु- எல்லா அஸ்த்ரங்களிலும், विशारदः- தேர்ச்சியடைந்தவர், सम्यक्- நன்றாக, विद्याव्रतस्नातः- வித்யை வ்ரதங்களைச்செய்து ஸ்நாதகம் செய்தவர், यथावत्- ஸம்ப்ரதாயப்படி, साङ्गवेदवित्- அங்கத்தோடு கூடிய, வேதத்தை யறிந்தவர்.

33. (பொ-ரை) ரகு குலத்திலே பிறந்தவராகையால் ஸர்வப்ராணிகளுக்கும் ப்ரியவார்த்தையே சொல்லுகிறவர். ஸத்யத்தையே உரைப்பவர். அநேகம் ஆசார்யர்களிடத்தில் அநேக சாஸ்த்ரங்களைப் பலபடியாக அறிந்த வ்ருத்தர்களான ப்ராம்மணர்கள் இருக்குமிடம் நாடிப்போகின்றவர்.

33½. (பொ-ரை) இவ்விதம் வ்ருத்தர்களான ப்ராம்மணோத்தமர்களை உபாஸிப்பதினல், ஸ்ரீராமனுக்கு இவ்வுலகத்தில் ப்ரஸித்தியும் புகழும் எதிரிகளை அடக்கும் ஸாமர்த்தியமும் வ்ருத்தியடைகின்றது

34-35 (பொ-ரை) தேவாஸுர மனுஷ்யர்களுக்குள், எல்லா அஸ்த்ரங்களிலும் மிகவும் நிபுணர். குருகுல வாஸம் செய்து ஸாங்கமான வேதத்தை ஸம்ப்ரதாயப்படி ஓதி அர்த்தத்தையும் நன்றாய் அறிந்து வ்ரதங்களையும் நன்றாய் செய்தவர்.

गान्धर्वे च भुविश्रेष्ठो बभूव भरताग्रजः ।
कल्याणाभिजनः साधुरदीनात्मा महामतिः ॥ 36 ॥

द्विजैरभिविनीतश्च श्रेष्ठैर्धर्मार्थनैपुणैः ॥ 37 ॥

यदा व्रजति सङ्ग्रामं ग्रामार्थे नगरस्य वा ।
गत्वा सौमित्रिसहितो नाविजित्य निवर्तते ॥ 38 ॥

36. (ப-ரை) भरताग्रजः- பரதனுடைய தமையனாரான ஸ்ரீராமன், भुवि- உலகத்தில், गान्धर्वेच- ஸங்கீத சாஸ்த்ரத்திலும், श्रेष्ठः- சிறந்தவராக, बभूव- ஆனார், कल्याणाभिजनः- பரிசுத்தமான வம்சத்தையுடையவர், साधुः- ஸாதுவானவர், अदीनात्मा- தீனமல்லாத மனதையுடையவர், महामतिः- உயர்ந்த புத்தியுள்ளவர்.

37. (ப-ரை) धर्मार्थनिपुणैः- தர்மத்திலும் அர்த்தத்திலும் நிபுணர்களும், श्रेष्ठैःच- ச்ரேஷ்டர்களுமான, द्विजैः- ப்ராமணர்களால், अभिविनीतः- பலபடியாக சிக்ஷிக்கப்பட்டவர்.

38. (ப-ரை) यदा- எப்பொழுது, ग्रामार्थे- க்ராமத்திற்காகவோ, नगरस्य वा- (अर्थे-) நகரத்திற்காகவோ, सङ्ग्राम- யுத்தத்தைக் குறித்து, व्रजति- போகிறாரோ, (तदा- அப்பொழுது), सौमित्रिसहितः- லக்ஷ்மணனோடு கூடினவராக, गत्वा- சென்று, अविजित्य- ஜெயம் பெறாமல், न निवर्तते- திரும்புகிறதில்லை.

---

36. (பொ-ரை) பரதன் தமையனான ஸ்ரீராமன் இவ்வுலகத்தில் ஸங்கீத சாஸ்த்ரத்திலும் சிறந்தவராக ஆய்விட்டார். பரிசுத்தமான மாத்ரு, பித்ரு வம்சத்தையுடையவர். தானும் பரிசுத்தமாயிருக்கிறார். மனதைக் கலக்கக்கூடிய காரணங்கள் அநேகமிருந்தபோதிலும் கலங்காத மனதையுடையவர். மிக புத்தியுள்ளவர்.

37. (பொ-ரை) தர்மார்த்த காமங்களை நன்றாயறிந்த ப்ராம்மணர்களால் எல்லா விஷயத்திலும் சிக்ஷிக்கப்பட்டவர்.

38. (பொ-ரை) ஸ்ரீராமன் கிராமத்தின் ப்ரயோஜனமாகவோ, நகரத்தின் ப்ரயோஜனமாகவோ, லக்ஷ்மணனோடு யுத்தத்திற்குப்போனால் ஜெயம்பெறாமல் திரும்புகிறதில்லை.

सङ्ग्रामात्पुनरागम्य कुञ्जरेण रथेन वा ।
पौरान्स्वजनवन्नित्यं कुशलं परिपृच्छति ॥ 39 ॥

पुत्रेष्वग्निषु दारेषु प्रेष्यशिष्यगणेषु च ।
निखिलेनानुपूर्व्याच्च पिता पुत्रानिवौरसान् ॥ 40 ॥

शुश्रूषन्ते वः शिष्याः कच्चित्कर्मसु दंशिताः ।
इति नः पुरुषव्याघ्रः सदा रामोभिभाषते ॥ 41 ॥

39. (ப-ரை) सङ्ग्रामात्- யுத்தத்திலிருந்து, कुञ्जरेण- யானையின்மேலேயோ, रथेन वा- தேரின்மேலேயோ, पुन:आगम्य- மறுபடி திரும்பி வந்து, पौरान्- பட்டணத்து ஜனங்களை, स्वजनवत्: தன்னுடைய ஜனங்களைப்போல, नित्य- எப்பொழுதும், कुशलं- க்ஷேமத்தை, परिपृच्छति- பலபடியாக விசாரிக்கிறார்.

40. (ப-ரை) पुत्रेषु- புத்ரர்களிடத்திலும், अग्निषु- அக்நிகளிலும், दारेषु- மனைவிகளிலும், प्रेष्यशिष्यगणेषु च- வேலைக்காரர்களுடையவும், சிஷ்யர்களுடையவும், கூட்டங்களிலும், निखिलेन- ஒன்றுகூட விடாமல், आनुपूर्व्याच्च- வரிசையாகவும், पिता- தகப்பன், औरसान् पुत्रान् इव- ஔரஸ புத்ரர்களைப்போல, (कुशलं परिपृच्छति- க்ஷேமத்தை பலபடியாக விசாரிக்கிறார்.)

41. (ப-ரை) वः- உங்களுடைய, शिष्याः- சிஷ்யர்கள், कर्मसु- காரியங்களில், दंशिताः (सन्तः-) ஜாகரூகர்களாய்க்கொண்டு, कच्चिन शुश्रूषन्ते चः பணிவிடையும் செய்கிறார்களா, इति- என்று, पुरुषव्याघ्रः- புருஷ ச்ரேஷ்டரான, रामः- ஸ்ரீராமன், नः- எங்களைக் குறித்து, सदा- எப்பொழுதும், अभिभाषते- நேரில் வந்து விசாரிக்கிறார்.

39. (பொ-ரை) யுத்தம் செய்த பிறகு யானையின் மேலேயோ, தேரின் மேலேயோ, ஏறி திரும்பிவந்து, பட்டணத்திலுள்ள எல்லோரையும், தன்னுடைய பந்துகளைப்போல் எப்பொழுதும் குசலப்ரச்னை பண்ணுகிறார்.

40. (பொ-ரை) பட்டணத்து ஜனங்களை க்ஷேமத்தை விசாரிப்பதிலும், புத்ரர்கள், அக்நிகள், மனைவிகள், வேலைக்காரர்கள், சிஷ்ய கணங்கள் என்று இவர்கள் விஷயமாக ஒன்றுகூட விடாமல் வரிசையாகவே, பிதா, ஔரஸபுத்ரனை விசாரிப்பதைப் போல் பலபடியாக விசாரிக்கிறார்.

41. (பொ-ரை) உங்களுடைய சிஷ்யர்கள், அந்தந்த கார்யங்களில் கவனமாய் ஸித்தமாகவிருந்து, சிச்ருஷையும் செய்கிறார்களாவென்று, புருஷோத்தமனான ஸ்ரீராமன் எங்களை எப்பொழுதும் நேரில் வந்து விசாரிக்கிறார்.

व्यसनेषु मनुष्याणां भृशं भवति दुःखितः ।
उत्सवेषु च सर्वेषु पितेव परितुष्यति ॥ 42 ॥

सत्यवादी महेष्वासो वृद्धसेवी जितेन्द्रियः ।
स्मितपूर्वाभिभाषी च धर्मं सर्वात्मना श्रितः ॥ 43 ॥

सम्यग्योक्ता श्रेयसां च न विगृह्य कथारुचिः ।
उत्तरोत्तरयुक्तौ च वक्ता वाचस्पतिर्यथा ॥ 43 ॥

---

42. (ப-ரை) मनुष्याणां- மனிதர்களுடைய, व्यसनेषु- துக்கங்களில், भृशं- அதிகமாக दुःखितः- துக்கமுள்ளவராக, भवति- ஆகிறார், सर्वेषु- ஸமஸ்தமான, उत्सवेषुच- (மனிதர்களுடைய) புத்ர ஜெனனம் முதலான ஸந்தோஷகாலத்தில், पितेव- தகப்பன்போல, परितुष्यति- மிகவும் ஸந்தோஷப்படுகிறார்.

43. (ப-ரை) सत्यवादी- ஸத்யத்தையே சொல்லும் ஸ்பாவமுடையவர், महेष्वासः- சிரேஷ்டமான வில்லை உடையவர், वृद्धसेवी- பெரியோரை ஸேவிக்கும் தன்மைஉடையவர், जितेन्द्रियः- இந்திரியங்களை ஜெயித்தவர், स्मितपूर्वाभिभाषीच- புன்சிரிப்புடன் பேசுகிறவர், सर्वात्मना- பலவிதத்தாலும், धर्मं- தர்மத்தை, श्रितः- அடைந்தவர்.

44. (ப-ரை) श्रेयसां- நல்ல காரியங்களை, सम्यक्- நன்றாக, योक्ताच- ஸம்பாதிக்கின்றவர், विगृह्य- சண்டை செய்து, न कथारुचिः வாதம் செய்வதில் ஆசையில்லாதவர், उत्तरोत्तरयुक्तौ च- மேன்மேலும் யுக்தி சொல்லுவதில், वाचस्पतिर्यथा- ப்ருஹஸ்பதிபோல, वक्ता- சொல்லுகிறவர்.

42. (பொ-ரை) திவ்யாந்தப்புரஸ்த்ரீகள், மாதா பிதாக்கள், மற்ற பந்துக்கள் மாத்திரமேயில்லாமல், பொதுவாக மனிதர்களாய்ப் பிறந்தவர்களுக்கு, அதிகமாகவோ, கொஞ்சமாகவோ, வ்யஸனம் ஏற்பட்டால் அவர்களைக்காட்டிலும் அதிகமாக துக்கிக்கிறார். அதாவது, வ்யஸனமுள்ளவன் இவரை ஸமாதானம் பண்ணவேண்டுவதாக துக்கிக்கிறார் என்கிறபடி. புத்ரஜெனனம் முதலாகிய எவ்விதமான ஸந்தோஷ காரியம் நேர்ந்தாலும், பிதாவைப்போல அதிகமாக ஸந்தோஷிக்கிறார்.

43. (பொ-ரை) அதிக கஷ்டமான ஸமயத்திலும், ஸத்யத்தையே பேசுகிறவர். சிறந்த வில்லையுடையவர். பெரியோர்களுடைய ஸஹவாஸத்தையே அடைந்தவர். இந்திரியங்களை ஜெயித்தவர். எந்த மனிதர்களிடத்திலும் புன்சிரிப்புடன் தானே முன்னம் பேசுகிறவர். மிகவும் கஷ்டமான தசையிலும் தர்மத்தை விடாதவர்.

44. (பொ-ரை) ப்ரஜைகளுக்கும் தனக்கும் க்ஷேமங்கரமான காரியங்களையே தேடுகிறவர். சண்டை செய்து வாதம் பண்ணுவதில் ஆசையில்லாதவர். ஆனால் பதில் சொல்லும் திறமையில்லாமையாலோவென்றில், அன்று. மேன்மேலும் யுக்தி சொல்லும் விஷயத்தில் ப்ருஹஸ்பதி போன்றவர்.

सुभ्रूरायतताम्राक्षः साक्षाद्विष्णुरिव स्वयम् ।
रामो लोकाभिरामोयं शौर्यवीर्यपराक्रमैः ॥ 45 ॥

प्रजापालनतत्त्वज्ञो न रागोपहतेन्द्रियः ।
शक्तस्त्रैलोक्यमप्येको भोक्तुं किंनु महीमिमाम् ॥ 46 ॥

नास्य क्रोधः प्रसादश्च निरर्थोऽस्ति कदाचन ।
हन्त्येव नियमाद्वध्यानवध्ये न च कुप्यति ॥ 47 ॥

---

45. (ப-ரை) अयं रामः- இந்த ஸ்ரீராமன், सुभ्रूः- அழகான புருவமுள்ளவர், आयतताम्राक्षः- நீண்டு சிவந்த திருக்கண்களையுடையவர், शौर्यवीर्यपराक्रमैः- சௌர்யத்தி னாலும், வீர்யத்தினாலும், பராக்ரமத்தினாலும, साक्षात् विष्णुः इव- ப்ரத்யக்ஷமான விஷ்ணுபோல, स्वयं- தான், लोकाभिरामः- உலகங்களுக்கு ஆனந்தத்தை உண்டாக்கு கிறவர்.

46. (ப-ரை) प्रजापालनतत्वज्ञः- प्रजा- ஜனங்களுடைய, पालन- ரக்ஷணத்தில், तत्वज्ञः- உண்மையை யறிந்தவர், न रागोपहतेन्द्रियः- விஷய சாபல்யத்தினால் கெடாத இந்திரியங்களையுடையவர், त्रैलोक्यम् अपि- மூன்று லோகத்தையும், एकः ஒருவராகவே, भोक्तुं- ஆளுவதற்கு, शक्तः- வல்லமையுள்ளவர், (அப்படியிருக்க) इमां महीं இந்த பூமி யை, (ஆளவல்லவரென்பது) किंनु- என்ன?

47. (ப-ரை) अस्य- இந்த ராமனுடைய, क्रोधः கோபமும், प्रसादः च- அநுக்ரஹ மும், कदाचन- ஒருக்காலும், निरर्थः- ப்ரயோஜனமில்லாததாக, न अस्ति- இருக்கிற தில்லை, नियमात्- நிச்சயமாகவே, वध्यान्- கொல்லத்தகுந்தவர்களை, हन्ति एव- கொல்லவே கொல்லுகிறார், अवध्ये- கொல்லத்தகாதவன் விஷயத்தில், न च कुप्यति- கோபித்துக் கொள்கிறதேயில்லை.

---

45. (பொ-ரை) இந்த ஸ்ரீராமன் அழகான புருவங்களையும், நீண்டு சிவ ந்த திருக்கண்களையுமுடையவர். யுத்தத்தில் பயமில்லாமல் ப்ரவேசிக்கும் ஸாமர்த் யத்தாலும், தான் ஒருவிதமான விகாரத்தையடையாமல் பறர்களுக்கு பலவிதமாக விகாரத்தை உண்டுபண்ணும் தன்மையாலும, யுத்தத்தில் லகுவான ஸாமர்த்யத் தாலும், ஸாக்ஷாத் மஹாவிஷ்ணுவைபபோல லோகங்களுக்கு ஆனந்தத்தை உண்டு பண்ணுகிறவர்.

46. (பொ-ரை) ப்ரஜைகளை பரிபாலனம் செய்யும் விதத்தை நன்றாய் அறிந் தவர். சப்தாதி விஷயங்களின் ஆசையினால் கெடாத இந்திரியங்களையுடையவர். மூவுலகங்களையும் தான் ஒருவனாகவே வேறொருவரின் ஒத்தாசையின்றி ஆள சக்தி யுள்ளவர். அப்படியிருக்க இந்த ஸ்வல்பமான பூமியை ஆளுவரென்பது சொல்ல வேண்டுமா?

47. (பொ-ரை) ஸ்ரீராமனுடைய கோபமும் அநுக்ரஹமும் ஒருக்காலத்தி லும் வீணாக ஆகிறதில்லை. சட்டப்படிக்கு தண்டிக்கத்தகுந்தவர்களை தண்டித்தே விடுகிறார். தண்டிக்கத்தகாதவர்களிடத்தில் சிறிதேனும் கோபம் வைக்கிறதே யில்லை.

युनक्त्यर्थैः प्रहृष्टश्च तमसौ यत्र तुष्यति ॥ 48 ॥

शान्तैः सर्वप्रजाकान्तैः प्रीतिसंजननैर्नृणाम् ।
गुणैर्विरुरुचे रामो दीप्तः सूर्य इवांशुभिः ॥ 49 ॥

तमेवंगुणसंपन्नं रामं सत्यपराक्रमम् ।
लोकपालोपमं नाथमकामयत मेदिनी ॥ 50 ॥

---

48. (ப-ரை) असौ- இந்த ஸ்ரீராமன், यत्र- எந்த மனிதனிடத்தில், तुष्यति- ஸந்தோஷப்படுகிறாரோ, तं- அவனை, प्रहृष्टः च- ஸந்தோஷமுள்ளவராய்க்கொண்டு, अर्थैः- இஷ்டமான வஸ்துக்களோடு, युनक्ति- சேர்ப்பிக்கிறார்.

49. (ப-ரை) शान्तैः- சாந்தி முதலானவைகளாயும், सर्वप्रजाकान्तैः- ஸர்வப்ரஜைகளும ஆசைப்படக்கூடியவைகளாயும், नृणाम्- மனிதர்களுக்கு, प्रीतिसंजननैः- ஸந்தோஷத்தை செய்யக்கூடியவைகளுமான, गुणैः- குணங்களினால், दीप्तः- ப்ரகாசித்துக் கொண்டு, सूर्यः- ஸூர்யன், अंशुभिः इव- கிரணங்களால்போல், रामः- ஸ்ரீராமன் विरुरुचे- விளங்கினார்.

50. (ப-ரை) एवंगुणसंपन्नं- இப்படி குணங்களினால் நிறைந்தும், सत्यपराक्रमम्- பழுதில்லாத பராக்ரமத்தையுடையவரும், लोकपालोपमं- லோகநாதனை விஷ்ணுவிற்கு ஸமானனுமான, त रामं- அந்த ஸ்ரீராமனை, मेदिनी- பூமியானது, नाथं- அரசனாக, अकामयत- ஆசைப்பட்டது.

48. (பொ-ரை) ஸ்ரீராமன் எந்த மனிதனிடத்தில் ஸந்தோஷப்படுகிறாரோ அவனுக்கு இஷ்டமான பதார்த்தங்களைக்கொடுக்கிறார்.

49. (பொ-ரை) ஸர்வ ப்ரஜைகளுக்கும், ஆசைப்படக்கூடியவைகளும், மனிதர்களுக்கு ப்ரீதியை உண்டு பண்ணக்கூடியவைகளும், அடக்கத்தை ப்ரதானமாகக் கொண்டவைகளுமான குணங்களினால் ஸ்ரீராமன் கோடைகாலத்து ஸூர்யன் கிரணங்களால் ப்ரகாசிப்பதுபோல ப்ரகாசித்தார்.

50. (பொ-ரை) இப்படி சமஸ்த குணங்களும் நிறைந்து, ஸத்ய பராக்ரமனும், ஸ்ரீமஹாவிஷ்ணுவிற்கு ஒப்பானவனுமான ஸ்ரீராமனை உலகத்து ஜனங்கள் ராஜாவாகவேணுமென்று ஆசைப்பட்டார்கள்.

वत्सः श्रेयसि जातस्ते दिष्ट्यासौ तव राघव ।
दिष्ट्या *पुत्रगुणैर्युक्तो मारीच इव काश्यपः ॥ 51 ॥

बलमारोग्यमायुश्च रामस्य विदितात्मनः ।
देवासुरमनुष्येषु सगन्धर्वोरगेषुच ॥ 52 ॥

आशंसते जनः सर्वो राष्ट्रे पुरवरे तथा ।
आभ्यन्तरश्च बाह्यश्च पौरजानपदो जनः ॥ 53 ॥

51. (ப-ரை) हे राघव- ஓ ரகு குலத்தரசனே, असौ- இந்த ஸ்ரீராமன், तव- உம்முடைய, दिष्ट्या- பாக்யத்தினல், श्रेयसि- ச்ரேயஸ்ஸுக்காக, वत्सः- பிள்ளையாக, जातः- பிறந்திருக்கிறார், मारीचः- மரீசி மஹர்ஷியின் பிள்ளையான, काश्यपः इव- காச்யபர் போல், दिष्ट्या- (உம்முடைய) பாக்யத்தினல, पुत्रगुणैः- புத்திரனுக்குத் தகுந்த குணத்தோடு, युक्तः- கூடியிருக்கிறார்.

52–53. (ப-ரை) सगन्धर्वोरगेषु- கந்தர்வர்களோடும், ஸர்ப்ப ஜாதிகளோடும் கூடிய, देवासुरमनुष्येषु- தேவாஸுர மனுஷ்யர்களுக்குள், सर्वः जनः- எல்லா ஜனமும், राष्ट्रे- மற்ற தேசத்திலும், तथा- அப்படியே, पुरवरे- மற்ற நகரத்திலும் (இருக்கிற ஜனமும்), आभ्यन्तरः च- அந்தப்புரத்தில் ஸஞ்சரிக்கின்றதும், बाह्यः च- வெளியிலுமிருக்கிற ஜனமும், पौरजानपदः- அயோத்யா நகரத்திலும், கோசல தேசத்திலுமுள்ள, जनः ஜனமும், विदितात्मनः- ப்ரஸித்தமான ஸ்வபாவத்தையுடைய, रामस्य- ஸ்ரீராமனுடைய, बल- பலத்தையும், आरोग्यम्- வ்யாதியில்லாமையையும், आयुः च- ஆயுஸ்ஸையும், आशंसते- ப்ரார்த்திக்கிறது.

51. (பொ-ரை) ஓ ரகுகுலத்தரசனே! ஸ்ரீராமன் உம்முடைய பாக்யவசத்தினல் எங்களுடைய க்ஷேமத்திற்காக உமக்குப் பிள்ளையாகப் பிறந்திருக்கிறார். மரீசியின் பிள்ளையாகிய காச்யப ப்ரஜாபதிபோல், புத்ரன் என்கிற சப்தத்திற்குத் தகுந்த குணங்களுள்ளவராயிருக்கிறார். அதுவும் உம்முடைய அத்ருஷ்டமே.

52–53. (பொ-ரை) தேவர், அஸுரர், மனுஷ்யர், கந்தர்வர், உரகர், இவர்களுக்குள், ஸர்வ ஜனங்களும், வெளிதேசத்திலும, வெளிநகரத்திலும, அயோத்யா நகரத்திலும், கோசலதேசத்திலுமுள்ளவர்களும, அந்தப்புரத்திலும் வெளியிலுமுள்ள வேலைக்காரர்களும, உலகப்ரஸித்தரான ஸ்ரீராமனுக்கு தேஹபலம, ஆரோக்யம், ஆயுஸ்ஸு இவைகளைப்ரார்த்திக்கிறார்கள்,

---

पुत्रः- पुतः त्रायते= புத் என்னும நரகத்தினின்று மாதா பிதாக்களை ரக்ஷிக்கிறான் என்று புத்ர சப்தத்திற்குப் பொருள்.

स्त्रियो वृद्धास्तरुण्यश्च सायंप्रातः समाहिताः ।
सर्वान्देवान्नमस्यन्ति रामस्यार्थे यशस्विनः ॥ 54 ॥

तेषामायाचितं देव त्वत्प्रसादात्समृध्यताम् ॥ 55 ॥

राममिन्दीवरश्यामं सर्वशत्रुनिबर्हणम् ।
पश्यामो यौवराज्यस्थं तव राजोत्तमात्मजम् ॥ 56 ॥

54. (ப-ரை) वृद्धाः- முதிர்ந்த வயதுள்ள, स्त्रियः- ஸ்த்ரீகளும், तरुण्यः च- யுவதிகளும், यशस्विनः- கீர்த்தியுள்ளவரான, रामस्य- ஸ்ரீராமனுடைய, अर्थे- ஆரோக்யம் முதலான ப்ரயோஜனத்திற்காக, समाहिताः (सत्यः)—ஜாக்ரதைகளாய்க்கொண்டு, सायप्रातः- ஸாயங்காலத்திலும், காலையிலும், सर्वान् देवान्- எல்லா தேவர்களையும், नमस्यन्ति- ஸேவிக்கிறார்

55. (ப-ரை) हे देव- ஓ தேவனே, तेषां- அவர்களுடைய, आयाचित- ப்ரார்த்தனையானது, त्वत्प्रसादात्- உமதுடைய அநுக்ரஹத்தினால், समृध्यताम्- பூர்ணமாக வேணும்

56. (ப-ரை) हे राजोत्तम- அரசர்களுக்குள் சிறந்தவரே, इन्दीवरश्यामम्- கருநெய்தல் புஷ்பம்போல் கறுத்த மேனி நிறமுடையவனும், सर्वशत्रुनिबर्हणम्- எல்லா சத்ருக்களையும் அடக்குகிறவனுமான, तव- உமதுடைய, आत्मजम्- பிள்ளையான, राम- ஸ்ரீராமனை, यौवराज्यस्थ- இளவரசு பட்டத்தில் இருக்கின்றவனாக, पश्यामः- பார்க்கப் போகிறோம்

54. (பொ-ரை) கிழவிகளாயும், யுவதிகளாயுமுள்ள ஸ்த்ரீகளும், புகழ்பெற்ற ஸ்ரீராமனுக்கு, பலம், ஆரோக்யம் முதலானவை உண்டாகவேண்டுமென்று ஜாக்ருதர்களாய், இரண்டு காலத்திலும், ஸர்வ தேவர்களையும் நமஸ்கரிக்கிறார்கள்.

55. (பொ-ரை) ஹே தேவனே, இவ்விதம் ஸமஸ்தமான ஜனங்கள் வேண்டுகின்ற ஸ்ரீராமனுடைய பட்டாபிஷேக மங்களமானது உமதுடைய அநுக்ரஹத்தினால் நிறைவேறவேண்டும்.

56 (பொ-ரை) ராஜோத்தமனே, இந்திவரபுஷ்பம்போல் கறுத்த நிறமுடையவரும், எல்லா சத்ருக்களையும், அடக்கக்கூடியவருமான, உம்முடைய குமாரனை ஸ்ரீராமனை கூடிய சீக்ரத்தில் யுவராஜாவாகப்பார்க்க விரும்புகிறோம்.

तं देवदेवोपममात्मजं ते सर्वस्य लोकस्य हिते निविष्टम् ।
हिताय नः क्षिप्रमुदारजुष्टं मुदाभिषेक्तुं वरद त्वमर्हसि ॥ 57 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये अयोध्याकाण्डे

द्वितीयः सर्गः ॥ 2 ॥

57. (ப-ரை) हे वरद- கேட்ட வரன்களைக்கொடுக்கின்றவரே, देवदेवोपमं- விஷ்ணுவுக்கு ஸமானமாயும், सर्वस्य लोकस्य- எல்லா லோகங்களுடையவும், हिते- நன்மையில், निविष्टं- ஊக்கமுடையவரும், उदारजुष्टं- உதார குணத்தோடு கூடினவருமான, तं- அந்த, ते आत्मजं- உம்முடைய பிள்ளையை, नः- எங்களுடைய, हिताय- ச்ரேயஸ்ஸுக்காக, मुदा- ஸந்தோஷத்தோடு, अभिषेक्तुं- பட்டாபிஷேகம் செய்ய, त्वं- நீர், अर्हसि- தகுந்தவராகிறீர்.

57. (பொ-ரை) மஹா விஷ்ணுவுக்கு ஸமானமானவரும், ஸர்வ லோகங்களுக்கும், ஹிதம் செய்வதில் ஊக்கமுள்ளவரும், மிகப்ரஸித்தமும், காம்பீர்யமான குணங்களுள்ளவருமான உம்முடைய பிள்ளையான ஸ்ரீராமனை, எங்கள் க்ஷேமார்த்தமாக, ஸந்தோஷத்துடன் பட்டாபிஷேகம் செய்யவேண்டுமென்று, ப்ரார்த்திக்கிறோம். வேண்டிய வரன்களை, கொடுக்கக்கூடியவரன்றோ நீர்.

---

तृतीयः सर्गः ॥ 3

तेषामञ्जलिपद्मानि प्रगृहीतानि सर्वशः ।
प्रतिगृह्याब्रवीद्राजा तेभ्यः प्रियहितं वचः ॥ 1 ॥

1. (ப-ரை) राजा- அரசன், प्रगृहीतानि- தலையில் வைக்கப்பட்டிருக்கிற, तेषां- அந்த ஜனங்களுடைய, अञ्जलिपद्मानि- தாமரை மொட்டுபோன்ற அஞ்ஜலிகளை, सर्वशः- முழுமையும், प्रतिगृह्य- பெற்றுக்கொண்டு, तेभ्यः- அவர்கள் பொருட்டு, प्रियहितं- ப்ரியமாயும், ஹிதமாயுமிருக்கிற, वचः- வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

1. (பொ-ரை) அரசன், அந்த ஜனங்களெல்லோரும் தலையில் கைகுவித்து ப்ரார்த்திக்கின்றதை அங்கீகரித்து, அவர்களுக்கு ப்ரியமும், ஹிதமுமான, வார்த்தையைச்சொல்லுகிறார்.

अहोऽस्मि परमप्रीतः प्रभावश्चातुलो मम ।
यन्मे ज्येष्ठं प्रियं पुत्रं यौवराज्यस्थमिच्छथ ॥ 2 ॥

इति प्रत्यर्च्य तान्राजा ब्राह्मणानिदमब्रवीत ।
वसिष्ठं वामदेवं च तेषामेवोपशृण्वताम् ॥ 3 ॥

चैत्रः श्रीमानयं मासः पुण्यः पुष्पितकाननः ।
यौवराज्याय रामस्य सर्वमेवोपकल्प्यताम् ॥ 4 ॥

---

2. (ப-ரை) अहो- ஆச்சர்யம்! परमप्रीतः- மிகவும் ப்ரீதியுள்ளவனாக, अस्मि- ஆகிறேன், मम- என்னுடைய, प्रभावः च- மஹிமையும் अतुलः- ஒப்பில்லாதது, यत्- யாதொரு காரணத்தினால், मे- என்னுடைய, प्रियं- ப்ரியமான, ज्येष्ठ पुत्रं- மூத்த குமாரனை, यौवराज्यस्थं- யௌவராஜ்யத்திலிருக்கிறவனாக, इच्छथ- விரும்புகிறீர்களோ!

3. (ப-ரை) राजा- அரசன், इति- இவ்விதம, तान्- அந்த, ब्राह्मणान्- ப்ராமமணர்களை, प्रत्यर्च्य- பூஜித்து, तेषां- அவர்கள், उपशृण्वताम् एव- கேட்டுக்கொண்டிருக்கும் பொழுதே, वसिष्ठ- வஸிஷ்டரையும், वामदेव च- வாம தேவரையும் (பார்த்து), इद अब्रवीत- இந்த வார்த்தை சொன்னார்.

4 (ப-ரை) अयं- இந்த, चैत्रः मासः- சித்திரை மாஸமானது, श्रीमान्- அழகு பொருந்தியது, पुण्यः- பரிசுத்தமானது, पुष्पितकाननः- புஷ்பித்த காடுகளையுடையது, (ஆகையால்) रामस्य- ஸ்ரீராமனுடைய, यौवराज्याय- இளவரசு பட்டாபிஷேகத்திற்கு, सर्वमेव- (வேண்டிய) எல்லா வஸ்துக்களும், उपकल्प्यताम्- சேர்க்கப்படட்டும்.

2. (பொ-ரை) மிகவும் ஆச்சர்யம்! எனது ப்ரியமான ஜ்யேஷ்ட குமாரனுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் பண்ணவேண்டுமென்று நீங்கள் விரும்புகிறபடியால், மிக்க ஸந்தோஷத்தையடைந்தேன். என்னுடைய பெருமையும் நிகரற்றது.

3. (பொ-ரை) அரசன் இவ்விதம் ப்ராம்மணர்களை இனிதான வார்த்தையால் புகழ்ந்து, அவர்கள் கேட்டுக் கொண்டிருக்கும்பொழுதே, வஸிஷ்டரையும், வாம தேவரையும் பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

4. (பொ-ரை) அவதார ஸமயத்தில் நேர்ந்ததுபோல் பட்டாபிஷேக ஸமயத்திலும், இதே சித்திரை மாஸம் நேர்ந்து விட்டது. ஸ்ரீராம பட்டாபிஷேகம் நேர்ந்ததென்கிற ஸந்தோஷத்தினால் நகரத்தை நாம் அலங்கரிப்பதுபோல் எல்லா காடுகளையும், புஷ்பத்தினால் அலங்காரம் செய்துகொண்டு மிகவும் பரிசுத்தமான இந்த மாஸத்தில் ஸ்ரீராமனுடைய பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய ஸமஸ்த ஸாமக்ரிகளையும் சேர்க்கவேண்டும்.

राज्ञस्तूपरते वाक्ये जनघोषो महानभूत् ।
शनैस्तस्मिन्प्रशान्ते च जनघोषे जनाधिपः ॥
वसिष्ठं मुनिशार्दूलं राजा वचनमब्रवीत् ॥ 5 ॥

अभिषेकाय रामस्य यत्कर्म सपरिच्छदम् ।
तदद्य भगवन्सर्वमाज्ञापयितुमर्हसि ॥ 6 ॥

तच्छ्रुत्वा भूमिपालस्य वसिष्ठो द्विजसत्तमः ।
आदिदेशाग्रतो राज्ञः स्थितान्युक्तान्कृताञ्जलीन् ॥ 7 ॥

5. (ப-ரை) राज्ञः- அரசனுடைய, वाक्ये- வார்த்தையானது, उपरते तु- முடிந்த ஸமயத்தில், महान्- அதிகமான, जनघोषः- ஜனங்களின் கோலாஹலமானது, अभूत्- உண்டாயிற்று, तस्मिन्- அந்த, जनघोषे च- ஜனங்களின் கோலாஹலமும், शनैः- மெள்ள மெள்ள, प्रशान्ते (सति)- அடங்கினவளவில், जनाधिपः- ஜனங்களுக்கு அதிபதியான, राजा- தசரத ராஜாவானவர், मुनिशार्दूलं- முனிச்ரேஷ்டரான, वसिष्ठं- வஸிஷ்டரை (பார்த்து), वचनं வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

6. (ப-ரை) हे भगवन्- ஓ பகவானே! रामस्य- ராமனுடைய, अभिषेकाय- அபிஷேகத்தின் பொருட்டு, यत् कर्म- யாதொரு கார்யமானது, (செய்ய வேண்டியதோ) तत् सर्वं- அது முழுமையையும், सपरिच्छदम्- ஸாமக்ரிகளோடுகூட, अद्य- இன்றைய தினமே, आज्ञापयितु- (ஆரம்பிக்கும்படி) கட்டளையிட, अर्हसि- தகுந்தவராகிறீர்.

7. (ப-ரை) द्विजसत्तमः- ப்ராமணோத்தமரான, वसिष्ठः- வஸிஷ்ட மஹரிஷி, भूमिपालस्य- அரசனுடைய, तत्- அந்த வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, राज्ञः- அரசனுடைய, अग्रतः- எதிரில், कृताञ्जलीन्- கைகுவித்து, स्थितान्- நின்ற, युक्तान्- அதிகாரிகளை, आदिदेश- ஆக்ஞாபித்தார்.

5 (பொ-ரை) இவ்விதம் அரசன் சொல்லி முடித்த உடனே, ஜனங்களின் பெரிய கோலாஹலமுண்டாயிற்று. மெள்ள மெள்ள அதுவும் அடங்கினபிறகு அரசன் வஸிஷ்ட மஹரிஷியைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

6. (பொ-ரை) ஓ பகவானே! ராமனுடைய பட்டாபிஷேகத்திற்காக செய்ய வேண்டிய கார்யம் முழுமையையும், அதற்கு வேண்டிய ஸாமக்ரிகளோடு இன்றைய தினமே செய்ய, கட்டளையிட தகுந்தவராகிறீர்.

7. (பொ-ரை) ப்ராமணோத்தமரான வஸிஷ்ட மஹரிஷி ராஜாவினுடைய அந்த வார்த்தையைக்கேட்டு, அரசன் முன்னிலையில், கைகுவித்து நின்ற ஸாமந்திரி முதலிய அதிகாரிகளை ஆக்ஞாபித்தார்.

सुवर्णादीनि रत्नानि बलीन्सर्वौषधीरपि ।
शुक्लमाल्यांश्च लाजांश्च पृथक् च मधुसर्पिषी ॥ 8 ॥

अहतानि च वासांसि रथं सर्वायुधान्यपि ॥
चतुरङ्गबलं चैव गजं च शुभलक्षणम् ॥ 9 ॥

चामरव्यजने श्वेते ध्वजं छत्रं च पाण्डुरम् ।
शतं च शातकुम्भानां कुम्भानामग्निवर्चसाम् ॥ 10 ॥

हिरण्यशृङ्गमृषभं समग्रं व्याघ्रचर्म च ।
उपस्थापयत प्रातरग्न्यगारं महीपतेः ॥ 11 ॥

यच्चान्यत्किंचिदेष्टव्यं तत्सर्वमुपकल्प्यताम् ॥ 12 ॥

---

8–முதல் 12-வரை. (ப-ரை) सुवर्णादीनि- ஸ்வர்ணம் முதலான, रत्नानि- நவரத்னங்களையும், बलीन्- பூஜைக்குவேண்டிய த்ரவ்யங்களையும், सर्वौषधी: अपि- எல்லா ஓஷதிகளையும, शुक्लमाल्यांश्च- வெளுப்பு மாலைகளையும், लाजांश्च- பொரிகளையும், पृथक्- தனித்தனியாக, मधुसर्पिषी- தேனையும, நெய்யையும, अहतानि- புதியவைகளான, वासांसि च- வஸ்த்ரங்களையும, रथं- தேரையும, सर्वायुधानि अपि- எல்லா ஆயுதங்களையும், चतुरङ्गबलं च एव- நான்கு அங்கங்களோடு கூடின ஸேனையையும், शुभलक्षणम्- சுபமான லக்ஷணமுள்ள, गजं च- யானையையும், श्वेते- வெளுப்பான, चामरव्यजने- சாமரத்தையும், விசிறியையும, ध्वजं- த்வஜத்தையும, पाण्डुरम्- வெண்மையான, छत्रं च- குடையையும், शातकुम्भानां- ஸ்வர்ண மயங்களாயும, अग्निवर्चसाम्- நெருப்புப்போல் ப்ரகாசமுள்ளதுகளுமான, कुम्भानां- குடங்களுடைய, शतं च- நூறையும், हिरण्यशृङ्ग- தங்கத்தினால் அலங்கரித்த கொம்புகளையுடைய, ऋषभं- எருதையும், समग्रं- பூர்ணமான, व्याघ्रचर्म च- புலித்தோலையும், प्रात:- காலையில், महीपते:- அரசனுடைய, अग्न्यगारं- அக்னிஹோத்ர சாலையை, उपस्थापयत- அடைவியுங்கள், एष्टव्यं- அபேக்ஷிக்கக்கூடிய, अन्यत्- வேறு, यत्किंचित् च- என்ன வஸ்துவுண்டோ, तत् सर्वं- அது முழுவதும், उपकल्प्यताम्- ஸித்தப்படுத்தப்படவேண்டும்.

---

8-முதல் 12-வரை. (பொ-ரை) ஸ்வர்ணம முதலிய நவரத்னங்கள், பூஜாத்ரவ்யங்கள், நவதான்யங்கள், மல்லிகை முதலான வெளுப்புப் புஷ்பங்கள் கூடிய மாலைகள், நெற்பொரிகள், வெவ்வேறு பாத்திரத்தில் நெய், தேன், புதிய வஸ்த்ரங்கள், தேர், ஸகல ஆயுதங்கள், ரத, கஜ, துரக, பதாதி என்ற நான்குஅங்கங்களோடு கூடிய ஸைன்யம், மங்கள லக்ஷணத்தோடு கூடிய யானை, வெளுப்பான சாமரம, விசிறி, த்வஜம், வெள்ளைக்குடை, அக்னிபோல் ப்ரகாசமுள்ள, ஸ்வர்ண மயமான நூறு குடங்கள், ஸ்வர்ணாலங்க்ருதமான கொம்புகளுள்ள ரிஷபம், பூர்ணமான அங்கங்களோடுகூடிய புலித்தோல், இவைகளை நாளை ஸூர்யோதயத்தில், மஹாராஜாவினுடைய அக்னிசாலையில் கொண்டுவந்து வைக்கவேண்டும். இதுதவிர அபிஷேகத்திற்கு வேறு என்ன வஸ்துக்கள் வேண்டுமோ அது முழுவதையும் ஸித்தப்படுத்தவேண்டும்.

अन्तःपुरस्य द्वाराणि सर्वस्य नगरस्य च ।
चन्दनस्रग्भिरर्च्यन्तां धूपैश्च घ्राणहारिभिः ॥ 13 ॥

प्रशस्तमन्नं गुणवत् दधिक्षीरोपसेचनम् ।
द्विजानां शतसाहस्रे यत्प्रकाममलंभवेत् ॥ 14 ॥

सत्कृत्य द्विजमुख्यानां श्वः प्रभाते प्रदीयताम् ।
घृतं दधि च लाजांश्च दक्षिणाश्चापि पुष्कलाः ॥ 15 ॥

13. (ப-ரை) अन्तःपुरस्य- அந்தப்புரத்தினுடையவும், सर्वस्य नगरस्य च- எல்லா நகரத்தினுடையவும், द्वाराणि- வாசல்கள், चन्दनस्रग्भिः- சந்தனங்களோடும், மாலைகளோடும், घ्राणहारिभिः- வாஸனை கமழும், धूपैः च- தூபங்களினாலும், अर्च्यन्तां- பூஜிக்கப்படட்டும்.

14. (ப-ரை) द्विजानां- ப்ராம்மணர்களுடைய, शतसाहस्रे- அநேகம் பேர் விஷயத்தில், यत्- யாதொரு அன்னமானது, प्रकामम्- மிகவும், अलं- பூர்ணமாக, भवेत्- ஆகுமோ, दधिक्षीरोपसेचनम्- தயிரும், பாலும் சேர்த்து பக்குவம் பண்ணினதும், गुणवत्- வ்யஞ்ஜனத்தோடு கூடினதும், प्रशस्तं- ச்ரேஷ்டமுமான, (तत्) अन्नं- அந்த அன்னமானது, (उपकल्प्यताम्- சேகரிக்கப்படட்டும்).

15. (ப-ரை) श्वः- நாளை, प्रभाते- காலையில், द्विजमुख्यानां- ப்ராம்மணச் ச்ரேஷ்டர்களுக்கு, सत्कृत्य- மரியாதை செய்து, घृतं- நெய், दधि च- தயிர், लाजाः च- பொரிகள், पुष्कलाः- நிறைந்த, दक्षिणाः च अपि- தக்ஷிணைகளும், प्रदीयताम्- கொடுக்கப்படட்டும்.

---

13. (பொ-ரை) அந்தப்புரத்தினுடைய வாசல்களையும், பட்டணத்திலுள்ள எல்லா வாசல்களையும், சந்தனம் தெளித்து மாலைகள் போட்டு, நிறைந்த வாஸனைகளுள்ள அகிற்கட்டை முதலிய தூபங்களினால் அலங்கரியுங்கள்.

14. (பொ-ரை) யதேஷ்டமான ப்ராம்மணர்களுக்கு, ஸமாராதனைக்குப் போதுமான தயிர், பால் சேர்த்து செய்ததும், வ்யஞ்சனங்களோடு கூடியதும், மிகவும் ச்லாக்யமுமான அன்னமும், ஸித்தமாக இருக்கவேணும்,

15. (பொ-ரை) நாளையதினம் காலையில் ப்ராம்மணோத்தமர்களை வரவழைத்து, மரியாதை செய்து, நெய், தயிர், பொரி, பூர்ணமான தக்ஷிணை இவைகள் கொடுக்க வேண்டியது

सूर्येऽभ्युदितमात्रे श्वो भविता स्वस्तिवाचनम् ।
ब्राह्मणाश्च निमन्त्र्यन्तां कल्प्यन्तामासनानि च
आबध्यन्तां पताकाश्च राजमार्गश्च सिच्यताम् ॥ 16 ॥

सर्वे च तालावचरा गणिकाश्च स्वलङ्कृताः
कक्ष्यां द्वितीयामासाद्य तिष्ठन्तु नृपवेश्मनः ॥ 17 ॥

देवायतनचैत्येषु सान्नभक्ष्याः सदक्षिणाः ।
उपस्थापयितव्याः स्युर्माल्ययोग्याः पृथक्पृथक् ॥ 18 ॥

16. (ப-ரை) श्वः- நாளை, सूर्ये- ஸூர்யன், अभ्युदितमात्रे- உதித்தமாத்திரத்தில் स्वस्तिवाचनम्- ஸ்வஸ்திவாசனமானது, भविता- ஆகவேண்டியது, ब्राह्मणाःच- ப்ராம்மணர்களும், निमन्त्र्यन्तां- அழைக்கப்படவேண்டும். आसनानिच-(அவர்களுக்கு) ஆஸனங்களும், कल्प्यन्ताम्- ஏற்படுத்தப்படவேண்டும், पताकाःच- கொடிகளும், आबध्यन्ताम्- கட்டப்படவேண்டும், राजमार्गः च- ராஜவீதியும், सिच्यताम्- ஜலம் தெளிக்கப்படவேண்டும்.

17. (ப-ரை) सर्वे- ஸமஸ்தமான, तालावचराः च- நட்டுவர்களும், स्वलङ्कृताः- நன்றாய் அலங்காரம் செய்யப்பட்ட, गणिकाः च- தாஸிகளும, नृपवेश्मनः- ராஜக்ருஹத்தினுடைய, द्वितीयां- இரண்டாவதான, कक्ष्यां- கட்டை, आसाद्य- அடைந்து, तिष्ठन्तु- இருக்கட்டும்.

18. (ப-ரை) देवायतनचैत्येषु- கோவில்களிலும், நாற்சந்தியிலி மண்டபங்களிலும், सान्नभक्ष्याः- அன்னங்களோடும, பக்ஷ்யங்களோடும கூடியும், सदक्षिणाः- தக்ஷிணைகளோடு கூடியும், माल्ययोग्याः- மாலைக்குத் தகுந்தவர்களுமான, (ப்ராம்மணர்கள்) पृथक्पृथक्- தனித்தனியாக, उपस्थापयितव्याः- ஏற்படுத்தப்படவேண்டும்.

---

16. (பொ-ரை) நாளையதினம ஸூர்யோதயமானவுடனே, ஸ்வஸ்திவாசனம, நடக்கவேண்டியது. அதற்காக ப்ராமணர்களை அழைக்கவேண்டும். அவர்களுக்கு ஆஸனங்களும ஸித்தப்படுத்திவைக்கவேண்டும். ராஜவீதியில் கொடிகள் கட்டி ஜலமும தெளிக்கவேண்டும.

17. (பொ-ரை) தாளம்போட்டு ஜீவனம் பண்ணுகின்ற எல்லா நட்டுவர்களும, வேசிகளும, அலங்காரம செய்து கொண்டு, அரண்மனையின் இரண்டாவது கட்டில் ஸித்தமாக இருக்கவேண்டும்.

18. (பொ-ரை) தேவாலயங்களிலும், நாற்சந்தியில் கட்டியிருக்கிற மண்டபங்களிலும், அன்னங்கள், பக்ஷ்யங்கள், தக்ஷிணைகள், பூஜைக்குத்தகுந்த சந்தனம் முதலியதுகள், தனித்தனியாக ஸித்தப்படுத்தியிருக்கவேண்டும.

दीर्घासिबद्धा योधाश्च सन्नद्धा मृष्टवाससः
महाराजाङ्गणं सर्वे प्रविशन्तु महोदयम् ॥ 19 ॥

एवं व्यादिश्य विप्रौ तौ क्रियास्तत्र सुनिष्ठितौ ।
चक्रतुश्चैव यच्छेषं पार्थिवाय निवेद्य च ॥ 20 ॥

कृतमित्येव चाब्रूतामभिगम्य जगत्पतिम् ।
यथोक्तवचनं प्रीतौ हर्षयुक्तौ द्विजर्षभौ ॥ 21 ॥

19. (ப-ரை) दीर्घासिबद्धाः— நீண்ட கத்தியை அரையில் கட்டிக்கொண்டவர்களும், मृष्टवाससः— நிர்மலமான வஸ்த்ரங்களையுடையவர்களுமான, सर्वे योधाःच- எல்லா போர்வீரர்களும், महोदयम्- பெரியதான உத்ஸவமுடைய, महाराजाङ्गण— ராஜகாரத்தினுடைய முன்புறத்தை, सन्नद्धाः- ஸித்தமாக, प्रविशन्तु- ப்ரவேசித்திருக்கவேண்டும்.

20. (ப-ரை) सुनिष्ठितौ- மிகவும் தேர்ந்தவர்களாயிருக்கிற, तौ विप्रौ- அந்த ப்ராம்மணர்களான வஸிஷ்டரும், வாமதேவரும், तत्र- அவ்விடத்தில், क्रियाः— கார்யங்களை, एवं— இவ்விதம், व्यादिश्य- ஆக்ஞாபித்து, यत् शेषं- யாதொரு மிகியான கார்யமுண்டோ, (तत्- அதையும்), पार्थिवाय- அரசன் பொருட்டு, निवेद्य एवच- தெரியப்படுத்தியே, चक्रतुः च- செய்தார்கள்.

21 (ப-ரை) द्विजर्षभौ- ப்ராமண ச்ரேஷ்டர்களான வஸிஷ்டரும், வாமதேவரும், प्रीतौ- மனதில் ஸந்தோஷமுடையவர்களாய், हर्षयुक्तौ- அதனால் மயிர்க்கூச்செறிந்தவர்களாய், जगत्पतिम्- அரசனை, अभिगम्य- அடைந்து, यथोक्तवचनं- நீர் சொன்ன வசனம் தவராமல், कृतं एव- செய்யப்பட்டது, इतिच- என்றும், अब्रूताम्— சொன்னார்கள்.

19. (பொ-ரை) நம நகரத்துப் போர்வீரர்களெல்லாரும், பரிசுத்தமான வஸ்த்ரங்களை தரித்துக்கொண்டு, நீண்ட கத்திகளையும் இடுப்பில் கட்டிக்கொண்டு, ஸ்ரீராமபட்டாபிஷேகம் நடக்கக்கூடிய, மஹாராஜாவின் அரண்மனையின் முன்புறத்தில் ஸித்தமாக ப்ரவேசித்திருக்கவேண்டும்.

20. (பொ-ரை) பட்டாபிஷேகப்ரயோகத்தில், மிகவும் தேர்ந்த ஞானமுள்ள, அந்த ப்ராமணோத்தமர்களான வஸிஷ்ட, வாமதேவர்கள், பட்டாபிஷேகத்திற்குரிய கார்யங்களை, அதிகாரிகளுக்கு, இவ்வண்ணம் கட்டளையிட்டு, இதுதவிர மிகுந்த கார்யங்களையும், அரசனுக்குத் தெரிவித்துச் செய்தார்கள்

21. (பொ-ரை) வஸிஷ்டரும், வாமதேவரும், மனதில் களிப்புடனும், அதனால் தேஹமெல்லாம் மயிர்க்கூச்செறிந்தும், மஹாராஜரிடம் சென்று, நீர் சொன்னபடி தவராமல், எல்லாம் செய்தே ஆய்விட்டது என்று சொன்னார்கள்.

ततः सुमन्त्रं द्युतिमान्राजा वचनमब्रवीत् ।
रामः कृतात्मा भवता शीघ्रमानीयतामिति ॥ 22 ॥

स तथेति प्रतिज्ञाय सुमन्त्रो राजशासनात् ।
रामं तत्रानयाञ्चक्रे रथेन रथिनां वरम् ॥ 23 ॥

अथ तत्र समासीनास्तदा दशरथं नृपम् ।
प्राच्योदीच्याः प्रतीच्याश्च दाक्षिणात्याश्च भूमिपाः ॥ 24 ॥

म्लेच्छाचार्याश्च ये चान्ये वनशैलान्तवासिनः ।
उपासाञ्चक्रिरे सर्वे तं देवा इव वासवम् ॥ 25 ॥

22. (ப-ரை) ततः- பிறகு, द्युतिमान्- காந்தியுள்ளவரான, राजा- அரசன், सुमन्त्रं- ஸுமந்த்ரரைக் குறித்து, कृतात्मा- தெளிந்த புத்தியுள்ள, रामः- ராமன், भवता- உம்மால், शीघ्रं- சீக்கிரமாக, आनीयताम्- அழைத்து வரப்படட்டும், इति- என்று, वचनं- வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

23. (ப-ரை) सः सुमन्त्रः- அந்த ஸுமந்த்ரர், तथा इति- அப்படியே என்று, प्रतिज्ञाय- சொல்லிவிட்டு, रथिनां वरम्- மஹாரதர்களுக்குள் சிறந்தவரான, रामं- ஸ்ரீராமனை, तत्र- அவ்விடத்திற்கு, राजशासनात्- அரசன் கட்டளையினால், रथेन- ரதத்தினால், आनयाञ्चक्रे- அழைத்து வந்தார்.

24-25. (ப-ரை) अथ- பிறகு, तत्र- அந்த அரண்மனையில், प्राच्योदीच्याः- கிழக்கு தேசத்தவர்களும், வடதேசத்தவர்களும், प्रतीच्याः च- மேற்கு தேசத்தவர்களும், दाक्षिणात्याः च- தெற்கு தேசத்தவர்களுமான, भूमिपाः- அரசர்களும், म्लेच्छाचार्याः च- மிலேச்சப் பிரதானிகளும், अन्ये- மற்றுமுள்ளவர்களான, वनशैलान्तवासिनः- வனப்ரதேசங்களிலும், பர்வதப்ரதேசங்களிலும் வாஸஞ்செய்பவர்களும், ये च- எவர்களோ அவர்கள், ते सर्वे- அவர்களெல்லோரும், देवाः- தேவர்கள், वासवम् इव- இந்திரனைப்போல, तं- அந்த, दशरथ नृपम्- தசரதராஜனை, समासीनाः (सन्तः)- உட்கார்ந்துகொண்டு, उपासाञ्चक्रिरे- சேவித்திருந்தார்கள்.

---

22. (பொ-ரை) பிறகு மஹாராஜா காந்தியுள்ளவராய், புத்திமானாகிய ஸ்ரீராமனை, சீக்கிரமாகப் போய் அழைத்து வாரும் என்று ஸுமந்த்ரரிடம் சொன்னார்.

23. (பொ-ரை) அந்த ஸுமந்த்ரரும், அப்படியே ஆகட்டுமென்று சொல்லிவிட்டு, ரதிகர்களுக்குள் ச்ரேஷ்டரான ஸ்ரீராமனை, அரசன் கட்டளையினால், தேரின் மீதேற்றி, அவ்விடத்திற்கு அழைத்து வந்தார்.

24-25. (பொ-ரை) ஸுமந்த்ரர் ஸ்ரீராமனை அழைக்கப்போன வேளையில் போனபிறகு, கிழக்கு தேசத்தவர்களும், வடதேசத்தவர்களும், மேற்கு தேசத்தவர்

तेषां मध्ये स राजर्षिर्मरुतामिव वासवः ।
प्रासादस्थो रथगतं ददर्शायान्तमात्मजम् ॥ 26 ॥

गन्धर्वराजप्रतिमं लोके विख्यातपौरुषम् ।
दीर्घबाहुं महासत्त्वं मत्तमातङ्गगामिनम् ॥ 27 ॥

चन्द्रकान्ताननं राममतीव प्रियदर्शनम् ।
रूपौदार्यगुणैः पुंसां दृष्टिचित्तापहारिणम् ॥ 28 ॥

घर्माभितप्ताः पर्जन्यं ह्लादयन्तमिव प्रजाः ।
न ततर्प समायान्तं पश्यमानो नराधिपः ॥ 29 ॥

26. (ப-ரை) मरुतां- தேவர்களுடைய, मध्ये- நடுவில், वासवःइव- இந்திரன் போல், तेषां- அந்த ஜனங்களுடைய, मध्ये- நடுவில், (இருக்கிற), स राजर्षिः- அந்த ராஜரிஷியானவர், रथगतं- தேரை அடைந்து, आयान्त- வந்துகொண்டிருக்கிற, आत्मज- பிள்ளையை, प्रासादस्थः (सन्)-அந்த ஸபா மண்டபத்திலிருந்துகொண்டு, ददर्श- பார்த்தார்.

27–28–29. (ப-ரை) नराधिपः- அரசன், गन्धर्वराजप्रतिम- கந்தர்வ ராஜனுக்கு ஸமானராயும், लोके- உலகத்தில், विख्यातपौरुषम्- ப்ரஸித்தமான பராக்ரமமுடையவரும், दीर्घबाहुं- நீண்ட தோள்களையுடையவரும், महासत्त्व- மிகுந்த பலமுடையவரும், मत्तमातङ्गगामिनम्- மதயானைபோல் நடக்கின்றவரும், चन्द्रकान्ताननं- சந்திரனையொத்த அழகிய முகமுடையவரும், अतीव- அதிகமான, प्रियदर्शनम्- ப்ரியமான காக்ஷியையுடையவராயும், रूप-औदार्य-गुणैः- திருமேனியினாலும், ஔதார்ய குணத்தினாலும், ஸௌசீல்யத்தினாலும், पुंसां- புருஷர்களுடைய, दृष्टि चित्त अपहारिणम्- கண்களையும், மனதையும் கவருகின்றவருமான, समायान्तम्- வந்துகொண்டிருக்கிற, रामं- ராமனை, घर्माभितप्ताः- கோடையினால், தாபத்தையடைந்திருக்கிற, प्रजाः- ஜனங்கள், ह्लादयन्तम्- ஸந்தோஷப்படுத்துகின்ற, पर्जन्यं इव- மேகத்தைக்கண்டு திருப்தியடையாததுபோல, पश्यमानः- பார்த்துக்கொண்டு, न ततर्प- த்ருப்தி அடையவில்லை.

களும், தென்தேசத்தவர்களுமான அரசர்களெல்லோரும், மற்றுமுள்ள மலைசப்பர்களும், வனங்களிலும், பர்வதங்களிலும் வசிக்கும் ஜனங்களும், இந்திரனைச் சூழ்ந்து தேவர்கள் இருப்பதுபோல் தசரத மஹாராஜனைச் சூழ்ந்து உட்கார்ந்துகொண்டு ஸேவித்து வந்தார்கள்.

26. (பொ-ரை) தேவர்கள் நடுவில் இந்திரன் உட்கார்ந்திருப்பதுபோல், அந்த ஜனங்கள் நடுவில் உட்கார்ந்திருக்கிற, ராஜரிஷியான அந்த தசரதன், ஸபா மண்டபத்திலிருந்துகொண்டே ரதமேறி வருகின்ற தமதுடைய பிள்ளையைப் பார்த்தார்.

27–28–29. (பொ-ரை) கந்தர்வ ராஜனுக்கொப்பாயும், உலகத்தில் ப்ரஸித்தமான பராக்ரமத்தையுடையவரும், நீண்ட திருத்தோள்களையுடையவரும், அதிக

अवतार्य सुमन्त्रस्तं राघवं स्यन्दनोत्तमात् ।
पितुः समीपं गच्छन्तं प्राञ्जलिः पृष्ठतोऽन्वगात् ॥ 30 ॥

स तं कैलासशृङ्गाभं प्रासादं नरपुङ्गवः ।
आरुरोह नृपं द्रष्टुं सह सूतेन राघवः ॥ 31 ॥

30. (ப-ரை) सुमन्त्रः- ஸுமந்த்ரர், तं राघवं- அந்த ராமனை, स्यन्दनोत्तमात्- ச்ரேஷ்டமான தேரிலிருந்து, अवतार्य- இறக்கி, पितुः- பிதாவினுடைய, समीप- ஸமீபத்தைக் குறித்து, गच्छन्तं- போகின்றவரை, प्राञ्जलिः(सन्), கைகுவித்தவராய், पृष्ठतः- பின்னால், अन्वगात्- தொடர்ந்து போனார்.

31. (ப-ரை) नरपुङ्गवः- புருஷ ச்ரேஷ்டரான, सः राघवः- அந்த ஸ்ரீராமன், नृप- அரசனை, द्रष्टुं- பார்ப்பதற்கு, सूतेन सह- ஸாரதியுடன்கூட, कैलासशृङ्गाभ- கைலாஸ சிகரம்போல விளங்குகின்ற, तं प्रासादं- அந்த உப்பரிகையை, आरुरोह- ஏறினார்.

மான தேஹபலத்தையுடையவரும, மதயானைபோல நடப்பவரும், சந்திரன்போல் அழகான முகமுடையவரும, பார்ப்பவர்களுக்கு அதிகப்ரியமான காக்ஷியுடையவராயும, திருமேனியின் அழகினாலும், கேட்டவர்களுக்கு வேண்டியபடி கொடுக்கும் தன்மையான ஔதார்ய குணத்தினாலும், எல்லோராலும் அடிக்கடி ஆனந்தத்துடன் அநுஸந்தானம செய்யப்படுகிற ஸௌசீல்ய குணத்தினாலும், புருஷர்களுடைய கண்களையும, மனதையும் கவரும் ஸ்வபாவமுடையவரும், தேர்மீது வருகின்றவருமான ஸ்ரீராமனை, தசரத மஹாராஜா பார்த்து வெகுநாள் வெய்யற்காலத்தில் மழையில்லாமல் தபித்துக்கொண்டிருக்கிற காலத்தில், மழை பெய்யும் மேகத்தைக் கண்டால், எப்படிப்பார்த்துப்பார்த்து ஜனங்கள் த்ருப்தியடையாமலிருப்பார்களோ அவ்விதம த்ருப்தியடையாமலிருந்தார்.

30. (பொ-ரை) ஸுமந்த்ரர் ஸ்ரீராமனை, தேரிலிருந்து இறக்கி, அவர் பிதாவின் ஸமீபத்திற்குப் போகும் பொழுது, தானும் கைகுவித்துக்கொண்டு அவர்பின் சென்றார்.

31. (பொ-ரை) புருஷோத்தமனான ஸ்ரீராமன், பிதாவான அரசனைப் பார்ப்பதற்கு, ஸுமந்த்ரருடன் கூட, கைலாஸ சிகரம்போல் உயர்ந்து, வெளுத்துமிருக்கிற அந்த உப்பரிகையை ஏறினார்.

स प्राञ्जलिरभिप्रेत्य प्रणतः पितुरन्तिके ।
नाम स्वं श्रावयन्रामो ववन्दे चरणौ पितुः ॥ 32 ॥

तं दृष्ट्वा प्रणतं पार्श्वे कृताञ्जलिपुटं नृपः ।
गृह्याञ्जलौ समाकृष्य सस्वजे प्रियमात्मजम् ॥ 33 ॥

तस्मै चाभ्युदितं सम्यङ्मणिकाञ्चनभूषितम् ।
दिदेश राजा रुचिरं रामाय परमासनम् ॥ 34 ॥

32. (ப-ரை) स: राम:- அந்த ஸ்ரீராமன், प्राञ्जलि: (सन्)- கைகுவித்தவராய், अभिप्रेत्य- அடைந்து, पितु:- பிதாவினுடைய, अन्तिके- ஸமீபத்தில், प्रणत:- நமஸ்காரம் செய்தவராய், स्व नाम- தன்னுடைய பெயரை, श्रावयन् (सन्)- கேட்பித்துக்கொண்டு, पितु: பிதாவினுடைய, चरणौ- பாதங்களை, ववन्दे- வணங்கினார்.

33. (ப-ரை) नृप:- அரசன், पार्श्वे- பக்கத்தில், प्रणतं- வணங்கினவனும், कृताञ्जलिपुटं- செய்யப்பட்ட அஞ்ஜலியையுடையவனுமான, तं- அந்த, प्रियं आत्मजं- பிரியமான பிள்ளையை, दृष्ट्वा- பார்த்து, अञ्जलौ- கூப்பின கையில், गृह्य- பிடித்து, समाकृष्य- தன் பக்கத்திற்கு இழுத்து, सस्वजे- கட்டிக்கொண்டார்.

34. (ப-ரை) राजा- அரசனானவர், तस्मै- அந்த, रामाय- ஸ்ரீராமனுக்காக, अभ्युदितं- உயரமுள்ள, सम्यक्- நன்றாக, मणिकाञ्चनभूषितम्- ரத்னங்களாலும் பொன்னாலும் அலங்கரிக்கப்பட்ட, रुचिरं- அழகான, परमासनम् च- உத்தமமான ஆஸனத்தையும், दिदेश- கொடுத்தார்.

32. (பொ-ரை) ஸ்ரீராமன், கைகூப்பிக்கொண்டு பிதாவின் ஸமீபத்திற்குப் போய், ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்து, தன்னுடைய நாமதேயத்தைச் சொல்லி, பிதாவின் திருவடிகளில் வணங்கினார்.

33. (பொ-ரை) அரசன், வணங்கிக்கொண்டு கைகூப்பிக்கொண்டு தன் பக்கத்தில் நிற்கின்ற, பிரியமான தன் புத்திரனைப் பார்த்து, கூப்பின கையைப் பிடித்து தன் ஸமீபத்திற்கு அழைத்து கட்டிக்கொண்டார்.

34. (பொ-ரை) அரசன், அந்த ராமனுக்கு, ஸ்வர்ணத்தினால் செய்து, நன்றாய் நவரத்னங்களிழைத்த, அழகான உயரமுள்ள உத்தமமான ஆஸனத்தைக்கொடுத்தார்.

तदासनवरं प्राप्य व्यदीपयत राघवः ।
स्वयैव प्रभया मेरुमुदये विमलो रविः ॥ 35 ॥

तेन विभ्राजता तत्र सा सभाभिव्यरोचत ।
विमलग्रहनक्षत्रा शारदी द्यौरिवेन्दुना ॥ 36 ॥

तं पश्यमानो नृपतिस्तुतोष प्रियमात्मजम् ।
अलङ्कृतमिवात्मानमादर्शतलसंस्थितम् ॥ 37 ॥

35. (ப-ரை) विमलः- நிர்மலமான, रविः- ஸூர்யன், उदये- உதய காலத்தில், मेरुम्- மேரு மலையை, प्राप्य इव- அடைந்தாற்போல், तत्- அந்த, आसनवरं- உத்தம ஆஸனத்தை, प्राप्य- அடைந்து, स्वया- தன்னுடையதான, प्रभया एव- காந்தியினாலேயே, व्यदीपयत- ப்ரகாசப்படுத்தினார்.

36. (ப-ரை) विमलग्रहनक्षत्रा- நிர்மலமான, க்ரஹங்களும், நக்ஷத்ரங்களுமுள்ள, शारदी- சரத்காலத்து, द्यौः- ஆகாசமானது, इन्दुना इव- சந்திரனாலேபோல, विभ्राजता- விசேஷமாக விளங்குகின்ற, तेन- அந்த ஸ்ரீராமனால், तत्र- அந்த ஸமயத்தில், सा सभा- அந்த ஸபையானது, अभिव्यरोचत- நன்றாக விளங்கிற்று.

37. (ப-ரை) नृपतिः- அரசன், आदर्शतलसंस्थितम्- கண்ணாடிப்புறத்திலிருக்கிற, अलङ्कृत- அலங்காரம் செய்யப்பட்ட, आत्मान इव- தன் உருவத்தைப்போல், प्रियं- ப்ரியமான, तं आत्मजम्- அந்த புத்ரனை, पश्यमानः (सन्)- பார்த்துக்கொண்டு, तुतोष- ஸந்தோஷப்பட்டார்.

---

35. (பொ-ரை) நிர்மலமான ஸூர்யன் உதயகாலத்தில், தன்னுடைய காந்தியினாலே, மேரு பர்வதத்தை விளங்கும்படி செய்வது போல், ஸ்ரீராமனும பிதா அளித்த ஆஸனத்தை யடைந்து, தன்னுடைய காந்தியினால், அந்த ஆஸனத்தை விளங்கும்படி செய்தார்.

36. (பொ-ரை) நிர்மலமான க்ரஹங்களோடும், நக்ஷத்திரங்களோடும் கூடிய சரத்கால ஆகாயமானது, சந்திரனால் விசேஷமாக விளங்கினாற்போல், நன்றாய் விளங்குகின்ற ஸ்ரீராமனால் அச்சமயத்தில், அந்த ஸபையானது சிறப்பாக ப்ரகாசித்துக்கொண்டிருந்தது.

37. (பொ-ரை) அலங்காரம் செய்துகொண்டு, தன் உருவத்தை கண்ணாடியில் பார்த்து, ஆனந்திப்பதுபோல், ப்ரியமான தன்னுடைய புத்ரனைப்பார்த்து, அரசன் மிகவும ஸந்தோஷமடைந்தார்.

स तं सस्मितमाभाष्य पुत्रं पुत्रवतां वरः
उवाचेदं वचो राजा देवेन्द्रमिव काश्यपः ॥ 38 ॥
ज्येष्ठायामसि मे पत्न्यां सदृश्यां सदृशः सुतः ।
उत्पन्नस्त्वं गुणश्रेष्ठो मम रामात्मजः प्रियः ॥ 39 ॥
यतस्त्वया प्रजाश्चेमाः स्वगुणैरनुरञ्जिताः ।
तस्मात्त्वं पुष्ययोगेन यौवराज्यमवाप्नुहि ॥ 40 ॥

---

38. (ப-ரை) पुत्रवतां- புத்ரவான்களுக்குள், वरः- ச்ரேஷ்டரான, स- அந்தத் தசரதன், सस्मितम्- புன்னகையுடன், आभाष्य- பேர்சொல்லி அழைத்து, काश्यपः- காச்யபரானவர், देवेन्द्रमिव- தேவேந்திரனைப்போல், इदंवचः- இந்த வார்த்தையை, उवाच- சொன்னார்.

39. (ப-ரை) हे राम- ஓ ராமனே, मे- எனக்கு, सदृश्यां- தகுந்தவளான, ज्येष्ठायां- மூத்தவளான, पत्न्यां- பத்னியிடத்தில், सदृशः- தகுந்தவனும், गुणश्रेष्ठः- குணங்களால் சிறந்தவனுமான, आत्मजःसुतः- ஔரஸ புத்ரனாகி, प्रियः- ப்ரீதிக்கு இடமுமாகி, त्वं- நீ, उत्पन्नः- பிறந்திருக்கிறாய்.

40. (ப-ரை) यतः- யாதொரு காரணத்தினால், त्वया- உன்னால், इमःप्रजाःच- இந்த ஜனங்களும், स्वगुणैः- உன்னுடைய குணங்களினால், अनुरञ्जिताः- ஆனந்தப்படுத்தப்பட்டார்களோ, तस्मात्- ஆகையால், त्वं- நீ, पुष्ययोगेन- புஷ்ய நக்ஷத்ர ஸம்பந்தத்தினால், (அறியப்பட்டகாலத்தில்), यौराज्यं- இளவரசை, अवाप्नुहि- அடையவேண்டும்.

---

38 (பொ-ரை) புத்ரவான்களுக்குள் சிறந்தவரான அவ்வரசன், மந்தஹாஸத்துடன், ராமா என்று பேர்சொல்லிப் புத்ரனை அழைத்து, காச்யப ப்ரஜாபதி தேவேந்திரனைப்பார்த்து சொல்லுவதைப்போல், இந்த வார்த்தையைச் சொன்னார்.

39. (பொ-ரை) ஹே ராமா, எனக்குத்தகுந்தவளான ஜேஷ்ட பத்னியிடத்தில், தகுந்தவனும், குணங்களால் சிறந்தவனுமான, ஔரஸ புத்ரனாகப்பிறந்து எனக்கு நிரம்பவும் ப்ரியமாயுமிருக்கிறாய்.

40. (பொ-ரை) உன்னால் இந்த ஜனங்களெல்லாம், குணங்களினால் ஸந்தோஷப்படுத்தப்பட்டபடியாலும், புஷ்ய நக்ஷத்திரம் சேர்ந்த தினத்தில், யௌவ ராஜ்ய பட்டாபிஷேகத்தை நீ அடைய வேண்டும்.

कामतस्त्वं प्रकृत्यैव विनीतो गुणवानसि ।
गुणवत्यपि तु स्नेहात्पुत्र वक्ष्यामि ते हितम् ॥ 41

भूयो विनयमास्थाय भव नित्यं जितेन्द्रियः ।
*कामक्रोधसमुत्थानि त्यजेथा व्यसनानि च ॥ 42

41. (ப-ரை) हे पुत्र- ஹே குழந்தாய், त्वं- நீ, प्रकृत्यैव- ஸ்வபாவத்தினாலேயே, कामतः- மிகவும், विनीतः- வணக்கமுள்ளவனாகவும், गुणवान्- குணமுள்ளவனாகவும், असि- இருக்கிறாய், अपितु- ஆகிலும், गुणवति- குணமுள்ள, (உன்னிடத்தில்), स्नेहात्- ஸ்நேஹத்தால், ते- உனக்கு, हितं- நன்மையை, वक्ष्यामि- சொல்லப்போகிறேன்.

42. (ப-ரை) भूयो विनयं- அதிகமான வணக்கத்தை, आस्थाय- அடைந்து, नित्यं- எப்பொழுதும், जितेन्द्रियः- இந்திரியங்களை ஜயித்தவனாக, भव- இருக்கவேண்டும், कामक्रोधसमुत्थानि- காமத்தினாலும், கோபத்தினாலும் உண்டான, व्यसनानि च- வ்யஸனங்களையும், त्यजेथाः- விடவேண்டும்.

41. (பொ-ரை) குழந்தாய்! நீ ஸ்வபாவத்தினாலேயே வணக்கமுள்ளவனும், குணவானுமாயிருக்கிறாய். அப்படி இருந்தபோதிலும், குணமுள்ள உன்னிடத்தில் புத்ரனென்கிற விசேஷப்ரீதியினால், உனக்கு நன்மையைச் சொல்லுகிறேன்.

42 (பொ-ரை) முன்னைக்காட்டிலும் அதிகமான விநயத்துடன் எப்பொழுதும் ஜிதேந்திரியனாகவே இருக்கவேண்டும். காமக்ரோதத்தினால் உண்டான வ்யஸனங்களையும் தள்ளவேண்டும்.

* காமக்ரோதங்களினால் உண்டான, வ்யஸனங்களாவன:—

ஸ்த்ரீ ஸங்கம்; சூதாட்டம்; வேட்டையாடுதல்; கள் குடித்தல்; கடுமையான சொல்; கடுமையாக தண்டித்தல்; முன்னோர்கள் சேர்த்திருந்த பொருளை அழித்தல் ஆக ஏழு. அல்லது,

‡ காமத்தினால் உண்டான வ்யஸனங்கள் பத்து. அவையாவன:—

வேட்டையாடல்; சூதாடல்; பகல் தூக்கம்; பரதூஷணை; ஸ்த்ரீ ஸங்கம்; மத்யபானம்; ஸங்கீதம் கேட்கை; கூத்துப்பார்க்கை; வாத்யங்கள் கேட்கை; வீணாகத்திரிதல்.

கோபத்தினால் உண்டானவைகளாவன:—

கோட்சொல்லுகை; ஸாஹஸம், த்ரோஹம்; பொறாமை; குணங்களில் தோஷக் ரதச்சொல்லுகை; பெரியோர்கள் ஸம்பாதித்த பொருளை அழித்தல்; கடுஞ்சொல்; டும் தண்டனை என்று எட்டு.

परोक्षया वर्तमानो वृत्त्या प्रत्यक्षया तथा ।
अमात्यप्रभृतीः सर्वाः प्रकृतीश्चानुरञ्जय ॥ 43 ॥

कोष्ठागारायुधागारैः कृत्वा सन्निचयान्बहून् ।
तुष्टानुरक्तप्रकृतिर्यः पालयति मेदिनीम् ॥ 44 ॥

तस्य नन्दन्ति मित्राणि लब्ध्वामृतमिवामराः ।
तस्मात्त्वमपि चात्मानं नियम्यैवं समाचर ॥ 45 ॥

43. (ப-ரை) परोक्षया- மறைந்ததான, वृत्त्या- வ்யாபாரத்தினாலும், तथा- அப்படியே, प्रत्यक्षया- நேரான, वृत्त्या- வ்யாபாரத்தினாலும், वर्तमानः- இருந்துகொண்டு, अमात्यप्रभृतीः- மந்திரி முதலாகிய, सर्वाः ஸமஸ்தங்களான, प्रकृतीःच- ஜனங்களையும், अनुरञ्जय- ஸந்தோஷப்படுத்தவேண்டும்.

44–45. (ப-ரை) कोष्ठागारायुधागारैः- தான்ய சாலைகளோடும், ஆயுத சாலைகளோடும், बहून्- அநேகங்களான, सन्निचयान्- பொக்கிஷங்களை, कृत्वा- நிரப்பி, तुष्ट अनुरक्त प्रकृतिः- ஸந்தோஷப்பட்டும், ஸ்நேஹத்துடன் கூடியிருக்கிற ஜனங்களையுடையவனாக, यः- யாவனொருவன், मेदिनीम्- பூமியை, पालयति- ரக்ஷிக்கிறானோ, तस्य- அவனுடைய, मित्राणि- ஸ்நேஹிதர்கள், अमृत- அம்ருதத்தை, लब्ध्वा- அடைந்து, अमराः इव- தேவர்கள் போல, नन्दन्ति- ஸந்தோஷப்படுகிறார்கள், तस्मात्- ஆகையால், त्वं अपि च- நீயும், आत्मानम्- மனதை, नियम्य- அடக்கி, एवं- இவ்விதம், समाचर- நடந்துகொள்ளவேண்டும்

43. (பொ-ரை) தச்சன், கொல்லன் முதலாகிய வேலைக்காரர்களை நீ நேரில் விசாரிக்காமல், அதிகாரிகள் மூலமாயும், மந்திரி முதலானவர்களை நீயே நேரிலிருந்தும், அவரவர்கள் காரியங்களை விசாரித்துக்கொண்டு, மந்திரி முதலாகிய ஸமஸ்த ஜனங்களையும் ஸந்தோஷப்படுத்தவேண்டும்.

44–45 (பொ-ரை) தான்யசாலைகள், ஆயுத சாலைகள், ரத்னசாலைகள், ஸ்வர்ண சாலைகள், ஆபரண சாலைகள், வஸ்த்ரசாலைகள், தனசாலைகள் முதலாகிய எல்லா சாலைகளையும், அந்தந்த வஸ்துக்கள் பூர்ணமாயிருக்கும்படி செய்துகொண்டு எந்த அரசன், ராஜ்யமாளுகிறானோ அவனுடைய தோழர்கள், அம்ருதத்தை யடைந்த தேவர்கள் போல ஸந்தோஷப்படுகிறார்கள்.

तत्श्रुत्वा सुहृदस्तस्य रामस्य प्रियकारिणः ।
त्वरिताः शीघ्रमभ्येत्य कौसल्यायै न्यवेदयन् ॥ 46 ॥

सा हिरण्यं च गाश्चैव रत्नानि विविधानिच ।
व्यादिदेश प्रियाख्येभ्यः कौसल्याप्रमदोत्तमा ॥ 47 ॥

अथाभिवाद्य राजानं रथमारुह्य राघवः ।
ययौ स्वं द्युतिमद्वेश्म जनौघैः प्रतिपूजितः ॥ 48 ॥

46. (ப-ரை) प्रियकारिण:- *ப்ரியத்தைச்செய்கின்ற*, तस्य रामस्य- *அந்த ஸ்ரீராமனுடைய*, सुहृद:- *ஸ்நேஹிதர்கள்*, तत्- *அந்த பட்டாபிஷேக ப்ரஸ்தாபத்தை*, श्रुत्वा- *கேட்டு*, त्वरिता: (सन्त:)- *த்வரையுள்ளவர்களாய்க்கொண்டு*, शीघ्रं- *சீக்ரமாக*, अभ्येत्य- *போய்*, कौसल्यायै- *கௌஸல்யா தேவியின் பொருட்டு*, न्यवेदयन्- *தெரியப்படுத்தினார்கள்*.

47. (ப-ரை) प्रमदोत्तमा- *ஸ்த்ரீகளுக்குள் உத்தமையான*, सा कौसल्या- *அந்த கௌஸல்யா தேவியானவள்*. प्रियाख्येभ्य:- *இந்த ப்ரியமான வார்த்தையைச்சொன்னவர்கள் பொருட்டு*, हिरण्यंच- *ஸ்வர்ணத்தையும்*, गा: च एव- *பசுக்களையும்*, विविधानि- *நானுவிதங்களான*, रत्नानिच- *ரத்னங்களையும்*, व्यादिदेश- *விசேஷமாகக்கொடுத்தாள்*.

48. अथ- *பிறகு*, राघवः *ஸ்ரீராமன்*, राजानं- *அரசனை*, अभिवाद्य- *ஸேவித்துவிட்டு*, रथं- *தேரை*, आरुह्य- *ஏறிக்கொண்டு*, जनौघै:- *ஜனக்கூட்டங்களால்*, प्रतिपूजित:- *பூஜிக்கப்பட்டவராய்க்கொண்டு*, द्युतिमत्- *ப்ரகாசமுள்ள*, स्वं वेश्म- *தன்னுடைய க்ருஹத்தை*, ययौ- *அடைந்தார்*.

46. (பொ-ரை) *ஸமஸ்த ஜனங்களுக்கும், ப்ரியமான கார்யத்தைச்செய்யும் ஸ்வபாவமுள்ள அந்த ஸ்ரீராமனுடைய ஸ்நேஹிதர்கள், ஸ்ரீராம பட்டாபிஷேக ஸமாசாரத்தைக்கேட்டு, த்வரையுடன் சீக்ரமாக கௌஸல்யையிடம் சென்று, அவ்விஷயத்தை தெரிவித்தார்கள்.*

47. (பொ-ரை) *உத்தம ஸ்த்ரீயான அந்த கௌஸல்யா தேவி, இவ்விதம் தனக்கு மிகவும் ப்ரியமான, ஸ்ரீராம பட்டாபிஷேக ப்ரஸ்தாபத்தைச்சொன்ன ஸ்ரீராமனுடைய ஸ்நேஹிதர்களுக்கு ஸ்வர்ணங்களையும், பசுக்களையும், நானுவிதமான ரத்னங்களையும் விசேஷமாகக்கொடுத்தாள்.*

48. (பொ-ரை) *பிற்பாடு ஸ்ரீராமன், மஹாராஜனை ஸேவித்துவிட்டு, தேரின்பேரில் ஏறிக்கொண்டு, ஜனக்கூட்டங்களினல் பூஜிக்கப்பட்டு, அழகான தம்முடைய திருமாளிகையை அடைந்தார்.*

ते चापि पौरा नृपतेर्वचस्तत्श्रुत्वा तदा लाभमिवेष्टमाशु ।
नरेन्द्रमामन्त्रय गृहाणि गत्वा देवान्समानर्चुरतिप्रहृष्टाः ॥ 49 ॥

इत्यार्षेश्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये अयोध्याकाण्डे
त्रितीयः सर्गः ॥ 3 ॥

49. (ப-ரை) तदा- அப்பொழுது, ते- அந்த, पौराःच अपि- பட்டணத்து ஜனங்களும், इष्टं- தங்களுக்கு இஷ்டமான, लाभं इव- லாபத்தைப்போல, नृपतेः- அரசனுடைய; तत् वचः- அந்த வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, आशु- சீக்ரமாக, नरेन्द्रं- அரசனை, आमन्त्रय- கேட்டுக்கொண்டு, गृहाणि- வீடுகளை, गत्वा- அடைந்து, अति प्रहृष्टाः (सन्तः)- மிகவும் ஸந்தோஷமுள்ளவர்களாய்க்கொண்டு, देवान्- தேவதைகளை, समानर्चुः- பூஜித்தார்கள்.

49. (பொ-ரை) அப்பொழுது, அந்தப்பட்டணத்து ஜனங்கள், தங்களுக்கு இஷ்டமான வஸ்துக்கிடைத்ததுபோல், அரசனுடைய அந்த வார்த்தையைக் கேட்டு சீக்ரமாக அரசனிடம் விடைபெற்று, தங்கள் தங்கள் க்ருஹம் சென்று, பரமஸந்தோஷத்துடன் ஸ்ரீராம பட்டாபிஷேகம் விக்னமில்லாமல் நடக்கவேணுமென்று தேவர்களைப் பூஜித்தார்கள்.



चतुर्थः सर्गः ॥ 4 ॥

गतेष्वथ नृपो भूयः पौरेषु सह मन्त्रिभिः ।
मन्त्रयित्वा ततश्चक्रे निश्चयज्ञः स निश्चयम् ॥ 1 ॥
श्व एव पुष्यो भविता श्वोऽभिषेच्यस्तु मे सुतः ।
रामो राजीवताम्राक्षो यौवराज्य इति प्रभुः ॥ 2 ॥

1–2. (ப-ரை) अथ- பிறகு, पौरेषु- பட்டணத்துஜனங்கள், गतेषु(सत्सु)- போனவளவில், निश्चयज्ञः- நிச்சயம தெரிந்தவரான, नृपः- அரசன், भूयः- மறுபடியும், मन्त्रिभिः सह- மந்திரிகளோடுகூட, मन्त्रयित्वा- ஆலோசித்து, ततः- பிறகு, श्व एव- நாளை தினத்திலேயே, पुष्यः- புஷ்ய நக்ஷத்திரம, भविता- ஆகப்போகிறது. श्वस्तु- நாளைதினமே, राजीवताम्राक्षः- செந்தாமரைபோல் சிவந்த கண்களையுடையவனும், प्रभुः- ஸமர்த்தனுமான, मे सुतः- என்னுடைய புத்திரனை, रामः- ராமன், यौवराज्ये- இளவரசில், अभिषेच्यः- பட்டாபிஷேகம் செய்யத்தகுந்தவன், इति- என்று, निश्चयं- தீர்மானத்தை, चक्रे- செய்தார்.

1–2. (பொ-ரை) பட்டணத்து ஜனங்கள் போனபிறகு, கார்யத்தின் தீர்மானத்தை அறிந்தவரான அரசன், மந்திரிகளோடுகூட ஆலோசித்து "நாளைய தினமே புஷ்ய நக்ஷத்திரமாகையால், செந்தாமரை இதழ்போல் சிவந்த கண்களையுடையவனும், ஸர்வ கார்யத்திலும் ஸமர்த்தனுமான என் புத்திரன் ராமனுக்கு இளவரசு பட்டாபிஷேகம் செய்யவேண்டுமென்று தீர்மானம் செய்தார்."

अथान्तर्गृहमाविश्य राजा दशरथस्तदा ।
सूतमामन्त्रयामास रामं पुनरिहानय ॥ 3 ॥

प्रतिगृह्य स तद्वाक्यं सूतः पुनरुपाययौ ।
रामस्य भवनं शीघ्रं राममानयितुं पुनः ॥ 4 ॥

द्वाःस्थैरावेदितं तस्य रामायागमनं पुनः ।
श्रुत्वैव चापि रामस्तं प्राप्तं शङ्कान्वितोऽभवत् ॥ 5 ॥

3. (ப-ரை) अथ- அனந்தரம், तदा– அப்பொழுதே, दशरथः- தசரதராஜன், अन्तर्गृहं- ஏகாந்த க்ருஹத்தை. आविश्य- ப்ரவேசித்து, रामं- ராமனை, पुनः- மறுபடியும், इह– இவ்விடத்திற்கு, आनय- அழைத்துவாரும், (इति- என்று), सूतं- ஸாரதியை आमन्त्रयामास- ஆக்ஞாபித்தார்.

4. (ப-ரை) सः सूतः- அந்த ஸாரதியும், तत् वाक्यं- அந்த வார்த்தையை, प्रतिगृह्य- பெற்றுக்கொண்டு, पुनः- மறுபடியும், रामं- ராமனை, आनयितु- அழைத்துவருவதற்கு, शीघ्रं- விரைவில், रामस्य- ராமனுடைய, भवनं- க்ருஹத்தைக் (குறித்து), पुनः- மறுபடியும், उपाययौ- வந்தார்.

5. (ப-ரை) तस्य- அந்த ஸாரதியினுடைய, पुनः आगमनम्- மறுபடி வரவானது, द्वाःस्थैः- த்வார பாலகர்களால், रामाय- ஸ்ரீராமனுக்கு, आवेदितं- தெரிவிக்கப்பட்டது. रामःच अपि- ராமனும், तत्- அந்த ஸாரதியை, प्राप्तं- வந்திருக்கிறதாக, श्रुत्वा- கேட்டு, शङ्कान्वितः-சங்கையுடன் கூடினவராக, अभवत्- ஆனார்.

3. (பொ-ரை) அனந்தரம், அப்பொழுதே தசரத மஹாராஜன், ஏகாந்தமான க்ருஹத்திலுட்கார்ந்துகொண்டு, ராமனை மறுபடியும், இங்கு அழைத்துவாருமென்று ஸாரதிக்குக் கட்டளை இட்டார்-

4 (பொ-ரை) அந்த ஸாரதியும், அரசன் வார்த்தையை அங்கீகரித்து, மறுபடியும் ராமனை அழைத்துவருவதற்காக சீக்ரமாக ராமனுடைய திருமாளிகைக்கு மறுபடியும் வந்து சேர்ந்தார்.

5. (பொ-ரை) ஸாரதி ஸ்ரீராமன் திருமாளிகைக்கு மறுபடியும வந்ததை, த்வார பாலகர்கள் ஸ்ரீராமனுக்குத்தெரியப்படுத்தினார்கள். ஸ்ரீராமனும மறுபடியும் ஸாரதி வந்ததைக்கேட்டு மனதில் சங்கை கொண்டார்.

प्रवेश्य चैनं त्वरितं रामो वचनमब्रवीत् ।
यदागमनकृत्यं ते भूयस्तद्ब्रूह्यशेषतः ॥ 6 ॥

तमुवाच ततः सूतो राजा त्वां द्रष्टुमिच्छति ।
श्रुत्वा प्रमाणमत्र त्वं गमनायेतराय वा ॥ 7 ॥

इति सूतवचः श्रुत्वा रामोऽथ त्वरयान्वितः ।
प्रययौ राजभवनं पुनर्द्रष्टुं नरेश्वरम् ॥ 8 ॥

6. (ப-ரை) रामः- ஸ்ரீராமன், एनं- இந்த ஸாரதியை, त्वरितं- த்வரையுடன், प्रवेश्यच- உள்ளே ப்ரவேசிப்பித்து, भूयः- மறுபடியும், ते- உம்முடைய, आगमनकृत्यं- இங்கு வந்த கார்யம், यत्- யெதுவோ, तत्- அதை, अशेषतः- முழுமையும், ब्रूहि- சொல்லக்கடவீர், इति- என்று, वचः- வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

7. (ப-ரை) ततः- பிற்பாடு, सूतः- ஸாரதியானவர், राजा- அரசன், त्वां- உம்மை, द्रष्टुं- பார்ப்பதற்கு, इच्छति- விரும்புகிறார், श्रुत्वा- இவ்விஷயத்தைக் கேட்டு, अत्र- அவ்விடத்திற்கு, गमनाय- போவதற்கோ, इतराय वा- வருவதற்கோ, त्वं- நீர், प्रमाणं- நிர்ணயம் செய்கிறவர் (என்று), तम्- அந்த ராமனைப்பார்த்து, उवाच- சொன்னார்.

8. (ப-ரை) अथ- பிறகு, रामः- ஸ்ரீராமன், इति- என்று, सूतवचः- ஸாரதியின் வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, नरेश्वरम्- அரசனை, द्रष्टुं- பார்ப்பதற்கு, पुनः- மறுபடியும், त्वरया- பரபரப்புடன், अन्वितः- கூடினவராய், राजभवनं- அரசன் அரண்மனையைக்குறித்து, प्रययौ- போனார்.

---

6. (பொ-ரை) ஸ்ரீராமனும், பரபரப்புடன் ஸாரதியை உள்ளே வரவழைத்து, மறுபடியும் நீர் இவ்விடம் வந்த கார்யம் என்னவோ அதை முழுமையும், சொல்லவேணுமென்று ஸாரதியைப் பார்த்துக்கேட்டார்.

7. (பொ-ரை) பிறகு ஸாரதியும், ஸ்ரீராமனைப்பார்த்து அரசன் உம்மைப் பார்க்க விரும்புகிறார். இதைக்கேட்டு அரசனிடம் போவதற்குப், மறுபடி வருவதற்கும் நீர் அன்றோ தீர்மானம் செய்யக்கடவீர் என்று சொன்னார்.

8. (பொ-ரை) இவ்விதம் ஸாரதியின் வார்த்தையைக்கேட்டு ஸ்ரீராமன் அரசனைப்பார்ப்பதற்காக பரபரப்புடன் மறுபடியும் ராஜபவனம் சென்றார்.

तं श्रुत्वा समनुप्राप्तं रामं दशरथो नृपः ।
प्रवेशयामास गृहं विवक्षुः प्रियमुत्तमम् ॥ 9 ॥

प्रविशन्नेव च श्रीमान्राघवो भवनं पितुः ।
ददर्श पितरं दूरात्प्रणिपत्य कृताञ्जलिः ॥ 10 ॥

प्रणमन्तं समुत्थाप्य तं परिष्वज्य भूमिपः ।
प्रदिश्य चास्मै रुचिरमासनं पुनरब्रवीत् ॥ 11 ॥

9. (ப—ரை) दशरथः नृपः- தசரத மஹாராஜன், तं राम- அந்த ஸ்ரீராமனை, समनुप्राप्तं- வந்திருப்பதாக, श्रुत्वा- கேட்டு, उत्तमं- प्रियं- சிறந்த ப்ரியத்தை, विवक्षुः- சொல்ல விரும்பினவராக, गृहं- தன்னுடைய க்ருஹத்தை, प्रवेशयामास- ப்ரவேசிப்பித்தார்.

10. (ப—ரை) श्रीमान्- அழகுள்ளவரான, राघवः- ஸ்ரீராமன், पितुः- பிதாவினுடைய, भवनं- க்ருஹத்தை, प्रविशन् एव च- ப்ரவேசித்துக்கொண்டே, दूरात्- வெகுதூரத்திலிருந்தே, प्रणिपत्य- தண்டனிட்டு, कृताञ्जलिः- (सन्) கைகூப்பிக்கொண்டு, पितरं- பிதாவை, ददर्श- பார்த்தார்.

11. (ப-ரை) भूमिपः— அரசன், प्रणमन्त— நமஸ்காரம் பண்ணுகின்ற, तं— அந்த ராமனை, समुत्थाप्य- எழுப்பி, परिष्वज्य— அணைத்துக்கொண்டு, अस्मै- இந்த ராமன் பொருட்டு, रुचिरं— அழகான, आसनं च- ஆஸனத்தையும், प्रदिश्य— கொடுத்து, पुनः- மறுபடியும், अब्रवीत्- சொன்னார்.

---

9. (பொ-ரை) தசரத மஹாராஜன், அந்த ராமன் வந்திருப்பதாக ஸாரதி சொல்லக்கேட்டு, சிறந்த ப்ரியமான சொல்லைச் சொல்ல விரும்பி, தன்னுடைய க்ருஹத்திற்குள் வரவழைத்தார்.

10. (பொ-ரை) ஸ்ரீமானாகிய ராமனும், பிதாவின் க்ருஹத்தில் நுழைந்துகொண்டே போகும்போதே தூரத்திலிருந்தே ஸேவித்து, கைகூப்பிக்கொண்டே பிதாவைப்பார்த்தார்.

11. (பொ-ரை) மஹாராஜன், நமஸ்காரம் செய்கின்ற அந்த ராமனைஎழுப்பி ஆலிங்கனம் செய்துகொண்டு, அந்த ராமனுக்கும், ஸாரதிக்கும், ஆஸனத்தைக் கொடுத்து, மறுபடியும் சொல்லுகிறார்.

राम वृद्धोऽस्मि दीर्घायुर्भुक्ता भोगा मयेप्सिताः ।
अन्नवद्भिः क्रतुशतैस्तथेष्टं भूरिदक्षिणैः ॥ 12 ॥

जातमिष्टमपत्यं मे त्वमद्यानुपमं भुवि ।
दत्तमिष्टमधीतं च मया पुरुषसत्तम ॥ 13 ॥

अनुभूतानि चेष्टानि मया वीर सुखान्यपि ।
देवर्षिपितृविप्राणामनृणोऽस्मि तथात्मनः ॥ 14 ॥

12. (ப-ரை) हे राम- ஓ ராமனே, (अह- நான்) दीर्घायुः- நீண்ட ஆயுளையுடையவனை, वृद्धः- கிழவனாக, अस्मि- இருக்கிறேன், मया- என்னாலே, ईप्सिताः- ஆசைபபட்ட, भोगाः- ஸுகாநுபவங்கள், भुक्ताः- அநுபவிககப்பட்டன, तथा- அப்படியே, अन्नवद्भिः- யதேஷ்டமான அன்னங்களோடு கூடிய, भूरिदक्षिणैः- அதிக தக்ஷிணைகளுள்ள, क्रतुशतैः- அநேக யாகங்களாலும, इष्टं- தேவதாராதனமும் செய்யபபட்டது.

13. (ப-ரை) हे पुरुषसत्तम- ஹே புருஷோத்தமனே, अद्य- இப்பொழுது, त्वं- நீ, मे- எனக்கு, भुवि- பூலோகத்தில், अनुपमं- நிகரில்லாத, इष्टमपत्यं- இஷ்டமான குழந்தையாக, जातं- பிறந்திருக்கிறாய், मया- என்னாலே, इष्टं- ப்ரியமான வஸ்துவானது, दत्तं- தானம செய்யப்பட்டது, अधीतं च- வேதமும ஓதப்பட்டது.

14. (ப-ரை) हे वीर- ஓ வீரனே, मया- என்னாலே, इष्टानि च- விரும்பப்பட்ட, सुखानि अपि- ஸுகங்களும், अनुभूतानि च- அநுபவிக்கப்பட்டன, देव ऋषि पितृ विप्राणां- தேவர்கள், ரிஷிகள், பித்ருக்கள், ப்ராம்மணர்கள், இவர்களுக்கும், तथा- அப்படியே, आत्मनः च- ஆத்மாவுக்கும், अनृणः- கடன்காரனல்லாதவனாக, अस्मि- இருக்கிறேன்.

---

12. (பொ-ரை) ஹே ராமா, நான் தீர்க்கமான ஆயுளை அடைந்த விருத்தனாகிவிட்டேன். ஆசைப்பட்ட போகங்களையும் அநுபவித்தேன். யதேஷ்டமான அன்னதானத்தோடும, அதிகமான தக்ஷிணைகளோடும் கூடிய அநேக யாகங்களையும் செய்திருக்கிறேன்.

13. (பொ-ரை) ஹே புருஷோத்தமனான ராமனே, இப்பொழுது எனக்கு, நீ உலகத்தில் நிகரில்லாத இஷ்டமான குழந்தையாகப்பிறந்திருக்கிறாய். நானும, அநேகம் பேர்களுக்கு, இஷ்டமான வஸ்துக்களையும் தானம் செய்திருக்கிறேன், வேதங்களையும் ஓதியிருக்கிறேன்.

14. (பொ-ரை) ஓ லோகவீரனே, நான் ஆசைப்பட்ட ஸுகங்களையும் அநுபவித்திருக்கிறேன். யாகங்களைச்செய்து தேவர்களுக்கும், வேதங்களை ஓதி ரிஷிகளுக்கும், புத்திரனைப்பெற்று பித்ரு தேவதைகளுக்கும, நானாவிதமான தானங்களைச்செய்து பிராம்மணர்களுக்கும, வேண்டிய ஸுகங்களை அநுபவித்து என்னுடைய ஆத்மாவுக்கும் கடன்காரனல்லாதவனாக ஆனேன்.

न किंचिन्मम कर्तव्यं तवान्यत्राभिषेचनात् ।
अतो यत्त्वामहं ब्रूयां तन्मे त्वं कर्तुमर्हसि ॥ 15 ॥

अद्य प्रकृतयः सर्वास्त्वामिच्छन्ति नराधिपम् ।
अतस्त्वां युवराजानमभिषेक्ष्यामि पुत्रक ॥ 16 ॥

अपि चाद्याशुभान्राम स्वप्ने पश्यामि दारुणान् ।
सनिर्घाता दिवोल्का च पततीह महास्वना ॥ 17 ॥

15. (ப-ரை) (मम- இப்படிப்பட்ட எனக்கு), तव- உனக்கு, अभिषेचनात्- அபிஷேகம் செய்வதைக்காட்டிலும், अन्यत्र- வேறு, कर्तव्य- செய்யவேண்டிய காரியம், मम- எனக்கு, न किंचित्- ஒன்றுமில்லை, अत:- ஆகையால், अहं- நான், त्वां- உன்னைக் குறித்து, यत्- எந்த காரியத்தை, ब्रूयां- சொல்லுவேனோ, मे- என்னுடைய, तत्- அந்த காரியத்தை, कर्तुं- செய்வதற்கு, अर्हसि- தகுந்தவனாகிறாய்.

16. (ப-ரை) हे पुत्रक- ஓ குழந்தாய், अद्य- இப்பொழுது, सर्वा: प्रकृतय:- எல்லா ஜனங்களும், त्वां- உன்னை, नराधिपम्- அரசனாக, इच्छन्ति- ஆசைப்படுகிறார்கள், अत:- ஆகையால், त्वां- உன்னை, युवराजान- இளவரசனாக, अभिषेक्ष्यामि- அபிஷேகம் செய்யப் போகிறேன்.

17. (ப-ரை) हे राम- ஓ ராமனே, अपिच- பின்னும், अद्य- இப்பொழுது, स्वप्ने- ஸ்வப்பனத்தில், दारुणान्- பயங்கரங்களான, अशुभान्- அநிஷ்ட அடையாளங்களை, पश्यामि- பார்க்கிறேன், दिव:- ஆகாயத்திலிருந்து, सनिर्घाता- அகாலத்து இடி விழுச்சியோடுகூட, महास्वना- பெரிய சப்தமுள்ள, उल्का च- கொள்ளிக்கட்டையும், इह- இவ்விடத்தில், पतति- விழுகின்றது.

15. (பொ-ரை) இப்படிப்பட்ட எனக்கு, உனக்கு பட்டாபிஷேகம் செய்வதைத்தவிர, வேறு செய்யவேண்டிய காரியம் ஒன்றுமில்லை. ஆகையால், நான் உனக்கு எதைச்சொல்லுகிறேனோ அதை நீ செய்யத்தகுந்தவன்.

16. (பொ-ரை) ஓ குழந்தாய், இப்போது எல்லா ஜனங்களும், நீ ராஜாவாக வரவேண்டுமென்று ஆசைப்படுகிறார்கள். ஆகையால் உனக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்யப்போகிறேன்.

17. (பொ-ரை) ஹே ராமனே, நான் ஸ்வப்பனத்தில், பயங்கரமான அநிஷ்டங்களை தெரிவிக்கக்கூடிய அடையாளங்களையும் பார்க்கிறேன். ஆகாயத்திலிருந்து இடியோடு கூடிய அதிக இரைச்சலுள்ள கொள்ளிக்கட்டையும் இங்கே விழுகிறது.

अवष्टब्धं च मे राम नक्षत्रं दारुणैर्ग्रहैः ।
आवेदयन्ति दैवज्ञाः सूर्याङ्गारकराहुभिः ॥ 18 ॥

प्रायेण हि निमित्तानामीदृशानां समुद्भवे ।
राजा हि मृत्युमाप्नोति घोरां वाऽऽपदमृच्छति ॥ 19 ॥

तद्यावदेव मे चेतो न विमुह्यति राघव ।
तावदेवाभिषिञ्चस्व चला हि प्राणिनां मतिः ॥ 20 ॥

---

18. (பதை-ர) हे राम- ஓ ராமனே, मे नक्षत्रं-என்னுடைய ஜென்ம நக்ஷத்திரமானது, दारुणैः- கொடியவர்களான, सूर्य- अङ्गारक- राहुभिः- ஸூரியன், செவ்வாய், ராகு என்கிற ग्रहैः- க்ரஹங்களினால், अवष्टब्धंच- ஆக்ரமிக்கப்பட்டிருக்கிறது, (என்று), दैवज्ञाः- ஜோதிஷிகர்கள், आवेदयन्ति- தெரிவிக்கிறார்கள்.

19. (ப-தை) ईदृशानां- இப்படிப்பட்ட, निमित्तानां- துர் நிமித்தங்களுடைய, समुद्भवे- உத்பத்தியில், प्रायेण- வெகுவாய், राजा- அரசன், मृत्यु- மரணத்தை, आप्नोति- அடைகிறான், अथवा- அல்லது, घोरां- கொடியதான, आपद- ஆபத்தை, ऋच्छति हि- அடைகிறானன்றோ?

20. (ப-தை) हे राघव- ஓ ராகவனே, तत्- ஆகையால், यावदेव- எதற்குள்ளாகவே, मे- என்னுடைய, चेतः- மனதானது, न विमुह्यति- கலையாமலிருக்கிறதோ, तावदेव- அதற்குள்ளாகவே, अभिषिञ्चस्व- பட்டாபிஷேகம் செய்துகொள். हि- ஏனென்றால், प्राणिनां- ப்ராணிகளுடைய, मतिः- புத்தியானது, चला- சஞ்சலமாகும்,

18. (பொ-தை) ஹே ராமா, என்னுடைய ஜன்ம நக்ஷத்திரம், ஸூர்ய, அங்காரக, ராகு என்கிற கொடிய க்ரஹங்களினால் ஆக்ரமிக்கப்பட்டிருக்கிறதென்றும், ஜோதிஷிகர்கள் சொல்லுகிறார்கள்.

19. (பொ-தை) இப்படிப்பட்ட துர்நிமித்தங்கள் உண்டானால், வெகுவாய் அரசன் மரணத்தை அடைவான். அல்லது, கொடியதான ஆபத்தையடைவான் என்றன்றோ உலகத்தில் ப்ரஸித்தி.

20. (பொ-தை) ஹே ரகுகுலத்துக்குதித்தாய், உனக்குப்பட்டாபிஷேகம் செய்ய வேண்டுமென்கிற எண்ணம் எனக்கு மாறாதிருப்பதற்குள்ளாகவே பட்டாபிஷேகம் செய்துகொள். மனிதர்களுடைய புத்தி மாறும் தன்மையுள்ளதன்றோ.

अद्य चन्द्रोऽभ्युपगतः पुष्यात्पूर्वं पुनर्वसू ।
श्वः पुष्ययोगं नियतं वक्ष्यन्ते दैवचिन्तकाः ॥ 21 ॥

ततः पुष्येऽभिषिञ्चस्व मनस्त्वरयतीव माम् ।
श्वस्त्वाहमभिषेक्ष्यामि यौवराज्ये परंतप ॥ 22 ॥

तस्मात्त्वयाद्यप्रभृति निशेयं नियतात्मना ।
सह वध्वोपवस्तव्या दर्भप्रस्तरशायिना ॥ 23 ॥

21. (ப-ரை) अद्य- இன்று, चन्द्रः- சந்திரன், पुष्यात्पूर्वं- புஷ்யத்திற்கு முன்னால், पुनर्वसू- புனர்வஸு நக்ஷத்திரங்களை, अभ्युपगतः- அடைந்திருக்கிறான், श्वः- நாளை, पुष्ययोगं- (சந்திரன்) புஷ்ய நக்ஷத்திரத்தில் சேருவதை, नियतं- பட்டாபிஷேகத்திற்கு ப்ரசஸ்தமென்று, दैवचिन्तकाः- ஜோதிஷிகர்கள், वक्ष्यन्ते- சொல்லுகிறார்கள்.

22. (ப-ரை) ततः ஆகையாலே, हे परंतप- சத்ருக்களை அடக்கும் தன்மையுள்ளவனே, पुष्ये- புஷ்ய நக்ஷத்திரத்தில், अभिषिञ्चस्व- பட்டாபிஷேகம செய்துகொள், मनः- என்னுடைய மனது, माम्- என்னை, त्वरयति इव- த்வரைப்படுத்துகிறதுபோல, अहं- நான், त्वा- உன்னை, श्वः- நாளை, यौवराज्ये- இளவரசில், अभिषेक्ष्यामि- அபிஷேகம் செய்யப் போகிறேன்.

23. (ப-ரை) तस्मात्- ஆகையினாலே, अद्यप्रभृति- இப்பொழுது முதல், इयं निशा- இந்த இரவானது, वध्वा सह- பத்னியோடுகூட, दर्भप्रस्तरशायिना- தர்பாஸனத்தில் படுத்துகொண்டும, नियतात्मना- அடக்கப்பட்ட மனதையுடையவனுமான, त्वया- உன்னால், उपवस्तव्या- உபவாஸம செய்யத்தகுந்தது.

21. (பொ-ரை) இன்றயதினம், சந்திரன் புஷ்யத்திற்கு முந்தியே புனர்வஸு நக்ஷத்திரத்திலிருக்கிறார். நாளையதினம், புஷ்யத்தோடு சேருகிறபடியால் அது பட்டாபிஷேகத்திற்கு, மிகவும் ப்ரசஸ்தமென்று ஜோதிஷிகர்கள் சொல்லுகிறார்கள்.

22. (பொ-ரை) சத்ருக்களை அடக்கும் ஸாமர்த்யமுள்ளவனே, நாளையதினம் புஷ்ய நக்ஷத்திரத்தில் பட்டாபிஷேகம் செய்துகொள்ளவேண்டும், என்னுடைய மனது மிகவும த்வரையுள்ளதாயிருக்கிறது. நாளையதினம் நான் உனக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்யப்போகிறேன்.

23. (பொ-ரை) ஆகையாலே, இதுமுதல் நீயும், ஸீதையும், ஜிதேந்த்ரியர்களாயும், தர்பாஸனத்தில் படுத்துக்கொண்டு, இன்றிரவு உபவாஸம் இருக்கவேண்டும்.

सुहृदश्चाप्रमत्तास्त्वां रक्षन्त्वद्य समन्ततः ।
भवन्ति बहुविघ्नानि कार्याण्येवंविधानि हि ॥ 24 ॥

विप्रोषितश्च भरतो यावदेव पुरादितः ।
तावदेवाभिषेकस्ते प्राप्तकालो मतो मम ॥ 25 ॥

कामं खलु सतां वृत्ते भ्राता ते भरतः स्थितः ।
ज्येष्ठानुवर्ती धर्मात्मा सानुक्रोशो जितेन्द्रियः ॥ 26 ॥

---

24. (ப-ரை) सुहृद: च- உன்னுடைய தோழர்களும், अप्रमत्ता:- நிரம்பவும் ஜாகரூகர்களாய்க்கொண்டு, समन्ततः- நாற்புறத்திலும், अद्य- இப்பொழுது, रक्षन्तु- காக்கவேண்டும், एवं विधानि- இப்படிப்பட்ட, कार्याणि- கார்யங்கள், बहुविघ्नानि- அநேகம் இடையூறுகள் உள்ளவைகளாக, भवन्ति हि- ஆகின்றனவன்றோ!

25. (ப-ரை) भरत: च- பரதனும், इत: पुरात्- இந்த நகரத்திலிருந்து, यावदेव- எவ்வளவு காலம் வரையில், विप्रोषित:- தேசாந்திரம் போயிருக்கிறானோ, तावदेव- அவ்வளவு காலத்திற்குள், ते- உனக்கு, अभिषेक:- பட்டாபிஷேகமானது, प्राप्तकाल:- தகுந்தது(என்று), मम- எனக்கு, मत:- எண்ணமுண்டாயிருக்கிறது.

26. (ப-ரை) ते भ्राता- உன்னுடைய தம்பியான, भरत:- பரதன், सतां- பெரியோர்களுடைய, वृत्ते- நடக்கையில், स्थित: कामं खलु- இருக்கவே இருக்கிறான், ज्येष्ठानुवर्ती- தமயனை அநுஸரித்து நடக்கிறவன், धर्मात्मा- தர்மத்தில் புத்தியுள்ளவன், सानुक्रोश:- கருணையுள்ளவன், जितेन्द्रिय:- இந்திரியங்களை ஜயித்தவன்.

24. (பொ-ரை) பின்னும், இப்படிப்பட்ட சுபகாரியங்களுக்கு அநேகம விக்னங்கள் உண்டாகக்கூடியன. ஆகையால் உன்னுடைய ஸ்நேஹிதர்களும் ஜாக்ரதையாக உன்னை இப்பொழுது ரக்ஷித்துக்கொண்டிருக்கவேண்டும்.

25. (பொ-ரை) பரதனும், நம் நகரத்திலிருந்து வெளியில் போயிருக்கும் ஸமயமே உனக்குப் பட்டாபிஷேகம் செய்வதற்குத்தகுந்த காலமென்றும், நான் அபிப்ராயப்படுகிறேன்.

26. (பொ-ரை) உன்னுடைய ப்ராதாவான பரதன், பெரியோர்களுடைய நடக்கையை கைவிடாதவன். ஜ்யேஷ்டப்ராதாவை அநுஸரித்தும் நடக்கிறவன். தர்மசிந்தையுள்ளவன். கருணையுள்ளவன். இந்திரியங்களை ஜெயித்தவன்.

किंतु चित्तं मनुष्याणामनित्यमिति मे मतिः ।
सतां तु धर्मनित्यानां कृतशोभि च राघव ॥ 27 ॥

इत्युक्तः सोऽभ्यनुज्ञातः श्वोभाविन्यभिषेचने ।
व्रजेति रामः पितरमभिवाद्याभ्ययाद्गृहम् ॥ 28 ॥

प्रविश्य चात्मनो वेश्म राज्ञोद्दिष्टेऽभिषेचने ।
तत्क्षणेन च निर्गम्य मातुरन्तः पुरं ययौ ॥ 29 ॥

27. (ப-ரை) हे राघव- ரகு குலத்தில் பிறந்த குழந்தாய், किं तु- ஆகிலும், मनुष्याणां- மனிதர்களுடைய, चित्तं- மனது, अनित्यं- நிலையுள்ளதல்ல, इति- என்று, मे मतिः- என்னுடைய தீர்மானம், धर्मनित्यानां- தர்மத்திலே நிலையுள்ளவர்களான, सतां- மஹான்களுடைய, चित्तं तु- மனமோவென்றால், कृतशोभि- நடந்த கார்யத்தில் ஸந்தோஷப் படக்கூடியது.

28. (ப-ரை) श्वः भाविनि- நாளை நடக்கப்போகின்ற अभिषेचने- பட்டாபிஷேகத்தில், इति- இவ்விதமாக, उक्तः- சொல்லப்பட்டும், व्रजेति- போ என்றும், अभ्यनुज्ञातः- அநுமதி செய்யப்பட்ட, सः रामः- அந்த ஸ்ரீராமன், पितरं- பிதாவை, अभिवाद्य- ஸேவித்துவிட்டு, गृहं- (தம்முடைய) க்ருஹத்தை, (குறித்து), अभ्ययात्- சென்றார்.

29. (ப-ரை) आत्मनः- தன்னுடைய, वेश्म- க்ருஹத்தை, प्रविश्यच- ப்ரவேசித்து, तत्क्षणेनच- அந்த க்ஷணமே, निर्गम्य- வெளிப்புறப்பட்டு, राज्ञा- அரசனால், उद्दिष्टे- உத்தேசிக்கப்பட்டிருக்கிற, अभिषेचने- பட்டாபிஷேக விஷயத்தில், (निमित्त सप्तमि- அதாவது பட்டாபிஷேக வ்ருத்தாந்தத்தை சொல்லுவதற்காக என்றபடி), मातुः- தாயாருடைய, अन्तः पुरं- அந்தப்புரத்தை, ययौ- அடைந்தார்.

27. (பொ-ரை) ஆகிலும், பொதுவாக மனிதர்களுடைய சித்தமானது, சலனமுள்ளதுதான் என்று என்னுடைய எண்ணம். ஆனால், தர்மத்திலே நிலையுள்ள மஹான்களுடைய மனது மாத்திரம், நடந்துபோன கார்யத்தைப்பற்றி த்ருப்தியடையக்கூடியது.

28. (பொ-ரை) நாளையதினம் நடக்கப்போகின்ற பட்டாபிஷேக விஷயமாக ஸ்ரீராமனிடம் இவ்விதம் அரசன் சொல்லி, க்ருஹத்திற்குப் போய்விட்டு வா என்று அநுமதி கொடுத்தார். ராமனும் அநுமதி பெற்றுக்கொண்டு, பிதாவை ஸேவித்துவிட்டு, தம்முடைய க்ருஹத்திற்குச் சென்றார்.

29. (பொ-ரை) பிறகு ராமன், தன்னுடைய க்ருஹத்திற்குப்போய், உடனே திரும்பி ராஜா ஆக்ஞாபித்த பட்டாபிஷேகப்ரஸ்தாபத்தை தெரிவிப்பதற்காகத் தன் தாயான கௌஸல்யா தேவியின் க்ருஹத்திற்குப்போனார்.

तत्र तां प्रवणामेव मातरं क्षौमवासिनीम् ।
वाग्यतां देवतागारे ददर्शायाचतीं श्रियम् ॥ 30 ॥

प्रागेव चागता तत्र सुमित्रा लक्ष्मणस्तदा ।
सीता चानायिता श्रुत्वा प्रियं रामाभिषेचनम ॥ 31 ॥

तस्मिन्काले हि कौसल्या तस्थावामीलितेक्षणा ।
सुमित्रयान्वास्यमाना सीतया लक्ष्मणेन च ॥ 32 ॥

श्रुत्वा पुष्येण पुत्रस्य यौवराज्याभिषेचनम् ।
प्राणायामेन पुरुषं ध्यायमाना जनार्दनम् ॥ 33 ॥

30. (ப-ரை) तत्र- அந்தப்புரத்தில், प्रवणां एव- த்யானத்திலேயே நிலையுள்ளவளும், क्षौमवासिनीम्- வெண்பட்டு வஸ்திரத்தைத் தரித்துக்கொண்டும், वाग्यतां- மௌனமுள்ளவளும். देवतागारे- தேவாலயத்தில், श्रियम्- ஸ்ரீராமனுக்கு ராஜ்ய லக்ஷ்மியை, आयाचतीं- ப்ரார்த்தித்துக்கொண்டிருக்கிற, तां मातरं- அந்த தாயாரை, ददर्श- பார்த்தார்.

31. (ப-ரை) तदा- அப்பொழுது, प्रियं- ப்ரியமான, रामाभिषेचनम- ஸ்ரீராமனுக்குப்பட்டாபிஷேகம் செய்வதை, श्रुत्वा- கேட்டு, तत्र- அங்கு, सुमित्रा- ஸுமித்ரா தேவியானவள், प्रागेव- (ஸ்ரீராமன் வருவதற்கு) முன்னமேயே, आगता- வந்திருந்தாள், लक्ष्मणः च- லக்ஷ்மணனும், आगतः- வந்திருந்தார், सीता च- ஸீதையும், आनायिता- வரவழைக்கப்பட்டிருந்தாள்.

32-33. (ப-ரை) तस्मिन्काले- அந்த காலத்தில், कौसल्या-கௌஸல்யாதேவி, पुष्येण- புஷ்ய நக்ஷத்திரத்தினால், पुत्रस्य- புத்ரனுடைய, यौवराज्याभिषेचनम्- யௌவராஜ்ய பட்டாபிஷேகத்தை, श्रुत्वा- கேட்டு, प्राणायामेन- ப்ராணாயாமத்தினால், पुरुषं- புருஷ சப்தத்தினால் சொல்லப்பட்ட, जनार्दनम्- ஸ்ரீமந்நாராயணனை, ध्यायमाना- த்யானம் பண்ணிக்கொண்டு, आमीलितेक्षणा- கொஞ்சம் மூடிய கண்ணுள்ளவளாய், सुमित्रया- ஸுமித்ரா தேவியாலும், सीतया- ஸீதையினாலும், लक्ष्मणेन च- லக்ஷ்மணனாலும், अन्वास्यमाना- உபாஸிக்கப்பட்டவளாய், तस्थौ- இருந்தாள்.

---

30 (பொ-ரை) அவ்விடத்தில், ஸ்ரீராமனுக்கு பட்டாபிஷேகம் நிர்விக்னமாய் நடக்கவேணுமென்று தேவாலயத்தில் ப்ரார்த்தித்து வெண்பட்டை தரித்து மௌனத்துடன் த்யானம் செய்துகொண்டிருக்கிற அந்த மாதாவைப்பார்த்தார்.

31. (பொ-ரை) அப்பொழுது ஸ்ரீராம பட்டாபிஷேகம் நடக்கப்போகிற ப்ரியமான வார்த்தையைக்கேட்டு, ஸ்ரீராமன் போவதற்கு முன்னமேயே, ஸுமித்ராதேவியும், லக்ஷ்மணனும், ஸீதையும் கௌஸல்யயின் க்ருஹத்திற்கு வந்திருந்தார்கள்.

32-33. (பொ-ரை) அந்த ஸமயத்தில், கௌஸல்யா தேவியானவள், புஷ்ய நக்ஷத்திரத்தில், ஸ்ரீராமனுக்கு யௌவராஜ்ய பட்டாபிஷேகம் என்று கேட்டு, ப்ராணாயாமம் செய்துகொண்டு, புருஷ சப்த வாச்யனை, ஆச்ருத விரோதிகளைப்

तथा सन्नियमामेव सोऽभिगम्याभिवाद्य च।
उवाच वचनं रामो हर्षयंस्तामिदं तदा ॥ 34 ॥

अम्ब पित्रा नियुक्तोऽस्मि प्रजापालनकर्मणि।
भविताश्वोऽभिषेको मे यथा मे शासनं पितुः ॥ 35 ॥

34. (ப-ரை) सः रामः- அந்த ஸ்ரீராமன், तथा- அப்படி, सन्नियमामेव- நல்ல நியமங்களோடு கூடியிருக்கிற, (மாதாவை), अभिगम्य- எதிரில் சென்று, अभिवाद्यच- அபிவாதனமும் செய்து, तदा- அப்பொழுது, तां- அந்த மாதாவை, हर्षयन् (सन्)-ஸந்தோஷப்படுத்திக்கொண்டு, इदं वचनं- இந்த வார்த்தையை, उवाच- சொன்னார்.

35. (ப-ரை) अम्ब- அம்மா! पित्रा: பிதாவினால், प्रजापालनकर्मणि- ஜனங்களை ரக்ஷிக்கிற காரியத்தில், नियुक्तः अस्मि- கட்டளை இடப்பட்டவனாக இருக்கிறேன், मे पितुः- என் பிதாவினுடைய, शासनं (यथा)- கட்டளை எப்படியோ, (तथा- அப்படியே), मे- எனக்கு. अभिषेकः- பட்டாபிஷேகமானது, श्वः- நாளையதினம், भविता- ஆகப் போகின்றது.

போக்கவல்ல, ஸ்ரீநாராயணனை த்யானம் பண்ணிக்கொண்டும், கொஞ்சம் கண்களை மூடிக்கொண்டும், ஸுமித்ராதேவி, லக்ஷ்மணன், ஸீதை இம்மூவர்களுடனும், கூடியிருந்தாள்.

34. (பொ-ரை) அப்பொழுது ஸ்ரீராமன், முன் சொல்லப்பட்ட, நியமத்தோடு கூடியிருக்கிற மாதாவின் எதிர்சென்று, அபிவாதனமும் செய்து, அவளுக்கு ஸந்தோஷமுண்டாகும்படியாக இவ்விதம் வார்த்தை சொன்னார்.

35. (பொ-ரை) அம்மா, ப்ரஜைகளை பரிபாலனம் பண்ணுகைக்காக, பிதா எனக்கு ஆக்ஞாபனம் பண்ணியிருக்கிறார். அவருடைய கட்டளைப்படியே, நாளைய தினம் எனக்கு பட்டாபிஷேகம் நடக்கப்போகிறது.

सीतयाप्युपवस्तव्या रजनीयं मया सह ।
एवमृत्विगुपाध्यायैः सह मामुक्तवान्पिता ॥ 36 ॥

यानि यान्यत्र योग्यानि श्वोभाविन्यभिषेचने ।
तानि मे मङ्गलान्यद्य वैदेह्याश्चैव कारय ॥ 37 ॥

एतच्छ्रुत्वा तु कौसल्या चिरकालाभिकाङ्क्षितम् ।
हर्षबाष्पकलं वाक्यमिदं राममभाषत ॥ 38 ॥

---

36. (ப-ரை) इयं रजनी- இன்று இரவானது, मया सह- என்னோடுகூட, सीतया अपि- ஸீதையினாலும், उपवस्तव्या- உபவாஸமிருக்கத்தகுந்தது, एवं- இவ்விதம், पिता- பிதாவானவர், ऋत्विक् उपाध्यायैः सह- ருத்விக்குக்களோடும், உபாத்யாயரோடும்கூட, मां- என்னைக்குறித்து, उक्तवान्- சொன்னார்.

37. (ப-ரை) श्वः भाविनि- நாளைக்கு வரப்போகின்ற, अत्र अभिषेचने- இந்த பட்டாபிஷேகத்தில், यानि यानि- எந்தெந்த (மங்கள கார்யங்கள்), योग्यानि- செய்யத்தகுந்தனவோ, तानितानि- அந்தந்த, मङ्गलानि- மங்கள கார்யங்களை, अद्य एव- இப்பொழுதே, मे- எனக்கும், वैदेह्याः च- ஸீதைக்கும், कारय- செய்விக்கவேண்டும்.

38. (ப-ரை) कौसल्यातु- கௌஸல்யா தேவியானவள், चिरकालाभिकाङ्क्षितम्- வெகு காலமாக ஆசைப்பட்ட, एतत्- இந்த பட்டாபிஷேகத்தை, श्रुत्वा- கேட்டு, रामं- ராமனைக்குறித்து, हर्षभाष्पकलं- ஸந்தோஷத்தினாலே உண்டான, பாஷ்பத்தினால் ஸ்பஷ்டமல்லாமலும், இனியதுமான, इदं वाक्यं- இந்த வார்த்தையை अभाषत- சொன்னாள்.

36. (பொ-ரை) இந்த ராத்ரியில், ஸீதையும் நானும், உபவாஸமிருக்க வேணுமென்று ருத்விக்குக்களோடும், உபாத்யாயரோடும்கூட, பிதா எனக்குச் சொல்லியிருக்கிறார்.

37. (பொ-ரை) நாளையதினம் நடக்கப்போகின்ற என்னுடைய பட்டாபிஷேகத்திற்கு, என்னென்ன மங்கள கார்யங்கள் செய்யவேண்டுமோ அவைகளையெல்லாம், இன்றையதினமே எனக்கும் ஸீதைக்கும் செய்விக்கவேண்டும்.

38. (பொ-ரை) கௌஸல்யா தேவியானவள், வெகு நாளாக தான் கோரியிருக்கிற இந்த பட்டாபிஷேக வ்ருத்தாந்தத்தைக்கேட்டு, ஆனந்த பாஷ்பத்தினால் இனிதாயும், ஸ்பஷ்டமில்லாமலுமிருக்கிற இந்த வார்த்தையை, ராமனைக்குறித்துச் சொன்னாள்.

वत्स राम चिरं जीव हतास्ते परिपन्थिनः ।
ज्ञातीन्मे त्वं श्रिया युक्तः सुमित्रायाश्च नन्दय ॥ 39 ॥

कल्याणे बत नक्षत्रे मयि जातोऽसि पुत्रक ।
येन त्वया दशरथो गुणैराराधितः पिता ॥ 40 ॥

अमोघं बत मे क्षान्तं पुरुषे पुष्करेक्षणे ।
येयमिक्ष्वाकुराज्यश्रीः पुत्र त्वां संश्रयिष्यति ॥ 41 ॥

39. (ப-ரை) वत्स- குழந்தாய், राम- ராமனே, त्वं- நீ, चिर- வெகுகாலம்வரை, जीव- ஜீவித்திருக்கவேண்டும், ते- உன்னுடைய, परिपन्थिन:- விரோதிகள், हता: (भवन्तु) நாசத்தையடையட்டும், त्व- நீ, श्रिया- ராஜ்ய ஸம்பத்தோடு, युक्त:- கூடிக்கொண்டு, मे- என்னுடையவும், सुमित्राया: च- ஸுமித்ரையுடையவும், ज्ञातीन्- பந்துக்களை, नन्दय- ஸந்தோஷப்படுத்தவேண்டும்.

40. (ப-ரை) हे पुत्रक- ஓ குழந்தாய், बत- (எனக்கு மிகவும்) ஸந்தோஷம், कल्याणे- மங்களகரமான, नक्षत्रे- நக்ஷத்திரத்தில், मयि- என்னிடத்தில், जात: असि- பிறந்திருக்கிறாய், येन- யாதொரு காரணத்தினால். पिता- பிதாவான, दशरथ:- தசரத மஹாராஜன், त्वया- உன்னாலே, गुणै: (உன்னுடைய) குணங்களினால், आराधित:- ஸந்தோஷப் படுத்தப்பட்டாரோ.

41. (ப-ரை) हे पुत्र- ஓ குழந்தாய், पुष्करेक्षणे- செந்தாமரைக்கண்ணனான, पुरुषे- பரமபுருஷன் விஷயத்தில், मे- என்னுடைய, क्षान्तं- வ்ருதாதிச்ரமத்தின் பொருமையானது, अमोघ- ஸபலமாக ஆயிற்று, या- யாதொரு, इयं- இந்த, इक्ष्वाकुराज्यश्री:- இக்ஷ்வாகு ராஜ்ய ஸம்பத்தானது, (இருக்கிறதோ), (सा- அது), त्वां- உன்னை, सं श्रयिष्यति- அடையப்போகிறது.

39. (பொ-ரை) குழந்தாய் ராமனே, நீ தீர்க்காயுஸ்ஸாய் இருக்கவேணும். உன்னுடைய சத்ருக்களும் ஒழிந்துவிடவேண்டும் நீ ராஜ்ய ஸம்பத்துடன் கூடியிருந்து, என்னுடையவும் ஸுமித்ரையுடையவும், பந்துக்களுக்கு, ஸந்தோஷத்தை உண்டாக்கவேண்டும்.

40. (பொ-ரை) ஓ குழந்தாய், எனக்கு ஒரு பெரிய ஸந்தோஷம். மிகவும் சுபமான நக்ஷத்திரத்திலே அன்றோ என்னிடத்தில் பிறந்திருக்கிறாய். அதனாலன்றோ பிதாவான தசரதமஹாராஜனும், உன்னுடையகுணங்களினால், ஸந்தோஷப் பட்டுக்கொண்டிருக்கிறார்.

41. (பொ-ரை) ஓ குழந்தாய் செந்தாமரைக் கண்ணனான பரம புருஷனைக் குறித்து நான் செய்த வ்ரதோபவாஸம், முதலானதுகள், ஸபலமாக ஆயிற்று. ஏனென்றால் இந்த இக்ஷ்வாகு ராஜ்ய லக்ஷ்மியானது, உன்னை அடையப்போகிறது.

इत्येवमुक्तो मात्रेदं रामो भ्रातरमब्रवीत् ।
प्राञ्जलिं प्रह्वमासीनमभिवीक्ष्य स्मयन्निव ॥ 42 ॥

लक्ष्मणेमां मया सार्धं प्रशाधि त्वं वसुंधराम् ।
द्वितीयं मेऽन्तरात्मानं त्वामियं श्रीरुपस्थिता ॥ 43 ॥

सौमित्रे भुङ्क्ष्व भोगांस्त्वमिष्टान्राज्यफलानि च ।
जीवितं च हि राज्यं च त्वदर्थमभिकामये ॥ 44 ॥

42. (ப-ரை) इति- என்று, एवं- இவ்விதமாக, मात्रा- மாதாவினால், उक्तः- சொல்லப்பட்ட, रामः- ஸ்ரீராமன், प्राञ्जलिं- கைகூப்பியும், प्रह्वं- வணங்கியும், आसीनं- இருக்கின்ற, भ्रातरं- ப்ராதாவான லக்ஷ்மணனை, अभिवीक्ष्य- பார்த்து, स्मयन्निव- கொஞ்சம் சிரித்துக்கொண்டு, इदं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

43. (ப-ரை) लक्ष्मणा- ஓ லக்ஷ்மணனே! त्वं- நீ, मया सार्धं- என்னோடுகூட, इमां- இந்த, वसुंधराम्- பூமியை, प्रशाधि- ஆளக்கடவாய், मे- என்னுடைய, द्वितीयं- இரண்டாவதான, अन्तरात्मानं- ப்ராணனாயிருக்கிற, त्वां- உன்னை, इयं- இந்த, श्रीः- ராஜ்யலக்ஷ்மியானது, उपस्थिता- அடைந்திருக்கிறது.

44. (ப-ரை) सौमित्रे- ஓ ஸுமித்ரா தேவியின் புத்ரனே, त्वं- நீ, इष्टान्- ஆசைப்பட்ட, भोगान्- போக்ய வஸ்துக்களையும், राज्यफलानि च- ராஜ்யத்தின் ப்ரயோஜனத்தையும், भुङ्क्ष्व- அநுபவிக்கக்கடவாய், हि- ஏனென்றால், (अहं- நான்), जीवितं च- உயிரையும், राज्यं च- ராஜ்யத்தையும், त्वदर्थं- உனக்காக, अभिकामये- விரும்புகிறேன்.

42. (பொ-ரை) இவ்விதம், மாதாவினுடைய வார்த்தையைக் கேட்டு, தன்பக்கத்தில் கைகூப்பி வணங்கி, உட்கார்ந்துகொண்டிருக்கிற, ப்ராதாவான லக்ஷ்மணனைப்பார்த்து, மந்தஹாஸத்துடன் இவ்விதம் சொல்லுகிறார்.

43. (பொ-ரை) லக்ஷ்மணனே! நீ என்னுடன் இந்த பூமியை ஆளவேணும். எனக்கு இரண்டாவது ப்ராணனாயிருக்கிற உன்னை இந்த ராஜ்ய லக்ஷ்மி அடைந்திருக்கிறது.

44. (பொ-ரை) லக்ஷ்மணா, நீ இஷ்டமான போகங்களையும், ராஜ்ய பலமான உத்தம வஸ்த்ரம், ரத்னம், ஆபரணம், முதலான வஸ்துக்களையும், ராஜ்யத்தையும், உனக்காகவென்றே நான் வேண்டுகிறேன்.

इत्युक्त्वा लक्ष्मणं रामो मातरावभिवाद्य च ।
अभ्यनुज्ञाप्य सीतां च - जगाम स्वं निवेशनम् ॥ 45 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे

चतुर्थः सर्गः ॥ 4 ॥

---

45. (ப-ரை) रामः- ஸ்ரீராமன், इति- இவ்விதம், लक्ष्मणं- லக்ஷ்மணனை, (குறித்து), उक्त्वा- சொல்லிவிட்டு, मातरौ- அன்னைமார்களான கௌஸல்யா, ஸுமித்ரா தேவிகளையும், अभिवाद्य च- ஸேவித்துவிட்டும், सीतां च- ஸீதையையும், अनुज्ञाप्य- அநுமதியை அடைவித்து, स्वं निवेशनम्- தன்னுடைய க்ருஹத்தைக் (குறித்து), जगाम- போனார்.

45. (பொ-ரை) இவ்வண்ணம் ஸ்ரீராமன், லக்ஷ்மணனைப்பார்த்துச்சொல்லி விட்டு, தாய்களான கௌஸல்யா தேவியையும், ஸுமித்ரா தேவியையும் ஸேவித்து, தானும், ஸீதாதேவியுடன் அவர்களிடம் அநுமதி பெற்றுக்கொண்டு, தன்னுடைய திருமாளிகை சென்றார்.



पञ्चमः सर्गः ॥ 5 ॥

संदिश्य रामं नृपतिः श्वोभाविन्यभिषेचने ।
पुरोहितं समाहूय वसिष्ठमिदमब्रवीत् ॥ 1

1. (ப-ரை) नृपतिः- அரசன், श्वः- நாளையதினம், भाविनि- ஆகப்போகின்ற, अभिषेचने- பட்டாபிஷேக விஷயத்தில், राम- ராமனை, संदिश्य- கட்டளையிட்டு, पुरोहित- புரோஹிதரான, वसिष्ठ- வஸிஷ்ட மஹரிஷியை, समाहूय- அழைத்து, इदं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

---

1. (பொ-ரை) தசரத மஹாராஜன், நாளையதினம் வரப்போகிற பட்டாபிஷேகத்திற்குரிய, வ்ரத உபவாஸம் முதலியவைகளை ராமனுக்கு தெரிவித்து புரோஹிதரான வஸிஷ்டரை அழைத்து, இந்த வார்த்தை சொன்னார்.

गच्छोपवासं काकुत्स्थं कारयाद्य तपोधन ।
श्रीयशोराज्यलाभाय वध्वा सह यतव्रतम् ॥ 2 ॥

तथेति च स राजानमुक्त्वा वेदविदां वरः ।
स्वयं वसिष्ठो भगवान्ययौ रामनिवेशनम् ॥ 3 ॥

उपवासयितुं रामं मन्त्रवन्मन्त्रकोविदः ।
ब्राह्मं रथवरं युक्तमास्थाय सुदृढव्रतः ॥ 4 ॥

2. (ப-ரை) हे तपोधन– தபஸ்ஸை தனமாக உடையவரே, गच्छ- (ராமன் க்ருஹத்திற்கு நீர்) போம், श्रीयशोराज्यलाभाय- ஸம்பத்து, கீர்த்தி, ராஜ்யம் இவைகள் கிடைப்பதற்காக, यतव्रतम्- நியதமான வ்ரதமுள்ள, काकुत्स्थं– (ககுஸ்த வம்சத்தில் பிறந்த) ராமனை, वध्वा सह– பத்னியுடன்கூட, अद्य- இப்பொழுது, उपवासं- உபவாஸத்தை, कारय- செய்விக்கவேண்டும்.

3–4. (ப-ரை) वेदविदां- வேதம் தெரிந்தவர்களுக்குள், वरः- ச்ரேஷ்டராயும், भगवान्- ஞானாதி குணமுள்ளவராயும், सुदृढव्रतः- ரொம்பவும் த்ருடமான, வ்ரதமுள்ளவராயும், मन्त्रकोविदः- மந்திரங்களை நன்றாய் அறிந்தவருமான, (सः) वसिष्ठः– அந்த வஸிஷ்ட மகரிஷி, तथेति- அப்படியே ஆகட்டுமென்று, राजानं- அரசனை (ப்பார்த்து), उक्त्वा- சொல்லிவிட்டு, स्वयं– தானாகவே, मन्त्रवत्– மந்திரத்துடன், रामं- ராமனை, उपवासयितुं- உபவாஸம் செய்விப்பதற்காக, ब्राह्मं- பிராமமணர்கள் ஏரத்தகுந்த, युक्तं- குதிரைகள் பூட்டிய, रथवरं- ச்ரேஷ்டமான ரதத்தை, आस्थाय- ஏறி, रामनिवेशनम्- ஸ்ரீராமனுடைய க்ருஹத்தைக்குறித்து, ययौ- சென்றார்.

---

2. (பொ-ரை) ஹே மஹரிஷியே, ராமன் க்ருஹத்திற்குச்சென்று ஐச்வர்யம், புகழ், ராஜ்யம் இவைகள் ஸித்திப்பதற்காக, வ்ரதம் செய்து கொண்டிருக்கிற ராமனுக்கு ஸீதையோடு கூட இன்று உபவாஸத்தை செய்விக்கவேண்டும்.

3–4. (பொ-ரை) வேதம் தெரிந்தவர்களில் சிறந்தவரும், மந்திரங்களை அறிந்தவரும், மிகவும் த்ருடமான வ்ரதங்களைச் செய்பவரும், உலகங்களின் ச்ருஷ்டி, ஸ்திதி முதலியவைகளை அறிந்தவருமான, வஸிஷ்டமஹரிஷி, அரசனைப்பார்த்து அப்படியே ஆகட்டுமென்று சொல்லிவிட்டு, மந்திர புரஸ்ஸரமாய், ஸ்ரீராமனுக்கு உபவாஸம் செய்விப்பதற்காக ப்ராம்மணர்கள் ஏரத்தகுந்த, குதிரை பூட்டி சித்தமான ச்ரேஷ்டமான, தேரின்மேல் ஏறிக்கொண்டு, ஸ்ரீராமன் க்ருஹத்திற்குச் சென்றார்.

स रामभवनं प्राप्य पाण्डुराभ्रघनप्रभम् ।
तिस्रः कक्ष्या रथेनैव विवेश मुनिसत्तमः ॥ 5 ॥

तमागतमृषिं रामस्त्वरन्निव ससंभ्रमः ।
मानयिष्यन्स मानार्हं निश्चक्राम निवेशनात् ॥ 6 ॥

अभ्येत्य त्वरमाणश्च रथाभ्याशं मनीषिणः ।
ततोऽवतारयामास परिगृह्य रथात्स्वयम् ॥ 7 ॥

5. (ப-ரை) सः मुनिसत्तमः- அந்த முனிச்ரேஷ்டர், पाण्डुराभ्रघनप्रभम्- வெள்ளை மேகம் போல், அதிகமான காந்தியுள்ள, रामभवनं- ஸ்ரீராமன் க்ருஹத்தை, प्राप्य- அடைந்து, तिस्रः- மூன்று, कक्ष्याः- கட்டுகளை, रथेनैव- தேரிலேயே, विवेश- ப்ரவேசித்தார்,

6. (ப-ரை) सः रामः- அந்த ஸ்ரீராமன், मानार्हं- வெகுமதிக்கத்தகுந்தவராயும், आगतं- (தம் க்ருஹத்திற்கு) வந்திருக்கிற, तं ऋषिं- அந்த மஹரிஷியை, मानयिष्यन्- பூஜிப்பதற்காக, ससंभ्रमः- பரபரப்புடையவராய், त्वरन् इव- த்வரையுடையவராக, निवेशनात्- க்ருஹத்திலிருந்து, निश्चक्राम- வெளியில் வந்தார்.

7. (ப-ரை) ततः- பிறகு, त्वरमाणश्च- த்வரையுள்ளவராக, मनीषिणः- சிறந்த புத்தியுடையவரான, (அந்த வஸிஷ்டருடைய) रथाभ्याशं- தேரின் ஸமீபத்தை, अभ्येत्य- அடைந்து, स्वयम्- தானாகவே, परीगृह्य- (வஸிஷ்டரை) பிடித்துக்கொண்டு, रथात्- தேரிலிருந்து, अवतारयामास- கீழே இறக்கினார்.

5. (பொ-ரை) அந்த முனிச்ரேஷ்டர், சரத்கால மேகம்போல் வெளுப்பான காந்தியுடைய, ஸ்ரீராமன் க்ருஹத்தை அடைந்து, மூன்று கட்டுகளையும், தேரிலேயே சென்றார்.

6. (பொ-ரை) ஸ்ரீராமன், மரியாதை செய்யத்தகுந்தவரான, தம் க்ருஹத்திற்கு வந்திருக்கிற அந்த மஹரிஷியை பூஜிப்பதற்காக, பரபரப்புடன், த்வரையுடனும், க்ருஹத்திலிருந்து வெளிவந்தார்.

7. ((பொ-ரை) பிறகு ஸ்ரீராமன், மஹாபுத்திமானாகிய, வஸிஷ்ட மஹரிஷியினுடைய, தேரின் ஸமீபம் வந்து பரபரப்புடன் தானே அவரைப்பிடித்துக் கொண்டு தேரிலிருந்து இறக்கினார்.

स चैनं प्रश्रितं दृष्ट्वा संभाष्याभिप्रसाद्य च।
प्रियार्हं हर्षयन्राममित्युवाच पुरोहितः ॥ 8 ॥

प्रसन्नस्ते पिता राम यौवराज्यमवाप्स्यसि।
उपवासं भवानद्य करोतु सह सीतया ॥ 9 ॥

प्रातस्त्वामभिषेक्ता हि यौवराज्ये नराधिपः।
पिता दशरथः प्रीत्या ययातिं नहुषो यथा ॥ 10 ॥

---

8. (ப-ரை) सः पुरोहितः च- அந்த புரோஹிதரும், प्रश्रितं- வணக்கமுள்ளவரும், प्रियार्हं- ப்ரியவார்த்தை கேழ்க்கத் தகுந்தவருமான, एनं रामं- இந்த ராமனே, दृष्ट्वा- பார்த்து, संभाष्य- குசலப்ரச்னம் செய்து, अभिप्रसाद्य च- ஸ்தோத்ரங்களினால் ஸந்தோஷப் படுத்தி, हर्षयन् (सन्)- ஆனந்தத்தை உண்டுபண்ணிக்கொண்டு, इति उवाच- இவ்விதம் சொன்னார்.

9. (ப-ரை) हे राम- ஓ ராமனே, ते पिता- உம்முடைய பிதாவானவர், प्रसन्नः- (உம் விஷயத்தில்) ரொம்பவும் ப்ரீதியுடையவராயிருக்கிறார், यौवराज्यं- இளவரசு பட்டத்தை, अवाप्स्यसि- அடையப்போகிறாய். (तस्मात्- ஆகையால்), भवान्- நீரும், अद्य- இன்று, सीतया सह- ஸீதையுடன், उपवासं- உபவாஸத்தை, करोतु- செய்யக்கடவீர்.

10. (ப-ரை) नहुषः- நஹுஷ மஹாராஜன், ययातिं यथा- யயாதியைப்போல், पिता- பிதாவான, दशरथः नराधिपः- தசரதமஹாராஜன், प्रातः- காலையில், त्वां- உம்மை, प्रीत्या-ப்ரீதியோடு, यौवराज्ये- இளவரசு பட்டத்தில், अभिषेक्ता हि- அபிஷேகம் செய்யப் போகிறானன்றோ!

8. (பொ-ரை) அந்த புரோஹிதரான வஸிஷ்ட மஹரிஷியும், விநயத்துடன் ப்ரிய வார்த்தை சொல்ல கேழ்க்கத்தகுந்தவரான ராமனைப்பார்த்து குசலப்ரச்னம் செய்து, ஸ்தோத்திரமும் செய்து, ஸந்தோஷப்படுத்திக்கொண்டு இவ்விதம் சொன்னார்.

9. (பொ-ரை) ஹே ராமா! உம்முடைய பிதாவான தசரத மஹாராஜன் உம்மிடத்தில் ரொம்பவும் ப்ரியமாகவிருக்கிறார். யௌவராஜ்யத்தை நீர் அடையப் போகிறீர். ஆகையால், நீர் இன்றையதினம், ஸீதையுடன் கூட உபவாஸமிருக்க வேண்டும்.

10. (பொ-ரை) நஹுஷ மஹாராஜா, தன் பிள்ளையான யயாதிக்கு அபிஷேகம் செய்ததுபோல், உம்முடைய பிதாவான தசரதமஹாராஜன், நாளையதினம் காலையில் அன்போடு உமக்கு யௌவராஜ்ய பட்டாபிஷேகம் செய்யப்போகிறார்.

इत्युक्त्वा स तदा राममुपवासं यतव्रतम् ।
मन्त्रवत्कारयामास वैदेह्या सहितं मुनिः ॥ 11 ॥

ततो यथावद्रामेण स राज्ञो गुरुरर्चितः ।
अभ्यनुज्ञाप्य काकुत्स्थं ययौ रामनिवेशनात् ॥ 12 ॥

सुहृद्भिस्तत्र रामोऽपि सहासीनः प्रियंवदैः ।
सभाजितो विवेशाथताननुज्ञाप्य सर्वशः ॥ 13 ॥

11. (ப-ரை) सः मुनिः- அந்த வஸிஷ்ட முனிவர், इति उक्त्वा- இவ்விதம் சொல்லி, तदा- அப்பொழுது, यतव्रतम्- வ்ருதமுள்ளவராயும், वैदेह्या सहित- ஸீதையோடு கூடினவருமான, राम- ஸ்ரீராமனை, मन्त्रवत्- மந்த்ர பூர்வகமாக, उपवास-உபவாஸத்தை, कारयामास- செய்வித்தார்.

12. (ப-ரை) ततः- பிறகு, राज्ञः- அரசனுடைய, गुरुः- குருவான, सः- அந்த, வஸிஷ்ட மஹரிஷி, रामेण- ராமனால், यथावत्- முறைப்படி, अर्चितः (सन्)- பூஜிக்கப்பட்டவராய்க்கொண்டு, काकुत्स्थ- ராமனை, अभ्यनुज्ञाप्य- அநுமதி கொடுத்து, रामनिवेशनात्- ராமனுடைய க்ருஹத்திலிருந்து, ययौ- புறப்பட்டார்.

13. (ப-ரை) रामः अपि- ஸ்ரீராமனும், तत्र- அவ்விடத்தில், प्रियंवदैः- ப்ரியமான வார்த்தைகளைச்சொல்லுகின்ற, सुहृद्भिः(सह)- தோழர்களோடுகூட, आसीनः-உட்கார்ந்து கொண்டிட, सभाजितः- அவர்களால் ஸந்தோஷப்படுத்தப்பட்டவருமாக, तान्- அவர்களை, सर्वशः- எல்லாரையும், अनुज्ञाप्य- அநுமதி கொடுத்து, अथ- பிறகு, विवेश- தன் க்ருஹத்தில் நுழைந்தார்.

11. (பொ-ரை) இவ்விதம் வஸிஷ்ட மஹரிஷியானவர் சொல்லி வ்ருதமுள்ளவரும், ஸீதையோடு கூடினவருமான ஸ்ரீராமனுக்கு மந்த்ர பூர்வகமாய், உபவாஸ ஸங்கல்பத்தை செய்வித்தார்.

12. (பொ-ரை) பிறகு, ராஜகுருவாகிய வஸிஷ்டர், ஸ்ரீராமனிடம் பூஜை பெற்றுக்கொண்டு, பின்தொடர்ந்து வருகின்ற ராமனுக்கு, நிற்கும்படி அநுமதிகொடுத்து, ராமனுடைய க்ருஹத்திலிருந்து வெளியில் புறப்பட்டார்.

13. (பொ-ரை) அவ்விடத்தில் ஸ்ரீராமனும், இனிய வார்த்தைகளைச் சொல்லுகிற, தம்முடைய ஸ்நேஹிதர்களோடு உட்கார்ந்துகொண்டு, அவர்களால் ஸந்தோஷப்படுத்தப்பட்டு பிறகு, அவர்கள் எல்லோருக்கும் அநுமதி கொடுத்து தானும் தம்முடைய க்ருஹத்தில் ப்ரவேசித்தார்.

हृष्टनारीनरयुतं रामवेश्म तदा बभौ ।
यथा मत्तद्विजगणं प्रफुल्लनलिनं सरः ॥ 14 ॥

स राजभवनप्रख्यात्तस्माद्रामनिवेशनात् ।
निर्गत्य ददृशे मार्गं वसिष्ठो जनसंवृतम् ॥ 15 ॥

बृन्दबृन्दैरयोध्यायां राजमार्गाः समन्ततः ।
बभूवुरभिसंबाधाः कुतूहलजनैर्वृताः ॥ 16 ॥

14. (ப-ரை) हृष्टनारीनरयुतं- ஸந்தோஷமுள்ள ஸ்த்ரீகளோடும், புருஷர்களோடும் கூடியிருக்கிற, रामवेश्म- ஸ்ரீராமனுடைய க்ருஹமானது, प्रफुल्लनलिनं- நன்றாய் மலர்ந்த தாமரை மலர்களுடையதாயும், मत्तद्विजगण- மதித்த பக்ஷிக்கூட்டங்களுள்ளதுமான, सरः यथा- தடாகம்போல், तदा- அப்பொழுது, बभौ- விளங்கினது.

15. (ப-ரை) सः वसिष्ठः- அந்த வஸிஷ்ட மஹரிஷியானவர், राजभवनप्रख्यात्- மஹாராஜன் அரண்மனைக்கு ஸமானமான, तस्मात्- அந்த, रामनिवेशनात्- ராமனுடைய க்ருஹத்திலிருந்து, निर्गत्य- வெளியில் வந்து, जनसंवृतम्- ஜனங்களால் சூழப்பட்டிருக்கிற, मार्गं- ராஜமார்க்கத்தை, ददृशे- பார்த்தார்.

16. (ப-ரை) अयोध्यायां- அயோத்யா நகரத்தில், बृन्दबृन्दैः- கூட்டங்கூட்டமாயிருக்கின்ற, कुतूहलजनैः- குதூஹலமுள்ள ஜனங்களினால், वृताः- சூழப்பட்ட, राजमार्गाः- ராஜமார்க்கங்கள், समन्ततः- சுற்றிலும், अभिसंबाधाः- நெருக்கமுள்ளவைகளாக, बभूवुः- இருந்ததுகள்.

14. (பொ-ரை) மிகவும் களிகொண்ட ஸ்த்ரீகளோடும், புருஷர்களோடும் கூடிய ஸ்ரீராமனுடைய க்ருஹமானது, மலர்ந்த தாமரை மலர்களோடும், மதித்த ஹம்ஸமுதலாகிய பக்ஷிக்கூட்டங்களோடும் கூடிய, தாமரை தடாகம்போல் விளங்கினது.

15. (பொ-ரை) அந்த வஸிஷ்ட மஹரிஷியானவர், மஹாராஜனுடைய அரண்மனைக்கொப்பான, ஸ்ரீராமனுடைய, க்ருஹத்திலிருந்தும் வெளியில் வந்து, ஜனங்கள் நிறைந்திருக்கின்ற, ராஜமார்க்கத்தைக்கண்டார்.

16. (பொ-ரை) அப்பொழுது அயோத்யா நகரத்தில் ராஜமார்க்கங்களெலாம், கூட்டங்கூட்டமாக நின்றிருக்கிற குதூஹலமுள்ள ஜனங்களினால், சூழப்பட்டு எங்கும் நெருக்கமாக இருந்ததுகள்.

जनवृन्दोर्मिसंघर्षहर्षस्वनवतस्तदा ।
बभूव राजमार्गस्य सागरस्येव निस्वनः ॥ 17 ॥

सिक्तसंमृष्टरथ्या हि तदहर्वनमालिनी ।
आसीदयोध्यानगरी समुच्छ्रितगृहध्वजा ॥ 18 ॥

तदा ह्ययोध्यानिलयः सस्त्रीबालाबलो जनः ।
रामाभिषेकमाकाङ्क्षन्नाकाङ्क्षदुदयं रवेः ॥ 19 ॥

17. (ப-ரை) तदा- அப்பொழுது, जनवृन्दोर्मिसंघर्षहर्षस्वनवतः ஜனக்கூட்டமாகிற அலைகளையும், நெருக்கத்தினாலும், ஸந்தோஷத்தினாலுமுண்டான, சப்தத்தையுடையதான, राजमार्गस्य- ராஜமார்க்கத்தினுடைய, निस्वनः- சப்தமானது, सागरस्य- ஸமுத்திரத்தினுடைய, (निस्वनः) इव- சப்தம்போல், बभूव- இருந்தது.

18. (ப-ரை) तत् अहः- அந்த தினத்தில் अयोध्यानगरी- அயோத்யா பட்டணமானது, सिक्तसंमृष्टरथ्या- ஜலம் தெளித்து கூட்டப்பட்ட வீதிகளையுடையதாயும், वनमालिनी- வனங்களின் வரிசைகளையுடையதாயும், समुच्छ्रितगृहध्वजा- உயரக்கட்டப்பட்ட வீடுகளில் த்வஜங்களையுடையதாயும், आसीत्- இருந்தது.

19. (ப-ரை) तदा हि- அப்பொழுது, अयोध्यानिलयः- அயோத்தியில் குடியிருக்கின்ற, सस्त्रीबालाबलः- ஸ்த்ரீகளோடும், பாலர்களோடும், வ்ருத்தர்களோடும் கூடின, जनः- ஜனமானது, रामाभिषेकं- ராமனுடைய பட்டாபிஷேகத்தை, आकाङ्क्षन्- கோறிக்கொண்டு, रवेः ஸூர்யனுடைய, उदयं- உதயத்தை, आकाङ्क्षत्- எதிர்பார்த்துக்கொண்டிருந்தது.

17. (பொ-ரை) கூட்டங்கூட்டமாக ஜனங்கள் வருகிறதையும், ஒருவருக்கொருவர் நெருக்கத்தாலும், ஸந்தோஷத்தினாலுமுண்டான சப்தத்தையும் உடைய ராஜமார்க்கத்தைப்பார்த்தால், அலைகள் ஒன்றோடொன்று மோதிக்கொண்டு, சப்திக்கின்ற ஸமுத்ரம்போலிருந்தது.

18. (பொ-ரை) அன்றையதினம் அயோத்யா நகரமானது, வீதிகளில் ஜலம் தெளித்து நன்றாய் கூட்டப்பட்டும், உயர்ந்த மாடிகளில் த்வஜங்கள் கட்டியும், பட்டாபிஷேக மஹோத்ஸவத்திற்காக, குலைகளுடன் வாழைமரங்களும், பாக்குமரங்களும், மாவிலைத்தோரணங்களும கட்டியிருப்பதால், வரிசை வரிசைகளுடன், கூடினதாகவுமிருந்தது.

19. (பொ-ரை) அப்பொழுது அயோத்யா நகரத்திலுள்ள ஸ்த்ரீகள், பாலர்கள், வ்ருத்தர்கள் முதலிய எல்லா ஜனங்களும், ஸ்ரீராம பட்டாபிஷேகத்தை விரும்பி ஸூர்யோதயம் எப்பொழுது, ஆகப்போகிறது என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

प्रजालङ्कारभूतं च जनस्यानन्दवर्धनम् ।
उत्सुकोऽभूज्जनो द्रष्टुं तमयोध्यामहोत्सवम् ॥ 20 ॥

एवं तं जनसंबाधं राजमार्गं पुरोहितः ।
व्यूहन्निव जनौघं तं शनै राजकुलं ययौ ॥ 21 ॥

सिताभ्रशिखरप्रख्यं प्रासादमधिरुह्य सः ।
समीयाय नरेन्द्रेण शक्रेणेव बृहस्पतिः ॥ 22 ॥

20. (ப-ரை) जनः- ஜனமானது, प्रजालङ्कारभूतं- ப்ரஜைகள் அலங்காரம் செய்து கொள்ளுவதற்குக்காரணமாயும், जनस्य- ஜனத்திற்கு, आनन्दवर्धनम्- ஆனந்தத்தை வ்ருத்தி செய்வதுமான, तं- அந்த, अयोध्यामहोत्सवम्- அயோத்யா நகரத்தினுடைய பெரிய உத்ஸவத்தை, द्रष्टुं- பார்ப்பதற்கு, उत्सुकः- ரொம்பவும் ஆசையுள்ளதாக, अभूत्- இருந்தது.

21. (ப-ரை) पुरोहितः- புரோஹிதரான வஸிஷ்ட மஹரிஷியானவர், एवं- இவ்விதமாக, जनसंबाधं- ஜனங்கள் நெருங்கியிருக்கிற, तं राजमार्गं- அந்த ராஜவீதியை, (पश्यन् सन्- பார்த்துக்கொண்டு), तं जनौघं- அந்த ஜன ஸமூகத்தை, व्यूहन् इव- அங்கங்கு ஒதுக்குகிறவர்போல், शनैः- மெள்ள, राजकुलं- ராஜக்ருஹத்தை, ययौ- அடைந்தார்.

22. (ப-ரை) सः- அந்த வஸிஷ்ட மஹரிஷியானவர், सिताभ्रशिखरप्रख्यं- வெள்ளைமேகம்போன்ற ஹிமையகிரியின் சிகரத்திற்கொப்பான, तं प्रासादं- அந்த உப்பரிகையை, अधिरुह्य- ஏறி, बृहस्पतिः- தேவகுருவானவர், शक्रेण इव- இந்திரனுடன், (சேர்ந்தது) போல், नरेन्द्रेण- அரசனோடு, समीयाय- சேர்ந்தார்.

20. (பொ-ரை) ப்ரஜைகள், அலங்காரம் செய்துகொள்ள காரணமாயும், ஸகல ஜனங்களுக்கும் ஆனந்தத்தை வ்ருத்தி செய்கின்றதுமான, அந்த அயோத்யா நகரத்தின் மஹோத்ஸவத்தைப் பார்ப்பதற்கு, எல்லா ஜனங்களும், ஆசைப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

21. (பொ-ரை) புரோஹிதரான, வஸிஷ்ட மஹரிஷி, இவ்விதம் ஜனங்கள், நெருங்கியிருக்கிற ராஜமார்க்கத்தைப்பார்த்துக்கொண்டு, அந்த ஜனங்களை அங்கங்கு ஒன்றுசேர்த்துகிறவர்போல, மெள்ள மெள்ள அரசன் அரண்மனைக்குச் சென்றார்.

22. (பொ-ரை) வஸிஷ்ட மஹரிஷி, வெள்ளை மேகம்போல் ப்ரகாசிக்கின்ற அந்த உப்பரிகையின்மேல் ஏறி, இந்த்ரனோடு ப்ருஹஸ்பதி சேர்ந்தாப்போல் அரசனுடன் சேர்ந்தார்.

तमागतमभिप्रेक्ष्य हित्वा राजासनं नृपः ।
पप्रच्छ स च तस्मै तत्कृतमित्यभ्यवेदयत् ॥ 23 ॥

तेन चैव तदा तुल्यं सहासीनाः सभासदः ।
आसनेभ्यः समुत्तस्थुः पूजयन्तः पुरोहितम् ॥ 24 ॥

गुरुणा त्वभ्यनुज्ञातो मनुजौघं विसृज्य तम् ।
विवेशान्तः पुरं राजा सिंहो गिरिगुहामिव ॥ 25 ॥

23. (ப-ரை) नृपः- தசரதன், आगतं- வந்திருக்கிற, तं- அந்த வஸிஷ்ட மஹரிஷியை, अभिप्रेक्ष्य- பார்த்து, राजासनं- ஸிம்மாஸனத்தை, हित्वा- விட்டு (எழுந்திருந்து), पप्रच्छ- கேட்டார், स च- அவரும், तस्मै- அந்த அரசன் பொருட்டு, तत्- அந்த கார்யமானது, कृतं- செய்யப்பட்டது, इति- என்று, अभ्यवेदयत्- தெரிவித்தார்.

24. (ப-ரை) तदा- அப்பொழுது, सह आसीनाः- கூட உட்கார்ந்துகொண்டிருக்கிற, सभासदः- ஸபையிலிருக்கும ஜனங்கள், पुरोहितं- வஸிஷ்ட மஹரிஷியை, पूजयन्तः (सन्तः)- மரியாதை செய்கிறவர்களாய்க்கொண்டு, तेनैव च- அரசனுடனேயே, तुल्यं- அதே ஸமயத்தில், आसनेभ्यः- ஆஸனங்களிலிருந்து, समुत्तस्थुः- எழுந்துவிட்டார்கள்.

25. (ப-ரை) गुरुणा- குருவினால், अभ्यनुज्ञातः- அநுமதி செய்யப்பட்ட, राजा- அரசன், तं मनुजौघं- அந்த ஜன ஸமூகத்தை, विसृज्य- அனுப்பிவிட்டு, सिंहः- ஸிம்மமானது, गिरि गुहां इव- மலையின் குகையை (ப்ரவேசிக்கது) போல, अन्तः पुरं- அந்தப்புரத்தை, विवेश- ப்ரவேசித்தார்.

23. (பொ-ரை) மஹாராஜரும, வஸிஷ்ட மஹரிஷி வருவதைப்பார்த்து, ஸிம்மாஸனத்தை விட்டு எழுந்திருந்து விசாரித்தார். அவரும் நீர் சொல்லியபடி, செய்தாய்விட்டதென்று அரசனுக்குத் தெரிவித்தார்.

24. (பொ-ரை) மஹா ராஜரோடு, ஸபையில் கூட உட்கார்ந்திருந்த எல்லா ஜனங்களும், புரோஹிதரான வஸிஷ்டரிடத்தில் கௌரவத்தினால் ராஜா எழுந்த அதே ஸமயத்தில், ஆஸனத்திலிருந்து எழுந்திருந்தார்கள்.

25, (பொ-ரை) தசரத மஹாராஜன், குருவான வஸிஷ்டரிடத்தில், அநுமதி பெற்றுக்கொண்டு, ஸபையிலிருக்கின்ற ஜனங்களையும் அனுப்பிவிட்டு, ஸிம்மமானது, மலையின் குகையில் நுழைந்தது போல், அந்தப்புரத்தில் நுழைந்தார்.

तदग्र्यवेषप्रमदाजनाकुलं महेन्द्रवेश्मप्रतिमं निवेशनम् ।
विदीपयंश्चारु विवेश पार्थिवः शशीव तारागणसंकुलं नभः ॥ 26 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे

पञ्चमः सर्गः ॥ 5 ॥

26. (ப-ரை) पार्थिवः- ராஜாவானவர், अग्र्यवेष प्रमदा जन आकुलं- உத்தமமான, அலங்காரமுள்ள, ஸ்த்ரீ ஜனங்களினுல் நிறைந்ததும, महेन्द्र वेश्मप्रतिमं- இந்திரனுடைய அரண்மனைக்கு ஸமானமும், चारु- அழகானதுமான, तत् निवेशनम्- அந்த க்ருஹத்தை, विदीपयन् (सन्)- நன்ருய் ப்ரகாசப் படுத்திக்கொண்டு, शशी- சந்திரனுனவன், तारागणसंकुलं- நக்ஷத்திரக்கூட்டங்களினுல் நிறைந்த, नभः इव- ஆகாசத்தை (ப்ரவேசித்தது) போல், विवेश- ப்ரவேசித்தார்.

26. (பொ-ரை) மஹாராஜா, உத்தமமான அலங்காரம் செய்துகொண்டிருக்கிற ஸ்த்ரீ ஜனங்களால் நிறைந்ததும், இந்திரனுடைய க்ருஹம்போல் அழகாயுமிருக்கிற அந்த அந்தப்புறத்தில், ப்ரகாசப்படுத்திக்கொண்டு, நக்ஷத்திரங்கள் நிறைந்த ஆஹாயத்தில் சந்திரன் ப்ரவேசித்ததுபோல் ப்ரவேசித்தார்.



षष्ठः सर्गः ॥ 6 ॥

गते पुरोहिते रामः स्नातो नियतमानसः ।
सह पत्न्या विशालाक्ष्या नारायणमुपागमत् ॥ 1 ॥

1. (ப-ரை) पुरोहिते- புரோஹிதரானவர், गते (सति)- போனவளவில், रामः- ராமன், स्नातः- ஸ்நானம் பண்ணி, नियतमानसः- அடக்கப்பட்ட மனதையுடையவராய், विशालाक्ष्या- அகன்ற கண்களையுடைய, पत्न्या सह- பத்னியுடன்கூட, नारायणम्- ஸ்ரீரங்கநாதனை, उपागमत्- உபாஸனம் செய்தார்.

---

1. (பொ-ரை) இப்படி வஸிஷ்ட மஹரிஷி போனபிறகு, ஸ்ரீராமனும் ஸ்நானம் செய்து, சுத்தமான மனதுடையவராய், விசாலமான கண்களையுடைய, பத்நியான ஸீதையுடன்கூட, தம் குலதெய்வமான ஸ்ரீரெங்கனுதன் ஸந்நிதியில் அவனை உபாஸனம் செய்தார்.

प्रगृह्य शिरसा पात्रीं हविषो विधिवत्तदा ।
महते दैवतायाज्यं जुहाव ज्वलितेऽनले ॥ 2 ॥

शेषं च हविषस्तस्य प्राश्याशास्यात्मनः प्रियम् ।
ध्यायन्नारायणं देवं स्वास्तीर्णे कुशसंस्तरे ॥ 3 ॥

वाग्यतः सह वैदेह्या भूत्वा नियतमानसः ।
श्रीमत्यायतने विष्णोः शिश्ये नरवरात्मजः ॥ 4 ॥

2. (ப-ரை) तदा- அப்பொழுது, हविषः- ஹவிஸ்ஸுனுடைய, पात्रीं- பாத்திரத்தை, शिरसा- சிரஸ்ஸினால், प्रगृह्य- தாங்கிக்கொண்டு, महते- மஹிமையுள்ள, दैवताय- தேவதையான நாராயணன்பொருட்டு, ज्वलिते- எறிந்துகொண்டிருக்கிற, अनले- அக்னியில், आज्य- நெய்யை, विधिवत्- சாஸ்திரப்படி, जुहाव- ஹோமம செய்தார்.

3-4. (ப-ரை) नरवरात्मजः- ராஜபுத்திரனை ஸ்ரீராமன், तस्य हविषः- அந்த ஹவிஸ்ஸுனுடைய, शेषच- மீதியையும, आत्मनः- தனக்கு, प्रिय- ப்ரியமாக, आशास्य- வேண்டி, प्राश्य- சாப்பிட்டு, श्रीमति- சோபையுள்ளதான, विष्णोः आयतने- ஸ்ரீ ரெங்கநாதன் ஸன்னிதியில், स्वास्तीर्णे- நன்றாய் பரப்பப்பட்ட, कुशसंस्तरे- தர்ப்ப சயனத்தில், वाग्यतः- மௌன முள்ளவராய், नियतमानसः- அடக்கப்பட்ட மனதையுடையவராய், भूत्वा- ஆகி, नारायण देवं- ஸ்ரீமந நாராயணனென்கிற தேவதையை, ध्यायन् (सन्)- த்யானம செய்துகொண்டு, वैदेह्या सह- ஸீதையுடன் கூட, शिश्ये- படுத்துக்கொண்டார்.

2. (பொ-ரை) அப்பொழுது ஸ்ரீராமன் ஹவிஸ் பாத்திரத்தை தலையிலே வைத்துக்கொண்டு எடுத்துவந்து, அளவில்லாத மஹிமைபொருந்திய தேவதையான நாராயணன் பொருட்டு ஜ்வலித்துக்கொண்டிருக்கிற, அக்னியில், சாஸ்திரப்படி ஆஜ்ய ஹோமம் செய்தார்.

3-4 (பொ-ரை) ராஜபுத்திரனாகிய, ஸ்ரீராமன் ஹோமம் செய்து மீதியான அந்த ஹவிஸ்ஸை தனக்கு மிகவும் ப்ரியமென்று ப்ரார்த்தித்து அமுதுசெய்து ப்ரணவாகாரமான ஸ்ரீரெங்க விமானத்தில் நன்றாய் மந்த்ர பூர்வகமாய் பரப்பின தர்ப்ப சயனத்தில் ஸ்ரீமந் நாராயணனை த்யானம் செய்துகொண்டு, மௌனமாயும், மனதை அடக்கிக்கொண்டு ஸீதையுடன் சயனித்தார்.

एकयामावशिष्टायां रात्र्यां प्रतिविबुध्य सः ।
अलंकारविधिं कृत्स्नं कारयामास वेश्मनः ॥ 5 ॥

तत्र शृण्वन्सुखा वाचः सूतमागधवन्दिनाम् ।
पूर्वां सन्ध्यामुपासीनो जजाप यतमानसः ॥ 6 ॥

तुष्टाव प्रणतश्चैव शिरसा मधुसूदनम् ।
विमलक्षौमसंवीतो वाचयामास च द्विजान् ॥ 7 ॥

5. (ப-ரை) सः- அந்த ஸ்ரீராமன், रात्र्यां- ராத்ரியானது, एक याम अवशिष्टायां- ஒரு யாமம் மீதியாயிருக்குமளவில், प्रतिविबुध्य– விழித்துக்கொண்டு, वेश्मनः- க்ருஹத்தினுடைய, अलंकारविधिं- அலங்காரம் செய்வதை, कृत्स्नं- முழுமையும், कारयामास– செய்

6. (ப-ரை) तत्र- அவ்விடத்தில், सूतमागधवन्दिनाम्- ஸூத, மாகத, வந்தி என்னுமிவர்களுடைய, सुखाः- ஸுகமான, वाचः- வாக்குக்களை, शृण्वन्- கேட்டுக்கொண்டு, पूर्वां सन्ध्यां- ப்ராதஸ்ஸந்தியை, उपासीनः- த்யானம் செய்துகொண்டும, यतमानसः- அடக்கப்பட்ட மனதையுடையவராயும, जजाप- (காயத்ரியை) ஜபித்துக்கொண்டிருந்தார்.

7. (ப-ரை) शिरसा- தலையினல், प्रणतश्च एव- வணங்கினவராகவே, मधुसूदनम्- பகவானை, तुष्टाव- ஸ்தோத்திரம் செய்தார், विमलक्षौमसंवीतः- நிர்மலமான வெண்பட்டை தரித்துக் கொண்டவராய், द्विजान्- ப்ராம்மணர்களை, वाचयामास च- ஸ்வஸ்திவாசனமும் செய்வித்தார்.

5. (பொ-ரை) ஸ்ரீராமன் அன்றிரவு, ஒரு யாமம் மீதியிருக்குமளவில் விழித்துக்கொண்டு எழுந்திருந்து, க்ருஹத்திற்கு செய்யவேண்டிய அலங்காரம் முழுமையும் செய்வித்தார்.

6 (பொ-ரை) அவ்விடத்தில், ஸூத குலத்தில் பிறந்த புராணம் சொல்லுகிறவர்களுடையவும், மகத தேசத்திற் பிறந்த வம்சாவளி கீர்த்தனம் பண்ணுகிறவர்களுடையவும், ஸ்துதி பாடகர்களுடையவும, ஸுகமான வாக்யங்களைக் கேட்டுக்கொண்டும், ப்ராதஸ்ஸந்யா அதி தேவதையான ஸூர்யனை த்யானம் செய்துகொண்டு, ஒரே மனதுடையவராய், காயத்ரியை ஜபித்துக்கொண்டிருந்தார்.

7. (பொ-ரை) தலையினல் வணங்கி, ஸ்ரீமந் நாராயணனை ஸ்தோத்திரம் செய்தார். நிர்மலமான வெண்பட்டை தரித்துக்கொண்டு, ப்ராம்மணர்களைக் கொண்டு, ஸ்வஸ்தி வாசனமும் செய்வித்தார்.

तेषां पुण्याहघोषोऽथ गम्भीरमधुरस्तदा ।
अयोध्यां पूरयामास तूर्यघोषानुनादितः ॥ 8 ॥

कृतोपवासं तु तदा वैदेह्या सह राघवम् ।
अयोध्यानिलयः श्रुत्वा सर्वः प्रमुदितो जनः ॥ 9 ॥

ततः पौरजनः सर्वः श्रुत्वा रामाभिषेचनम् ।
प्रभातां रजनीं दृष्ट्वा चक्रे शोभयितुं पुरीम् ॥ 10 ॥

8. (ப-ரை) अथ- பிறகு, तदा- அப்பொழுது, तेषां- அந்த ப்ராம்மணர்களுடைய, गम्भीरमधुरः- கம்பீரமாயும், இனிதாயுமிருக்கிற, पुण्याहघोषः- புண்யாஹவாசன சப்தமானது, तूर्यघोषानुनादितः- தூர்யவாத்யத்தின் சப்தத்தினால் தொடர்ந்ததாய்க் கொண்டு, अयोध्यां- அயோத்யா நகரத்தை, पूरयामास- எங்கும் நிறப்பிவிட்டது.

9. (ப-ரை) तदा तु- அப்பொழுதோவென்றால், अयोध्यानिलयः- அயோத்தியில் குடியிருக்கின்ற, सर्वः जनः- ஸமஸ்த ஜனமும், राघवं- ராமனை, वैदेह्या सह- ஸீதையோடு கூட, कृतोपवासं- செய்யப்பட்ட உபவாஸத்தையுடையவராக, श्रुत्वा- கேட்டு, प्रमुदितः- ஸந்தோஷமுள்ளதாக (இருந்தது).

10. (ப-ரை) ततः- பிறகு, सर्वः पौरजनः- நகரத்துஜன முழுமையும், रामाभिषेचनम्- ஸ்ரீராம பட்டாபிஷேகத்தை, श्रुत्वा- கேட்டு, रजनीं- ராத்ரியை, प्रभातां- விடிந்ததாக, दृष्ट्वा- பார்த்து, पुरीम्- நகரத்தை, शोभयितुं- அலங்காரம் செய்வதற்கு, चक्रे- (யத்தனம்) செய்தனர்.

8. (பொ-ரை) பிறகு அந்த ப்ராம்மணர்களுடைய கம்பீரமும், மதுரமுமான, புண்யாஹ வாசன சப்தமானது, தூர்ய சப்தத்தோடொன்று சேர்ந்து, அயோத்யா பட்டணத்தை நிறப்பியது.

9. (பொ-ரை) ஸ்ரீராமன் ஸீதையுடன் உபவாஸம் செய்து கொண்டிருக்கிற விஷயத்தைக்கேட்டு, அயோத்யா நகரத்திலிருக்கிற ஸமஸ்த ஜனங்களும், ஸந்தோஷமடைந்தார்கள்.

10. (பொ-ரை) பிறகு நகரத்திலுள்ள எல்லா ஜனங்களும், ஸ்ரீராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்வதைக்கேட்டு, ராத்ரி விடிந்ததையும் பார்த்து, நகரத்தை அலங்காரம் செய்ய, ஆரம்பித்தார்கள்.

सिताभ्रशिखराभेषु देवतायतनेषु च ।
चतुष्पथेषु रथ्यासु चैत्येष्वट्टालकेषु च ॥ 11 ॥

नानापण्यसमृद्धेषु वणिजामापणेषु च ।
कुटुम्बिनां समृद्धेषु श्रीमत्सु भवनेषु च ॥ 12 ॥

सभासु चैव सर्वासु वृक्षेष्वालक्षितेषु च ।
ध्वजाः समुच्छ्रिताश्चित्राः पताकाश्चाभवंस्तदा ॥ 13 ॥

11–12–13. (ப-ரை) तदा- அப்பொழுது, सिताभ्रशिखराभेषु- வெளுத்த மேஹங்கள் போன்ற காந்தியுடைய சிகரங்களுள்ளவையான, देवतायतनेषु च- தேவாலயங்களிலும், चतुष्पथेषु- நாற்சந்தி மண்டபங்களிலும், रथ्यासु- ராஜவீதிகளிலும், चैत्येषु- பௌத்த ஆலயங்களிலும், अट्टालकेषु च- மதில்களின்மேல் யுத்தத்திற்காகக்கட்டியிருக்கிற நாற்கால் மண்டபங்களிலும், नानापण्यसमृद्धेषु– நானாவிதங்களான பலசரக்குகளால் நிறைந்த, वणिजां- வ்யாபாரிகளுடைய, आपणेषु च- கடைகளிலும, समृद्धेषु- எல்லாம் நிறைந்த, श्रीमत्सु- அழகான, कुटुम्बिनां- குடும்பிகளான ஜனங்களுடைய, भवनेषु च- வீடு களிலும், सर्वासु- ஸமஸ்தங்களுமான, सभासु च एव- ஸபைகளிலும், आलक्षितेषु- நன்றாய் காணப்படுகிற, वृक्षेषु च- மரங்களிலும், चित्राः- விசித்திரங்களான, ध्वजाः- கொடிகளும, पताकाः च- டக்கயங்களும், समुच्छ्रिताः- உயரக்கட்டப்பட்டதுகளாக, अभवन- ஆயின.

11–12–13. (பொ-ரை) அப்பொழுது வெளுத்த மேஹங்கள் போன்ற சிகரங்களால், விளங்கிக்கொண்டிருக்கிற தேவாலயங்களிலும், நாற்சந்தி வீதியில் இருக்கிற மண்டபங்களிலும், பெரிய தெருவுகளிலும், மதில்களின்மேல் யுத்தத்திற்காக கல்ப்பிக்கப்பட்ட நாற்கால் மண்டபங்களிலும், நானாவிதமான பலசரக்குகள் நிறைந்த வ்யாபாரிகள் கடைகளிலும், ஸகல பதார்த்தங்களும் நிறைநத குடும்பிகளுடைய க்ருஹங்களிலும் ஸமஸ்தமான ஸபைகளிலும், மிகவும் உயரமாக வெகு தூரத்திலிருந்தும் நன்றாய் தெரிகின்ற மரங்களிலும், விசித்திரங்களான கொடிகளும், டக்கயங்களும், மேலெடுத்துக்கட்டப்பட்டன.

नटनर्तकसङ्घानां गायकानां च गायताम् ।
मनः कर्णसुखा वाचः शुश्रुवुश्च ततस्ततः ॥ 14 ॥

रामाभिषेकयुक्ताश्च कथाश्चक्रुर्मिथो जनाः ।
रामाभिषेके संप्राप्ते चत्वरेषु गृहेषु च । ॥ 15 ॥

बाला अपि क्रीडमाना गृहद्वारेषु सङ्घशः ।
रामाभिषेकसंयुक्ता श्चक्रुरेव मिथः कथाः ॥ 16 ॥

---

14. (ப-ரை) नटनर्तकसङ्घानां- நடர்கள், நர்த்தகர்கள் இவர்கள் கூட்டங்களுடையவும், गायताम्- கானம் செய்கின்ற, गायकानां च- பாடகர்களுடையவும், मनः- कर्णसुखाः- மனதிற்கும், காதிற்கும் ஸுகமான, वाचः- வாக்குக்களை, ततस्ततः- அங்கங்கு, शुश्रुवुः- (ஜனங்கள்) கேட்டார்கள்.

15. (ப-ரை) रामाभिषेके- ஸ்ரீராம பட்டாபிஷேகமானது, संप्राप्ते- ஸமீபமாக வந்தவளவிலே, चत्वरेषु- முச்சந்திகளிலும், गृहेषु च- க்ருஹங்களிலும், रामाभिषेकयुक्ताः- ராமாபிஷேக ஸம்பந்தமான, कथाः च- கதைகளையே, मिथः- ஒருவருக்கொருவர், चक्रुः- செய்துகொண்டிருந்தார்கள்.

16. (ப-ரை) गृहद्वारेषु- வீடுகளின் வாசல்களில், सङ्घशः- கூட்டமாக, क्रीडमानाः- விளையாடிக்கொண்டிருக்கிற, बालाः अपि- சிறுவர்களும், एव- இவ்விதம், रामाभिषेकसंयुक्ताः- ஸ்ரீராம பட்டாபிஷேக ஸம்பந்தங்களான, कथाः-கதைகளையே, मिथः- ஒருவருக்கொருவர், चक्रुः- செய்துகொண்டிருந்தார்கள்.

14. (பொ-ரை) அங்கங்கு அபிநயம் செய்கின்றவர்களுடையவும், அதில்லாமல் கேவலம் கூத்தாடுகிறவர்களுடையவும், கானம் செய்கிற பாடகர்களுடையவும், மனதிற்கும், காதுகளுக்கும், இன்பமான சப்தங்களை ஜனங்கள் கேட்டார்கள்.

15. (பொ-ரை) ஸ்ரீராமனுடைய பட்டாபிஷேக ஸமயம் நெருங்கினவாறே வீதிகளிலும், க்ருஹங்களிலும், ராமாபிஷேக ஸம்பந்தமான வார்த்தைகளையே ஜனங்கள் ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

16. (பொ-ரை) வீட்டு வாசல்களில் கூட்டமாக விளையாடிக்கொண்டிருக்கும் சிறுவர்களும் கூட இவ்வண்ணம் ஸ்ரீராம பட்டாபிஷேக விஷயமான கதைகளையே பேசிக்கொண்டிருந்தார்கள்.

कृतपुष्पोपहारश्च धूपगन्धाधिवासितः ।
राजमार्गः कृतः श्रीमान्पौरै रामाभिषेचने ॥ 17 ॥
प्रकाशकरणार्थंच निशागमनशङ्कया ।
दीपवृक्षांस्तथा चक्रुरनुरथ्यासु सर्वशः ॥ 18 ॥
अलङ्कारं पुरस्यैवं कृत्वा तत्पुरवासिनः ।
आकाङ्क्षमाणा रामस्य यौवराज्याभिषेचनम् । ॥ 19 ॥
समेत्य सङ्घशः सर्वेचत्वरेषु सभासु च ।
कथयन्तो मिथस्तत्र प्रशशंसुर्जनाधिपम् ॥ 20 ॥

17. (ப-ரை) रामाभिषेचने- ஸ்ரீராம பட்டாபிஷேகத்தில், पौरैः- பட்டணத்து ஜனங்களால், राजमार्गः- ராஜமார்க்கமானது, कृतपुष्पोपहारः- செய்யப்பட்ட புஷ்ப பூஜையையுடையதும், धूपगन्धाधिवासितः- தூபங்களாலும், சந்தனங்களாலும் வாஸனை செய்யப்பட்டதாயும், (अत एव- ஆகையினல்), श्रीमान्- அழகுள்ளதாகவும், कृतः- செய்யப்பட்டது.

18. (ப-ரை) निशागमनशङ्कया- ராத்ரி வந்துவிடுமென்ற எண்ணத்தினல், प्रकाशकरणार्थं च- ஸ்ரீராமன் அலங்காரத்தை ப்ரகாசம் செய்வதற்காகவும், तथा- அப்படியே, अनुरथ्यासु- வீதிகள் தோறும், सर्वशः- ஸர்வ விதங்களான, दीपवृक्षान्- விளக்கு மரங்களையும், चक्रुः- செய்தார்கள். (நட்டார்கள்).

19-20. (ப-ரை) तत्र- அச்சமயத்தில், तत्पुरवासिनः- அந்த அயோத்யாநகரத்தில் வஸிக்கின்ற ஜனங்கள், सर्वे- எல்லோரும், एवं- இவ்விதம், पुरस्य- நகரத்திற்கு, अलङ्कारं- அலங்காரத்தை, कृत्वा- செய்து, रामस्य- ஸ்ரீராமனுக்கு, यौवराज्याभिषेचनम्- இளவரசுபட்டாபிஷேகத்தை, आकाङ्क्षमाणाः- எதிர்பார்த்தவர்களாய், चत्वरेषु- முற்றங்களிலும், सभासु च- ஸபைகளிலும், सङ्घशः- கூட்டமாக, समेत्य- ஒன்று சேர்ந்து, मिथः- ஒருவருக்கொருவர், कथयन्तः- பேசிக்கொண்டவர்களாய், जनाधिपम्- மஹாராஜாவை, आशंसुः- புகழ்ந்துகொண்டிருந்தார்கள்.

17. (பொ-ரை) ஸ்ரீராம பட்டாபிஷேக மஹோத்ஸவத்திற்காக, பட்டணத்து ஜனங்கள் ராஜமார்க்கங்களை, தூபங்களாலும், சந்தனங்களாலும் வாஸனை கட்டி புஷ்ப பலிகளும் ஸமர்ப்பிக்கித்து சிறப்பாக அலங்கரித்தார்கள்.

18. (பொ-ரை) ஸ்ரீராமன் பட்டாபிஷேகத்திற்காக, அலங்காரம் செய்துகொண்டு, ஊர்வலம் எழுந்தருளும்போது ராத்ரி வந்துவிட்டால், பெருமான் ஸேவையாகாமல் போய்விடுமென்று எண்ணி, வெளிச்சத்திற்காக ஒவ்வொரு தெருவிலும், பலவிதமான கிளைகளோடு கூடின, விளக்குக் கம்பங்களை நாட்டினர்கள்.

19-20. (பொ-ரை) அயோத்யா நகரத்து ஜனங்கள், இவ்விதம் பட்டணக்

अहो महात्मा राजायमिक्ष्वाकुकुलनन्दनः ।
ज्ञात्वा यो वृद्धमात्मानं रामं राज्येऽभिषेक्ष्यति ॥ 21 ॥

सर्वे ह्यनुगृहीताः स्म यन्नो रामो महीपतिः ।
चिराय भविता गोप्ता दृष्टलोकपरावरः ॥ 22 ॥

21. (ப-ரை) अहो- ஆச்சர்யம்! इक्ष्वाकुकुलनन्दनः- இக்ஷ்வாகு வம்சத்திற்கு ஆனந்தத்தை உண்டுபண்ணுகிற, अयं राजा- இந்த மஹாராஜா, महात्मा- பெரிய மனதுடையவர், यः- யாவரொருவர், आत्मानं- தன்னை, वृद्धं- கிழவனாக, ज्ञात्वा- அறிந்து, रामं- ஸ்ரீராமனை, राज्ये- ராஜ்யத்தில், अभिषेक्ष्यति- அபிஷேகம் செய்யப்போகின்றாரோ!

22. (ப-ரை) सर्वे पि- (நாம்) எல்லோருமே, अनुगृहीताः- அநுக்ரஹம் செய்யப்பட்டவர்களாக, स्मः- ஆகிவிட்டோம், यत्- ஏனென்றால், दृष्टलोकपरावरः- உலகத்தில் உயர்ந்ததையும், தாழ்ந்ததையுமறிந்தவரான, रामः- ஸ்ரீராமன், महीपतिः- ராஜாவாக, (ஆகி), चिराय- நெடுநாள், नः- நமக்கு, गोप्ता- ரக்ஷகராக, भविता- ஆகப்போகிறார்.

திற்கு அலங்காரம் செய்து, ஸ்ரீராமனுடைய யௌவராஜ்ய பட்டாபிஷேகம் எப்பொழுது, நடக்குமோ வென்று எதிர்பார்த்துக்கொண்டு, ஸபைகளிலும், வீட்டின் முற்றங்களிலும் கூட்டங்கூடி, ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு அரசனை ஸ்தோத்ரம் செய்து கொண்டிருந்தார்கள்.

21. (பொ-ரை) அஹோ! இக்ஷ்வாகு குலத்தில் பிறந்தவரான இந்த அரசன், மஹாநுபாவன், ஏனென்றால், தான் கிழவரானது தெரிந்துகொண்டு, ஸ்ரீராமனுக்கு இளவரசு பட்டாபிஷேகம் செய்யப்போகிறான்றோ!

22. (பொ-ரை) நம்மெல்லோருக்கும், பகவான் பூர்ணமாக அநுக்ரஹம் செய்துவிட்டார். ஏனென்றால், லோகத்தில் உயர்ந்ததும், தாழ்ந்ததுமான வஸ்துக்களை அறிந்தவரான, ஸ்ரீராமன் பட்டாபிஷேகம் செய்துகொண்டு, நெடுநாள் நம்மை ரக்ஷிக்கப்போகிறார்.

अनुद्धतमना विद्वान्धर्मात्मा भ्रातृवत्सलः ।
यथा च भ्रातृषु स्निग्धस्तथास्मास्वपि राघवः ॥ 23 ॥

चिरं जीवतु धर्मात्मा राजा दशरथोऽनघः ।
यत्प्रसादेनाभिषिक्तं रामं द्रक्ष्यामहे वयम् ॥ 24 ॥

एवंविधं कथयतां पौराणां शुश्रुवुस्तदा ।
दिग्भ्योऽपि श्रुतवृत्तान्ताः प्राप्ता जानपदा जनाः ॥ 25 ॥

23. (ப-ரை) राघवः- ரகு குலத்தில் அவதரித்த ஸ்ரீராமன், अनुद्धतमनाः- கர்வமில்லாத மனதுடையவர், विद्वान्- எல்லாமறிந்தவர், धर्मात्मा- தர்மத்தில் புத்தியுள்ளவர், भ्रातृवत्सलः- கூடப்பிறந்தவர்களிடம் வாத்ஸல்யமுடையவர், भ्रातृषु- ப்ராதாக்களிடம், यथा- எப்படி, स्निग्धः- ஸ்நேஹமுள்ளவரோ, तथा- அப்படியே, अस्मास्वपि च- நம்மிடத்திலும், (स्निग्धः- ஸ்நேஹமுள்ளவர்).

24. (ப-ரை) धर्मात्मा- தர்மசிந்தையுள்ளவரும், अनघः- குற்றமில்லாதவருமான, दशरथः-राजा- தசரத அரசன், चिरं- வெகு காலம், जीवतु- பிழைத்திருக்கவேணும், यत्प्रसादेन- எவருடைய அநுக்ரஹத்தினால், वयम्- நாம, रामं- ஸ்ரீராமனை, अभिषिक्तं- பட்டாபிஷேகம் செய்யப்பட்டவராக, द्रक्ष्यामहे- பார்க்கப்போகிறோம்!

25. (ப-ரை) श्रुतवृत्तान्ताः- ஸ்ரீராமனுடைய பட்டாபிஷேக வ்ருத்தாந்தத்தைக்கேட்டவர்களாயும, दिग्भ्यः- திக்குக்களிலிருந்து, प्राप्ताः- (அயோத்யா நகரம) வந்திருக்கிற, जानपदाः जनाः अपि- வெளி தேசத்து ஜனங்களும, एवंविधं- இவ்விதம, कथयतां- சொல்லிக்கொண்டிருக்கிற, पौराणां- அயோத்யா நகரத்து ஜனங்களுடைய, (कथाः- கதைகளை), तदा- அப்பொழுது, शुश्रुवुः- கேட்டார்கள்

23. (பொ-ரை) நான் ராஜகுமாரன் என்று மனதில் சிறிதேனும கர்வமில்லாதவர். எல்லா சாஸ்த்ரங்களையும படித்து அறிந்தவர். தர்மமே ஒரு வடிவாகப் பிறந்தவர். தம்பிமார்களிடம மிகுந்த வாத்ஸல்யமுடையவர். அவர்களிடமபோல் நம்மிடத்திலும வாத்ஸல்யமுள்ளவர்.

24. (பொ-ரை) தர்மாத்மாவாயும், குற்றமற்றவருமான, தசரத மஹாராஜா நெடுநாள் ஜீவித்திருக்கவேணும். ஏனென்றால், அவருடைய அநுக்ரஹத்தினாலன்றோ ஸ்ரீராமனை, பட்டாபிஷிக்தராக நாம் பார்க்கப்போகிறோம்.

25. (பொ-ரை) இவ்விதம் சொல்லிக்கொண்டிருக்கிற, பட்டணத்து ஜனங்களின் வார்த்தைகளை, ஸ்ரீராம பட்டாபிஷேக ஸங்கதி கேட்டு, வெளிதேசத்திலிருந்து வந்திருக்கிற ஜனங்களும் கேட்டார்கள்.

ते तु दिग्भ्यः पुरीं प्राप्ता द्रष्टुं रामाभिषेचनम् ।
रामस्य पूरयामासुः पुरीं जानपदा जनाः ॥ 26 ॥
जनौघैस्तैर्विसर्पद्भिः शुश्रुवे तत्र निस्वनः ।
पर्वसूदीर्णवेगस्य सागरस्येव निस्वनः ॥ 27 ॥
ततस्तदिन्द्रक्षयसन्निभं पुरं दिदृक्षुभिर्जानपदैरुपागतैः ।
समन्ततः सस्वनमाकुलं बभौ समुद्रयादोभिरिवार्णवोदकम् ॥ 28 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
षष्ठः सर्गः ॥ 6 ॥

26. (ப-ரை) रामाभिषेचनम्- ஸ்ரீராமபட்டாபிஷேகத்தை, द्रष्टुं- பார்ப்பதற்காக, पुरीं- அயோத்யா நகரத்தை, प्राप्ताः- அடைந்திருக்கிற, ते तु- அந்த, जानपदाः जनाः- வெளி தேசத்து ஜனங்களும், रामस्य- ஸ்ரீராமனுடைய, पुरीं- நகரத்தை, पूरयामासुः- நிரப்பி விட்டார்கள்.

27. (ப-ரை) तत्र- அவ்விடத்தில், विसर्पद्भिः- நானாதேசத்திலிருந்து வந்திருக்கிற, तैः- அந்த, जनौघैः- ஜனக்கூட்டங்களினால், (உண்டான), निस्वनः- சப்தமானது, पर्वसु- பர்வ காலங்களில், उदीर्णवेगस्य- விருத்தி அடைந்த வேகமுள்ள, सागरस्य- ஸமுத்ரத்தினுடைய, निस्वनः इव- சப்தம்போல், शुश्रुवे- கேட்கப்பட்டது.

28. (ப-ரை) ततः- பிற்பாடு, दिदृक्षुभिः- பார்க்க விருப்பமுள்ளவர்களாக, उपागतैः- வந்திருக்கிற, जानपदैः- வெளிநாட்டு ஜனங்களால், समन्ततः- நாற்புறத்திலும், आकुलं- நிறைந்ததும், सस्वनं- சப்தத்துடன் கூடியதும், इन्द्रक्षयसन्निभं- இந்திரன் அரண்மனைக்கொப்பான, तत् पुरं- அந்த நகரமானது, समुद्रयादोभिः- ஸமுத்ரத்திலிருக்கிற ஜல ஜந்துக்களால், (आकुलं- நிறைந்த), आर्णवोदकम् इव- ஸமுத்ர ஜலம்போல், बभौ- விளங்கினது.

---

26. (பொ-ரை) ஸ்ரீராமனுடைய பட்டாபிஷேகத்தைக்கேட்டு, அயோத்யா பட்டணத்திற்கு, நாலு திக்குகளிலிருந்தும், வந்த வெளிநாட்டு ஜனங்கள், அயோத்யாநகரத்தை நிரப்பிவிட்டார்கள்.

27. (பொ-ரை) அயோத்யா நகரத்தில், ஸ்ரீராமபட்டாபிஷேகத்திற்காக, வெளிதேசத்திலிருந்து அங்குமிங்கும் ஸஞ்சரிக்கிற ஜனங்களால் உண்டான சப்தமானது, பர்வகாலங்களில் வேகத்துடன் அலைசெய்கின்ற, ஸமுத்ரத்தின் சப்தம்போல் கேட்கப்பட்டது.

28. (பொ-ரை) ஸ்ரீராம பட்டாபிஷேக மஹோத்ஸவத்தைப்பார்க்க, ஆசையுடன் வெளிதேசத்திலிருந்து வந்திருக்கிற, ஜனங்களால் நிறைந்தும், சப்தத்துடன் கூடியிருக்கிற, இந்திரனுடைய அரண்மனைபோன்ற, அந்நகரமானது, திமிங்கிலம் முதலிய ஜந்துக்களால், நிறைந்து சப்தித்துக்கொண்டிருக்கிற, ஸமுத்ரம்போல் விளங்கினது.

सप्तमः सर्गः ॥ 7 ॥

ज्ञातिदासी*यतोजाता कैकेय्यास्तु सहोषिता ।
प्रासादं चन्द्रसंकाशमारुरोह यदृच्छया ॥ 1 ॥

सिक्तराजपथां रम्यां प्रकीर्णकुसुमोत्कराम् ।
अयोध्यां मन्थरा तस्मात्प्रासादादन्ववैक्षत ॥ 2 ॥

1. (ப-ரை) कैकेय्याः- கைகேயிக்கு, ज्ञातिदासी- பந்துக்களின் வேலைக்காரியும், यतोजाता- எங்கேயோ பிறந்தவளும், सह उषिता- கைகேயின் கூடவே வஸித்துக்கொண்டிருப்பவளுமான (மந்தரை என்பவள்), यदृच्छया- தற்செயலாக, चन्द्रसंकाश- சந்திரமண்டலத்திற்கு ஒப்பான, प्रासादं- உப்பரிகையை, आरुरोह- ஏறினாள்.

2. (ப-ரை) मन्थरा- மந்தரையென்பவள், सिक्तराजपथां- ஜலம் தெளிக்கப்பட்ட ராஜமார்க்கங்களையுடையதும், प्रकीर्णकुसुमोत्कराम्- நன்றாக இறைக்கப்பட்ட, பூக்களின் கூட்டத்தையுடையதுமான, अयोध्यां- அயோத்தி நகரத்தை, (कृत्स्नां- முழுவதும்), तस्मात्- அந்த, प्रासादात्- உப்பரிகையிலிருந்து, अन्ववैक्षत- பார்த்தாள்.

1. (பொ-ரை) அந்த ஸமயத்தில், கைகேயி பந்துக்களில் வேலைக்காரியும், பிறந்த ஊர், தாய் தகப்பன் முதலானவர்கள் தெரியாதவளும், தற்காலம் கைகேயியுடனிருப்பவளுமான மந்தரையென்பவள், சந்திர மண்டலத்திற்கொப்பான, உப்பரிகையின்மேல் தற்செயலாக ஏறினாள்.

2. (பொ-ரை) மந்தரையானவள். அந்த உப்பரிகையிலிருந்தே ராஜவீதிகள் முழுவதும், ஜலம் தெளித்து புஷ்பங்களிறைத்திருக்கிற அயோத்யா நகரம் முழுவதையும் நன்றாய் பார்த்தாள்.

* "यतोजाता" என்பதினால், அயோத்தியில் பிறந்திருந்தால் இந்த கெட்ட புத்தியுடையளாயிராது, வேறு எங்கேயோ பிறந்தவளென்றும், அல்லது:-

ராவணவதத்திற்காக அவதரித்த ஸ்ரீராமன், முடிசூடி ராஜ்யத்திலிருந்துவிட்டால், கார்யம் கெட்டுவிடுமென்று நினைத்து, அபிஷேகத்திற்குத் தடைசெய்தவர்களால் அனுப்பப்பட்ட மந்தரையென்னும் ஓர் அப்ஸரஸ்த்ரீ பூமியில் பிறந்த ஸமயத்தை எதிர் பார்த்துக்கொண்டு, கைகேயி பந்துபோல கூடயிருக்கிறவள் இந்த ரஹஸ்யத்தை, ப்ரகாசப்படுத்த எண்ணமில்லாமல், ஸ்ரீ வால்மீகி மஹரிஷிகோ ஒரு கார்யத்திற்காகப் பிறந்தவளென்று மறைத்துச் சொன்னார் என்று

पताकाभिर्वराहाभिर्ध्वजैश्च समलङ्कृताम् ।
वृतां छन्दपथैश्चापि शिरःस्नातजनैर्वृताम् ॥ 3 ॥

माल्यमोदकहस्तैश्च द्विजेन्द्रैरभिनादिताम् ।
शुक्लदेवगृहद्वारां सर्ववादित्रनिस्वनाम् ॥ 4 ॥

संप्रहृष्टजनाकीर्णां ब्रह्मघोषाभिनादिताम् ।
प्रहृष्टवरहस्त्यश्वां संप्रणर्दितगोवृषाम् ॥ 5 ॥

प्रहृष्टमुदितैः पौरैरुच्छ्रितध्वजमालिनीम् ।
अयोध्यां मन्थरा दृष्ट्वा परं विस्मयमागता ॥ 6 ॥

---

3–4–5–6. (ப-ரை) वराहाभिः- ச்ரேஷ்டங்களான, पताकाभिः- டக்கயங்களாலும், ध्वजैः च- கொடிகளாலும், समलङ्कृताम्- நன்றாய் அலங்கரிக்கப்பட்டும், छन्दपथैः च अपि- இஷ்டப்படி ஜனங்கள் ஸஞ்சரிக்கக்கூடிய வழிகளாலும், वृतां- சூழப்பட்டதும். शिरःस्नातजनैः- மங்கள ஸ்நானம் செய்த ஜனங்களால், वृताम्- சூழப்பட்டதும், माल्यमोदकहस्तैः- மாலைகளையும், கொழுக்கட்டைகளையும், கையிலுடையவர்களான, द्विजेन्द्रैः- ப்ராமணோத்தமர்களால், अभिनादिताम्- எங்கும் வேதகோஷம் செய்யப்பட்டும், शुक्लदेवगृहद्वारां வெளுப்பான தேவாலயங்களின் வாசலையுடையதும், सर्ववादित्रनिस्वनाम्- எல்லா வாத்யங்களின் சப்தமுள்ளதாயும், संप्रहृष्टजनाकीर्णां- மிகவும் ஸந்தோஷமுள்ள ஜனங்களால் நிறைந்ததும், ब्रह्मघोषाभिनादिताम्- வேதகோஷத்தினால் சப்தமுள்ளதும், प्रहृष्टवरहस्त्यश्वां- மிகவும் ஸந்தோஷமுள்ள ச்ரேஷ்டமான யானைகளையும், குதிரைகளையுமுடையதும், संप्रणर्दितगोवृषाम्- செருக்கினால் சப்திக்கின்ற சிறந்த காளைகளையுடையதும், प्रहृष्टमुदितैः- சரீரத்தில் மயிர்க்கூச்செறிந்தும், மனதில் ஸந்தோஷமுள்ளவர்களுமான, पौरैः- பட்டணத்து ஜனங்களால், उच्छ्रितध्वजमालिनीम्- உயரக்கட்டப்பட்ட கொடிகளின் வரிசைகளையுடையதுமான, अयोध्यां- அயோத்யா நகரத்தை, मन्थरा- மந்தரையானவள், दृष्ट्वा- பார்த்து, परं- அதிகமான, विस्मयं- ஆச்சர்யத்தை, आगता- அடைந்தாள்.

3–4–5–6. (பொ-ரை) ச்லாக்யமான டக்கயங்களை, கொடிகளை கட்டி, அழகாயும், ஜனங்கள் இஷ்டப்படி ஸஞ்சரிக்கக்கூடிய சிறு வீதிகளுள்ளதும், ஸ்ரீராம பட்டாபிஷேகத்திற்காக மங்களஸ்நானம் செய்த ஜனங்களால் சூழப்பட்டும், புஷ்ப மாலைகளையும், கொழுக்கட்டைகளையும், கையில் வைத்துக்கொண்டு, ஸ்வஸ்தி வாச

प्रहर्षोत्फुल्लनयनां पाण्डुरक्षौमवासिनीम् ।
अविदूरे स्थितां दृष्ट्वा धात्रीं पप्रच्छ मन्थरा ॥ 7 ॥

उत्तमेनाभिसंयुक्ता हर्षेणार्थपरा सती ।
राममाता धनं किंनु जनेभ्यः संप्रयच्छति । ॥ 8 ॥

---

7. (ப-ரை) मन्थरा- மந்தரையானவள், प्रहर्षोत्फुल्लनयनां- ஸந்தோஷத்தினால் மலர்ந்த கண்களையுடையவளும், पाण्डुरक्षौमवासिनीम्- வெண்பட்டை தரித்தவளும், अविदूरे- ஸமீபத்திலே, स्थितां- இருக்கிற, धात्रीं- (ஸ்ரீராமனுடைய) செவிலித்தாயை, दृष्ट्वा- பார்த்து, पप्रच्छ- வினவினாள்.

8. (ப-ரை) राममाता- ராமனுடைய தாயான கௌஸல்யையானவள், अर्थपरा सती- பணத்தில் ஆசையுள்ளவளாக இருந்தும், उत्तमेन- அதிகமான, हर्षेण- ஸந்தோஷத்தோடு, अभिसंयुक्ता- கூடிக்கொண்டு, जनेभ्यः- ஜனங்களின் பொருட்டு, धनं- தனத்தை, संप्रयच्छति- கொடுக்கிறாளே, किंनु- (அது) என்ன காரணம்?

னம் செய்கிற ப்ராம்மணர்களின் வேத கோஷமுள்ளதாயும், தேவாலயங்களில் சுண்ணம்பு அடித்தும், நானாவித வாத்ய கோஷங்களுள்ளதும, ஸந்தோஷமுள்ள ஜனங்களால் சூழப்பட்டும், எங்கும் வேதபாராயண கோஷமுள்ளதும, மிகவும் களிப்படைந்த யானைகளும, குதிரைகளுமுள்ளதும,ஸந்தோஷத்தினால் மொககாயமிடுகிற காளைகளையுடையதும், மனக்களிப்பினால் மயிர்க்கூச்சல் எரிந்த பட்டணத்து ஜனங்களால், அங்கங்கு கொடிகள் கட்டப்பட்டிருக்கிற அழகான அயோத்யா நகரத்தைப் பார்த்து மந்தரை மிக்க ஆச்சர்யமடைந்தாள்.

7. (பொ-ரை) ஸ்ரீராம பட்டாபிஷேக விஷயமான ஸந்தோஷத்தினால், கண்கள் மலர்ந்து வெண்பட்டுடுத்தி ஸமீபத்தில், (உப்பரிகையில் நின்றிருக்கிற) ஸ்ரீராமன் செவிலித்தாயாரைப்பார்த்து, மந்தரை கேட்டாள்.

8. (பொ-ரை) ஸ்ரீராமன் தாயான கௌஸல்யாதேவி, பணத்தைச் சேர்ப்பதில் நோக்கமுடையவளாயிருந்தும், ஜனங்களுக்கு தனத்தைக்கொடுக்கிறாளே, அது என்ன காரணம்?

अतिमात्रप्रहर्षोऽयं किं जनस्य च शंस मे।
कारयिष्यति किं वापि संप्रहृष्टो महीपतिः ॥ 9 ॥

विदीर्यमाणा हर्षेण धात्री तु परया मुदा।
आचचक्षेऽथ कुब्जायै भूयसीं राघवश्रियम् ॥ 10 ॥

श्वः पुष्येण जितक्रोधं यौवराज्येन राघवम्।
राजा दशरथो राममभिषेचयिताऽनघम् ॥ 11 ॥

9. (ப-ரை) जनस्य- ஜனத்திற்கு, अयं- இந்த, अतिमात्रप्रहर्षः- அளவில்லாத ஆனந்தம், (दृश्यते- காணப்படுகிறதே), किं- (அதற்கு) என்ன காரணம்? मे- எனக்கு, शंस- சொல்லு, महीपतिः- அரசன், संप्रहृष्टः- மிகவும் ஸந்தோஷமுள்ளவராய், किं अपि- ஏதாவது காரியத்தை, कारयिष्यति वा- செய்விக்கப்போகிறாரோ?

10. (ப-ரை) धात्री तु- செவிலித்தாயானவள், हर्षेण- ஸந்தோஷத்தினால், विदीर्यमाणा-(सती)- வெடித்துவிடுபவள்போல், परया- மேலான, मुदा- ஸந்தோஷத்தினால், भूयसीं- அதிகமான, राघवश्रियम्- ராமனுக்கு வரப்போகிற ராஜ்ய ஸம்பத்தை, कुब्जायै- மந்தரை என்கிற கூனியின் பொருட்டு, आचचक्षे- சொன்னாள்.

11. (ப-ரை) दशरथः राजा- தசரத மஹாராஜன், पुष्येण- புஷ்யநக்ஷத்திரத்தோடு சேர்ந்த, श्वः- நாளையதினத்தில், जितक्रोधं- ஜயிக்கப்பட்ட கோபத்தையுடையவனும், अनघम्- குற்றமற்றவனும், राघवम्- ரகு குலத்தில் பிறந்தவனுமான, रामं- ஸ்ரீராமனை, यौवराज्येन- இளவரசினால், अभिषेचयिता- அபிஷேகம் செய்யப்போகிறார்.

9. (பொ-ரை) நகரத்தில் எந்த ஜனத்தைப் பார்த்தபோதிலும், மிகவும் களித்திருக்கிறதே, அது என்ன காரணத்தினால். அல்லது மஹாராஜாவாவது, அதிக பேரானந்தத்துடன் ஏதாவது மங்கள காரியத்தை நடத்தப்போகிறாரா? சொல்லு அம்மா!

10. (பொ-ரை) ராமனுடைய செவிலித்தாயானவள், ஆனந்தத்தினால் தேஹம் வெடிக்கும்போல, மிக்க ஸந்தோஷத்துடன் ஸ்ரீராமனுக்குச் சிறந்தசெல்வம் உண்டாகப்போவதாக கூனியிடம் சொன்னாள்.

11. (பொ-ரை) புஷ்ய நக்ஷத்திரம் கூடிய நாளையதினம், தசரத மஹாராஜா, கோபமில்லாதவனும், வேறு ஒருவிதமான கெட்ட எண்ணங்களுமில்லாதவனும், வடிவழகனுமான ஸ்ரீராமனுக்கு, யௌவராஜ்ய பட்டாபிஷேகம் செய்யப்போகிறார்.

धात्र्यास्तु वचनं श्रुत्वा कुब्जा क्षिप्रममर्षिता ।
कैलासशिखराकारात्प्रासादादवरोहत ॥ 12 ॥

सा दह्यमाना कोपेन मन्थरा पापदर्शिनी ।
शयानामेत्य कैकेयीमिदं वचनमब्रवीत् ॥ 13 ॥

उत्तिष्ठ मूढे किं शेषे भयं त्वामभिवर्तते ।
उपप्लुतमघौघेन किमात्मानं न बुध्यसे ॥ 14 ॥

12. (ப-ரை) धात्र्याः- தாத்ரியின், वचनं- வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, कुब्जा तु- கூனியானவள், अमर्षता- கோபமுள்ளவளாகி, कैलासशिखराकारात्- கைலாஸ சிகரம் போன்ற, प्रासादात्- உப்பரிகையிலிருந்து, क्षिप्र- சீக்ரமாக, अवरोहत- இறங்கினாள்.

13. (ப-ரை) पापदर्शिनी- கெட்ட அபிப்ராயமுள்ள, सा- அந்த, मन्थरा- மந்தரை, कोपेन- கோபத்தினால், दह्यमाना- வேகின்றவள்போல், शयानां- படுத்துக்கொண்டிருக்கிற, कैकेयीं- கைகேயியை, एत्य- அடைந்து, इदं वचनं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னாள்.

14. (ப-ரை) हे मूढे- ஓ அறிவில்லாதவளே, उत्तिष्ठ- எழுந்திரு, किं शेषे- ஏன் தூங்குகிறாய், भयं- பயமானது, त्वां- உன்னை, अभिवर्तते- ஸமீபித்துவிட்டது, अघौघेन- துக்கங்களின் ஸமூஹங்களினால், उपप्लुतं- பீடிக்கப்பட்டிருக்கிற, आत्मानं- தன்னை (உன்னை), किं- ஏன், न बुध्यसे- அறிகிறாயில்லை.

12. (பொ-ரை) அவ்விதம், தாத்ரியின் பேச்சைக்கேட்டு, கூனி மிகவும் கோபங்கொண்டு, கைலாஸ மலையின் சிகரம்போல் உயர்ந்து வெளுப்பான, அந்த உப்பரிகையிலிருந்து உடனே கீழே இறங்கிவிட்டாள்.

13. (பொ-ரை) கெட்ட எண்ணமுள்ளவளாய் பிறர்களுக்கு [illegible] போதிப்பவளுமான அந்த மந்தரையானவள், தேகமெல்லாம் கொதிக்கும்படி மிகுந்த கோபத்துடன், அந்தப்புரத்தில் படுத்துக்கொண்டிருக்கிற கைகேயியிடம் வந்து, இந்த வார்த்தையை சொல்லத்தொடங்கினாள்.

14. (பொ-ரை) அடி புத்தியில்லாதவளே! எழுந்திரு, ஏன் தூங்கிக்கொண்டிருக்கிறாய். நீ நடுங்கவேண்டிய காலம் வந்துவிட்டது. பயமானது உன்னை நாடி வந்துவிட்டது. துக்கங்களின் கூட்டத்தினால் பீடிக்கப்பட்டிருக்கிற உன்னுடைய நிலைமையை, ஏன் நீ அறியவில்லை.

अनिष्टे सुभगाकारे सौभाग्येन विकत्थसे ।
चलं हि तव सौभाग्यं नद्याः स्रोत इवोष्णगे ॥ 15 ॥

एवमुक्ता तु कैकेयी रुष्टया परुषं वचः ।
कुब्जया पापदर्शिन्या विषादमगमत्परम् ॥ 16 ॥

कैकेयी त्वब्रवीत्कुब्जां कच्चित्क्षेमं न मन्थरे ।
विषण्णवदनां हि त्वां लक्षये भृशदुःखिताम् ॥ 17 ॥

15. (ப-ரை) अनिष्टे- (மஹாராஜனுக்கு) ப்ரியமில்லாதவளே! सुभगाकारे- பெருமையுள்ளவள்போல் ரூபமுடையவளே, सौभाग्येन- பெருமையினால், विकत्थसे- தற்புகழ் செய்துகொண்டிருக்கிறாய், हि- ஏனென்றால், तव- உன்னுடைய, सौभाग्य- பெருமையானது, उष्णगे- வெயிற்காலத்தில், नद्याः- நதியினுடைய, स्रोत:इव- ப்ரவாஹம்போல, चलं- குறையக்கூடியது.

16. (ப-ரை) एवं- இவ்விதம், रुष्टया- கோபமுள்ளவளாயும், पापदर्शिन्या- கெட்ட எண்ணமுள்ளவளுமான, कुब्जया- கூனியினால், परुषं- கொடுமையான, वचः- வார்த்தையை, उक्ता- சொல்லப்பட்டிருக்கிற, कैकयी तु- கைகேயியோவென்றால், परं- அதிகமான, विषाद- துக்கத்தை, अगमत्- அடைந்தாள்.

17. (ப-ரை) कैकयी तु- கைகேயியும், कुब्जां- கூனியைப்பார்த்து, अब्रवीत्- சொன்னாள், मन्थरे- மந்தரையே, क्षेमं- (உனக்கு) க்ஷேமமானது, न कच्चित्- இல்லையா என்ன! हि- ஏனென்றால், विषण्णवदना- வ்யஸனமடைந்த முகத்தையுடையவளான, त्वां- உன்னை, भृशदुःखिताम- மிகவும் துக்கமுடையவளாக, लक्षये- பார்க்கிறேன்.

15. (பொ-ரை) மஹாராஜனுக்கு ப்ரியமில்லாதவளே, பார்த்தவர்களுக்கு ப்ரியம் அடைந்தவளைப்போல் தோன்றுகிறவளே, நான் ஒருவளே மஹாராஜாவுக்கு மிகவும் ப்ரியமுள்ளவள் என்று வீண் பெருமை பேசுகிறாய். கோடைகாலத்தில் நதியின் ப்ரவாஹம் கொஞ்சம் கொஞ்சமாய் குறைந்துவருவதுபோல், உன்னுடைய பெருமையும் குறைந்துவருகிறதன்றோ!

16. (பொ-ரை) கோபமுள்ளவளும் கெட்ட எண்ணமுள்ளவளுமான கூனியின் கடுஞ்சொல்லைக்கேட்டு, கைகேயி மிகவும் வ்யஸனம் கொண்டாள்.

17. (பொ-ரை) மந்தரையே! முகம் வாடி மிகவும் துக்கமுள்ளவளாக நீ காணப்படுகிறாயே, உனக்கு ஏதாவது க்ஷேமக்குறைவு ஏற்பட்டதா? என்று கூனியைப்பார்த்துக் கைகேயி கேட்டாள்.

मन्थरा तु वचः श्रुत्वा कैकेय्या मधुराक्षरम् ।
उवाच क्रोधसंयुक्ता वाक्यं वाक्यविशारदा ॥ 18 ॥

सा विषण्णतरा भूत्वा कुब्जा तस्या हितैषिणी ।
विषादयन्ती प्रोवाच भेदयन्ती च राघवम् ॥ 19 ॥

अक्षय्यं सुमहद्देवि प्रवृत्तं त्वद्विनाशनम् ।
रामं दशरथो राजा यौवराज्येऽभिषेक्ष्यति ॥ 20 ॥

18 (ப-ரை) वाक्यविशारदा- வார்த்தை சொல்லுவதில் ஸாமர்த்தியமுள்ள, मन्थरा तु- கூனியும், मधुराक्षरम्- மதுரமான அக்ஷரங்களையுடைய, कैकेय्याः- கைகேயி னுடைய, वचः- வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, क्रोधसंयुक्ता- (सती-) கோபத்தோடு கூடின வளாக, वाक्यं- வார்த்தையை, उवाच- சொன்னாள்.

19. (ப-ரை) तस्याः- அந்த கைகேயிக்கு, हितैषिणी- ஹிதத்தை விரும்புகிற, सा कुब्जा- அந்த கூனியானவள், विषण्णतरा- மிகவும் துக்கமுடையவளாக, भूत्वा- ஆகி, विषादयन्ती- (கைகேயிக்கு) துக்கத்தை உண்டுபண்ணிக்கொண்டும், राघवम्- ராமனை க்(குறித்து), भेदयन्ती च- விரோதத்தை உண்டுபண்ணிக்கொண்டும், प्रोवाच- சொன் னாள்.

20. (ப-ரை) हे देवि- ஓ தேவியே! अक्षय्यं- மாற்றக்கூடாததும், सुमहत्- மிகவும் பெரிதான, त्वद्विनाशनम्- உனக்குக்கெடுதலானது, प्रवृत्त- வந்துவிட்டது, दशरथः राजा- தசரத மஹாராஜாவானவர், रामं- ஸ்ரீராமனை, यौवराज्ये- இளவரசில், अभिषेक्ष्यति- அபி ஷேகம் செய்யப்போகிறார்.

18. (பொ—ரை) வார்த்தை சொல்லுவதில் கெட்டிக்காரியான கூனியான வள், கைகேயியின் இனியதான சொற்களைக்கேட்டு கோபத்துடன் ஒரு வார்த்தை சொன்னாள்.

19. (பொ—ரை) கூனியானவள் கைகேயிக்கு ஹிதத்தைக்கோரிக்கொண்டு, மிகவும் வருத்தமுள்ளவளாக, கைகேயிக்கு துக்கத்தை உண்டுபண்ணுவதற்காகவும், ராமனிடத்தில் இருக்கிற கைகேயின் ஸ்நேஹத்தைக் கெடுப்பதற்காகவும், ஒரு வார்த்தை சொன்னாள்.

20. (பொ—ரை) ஓ தேவியே! ஒரு பரிஹாரமுமில்லாததான மிகவும் பெரி தான, கெடுதி உனக்கு ஏற்பட்டுவிட்டது. என்னென்றால், தசரத மஹாராஜா, ராம னுக்கு யௌவராஜ்ய பட்டாபிஷேகம் செய்யப்போகிறார்.

मामप्यगाधे भये मग्ना दुःखशोकसमन्विता।
दह्यमानानलेनेव त्वद्धितार्थमिहागता ॥ 21 ॥

तव दुःखेन कैकेयि मम दुःखं महद्भवेत्।
त्वद्वृद्धौ मम वृद्धिश्च भवेदत्र न संशयः ॥ 22 ॥

नराधिपकुले जाता महिषी त्वं महीपतेः।
उग्रत्वं राजधर्माणां कथं देवि न बुध्यसे ॥ 23 ॥

---

21. (ப-ரை) मा- அப்படிப்பட்ட நான், अगाधे- ஆழமான, भये- பயத்தில், मग्ना- முழுகினவளும், दुःखशोकसमन्विता- துக்கத்தோடும், சோகத்தோடும், கூடினவளும், अनलेन- நெருப்பினால், दह्यमाना इव- தஹிக்கப்பட்டவள்போன்றும், त्वद्धितार्थ- உன்னுடைய ஹிதத்திற்காக, इह- இங்கு, आगता- (अस्मि)- வந்திருக்கிறேன்.

22. (ப-ரை) कैकेयि- கைகேயியே, तव- உனக்கு, दुःखेन- (உண்டான) துக்கத்தினால், मम- எனக்கு, महत्- பெரிதான, दुःखं- துக்கமானது, भवेत्- உண்டாகும், त्वद्वृद्धौ- உனக்கு க்ஷேமம் உண்டாகும்போது, मम च- எனக்கும், वृद्धिः- க்ஷேமமானது, भवेत्- உண்டாகும், अत्र- இவ்விஷயத்தில், संशयः न- ஸந்தேஹமில்லை.

23. (ப-ரை) देवि- தேவியே! त्वं- நீ, नराधिपकुले- ராஜவம்சத்தில் பிறந்தவள், महीपतेः- அரசனுக்கு, महिषी பட்டமஹிஷியுமானவள், राजधर्माणां- ராஜதர்மங்களின், उग्रत्वं- கொடுமையை, कथं- ஏன், न बुध्यसे- அறியவில்லை.

---

21. (பொ-ரை) தேவி! ஆழ்ந்த பயத்தில் துக்கத்துடனும் சோகத்துடனும் நெருப்பினால் தஹிக்கப்பட்டவள்போல், உனக்கு ஹிதத்தை தெரிவிப்பதற்காகவே இங்கு வந்தேன்.

22. (பொ-ரை) கைகேயி! உனக்கு துக்கமுண்டானால், எனக்கும் பெரிதான துக்கமுண்டாகும். உனக்கு க்ஷேமம் உண்டானால் எனக்கும் க்ஷேமமுண்டாகும். இதில் ஸந்தேஹமில்லை.

23. (பொ-ரை) தேவி! நீ ராஜகுலத்தில் பிறந்து மஹாராஜருக்கு பட்டமஹிஷியாகயிருந்தும், அரசர்களின் தர்மங்கள் கொடியனவென்று ஏன் தெரிந்து கொள்ளவில்லை.

धर्मवादी शठो भर्ता श्लक्ष्णवादी च दारुणः ।
शुद्धभावेन जानीषे तेनैवमतिसन्धिता ॥ 24 ॥

उपस्थितं प्रयुञ्जानस्त्वयि सान्त्वमनर्थकम् ।
अर्थेनैवाद्य ते भर्ता कौसल्यां योजयिष्यति ॥ 25 ॥

अपवाह्य स दुष्टात्मा भरतं तव बन्धुषु ।
काल्ये स्थापयिता रामं राज्ये निहतकण्टके ॥ 26 ॥

24. (ப-ரை) भर्ता- உன்னுடைய பர்த்தாவான மஹாராஜர், धर्मवादी- வாயினால் தர்மத்தைச்சொல்லுகிறவர், शठः- மனதில் மோசக்கருத்துள்ளவர், श्लक्ष्णवादी- இனிய பேச்சு பேசுகிறவர், दारुणः- கொடிய கார்யம் செய்பவர், (एन- இப்படிப்பட்டவரை), शुद्धभावेन- கபடமில்லாத எண்ணத்துடன் (கூடினவராக), जानीपे- அறிகிறாய், तेन- அதினால், एवं- இவ்விதம், अतिसन्धिता- மோசம் செய்யப்பட்டாய்.

25. (ப-ரை) ते- உன்னுடைய, भर्ता- பர்த்தாவானவர், त्वयि- உன்னிடம், उपस्थितं- அந்தந்த காலத்திற்குத் தகுந்தபடி, अनर्थकम्- ப்ரயோஜனமில்லாத, सान्त्व- இனிய பேச்சை, प्रयुञ्जानः- சொல்லிக்கொண்டு, अद्य- இப்போது, कौसल्यां- एव- கௌஸல்யா தேவிக்கே, अर्थेन- ஸம்பத்தோடு, योजयिष्यति- சேர்ப்பிக்கப்போகிறார்.

26. दुष्टात्मा- துர்புத்தியான, सः- அந்த மஹாராஜா, भरतं- (உன் பிள்ளையான) பரதனை, तव- உன்னுடைய, बन्धुषु- பந்துக்களிடத்தில், अपवाह्य- துரத்திவிட்டு, निहतकण्टके- சத்ருவில்லாமலிருக்கிற, राज्ये- ராஜ்யத்தில், रामं- ராமனை, काल्ये- நாளைய தினத்தில், स्थापयिता- ஸ்தாபிக்கப்போகிறார்.

24. (பொ-ரை) தேவி! உன்னுடைய பர்த்தா, தர்மம் பேசுகிறவர்போலிருந்து மனதில் கெட்ட எண்ணமுடையவர். இனியவார்த்தை சொல்லுகிறவர்போலிருந்து கொடிய கார்யத்தை செய்கிறவர். இப்படிப்பட்டவரை, கபடமொன்றுமில்லாதவர் என்று எண்ணிக்கொண்டிருக்கிறாய். அதனால்தான் இப்படி உன்னை மோசம செய்துவிட்டார்.

25. (பொ-ரை) உன் பர்த்தா ஸமயத்திற்குத் தகுந்தபடி ப்ரயோஜனமில்லாத இனிய பேச்சுகளைப்பேசிக்கொண்டு, கௌஸல்யா தேவியிடமே, வேண்டிய பொருள்களை இப்பொழுது சேர்க்கப்போகிறார்.

26. (பொ-ரை) துர்ப்புத்தியான தசரத மஹாராஜனும், உன் பிள்ளையான பரதனை, பந்துக்கள் வீட்டிற்கு அடித்து ஓட்டிவிட்டு, சத்ருவில்லாமல் ராஜ்யத்தில் ராமனை நாளையதினம் பட்டாபிஷேகம் செய்விக்கப்போகிறார்.

शत्रुः पतिप्रवादेन मात्रेव हितकाम्यया ।
आशीविष इवाङ्केन बाले परिहृतस्त्वया ॥ 27 ॥

यथा हि कुर्यात्सर्पो वा शत्रुर्वा प्रत्युपेक्षितः ।
राज्ञा दशरथेनाद्य सपुत्रा त्वं तथा कृता ॥ 28 ॥

पापेनानृतसान्त्वेन बाले नित्यसुखोचिते ।
रामं स्थापयता राज्ये सानुबन्धा हता ह्यसि ॥ 29 ॥

27. (ப-ரை) हे बाले- பேதைமையுடையே, पतिप्रवादेन- பர்த்தாவென்கிற வ்யாஜத்தினால், शत्रुः- சத்ருவானவன், त्वया- உன்னால், हितकाम्यया- நன்மையில் ஆசையினாலே, मात्रा इव- தாயினால் போல, आशीविष इव- ஸர்ப்பமானது போல், अङ्केन- மடியினால், परिहृतः- தரிக்கப்பட்டார்.

28. (ப-ரை) प्रत्युपेक्षितः- கவனிக்கப்படாமலிருக்கிற, सर्पो वा- ஸர்ப்பமோ, शत्रुर्वा- சத்ருவோ, यथा हि- எப்படி, कुर्यात्- செய்யுமோ, दशरथेन राज्ञा- தசரத ராஜனால், सपुत्रा- பிள்ளையுடன் கூடிய, त्वं- நீ, अद्य- இப்பொழுது, तथा- அப்படி, कृता- செய்யப்பட்டாய்.

29. (ப-ரை) बाले- பேதைமையுடையே, नित्यसुखोचिते- எப்பொழுதும் ஸௌக்கியத்திற்கே தகுந்தவளே, पापेन- கெட்ட எண்ணமுள்ளவரும், अनृतसान्त्वेन- பொய்யான இனிமையான பேச்சையுடையவருமான, राज्ये- ராஜ்யத்தில், राम- ராமனை, स्थापयता- ஸ்தாபிக்கின்ற பர்த்தாவால், (ராஜனால்) (त्वं- நீ) सानुबन्धा- உன் இனத்தாருடன் கூட, हता असि हि- அழிக்கப்பட்டாய்.

27. (பொ-ரை) தனக்கு ஹிதத்தை விரும்பி, ஒரு ஸ்திரீயானவள் பாம்பை மடியில் வைத்துக்கொண்டு போஷிக்கிறது போல், துர்ப்புத்தியான சத்ருவை, பர்த்தாவென்கிற வ்யாஜத்தினால், மடியில் வைத்துக்கொண்டிருக்கிறாய்.

28. (பொ-ரை) ஒருவனுக்கு சத்ருவோ, ஸர்ப்பமோ, இருப்பதை கவனிக்காமலிருந்தால், என்ன அனர்த்தத்தைச் செய்யுமோ, அவ்விதமான அனர்த்தத்தை உனக்கும், உன் பிள்ளைக்கும், தசரத மஹாராஜன் இப்பொழுது செய்துவிட்டார்.

29. (பொ-ரை) பேதைமையுடையே! எப்பொழுதும், ஸௌக்கியப்படுவதற்கே தகுந்தவளே, இனிமையான பேச்சுக்களைப் பொய்யாகப்பேசி கெட்ட உள்ளமுடைய உன்னுடைய பர்த்தா, நாளை ராமனுக்கு யௌவராஜ்ய பட்டாபிஷேகம் பண்ணப் போகிறபடியால், நீயும் உன் இனத்தார்களும் அழிந்து விட்டீர்கள்.

सा प्राप्तकालं कैकेयि क्षिप्रं कुरु हितं तव ।
त्रायस्व पुत्रमात्मानं मां च विस्मयदर्शने ॥ 30 ॥

मन्थराया वचः श्रुत्वा शयाना सा शुभानना ।
उत्तस्थौ हर्षसंपूर्णा चन्द्रलेखेव शारदी ॥ 31 ॥

अतीव सा तु संहृष्टा कैकेयी विस्मयान्विता ।
एकमाभरणं तस्यै कुब्जायै प्रददौ शुभम् ॥ 32 ॥

30. (ப-ரை) विस्मयदर्शने- ஆச்சர்யமான ஞானமுள்ள, कैकयि- கைகேயியே, सा (त्वं-) அப்படிப்பட்ட நீ, तव- உனக்கு, प्राप्तकाल- காலம் நேர்ந்த, हित- ஹிதத்தை, क्षिप्रं- சீக்கிரமாக, कुरु- செய்துகொள், पुत्रं- புத்திரனையும், आत्मानं- உன்னையும், मां च- என்னையும், त्रायस्व- காப்பாற்று.

31. (ப-ரை) शयाना- படுத்துக்கொண்டிருக்கிற, सा- அந்த கைகேயி, मन्थरायाः- மந்தரையினுடைய, वचः- வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, हर्षसपूर्णा- ஸந்தோஷம் நிறைந்தவளும், (अत एव- ஆகையினாலேயே) शुभानना- அழகுள்ள முகமுடையவளாகியும், शारदी- சரத்காலத்து, चन्द्रलेखा इव- சந்திரகலைபோல், उत्तस्थौ- எழுந்திருந்தாள்.

32. (ப-ரை) सा- அந்த, कैकयी तु- கைகேயியோவென்றால், अतीव- மிகவும், संहृष्टा (सती-) ஸந்தோஷமுடையவளாயும், विस्मयान्विता- ஆச்சர்யத்தோடு கூடினவளாயும், (இருந்து) तस्यै कुब्जायै- அந்த கூனியின் பொருட்டு, शुभम्- அழகான, ए . आभरणं- ஒரு ஆபரணத்தை, प्रददौ- கொடுத்தாள்.

30. (பொ-ரை) அந்தந்த ஸமயத்தில் செய்யக்கூடிய, கார்யத்தை கவனிப்பதற்கு ஏற்ற ஆச்சர்ய புத்தியுடையவளான கைகேயியே, தகுந்த ஸமயத்தில் உனக்கு ஏற்கும் ஹிதத்தை இப்பொழுது செய்துகொள். உன் புத்திரனையும், என்னையும், உன்னையும் காப்பாற்றிக்கொள.

31. (பொ-ரை) படுத்துக்கொண்டிருந்த அந்த கைகேயி, இவ்விதம் கூனியின் வார்த்தையைக்கேட்டு, பரம ஸந்தோஷமுடையவளாக, மலர்ந்த அழகான முகத்துடன் சரத்காலச் சந்திரகலைபோல் எழுந்திருந்தாள்.

32. (பொ-ரை) அந்த கைகேயியும், பரம ஸந்தோஷத்துடன் ஆச்சர்யப்பட்டுக்கொண்டு, ராமாபிஷேக வ்ருத்தாந்தத்தைத் தனக்குச்சொன்ன கூனிக்கு அழகான ஒரு ஆபரணத்தைக் கொடுத்தாள்.

दत्वा त्वाभरणं तस्यै कुब्जायै प्रमदोत्तमा ।
कैकेयी मन्थरां दृष्ट्वा पुनरेवाब्रवीदिदम् ॥ 33 ॥

इदं तु मन्थरे मह्यमाख्यासि परमं प्रियम् ।
एतन्मे प्रियमाख्यातुः किं वा भूयः करोमि ते ॥ 34 ॥

रामे वा भरते वाहं विशेषं नोपलक्षये ।
तस्मात्तुष्टास्मि यद्राजा रामं राज्येऽभिषेक्ष्यति ॥ 35 ॥

33. (ப-ரை) प्रमदोत्तमा- உத்தம ஸ்திரீயான, कैकेयी- கைகேயியானவள், तस्यै कुब्जायै- அந்த கூனியின் பொருட்டு, आभरणं- ஆபரணத்தை, दत्वातु- கொடுத்துவிட்டு, पुनरेव- மறுபடியும், मन्थरां- கூனியை, दृष्ट्वा- பார்த்து, इदं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னாள்.

34. (ப-ரை) हे मन्थरे- ஓ மந்தரையே, परमं प्रियम्- உத்தம ப்ரியமான, इदं तु- இந்த ராமபட்டாபிஷேக வ்ருத்தாந்தத்தை, मह्य- என் பொருட்டு, आख्यासि- சொல்லுகிறாய், मे- எனக்கு, एतत्-प्रियं- இந்த ப்ரியமான வார்த்தையை, आख्यातुः- சொல்லுகின்ற, ते- உனக்கு, भूयः- அதிகமாக, किंवाकरोमि- எதைச்செய்வேன்.

35. (ப-ரை) अहं- நான், रामे वा- ராமனிடத்திலோ, भरते वा- பரதனிடத்திலோ, विशेषं- பேதத்தை (வித்யாஸத்தை), नोपलक्षये-அறியவில்லை, यत्- எந்தகாரணத்தினால், राजा- அரசன், रामं- ராமனை, राज्ये- ராஜ்யத்தில், अभिषेक्ष्यति- பட்டாபிஷேகம் செய்யப்போகிறாரோ, तस्मात्- ஆகையால், तुष्टा अस्मि- ஸந்தோஷமுள்ளவளாக ஆகிறேன்.

33. (பொ-ரை) ஸத்குலத்தில் பிறந்த உத்தமஸ்திரீயான, கைகேயியும், கூனிக்கு ஆபரணத்தைக் கொடுத்துவிட்டு, மறுபடியும் அவளைப்பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிறாள்.

34. (பொ-ரை) ஹே மந்தரையே, எனக்கு மிகவும் ப்ரியமான வ்ருத்தாந்தத்தை, சொல்லுகின்ற உனக்கு நான் மறுபடி அதிகமாக என்ன பஹுமானம் செய்யப்போகிறேன்.

35. (பொ-ரை) என் ஸபத்னீ புத்திரனை ராமனிடத்திலும், என் சொந்தப் பிள்ளையாகிய பரதனிடத்திலும் ஒருவித விசேஷத்தையும், நான் அறியவில்லை. ஆகையால், மஹாராஜா ஸ்ரீராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்யப்போகிறதைக்கேட்டு மிகவும் ஸந்தோஷப்படுகிறேன்.

न मे परं किंचिदितस्त्वया पुनः प्रियं प्रियार्हे सुवचं वचः परम् ।
तथा ह्यवोचस्त्वमतः प्रियोत्तरं परं वरं ते प्रददामि तं वृणु ॥ 36 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
सप्तमः सर्गः ॥ 7 ॥

---

36. (ப-ரை) हे प्रियार्हे- ப்ரியத்தை பெற்றுக்கொள்ளத் தகுந்தவளே! मे- எனக்கு, इतः परम्- இதைக்காட்டிலும் வேறான, प्रियं- ப்ரியமான, परं- உயர்ந்த, किंचित् वचः- ஒரு வார்த்தையானது, पुनः- மறுபடியும், त्वया- உன்னாலே, न सुवच- சொல்லமுடியாது, हि- ஏனென்றால், त्वं- நீ, तथा- அப்படி, अवोचःहि- சொல்லிவிட்டாயல்லவா! अतः- ஆகையால், प्रियोत्तरं- ப்ரியமான வஸ்துக்களில் சிறந்ததான, परं- வேறு, वरं- ஆசைப்படக்கூடிய, (வஸ்துவை) ते- உனக்கு, प्रददामि- கொடுக்கிறேன், तं- அந்த வஸ்துவை, वृणु- வேண்டிக்கொள்.

36. (பொ-ரை) நான் கொடுக்கும், ப்ரியமான வஸ்துவைப் பெற்றுக்கொள்ளத் தகுந்தவளே இப்பொழுது, நீ சொன்ன இந்த ராமாபிஷேக ஸந்தோஷத்தைத் தவிர வேறு எனக்கு ப்ரியமானதும், சிறந்ததும் உன்னால் சொல்லக்கூடியதுமான வார்த்தை ஒன்றுமில்லை. அப்படியன்றோ எல்லாப்ரியங்களைக் காட்டிலும் அதிகப் பிரியமான, ராமாபிஷேக ஸந்தோஷத்தை எனக்குச் சொன்னாய். ஆகையால் இதற்காக மிகவும் ப்ரியமாய் சிறந்ததான எந்த வஸ்துவை உனக்கு வெகுமானமாக வேண்டுகிறாயோ அதைக்கொடுக்கிறேன், வேண்டிக்கொள்.



अष्टमः सर्गः ॥ 8 ॥

मन्थरा त्वभ्यसूयैनामुत्सृज्याभरणं च तत् ।
उवाचेदं ततो वाक्यं कोपदुःखसमन्विता ॥ 1 ॥

1. (ப-ரை) मन्थरा तु- மந்தரையானவள், एनां (प्रति)- இந்த கைகேயியைக்குறித்து, अभ्यसूय- அஸூயையைச்செய்து, तत्- அந்த, आभरणं च- ஆபரணத்தையும், उत्सृज्य- எறிந்துவிட்டு, ततः- பிறகு, कोपदुःखसमन्विता- (सती) கோபத்துடனும், துக்கத்துடனும், கூடினவளாக, इदं वाक्यं- இந்த வார்த்தையை, उवाच- சொன்னாள்.

---

1. (பொ-ரை) கூனியானவள் கைகேயியிடம், அஸூயையை அடைந்து, கைகேயி கொடுத்த ஆபரணத்தையும் எறிந்துவிட்டுத் தான் சொன்ன ஹிதத்தைக் கேட்கவில்லையென்று கோபமும், அனர்த்தம் வந்துவிட்டதேயென்று, துக்கமுமுள்ளவளாய்க்கொண்டு, இந்த வார்த்தை சொல்லத் தொடங்கினாள்.

हर्षं किमिदमस्थाने कृतवत्यसि बालिशे ।
शोकसागरमध्यस्थमात्मानं नावबुध्यसे ॥ 2 ॥

मनसा प्रहसामि त्वां देवि दुःखार्दिता सती ।
यच्छोचितव्ये हृष्टासि प्राप्येदं व्यसनं महत् ॥ 3 ॥

शोचामि दुर्मतित्वं ते का हि प्राज्ञा प्रहर्षयेत् ।
अरेः सपत्नीपुत्रस्य वृद्धिं मृत्योरिवागताम् ॥ 4 ॥

---

2. (ப-ரை) हे वालिशे- அறிவில்லாதவளே! किमिदं- இதென்ன? अस्थाने- அகாலத்தில், हर्षं- ஸந்தோஷத்தை, कृतवती- செய்தவளாக, असि- ஆகிறாய், शोकसागरमध्यस्थं- துக்கக்கடலின் நடுவில் அமிழ்ந்திருக்கிற, आत्मानं- உன்னை, न अवबुध्यसे- அறிகிறாயில்லை.

3. (ப-ரை) देवि- ஓ தேவியே! दुःखार्दिता सती- துக்கத்தினால் பீடிக்கப்பட்டவளாய்க்கொண்டு, त्वां- உன்னைக்குறித்து, मनसा- மனதினால், प्रहसामि- சிரிக்கிறேன், यत्- எதினால், इदं- இந்த, महत्- பெரிதான, व्यसनं- (ராமபட்டாபிஷேகமென்கிற) ஆபத்தை, प्राप्य- அடைந்து, शोचितव्ये (सति)- வ்யஸனப்படவேண்டியிருக்க, हृष्टा असि- ஸந்தோஷப்படுகிறாயோ!

4. (ப-ரை) ते- உன்னுடைய, दुर्मतित्वं- மூடத்தன்மையைக்குறித்து, शोचामि- வருத்தப்படுகிறேன். मृत्योरिव- ம்ருத்யுவினுடையதுபோல், अरेः- சத்ருவான, सपत्नीपुत्रस्य- சக்களத்தியின் பிள்ளைக்கு, आगताम्- வந்திருக்கிற, वृद्धिं- பெருமையை (பார்த்து), का हि प्राज्ञा- புத்தியுள்ளவளான எந்த ஸ்த்ரீ, प्रहर्षयेत्- ஸந்தோஷப்படுவள்.

2. (பொ-ரை) அடி புத்தியில்லாதவளே! என்ன இது, வ்யஸனப்படவேண்டிய ஸமயத்தில், ஸந்தோஷப்படுகிறாயே! துக்கக்கடலின் நடுவில் நீ ஆழ்ந்திருப்பதை தெரிந்துகொள்ளவில்லை.

3. (பொ-ரை) தேவி, இந்தப்பெரிய ஆபத்து நேர்ந்ததைப்பற்றி, வ்யஸனப்படவேண்டியிருக்க, நீ ஸந்தோஷப்படுவதைப்பற்றி மிக வருத்தத்துடன் நான் மனதில் உன்னைக்குறித்து சிரிக்கிறேன்.

4. (பொ-ரை) உன்னுடைய புத்தியில்லாமையைப்பற்றி, நான் நிரம்பவும் வருத்தமடைகிறேன். ம்ருத்யுபோன்ற சத்ருவான, சக்களத்தியின் பிள்ளைக்கு, வந்திருக்கிற, ராஜ்ய லக்ஷ்மியைப்பற்றி புத்தியுள்ள எவள்தான் ஸந்தோஷப்படுவாள்!

भरतादेव रामस्य राज्यसाधारणाद्भयम्।
तद्विचिन्त्य विषण्णास्मि भयं भीताद्धि जायते ॥ 5 ॥

लक्ष्मणो हि महेष्वासो रामं सर्वात्मना गतः।
शत्रुघ्नश्चापि भरतं काकुत्स्थं लक्ष्मणो यथा ॥ 6 ॥

प्रत्यासन्नक्रमेणापि भरतस्यैव भामिनि।
राज्यक्रमो विप्रकृष्टस्तयोस्तावत्कनीयसोः ॥ 7 ॥

---

5. (ப-ரை) राज्यसाधारणात्- ராஜ்யத்தில் (பரதனுக்கும்) பாத்யமிருக்கிறபடியால், भरतात् एव- பரதனிடத்திலிருந்தே, रामस्य- ராமனுக்கு, भय- பயமானது (உண்டு), तत्- அதை, विचिन्त्य- எண்ணி, विषण्णा- வ்யஸனமுடையவளாக, अस्मि- ஆகிறேன், (हि- ஏனென்றால்), भीतात- பயப்பட்டவனிடத்திலிருந்து, भय- பயமானது, जायते- உண்டாகிறது.

6. (ப-ரை) महेष्वासः- பெரிய வில்லாளியான, लक्ष्मणो हि- லக்ஷ்மணனென்றால், सर्वात्मना- பலபடியாலும், रामं- ராமனை, गतः- அநுஸரித்திருக்கிறான், लक्ष्मणः- லக்ஷ்மணன், काकुत्स्थं यथा- ராமனை (அநுஸரித்திருப்பது) போல், शत्रुघ्नश्चापि- சத்ருக்னனும், भरतं- பரதனை, (गतः- அநுஸரித்திருக்கிறான்).

7. (ப-ரை) भामिनि- கோபமுடையவளே! प्रत्यासन्नक्रमेण अपि- அடுத்த முறையின் வரிசையினாலும், भरतस्य एव- பரதனுக்கே, (राज्य प्राप्तं- ராஜ்யம் கிடைக்கத்தகுந்தது), कनीयसोः- இளையவர்களான, तयोः तावत्- அந்த லக்ஷ்மணனுக்கும், சத்ருக்னனுக்கும், राज्यक्रमः- ராஜ்யம் கிடைக்கும் க்ரமமானது, विप्रकृष्टः- ஒதுங்கியிருக்கிறது.

5. (பொ-ரை) பரதனும் இந்த ராஜ்யத்திற்கு பாத்யப்பட்டவனாதலால், அவனைக்கண்டு ராமனுக்கு பயம் உண்டாகும். அதை நினைத்துத்தான் நான் வருந்தப்படுகிறேன். ஏனென்றால், பயப்பட்டவனிடமிருந்து, பயம் உண்டாகுமென்று.

6. (பொ-ரை) மஹாசூரனாகிய லக்ஷ்மணனும், பலவிதத்தாலும் ராமனை, அநுஸரித்திருக்கிறான். அதைப்போலவே சத்ருக்னனும் பரதனை அநுஸரித்திருக்கிறான். ஆகையால் அவ்விருவர்களிடமிருந்து ராமனுக்கோ, பரதனுக்கோ, பயம் உண்டாக ப்ரஸக்தியில்லை யென்று கருத்து.

7. (பொ-ரை) ஓ ரோஷமுடையவளே! வயதின் க்ரமத்தைப் பார்த்தாலும் ராமன் பிறந்த மறுநாளில் பரதன் பிறந்தபடியால், பரதனுக்கே ராஜ்யம் வரக்கூடிய க்ரமமிருக்கிறது. சிறுவர்களாகிய அந்த லக்ஷ்மணனுக்கும், சத்ருக்னனுக்கும், அந்தக்ரமம் அவ்வளவு நெருங்கியதாக இல்லை.

विदुषः क्षत्रचारित्रे प्राज्ञस्य प्राप्तकारिणः ।
भयात्प्रवेपे रामस्य चिन्तयन्ती तवात्मजम् ॥ 8 ॥

सुभगा खलु कौसल्या यस्याः पुत्रोऽभिषेक्ष्यते ।
यौवराज्येन महता श्वः पुष्येण द्विजोत्तमैः ॥ 9 ॥

प्राप्तां सुमहतीं प्रीतिं प्रतीतां तां हतद्विषम्
उपस्थाम्यसि कौसल्यां दासीव त्वं कृताञ्जलिः ॥ 10 ॥

---

8. (ப-ரை) विदुषः- பண்டிதனையும், क्षत्रचारित्रे- ராஜ நீதியில், प्राज्ञस्य- நிபுணனையும், प्राप्तकारिणः- தகுந்த காலத்தில் காரியம் செய்கிறவனுமான, रामस्य- ராமனிடமிருந்து, भयात्- பயத்தினால், तव- உன்னுடைய, आत्मजम्- பிள்ளையை, चिन्तयन्ती- நினைத்துக்கொண்டு, प्रवेपे- நடுங்குகிறேன்.

9. (ப-ரை) कौसल्या खलु- கௌஸல்யா தேவியன்றோ, सुभगा- நல்ல அதிருஷ்டமுடையவள், यस्याः- யாதொருவளுடைய, पुत्रः- பிள்ளையான ராமன், श्वः- நாளைய தினம், महता- பெரிதான, यौवराज्येन- இளவரசினால், पुष्येण- புஷ்ய நக்ஷத்திரத்தில், द्विजोत्तमैः- ப்ராம்மணோத்தமர்களினால், अभिषेक्ष्यते- அபிஷேகம் செய்யப்படப்போகிறான்.

10. (ப-ரை) सुमहतीं- மிகவும் அதிகமான, प्रीतिं- ஸந்தோஷத்தை, प्राप्तां- அடைந்தவளும், प्रतीतां- ப்ரஸித்தமானவளும், हतद्विषम्- ஒழிந்த சத்ருக்களை உடையவளுமான, तां कौसल्यां- அந்த கௌஸல்யா தேவியை, त्वं- நீ, दासीव- வேலைக்காரிபோல், कृताञ्जलिःसती- கைகூப்பிக்கொண்டு, उपस्थास्यसि- ஸேவித்துக்கொண்டு நிற்கப்போகிறாய்.

---

8. (பொ-ரை) ராமன் மஹா புத்திமான். ராஜநீதியும் நன்றாகத் தெரிந்தவன். அந்தந்த காலத்திற்குத் தகுந்தபடி காரியத்தை அறிந்து செய்கிறவன். உன்னுடைய பிள்ளையோ, இம்மூன்று குணமில்லாதவன். ஆகையால் அவனுக்கு, ராமனால் என்ன அனர்த்தம் உண்டாகுமோ என்று நினைத்து நினைத்து நடுங்குகிறேன்.

9. (பொ-ரை) கௌஸல்யையன்றோ மஹா பாக்யமுடையவள். ஏனென்றால், அவளுடைய பிள்ளையான ராமனுக்கு, நாளையதினம் புஷ்ய நக்ஷத்திரத்தில், ப்ராம்மணோத்தமர்கள், யௌவராஜ்ய பட்டாபிஷேகம் செய்யப்போகிறார்கள்.

10. (பொ-ரை) ராமனுக்கு ராஜ்யம் கிடைத்தபிறகு, கௌஸல்யாதேவி, பரமானந்தமடைந்து, உலகத்தில் புகழும் பெற்று, சக்களத்தி முதலான சத்ருக்களுமடங்கி இருக்கப்போகிறாள். அவளிடத்தில் நீ வேலைக்காரிபோல் கைகூப்பிக்கொண்டு, ஸேவக வ்ருத்தி செய்யப்போகிறாய்.

एवं चेत्त्वं सहास्माभिस्तस्याः प्रेष्या भविष्यसि ।
पुत्रश्च तव रामस्य प्रेष्यभावं गमिष्यति ॥ 11 ॥

हृष्टाः खलु भविष्यन्ति रामस्य परमाः स्त्रियः ।
अप्रहृष्टा भविष्यन्ति स्नुषास्ते भरतक्षये ॥ 12 ॥

तां दृष्ट्वा परमप्रीतां ब्रुवन्तीं मन्थरां ततः
रामस्यैव गुणान्देवी कैकेयी प्रशशंस ह* ॥ 13 ॥

---

11. (ப-ரை) एवं चेत्- இப்படியானால், त्व- நீ, अस्माभिः सह- எங்களுடன்கூட, तस्याः- அந்த கௌஸல்யாதேவிக்கு, प्रेष्या- வேலைக்காரியாக, भविष्यसि- ஆகப்போகி றாய், तव- உன்னுடைய, पुत्रः च- பிள்ளையும், रामस्य- ராமனுக்கு, प्रेष्यभाव- அடிமையாக இருக்கும் தன்மையை, गमिष्यति- அடையப்போகிறான்

12. (ப-ரை) रामस्य- ராமனுடைய, परमाः- உயர்ந்தவர்களான, स्त्रियः- பத்னி யான ஸீதையும், மற்ற பணிவிடை செய்யும் ஸ்த்ரீகளும், हृष्टाः- ஸந்தோஷமுள்ளவர் களாக, भविष्यन्ति- ஆகவே போகிறார்கள், भरतक्षये- பரதனுக்குக் குறைவு ஏற்பட்ட போது, ते- உன்னுடைய, स्नुषाः- நாட்டுப்பெண்கள், अप्रहृष्टाः- ஸந்தோஷமில்லாதவர் களாக, भविष्यन्ति- ஆகப்போகிறார்கள்.

13. (ப-ரை) ततः- பிறகு, परं- மிகவும், अप्रीतां- (ராமனிடத்தில்) ப்ரீதியில்லாதவளாய், ब्रुवन्तीं- (இப்படி) சொல்லுகின்ற, मन्थरां- மந்தரையை, दृष्ट्वा- பார்த்து, कैकयी देवी- கைகேயி தேவியானவள், रामस्य- ராமனுடைய, गुणान्- குணங்களையே, प्रशशंस ह- புகழ் ந்தாள்.

---

11. (பொ-ரை) இவ்விதம் நீ கௌஸல்யா தேவிக்கு, அடிமைத்தொழில் செய்ய ஏற்பட்டால், அது உன்னுடன் மாத்திரமில்லாமல், உன்னைச் சேர்ந்த எங்க ளுக்கும், ஏற்பட்டுவிடும். அதுவுமல்லாமல் உன் பிள்ளையான பரதனும், ராமனுக்கு வேலைக்காரனாகப்போகிறான்.

12. (பொ-ரை) பின்னும் ராமனுடைய பத்னியான ஸீதையும், சிச்ருஷை செய்கிறவர்களுமான மற்ற ஸ்த்ரீகளும், மிகுந்த ஆனந்தத்தை அடையப்போகிறார் கள். பரதனுக்கு ராஜ்யமில்லாமல் ஏழ்மை வந்துவிட்டபடியால் உன் நாட்டுப் பெண்கள், மிகுந்த துக்கத்தை அடையப்போகிறார்கள்.

13. (பொ-ரை) ராமனிடத்தில் கொஞ்சமேனும் ப்ரீதியில்லாமல் இவ்விதம் சொன்ன கூனியின் வார்த்தையைக்கேட்டு, கைகேயிதேவி, மறுபடியும் ராம னுடைய குணங்களைப் புகழ ஆரம்பித்து விட்டாள்.

---

* இவ்விடத்தில், "ह" என்றால், ஆச்சர்யத்தைக்குறிக்கிறது. அதாவது, இவ்வளவு கூனி கலக்கியும், கைகேயி மனது கலங்கவில்லை. வால்மீகி மஹரிஷி ஆச்சர்யப் படுகிறாரென்று.

धर्मज्ञो गुरुभिर्दान्तः कृतज्ञः सत्यवाक्छुचिः ।
रामो राज्ञः सुतो ज्येष्ठो यौवराज्यमतोऽर्हति ॥ 14 ॥

भ्रातॄन्भृत्यांश्च दीर्घायुः पितृवत्पालयिष्यति ।
संतप्यसे कथं कुब्जे श्रुत्वा रामाभिषेचनम् ॥ 15 ॥

भरतश्चापि रामस्य ध्रुवं वर्षशतात्परम् ।
पितृपैतामहं राज्यमवाप्ता पुरुषर्षभः ॥ 16 ॥

14. (ப-ரை) रामः- ஸ்ரீராமன், धर्मज्ञः- தர்மம் தெரிந்தவன், गुरुभिः- குருக்களினால், दान्तः- சிக்ஷிக்கப்பட்டவன், कृतज्ञः- செய்த உபகாரத்தையறிந்தவன், सत्यवाक्- பொய்யில்லாத வாக்குள்ளவன், शुचिः- பரிசுத்தன், राज्ञः- ராஜாவுக்கு, ज्येष्ठः सुतः- மூத்த பிள்ளை, (अतः- ஆகையால்), यौवराज्यम्- இளவரசை, अर्हति- (அடைய) த்தகுந்தவன்.

15. (ப-ரை) दीर्घायुः- தீர்க்காயுஸ்ஸாயிருந்து, भ्रातॄन्- தம்பிமார்களையும், भृत्यांश्च- வேலைக்காரர்களையும், पितृवत्- பிதாபோல், पालयिष्यति- ரக்ஷிக்கப்போகிறான், कुब्जे- கூனியே, रामाभिषेचनम्- ஸ்ரீராமனுடைய பட்டாபிஷேகத்தை, श्रुत्वा- கேட்டு, कथं- என் संतप्यसे- வருத்தப்படுகிறாய்.

16. (ப-ரை) पुरुषर्षभः- புருஷச்ரேஷ்டனான, भरतः च अपि- பரதனும், रामस्य- ஸ்ரீராமனுடைய, वर्षशतात्परम्- அநேக வருஷங்களுக்குப்பிறகு, पितृपैतामहम्- பித்ருபிதாமஹர்கள் ஆண்டுவந்த, राज्य- ராஜ்யத்தை, अवाप्ता- அடையப்போகிறான்.

14. (பொ-ரை) ராமன் ஸகல தர்மமுமறிந்தவன், குருக்களிடம் எல்லா சாஸ்திரங்களையும், நன்றாய் கற்றுணர்ந்தவன். செய்நன்றி மறவாதவன். உண்மை பேசுந்தன்மையுள்ளவன். உள்ளும் வெளியும் சுத்தமானவன். தவிர, மஹாராஜாவுக்கு மூத்த பிள்ளையாகவுமிருக்கிறான். ஆகலால், அவனே யௌவராஜ்யத்திற்குத் தகுந்தவன்.

15. (பொ-ரை) இவ்வளவு நல்ல குணங்களுள்ள ஸ்ரீராமன், இளவரசனுகை வந்தால், சிரஞ்சீவியாயிருந்து தம்பிமார்களையும், வேலைக்காரர்களையும், பிதாபோல் நன்றாக காப்பாற்றப்போகிறான். இப்படியிருக்க ஸ்ரீராமனுக்கு முடிசூட்டும் விருத்தாந்தத்தைக்கேட்டு நீயேன் வருத்தப்படுகிறாயோ தெரியவில்லை.

16. (பொ-ரை) புருஷோத்தமனான பரதனும், நெடுநாள் ஸ்ரீராமன் ஆண்டு வந்த காலத்திற்குப்பிறகு, தம்முன்னோர்கள் ஆண்டுவந்த, ராஜ்யத்தை ஆளப்போகிறான்.

सा त्वमभ्युदये प्राप्ते वर्तमाने च मन्थरे ।
भविष्यति च कल्याणे किमर्थं परितप्यसे ॥ 17 ॥

यथा मे भरतो मान्यस्तथा भूयोऽपि राघवः ।
कौसल्यातोतिरिक्तं च सोनुशुश्रूषते हि माम् ॥ 18 ॥

राज्यं यदि हि रामस्य भरतस्यापि तत्तदा ।
मन्यते हि यथात्मानं तथा भ्रातॄंस्तु राघवः ॥ 19 ॥

17. (ப-ரை) मन्थरे- ஓ மந்தரையே! सा त्वं- அப்படிப்பட்ட நீ, प्राप्ते- உரியதான अभ्युदये- மங்களமானது, वर्तमाने च- நடந்துகொண்டிருக்கையிலும், कल्याणे- (வேறு) மங்களமும், भविष्यति च- வரப்போகிறதாயிருக்கையிலும், किमर्थं- ஏன், परितप्यसे- வருத்தப்படுகிறாய்.

18. (ப-ரை) भरतः- பரதன், यथा- எவ்வளவு, मे- எனக்கு, मान्यः- புகழத்தகுதியவனோ, तथा- அவ்வளவைக்காட்டிலும், भूयः अपि- அதிகமாகவே, राघवः- ஸ்ரீராமன், मान्यः- புகழத்தக்கவன், हि- ஏனென்றால், सः- அந்த ராமன், कौसल्यातः- கௌஸல்யையைக் காட்டிலும், अतिरिक्तं- அதிகமாக, माम्- என்னை, अनुशुश्रूषते- அடிக்கடி பணிவிடை செய்கிறான்.

19. (ப-ரை) रामस्य- ராமனுக்கு, राज्यं- ராஜ்யமானது, यदि हि- வருமேயானால், तदा- அப்போது, तत्- அந்த ராஜ்யம், भरतस्य अपि- பரதனுக்குந்தான், हि- ஏனென்றால், राघवः- ராமன், आत्मानं- தன்னை, यथा- எப்படி, मन्यते- எண்ணுகிறானோ, तथा- அப்படியே, भ्रातॄन् तु- தம்பிமார்களையும், मन्यते- எண்ணுகிறான்.

---

17. (பொ-ரை) மந்தரே! நியாயமாக நடக்கவேண்டிய, ஸ்ரீராமபட்டாபிஷேக மஹோத்ஸவம் ஸமீபித்தும், பிறகு பரதனுடைய பட்டாபிஷேக மஹோத்ஸவம் நடக்கப்போகிறதாகவுமிருக்கையில், நீ ஏன் இவ்விதம் பரிதபிக்கிறாய்.

18. (பொ-ரை) என் ஸொந்தபிள்ளையான பரதனை விட சக்களத்தியின் பிள்ளையான, ஸ்ரீராமனைத்தான் நான் அதிகமாகப் புகழவேண்டியவள். ஏனென்றால், அந்த ராமன் தன் தாயான கௌஸல்யாதேவியை விட, என்னைத்தான் அதிகமாக சிச்ருஷித்துக்கொண்டு வருகிறான்.

19. (பொ-ரை) ராமனுக்கு ராஜ்யம் கிடைத்தபோது அந்த ராஜ்யம் பரதனுக்கும், கிடைத்ததுதான் - ஏனென்றால், அவன் தன்னைப்போலவே தம்பிமார்களையும் நினைக்கிறான்.

कैकेय्या वचनं श्रुत्वा मन्थरा भृशदुःखिता ।
दीर्घमुष्णं विनिश्वस्य कैकेयीमिदमब्रवीत् ॥ 20 ॥

अनर्थदर्शिनी मौर्ख्यान्नात्मानमवबुध्यसे ।
शोकव्यसनविस्तीर्णे मज्जन्ती दुःखसागरे ॥ 21 ॥

भविता राघवो राजा राघवस्यानु यः सुतः ।
राजवंशात्तु कैकेयि भरतः परिहास्यते ॥ 22 ॥

20. (ப-ரை) कैकेय्याः- கைகேயினுடைய, वचनं- வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, भृशदुःखिता- மிகவும் துக்கமுடையவளாய்க்கொண்டு, मन्थरा- கூனியானவள், दीर्घं- தீர்க்கமாகவும், उष्णं- சூடாகவும், विनिश्वस्य- பெருமூச்செறிந்து, कैकेयीं- கைகேயியைக் (குறித்து), इदं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னாள்.

21. (ப-ரை) अनर्थदर्शिनी- அனர்த்தத்தையே பார்க்கிறவளும், शोकव्यसनविस्तीर्णे- சோகத்தினாலும், வ்யஸனத்தினாலும் விஸ்தாரமான, दुःखसागरे- துக்கமாகிற கடலில், मज्जन्ती- (सती-) முழுகிக்கொண்டு, मौर्ख्यात्- மூடத்தனத்தினால், आत्मानं- தன்னை, न अवबुध्यसे- அறிந்துகொள்ளவில்லை.

22. (ப-ரை) हे कैकेयि- ஓ கைகேயி, राघवः- ஸ்ரீராமன், राजा- ராஜாவாக, भविता- ஆகப்போகிறான், राघवस्य अनु- ராமனுக்குப்பிற்பாடு, सुतः- அவனுடைய பிள்ளை, यः- எவனோ, (सः அவன், राजा भविता- ராஜாவாக ஆகப்போகிறான்), भरतः (तु-) பரதனோ, राजवंशात्- ராஜகுலத்திலிருந்து, परिहास्यते- நீக்கப்படப்போகிறான்.

20. (பொ-ரை) இவ்விதம் கைகேயியின் வார்த்தையைக்கேட்டு, மந்தரை மிகவும் துக்கங்கொண்டு, நீண்டதாய்ப் பெருமூச்சு விட்டுக்கொண்டு கைகேயியைப் பார்த்து ஒரு வார்த்தை சொன்னாள்.

21. (பொ-ரை) கைகேயி! நீ மூடத்தனத்தினால் உனக்குவரும் அனர்த்தத்தையே புருஷார்த்தமாக நினைத்துக்கொண்டு ப்ரியமான பிள்ளையை இழத்தலாகிற சோகத்தையும் அடைந்து, உனக்கு வேண்டிய ஸம்பத்தை இழத்தலாகிற வ்யஸனத்தையமடைந்து, உன் சக்களத்தியான கௌஸல்யா தேவியின் முன்னிலையில் வேலைக்காரி போல் கைகட்டிக்கொண்டு நிற்கையாகிற துக்ககடலில், மூழ்கிவிட்டாய். உன்னிலைமையை அறிந்துகொள்ளவில்லை.

22. (பொ-ரை) ஹே கைகேயி! ராமனுக்குப்பிறகு பரதனுக்கு ராஜ்யம் வரப்போகிறதென்று எண்ணிக்கொண்டிருக்கிறாய். அது ஒருநாளுமில்லை. ஏனென்றால், ராமன்பட்டாபிஷேகம் செய்துகொண்டு, ராஜ்யமாளப்போகிறான். அவனுடைய காலத்திற்குப்பிறகு, ராமனுடைய பிள்ளை வரப்போகிறான். பரதன் ராஜகுலத்திலிருந்து நீக்கிவிடப்படுவான்.

न हि राज्ञः सुताः सर्वे राज्ये तिष्ठन्ति भामिनि।
स्थाप्यमानेषु सर्वेषु सुमहाननयो भवेत् ॥ 23 ॥

तस्माज्ज्येष्ठे हि कैकेयि राज्यतन्त्राणि पार्थिवाः।
स्थापयन्त्यनवद्याङ्गि गुणवत्स्वितरेष्वपि ॥ 24 ॥

असावत्यन्तनिर्भग्नस्तव पुत्रो भविष्यति।
अनाथवत्सुखेभ्यश्च राजवंशाच्च वत्सले ॥ 25 ॥

23. (ப-ரை) हे भामिनि- ஓ கோபமுள்ளவளே! राज्ञः- அரசனுடைய, सुताः- பிள்ளைகள், सर्वे- எல்லோரும், राज्ये- ராஜ்யத்தில், न तिष्ठन्ति हि- இருக்கமாட்டார்களன்றோ! सर्वेषु- எல்லா பிள்ளைகளும், स्थाप्यमानेषु (सत्सु-) ஏற்படுத்தப்படும் காலத்தில், सुमहान्- மிகவும் பெரிதான, अनयः- நியாய விரோதம், भवेत्- உண்டாய் விடும்.

24. (ப-ரை) अनवद्याङ्गि- குற்றமற்ற சரீரமுள்ள, हे कैकेयि- கைகேயியே, तस्मात्- ஆகையால், पार्थिवाः- அரசர்கள், गुणवत्सु- குணமுள்ளவர்களான, इतरेषु- மற்ற பிள்ளைகள், (सत्सु अपि- இருந்த போதிலும்), ज्येष्ठे हि- மூத்த பிள்ளையினிடத்திலேயே, राज्यतन्त्राणि- ராஜகார்யங்களை, स्थापयन्ति- ஒப்புவிக்கிறார்கள்.

25. (ப-ரை) हे वत्सले- புத்ர வாத்ஸல்யமுள்ளவளே! असौ- இந்த, तव- உன்னுடைய, पुत्रः- பிள்ளையானவன், अनाथवत्- நாதனில்லாதவன் போல், सुखेभ्यः च- ஸுகங்களிலிருந்தும், राजवंशात् च- ராஜ குலத்திலிருந்தும், अत्यन्तनिर्भग्नः- மிகவும் தள்ளப்பட்டவனாக, भविष्यति- ஆகிவிடுவான்.

23. (பொ-ரை) ஓ கோபமுள்ளவளே! அரசனுக்கு நாலு பிள்ளைகளிருந்தால், அவர்கள் எல்லோரையும் ராஜ்யத்தில் வைக்கமாட்டார்கள். அப்படி எல்லோரையும் ராஜ்யத்திலே வைத்தால் மிகவும் பெரிதான, நியாய விரோதங்கள் உண்டாய்விடும்.

24 (பொ-ரை) ஓ கைகேயி, ஆகலாலன்றோ மஹாராஜாக்கள் ராஜ்ய வ்யாபாரங்களை, ஜ்யேஷ்டனிடத்திலேயே ஒப்புவிக்கிறார்கள். மஹாராஜாக்கள், மற்ற பிள்ளைகள் குணசாலிகளாக இருந்தாலும், ஜ்யேஷ்டனிடத்திலேயே ராஜ்ய கார்யங்களை ஒப்புவிக்கிறார்கள். (ஜ்யேஷ்ட புத்திரன் குணமில்லாதவனாயிருந்தால், குணமுள்ள இளையவனிடத்திலும் ஒப்புவிக்கிறார்களென்றும், சிலர் அர்த்தம் கூறுவர்.)

25 (பொ-ரை) புத்ர வாத்ஸல்யமுள்ள கைகேயி, உன்னுடைய பிள்ளையான பரதன், அநாதனைப்போல் ராஜ்ய ஸுகத்தையுமிழந்து, ராஜ்ய வம்சத்திலிருந்தும் தள்ளப்படப்போகிறான்.

साहं त्वदर्थे संप्राप्ता त्वं तु मां नाववुध्यसे ।
सपत्निवृद्धौ या मे त्वं प्रदेयं दातुमिच्छसि ॥ 26 ॥

ध्रुवं तु भरतं रामः प्राप्य राज्यमकण्टकम् ।
देशान्तरं वा नयिता लोकान्तरमथापि वा ॥ 27 ॥

बाल एव हि मातुल्यं भरतो नायितस्त्वया ।
सन्निकर्षाच्च सौहार्दं जायते स्थावरेष्वपि ॥ 28 ॥

26. (ப-ரை) सा अहं- அப்படிப்பட்ட நான், त्वदर्थे- உன்னுடைய காரியத்தில், संप्राप्ता- வந்திருக்கிறேன், त्वं तु- நீ மாத்திரம், मां- என்னை नाववुध्यसे- அறிந்துகொள்ள வில்லை यात्वं- யாதொருநீ, सपत्निवृद्धौ- சக்களத்திக்கு க்ஷேமம் வரும் காலத்தில், मे- எனக்கு प्रदेयं- வெகுமதியை, दातुं- கொடுப்பதற்கு, इच्छसि- விரும்புகிறாய்.

27. (ப-ரை) रामः- ராமன், अकण्टकम्- சத்ருவில்லாத, राज्यं- ராஜ்யத்தை, प्राप्य- அடைந்து, भरतं- பரதனை, देशान्तरं वा- தேசாந்தரத்தையோ, नयिता- அடைவிக்கப்போகிறான், अथापि- அல்லது, लोकान्तरं वा- பரலோகத்தையோ, (नयिता- அடைவிக்கப்போகிறான்), ध्रुवं तु- இது நிச்சயமே.

28. (ப-ரை) भरतः- பரதன், बाल एव हि- பாலனாக இருந்துகொண்டு, त्वया- உன்னால், मातुल्यं- மாதுலன் க்ருஹத்தை, नायितः- அடைவிக்கப்பட்டான், स्थावरेष्वपि- (மரம் செடி முதலாகிய) ஸ்தாவரங்களிலும், सन्निकर्षात्- மிகவும் ஸமீபத்திலிருப்பதினால், सौहार्दं- ஸ்நேஹமானது, जायते- உண்டாகிறது.

26. (பொ-ரை) எல்லாம் அறிந்த நான், உன்னுடைய க்ஷேமத்திற்காக உன்னிடம் வந்தேன். நீ மாத்திரம் என்னை அறிந்துகொள்ளாமல் போய்விட்டாய். உன்னுடைய புத்திஹீனத்தை நான் என்ன சொல்லுவேன். சக்களத்திக்கு வரும் பெருமையைக்கேட்டு எனக்கு நீ பஹுமானம் கொடுக்க விரும்புகிறாய்.

27. (பொ-ரை) ராமன், சத்ருவில்லாத ராஜ்யத்தை அடைந்து, உன் பிள்ளையான பரதனை, தேசாந்தரத்திற்கு ஓட்டி விட்டாலும் விடுவன், ஒரு ஸமயம் பரலோகத்திற்கே அனுப்பினாலும் அனுப்புவன். இது நிச்சயம்.

28. (பொ-ரை) இந்த ஸமயத்தில், ஒருவேளை பரதன் இங்கு இருந்தால் மஹாராஜர், அவனுக்கும் ராஜ்யத்தை பாதி கொடுத்தாலும் கொடுக்கலாம். அதற்கு இடமில்லாமல் நீ பால்யத்திலேயே உன் பிள்ளையை, மாமன் வீட்டிற்கு அனுப்பிவிட்டாய். ஸமீபத்திலிருந்தால் ஸ்நேஹம் உண்டாகுமென்கிற விஷயம் ஸ்தாவரங்களான கொடி, மரங்கள் முதலியவைகளில் நாம் காண்கிறோம். ஒரு மரத்தின் பக்கத்திலிருக்கிற கொடியானது, மரத்தைக் தழுவுகிறது அல்லவா!

भरतस्याप्यनुवशः शत्रुघ्नोऽपि समं गतः ।
लक्ष्मणो हि यथा रामं तथासौ भरतं गतः ॥ 29 ॥

श्रूयते हि द्रुमः कश्चिच्छेत्तव्यो वनजीविभिः ।
सन्निकर्षादिषीकाभिर्मोचितः परमाद्भयात् ॥ 30 ॥

गोप्ता हि रामं सौमित्रिर्लक्ष्मणं चापि राघवः
अश्विनोरिव सौभ्रात्रं तयोर्लोकेषु विश्रुतम् ॥ 31 ॥

29. (ப-ரை) शत्रुघ्नः अपि- சத்ருக்னனும், भरतस्य- பரதனுக்கு, अनुवशः अपि- விதேயனாய்க்கொண்டு, समं- (பரதனுடன்) கூட, गतः- போய்விட்டான், हि- ஏனென்றால், लक्ष्मणः- லக்ஷ்மணன், रामं- ராமனை, यथा- எப்படி (அடைந்தானோ), तथा- அப்படி, असौ- இந்த சத்ருக்னனும், भरतं- பரதனை, गतः- அடைந்தவன்.

30. (ப-ரை) वनजीविभिः- காட்டில் வஸித்து ஜீவிப்பவர்களால், छेत्तव्यः- வெட்டத்தகுந்த, कश्चित्- द्रुमः- ஒரு மரமானது, परमात्- அதிகமான, भयात्- வெட்டுதலாகிற பயத்திலிருந்து, इषीकाभिः- இஷீகை என்கிற முள் புதருகளினால், सन्निकर्षात्- நாற்புறமும் சேர்ந்திருப்பதினால், मोचितः- விடுவிக்கப்பட்டது என்று, श्रूयते हि- (ஜனங்கள் சொல்ல) கேழ்க்கப்படுகிறதன்றோ.

31. (ப-ரை) सौमित्रिः- லக்ஷ்மணன், रामं- ராமனை, गोप्ता हि- ரக்ஷிக்கப்போகிறானன்றோ, राघवः च अपि- ராகவனும், लक्ष्मणं- லக்ஷ்மணனை, (गोप्ता हि- காப்பாற்றப்போகிறான்), तयोः- அவர்களுடைய, सौभ्रात्रं- ப்ராத்ரு ஸ்நேஹமானது, अश्विनोः इव- அச்விநீ தேவர்களுடைய (ஸ்நேஹம்போல்), लोकेषु- உலகங்களில், विश्रुतम्- ப்ரஸித்தமாயிருக்கிறது.

---

29. (பொ-ரை) சத்ருக்னனும், பரதனை அநுஸரித்தே அவனுடன் போய்விட்டான். ஏனென்றால், லக்ஷ்மணன் ராமனை ஆச்ரயித்ததுபோல், அவனும் பர

30 (பொ-ரை) வனத்தில் விறகு வெட்டி ஜீவிக்கும் கூலிக்காரர்களால் அவச்யம் வெட்டக்கூடியதாக குறிப்பிட்ட ஒரு மரமானது, நாலுபுறமும் இஷீகை என்கிற, முட்தூருகள் பரவி சேர்ந்திருப்பதால், வெட்டுப்படாமல் நின்று விடுகிறது என்றன்றோ நாம் கேட்டிருக்கிறோம்.

அதாவது, ஸமீபத்திலிருந்தால் அதற்கு ரக்ஷணம் ஏற்படுகிறது என்று சொல்லிய படியால், பரதன் இங்கு தற்காலம் ஸமீபித்திருந்தால், இவ்வித அனர்த்தம் அவனுக்கு ஏற்பட்டிராது என்று கருத்து.

31. (பொ-ரை) ராமனுக்கு ஏதாவது ஆபத்து நேரிட்டால், லக்ஷ்மணன்

तस्मान्न लक्ष्मणे रामः पापं किंचित्करिष्यति ।
रामस्तु भरते पापं कुर्यादिति न संशयः ॥ 32 ॥

तस्माद्राजगृहादेव वनं गच्छतु ते सुतः
एतद्धि रोचते मह्यं भृशं चापि हितं तव ॥ 33 ॥

एवं ते ज्ञातिपक्षस्य श्रेयश्चैव भविष्यति ।
यदि चेद्भरतो धर्मात्पित्र्यं राज्यमवाप्स्यति ॥ 34 ॥

32. (ப-ரை) तस्मात्- ஆகையால், रामः- ராமன், लक्ष्मणे- லக்ஷ்மணனிடத்தில், किंचित्पापं- ஒரு கெடுதியையும், न करिष्यति- செய்யமாட்டான், भरते तु- பரதனிடத்திலோவென்றால், रामः- ராமன், पापं- கெடுதியை, कुर्यात् इति- செய்வான் என்பதில், संशयः न- ஸந்தேகமில்லை.

33. (ப-ரை) तस्मात्- ஆகையால், ते सुतः- உன்னுடைய பிள்ளை, राजगृहादेव- ராஜக்ருஹத்திலிருந்தே, वनं- காட்டைக்குறித்து, गच्छतु- போகட்டும், एतत् हि- இதுவே मह्यं- எனக்கு, रोचते- பிடித்திருக்கிறது, तव च अपि- உனக்கும், भृशं- மிகவும் हितं- ஹிதமானது.

34. (ப-ரை) भरतः- பரதன், धर्मात्- (பிதாவின் அநுமதியாகிற) தர்மத்தினாலே, पित्र्यं- பிதா ஆண்டுவந்த, राज्यं- ராஜ்யத்தை, अवाप्स्यति यदि- அடைவானேயானால், एवं चेत्- இவ்விதமானால், ते- உன்னுடைய, ज्ञातिपक्षस्य- பந்து வர்க்கத்திற்கு, श्रेयः च- நன்மையும், भविष्यति एव- உண்டாகவே உண்டாகும்.

காப்பாற்றுவன். லக்ஷ்மணனுக்கு நேர்ந்தால் ராமன் காப்பாற்றுவன். அவ்விருவர்களுடைய, ப்ராத்ரு ஸ்நேஹமானது, ப்ராதாக்களான அச்விநீ தேவர்களுடைய ஸ்நேஹம்போல் உலகமெல்லாம் புகழ்பெற்றது.

32. (பொ-ரை) ஆகையால் லக்ஷ்மணன்விஷயத்தில் ராமன் சிறிதேனும் கெடுதி செய்யமாட்டான். பரதன் விஷயத்திலோவென்றால், கெடுதியை செய்யவே செய்வான். இதில் ஸம்சயமில்லை.

33. (பொ-ரை) ஆகையினால், உன் மகன் பரதன் கேகய ராஜன் க்ருஹத்திலிருந்தே, வனம் போய்விடட்டும். இதுதான் எனக்கும் பிடித்திருக்கிறது. உனக்கும் மிகவும் ஹிதமானது.

34. (பொ-ரை) உன்னுடைய பிள்ளையான பரதன், பிதாவின் அநுமதியினால், பிதா ஆண்டுவந்த ராஜ்யத்தை, அடைவானேயானால், உனக்கும் உன்னுடைய பந்து வர்க்கத்திற்கும், உயர்ந்த ச்ரேயஸ்ஸானது உண்டாகும்.

स ते सुखोचितो बालो रामस्य सहजो रिपुः
समृद्धार्थस्य नष्टार्थो जीविष्यति कथं वशे ॥ 35 ॥

अभिद्रुतमिवारण्ये सिंहेन गजयूथपम् ।
प्रच्छाद्यमानं रामेण भरतं त्रातुमर्हसि ॥ 36 ॥

दर्पान्निराकृता पूर्वं त्वया सौभाग्यवत्तया ।
राममाता सपत्नी ते कथं वैरं न यातयेत् ॥ 37 ॥

---

35. (ப-ரை) सुखोचितः- ஸுகாநுபவத்திற்குத் தகுந்தவனாயும், नष्टार्थः- பொருளிழந்தவனுமான, सहजः रिपुः- ஸஹஜ சத்ருவாயும் இருக்கிற, सः- அந்த, ते बालः- உன்னுடைய சிறுவனான பரதன், समृद्धार्थस्य- நிறைந்த ஸம்பத்தையுடைய, रामस्य- ராமனுடைய, वशे- ஸ்வாதீனத்தில் (இருந்து), कथं- எப்படி, जीविष्यति- ஜீவிக்கப்போகிறான்.

36. (ப-ரை) अरण्ये- வனத்தில், सिंहेन- ஸிம்மத்தினால், अभिद्रुतं- துரத்தப்பட்ட, गजयूथपं इव- பெரிய யானையைப்போல், रामेण- ராமனால், प्रच्छाद्यमानं- மறைக்கப்பட்ட भरतं- பரதனை, त्रातुं- ரக்ஷிப்பதற்கு, अर्हसि- தகுந்தவளாகிறாய்.

37. (ப-ரை) त्वया- உன்னாலே, सौभाग्यवत्तया- பெருமை உடையவள் என்பதினால், உண்டான दर्पात्- மதத்தினால், पूर्वं- முன்னம், निराकृता- அவமதிக்கப்பட்ட, ते सपत्नी- உன் சக்களத்தியான, राममाता- ராமனுடைய தாயான கௌஸல்யை, वैरं- அந்தப்பழியை, कथं- ஏன், न यातयेत्- தீர்த்துக்கொள்ளமாட்டாள்.

35. (பொ-ரை) ராமனுக்கு சக்களத்தியின் பிள்ளையாகையால், ஸஹஜ சத்ருவாயும், ஸுகத்திற்கு ஏற்றவனாயும், பொருளை இழந்தவனாயுமிருக்கிற, உன் சிறுவனை அந்த பரதன், நிறைந்த ஐச்வர்யத்தோடு கூடிய, ராமனுடைய வசத்தில் அகப்பட்டுக்கொண்டு, எவ்விதம ஜீவிக்கப் போகிறான்.

36. (பொ-ரை) வனத்தில் ஸிம்மத்தினால் துரத்தப்பட்ட பெரிய யானையைப்போல், ராமனால் அனர்த்தத்தை அடைவிக்கப்படுகிற, பரதனை நீ காப்பாற்ற வேணும்.

37. (பொ-ரை) நான் மிகவும் பெருமையுடையவள் என்று நீ அஹங்காரம் கொண்டு, கௌஸல்யா தேவியை முன் அலக்ஷ்யம் செய்திருக்கிறாயன்றோ. உன் சக்களத்தியான அந்த ராமனுடைய தாய், ஸமயம் வந்தவாறே, இப்பொழுது, ஏன் அந்தப்பழியைத் தீர்த்துக்கொள்ள மாட்டாள்.

यदा हि रामः पृथिवीमवाप्स्यति प्रभूतरत्नाकरशैलपत्तनाम् ।
तदा गमिष्यस्यशुभं पराभवं सहैव दीना भरतेन भामिनि ॥ 38 ॥

यदा हि रामः पृथिवीमवाप्स्यति ध्रुवं प्रणष्टो भरतो भविष्यति ।
अतो हि संचिन्तय राज्यमात्मजे परस्य चैवाद्य विवासकारणम् ॥ 39 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे

अष्टमः सर्गः ॥ 8 ॥

38. (ப-ரை) हे भामिनि- கோபமுள்ளவளே! यदा- எப்பொழுது, रामः- ராமன், प्रभूत रत्नाकर शैल पत्तनाम्- விஸ்தாரமான ஸமுத்ரங்களோடும், பர்வதங்களோடும், நகரங்களோடும் கூடிய, पृथिवीं- பூமியை, अवाप्स्यति- அடையப்போகிறானோ, तदा- அப்பொழுதே, त्वं- நீ, दीना (सती)- துக்கத்தை அடைந்தவளாய்க்கொண்டு, भरतेन- பரதனோடு, सह- கூட, अशुभं- அநிஷ்டமான, पराभवं- அவமதிப்பை, गमिष्यसि एव- அடையவே போகிறாய்.

39. (ப-ரை) यदा हि- எப்பொழுது, रामः- ராமன், पृथिवीं- பூமியை, अवाप्स्यति- அடையப்போகிறானோ, तदा- அப்பொழுது, भरतः- பரதன், प्रणष्टः- நாசத்தை அடைந்தவனாக, भविष्यति- ஆகப்போகிறான், ध्रुवं- இது நிச்சயம், अतः- ஆகையால், आत्मजे- உன் பிள்ளையினிடத்தில், राज्यं- ராஜ்யம் வரும் காரணத்தையும், परस्य च- சத்ருவான ராமனுடைய, विवासकारणं च- காட்டிற்குத் துரத்தும் காரணத்தையும், अद्य एव- இப்பொழுதே, संचिन्तय- ஆலோசனை செய்.

38. (பொ-ரை) கோபமுடையவளே! ஆழ்ந்த ஸமுத்ரங்களோடும், உயர்ந்த மலைகளோடும், சிறந்த நகரங்களோடும், கூடிய இந்த பூமண்டலத்தை ராமன் எப்பொழுது, அடைவானோ அப்பொழுதே நீயும், மிகவருத்தத்துடன் உன் பிள்ளையுடன்கூட அநிஷ்டமான அவமதிப்பை (கௌஸல்யா தேவிக்கு வேலைக்காரியாயிருப்பதை) அடையப்போகிறாய். இது நிச்சயம்.

39. (பொ-ரை) எப்பொழுது ராமனுக்கு ராஜ்யம் கிடைக்குமோ, அப்பொழுதே பரதன் அழிந்து விடுவான். இது நிச்சயம். ஆகையால், உன் பிள்ளைக்கு ராஜ்யம் கிடைக்கக்கூடிய காரணத்தையும், சத்ருவான ராமனை, இப்பொழுதே காட்டிற்குத் துரத்தவேண்டிய காரணத்தையும் சீக்ரம் ஆலோசிக்கவேண்டும்.

नवमः सर्गः ॥ 9 ॥

एवमुक्ता तु कैकेयी कोपेन ज्वलितानना ।
दीर्घमुष्णं विनिश्वस्य मन्थरामिदमब्रवीत् ॥ 1 ॥

अद्य राममितः क्षिप्रं वनं प्रस्थापयाम्यहम् ।
यौवराज्ये च भरतं क्षिप्रमेवाभिषेचये ॥ 2 ॥

इदं त्विदानीं संपश्य केनोपायेन मन्थरे ।
भरतः प्राप्नुयाद्राज्यं न तु रामः कथंचन ॥ 3 ॥

---

1. (ப-ரை) एवं- இவ்விதம், उक्ता- சொல்லப்பட்ட, कैकेयी तु- கைகேயியோ வென்றால், कोपेन- கோபத்தினால், ज्वलितानना- ஜ்வலித்துக்கொண்டிருக்கிற முகமுடையவளாகி, दीर्घं- தீர்க்கமாகவும், उष्णं- உஷ்ணமாகவும், विनिश्वस्य- மூச்சுவிட்டுக் கொண்டு, मन्थरां- மந்தரையை (பார்த்து), इदं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னாள்.

2. (ப-ரை) अद्य- இன்றையதினமே, अहं- நான், इतः- இங்கிருந்து, क्षिप्रं- சீக்ரமாக, रामं- ராமனை, वनं- வனத்தைக்குறித்து, प्रस्थापयामि- அனுப்பிவிடுகிறேன், भरतं च- பரதனையும், क्षिप्रं एव- சீக்ரமாகவே, यौवराज्ये- இளவரசில், अभिषेचये- அபிஷேகம் செய்விக்கிறேன்.

3. (ப-ரை) मन्थरे- ஓ மந்தரையே! इदानीं- இப்பொழுது, इदं तु- இதை மாத்திரம், संपश्य- நன்றாக கவனிக்கவேண்டும், केन उपायेन- எந்த உபாயத்தினால், भरतः- பரதன், राज्यं- ராஜ்யத்தை, प्राप्नुयात्- அடைவனோ, रामः- ராமனானவன், कथंचन- எந்த விதத்தாலும், न तु- அடையமாட்டானோ.

---

1. (பொ-ரை) இவ்விதம் கூனியினுடைய வார்த்தையைக்கேட்டு கைகேயி, கோபத்தினால், ஜ்வலித்த முகத்துடன், உஷ்ணமாகப் பெரும் மூச்செறிந்து, மந்தரையைப்பார்த்து, ஒரு வார்த்தை சொன்னாள்.

2. (பொ-ரை) நான் இன்றையதினமே, ராமனையும் இங்கிருந்து சீக்ரமாக வனத்திற்கு அனுப்பிவிடுகிறேன். பரதனுக்கும் சீக்ரமாகவே யுவராஜபட்டாபிஷேகமும், செய்வித்துவிடுகிறேன்.

3. (பொ-ரை) ஆனால், ஹே மந்தரே! இதை மாத்திரம் நீ இப்பொழுது நன்றாய் கவனிக்கவேண்டும். எந்த உபாயம் செய்தால், பரதன் ராஜ்யத்தை அடைவான். ராமன் எந்த விதத்தாலும் ராஜ்யத்தை அடையாமலிருப்பான்.

एवमुक्ता तया देव्या मन्थरा पापदर्शिनी ।
रामार्थमुपहिंसन्ती कैकेयीमिदमब्रवीत् ॥ 4 ॥

हन्तेदानीं प्रवक्ष्यामि कैकेयि श्रूयतां च मे ।
यथा ते भरतो राज्यं पुत्रः प्राप्स्यति केवलम् ॥ 5 ॥

किं न स्मरसि कैकेयि स्मरन्ती वा निगूहसे ।
यदुच्यमानमात्मार्थं मत्तस्त्वं श्रोतुमिच्छसि ॥ 6 ॥

---

4. (ப-ரை) एवं- இவ்விதமாக, तया– அந்த, देव्या- கைகேயிதேவியினால், उक्ता- சொல்லப்பட்டிருக்கிற, पापदर्शिनी- கெட்ட எண்ணமுள்ளவளான, मन्थरा- மந்தரை, रामार्थं- ராமனுடைய ப்ரயோஜனத்தை, उपहिंसन्ती सती- கெடுத்துக்கொண்டு, कैकेयीं- கைகேயியைப்பார்த்து, इदं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னாள்.

5. (ப-ரை) हे कैकेयि- கைகேயியே, हन्त- மிகவும் ஸந்தோஷம், यथा- எப்படி, ते- உன்னுடைய, पुत्रः- புத்திரனை, भरतः- பரதன், केवलंराज्यं- ராஜ்யம் முழுவதையும், प्राप्स्यति- அடைவனோ, (तथा- அவ்விதத்தை), इदानीं- இப்பொழுது. प्रवक्ष्यामि- சொல்லப்போகிறேன், मे- என்னிடத்திலிருந்து, श्रूयतां च– கேட்கலாம்.

6. (ப-ரை) हे कैकेयि- கைகேயியே! त्वं- நீ, उच्यमानं- சொல்லப்படுகிற, आत्मार्थं- உன்னுடைய ப்ரயோஜனத்தை, मत्तः- என்னிடமிருந்து, श्रोतुं- கேட்பதற்கு, इच्छसि इति यत्- விரும்புகிறாய் என்று யாதன்றோ! (अतः- ஆகையால்), न स्मरसि किं- மறந்து விட்டாயா! स्मरन्ती- நினைத்திருந்து, निगूहसे वा- மறைக்கிறாயா!

4. (பொ-ரை) இவ்விதம் கைகேயி தேவியின், வார்த்தையைக் கேட்டு, கெட்ட எண்ணமுள்ளவளான கூனியானவள், ராமனுடைய பட்டாபிஷேக கார்யத்திற்கு விரோதம் செய்வதற்காக கைகேயியைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னாள்.

5. (பொ-ரை) கைகேயி! மிகவும் ஸந்தோஷம். உன்னுடைய பிள்ளையான பரதன், ராஜ்யம் முழுமையும் அடையப்போகின்ற உபாயத்தை இப்பொழுது சொல்லுகிறேன். அதை என்னிடத்தில் கேள்.

6. (பொ-ரை) கைகேயி! உன்னுடைய ப்ரயோஜனத்தை நான் சொல்ல என்னிடமிருந்து நீ கேட்க விரும்புகிறாயே, நீ, என்ன, மறந்துவிட்டாயா? அன்றி நினைவிருந்தும் மறைக்கிறாயா? என்னைக் கேட்கிறாயே இதற்கு போதனை!

मयोच्यमानं यदि ते श्रोतुं छन्दो विलासिनि ।
श्रूयतामभिधास्यामि श्रुत्वाचापि विमृश्यताम् ॥ 7 ॥

श्रुत्वैवं वचनं तस्या मन्थरायास्तु कैकेयी ।
किंचिदुत्थाय शयनात्स्वास्तीर्णादिदमब्रवीत् ॥ 8 ॥

कथय त्वं ममोपायं केनोपायेन मन्थरे ।
भरतः प्राप्नुयाद्राज्यं न तु रामः कथंचन ॥ 9 ॥

7. (ப—ரை) हे विलासिनि- ஹே அழகுடையவளே! मया— என்னாலே, उच्यमानं- சொல்லப்படுகிற, (அந்த உபாயத்தை), श्रोतुं- கேட்பதற்கு, ते- உனக்கு छन्दः- அபிப்ராயமானது, यदि- இருக்குமேயானால், अभिधास्यामि- சொல்லுகிறேன். श्रूयतां- கேட்கலாம். श्रुत्वा च- கேட்டு, विमृश्यताम्- ஆலோசிக்கவும் படலாம்.

8. (ப—ரை) कैकेयी तु- கைகேயியோவென்றால், एवं- இவ்விதமாக, तस्याः- அந்த, मन्थरायाः- கூனியினுடைய, वचनं- வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, सु आस्तीर्णात्- நன்றாக விரிக்கப்பட்டிருக்கிற, शयनात्- படுக்கையிலிருந்து, किंचित्- சிறிது, उत्थाय- எழுந்து, इदं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னாள்.

9. (ப—ரை) मन्थरे- மந்தரையே! केन उपायेन- எந்த உபாயத்தினால், भरतः- பரதன், राज्यं- ராஜ்யத்தை, प्राप्नुयात्- அடைவனோ, रामः- ராமன், कथं चन- எவ்விதத்தாலும், न तु- அடையமாட்டானோ! त उपायं- அந்த உபாயத்தை, त्वं- நீ, मम- எனக்கு, कथय- சொல்லக்கடவாய்.

7. (பொ—ரை) ஹே அழகுள்ளவளான கைகேயியே! அந்த உபாயத்தை நான் சொல்லியே, நீ கேட்கவேணுமென்று உனக்கு அபிப்ராயமிருக்கும் பக்ஷத்தில், சொல்லுகிறேன் கேள். கேட்டு நன்றாகவும் ஆலோசித்துப்பார்.

8. (பொ—ரை) இவ்விதம் அந்த மந்தரையின் வார்த்தையைக்கேட்டு, கைகேயியானவள், நன்றாய் விரித்திருந்த தன்னுடைய படுக்கையிலிருந்து சிறிது தலைதூக்கி எழுந்து கூனியைப்பார்த்து இந்த வார்த்தை சொன்னாள்.

9. (பொ—ரை) மந்தரே! என்னுடைய பிள்ளையான, பரதனுக்கு ராஜ்யம் கிடைக்கும்படியாகவும், ராமனுக்கு எவ்விதத்தாலும் ராஜ்யம் கிடைக்காதபடியாகவும் உபாயத்தை எனக்குச் சொல்லவேணும்.

एवमुक्ता तया देव्या मन्थरा पापदर्शिनी ।
रामार्थमुपहिंसन्ती कुब्जा वचनमब्रवीत् ॥ 10 ॥

तव दैवासुरे युद्धे सह राजर्षिभिः पतिः ।
अगच्छत्त्वामुपादाय देवराजस्य साह्यकृत् ॥ 11 ॥

दिशमास्थाय वै देवि दक्षिणां दण्डकान्प्रति ।
वैजयन्तमिति ख्यातं पुरं यत्र तिमिध्वजः ॥ 12 ॥

10. (ப-ரை) एवं- இவ்விதமாக, तया देव्या- அந்த ராஜமஹிஷியான கைகேயியினால், उक्ता- சொல்லப்பட்டவளாய், पापदर्शिनी- கெட்ட எண்ணமுள்ளவளும், कुब्जा- கூனியுமான, मन्थरा- மந்தரையானவள், रामार्थं- ராமனுடைய காரியத்தை, उपहिंसन्ती- கெடுத்துக்கொண்டு, वचनं- வார்த்தையை, अब्रवीत्- சொன்னாள்.

11-12 (ப-ரை) हे देवि- ஹே கைகேயி! दैवासुरे- தேவாஸுர சம்பந்தமான, युद्धे- யுத்தத்தில், तव- உன்னுடைய, पतिः- பர்த்தாவான தசரதர், देवराजस्य- தேவராஜனான இந்திரனுக்கு, साह्यकृत्- (सन्) ஸஹாயம் செய்பவராய்க்கொண்டு, राजर्षिभिः सह- (தன்னைச் சேர்ந்த) ராஜரிஷிகளோடுகூட, त्वां- உன்னையும், उपादाय- அழைத்துக்கொண்டு, दण्डकान्प्रति- தண்டகாவனத்தைக் குறித்து, दक्षिणां दिशं- தெற்கு திக்கை, आस्थाय- அடைந்து, यत्र- எந்த நகரத்தில், तिमिध्वजः- சம்பராஸுரன் (இருக்கிறானோ) वैजयन्तमिति- வைஜயந்தமென்று, ख्यातं- ப்ரஸித்தமான, पुरं- நகரத்தை, अगच्छत- அடைந்தார்.

10. (பொ-ரை) இவ்விதம் கைகேயினுடைய வார்த்தையைக்கேட்டு, கெட்ட எண்ணங்கொண்ட மந்தரையானவள், ராமபட்டாபிஷேகத்திற்கு கெடுதல் செய்வதாக கைகேயியைப்பார்த்து வார்த்தை சொன்னாள்.

11-12. (பொ-ரை) ஓ ராஜமஹிஷியே! தேவாஸுர யுத்தம் நடக்கும் காலத்தில் உன்னுடைய பர்த்தாவான தசரதமஹாராஜர், தேவராஜனுக்கு உதவி செய்வதற்காக தன்னைச்சேர்ந்த ராஜரிஷிகளோடுகூட உன்னையும் அழைத்துக்கொண்டு திமித்வஜனென்கிற சம்பராஸுரன் வாஸம் பண்ணிக்கொண்டிருக்கிற வைஜயந்தமென்கிற நகரமிருக்கிற தண்டகாவனத்தைக் குறித்து தென்திசை வழியாகச்சென்றார்.

स शम्बर इति ख्यातः शतमायो महासुरः ।
ददौ शक्रस्य सङ्ग्रामं देवसङ्घैरनिर्जितः ॥ 13 ॥

तस्मिन्महति सङ्ग्रामे पुरुषान्क्षतविक्षतान् ।
रात्रौ प्रसुप्तान्घ्नन्ति स्म तरसा ऽऽसाद्य राक्षसाः ॥ 14 ॥

तत्राकरोन्महद्युद्धं राजा दशरथस्तदा ।
असुरैश्च महाबाहुः शस्त्रैश्च शकलीकृतः ॥ 15 ॥

13. (ப-ரை) शतमायः- அநேகம் மாயைகளையுடையவனும், शम्बर इति- சம்பர னென்று ப்ரஸித்தனுமான, सः महासुरः- அந்தப்பெரிய அஸுரன், देवसङ्घैः- தேவர் கூட்டங்களினால், अनिर्जितः (सन्) ஜயிக்கப்படாதவனாய்க்கொண்டு, शक्रस्य- இந்திரனு க்கு, सङ्ग्रामं- யுத்தத்தை, ददौ- கொடுத்தான்.

14. (ப-ரை) तस्मिन्- அந்த, महति सङ्ग्रामे- பெரிய யுத்தத்தில், क्षतविक्षतान्- காய முள்ளவர்களாயும், வெட்டப்பட்டவர்களாயும், रात्रौ- இரவில், प्रसुप्तान्- படுத்துக்கொ ண்டிருக்கிற, पुरुषान्- மனிதர்களை, तरसा- வேகத்தோடு, आसाद्य- அடைந்து, राक्षसाः- அஸுரர்கள், घ्नन्ति स्म- அடித்தார்கள்

15. (ப-ரை) तत्र- அந்த இடத்தில், तदा- அந்த ராத்ரியில், महाबाहुः- பெரிய தோள்வலியுள்ளவரான, दशरथः राजा- தசரத மஹாராஜன், महत् युद्धं- பெரிய யுத்த த்தை, अकरोत्- செய்தார், असुरैश्च- அஸுரர்களாலும், शस्त्रैः- ஆயுதங்களினால், शकलीकृतः च- துண்டுத்துண்டாகவும் செய்யப்பட்டார்.

13. (பொ-ரை) அந்த ஸமயத்தில், சம்பரனென்கிற மஹா மாயாவியான அந்த அஸுரன் தேவர்களையெல்லாம் விரட்டி ஓட்டிவிட்டு, இந்திரனுடன் சண்டை செய்துகொண்டிருந்தான்.

14. (பொ-ரை) அந்த பெரிய யுத்தத்தில், பகல் யுத்தம்செய்து பாணங்களி னால் காயப்படுத்தப்பட்டும், கத்தி முதலியவைகளால் வெட்டப்பட்டும், ச்ரமத்தினால் ராத்ரி தூங்குகின்றவர்களுமான ஜனங்களை அஸுரர்கள் வேகமாகவந்து அடித்துக் கொண்டிருந்தார்கள்.

15. (பொ-ரை) அந்த இடத்தில், அந்த ராத்ரியில் மஹா பராக்ரமசாலி யான, தசரத மஹாராஜன் அஸுரர்களோடு பெருத்த யுத்தமும் செய்து அவர்களா லும் அநேக அஸ்த்ரங்களினால் துண்டு துண்டாகும்படி அடியுண்டார்.

अपवाह्य त्वया देवि सङ्ग्रामान्नष्टचेतनः।
तत्रापि विक्षतः शस्त्रैः पतिस्ते रक्षितस्त्वया ॥ 16 ॥

तुष्टेन तेन दत्तौ ते द्वौ वरौ शुभदर्शने ॥ 17 ॥

स त्वयोक्तः पतिर्देवि यदेच्छेयं तदा वरौ।
गृह्णीयामिति तत्तेन तथेत्युक्तं महात्मना ॥ 18 ॥

---

16. (பதவுரை) हे देवि- ஓ கைகேயியே! नष्टचेतनः- மூர்ச்சையடைந்த, ते पतिः- உன்னுடைய பர்த்தாவானவர், त्वया- உன்னால், सङ्ग्रामात्- யுத்தத்திலிருந்து, अपवाह्य- வேறிடம் கொண்டுபோகப்பட்டு, रक्षितः- காப்பாற்றப்பட்டார், तत्रापि- அந்த இடத்திலேயும், शस्त्रैः- ஆயுதங்களினால், विक्षतः (सन्) காயப்படுத்தப்பட்டவராய்க்கொண்டு, त्वया- உன்னால், रक्षितः- ரக்ஷிக்கப்பட்டார்.

17. (பதவுரை) हे शुभदर्शने- பார்ப்பதற்கு மங்களகரமானவளே! तुष्टेन- ஸந்தோஷப்பட்டிருக்கிற, तेन- அந்த உன்னுடைய பர்த்தாவினால், ते- உனக்கு, द्वौ वरौ- இரண்டு வரங்கள், दत्तौ- கொடுக்கப்பட்டதுகள்.

18. (பதவுரை) हे देवि- கைகேயியே! यदा- எப்பொழுது, इच्छेयं- ஆசைப்படுகிறேனோ, तदा- அப்பொழுது, वरौ- வரங்களை, गृह्णीयां- பெற்றுக்கொள்ளுவேன், इति- என்று, सः पतिः- அந்த பர்த்தாவானவர், त्वया- உன்னால், उक्तः- சொல்லப்பட்டார், तेन महात्मना- அந்த மஹாத்மாவானவரால், तत् तथा- அது அப்படியே, इति- என்று, उक्तं- சொல்லப்பட்டது.

16. (பொழிப்புரை) கைகேயி! இவ்விதமே அஸுரர்களினால் அடிபட்டு மூர்ச்சைபோன உன் பர்த்தாவின் நிலைமையைப்பார்த்து அந்தப்போர்க்களத்திலிருந்து, நீயே ஸாரத்யம் செய்து தேரை ஓட்டிக்கொண்டுபோய் வேறிடம் சென்று, சீதோபசாரங்களைச்செய்து உன் பர்த்தாவுக்கு மூர்ச்சையை நீக்கினாய். அந்த இடத்திலும் அஸுரர்கள் சூழ்வந்து மறுபடி யுத்தஞ்செய்து பாணங்களினால் அடிக்க, நீ அந்த இடத்தையும் விட்டு தேரை வேறிடம் ஓட்டிக்கொண்டுபோய் உன் பர்த்தாவை ரக்ஷித்தாய் அல்லவா?

17. (பொழிப்புரை) மெய்யழகி! அச்சமயம் மிகவும் ஸந்தோஷங்கொண்டு, உன்னுடைய பர்த்தா உனக்கு இரண்டு வரங்களைக் கொடுத்தாரன்றோ!

18. (பொழிப்புரை) ஹே கைகேயி! அந்த இரண்டு வரங்களையும், எனக்கு இஷ்டமானபொழுது பெற்றுக்கொள்ளுகிறேனென்று, நீ பர்த்தாவைப்பார்த்துச் சொல்லவே, அம்மஹாநுபாவரும் அப்படியே ஆகட்டுமென்று ப்ரதிக்ஞித்தார்.

अनभिज्ञा ह्यहं देवि त्वयैव कथिता पुरा ।
कथैषा तव तु स्नेहान्मनसा धार्यते मया ॥ 19

रामाभिषेकसंभारान्निगृह्य विनिवर्तय ।
तौ वरौ याच भर्तारं भरतस्याभिषेचनम् ॥
प्रव्राजनं च रामस्य त्वं वर्षाणि चतुर्दश ॥ 20

चतुर्दश हि वर्षाणि रामे प्रव्राजिते वनम् ।
प्रजाभावगतस्नेहः स्थिरः पुत्रो भविष्यति ॥ 21

19. (ப-ரை) हे देवि- தேவியே! अहं- நான், अनभिज्ञा- (இவ்விஷயம்) தெரியாதவளன்றோ, एषा कथा- இந்த கதை, पुरा- முன்னொருகாலத்தில், त्वयैव- உன்னாலேயே, कथिता- சொல்லப்பட்டது, मया तु- என்னால், तव स्नेहात्- உன்னிடத்தில் ஸ்நேஹத்தினால், मनसा- மனதினால், धार्यते- தரிக்கப்படுகிறது.

20. (ப-ரை) त्वं- நீ, निगृह्य- பர்த்தாவை பலாத்காரம் செய்து, रामाभिषेकसंभारात्- ராமபட்டாபிஷேக ஸாமக்ரியிலிருந்து, विनिवर्तय- திருப்பிவிடு, भरतस्य- பரதனுடைய, अभिषेचनं- பட்டாபிஷேகத்தையும், चतुर्दश- वर्षाणि- பதினான்கு வருஷங்களை, रामस्य- ராமனுடைய, प्रव्राजनं तु- காட்டிற்குத் துரத்தலையும், तौ वरौ- இந்த இரண்டு வரங்களாக, भर्तारं- பர்த்தாவை, याच- கேள்.

21. (ப-ரை) रामे- ராமன், चतुर्दश वर्षाणि- பதினான்கு வருஷங்களை, वनम्- வனத்தைக்குறித்து, प्रव्राजिते- (सति) துரத்தப்பட்டவனாகிவிடில், पुत्रः- (உன்னுடைய) புத்திரன், प्रजाभावगतस्नेहः- ப்ரஜைகளின் மனதை அடைந்த ஸ்நேகமுள்ளவனாகவும், स्थिरः- அசைக்கமுடியாதவனாகவும், भविष्यति- ஆய்விடுவான்.

19. (பொ-ரை) தேவி! இந்த விஷயம் எனக்குத் தெரியாது ஆயினும். முன்னொருக்கால் இந்தக்கதையை நீயே என்னிடம் சொல்லியிருக்கிறாய் உன்னிடத்தில் எனக்கு இருக்கிற அன்பினால், மறக்காமல் மனதில் வைத்துக்கொண்டிருக்கிறேன்.

20. (பொ-ரை) நீ உன்னுடைய பர்த்தாவை கட்டாயப்படுத்தி, ராமபட்டாபிஷேகத்தை நிறுத்தும்படி செய்து முன் கொடுத்திருந்த அந்த இரண்டு வரங்களில், பரதனுக்கு ராஜ்ய பட்டாபிஷேகம் செய்வது ஒருவரமென்றும், பதினான்கு வருஷங்கள் ராமனை காட்டிற்குத் துரத்துவது மற்றொரு வரமென்றும் நீ ப்பங்கிக் கேள்.

21. (பொ-ரை) பதினான்கு வருஷங்கள், ராமனை காட்டிற்குத் துரத்திவிட்டால், உன் பிள்ளையினிடம் ப்ரஜைகளுக்கு அதிகமான அன்பும் உண்டாகி அவனே ராஜ்யத்தில் நிலைத்துவிடுவான்.

क्रोधागारं प्रविश्याद्य क्रुद्धेवाश्वपतेः सुते ।
शेष्वानन्तर्हितायां त्वं भूमौ मलिनवासिनी ॥ 22 ॥

मा स्मैनं प्रत्युदीक्षेथा मा चैनमभिभाषथाः ।
रुदन्ती चापि तं दृष्ट्वा जगत्यां शोकलालसा ॥ 23 ॥

दयिता त्वं सदा भर्तुरत्र मे नास्ति संशयः
त्वत्कृते स महाराजो विशेदपि हुताशनम् ॥ 24 ॥

---

22. (ப-வுரை) हे अश्वपतेः सुते- கேகயராஜன் புத்திரியே! त्वं- நீ, अद्य- இப்பொழுது, क्रोधागारं- கோப அறையை, प्रविश्य- ப்ரவேசித்து, क्रुद्धेव- கோபித்துக்கொண்டவள் போல், मलिनवासिनी- அழுக்கு வஸ்திரத்தை உடுத்திக்கொண்டு, अनन्तर्हितायां- துணி முதலானதுகளால் மறைக்காமலிருக்கிற, भूमौ- வெறும் தரையில், शेष्व- படுத்துக்கொள்.

23. (ப-வுரை) तं- அந்த அரசனை, दृष्ट्वा- பார்த்து, जगत्यां- தரையில், शोकलालसा- துக்கத்தோடு கூடியவளாக, रुदन्ती चापि- அழுதுகொண்டும், एनं- அவனை, मास्म प्रत्युदीक्षेथाः- கண்ணெடுத்தும் பாராதே, एनं- அரசனை, माच अभिभाषथाः- முகங்கொடுத்தும் பேசாதே.

24. (ப-வுரை) त्वं- நீ, सदा- எப்பொழுதும், भर्तुः- பர்த்தாவுக்கு, दयिता- ப்ரியமானவள், अत्र- இந்த விஷயத்தில், मे- எனக்கு, संशयः- ஸந்தேகமும், नास्ति- இல்லை, सः महाराजः- அந்த மஹாராஜா, त्वत्कृते- உனக்காக, हुताशन अपि- அக்னியையும், विशेत्- ப்ர

22. (பொ-ரை) கேகயராஜன் புத்திரியே! நீ இப்பொழுது, கோபமுள்ளவள்போல், ஸ்திரீகள் கோபம் வந்தால் வசிக்கக்கூடிய இடமான கோப அறையில் போய் அழுக்கு வஸ்திரம் தரித்து, படுக்கை முதலானதுகளில்லாமல் வெறுந்தரையில் படுத்துக்கொள்.

23. (பொ-ரை) அந்த ஸமயம், உன்னைப்பார்க்க மஹாராஜர் வந்தால், அவரை கண்ணெடுத்தும் பார்க்கவேண்டாம், முகங்கொடுத்தும் பேசவேண்டாம், வெறுந்தரையில் படுத்துக்கொண்டு, துக்கத்தினால் வருந்திக்கொண்டு, அவரைப் பார்த்து அழுதுகொண்டேயிரு.

24. (பொ-ரை) நீ பர்த்தாவுக்கு எக்காலத்திலும் ப்ரியமானவள். அந்த மஹாராஜா உன்னுடைய ப்ரீதிக்காக, எரிகின்ற நெருப்பிலும் குதிப்பார். இவ்விஷயத்தில் எனக்கு ஸந்தேகமில்லை.

न त्वां क्रोधयितुं शक्तो न क्रुद्धां प्रत्युदीक्षितुम् ।
तव प्रियार्थं राजा हि प्राणानपि परित्यजेत् ॥ 25 ॥

न ह्यतिक्रमितुं शक्तस्तव वाक्यं मही पतिः ।
मन्दस्वभावे बुध्यस्व सौभाग्यबलमात्मन : ॥ 26 ॥

मणिमुक्तं सुवर्णानि रत्नानि विविधानि च ।
दद्याद्दशरथो राजा मा स्म तेषु मनः कृथाः ॥ 27 ॥

25. (ப-ரை) राजा– அரசன், त्वां- உன்னை, क्रोधयितुं- கோபமுள்ளவளாகச் செய்வதற்கும், न शक्तः- சக்தியற்றவர், क्रुद्धां-கோபித்துக்கொண்ட உன்னை, प्रत्युदीक्षितुम- பார்ப்பதற்கும், (न शक्तः- சக்தியற்றவர்), तव- உன்னுடைய, प्रियार्थं- ப்ரியத்திற்காக, प्राणान् अपि- ப்ராணன்களையும், परित्यजेत् हि- விட்டுவிடுவாரன்றோ'

26. (ப-ரை) मन्दस्वभावे- சோம்பலுள்ள ஸ்வபாவமுள்ளவளே! महीपतिः- அரசன், तव- உன்னுடைய, वाक्य- வார்த்தையை, अतिक्रमितुं- மீறி நடப்பதற்கு, न शक्तः हि- சக்தியில்லாதவரன்றோ! आत्मनः- உன்னுடைய, सौभाग्यबलं- அழகின் வலிமையை, बुध्यस्व- அறிந்துகொள்.

27. (ப-ரை) दशरथः राजा- தசரத மஹாராஜன், मणिमुक्तं- ரத்தினங்களையும், முத்துக்களையும், सुवर्णानि- ஸொர்ணங்களையும், विविधानि- நானாவிதங்களான, रत्नानि च- உயர்ந்த வஸ்துக்களையும், दद्यात्- கொடுப்பார், तेषु- அவைகளில், मनः- மனதை, मा स्म कृथाः- வைக்காதே.

25. (பொ—ரை) மஹாராஜா, உனக்குக் கோபத்தை உண்டாக்கவும துணிய மாட்டார். கோபித்துக்கொண்ட உன் முகத்தைப் பார்ப்பதற்கும் பொருக்கமாட்டார், உன்னுடைய ப்ரியத்திற்காக தன் ப்ராணன்களையும் விட்டுவிடுவார்.

26. (பொ—ரை) மெதுவான ஸ்வபாவமுள்ளவளே! அரசன் உன்னுடைய வார்த்தையை மீறி நடப்பதற்கு முடியாது, அப்படியன்றோ உன்னுடைய அழகில் பலமிருக்கிறது. அதை நன்றாய் தெறிந்துகொள்.

27. (பொ—ரை) ரத்தினங்களையும், முத்துக்களையும், தங்க நாணயங்களையும், நானாவிதங்களான சிறந்த வஸ்துக்களையும், தசரத மஹாராஜா உனக்குக்கொடுப்பார். அவைகளில் கொஞ்சமேனும் மனதை வைக்காதே.

यौ तौ दैवासुरे युद्धे वरौ दशरथोऽददात् ।
तौ स्मारय महाभागे सोऽर्थो मा त्वामतिक्रमेत् ॥ 28 ॥

यदा तु ते वरं दद्यात्स्वय मुत्थाप्य राघवः ।
व्यवस्थाप्य महाराजं त्वमिमं वृणुया वरम् ॥ 29 ॥

रामं प्रव्राजयारण्ये नव वर्षाणि पञ्च च ।
भरतः क्रियतां राजा पृथिव्याः पार्थिवर्षभः ॥ 30 ॥

28. (ப-ரை) हे महाभागे- நல்ல அத்ருஷ்ட முடையவளே! दशरथः- தசரதமஹாராஜன், दैवासुरे- தேவாஸுர ஸம்பந்தமான, युद्धे- யுத்தத்தில், यौ तौ- யாவைதாரு, वरौ- வரங்களை, अददात्- கொடுத்தாரோ, तौ- அவைகளை, स्मारय- ஞாபகப்படுத்து, सः अर्थः- அந்த பலமானது, त्वां- உன்னை, मा अतिक्रमेत्- தாண்டமாட்டாது.

29-30. (ப-ரை) राघवः- தசரத மஹாராஜன், यदा तु- எப்பொழுது, उत्थाप्य- (உன்னை) எழுப்பி, ते- உனக்கு, वरं- வரத்தை, दद्यात्- கொடுப்பாரோ, (तदा- அப்பொழுது), त्वं- நீ, महाराजं- மஹாராஜாவை, व्यवस्थाप्य- ஸத்தியத்தில் நிலைநிறுத்தி, इमं वरं- இந்த வரத்தை, वृणुयाः- கேட்கக்கடவாய், नव पञ्च च- பதினைந்து, वर्षाणि- வருஷங்களை, रामं- ராமனை, अरण्ये- வனத்தில், प्रव्राजय-வஸிக்கும்படி நீர் செய்யவேணும், पार्थिवर्षभः-ராஜச்ரேஷ்டனை, भरतः- பரதன், पृथिव्याः- பூமிக்கு, राजा- அரசனாக, क्रियतां- செய்யப்படட்டும்.

28. (பொ-ரை) மஹா பாக்கியமுடையவளே! அந்த தேவாஸுர யுத்தத்தில், அரசன் உனக்கு இரண்டு வரன்களைக் கொடுத்தானன்றோ! அவைகளை இப்பொழுது கொடுக்கும்படி ஞாபகப்படுத்து. உனக்கு இஷ்டமானபடி பரதனுக்குப் பட்டாபிஷேகமும், ராமன் காட்டுக்குப்போவதும், தடையில்லாமல் நடந்துவிடும்.

29-30. (பொ-ரை) எப்பொழுது மஹாராஜா, உன்னையெழுப்பி, உனக்கு வரன்கொடுப்பாரோ அப்பொழுது, அவரை நீ சபதங்களினால் (ஆணைகளினால்) ஸத்தியம் தவறாமல் கட்டுப்படுத்தி, பதினைந்து வருஷம் ராமனை காட்டுக்குத் துரத்தி மென்றும், ராஜச்ரேஷ்டனை பரதனுக்கு ராஜ்ய பட்டாபிஷேகம் செய்யுமென்றும் கேள்.

चतुर्दश हि वर्षाणि रामे प्रव्राजिते वनम् ।
रूढश्च कृतमूलश्च शेषं स्थास्यति ते सुतः ॥ 31 ॥

रामप्रव्राजनं चैव देवि याचस्व तं वरम् ।
एवं सिध्यन्ति पुत्रस्य सर्वार्थास्तव भामिनि ॥ 32 ॥

एवं प्रव्राजितश्चैव रामोऽरामो भविष्यति ।
भरतश्च हतामित्रस्तव राजा भविष्यति ॥ 33 ॥

---

31. (ப-ரை) चतुर्दश वर्षाणि- பதினான்கு வருஷங்களை, रामे- ராமன், वनं- அரண்யத்தைக் குறித்து, प्रव्राजिते सति- துரத்தப்பட்டவளவில், ते सुतः- உன்னுடைய பிள்ளையான பரதன், रूढश्च- ப்ரஸித்தனாகவும், அல்லது வ்ருத்தி அடைந்தவனாகவும், कृतमूलश्च- மூலபலங்களை ஸ்வாதீனம் செய்துகொண்டு, शेषं- மீதி வருஷங்களையும், स्थास्यति- (ராஜ்யத்திலே) இருப்பான்.

32. (ப-ரை) हे देवि- ஓ தேவியே! तं- அந்த அரசனை, रामप्रव्राजनं चैव- ராமன் வனத்தில்வஸிப்பதையும், वरम्- வரமாக, याचस्व- கேட்டுக்கொள், हे भामिनि- ஓ ரோஷமுள்ளவளே! एवं- இப்படியானால், तव पुत्रस्य- உன்னுடைய பிள்ளைக்கு, सर्वार्थाः- எல்லாப்ரயோஜனங்களும், सिध्यन्ति- கைகூடும்.

33. (ப-ரை) एवं- இவ்விதம், प्रव्राजितः- காட்டுக்குத்துரத்தப்பட்ட, रामः- ராமன், अराम एव- (ஜனங்களுக்கு) ப்ரியமில்லாதவனாகவே, भविष्यति- ஆய்விடுவான். तव- உன்னுடைய, भरतश्च- பரதனும், हतामित्रः- சத்ருவில்லாதவனாகி, राजा- அரசனாக, भविष्यति- ஆய்விடுவான்.

31. (பொ-ரை) பதினான்கு வருஷம் ராமன் காட்டிற்குப் போய்விட்டால், உன்னுடைய பிள்ளையான பரதன், ராஜ்யத்தில் ப்ரஸித்தனாகி, நிலைபெற்று மூலபலம் முதலானதுகளை ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு மற்ற காலமும் ராஜ்யத்திலேயே இருப்பான்.

32. (பொ-ரை) ஓ தேவி! அந்த மஹாராஜனிடத்தில், ராமன் காட்டிற்குப் போவதையும், பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்வதையும், வரமாக வேண்டிக் கொள். ரோஷமுள்ளவளே! இப்படிச்செய்தால், உன்னுடைய பிள்ளைக்கு ஸமஸ்த கார்யங்களும் கைகூடும்.

33. (பொ-ரை) இவ்விதம் ராமனைக் காட்டிற்கு அனுப்பிவிட்டால், அவன் இப்பொழுதே, ஜனங்களுக்கு ப்ரியமில்லாதவனாக ஆய்விடுவான். உன்னுடைய பிள்ளையான பரதனும் சத்ருவில்லாத மஹாராஜனாக ஆகிவிடுவான்.

येन कालेन रामश्च वनात्प्रत्यागमिष्यति ।
तेन कालेन पुत्रस्ते कृतमूलो भविष्यति ।
संगृहीतमनुष्यश्च सुहृद्भिः सार्धमात्मवान् ॥ ॥ 34 ॥

प्राप्तकालं तु ते मन्ये राजानं वीतसाध्वसा ।
रामाभिषेकसंभारान्निगृह्य विनिवर्तय ॥ 35 ॥

अनर्थमर्थरूपेण ग्राहिता सा ततस्तया ।
हृष्टा प्रतीता कैकेयी मन्थरामिदमब्रवीत् ॥ 36 ॥

सा हि वाक्येन कुब्जायाः किशोरीवोत्पथं गता ।
कैकेयी विस्मयं प्राप्ता परं परमदर्शना ॥ 37 ॥

---

34. (ப-ரை) येन कालेन- எந்தக்காலத்தில், रामश्च- ராமனும், वनात्- வனத்திலிருந்து, प्रत्यागमिष्यति- திரும்பி வருவானோ, तेन कालेन- அந்தக்காலத்தில், ते पुत्रः- உன்னுடைய புத்திரன், संगृहीत मनुष्यः च- கைவசப்படுத்தப்பட்ட ஜனங்களையுடையவனாய், आत्मवान्- தீரனாய், सुहृद्भिः सार्धं- தோழர்களோடுகூட, कृतमूलः- ராஜ்யத்தில் நிலைத்தவனாக, भविष्यति- ஆய் விடுவன்.

35. (ப-ரை) ते- உனக்கு, प्राप्तकालं तु- தகுந்த காலமாக, मन्ये- எண்ணுகிறேன், वीतसाध्वसा (सती)- பயமில்லாதவளாய்க்கொண்டு, त्वं- நீ, राजानम्- மஹாராஜாவை, निगृह्य- நிர்ப்பந்தப்படுத்தி, रामाभिषेकसंभारात्- ராமபட்டாபிஷேக கார்யத்திலிருந்து, विनिवर्तय- திருப்பு.

36–37. (ப-ரை) ततः- பிறகு, अनर्थं- தனக்கு அனர்த்தமான கார்யத்தை, अर्थरूपेण- அநுகூலமான கார்யமாக, ग्राहिता- தெரிவிக்கப்பட்டவளும், परमदर्शना- அழகான காக்ஷியுள்ளவளும், सा- அப்படி ப்ரஸித்தையுமான, सा- அந்த, कैकेयी- கேகய ராஜன் புத்ரியான, कैकेयी- கைகேயி தேவியானவள், कुब्जायाः- கூனியினுடைய, वाक्येन- வார்த்தையினால், किशोरीव- பெண்குதிரைபோல், उत्पथं- துர்மார்க்கத்தை, गता– அடைந்து, परं-அதிகமான, विस्मयं- ஆச்சர்யத்தை, प्राप्ता सती- அடைந்தவளாய்க்கொண்டு, मन्थरां- கூனியைக்குறித்து, इदं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னாள்.

---

34. (பொ-ரை) பதினான்கு வருஷம் தீர்ந்து ராமன் வனத்திலிருந்து திரும்பி வருவதற்குள், உன் பிள்ளையான பரதன், ஜனங்களுக்கும் தன்னிடத்தில் ப்ரீதியுண்டாகும்படிச்செய்தும் தோழர்களோடுகூட ராஜ்யத்தில் வேரூன்றினவனாகவும் ஆய்விடுவான்.

35. (பொ-ரை) உன் இஷ்டத்தை ஸாதித்துக்கொள்ளுவதற்கு இதுவே தகுந்த காலமென்று நினைக்கிறேன். ஆகையால் நீ பயப்படாமல் மஹாராஜாவை அடக்கிக்கொண்டு, ராமபட்டாபிஷேக கார்யத்தை நிறுத்தும்படி செய்.

36–37. (பொ-ரை) பிறகு அந்த கூனியானவள், கைகேயிக்கு அனர்த்தகர

कुब्जे त्वां नाभिजानामि श्रेष्ठां श्रेष्ठाभिधायिनीम्।
पृथिव्यामसि कुब्जानामुत्तमा बुद्धिनिश्चये ॥ 38 ॥
त्वमेव तु ममार्थेषु नित्ययुक्ता हितैषिणी।
नाहं समवबुध्येयं कुब्जे राज्ञश्चिकीर्षितम् ॥ 39 ॥
सन्ति दुःसंस्थिताः कुब्जा वक्राः परमपापिकाः।
त्वं पद्ममिव वातेन सन्नता प्रियदर्शना ॥ 40 ॥

---

38. (ப-ரை) कुब्जे- கூனியே! श्रेष्ठां- மிகவும் சிறந்தவளாயும், श्रेष्ठाभिधायिनीम्- உத்தமமான வார்த்தையைச் சொல்லுகிறவளுமான, त्वां- உன்னை, नाभिजानामि- அறியாதவளாக இருக்கிறேன், बुद्धिनिश्चये- புத்தியினால் நிச்சயப்படுத்தும் விஷயத்தில், पृथिव्यां- பூமியில் (இருக்கிற), कुब्जानां- கூனிகளுக்குள், उत्तमा- உயர்ந்தவளாக, असि- இருக்கிறாய்.

39. (ப-ரை) त्वमेव तु- நீயாகவே, मम- என்னுடைய, अर्थेषु- காரியங்களில், नित्ययुक्ता- எப்பொழுதும் கவனமாகவே இருக்கிறாய், हितैषिणी- எனக்கு ஹிதத்தையே விரும்புகிறாய், कुब्जे- கூனியே, अहं- நான், राज्ञः- அரசன், चिकीर्षितम्- செய்யப்போகிற காரியத்தை, न समवबुध्येय- தெரிந்துகொள்ளாமல் போய்விட்டேன்.

40. (ப-ரை) दुःसंस्थिताः- விகாரமான சரீரத்தின் அமைப்புடையவர்களாயும், वक्राः- கோணலுள்ளவர்களாயும், परमपापिकाः- மிகவும் பாபமுள்ளவர்களுமான, कुब्जाः- கூனிகள், सन्ति- உலகத்தில் இருக்கின்றார்கள், वातेन- காற்றினால், सन्नत-வணங்கியிருக்கிற, पद्ममिव- தாமரை புஷ்பம்போல், (वातेन- வாயுவினால்), सन्नता- வளைக்கப்பட்ட, त्वं- நீ, प्रियदर्शना- ப்ரியமான பார்வையுடையவளாக இருக்கிறாய்.

---

மானகாரியத்தையே அநுகூலமான காரியமென்று போதிப்பிக்க, அந்த அழகுள்ள, கேகயராஜன் புத்ரியான கைகேயியும், அதை அப்படியேயென்று தெரிந்துகொண்டு, கூனியின் வார்த்தையினால் துஷ்டமான பெண்குதிரைபோல் துர்மார்க்கத்தில் புத்தி செலுத்தி, மிகவும் ஆச்சர்யத்துடன் கூனியைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னாள்.

38. (பொ-ரை) கூனியே! நீ மிகவும் உத்தமமானவள், உத்தமமான வார்த்தைகளும் சொல்லக்கூடியவள். இதுவரையில் உன்னை நான் இப்படிப்பட்டவளாகத் தெரிந்துகொள்ளாமல் இருந்துவிட்டேன். ஒரு காரியத்தை புத்தியினால் நிச்சயிக்கும் விஷயத்தில், உலகத்திலே இருக்கிற கூனிகளைக்காட்டிலும், நீயே மிகவும் மேலானவளென்று நினைக்கிறேன்

39. (பொ-ரை) கூனி! நீயாகவே, என்னுடைய காரியத்தில் எப்பொழுதும் பொறுப்புள்ளவளாகவே யிருக்கிறாய். எனக்கு ஹிதத்தையும் கோருகிறாய். நீ சொல்லாமல் போனால் அரசன் செய்யப்போகின்ற ராமபட்டாபிஷேகத்தைத் தெரிந்து கொள்ளாமலே இருந்து விடுவேன்.

40. (பொ-ரை) உலகத்தில் எத்தனையோ கூனிகள் விகாரமான சரீர ஸம்

उरस्तेऽभिनिविष्टं वै यावत्स्कन्धात्समुन्नतम् ।
अधस्ताच्चोदरं शातं सुनाभमिव लज्जितम् ॥ 41 ॥
परिपूर्णं तु जघनं सुपीनौ च पयोधरौ ।
विमलेन्दुसमं वक्त्रमहो राजसि मन्थरे ॥ 42 ॥
जघनं तव निर्घुष्टं रशनादामशोभितम् ।
जङ्घे भृशमुपन्यस्ते पादौ चाप्यायतावुभौ ॥ 43 ॥

41. (ப-ரை) ते उरः- உன்னுடைய மார்பானது, अभिनिविष्टं- பொருமையுள்ளதாய்க்கொண்டு, यावत्स्कन्धात्- தோள்வரையில், समुन्नतम्- உயர்ந்திருக்கிறது, अधस्तात्- மார்பின்கீழ், सुनाभ- அழகான கொப்பூழோடு கூடிய, उदरं- வயிரானது, लज्जितम्- इव- வெட்கப்பட்டதுபோல், शातं- இளைத்திருக்கிறது.

42. (ப-ரை) मन्थरे- மந்தரையே! जघनं- உன்னுடைய இடுப்பின் முன்புறமானது, परिपूर्णं तु- விசாலமாயிருக்கிறது, पयोधरौ च- ஸ்தனங்களும், सुपीनौ- மிகவும் பெருத்திருக்கின்றதுகள், वक्त्र- உன் முகமானது, विमलेन्दुसमं- நிர்மலமான சந்திரனுக்கொப்பானது, अहो- ஆச்சரியம், राजसि- நீ நன்கு ப்ரகாசிக்கிறாய்.

43. (ப-ரை) तव- உன்னுடைய, जघनं- இடுப்பானது, रशनादामशोभितम्- ஒட்டியாணத்தினால் விளங்கியது, निर्घुष्टं- (ஒட்டியாணத்தில் கட்டியிருக்கிற சலங்கைகளின்) சப்தத்தோடு கூடியிருக்கிறது, जङ्घे- முழங்கால்கள், भृशं- மிகவும், उपन्यस्ते- நல்ல அமைப்புள்ளதுகள், उभौ- இரண்டு, पादौ च (अपि) கால்களும், आयतौ- நீண்டிருக்கின்றதுகள்.

விசேஷமுடையவர்களாயும், கோபமுள்ளவர்களாயும், மிகவும் பாபமான பார்வையுடையவர்களாயிருக்கிறார்கள். காற்றினால் வணக்கப்பட்ட தாமரைபுஷ்பம் போல் வாயுவினால் வணங்கியிருக்கிற நீ மாத்திரம் மிகவும் ப்ரியமான பார்வையுடையவளாயிருக்கிறாய்.

41. (பொ-ரை) உன்னுடைய மார்பு தோளுடன் சமமாயிருப்பதுபோல் உயர்ந்திருக்கிறது. மார்பின்கீழ் அழகான கொப்பூழையுடைய உன் வயிறானது, உயர்ந்த மார்பைக்கண்டு வெட்கப்பட்டதுபோல், க்ருசமாக இருக்கிறது. (உள்ளடங்கியிருக்கிறது.)

42. (பொ-ரை) மந்தரே! உன்னுடைய இடுப்பின் முன்புறமானது மிகவும் விஸ்தீர்ணமாயிருக்கிறது. ஸ்தனங்களோவெனில் பெருத்திருக்கின்றதுகள். முகமும் களங்கமற்ற சந்திரனுக்கு ஸமானமாயிருக்கிறது. என்ன ஆச்சர்யம்! நீ மிகவும் அழகாக விளங்குகிறாய்.

43. (பொ-ரை) உன்னுடைய இடுப்பு ஒட்டியாணம் அணிந்து, அதன் சலங்கைகளினால் கலகலவென்று சப்தித்துக்கொண்டிருக்கிறது. முழங்கால்கள் இரண்டும் மிகவும் அழகாயிருக்கின்றதுகள். இரண்டு கால்களும் நீளமாயிருக்கின்றதுகள்.

त्वमायताभ्यां सक्थिभ्यां मन्थरे क्षौमवासिनी ।
अग्रतो मम गच्छन्ती राजहंसीव राजसे ॥ 44 ॥

आसन्याः शम्बरे मायाः सहस्रमसुराधिपे ।
सर्वास्त्वपि निविष्टास्ता भूयश्चान्याः सहस्रशः ॥ 45 ॥

तवेदं स्थगु यद्दीर्घं रथघोणमिवायतम् ।
मतयः क्षत्रविद्याश्च मायाश्चात्र वसन्ति ते ॥ 46 ॥

44. (ப-ரை) मन्थरे- ஓ மந்தரையே! त्वं- நீ, क्षौमवासिनी- வெண்பட்டு உடுத்திக்கொண்டும், आयताभ्यां- நீண்டிருக்கிற, सक्थिभ्यां- துடைகளோடு, मम- என்னுடைய अग्रतः- முன்னால், गच्छन्ती सति- நடந்துகொண்டு, राजहंसी इव- அன்னப்பேடுபோல், राजसे- விளங்குகிறாய்.

45. (ப-ரை) असुराधिपे- அஸுரர்களுக்கு அரசனான, शम्बरे- சம்பராஸுரனிடத்தில், सहस्रं- ஆயிரக்கணக்கான, याः मायाः- எந்த மாயைகள், आसन्- இருந்தது களோ, ताः सर्वाः- அவைகளெல்லாமும, भूयः- மறுபடியும, सहस्रशः- ஆயிரக்கணக்கான अन्याः- லோகத்திலுள்ள மாயைகளும், त्वयि- உன்னிடத்தில், निविष्टाः- குடிகொண்டிருக்கி

46. (ப-ரை) रथघोणमिव- சக்கரத்தின் நடுபாகம்போல், आयतं- விசாலமாயும், दीर्घं- நீண்டுமிருக்கிற, तव- உன்னுடைய, यत्- யாதொரு, इदं- இந்த, स्थगु- முடானது (இருக்கிறதோ), ते- உன்னுடைய, अत्र- இந்த முடில், मतयः- புத்திகளும், क्षत्रविद्याः- ராஜநீதிகளும், मायाश्च- அநேக மாயைகளும், वसन्ति- குடிகொண்டிருக்கிறதுகள்.

44. (பொ-ரை) ஹே மந்தரே! நீ வெண்பட்டு தரித்து, நீண்ட துடைகளுடன் என் முன்னால் போகிறபொழுது, அன்னப்பேடைபோல் விளங்குகிறாய்.

45. (பொ-ரை) அஸுரர்களுக்கு அரசனாகிய, சம்பராஸுரனிடத்தில் இருந்த ஆயிரக்கணக்கான மாயைகளும், அவைகள் தவிர, இன்னும் அநேகமான லோகத்திலுள்ள மாயைகளெல்லாம் உன் ஒருவளிடத்திலேயே குடிகொண்டிருக்கிறதுகள்.

46. (பொ-ரை) உன்னுடைய மார்பில், தேர்சக்கரத்தின் கும்பக்கட்டைபோல் விசாலமாயும், நீண்டுமிருக்கிற இந்த கூனில் புத்திகளும், ராஜநீதிகளும் அநேக மாயைகளும் குடிகொண்டிருக்கிறதுகள்.

अत्र ते प्रतिमोक्ष्यामि मालां कुब्जे हिरण्मयीम् ।
अभिषिक्ते च भरते राघवे च वनं गते ॥ ॥ 47 ॥

जात्येन च सुवर्णेन सुनिष्टप्तेन मन्थरे ।
लब्धार्था च प्रतीता च लेपयिष्यामि ते स्थगु ॥ 48 ॥

मुखे च तिलकं चित्रं जातरूपमयं शुभम् ।
कारयिष्यामि ते कुब्जे शुभान्याभरणानि च ॥ 49 ॥

47. (ப-ரை) कुब्जे- கூனியே! भरते- பரதன், अभिषिक्ते च- அபிஷேகம் செய்யப்பட்டவனாகில், राघवे च- ராமனும், वनं गते सति- வனத்தையடைந்தவனாகில், ते- உன்னுடைய, अत्र- இந்த கூனில், हिरण्मयीं- ஸ்வர்ணமயமான, मालां- மாலையை, प्रतिमोक्ष्यामि- போடப்போகிறேன்.

48. (ப-ரை) मन्थरे- மந்தரே! (अहं- நான்), लब्धार्था च- அடையப்பட்ட இஷ்டார்த்தத்தையுடையவளாய், प्रतीता च सती- ஸந்தோஷமுடையவளாய்க்கொண்டு, जात्येन- நல்ல ஜாதியினுடைய, सुवर्णेन- நல்ல வர்ணமுடைய, सुनिष्टप्तेन- நல்ல ஸரிகைகள் போட்ட கஞ்சுகத்தினால், ते- உன்னுடைய, स्थगु- இந்தக் கோணலை, लेपयिष्यामि அலங்காரம் செய்யப்போகிறேன்.

49. (ப-ரை) कुब्जे- கூனியே! ते- உன்னுடைய, मुखे च- முகத்திலும், चित्रं- விசித்ரமாயும், जातरूपमयं- ஸ்வர்ணமயமுமான, शुभम्- அழகான, तिलकं- திலகத்தையும், शुभानि- அழகான, आभरणानि च- மற்ற ஆபரணங்களையும், कारयिष्यामि- செய்விக்கப்போகிறேன்.

47. (பொ-ரை) ஹே கூனியே! நம்முடைய எண்ணப்படிக்கு பரதனுக்கும் பட்டாபிஷேகம் நடந்து, ராமனும் காட்டுக்குப்போனபிறகு, உன்னுடைய இந்த கூனில் ஸ்வர்ணமயமான மாலையைப்போடப்போகிறேன்.

48. (பொ-ரை) மந்தரே! என்னுடைய எண்ணம் நிறைவேறினால் பிறகு, பரமஸந்தோஷத்துடன் மிகவும் உயர்ந்ததாய நல்ல வர்ணமுடைய தங்க ஸரிகை போட்ட கஞ்சுகத்தினால் உன்னுடைய இந்த கோணலை அலங்காரம் செய்யப்போகிறேன்.

49. (பொ-ரை) கூனியே! உன்னுடைய முகத்திற்கு ஸ்வர்ணங்களால் செய்து நானாவித ரத்னங்களிழைத்து விசித்ரமாய் அழகானதுமான திலகத்தையும் செய்விக்கிறேன். இது தவிர மற்ற அழகான ஆபரணங்களையும் செய்விக்கப்போகிறேன்.

परिधाय शुभे वस्त्रे देवतेव चरिष्यसि ॥ 50 ॥

चन्द्रमाह्वयमानेन मुखेनाप्रतिमानना ।
गमिष्यसि गतिं मुख्यां गर्वयन्ती द्विषज्जनम् ॥ 51 ॥

तवापि कुब्जाः कुब्जायाः सर्वाभरणभूषिताः ।
पादौ परिचरिष्यन्ति यथैव त्वं सदा मम ॥ 52 ॥

50. (ப-ரை) शुभे वस्त्रे- அழகான வஸ்திரங்களை, परिधाय- அணிந்துகொண்டு, देवता इव- தேவஸ்திரீபோல், चरिष्यसि- உலாவப்போகிறாய்.

51. (ப-ரை) चन्द्रं- சந்திரனை, आह्वयमानेन- சண்டைக்கு அழைப்பதுபோலிருக்கிற, मुखेन- முகத்தினால், अप्रतिमानना- ஸமானமில்லாத முகமுள்ளவளாய், द्विषज्जनम्- (என்னுடைய) சத்ரு ஜனத்தைக்குறித்து, गर्वयन्ती- கர்வப்பட்டுக்கொண்டு, मुख्यां- உயர்ந்ததான, गतिं- நடையை, गमिष्यसि- செய்யப்போகிறாய்.

52. (ப-ரை) त्वं- நீ, यथैव- எப்படி, मम- எனக்கு, सदा- எப்பொழுதும், (பணிவிடை செய்கிறாயோ), (तदा- அப்படி), कुब्जाः- கூனிகளெல்லாரும், सर्वाभरणभूषिताः (सत्यः)- எல்லா ஆபரணங்களினால் அலங்கரிக்கப்பட்டுக்கொண்டு, कुब्जायाः- கூனியான, तव अपि- உன்னுடையவும், पादौ- பாதங்களை, परिचरिष्यन्ति- பணிவிடை செய்யப்போகிறார்கள்.

50. (பொ-ரை) அழகான வஸ்திரங்களையும் தரித்துக்கொண்டு நீ தேவஸ்திரீபோல் உலாவப்போகிறாய்.

51. (பொ-ரை) சந்திரனை சண்டைக்கு அழைப்பதுபோல் அழகான முகத்துடன், என்னுடைய விரோதிகளான சக்களத்திகள் முன்னால் அதிக கர்வங்கொண்டு அழகான நடையுடன் ஸஞ்சரிக்கப்போகிறாய்.

52. (பொ-ரை) நீ எனக்கு எப்பொழுதும் பணிவிடை செய்வதுபோல், நம் நகரத்திலுள்ள கூனிகளெல்லாரும் ஸர்வாபரணங்களையுமணிந்துகொண்டு கூனியான உன்னுடைய பாதங்களுக்கு பணிவிடை செய்யப்போகிறார்கள்.

इति प्रशस्यमाना सा कैकेयीमिदमब्रवीत् ।
शयानां शयने शुभ्रे वेद्यामग्निशिखामिव ॥ 53 ॥

गतोदके सेतुबन्धो न कल्याणि विधीयते ।
उत्तिष्ठ कुरु कल्याणि राजानमनुदर्शय ॥ 54 ॥

तथा प्रोत्साहिता देवी गत्वा मन्थरया सह ।
क्रोधागारं विशालाक्षी सौभाग्यमदगर्विता ॥ 55 ॥

अनेकशतसाहस्रं मुक्ताहारं वराङ्गना ।
अवमुच्य वरार्हाणि शुभान्याभरणानि च ॥ 56 ॥

ततो हेमोपमा तत्र कुब्जावाक्यवशंगता ।
संविश्य भूमौ कैकेयी मन्थरामिदमब्रवीत् ॥ 57 ॥

53 (ப-ரை) इति- இவ்விதம், प्रशस्यमाना- புகழப்படுகின்ற, सा- அந்த கூனியானவள், वेद्याः- யாக வேதியில், अग्निशिखां इव- அக்நி ஜ்வாலையைப்போல், शुभ्रे- வெளுப்பான, शयने- படுக்கையில், शयाना- படுத்துக்கொண்டிருக்கிற, कैकेयी- கைகேயியைக் குறித்து, इदं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னாள்.

54. (ப-ரை) हे कल्याणि- மங்களமுள்ளவளே! गतोदके- ப்ரவாஹம் போனவிடத்தில், सेतुबन्धः- அணைக்கட்டுவது, न विधीयते- செய்யப்படுகிறதில்லை, कल्याणि- மங்களமுள்ளவளே! उत्तिष्ठ- எழுந்திரு, कुरु- (நான் சொன்னபடி) செய்யக்கடவாய், राजानं- ராஜாவை, अनुदर्शय- எதிர்பார்த்துக்கொண்டிரு.

55-56-57. (ப-ரை) तथा- அவ்விதம், प्रोत्साहिता- (கூனியினால்) உத்ஸாஹப் படுத்தப்பட்ட, विशालाक्षी- அகன்ற கண்களுள்ளவளான, देवी- ராஜமஹிஷியாயும்,

53. (பொ-ரை) இவ்விதம் கைகேயியால் புகழப்பட்ட கூனியானவள், யாக வேதியில் அக்னி ஜ்வாலைபோல் வெளுப்பான படுக்கையில் படுத்துக்கொண்டிருக்கிற கைகேயியைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னாள்.

54 (பொ-ரை) ஓ கல்யாணியே! வெள்ளம் போனபிறகு அணைக்கட்டுவது வழக்கமில்லை. ஆகையால் எழுந்திருந்து நான் சொன்னபடி செய். மஹாராஜாவின் வரவையும் எதிர்பார்த்துக்கொண்டிரு.

55-56-57. (பொ-ரை) அகன்ற கண்களுள்ளவளும் ஸ்வர்ணம்போன்ற சரீரமுடையவளும், உத்தம ஸ்திரீயுமான கைகேயி தேவியானவள், அவ்விதம் கூனியினால் உத்ஸாஹப்படுத்தப்பட்டு, மஹாராஜாவுக்கு தான் ரொம்பவும் ப்ரியமுள்ளவ

इह वा मां मृतां कुब्जे नृपायावेदयिष्यसि ।
वनं तु राघवे प्राप्ते भरतः प्राप्स्यति क्षितिम् ॥ 58 ॥

न सुवर्णेन मे ह्यर्थो न रत्नैर्न च भूषणैः ।
एष मे जीवितस्यान्तो रामो यद्यभिषिच्यते ॥ 59 ॥

---

वराङ्गना- உத்தம ஸ்திரீயுமான, कैकेयी- கைகேயி தேவியானவள், सौभाग्यमदगर्विता (सती)- பெருமையுள்ளவளென்கிற மதத்தினால் கர்வங்கொண்டு, मन्थरया सह- கூனியுடன்கூட, क्रोधागारं- கோப அறையை, गत्वा- அடைந்து, कुब्जावाक्यवशंगता (सती) கூனியின் வார்த்தைக்கு வசப்பட்டவளாய்க்கொண்டு, अनेकशतसाहस्रं- அநேகமாயிரம்பொன்விலையுள்ள, मुक्ताहारं- முத்து மாலையையும், वरार्हाणि- ச்ரேஷ்டமான, शुभानि- அழகான, आभरणानि च- ஆபரணங்களையும், अवमुच्य- கழற்றி எறிந்து, हेमोपमा- सती- பொன்னுக்கு ஸமானமானவளாய்க்கொண்டு, तत्र- அந்த அறையில், भूमौ- தரையில் संविश्य- படுத்துக்கொண்டு, मन्थरां- கூனியைக்குறித்து, इदं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னாள்.

58. (ப-ரை) कुब्जे- கூனியே! मां- என்னை, इह- இந்த இடத்தில், मृता वा- மரித்துப்போனவளாகவாவது, नृपाय- அரசன் பொருட்டு, आवेदयिष्यसि- தெரிவிக்கப்போகிறாய், तु- அல்லது, राघवे- ராமன், वनं- வனத்தை, प्राप्ते (सति)- அடைந்தவளவில், भरतः- பரதன், क्षितिम्- பூமியை, प्राप्स्यति- அடையப்போகிறான்.

59. (ப-ரை) सुवर्णेन- ஸ்வர்ணத்தினால், मे- எனக்கு, अर्थः- ப்ரயோஜனமும், न हि- இல்லை, रत्नैः- ரத்னங்களாலும், न- ப்ரயோஜனமில்லை, भूषणैः च- ஆபரணங்களாலும், न- ப்ரயோஜனமில்லை, रामः- ராமன், अभिषिच्यते यदि- அபிஷேகம் செய்யப்படுவானேயானால், एषः- இதுவே, मे- என்னுடைய, जीवितस्य- உயிருக்கு, अन्तः- முடிவு.

ளென்கிற மதத்தினால் கர்வங்கொண்டு, கூனியின் வார்த்தைக்கு வசப்பட்டு அவளுடன்கூட கோபக்ருஹத்தையடைந்து அநேகமாயிரம் பொன் விலையுள்ள முக்தாஹாரத்தையும், ரொம்பவும் அதிக விலையுள்ள அழகான ஆபரணங்களையும் கழற்றி எறிந்துவிட்டு, அந்த கோபக்ருஹத்தில் தரையில் படுத்துக்கொண்டு மந்தரையைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னாள்.

58. (பொ-ரை) கூனியே! (மஹாராஜா நமக்குப்ரதிகூலமாயிருந்தால்) நான் இவ்விடத்திலேயே மரித்துப்போனவளாக நீ அவருக்குத்தெரிவிக்கப்போகிறாய். அல்லது, நமக்கு அநுகூலமாயிருந்தால், ராகவன் வனம் சென்று பரதன் ராஜ்யத்தை அடையப்போகிறான்.

59. (பொ-ரை) ஸ்வர்ணத்தினாலும், ரத்னங்களினாலும், ஆபரணங்களினாலும், எனக்கு ஒரு ப்ரயோஜனமுமில்லை. ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்தால் அப்பொழுதே எனக்கு ப்ராணன் முடிந்துவிடும்.

यमस्य वा मां विषयं गतामितो निशाम्य कुब्जे प्रतिवेदयिष्यसि।
वनं गते वा सुचिराय राघवे समृद्धकामो भरतो भविष्यति ॥ 63 ॥

अहं हि नैवास्तरणानि न स्रजो न चन्दनं नाञ्जनपानभोजनम्।
न किंचिदिच्छामि न चेह जीवितं न चेदितो गच्छति राघवो वनम् ॥ 64 ॥

முள்ளவளான, महिषी- ராஜமஹிஷியானவள், अतिविस्मिता (सती)- மிகவும் ஆச்சர்யப்பட்டுக்கொண்டு, हृदये- மார்பில், हस्तौ- கைகளை, निधाय- வைத்துக்கொண்டு, कुपिता- கோபமுள்ளவளாய், पुन: पुन:- அடிக்கடி, कुब्जां- கூனியைக்குறித்து, शशास- சொன்னாள்.

63. (ப—ரை) कुब्जे- கூனியே! मां- என்னை, इत:- இங்கிருந்து, यमस्य- யமனுடைய, विषयं- தேசத்தை, गतां- அடைந்தவளாக, निशाम्य- பார்த்து, प्रतिवेदयिष्यसि- (அரசனுக்கு) தெரிவிக்கவாவது போகிறாய், वा- அல்லது, राघवे- ராமன், चिराय- வெகுநாள்வரையில், वनं-வனத்தைக்குறித்து, गते सति- போனவளவில், भरत:-பரதன், समृद्धकाम: (सन्)- மனோரதம் பூர்த்தியானவனாய்க்கொண்டு, भविष्यति वा- ஆகவாவது போகிறான்.

64. (ப—ரை) राघव:- ராமன், इत:- இங்கிருந்து, वनं- காட்டைக்குறித்து, न गच्छति (चेत्)- போகாமலிருப்பானேயானால், अहं- நான், आस्तरणानि- (ரத்னகம்பளம் முதலான) கீழ் விரிகளையும், नैव इच्छामि- விரும்பமாட்டேன், स्रज:- மாலைகளையும், न-விரும்பமாட்டேன், चन्दनं- சந்தனத்தையும், न- விரும்பமாட்டேன், अञ्जनपानभोजनम्- மையையும், பானத்தையும், போஜனத்தையும், न- விரும்பமாட்டேன், किंचित्- (अपि) வேறு ஒன்றையும், न- விரும்பமாட்டேன், इह இந்த லோகத்தில், जीवितं च- பிழைத்திருப்பதையும், न- விரும்பமாட்டேன்.

---

மார்பில் கையை வைத்துக்கொண்டு மிகவும் ப்ரியமான மஹாராஜனை நமக்கு இஷ்டமான அநிஷ்டத்தை செய்கிறானென்று கோபத்துடன் கூனியைப்பார்த்து மறுபடியும் சொன்னாள்.

63. (பொ—ரை) கூனி! மஹாராஜா என்னுடைய வார்த்தையைக் கேட்காமல் எனக்கு விரோதம் செய்தால், நான் யமலோகத்தை அடைந்தே விடுவேன். இதைப்பார்த்து நீ அவரிடம் சொல்லப்போகிறாய். அப்படியில்லையாகில் வெகுநாள் ராமன் காட்டிற்குப்போய், பரதன் இஷ்டம் நிறைவேறி ராஜ்யத்தை ஆளப்போகிறான். இந்த இரண்டிலொன்று நிச்சயம்.

64 (பொ—ரை) இங்கிருந்து ராமன் வனம் போகாதபக்ஷத்தில், சித்திரகம்பளம் முதலான ஆஸனங்களையும், மாலைகளையும், சந்தனத்தையும், மையையும், பானத்தையும், போஜனத்தையும், இவைகள் தவிர வேறு எந்த வஸ்துவையும், நான் ஆசைப்படமாட்டேன். பலவாறு சொல்வானேன், இந்த உலகத்தில் உயிரோடு இருப்பதையே நான் விரும்பமாட்டேன்.

अथैतदुक्त्वा वचनं सुदारुणं निधाय सर्वाभरणानि भामिनी ।
असंवृतामास्तरणेन मेदिनीं तदाधिशिश्ये पतितेव किन्नरी ॥ 65 ॥

उदीर्णसंरम्भतमोवृतानना तथावमुक्तोत्तममाल्यभूषणा ।
नरेन्द्रपत्नी विमना बभूव सा तमोवृता द्यौरिव मग्नतारका ॥ 66 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे

नवमः सर्गः ॥ 9 ॥

65. (ப-ரை) अथ- பிறகு, भामिनी- ரோஷமுள்ள கைகேயியானவள், सुदारुणं- மிகவும் கொடியதான, एतत् वचनं- இந்த வார்த்தையை, उक्त्वा- சொல்லிவிட்டு, सर्वाभरणानि- எல்லா ஆபரணங்களையும், निधाय- வாங்கி தரையில் வைத்து, पतिता- கீழே விழுந்திருக்கிற, किन्नरी इव- கின்னரஸ்த்ரீபோல், आस्तरणेन- (ரத்னகம்பளம் முதலான) விரிப்பினால், असंवृता- மறைக்கப்படாமலிருக்கிற, मेदिनी- தரையில், तदा- அப்பொழுது, अधिशिश्ये- படுத்துக்கொண்டாள்.

66. (ப-ரை) उदीर्णसंरम्भतमोवृतानना- விருத்தியடைந்த கோபமாகிற இருளினால் மூடப்பட்ட முகமுள்ளவளும், तथा- அவ்விதம், अवमुक्तोत्तममाल्य भूषणा- கழற்றப்பட்ட சிறந்ததான மாலைகளையும், ஆபரணங்களையுமுடையவளும், विमनाः- துக்கமுள்ளவளுமான, सा- அந்த, नरेन्द्रपत्नी- ராஜபத்னியானவள், तमोवृता- இருட்டால் மூடப்பட்ட, मग्नतारका- மறைந்துபோன நக்ஷத்ரங்களையுமுடைய, द्यौः इव- ஆகாயம் போல், बभूव- ஆனாள்.

65 (பொ-ரை) இவ்விதம் ரோஷமுள்ளவளான கைகேயி, கூனியிடம் ப்ரதிக்ஞை செய்தபடி, மிகவும் கொடியதான இந்த வார்த்தைகளைச் சொல்லி, தான் அணிந்திருந்த எல்லா ஆபரணங்களையும் கழற்றி தரையில் போட்டுவிட்டு, வெறும் தரையில் புண்யம் தீர்ந்து தேவலோகத்திலிருந்து பூலோகத்தில் விழுந்த கின்னரப் பெண் போல் தரையில் படுத்துக்கொண்டாள்.

66. (பொ-ரை) மேல் மேலும் பொங்கிக் கொண்டிருக்கிற கோபமாகிற இருள் சூழ்ந்த முகமுள்ளவளாய், அணிந்துகொண்டிருந்த மாலைகளையும் ஆபரணங்களையும் கழற்றி எறிந்து, மிகவும் துக்கமுள்ளவளுமான அந்த ராஜபத்னியானவள், இருள்சூழ நக்ஷத்திரங்களும் அஸ்தமனமடைந்த ஆகாயம் போல் காணப்பட்டாள்.

दशमः सर्गः ॥ 10 ॥

विदर्शिता यदा देवी कुब्जया पापया भृशम् ।
तदा शेते स्म सा भूमौ दिग्धविद्धेव किन्नरी ॥ 1 ॥
निश्चित्य मनसा कृत्यं सा सम्यगिति भामिनी ।
मन्थरायै शनैः सर्वमाचचक्षे विचक्षणा ॥ 2 ॥
सा दीना निश्चयं कृत्वा मन्थरावाक्यमोहिता ।
नागकन्येव निश्वस्य दीर्घमुष्णं च भामिनी ॥
मुहूर्तं चिन्तयामास मार्गमात्मसुखावहम् ॥ 3 ॥

1. (ப-ரை) देवी- தேவியான கைகேயி! भृशम्- மிகவும், पापया- பாபமுள்ளவளான, कुब्जया- கூனியினால், यदा- எப்பொழுது, विदर्शिता- விபரீதமாக போதிக்கப்பட்டாளோ, तदा- அப்பொழுது, सा- அந்த கைகேயி, दिग्धविद्धा- விஷம் பூசின பாணத்தால் அடிக்கப்பட்ட, किन्नरी इव- கின்னர ஸ்திரீ போல், भूमौ- தரையில், शेते स्म- படுத்துக்கொண்டாள்.

2. (ப-ரை) भामिनी- ரோஷமுள்ளவளும், विचक्षणा- கெட்டிக்காரியுமான, सा- அந்தக் கைகேயி, कृत्य- தான் செய்யவேண்டிய காரியத்தை, मनसा- மனதினால், निश्चित्य- தீர்மானித்து, सर्व- (நாம் ஆலோசித்த விஷயம்) எல்லாம், सम्यक्- நன்றாயிருக்கிறது, इति- என்று, मन्थरायै- மந்தரையின் பொருட்டு, शनैः- மெதுவாக, आचचक्षे- சொன்னாள்.

3. (ப-ரை) मन्थरावाक्यमोहिता- மந்தரையின் வார்த்தையினால் கலங்கின மனமும், भामिनी- ரோஷமுள்ளவளுமான, सा- அந்த கைகேயி, दीना (सती)- துக்கமுள்ளவளாயிருந்துகொண்டு, निश्चयं- தீர்மானத்தை, कृत्वा- செய்து, नागकन्येव- நாககன்னிகை போல், दीर्घ- நீண்டதாயும், उष्ण च- சூடாகவும், निश्वस्य- பெருமூச்சைவிட்டுக்கொண்டு, आत्मसुखावहं- தனக்கு ஸுகத்தைக் கொடுக்கத்தக்க, मार्ग- வழியை, चिन्तयामास- ஆலோசித்தாள்.

---

1. (பொ-ரை) மிகவும் துஷ்டையான கூனியானவள் கைகேயியை எப்பொழுது இவ்விதமான விபரீத அர்த்தங்களைப் போதித்தாளோ அப்பொழுதே அந்த கைகேயி விஷம் பூசின பாணத்தால் அடிக்கப்பட்ட கின்னரஸ்திரீபோல் தரையில் படுத்துக்கொண்டாள்.

2. (பொ-ரை) ரோஷமுள்ளவளும், கெட்டிக்காரியுமான கைகேயி, தான் செய்யவேண்டிய காரியம் இன்னதென்று மனதில் தீர்மானித்து கூனியைப் பார்த்து நாம் ஆலோசித்த விஷயங்களெல்லாம் பொருத்தமாய் நன்றாயிருக்கிறதென்று மெள்ளச் சொன்னாள்.

3. (பொ-ரை) கூனியின் வார்த்தையினால், மனது கலங்கி ரோஷமுள்ளவளான அந்த கைகேயி, நாம் ஆலோசித்தபடி காரியம் நடந்தேறுமோ நடக்காதோ வென்று மனதில் வருத்தத்துடன் ஒருவிதமாகத் தீர்மானம் செய்து, நாககன்னிகைபோல் உஷ்ணமாக நெடுமூச்செறிந்து தனக்கு ஸுகத்தை உண்டாக்கக்கூடிய உபாயத்தை ஆலோசித்தாள்.

तया तान्यपविद्धानि माल्यान्याभरणानि च ।
अशोभयन्त वसुधां नक्षत्राणि यथा नभः ॥ 7 ॥

क्रोधागारे निपतिता सा बभौ मलिनाम्बरा ।
एकवेणीं दृढं बध्वा गतसत्वेव किन्नरी ॥ 8 ॥

आज्ञाप्य तु महाराजो राघवस्याभिषेचनम् ।
उपस्थानमनुज्ञाप्य प्रविवेश निवेशनम ॥ 9 ॥

7. (ப-ரை) तया-அந்த கைகேயினால், अपविद्धानि-வாங்கி எறியப்பட்ட, तानि-அந்த, माल्यानि- மாலைகளும், आभरणानि च- ஆபரணங்களும், नक्षत्राणि- நக்ஷத்திரங்கள், यथा- எப்படி, नभः- ஆகாயத்தை, (அலங்கரிக்குமோ அப்படி) वसुधां- பூமியை, अशोभयन्त- அலங்கரித்தன.

8. (ப-ரை) क्रोधागारे- கோப க்ருஹத்தில், एकवेणीं- ஒத்தைப்பின்னலை, दृढं- உறுதியாக, बध्वा- கட்டிக்கொண்டு, निपतिता- படுத்துக்கொண்டிருக்கிற, मलिनाम्बरा- அழுக்கு வஸ்திரமுடையவளான, सा- அந்த கைகேயி, गतसत्वा- உயிரை இழந்த, किन्नरी इव- கின்னர ஸ்திரீபோல, बभौ- விளங்கினாள்.

9. (ப-ரை) महाराजः तु- மஹாராஜாவோவென்றால், राघवस्य- ராகவனுடைய, अभिषेचनम्- பட்டாபிஷேகத்தை, आज्ञाप्य- கட்டளையிட்டு, उपस्थान- ஸபையை, अनुज्ञाप्य- அநுமதிசெய்து, निवेशनम्- தம்முடைய க்ருஹத்தை, प्रविवेश- ப்ரவேசிக்கார்

7. (பொ-ரை) அந்த கைகேயி, தன் சரீரத்திலிருந்து வாங்கி எறிந்த அந்த மாலைகளும், ஆபரணங்களும் தரையில் விழுந்து ப்ரகாசித்துகொண்டு பூமியைப் பார்த்தால் ஆகாயத்தில் நக்ஷத்திரங்கள் ப்ரகாசித்துகொண்டிருந்தது போல இருந்

8. (பொ-ரை) அந்த கைகேயி, அழுக்கு வஸ்திரம் தரித்துகொண்டு, தலை மயிரை ஒரே முடியாக சேர்த்துகட்டிக்கொண்டு உயிரிழந்த கின்னரஸ்திரீபோல் கோபக்ருஹத்தில் விழுந்திருந்தாள்.

9. (பொ-ரை) பிறகு மஹாராஜாவானவர், ராகவனுடைய பட்டாபிஷேக விஷயமாக மந்திரிகளை ஆஞ்யாபித்து, ஸபையோர்களிடத்தில் அநுமதிபெற்றுக் கொண்டு அரண்மனையில் ப்ரவேசித்தார்.

अद्य रामाभिषेको वै प्रसिद्ध इति जज्ञिवान् ।
प्रियार्हां प्रियमाख्यातुं विवेशान्तःपुरं वशी ॥ 10 ॥
स कैकेय्या गृहं श्रेष्ठं प्रविवेश महायशाः ।
पाण्डुराभ्रमिवाकाशं राहुयुक्तं निशाकरः ॥ 11 ॥
शुकबर्हिणसंघुष्टं क्रौञ्चहंसरुतायुतम् ।
वादित्ररवसंघुष्टं कुब्जावामनिकायुतम् ॥ 12 ॥
लतागृहैश्चित्रगृहैश्चम्पकाशोकशोभितैः ।
दान्तराजतसौवर्णवेदिकाभिः समायुतम् ॥ 13 ॥
नित्यपुष्पफलैर्वृक्षैर्वापीभिश्चोपशोभितम् ।
दान्तराजतसौवर्णैः संवृतं परमासनैः ॥ 14 ॥
विविधैरन्नपानैश्च भक्ष्यैश्च विविधैरपि ।
उपपन्नं महार्हैश्च भूषितैस्त्रिदिवोपमम् ॥ 15 ॥
तत्प्रविश्य महाराजः स्वमन्तःपुरमृद्धिमत् ।
न ददर्श प्रियां राजा कैकेयीं शयनोत्तमे ॥ 16 ॥

---

10 (ப-ரை) वशी- ஸ்வதந்த்ரரான மஹாராஜாவானவர், रामाभिषेकः- ராமனுடைய பட்டாபிஷேகமானது, अद्य वै- இப்பொழுதே, प्रसिद्धः- ப்ரஸித்தமானது, इति- என்று, जज्ञिवान्- அறிந்தவராகி, प्रियार्हां- ப்ரியத்தைக் கேட்கத்தகுந்தவளான, (கைகேயியைக் குறித்து) प्रिय- ப்ரியமான இவ்விஷயத்தை, आख्यातु- சொல்லுவதற்கு, अन्तः पुर- (கைகேயியின்) அந்தப்புரத்தை, विवेश- நுழைந்தார்.

11. (ப-ரை) महायशाः- மஹத்தான கீர்த்தியுள்ள, सः- அந்த தசரதர், श्रेष्ठ- ச்ரேஷ்டமான, कैकेय्याः- கைகேயியுடைய, गृह- க்ருஹத்தை, पाण्डुराभ्र- வெள்ளைமேகமுள்ளதும், राहुयुक्त- ராகுவுடன் கூடியதுமான, आकाश- ஆகாயத்தை, निशाकर इव- சந்திரனைப்போல் प्रविवेश- ப்ரவேசித்தார்.

12 13-14-15-16. (ப-ரை) महाराजः- மஹாராஜாவானவர், शुकबर्हिणसंघुष्ट- கிளி

10. (பொ-ரை) ராமனுடைய பட்டாபிஷேக ஸந்தர்ப்பமானது இப்பொழுதுதான் ப்ரஸித்தமானது. இது இன்னமும் கைகேயியின் காதில் எட்டாது. ஆகையால், நானே முன்னமே இந்த ப்ரியமான விஷயத்தை கைகேயிக்கு தெரிவிக்கவேண்டுமென்று ஸ்வதந்த்ரரான அரசன், கைகேயியின் அந்தப்புரத்தில் நுழைந்தார்.

11. (பொ-ரை) வெளுத்த மேகங்களுடன், ராகுவுமுள்ளதான ஆகாயத்தில் சந்திரன் ப்ரவேசிப்பதுபோல், பெரிய கீர்த்தியுடைய அந்த அரசன், சிறப்புள்ள கைகேயியின் க்ருஹத்தில் ப்ரவேசித்தார்.

12-13-14-15-16. (பொ-ரை) கிளிகளுடன், மயில்களுடன், அன்றில்களுடன்,

न हि तस्य पुरा देवी तां वेलामत्यवर्तत ।
न च राजा गृहं शून्यं प्रविवेश कदाचन ॥ 18 ॥

ततो गृहगतो राजा कैकेयीं पर्यपृच्छत ।
यथापुरमविज्ञाय स्वार्थलिप्सुमपण्डिताम् ॥ 19 ॥

प्रतिहारी त्वथोवाच संत्रस्ता मुक्ताञ्जलिः ।
देव देवी भृशं क्रुद्धा क्रोधागारमभिद्रुता ॥ 20 ॥

---

18. (ப-உரை) हि- ஏனென்றால், देवी- கைகேயியானவள், पुरा- இதற்குமுன், तस्य- அந்த ராஜாவினுடைய, तां वेलां- வரும ஸமயத்தை, न अत्यवर्तत- தாண்டவில்லை, राजा च- அரசனும், शून्यं- கைகேயியில்லாத, गृहं- அவள் க்ருஹத்தை, कदाचन- ஒருஸமயத்திலும், न प्रविवेश- ப்ரவேசிக்கவில்லை.

19. (ப-உரை) ततः- பிறகு, गृहगतः- கைகேயியின் க்ருஹத்தை யடைந்த, राजा- அரசன், स्वार्थलिप्सुं- தன் ப்ரயோஜனத்தையடைய ஆசைப்பட்டவளும், अपण्डिताम्- (வருகிற அனர்த்தத்தை) அறியாதவளுமான, कैकेयीं- கைகேயியை, अविज्ञाय- தெரிந்துகொள்ளாமல், पर्यपृच्छत- (வாசல் காப்பவளை) கேட்டார்.

20 (ப-உரை) अथ- பிறகு, प्रतिहारी- வாசல் காப்பவள், हे देव- அரசனே, देवी- தேவியானவள் (கைகேயியானவள்), भृशं- மிகவும், क्रुद्धा- கோபமுள்ளவளாய், क्रोधागारं- கோபக்ருஹத்தை, अभिद्रुता- அடைந்துவிட்டாள், इति- என்று, सत्रस्ता- நடுங்கிக்கொண்டு, मुक्ताञ्जलिः- அஞ்ஜலி செய்துகொண்டு, उवाच- (ராஜாவைப்பார்த்து) சொன்னாள்.

---

18. (பொ-உரை) ஏனென்றால், கைகேயி இதற்கு முன் ஒரு காலத்திலும் ராஜா வரும் ஸமயங்களில் இல்லாமலிருந்ததேயில்லை. ராஜாவும் கைகேயியில்லாத சயனக்ருஹத்தில் ப்ரவேசித்ததுமில்லை.

19. (பொ-உரை) பிறகு கைகேயியின் க்ருஹத்திற்குப்போன அரசன், கைகேயி பரதனுக்குப்பட்டாபிஷேகம் செய்ய ஆசைப்பட்டுக்கொண்டு அதனால், பின்னால் வரப்போகிற அனர்த்தத்தையும் அறியாதவளாக இருப்பதைத்தெரிந்துகொள்ளாமல் முன்போல் வாசல் காப்பவளை கைகேயி எங்கே என்று கேட்டார்.

20. (பொ-உரை) பிறகு வாசல்காப்பவள், நடுங்கி கைகூப்பிக்கொண்டு, தேவனே! தேவியானவள் மிகவும் கோபித்துக்கொண்டு கோபக்ருஹத்தை நோக்கி சென்றுவிட்டாள் என்று சொன்னாள்.

प्रतिहार्या वचः श्रुत्वा राजा परमदुर्मनाः ।
विषसाद पुनर्भूयो लुलितव्याकुलेन्द्रियः ॥ 21 ॥
तत्र तां पतितां भूमौ शयानामतथोचिताम् ।
प्रतप्त इव दुःखेन सोऽपश्यज्जगतीपतिः ॥ 22 ॥
स वृद्धस्तरुणीं भार्यां प्राणेभ्योऽपि गरीयसीम् ।
अपापः पापसंकल्पां ददर्श धरणीतले ॥ 23 ॥
लतामिव विनिष्कृत्तां पतितां देवतामिव ।
किन्नरीमिव निर्धूतां च्युतामप्सरसं यथा ॥ 24 ॥
मायामिव परिभ्रष्टां हरिणीमिव संयताम् ।
करेणुमिव दिग्धेन विद्धां मृगयुना वने ॥ 25 ॥

21. (ப-ரை) राजा- அரசன், प्रतिहार्याः- வாசல் காப்பவளுடைய, वचः- வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, परमदुर्मनाः- மிகவும் வருத்தமுள்ள மனதுடையவராய்க்கொண்டு, पुनः- மறுபடியும், लुलितव्याकुलेन्द्रियः- கலங்கினவும், தாந்தம விஷயங்களை க்ரஹிக்க சக்தியில்லாததுமான இந்திரியங்களை உடையவராய்க்கொண்டு, भूयः- அதிகமாய், विषसाद- வ்யஸனமடைந்தார்.

22. (ப-ரை) सः जगतीपतिः- அந்த அரசன், तत्र- அந்த கோபாகாரத்தில், भूमौ- தரையில், पतितां- விழுந்தவளும், अतथोचिताम्- அப்படிப் படுக்கத்தகாதவளுமான, तां- அந்த கைகேயியை, दुःखेन- துக்கத்தினால், प्रतप्त इव- தபிக்கப்பட்டவராகவே, अपश्यत्- பார்த்தார்.

23-24-25. (ப-ரை) वृद्धः- கிழவராயும், अपापः- தோஷமில்லாதவருமான, सः- அந்த அரசன், प्राणेभ्यः अपि- தன் ப்ராணன்களைக்காட்டிலும், गरीयसीम्- மேலானவளும், पापसंकल्पां- துஷ்ட எண்ணமுள்ளவளும், तरुणीं- யௌவன முள்ளவளுமான.

21. (பொ-ரை) கைகேயியின் கோபாகாரத்துக்கு வந்த அரசன், வாசல் காப்பவளுடைய வார்த்தையைக் கேட்டு, மறுபடியும் அதிகமாக இந்திரியங்கள் கலங்கி மனவருத்தமுள்ளவராய் வருத்தமடைந்தார்.

22. (பொ-ரை) அந்த அரசன், ஒருகாலும் தரையில் படுக்கத்தகாதவளான கைகேயி இந்தக்கோபாகாரத்தில் தரையில் படுத்துக்கொண்டிருப்பதைத் துக்கத்தினால் பரிதாபங்கொண்டு பார்த்தார்.

23-24-25. (பொ-ரை) கபடமில்லாத எண்ணமுள்ளவரும், கிழவருமான அவ்வரசன், தன் ப்ராணனைக்காட்டிலும் மேலானவளும், கெட்ட எண்ணமுள்ளவளும், யௌவனமான தன் பார்யை தரையில் விழுந்திருக்கும்பொழுது, சக்தியால்

न तेऽहमभिजानामि क्रोधमात्मनि संश्रितम् ।
देवि केनाभिशप्तासि केन वासि विमानिता ॥ 28 ॥
यदिदं मम दुःखाय शेषे कल्याणि पांसुषु ।
भूमौ शेषे किमर्थं त्वं मयि कल्याणचेतसि ॥ 29 ॥
भूतोपहतचित्तेव मम चित्तप्रमाथिनी ॥ 30 ॥
सन्ति मे कुशला वैद्यास्त्वभितुष्टाश्च सर्वशः ।
सुखितां त्वां करिष्यन्ति व्याधिमाचक्ष्व भामिनी ॥ 31 ॥

28. (ப-ரை) देवि- ஹே தேவியே! अहं- நான், आत्मनि- என்னிடத்தில், संश्रितम्- ஸம்பந்தப்பட்ட, ते- உன்னுடைய, क्रोध- கோப காரணத்தை, न अभिजानामि- அறிய வில்லை, केन- எவனால், अभिशप्ता- திட்டப்பட்டவளாக, असि- ஆகிறாய் केन वा- யாரால், विमानिता वा- அவமதிக்கப்பட்டவளாகவாவது, असि- ஆகிறாய்.

29–30. (ப-ரை) हे कल्याणि- மங்கள முள்ளவளே! पांसुषु- புழுதியில், शेषे इति यत्- படுத்துகொண்டிருக்கிறாய் என்பது யாதொன்றுண்டோ, इदं- இது, मम- எனக்கு, दुःखाय- துக்கத்தின் பொருட்டு (ஆகிறது), कल्याणचेतसि- மங்களகரமான மனதுள்ள, मयि- நான், (जीवति सति- ஜீவித்துக்கொண்டிருக்கும் காலத்தில்), त्वं- நீ, भूतोपहतचित्ता इव- பிசாசம் பிடித்த மனதுடையவள் போல், मम- என்னுடைய, चित्तप्रमाथिनी सती- மனதைக்கலக்கிக்கொண்டு, किमर्थं- என்ன (காரணமாக), भूमौ- தரையில், शेषे- படுத்துகொண்டிருக்கிறாய்.

31. (ப-ரை) मे- எனக்கு, कुशलाः- ஸமர்த்தர்களாயும், अभितुष्टाः च- என்னால் ஸந்தோஷப்படுத்தப்பட்டவர்களுமான, वैद्याः- வைத்தியர்கள், सन्ति- இருக்கிறார்கள். हे भामिनि- கோபமுள்ளவளே! ते- அவர்கள், त्वां- உன்னை, सर्वशः- பலவிதமாயும், सुखितां- ஸௌக்யமுள்ளவளாக, करिष्यन्ति- செய்வார்கள், व्याधिं- வியாதியை, आचक्ष्व- சொல்லு.

28. (பொ-ரை) ஹே தேவி! என் விஷயமாக நீ கோபங்கொண்டதாக எனக்குத்தெரியவில்லை. ஒரு ஸமயம் எவனாவது திட்டினானோ? அல்லது யாராவது அவமதித்தார்களா என்ன?

29–30. (பொ-ரை) ஹே கல்யாணி! நீ புழுதியில் படுத்துகொண்டிருப்பது எனக்கு மிகவும் துக்கத்தை உண்டுபண்ணுகிறது. உனக்கு ஒருவித அபகாரம் செய்யாதவனும், உன்னிடத்தில் மிகவும் ப்ரீதியுள்ளவனுமான நான் உயிருடன் இருக்குங்காலத்தில், பிசாசு பிடித்தவளைபோல் ஞானமில்லாதவளாய் என் மனதையும் புண்படுத்திக்கொண்டு என் தரையில் படுத்துக்கொண்டிருக்கிறாய்.

31. (பொ-ரை) கோபமுள்ளவளே! ஸமர்த்தர்களாயும் அநேகம் என்னி

कस्य वा ते प्रियं कार्यं केन वा विप्रियं कृतम् ।
कः प्रियं लभतामद्य को वा सुमहदप्रियम् ॥ 32 ॥

मा रोदीर्मा च कार्षीस्त्वं देवि संपरिशोषणम् ।
अवध्यो वध्यतां को वा को वा वध्यो विमुच्यतां ॥ 33 ॥

दरिद्रः को भवत्वाढ्यो द्रव्यवान्वाप्यकिंचनः ॥ 34 ॥

32–33–34. (ப-ரை) ते- உன்னால், कस्य वा- யாருக்காவது, प्रियं- ப்ரியமானது, कार्यं செய்யத்தகுந்தது? केन वा- யாரினாலாவது, विप्रियं- அநிஷ்டமானது, कृतम्- செய்யப்பட்டது? कः- எவனாவது, प्रियं- ப்ரியத்தை, लभतां- அடையவேண்டும்? को वा– எவனாவது, अद्य- இப்பொழுது, सुमहत्- மிகவும் பெரிதான, अप्रियम्- அநிஷ்டத்தை, (लभतां- அடையவேண்டுமா?) हे- देवि- ஹே தேவியே! त्वं- நீ, मा रोदीः- அழவேண்டாம், संपरिशोषणम् च- தேஹத்தை உலர்த்துவதையும், मा च कार्षीः-செய்யவும் வேண்டாம், अवध्यः- கொல்லத்தகாதவனாவது, को वा- எவனாவது, वध्यतां - கொல்லப்பட வேண்டுமா? वध्यः- கொல்லத்தகுந்த को वा- எவனாவது, विमुच्यतां- (கொலையில் நின்று) விடப்பட வேண்டுமா? दरिद्रः- தரித்ரனான, को वा- எவனாவது, आढ्यः- தனவானாக, भवतु- ஆகவேண்டுமா? द्रव्यवान्- தனவானான எவனாவது, अकिंचनः अपि- ஏழையாக (भवतु वा- ஆகவேண்டுமா?)

டும் வெகுமதி பெற்று ஸந்தோஷமடைந்தவர்களுமான, வைத்தியர்கள் என்னிடமிருக்கிறார்கள். அவர்கள் உன்னை பலவகையாலும் ஸௌக்யமுள்ளவளாக செய்வார்கள். இன்னது வியாதி என்று சொல்லவும்.

32–33–34. (பொ-ரை) ஹே தேவி! யார் உனக்கு ப்ரியமான கார்யத்தை செய்தார்? யார் அநிஷ்டமான கார்யத்தைச்செய்தார்? உனக்கு நன்மை செய்தவனுக்கு உன் மனத்தின்படியே ப்ரியத்தைச்செய்கிறேன், அல்லது எவனுக்கு மிகவும் பெரிதான அநிஷ்டத்தைச்செய்யவேண்டுமென்று சொல்லுகிறாயோ, அவைகளையெல்லாம் செய்ய ஸித்தனாக இருக்கிறேன். நீ அழாதே. தேஹத்தை இவ்விதம் உலர்த்தவும் வேண்டாம், கொல்லத்தகாதவனை கொல்லவேண்டுமானாலும் கொல்லுகிறேன். கொல்லத்தகுந்தவனை விடுவிக்கவேணுமானாலும் விடுவிக்கிறேன். ஏழையைத் தனவானாகச் செய்விக்கவேணுமானாலும் செய்விக்கிறேன். தனமுடையவனை ஒன்றுமில்லாத தரித்ரனாகச்செய்யவேணுமானாலும் செய்து விடுகிறேன். உன்னுடைய ப்ரியத்திற்காக எந்த கார்யத்தையும் செய்ய ஸித்தனாயிருக்கிறேன்.

अहं चैव मदीयाश्च सर्वे तव वशानुगाः ।
न ते किंचिदभिप्रायं व्याहन्तुमहमुत्सहे ॥ 35 ॥
आत्मनो जीवितेनापि ब्रूहि यन्मनसेच्छसि ।
बलमात्मनि जानन्ती न मां शङ्कितुमर्हसि ॥ 36 ॥
करिष्यामि तव प्रीतिं सुकृतेनापि ते शपे ॥ 37 ॥
यावदावर्तते चक्रं तावती मे वसुंधरा ।
प्राचीनाः सिन्धुसौवीराः सौराष्ट्रा दक्षिणापथाः ॥ 38 ॥
वङ्गाङ्गमगधा मत्स्याः समृद्धाः काशिकोसलाः ।
तत्र जातं बहुद्रव्यं धनधान्यमजाविकम् ॥ 39 ॥
ततो वृणीष्व कैकेयि यद्यत्त्वं मनसेच्छसि ॥ 40 ॥

35–36–37. (ப-ரை) अहं चैव- நானும், मदीयाः च- என்னைச்சேர்ந்தவர்களும், सर्वे- எல்லாரும், तव- உனக்கு, वशानुगाः- வசப்பட்டு அநுஸரிக்கிறவர்கள், ते- உன்னுடைய, अभिप्रायं- எண்ணத்தை, आत्मनः- என்னுடைய, जीवितेनापि- உயிரினாலே யாவது, व्याहन्तु- தடுப்பதற்கு, किंचित् अपि- கொஞ்சங்கூட, अहं न उत्सहे- சக்தியுள்ளவனல்லேன், मनसा- மனதினால், यत्- யாதொன்றை, इच्छसि- விரும்புகிறாயோ, ब्रूहि- (அதைச்) சொல்லு, आत्मनि- உன்னிடத்தில் (இருக்கிற), बल- பலத்தை, जानन्ती सती- அறிந்துகொண்டு, मां- என்னை, शङ्कितु- ஸந்தேஹப்படுவதற்கு, नार्हसि- தகுந்தவளன்று, तव- உனக்கு, प्रीतिं- ப்ரீதியை, करिष्यामि- செய்வேன், सुकृतेनापि- (என்னுடைய) புண்யத்தினாலேயும், ते- உனக்கு, शपे- ஆணையிட்டுச் சொல்லுகிறேன்.

38–39–40. (ப-ரை) कैकेयि- கைகேயியே! चक्र- ஸூர்யனுடைய ரதசக்ரமானது, यावत्- எவ்வளவு வரையில், वर्तते- இருக்கிறதோ, तावती- அவ்வளவுள்ள,

35–36–37. (பொ-ரை) நானும் என்னைச்சேர்ந்தவர்களும் எல்லாரும் உனக்கு வசப்பட்டவர்கள். என்னுடைய உயிரைக்கொடுத்தாவது உன் அபிப்ராயத்தை நிறைவேற்றுவேனே தவிர, கொஞ்சமேனும் அதற்கு கெடுதிசெய்யத்துணிபவனன்று. உன் மனதில் நினைத்திருப்பதைச்சொல்லு. (நான் உன்னிடத்தில் ரொம்பவும் ப்ரியமுள்ளவன்) என்கிற பலம் உனக்கு இருக்கிறது. அதைத்தெரிந்திருந்தும் நீ எதற்காக என்னிடம் ஸந்தேஹப்படுகிறாய். எவ்விதத்தாலும் உனக்கு ப்ரியத்தையே செய்வேன், என்னுடைய புண்யத்தின்மேல் ஆணையிட்டுச்சொல்லுகிறேன்.

38–39–40. (பொ-ரை) கைகேயி! ஸூர்யஸஞ்சாரமிருக்கும் வரையிலுள்ள பூமி முழுவதும் என்னுடையது. அதில் ப்ராசீன, ஸிந்து, ஸௌவீர, ஸௌராஷ்ட்ர,

किमायासेन ते भीरु उत्तिष्ठोत्तिष्ठ शोभने ।
तत्त्वं मे ब्रूहि कैकेयि यतस्ते भयमागतम् ॥ 41 ॥
तत्ते व्यपनयिष्यामि नीहारमिव रश्मिवान् ॥ 42 ॥

वसुधरा- பூமியானது, मे- என்னுடையது. तत्र- அதில், समृद्धाः- எல்லாம் நிறைந்த. प्राचीनाः- ப்ராசீனமென்றும், सिन्धुसौवीराः- ஸிந்துவென்றும், ஸௌவீரமென்றும், सौराष्ट्राः- ஸௌராஷ்ட்ரமென்றும், दक्षिणापथाः- தக்ஷிணபதங்களென்றும், वङ्गाङ्गमगधाः- வங்கமென்றும், அங்கமென்றும், மகதமென்றும், मत्स्याः- மத்ஸ்யங்களென்றும், काशिकोसलाः- காசியென்றும், கோஸலமென்றும் சொல்லப்பட்ட தேசங்களும், (இருக்கின்றன), तत्र- அவைகளில், जातं- உண்டாயிருக்கிற, बहुद्रव्यं- அநேக த்ரவ்யமும், धनधान्यं- தனமும், தான்யமும், अजाविकम्- ஆடு கடாமுதலியதும், (यत् अस्ति- யாதொன்றிருக்கிறதோ), ततः- அவைகளில், त्वं- நீ, यद्यत्- எதெதை, मनसा- மனதினால், इच्छसि- விரும்புகிறாயோ, (तत्- அதை), वृणीष्व- கேள்.

41-42. (ப-ரை) हे भीरु- பயந்தவளே, शोभने- அழகுள்ளவளுமான, कैकेयि- கைகேயியே, ते- உனக்கு, आयासेन- ஆயாஸத்தினால், किं- என்ன? उत्तिष्ठ उत्तिष्ठ- எழுந்திரு, எழுந்திரு, यतः- எவ்விடமிருந்து, ते- உனக்கு, भयं- பயமானது, आगतम्- வந்திருக்கிறதோ, तत्- அதை, त्वं- நீ, मे- எனக்கு, ब्रूहि- சொல்லு, रश्मिवान्- ஸூர்யன், नीहारमिव- பனியை (போக்குவது) போல், ते- உன்னுடைய, तत्- அந்த பயத்தை, व्यपनयिष्यामि- போக்கடிக்கிறேன்.

தக்ஷிணாபத, அங்க, வங்க, மகத, மத்ஸ்ய, காசி, கோஸல என்று சொல்லப்பட்ட எல்லா ஸம்பத்துக்களும் நிறைந்த தேசங்கள் இருக்கின்றன. அந்த தேசங்களில் அநேக த்ரவ்யங்களும், தான்யங்களும், கடாமுதலியவைகளும் இருக்கின்றன. அவைகளும் என்னைச்சேர்ந்தவைகள். அவைகளில் உனக்கு எது இஷ்டமோ அதைக் கேள். (நான் கொடுக்கிறேன்.)

41-42. (பொ-ரை) பயந்தவளே! அழகுள்ளவளே! கைகேயி, ஏன் இவ்விதம் உன் சரீரத்தை வருத்தப்படுத்திக்கொள்ளுகிறாய். எழுந்திரு, எழுந்திரு. எவ்விடமிருந்து பயம் உனக்கு வந்ததோ அதைச்சொல். ஸூர்யன் பனியைப் போக்குவது போல் அந்த பயத்தைப் போக்கடிக்கிறேன்.

तथोक्ता सा समाश्वस्ता वक्तुकामा तदप्रियम् ।
परिपीडयितुं भूयो भर्तारमुपचक्रमे ॥ 43 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे

दशमः सर्गः ॥ 10 ॥

---

43. (ப-ரை) तथोक्ता- அப்படிச் சொல்லப்பட்டு, समाश्वस्ता- ஸமாதானம் செய்யப்பட்ட, सा- அந்த கைகேயி, तत् अप्रियम्- அந்த அநிஷ்டத்தை, वक्तुकामा (सती)-சொல்ல விரும்பினவளாய்க்கொண்டு, भूयः- மறுபடியும, भर्तार- பர்த்தாவை, परिपीडयितुं- அதிகமாக வருத்தப்படுத்துவதற்கு, उपचक्रमे- ஆரம்பித்தாள்.

43. (பொ-ரை) இவ்விதம் அரசனால் சொல்லி ஸமாதானம பண்ணப்பட்ட கைகேயி அந்த அநிஷ்டத்தை சொல்லவேணுமென்று எண்ணி அரசனுக்கு, முன்னிருந்த வருத்தத்தைக்காட்டிலும் அதிகமாக வருத்தத்தை உண்டுபண்ண எத்தனித்தாள்.



एकादशः सर्गः ॥ 11 ॥

तं मन्मथशरैर्विद्धं कामवेगवशानुगम् ।
उवाच पृथिवीपालं कैकेयी दारुणं वचः ॥ 1 ॥

1. (ப-ரை) कैकेयी- கைகேயியானவள், मन्मथशरैः- மன்மத பாணங்களினால், विद्धं- அடிக்கப்பட்டும், कामवेगवशानुगम्- காமத்தின் வேகத்திற்கு வசப்பட்டவருமான, तं पृथिवीपालं- அந்த அரசனைக்குறித்து, दारुण- கடுமையான, वचः- வார்த்தையை, उवाच- சொன்னாள்.

1. (பொ-ரை) மன்மத பாணங்களினால் அடியுண்டு, காமவேகத்திற்கு வசப்பட்டிருக்கிற அந்த அரசனைப்பார்த்து, கைகேயியானவள் கடுமையான வார்த்தைகளைச்சொன்னாள்.

अवलिप्ते न जानासि त्वत्तः प्रियतमा मम ।
मनुजो मनुजव्याघ्राद्रामादन्यो न विद्यते ॥ 5 ॥

तेनाजय्येन मुख्येन राघवेण महात्मना ।
शपे ते जीवनार्हेण ब्रूहि यन्मनसेच्छसि ॥ 6 ॥

यं मुहूर्तमपश्यंस्तु न जीवेयमहं ध्रुवम् ।
तेन रामेण कैकेयि शपे ते वचनक्रियाम् ॥ 7 ॥

5. (ப-ரை) अवलिप्ते- கர்வமுள்ளவளே! त्वत्तः- உன்னைக்காட்டிலும், प्रियतमा- மிகவும் ப்ரியமுள்ள ஸ்திரீயானவள், मम- எனக்கு, न विद्यते- இல்லை, मनुजव्याघ्रात्- புருஷச்ரேஷ்டனை, रामात्- ராமனைக்காட்டிலும். अन्यः मनुजः- வேறு மனிதன், (प्रियतमः- மிகவும் ப்ரியமுள்ளவன்), न विद्यते- இல்லை, न जानासि- நீ அறியவில்லையா?

6. (ப-ரை) अजय्येन- (சத்ருக்களால்) ஜயிக்க முடியாதவனும், मुख्येन- ப்ரதானமானவனும், महात्मना- மஹா புத்தியையுடையவனும், जीवनार्हेण- என் ப்ராணனைக் காட்டிலும் சிறந்தவனுமான, तेन राघवेण- அந்த ராமனால், ते- உனக்கு, शपे- ஆணையிட்டுச்சொல்லுகிறேன், यत्- யாதொன்றை, मनसा- மனதினால், इच्छसि- விரும்புகிறாயோ, ब्रूहि- (அதை) சொல்லு.

7. (ப-ரை) अहं- நான், यं- யாதொரு ராமனை, मुहूर्तं- ஒரு முஹூர்த்த காலமும், अपश्यंस्तु- பாராதவனாய்க்கொண்டு, ध्रुवम्- நிச்சயமாக, नजीवेयं- பிழைக்கமாட்டேனோ, तेन रामेण- அந்த ராமனால், हे कैकेयि- ஹே கைகேயியே, ते- உன்னுடைய, वचनक्रियाम्- சொல்படி செய்வதை, शपे- ஆணையிடுகிறேன்.

5. (பொ-ரை) கர்வமுள்ளவளே! எனக்கு அநேக ஸ்திரீகள் இருக்கிறார்கள். அவர்களுக்குள் உன்னைக்காட்டிலும் மிகவும் ப்ரியமான ஸ்திரீ ஒருவளும் எனக்கில்லை. புருஷோத்தமனான ராமனைக்காட்டிலும் வேறு ஒரு மனிதனும் எனக்கு மிகவும் ப்ரியமுள்ளவன் ஒருவனுமில்லை, இது உனக்குத்தெரியாதா?

6. (பொ-ரை) சத்ருக்களால், ஜயிக்க முடியாதவனும், என் புத்திரர்களுக்குள் ப்ரதானமானவனும், மஹா புத்தியுள்ளவனும், எனக்கு ப்ராணனைக்காட்டிலும் சிறந்தவனான அந்த ராகவனால் உனக்கு ஆணை செய்கின்றேன், நீ மனதில் எண்ணியிருப்பதைச்சொல்லு.

7. (பொ-ரை) ஹே கைகேயி! நான் எந்த ராமனை ஒரு முஹூர்த்தகாலம் காணாமலிருந்தாலும் நிச்சயமாய் பிழைக்கமாட்டேனோ அந்த ராமன்மீது ஆணையிட்டு சொல்லுகிறேன். நீ சொல்லியபடி அவச்யம் செய்கிறேன்.

आत्मना वात्मजैश्चान्यैर्वृणे यं मनुजर्षभम् ।
तेन रामेण कैकेयि शपे ते वचनक्रियाम् ॥ 8 ॥

भद्रे हृदयमप्येतदनुमृश्योद्धरस्व मे ।
एतत्समीक्ष्य कैकेयि ब्रूहि यत्साधु मन्यसे ॥ 9 ॥

बलमात्मनि पश्यन्ती नमां शङ्कितुमर्हसि ।
करिष्यामि तव प्रीतिं सुकृतेनापि ते शपे ॥ 10 ॥

8. (ப-ரை) हे कैकयि- கைகேயியே, आत्मना- என் சரீரத்தினாலும், आत्मजैः- (பரதன் முதலான) பிள்ளைகளாலும், अन्यैः- மற்ற பந்துக்களாலும், यं- யாதொரு, मनुजर्षभम्- புருஷோத்தமனை, वृणे- விரும்புகிறேனோ, तेन रामेण- அந்த ராமனால், ते- உன்னுடைய, वचनक्रियां- சொல்படி செய்வதை, शपे- ஆணையிடுகிறேன்.

9. (ப-ரை) भद्रे- மங்களமுள்ளவளே! मे- என்னுடைய, हृदय-अपि- மனதையும், एतत्- இப்படிப்பட்டதாக, अनुमृश्य- கவனித்து, उद्धरस्व- (என்னைப்) பிழைக்கும்படி செய், एतत्- இதை, समीक्ष्य- நன்றாக ஆலோசித்து, यत्- யாதொன்றை, साधु- இஷ்டமாக, मन्यसे- எண்ணுகிறாயோ, (तत्- அதை), कैकयि- கைகேயியே, ब्रूहि- சொல்லு.

10. (ப-ரை) आत्मनि- உன்னிடத்திலிருக்கிற, बल- பலத்தை, पश्यन्ती- பார்க்கின்றவளாகி, मा- என்னைக் குறித்து, शङ्कितु- ஸம்சயப்படுவதற்கு, न अर्हसि- தகுந்தவளல்ல, तव- உன்னுடைய, प्रीतिं- இஷ்டத்தை, करिष्यामि- செய்வேன், सुकृतेनापि- என்னுடைய புண்யத்தினாலும், ते- உனக்கு, शपे- ஆணையிடுகிறேன்.

8. (பொ-ரை) கைகேயி! நான் என்னுடைய சரீரத்தையாவது, பரதன் முதலான பிள்ளைகளையாவது, வேறு என்னுடைய பந்துக்களையாவது விட்டு, எந்த புருஷோத்தமனை பிரியமாய் விரும்புவேனோ அந்த ராமன் மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறேன் உன்னுடைய சொல்படி செய்து கொடுக்கிறேன்.

9. (பொ-ரை) மங்களமுள்ள கைகேயி! என்னுடைய மனதும், வாயில் சொன்னபடி எண்ணிக்கொண்டிருக்கிறது என்பதை, நன்றாய் கவனித்து, நான் ஜீவிக்கும்படி செய்ய வேண்டும். இவ்விதம் வாக்கும், மனதும் ஒன்றாயிருப்பதை நன்றாக ஆலோசித்து உனக்கு எது இஷ்டமென்று தோன்றுகிறதோ அதைச் சொல்லு.

10. (பொ-ரை) நான் உன்னிடத்தில், மிகவும் ப்ரீதியுள்ளவனென்கிற பலம் உன்னிடத்திலிருக்கிறதல்லவா! இதை நீ நன்றாய் அறிந்தும் என் விஷயத்தில் என் ஸம்சயப்படுகிறாய். உனக்குப்ப்ரியமான காரியத்தைச் செய்கிறேன். என் புண்யத்தின்மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறேன்.

सा तदर्थमना देवी तमभिप्रायमागतम् ।
निर्मर्यादत्वाच्च हर्षाच्च बभाषे दुर्वचं वचः ॥ 11 ॥
तेन वाक्येन संहृष्टा तमभिप्रायमागतम् ।
व्याजहार महाघोरमभ्यागतमिवान्तकम् ॥ 12 ॥
यथा क्रमेण शपसि वरं मम ददासि च ।
तच्छृण्वन्तु त्रयस्त्रिंशद्देवाः साग्निपुरोगमाः ॥ 13 ॥
चन्द्रादित्यौ नभश्चैव ग्रहा रात्र्यहनी दिशः ।
जगच्च पृथिवी चैव सगन्धर्वा सराक्षसा ॥ 14 ॥
निशाचराणि भूतानि गृहेषु गृहदेवताः ।
यानि चान्यानि भूतानि जानीयुर्भाषितं तव ॥ 15 ॥

11. (ப-ரை) तदर्थमनाः- (மநத்தை போதிக்க) காரியத்தில் எண்ணமுள்ளவளான, सा देवी- அந்த தேவியானவள், अभिप्राय- தன்னுடைய அபிப்ராயத்தையே, आगतम्- அடைந்திருக்கிற, तं- அந்த தசரதனைக்குறித்து, निर्मर्यादत्वाच्च- மர்யாதையில்லாமையினாலும், हर्षाच्च- ஸந்தோஷத்தினாலும், दुर्वचं- சொல்லத்தகாத, वचः- வார்த்தையை, बभाषे- சொன்னாள்.

12. (ப-ரை) तेन- அந்த, वाक्येन- (அரசன்) வார்த்தையினால், संहृष्टा सती- ஸந்தோஷப்பட்டுக்கொண்டு, अभिप्रायं- தன்னுடைய அபிப்ராயத்தை, आगतं- அடைந்திருக்கிற, तं- அந்த அரசனைப்பார்த்து, अभ्यागतं- தேடிவந்திருக்கிற, अन्तकं इव- யமனைப்போல, महाघोरं- மிகவும் க்ரூரமான வார்த்தையை, व्याजहार- சொல்ல ஆரம்பித்தாள்.

13-14-15 (ப-ரை) यथा- எப்படி, क्रमेण- க்ரமமாக, शपसि- ஆணையிடுகிறாய்,

---

11 (பொ-ரை) ராமனை ஸ்வீகரிக்காமல் ராமனைக் காட்டுக்குத் துரத்துவதிலும், பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்வதிலும் எண்ணமுடையவளான, அந்த தேவியானவள், தனது அனுகூலமாகப் பேசுகின்ற அரசனைக் குறித்து மத்யஸ்தமான நிலைமையைவிட்டு, தன் பிள்ளையினிடத்தில் பக்ஷபாதத்தினாலும், அரசன் நமக்கு இணங்கிவிட்டார், என்கிற ஸந்தோஷத்தினாலும், சத்ருவும் சொல்லக்கூசக்கூடிய வார்த்தையைச் சொன்னாள்.

12. (பொ-ரை) ராமன் ஸாக்ஷிகமாக நீ சொன்னபடி செய்கிறேனென்று சொன்ன அரசன் வார்த்தையினால் ஸந்தோஷத்துடன், தன் அபிப்ராயத்துடன் அநுஸரித்த அரசனைக்குறித்து, தேடிவந்து நேர்ந்திருக்கிற ம்ருத்யுவைப்போல் மஹாராஜாவினுடைய ப்ராணனைப் போக்கத்தக்க வார்த்தை சொல்லத்தொடங்கினாள்.

13-14-15. (பொ-ரை) அரசனே! ப்ரியமான, புத்திரன்மீதும், ஸுக்ரு

सत्यसन्धो महातेजा धर्मज्ञः सुसमाहितः ।
वरं मम ददात्येष तन्मे शृण्वन्तु देवताः ॥ 16 ॥
इति देवी महेष्वासं परिगृह्याभिशस्य च
ततः परमुवाचेदं वरदं काममोहितम् ॥ 17 ॥

मम- எனக்கு, वर च- வரத்தையும், ददासि-கொடுக்கிறீரோ, तथा- அப்படியே, साग्निपुरोगमाः- அக்நியை முன்னால் கொண்ட, त्रयस्त्रिंशत्- முப்பத்து முக்கோடி, देवाः- தேவர்களும், चन्द्रादित्यौ- சந்திர ஸூர்யர்களும், नभश्चैव- ஆகாயமும், ग्रहाः- மற்ற க்ரஹங்களும், रात्रि अहनि- இரவும் பகலும், दिशः- திக்குகளும், जगच्च- (ஸ்வர்க்க) லோகமும், सगन्धर्वा- கந்தர்வர்களோடுகூடியதும், सराक्षसा- ராக்ஷஸர்களோடும், கூடியதுமான, इयं पृथिवी च- இந்த பூமியும், निशाचराणि- இரவில் ஸஞ்சரிக்கின்ற, भूतानि- ப்ராணிகளும், गृहेषु- க்ருஹங்களிலேயிருக்கிற, गृहदेवताः- க்ருஹதேவதைகளும், अन्यानि- மற்றவைகளான, यानि भूतानि च- எந்த ப்ராணிகள் உண்டோ அவைகளும், तव- உம்முடைய, भाषितं- வார்த்தையை, जानीयुः- அறியவேண்டும், तत्- இந்த வார்த்தையை, शृण्वन्तु- கேட்கவேண்டும்.

16-17 (ப-ரை) सत्यसन्धः- ஸத்யஸந்தராயும், महातेजाः- மகா பராக்ரமசாலியாயும், धर्मज्ञः- தர்மங்களை அறிந்தவரும், सुसमाहितः- நன்றாக மனதை த்ருடப்படுத்திக்கொண்டவருமான, एषः- இந்த அரசன், मम- எனக்கு, वरं- வரத்தை, ददाति- கொடுக்கிறார், मे- என்னுடைய, तत्- இந்த வாக்கை, देवताः- தேவதைகள், शृण्वन्तु- கேட்கவேண்டும், इति- என்று, देवी- தேவியான கைகேயி, महेष्वासं- பெரிய வில்லாளியான அரசனை, परिगृह्य- தன் ஸ்வாதீனத்தில் வைத்துக்கொண்டு, अभिशस्य च- புகழ்ந்துகொண்டும், काममोहितम्- காமத்தினால் மயங்கியும், वरदं- தனக்கு வரனைக் கொடுக்கிறவருமான (அரசனைக்குறித்து), ततः परं- அதற்குப்பிறகு, इदं- இந்த வார்த்தையை, उवाच- சொன்னாள்.

கத்தின்மீதும், ஆணையிட்டுச்சொல்லுகிறீர். உனக்குவேண்டிய வரன்களைக் கொடுக்கிறேனென்றும் சொல்லுகிறீர். உம்முடைய இந்த வார்த்தையை, அக்நிமுதலாகிய முப்பத்துமுக்கோடி தேவர்களும், சந்திர ஸூர்யர்களும், ஆகாயமும், நவக்ரஹங்களும், அஹோராத்ரதேவதைகளும், திக்தேவதைகளும், ஸ்வர்க்கலோகமும், கந்தர்வ ராக்ஷஸர்களோடுகூடிய இந்த பூலோகமும், இரவில் ஸஞ்சரிக்கின்ற பூதங்களும், க்ருஹங்களிலே வஸித்திக்கொண்டிருக்கிற க்ருஹதேவதைகளும், கேட்டுக்கொண்டிருக்கவேண்டும். நன்றாய் அறிந்துகொண்டிருக்கவேண்டும்.

16-17. (பொ-ரை) சொன்னசொல் தவறாதவரும், மஹா பராக்ரமசாலியும், தர்மங்களெல்லாம் அறிந்தவரும், மிகவும் மனத்திடமுள்ளவருமான இந்த அரசன் எனக்கு வரன் கொடுக்கிறார். அதை தேவர்களெல்லாம் கேட்கவேண்டும்,

स्मर राजन्पुरा वृत्तं तस्मिन्दैवासुरे रणे ।
तत्र चाच्यावयच्छत्रुस्तव जीवितमन्तरा ॥ 18 ॥
तत्र चापि मया देव यत्त्वं समभिरक्षितः ।
जाग्रत्या यतमानायास्ततो मे प्राददा वरौ ॥ 19 ॥
तौ तु दत्तौ वरौ देव निक्षेपौ मृगयाम्यहम् ।
तवैव पृथिवीपाल सकाशे सत्यसंगर ॥ 20 ॥

18. (ப-ரை) हे राजन्- அரசனே!, पुरा- முன்னொருகாலத்தில், वृत्तं- நடந்ததை, स्मर- நினைத்துக்கொள்ளும், तस्मिन्- அந்த, दैवासुरे- தேவாஸுர ஸம்பந்தமான, रणे- யுத்தத்தில், तत्र च- அந்த ராத்திரியில், अन्तरा- நடுவிலே, तव- உமதுடைய, जीवितं- ப்ராணனை, शत्रुः- சத்ருவான சம்பராஸுரன், अच्यावत्- நழுவும்படி செய்தான்.

19. (ப-ரை) हे देव- தேவனே!, तत्र चापि- அந்த யுத்தத்தில், त्वं- நீர், मया- என்னாலே, यत्- யாதொரு காரணத்தினாலே, समभिरक्षितः- ரக்ஷிக்கப்பட்டீரோ, ततः- இந்த காரணத்தினால், जाग्रत्या:- கவனங்கொண்டவளாய், यतमानाया:- (உடைமைக்காப் பாற்றுவதில்) ப்ரயத்தனம் செய்த, मे- எனக்கு, वरौ- இரண்டுவரங்களை, प्राददा:- கொடுத்தீரன்றோ.

20. (ப-ரை) हे देव- தேவனே!, पृथिवीपाल- அரசனே, सत्यसंगर- ஸத்யமான ப்ரதிக்ஞையையுற்றவரே, दत्तौ- (உம்மால்) கொடுக்கப்பட்ட, तव एव- உமதுடைய, सकाशे- ஸமீபத்திலேயே, निक्षेपौ- வைப்பாக வைக்கப்பட்டிருக்கிற, तौ तु वरौ- அந்த இரண்டு வரங்களை, अहं- நான், मृगयामि- இப்பொழுது விரும்புகிறேன்.

---

என்று தேவியானவள், (கைகேயி) பெரிய வில்லாளியான அரசனை தன் ஸ்வாதீனத்தில்வைத்து பலவாறு புகழ்ந்து காமத்தினால் மயங்கி தனக்கு வரன் கொடுக்கின்ற அவ்வரசனைப்பார்த்து பிறகு இவ்வார்த்தை சொன்னாள்.

18. (பொ-ரை) அரசனே! முன்னொருகாலத்தில் தேவாஸுரயுத்தம் நடக்கும்கால், ஒருநாள் ராத்ரியுத்தத்தில், நடுவிலே சம்பராஸுரன் உமதுடைய ப்ராணனை அலைத்துவிட்டானன்றோ! அதாவது (மூர்ச்சையை அடைவித்தான). அது உமக்கு ஜ்ஞாபகமிருக்கிறதா?

19. (பொ-ரை) தேவா! அந்த யுத்தத்தில் நான் ரொம்பவும் கவனத்துடன் உம்மை ரக்ஷிக்கவேண்டுமென்று மிகவும் ப்ரயத்னம்செய்து ரக்ஷித்தேனல்லவா? அப்பொழுது நீர் எனக்கு இரண்டு வரங்களை கொடுத்தீர்.

20. (பொ-ரை) எனக்கு மிகவும் ப்ரியமுள்ள அரசனே! நீர் சொன்ன சொல் ஒரு நாளும் தவறாதவரன்றோ! அக்காலத்தில், நீர் எனக்குக் கொடுத்த அந்த இரண்டு வரங்களையும் உம்மிடத்திலேயே வைத்திருக்கிறேன். இதை இப்பொழுது உபயோகப்படுத்த விரும்புகிறேன்.

तत्प्रतिश्रुत्य धर्मेण न चेद्दास्यमि मे वरम् ।
अद्यैव हि प्रहास्यामि जीवितं त्वद्विमानिता ॥ 21 ॥
वाङ्मात्रेण तदा राजा कैकेय्या स्ववशे कृतः ।
प्रचस्कन्द विनाशाय पाशं मृग इवात्मनः ॥ 22 ॥
ततः परमुवाचेदं वरदं काममोहितम् ।
वरौ यौ मे त्वया देव तदा दत्तौ महीपते ॥ 23 ॥
तौ तावदहमद्यैव वक्ष्यामि शृणु मे वचः ॥ 24 ॥

21. (ப-ரை) तत्- ஆகையால், धर्मेण- தர்மத்தினால், प्रतिश्रुत्य- ப்ரதிஜ்ஞை செய்து, वरं- அந்த வரத்தை, मे- எனக்கு, न दास्यमि चेत्- கொடுக்காமல் போவீரேயானால், त्वद्विमानिता सती- உம்மால் அவமதிக்கப்பட்டவளாய்க்கொண்டு, अद्यैव- இப்பொழுதே, जीवितं- ப்ராணனை, प्रहास्यामि हि- விட்டுவிடுவேன்.

22. (ப-ரை) तदा- அப்பொழுது, कैकेय्या- கைகேயியினால், वाङ्मात्रेण- (முன்கொடுத்திருந்த வரங்களை ஜ்ஞாபகப்படுத்தின) வார்த்தைமாத்திரத்தினாலே, स्ववशे- தன்னுடைய ஸ்வாதீனத்தில், कृतः- செய்யப்பட்ட, राजा- அரசன், आत्मनः- தன்னுடைய, विनाशाय- அழிவதின் பொருட்டு, मृग इव- மான் போல், पाशं- கர்மபாசத்தை, प्रचस्कन्द- அடைந்தார்.

23-24. (ப-ரை) हे देव- ஓ தேவனே! महीपते- மஹாராஜனே! तदा- அப்பொழுது, मे- எனக்கு, त्वया- உம்மால், यौ वरौ- எந்த வரங்கள், दत्तौ- கொடுக்கப்பட்டதுகளோ, तौ तावत्- அவைகளை, अहं- நான், अद्यैव- இப்பொழுதே, वक्ष्यामि- சொல்லுகிறேன், मे वचः- என்னுடைய வார்த்தையை, शृणु- கேளும், (इति- என்று), ततः परं- அதன் பிறகு, काममोहितम्- காமத்தினால் மயங்கின, वरदं- வரங்களைக்கொடுக்க அரசனைக்குறித்து, इदं- இந்த வார்த்தையை, उवाच- சொன்னாள்.

---

21 (பொ-ரை) தர்மமாக ப்ரதிஜ்ஞை செய்து அந்த இரண்டு வரங்களையும் நீர் கொடுக்காமல் போவீரேயானால், உம்மால் அவமதிக்கப்பட்டு, இப்பொழுதே ப்ராணனை விட்டுவிடுவேன்.

22. (பொ-ரை) மான் வலையில் அகப்பட்டதுபோல, அரசனும் தான் முன் கொடுத்த வரங்களை ஜ்ஞாபகப்படுத்தின கைகேயியின் வார்த்தை கேட்டமாத்திரத்தினால், தான் விநாசமடைவதற்காக கைகேயிக்கு இணங்கி கர்மபாசத்தில் அகப்பட்டுக்கொண்டார்.

23-24 (பொ-ரை) பிறகு கைகேயியானவள் காமத்தினால் மோஹிக்கப ரும் வரன் கொடுத்தவருமான அரசனைப்பார்த்து தேவா! மஹாராஜனே! அந்த தேவாஸுரயுத்தத்தில் நீர் எனக்கு இரண்டுவரங்களைக் கொடுத்தீரன்றோ! அவைகளை இப்பொழுது தனியாகப்பிரித்துச் சொல்லுகிறேன். என் வார்த்தையைக் கேளும் என்று சொன்னாள்.

अभिषेकसमारम्भो राघवस्योपकल्पितः ।
अनेनैवाभिषेकेण भरतो मेऽभिषेच्यताम् ॥ 25 ॥

यो द्वितीयो वरो देव दत्तः प्रीतेन मे त्वया ।
तदा दैवासुरे युद्धे तस्य कालोऽयमागतः ॥ 26 ॥

नव पञ्च च वर्षाणि दण्डकारण्यमाश्रितः ।
चीराजिनजटाधारि रामो भवतु तापसः ॥ 27 ॥

25. (ப-ரை) राघवस्य- ராகவனுக்கு, (यः- யாதொரு), अभिषेकसमारम्भः- பட்டாபிஷேக ஸாமக்ரியானது, उपकल्पितः- சேர்க்கப்பட்டிருக்கிறதோ, अनेन- இந்த, अभिषेकेण एव- பட்டாபிஷேக ஸாமக்ரியினாலேயே, मे- என்னுடைய (பிள்ளையான), भरतः- பரதன், अभिषेच्यताम्- அபிஷேகம் செய்யப்படவேண்டும்.

26. (ப-ரை) देव- தேவனே! तदा- இப்பொழுது, दैवासुरे- தேவாஸுரஸம்பந்தமான, युद्धे- யுத்தத்தில், प्रीतेन- ப்ரீதியுள்ளவரான, त्वया- உம்மால், मे- எனக்கு, यः- யாதொரு, द्वितीयः- இரண்டாவதான, वरः- வரமானது, दत्तः- கொடுக்கப்பட்டதோ, तस्य- அதற்கு, अय कालः- இந்த காலம், आगतः- வந்திருக்கிறது.

27. (ப-ரை) रामः- ராமன், नव पञ्च च वर्षाणि- பதினான்கு வருஷங்களை, दण्डकारण्यं- தண்டகாவனத்தை, आश्रितः- அடைந்துகொண்டு, चीराजिन जटाधारी- மரவுரி, மான்தோல், ஜடை இவைகளை தரித்துக்கொண்டு, तापसः- தபஸ்வியாக, भवतु- இருக்கட்டும்.

25. (பொ-ரை) அந்த இரண்டுவரன்களில், முதல்வரன் என்னவென்றால், ராமனுக்காக இப்பொழுது சேகரிக்கப்பட்ட பட்டாபிஷேகஸாமக்ரிகளைக் கொண்டே என் பிள்ளையான பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்விக்கவேண்டும்.

26. (பொ-ரை) ஹே தேவா! அப்பொழுது தேவாஸுரயுத்தத்தில், ப்ரீதியோடு எனக்கு நீர் இரண்டாவது வரமும் கொடுத்தீரன்றோ. அதை உபயோகப்படுத்திக்கொள்ள இதுதான் நல்ல ஸமயம் வாய்த்திருக்கிறது.

27. (பொ-ரை) ராமன் பதினான்குவருஷம் தண்டகாவனத்தில் வஸித்துக்கொண்டு, மரவுரி, மான்தோல், ஜடை இவைகளை தரித்து தபஸ்வியாய் இருக்கவேண்டும்.

भरतो भजतामद्य यौवराज्यमकण्टकम् ।
एष मे परमः कामो दत्तमेव वरं वृणे ॥ 28 ॥
अद्य चैव हि पश्येयं प्रयान्तं राघवं वनम् ॥ 29 ॥
स राजराजो भव सत्यसंगरः कुलं च शीलं च हि रक्ष जन्म च ।
परत्र वासे हि वदन्त्यनुत्तमं तपोधनाः सत्यवचो हितं नृणाम् ॥ 30 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे

एकादशः सर्गः ॥ 11 ॥

---

28-29. (ப-ரை) भरतः- பரதன், अकण्टक- சத்ருவில்லாத, यौवराज्य- இளவரசை, अद्य- இப்பொழுது, भजतां- அடையவேண்டும், एषः- இதுதான், मे- எனக்கு, परमः- மேலான, कामः- ஆசை, दत्त- கொடுக்கப்பட்ட, वर एव- வரத்தையே, वृणे- வேண்டுகிறேன். अद्य चैव- இப்பொழுதே, राघव- ராமனை, वनं- வனத்தைக் குறித்து, प्रयान्त- போகின்றவனை, पश्येय- பார்க்கவேண்டும்.

30 (ப-ரை) राजराजः- அரசர்களுக்கும் அரசனை, सः- அந்த நீர், सत्यसंगरः- ஸத்யமான ப்ரதிஜ்ஞையுள்ளவராக, भव- இரும், कुलंच- உம்முடைய குலத்தையும், शीलच- ஸ்வபாவத்தையும், जन्म च- பிறப்பையும், रक्ष- காப்பாற்றிக்கொள்ளும், सत्य वचः- ஸத்யமான வாக்கானது, नृणा- மனிதர்களுக்கு, हित- (இந்த லோகத்தில்) க்ஷேமகரமாகவும், परत्र वासे- பரலோக வாஸத்தில், अनुत्तमं- மிகவும் உத்தமமுமான, ஸாதனமாகவும், तपोधनाः- ரிஷிகள், वदन्ति हि- சொல்லுகிறார்களன்றோ.

28-29. (பொ-ரை) இப்பொழுதே பரதனுக்கு சத்ருக்களில்லாத யௌவராஜ்யபட்டாபிஷேகம் செய்விக்கவேண்டும். இதுதான் எனக்கு முக்கியமான ஆசை. நீர் கொடுத்திருந்த வரங்களைத்தான் கேட்கிறேன். இப்பொழுது புதியதாக ஒன்றும் கேட்கவில்லை. இப்பொழுதே ராமன் காட்டிற்குப்போக நான் பார்க்கவேண்டும்.

30. (பொ-ரை) அரசர்களுக்கு அரசனை நீர். எனக்குச் சொன்னபடி வரங்களைக் கொடுக்கும் ப்ரதிஜ்ஞையுள்ளவராக இரும். உம்முடைய குலத்தையும், சீலத்தையும் இனிமேல் வரப்போகிற பிறப்பையும் நன்றாய் காப்பாற்றிக்கொள்ளும். ஸத்யம் சொல்லுவதுதான் மனிதர்களுக்கு இந்த உலகில் ஹிதமென்றும் பரலோகத்தில் இதைவிட மேலானது இல்லாத சிறந்த ஸாதனமென்றும் ரிஷிகள் சொல்லுகிறார்கள்.

द्वादशः सर्गः ॥ 12 ॥

ततः श्रुत्वा महाराजः कैकेय्या दारुणं वचः
चिन्तामभिसमापेदे मुहूर्तं प्रतताप च ॥ 1 ॥
किंनु मे यदि वा स्वप्नश्चित्तमोहोपि वा मम।
अनुभूतोपसर्गो वा मनसो वाप्युपद्रवः॥
इति संचिन्त्य तद्राजा नाभ्यगच्छत्तदा सुखम् ॥ 2 ॥
प्रतिलभ्य चिरात्संज्ञां कैकेयीवाक्यताडितः।
व्यथितो विक्लबश्चैव व्याघ्रीं दृष्ट्वा यथा मृगः ॥ 3 ॥
असंवृतायामासीनो जगत्यां दीर्घमुच्छ्वसन्।
मण्डले पन्नगो रुद्धो मन्त्रैरिव महाविषः ॥ 4 ॥
अहो धिगिति सामर्षो वाचमुक्त्वा नराधिपः।
मोहमापेदिवान्भूयः शोकोपहतचेतनः ॥ 5 ॥

1. (ப-ரை) ततः- பிறகு, महाराजः- மஹாராஜன், कैकेय्याः- கைகேயினுடைய, दारुणं- க்ரூரமான, वचः- வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, चिन्तां- விசாரத்தை, अभिसमापेदे- அடைந்தார், मुहूर्तं- இரண்டு நாழிகை, प्रतताप च- மூர்ச்சையையும் அடைந்தார்.

2. (ப-ரை) किंनु- என்ன இது! मे- எனக்கு, स्वप्नः यदि वा- ஸ்வப்னந்தானோ! मम- என்னுடைய, चित्तमोहोपि वा- மனதில் ப்ரமந்தானோ! अनुभूतोपसर्गो वा- (ஜன்மாந்திரத்தில்) அநுபவிக்கப்பட்ட வஸ்துக்களின் நினைவுதானோ! मनसः- மனதினுடைய, उपद्रवः अपि वा- (ரோகத்தினால் உண்டான) விகாரந்தானோ! इति- என்று,§

3-4-5. (ப-ரை) कैकेयीवाक्यताडितः- கைகேயியின் வார்த்தையால் அடிக்கப்†

1. (பொ-ரை) பிறகு மஹாராஜாவானவர், கைகேயியின் க்ரூரமான வார்த்தையைக்கேட்டு மனதில் அதிக விசாரங்கொண்டு இரண்டு நாழிகை மூர்ச்சையையுமடைந்தார்.

2. (பொ-ரை) என்ன இது! நல்ல ஸ்வபாவமுள்ள கைகேயியானவள், ராமனுடைய பட்டாபிஷேகத்திற்கு விக்னத்தை ஒருநாளும் செய்யமாட்டாளே! ஆகையால் இது வாஸ்தவமன்று, ஒரு ஸமயம் ஸ்வப்னம்தான் கண்டேனோ. இப்பொழுது தூக்கமில்லாமையால் அந்த ஸ்வப்னத்திற்கும் ப்ரஸக்தியில்லை. ப்ரமமாகவிருக்குமோ! ப்ரமத்திற்குக் காரணமில்லாமையால் அதுவுமன்று. ஒருக்கால் ஜன்மாந்திரத்தில் அநுபவித்த விஷயத்தின் நினைவாயிருக்குமோ, ஜென்மாந்திரத்திலும் இவ்விதமான தசை உண்டானதற்குக் காரணமேயில்லை. ஆகையால் ரோகத்தினால்உண்டான மனதில் விகாரமாயிருக்குமோவென்று ராஜா பலவிதமாக சிந்தித்து அப்பொழுது ஸுகப்படவில்லை.

3-4-5. (பொ-ரை) பிறகு, கைகேயியின் வார்த்தையினால் அடிபட்ட

चिरेण तु नृपः संज्ञां प्रतिलभ्य सुदुःखितः ।
कैकेयीमब्रवीत्क्रुद्धः प्रदहन्निव चक्षुषा ॥ 6 ॥
नृशंसे दुष्टचारित्रे कुलस्यास्य विनाशिनि ।
किं कृतं तव रामेण पापे पापं मयापि वा ॥ 7 ॥

---

§राजा- அரசன், तत्- அதை, संचिन्त्य- சிந்தித்துக்கொண்டு, तदा- அப்பொழுது, सुखं- ஸுகத்தை, न अभ्यगच्छत्- அடையவில்லை.

†பாட. नराधिपः- அரசன், चिरात्- நெடுநேரம் கழிந்து, संज्ञां- நினைவை, प्रतिलभ्य- அடைந்து, व्याघ्रीं- பெண்புலியை, दृष्ट्वा- பார்த்து, मृगः यथा- மான்போல, व्यथितः- துக்கப்பட்டும், विक्लवश्चैव- கலக்கமுள்ளவராயும், असंवृतायां- மேல்விரிப்பால் மறைக்கப்படாமலிருக்கிற, जगत्यां- தரையில், आसीनः- உட்கார்ந்துகொண்டு, मण्डले- மண்டலாகாரமான யந்திரத்தில் मन्त्रैः- மந்திரங்களினால், रुद्धः- கட்டப்பட்ட, महाविषः- கொடியவிஷமுள்ள, पन्नगः इव- ஸர்ப்பம்போல், दीर्घं- நீண்டதாக, उच्छ्वसन्- மூச்செறிந்தவராயும், अहो- அய்யோ!, धिक्- சீ, इति- என்று, सामर्षः- கோபமுள்ளவராய், वाचं- வார்த்தையை, उक्त्वा- சொல்லி, शोकोपहतचेतनः सन्- சோகத்தினால் கலங்கின புத்தியையுடையவராய்க்கொண்டு, भूयः- மறுபடியும், मोहं- மூர்ச்சையை, आपेदिवान्- அடைந்தார்.

6. (ப-ரை) नृपः- அரசன், चिरेण तु- நெடுநேரம் கழித்து, संज्ञां- நினைவை, प्रतिलभ्य- அடைந்து, सुदुःखितः- மிகவும் துக்கமுள்ளவராய், चक्षुषा- கண்களால், प्रदहन्निव- கொளுத்துகின்றவர்போல, क्रुद्धः- கோபமுள்ளவராய்க்கொண்டு, कैकेयीं- கைகேயியைக்குறித்து, अब्रवीत्- சொன்னார்.

7. (ப-ரை) नृशंसे- கொடியவளே! दुष्टचारित्रे- கெட்ட நடக்கையுள்ளவளே! अस्य- कुलस्य- இந்த குலத்திற்கு, विनाशिनि- விநாசத்தைச் செய்கின்றவளே! पापे- பாபமுள்ளவளே! रामेण- ராமனாலேயாவது, मयापि वा- என்னாலேயாவது, तव- உனக்கு, किं पापं- என்ன அபகாரமானது, कृतं- செய்யப்பட்டது.

---

அரசன் நெடுநேரங்கழிந்து, மூர்ச்சைதெளிந்து, பெண்புலியைக்கண்ட மான்போல் துக்கத்துடனும், சரீரத்தில் கலக்கமுடனும், வெறுந்தரையில் உட்கார்ந்துகொண்டு, யந்திரமண்டலத்தில் மந்திரத்தினால் கட்டப்பட்ட கொடியவிஷமுள்ள ஸர்ப்பம்போல் பெருமூச்சுவிட்டுக்கொண்டு, அய்யோ! சீ! என்று கோபத்துடன் சொல்லிக்கொண்டு, துக்கத்தினால் புத்தி கலங்கி, மறுபடியும் மூர்ச்சையடைந்துவிட்டார்.

6. (பொ-ரை) அரசன் நெடுநேரங்கழிந்து மூர்ச்சைதெளிந்து மிகவும் துக்கத்துடன் பார்க்கிற பார்வையில் கொளுத்திவிடுகிறவர்போல், கோபத்துடன் கைகேயியைப்பார்த்து இந்த வார்த்தை சொன்னார்.

7. (பொ-ரை) அடி கொடியவளே! கெட்ட நடக்கையுள்ளவளே! உத்தமமான இந்த குலத்தை அழிக்கத்தொடங்கியவளே! ராமனாலேயாவது, என்னாலேயாவது உனக்கு என்ன அபகாரம் செய்யப்பட்டது.

यदा ते जननीतुल्यां वृत्तिं वहति राघवः ।
तस्यैव त्वमनर्थाय किंनिमित्तमिहोद्यता ॥ 8 ॥
त्वं मयात्मविनाशार्थं भवनं स्वं प्रवेशिता ।
अविज्ञानान्नृपसुता व्याली तीक्ष्णविषा यथा ॥ 9 ॥
जीवलोको यदा सर्वो रामस्याह गुणस्तवम् ।
अपराधं कमुद्दिश्य त्यक्ष्यामीष्टमहं सुतम् ॥ 10 ॥
कौसल्यां वा सुमित्रां वा त्यजेयमपि वा श्रियम्
जीवितं वात्मनो रामं नत्वेव पितृवत्सलम् ॥ 11 ॥

8. (ப-ரை) राघवः- ராமன், यदा- எப்பொழுது, ते- உன் விஷயத்தில், जननीतुल्यां- தன் மாதாவுக்கு ஸமானமான, वृत्तिं- சிச்ருஷையை, वहति- செய்துகொண்டிருக்கிறனே, तस्यैव- அவனுக்கே, अनर्थाय- அனர்த்தத்தின்பொருட்டு, किं निमित्त- என்ன காரணத்தினுல், इह- இப்பொழுது, त्वं- நீ, उद्यता- யத்தனம் செய்துவிட்டாய்.

9. (ப-ரை) अविज्ञानात्- தெரியாமையினுல், आत्मविनाशार्थं- என்னுடைய விநாசத்திற்காக, नृपसुता इति- ராஜபுத்ரியென்று, त्वं- நீ, मया- என்னுலே, स्वं भवनं- என்னுடைய க்ருஹத்தை, तीक्ष्णविषा- கொடியவிஷமுள்ள, व्याली यथा- ஸர்ப்பம்போல், प्रवेशिता- ப்ரவேசிக்கப்பட்டாய்.

10. (ப-ரை) यदा- எப்பொழுது, सर्वः जीवलोकः- எல்லா ப்ராணிஸமூகமும், रामस्य- ராமனுடைய, गुणस्तवं- குணங்களின் ஸ்தோத்திரத்தை, आह- சொல்லுகிறதோ. इष्टं- ப்ரியமான, सुतं (அப்படிப்பட்ட) பிள்ளையை, अहं- நான், कं अपराधं- எந்த குற்றத்தை, उद्दिश्य- குறித்து, त्यक्ष्यामि- விடுவேன்.

11. (ப-ரை) कौसल्यां वा- கௌஸல்யையோ, सुमित्रां वा- ஸுமித்ரையையோ,

8. (பொ-ரை) ராகவன் தன்னுடைய மாதாவுக்குப் பணிவிடை செய்வது போல் உனக்கும் எப்பொழுதும் பணிவிடைசெய்துவருகிறனே, அவனுக்கே அப்பொழுதே அனர்த்தம் செய்வதற்காக ஏன் இவ்விதம் முயர்ச்சி செய்கிறாய்.

9. (பொ-ரை) நான் மூடத்தனத்தினுல், உன்னை ராஜபுத்ரி என்று எண்ணி, என்னுடைய விநாசத்திற்காக கொடியவிஷமுடைய ஸர்ப்பத்தைப்போல், என்னுடைய வீட்டில் ப்ரவேசிப்பித்தேன்.

10 (பொ-ரை) லோகத்திலுள்ள எல்லா ப்ராணிகளும், ராமனுடைய குணங்களை ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டிருக்க, நான் மாத்திரம், எனக்கு இஷ்டமான அந்த பிள்ளையான ராமனை என்ன அபராதத்தை உத்தேசித்து வனத்திற்கு அனுப்புவேன்.

11. (பொ-ரை) கௌஸல்யையோ, ஸுமித்திரையையோ, என்னுடைய ராஜ்

परा भवति मे प्रीतिर्दृष्ट्वा तनयमग्रजम्।
अपश्यतस्तु मे रामं नष्टा भवति चेतना ॥ 12 ॥
तिष्ठेल्लोको विना सूर्यं सस्यं वा सलिलं विना।
नतु रामं विना देहे तिष्ठेत्तु मम जीवितम् ॥ 13 ॥
तदलं त्यज्यतामेष निश्चयः पापनिश्चये।
अपि ते चरणौ मूर्ध्ना स्पृशाम्येष प्रसीद मे ॥ 14 ॥
किमिदं चिन्तितं पापे त्वया परमदारुणम् ॥ 15 ॥

श्रियं अपिवा- என்னுடைய ஸம்பத்தையோ, आत्मनः- என்னுடைய, जीवितं वा- உயிரையோ, त्यजेयं- விடத்துணிந்தாலும் துணிவேன், पितृवत्सलम्- பிதாவினிடத்தில் வாத்ஸல்யமுள்ள, राम- ராமனை, नतु त्यजेय एव- விடத்துணியவே மாட்டேன்.

12. (ப-ரை) अग्रजं तनयं- ஜ்யேஷ்டபுத்திரனை, राम- ராமனை, दृष्ट्वा- பார்த்து, मे- எனக்கு, परा- அதிகமான, प्रीतिः- ஆனந்தமானது. भवति- உண்டாகிறது, अपश्यतस्तु- அவனைப் பாராமலிருந்தால், मे- என்னுடைய, चेतना- ப்ராணனானது, नष्टा भवति- அழிந்துவிடுகிறது.

13. (ப-ரை) लोक- உலகமானது, सूर्य- ஸூர்யனை, विना- இல்லாமல், तिष्ठेत्- இருக்கும், सस्य वा- பயிரும், सलिल- ஜலத்தை, विना- இல்லாமல், (तिष्ठेत्- இருக்கும்) राम विना- ராமனில்லாமல், मम देहे- என்னுடைய சரீரத்தில், जीवित तु- ப்ராணனானது, न तिष्ठेत् तु- இருக்கவே இருக்காது.

14-15. (ப-ரை) हे पापनिश्चये- கெட்ட எண்ணமுடையவளே, तत्- ஆகையால், अलं- போதும், एष निश्चयः- இந்த எண்ணமானது, त्यज्यतां- விடப்படலாம், एषः- இதோ நான், ते- உன்னுடைய, चरणौ- கால்களை, मूर्ध्ना- (என்) தலையினால், अपि स्पृशामि- தொடுகிறேன், मे- என் விஷயத்தில், प्रसीद- கருணை செய், हे पापे- பாபமுடையவளே, त्वया- உன்னால், परमदारुण- மிகவும் கொடியதான, इदं- இது, किं चिन्तितं- என்ன எண்ணப்பட்டது.

---

ஸம்பத்தையோ, என்னுடைய ப்ராணனையோ விடத்துணிந்தாலும் துணிவேன். பிதாவினிடத்தில் வாத்ஸல்யமுள்ள அந்த ராமனை ஒருக்காலும் விடத்துணியமாட்டேன்.

12. (பொ-ரை) ஜ்யேஷ்டபுத்திரனை ராமனைப் பார்த்துக்கொண்டிருந்தால் எனக்கு அதிகமான ஆனந்தமுண்டாகிறது. அவனைப் பாராமலிருந்துவிட்டால் என்னுடைய ப்ராணன் போய்விடுகிறது.

13. (பொ-ரை) ஒருவேளை உலகமானது ஸூர்யனில்லாமலுமிருக்கும். பயிரானது ஜலமில்லாமலுமிருக்கும். ராமனில்லாமல் என்னுடைய உயிரானது சரீரத்தில் நிற்கவேமாட்டாது.

14-15. கெட்ட எண்ணமுடையவளே! ஆகையால் போதும். ராமனைக் காட

अथ जिज्ञाससे मां त्वं भरतस्य प्रियाप्रिये ।
अस्तु यत्तत्त्वया पूर्वं व्याहृतं राघवं प्रति ॥ 16 ॥

स मे ज्येष्ठः सुतः श्रीमान्धर्मज्येष्ठ इतीव मे ।
तत्त्वया प्रियवादिन्या सेवार्थं कथितं भवेत् ॥ 17 ॥

तच्छ्रुत्वा शोकसंतप्ता संतापयसि मां भृशम् ।
आविष्टासि गृहं शून्यं सा त्वं परवशं गता ॥ 18 ॥

**16-17-18.** (ப-ரை) त्वं- நீ, भरतस्य- பரதனுடைய, प्रियाप्रिये- ப்ரியவிஷயத்திலும் அப்ரியவிஷயத்திலும், मां- என்னை, अथ जिज्ञाससे- அறிய விரும்புகிறாயா, अस्तु- (அது) இருக்கட்டும், त्वया- உன்னாலே, पूर्वं- முன்னே, राघवं-प्रति- ராகவனைக் குறித்து, सः- அவன், मे- எனக்கு, ज्येष्ठः सुतः- மூத்தபிள்ளை, श्रीमान्- செல்வமும் பாக்யமுமுடையவன், धर्मज्येष्ठः- தர்மத்தினாலும் சிறந்தவன், इति इव- என்றுபோல, यत् व्याहृत- யாதொன்று சொல்லப்பட்டதோ, तत्- அது, प्रियवादिन्या- ப்ரியமான வார்த்தை சொல்லுகின்ற, त्वया- உன்னால், सेवार्थं- என்னுடைய மனதைத் த்ருப்தி பண்ணுவதற்காக, कथितं- சொல்லப்பட்டதாக, भवेत्- ஆகும், तत्- இந்த ராமனுடைய பட்டாபிஷேகத்தை, श्रुत्वा- கேட்டு, शोकसतप्ता सती- சோகத்தினால் தாபத்தை அடைந்தவளாய்க்கொண்டு, मां- என்னை, भृशम्- மிகவும், सतापयसि- வருத்தப்படுத்துகிறாய், परवश- பிறர் வசத்தை, गता सती- அடைந்தவளாய்க்கொண்டு, शून्यं गृह- ஒருவருமில்லாத கோபக்ருஹத்தை, आविष्टा असि- ப்ரவேசித்திருக்கிறாய்.

டுக்குப்போகச்சொல்லுகிற இந்தப் பிடிவாதத்தை விட்டுவிடு. உன் கால்களை என் தலையினால் தொட்டுவணங்குகிறேன். என் விஷயத்தில் அநுக்ரஹம் செய். அடி பாபியே! மிகவும் கொடியதான இந்த எண்ணம் உனக்கு எப்படி உண்டாயிற்றோ! தெரியவில்லையே.

**16–17–18.** (தெபா-ரை) பரதன் விஷயத்தில் மஹாராஜாவானவர் ப்ரியமாயிருக்கிறாரா இல்லையா என்கிற விஷயத்தை நீ அறிய விரும்புகிறாயா? அது இருக்கட்டும். ராமனுக்கு பட்டாபிஷேகம் என்கிற வ்ருத்தாந்தத்தைக் கேட்டு, மிகவும் துக்கமடைந்து, என்னையும் அதிகமாக நிர்ப்பந்தித்து வருத்தப்படுத்துகிறாய். அதுவுமல்லாமல், பிறர்களுடைய வார்த்தையைக்கேட்டுக்கொண்டு இந்தப்பாழான கோபக்ருஹத்திலும் இருக்கிறாய். இந்தக்காரணங்களால் நீ முன்னமே என்னிடம் ப்ரியமாக வார்த்தை சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது ராமனைக்குறித்து, "எனது ஜ்யேஷ்ட புத்திரன், நல்லஅத்ருஷ்டமுடையவன், மிகவும் தர்மிஷ்டன்" என்று இவை முதலாக சொல்லியவைகளெல்லாம் என்னை த்ருப்தி செய்வதற்காக சொன்னவைகளாக ஆகும்.

इक्ष्वाकूणां कुले देवि संप्राप्तः सुमहानयम् ।
अनयो नयसंपन्ने यत्र ते विकृता मतिः ॥ 19 ॥
न हि किंचिदयुक्तं वा विप्रियं वा पुरा मम ।
अकरोस्त्वं विशालाक्षि तेन न श्रद्दधाम्यहम् ॥ 20 ॥
ननु ते राघवस्तुल्यो भरतेन महात्मना ।
बहुशो हि सुबाले त्वं कथाः कथयसे मम ॥ 21 ॥

19. (ப-ரை) देवि- தேவியே! नयसंपन्ने- நீதியோடு கூடின, यत्र- யாதொரு, इक्ष्वाकूणा- இக்ஷ்வாகு வம்சத்து அரசர்களுடைய, कुले- வம்சத்தில், ते- உன்னுடைய, मतिः- புத்தியானது, विकृता- (இப்படி) விபரீதமாக (ஆயிற்று), (तत्र- அந்த வம்சத்தில்) अय- இந்த, सुमहान्- மிகவும் பெரிதான, अनयः- அனர்த்தமானது, संप्राप्तः- நேர்ந்துவிட்டது.

20. (ப-ரை) हे विशालाक्षि- ஹே அகன்ற கண்களையுடையவளே! त्वं- நீ, पुरा- முன்னே, मम- எனக்கு, अयुक्तं वा- அயுக்தத்தையோ, विप्रियं वा- ப்ரியமல்லாததையோ, किंचित्- கொஞ்சமேனும், न अकरोः- செய்ததில்லை, तेन- அதனால், अहं- நான், न श्रद्दधामि- (ராமன் காட்டுக்குப் போகவேண்டுமென்றும், பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவேண்டுமென்றும் சொல்லுவதை உண்மையாக) நம்பவில்லை.

21. (ப-ரை) हे सुबाले- ஹே நல்ல எண்ணமுள்ள சிறுமியே! ते- உனக்கு, राघवः- ராமன், महात्मना- மஹாத்மாவான, भरतेन- பரதனோடு, तुल्यः- ஸமானனன்றோ, हि- ஏனென்றால், बहुशः- அநேகம் தடவை, त्वं- நீ, कथाः- (ராமன் விஷயமான) கதைகளை, मम- எனக்கு, कथयसे- சொல்லுகிறாய்.

19. (பொ-ரை) இதுகாலம் வரையில் நீதி தவறாமலிருக்கிற இந்த இக்ஷ்வாகு வம்சத்தில் உன்னுடைய புத்தியானது இப்பொழுது இப்படி விபரீதமாக ஆயிற்று. ஆகையால் இந்த வம்சத்தில் மிகவும் பெரிதான அனர்த்தம் நேர்ந்திருக்கிறது.

20. (பொ-ரை) அகன்ற கண்களுள்ளவளே! இதற்குமுன் நீ எனக்கு கொஞ்சமாவது ப்ரியமல்லாததையும் யுக்தமல்லாததையும் செய்ததில்லை. ஆகையினால், "ராமன் காட்டுக்குப் போகவேண்டுமென்றும், பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவேண்டு"மென்றும் நீ இப்பொழுது சொல்லுவதை நான் உண்மையென்று நம்பவேயில்லை.

21. (பொ-ரை) கைகேயி! ராமன் மஹாத்மாவான பரதனோடு ஸமானன் அன்றோ! ஏனென்றால் ராமன் விஷயமான கதைகளை நீ பலதடவைகளில் என் முன்னிலையில் சொல்லியிருக்கிறாய்.

तस्य धर्मात्मनो देवि वने वासं यशस्विनः ।
कथं रोचयसे भीरु नव वर्षाणि पञ्च च ॥ 22 ॥

अत्यन्तसुकुमारस्य तस्य धर्मे धृतात्मनः ।
कथं रोचयसे वासमरण्ये भृशदारुणे ॥ 23 ॥

रोचयस्यभिरामस्य रामस्य शुभलोचने ।
तव शुश्रूषमाणस्य किमर्थं विप्रवासनम् ॥ 24 ॥

22. (ப-ரை) देवि- ஹே தேவியே! भीरु- பயமுள்ளவளே! धर्मात्मनः- தர்மாத்மாவாயும், यशस्विनः- கீர்த்தியுள்ளவனும், तस्य- (பரதனைப்போல அவ்வளவு ப்ரியனுமான) அந்த ராமனுக்கு, नव- ஒன்பதும், पञ्च च- ஐந்துமான, वर्षाणि- வருஷங்களை, वने- வனத்தில், वास- வஸிப்பதை, कथं- ஏன், रोचयसे- விரும்புகிறாய்.

23. (ப-ரை) अत्यन्तसुकुमारस्य- மிகவும் மருதுவான ரீரத்தையுடையவனும், धर्मे- தர்மத்தில், धृतात्मनः- நிலைநின்ற மனதையுடையவனுமான, तस्य- அந்த ராமனுக்கு, भृशदारुणे- மிகவும் பயங்கரமான, अरण्ये- வனத்தில், वास- வஸிப்பதை, कथं- ஏன், रोचयसे- விரும்புகிறாய்.

24. (ப-ரை) हे शुभलोचने- அழகான கண்களையுடையவளே! अभिरामस्य- ஸகல ஜனங்களுக்கும் ஸந்தோஷத்தை உண்டுபண்ணுகிறவனும், तव- உனக்கு, शुश्रूषमाणस्य- பணிவிடை செய்கிறவனுமான, रामस्य- ராமனுக்கு, विप्रवासनम्- தேசத்தை விட்டுப் போவதை, किमर्थं- எதற்காக, रोचयसि- ஆசைப்படுகிறாய்.

22. (பொ-ரை) ஹே தேவி! பயமுள்ளவளே! தர்மாத்மாவாயும், உலகமெல்லாம் புகழ்பெற்றவனும், பரதனைப்போல் உனக்கு மிகவும் ப்ரியனுமான ராமன், பதினான்கு வருஷம் வனத்தில் வாஸம் செய்யவேணுமென்று ஏன் இப்படி விரும்புகிறாய்.

23. (பொ-ரை) மிகவும் மருதுவான சரீரமுடையவனும், தர்மத்திலேயே நிலைநின்ற மனதுடையவனுமான அந்த ராமன், மிகவும் பயங்கரமான வனத்தில், வாஸம் பண்ணவேண்டுமென்று நீ ஏன் விரும்புகிறாய்.

24. (பொ-ரை) அழகான கண்களையுடைய ஹே கைகேயி! எல்லா ஜனங்களுக்கும் ஸந்தோஷத்தை உண்டு பண்ணுகிறவனும், உனக்கும் சிச்ருஷை செய்து கொண்டிருப்பவனுமான அந்த ராமனை, தேசத்தைவிட்டு துரத்தவேணுமென்று நீ எதற்காக விரும்புகிறாய்.

रामो हि भरताद्भूयस्तव शुश्रूषते सदा ।
विशेषं त्वयि तस्मात्तु भरतस्य न लक्षये ॥ 25 ॥

शुश्रूषां गौरवं चैव प्रमाणं वचनक्रियाम् ।
कस्ते भूयस्तरां कुर्यादन्यत्र मनुजर्षभात् ॥ 26 ॥

बहूनां स्त्रीसहस्राणां बहूनां चोपजीविनाम् ।
परिवादोऽपवादो वा राघवे नोपपद्यते ॥ 27 ॥

25. (ப-ரை) रामो हि- ராமனும், भरतात्- பரதனைக்காட்டிலும், भूयः- அதிகமாக, तव- உனக்கு, सदा- எப்பொழுதும், शुश्रूषते- பணிவிடை செய்துகொண்டிருக்கிறான், त्वयि- உன்விஷயத்தில், तस्मात्तु- அந்த ராமனைவிட, भरतस्य- பரதனுக்கு, विशेषं- விசேஷத்தை, न लक्षये- நான் அறியவில்லை.

26. (ப-ரை) शुश्रूषा- சிசுருஷையையும், गौरव- கௌரவமானதையும், प्रमाण- நல்ல எண்ணத்தையும், वचनक्रियाम्- சொன்னபடி செய்வதையும், मनुजर्षभात्- புருஷச்ரேஷ்டனான ராமனைக்காட்டிலும், अन्यत्र- வேறு, कः- எவன், भूयस्तरां- அதிகமாக, ते- உனக்கு, कुर्यात्- செய்வான்.

27. (ப-ரை) बहूनां- அநேகங்களான, स्त्रीसहस्राणां- ஆயிரக்கணக்கான ஸ்திரீகளுடையவும், बहूनां- அநேகங்களான, उपजीविनां च- அடுத்துப்பிழைக்கிற ஜனங்களுடையவும், परिवादः- அவமதிப்பு வார்த்தையும், अपवादः- நிந்தையும், राघवे- ராமனிடத்தில், नोपपद्यते- காணப்படவில்லை.

25. (தா-ரை) ராமன் பரதனைவிட உனக்கு எப்பொழுதும் அதிகமாக பணிவிடைசெய்துகொண்டிருக்கிறான். ஆகையால், உன்விஷயத்தில் ராமனைவிட பரதன் மேலானவனென்று நான் நினைக்கவில்லை.

26. (தா-ரை) புருஷோத்தமனான ராமனைத்தவிர, வேறு எவன் உன் விஷயத்தில் பணிவிடையையும், கௌரவத்தையும், நல்ல எண்ணத்தையும், சொன்னபடி செய்வதையும், அதிகமாக செய்வான்.

27. (தா-ரை) நம் நகரத்தில் அநேகம் ஆயிரக்கணக்கான ஸ்திரீகளிருக்கிறார்கள். நம்மை அண்டிப்பிழைக்கின்ற அநேகம் புருஷர்களுமிருக்கிறார்கள். இவர்களில் ஒருவராவது ராமனிடத்தில் அவமதிப்பு வார்த்தைகளையோ, அல்லது நிந்தனையையோ சொல்லுவதாக நாம் கேட்டதேயில்லை.

सान्त्वयन्सर्वभूतानि रामः शुद्धेन चेतसा ।
गृह्णाति मनुजव्याघ्रः प्रियैर्विषयवासिनः ॥ 28 ॥
सत्येन लोकाञ्जयति दीनान्दानेन राघवः ।
गुरूञ्शुश्रूषया वीरो धनुषा युधि शात्रवान् ॥ 29 ॥
सत्यं दानं तपस्त्यागो मित्रता शौचमार्जवम् ।
विद्या च गुरुशुश्रूषा ध्रुवाण्येतानि राघवे ॥ 30 ॥

---

28. (ப-ரை) मनुजव्याघ्रः- புருஷோத்தமனான, रामः- ராமன், शुद्धेन- நல்லதான, चेतसा- மனதுடன், सर्वभूतानि- எல்லா ப்ராணிகளையும், सान्त्वयन्- ஸமாதானம்செய்து கொண்டு, विषयवासिनः- தம்தேசத்தில் வஸிப்பவர்களை, प्रियैः- இஷ்டமான வஸ்துக்களினால், गृह्णाति- தன் வசமாகச்செய்துகொள்ளுகிறான்.

29. (ப-ரை) वीरः- சூரனான, राघवः- ராமன், सत्येन- ப்ராணிகளுக்கு ஹிதமான வார்த்தையினால், लोकान्- ஸ்வர்க்கம் முதலான லோகங்களையும், दानेन- தானத்தினால், दीनान्- ஏழைகளையும், शुश्रूषया- பணிவிடையால, गुरून्- குருக்களையும், धनुषा- வில்லினால், युधि- யுத்தத்தில், शात्रवान्- சத்ருக்களையும், जयति- ஸ்வாதீனம் செய்துகொள்ளுகிறான்.

30. (ப-ரை) सत्य- உண்மை, दान- பரலோகத்திற்காக செய்யவேண்டிய தானம், तपः- தபஸு, त्यागः- இஹலோகஸாதனமான த்யாகம், मित्रता- ஸர்வப்ராணிகளிடத்திலும் ஸ்நேஹம், शौचं- சுத்தி, आर्जवम्- பிறர்களின் எண்ணத்தை அனுஸரிப்பது, विद्या च- தத்வஜ்ஞானம், गुरुशुश्रूषा- குருக்களின் பணிவிடை, एतानि- என்கிற இவைகள், राघवे- ராமனிடத்தில், ध्रुवाणि- நிலையாக இருக்கின்றன.

28. (பொ-ரை) புருஷோத்தமனான ராமன் சுத்தமான மனதுடன் எல்லா ப்ராணிகளிடத்திலும் ஸமாதான வார்த்தைகளை சொல்லிக்கொண்டு, தம் தேசத்தில் வஸிப்பவர்களை இஷ்டமான வஸ்துக்களினால் ஸ்வாதீனம் செய்துகொள்ளுகிறான்.

29. (பொ-ரை) வீரனான ராமன், எல்லா ப்ராணிகளுக்கும் ஹிதமான வார்த்தை சொல்லுவதினால் ஸ்வர்க்கம் முதலான லோகங்களையும், வேண்டிய தனங்களைக்கொடுத்து ஏழைகளையும், கபடமில்லாமல் சிச்ருஷை செய்து குருக்களையும், யுத்தத்தில் வில்லினால் சத்ருக்களையும் தன் வசமாகக் கொள்ளுகிறான்.

30. (பொ-ரை) உண்மையைப்பேசுவது, பரலோக ஸாதனமான தானம், உபவாஸாதிகளால் காயக்லேசம், இஹலோக ஸாதனமான த்யாகம், எல்லா ஜனங்களிடத்திலும் ஸ்நேஹம், மனதிலுடையவும் சரீரத்திலுடையவும் சுத்தி, கபடமில்லாமை, தத்வஜ்ஞானம், குருசுச்ருஷை என்கிற இவை முதலான குணங்கள் ராமனிடத்தில் நிலையாக இருக்கின்றன.

मम वृद्धस्य कैकेयि गतान्तस्य तपस्विनः ।
दीनं लालप्यमानस्य कारुण्यं कर्तुमर्हसि ॥ 34 ॥

पृथिव्यां सागरान्तायां यत्किंचिदधिगम्यते ।
तत्सर्वं तव दास्यामि मा च त्वां मन्युराविशेत् ॥ 35 ॥

अञ्जलिं कुर्मि कैकेयि पादौ चापि स्पृशामि ते
शरणं भव रामस्य माऽधर्मो मामिह स्पृशेत् ॥ 36 ॥

34. (ப-ரை) हे कैकेयि- ஹே கைகேயி! वृद्धस्य- கிழவனையும், गतान्तस्य- ஆயுஸின் முடிவை அடைந்தவனையும், तपस्विनः- தபஸ்வியாயும், दीनं- தீனமாக, लालप्यमानस्य- அடிக்கடி பிதற்றிக்கொண்டிருக்கிற, मम- எனக்கு, कारुण्य- கருணையை, कर्तुं- செய்வதற்கு, अर्हसि- தகுந்தவளாகிறாய்.

35. (ப-ரை) सागरान्ताया- ஸமுத்ரத்தை முடிவாகவுடைய, पृथिव्यां- பூமியில், यत्किंचित्- எந்த தனமானது, अधिगम्यते- அடையப்படுகிறதோ, तत्सर्वं- அது முழுமையும், तव- உனக்கு, दास्यामि- கொடுப்பேன், त्वां- உன்னை, मन्युः- கோபமானது, मा आविशेत् च- அடையாமலிருக்கவேணும்.

36. (ப-ரை) हे कैकेयि- கைகேயியே! अञ्जलिं- கைகுவிக்கலை, कुर्मि- செய்கிறேன், ते- உன்னுடைய, पादौ च अपि- கால்களையும், स्पृशामि- தொடுகிறேன், रामस्य- ராமனுக்கு, शरण- சரணமாக, भव- ஆகவேண்டும், अधर्मः- அதர்மமானது, मां- என்னை, इह- இவ்விஷயத்தில், मा स्पृशेत्- தொடாமலிருக்கவேண்டும்.

34. (பொ-ரை) ஹே கைகேயி! கிழவனைப் முடிவுகாலம் கிட்டியவனாய், எல்லோராலும் கருணைசெய்யத்தகுந்தவனாய், தீனமாக அடிக்கடி பிதற்றிக்கொண்டிருக்கிற என் விஷயத்தில் நீ தயவுசெய்யவேணும்.

35. (பொ-ரை) ஸமுத்திரம வரையிலுள்ள பூமியில் எந்தெந்த வஸ்துக்கள கிடைக்கக்கூடியதோ, அவை முழுமையும் உனக்குக் கொடுப்பேன். ராமன் விஷயமான கோபமானது, உனக்கு வராமலிருக்கவேண்டும்.

36. (பொ-ரை) ஹே கைகேயி! கைகூப்புகிறேன், உன் இரண்டு கால்களையும தொட்டு வணங்குகிறேன். எவ்விதத்திலும ராமனைக் காப்பாற்றவேண்டும். ஸத்யம தவறுதலாகிற அதர்மமானது என்னை அணுகாமலிருக்கவேண்டும்.

इति दुःखाभिसंतप्तं विलपन्तमचेतनम् ।
घूर्णमानं महाराजं शोकेन समभिप्लुतम् ॥ 37 ॥

पारं शोकार्णवस्याशु प्रार्थयन्तं पुनः पुनः ।
प्रत्युवाचाथ कैकेयी रौद्रा रौद्रतरं वचः ॥ 38 ॥

यदि दत्वा वरौ राजन्पुनः प्रत्यनुतप्यसे ।
धार्मिकत्वं कथं वीर पृथिव्यां कथयिष्यसि ॥ 39 ॥

37-38. (ப-ரை) इति- இவ்விதம், दु:खाभिमतम- துக்கத்தினால் மிகவும் தபித்துக்கொண்டும், विलपन्त- அழுதுகொண்டும், अचेतनम्- மூர்ச்சையடைந்தும், घूर्णमान- தரையில் விழுந்து புரண்டுகொண்டும், शोकेन- துக்கத்தினால், समभिप्लुतम्- நன்றாய் வியாபிக்கப்பட்டும், शोकार्णवस्य- துக்க ஸமுத்ரத்தினுடைய, पार- அக்கரையை, आशु- சீக்கிரமாக, पुनः पुनः- அடிக்கடி, प्रार्थयन्त- வேண்டிக்கொண்டுமிருக்கிற, महाराजं- மஹாராஜனைக்குறித்து, रौद्रा- கொடியவளான, कैकेयी- கைகேயியானவள், रौद्रतर- மிகவும் கொடியதான, वचः- வார்த்தையை, अथ- முழுமையும், उवाच- சொன்னாள்.

39. (ப-ரை) हे राजन्- அரசனே! वीर- சூரனே! वरौ- இரண்டு வரங்களை, दत्वा- (எனக்கு) கொடுத்து, पुनः- மறுபடி, प्रत्यनुतप्यसे यदि- பரிதபித்தீரேயானால், पृथिव्यां- பூலோகத்தில், धार्मिकत्व- நீர் தர்மிஷ்டனென்பதை, कथ- எப்படி, कथयिष्यसि- சொல்லிக்கொள்வீர்.

37-38, (பொ-ரை) இவ்வண்ணம், துக்கத்தினால் தபித்துக்கொண்டு, அடிக்கடி அழுதுகொண்டும், சிலஸமயம் மூர்ச்சையடைந்தும், கீழேவிழுந்து புரண்டுகொண்டும், ராமனை விட்டுப்பிரியுங்காலம் ஏற்பட்டுவிட்டதேயென்று மனதில் நினைத்துக்கொண்டு, அந்த சோகத்தில் முழுகியும், இந்த துக்கஸாகரத்தை எப்பொழுது தாண்டுவேனென்று அடிக்கடி வேண்டிக்கொண்டும், இருக்கிற மஹாராஜனைப் பார்த்து மிகவும் க்ரூரஸ்வபாவமுள்ள கைகேயி, ராமனுடைய பட்டாபிஷேகத்தை நிறுத்துவதற்கு எவ்வளவு சொல்லவேண்டுமோ அது முழுமையும் மிகக்கொடுஞ்சொல்லால் சொன்னாள்.

39. (பொ-ரை) பராக்ரமசாலியான மஹாராஜனே, எனக்கு இரண்டு வரங்களைக் கொடுத்துவிட்டு, மறுபடி அதைக்குறித்து பச்சாத்தாபமடைந்தீரேயானால், இவ்வுலகில் நீர் தர்மிஷ்டனென்பதை எவ்விதம் சொல்லிக்கொள்ளுவீர்.

यदा समेता बहवस्त्वया राजर्षयः सह ।
कथयिष्यन्ति धर्मज्ञ तत्र किं प्रतिवक्ष्यसि ॥ 40 ॥
यस्याः प्रसादे जीवामि या च मामभ्यपालयत् ।
तस्याः कृतं मया मिथ्या कैकेय्या इति वक्ष्यसि ॥ 41 ॥
किल्बिषत्वं नरेन्द्राणां करिष्यसि नराधिप ।
यो दत्वा वरमद्यैव पुनरन्यानि भाषसे ॥ 42 ॥

40. (ப-ரை) हे धर्मज्ञ- தர்மங்கள் தெரிந்தவரே! यदा- எப்பொழுது, त्वया सह- உம்முடன்கூட, बहवः राजर्षयः- அநேக ராஜரிஷிகள், समेताः- ஒன்றுசேர்ந்து, कथयिष्यन्ति- (அஸுர யுத்தகாலத்தில் உமக்கு உபகாரம் பண்ணின கைகேயிக்கு நீர் என்ன ப்ரத்யுபகாரம் செய்தீரென்று) கேட்பார்களோ, तत्र- அப்பொழுது, किं प्रतिवक्ष्यसि- என்ன பதில் சொல்லப்போகிறீர்.

41. (ப-ரை) यस्याः- யாதொரு கைகேயியினுடைய, प्रसादे- அநுக்ரஹத்தில், जीवामि- ஜீவித்திருக்கிறேனோ, याच- யாதொருவளுடைய, मां- (மூர்ச்சையடைந்த) என்னை, अभ्यपालयत्- நன்றாகக் காப்பாற்றினாளோ, तस्याः- அவளுக்கு, मया- என்னாலே, मिथ्या- அஸத்யமானது, कृतं- செய்யப்பட்டது, इति- என்று, वक्ष्यसि- சொல்லப்போகிறீர்.

42. (ப-ரை) हे नराधिप- அரசனே, यः- யாதொரு நீர், वरं- வரத்தை, दत्वा- கொடுத்து, अद्य- இப்பொழுது, पुनः- மறுபடியும், अन्यानि- வேறு வார்த்தைகளை, भाषसे- சொல்லுகிறீரோ, (सः- அந்த நீர்), नरेन्द्राणां- (எல்லா) அரசர்களுக்கும், किल्बिषत्वं- அபகீர்த்தியாகிற தோஷத்தை, करिष्यसि- செய்யப்போகிறீர்.

40. (பொ-ரை) தர்மங்களை நன்றாயறிந்தவரே உலகத்தில் இருக்கிற அநேக ராஜரிஷிகள், உம்முடன், ஒன்று சேர்ந்தஸமயத்தில் "தேவாஸுர யுத்தத்தில் உமக்கு பரம உபகாரம் செய்த கைகேயிக்கு நீர் ப்ரத்யுபகாரம் ஏதாவது செய்தீரா" வென்று கேட்டால் அதற்கு நீர் என்ன பதில் சொல்லப்போகிறீர்—

41. (பொ-ரை) எவளுடைய அநுக்ரஹத்தினால் நான் ஜீவித்திருக்கிறேனோ எவள் அந்த தேவாஸுர யுத்தத்தில், மூர்ச்சையடைந்த என்னை சிகித்ஸை முதலிய பணிவிடைகளைச் செய்து காப்பாற்றினாளோ அவள் விஷயத்தில் நான் பொய் சொல்லிவிட்டேனென்று சொல்லுவீரா?

42. (பொ-ரை) மஹாராஜனே! எனக்கு வரங்கொடுத்துவிட்டு, இப்பொழுதே மறுபடி அதற்கு விரோதமாகப் பேசுகிறீரே, அதைக்கேட்டால் உலகத்திலிருக்கிற அரசர்களெல்லாருமே இப்படி பொய்பேசுகிறவர்களென்று ஜனங்கள் எல்லோரும் சொல்லுவார்களே!

शैब्यः श्येनकपोतीये स्वमांसं पक्षिणे ददौ ।
अलर्कश्चक्षुषी दत्वा जगाम गतिमुत्तमाम् ॥ 43 ॥

सागरः समयं कृत्वा न वेलामतिवर्तते ।
समयं माऽनृतं कार्षीः पूर्ववृत्तमनुस्मरन् ॥ 44 ॥

स त्वं धर्मं परित्यज्य रामं राज्येऽभिषिच्य च ।
सह कौसल्यया नित्यं रन्तुमिच्छसि दुर्मते ॥ 45 ॥

43-44. (ப-ரை) श्येनकपोतीये- கழுகுக்கும் மாடப்புறாவுக்கும் விரோதமேற்பட்ட காலத்தில், शैब्यः- சைப்யனென்கிற அரசன், पक्षिणे- கழுகின் பொருட்டு, स्वमांसम्- தன்னுடைய மாம்ஸத்தை, ददौ- கொடுத்தார், अलर्कः- அலர்க்கனென்கிற அரசன், चक्षुषी- (தன்னுடைய) கண்களை, दत्वा- கொடுத்து, उत्तमांगतिम्- உயர்ந்த கதியை, जगाम- அடைந்தார், सागरः- ஸமுத்திரமானது, समयं- ப்ரதிஜ்ஞையை, कृत्वा- செய்துவிட்டு, वेलां- கரையை, न अतिवर्तते- தாண்டுகிறதில்லை, त्वं- நீரும், पूर्ववृत्तं- முன்னோர்களின் ஆசாரத்தை, अनुस्मरन्- நினைத்துக்கொண்டு, समयं- உமதுடைய ப்ரதிஜ்ஞையை, अनृतं- பொய்யாக, मा कार्षीः- செய்யாதேயும்.

45. (ப-ரை) हे दुर्मते- துர்புத்தியுடையவரே! सः- அப்பேர்ப்பட்ட, त्वं- நீர், धर्मं- தர்மத்தை, परित्यज्य- விட்டு, रामं- ராமனை, राज्ये- ராஜ்யத்தில், अभिषिच्य च- பட்டாபிஷேகம் செய்தும், कौसल्यया सह- கௌஸல்யையோடு கூட, नित्यं- எப்பொழுதும், रन्तुं- ஆனந்தமாக அனுபவிப்பதற்கு, इच्छसि- விரும்புகிறீர்.

43-44. (பொ-ரை) [illegible] கழுகுக்கு [illegible] கொடுத்து [illegible] அலர்க்கமஹாராஜனும் [illegible] ப்ரதிஜ்ஞை [illegible] உத்தமமான கதியை [illegible] ப்ரதிஜ்ஞை [illegible] ஆகையால் [illegible] முன்னோர்களின் ஆசாரத்தை [illegible] முன் [illegible] யை பொய்யாக்காதேயும் —

45. (பொ-ரை) [illegible] ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் [illegible] கௌஸல்யையோடுகூட [illegible]

भवत्वधर्मो धर्मो वा सत्यं वा यदि वाऽनृतम् ।
यत्त्वया संश्रुतं मह्यं तस्य नास्ति व्यतिक्रमः ॥ 46 ॥

अहं हि विषमद्यैव पीत्वा बहु तवाग्रतः ।
पश्यतस्ते मरिष्यामि रामो यद्यभिषिच्यते ॥ 47 ॥

एकाहमपि पश्येयं यद्यहं राममातरम् ।
अञ्जलिं प्रतिगृह्णन्तीं श्रेयो ननु मृतिर्मम ॥ 48 ॥

46. (ப-ரை) अधर्मः- அதர்மமாகவாவது, भवतु- ஆகட்டும், धर्मो वा- தர்மமாகவாவது, (ஆகட்டும்), सत्यं वा- ஸத்யமாகவாவது. (ஆகட்டும்), यदि वा- அல்லது, अनृतं वा- பொய்யாகவாவது ஆகட்டும், त्वया- உம்மாலே, मह्यं- எனக்காக, यत्- யாதொன்று, संश्रुतं- ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டதோ, तस्य- அதற்கு, व्यतिक्रमः- மாறுதல், नास्ति- இல்லை.

47. (ப-ரை) रामः- ராமன், अभिषिच्यते यदि- பட்டாபிஷேகம் செய்யப்படுவானேயானால், अहं हि– நான், अद्यैव- இப்பொழுதே, तव अग्रतः- உம்முடைய முன்னிலையில், बहु- அதிகமான, विषं- விஷத்தை, पीत्वा- குடித்து, ते- நீர், पश्यतः (सतः-) பார்த்துக்கொண்டிருக்கவே, मरिष्यामि- ப்ராணனை விட்டுவிடுவேன்.

48. ((ப-ரை) अहं- நான், अञ्जलिं- ஜனங்கள் கைகூப்புவதை, प्रतिगृह्णन्तीं- பெற்றுக்கொண்டிருக்கிற, राममातरं- ராமன் தாயான கௌஸல்யையை, एकाहमपि- ஒரு நாளாவது, पश्येयं यदि- பார்ப்பேனேயானால், (அதைவிட), मम– எனக்கு, मृतिः- மரணமே, श्रेयो ननु- விசேஷமன்றோ! (ச்ரேயஸ்ஸன்றோ.)

46. (பொ—ரை) ராமனைநாட்டிற்கு அனுப்பி பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்வேனென்று நான் சொன்னது தர்மமாகவாவது இருக்கட்டும், அதர்மமாகவாவது இருக்கட்டும், நல்லதாகவாவது இருக்கட்டும் அல்லது கெடுதலாகவாவது இருக்கட்டும். நீர் எனக்கு ப்ரதிக்ஞை பண்ணியதை ஒருக்காலும் மாற்ற முடியாது.

47. (பொ—ரை) நீர் ப்ரதிக்ஞை செய்தப்ரகாரம் நான் கேட்டபடி எனக்கு வரன்களை கொடுக்காமல் உமயிஷ்டப்படி ராமனுக்கு பட்டாபிஷேகம் செய்வீரேயானால், நான் இப்பொழுதே உமமுடைய முன்னிலையில் அதிகமாக விஷத்தைக்குடித்து நீர் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே என் ப்ராணனை விட்டுவிடுவேன்—

48 (பொ—ரை) ராஜமாதா என்று எல்லாஜனங்களும், கௌஸல்யையை கைகூப்பி வணங்குவதை ஒரு நாளாவது நான் பார்ப்பதைக்காட்டிலும், நான் ப்ராணனை விடுவதே எனக்கு மேலானதன்றோ!

तां हि वज्रसमां वाचमाकर्ण्य हृदयाप्रियाम् ।
दुःखशोकमयीं घोरां राजा न सुखितोऽभवत् ॥ 53 ॥

स देव्या व्यवसायं च घोरं च शपथं कृतम् ।
ध्यात्वा रामेति निश्वस्य छिन्नस्तरुरिवापतत् ॥ 54 ॥

கொண்டு, कैकेयीं- கைகேயியைப்பார்த்து, न अभ्यभाषत- (ஒரு வார்த்தையும்) சொல்லவில்லை, प्रियां- (தனக்கு) ப்ரியமாயும், अप्रियवादिनीम्- அப்ரியமாக சொல்லுபவளுமான, देवीं- தேவியை, अनिमिषः- கண்கொட்டாதவராய்க்கொண்டு, प्रेक्षत- பார்த்துக்கொண்டிருந்தார்.

53, (ப-ரை) राजा- அரசன், वज्रसमां- இடிக்கு ஸமானமானதும், हृदयाप्रियां- மனதிற்கு ப்ரியமில்லாததும், दुःखशोकमयीं- துக்கரூபமாயும், சோகரூபமாயும், घोरां- பயங்கரமுமான, तां वाचं- அந்த வார்த்தையை, आकर्ण्य- கேட்டு, न सुखितः- ஸுகமில்லாதவராக, अभवत्- ஆனார்.

54. (ப-ரை) सः- அந்த அரசன், देव्याः- கைகேயியுடைய, व्यवसायं च- நிச்சயத்தையும், कृतं- தான் செய்த, घोरं- பயங்கரமான, शपथं- ஆணையையும், ध्यात्वा- நினைத்துக்கொண்டே, राम इति- ஆ ராமா என்று, निश्वस्य- பெருமூச்சுவிட்டுக்கொண்டு, छिन्नः- வெட்டப்பட்ட, तरुः इव- மரம்போல், अपतत्- தரையில் விழுந்துவிட்டார்.

மல் தனக்கு மிகவும் ப்ரியமுள்ளவளாக இருந்தும் அப்ரியமான வார்த்தைகளைச் சொல்லுகிறாளென்று கோபத்துடன் கண்கொட்டாமல் கைகேயியைப்பார்த்தார்.

53. (பொ-ரை) இடி விழுந்தது போல் மனதிற்கு ப்ரியமல்லாததும், அநுசிதமாக பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவேண்டுமென்பதால் துக்கரூபமாயும், ராமனைக்காட்டிற்குத் துரத்தவேண்டுமென்பதால் சோகரூபமாயும், பயங்கரமுமான அந்த கைகேயியின் வார்த்தையைக்கேட்டு, ராஜா ஸந்தோஷத்தை அடையவில்லை.

54. (பொ-ரை) அரசன், தேவியாகிய கைகேயியின் கொடுமையான பிடிவாதத்தையும், "பரதன்மேல் ஆணை, என்னுடைய ஸுக்ருதத்தின்மேல் ஆணை" என்று தான் செய்திருந்த பயங்கரமான சபதத்தையும், நினைத்து நினைத்து, ஹா ராமா என்று பெருமூச்செறிந்துகொண்டு, வெட்டப்பட்ட மரம்போல், பூமியில் விழுந்துவிட்டார்.

कुतो वा ते भयं जातं या त्वमेवंविधं वरम् ॥ 59 ॥

राष्ट्रे भरतमासीनं वृणीषे राघवं वने ।
विरमैतेन भावेन त्वमेतेनानृतेन वा ॥
यदि भर्तुः प्रियं कार्यं लोकस्य भरतस्य च ॥ 60 ॥

नृशंसे पापसंकल्पे क्षुद्रे दुष्कृतकारिणि ।
किं नु दुःखमलीकं वा मयि रामे च पश्यसि ॥ 61 ॥

59-60. (ப-ரை) कुतो वा- யாரிடத்திலிருந்து, ते- உனக்கு, भयं- பயமானது, जातं- உண்டாயிருக்கிறது, या त्वं- யாதொருநீ, एवं विधं- இப்படிப்பட்டிருக்கிற, वरम्- வரத்தை, वृणीषे- வேண்டுகிறாய், भरतं- பரதனை, राष्ट्रे- ராஜ்யத்தில், आसीनं- இருக்கிறவனாகவும், राघवं- ராமனை, वने- வனத்தில், (आसीनं- இருக்கிறவனாகவும்), वृणीषे- வரிக்கிறாய், भर्तुः- பர்த்தாவுக்கும், लोकस्य- உலகத்திற்கும், भरतस्य- பரதனுக்கும், प्रियं- ப்ரியமானது, कार्यं यदि- செய்யத்தகுந்ததேயானால், एतेन- இந்த, भावेन- (பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவேண்டுமென்கிற) எண்ணத்தினாலும், एतेन- இந்த, अनृतेन- (ராமனைக் காட்டிற்கு அனுப்பவேண்டுமென்கிற) பாபத்தினாலும், त्वं- நீ, विरम- ஒழிந்துவிடு.

61. (ப-ரை) नृशंसे- கொடியவளே! पापसंकल्पे- கெட்ட எண்ணமுள்ளவளே! क्षुद्रे- அல்ப புத்தியுள்ளவளே! दुष्कृतकारिणि- பாபத்தைச் செய்தவளே! मयि- என்னிடத்திலேயும், रामे च- ராமனிடத்திலேயும், किं नु दुःखं- என்ன துக்கத்தையாவது, अलीकं वा- அப்ரியத்தையாவது, पश्यसि- பார்க்கிறாய்.

59-60. (பொ-ரை) பரதனை ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் பண்ணவேண்டுமென்றும், ராமனைக்காட்டிற்கு அனுப்பவேண்டுமென்றும், இவ்விதமான வரங்களை வேண்டுகிறாயே அப்படி உனக்கு என்ன பயம் யாரால் ஏற்பட்டது. பர்த்தாவுக்கும், உலகத்திற்கும், பரதனுக்கும் ப்ரியம் செய்யவேண்டுமென்று உனக்கு எண்ணம் இருக்குமேயானால், பரதனுக்குப் பட்டாபிஷேகம் பண்ணவேண்டுமென்றும், ராமனைக்காட்டிற்குத் துரத்தவேண்டுமென்றும் இந்த இரண்டு எண்ணங்களையும் விட்டு ஒழித்துவிடு.

61. (பொ-ரை) கொடியவளே! [illegible] எண்ணமுள்ளவளே! ராமனைக்காட்டிற்குத் துரத்தவேண்டுமென்கிற கெட்ட எண்ணமுள்ளவளே! அல்பமான புத்தியுள்ளவளே! ஜந்மாந்திரத்தில் பாபங்களைச் செய்தவளே! ராமனிடத்திலோ, என்னிடத்திலோ [illegible] கஷ்டத்தையாவது, வெறுப்பையாவது அப்ரியத்தையாவது பார்க்கிறாய்?

किं मां वक्ष्यन्ति राजानो नानादिग्भ्यः समागताः ।
बालो बतायमैक्ष्वाकश्चिरं राज्यमकारयत् ॥ 65 ॥
यदा तु बहवो वृद्धा गुणवन्तो बहुश्रुताः ।
परिप्रक्ष्यन्ति काकुत्स्थं वक्ष्यामि किमहं तदा ॥ 66 ॥
कैकेय्या क्लिश्यमानेन रामः प्रव्राजितो मया ।
यदि सत्यं ब्रवीम्येतत्तदसत्यं भविष्यति ॥ 67 ॥

---

65. (ப-ரை) बालः- மூடனான, अयं- இந்த, ऐक्ष्वाकः- இக்ஷ்வாகுகுலத்தில் பிறந்த (தசரதன்), किं- எப்படி, चिरं- வெகுகாலமாக, राज्यं- ராஜ்யத்தை, अकारयत्- செய்துவந்தார், इति- என்று, नानादिग्भ्यः- நானாதிக்குகளிலிருந்து, समागताः- வந்திருக்கிற, राजानः- அரசர்கள், मां- என்னை, वक्ष्यन्ति- சொல்லுவார்களே, बत- கஷ்டம்!

66. (ப-ரை) गुणवन्तः- குணமுள்ளவர்களாயும், बहुश्रुताः- அநேகசாஸ்திரம் தெரிந்தவர்களுமான, बहवः वृद्धाः- அநேகம் பெரியோர்கள், यदातु- எப்பொழுது, काकुत्स्थं- ராமனை, परिप्रक्ष्यन्ति- கேட்பார்களோ, तदा- அப்பொழுது, अहं- நான், किं वक्ष्यामि- என்ன சொல்லுவேன்.

67. (ப-ரை) कैकेय्या- கைகேயியினால், क्लिश्यमानेन- பீடிக்கப்படுகிற, मया- என்னால், रामः- ராமன், प्रव्राजितः- (வனத்திற்கு) துரத்தப்பட்டான், इति- என்று, एतत् सत्यं- இந்த உண்மையை, ब्रवीमियदि- சொல்லுவேனேயானால், तत्- அந்த நேற்று சொன்ன, வார்த்தையானது, असत्यं भविष्यति- பொய்யாக ஆகிவிடும்.

65. (பொ-ரை) மூடனான "இந்த இக்ஷ்வாகு குலத்தில் பிறந்த தசரதன் எவ்விதம் நெடுநாள் ராஜ்யத்தை ஆண்டுவந்தான்" என்று நானாதேசத்திலிருந்துவந்த அரசர்கள் என்னைச்சொல்லுவார்களே. ஐயோ! கஷ்டம்.
66 (பொ-ரை) நல்ல குணமுள்ளவர்களும், வெகு சாஸ்திரங்களை தெரிந்தவர்களுமான, அநேக பெரியோர்கள் நாளையதினம் காலையில் வந்து "ராமன் எங்கே போனான், பட்டாபிஷேகம் ஏன் நடக்கவில்லை" என்று கேட்பார்களேயானால் அவர்களுக்கு நான் என்ன பதில் சொல்லுவேன்.
67. (பொ-ரை) கைகேயிக்கு நான் ஆதிகாலத்தில் இரண்டு வரங்களை கொடுத்தேன். அவைகளில் ஒரு வரத்தினால் ராமனைக்காட்டிற்கு அனுப்புவேனென்றும், மற்றொரு வரத்தினால் பரதனுக்குப்பட்டாபிஷேகம் செய்யவேணுமென்றும், கைகேயி இப்பொழுது நிர்ப்பந்தித்துக்கேட்கிறபடியால், அந்த நிர்ப்பந்தம் பொறுக்கமாட்டாமல், ராமனைக்காட்டிற்குத் துரத்திவிட்டேனென்று உண்மையைச்சொன்னால், வசிஷ்டர், வாமதேவர் முதலாகிய பிராமணர்கள் முன்னிலையில் "நாளையதினம் ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்யப்போகிறேன்" என்று நான் நேற்றையதினம் சொன்ன வார்த்தையானது பொய்யாகிவிடுமே.

इदानीं तत्तपति मां यन्मया सुकृतं त्वयि ।
अपथ्यव्यञ्जनोपेतं भुक्तमन्नमिवातुरम् ॥ 71 ॥

विप्रकारं च रामस्य संप्रयाणं वनस्य च ।
सुमित्रा प्रेक्ष्य वै भीना कथं मे विश्वसिष्यति ॥ 72 ॥

कृपणं बत वैदेही श्रोष्यति द्वयमप्रियम् ।
मां च पञ्चत्वमापन्नं रामं च वनमाश्रितम् ॥ 73 ॥

---

71. (ப-ரை) अपथ्यव्यञ्जनोपेत- அபத்தியமான வ்யஞ்ஜனங்களோடு கூடிய, भुक्तं- புஜிக்கப்பட்ட, अन्नं- அன்னமானது, आतुरमिव- வ்யாதிக்காரனை, (பீடிப்பது போல்) त्वयि- உன்விஷயத்தில், मया- என்னாலே, यत् सुकृतं- எந்த நல்லகார்யமானது செய்யப்பட்டதோ, तत्- அது, इदानीं- இப்பொழுது, मां- என்னை, तपति- பீடிக்கிறது.

72. (ப-ரை) रामस्य- ராமனுக்கு, विप्रकारं च- பட்டாபிஷேக விரோதத்தையும், वनस्य- வனத்திற்கு, संप्रयाणं च- போவதையும், सुमित्रा- ஸுமித்ரையானவள், प्रेक्ष्य- பார்த்து, भीता सति- பயந்தவளாய்க்கொண்டு, मे- என் விஷயத்தில், कथं विश्वसिष्यति- எப்படி நம்பிக்கையுள்ளவளாயிருப்பாள்.

73. (ப-ரை) पञ्चत्वं- மரணத்தை, आपन्नं- அடைந்திருக்கிற, मां च- என்னையும், वनं- வனத்தை, आश्रितं- அடைந்திருக்கிற, रामं च- ராமனையும், अप्रियं द्वयं- இந்த அநிஷ்டமான இரண்டையும், वैदेही- ஸீதையானவள், श्रोष्यति- கேட்பாளே, तत्-அது, कृपणं बत-மிகவும் கஷ்டம்.

71. (பொ-ரை) அபத்தியமான காய்கறிகளோடு புஜிக்க அன்னமானது, வ்யாதிக்காரனை வருத்தப்படுத்துவதுபோல் உன் விஷயத்தில் நான்செய்த நன்மையானது இப்பொழுது என்னை வருத்தப்படுத்துகிறது.

72. (பொ-ரை) ராமனுக்கு பட்டாபிஷேகமென்று நிச்சயித்திருந்தது நின்றுபோய்விட்டதையும், வனவாஸம் செய்யும்படி நேர்ந்ததையும், ஸுமித்ராதேவி பார்த்து பயந்துகொண்டு ஸர்வலோகங்களுக்கும் ஆநந்தகரனான ராமனை காட்டிற்கு துரத்தின தசரதன் எந்த அக்ரமம் செய்யத்தான் துணியமாட்டான் என்று எண்ணுவளே ஒழிய, என்னை நல்லவனென்று ஒருக்காலும் நம்பவே மாட்டாள்.

73. (பொ-ரை) ராமனை நான் காட்டுக்கு அனுப்பியதும் அதனால் நான் மரணத்தை அடைவதுமான இந்த இரண்டு அநிஷ்டங்களையும ஸீதை கேட்பாளே இது மிகவும் கஷ்டமன்றோ:—

वैदेही बत मे प्राणाञ्छोचन्ती क्षपयिष्यति ।
हीना हिमवतः पार्श्वे किन्नरेणेव किन्नरी ॥ 74 ॥

न हि राममहं दृष्ट्वा प्रवसन्तं महावने ।
चिरं जीवितुमाशंसे रुदन्तीं चापि मैथिलीम् ॥ 75 ॥

सा नूनं विधवा राज्यं सपुत्रा कारयिष्यसि ।
न हि प्रव्राजिते रामे देवि जीवितुमुत्सहे ॥ 76 ॥

74. (ப-ரை) हिमवतः- இமயமலையினுடைய, पार्श्वे பக்கத்தில், किन्नरेण- (தன்னுடைய நாயகனான) கின்னரனால், हीना- விட்டுப்பிரிந்த, किन्नरी इव- கின்னரஸ்த்ரீபோல், वैदेही- ஸீதையானவள், मे- எனக்காக, शोचन्ती सती- துக்கப்பட்டுக்கொண்டு, प्राणान्- தன்னுடைய ப்ராணன்களை, क्षपयिष्यति- அழித்துவிடப்போகிறாள்.

75. (ப-ரை) महावने- பெரிய அரண்யத்தில், प्रवसन्तं- வஸித்துக்கொண்டிருக்கிற, रामं- ராமனையும், रुदन्तीं- அழுதுகொண்டிருக்கிற, मैथिलीं चापि- ஸீதையையும், दृष्ट्वा- பார்த்து, अहं- நான், चिरं- வெகுகாலம், जीवितुं- உயிருடனிருப்பதற்கு, न आशंसे- வேண்டமாட்டேன்.

76. (ப-ரை) सा- அப்படிப்பட்ட நீ, विधवा सती- விதவையாயிருந்துகொண்டு, सपुत्रा- புத்திரனோடுகூடியவளாய், राज्यं- ராஜ்யத்தை, कारयिष्यसि- செய்விக்கப்போகிறாய், देवि- ஹே தேவியே, हि- ஏனென்றால், रामे- ராமன், प्रव्राजिते सति- வனம்போனவளவில், जीवितुं- உயிருடனிருப்பதற்கு, न उत्सहे- (நான்) சக்தனன்று.

---

74. (பொ-ரை) இமயமலையின் பக்கத்தில் வஸித்துக்கொண்டிருந்த ஒரு கின்னரஸ்த்ரீயானவள், தன் புருஷனான கின்னரனை விட்டுப்பிரிந்து துக்கத்துடன் ப்ராணனை விடுவதுபோல், ஸீதையும் ராமனுக்காகவும் எனக்காகவும் துக்கித்துக் கொண்டு ப்ராணனை விடப்போகிறாள்.

75. (பொ-ரை) ராமன் காட்டிலே வஸிப்பதையும் அவனை விட்டுப்பிரிந்து நகரத்தில் ஸீதை அழுதுகொண்டிருப்பதையும் பார்த்து, எனக்கு நெடுநாள் உயிருடன் இருக்கவேண்டுமென்று ஆசையே உண்டாகமாட்டாது.

76. (பொ-ரை) இவ்விதம் கொடியவளான நீ, விதவையாயிருந்துகொண்டு உன் புத்திரனுடன் ராஜ்யத்தைச் செலுத்தப்போகிறாய். ஏனென்றால், ராமன் காட்டிற்குப்போய்விட்டால் அவனைப்பிரிந்து உயிருடன் இருக்க என்னால் முடியாது.

सतीं त्वामहमत्यन्तं व्यवस्याम्यसतीं सतीम् ।
रूपिणीं विषसंयुक्तां पीत्वेव मदिरां नरः ॥ 77 ॥

अनृतैर्बहु मां सान्त्वैः सान्त्वयन्ती स्म भाषसे ।
गीतशब्देन संरुध्य लुब्धो मृगमिवावधीः ॥ 78 ॥

अनार्य इति मामार्याः पुत्रविक्रायिकं ध्रुवम् ।
धिक्करिष्यन्ति रथ्यासु सुरापं ब्राह्मणं यथा ॥ 79 ॥

77. (ப-ரை) नरः- மனிதன், रूपिणी- பார்ப்பதற்கு அழகான ரூபம், विषसंयुक्तां- விஷத்துடன் கலந்ததுமான, मदिरां- மத்யத்தை, पीत्वा इव- குடித்து (பிறகு அது விஷம்கலந்ததென்று அறிவதுபோல்), सतीम्- பார்ப்பதற்கு ஸாதுவாயிருக்கிற, त्वां- உன்னை, अत्यन्तं- மிகவும், असती सती- கெட்டவளாயிருப்பதாக, अहं- நான். व्यवस्यामि- நிச்சயிக்கிறேன்.

78. (ப-ரை) अनृतैः- பொய்யான, सान्त्वैः- இனிய பேச்சுக்களால், मां- என்னை, बहु- வெகுவாய், सान्त्वयन्ती- ஸமாதானம் செய்துகொண்டு, भाषसे स्म- பேசுகிறாய், लुब्धः- வேடன், गीतशब्देन- கானசப்தத்தினால், मृग- மானை, संरुध्य इव- பிடித்துக்கொண்டு (கொல்லுவதுபோல்), अवधीः- (நீ என்னைக்) கொன்றுவிட்டாய்.

79. (ப-ரை) आर्याः- பெரியோர்கள், पुत्रविक्रायिकं- புத்திரனை விற்கிறவனை, मां- என்னை, अनार्य इति- பாபியென்று, सुरापं- கள்ளுக்குடிக்கும், ब्राह्मणं यथा- ப்ராமணனைப்போல், रथ्यासु- தெருக்களில், धिक्करिष्यन्ति- நிந்திப்பார்கள், ध्रुवम्- நிச்சயம்.

77. (பொ-ரை) பார்ப்பதற்கு அழகாய், விஷத்துடன் கலந்தும் இருக்கிற மத்யத்தை மனிதன் முதலில் சாப்பிட்டுவிட்டு, பிறகு, அதினுடைய செய்கையால் விஷம் கலந்ததென்று நிச்சயிப்பதுபோல், பார்ப்பதற்கு ஸாதுவாக இருக்கிற உன்னை, பிறகு இப்படிப்பட்ட கெட்ட எண்ணத்தினால், துஷ்டையாக நான் நிச்சயிக்கிறேன்.

78. (பொ-ரை) கபடமாக, இனிய பேச்சுகளைப் பேசி எனக்கு ஸமாதான வார்த்தைகளைச்சொல்லுகிறாய். வேடன் பாட்டுப்பாடி, அந்த சப்தத்தினால் மானைப் பிடித்து கொல்லுவதுபோல், நீ என்னைக்கொன்றுவிட்டாய்.

79. (பொ-ரை) கைகேயியினிடம் ஸம்பந்தமான ஸுகத்தை அநுபவிப்பதற்காக புத்திரனை விற்கிற என்னை கள்ளுக்குடிக்கும் ப்ராமணனை நிந்திப்பதுபோல், பெரியோர்கள் எல்லோரும் தெருக்களில் அயோக்யனென்று நிந்திப்பார்கள்.

राघवे हि वनं प्राप्ते सर्वलोकस्य धिक्कृतम् ।
मृत्युरक्षमणीयं मां नयिष्यति यमक्षयम् ॥ 89 ॥

मृते मयि गते रामे वनं मनुजपुङ्गवे ।
इष्टे मम जने शेषे किं पापं प्रतिपत्स्यसे ॥ 90 ॥

कौसल्यां मां च रामं च पुत्रौ च यदि हास्यति ।
दुःखान्यसहती देवी मामेवानुमरिष्यति ॥ 91 ॥

---

89. (ப—ரை) राघवे- ராகவன், वनं प्राप्ते हि- வனத்தை அடைந்தவளவில், सर्वलोकस्य— ஸமஸ்த ஜனத்தினுடைய, धिक्कृतं- நிந்தையை, अक्षमणीयं- பொறுக்கமுடியாதவனை, मां- என்னை, मृत्युः- ம்ருத்யுவானவன், यमक्षयं- யமலோகத்தை, नयिष्यति- கொண்டுபோகப்போகிறான்.

90. (ப-ரை) मयि- நான், मृते- மரித்தவளவில், मनुजपुङ्गवे- புருஷோத்தமனை, रामे- ராமன், वनं- காட்டை, गते सति- அடைந்த வளவில், इष्टे- உனக்கு ப்ரியமான, शेषे- மீதியான, ममजने- கௌஸல்யை முதலான என்னுடைய ஜனத்தினிடத்தில், किं पापं- என்ன துக்கத்தை, प्रतिपत्स्यसे- செய்ய ஆலோசிக்கப்போகிறாயோ!

91. (ப—ரை) देवी- ஸுமித்ராதேவியானவள், कौसल्यां- கௌஸல்யையையும், मां च- என்னையும், रामं च- ராமனையும், पुत्रौ च- புத்ரர்களான லக்ஷ்மண சத்ருக்னர்களையும், हास्यति यदि- விட்டுப்பிரிந்தாளேயானால், दुःखानि- துக்கங்களை, असहती सति- பொறுக்காதவளாய்க்கொண்டு, मामेव- என்னையே, अनुमरिष्यति- அநுமரணம் செய்யப்போகிறாள்.

89. (பொ-ரை) ராமன் காட்டுக்குப்போனால், ஸர்வஜனங்களும் என்னை சீ! சீ! என்று நிந்திப்பார்கள், அந்த நிந்தையை பொறுக்கமாட்டாமல் நான் யமலோகத்தை அடையப்போகிறேன்.

90. (பொ-ரை) புருஷோத்தமனை ராமனும், காட்டுக்குப்போய், அந்த துக்கத்தினால் நானும் மரணத்தை அடைந்தபிறகு, மற்றவர்களான கௌஸல்யை முதலான என்னைச்சேர்ந்தவர்களிடத்தில் இன்னும் என்ன அநிஷ்டத்தைச்செய்ய வேணுமென்று நீ ஆலோசிக்கப்போகிறாய்.

91. (பொ-ரை) நானும் மரணத்தையடைந்து, கௌஸல்யையும் மரணத்தையடைந்து, ராமனும் காட்டுக்குப்போய், ராமனுடன் லக்ஷ்மணன் சென்று, பரதனுடன் சத்ருக்னனும் சென்றிருக்கிறபடியால் இவர்களெல்லாரையும், பிரிந்து துக்கம்பொறுக்கமாட்டாமல், ஸுமித்ராதேவியும் என்னுடன் அனுமரணம் செய்யப்போகிறாள்.

कौसल्यां च सुमित्रां च मां च पुत्रैस्त्रिभिः सह ।
प्रक्षिप्य नरके सा त्वं कैकेयि सुखिता भव ॥ 92 ॥

मया रामेण च त्यक्तं शाश्वतं सत्कृतं गुणैः ।
इक्ष्वाकुकुलमक्षोभ्यमाकुलं पालयिष्यमि ॥ 93 ॥

प्रियं चेद्भरतस्यैतद्रामप्रव्राजनं भवेत् ।
मा स्म मे भरतः कार्षीत्प्रेतकृत्यं गतायुषः ॥ 94 ॥

---

92. (ப-ரை) कैकेयि- கைகேயியே! सा त्वं- அப்படிப்பட்ட நீ, कौसल्यां च- கௌஸல்யையையும், सुमित्रां च- ஸுமித்ரையையும், मां च- என்னையும், त्रिभिः पुत्रैः सह- மூன்று பிள்ளைகளோடு, नरके- துக்கத்தில், प्रक्षिप्य— தள்ளிவிட்டு, सुखिता— ஸுகமுள்ளவளாக, भव- இரு.

93. (ப-ரை) मया- என்னாலும், रामेण च- ராமனாலும், त्यक्त- விடப்பட்டும், शाश्वतं- சாச்வதமாயும், गुणैः- குணங்களால், सत्कृतं- கௌரவம் செய்யப்பட்டதாயும், अक्षोभ्य- கலக்கமுடியாததுமான, इक्ष्वाकुकुल- இக்ஷ்வாகு வம்சத்தை, आकुलं- (यथा तथा) கலக்கமுள்ளதாக, पालयिष्यमि- (நீ) ஆளப்போகிறாய்.

94. (ப-ரை) एतत्- இந்த राम प्रव्राजनं- ராமன் காட்டுக்குப்போவது, भरतस्य- பரதனுக்கு, प्रियं चेत्- ப்ரியமாயிருக்குமேயானால், गतायुषः- மரணத்தையடைந்திருக்கிற, मे- எனக்கு, प्रेतकृत्यं- உத்தரக்ரியையை, भरतः- பரதன், मा स्म कार्षीत्- செய்யவே வேண்டாம்.

92. (பொ-ரை) ஹே கைகேயீ! கௌஸல்யையையும், ஸுமித்ரையையும், மூன்று பிள்ளைகளோடு என்னையும், துக்கத்தில் தள்ளிவிட்டு துஷ்டையான நீ ஸுகமுள்ளவளாக இரு.

93. (பொ-ரை) நெடுநாளாக, ஒருவிதமான குற்றமுமில்லாமல் எல்லா குணங்களும் நிறைந்து பெருமையடைந்து ஒருவராலும் கலக்கமுடியாததுமான, இந்த இக்ஷ்வாகுவம்சத்தை நானும், ராமனும் இல்லாமல் நீ கலங்கும்படி ஆளப்போகிறாய்.

94. (பொ-ரை) இவ்விதம் ராமன் காட்டுக்குப்போவது பரதனுக்கு ப்ரியமாயிருக்குமானால் நான் மரணத்தையடைந்திருக்கு, அந்த பரதன் எனக்கு ப்ரேத காரியத்தைச் செய்யவே வேண்டாம்.

हन्ताऽनार्ये ममामित्रे सकामा भव कैकेयि ॥ 95 ॥

मृते मयि गते रामे वनं पुरुषपुङ्गवे ।
सेदानीं विधवा राज्यं सपुत्रा कारयिष्यसि ॥ 96 ॥

त्वं राजपुत्रीवादेन न्यवसो मम वेश्मनि ।
अकीर्तिश्चातुला लोके ध्रुवः परिभवश्च मे ॥
सर्वभूतेषु चावज्ञा यथा पापकृतस्तथा ॥ 97 ॥

---

95. (ப-ரை) हन्त- ஐயோ! कैकेयि- கைகேயியே, मम- எனக்கு, अमित्रे- சத்ருவானவளே! सकामा- எண்ணம் நிறைவேறினவளாக, भव- இரு.

95. (ப-ரை) मयि- நான், मृते सति- மரணத்தை அடைந்தவளவில், पुरुषपुङ्गवे- புருஷோத்தமனான, रामे- ராமன், वनं- வனத்தை, गते सति- அடைந்தவளவில், सा- அப்படி கொடியவளான நீ, इदानीं- இப்பொழுது, विधवा- விதவையாயிருந்து, सपुत्रा- புத்ரனோடு கூடினவளாய், राज्य- ராஜ்யத்தை, कारयिष्यसि- செய்யப்போகிறாய்.

97. (ப-ரை) त्वं- நீ, राजपुत्रीवादेन- ராஜபுத்ரியென்று ஜனங்கள் சொல்லும்படியாக, मम- என்னுடைய, वेश्मनि- க்ருஹத்தில், न्यवसः- வஸித்துவந்தாய், (ततः- அதனால் உண்டாகுமோ) लोके- உலகத்தில், अतुला- நிகரற்ற, अकीर्तिश्च- அபகீர்த்தியும், ध्रुवः- ஸ்திரமான, परिभवश्च- அவமானமும், सर्वभूतेषु- ஸர்வ ப்ராணிகளிடத்திலும், अवज्ञा- அல்பனென்கிற எண்ணமும், मम- எனக்கு, यथा- எப்படி, पापकृतः- பாபம்செய்தவனுக்கு உண்டாகுமோ, तथा- அப்படி, मे- எனக்கு (உண்டாகும்).

95. (பொ-ரை) அய்யோ! கைகேயி! எனக்குச்சத்ருவானவளே! உன்னுடைய இஷ்டம் நிறைவேறிவிட்டது.

96. (பொ-ரை) நானும் உயிரிழந்து, புருஷோத்தமனான ராமனும் வனம் போக நீ இப்பொழுது விதவையாய், உன்புத்ரனான பரதனுடன் ராஜ்யத்தை ஆளப்போகிறாய்.

97. (பொ-ரை) நீ ராஜபுத்ரியென்று பேரிட்டுக்கொண்டு என்னுடைய க்ருஹத்தில் வாஸம் பண்ணினபடியால், உலகத்தில் ஒப்பில்லாததான அபகீர்த்தியையும் ஒருநாளும் அழியாத அவமானமும் எல்லாப்ராணிகளும் அல்பனென்று நினைப்பதும, மஹாபாபிக்கு உண்டாவதுபோல் எனக்குமுண்டாகப்போகிறது.

कथं रथैर्विभुर्यात्वा गजाश्वैश्च मुहुर्मुहुः ।
पद्भ्यां रामो महारण्ये वत्सो मे विचरिष्यति ॥ 98 ॥

यस्य त्वाहारसमये सूदाः कुण्डलधारिणः ।
अहंपूर्वाः पचन्ति स्म प्रशस्तं पानभोजनम् ॥ 99 ॥

स कथं नु कषायाणि तिक्तानि कटुकानि च ।
भक्षयन्वन्यमाहारं सुतो मे वर्तयिष्यति ॥ 100 ॥

98. (ப-ரை) विभुः- ப்ரபுவான, मे- என்னுடைய, वत्सः- புத்ரனை, रामः- ராமன், रथैः- தேர்களாலும், गजाश्वैः च- யானைகளாலும், குதிரைகளாலும், मुहुः मुहुः- அடிக்கடி, यात्वा- சென்று, (இனிமேல்) कथं- எப்படி, महारण्ये- பெரிய அரண்யத்தில், पद्भ्यां கால்களால், विचरिष्यति- ஸஞ்சரிக்கப்போகிறான்.

99-100. (ப-ரை) यस्यतु- யாதொரு ராமனுடைய, आहारसमये- போஜனகாலத்தில், सूदाः- சமையல்காரர்கள், कुण्डलधारिणः- குண்டலங்களை தரித்துக்கொண்டு, अहंपूर्वाः- ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக்கொண்டு, प्रशस्तं- சிறந்ததான, पानभोजनम्- பான போஜனங்களை, पचन्तिस्म- சமைத்தார்களோ, सः मे सुतः- அந்த என் புத்ரன், कषायाणि- துவர்ப்புள்ளதுகளும், तिक्तानि- கசப்புள்ளதுகளும் कटुकानि च- காரமுள்ளதுகளுமான பதார்த்தங்களையும், वन्य- காட்டிலுண்டான, आहारं- ஆஹாரத்தை, भक्षयन्- சாப்பிட்டுக்கொண்டு, कथं नु- எப்படி, वर्तयिष्यति- ஜீவிக்கப்போகிறான்.

98. (பொ-ரை) ப்ரபுவான என் குழந்தை ராமன் இதுவரையில், தேர்களிலும், யானைகுதிரைகளிலும், ஏறிச்சென்றுவிட்டு, இப்பொழுது, எப்படி, பெரிய காடுகளில் கால்களால் நடந்து ஸஞ்சரிக்கப்போகிறான்.

99-100. (பொ-ரை) யாதொரு ராமன், ஆஹாரஞ்செய்யுங்காலத்தில் சமையல்காரர்கள், குண்டலம் முதலான அலங்காரங்களை அணிந்துகொண்டு, ஒருவருக்கொருவர் போட்டியுடன் ச்ரேஷ்டமான பானங்களையும் போஜனங்களையும் சமைப்பார்களோ! அந்த என் குழந்தை ராமன் வனத்திலுண்டான கசப்பு, துவர்ப்பு, காரமுமான ஆஹாரங்களை புஜித்துக்கொண்டு எவ்விதம் பிழைக்கிருப்பான்.

महार्हवस्त्रसंवीतो भूत्वा चिरसुखोषितः ।
काषायपरिधानस्तु कथं भूमौ निवत्स्यति ॥ 101 ॥
कस्यैतद्दारुणं वाक्यमेवंविधमचिन्तितम् ।
रामस्यारण्यगमनं भरतस्याभिषेचनम् ॥ 102 ॥
धिगस्तु योषितो नाम शठाः स्वार्थपराः सदा ।
न ब्रवीमि स्त्रियः सर्वा भरतस्यैव मातरम् ॥ 103 ॥

101. (ப-ரை) महार्हवस्त्रसंवीतः- விலையுயர்ந்த வஸ்திரங்களை தரித்துக்கொண்டவனும், चिरसुखोषितः- நெடுங்கால் ஸுகமான படுக்கையிலும் படுத்துக்கொண்டவனுமாக, भूत्वा- இருந்துவிட்டு, काषायपरिधानःतु- காஷாய வஸ்திரமுடையவனாய், भूमौ- தரையில், कथं- எப்படி, निवत्स्यति- வஸிக்கப்போகிறான்.

102. (ப-ரை) रामस्य अरण्यगमनं- ராமன் காட்டுக்குப் போகவேண்டியது என்றும், भरतस्य अभिषेचनम्- பரதனுக்குப்பட்டாபிஷேகம் செய்யவேண்டுமென்றும், एवं विधं- இப்படிப்பட்ட, अचिन्तितम्- நினைக்க முடியாததான, एतत्- இந்த, दारुण वाक्यं- கொடிய வார்த்தை, कस्य- எந்த பாபியினுடையது.

103. (ப-ரை) शठाः- ஒருவருக்கும் தெரியாமலிருந்து கெடுதலைச்செய்யக் கூடியவர்களும், स्वार्थपराः- தன் ப்ரயோஜனத்தை ஸாதித்துக்கொள்ளுவதிலேயே நோக்கமுடையவர்களுமான, योषितः- ஸ்த்ரீகளை, धिगस्तु नाम- நிந்திக்கவேண்டும், सर्वाः स्त्रियः- எல்லா ஸ்த்ரீகளையும், न ब्रवीमि- சொல்லவில்லை, भरतस्य- பரதனுடைய, मातरमेव- தாயான கைகேயியை மாத்திரம் சொல்லுகிறேன்

101. (பொ-ரை) இதுவரை விலையுயர்ந்த வஸ்த்ரங்களை தரித்துக்கொண்டும், நெடுநாள் ஸுகமான படுக்கையில் படுத்துக்கொண்டிருந்தவன், இப்போது காஷாயவஸ்த்ரங்களை தரித்துக் (கொண்டு) வெறுந்தரையில் எவ்விதம் படுத்துக்கொள்ளுவான்.

102. (பொ-ரை) ராமன் காட்டுக்குப் போகவேண்டுமென்றும், பரதனுக்குப்பட்டாபிஷேகம் செய்யவேண்டுமென்றும், இவ்விதமாக, மனதில் நினைப்பதற்கே ப்ரஸக்தியில்லாத இந்த வார்த்தை எந்த பாபி உபதேசித்திருப்பாள்.

103. (பொ-ரை) ஸ்த்ரீகளென்றால், நல்லவள்போலிருந்து கெடுதலைச் செய்யக்கூடியவர்கள். தனக்கு இஷ்டமான கார்யத்தையே ஸாதித்துக்கொள்ளுவதிலே முயர்ச்சியுள்ளவர். அவர்களை எல்லாரும் நிந்திக்கவேண்டியது. ஐயோ! உலகத்தில் இருக்கிற ஸ்த்ரீகளெல்லாரையும் சொல்லவில்லை. பரதன் தாயான கைகேயியைமாத்திரம் சொல்லுகிறேன்.

अनर्थभावेऽर्थपरे नृशंसे ममानुतापाय निविष्टभावे ।
किमप्रियं पश्यसि मन्निमित्तं हितानुकारिण्यथ वापि रामे ॥ 104 ॥
परित्यजेयुः पितरोहि पुत्रान्भार्याः पतींश्चापि कृतानुरागाः ।
कृत्स्नं हि सर्वं कुपितं जगत्स्यादृष्ट्वैव रामं व्यसने निमग्नम् ॥ 105 ॥
अहं पुनर्देवकुमाररूपमलङ्कृतं तं सुतमात्रजन्तम् ।
नन्दामि पश्यन्नपि दर्शनेन भवामि दृष्ट्वा च पुनर्युवेव ॥ 106 ॥

104. (ப-ரை) अनर्थभावे- அனர்த்தகரமான எண்ணமுடையவளே!, अर्थपरे- உன் கார்யத்திலேயே கவனமுள்ளவளே, नृशसे- கொடியவளே, मम- எனக்கு, अनुतापाय- வருத்தத்தையுண்டாக்குவதற்காக, निविष्टभावे- எண்ணம் வைத்திருப்பவளே, मन्निमित्तं- என்மூலமான, किं अप्रिय- என்ன ப்ரதிகூலத்தை, पश्यसि- பார்க்கிறாய், अथवा- அல்லது, हितानुकारिणि- (உலகத்திற்கெல்லாம்) நன்மை செய்யும் ஸ்வபாவமுள்ள, रामेऽपि- ராமனிடத்திலாவது, (किं अप्रियं- என்ன ப்ரதிகூலத்தை, पश्यसि- பார்க்கிறாய்).

105. (ப-ரை) कृतानुरागाः- (பிள்ளைகளிடத்தில்) ப்ரீதிவைத்திருக்கிற, पितरः- பிதாக்கள், पुत्रान्- பிள்ளைகளையும், भार्याः- (பர்தாவினிடத்தில்) ப்ரீதிவைத்திருக்கிற பார்யைகள, पतीन् चापि- பர்த்தாக்களையும், परित्यजेयुः हि- விட்டுவிடுவார்களன்றோ!- व्यसने- வனவாஸமாகிற துக்கத்தில், निमग्नम्- முழுகியிருக்கிற, रामं- ராமனை, दृष्ट्वैव, பார்த்து, कृत्स्नं जगत्- ஜங்கமமான ப்ராணிகள் முழுவதும், सर्वं- ஸ்தாவரமான ப்ராணிகள் முழுவதும், कुपितं स्यात्- (உன் விஷயத்தில்) கோபித்துக்கொள்ளும்.

106. (ப-ரை) अहं पुनः- நானோவென்றால், देवकुमाररूपं- தேவகுமாரன்போல்

104. (பொ-ரை) உலகத்திற்கெல்லாம் அனர்த்தத்தைச் செய்யக்கூடிய எண்ணமுள்ளவளே! உன் ப்ரயோஜனத்தை ஸாதித்துக்கொள்ளுவதில் பிரயாஸமுள்ளவளே! காதுகஸ்வபாவமுள்ளவளே! எனக்கு வருத்தத்தை உண்டாக்குவதில் எண்ணம் கொண்டவளே! நான் ஏதாவது உனக்கு விரோதம் செய்ததாக நினைக்கிறாயா? அல்லது உலகங்களுக்கெல்லாம் ஹிதத்தையே செய்யும் ஸ்வபாவமுடைய ராமனாவது விரோதம் செய்திருப்பதாக நினைக்கிறாயா?

105. (பொ-ரை) பிள்ளைகளிடத்தில் ப்ரீதிவைத்திருக்கிற பிதாக்கள் பிள்ளைகளையும், கணவனிடத்தில் அன்புள்ள பார்யைகள், கணவனையும் விட்டுவிடுவார்கள். வனவாஸமாகிற துக்கக்கடலில் அமிழ்ந்திருக்கிற ராமனைப் பார்த்து, ஜங்கமங்களும், ஸ்தாவரங்களுமான, ப்ராணிகள் முழுவதும் உன் விஷயத்தில் கோபித்துக்கொள்ளும்.

106. (பொ-ரை) தேவகுமாரனைப்போல அழகிய ஆகாரமுள்ள புத்திரன் அலங்

विनापि सूर्येण भवेत्प्रवृत्तिर् वर्षता वज्रधरेण वापि।
रामं तु गच्छन्तमितः समीक्ष्य जीवेन्न कश्चित्त्विति चेतना मे ॥ 107 ॥
विनाशकामामहितामामित्रा मावासयं मृत्युमिवात्मनस्त्वाम् ।
चिरं बताङ्केन धृतासि सर्पी महाविषा तेन हतोऽस्मि मोहा[ ॥ 108 ॥

அழகுள்ளவனும், अलङ्कृतं- அலங்கரிக்கப்பட்டும், आव्रजन्तम्- நடந்து வருகின்றவனு மான, तं सुतं- அந்த புத்திரனை, पश्यन् अपि- தூரத்தில் பார்த்துக்கொண்டிருக்கிற நான், दर्शनेन- பார்ப்பதிலேயே, नन्दामि- ஸந்தோஷப்படுகிறேன், दृष्ट्वा पुनः- ஸமீபத் தில் பார்த்தாலோ, युवेव- வாலிபன்போல, भवामि- ஆய்விடுகிறேன்.

107. सूर्येण विनापि- ஸூர்யனில்லாமலும், प्रवृत्तिः- (ஜனங்களின்) நடமாட்டம், भवेत्- உண்டாகலாம், वज्रधरेण- இந்திரனால், अवर्षता वापि- மழை பெய்யாமலிருந்தும், (प्रवृत्तिः- ஜீவனம் உண்டாகலாம்), इतः- இவ்விடமிருந்து, गच्छन्तं- வனம் போகின்ற, रामं- ராமனை, समीक्ष्य तु- பார்த்தாலோ, कश्चित् अपि- ஒருவனும், न जीवेत्- பிழைக்க மாட்டான், इति- என்று, मे- என்னுடைய, चेतना- எண்ணம்.

108. (ப-ரை) विनाशकामां- என்னுடைய விநாசத்தை விரும்புகிறவளும், अहितां- எனக்கு ஹிதமல்லாதவளும், अमित्रां- எனக்கு விரோதியுமான, त्वां- உன்னை, मृत्युमिव- ம்ருத்யுவை (வைத்துக்கொண்டது)போல், आत्मनः- என்னுடைய (வீட்டில்), आवासयं- வைத்துககொண்டேன், (त्वं- நீ), महाविषा-கொடியவிஷமுடைய, सर्पी- பெண் நாகம், बत- ஐயோ! मोहात्- தெரியாமல், चिरं- நெடுநாளாக, अङ्केन- மடியினால், धृतासि- தரிககப்பட்டாய், तेन- அதனால், हतोऽस्मि- அழிந்து விட்டேன்.

காரம் [illegible] கொண்டுவருகிறபோது, நான் தூரத்திலிருந்து பார்த்தாலேயே மிக வும் ஆனந்தப்படுகிறேன். ஸமீபத்தில் பார்த்துககொண்டிருப்பேனையானால் என் தேஹம பூரித்து வாலிபன்போல் ஆய்விடுகிறேன்.

107. (பொ-ரை) ஸூர்யோதயமேயில்லாமலிருந்தாலும் ஜனங்களுக்கு ஸஞ்சாரம் உண்டானாலும் உண்டாகும, இந்திரன் மழை பெய்யாமலிருந்தாலும் ஜனங்கள் பிழைத்திருந்தாலும் இருக்கலாம், ராமன் அயோத்தியைவிட்டு காட்டிற்கு ப்போவதைக்கண்டால், ஒரு ப்ராணியும உயிருடனிருக்காது என்று என்னுடைய எண்ணம்.

108. (பொ-ரை) என் விநாசத்தை விரும்புகிறவளும் எனக்கு ஹிதம ல்லாதவளும், சத்ருவுமான உன்னை, ம்ருத்யுவை வீட்டிற்குள் வைத்துக்கொண்டாற் போல், என் வீட்டில் வைத்துக்கொண்டிருந்தேன். கொடிய விஷமுடைய ஸர்ப்ப மூன்றோ நீ! ஸர்ப்பத்தை மடியில் கட்டிக்கொண்டிருப்பதுபோல் உன்னையும் நான் தெரியாமல் நெடுங்காலமாக மடியில் கட்டிக்கொண்டிருந்துவிட்டேன். அதனால் அழி ந்துவிடுகிறேன்.

मया च रामेण च लक्ष्मणेनच प्रशास्तु हीनो भरतस्त्वया सह।
पुरं च राष्ट्रं च निहत्य बान्धवा न्ममाहितानां च भवाभिहर्षिणी ॥ 109 ॥

नृशंसवृत्ते व्यसनप्रहारिणि प्रसह्य वाक्यं यदिहाद्य भाषसे।
न नाम ते केन मुखात्पतन्त्यधो विशीर्यमाणा दशनाः सहस्रधा ॥ 110 ॥

109 (ப-ரை) भरत:- பரதன், मया च- என்னாலும், रामेण च- ராமனாலும், लक्ष्मणेनच- லக்ஷ்மணனாலும, हीन: सन्- விட்டுப்பிரிந்தவனாய்க்கொண்டு, त्वया सह- உன்னுடன்கூட, पुरं च- நகரத்தையும், राष्ट्रं च- தேசத்தையும், बान्धवान्- பந்துக்களையும், निहत्य- கொன்றுவிட்டு, प्रशास्तु- ஆளட்டும், त्वं च- நீயும், मम- என்னுடைய, अहितानां- சத்ருக்களுக்கு, अभिहर्षिणी- ஸந்தோஷத்தைச்செய்துகொண்டு, भव- இரு.

110. (ப-ரை) नृशसवृत्ते- கொடிய சரித்திரமுடையவளே! व्यसनप्रहारिणि- ஆபத்காலத்தில் அடிக்கும ஸ்வபாவமுள்ளவளே! इह- இந்த இடத்தில், अद्य- இப்பொழுது, प्रसह्य- பலாத்காரமாக, यत् वाक्यं- யாதொரு வார்த்தையை, भाषसे- சொல்லுகிறாயோ, तत्र- இந்த ஸமயத்தில், ते- உன்னுடைய, मुखात्- வாயிலிருந்து, दशना:- பற்கள், सहस्रधा- ஆயிரம் துணுக்குகளாக, विशीर्यमाणा: सन्त:- சிதறிக்கொண்டு, केन नाम- என்ன காரணத்தினால், अध:- கீழே, न पतन्ति- விழவில்லை.

109 (பொ-ரை) உன் பிள்ளையான பரதன், என்னையும், ராமனையும், லக்ஷ்மணனையும் விட்டுப்பிரிந்து உன்னுடன்கூட நகரத்தையும், தேசத்தையும், பந்துக்களையும் கொன்றுவிட்டு ஆளட்டும். நீயும் என்னுடைய சத்ருக்களுக்கு ஸந்தோஷத்தையும் செய்துகொண்டிரு.

110. (பொ-ரை) க்ரூரமான சரித்திரமுடையவளே, ராமனைவிட்டுப்பிரிவதுபொறுக்காதஸமயத்தில், அடிக்கடி துன்புறுத்தல் செய்து, துக்கத்தை உண்டுபண்ணும் ஸ்வபாவமுள்ளவளே, (அல்லது—இந்தவயதுசென்றகாலத்தில் ராமனைவிட்டுப்பிரியும்படியான கார்யங்களைச்செய்து அதினால் நான் துக்கப்படும்படியான வார்த்தைகளைச்சொல்லுகிறவளே! இந்தஸமயத்தில் இந்த இடத்தில் என்னை அடக்கி பலாத்காரமாக இவ்விதம் கொடிய வார்த்தைகளை சொல்லுகிறாயே! இந்த ஸமயத்திலேயே உன்னுடைய வாயிலிருந்து பற்களெல்லாம் ஆயிரம துண்டுகளாக சிதறி கீழே விழவேண்டியிருக்க என்ன காரணத்தினால் அப்படி ஆகவில்லை.

न किंचिदाहाहितमप्रियं वचो न वेत्ति रामः परुषाणि भाषितुम् ।
कथं नु रामे ह्यभिरामवादिनि ब्रवीषि दोषान्गुणनित्यसंमते ॥ 111 ॥

प्रताम्य वा प्रज्वल वा प्रणश्य वा सहस्रशो वा स्फुटिता महीं व्रज ।
न ते करिष्यामि वचः सुदारुणं ममाहितं केकयराजपांसनि ॥ 112 ॥

111. (ப-ரை) रामः- ராமன், अहितं- ஹிதமில்லாததும், अप्रियं- ப்ரியமல்லாததுமான, वचः- வார்த்தையை, किंचित् अपि- ஒன்றுகூட, न आह- சொல்லுகிறதில்லை, परुषाणि- கடும் சொற்களை, भाषितुं- சொல்லுவதற்கு, न वेत्ति- தெரிந்தவனுமன்று, अभिरामवादिनि- (எல்லோருக்கும்) ப்ரியமான வார்த்தைகளைச் சொல்லுகிறவனும், गुणनित्यसंमते- குணங்களினால் எப்பொழுதும் எல்லோருடைய மனதிற்கும் ஒப்பினவனுமான, रामे- ராமனிடத்தில், कथं नु- ஏன், दोषान्- குற்றங்களை, ब्रवीषि- சொல்லுகிறாய்.

112. (ப-ரை) केकयराजपांसनि- கேகய ராஜனைக்கெடுக்கப்பிறந்தவளே, (त्वं- நீ.) प्रताम्य वा- வாடினாலும் ஸரி. प्रज्वल वा- கோபித்துக்கொண்டாலும ஸரி, प्रणश्य वा- நாசத்தை அடைந்தாலும் ஸரி, सहस्रशः- ஆயிரம சில்லாக, स्फुटिता सती- சரீரம வெடித்துக்கொண்டு, महीं- பூமியை, व्रज वा- அடைந்தாலும் ஸரி, सुदारुणं- மிகவும் கொடியதாயும், मम- எனக்கு, अहितं- ஹிதமல்லாததுமான, ते वचः- உன் வார்த்தையை, न करिष्यामि- செய்யப்போகிறதில்லை.

111. (பொ-ரை) ராகவன் ஹிதமல்லாததும், ப்ரியமல்லாததுமான வார்த்தை என்றுகூட சொல்லுகிறதில்லை. கொடிய வார்த்தைகளைப் பேசுவதற்கே தெரியாது. அதுவுமல்லாமல், எந்த ப்ராணிகளிடத்திலும் ப்ரியமாகவும் ஹிதமாகவும் பேசும் ஸ்வபாவமுள்ளவன். குணங்களினால் எல்லா ஜனங்களுக்கும் எப்பொழுதும் மனதிற்கு ஒப்பினவன். அப்படி இருக்க அவனிடத்தில் ஏன் இப்படிக்குற்றங்களைச் சொல்லுகிறாய்.

112. (பொ-ரை) ஆஹாரமில்லாமல் உன்தேஹம வாடிப்போனாலும ஸரி, நெருப்பில் விழுந்துபற்றி எழுந்தாலும் ஸரி, நாசமாகப் போனாலும் ஸரி, மலையின் உச்சியிலிருந்து தரையில் விழுந்து உன் சரீரம் ஆயிரம் துண்டுகளாகச் சிதறினாலும் ஸரி. கேகயராஜனுக்கு அபகீர்த்தி உண்டாக்கப்பிறந்தவளே, எனக்கு ஹிதமல்லாததும் ஸர்வப்ராணிகளுக்கும் கேழ்க்கக்கொடியதுமான உன் வார்த்தைப்படி, நான் செய்யவேமாட்டேன்.

क्षुरोपमां नित्यमसत्प्रियंवदां प्रदुष्टभावां स्वकुलोपघातिनीम् ।
न जीवितुं त्वां विषहेऽमनोरमां दिधक्षमाणां हृदयं सबन्धनम् ॥ 113 ॥

न जीवितं मेऽस्ति कुतः पुनः सुखं विनात्मजेनात्मवतः कुतो रतिः ।
ममाहितं देवि न कर्तुमर्हसि स्पृशामि पादावपि ते प्रसीद मे ॥ 114 ॥

113 (ப-வுரை) क्षुरोपमां- கத்திக்கு ஸமானமானவளும், नित्यं- எப்பொழுதும், असत्प्रियंवदां- பொய்யாக ப்ரிய வார்த்தைகளைச் சொல்லுகிறவளும், प्रदुष्ट भावां- மிகவும் கெட்ட எண்ணமுள்ளவளும், स्वकुलोपघातिनीम्- நீ பிறந்த குலத்தை அழிப்பவளும், अमनोरमां- மனதிற்கு ப்ரியமல்லாதவளும், सबन्धनम्- ப்ராணனோடு கூடிய, हृदयं- என் ஹ்ருதயத்தை, दिधक्षमाणां- கொளுத்த விரும்புகிறவளுமான, त्वां- உன்னை, जीवितुं- பிழைப்பதற்கு, न विषहे- ஸஹிக்கமாட்டேன்

114. (ப-வுரை) हे देवि- தேவியே! मे எனக்கு, जीवित- ப்ராணனானது, न अस्ति- இல்லை, सुखं पुनः- ஸுகமானால், कुतः- ஏது, आत्मजेन विना- பிள்ளையில்லாமல், आत्मवतः- பிழைத்திருப்பவனுக்கு, रतिः- ஆசை, कुतः- ஏது, मम- எனக்கு, अहित- ஹிதமல்லாத கார்யத்தை, कर्तुं- செய்வதற்கு, न अर्हसि- தகுந்தவளன்று, ते- உன்னுடைய, पादौ अपि- கால்களையும், स्पृशामि- தொடுகிறேன், मे- என் விஷயத்தில், प्रसीद- கருணைசெய்.

113. (பொ-வுரை) கத்திபோல் கொடியவளும், எப்பொழுதும் பொய்யாக ப்ரிய பேச்சுகளைப் பேசுகிறவளும், மிகவும் கெட்ட எண்ணமுள்ளவளும், உன் குலத்தை அழிக்கின்றவளும், ப்ராணனுடன் என்னுடைய ஹ்ருதயத்தை எரிக்க விரும்புகிறவளும், மனதிற்கு ப்ரியமல்லாதவளுமான, நீ உயிருடன் பிழைத்திருப்பதை நான் ஸஹிக்கமாட்டேன்.

114. (பொ-வுரை) இவ்விதம் உன்னுடைய கொடிய வார்த்தைகளைக்கேட்டு என் ப்ராணனை போய்விடப்போகிறது. இனி நான் ஸுகப்பட ப்ரஸக்தியேயில்லை பிள்ளையை விட்டுப்பிரிந்து உயிருடனிருக்க ஆசை எப்படி உண்டாகும். தேவி! எனக்கு ஹிதமல்லாத கார்யத்தை நீ செய்யத்தகாது. உன் கால்களை தொட்டு வணங்குகிறேன், எப்படியாவது நீ எனக்குக் கருணை புரியவேண்டும்.

स भूमिपालो विलपन्ननाथवत्स्त्रिया गृहीतो हृदयेऽतिमात्रया ।
पपात देव्याश्चरणौ प्रसारितावुभावसंस्पृश्य यथाऽऽतुरस्तथा ॥ 115 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे

द्वादशः सर्गः ॥ 12 ॥

---

115. (ப-ரை) अतिमात्रया- மரியாதை கெட்டவளான, स्त्रिया- ஸ்த்ரீயினுல், हृदये- ஹ்ருதயத்தில், गृहीत:- பிடிக்கப்பட்டிருக்கிற, स: भूमिपाल:- அந்த அரசன், अनाथवत्- அநாதன்போல், विलपन्- அழுதுகொண்டு, प्रसारितौ- நீட்டப்பட்டிருக்கிற, देव्या:- கைகேயியினுடைய, उभौ चरणौ- இரண்டு கால்களையும், असंस्पृश्य- தொடாமல், आतुर:- ரோயாளியானவன், यथा-எப்படி (விழுமோ), तथा- அப்படி, पपात- விழுந்தார்.

---

115. (பொ-ரை) இவ்விதம், அந்த அரசன், மரியாதைகெட்ட அந்த கைகேயிக்கு வசப்பட்டு, அநாதன்போல் அழுதுகொண்டு, நீட்டியிருக்கிற அந்த தேவியின் இரண்டு கால்களையும், தொடுவதற்கு கை நீட்டினவர், துக்கவேகத்தினுல் தொடமுடியாமல் நோயாளி அசக்தியால் விழுவதுபோல் தரையில் விழுந்துவிட்டார்.



त्रयोदशः सर्गः ॥ 13 ॥

अतदर्हं महाराजं शयानमतथोचितम् ।
ययातिमिव पुण्यान्ते देवलोकात्परिच्युतम् ॥ 1 ॥
अनर्थरूपाऽसिद्धार्था ह्यभीता भयदर्शिनी ।
पुनराकारयामास तमेव वरमङ्गना ॥ 2 ॥

1-2. (ப-ரை) अतदर्हं- இவ்விதமான துக்கத்தையனுபவிக்கத்தகாதவரும், अतथोचितम्- இப்படி தரையில் விழத்தகாதவரும், पुण्यान्ते- புண்யத்தின் முடிவில், देवलोकात्- தேவலோகத்திலிருந்து, परिच्युतम्- கீழே விழுந்திருக்கிற, ययातिमिव- யயாதி மஹாராஜாவைப்போன்றவருமான, महाराजं- தசரதமஹாராஜாவை, अनर्थरूपा- பாபிஷ்

1-2 (பொ-ரை) அநர்த்தமே வடிவு கொண்டதுபோன்ற அந்த கைகேயி, தன்கார்யம் நிறைவேறாதபடியால் லோகாபவாதத்திலும் பயமில்லாமல், அரசனை

त्वं कत्थसे महाराज सत्यवादी दृढव्रतः ।
मम चेमं वरं कस्माद्विधारयितुमिच्छसि ॥ 3 ॥
एवमुक्तस्तु कैकेय्या राजा दशरथस्तदा ।
प्रत्युवाच ततः क्रुद्धो मुहूर्तं विह्वलन्निव ॥ 4 ॥
मृते मयि गते रामे वनं मनुजपुङ्गवे ।
हन्तानार्ये ममामित्रे सकामा सुखिनी भव ॥ 5 ॥

டையாயும், असिद्धार्था- தன் காரியம் முடிவுபெறாதவளும், अभीता- லோகாபவாதத்தில் பயமில்லாதவளுமான, अङ्गना- அந்த ஸ்த்ரீயானவள், भयदर्शिनी सती- (மஹாராஜாவுக்கு) பயமூருத்திக்கொண்டு, तं वरमेव- அந்த வரத்தைக் (குறித்து), पुनः- மறுபடியும். आकारयामास- அழைத்துச் சொன்னாள்.

3. (பதை) महाराज- அரசனே!, सत्यवादी- நான் ஸத்யவாதியென்றும, दृढव्रतः- த்ருடமான வ்ருதமுடையவனென்றும், त्वं- நீர், कत्थसे- பிதற்றுகிறீர், ममच- என்னுடைய, इमं वरं- இந்த வரத்தை, कस्मात्- ஏன், विधारयितुं- கொடுக்காமல் வைத்துக்கொள்ள, इच्छसि- விரும்புகிறீர்.

4. (பதை) तदा- அப்பொழுது, एवं- இவ்விதம், कैकेय्या- கைகேயியினால், उक्तः- சொல்லப்பட்டிருக்கிற, दशरथः राजा- தசரத ராஜாவானவர், क्रुद्धः- கோபித்துக்கொண்டு, ततः- பிறகு, मुहूर्तं- இரண்டு நாழிகை, विह्वलन् इव- மூர்ச்சை அடைந்தவர்போல், प्रत्युवाच- (கைகேயியைப்பார்த்து) பதில் சொன்னார்.

5. (பதை) हन्त- ஐயோ! अनार्ये- துஷ்டையே! मम- எனக்கு, अमित्रे- சத்ருவானவளே! मयि- நான், मृते- (सति)- மரித்தவளவில், मनुजपुङ्गवे- புருஷச்ரேஷ்டனை, रामे- ஸ்ரீராமன், वनं- வனத்தைக்குறித்து, गते- (सति)- போனவளவில், सकामा- இஷ்டம் நிறைவேறி, सुखिनी भव- ஸுகமாக இரு.

---

பயப்படுத்திக்கொண்டு. அவ்விதமான துக்கத்தையனுபவிக்கத்தகாதவரும், அப்படி தரையில் விழுந்துகிடக்கத்தகாதவரும, புண்யம் கழிந்து தேவலோகத்தினின்று பூமியில் விழுந்த யயாதிராஜன்போலுமிருக்கிற அந்த தசரதமஹாராஜாவை முன் சொல்லிய வரன்விஷயமாகவே மறுபடியும அழைத்துச் சொன்னாள்.

3. (பொ-ரை) மஹாராஜனே! நான் ஸத்யவாதியென்றும, சொன்னபடியே நடக்கக்கூடியவனென்றும், நீர் டம்பமைப் புகழ்ந்து கொள்ளுகிறீர். என்னுடைய இந்த இரண்டு வரங்களைமாத்திரம ஏன் கொடாமல் வைத்துக கொள்ள விரும்புகிறீர்.

4. (பொ-ரை) அப்பொழுது கைகேயியால் இவ்விதம சொல்லப்பட்ட தசரதமஹாராஜன் கோபித்துக்கொண்டு, கொஞ்சகாலம மூர்சசை அடைந்து பிறகு கைகேயியைப்பார்த்து பதில் சொன்னார்.

5. (பொ-ரை) ஐயோ! துஷ்டையாயும், எனக்கு விரோதியுமானவளே!

स्वर्गेपि खलु रामस्य कुशलं दैवतैरहम् ।
प्रत्यादेशादभिहितं धारयिष्ये कथं बत ॥ 6 ॥
कैकेय्याः प्रियकामेन रामः प्रव्राजितो मया ।
यदि सत्यं ब्रवीम्येतत्तदसत्यं भविष्यति ॥ 7 ॥
अपुत्रेण मया पुत्रः श्रमेण महता महान् ।
रामो लब्धो महाबाहुः स कथं त्यज्यते मया ॥ 8 ॥

---

6. (ப-ரை) स्वर्गेपि- ஸ்வர்க்கத்திலும், रामस्य- ராமனுடைய, कुशलं (प्रति)- க்ஷேமத்தைக்குறித்து, दैवतैः- தேவதைகளால், प्रत्यादेशात्- நிந்தனையாக, अभिहितं- சொல்லப்பட்ட வார்த்தையை, अहं- நான், कथं- எப்படி, धारयिष्ये- பொருப்பேன், बत- கஷ்டம்.

7. (ப-ரை) कैकेय्याः- கைகேயிக்கு, प्रियकामेन- இஷ்டத்தைச்செய்யவிரும்பின, मया- என்னாலே, रामः- ராமன், प्रव्राजितः- காட்டுக்கு அநுப்பப்பட்டான், (इति-என்று), एतत् सत्यं- இந்த உண்மையை, ब्रवीमि यदि- சொல்லுவேனேயானால், तत्- (நாளை உனக்குப் பட்டாபிஷேகம் செய்கிறேனென்று ராமனுக்கு நான் சொல்லியிருந்த) அந்த வார்த்தையானது, असत्यं- பொய்யாக, भविष्यति- ஆய்விடும்.

8. (ப-ரை) अपुत्रेण- புத்ரனில்லாதவனான, मया- என்னால், महता श्रमेण- அதிக ப்ரயாஸத்தினால், लब्धः- அடையப்பட்ட, महाबाहुः- பெரிய தோள்களையுடைய, महान्- மிகப்பெருந்தன்மையுள்ள, सः रामः- அந்த ராமன், मया- என்னால், कथं- எப்படி, त्यज्यते- விடப்படுவான்.

நானும் மரித்து புருஷச்ரேஷ்டனான ராமனும வனம்போய்விட்டால் உன்னுடைய எண்ணம் நிறைவேறி, நீ ஸுகமாயிரு.

6. (பொ-ரை) நான் மரித்து தேவலோகம்போனால் அங்கும் தேவர்கள் என்னைப்பார்த்து "ராமன் ஸௌக்யமா" என்று கேழ்ப்பார்கள். நான் அவனைக்காட்டிற்கு அனுப்பிவிட்டேனென்று பதில் சொன்னால், "கேவலம் மூடையான ஸ்த்ரீயினுடைய வார்த்தையினால் ஸகல குணமும் நிறைந்த ஸத்புத்திரனை எவ்விதம் காட்டுக்கு அனுப்பினீர்" என்று என்னை நிந்தித்துச்சொல்லும் வார்த்தையை ஐயோ! நான் எவ்விதம் கேட்டுஸஹிப்பேன்

7. (பொ-ரை) கைகேயியின் இஷ்டத்தைச்செய்யவேணுமென்று நான் ராமனைக்காட்டுக்கு அனுப்பினேனென்று உண்மையைச்சொன்னால், நாளை யுனக்கு யௌவராஜ்ய பட்டாபிஷேகம பண்ணுகிறேனென்று சொல்லியிருந்த வார்த்தையானது பொய்யாக ஆய்விடும்

8 (பொ-ரை) நெடுநாள் பிள்ளையில்லாத நான் அச்வமேதயாகம் புத்திர

शूरश्च कृतविद्यश्च जितक्रोधक्षमापरः ।
कथं कमलपत्राक्षो मया रामो विवास्यते ॥ 9 ॥

कथमिन्दीवरश्यामं दीर्घबाहुं महाबलम् ।
अभिराममहं रामं प्रेषयिष्यामि दण्डकान् ॥ 10 ॥

सुखानामुचितस्यैव दुःखैरनुचितस्य च ।
दुःखं नामानुपश्येयं कथं रामस्य धीमतः ॥ 11 ॥

9. (ப-ரை) शूरश्च- சூரனையும், कृतविद्यश्च- வித்தைகளைக் கற்றவனாயும், जितक्रोध - கோபத்தை ஜயித்தவனாயும், क्षमापरः- மிகப் பொறுமையுள்ளவனாயும், कमलपत्राक्ष - தாமரை இதழ்போன்ற கண்ணுள்ளவனாயுமிருக்கிற, रामः- ராமன், मया- என்னால், कथ- எப்படி, विवास्यते- தேசம் கடத்தப் படுவான்.

10. (ப-ரை) इन्दीवरश्याम- கருநெய்தல் புஷ்பம் போல் ச்யாமளவர்ண முள்ளவனும், दीर्घबाहुं- நீண்ட தோள்களையுடையவனும், महाबलम्- அதிக பலமுள்ளவனும், अभिराम- மிக்க அழகுள்ளவனுமான, रामं- ராமனை, अहं- நான், दण्डकान्- தண்டகா வனத்தைக் குறித்து, कथ प्रेषयिष्यामि- எப்படி அனுப்புவேன்.

11. (ப-ரை) सुखाना- ஸுகங்களுக்கு, उचितस्य एव- தகுந்தவனும், दुःखैः- துக்கங்களுக்கு, अनुचितस्य च- தகாதவனுமான, धीमतः- சிறந்த புத்தியுடைய, रामस्य- ராமனுக்கு, दुःख- துக்கத்தை, कथ नाम- எப்படி, अनुपश्येय- காண்பேன்.

காமேஷ்டி முதலாகிய ஸத்கர்மங்களைச்செய்து மிகப் ப்ரயாஸப்பட்டு பெற்ற சிறந்த தோள்வலியையும், பெரும் தன்மையுமுள்ள, அந்த ராமனை நான் எவ்விதம் காட்டுக்கு அனுப்பத்துணிவேன்.

9 (பொ-ரை) மஹாசூரனும் வித்தைகளை அறிந்தவனும், கோபத்தை அடக்கி மிகப்பொறுமையும் கொண்ட, செந்தாமரை இதழ்போன்ற கண்களையுடைய, இந்த ராமனை நான் எவ்விதம் காட்டுக்கு அனுப்புவேன்.

10. (பொ-ரை) கருநெய்தல் புஷ்பம் போல் ச்யாமளவர்ண முடையவனும், நீண்ட தோள்களையுடையவனும், மஹாபராக்ரமசாலியும், மிக அழகுள்ளவனுமான அந்த ராமனை நான் எப்படி தண்டகாவனத்திற்கு அனுப்புவேன்.

11. (பொ-ரை) ஸுகானுபவத்திற்கே ஏற்றவனும், துக்கானுபவத்திற்கு தகாதவனுமான, சிறந்த புத்தியுடைய அந்த ராமன் துக்கமனுபவிப்பதை நான் எப்படிப்பார்ப்பேன்.

यदि दुःखमकृत्वाद्य मम संक्रमणं भवेत् ।
अदुःखार्हस्य रामस्य तत सुखमवाप्नुयाम् ॥ 12 ॥
नृशंसे पापसंकल्पे रामं सत्यपराक्रमम् ।
किं विप्रियेण कैकेयि प्रियं योजयसे मम ॥ 13 ॥
अकीर्तिरतुला लोके ध्रुवः परिभवश्च मे ॥ 14 ॥
तथा विलपतस्तस्य परिभ्रमितचेतसः ।
अस्तमभ्यागमत्सूर्यो रजनी चाभ्यवर्तत ॥ 15 ॥

---

12. (ப-ரை) अदुःखार्हस्य- துக்கத்திற்குத்தகாதவனை, रामस्य- ராமனுக்கு, दुःखं- துக்கத்தை, अकृत्वा- செய்யாமல், मम- எனக்கு, संक्रमणं- மரணமானது, भवेत् यदि- உண்டாகுமேயானல், ततः- அதனல், सुखं- ஸுகத்தை, अवाप्नुयाम्- அடைவேன்.

13. (ப-ரை) नृशंसे- கொடியவளே! पापसंकल्पे- கெட்ட எண்ணமுள்ளவளே! कैकेयि- கைகேயி, सत्यपराक्रमम्- ஸத்யமான பராக்ரமமுள்ளவனும், मम- எனக்கு, प्रियं- மிகவும் இஷ்டனுமான, रामं- ராமனை, विप्रियेण- ப்ரியமில்லாத தண்டகா வனவாஸத்தோடு, किं- ஏன், योजयसे- சேர்ப்பிக்கிருய்.

14. (ப-ரை) मे- எனக்கு, लोके- இவ்வுலகத்தில், अतुला- நிகரில்லாத, अकीर्तिः- அபகீர்த்தியும், ध्रुवः- நிலையான, परिभवश्च- அவமானமும் உண்டாகப்போகிறது.

15. (ப-ரை) तस्य- அந்த தசரத மஹாராஜன், विलपतः- அழுதுகொண்டு, परिभ्रमितचेतसः- கலங்கின மனதுடையவராயிருக்குங்காலத்தில், सूर्यः- ஸூர்யன், अस्तं अभ्यागमत्- அஸ்தமானமடைந்தான், रजनी च- இரவும், अभ्यवर्तत- வந்துவிட்டது.

12. (பொ-ரை) துக்கம் அனுபவிக்கத்தகாதவனை, ராமனுக்கு இந்த வனவாஸதுக்கத்தை கொடுக்காமல் நான் லோகாந்தரத்தை அடைவேனேயானல் நான், அதனல் ஸுகமடைவேன்.

13. (பொ-ரை) க்ரூரையாயும், பாபஎண்ணமுள்ளவளுமான அடி கைகேயி, உண்மையான பராக்ரமமுடையவனும், எனக்கு மிகவும் ப்ரியனுமான ராமனுக்கு ஏன் இவ்விதம் அநிஷ்டத்தை கொடுக்க நினைத்துவிட்டாய்.

14. (பொ-ரை) உன்னிஷ்டப்படி நான் செய்வேனேயானல், பிறந்தது முதல் நான் ஸம்பாதித்த கீர்த்தியும் அழிந்து, தசரதன் கேவலம் ஸ்த்ரீகாமுகனென்று ஒப்பில்லாத அபகீர்த்தியும் ஒருநாளும் அழியாத பரிபவமும் எனக்கு உண்டாய்விடும்.

15. (பொ-ரை) இவ்விதம் அரசன் மனம் கலங்கி ப்ரலாபம் செய்துகொண்டிருக்கும்பொழுது, ஸூர்யனும் அஸ்தமித்தான். இராத்திரியும் வந்துவிட்டது.

सा त्रियामा तथार्तस्य चन्द्रमण्डलमण्डिता ।
राज्ञो विलपमानस्य न व्यभासत शर्वरी ॥ 16 ॥

तथैवोष्णं विनिश्वस्य वृद्धो दशरथो नृपः ।
विललापार्तवद्दुःखं गगनासक्तलोचनः ॥ 17 ॥

न प्रभातं त्वयेच्छामि निशे नक्षत्रभूषणे ।
क्रियतां मे दया भद्रे मयायं रचितोऽञ्जलिः ॥ 18 ॥

16. (ப-ரை) तथा- அவ்விதம், आर्तस्य- தீனராகவும், विलपमानस्य- ப்ரலாபம் செய்துகொண்டுமிருக்கிற, राज्ञः- அரசனுக்கு, त्रियामा:- மூன்று யாமங்களையுடையதாயும், चन्द्रमण्डलमण्डिता- சந்திரமண்டலத்தினால் அலங்கரிக்கப்பட்டிருக்கிற, सा शर्वरी- அந்த இரவானது, न व्यभासत- விளங்கவில்லை.

17. (ப-ரை) वृद्धः- கிழவரான दशरथः नृपः- தசரத மஹாராஜன், तथैव- அவ்விதமே, उष्णं- உஷ்ணமாக, विनिश्वस्य- பெருமூச்செறிந்து, गगनासक्तलोचनः (सन्)- ஆகாயத்தில் வைத்த கண்ணுள்ளவராய்க்கொண்டு, आर्तवत्- பெரிய வ்யாதியுள்ளவன் போல், दुःखं- வெகு துக்கமாக, विललाप- அழுதுகொண்டிருந்தார்.

18. (ப-ரை) नक्षत्रभूषणे- நக்ஷத்திரங்களை அலங்காரமாயுடைய, निशे- ஓ இரவே, त्वया- உன்னாலே, प्रभातं- விடியலை, न इच्छामि- நான் விரும்பவில்லை, हे भद्रे- மங்களமுள்ள இராத்திரியே! मे- என் பொருட்டு, दया- கருணையானது, क्रियतां- செய்யப்படட்டும், मया- என்னால், अयं अञ्जलिः- இந்த அஞ்ஜலியானது, (அஞ்ஜலீ—கைகூப்புகை) रचितः- செய்யப்பட்டது.

---

16. (பொ-ரை) அந்த இரவானது, சந்திரமண்டலத்தினால் அலங்கரிக்கப்பட்டிருந்தும் அவ்விதமனவருத்தத்துடன் கதறிக்கொண்டிருக்கிற அரசனுக்குப் ப்ரகாசமில்லாமல் தீக்ஷணமாகவேயிருந்தது.

17. (பொ-ரை) கிழவரான அந்த தசரதமஹாராஜன் அவ்விதமே உஷ்ணமாக பெருமூச்சுவிட்டுக்கொண்டு ஆகாயத்தில் கண்களைவைத்து மிகுந்த துக்கத்துடன் வருத்தமுண்டாகும்படி மஹா வ்யாதியுள்ளவன் போல் அழுதார்.

18. (பொ-ரை) நக்ஷத்திரங்களால் அலங்கரிக்கப்பட்ட, ஓ ராத்திரியே! நீ விடியாமல் இருந்துவிடவேண்டும் உன்னைக் கைகூப்பி வணங்குகின்றேன். அம்மா நீ என் விஷயத்தில் கருணை செய்யவேண்டும்.

अथवा गम्यतां शीघ्रं नाहमिच्छामि निर्घृणाम् ।
नृशंसां कैकेयीं द्रष्टुं यत्कृते व्यसनं महत् ॥ 19 ॥

एवमुक्त्वा ततो राजा कैकेयीं संयताञ्जलिः ।
प्रसादयामास पुनः कैकेयीं चेदमब्रवीत् ॥ 20 ॥

साधुवृत्तस्य दीनस्य त्वद्गतस्य गतायुषः ।
प्रसादः क्रियतां देवि भद्रे राज्ञो विशेषतः ॥ 21 ॥

---

19. (ப-ரை) अथवा- அல்லது, ( निशया- இரவினால் ), शीघ्रं- சீக்கிரமாக, गम्यतां- போகப்படலாம், यत्कृते- யாதொரு கைகேயியின் நிமித்தமாக, महत्- பெரிதான, व्यसनं- துக்கமானது, (உண்டாச்சுதோ), (तां- அந்த), निर्घृणाम्- கருணையில்லாதவளும். नृशंसां- காதுகையுமான, कैकेयीं- கைகேயியை, द्रष्टुं- பார்ப்பதற்கு, न इच्छामि- விருப்பமில்லை.

20. (ப-ரை) राजा- அரசனானவர், कैकेयीं- கைகேயியைக்குறித்து, एवं- இவ்விதம், उक्त्वा- சொல்லி, ततः- பிறகு, संयताञ्जलिः (सन्)- செய்யப்பட்ட அஞ்ஜலியை உடையவராய்க்கொண்டு, प्रसादयामास- மனம் இளகும்படி வேண்டிக்கொண்டார், पुनः- மறுபடியும், कैकेयीं- கைகேயியைப்பார்த்து, इदं च- இந்த வார்த்தையையும், अब्रवीत्- சொன்னார்.

21. (ப-ரை) हे भद्रे- மங்களகரையான, देवि- தேவியே! साधुवृत्तस्य- ஸத்சரித்ர முடையவனும், दीनस्य- தீனனும், त्वद्गतस्य- உன்னை அடைந்தவனும், गतायुषः- வயதெல்லாம் சென்றவனும், विशेषतः- விசேஷமாக, राज्ञः- அரசனுமிருக்கிற என்விஷயத்தில்), प्रसादः- அநுக்ரஹமானது, क्रियतां- (உன்னால்) செய்யப்படவேண்டும்.

19. (பொ-ரை) ஹே இராத்திரியே! நீ விடிந்தாலும், மிகவும் நல்லதுதான். ஏனென்றால் இவ்விதம் கொடிய வ்யஸனத்தை உண்டாக்கின இந்த கருணையில்லாத கொடியவளான கைகேயியை பார்க்காமல் இருக்க நேருமல்லவா

20. (பொ-ரை) மஹாராஜா இவ்விதம் கைகேயியைப்பார்த்துச் சொல்லி விட்டு, பிறகு, கைகூப்பிக்கொண்டு கைகேயியை ப்ரஸன்னமாக வேண்டிக்கொண்டார். மறுபடியும் கைகேயியைப் பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

21. (பொ-ரை) மங்களகரையான தேவியே, ஸாதுவான நடத்தை யுடையவனும், தீனனும், உன்னையே கதியாகக்கொண்டு உன் வசப்பட்டவனும், மிகவும் வயது சென்றவனும், அரசனுமான என் விஷயத்தில் நீ அவச்யம் கருணை செய்ய வேண்டும்.

शून्ये न खलु सुश्रोणि मयेदं समुदाहृतम् ।
कुरु साधु प्रसादं मे बाले सहृदया ह्यसि ॥ 22 ॥

प्रसीद देवि रामो मे त्वद्दत्तं राज्यमव्ययम् ।
लभतामसितापाङ्गे यशः परमवाप्नुहि ॥ 23 ॥

मम रामस्य लोकस्य गुरूणां भरतस्य च ।
प्रियमेतद्गुरुश्रोणि कुरु चारुमुखेक्षणे ॥ 24 ॥

22 (ப-ரை) हे सुश्रोणि- அழகான இடையுடையவளே! इदं இந்த ராமபட்டாபிஷேக வார்த்தையானது, मया- என்னால், शून्ये- ஒருவருமில்லாத இடத்தில், न समुदाहृतम् खलु- சொல்லப்படவில்லையல்லவா! (ஆகையால்), साधु- நன்றாக, मे- என் விஷயத்தில், प्रसादं- அநுக்ரஹத்தை, कुरु- செய், हे बाले- ஹே பாலையான கைகேயியே! सहृदया- நல்ல ஹ்ருதயமுடையவளாக, असि हि- இருக்கிறாயன்றோ!

23. (ப-ரை) असितापाङ्गे- கறுத்த கடைக்கண்ணுடைய, हे देवि- ஓ தேவியே! प्रसीद- என் விஷயத்தில் கருணைபுரியவேண்டும், मे- என்னுடைய, रामः- ராமன், त्वद्दत्तं- உன்னால் கொடுக்கப்பட்ட, अव्ययम्- அழிவில்லாத, राज्य- ராஜ்யத்தை, लभतां- அடையட்டும், (அதினால்) परं- உயர்ந்த, यशः- கீர்த்தியை, अवाप्नुहि- அடைவாய்

24. (ப-ரை) हे गुरुश्रोणि- பெருத்த இடையுடையவளே! चारु मुखेक्षणे- அழகான

22. (பொ-ரை) அழகுள்ள இடையையுடையவளே! பாலையுமான கைகேயியே! ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்கிறேனென்று நான் சொன்ன வார்த்தை ஒருவருமில்லாத ஏகாந்தத்தில் சொன்னதன்று. வஸிஷ்டர் முதலாகிய மஹரிஷிகளும், நகரத்து ஜனங்களும் நிறைந்த ஸபையிலன்றோ சொன்னேன். அந்த வார்த்தையின்படி நான் செய்யாவிட்டால் ஜனங்களெல்லாரும் என்னைப் பரிஹாஸம் செய்வார்கள். ஆகையால், என் விஷயத்தில் நீ விசேஷமாக கருணை புரியவேண்டும். என் மனதும், உன் மனதும் ஒப்பனதன்றோ!

23. (பொ-ரை) கறுத்த கண்களையுடைய ஹே தேவியே! என் விஷயத்தில் மனமிரங்கவேணும். என்னிடத்தில் நீ வரமாகப்பெற்ற அழிவில்லாத இந்த ராஜ்யத்தை என் பிள்ளையான ராமனுக்குக் கொடுத்துவிடு. அதனால் சிறந்த கீர்த்தியை அடைவாய்.

24. (பொ-ரை) பெருத்த இடையும், அழகான முகமும், கண்களுமுடையவளே! நீ கொடுத்த ராஜ்யத்தை ராமன் பெறவேண்டுமென்று நான் சொன்ன இந்த விஷயம், எனக்கும், ராமனுக்கும், உலகத்தாருக்கும், வஸிஷ்டர் முதலான குருக்க

सत्यं समनुवर्तस्व यदि धर्मे धृता मतिः ।
स वरः सफलो मेऽस्तु वरदो ह्यसि सत्तम ॥ 8 ॥
धर्मस्येहाभिकामार्थं मम चैवाभिचोदनात् ।
प्रव्राजय सुतं रामं त्रिः खलु त्वां ब्रवीम्यहम् ॥ 9 ॥
समयं च ममाद्येमं यदि त्वं न करिष्यसि ।
अग्रतस्ते परित्यक्ता परित्यक्ष्यामि जीवितम् ॥ 10 ॥

8. (ப-ரை). सत्तम- உலகத்தில் உத்தமமானவரே! धर्मे-தர்மத்தில், मतिः-புத்தியானது, धृता यदि- நிலைத்திருக்குமேயானால், सत्यं- ஸத்யத்தை, समनुवर्तस्व- நீரும் அநுஸரிக்கவேண்டும், मे- என்னுடைய, सः वरः- (முன் நீர் கொடுத்த) அந்த வரமும், सफलः- ஸபலமாக, अस्तु- ஆகட்டும், वरदः हि असि- நீர் எல்லோருக்கும் வரன் கொடுக்குகிறீராக இருக்கிறீரன்றோ!

9. (ப-ரை). इह- இப்பொழுது, धर्मस्य- தர்மத்தினுடைய, अभिकामार्थं- அபிவ்ருத்திக்காகவும், मम- என்னுடைய, अभिचोदनात् च एव- அடிக்கடி, தூண்டுதல் செய்வதற்காகவும், सुतं रामं- பிள்ளையான ராமனை, प्रव्राजय- (நீர்) காட்டுக்குத்துரத்திவிடவேண்டும், अहं- நான் त्वां- உன்னை, त्रिः खलु- மூன்று தடவை, ब्रवीमि- சொல்லுகிறேன்.

10. (ப-ரை). अद्य- இப்பொழுது, मम- என்னுடைய, इमं समयं-இந்த வ்யவஸ்தையை, (ஏற்பாட்டை). त्वं-நீர், न करिष्यसि यदि- செய்யாமல் போவீரேயானால், परित्यक्ता- (உம்மால்) கைவிடப்பட்ட, अहं- நான், ते अग्रतः- உம்முடைய முன்னிலையில், जीवितं- உயிரை, परित्यक्ष्यामि- விட்டுவிடுவேன்.

8. (பொரை). ஹே தமரே! தர்மத்தில் உமக்கு புத்தி நிலைத்திருக்குமேயானால், ஸத்யத்தையே அநுஸரிக்கவேண்டும், நீர் எனக்குக்கொடுத்த அந்த வரன் வீணாகக்கூடாது ஸபலமாகவே ஆகவேண்டும், ஏனென்றால் நீர் எல்லோருக்கும் வரன் கொடுக்குகிற வரன்றோ!

9. (பொ-ரை). தர்மம் வ்ருத்தியடைவதற்காகவும, நான் அடிக்கடி உம்மை தூண்டுவதற்காகவும் உம்முடைய பிள்ளையான ராமனைக்காட்டுக்கு அனுப்பவேண்டும். இதை நீர் அவச்யம் செய்யவேண்டுமென்று, ஒருதடவை இல்லாமல் மூன்று தடவை சொல்லுகிறேன்.

10. (பொ-ரை). நான் கேட்டுக்கொண்டபடி, இப்பொழுது நீர் செய்யாத பக்ஷத்தில் உம்மால் கைவிடப்பட்ட நான், உம்முடைய எதிரில் ப்ராணனை விட்டுவிடுவேன்.

एवं प्रचोदितो राजा कैकेय्या निर्विशङ्कया ।
नाशकत्पाशमुन्मोक्तुं बलिरिन्द्रकृतं यथा ॥ 11 ॥
उद्भ्रान्तहृदयश्चापि विवर्णवदनोऽभवत् ।
स धुर्यो वै परिस्पन्दन्युगचक्रान्तरं यथा ॥ 12 ॥
विह्वलाभ्यां च नेत्राभ्यामपश्यन्निव भूमिपः ।
कृच्छ्राद्धैर्येण संस्तभ्य कैकेयीमिदमब्रवीत् ॥ 13 ॥

---

11. (ப-ரை). एवं- இவ்விதம், निर्विशङ्कया- அச்சமில்லாமலிருக்கிற, कैकेय्या- கைகேயியினால், प्रचोदित:- ஏவப்பட்டிருக்கிற, राजा- அரசன், बलि:- பலிசக்கிரவர்த்தி, इन्द्रकृतं- இந்திரனால் செய்யப்பட்ட, पाशं- மூன்றடி கொடுப்பதாக ப்ரதிக்ஞை ரூபமான பாசத்தை, उन्मोक्तुं- விடுவிப்பதற்கு சக்தியற்றவர்போல், (पाशं-ஸத்யமாகிற பாசத்தை, उन्मोक्तु- விடுவிப்பதற்கு), न अशक्त- சக்தியற்றிருந்தார்.

12. (ப-ரை). युगचक्रान्तर- நுகத்தடியினுடையவும், சக்கிரத்தினுடையவும், மத்யப்ரதேசத்தை, परिस्पन्दन्- அடைந்திருக்கிற, धुर्य: यथा- எருதுபோல, स:- அந்த அரசன், उद्भ्रान्त हृदय: च अपि- மயங்கின மனதையுடையவராயும், विवर्णवदन:- வாடின முகமுடையவராயும், अभवत- ஆனார்.

13. (ப-ரை) विह्वलाभ्यां- கலங்கியிருக்கிற, नेत्राभ्यां- கண்களால், अपश्यन् इव- குருடன்போலிருக்கிற, भूमिप:- அரசன், कृच्छ्रात्- மிகச்ரமப்பட்டு, धैर्येण- தைர்யத்தினால், संस्तभ्य- கலங்கின மனதை அடக்கி, कैकेयीं- கைகேயியைப்பார்த்து, इदं- இந்த வார்த்தையை अब्रवीत् च- சொன்னார்.

11. (பொ-ரை). இவ்விதம அச்சமில்லாமல் கைகேயியினால் ஏவப்பட்ட அரசன், பலிசக்கிரவர்த்தியானவர் இந்திரன் மூலமாக வாமனனால் செய்யப்பட்ட மூன்றடி கொடுப்பதாக ப்ரதிக்ஞை செய்த பாசத்தை விடுவித்துக்கொள்ள சக்தியற்றவர்போல், ஸத்ய பாசத்தை விடுவிக்க சக்தியற்றவராயிருந்தார்.

12. (பொ-ரை). அந்த அரசன், நுகத்தடிக்கும், சக்கிரத்திற்கும் நடுவில அகப்பட்டுக்கொண்ட எருதுபோல், மயங்கின மனதையுடையவராகவும், வாடின முகத்தையுடையவராகவும் ஆகிவிட்டார்.

13. (பொ-ரை). அரசன் கலங்கின கண்களால் குருடன் போலிருந்து வெகுப்ரயாஸப்பட்டு, தைர்யத்தினால் மனதை ஒருவிதம் த்ருடப்படுத்திக்கொண்டு கைகேயியைப்பார்த்து ஒரு வார்த்தையும் சொன்னார்.

यस्ते मन्त्रकृतः पाणिरग्नौ पापे मया धृतः ।
तं त्यजामि स्वजं चैव तव पुत्रं सह त्वया ॥ 14 ॥

प्रयाता रजनी देवि सूर्यस्योदयनं प्रति ।
अभिषेकं गुरुजनस्त्वरयिष्यति मां ध्रुवम् ॥ 15 ॥

रामाभिषेकसंभारैस्तदर्थमुपकल्पितैः ।
रामः कारयितव्यो मे मृतस्य सलिलक्रियाम् ॥ 16 ॥

14. (ப-ரை). हे पापे- அடி பாபிஷ்டையே! मन्त्रकृत:- மந்திரத்தினால் ஸம்ஸ்காரம் செய்யப்பட்ட, ते- உன்னுடைய, य: पाणि:- யாதொரு கையானது, अग्नौ- அக்னியின் எதிரில், मया- என்னால், धृत:- பிடிக்கப்பட்டதோ, तं- அதையும், स्वजं- என்னால் உண்டான, तव पुत्रं चैव உன்னுடைய புத்திரனையும், त्वया सह- உன்னுடன் கூட, त्यजामि- விட்டுவிடுகிறேன்.

15. (ப-ரை). हे देवि- தேவியே! रजनी- இரவானது, प्रयाता- கழிந்துவிட்டது, सूर्यस्य- ஸூர்யனுடைய, उदयनं प्रति- உதயத்தை அடைந்து, गुरुजन:- வஸிஷ்டர் முதலான குருஜனம், अभिषेकं (प्रति)- பட்டாபிஷேகத்தைக்குறித்து, मां- என்னை, त्वरयिष्यति- அவஸரப்படுத்தும், ध्रुवं- நிச்சயம்.

16. (ப-ரை). तदर्थं- அதற்காகவே, उपकल्पितै:- ஸித்தப்படுத்தப்பட்டிருக்கிற, रामाभिषेकसंभारै:- ராமனுடைய பட்டாபிஷேக ஸாமக்ரிகளால், मृतस्य- மரணத்தையடைந்த, मे- எனக்கு, राम:- ராமன், सलिलक्रियाम्- தர்ப்பணத்தை, कारयितव्य:- செய்விக்கவேண்டும்.

14. (பொ-ரை) அடி பாபிஷ்டே! வேதோக்தமான மந்திரங்களைச்சொல்லி அக்னியின் முன்னிலையில், நான் உன்னுடைய பாணிக்ரஹணம் செய்திருந்தேனல்லவா, அந்த வ்யவஹாரத்தையும், உன்னிடத்தில் எனக்குப் பிறந்த பிள்ளையையும், உன்னையும், விட்டுவிடுகிறேன்.

15. (பொ-ரை) தேவி! இரவு கழிந்துவிட்டது, ஸூர்யோதயமானவுடன் வஸிஷ்டர் முதலான குருக்கள் ராமனுடைய பட்டாபிஷேகத்திற்காக என்னை நிச்சயமாய் அவஸரப்படுத்தப்போகிறார்கள்.

16. (பொ-ரை) ராமனுடைய பட்டாபிஷேகத்திற்காகவே, சேகரிக்கப்பட்ட அந்த அபிஷேகஸாமக்ரிகளைக்கொண்டு, மரணத்தையடைந்த எனக்கு தர்ப்பணம் முதலானதுகளை ராமன் செய்யும்படி ஏற்பட்டுவிட்டது.

त्वया सपुत्रया नैव कर्तव्या सलिलक्रिया ।
व्याहन्तास्यशुभाचारे यदि रामाभिषेचनम् ॥ 17 ॥

न च शक्नोम्यहं द्रष्टुं दृष्ट्वा पूर्वं तथासुखम् ।
हतहर्षं निरानन्दं पुनर्जनमवाङ्मुखम् ॥ 18 ॥

तां तथा ब्रुवतस्तस्य भूमिपस्य महात्मनः ।
प्रभाता शर्वरी पुण्या चन्द्रनक्षत्रशालिनी ॥ 19 ॥

---

17. (ப-ரை). अशुभाचारे- கெட்ட நடத்தையுடையவளே! रामाभिषेचनम्- ராமனுடைய பட்டாபிஷேகத்தை, व्याहन्तासि यदि- நீ கெடுத்துவிடுவாயேயானால், सपुत्रया- பிள்ளையுடன் கூடிய, त्वया- உன்னால், सलिलक्रिया- (எனக்கு) தர்ப்பணம், नैव कर्तव्या- செய்யவே தகுந்ததன்று.

18. (ப-ரை). पूर्वं- முன்னமே, तथासुखम्- அவ்வளவு ஏராளமான ஸுகத்துடன் கூடிய, जनं- ஜனத்தை, दृष्ट्वा-பார்த்து, पुनः- மறுபடி, हतहर्षं- ஸந்தோஷமில்லாமலும், निरानन्दं- ஆனந்தமில்லாமலும், अवाङ्मुखम्- தலைகுனிந்துகொண்டிருக்கிற (அந்த ஜனத்தை), द्रष्टुं- பார்ப்பதற்கு, अहं- நான், न शक्नोमि சக்தியற்றவனாயிருக்கிறேன்.

19. (ப-ரை). महात्मनः- மஹாத்மாவான, तस्य- அந்த, भूमिपस्य- அரசன், तां- அந்த கைகேயியைக்குறித்து, तथा- அவ்விதம், ब्रुवतः- (सतः)- சொல்லிக்கொண்டிருக்கும் காலத்தில், चन्द्रनक्षत्रशालिनी- சந்திரனோடும், நக்ஷத்திரங்களினோடும் கூடியிருந்த, पुण्या- புண்யகரையுமான, शर्वरी- ராத்ரியானது, प्रभाता- விடிந்துவிட்டது.

---

17. (பொ-ரை) கெட்டநடத்தையுள்ளவளே! ராமாபிஷேகத்தை நீ நிறுத்துப்பக்ஷத்தில் நான் உயிரை விட்டுவிடுவேன். நீயும் உன்னுடைய பிள்ளையான பரதனும், எனக்கு தர்ப்பணம் செய்யவேகூடாது.

18. (பொ-ரை) ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்கிறேனென்று சொன்னவுடன் ஜனங்களுக்கு அளவில்லாத ஆனந்தமுண்டானதைப்பார்த்தவன், இப்பொழுது அந்தப்பட்டாபிஷேகம் நின்றுவிட்டதை தெரிந்துகொண்டு, மனக்களிப்பும், தேஹத்தில் மயிர்க்கூச்சல் எறிவது முதலான ஸந்தோஷ அடையாளமுமில்லாமல், முகம் கவிழ்ந்துகொண்டிருக்கிற அந்த ஜனத்தை மறுபடியும் என் கண்ணால் பார்க்கமுடியவே முடியாது.

19. (பொ-ரை) மஹாத்மாவான அவ்வரசன் கைகேயியைப்பார்த்து இவ்விதம் சொல்லிக்கொண்டிருக்கையில் இடைவிடாமல் ராமனுடைய சிந்தையோடுகூடியபடியால் புண்யமாயும் சந்திரனாலும் நக்ஷத்திரங்களாலும் ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற அன்றிரவு விடிந்துவிட்டது.

ततः पापसमाचारा कैकेयी पार्थिवं पुनः ।
उवाच परुषं वाक्यं वा॑ ज्ञा रोषमूर्च्छिता 20 ॥

किमिदं भाषसे राजन्वाक्यं गररुजोपमम् ।
आनाययितुमक्लिष्टं पुत्रं राममिहार्हसि ॥ 21 ॥

स्थाप्य राज्ये मम सुतं कृत्वा रामं वनेचरम् ।
निः सपत्नां च मां कृत्वा कृतकृत्यो भविष्यसि । ॥ 22 ॥

---

20. (ப-ரை) ततः- பிறகு, पापसमाचारा- பாபமான நடத்தையுள்ளவளும், वाक्यज्ञा- வார்த்தை சொல்லுவதை நன்றாய் அறிந்தவளுமான, कैकेयी- கைகேயியானவள், रोषमूर्च्छिता (सती)- கோபத்தினால் வ்யாபிக்கப்பட்டவளாய்க்கொண்டு, पार्थिवं- அரசனைக்குறித்து, पुनः- மறுபடியும், परुषं वाक्यं- கடும் சொல்லை, उवाच- சொன்னாள்.

21. (ப-ரை) हे राजन्- ஓ அரசனே! किं इदं- என்ன இது, गररुजोपमम्- விஷத்தினால் உண்டான வ்யாதிபோன்ற, वाक्यं- வார்த்தையை, भाषसे- சொல்லுகிறீர், अक्लिष्ट (यथा तथा)- வருத்தமில்லாமல், पुत्रं- புத்ரனை, रामं- ராமனை, इह- இவ்விடத்தில், आनाययितुं अर्हसि- நீர் வரவழைக்கவேண்டும்.

22. (ப-ரை) मम सुतं- என்னுடைய பிள்ளையை, राज्ये- ராஜ்யத்தில், स्थाप्य- ஸ்தாபித்தும், रामं- ராமனை, वनेचरम्- வனத்தில் ஸஞ்சரிப்பவனாக, कृत्वा- செய்துவிட்டும், मां च-என்னையும், निःसपत्नां- சத்ருவில்லாதவளாக, कृत्वा- செய்துவிட்டும், कृतकृत्यः- செய்யவேண்டிய கார்யத்தை செய்து முடித்தவராக, भविष्यसि- ஆவீர்,

---

20. (பொ-ரை) பிறகு கெட்ட எண்ணமுள்ளவளும், (நடத்தையுள்ளவளும்), வார்த்தைசொல்லுவதில் கெட்டிக்காரியுமான கைகேயி மிகக்கோபங்கொண்டு, அரசனைப்பார்த்து மறுபடியும் கடும்பேச்சுக்களைப்பேசத் துடங்கினாள்

21. (பொ-ரை) ராஜனே என்ன இது, விஷ ஸம்பந்தத்தினால் ஏற்பட்ட வ்யாதிபோல் ஸஹிக்கமுடியாத இவ்விதம் வார்த்தை சொல்லுகிறீர். வருத்தமில்லாமல் உம்முடைய பிள்ளையான ராமனை இங்கு நீர் வரவழைக்கவேண்டும்.

22. (பொ-ரை) என் பிள்ளையான பரதனுக்கு பட்டாபிஷேகம் செய்து, ராமனை காட்டுக்கும் அனுப்பிவிட்டு, என்னையும் சத்ருவில்லாதவளாகச்செய்து, நீர் செய்யவேண்டிய கார்யத்தைச் செய்து முடிக்கவராக ஆவீர்.

स नुन्न इव तीक्ष्णेन प्रतोदेन हयोत्तमः ।
राजा प्रचोदितोऽभीक्ष्णं कैकेयीमिदमब्रवीत् ॥ 23 ॥
धर्मबन्धेन बद्धोऽस्मि नष्टा च मम चेतना ।
ज्येष्ठं पुत्रं प्रियं रामं द्रष्टुमिच्छामि धार्मिकम् ॥ 24 ॥
नतः प्रभातां रजनीमुदिते च दिवाकरे ।
पुण्ये नक्षत्रयोगे च मुहूर्ते च समाहिते ॥ 25 ॥
वमिष्ठो गुणसम्पन्नः शिष्यैः परिवृतस्तदा ।
उपगृह्याशु सम्भारान्प्रविवेश पुरोत्तमम् ॥ 26 ॥

---

23. (ப-ரை) तीक्ष्णेन- க்ரூரமான, प्रतोदेन- கொரடாவினால், नुन्नः- அடிக்கப்பட்ட, हयोत्तमः इव- ச்ரேஷ்டமான குதிரைபோல், अभीक्ष्णं- அடிக்கடி, प्रचोदितः (கைகேயியினால்) ஏவப்பட்ட, सः राजा- அந்த அரசன், कैकेयीं- கைகேயியைப்பார்த்து, इदं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

24. (ப-ரை) धर्मबन्धेन- தர்ம பாசத்தினால், बद्धः अस्मि- கட்டுப்பட்டுவிட்டேன், मम- எனக்கு, चेतना च- ஜ்ஞானமும், नष्टा- போய்விட்டது प्रियं- எனக்கு மிகவும் ப்ரியமாயும், धार्मिकं- தார்மிஷ்டனும், ज्येष्ठं पुत्रं- ஜேஷ்ட புத்ரனுமான, रामं- ராமனை, द्रष्टुं- பார்ப்பதற்கு, इच्छामि- விரும்புகிறேன்.

25-26. (ப-ரை) ततः- பிற்பாடு, रजनी- ராத்ரியும், प्रभाता- விடிந்து, दिवाकरे च- ஸூர்யனும், उदिते- உதயமாகி, नक्षत्रयोगे च- நக்ஷத்ர யோகமும், पुण्ये- புண்யமாகியும், मुहूर्ते च- முஹூர்த்தமும், समाहिते सति- நெருங்கியுமிருந்தவளவில், गुणसम्पन्नः- ஸகல குணங்களால் நிறைந்தவரான, वसिष्ठः- வஸிஷ்டமஹரிஷி, शिष्यैः- சிஷ்யர்களால், परिवृतः (सन्)- சூழப்பட்டவராய்க்கொண்டு, तदा- அப்பொழுது, सम्भारान्- தர்பம் முதலான ஸாமக்ரிகளை, उपगृह्य- எடுத்துக்கொண்டு, आशु- சீக்ரமாக, पुरोत्तमम्- உத்தமமான அயோத்யா நகரத்தை, प्रविवेश- நுழைந்தார்.

23. (பொ-ரை) தீக்ஷ்ணமான கொரடாவினால் அடிக்கப்பட்டு வருத்தமடைந்த குதிரைபோல், கைகேயியால் அடிக்கடி கடும் சொல்லால் தூண்டப்பட்ட, அரசன், கைகேயியைப்பார்த்து மறுபடியும் சொல்லுகிறார்.

24. (பொ-ரை) தர்மமாகிற பாசத்தினால் கட்டுப்பட்டுவிட்டேன், எனக்கு இப்பொழுது அறிவும் மாறிவிட்டது, தார்மிகனுமாய், ப்ரியனுமாய், ஜ்யேஷ்ட புத்ரனுமான ராமனைப்பார்க்க விரும்புகிறேன்.

25-26. (பொ-ரை) பிறகு அன்றிரவும் விடிந்து, ஸூர்யனும் உதயமாகி,

सिक्तसंमार्जितपथां पताकोत्तमभूषिताम् ।
विचित्रकुसुमाकीर्णां नानास्रग्भिर्विराजिताम् ॥ 27 ॥
संहृष्टमनुजोपेतां समृद्धविपणापणाम् ।
महोत्सवसमाकीर्णां राघवार्थे समुत्सुकाम् ॥ 28 ॥
चन्दनागरुधूपैश्च सर्वतः परिधूपिताम् ।
तां पुरीं समतिक्रम्य पुरन्दरपुरोपमाम् ॥ 29 ॥
ददर्शान्तःपुरं श्रेष्ठं नानाद्विजगणायुतम् ।
पौरजानपदाकीर्णं ब्राह्मणैरुपशोभितम् ॥
यज्ञविद्भिः सुसम्पूर्णं सदस्यैः परमद्विजैः ॥ 30 ॥

27–28–29–30. (ப-ரை) सिक्तसम्मार्जितपथां- ஜலம் தெளித்து கூட்டப்பட்ட மார்க்கங்களையுடையதும், पताकोत्तमभूषिताम्- மிகவும் உத்தமமான கொடிகளால் அலங்கரிக்கப்பட்டும், विचित्रकुसुमाकीर्णां- விசித்ரமான புஷ்பங்களால் இறைக்கப்பட்டும், नानास्रग्भिः- நானாவிதமான புஷ்பமாலைகளால், विराजिताम्- விளங்குகின்றதாயும், संहृष्टमनुजोपेतां- மிகவும் ஸந்தோஷமுள்ள ஜனங்களோடு கூடினதாயும், समृद्धविपणापणाम्- விலைக்கு விற்கக்கூடிய பதார்த்தங்களால் நிறைந்த கடைகளை யுடையதாயும், महोत्सवसमाकीर्णां- நாலுபுறமும் மஹோத்ஸவத்தினால் நிறைந்ததாயும், राघवार्थे- ஸ்ரீராமனுக்காக, समुत्सुकाम्- உத்ஸாகத்தோடு கூடிய ஜனங்களையுடையதாயும், चन्दनागरुधूपैश्च- சந்தனம், அஹில் கட்டை இவைகளின் தூபங்களால், सर्वतः- எங்கும், परिधूपिताम्- தூபம் போடப்பட்டும், पुरन्दरपुरोपमाम्- இந்திரனுடைய நகரத்திற்கு ஸமானமாயுமிரு

நக்ஷத்ரயோகமும, சுத்தமாய் பட்டாபிஷேக முஹூர்த்தமும், நெருங்கியிருந்த ஸமயத்தில் ஸகல சத்குணங்களும் பொருந்திய வஸிஷ்டமஹரிஷி, சிஷ்யர்களால் சூழப்பட்டவராய் ஸரயூ நதியில் ப்ராதஸ்நானம் செய்துவிட்டு, தர்பம முதலான ஸம்பாரங்களை எடுத்துக்கொண்டு, அப்பொழுது அதி சீக்ரமாக நகரத்தில் நுழைந்தார்.

27–28–29–30. (பொ-ரை) ராஜமார்க்கங்களில் தண்ணீர் தெளித்து நன்றாகப்பெருக்கி, உயர்ந்த கொடிகள் கட்டி, விசித்ரமான புஷ்பங்களும இறைத்து, நானாவிதமான மாலைகளினால் விளங்கி பரம ஸந்தோஷத்துடன் கூடிய ஜனங்களுடன் கூடி, விலைக்கு விற்கத்தகுந்த பதார்த்தங்கள் நிறைந்த கடைகளுள்ளதாய், எங்கும் பரவின மஹோத்ஸவம உள்ளதாயும, ஸ்ரீராமனுக்குப் பட்டாபிஷேகம் நடக்கப்போகிறது என்று பரம ஸந்தோஷமுள்ள ஜனங்களால் நிறைந்தும, சந்தனம், அகில்கட்டை முதலிய தூபங்கள் கமழ்ந்து அமராவதி பட்டணத்திற்கு நிகரான,

तदन्तःपुरमासाद्य व्यतिचक्राम तं जनम् ।
वसिष्ठः परमप्रीतः परमर्षिर्विवेश च ॥ 31 ॥

स त्वपश्यद्विनिष्क्रान्तं सुमन्त्रं नाम सारथिम् ।
द्वारे तु राजसिंहस्य सचिवं प्रियदर्शनम् ॥ 32 ॥

---

க்கிற, तां पुरीं- அந்த அயோத்யா நகரத்தை, समतिक्रम्य- தாண்டி, नानाद्विजगणायुतम्- நாநாவிதமான பக்ஷிக்கூட்டங்கள் நிறைந்ததாயும், पौरजानपदाकीर्णं- பட்டணத்துஜனங்களாலும், தேசத்து ஜனங்களாலும் சூழப்பட்டும், ब्राह्मणैः- ப்ராம்மணர்களினால், उपशोभितम्- விளங்கிக்கொண்டும், यज्ञविद्भिः- யாக ப்ரயோகம் தெரிந்தவர்களாயும, सदस्यैः- ஸபையில் உட்கார அருகர்களாயுமிருக்கிற, परमद्विजैः- ப்ராம்மணோத்தமர்களினால், सुसम्पूर्णं- நன்ருய் நிறைந்தும், श्रेष्ठं- ச்ரேஷ்டமுமான, अन्तः पुरं- (மஹாராஜனுடைய) அந்தப்புரத்தை ददर्श- பார்த்தார்.

31. (ப-ரை) परमर्षिः- பரமரிஷியான, वसिष्ठः- வஸிஷ்டர், परमप्रीतः सन्- மிகவும் ஸந்தோஷமுள்ளவராய்க்கொண்டு, तत् अन्तः पुरं- அந்த அந்தப்புரத்தை, आसाद्य- அடைந்து, त जनम्- அந்த ஜனத்தை, व्यतिचक्रामः- தாண்டினார், विवेश च- வீதி திண்ணையிலும் உட்கார்ந்தார்

32 (ப-ரை) सतु- அந்த வஸிஷ்ட மஹரிஷியும், विनिष्क्रान्तं- தன்னுடைய க்ருஹத்திலிருநது புறப்பட்டவரும், राजसिंहस्य- ராஜச்ரேஷ்டனுடைய, सचिवं- மந்திரியாயும, प्रियदर्शनम्- ப்ரியமான காக்ஷியுமுள்ளவருமான, सुमन्त्रं नाम- ஸுமந்த்ரரென்று ப்ரஸித்தமான, सारथिं- ஸாரதியை, द्वारे- கோபுர த்வாரத்தில், अपश्यत्- பார்த்தார்.

---

அந்த அயோத்யா பட்டணத்தின் வீதிகளைத்தாண்டி, நாநாவிதமானபக்ஷிக்கூட்டங்களால் நிறைந்தும் பட்டணத்து ஜனங்களாலும் வெளிதேசத்திலிருந்து வந்த ஜனங்களாலும நிறைநது, ப்ராமமணர்களால் சோபையடைந்து, யாகப்ரயோகம தெரிந்தவர்களாயும, ஸபைக்கு அருகர்களுமான ப்ராம்மணோத்தமர்களால் நிறைந்துமிருககிற, ச்ரேஷ்டமான அந்தப்புரத்தைப்பார்த்தார்.

31. (பொ-ரை) பிறகு வஸிஷ்ட மஹரிஷி பரம ஸந்தோஷத்துடன், முன் சொல்லப்பட்ட ஜனங்களையெல்லாம் தாண்டி அந்தப்புரத்தையடைந்து, வாசல் திண்ணையில் உட்கார்ந்தார்.

32. (பொ-ரை) அங்கு உட்கார்ந்துகொண்டிருந்த வஸிஷ்ட மஹரிஷி, தன்னுடைய க்ருஹத்திலிருந்து புறப்பட்டு, ராமபட்டாபிஷேக மஹோத்ஸவத்திற்காக அலங்காரம் பண்ணிக்கொண்டுவருகிற மஹாராஜாவின் மந்திரியும் ஸாரதியுமான ஸுமந்த்ரரை வாசலில் பார்த்தார்.

तमुवाच महातेजाः सूतपुत्रं विशारदम् ।
वसिष्ठः क्षिप्रमाचक्ष्व नृपतेर्मामिहागतम् ॥ 33 ॥

इमे गङ्गोदकघटाः सागरेभ्यश्च काञ्चनाः ।
औदुम्बरं भद्रपीठमभिषेकार्थमाहृतम् ॥ 34 ॥

सर्वबीजानि गन्धाश्च रत्नानि विविधानि च ।
क्षौद्रं दधि घृतं लाजा दर्भाः सुमनसः पयः ॥ 35 ॥

33. (பதவுரை) महातेजाः- மஹா ப்ரபாவமுள்ள, वसिष्ठः- வஸிஷ்ட மஹரிஷி, विशारदम्- ராஜகார்யத்தில் மிகவும் ஸமர்த்தரான, सूतपुत्रं- ஸூத புத்ரனை, तं- அந்த ஸுமந்த்ரரைப்பார்த்து, मां- என்னை, इह- இவ்விடத்திற்கு, आगतम्- வந்திருப்பதாக, क्षिप्रं- சீக்ரம், नृपतेः- அரசனுக்கு. आचक्ष्व- சொல்லும் (என்று), उवाच- சொன்னார்.

34–35. (பதவுரை) इमे- இதோ, गङ्गोदकघटाः- கங்கா நீர்த்த குடங்களும், सागरेभ्यश्च- (நான்கு) ஸமுத்ரங்களிலுமிருந்து, काञ्चनाः- ஸ்வர்ண கடங்களும், औदुम्बरं- அத்தி மரத்தினால் செய்யப்பட்ட, भद्रपीठं- பத்ராஸனமும், सर्वबीजानि- ஸர்வ தான்யங்களின் விதைகளும், गन्धाश्च- சந்தனங்களும், विविधानि- நானாவிதங்களான, रत्नानि च- ரத்தினங்களும், क्षौद्रं- தேனும், दधि- தயிரும், घृतं- நெய்யும், लाजाः பொரிகளும், दर्भाः- தர்ப்பங்களும், सुमनसः- புஷ்பங்களும், पयः- பாலும், अभिषेकार्थं- பட்டாபிஷேகத்திற்காக, * आहृतम्- கொண்டுவரப்பட்டிருக்கிறது.

33 (பொழிப்புரை) மஹா ப்ரபாவமுள்ள வஸிஷ்டரானவர், ராஜகார்யத்தில் மிகவும் நிபுணரான அந்த ஸூத புத்ரரை (ஸுமந்த்ரரை) பார்த்து ஓ ஸுமந்த்ரரே, நான் இங்கு வந்திருப்பதாக, அரசனுக்கு சீக்ரம் தெரிவிக்கவேண்டும் என்று சொன்னார்.

34–35. (பொழிப்புரை) இதோ கங்கையிலிருந்தும், ஸமுத்ரங்களிலிருந்தும், ஸ்வர்ணமயமான தீர்த்த கடங்களும், அத்தி மரத்தின் கட்டையால் செய்த பத்ராஸனமும், ஸர்வ விதமான தான்ய விதைகளும், சந்தனங்களும், நானாவிதமான ரத்தினங்களும், தேன், தயிர், நெய், பொரி, தர்ப்பம், புஷ்பம், பால் முதலானவைகளும் ஸ்ரீராமன் பட்டாபிஷேகத்திற்காக கொண்டு வந்து வைக்கப்பட்டிருக்கிறது.

---

* आहृतम्- என்கிற நபும்ஸகலிங்கமாயும், ஏக வசனமாயுமிருக்கிற பதத்தை, அந்தந்த விசேஷ்யங்களுக்குத் தக்கபடி, லிங்கத்தையும், வசனத்தையும், மாற்றிக் கொள்ளவேண்டியது.

अष्टौ च कन्या रुचिरा मत्तश्च वरवारणः ।
चतुरश्वो रथः श्रीमान्निस्त्रिंशो धनुरुत्तमम् ॥ 36 ॥

वाहनं नरसंयुक्तं छत्रं च शशिसन्निभम् ।
श्वेते च वालव्यजने भृङ्गारुश्च हिरण्मयः ॥ 37 ॥

हेमदामपिनद्धश्च ककुद्मान्पाण्डुरो वृषः ।
केसरी च चतुर्दंष्ट्रो हरिश्रेष्ठो महाबलः ॥ 38 ॥

सिंहासनं व्याघ्रतनुः समिद्धश्च हुताशनः ।
सर्ववादित्रसङ्घाश्च वेश्याश्चालङ्कृताः स्त्रियः ॥ 39 ॥

आचार्या ब्राह्मणा गावः पुण्याश्च मृगपक्षिणः ।
पौरजानपदश्रेष्ठा नैगमाश्च गणैः सह ॥ 40 ॥

एते चान्ये च बहवः प्रीयमाणाः प्रियंवदाः ।
अभिषेकाय रामस्य सह तिष्ठन्ति पार्थिवैः ॥ 41 ॥

36–37–38–39–40–41. (ப-ரை) रुचिराः- அழகான, अष्टौ कन्याः च- எட்டு கன்யாப்பெண்கள், मत्तः- மதித்திருக்கிற, वरवारणः- ச்ரேஷ்டமான யானை, चतुरश्वः- நான்கு குதிரைகள் பூட்டிய, श्रीमान् रथः- அழகான தேர், निस्त्रिंशः- கத்தி, उत्तमं धनुः- ச்ரேஷ்டமான வில், नरसंयुक्तं- மநுஷ்யர்களோடு கூடிய, वाहनं- பல்லக்கு, शशिसन्निभम्- சந்திரனுக்கு ஸமானமான, छत्रं च- குடை, श्वेते- வெளுப்பாயிருக்கிற, वालव्यजने- சாமரங்கள், हिरण्मयः- ஸ்வர்ணமயமான, भृङ्गारुश्च- கிண்டி, हेमदामपिनद्धः- ஸ்வர்ணமயமான கயிற்றில் கட்டப்பட்டு, पाण्डुरः- வெளுத்தும், ककुद्मान्- உயர்ந்த திமிழ் உள்ள, वृषः- எருது, केसरी- அழகான பிடரி மயிருள்ள, चतुर्दंष्ट्रः- நாலு பல்லுகள்போட்ட, महाबलः- அதிக பலமுள்ள, हरिश्रेष्ठः- ச்ரேஷ்டமான குதிரை, सिंहासनं- ஸிம்மாஸனம், व्याघ्रतनुः- புலித்தோல், समिद्धः- ஜ்வலித்துக்கொண்டிருக்கிற, हुताशनं च- அக்நி, सर्ववादित्रसङ्घाः च-

36–37–38–39–40–41. (பொ-ரை) அழகான எட்டு கன்னிகாஸ்த்ரீகளும், மதித்த ச்ரேஷ்டமான யானையும், நான்கு குதிரைகள்கட்டிய நல்ல சோபையுடைய ரதமும், கத்தியும், ச்ரேஷ்டமான வில்லும், சுமக்கக்கூடிய மனிதர்களோடு பல்லக்கும், வட்டமாய் வெளுத்து சந்திரன் போன்ற குடையும், வெளுமையான இரண்டு சாமரங்களும், பொன்னால் செய்யப்பட்ட கிண்டியும், தங்கச்சங்கிலியினால் கட்டப்பட்ட அழகான திமிழுடன் கூடிய வெளுத்த காளையும், சிறந்த பிடரி மயிருள்ள

त्वरयस्व महाराजं यथा समुदितेऽहनि ।
पुण्ये नक्षत्रयोगे च रामो राज्यमवाप्नुयात् ॥ 42 ॥

எல்லா வாத்யங்களின் ஸமூகங்கள், अलंकृता:- அலங்கரிக்கப்பட்ட, वेश्या: स्त्रिय: च- தாஸிகள், आचार्या:- ஆசார்யர்கள். ब्राह्मणा:- ப்ராம்மணர்கள், गाव:- பசுக்கள், पुण्या:- புண்யங்களான, मृगपक्षिण: च- ம்ருகங்கள், பக்ஷிகள், पौरजानपदश्रेष्ठा:- நகரத்து ஜனங்களில் சிறந்தவர்கள், தேசத்து ஜனங்களில் சிறந்தவர்கள், गणै: सह- (அவரவர்கள்) கூட்டங்களோடுகூட, नैगमाश्च- வ்யாபாரிகள், एते च- இவர்களும், बहव:- அநேகங்களான, अन्ये च- மற்றவர்களும், प्रीयमाणा: सन्त:- ஸந்தோஷமுள்ளவர்களாயும், प्रियंवदा: सन्त:- இனிதான வார்த்தைகளைச்சொல்லிக்கொண்டு, रामस्य- ராமனுடைய, अभिषेकाय- பட்டாபிஷேகத்தின் பொருட்டு, पार्थिवै: सह- அரசர்களோடு கூட, तिष्ठन्ति- நிற்கின்றார்கள்.

42. (ப-ரை) यथा- எப்படி, समुदिते- ஸமஸ்த குணங்களும பொருந்திய, अहनि- தினத்தில், पुण्ये- புண்யகரமான, नक्षत्रयोगे च- நக்ஷத்ரயோகத்திலும், राम:- ஸ்ரீ ராமன், राज्यं- ராஜ்யத்தை. अवाप्नुयात्- அடைவாரோ, तथा- அப்படி, महाराजं- அரசனை, त्वरयस्व- (நீர்) த்வரைப்படுத்தும்.

நாலுபல்போட்டு அதிக பலமுள்ள ச்ரேஷ்டமான குதிரையும், ஸிம்மாஸனமும், புலித்தோலும், ஜ்வலித்துக்கொண்டிருக்கிற அக்நியும், ஸமஸ்தமானவாத்யங்களும், அலங்கரிக்கப்பட்ட தாஸிகளும், ஆசார்யர்களும், ப்ராம்மணர்களும், பசுக்களும், புண்யமுள்ளதுகளான ம்ருகங்களும், பக்ஷிகளும், பட்டணத்து ஜனங்களிலும், வெளிநாட்டு ஜனங்களிலும் உத்தமமானவர்களும், தங்கள் தங்கள் கூட்டங்களோடு வ்யாபாரிகளும், இது தவிர இன்னும் அநேகமான மற்ற ஜனங்களும், ஸந்தோஷத்துடன் ஒருவருக்கொருவர் இனிதான வார்த்தைகளைச்சொல்லிக்கொண்டு ஸ்ரீராமனுடைய பட்டாபிஷேகத்திற்காக அரசர்களுடன் ஸித்தமாக நின்றிருக்கிறார்கள்.

42. (பொ-ரை) ஸுமந்த்ரரே! ச்ரேயஸ்கரமான தினத்தில், புண்யகரமான நக்ஷத்ர யோகத்தில், ஸ்ரீராமன் எவ்விதம் ராஜ்யத்தை அடைவானோ, அவ்விதம் நீர் மஹாராஜாவை த்வரைப்படுத்தவேண்டும்.

इति तस्य वचः श्रुत्वा सूतपुत्रो महात्मनः ।
स्तुवन्नृपतिशार्दूलं प्रविवेश निवेशनम् ॥ 43 ॥

तं तु पूर्वोदितं वृद्धं द्वारस्था राजसम्मतम् ।
न शेकुरभिसंरोद्धुं राज्ञः प्रियचिकीर्षवः ॥ 44 ॥

स समीपस्थितो राज्ञस्तामवस्थामजज्ञिवान् ।
वाग्भिः परमतुष्टाभिरभिष्टोतुं प्रचक्रमे ॥ 45 ॥

---

43. (ப-ரை) सूतपुत्रः- ஸூதகுமாரனான ஸுமந்த்ரரும், इति- இவ்விதம், महात्मनः- மஹாத்மாவான, तस्य- அந்த வஸிஷ்டருடைய, वचः- வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, नृपतिशार्दूलं- ராஜச்ரேஷ்டனை, स्तुवन् सन्- ஸ்தோத்ரம் செய்துகொண்டு, निवेशनम्- ராஜக்ருஹத்தை, प्रविवेश- ப்ரவேசித்தார்.

44. (ப-ரை) राजसम्मतम्- அரசனுக்கு இஷ்டமாயும், पूर्वोदितं- (இவரை எந்தக்காலத்திலும் தடைசெய்யக்கூடாதென்று அரசனால்) முன்னமே சொல்லப்பட்ட, वृद्धं- கிழவரான, तं तु- அந்த ஸுமந்த்ரரையும். राज्ञः- அரசனுக்கு, प्रियचिकीर्षवः- ப்ரியத்தைச் செய்யவேண்டுமென்று ஆசைகொண்டிருக்கிற, द्वारस्थाः- வாசல் காப்பவர்கள்; अभिसंरोद्धुं- தடுப்பதற்கு, न शेकुः- சக்தியுள்ளவர்களாக ஆகவில்லை.

45. (ப-ரை) सः- அந்த ஸுமந்த்ரர், राज्ञः- அரசனுடைய, समीपस्थितः- ஸமீபத்தில் நின்றுகொண்டு, तां अवस्थां- அரசனுடைய தத்காலநிலைமையை, अजज्ञिवान्- அறியாதவராய், परमतुष्टाभिः- மிகவும் ஸந்தோஷகரங்களான, वाग्भिः- வாக்குகளால், अभिष्टोतुं (அரசனை) ஸ்தோத்ரம் செய்வதற்கு, प्रचक्रमे- ஆரம்பித்தார்.

43. (பொ-ரை) ஸுமந்த்ரரும், மஹாத்மாவான வஸிஷ்டருடைய, இவ்விதமான வார்த்தையைக் கேட்டு, அரசனை ஸ்தோத்ரம்செய்துகொண்டு; அரண்மனைக்குள் நுழைந்தார்.

44. (பொ-ரை) மஹாராஜனுக்கு இஷ்டராயும், இவருக்கு ஒருக்காலும் தடைசெய்யக்கூடாதென்று அரசனால் முன்னமே தெரிவிக்கப்பட்ட வ்ருத்தரான ஸுமந்த்ரர் உள்ளே நுழையுங்காலத்தில், மஹாராஜனுக்குப்ரியத்தைச்செய்யவேண்டுமென்று விரும்பிக்கொண்டிருக்கிற வாசல் காப்பவர்கள் அவரைத்தடுக்காமல் இருந்துவிட்டார்கள்.

45. (பொ-ரை) ஸுமந்த்ரரும் அரசனுடைய ஸமீபம்சென்று அவருடைய தத்கால நிலைமையை அறியாதவராய் பரமஸந்தோஷத்தை உண்டுபண்ணக்கூடிய வார்த்தைகளால் அரசனை ஸ்தோத்ரம்செய்ய ஆரம்பித்தார்.

तत: सूतो यथाकालं पार्थिवस्य निवेशने ।
सुमन्त्रः प्राञ्जलिर्भूत्वा तुष्टाव जगतीपतिम् ॥ 46 ॥
यथा नन्दति तेजस्वी सागरो भास्करोदये ।
प्रीत: प्रीतेन मनसा तथानन्दय नः स्वतः ॥ 47 ॥
इन्द्रमस्यां तु वेलायामभितुष्टाव मातलिः ।
सोऽजयद्दानवान्सर्वांस्तथा त्वां बोधयाम्यहम् ॥ 48 ॥

---

46. (ப-ரை) ततः- பிறகு, सूतः- ஸாரதியான, सुमन्त्रः- ஸுமந்த்ரர், पार्थिवस्य- அரசனுடைய, निवेशने- அரண்மனையில், प्राञ्जलिः भूत्वा- கைகூப்பிக்கொண்டு, यथाकालं- விடியற்காலத்திற்குத் தகுந்தபடி, जगतीपतिम्- மஹாராஜனை, तुष्टाव- ஸ்தோத்ரம் செய்தார்.

47. (ப-ரை) तेजस्वी- தேஜஸ்ஸுள்ள, सागरः- ஸமுத்ரமானது, भास्करोदये- ஸூர்யோதயகாலத்தில், यथा- எப்படி, नन्दति- ஸந்தோஷப்படுகிறதோ, तथा- அப்படி, (त्वं- நீர்,) प्रीतः- ஸந்தோஷமுள்ளவராய்க்கொண்டு, प्रीतेन- களிப்புடன் கூடிய, मनसा- மனதுடன், स्वतः- ஸ்வயமாகவே, नः- எங்களை, आनन्दय- ஸந்தோஷப்படுத்தக் கடவீர்.

48. (ப-ரை) अस्यां तु वेलायां- இந்த விடியற்காலத்தில்தான், मातलिः- (இந்திரனுடைய ஸாரதியாகிய) மாதலியானவர், इन्द्रं- தேவேந்திரனை, अभितुष्टाव- ஸ்தோத்ரம் செய்தார், सः- அந்த இந்திரன், सर्वान् दानवान्- எல்லா அஸுரர்களையும். अजयत्- ஜயித்தார், तथा- அப்படி, अहं- நான், त्वां- உம்மை, बोधयामि- எழுப்புகிறேன்.

46. (பொ-ரை) பிறகு ஸாரதியான ஸுமந்த்ரரும், அரசனுடைய அரண்மனையில் கைகூப்பிநின்றுகொண்டு, விடியற்காலத்திற்குத் தகுந்தபடி அரசனை ஸ்தோத்ரம் பண்ணினர்.

47. (பொ-ரை) ஸூர்யோதயகாலத்தில் தேஜஸ்ஸோடுகூடிய ஸமுத்ரமானது, எவ்விதம் ஸந்தோஷப்படுகிறதோ, அவ்விதம் நீரும் ஸந்தோஷமுடையவராய் களிப்புள்ள மனதோடு எங்களையும் ஸந்தோஷப்படுத்தக்கடவீர். (சந்திரோதயகாலத்தில் ஸமுத்ரம் பொங்குவதுபோல் ஸூர்யோதயகாலத்திலும் ஸமுத்ரம் பொங்குவது உண்டு, அல்லது भा: करोति என்கிற வ்யுத்பத்தியினால் भास्कर சப்தம் சந்திரனைச்சொல்லுகிறது என்றும் சொல்லலாம். ஸமுத்ரஜலமானது ஸ்வச்சமாயிருக்கிறபடியால் ஸூர்யோதயகாலத்திலோ சந்திரோதயகாலத்திலோ அவர்கள் அலையில் ப்ரதிபலிக்கிறபடியால் அந்த ப்ரகாசத்தை இங்கு தேஜஸ்ஸு என்று சொல்லுகிறது).

48. (பொ-ரை) இந்த விடியற்காலவேளையில்தான் இந்திரஸாரதியான மாதலியும், இந்திரனை எழுப்பினர். அவரும் அநேகம் அஸுரர்களையும் ஜயித்தார். நானும் அவ்விதம் அதேவேளையில் உம்மை எழுப்புகிறேன்.

वेदाः सहाङ्गविद्याश्च यथा ह्यात्मभुवं विभुम् ।
ब्रह्माणं बोधयन्त्यद्य तथा त्वां बोधयाम्यहम् ॥ 49 ॥

आदित्यः सह चन्द्रेण यथा भूतधरां शुभाम् ।
बोधयत्यद्य पृथिवीं तथा त्वां बोधयाम्यहम् ॥ 50 ॥

उत्तिष्ठाशु महाराज कृतकौतुकमङ्गलः ।
विराजमानो वपुषा मेरोरिव दिवाकरः ॥ 51 ॥

49. (ப-ரை) सहाङ्गविद्याः- சிக்ஷாமுதலான ஆறு அங்கங்களோடுகூடிய, वेदाः- வேதங்கள், आत्मभुवं- பரமாத்மாவின் நாபீகமலத்தில் உண்டான, विभुम्- ப்ரபுவான ப்ரம்மாவை, यथा हि- எப்படி, बोधयन्ति- நினைப்பூட்டுகிறதுகளோ, तथा- அப்படி, अहं- நான், त्वां- உம்மை, बोधयामि- ஜ்ஞாபகப்படுத்துகிறேன்.

50. (ப-ரை) चन्द्रेण सह- சந்திரனோடுகூட, आदित्यः- ஸூர்யன், भूतधरां- ப்ராணிகளுக்கு ஆதாரமான, शुभाम्- மங்களகாமான, पृथिवीं- பூமியை, यथा- எப்படி, बोधयति- எழுப்புகிறாரோ, तथा- அப்படி, अहं- நான், त्वां- உம்மை, अद्य- இப்பொழுது, बोधयामि- எழுப்புகிறேன்.

51. (ப-ரை) महाराज- மஹாப்ரபுவே! कृतकौतुकमङ्गलः- செய்யப்பட்ட பட்டாபிஷேகத்திற்குவேண்டிய மங்களங்களையுடையவராய், वपुषा- சரீரத்தினுல், विराजमानः- விளங்கிக்கொண்டு, मेरोः- மேருமலையிலிருந்து, दिवाकरः इव- ஸூர்யன்போல், आशु- சீக்ரம், उत्तिष्ठ- எழுந்திரும்.

49. (பொ-ரை) சிக்ஷை முதலான அங்கங்களோடுகூடிய வேதங்கள், ப்ரபுவான ப்ரம்மாவுக்கு ஜகத் ஸ்ருஷ்டிக்கு உபயோகமான அந்தந்த வஸ்து ஜ்ஞானங்களை உண்டாக்குவதுபோல், நானும உமக்கு ராமனுடைய பட்டாபிஷேகத்திற்கு செய்யவேண்டிய கார்யத்தை ஜ்ஞாபகப்படுத்துகிறேன்.

50. (பொ-ரை) சந்திரனும், ஸூர்யனும், ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஆதாரமான சுபமான பூமியை, எழுப்புவதுபோல் நானும் இப்பொழுது உம்மை எழுப்புகிறேன்.

51. (பொ-ரை) மஹாப்ரபுவே! நீர் ஸ்ரீராமனுடைய பட்டாபிஷேக ஸமயமாதலால் விசித்ரமான வஸ்த்ர ஆபரணம் முதலாகிய மங்களத்துடன் சரீரத்தினுல் ப்ரகாசித்துக்கொண்டு மஹா மேருவிலிருந்து ஸூர்யன் உதிப்பதுபோல் எழுந்திருக்கவேண்டும்.

सोमसूर्यौ च काकुत्स्थ शिववैश्रवणावपि ।
वरुणश्चाग्निरिन्द्रश्च विजयं प्रदिशन्तु ते ॥ 52 ॥
गता भगवती रात्रिः कृतं कृत्यमिदं तव ।
बुध्यस्व नृपशार्दूल कुरु कार्यमनन्तरम् ॥ 53 ॥
उद्तिष्ठत रामस्य समग्रमभिषेचनम् ।
पौरजानपदैश्चापि नैगमैश्च कृताञ्जलिः ॥ 54 ॥
स्वयं वसिष्ठो भगवान्ब्राह्मणैः सह तिष्ठति ।
क्षिप्रमाज्ञाप्यतां राजन्राघवस्याभिषेचनम् ॥ 55 ॥

---

52. (ப-ரை) हे काकुत्स्थ- ககுத்ஸ்த குலத்தில் அவதரித்த ப்ரபுவே! सोमसूर्यौ च- சந்திர ஸூர்யர்களும், शिववैश्रवणौ अपि- சிவனும், குபேரனும், वरुणः च- வருணனும், अग्निः- அக்நியும், इन्द्रः च- இந்திரனும், ते- உமக்கு, विजयं- ஜயத்தை, प्रदिशन्तु- கொடுக்கட்டும.

53. (ப-ரை) नृपशार्दूल- ராஜ ச்ரேஷ்டனே! भगवती பாக்யமுள்ளதான, रात्रिः- ராத்ரியானது, गता- கழிந்துவிட்டது, तव- உம்முடையதான, यत् कृत्य- யாதொரு கார்யமோ, (அது), कृतं— (எங்களால்) செய்யப்பட்டது, अनन्तरम्- பிற்பாடு செய்ய வேண்டிய, कार्यं- கார்யத்தை, कुरु- செய்யும், बुध्यस्व- எழுந்திரும்.

54–55. (ப-ரை) हे राजन्- மஹாராஜாவே, रामस्य- ஸ்ரீ ராமனுடைய, अभिषेचनम्- பட்டாபிஷேகத்திற்கு ஸாமக்ரி, समग्रं- முழுமையும், उद्तिष्ठत- வந்துவிட்டது, पौरजानपदैः च अपि- பட்டணத்து ஜனங்களாலும், வெளிதேசத்து ஜனங்களாலும், नैगमैः च- வ்யாபாரிகளாலும், कृताञ्जलिः- செய்யப்பட்ட அஞ்ஜலி உடையவராய்க் கொண்டு, भगवान्- மஹிமைசாலியான, वसिष्ठः- வஸிஷ்டர், स्वयं- தானே, ब्राह्मणैः सह- ப்ராம்மணர்களுடன்கூட, तिष्ठति- நிற்கிறார், राघवस्य- ஸ்ரீராமனுடைய, अभिषेचनम्- பட்டாபிஷேகமானது, क्षिप्रं- சீக்ரமாக, आज्ञाप्यतां- கட்டளையிடப்படவேண்டும.

---

52. (பொ-ரை) ககுத்ஸ்த வம்சத்தில் பிறந்த ப்ரபுவே! சந்திர ஸூர்யர்களும், சிவனும், குபேரனும, வருணனும், அக்நியும் இந்திரனும் உமக்கு விஜயத்தைக்கொடுக்கவேண்டும்,

53. (பொ-ரை) மஹா பாக்யமுள்ளதான ராத்ரியானது போய்விட்டது. பட்டாபிஷேகத்திற்காக நீர் செய்யவேண்டிய கார்யங்களை எல்லாம் நாங்கள்செய்து விட்டோம், இனி நீரே நேரில் செய்யவேண்டிய கார்யத்தை செய்வதற்காக எழுந்திருக்கவேண்டும். (இங்கு ராத்ரிக்கு भाग्यं-மாவது "ஸ்ரீராமனுடைய பட்டாபிஷேகத்திற்கு உபயோகமாயிருக்கை.")

54–55. (பொ-ரை) அரசனே! ஸ்ரீராமபட்டாபிஷேகத்திற்கு வேண்டிய

यथा ह्यपालाः पशवो यथा सेना ह्यनायका ।
यथा चन्द्रं विना रात्रिर्यथा गावो विना वृषम् ॥ 56 ॥

एवं हि भविता राष्ट्रं यत्र राजा न दृश्यते ॥ 57 ॥

इति तस्य वचः श्रुत्वा सान्त्वपूर्वमिवार्थवत् ।
अभ्यकीर्यत शोकेन भूय एव महीपतिः ॥ 58 ॥

56—57. (ப-ரை) यत्र- எந்த தேசத்தில், राजा- அரசன், न दृश्यते- காணப் படவில்லையோ, (तत्) राष्ट्र- அந்த தேசமானது, अपालाः- மேய்க்கிறவனில்லாத, गावः यथा- பசுக்கள் போலவும், अनायका- நாயகனில்லாத, सेना यथा- ஸேனைபோலவும், चन्द्रं विना- சந்திரனில்லாமல், रात्रिः यथा- ராத்ரி போலவும், वृषं विना- காளையில்லாத, गावः यथा- பசுக்கள் போலவும், एवं हि भविता- இப்படியன்றோ ஆய்விடும்.

58. (ப-ரை) इति- என்று, सान्त्वपूर्वं- ஸமாதானத்தை முன்னிட்டதாயும், अर्थवत् इव- ப்ரயோஜனமுள்ளதாயுமிருக்கிற, तस्य- அந்த ஸுமந்த்ரருடைய, वचः- வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, महीपतिः- அரசன், भूय एव- மறுபடியுமே, शोकेन- வ்யஸன த்தினால், अभ्यकीर्यत- நிறைக்கப்பட்டார்.

---

ஸாமக்ரிகள் முழுமையும் வந்துவிட்டன. பட்டணத்து ஜனங்களாலும், வெளி தேசத்து ஜனங்களாலும், வ்யாபாரிகளாலும் கைகூப்பி ஸேவிக்கப்பட்டு, ஜ்ஞானாதி குண பரிபூர்ணரான வஸிஷ்ட மஹரிஷி தாமே ப்ராம்மணர்களுடன் கூடவந்து நிற் கிறார். ஆகையால் ஸ்ரீராகவனுடைய பட்டாபிஷேகத்திற்காக, சீக்ரம் உத்தரவாக வேண்டும்.

56—57. (பொ—ரை) எந்த தேசத்தில் ராஜா இல்லையோ அந்த தேசமானது மேய்க்கிறவனில்லாத பசுக்கள் போலவும், நாயகனில்லாத ஸேனைபோலவும், சந்திர னில்லாத ராத்ரிபோலவும், காளையில்லாத பசு போலவும் ஆகிவிடும். அதாவது அழிந்துவிடும். ஆகையால் நீர் எழுந்திருக்கவேண்டும்.

58. (பொ-ரை) இனிமையாயும், மிகவும் ப்ரயோஜனமுள்ளதுமான, ஸுமந்த்ரருடைய வார்த்தையைக் கேட்டு, அரசன் மறுபடியும் துக்கத்தினால் பீடிக்கப் பட்டார். (வார்த்தைக்கு ப்ரயோஜனமாவது:— விடியற்காலத்தில் விழிப்பது ஸர்வச்ரேயஸ்ஸுக்களுக்கும் காரணமாயிருக்கை.)

ततः स राजा तं सूतं सन्नहर्षः सुतं प्रति ।
शोकरक्तेक्षणः श्रीमानुद्वीक्ष्योवाच धार्मिकः ॥
वाक्यैस्तु खलु मर्माणि मम भूयो निकृन्तसि ॥ 59 ॥

सुमन्त्रः करुणं श्रुत्वा दृष्ट्वा दीनं च पार्थिवम् ।
प्रगृहीताञ्जलिः किंचित्तस्माद्देशादपाक्रमत् ॥ 60 ॥

यदा वक्तुं स्वयं दैन्यान्न शशाक महीपतिः ।
तदा सुमन्त्रं मन्त्रज्ञा कैकेयी प्रत्युवाच ह ॥ 61 ॥

59. (ப-ரை) ततः- பிறகு, शोकरक्तेक्षणः- துக்கத்தினால் சிவந்த கண்களையுடையவரும், श्रीमान्- ஐச்வர்யமுள்ளவராயும், धार्मिकः- தார்மிஷ்டராயுமிருக்கிற, सः राजा- அந்த அரசன், सुतं प्रति- பிள்ளையைக்குறித்து, सन्नहर्षः- போயிருக்கிற ஸந்தோஷத்தையுடையவராய்க்கொண்டு, तं सूतं- அந்த ஸாரதியான ஸுமந்த்ரரை, उद्वीक्ष्य- பார்த்து, मम मर्माणि- என்னுடைய மர்மஸ்தானங்களை, वाक्यैस्तु- ஸ்தோத்ர வாக்யங்களினால், भूयः- மறுபடியும், निकृन्तसि खलु- அறுக்கிறீரே.

60. (ப-ரை) सुमन्त्रः- ஸுமந்த்ரரும், करुणं- தீனமான அவருடைய வார்த்தையையும், श्रुत्वा- கேட்டு, दीनं- தீனமாயிருக்கிற, पार्थिवम् च- அரசனையும், दृष्ट्वा- பார்த்து, प्रगृहीताञ्जलिः सन्- கைகூப்பினவராய்க்கொண்டு, तस्मात् देशात्- அந்த இடத்திலிருந்து, किंचित् अपाक्रमत्- கொஞ்சம் விலகி நின்றார்.

61. (ப-ரை) महीपतिः- அரசன், दैन्यात्- துக்கத்தினால், स्वयं- தானாகவே, वक्तुं- சொல்லுவதற்கு, यदा- எப்பொழுது, न शशाक- சக்தியில்லாதவராயிருந்துவிட்டாரோ, तदा- அப்பொழுது, मन्त्रज्ञा- மந்த்ராலோசனையை அறிந்தவளான, कैकेयी- கைகேயியானவள், सुमन्त्रं- ஸுமந்த்ரரைக்குறித்து, प्रत्युवाच- சொன்னாள், ह- கஷ்டம்.

59 (பொ-ரை) பிறகு, துக்கத்தினால் கண்கள் சிவந்தும், சிறந்த செல்வமுமுள்ள, தார்மிஷ்டரான அந்த அரசன், ஸ்ரீராமன் விஷயமாக தான் பெறப்போகிற ஸந்தோஷத்தை ஒழித்துவிட்டு, அந்த ஸாரதியான ஸுமந்த்ரரைப்பார்த்து, அய்யோ! ஸுமந்த்ரரே, முன்னமே கைகேயியின் க்ரூரமான வார்த்தைகளால், பிளந்திருக்கிற என்னுடைய மர்மங்களை, அநுசிதமான காலத்தில் ஸ்தோத்ரம் செய்து மறுபடியும் நீர் பிளக்கின்றீரே என்று சொன்னார்.

60. (பொ-ரை) ஸுமந்த்ரரும் தீனமான மஹாராஜாவினுடைய வார்த்தையைக்கேட்டும், தீனமான அவரைப்பார்த்தும், மனதில் அச்சத்துடன் கூப்பின கையுடன் அந்த இடத்திலிருந்து, கொஞ்சம் ஒதுங்கி நின்றார்.

61. (பொ-ரை) மஹாராஜா மிக மனவருத்தத்தினால் ஸுமந்த்ரரைப்பார்

सुमन्त्र राजा रजनीं रामहर्षसमुत्सुकः ।
प्रजागरपरिश्रान्तो निद्राया वशमेयिवान् ॥ 62 ॥

तद्गच्छ त्वरितं सूत राजपुत्रं यशस्विनम् ।
राममानय भद्रं ते नात्र कार्या विचारणा ॥ 63 ॥

स मन्यमानः कल्याणं हृदयेन ननन्द च ।
निर्जगाम च संप्रीत्या त्वरितो राजशासनात् ॥ 64 ॥

62–63. (ப—ரை) सुमन्त्र- ஸுமந்த்ரரே! राजा- அரசன், रामहर्षसमुत्सुकः- ராமனுடைய ஸந்தோஷத்தில் ஆசை வைத்துக்கொண்டு, रजनीं- இரவில், प्रजागरपरिश्रान्तः- தூக்கமில்லாமையால் ச்ரமத்தை அடைந்துவிட்டார். (இப்பொழுதுதான்) निद्रायाः- தூக்கத்திற்கு, वशं- ஸ்வாதீனமாயிருப்பதை, एयिवान्- அடைந்துவிட்டார். तत्- ஆகையாலே, हे सूत- ஸாரதியே, त्वरितं गच्छ- சீக்ரமாகப்போம். यशस्विनम्- கீர்த்தியுள்ளவனை, राजपुत्रं रामं- ராஜகுமாரனை ராமனை, आनय- (இங்கு) அழைத்துவாரும். ते भद्रं- உமக்கு க்ஷேமமுண்டாகவேணும், अत्र- இவ்விஷயத்தில், विचारणा- ஆலோசனை, न कार्या- செய்யத் தகுந்ததன்று.

64. (ப—ரை) सः- அந்த ஸுமந்த்ரர், कल्याणं- (அதை) மங்களமென்று, मन्यमानः सन्- எண்ணிக்கொண்டு, हृदयेन- மனதினால், ननन्द च- ஸந்தோஷத்தையும் அடைந்தார். संप्रीत्या- மிகவும் ப்ரீதியினால், राजशासनात्- அரசனுடைய உத்திரவினால், त्वरितः सन्- பரபரப்புள்ளவராக, निर्जगाम च- வெளியிலும் புறப்பட்டுவிட்டார்.

த்து, தானே நேரில் பதில் சொல்ல முடியாமலிருந்து விட்டார். அப்பொழுது தன்னுடைய கார்யத்தை ஸாதித்துக்கொள்ளக்கூடிய ஆலோசனையில் மிகவும் தெரிந்தவளான கைகேயி, ஸுமந்த்ரரைப்பார்த்து பதில் சொன்னாள்.

62–63 (பொ—ரை) ஹே ஸாரதியாகிய ஸுமந்த்ரரே! மஹாராஜா இன்று இரவு முழுவதும் ராமன் [illegible]ஷயமான ஸந்தோஷத்தில் முழுகிக்கொண்டு தூக்கமில்லாமல் ச்ரமத்தை அடைந்து இப்பொழுதுதான் நித்ரைக்கு வசமாகிவிட்டார். ஆகையால் நீர் சீக்ரமாகப்போய் உலகமெல்லாம் புகழ்பெற்ற ராஜபுத்திரனை ஸ்ரீ ராமனை இங்கு அழைத்துவாரும். இந்த விஷயத்தில் கொஞ்சமேனும் ஆலோசிக்க வேண்டாம். உமக்கு க்ஷேமமுண்டாகவேணும், என்று

64. (பொ—ரை) ஸுமந்த்ரரும், அந்த கைகேயி வார்த்தையைக் கேட்டு, இது மங்களகரமான வார்த்தையென்றெண்ணி, ஸந்தோஷத்தை அடைந்து, அரசன் சமீபத்திலிருந்து கைகேயி கட்டளையிட்டபடியால், இதை அரசன் கட்டளையாகவே நினைத்து, பரம ஸந்தோஷத்தினால் பரபரப்புடன் வெளியில் புறப்பட்டார்.

सुमन्त्रश्चिन्तयामास त्वरितं चोदितस्तया ।
व्यक्तं रामाभिषेकार्थमिहायास्यति धर्मवित् ॥ 65 ॥

इति सूतो मतिं कृत्वा हर्षेण महता वृतः ।
निर्जगाम महाबाहो राघवस्य दिदृक्षया ॥ 66 ॥

सागरह्रदसंकाशात्सुमन्त्रोऽन्तः पुराच्छुभात् ।
निष्क्रम्य जनसंबाधं ददर्श द्वारमग्रतः ॥ 67 ॥

65. (ப-ரை) तया- அந்த கைகேயியால், चोदितः- ஏவப்பட்ட, सुमन्त्रः ஸுமந்த்ரரானவர், धर्मवित्- தர்மம் தெரிந்தவரான தசரதர், रामाभिषेकार्थं- ராமனுடைய பட்டாபிஷேகத்திற்காக, इह- இங்கு, आयास्यति- வரப்போகிறார், व्यक्तं- நிச்சயம், इति- என்று, चिन्तयामास- எண்ணினார்.

66. (ப-ரை) इति- என்று, सूतः- ஸாரதியான ஸுமந்த்ரரானவர், मतिं कृत्वा- எண்ணிக்கொண்டு, महता- அதிகமான, हर्षेण- ஸந்தோஷத்தினால், वृतः- சூழப்பட்டவராக, महाबाहोः- பெருத்த தோள்களையுடைய, राघवस्य- ராமனுடைய, दिदृक्षया- பார்க்க வேண்டுமென்கிற ஆசையினால், निर्जगाम- புறப்பட்டார்.

67. (ப-ரை) सुमन्त्रः- ஸுமந்த்ரர், सागरह्रदसंकाशात्- ஸமுத்ரத்து மடுவுக்கு ஸமானமான, शुभात्- மங்களம் பொருந்திய, अन्तः पुरात्- அந்தப்புறத்திலிருந்து, निष्क्रम्य- புறப்பட்டு, द्वारं अग्रतः- முன்வாசலின் எதிரில், जनसम्बाधं- ஜனக்கூட்டத்தை, ददर्श- பார்த்தார். (अग्रतः- எதிரில், जनसम्बाधं- ஜனங்களால் நெருங்கியிருக்கிற, द्वारं- முன்வாசலை, என்றும் சொல்லலாம்.)

65. (பொ-ரை) இவ்விதம் கைகேயியால் தூண்டப்பட்ட ஸுமந்த்ரர், தார்மிகரான மஹாராஜர் ராமபட்டாபிஷேகத்திற்காக இங்கு வெளியில் வரப்போகிறார். இது நிச்சயமென்று மனதில் எண்ணிக்கொண்டார்.

66. (பொ-ரை) ஸுமந்த்ரரும் இவ்விதம் எண்ணிக்கொண்டு, பெருத்த ஸந்தோஷம் நிறைந்து, பெரிய தோள்களையுடைய ஸ்ரீராகவனைக்காணவேண்டுமென்று ஆசையினால் புறப்பட்டார்.

67. (பொ-ரை) ஸமுத்ரத்தின் மடுவு போன்ற அழகான அந்த அந்தப்புரத்தினின்று ஸுமந்த்ரர் புறப்பட்டு, முன் வாசலுக்கெதிரில் ஜனங்கள் கூட்டங்கூட்டமாயிருப்பதைக்கண்டார்.

ततः पुरस्तात्सहसा विनिर्गतो महीपतीन्द्वारगतो विलोकयन्।
ददर्श पौरान् विविधान्महाधनानुपस्थितान्द्वारमुपेत्य विष्ठितान् ॥ 68 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे

चतुर्दशः सर्गः ॥ 14 ॥

68. (ப-ரை) ततः- பிறகு, सहसा- சீக்ரமாக, विनिर्गतः- புறப்பட்டு, द्वारगतः- கோபுர வாசலேயடைந்து, पुरस्तात्- எதிரில், महीपतीन्- அரசர்களை, विलोकयन्- பார்த்துக்கொண்டும், विविधान्- நாநு விதங்களாயும், महाधनान्- அதிக தனமுள்ளவர்களாயும், उपस्थितान्- ஸபை கூடிக்கொண்டு, द्वारं उपेत्य- கோபுரவாசலே அடைந்து, विष्ठितान्- இருக்கின்ற, पौरान्- பட்டணத்து ஜனங்களை, ददर्श- பார்த்தார்.

68. (பொ-ரை) பிறகு ஸுமந்த்ரர் பரபரப்புடன் வெளியில்வந்து வாசலில் நின்றுகொண்டு, அரசர்களையும், பலவிதமாய் பட்டணத்துஜனங்கள் காணிக்கைகளை கையில் எடுத்துகொண்டு வாசலில் கூட்டங்கூட்டமாய் நிற்பதையும் கண்டார்.



पञ्चदशः सर्गः ॥ 15 ॥

ते तु तां रजनीमुष्य ब्राह्मणा वेदपारगाः ।
उपतस्थुरुपस्थानं महराजपुरोहिताः ॥ 1 ॥

1. (ப-ரை) वेदपारगाः- வேதங்களின் கரை கண்டவர்களான, ते ब्राह्मणाः तु- அந்த ப்ராம்மணர்களும், रजनीं- இரவை, उष्य- இருந்துவிட்டு, महराजपुरोहिताः- மஹாராஜாவின் புரோஹிதர்களோடுகூட, उपस्थानं- ராஜ ஸபையை, उपतस्थुः- அடைந்தார்கள்.

1. (பொ-ரை) வேதங்களின் கரைகண்ட அந்த ப்ராம்மணோத்தமர்கள், அன்றிரவு கழிந்து காலேயில் ராஜபுரோஹிதர்களுடன் கூட, ஸபைக்கு வந்து சேர்ந்தார்கள்.

अमात्या बलमुख्याश्च मुख्या ये निगमस्य च ।
राघवस्याभिषेकार्थे प्रीयमाणास्तु संगताः ॥ 2 ॥
उदिते विमले सूर्ये पुण्ये चाभ्यागतेऽहनि ।
लग्ने कर्कटके प्राप्ते जन्म रामस्य च स्थिते ॥ 3 ॥
अभिषेकाय रामस्य द्विजेन्द्रैरुपकल्पितम् ॥ 3½ ॥
काञ्चना जलकुम्भाश्च भद्रपीठं स्वलङ्कृतम् ।
रथश्च सम्यगास्तीर्णो भास्वता व्याघ्रचर्मणा ॥ 4 ॥

2. (ப—ரை) अमात्याः- மந்திரிகளும், बलमुख्याः च- ஸேனைத்தலைவர்களும், निगमस्य— நகரத்திற்கு, ये मुख्याः च- எவர்கள் முக்யமானவர்களோ அவர்களும், राघवस्य- ராமனுடைய, अभिषेकार्थे- பட்டாபிஷேகத்திற்காக, प्रीयमाणाः तु— ஸந்தோஷமுள்ளவர்களாய்க்கொண்டு, संगताः- ஒன்று சேர்ந்தார்கள். (கூட்டங் கூடினார்கள்.)

3–3½. (ப-ரை) सूर्ये- ஸூர்யன், विमले- நிர்மலமாக, उदिते— உதித்தும், पुण्ये च- புஷ்ய நக்ஷத்திரமும், अभ्यागते- வந்தும், रामस्य- ராமனுடைய, जन्म- ஜன்ம காலத்தை, प्राप्ते- அடைந்திருக்கிற, कर्कटके लग्ने- கற்கடக லக்னமும், अहनि- பகலில், स्थिते सति- வந்துமிருக்கும்பொழுது, रामस्य- ராமனுடைய, अभिषेकाय- பட்டாபிஷேகத்திற்காக, द्विजेन्द्रैः- ப்ராம்மணோத்தமர்களால், उपकल्पितम्- ஸாமக்ரிகள் ஸித்தப்படுத்தப் பட்டது.

4. (ப-ரை) काञ्चनाः- ஸ்வர்ணமயங்களான, जलकुम्भाः च- தீர்த்த குடங்களும், स्वलङ्कृतम्- நன்றாய் அலங்காரம் செய்யப்பட்ட, भद्रपीठं- பத்ராஸனமென்கிற பீடமும், भास्वता- ரொம்பவும் அழகான, व्याघ्रचर्मणा- புலித்தோலால், सम्यक्- நன்றாய், आस्तीर्णः- விரிக்கப்பட்ட, रथः च- ரதமும், (ஸித்தமாக வந்துவிட்டது.)

2. (பொ-ரை) மந்திரிகளும், ஸேனைத்தலைவர்களும், பட்டணத்தில் முக்யமான ஜனங்களும், ராகவனுடைய பட்டாபிஷேகத்திற்காக, ஸந்தோஷத்துடன் கூட்டங்கூடினார்கள்.

3–3½. (பொ-ரை) ஸூர்யனும் நன்றாய் உதயமாகி, புஷ்யநக்ஷத்திரமும் வந்து, ராமனுடைய ஜன்ம லக்னமான கற்கடக லக்னமும் பகலில் சேர்ந்திருக்கும் பொழுது, செய்யவேண்டிய ராமபட்டாபிஷேகத்திற்காக ப்ராம்மணோத்தமர்கள் ஸாமக்ரிகளை ஸித்தப்படுத்திவிட்டார்கள்.

4. (பொ-ரை) ஸ்வர்ண மயமான தீர்த்த கும்பங்களும், நன்றாய் அலங்காரம் செய்யப்பட்ட பத்ராஸனமும், அழகாய் ப்ரகாசமுமான புலித்தோலால் பரப்பப்பட்ட ரதமும் ஸித்தமாக வந்துவிட்டது.

गङ्गायमुनयोः पुण्यात्सङ्गमादाहृतं जलम् ॥ 4½ ॥

याश्चान्याः सरितः पुण्या ह्रदाः कूपाः सरांसि च ।
प्राग्वाहाश्चोर्ध्ववाहाश्च तिर्यग्वाहाः समाहिताः ।
ताभ्यश्चैवाहृतं तोयं समुद्रेभ्यश्च सर्वशः ॥ 6 ॥

सलाजाः क्षीरिभिश्छन्ना घटाः काञ्चनराजताः ।
पद्मोत्पलयुता भान्ति पूर्णाः परमवारिणा ॥ 7 ॥

---

4½. (ப-ரை) पुण्यात्- புண்யத்தை உண்டுபண்ணுகிற, गंगायमुनयोः- கங்கையி னுடையவும், யமுனையினுடையவும், संगमात्- சேருமிடத்திலிருந்து, जलम्- தீர்த்தமா னது, आहृतं- கொண்டுவரப்பட்டது.

5–6. (ப-ரை) अन्याः- மற்றவைகளான, याः सरितः- யாதொரு நதிகளும், पुण्याः- புண்யங்களான, ह्रदाः- மடுவுகளும், कूपाः- கிணறுகளும், सरांसि च- தடாகங்க ளும், प्राग्वाहाः च- கிழக்கு முகமாகப்போகின்ற நதிகளும், ऊर्ध्ववाहाः च- மேல்முகமாக ப்போகின்ற நதிகளும், तिर्यग्वाहाः- குறுக்காக ப்ரவாஹிக்கின்ற நதிகளும் இருக்கின் றதுகளோ, ताभ्यः च एव- அவைகளிலிருந்தும், समाहिताः- தீர்த்த கடங்கள் கொண்டு வரப்பட்டன, सर्वशः समुद्रेभ्यः च- எல்லா ஸமுத்ரங்களிலுமிருந்தும், तोयं- தீர்த்தமா னது, आहृतं- கொண்டுவரப்பட்டிருக்கிறது.

7. (ப-ரை) सलाजाः- பொரியுடன் கூடினதுகளும், क्षीरिभिः- அத்தி, அரசு, மா, முதலான பாலுள்ள மரங்களின் கொத்துகளால், छन्नाः- மூடப்பட்டும், पद्मोत्पलयुताः- தாமரை, கருநெய்தல், புஷ்பங்களோடுகூடியதும், परमवारिणा- சுத்தமான தீர்த்தத்தினால், पूर्णाः- நிறைந்துமிருக்கின்ற, काञ्चनराजताः- ஸ்வர்ணமயங்களாயும், வெள்ளிமயங்களுமான, घटाः- குடங்கள், भान्ति- விளக்குகின்றதுகள்.

---

4½ (பொ-ரை) புண்யகரமான கங்கா, யமுனை, நதிகள் சேரும் கட்டத்தி லிருந்து தீர்த்தமும கொண்டுவரப்பட்டது.

5–6. (பொ-ரை) இதுதவிற மற்றவைகளான நதிகள், புண்ய கரங்களான மடுவுகள், கிணறுகள், தடாகங்கள், கிழக்கு முகமாக ஓடுகின்ற நதிகள், மேல்நோக் கிப்போகின்ற (மேற்கு முகமாக ப்ரவாஹிக்கின்ற) நதிகள், தெற்கு வடக்காக ப்ர வாஹிக்கின்ற நதிகள், இவைகளிலினின்றும், எல்லா ஸமுத்ரங்களினின்றும், தீர்த் தம் கொண்டுவரப்பட்டன.

7. (பொ-ரை) பாலுள்ளதான அத்தி, அரசு, மாமரம் முதலான கிளைக ளின் கொத்துகளினால் மூடப்பட்டு, தாமரை, கருநெய்தல் புஷ்பங்களோடுகூடி சுத்தமான தீர்த்தங்கள் நிறைந்து, பொரிகளோடு ஸ்வர்ண கடங்களும், வெள்ளி கடங்களும் ஸித்தமாக விளங்குகின்றன.

क्षौद्रं दधि घृतं लाजा दर्भाः सुमनसः पयः ।
वेश्याश्चैव शुभाचाराः सर्वाभरणभूषिताः ॥ 8 ॥

चन्द्रांशुविकचप्रख्यं काञ्चनं रत्नभूषितम् ।
सज्जं तिष्ठति रामस्य वालव्यजनमुत्तमम् ॥ 9 ॥

चन्द्रमण्डलसंकाशमातपत्रं च पाण्डुरम् ।
सज्जं द्युतिकरं श्रीमदभिषेकपुरस्कृतम् ॥ 10 ॥

8. (ப-ரை) क्षौद्रं- தேன், दधि- தயிர், घृतं- நெய், लाजाः- பொரி, दर्भाः- தர்ப்பங்கள், सुमनसः- புஷ்பங்கள், पयः- பால், (இவைகளும் ஸித்தமாக வந்துவிட்டன,) शुभाचाराः- நல்ல ஆசாரத்தோடு கூடியும், सर्वाभरणभूषिताः- எல்லா ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டுமிருக்கிற, वेश्याः च एव- தாஸிகளும், (ஸித்தமாக வந்திருக்கிறார்கள்).

9. (ப-ரை) चन्द्रांशुविकचप्रख्यं- சந்திர கிரணம்போல் விஸ்தாரமான காந்தியுடையதும், काञ्चनं- ஸ்வர்ணத்தினால் செய்யப்பட்ட பிடியை யுடையதும், रत्नभूषितं- ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டும், उत्तमं- ச்ரேஷ்டமான, वाल्व्यजनं- சாமரமும், रामस्य- ராமனுக்காக, सज्जं- तिष्ठति- ஸித்தமாக இருக்கிறது.

10. (ப-ரை) चन्द्रमण्डलसंकाशं- சந்திரமண்டலத்திற்கு ஸமானமாயும், पाण्डुरम्- வெளுப்பாயும், द्युतिकरं- அழகை உண்டுபண்ணக்கூடியதும், श्रीमत्- அழகுள்ளதும ான, आतपत्रं च- குடையும், सज्जं- ஸித்தமாக, अभिषेकपुरस्कृतम्- பட்டாபிஷேகத்திற்காக எதிரில் வைக்கப்பட்டிருக்கிறது.

8. (பொ-ரை) தேன், தயிர், நெய், பொரி, தர்ப்பம், புஷ்பம், பால் இவைகளும் ஸித்தமாக இருக்கின்றன. நல்ல நடத்தையோடு கூடின தாஸிகளும், ஸமஸ்த ஆபரணங்களால் அலங்கரித்துக்கொண்டு வந்துவிட்டார்கள்.

9. (பொ-ரை) சந்திர கிரணம்போல் விஸ்தாரமான காந்தியுடையதும், நவரத்தினங்களிழைத்த தங்க பிடியுடன் கூடிய உத்தமமான சாமரமும், (விசிறியும்) ஸ்ரீராமனுடைய பட்டாபிஷேகத்திற்காக ஸித்தமாகவிருக்கிறது.

10. (பொ-ரை) சந்திரமண்டலம்போல் வட்டமாய் வெளுத்து சோபையுண்டுபண்ணக்கூடிய அழகானகுடையும், ஸித்தமாய் பட்டாபிஷேகத்திற்காக முன்னே வைக்கப்பட்டிருக்கிறது.

पाण्डुरश्च वृषः सज्जः पाण्डुरोऽश्वश्च सुस्थितः ।
प्रसृतश्च गजः श्रीमानौपवाह्यः प्रतीक्षते ॥ 11 ॥
अष्टौ च कन्या माङ्गल्याः सर्वाभरणभूषिताः ।
वादित्राणि च सर्वाणि बन्दिनश्च तथा परे ॥ 12 ॥
इक्ष्वाकूणां यथा राज्ये संभ्रियेताभिषेचनम् ।
तथा जातीयमादाय राजपुत्राभिषेचनम् ॥ 13 ॥
ते राजवचनात्तत्र समवेता महीपतिम् ।
अपश्यन्तोऽब्रुवन्को नु प्राज्ञो नः प्रतिवेदयेत् ॥ 14 ॥
नः पश्यामश्च राजानमुदितश्च दिवाकरः ।
यौवराज्याभिषेकश्च सज्जो रामस्य धीमतः ॥ 15 ॥

11. (ப-ரை) पाण्डुरः- வெளுப்பான, वृषः च- காளையும், सज्जः- ஸித்தமாகவிருக்கிறது, पाण्डुरः- வெளுப்பான, अश्वः च- குதிரையும், सुस्थितः- ஸித்தமாக வந்திருக்கிறது, प्रसृतः- மதஜலம் பெருகிக்கொண்டு, श्रीमान्- மிகவும் அழகாயிருக்கிற, औपवाह्यः- மஹாராஜா ஏரக்கூடிய, गजः च- யானையும், प्रतीक्षते- எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறது.

12. (ப-ரை) माङ्गल्याः- சுபகார்யத்திற்கு தகுந்தவர்களான, अष्टौ कन्याः च- எட்டு கன்யாப்பெண்களும், सर्वाभरण- भूषिताः- எல்லா ஆபரணங்களினாலும் அலங்கரிக்கப்பட்டு வந்திருக்கிறார்கள், सर्वाणि वादित्राणि च- எல்லா வாத்யங்களும் ஸித்தமாயிருக்கின்றன, तथा- அப்படியே, परे- மற்றவர்களான, बन्दिनः च- ஸ்துதி பாடகர்களும், (ஸித்தமாக வந்திருக்கிறார்கள்.)

13—14—15. (ப-ரை) इक्ष्वाकूणां- இக்ஷ்வாகுவம்சத்து அரசர்

11. (பொ-ரை) வெளுப்பான எருதும், வெளுப்பான குதிரையும், மஹாராஜா ஏறக்கூடிய மதஜலம் பெருகிக்கொண்டிருக்கிற பட்டத்து யானையும் ஸித்தமாகி, ஸ்ரீராமனுடைய பட்டாபிஷேகத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறதுகள்.

12. (பொ-ரை) மங்களமான கார்யத்திற்கு ஏற்றவர்களான எட்டு கன்யாப் பெண்கள் ஸர்வாலங்காரமும் செய்துகொண்டு வந்துவிட்டார். வீணை முதலான நான்குவித எல்லாவித வாத்யங்களும் ஸித்தமாகவிருக்கின்றன. அப்படியே மற்றவர்களான ஸ்துதி பாடகர்களும் வந்து விட்டார்கள்.

13—14—15. (பொ-ரை) இக்ஷ்வாகுகுலத்து அரசர்களின் ராஜ்யத்தில்

इति तेषु ब्रुवाणेषु सार्वभौमान्महीपतीन् ।
अब्रवीत्तानिदं सर्वान्सुमन्त्रो राजसत्कृतः ॥ 16

राज्ये- ராஜ்யத்தில், अभिषेचनम्- பட்டாபிஷேகத்தைக்குறித்து, यथा-எப்படி, संम्रियेत- பதார்த்தம் சேகரிக்கப்படுமோ, तथा जातीयं- அப்படிப்பட்ட ஜாதியான வஸ்துவை, आदाय-எடுத்துக்கொண்டு, ते- இந்த அரசர்கள், राजवचनात्- அரசனுடைய வார்த்தையினால், राजपुत्राभिषेचनम्- ராஜபுத்ரனுடைய பட்டாபிஷேகத்தைக்குறித்து, तत्र- அந்த அரண்மனை வாசலில், समवेताः सन्तः- ஒன்று சேர்ந்துகொண்டு, महीपतिम्- அரசனை, अपश्यन्तः- காணுதவர்களாய், कः- யார், नः- நம்மை. राज्ञः- அரசனுக்கு, प्रतिवेदयेत्- தெரிவிப்பார், राजानं च- ராஜாவையும், न पश्यामः- நாம் பார்க்கவில்லை, दिवाकरः च- ஸூர்யனும், उदितः- உதித்துவிட்டார், धीमतः- புத்திமானுன, रामस्य- ஸ்ரீராமனுடைய, यौवराज्याभिषेकः च- யௌவராஜ்ய பட்டாபிஷேகமும், सज्जः- ஸித்தமாக இருக்கிறது, इति- என்று, अब्रुवन्- சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

16. (பமை) इति- இவ்விதம், तेषु- அவர்கள், ब्रुवाणेषु सत्सु- சொல்லிக்கொண்டிருக்கையில், सार्वभौमान्- சக்ரவர்த்திகளாயிருக்கிற, तान् सर्वान् महीपतीन्- அந்த எல்லா அரசர்களேயும் பார்த்து, राजसत्कृतः- ராஜாக்களால் மரியாதை செய்யப்பட்ட, सुमन्त्रः- ஸுமந்த்ரர், इदं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னுர்.

எவ்விதம் பட்டாபிஷேகத்திற்குவேண்டிய, ஸாமக்ரிகளேச்சேர்ப்பது வழக்கமோ, அதைப்போலவே, ரத்தினம் முதலாகிய ஸமஸ்தவஸ்துக்களேயும் எடுத்துக்கொண்டு ராமனுடைய பட்டாபிஷேகத்திற்காக அரசனுடைய வார்த்தையினால் அரசனுடைய அரண்மனைவாசலில் வந்துசேர்ந்திருக்கின்ற அந்த அரசர்கள் தசரதமஹாராஜாவைக்காணுமல் நாமெல்லோரும் வந்திருப்பதை, அரசனுக்கு யார் தெரிவிப்பார்கள் அரசனை நமக்குக்காணக்கிடைக்கவில்லை, ஸூர்யோதயமும் ஆகிவிட்டது, மஹாபுத்திமானுன ஸ்ரீராமனுக்கு நிச்சயம் பண்ணியிருக்கிற யௌவராஜ்ய பட்டாபிஷேகமுஹூர்த்தகாலமும் நெருங்கிவிட்டது என்று சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

16. (பொமை) இவ்விதம் அவர்கள் சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது, ராஜாக்களினுல் கௌரவம் செய்யப்பட்ட ஸுமந்த்ரரானவர், சக்ரவர்த்திகளான அந்த எல்லா அரசர்களேயும் பார்த்து ஒருவார்த்தை சொன்னுர்.

रामं राज्ञो नियोगेन त्वरया प्रस्थितोऽस्म्यहम् ।
पूज्या राज्ञो भवन्तस्तु रामस्य च विशेषतः ॥ 17 ॥

अयं पृच्छामि वचनात्सुखमायुष्मतामहम् ।
राज्ञः संप्रतिबुद्धस्य यच्चाऽगमनकारणम् ॥ 18 ॥

इत्युक्त्वान्तःपुरद्वारमाजगाम पुराणवित् ।
सदाऽसक्तं च तद्वेश्म सुमन्त्रः प्रविवेश ह ॥ 19 ॥

17—18. (ப-ரை) राज्ञः- அரசனுடைய, नियोगेन- உத்திரவினால், रामं-ராமனை, (आनेतुं- அழைத்து வருவதற்கு), त्वरया- அவஸரத்துடன், अहं- நான், प्रस्थितः अस्मि- புறப்பட்டுக்கொண்டிருக்கிறேன், भवन्तस्तु- நீங்களும், राज्ञः- அரசனுக்கும், विशेषतः- இரனும் விசேஷமாக, रामस्य च- ராமனுக்கும், पूज्याः- கௌரவிக்கத்தக்கவர்கள், आयुष्मताम्- தீர்க்காயுஸ்ஸுக்களான உங்களுடைய, वचनात्- வார்த்தையினால், अहं- நான், सुखं- அரசனுடைய ஸுகத்தை, अयं पृच्छामि- இதோ கேட்கிறேன், सप्रतिबुद्धस्य- விழித்துக்கொண்டிருக்கிற, राज्ञः- அரசனுடைய, आगमनकारणम्- இங்கு வராத காரணம் यत् च- எதுவோ, (அதையும்) (पृच्छामि-கேட்கிறேன்).

19 (ப-ரை) पुराणवित्- பழைய காலத்து வ்ருத்தாந்தத்தையறிந்தவரான. सुमन्त्रः- ஸுமந்த்ரர், इति उक्त्वा- இவ்விதம் சொல்லிவிட்டு, अन्तः पुरद्वारं- அந்தப்புரத்தின் வாசலை, आजगाम- அடைந்தார், सदा असक्तं- எப்பொழுதும் தடைப்படாமலிருக்கிற, तत् वेश्म- அந்த அரண்மனையை, प्रविवेश ह- ப்ரவேசித்தார்.

17—18. (பொ-ரை) மஹாராஜாவின் உத்திரவினால் ராமனை இங்கு அழைத்துவர நான் அவஸரமாய்ப் புறப்பட்டுக்கொண்டிருக்கிறேன். ஆகிலும் நீங்கள், அரசனுக்கும், விசேஷமாக ராமனுக்கும் கௌரவிக்கத்தகுந்தவர்களாகையால் மறுபடியும் நான் உள்ளே சென்று ஆயுஷ்மான்களாகிய நீங்கள் மஹாராஜாவை ஸுகப்ரச்னம் செய்ததாகவும் சொல்லி, விழித்திருந்தும் இங்கு நீர் வராத காரணம் என்னவென்றும் நீங்கள் கேட்டதாகக் கேழ்க்கிறேன்.

19. (பொ-ரை) வெளியிலிருந்து வந்திருக்கிற அரசர்களை, மரியாதைசெய்வதாகிற பழைய வ்ருத்தாந்தத்தை அறிந்தவரான அந்த ஸுமந்த்ரரும் இவ்விதம் சொல்லிவிட்டு, அந்தப்புரத்தின் வாசலுக்குப்போய், தான் உள்ளே நுழைவதற்கு, எப்பொழுதும் தடையில்லாமலிருக்கிற அந்த மாளிகையில் ப்ரவேசித்தார்.

तुष्टावास्य तदा वंशं प्रविश्य स विशांपतेः ।
शयनीयं नरेन्द्रस्य तदासाद्य व्यतिष्ठत ॥ 20 ॥

सोऽत्यासाद्य तु तद्वेश्म तिरस्करणिमन्तरा ।
आशीर्भिर्गुणयुक्ताभिरभितुष्टाव राघवम् ॥ 21 ॥

सोमसूर्यौ च काकुत्स्थ शिववैश्रवणावपि ।
वरुणश्चाग्निरिन्द्रश्च विजयं प्रदिशन्तु ते ॥ 22 ॥

20. (ப-ரை) सः- அந்த ஸுமந்த்ரர் प्रविश्य-உள்ளே நுழைந்து, तदा-அப்பொழுது, अस्य विशांपतेः-இந்த அரசனுடைய, वंशं- குலத்தை, तुष्टाव- ஸ்தோத்திரம் செய்தார், तदा-அப்பொழுது, नरेन्द्रस्य-அரசனுடைய, शयनीयं-படுக்கை அறையை, आसाद्य- அடைந்து, व्यतिष्ठत- நின்றார்.

21. (ப-ரை) सः- அந்த ஸுமந்த்ரர், तत् वेश्म- அந்த சயனக்ருஹத்தை, अति आसाद्य- மிகவும் பக்கத்தில் சென்று, तिरस्करणिं- திரையை, अन्तरा- நடுவில் போட்டு, गुणयुक्ताभिः- குணங்களுடன்கூடிய, आशीर्भिः- ஆசீர்வாதங்களினால், राघवम्- ரகுகுலத்தில் பிறந்த தசரதனை, अभितुष्टाव- ஸ்தோத்ரம்செய்யத்துடங்கினார்.

22. (ப-ரை) हे काकुत्स्थ- ககுத்ஸ்தகுலத்தில் பிறந்த மஹாராஜனே, सोमसूर्यौ च- சந்திரனும், ஸூர்யனும், शिववैश्रवणौ अपि- சிவனும் குபேரனும், वरुणः च- வருணனும், अग्निः- அக்கியும், इन्द्रः च-இந்திரனும். ते- உமக்கு, विजय- ஜயத்தை, प्रदिशन्तु- கொடுக்கவேண்டும்

20. (பொ-ரை) ஸுமந்த்ரரும் அந்த மஹாராஜருடைய சயனக்ருஹத்தை அடைந்து, வம்சாவளிகளை ஸ்தோத்ரம் பண்ணிக்கொண்டு நின்றார்.

21. (பொ-ரை) அந்த ஸுமந்த்ரர் அந்த சயன க்ருஹத்தில் வெரம்பவும் ஸமீபத்தில் சென்று, திரையின் ஸமீபத்தில் நின்று, மஹாராஜருடைய கல்யாண குணங்களை வெளிக்காட்டக்கூடிய ஆசீர்வாதங்களினால் ரகுகுலத்து அரசனான தசரதனை, ஸ்தோத்ரம் செய்தார்.

22. (பொ-ரை) ஹே காகுத்ஸ்தனே! சந்திரனும், ஸூர்யனும், சிவனும், குபேரனும், வருணனும், அக்கியும், இந்திரனும், உமக்கு விஜயத்தைக்கொடுக்க வேண்டும்.

गता भगवती रात्रिः कृतं कृत्यमिदं तव ।
बुध्यस्व नृपशार्दूल कुरु कार्यमनन्तरम् ॥ 23 ॥

ब्राह्मणा बलमुख्याश्च नैगमाश्चागता नृप ।
दर्शनं प्रतिकाङ्क्षन्ते प्रतिबुध्यस्व राघव ॥ 24 ॥

स्तुवन्तं तं तदा सूतं सुमन्त्रं मन्त्रकोविदम् ।
प्रतिबुध्य ततो राजा इदं वचनमब्रवीत् ॥ 25 ॥

23. (ப-ரை) भगवती- மஹாபாக்யம் பொருந்திய, रात्रिः- இரவானது, गता- போய்விட்டது, तव-உம்முடைய, कृत्यं-செய்யத்தகுந்த, इदं- இந்த கார்யமானது, कृतं- செய்யப்பட்டது, नृपशार्दूल- ராஜோத்தமனே. बुध्यस्व- எழுந்திரும், अनन्तरम्- இனி செய்யவேண்டிய, कार्यं- கார்யத்தை, कुरु- செய்யும்.

24. (ப-ரை) ब्राह्मणाः- ப்ராம்மணர்களும், बलमुख्याः च- ஸேனைகளில் தலைவர்களும், नैगमाः च- வ்யாபாரிகளும், आगताः- வந்திருக்கிறார்கள், हे नृप- மஹாராஜனே! दर्शनं- உம்முடைய தரிசனத்தை, प्रतिकाङ्क्षन्ते- எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள், हे राघव- ஹே ரகுகுலத்தரசனே! प्रतिबुध्यस्व- எழுந்திரும்.

25. (ப-ரை) ततः- பிறகு, राजा- அரசன், तदा- அப்பொழுது, स्तुवन्तं- ஸ்தோத்ரம் பண்ணிக்கொண்டும், मन्त्रकोविदम्- மந்த்ராலோசனையில் தேர்ந்தவரும், सूतं- ஸாரதியுமான, तं सुमन्त्रं- அந்த ஸுமந்த்ரரை, प्रतिबुध्य- தெரிந்துகொண்டு, इदं वचनं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

23. (பொ-ரை) மிகவும் மங்களகரமான ராத்ரியானது சென்றது. நாங்கள் செய்யவேண்டிய உம்முடைய கார்யம் செய்தாய்விட்டது. ஹே ராஜோத்தமனே! இனி நீர் எழுந்திருந்து செய்யவேண்டிய கார்யத்தைச் செய்யவேண்டும்

24. (பொ-ரை) ப்ராம்மணர்களும், ஸேனைத்தலைவர்களும், வ்யாபாரிகளும் வந்துவிட்டார்கள். ஹே ராகவனே! அவர்கள் உம்முடைய தரிசனத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். நீர் எழுந்திரும்.

25. (பொ-ரை) பிறகு ராஜா, தான் திரைக்குள் இருந்தும் அவ்விதம் ஸ்தோத்ரம் பண்ணுகின்ற மந்த்ராலோசனையில் தேர்ந்தவரான ஸுமந்த்ரரை குரலால் தெரிந்துகொண்டு, அவரைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

राममानय सूतेति यदस्म्यभिहितोऽनया ।
किमिदं कारणं येन ममाज्ञा प्रतिहन्यते ॥ 26 ॥

न चैव संप्रसुप्तोऽहमानयेहाशु राघवम् ।
इति राजा दशरथः सूतं तत्रान्वशात्पुनः ॥ 27 ॥

सराजवचनं श्रुत्वा शिरसा प्रतिपूज्य तम् ।
निर्जगाम नृपावासात् मन्यमानः प्रियं महत् ॥ 28 ॥

26. (ப-ரை) हे सूत- ஹே ஸாரதியே! रामं- ராமனை, आनय इति- அழைத்து வாருமென்று, अनया- இந்த கைகேயியால், अभिहितः असि- சொல்லப்பட்டீர், इति यत्- என்று யாதொன்றுண்டோ, येन- எந்த காரணத்தினால், मम आज्ञा- என்னுடைய உத்திரவானது, प्रतिहन्यते- தடுக்கப்படுகின்றதோ, इदं कारणं- இந்த காரணமானது, किं- என்ன?

27. (ப-ரை) अहं- நான், संप्रसुप्तः न चैव- தூங்கவே இல்லை, इह- இவ்விடத்திற்கு, आशु- சீக்ரமாக, राघवम्- ராமனை, आनय- அழைத்துவாரும் इति- என்று, दशरथः- राजा- தசரத மஹாராஜா, तत्र- அவ்விடத்தில், सूतं- ஸாரதியை, पुनः- மறுபடியும், अन्वशात्- கட்டளையிட்டார்.

28. (ப-ரை) सः- அந்த ஸுமந்த்ரர், राजवचनं- அரசனுடைய வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, तम्- அந்த அரசனை, शिरसा- தலையினால், प्रतिपूज्य- வணங்கிவிட்டு, महत् प्रियं- பெரியதான ப்ரியமாக, मन्यमानः- எண்ணிக்கொண்டு, नृपावासात्- அரசனுடைய அரண்மனையிலிருந்து, निर्जगाम- வெளியில் வந்தார்.

26. (பொ-ரை) ஸுமந்த்ரரே! ராமனை இங்கு அழைத்துவாருமென்று கைகேயி உம்மிடம் சொல்லவில்லையா! அது எனக்கு ஸம்மதமாகையால், நானே சொன்னதுபோலல்லவா! அப்படியிருக்க ஏன் நான் சொன்னபடி செய்யவில்லை,

27. (பொ-ரை) "அரசன் தூங்குகிறபடியால் கைகேயி சொன்னது ராஜாவுக்கும் ஸம்மதமோ அல்லவோ" என்று ஒருஸமயம் உமக்கு ஸம்சயமுண்டாகலாம். அப்படி நான் தூங்கவே இல்லை, சீக்ரமாக ராமனை இங்கு அழைத்துவாரும் என்று தசரதமஹாராஜன் இங்கு ஸுமந்த்ரருக்கு உத்திரவு பண்ணினார்.

28. (பொ-ரை) ஸுமந்த்ரரும் ராஜா சொல்லுவதைக்கேட்டு தலையால் அவரை வணங்கி "ராமனை அழைத்துவரும்படி கட்டளையிட்டது பட்டாபிஷேகத்திற்காக" வென்று மிகப்ரியமாக எண்ணிக்கொண்டு அரசன் இருக்கும் அரண்மனையிலிருந்துபுறப்பட்டார்.

प्रपन्नो राजमार्गं च पताकाध्वजशोभितम् ।
हृष्टः प्रमुदितः सूतो जगामाशु विलोकयन् ॥ 29 ॥

स सूतस्तत्र शुश्राव रामाधिकरणाः कथाः ।
अभिषेचनसंयुक्ताः सर्वलोकस्य हृष्टवत् ॥ 30 ॥

ततो ददर्श रुचिरं कैलासशिखरप्रभम् ।
रामवेश्म सुमन्त्रस्तु शक्रवेश्मसमप्रभम् ॥ 31 ॥

---

29. (ப-ரை) सूतः- ஸுமந்த்ரரானவர், पताकाध्वजशोभितम्- கொடிகளாலும், த்வஜங்களாலும் விளங்கிக்கொண்டிருக்கிற, राजमार्गं- ராஜவீதியை, प्रपन्नः च- அடைந்தும், हृष्टः- மயிர்க்கூச்சலெரிந்தவராயும், प्रमुदितः सन्- ஆனந்தப்பட்டுக்கொண்டு, विलोकयन्- (ராஜமார்க்கத்தைப்) பார்த்துக்கொண்டே, आशु- சீக்ரமாக, जगाम- சென்றார்.

30. (ப-ரை) सः सूतः- அந்த ஸாரதியானவர், तत्र- அந்த ராஜமார்க்கத்தில், रामाधिकरणाः- ராமன் விஷயமாகவும், अभिषेचनसंयुक्ताः- பட்டாபிஷேக ப்ரஸ்தாபமுள்ளதுமான, सर्वलोकस्य- ஸர்வ ஜனத்தினுடைய, कथाः- கதைகளை, हृष्टवत्- ஸந்தோஷமுள்ளவராய்க்கொண்டு, शुश्राव- கேட்டார்.

31. (ப-ரை) ततः- பிறகு, सुमन्त्रस्तु- ஸுமந்த்ரரும், रुचिरं- அழகாயும், कैलासशिखरप्रभम्- கைலாஸசிகரம்போல் காந்தியுள்ளதாயும், शक्रवेश्मसमप्रभम्- தேவேந்திரன் அரண்மனைக்கு ஸமானமான காந்தியையுடையதுமான, रामवेश्म- ஸ்ரீராமனுடைய க்ருஹத்தை, ददर्श- பார்த்தார்.

29. (பொ-ரை) அந்த ஸுமந்த்ரர் கொடிகளாலும், த்வஜங்களாலும், அலங்கரிக்கப்பட்ட அழகான ராஜமார்க்கத்தை அடைந்து மயிர்க்கூச்சலெரிந்து பரமானந்தத்துடன் ராஜமார்க்கத்தைப்பார்த்துக்கொண்டே சீக்ரமாகச்சென்றார்.

30. (பொ-ரை) அந்த ஸாரதியானவர், ராஜவீதியில் ராமன் விஷயமாகவும் பட்டாபிஷேக ப்ரஸ்தாபத்துடன் கூடியதுமான ஸகலஜனங்களுடைய கதைகளை ஸந்தோஷத்துடன் கேட்டுக்கொண்டே சென்றார்.

31. (பொ-ரை) பிறகு ஸுமந்த்ரரும், உயரத்தில் கைலாஸசிகரத்திற்கு ஸமானமாயும், இந்திரனுடைய அரண்மனைபோல் ஸகல ஸம்பத்துக்களும் நிறைந்து அழகாயிருக்கிற ஸ்ரீராமனுடைய க்ருஹத்தைப் பார்த்தார்.

महाकवाटविहितं वितर्दिशतशोभितम् ।
काञ्चनप्रतिमैकाग्रं मणिविद्रुमतोरणम् ॥ 32 ॥
शारदाभ्रघनप्रख्यं दीप्तं मेरुगुहोपमम् ।
मणिभिर्वरमाल्यानां सुमहद्भिरलङ्कृतम् ॥ 33 ॥
मुक्तामणिभिराकीर्णं चन्दनागरुधूपितम् ।
गन्धान्मनोज्ञान्विसृजद्दार्दरं शिखरं यथा ॥ 34 ॥
सारसैश्च मयूरैश्च विनदद्भिर्विराजितम् ।
सुकृतेहामृगाकीर्णं सुकीर्णं भक्तिभिस्तथा ॥ 35 ॥
मनश्चक्षुश्च भूतानामाददत्तिग्मतेजसा ।
चन्द्रभास्करसंकाशं कुबेरभवनोपमम् ॥ 36 ॥
महेन्द्र धामप्रतिमं नानापक्षिसमाकुलम् ।
मेरुशृङ्गसमं सूतो रामवेश्म ददर्श ह ॥ 37 ॥
उपस्थितैः समाकीर्णं जनैरञ्जलिकारिभिः ।
उपादाय समाक्रान्तैस्तथा जानपदैर्जनैः ॥ 38 ॥
रामाभिषेकसुमुखैरुन्मुखैः समलङ्कृतम् ।
महामेघसमप्रख्यमुदग्रं सुविभूषितम् ॥ 39 ॥
नानारत्नसमाकीर्णं कुब्जकैरातकावृतम् ॥ 40 ॥

32-40 (ப-ரை) महाकवाटविहितं-பெரிய கதவுகள் போடப்பட்டும், वितर्दिशतशोभितम्-அநேகம் மேடைகளால் விளங்கிக்கொண்டும், काञ्चनप्रतिमैकाग्रं- ஸ்வர்ணமயமான பொம்மைகளால் முக்யமான மேல்பாகத்தை உடையதாயும், मणिविद्रुमतोरणम्- ரத்னங்களாலும், பவழங்களாலும் நிறைந்த முன் கோபுரவாயலை உடையதாயும், शारदाभ्रघनप्रख्यं- சரத்கால மேகத்திற்கு ஸமானமாயும், दीप्तं- ப்ரகாசமுள்ளதாயும், मेरुगुहोपमम्- மஹாமேருவின் குஹைக்கு ஒப்பானதாயும், वरमाल्यानां- சிரேஷ்டமான ஸ்வர்ணபுஷ்பமாலைகளுடைய, सुमहद्भिः- மிகவும் பெரிதான, मणिभिः- ரத்னங்களால், अलङ्कृतम्- அலங்கரிக்கப்பட்டும், मुक्तामणिभिः- முத்துக்களால், आकीर्णं- நிறைந்ததாயும், चन्दनागरुधूपितम्-

32–40. (பொ-ரை) பெரிய கதவுகள் போட்டு அநேகம் மேடைகளால் விளங்கிக்கொண்டு நுனிகளில் ஸ்வர்ணமயமான பொம்மைகள் வைத்து மணிகளும, பவழங்களும், இழைத்த வெளிவீதியால் அலங்கரிக்கப்பட்டும், சரத்காலமேகம் போல் வெளுத்து ப்ரகாசமுள்ளதாயும், மஹாமேருவின் குஹைக்கு ஒப்பானதாயும், ச்ரேஷ்டமான ஸ்வர்ணபுஷ்பமாலைகளின் நடுவில் இருக்கிற மிகவும ப்ரகாசமுள்ள ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டும், முத்துக்களால் நிறைந்தும், சந்தனம்

சந்தனத்தினுடையவும், அகில்க்கட்டையினுடையவும், தூபம் போடப்பட்டு, दार्दरं- தர்தரமென்னும் மலையினுடையதான, शिखरं यथा- சிகரம்போல், मनोज्ञान्- மனதிற்கு ப்ரியமான, गन्धान्- வாஸனைகளை, विसृजत्- வீசிக்கொண்டும், विनदद्भिः- விதம்விதமாக சப்தித்துக்கொண்டிருக்கிற, सारसैश्च- ஸாரஸபக்ஷிகளாலும், मयूरैश्च- மயில்களாலும், विराजितम्- விளங்கிக்கொண்டும், सुकृतेहामृगाकीर्णं- நன்றாக வேலைசெய்யப்பட்ட செந்நாய்களால் நிறைந்ததாயும், तथा- அப்படியே, भक्तिभिः- சில்பிகளுடைய ஸூக்ஷ்மமான வேலைகளினால், सुकीर्णं- நன்றாக நிறைந்ததாயும், तिग्मतेजसा- அதிகமான காந்தியினால், भूतानां- ப்ராணிகளுடைய, मनः- மனதையும், चक्षुश्च- கண்ணையும், आददत्- இழுக்கின்றதாயும், चन्द्रभास्करसकाशं- சந்திரன்போலும், ஸூர்யன்போலவும் ப்ரகாசித்துக்கொண்டும், कुबेरभवनोपमम्- குபேரனுடைய க்ருஹத்திற்குத்துல்யமாயும், महेन्द्रधामप्रतिमं- இந்திரனுடைய அரண்மனைக்கு ஒப்பானதாயும், नानापक्षिसमाकुलम्- நானாவிதங்களான பக்ஷிகளால் நிறைந்தும, मेरुशृङ्गसम- மஹாமேருவின் சிகரத்திற்கு ஸமானமாயும், उपस्थितैः- ஸமீபத்தில் நின்று, अञ्जलिकारिभिः- அஞ்ஜலிசெய்துகொண்டிருக்கிற, जनैः- ஜனங்களால், समाकीर्णं- நிறைந்ததாயும், तथा- அப்படி, उपादाय- காணிக்கைகளை எடுத்துக்கொண்டு, समाक्रान्तैः- வந்திருக்கிற, रामाभिषेकसुमुखैः- ராமபட்டாபிஷேகவிஷயத்தில் ஸந்தோஷமுள்ளவர்களாயும், उन्मुखैः- பட்டாபிஷேகத்தை எதிர்பார்த்துக்கொண்டுமிருக்கிற, जानपदैः जनैः- தேசத்துஜனங்களால், समलङ्कृतं-நன்றாய் அலங்கரிக்கப்பட்டும், महामेघसमप्रख्य- பெரிதான மேகத்திற்கு ஸமானமான காந்தியுடையதாயும். उदग्रं- உயர்ந்ததாய், सुविभूषितम्- நன்றாய் அலங்கரிக்கப்பட்டும், नानारत्नसमाकीर्णं- பலவிதங்களான ரத்னங்களால் நிறைந்ததாயும், कुब्जकैरातकावृतम्- கூனர்களாலும், குள்ளமான ஜனங்களின் கூட்டத்தாலும் சூழப்பட்டும் இருக்கிற, रामवेश्म- ஸ்ரீராமனுடைய திருமாளிகையை, सुमन्त्रः- ஸுமந்த்ரர், ददर्श ह- ஆச்சர்யத்துடன்பார்த்தார்.

---

அகில்சகட்டை தூபங்களால் தூபித்து தர்தரமென்னும் பர்வதத்தின் சிகரம்போல் மனதிற்கு த்ருப்திகரமான வாஸனைகளை வீசிக்கொண்டும், விதம்விதமாகக் கூவுகின்ற ஸாரஸம, மயில், இவைகளால் விளங்கியும், நன்றாக சித்திரத்தில் எழுதப்பட்ட, செந்நாய்களால் நிறைந்தும், சில்பிகளுடைய மிகவும் ஸூக்ஷ்மமான கைத்தொழில்கள் நிறைந்தும, அதிகமான ப்ரகாசத்தினால் பார்க்கிற ப்ராணிகளுடைய கண்களையும், மனதையும, கவருகின்றதாயும், சந்திரஸூர்யர்போல் ப்ரகாசித்துக்கொண்டும, குபேரனுடையவும, இந்திரனுடையவும அரண்மனைக்கு ஸமானமாயும, நானாவிதங்களான பக்ஷிஜாதிகளால் நிறைந்தும. மஹாமேருவின் சிகரத்திற்கு ஸமானமாயும, ஸமீபத்தில் நின்று கைகூப்பிக்கொண்டுமிருக்கிற ஜனங்களால சூழப்பட்டதாயும், ஸ்ரீராமனுடைய பட்டாபிஷேகத்தில் மிகவும் ஆனந்தத்தினால் பேராசையுடன் உபஹாரங்களை (காணிக்கைகள்) எடுத்துக்கொண்டு வெளிநாடுகளில் நின்றும் வந்திருக்கிற ஜனங்களால் அலங்கரிக்கப்பட்டும பெரிய மேகத்திற்கு ஸமானமாய் உயர்ந்து நன்றாய் அலங்கரிக்கப்பட்டு நானாவிதமான ரத்னங்கள் நிறைந்தும், கூனர்களாலும், குள்ளர்களுடைய கூட்டத்தாலும் நிறைந்துமிருக்கிற ஸ்ரீ ராமனுடைய திருமாளிகையை ஸுமந்த்ரர் கண்டார்.

स वाजियुक्तेन रथेन सारथिर्नराकुलं राजकुलं विलोकयन् ।
वरूथिना रामगृहाभिपातिना पुरस्य सर्वस्य मनांसि रञ्जयन् ॥ 41 ॥

ततः समासाद्य महाधनं महत्प्रहृष्टरोमा स बभूव सारथिः ।
मृगैर्मयूरैश्च समाकुलोल्बणं गृहं वरार्हस्य शचीपतेरिव ॥ 42 ॥

41. (ப-ரை) सः- அந்த ஸுமந்த்ரர், वाजियुक्तेन- குதிரைகட்டியும், वरूथिना- காவலுடையதாயும், रामगृहाभिपातिना- ராமனுடைய திருமாளிகையை நோக்கிவருகின்றதுமான, रथेन- தேரோடு, राजकुलं- ராஜக்ருஹத்தை, विलोकयन्- பார்த்துக்கொண்டு, सर्वस्य- ஸமஸ்தமான, पुरस्य- நகரத்தினுடைய, मनांसि- மனதுகளை, रञ्जयन्- ஸந்தோஷப் படுத்தினர்.

42. (ப-ரை) ततः- பிற்பாடு, सः सारथिः- அந்த ஸாரதியான ஸுமந்த்ரர், महाधनं- அளவற்ற தனமுள்ளதாயும், महत्- விசாலமாயும், मृगैः- மருகங்களாலும், मयूरैः च- மயில்களாலும், समाकुलोल्बणं- இங்குமங்கும் திரிகின்ற ஜனங்களாலும் விளங்குகின்றதாயும், शचीपतेरिव- இந்திரனைப்போல், वरार्हस्य- உயர்ந்த வஸ்துவை அநுபவிக்கத்தகுந்தவரான, रामस्य-ஸ்ரீராமனுடைய, गृहं- திருமாளிகையை, समासाद्य- அடைந்து, प्रहृष्टरोमा- (ஸந்தோஷத்தினல்) மயிர்க்கூச்சலெறிந்தவராக, बभूव- ஆனர்.

---

41. (பொ-ரை) அந்த ஸுமந்த்ரர் குதிரைகள் கட்டி, ரதம் ஒன்றோடொன்று மோதிக்கொண்ட காலத்தில் ரதம் கெடாமல் இருக்கவேண்டி ரதத்தினுடைய ரக்ஷணார்த்தமாக முன்னே வைக்கப்பட்ட ஒருவிதமான கருவியோடுகூடினதாய், ராமனுடைய திருமாளிகையைக்குறித்து வருகின்றதுமான தேரின்மேலேறி ராஜக்ருஹத்தைப் பார்த்துக்கொண்டு வருகிறபோது பட்டணத்திலிருக்கிற ஸமஸ்த ஜனங்களுடைய மனதுகளை ஸந்தோஷப்படுத்தினர்.

42. (பொ-ரை) பிறகு ஸாரதியான ஸுமந்த்ரர், அளவற்ற தனமுடையதாயும், விசாலமாயும் ம்ருகங்களும், மயில்களும் அங்குமிங்கும் ஸஞ்சரிக்கின்ற ஜனங்களும் நிறைந்து அழகாய் இந்திரனுடைய அரண்மனைபோன்ற ஸ்ரீராமனுடைய திருமாளிகையை அடைந்து ஸந்தோஷத்தினல் தேஹமெல்லாம் மயிர்க்கூச்சலெறிந்தார்.

स तत्र कैलासनिभाः स्वलङ्कृताः प्रविश्य कक्ष्यास्त्रिदशालयोपमाः ।
प्रियान्नरान्राममते स्थितान्बहूनपोह्य शुद्धान्तमुपस्थितो रथी ॥ 43 ॥

स तत्र शुश्राव च हर्षयुक्ता रामाभिषेकार्थकृता जनानाम् ।
नरेन्द्रसूनोरभिमङ्गलार्थाः सर्वस्य लोकस्य गिरः प्रहृष्टः ॥ 44 ॥

43. (ப-ரை) रथी- ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு, सः- அந்த ஸுமந்த்ரர், तत्र- அவ்விடத்தில், कैलासनिभाः- கைலாஸமலைக்கு ஸமானங்களாயும், स्वलंकृताः- நன்றாக அலங்காரம் செய்யப்பட்டும், त्रिदशालयोपमाः- தேவர்களின் க்ருஹங்களுக்கு ஸமானங்களுமான, कक्ष्याः- கட்டுகளை, प्रविश्य- ப்ரவேசித்து, राममते स्थितान्- ராமனுடைய இஷ்டப்படி இருக்கிறவர்களாயும், प्रियान्- ராமனுக்கு ப்ரியமுள்ளவர்களுமான, बहून् नरान्- அநேகம் ஜனங்களை, अपोह्य- தாண்டிக்கொண்டு, शुद्धान्तं- அந்தப்புரத்தை, उपस्थितः- அடைந்தார்.

44. (ப-ரை) सः- அந்த ஸுமந்த்ரர், तत्र- அவ்விடத்தில், हर्षयुक्ताः- ஸந்தோஷமுள்ளதும், रामाभिषेकार्थकृताः- ஸ்ரீராமனுடைய பட்டாபிஷேகத்திற்காக சொல்லப்பட்டவைகளாயும், नरेन्द्रसूनोः- ராஜபுத்திரனான ராமனுடைய, अभिमंगलार्थाः- மங்களத்தையே ப்ரயோஜனமாக உடைய, सर्वस्य लोकस्य-ஸமஸ்தலோகத்தினுடைய, जनानाम्- ஜனங்களுடைய, गिरः- வார்த்தைகளை, प्रहृष्टः सन्- ஸந்தோஷமுள்ளவராய்க்கொண்டு, शुश्राव- காதால் கேட்டுக்கொண்டிருந்தார்.

43 (பொ-ரை) அவ்விடத்தில் ஸுமந்த்ரர் தேரிலேறிக்கொண்டே, கைலாஸமலைக்கு ஸமானமாயும், அலங்காரம் செய்யப்பட்டு, தேவர்களுடைய அரண்மனைக்கு ஒப்பானவைகளாயுமிருக்கிற, மூன்று கட்டுகளையும் நுழைந்து, ராமனுடைய அபிப்ராயத்தை அநுஸரிக்கிறவர்களாயும், ஸ்ரீராமனுக்கு இஷ்டர்களுமான அநேக ஜனங்களை தாண்டி அந்தப்புரத்தின் ஸமீபத்தில் போய் நின்றார்.

44. (பொ-ரை) அந்த ஸந்தோஷத்துடன் ராமனுடைய பட்டாபிஷேக விஷயமாகவும், ராஜபுத்திரனான ஸ்ரீராகவனுடைய மங்களத்திற்காகவும், சொல்லப்பட்ட ஸமஸ்த ஜனங்களுடைய வார்த்தைகளை ஸந்தோஷத்துடன் கேட்டுக்கொண்டிருந்தார்

महेन्द्रसद्मप्रतिमं तु वेश्म रामस्य रम्यं मृगपक्षिजुष्टम् ।
ददर्श मेरोरिव शृङ्गमुच्चं विभ्राजमानं प्रभया सुमन्त्र ॥ 45 ॥
उपस्थितैरञ्जलिकारकैश्च सोपायनैर्जानपदैश्च मर्त्यैः ।
कोट्या परार्द्धैश्च विमुक्तयानैः समाकुलं द्वारपथं ददर्श ॥ 46 ॥
ततो महामेघमहीधराभं प्रभिन्नमत्यङ्कुशमप्रसह्यम् ।
रामौपवाह्यं रुचिरं ददर्श शत्रुंजयं नागमुदग्रकायम् ॥ 47 ॥

---

45. (ப-ரை) सुमन्त्रः—ஸுமந்த்ரர், महेन्द्रसद्मप्रतिमं- இந்திரனுடைய அரண்மனைக்கு ஸமானமாய், रम्यं- அழகாயும், मृगपक्षिजुष्टम्- ம்ருகங்களாலும் பக்ஷிகளாலும், நிறைந்தும், मेरोः शृङ्गं इव- மஹாமேருவின் சிகரம்போல், उच्चं- உயர்ந்தும், प्रभया- காந்தியினால், विभ्राजमानं- விளங்கிக்கொண்டுமிருக்கிற, रामस्य- ஸ்ரீராமனுடைய, वेश्म- திருமாளிகையை, ददर्श- பார்த்தார்.

46. (ப-ரை) सोपायनैः- காணிக்கைகளோடுகூடினவர்களாயும், उपस्थितैः- வந்தும், अञ्जलिकारकैश्च- அஞ்ஜலிசெய்துகொண்டும், कोट्या- கோடிகணக்குக்குள்ளவர்களாயும், परार्द्धैश्च- பரார்த்தமென்கிற கணக்கினால் எண்ணப்பட்டவர்களுமான, जानपदैः- தேசத்திலிருந்துவந்திருக்கிற, मर्त्यैः च- மனிதர்களாலும், विमुक्तयानैः- அவர்களால் விடப்பட்ட வாஹனங்களாலும, समाकुलं- நான்குபுறங்களிலும் சூழப்பட்டிருக்கிற, द्वारपथं- கோபுரவாசல்வழியை, ददर्श- பார்த்தார்.

47. (ப-ரை) ततः- பிறகு, महामेघमहीधराभं- பெரிய மேகத்திற்கும் பர்வதத்திற்கும் ஸமானமாய், प्रभिन्न- மதம்பிடித்து, अत्यङ्कुशं- மாவெட்டியையும் தள்ளிவிட்டு, अप्रसह्यम्- ஒருவராலும் தடுக்கமுடியாமலிருக்கிற, उदग्रकायम्- உன்னதமான சரீரத்தின் முன்பாகத்தை உடையதான, रुचिरं- அழகான, रामौपवाह्यं- ராமன் ஏறக்கூடிய வாஹனமான, शत्रुंजयं नाग- சத்ருஞ்ஜயம் என்கிற யானையை, ददर्श- பார்த்தார்.

45. (பொ-ரை) ஸுமந்த்ரர் இந்திரனுடைய அரண்மனைக்கு ஸமானமாய் அழகுள்ளதுமாய், ம்ருகங்களும் பக்ஷிகளும் நிறைந்து மஹாமேருவின் சிகரம்போல் உயர்ந்தும், காந்தியினால் விளங்கிக்கொண்டுமிருக்கிற ஸ்ரீராமனுடைய திருமாளிகையைப் பார்த்தார்.

46. (பொ-ரை) உபஹாரங்களை எடுத்துக்கொண்டுவந்து கைகூப்பிக்கொண்டு நிற்கிற கோடிக்கணக்கும் பரார்த்தக்கணக்குமுள்ள தேசத்து ஜனங்களாலும், அவர்கள் தேசத்திலிருந்து வந்துவிட்டிருக்கிற பல்லக்கு வண்டி முதலாகிய வாஹனங்களாலும், நிறைந்திருக்கிற அரண்மனை வாசல் வழியைப்பார்த்தார்.

47. (பொ-ரை) பிறகு, பெரிய மேகத்திற்கும். பர்வதத்திற்கும் ஸமானமாயும், மதம் பிடித்து மாவெட்டியை தள்ளிவிட்டு, ஒருவராலும் அடக்கமுடியாததும், உயர்ந்த முன்பாகத்தை உடையதுமான ஸ்ரீராமன் ஏறக்கூடிய அழகான சத்ருஞ்ஜயம் என்கிற யானையைக்கண்டார்.

स्वलङ्कृतान्साश्वरथान्सकुञ्जरानमात्यमुख्याञ्शतशश्च वल्लभान् ।
व्यपोह्य सूतः सहितान्समंततः समृद्धमन्तःपुरमाविवेश ॥ 48 ॥

तदद्रिकूटाचलमेघसन्निभं महाविमानोत्तमवेश्मसङ्घवत् ।
अवार्यमाणः प्रविवेश सारथिः प्रभूतरत्नं मकरो यथार्णवम् ॥ 49 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे

पञ्चदशः सर्गः ॥ 15 ॥

48. (ப-ரை) सूतः- ஸாரதியான ஸுமந்த்ரர், स्वलङ्कृतान्- நன்றாய் அலங்கரிக்கப்பட்டவராயும், साश्वरथान्- குதிரைகளுடனும், ரதங்களுடனும், கூடினவர்களாயும், सकुञ्जरान्- யானைகளோடுகூடினவர்களாயும், वल्लभान्- அரசனுக்கு ரொம்பவும் ப்ரியமாயும், शतशश्च- நூற்றுக்கணக்காக, सहितान्- கூட்டங்கூடிக்கொண்டிருக்கிற, अमात्यमुख्यान्- ப்ரதானமான மந்திரிகளை, व्यपोह्य- தாண்டி, समंततः- நாலுபக்கங்களிலும், समृद्धं- நிறைந்திருக்கிற, अन्तःपुरं- அந்தப்புரத்தை, आविवेश- ப்ரவேசித்தார்.

49. (ப-ரை) सारथिः- ஸாரதியான ஸுமந்த்ரர், अद्रिकूटाचलमेघसन्निभं- பர்வதசிகரத்திற்கும், அசையாத மேகத்திற்கும் ஸமானமாயும், महाविमान उत्तम वेश्मसङ्घवत्- மஹாவிமானங்களோடுகூடிய சிறந்த க்ருஹங்களின் கூட்டங்களை உடையதாயும், प्रभूतरत्नं- நிறைந்த ரத்னங்களை உடையதாயும் இருக்கிற, तत- அந்த ராமன் அரண்மனையை, मकरः- மகரமானது, अर्णवम् यथा- ஸமுத்ரத்தை ப்ரவேசித்ததுபோல், अवार्यमाणः- ஒருவராலும் தடுக்கப்படாதவராய், प्रविवेश- ப்ரவேசித்தார்.

48. (பொ-ரை) ஸுமந்த்ரர் அங்கு நன்றாய் அலங்காரம் செய்துகொண்டு குதிரைகளுடனும், தேர்களுடனும், யானைகளுடனும்கூடி நூற்றுக்கணக்காக கூட்டங் கூடியிருக்கிற அரசனுக்கு மிகவும் ப்ரியமான மந்திரிகளையும் தாண்டிக்கொண்டு பலவிதமான செல்வம் பொருந்திய அந்தப்புரத்தில் நுழைந்தார்.

49. (பொ-ரை) ஸுமந்த்ரர் பர்வத சிகரத்திற்கும், அசையாத மேகத்திற்கும் ஸமானமாயும், தேவர்கள் விமானங்களைக்காட்டிலும் உத்தமமான அநேகம் க்ருஹங்கள் உள்ளதாயும், அளவற்ற ரத்னங்களையுமுடைய அந்த ஸ்ரீராமன் அரண்மனையில், மகரமானது ஸமுத்திரத்தில் ப்ரவேசிப்பதுபோல், கோபுர காவலாளிகளால் தடுக்கப்படாமல் ப்ரவேசித்தார்.

षोडशः सर्गः ॥ 16 ॥

स तदन्तःपुरद्वारं समतीत्य जनाकुलम् ।
प्रविविक्तां ततः कक्ष्यामाससाद पुराणवित् ॥ 1 ॥

प्रासकार्मुकबिभ्रद्भिर्युवभिर्मृष्टकुण्डलैः ।
अप्रमादिभिरेकाग्रैः स्वनुरक्तैरधिष्ठिताम् ॥ 2 ॥

तत्र काषायिणो वृद्धान्वेत्रपाणीन्स्वलङ्कृतान् ।
ददर्श विष्ठितान्द्वारि स्त्र्यध्यक्षान्सुसमाहितान् ॥ 3 ॥

---

1-2. (ப-ரை) पुराणवित्- பழைய ஆசாரங்களை அறிந்தவராயிருக்கிற, सः- அந்த ஸுமந்த்ரர், जनाकुलम्- ஜனங்களால் நிறைந்த, तत् अन्तःपुरद्वारं- அந்த அந்தப்புரத்தின் வாசலை, समतीत्य- தாண்டி, ततः- பிறகு, प्रविविक्तां- ஏகாந்தமாயிருக்கிற, प्रासकार्मुकबिभ्रद्भिः- ஈட்டிகளையும் வில்லுகளையும் கையில் தரித்துக்கொண்டு, मृष्टकुण्डलैः- சுத்தமான குண்டலங்களை அணிந்துகொண்டும், अप्रमादिभिः- ஏமாறுதவர்களாயும், एकाग्रैः- அந்தப்புரகாவலிலே ஊக்கமுள்ளவர்களாயும், स्वनुरक्तैः- மிகவும் அரசனிடத்தில் ப்ரீதியுள்ளவர்களுமான, युवभिः- வாலிபர்களான, (அந்தப்புரத்துக் காவலாளிகளால்) अधिष्ठिताम्- அடையப்பட்ட, कक्ष्यां- கட்டை, आससाद- அடைந்தார்.

3. (ப-ரை) तत्र- அவ்விடத்தில், काषायिणः- காஷாயவஸ்த்ரத்தை தரித்துக்கொண்டும், वेत्रपाणीन्- பிரம்பைக் கையில் பிடித்துக்கொண்டும், स्वलङ्कृतान्- நன்றாய் அலங்கரிக்கப்பட்டும், सुसमाहितान्- ரொம்பவும் ஜாக்ரதையுடன் கூடினவர்களாய், द्वारि- வாசலில், विष्ठितान्- உட்கார்ந்துகொண்டிருக்கிற, वृद्धान्- மிகவும், கிழவர்களான, स्त्र्यध्यक्षान्- அந்தப்புரஸ்த்ரீகளைக்காக்கின்ற புருஷர்களை, ददर्श- பார்த்தார்.

1–2. (பொ-ரை) மிகவும் வ்ருத்தராகையால் பழைய ஆசாரங்களை அறிந்தவரான அந்த ஸுமந்த்ரரானவர், பட்டாபிஷேகத்தைப் பார்ப்பதற்காக, பட்டணத்திலிருந்தும், வெளிதேசத்திலிருந்தும் வந்து காத்துக்கொண்டிருக்கிற ஜனங்கள் நிறைந்த அந்த அந்தப்புரத்தின் கோபுரவாசலைத்தாண்டி, ஈட்டிகளையும, வில்லுகளையும் கையில் பிடித்து மிகவும் சுத்தமான குண்டலங்களை அணிந்து மிகவும் ஜாகரதையாய் அந்தப்புரகாவலில் ஊக்கத்துடன் ஸ்ரீராமனிடத்தில் மிகவும் ப்ரீதி உள்ள வாலிபர்களான கோபுரவாசல் காப்பவர்களால் அடையப்பட்ட, கட்டை அடைந்தார்.

3. அங்கு காஷாய வஸ்த்ரம் தரித்து, கையில் பிரம்பைப்பிடித்து, நன்றாய் அலங்காரம் செய்துகொண்டு ஸ்த்ரீகளைக்காப்பதற்காக மிகவும் ஜாக்ரதையுடன் வாசலில் நின்றுகொண்டிருக்கிற கிழவர்களைப்பார்த்தார்.

ते समीक्ष्य समायान्तं रामप्रियचिकीर्षवः ।
सहसोत्पतिताः सर्वे स्वासनेभ्यः ससंभ्रमाः ॥ 4 ॥

तानुवाच विनीतात्मा सूतपुत्रः प्रदक्षिणः ।
क्षिप्रमाख्यात रामस्य सुमन्त्रो द्वारि तिष्ठति ॥ 5 ॥

ते राममुपसंगम्य भर्तुः प्रियचिकीर्षवः ।
सहभार्याय रामाय क्षिप्रमेवाचचक्षिरे ॥ 6 ॥

---

4. (ப-ரை) रामप्रियचिकीर्षवः- ஸ்ரீராமனுக்கு ப்ரியத்தைச் செய்யவிரும்புகிற, ते सर्वे- அந்த வ்ருத்தர்கள் எல்லோரும், समायान्तं- வந்துகொண்டிருக்கிற ஸுமந்த்ரரை, समीक्ष्य- பார்த்து, ससम्भ्रमाः- பரபரப்புள்ளவர்களாய், स्वासनेभ्यः- தங்கள் தங்கள் ஆஸனங்களிலிருந்து, सहसा- வேகமாய், उत्पतिताः- எழுந்தார்கள்.

5. (ப-ரை) विनीतात्मा- வணக்கமுள்ள ஸ்வபாவமுள்ளவராய், प्रदक्षिणः- மிகவும் ஸமர்த்தருமான, सूतपुत्रः- அந்த ஸுமந்த்ரர், तान्- அவர்களைப் (பார்த்து,) सुमन्त्रः- ஸுமந்த்ரர், द्वारि- வாசலில், तिष्ठति- இருக்கிறார் (என்று), रामाय- ராமன் பொருட்டு, क्षिप्रं- சீக்ரமாக, आख्यात- சொல்லுங்கள் (என்று), उवाच- சொன்னார்.

6. (ப-ரை) ते- அவர்களும், भर्तुः- எஜமானனுக்கு, प्रियचिकीर्षवः- ப்ரியத்தைச் செய்யவேணுமென்று ஆசைப்பட்டுக்கொண்டு, रामं- ராமனை, उपसंगम्य- ஸமீபித்து, सह भार्याय- பத்நியுடன் கூடியிருக்கிற, रामाय- ஸ்ரீராமன் பொருட்டு, क्षिप्रमेव- சீக்ரமாகவே, आचचक्षिरे- சொன்னார்கள்.

4. (பொ-ரை) அங்கு வருகிற ஸுமந்த்ரரைப்பார்த்து ஸ்ரீராமனுக்கு ப்ரியத்தைச்செய்ய விரும்பிக்கொண்டிருக்கிற, அவர்களெல்லாரும் தங்கள் ஆஸனங்களிலிருந்து பரபரப்புடன் வேகமாய் எழுந்திருந்துவிட்டார்கள்.

5. (பொ-ரை) மிகவும் வணக்கமுள்ளவராய், ஸமர்த்தருமான ஸுமந்த்ரர், அந்தக்காவலாளிகளைப்பார்த்து "ஸுமந்த்ரர் வாசலில் நிற்கிறார்" என்று நான் வந்ததை, சீக்ரம் ராமனுக்குத் தெரிவியுங்கள் என்று சொன்னார்.

6. (பொ-ரை) அவர்களும், எஜமானனுக்குப்ப்ரியத்தைச் செய்ய விரும்பிக்கொண்டு, ஸ்ரீராமனுடைய ஸமீபம் சென்று, பத்நியுடன்கூடி எழுந்தருளியிருக்கிற ஸ்ரீராமனுக்கு ஸுமந்த்ரர் வந்திருப்பதைச் சொன்னார்கள்.

प्रतिवेदितमाज्ञाय सूतमभ्यन्तरं पितुः ।
तत्रैवानाययामास राघवप्रियकाम्यया ॥ 7 ॥
तं वैश्रवणसंकाशमुपविष्टं स्वलङ्कृतम् ।
ददर्श सूतः पर्यङ्के सौवर्णे सोत्तरच्छदे ॥ 8 ॥
वराहरुधिराभेण शुचिना च सुगन्धिना ।
अनुलिप्तं परार्घ्येन चन्दनेन परन्तपम् ॥ 9 ॥
स्थितया पार्श्वतश्चापि वालव्यजनहस्तया ।
उपेतं सीतया भूयश्चित्रया शशिनं यथा ॥ 10 ॥

---

7. (ப-ரை) (ஸ்ரீராமனும்), प्रतिवेदितं- காவலாளிகளால் தெரிவிக்கப்பட்ட, सूतं- ஸாரதியை, पितुः- பிதாவுக்கு, अभ्यन्तरं- மிகவும் அந்தரங்காக, आज्ञाय- தெரிந்து கொண்டு, राघवप्रियकाम्यया- தசரதருக்கு ப்ரியத்தைச் செய்யவேணுமென்கிற எண்ணத்தினால், तत्रैव- அங்கேயே, आनाययामास- வரவழைத்தார்.

8-9-10. (ப-ரை) वैश्रवणसकाशं- குபேரனுக்கு ஸமானமாயும், स्वलङ्कृतम्- நன்றாய் அலங்காரம் செய்யப்பட்டும், सोत्तरच्छदे- மேல்விரிக்கக்கூடிய வஸ்த்ரங்கள் போடப்பட்ட, सौवर्णे- ஸ்வர்ணமயமான पर्यङ्के- கட்டிலில், उपविष्टं- உட்கார்ந்துகொண்டும், वराहरुधिराभेण- பன்றியின் ரத்தம்போல் சிவந்தும், शुचिना- பரிசுத்தமாயும், सुगन्धिना- நல்ல மணமுள்ளதாயும், परार्घ्येन- மிகவும் ச்ரேஷ்டமான, चन्दनेन- சந்தனத்தினால், अनुलिप्तं- அநுலேபம் செய்யப்பட்டும், परन्तपम्- சத்ருக்களை வெல்லக்கூடும் தன்மையுள்ளவராயும், पार्श्वतः- அள்ளைப்புறத்தில், स्थितया- இருந்துகொண்டு, वालव्यजनहस्तया- (சாமரத்தை) திருவால வட்டத்தைக்கையிற்கொண்டு பருமாறுகிற, सीतया- ஸீதையுடன், उपेतं च अपि- கூடிக்கொணடும், चित्रया- சித்திராநக்ஷத்திரத்துடன் (கூடிய), शशिनं यथा- சந்திரனைப்போல், भूयः- அதிகமாக, विराजमानं- விளங்கிக்கொண்டுமிருக்கிற, तं- அந்த ஸ்ரீராமனை, सूतः- ஸாரதியானவர், ददर्श- பார்த்தார்.

---

7. (பொ-ரை) ஸ்ரீராமனும், ஸுமந்த்ரர் வந்திருப்பதை, த்வாரபாலகர்களால் தெரிந்து இவர் நம்முடைய பிதாவுக்கு மிகவும் அந்தரங்கரென்று எண்ணி, தசரதரின் ப்ரியத்திற்காக, தான் ஏகாந்தமாய் ஸீதையுடன் எழுந்தருளியிருக்கும் இடத்திற்கே வரும்படி சொன்னார்.

8-9-10. (பொரை) தன்னை அடைந்தவர்களுக்கு அளவற்ற ஸம்பத்தைக் கொடுக்கும் குபேரனைப்போல், தன் ஸமீபத்திலிருக்கின்ற ஜனங்களுக்கு தம்முடைய திவ்யமங்கள விக்ரஹ ஸௌந்தர்ய அநுபவரூபமான சிறந்த ஐச்வர்யத்தைக் கொடுக்கின்றவரும், புஷ்பம்போல் ம்ருதுவான தம்முடைய திருமேனிக்குத் தகுந்ததான மார்தவம் (மென்மை) உடைய பஞ்சமெத்தையிட்ட ஸ்வர்ணமயமான கட்டி-

तं तपन्तमिवादित्यमुपपन्नं स्वतेजसा ।
ववन्दे वरदं बन्दी विनयज्ञो विनीतवत् ॥ 11 ॥
प्राञ्जलिस्तु सुखं पृष्ट्वा विहारशयनासने ।
राजपुत्रमुवाचेदं सुमन्त्रो राजसत्कृतः ॥ 12 ॥

11. (ப-ரை) तपन्तं- தபித்துக்கொண்டிருக்கிற. आदित्यं इव- ஸூர்யனைப் போல, स्वतेजसा- தன்னுடையதான (ஸ்வாபாவிகமான) தேஜஸ்ஸோடு, उपपन्नं- கூடிக்கொண்டும், वरदं- வரங்களை கொடுக்கின்றவருமான, तं- அந்த ஸ்ரீராமனை विनयज्ञः- வினயத்தை அறிந்தவரான, बन्दी- ஸூதரான ஸுமந்த்ரரானவர், विनीतवत्- வணங்கிக்கொண்டு, ववन्दे- ஸேவித்தார் (நமஸ்க்கரித்தார்).

12. (ப-ரை) विहारशयनासने- நடக்கும் காலத்திலும், படுத்துக்கொள்ளும் காலத்திலும், உட்கார்ந்திருக்கும் காலத்திலும், राजसत्कृतः- தசரதமஹாராஜனால் கௌரவப்படுத்தப்பட்ட, सुमन्त्रः- ஸுமந்த்ரரானவர், प्राञ्जलिः तु- கைகூப்பினவராய்க் கொண்டு, सुखं- க்ஷேமத்தை, पृष्ट्वा- கேட்டுவிட்டு, राजपुत्रं- ராஜபுத்ரனை ஸ்ரீராமனை (ப்பார்த்து), इदं उवाच- இதைச் சொன்னார்.

---

வில் மஹா மேருவின்மேல் நீருண்ட மேகம் இருந்ததுபோல் அழகாய் எழுந்தருளியும், குங்கும கேஸரி முதலான ராகத்ரவ்யங்கள் சேர்த்து பன்றியின் ரத்தம் போல் மிகவும் சிவந்து, ஸீதாதேவியின் திருக்கைத்தலத்தின் ஸம்பந்தத்தினால் மிகவும் சுத்தமாயும், குளிர்ந்ததாயும் அத்யுத்தமமான கந்தமுள்ளபடியால் மிகவும் ச்ரேஷ்டமான சந்தனப்பூச்சினால் அலங்கரிக்கப்பட்டும், அந்த அலங்கார நிலைமையைப்பார்க்கும்காலத்தில் சத்ருக்கள் மனம் அணுஅணுவாய் தளும்படியான வீரத்தன்மைபொருந்தியும், பக்கத்திலிருந்து சாமரத்தைக் கையில் பிடித்து பருமாருகின்ற ஸீதாதேவியுடன் கூடியிருந்து சித்ராநக்ஷத்திரத்துடன்கூடிய சந்திரன்போல் விசேஷமாய் விளங்குகின்ற ஸ்ரீராமனை ஸுமந்த்ரரானவர் பார்த்தார்.

11. (பொ-ரை) மிகவும் ஜ்வலித்துக்கொண்டிருக்கிற, ஸூர்யனைப்போல், ஸ்வாபாவிகமான தேஜஸ்ஸோடு கூடியும் ஆச்ரிதர்களுக்கு தம்முடைய திவ்ய மங்கள விக்ரஹஸேவையை அநுபவிக்கக் கொடுத்துக்கொண்டுமிருக்கிற அந்த ஸ்ரீராமனை, வணக்கம் தெரிந்தவரான, ஸூதகுலத்தில் பிறந்த ஸுமந்த்ரர், மிகவும் வணக்கத்துடன் நமஸ்கரித்தார்.

12. (பொ-ரை) உலாவும் காலத்திலும், படுத்துக்கொள்ளும் காலத்திலும், தசரத மஹாராஜாவினால் கௌரவப்படுத்தப்பட்ட அந்த ஸுமந்த்ரர், கைகூப்பிக்கொண்டு க்ஷேமத்தை விசாரித்துவிட்டு, ஸ்ரீராமனைப்பார்த்து இந்த வார்த்தைகளை சொன்னார்.

कौसल्या सुप्रजा राम पिता त्वां द्रष्टुमिच्छति ।
महिष्या सह कैकेय्या गम्यतां तत्र मा चिरम् ॥ 13 ॥
एवमुक्तस्तु संहृष्टो नरसिंहो महाद्युतिः ।
ततः संमानयामास सीतामिदमुवाच ह ॥ 14 ॥
देवि देवश्च देवी च समागम्य मदन्तरे ।
मन्त्रयेते ध्रुवं किंचिदभिषेचनसंहितम् ॥ 15 ॥

---

13. (ப-ரை) कौसल्या सुप्रजा:- கௌஸல்யாதேவியின் நல்லபிள்ளையான, राम- ஸ்ரீராமனே, महिष्या- ராஜமஹிஷியான, कैकेय्या सह- கைகேயியுடன்கூட, पिता- தந்தையானவர், त्वां- உம்மை, द्रष्टुं- பார்ப்பதற்கு, इच्छति- ஆசைப்படுகிறார், तत्र- அவ்விடத்திற்கு, गम्यतां- போகவேண்டும், मा चिरम्- ஸாவகாசப்படுத்தவேண்டாம்.

14. (ப-ரை) नरसिंह:- புருஷச்ரேஷ்டனாயும், महाद्युति:- அதிக அழகுள்ளவருமான ஸ்ரீராமன், एवं- இவ்விதமாக, उक्तस्तु- சொல்லப்பட்டவராய்க்கொண்டு, संहृष्ट:- ஸந்தோஷமுள்ளவராய், तत:- பிறகு (सूतं- ஸாரதியான ஸுமந்த்ரரை), सम्मानयामास- கௌரவப்படுத்தினார், सीतां- ஸீதையைப்பார்த்து, इदं- இந்த வார்த்தையை, उवाच ह- சொன்னார்.

15. (ப-ரை) हे देवि- ஹே ஸீதாதேவியே!, देवश्च- அரசனும், देवी च- ராஜமஹிஷியான கைகேயியும், मदन्तरे- எனக்காக, समागम्य- ஒன்றுகூடி, अभिषेचनसंहितम्- பட்டாபிஷேக ஸம்பந்தமான, किंचित्- ஏதோ ஒரு விஷயத்தை, मन्त्रयेते- ஆலோசித்துக் கொண்டிருக்கிறார்கள், ध्रुवं- இது நிச்சயம்

---

13. (பொ-ரை) கௌஸல்யாதேவியின் மனத்திற்கு இனிய புத்ரனான ஸ்ரீராமனே, ராஜமஹிஷியான கைகேயிதேவியுடன் பிதாவான தசரதர் உம்மைப் பார்க்கவிரும்புகிறார், அங்கு நீர் சீக்ரமாகப்போகவேண்டும்.

14. (பொ-ரை) புருஷோத்தமனும் மிகவும்ஸுந்தரமூர்த்தியான ஸ்ரீராமன் இவ்விதம் ஸுமந்த்ரருடைய வார்த்தையைக்கேட்டு, பரமஸந்தோஷத்துடன் ஸுமந்த்ரரை கௌரவித்தார். அதாவது:—(அப்படியே ஆகட்டுமென்று ஸுமந்த்ரருடைய வார்த்தையை அங்கீகரித்தார்). பிறகு ஸீதையைப்பார்த்து ஒரு வார்த்தையையும் சொன்னார்

15 (பொ-ரை) தேவி! மஹாராஜனும், கைகேயி தேவியும், ஒன்றுகூடி எனக்கு நடக்கவேண்டிய பட்டாபிஷேக ஸம்பந்தமாக ஏதோவிஷயத்தை ஆலோசித்துக் கொண்டிருக்கிறார்கள், இது நிச்சயம்.

+ஸுமந்த்ரரை கௌரவப்படுத்துகிறதாவது:—மஹாராஜா உலாவும்பொழுதும், சயனித்துக்கொள்ளும்பொழுதும், தனியாக உட்கார்ந்துகொண்டிருக்கும் பொழுதும், ஸுமந்த்ரரை எப்பொழுதும் ஸமீபத்தில் வைத்துக்கொண்டிருக்கை.

लक्षयित्वा ह्यभिप्रायं प्रियकामा सुदक्षिणा ।
संचोदयति राजानं मदर्थं मदिरेक्षणे ॥ 16 ॥
सा प्रहृष्टा महाराजं हितकामानुवर्तिनी ।
जननी चार्थकामा मे केकयाधिपतेः सुता ॥ 17 ॥
दिष्ट्या खलु महाराजो महिष्या प्रियया सह ।
सुमन्त्रं प्राहिणोद्दूतमर्थकामकरं मम ॥ 18 ॥

---

16. (ப-ரை) हे मदिरेक्षणे- அழகான பார்வையுடையவளே!, प्रियकामा- எனக்கு ப்ரியம் செய்வதில் ஆசையுள்ளவளும், सुदक्षिणा- மிகவும் ஸமர்த்தையுமான கைகேயியானவள், अभिप्राय- அரசனுடைய அபிப்ராயத்தை, लक्षयित्वा हि- அறிந்துகொண்டன்றோ, मदर्थं- எனக்காக, राजानं- அரசனை, संचोदयति- தூண்டுகிறாள்.

17. (ப-ரை) (ஏனென்றால்). सा- அந்த, केकयाधिपतेः सुता- கேகயமஹாராஜாவின் புத்ரியான கைகேயியானவள், प्रहृष्टा- என் விஷயத்தில் மிகவும் ஸந்தோஷமுள்ளவள், हितकामा- எனக்கு ஹிதத்தைச் செய்வதையே விரும்புகின்றவள், महाराजं- மஹாராஜாவையும், अनुवर्तिनी- அநுஸரித்து நடக்கிறவள், अर्थकामा- எனக்கு ஸம்பத்தை கோருகின்றவள், जननी च- எனக்குத்தாயுமானவள்.

18. (ப-ரை) महाराजः- மஹாராஜாவானவர், प्रियया- தனக்கு மிகவும் ப்ரியமான, महिष्या सह- ராஜமஹிஷியான கைகேயியுடன்கூட, मम- எனக்கு, अर्थकामकरं- ஸம்பத்தையும், போகத்தையும செய்துகொண்டுவருகிற, सुमन्त्रं- ஸுமந்த்ரரை, दूतं- தூதுவராக, प्राहिणोत् खलु- அனுப்பியிருக்கிறானன்றோ, दिष्ट्या- இது என்னுடைய பாக்யம்.

---

16. (பொ-ரை) அழகான கணகளையுடைய தேவியே! மிகவும் கெட்டிக்காரியான கைகேயிதேவியானவள் எனக்கு எப்பொழுதும் ப்ரியத்தைச்செய்ய வேணுமென்று எண்ணங்கொண்டிருக்கிறபடியால், "பரதன் வருவதை எதிர்பாராமல் ஸ்ரீராமனுக்கு இப்பொழுதே பட்டாபிஷேகம் பண்ணிவிடவேணும்" என்று கிழவரான மஹாராஜருடைய அபிப்ராயத்தையுமறிந்து எனக்காக அவரைத்தூண்டிக கொண்டு வருகிறாள்.

17. (பொ-ரை) ஏனென்றால், அந்த கேகயமஹாராஜாவின் புத்ரியான கைகேயியானவள், என்னிடம் மிகவும் ஸந்தோஷமுள்ளவள், எனக்கு ஹிதத்தையே செய்யவேணுமென்கிற எண்ணமுள்ளவள், அதற்காக மஹாராஜாவையும அநுஸரித்து என் கார்யத்தை ஸாதித்துககொடுக்கவேணுமென்று எண்ணங்கொண்டவளு எனககுத்தாயாருமானவள்.

18 (பொ-ரை) மஹாராஜா, தனக்கு ப்ரியமுள்ள கைகேயிதேவியுடன் கூட, எனக்கு ஸம்பத்தையும், ஸுகாநுபவத்தையும், செய்கின்ற ஸுமந்த்ரரைத் தூதராக அனுப்பியிருக்கிறானன்றோ, இதுவும் என்னுடைய பாக்யம்தான்.

यादृशी परिषत्तत्र तादृशो दूत आगतः ।
ध्रुवमद्यैव मां राजा यौवराज्येऽभिषेक्ष्यति ॥ 19 ॥
हन्त शीघ्रमितो गत्वा द्रक्ष्यामि च महीपतिम् ।
सह त्वं परिवारेण सुखमास्व रमस्व च ॥ 20 ॥
पतिसम्मानिता सीता भर्तारमसितेक्षणा ।
आद्वारमनुवव्राज मङ्गलान्यभिदध्युषी ॥ 21 ॥
राज्यं द्विजातिभिर्जुष्टं राजसूयाभिषेचनम् ।
कर्तुमर्हति ते राजा वासवस्येव लोककृत् ॥ 22 ॥
दीक्षितं व्रतसंपन्नं वराजिनधरं शुचिम् ।
कुरङ्गशृङ्गपाणिं च पश्यन्ती त्वां भजाम्यहम् ॥ 23 ॥
पूर्वां दिशं वज्रधरो दक्षिणां पातु ते यमः ।
वरुणः पश्चिमामाशां धनेशस्तूत्तरां दिशम् ॥ 24 ॥

19. (ப-ரை) तत्र- அவ்விடத்தில், परिषत्- ஸபையானது, यादृशी- எப்படிப்பட்டிருக்கிறதோ, दूतः- தூதனும், तादृशः- அப்படிப்பட்டவராகவே, आगतः- வந்திருக்கிறார், अद्यैव- இப்பொழுதே, राजा- அரசன், यौवराज्ये- யௌவராஜ்யத்தில், मां- என்னை, ध्रुवं- நிச்சயமாக, अभिषेक्ष्यति- அபிஷேகம் செய்யப்போகிறார்.

20. (ப-ரை) हन्त- ரொம்பவும் ஸந்தோஷம், (நான்), शीघ्रं- சீக்ரமாக, इतः गत्वा- இங்கிருந்துபோய், महीपतिम्- அரசனை, द्रक्ष्यामि- பார்க்கப்போகிறேன், त्वं- நீ, परिवारेण सह- உன் பரிஜனத்துடன்கூட, सुखं-आस्व- ஸுகமாக இரு, रमस्व च- விளையாடிக்கொண்டிரு.

21-24 (ப-ரை) पतिसंमानिता- இவ்விதம் பர்தாவினுல் பெருமைப்படுத்தப்பட்ட, असितेक्षणा- கருத்தகண்களையுடைய, सीता- ஸீதையானவள், द्विजातिभिः- ப்ராமமணர்களால், जुष्टं- ஸேவிக்கப்பட்ட, राज्यं- ராஜ்யத்தைக்குறித்து, राजसूयाभिषेचनम्- ராஜ

---

19. (பொ-ரை) ஹே தேவி! அங்கே மஹாராஜருடன் கூடியிருக்கிற ஜனத்தையும், அதற்குத்தகுந்தாற்போல், இங்கு வந்திருக்கிற தூதனையும் நாம் கவனித்துப்பார்க்குங்காலத்தில், இப்பொழுதே மஹாராஜா நமக்கு யௌவராஜ்யபட்டாபிஷேகம் செய்விக்கப்போகிறார். இது நிச்சயமென்று எண்ணுகிறேன்.

20. (பொ-ரை) ஸந்தோஷம். நான் இங்கிருந்துபோய் சீக்ரமாக மஹாராஜரைப் பார்க்கவேண்டும். நீயும் உன் பரிவாரத்துடன்கூட ஸுகமாக விளையாடிக்கொண்டிரு.

21-24. (பொ-ரை) இவ்விதம் ஸீதாதேவியிடம் ஸ்ரீராமன் இனிமையான வார்த்தைகளைச் சொல்லிவிட்டு, தன் கழுத்தில் சாத்தியிருந்த திருமாலையையும், ஸீதை

अथ सीतामनुज्ञाप्य कृतकौतुकमङ्गलः ।
निश्चक्राम सुमन्त्रेण सह रामो निवेशनात् ॥ 25 ॥

ஸூய யாகத்திற்குத்தகுந்ததான அபிஷேகத்தை, वासवस्य- இந்திரனுக்கு, लोककृत् इव- ப்ரம்மா (செய்வதுபோல்), ते- உமக்கு, राजा- அரசன், कर्तुं अर्हति- செய்யத்தகுந்தவர், दीक्षितं- யாகதீக்ஷையுடையவராய், व्रतसम्पन्नं- எல்லா நியமங்களும் பொருந்தியவராய், वराजिनधरं- ச்ரேஷ்டமான க்ருஷ்ணாஜினத்தை தரித்தவராய், शुचिम्- பரிசுத்தராய், कुरङ्गशृङ्गपाणिं च- மான்கொம்பை கையிற் பிடித்தவருமான, त्वां- உம்மை, अहं- நான், पश्यन्ती सती- பார்த்துக்கொண்டு, भजामि- ஸேவிக்கின்றேன், वज्रधरः- இந்திரனவர், पूर्वां दिशं- கிழக்குதிக்கை, पातु- ரக்ஷிக்கட்டும், यमः- யமன், ते- உம்முடைய, दक्षिणां- தெற்குதிக்கை, (पातु- ரக்ஷிக்கட்டும்), वरुणः- வருணனவர், पश्चिमां आशां- மேற்குதிக்கை, (पातु- ரக்ஷிக்கட்டும்), धनेशस्तु- குபேரனும், उत्तरां दिशं- வடக்குதிக்கை (ரக்ஷிக்கட்டும), इति- என்று, मंगलानि- மங்களங்களை, अभिदध्युषी सती- சொல்லிக்கொண்டு, आद्वार - வாசல்வரையில், अनुवव्राज- பின்தொடர்ந்துவந்தாள்.

25. (ப-ரை) अथ- பிறகு, कृतकौतुकमगलः- பட்டாபிஷேகத்திற்குவேண்டிய மங்களங்களைச் செய்தவரான, रामः- ஸ்ரீராமன், सीतां- ஸீதையை, अनुज्ञाप्य- அநுமதிசெய்வித்து, सुमन्त्रेण सह- ஸுமந்த்ரருடன்கூட, निवेशनात्- அரண்மனையிலிருந்து, निश्चक्राम- வெளிப்புறப்பட்டார்.

க்கு ப்ரியத்தினல் கொடுத்து, பெருமைப்படுத்தப்பட்ட அந்த ஸீதாதேவியானவள் ஹே ராமா! ராஜ்யத்தைக்குறித்து அநேகப்ராம்மணர்களால் ஸித்தப்படுத்தப்பட்ட ராஜஸூய யாகத்திற்குத் தகுந்ததான அபிஷேகத்தை மஹாராஜா உமக்கு ப்ரம்மா இந்திரனுக்குச்செய்ததுபோல் செய்யவேண்டும். அபிஷேக தீக்ஷையுடன் வ்ரதங்களையும் ஸம்பூர்ணமாய் அநுஷ்டித்து ச்ரேஷ்டமான க்ருஷ்ணாஜினத்தையும் தரித்து மிகவும் பரிசுத்தராய், மான் கொம்பை கையிற் பிடித்துக்கொண்டிருக்கிற உம்மை நான் பார்த்துக்கொண்டே ஸேவித்து நிற்கிறேன். இந்திரனவர் உம்மை கிழக்கு திக்கிலும், யமனவர் தெற்குதிக்கிலும, வருணனவர் மேற்குதிக்கிலும், குபேரன் வடக்கு திக்கிலும், உம்மை காப்பாற்ற வேண்டுமென்று மங்களங்களை ப்ரார்த்தித்துக்கொண்டு அந்தப்புரவாசல்வரையில் ஸ்ரீராமனேடுகூடவந்தாள்.

25. (பொ-ரை) பிறகு, ஸ்ரீராமன் பட்டாபிஷேகத்துக்குரிய மங்கள கார்யங்களைச்செய்துகொண்டு, ஸீதைக்கு அநுமதி கொடுத்து ஸுமந்த்ரருடன்கூட தம்முடைய அரண்மனையிலிருந்து புறப்பட்டார்.

पर्वतादिव निष्क्रम्य सिंहो गिरिगुहाशयः ।
लक्ष्मणं द्वारि सोऽपश्यत्प्रह्वाञ्जलिपुटं स्थितम् ॥ 26 ॥

अथ मध्यमकक्ष्यायां समागम्य सुहृज्जनैः ।
स सर्वानर्थिनो दृष्ट्वा समेत्य प्रतिनन्द्य च ॥ 27 ॥

ततः पावकसंकाशमारुरोह रथोत्तमम् ।
वैयाघ्रं पुरुषव्याघ्रो राजतं राजनन्दनः ॥ 28 ॥

26. (ப-ரை) सः– அந்த ஸ்ரீராமன், गिरिगुहाशयः- பர்வதத்தின் குஹையில் படுத்துகொண்டிருக்கிற, सिंहः- ஸிங்கமானது, पर्वतात् इव- பர்வதத்திலிருந்து புறப்பட்டதுபோல, निष्क्रम्य- புறப்பட்டு, प्रह्वाञ्जलिपुटं- வணங்கியும் கைகூப்பிக்கொண்டு, द्वारि- முன்வாசலில், स्थितं- நின்றுகொண்டிருக்கிற, लक्ष्मणं- லக்ஷ்மணனை, अपश्यत्- பார்த்தார்.

27–28. (ப-ரை) अथ- பிறகு, पुरुषव्याघ्रः- புருஷோத்தமனான, सः- அந்த, राजनन्दनः- ராஜபுத்ரரும், मध्यमकक्ष्यायां- நடுக்கட்டில், (இருக்கிற), सुहृज्जनैः- தோழர்களோடு, समागम्य- சேர்ந்து, अर्थिनः- ஸ்ரீராமதரிசனத்தை ப்ரார்த்தித்துக்கொண்டிருக்கிற, सर्वान्- எல்லாஜனங்களையும், दृष्ट्वा- பார்த்து, समेत्य- அவர்கள் ஸமீபம் சென்று, प्रतिनन्द्यच- ஆனந்தப்படுத்தி, ततः- பிறகு, पावकसंकाशं- அக்நிக்கு ஸமானமாய், वैयाघ्रं- புலித்தோல் விரித்திருக்கிற, राजतं- வெள்ளிமயமான, रथोत्तमम्- ச்ரேஷ்டமான தேரை, आरुरोह- ஏறினார்.

---

26. (போ-ரை) மலையின் குஹையில் படுத்துக்கொண்டிருக்கும் ஸிம்மமானது, மலையிலிருந்து புறப்பட்டதுபோல் ஸ்ரீராமனும், தம்முடைய திருமாளிகையிலிருந்து புறப்பட்டு, கைகூப்பி வணங்கிக்கொண்டு முன்கோபுர வாசலில் நின்று, கொண்டிருக்கிற லக்ஷ்மணனைப்பார்த்தார்.

27-28. (பொ-ரை) பிறகு, புருஷச்ரேஷ்டனான அந்த ராஜபுத்திரனும், நடுக்கட்டில் முன்னமே வந்திருக்கிற தன் தோழர்களோடுசேர்ந்து, பட்டாபிஷேகத்தைப் பார்க்கவேண்டி அவ்விடம் கூட்டங்கூடியிருக்கிற எல்லா ஜனங்களையும் கண்டு, அவர்கள் ஸமீபம்சென்று அவர்களை ஆனந்தப்படுத்தி பிறகு அக்நிபோல் ப்ரகாசித்துக்கொண்டும், புலித்தோலால் விரிக்கப்பட்டுமிருக்கிற, வெள்ளிமயமான உத்தம ரதத்தின்மேல் ஏறினார்.

मेघनादमसंबाधं मणिहेमविभूषितम् ।
मुष्णन्तमिव चक्षूंषि प्रभया सूर्यवर्चसम् ॥ 29 ॥
करेणुशिशुकल्पैश्च युक्तं परमवाजिभिः ।
हरियुक्तं सहस्राक्षो रथमिन्द्र इवाशुगम् ॥
प्रययौ तूर्णमास्थाय राघवो ज्वलितः श्रिया ॥ 30 ॥
स पर्जन्य इवाकाशे स्वनवानभिनादयन् ।
निकेतान्निर्ययौ श्रीमान्महेन्द्रादिव चन्द्रमाः ॥ 31 ॥

29-30. (ப-ரை) राघवः- ஸ்ரீராமன், मेघनादं- மேகத்திற்கு ஸமானமான சப்தமுடையதாயும், असम्बाधं- விஸ்தாரமாயும், मणिहेमविभूषितम्- நவரத்னங்களாலும், ஸ்வர்ணங்களாலும் அலங்கரிப்பட்டும், सूर्यवर्चसम्- ஸூர்யனுடைய காந்திபோன்ற காந்தியுடையதாயும், (अत एव- ஆகையாலேயே), प्रभया- காந்தியினால், चक्षूंषि- கண்களை, मुष्णन्तम् इव- திருடுவதுபோன்றதாயும், करेणुशिशुकल्पैः- யானைக்குட்டிக்கு ஸமானங்களான, परमवाजिभिः- ச்ரேஷ்டமான குதிரைகளோடு, युक्तं च- கூடிக்கொண்டும், आशुगम्- வேகமாகப்போகக்கூடிய. रथं- தேரை, हरियुक्तं- குதிரை கட்டிய, (रथं- தேரை), सहस्राक्ष इव- இந்திரன் (ஏறியது) போல், आस्थाय- ஏறிக்கொண்டு, श्रिया- காந்தியால், ज्वलितः- ப்ரகாசித்துக்கொண்டும், तूर्णं- சீக்ரமாக, प्रययौ- புறப்பட்டார்.

31. (ப-ரை) श्रीमान्- அழகுள்ளவரான, सः- அந்த ராகவன், आकाशे- ஆகாயத்தில், स्वनवान्- சப்தமுள்ளதான, पर्जन्यः इव- மேகம்போல், अभिनादयन्- (திக்குகளை) சப்தமுள்ளதாகச்செய்துகொண்டு, महेन्द्रात्- உதயகிரியிலிருந்து, चन्द्रमाः इव- சந்திரன்போல், निकेतात्- திருமாளிகையிலிருந்து, निर्ययौ- வெளிக்கிளம்பினார்.

29–30. (பொ-ரை) ஸ்ரீராகவனும், மேகம்சப்திப்பதுபோல், சப்தமுடையதாயும், மிகவிஸ்தாரமுடையதாயும், நவரத்னங்களாலும் ஸ்வர்ணங்களாலும் அலங்கரித்து ஸூர்யனைப்போல ப்ரகாசித்துக்கொண்டிருப்பதால், பார்க்கிறவர்களுடைய கண்களைப்பறிப்பதுபோலும், யானைக்குட்டிக்கு ஸமானங்களான, ச்ரேஷ்டமான குதிரைகளைப்பூட்டி, மிக வேகத்துடன் போகக்கூடிய தேரின் மீது குதிரைபூட்டிய ரதத்தில் இந்திரன் ஏறுவதுபோல ஏறிக்கொண்டு, காந்தியினால் ப்ரகாசித்தவராய் சீக்ரமாக புறப்பட்டார்.

31. (பொ-ரை) ஸ்ரீமானான ஸ்ரீராகவன் ஆகாயத்தில் முழங்கிக்கொண்டிருக்கிற மேகம்போல், தேரின் சப்தத்தினால், திக்குகளில் சப்தத்தை உண்டாக்கிக்கொண்டு, உதயகிரியிலிருந்து சந்திரன் புறப்படுவதுபோல் தம திருமாளிகையிலிருந்து வெளிப்புறப்பட்டார்.

छत्रचामरपाणिस्तु लक्ष्मणो राघवानुजः ।
जुगोप भ्रातरं भ्राता रथमास्थाय पृष्ठतः ॥ 32 ॥

ततो हलहलाशब्दस्तुमुलः समजायत ।
तस्य निष्क्रममाणस्य जनौघस्य समन्ततः ॥ 33 ॥

ततो हयवरा मुख्या नागाश्च गिरिसन्निभाः ।
अनुजग्मुस्तदा रामं शतशोऽथ सहस्रशः ॥ 34 ॥

32. (ப-ரை). राघवानुजः- ராகவனுக்கு இளையவனான, भ्राता- ப்ராதாவான, लक्ष्मणः- லக்ஷ்மணனும், छत्रचामरपाणिः तु- குடையையும், சாமரத்தையும் கையிற் தரித்துக்கொண்டு, पृष्ठतः- பின்புறத்தில், रथं आस्थाय- தேரின்மீது ஏறிக்கொண்டு, भ्रातरं-ப்ராதாவான ஸ்ரீராமனை, जुगोप- ரக்ஷித்து வந்தார்.

33. (ப-ரை) ततः- பிறகு, तस्य- அந்த ஸ்ரீராமன், निष्क्रममाणस्य- புறப்படும் காலத்தில், समन्ततः- நாலுபுறத்திலும், जनौघस्य- ஜனக்கூட்டத்தினுடைய, तुमुलः- பரவின, हलहलाशब्दः- கலகல சப்தமானது, समजायत- உண்டாயிற்று.

34. (ப-ரை) ततः- பிறகு, तदा- அப்பொழுது, मुख्याः- ப்ரதானங்களான, हयवराः- ச்ரேஷ்டமான குதிரைகளும், गिरिसन्निभाः- பர்வதங்களுக்கு ஸமானங்களான, नागाः च- யானைகளும், शतशः- நூற்றுக்கணக்குகளாகவும், अथ- பின்னும, सहस्रशः- ஆயிரக்கணக்காகவும், राम- ஸ்ரீராமனை, अनुजग्मुः- பின்தொடர்ந்து சென்றன.

32. (பொ-ரை) ஸ்ரீராமனுடைய, இளைய ப்ராதாவான லக்ஷ்மணனும், சத்ர சாமரங்களைக் கையிற் பிடித்துக்கொண்டு பின்புறமாய் தேரில் உட்கார்ந்துகொண்டு ப்ராதாவான ஸ்ரீராமனை, காத்துக்கொண்டு வந்தார்.

33. (பொ-ரை) பிறகு, ஸ்ரீராமன் திருமாளிகையைவிட்டுப் புறப்படும் காலத்தில், வெளியில் எங்கும நிறைந்திருக்கிற ஜனக்கூட்டததில் நான்கு புறமும பரவிய கலகல சப்தமானது உண்டாயிற்று.

34. (பொ-ரை) பிறகு, ஸ்ரீராமன் திருவீதியில் எழுந்தருளுங்காலத்தில் முக்யமான குதிரைகளும், பர்வதங்களுக்கு ஸமானங்களான யானைகளும், நூற்றுக் கணக்காகவும், ஆயிரக்கணக்காகவும் அவரைப்பின்தொடர்ந்துசென்றன.

अग्रतश्चास्य सन्नद्धाश्चन्दनागरुभूषिताः ।
खड्गचापधराः शूरा जग्मुराशंसवो जनाः ॥ 35 ॥
ततो वादित्रशब्दाश्च स्तुतिशब्दाश्च बन्दिनाम् ।
सिंहनादाश्च शूराणां तदा शुश्रुविरे पथि ॥ 36 ॥
हर्म्यवातायनस्थाभिर्भूषिताभिः समन्ततः ।
कीर्यमाणः सपुष्पौघैर्ययौ स्त्रीभिररिंदमः ॥ 37 ॥

35. (ப-ரை) अस्य- இந்த ஸ்ரீராமனுடைய, अग्रतः- முன்னே, चन्दनागरुभूषिताः- சந்தனம், அஹில் இவைகளைப்பூசிக்கொண்டு, सन्नद्धाः- கவசங்களை அணிந்துகொண்டும், खड्गचापधराः- கத்திகளையும், வில்லுகளையும் தரித்துக்கொண்டும், आशंसवः- (ராமனுடைய மங்களத்தை), ப்ரார்த்தித்துக்கொண்டு, शूराः जनाः- சூரர்களான ஜனங்கள், जग्मुः- போனார்கள்.

36. (ப-ரை) ततः- பிறகு, तदा- அப்பொழுது, वादित्रशब्दाः च- வாத்யகோஷங்களும், बन्दिनाम्- ஸ்துதிபாடகர்களுடைய, स्तुतिशब्दाः च- ஸ்தோத்ரம் செய்கின்ற சப்தமும், शूराणां- சூரர்களுடைய, सिंहनादाः च ஸிம்மநாதங்களும், पथि- வழியில், शुश्रुविरे- கேழ்க்கப்பட்டன.

37. (ப-ரை) हर्म्यवातायनस्थाभिः- உப்பரிகைகளின் ஜென்னல்களில் உட்கார்ந்து கொண்டும், भूषिताभिः- அலங்காரம் செய்யப்பட்டுமிருக்கிற, स्त्रीभिः- ஸ்த்ரீகளினுல், समन्ततः- நாற்புறத்திலும், पुष्पौघैः- புஷ்பக்கூட்டங்களினுல், कीर्यमाणः सन्- இரைக்கப் பட்டவராய்க் கொண்டு, अरिंदमः- சத்ருக்களை வெல்லத்தகுந்த, सः- அந்த ஸ்ரீராமன், ययौ- போனான்,

35 (பொ-ரை) கவசங்களை அணிந்து, சந்தனம், அஹில் பூசி கத்திகளையும் வில்லுகளையும் கைபிற்பிடித்து அநேக சூரஜனங்கள் ஸ்ரீராமனுடைய மங்களத்தை வேண்டிக்கொண்டு, அவர் முன்னே சென்றார்கள்.

36. (பொ-ரை) பிறகு, வாத்ய கோஷங்களும், ஸ்தோத்ரம் செய்கின்ற ஜனங்களுடைய ஸ்தோத்ரகோஷங்களும, வீரர்களுடைய ஸிம்ம நாதங்களும், அப்பொழுது மார்க்கத்தில் கேழ்க்கப்பட்டன.

37 (பொ-ரை) சத்ருக்களை வெல்லக்கூடிய அந்த ஸ்ரீராமன் அலங்காரம் செய்துகொண்டு, உப்பரிகையின் ஜன்னல்களில் உட்கார்ந்து கொண்டுமிருக்கிற டணத்து ஸ்த்ரீஜனங்களால் நான்கு புறங்களிலும், புஷ்பங்கள் வருஷிக்கப் பட்டுக்கொண்டு சென்றார்.

रामं सर्वानवद्याङ्ग्यो रामपिप्रीषया ततः ।
वचोभिरग्र्यैर्हर्म्यस्थाः क्षितिस्थाश्च ववन्दिरे ॥ 38 ॥
नूनं नन्दति ते माता कौसल्या मातृनन्दन ।
पश्यन्ती सिद्धयात्रं त्वां पित्र्यं राज्यमवस्थितं ॥ 39 ॥
सर्वसीमन्तिनीभ्यश्च सीतां सीमन्तिनीं वराम् ।
अमन्यन्त हि ता नार्यो रामस्य हृदयप्रियाम् ॥ 40 ॥

38-39. (ப-ரை) ततः- பிறகு, सर्वानवद्याङ्ग्यः- தோஷமில்லாத எல்லா அவயவங்களுமுடைய அந்த ஸ்த்ரீகள், हर्म्यस्थाः- சிலர் உப்பரிகையிலிருந்தும், क्षितिस्थाः च- சிலர் பூமியிலிருந்துகொண்டும், रामपिप्रीषया- ராமனை ஸந்தோஷிப்பிக்க ஆசையினால், "हे मातृनन्दन-மாதாவுக்கு ஸந்தோஷத்தை செய்துகொண்டிருக்கும் ஸ்ரீராமா! ते माता- உம்முடைய தாயாரான, कौसल्या- கௌஸல்யாதேவியானவள், सिद्धयात्र- ஸபலமான ப்ரயாணத்தை உடையவராய், पित्र्य राज्य- பிதாவினுடைய ராஜ்யத்தை, अवस्थित- அடைந்துமிருக்கிற, त्वां- உம்மை, पश्यन्ती सती- பார்த்துக்கொண்டு, नन्दति- ஆனந்தத்தை அடையப்போகிறாள், नूनं- நிச்சயம்," (इति- என்று), अग्र्याभिः- சிறந்தவைகளான वाग्भिः- சொற்களால், रामं- ஸ்ரீராமனை, ववन्दिरे- ஸ்தோத்ரம் செய்தார்கள்.

40. (ப-ரை) हि- ஏனென்றால், ताः नार्यः- அந்த ஸ்த்ரீகள், रामस्य- ராமனுக்கு हृदयप्रियाम्- மனதிற்குப்ப்ரியமான, सीतां सीमन्तिनी- அந்த உத்தமஸ்த்ரீயான ஸீதையை, सर्व सीमन्तिनीभ्यः च- எல்லா ஸ்த்ரீகளைக்காட்டிலும், वरां- சிறந்தவளாக, अमन्यन्त- எண்ணினார்கள்.

38-39. (பொ-ரை) பிறகு, அழகான ஸர்வாவயவங்களையுடைய, நகரத்து ஸ்த்ரீகள், உப்பரிகையின்மேல் சிலரும், கீழே சிலரும், இருந்துகொண்டு, ஸ்ரீராமனுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணவேணுமென்கிற எண்ணத்துடன் ஸ்ரீராமனைப்பார்த்து," மாதாவுக்கு ஆனந்தத்தைச் செய்துகொண்டிருக்கும் ஸ்ரீராமா! இப்பொழுது செய்கிற இந்த ப்ரயாணம் ஸபலமாய் பிதாவினுடைய ராஜ்யத்தை முடிசூடிக்கொண்டிருக்கிற உம்மைப் பார்த்து, உம்முடைய மாதாவான கௌஸல்யாதேவியானவள், இன்னும் பேரானந்தம் அடையப் போகிறாள். இது நிச்சயம்," என்று அழகான வாக்குகளால் ஸ்தோத்ரம் செய்துகொண்டிருந்தார்கள்.

40. (பொ-ரை) ஏனென்றால் அந்த ஸ்த்ரீகள் ஸ்ரீராமன் மனதிற்கு ப்ரியமான அந்த ஸீதையை உலகத்திலிருக்கிற ஸ்த்ரீகளைக்காட்டிலும் மிகவும் மேலானவளென்று எண்ணினார்கள்.

तया सुचरितं देव्या पुरा नूनं महत्तपः ।
रोहिणीव शशाङ्केन रामसंयोगमाप या ॥ 41 ॥
इति प्रासादशृङ्गेषु प्रमदाभिर्नरोत्तमः ।
शुश्राव राजमार्गस्थः प्रिया वाच उदाहृताः ॥ 42 ॥
स राघवस्तत्र कथाप्रपञ्चाञ्शुश्राव लोकस्य समागतस्य ।
आत्माधिकारा विविधाश्च वाचः प्रहृष्टरूपस्य पुरोजनस्य ॥ 43 ॥
एष श्रियं गच्छति राघवोऽद्य राजप्रसादाद्विपुलाङ्गमिष्यन् ।
एते वयं सर्वसमृद्धकामा येषामयं नो भविता प्रशास्ता ॥ 44 ॥
लाभो जनस्यास्य यदेष सर्वं प्रपत्स्यते राष्ट्रमिदं चिराय ।
न ह्यप्रियं किंचन जातु कश्चित्पश्येन्न दुःखं मनुजाधिपेऽस्मिन् ॥ 45 ॥

41-42. (ப-ரை) या- யாதொரு ஸீதாதேவியானவள், रोहिणी- ரோஹிணியானவள், शशाङ्केन इव- சந்திரனோடு (சேர்ந்தது) போல், रामसंयोगं- ராமனோடு சேர்தலை, आप- அடைந்திருக்கிறாளோ, तया देव्या- அந்த ஸீதாதேவியினால், पुरा- முன்னொரு காலத்தில், महत् तपः- பெரிய தபஸ்ஸானது, सुचरितं- நன்றாகச்செய்யப்பட்டது, नूनं- நிச்சயம், इति- என்று, प्रासादशृङ्गेषु- உப்பரிகைகளின் சிகரங்களில், प्रमदाभिः- ஸ்த்ரீகளால், उदाहृताः- சொல்லப்பட்ட, प्रियाः वाचः- இனிய வார்த்தைகளை, नरोत्तमः- ராமன், राजमार्गस्थः- ராஜவீதியில் சென்றுகொண்டே, शुश्राव- கேட்டார்.

43-44-45. (ப-ரை) एष राघवः- இந்த ராகவன், अद्य- இப்பொழுது, राजप्रसादात्- மஹாராஜாவின் அநுக்ரஹத்தினால், विपुलां श्रियं- விஸ்தாரமான ஐச்வர்யத்தை, गमिष्यन्- அடைவதற்காக, गच्छति- போகின்றார், येषां नः- யாதொரு நமக்கு, अयं- இந்த ஸ்ரீராமன், प्रशास्ता- ராஜாவாக, भविता- ஆகப்போகிறாரோ, एते वयं- இந்த நாம், सर्वसमृद्धकामाः- ஸம்பூர்ணமான எல்லா மனோரதங்களையும் உடையவர்களாக ஆனோம்,

41-42 (பொ-ரை) "சந்திரனோடு ரோஹிணீதேவி சேர்ந்ததுபோல், இந்த ஸ்ரீராமனோடு ஸீதாதேவி சேர்ந்திருப்பதால், இவள் ஜென்மாந்திரத்தில் மிகப்பெரிய தபஸ் செய்தே இருக்கவேண்டும்." என்று இவ்வாறு உப்பரிகைகளின் நுனிகளில் இருந்து ஸ்த்ரீகள் சொல்லுகின்ற இனியப் பேச்சுகளை புருஷோத்தமனை ஸ்ரீராமன் ராஜவீதியில்சென்றுகொண்டே காதில் கேட்டுக்கொண்டிருந்தார்.

43-44-45. (பொ-ரை) இந்த ஸ்ரீராமன் மஹாராஜாவின் அநுக்ரஹத்தினால், அளவற்ற ராஜ்யஸம்பத்தை அடைவதற்காக மஹாராஜாவினிடம் செல்லுகி

स घोषवद्भिश्च हयैर्मतंगजैः पुरःसरैः स्वस्तिकसूतमागधैः ।
महीयमानः प्रवरैश्च वादकैरभिष्टुतो वैश्रवणो यथा ययौ ॥ 46 ॥

एषः- இந்த ஸ்ரீராமன், सर्वं इदं राष्ट्रं- இந்த ராஜ்யம் முழுவதையும், चिराय- வெகுநாள் வரையில், प्रपत्स्यते इति यत्- அடையப்போகிறார் என்பது யாதொன்றுண்டோ, एषः- இது, अस्य जनस्य- இந்த ஜனத்திற்கு, लाभः- பெரிய லாபம், अस्मिन्- இவர், मनुजाधिपे सति- அரசனாக இருக்கும் காலத்தில், कश्चित्- ஒருவனும், जातु- ஒருக்காலும், किंचन अप्रियं- ப்ரியமில்லாதது ஒன்றையும், न पश्येत् हि- பார்க்கவேமாட்டான், दुःख- அநிஷ்டத்தையும், न पश्येत्- பார்க்கமாட்டான், इति- என்று, समागतस्य- அங்கு வந்திருக்கிற, लोकस्य- (வெளிதேசத்து) ஜனத்தினுடையவும், प्रहृष्टरूपस्य- மிகவும் ஸந்தோஷமுள்ள पुरः- जनस्य- பட்டணத்து ஜனத்தினுடையவும், कथाप्रपञ्चान्- லௌகிகமான விஸ்தாரமான கதைகளையும், आत्माधिकाराः- தன்னைக்குறித்ததுகளான, विविधाः च- பலவிதங்களான, वाचः- வார்த்தைகளையும், तत्र- அங்கு शुश्राव- காதால் கேட்டுக்கொண்டே சென்றார்.

46. (ப-ரை) सः- அந்த ஸ்ரீராமன், घोषवद्भिः- கோஷமுள்ளதுகளான, हयैः- குதிரைகளாலும், मतंगजैः- யானைகளாலும், पुरःसरैः- முன்னே செல்லுகின்ற, स्वस्तिकसूतमागधैः- கட்டியம் சொல்லுகிறவர்களாலும், ஸ்தோத்ரம செய்கிறவர்களாலும், எழுப்புகின்றவர்களாலும், महीयमानः- கௌரவப்படுத்தப்பட்டவராயும, प्रवरैः- மிகவும் சிறந்தவர்களான, वादकैः- பாடகர்களாலும், अभिष्टुतः- ஸ்தோத்ரம செய்யப்பட்டு, वैश्रवणो यथा- குபேரன்போல், ययौ- சென்றார்.

றார். இவர் நமக்கு அரசனாக வந்துவிடப்போகிறார். நாமெல்லோரும இனி ஸர்வமனோரதங்களும நிறைவேறி ஒரு குறைவுமில்லாமல் இருக்கப்போகிறோம். இவர் ராஜ்யம் முழுவதையும நெடுநாள் ஆண்டுகொண்டு இருப்பது நமக்கு பெரிய லாபமன்றோ. இவர் அரசனாயிருக்கும் காலத்தில் ஒருவனும் ஒரு காலத்திலும் தனக்கு கொஞ்சமேனும் அப்ரியத்தை பார்க்கவே மாட்டான். துக்கத்தையும் பார்க்கவே மாட்டான், என்று அங்குவந்திருக்கிற வெளிதேசத்து ஜனங்களுடைய லௌகிகமான விஸ்தாரமான கதைகளையும மிகவும் ஸந்தோஷமுள்ள பட்டணத்து ஜனங்கள் தம்மைப்பற்றி பலவிதமாகப் பேசிக்கொண்டிருக்கிற பேச்சுகளையும், காதால் கேட்டுக்கொண்டே அந்த ராஜவீதியில் சென்றார்.

46. (பொ-ரை) அந்த ராமன் பெருங்கோஷமுள்ளதுகளான, குதிரைகளோடும், யானைகளோடும், முன்னே செல்கின்ற கட்டியம கூறுகின்றவர்களாலும், ஸ்தோத்ரம் செய்கின்றவர்களாலும, எழுப்புகின்றவர்களாலும், புகழப்பட்டும, மிகவும் சிறந்தவர்களான பாடகர்களால் ஸ்தோத்ரம் பண்ணப்பட்டும் குபேரன் போல் சென்றார்.

करेणुमातङ्गरथाश्वसंकुलं महाजनौघप्रतिपूर्णचत्वरम् ।
प्रभूतरत्नं बहुपण्यसंचयं ददर्श रामो रुचिरं महापथम् ॥ 47 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
षोडशः सर्गः ॥ 16 ॥

47. (ப-ரை) रामः- ராமன், करेणुमातङ्गरथाश्वसंकुलं- பெண்யானை, ஆண்யானை, தேரு, குதிரை, இவைகளால் நிறைந்தும், महाजनौघप्रतिपूर्णचत्वरम्- பெரிய ஜனக்கூட்டங்களால் நிறைந்த ப்ரதேசங்களையுடையதாயும், प्रभूतरत्नं- ஏராளமான ரத்னங்களை உடையதாயும், बहुपण्यसंचयं- அநேக பலசரக்குகளின் கூட்டங்களையுடையதாயும், रुचिरं- மிகவும் அழகாயும் இருக்கிற, महापथम्- ராஜவீதியை, ददर्श- பார்த்தார்.

47 (பொ-ரை) பெண் யானைகளும், ஆண் யானைகளும், தேருகளும், குதிரைகளும், நெருங்கி ஜனக்கூட்டங்கள் எங்கும் நிறைந்து அளவற்ற ரத்னங்களும் பலவிதங்களான பலசரக்குகளும் நிறைந்து அழகான ராஜமார்க்கத்தை பார்த்துக்கொண்டே செல்லுகிறார்.



सप्तदशः सर्गः ॥ 17 ॥

स रामो रथमास्थाय संप्रहृष्टसुहृज्जनः ।
पताकाध्वजसंपन्नं महार्हागरुधूपितम् ॥
अपश्यन्नगरं श्रीमान्नानाजनसमाकुलम् ॥ 1 ॥

1. (ப-ரை) श्रीमान्- அழகுள்ளவரான, सः रामः- அந்த ஸ்ரீராமன், संप्रहृष्टसुहृज्जनः सन्- ஸந்தோஷப்பட்ட ஸ்நேஹித ஜனங்களுடையவராய்க்கொண்டு, रथं- தேரை, आस्थाय- ஏறி, पताकाध्वजसम्पन्नं- டக்கயங்களோடும், கொடிகளோடும், கூடினதாயும், महार्हागरुधूपितम्- ச்ரேஷ்டமான அகில் புகையால் தூபிக்கப்பட்டும், नानाजनसमाकुलम्- பலவித ஜனங்களால் நிறைந்துமிருக்கிற, नगरं- பட்டணத்தை, अपश्यत्- பார்த்தார்.

1. (பொ-ரை) ஸ்ரீமானான அந்த ஸ்ரீராமன் ஸ்நேஹிதர்கள் ஸந்தோஷத்தை அடையும்படி தேரிலேறிக்கொண்டு, கொடிகளாலும், டக்கயங்களாலும் நிறைந்து ச்ரேஷ்டமான அகில் கட்டை புகை கமழ்ந்து பலவித ஜனங்களால் நிறைந்துமிருக்கிற அந்நகரத்தைப்பார்த்தார்.

स गृहैरभ्रसंकाशैः पाण्डुरैरुपशोभितम् ।
राजमार्गं ययौ रामो मध्येनागरुधूपितम् ॥ 2 ॥
चन्दनानां च मुख्यानामगरूणां च संचयैः ।
उत्तमानां च गन्धानां क्षौमकौशाम्बरस्य च ॥ 3 ॥
अविद्धाभिश्च मुक्ताभिरुत्तमैः स्फाटिकैरपि ।
शोभमानमसम्बाधैस्तं राजपथमुत्तमम् ॥ 4 ॥
संवृतं विविधैः पण्यैर्भक्ष्यैरुच्चावचैरपि ।
ददर्श तं राजपथं दिवि देवपथं यथा ॥ 5 ॥
दध्यक्षतहविर्लाजैर्धूपैरगरुचन्दनैः ।
नानामाल्योपगन्धैश्च सदाभ्यर्चितचत्वरम् ॥ 6 ॥
आशीर्वादान्बहूञ्शृण्वन्सुहृद्भिः समुदीरितान् ।
यथार्हं चाऽपि सम्पूज्य सर्वानेव नरान्ययौ ॥ 7 ॥

2. (ப-ரை) सः रामः- அந்த ராமன், अभ्रसंकाशैः- மேகத்திற்கு ஸமானங்களாயும், पाण्डुरैः- வெளுப்பாயுமிருக்கிற, गृहैः- வீடுகளால், उपशोभितम्- விளங்கிக்கொண்டும், अगरुधूपितम्- அகில்கட்டைகளால் தூபம் போடப்பட்டுமிருக்கிற, राजमार्गं- ராஜமார்க்கத்தை, मध्येन- நடுவில், ययौ- போனார்.

3-4-5-6-7. (ப-ரை) मुख्यानां- ச்ரேஷ்டங்களான, चन्दनानां च- சந்தனங்களுடையவும், अगरूणां च- அகில் கட்டைகளுடையவும், उत्तमानां- மிகவும் ச்ரேஷ்டங்களான, गन्धानां च- புனுகு ஜவ்வாது முதலான வாஸனை த்ரவ்யங்களுடையவும், क्षौमकोश अम्बरस्य च- நார்ப்பட்டுகளுடையவும், பூச்சிப்பட்டுகளுடையவும, संचयैः- கூட்டங்களாலும், अविद्धाभिः- தொளை இடப்படாமலிருக்கிற, मुक्ताभिश्च- முத்துக்களாலும், उत्तमैः- உயர்ந்த, स्फाटिकैः अपि- ஸ்படிக கல்லுகளாலும், शोभमानं- விளங்கிக்கொண்டும், असंबाधैः- ஒன்றோடொன்று சேராமல் வைக்கப்பட்ட, विविधैः- பலவிதங்களான,

2. (பொ-ரை) அந்த ஸ்ரீராமன், மேகங்களுக்கு ஸமானமாய் வெளுத்துமிருக்கிற மாளிகைகளால் அலங்கரிக்கப்பட்டு அகில் கட்டை தூபம் கமழ்ந்து கொண்டுமிருக்கிற, ராஜ வீதியின் நடுவே சென்றார்.

3-4-5-6-7. (பொ-ரை) ச்ரேஷ்டமான, சந்தனங்கள், அகில் சந்தனங்கள், உத்தமமான புனுகு ஜவ்வாதுமுதலிய வாஸனை த்ரவ்யங்கள், க்ஷௌமா என்கிற செடியின் நாரினால் செய்யப்பட்ட நார்ப்பட்டுகள், பட்டுப்பூச்சிப் பட்டுகள், தொளையிடாமல் புதியதான முத்துகள், மிகவும் சிறந்த ஸ்படிகங்கள், இவைகளின் ஸமூஹங்களால் விளங்கிக்கொண்டும, ஒன்றோடொன்று கலக்காமல் தனித்தனியாகவைத்

पितामहैराचरितं तथैव प्रपितामहैः ।
अद्योपादाय तं मार्गमभिषिक्तोऽनुपालय ॥ 8 ॥
यथास्म लालिताः पित्रा यथा पूर्वैः पितामहैः ।
ततः सुखतरं रामे वत्स्यामः सति राजनि ॥ 9 ॥
अलमद्य हि भुक्तेन परमार्थैरलं च नः ।
यथा पश्याम निर्यान्तं रामं राज्ये प्रतिष्ठितम् ॥ 10 ॥
ततो हि नः प्रियतरं नान्यत्किंचिद्भविष्यति ।
यथाभिषेको रामस्य राज्येनामिततेजसः ॥ 11 ॥
एताश्चान्याश्च सुहृदामुदासीनः कथाः शुभाः ।
आत्मसंपूजनीः शृण्वन्ययौ रामो महापथम् ॥ 12 ॥

पण्यैः- பலசரக்குகளாலும், उच्चावचैः- நாநாவிதங்களான, भक्ष्यैः- பக்ஷணங்களாலும், संवृतं- பரவி இருக்கிற, उत्तमं- மிகவும் ச்ரேஷ்டமான, तं राजपथं- அந்த ராஜவீதியை, ददर्श- பார்த்தார், दध्यक्षतहविर्लाजैः- தயிர், அக்ஷதை, ஹவிஸ், பொரி இவைகளாலும், धूपैः- தூபங்களாலும், अगरुचन्दनैः- அகில்கட்டை சந்தனங்களாலும், नानामाल्योपगन्धैः च- நாநாவிதமான மாலைகளோடுகூடிய வாஸனைத்ரவ்யங்களாலும், सदा- எப்பொழுதும், अभ्यर्चितचत्वरम्- பூஜிக்கப்பட்ட ப்ரதேசங்களையுடையதாயும், दिवि- ஆகாசத்தில், देवपथं यथा- தேவமார்க்கம்போல், (இருக்கிற), तं राजपथं- அந்த ராஜமார்க்கத்தை, सुहृद्भिः- ஸ்நேஹிதர்களால், समुदीरितान्- சொல்லப்பட்ட, बहून् आशीर्वादान्- எல்லா ஆசீர்வாதங்களை, शृण्वन् सन्- கேட்டுக்கொண்டும், सर्वान् नरान्- எல்லா மனிதர்களையும், यथार्हं च- அவரவர்களுக்குத் தக்கபடி, सपूज्य अपि- வெகுமதித்துக்கொண்டும், ययौ- சென்றார்.

8-9-10-11-12. (ப-ரை) हे राम- ராமனே! पितामहैः- உம்முடைய பிதாமஹர்

---

இருக்கிற பலசரக்குகளாலும், நாநாவிதங்களான பக்ஷணங்களாலும் நிறைந்தும, உத்தமமான அந்த ராஜமார்க்கத்தைக் கண்டார். தயிர், அக்ஷதை, ஹவிஸ், பொரி, தூபம், அகில்கட்டை, சந்தனம், நாநாவிதமான மாலைகள், சிறந்த வாஸனைத்ரவ்யங்கள், இவைகளால் எப்பொழுதும் பூஜிக்கப்பட்டும், தேவலோகத்தில் தேவர்கள் ஸஞ்சரிக்கிற மார்க்கம்போல் அழகான ராஜவீதியில் தம்முடைய ஸ்நேஹிதர் அங்கங்கு செய்துகொண்டிருக்கிற பலவிதமான ஆசீர்வாதங்களையும காதால் கேட்டுக்கொண்டு பட்டாபிஷேகத்திற்காக அங்கங்கு வீதிகளில் கூடியிருக்கிற ஜனங்களை கடைக்கண்ணாலும் புருவம் அசைத்தலாலும், நமஸ்காரத்தினாலும் அவரவர்களுக்குத் தக்கபடி மரியாதை செய்துகொண்டு சென்றார்.

8-9-10-11-12. (பொ-ரை) ஹே ராமா! நீர் பட்டாபிஷேகம் செய்துகொ

களாலும், तथैव- அப்படியே, प्रपितामहैः- அதற்கு முந்தின பாட்டன்மார்களாலும், आचरितं- நடத்தப்பட்ட, तं मार्गं- அந்த மரியாதையை, त्वं- நீர், अभिषिक्तः सन्- பட்டாபிஷேகம் செய்யப்பட்டவராய், अनुपालय- பரிபாலனம் செய்யும், रामे- ராமன, राजनि सति- ராஜாவாக ஆகும காலத்தில், यथा- எப்படி, पित्रा- அவர் பிதாவினால், लालिताः स्म- அன்பு பாராட்டப்பட்டிருந்தோமோ, यथा- எப்படி, पूर्वैः- அதற்கு முன்னோர்களான, पितामहैः- பிதாமஹர்களாலும், यथा- எப்படி, लालिताः- அன்புபாராட்டப்பட்டிருந்தோமோ, ततः- அதைக்காட்டிலும், सुखतरं- மிகவும் ஸுகமாக, वत्स्यामः- வஸிக்கப்போகிறோம், अद्य- இப்பொழுது, नः- நமக்கு, भुक्तेन- போஜனத்தினாலும், अलं- போதும், परमार्थैः च- பரம புருஷார்த்தங்களாலும, अलं- போதும், राज्ये- ராஜ்யத்தில், प्रतिष्ठितम्- அபிஷேகம் பணணப்பட்டு, निर्यान्तम्- (தமமுடைய திருமாளிகையை நோக்கி) திரும்பி வருகின்ற, रामं- ஸ்ரீராமனை, पश्याम यथा- பார்க்கப்போகிறோமென்கிற யாதொன்றுண்டோ, ततः हि- அதைக்காட்டிலும், नः- நமக்கு, प्रियतरं- மிகவும ப்ரியமானது, अन्यत् किंचित्- வேறு ஒன்றும, न भविष्यति- உண்டாகப்போகிறதில்லை, अमिततेजसः- அளவற்ற தேஜஸ்ஸோடுகூடிய, रामस्य- ராமனுககு, राज्येन- ராஜ்யத்திற்காக, अभिषेकः यथा- பட்டாபிஷேகமானது எபபடி ப்ரியமோ, एताः च- இதுகளும, अन्याः च- மற்றவைகளுமான, आत्मसंप्रजनीः- மனதிற்கு ஸந்தோஷத்தை உண்டு பண்ணக்கூடிய, सुहृदां- ஸ்நேஹிதர்களுடைய, शुभाः कथाः- சுபமான கதைகளை, उदासीनः सन्- உதாஸீனராய்க்கொண்டு, शृण्वन्- கேட்டுக்கொண்டு, महापथम्- ராஜவீதியை, रामः- ஸ்ரீராமன், ययौ- அடைநதார்.

---

ண்டு உம்முடைய பிதாமஹர்களும், ப்ரபிதாமஹர்களும, நடத்திவநத அநத மரியாதையை நீர் பரிபாலித்து வரவேண்டும். (இது வ்ருத்தர்களுடைய ஆசீர்வாதம்.) ஸ்ரீராமன் ராஜாவாக வருங்காலத்தில், அவருடைய பிதாவும், அவருடைய முன்னோர்களான ப்ரபிதாமஹர்களும, எவ்விதம் நம்மிடம் அன்பு பாராட்டினார்களோ அதைக்காட்டிலும அன்புபாராட்டப்பட்டு, மிகவும ஸுகமாகவிருபபோம. ராஜ்யபட்டாபிஷேகம் செய்துகொண்டு தம்முடைய திருமாளிகையைககுறித்து திரும்பிவருகின்ற ஸ்ரீராமனை நாம பார்க்குமபடி நேர்நதால் அதைவிட நமககு வேறு ஒன்றும வேண்டாம. போஜனமும, இஹலோக ஸுகானுபவமும ஸ்வர்கக ஸுகானுபவமும் நமக்கு வேண்டாம. அளவிரந்த தேஜஸ்ஸுடைய, ஸ்ரீராமனுக்கு நடக்கப்போகிற ராஜ்யபட்டாபிஷேகத்தை பார்த்து ஆனநதிப்பதைவிட வேரு ஒன்றும் நமக்கு ப்ரியமானது இல்லை. என்று இவ்விதங்களாயும், மற்ற விதங்களுமான மனதிற்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணக்கூடிய, தம் ஸ்நேஹிதர்களுடைய அழகான வார்த்தைகளை, காதால் கேட்டுக்கொண்டே உதாஸீனமாகவே (அதாவது தன் விஷயமான ஸ்தோத்திரத்தினால் கொஞ்சமேனும் மனதில் விகாரமில்லாதவராகவே) ராஜவீதியில் சென்றார்.

न हि तस्मान्मनः कश्चिच्चक्षुषी वा नरोत्तमात् ।
नरः शक्नोत्यपाक्रष्टुमतिक्रान्तेऽपि राघवे ॥ 13 ॥
* यश्च रामं न पश्येत् तु यं च रामो न पश्यति ।
निन्दितः स वसेल्लोके स्वात्माप्येनं विगर्हते ॥ 14 ॥
सर्वेषां हि स धर्मात्मा वर्णानां कुरुते दयाम् ।
चतुर्णां हि वयस्थानां तेन ते तमनुव्रताः ॥ 15 ॥

13. (ப-ரை) राघवे- ஸ்ரீராமன், अतिक्रान्ते अपि- கண்ணுக்கு எட்டாமல் தாண்டிப்போனபோதிலும், नरोत्तमात्- புருஷோத்தமனை, तस्मात्- அவரிடத்திலிருந்து, मनः- மனதையும், चक्षुषी वा- கண்களையாவது, कश्चित् नरः- ஒரு புருஷனும், अपाक्रष्टु- இழுப்பதற்கு, न शक्नोति हि- சக்தியுள்ளவனன்று.

14. (ப-ரை) यः- யாதொருவன், राम च- ராமனையும், न पश्येत् तु- பார்க்கவில்லையோ, रामः- ராமன், य च- எவனையும், न पश्यति- பார்க்கிறதில்லையோ, सः- அவன் लोके- உலகத்தில், निन्दितः- பழிக்கப்பட்டவனாய்க்கொண்டு, वसेत्- வசிப்பன், स्वात्मा अपि- தானும், एनं- இவனை, (தன்னை) विगर्हते- நிந்திக்கொள்ளுகிறான்.

15. (ப-ரை) धर्मात्मा- தர்மிஷ்டராயிருக்கிற, सः- அந்த ஸ்ரீராமன், चतुर्णां वर्णानां- நாலுவர்ணங்களுக்கும், सर्वेषां- எல்லா ஜனங்களுக்கும், वयस्थानां- வயதை அநுஸரிக்க, दयाम्- கருணையை, कुरुते हि- செய்கிறானன்றோ! तेन- அதனால், ते- அந்த ஜனங்கள், तं- அந்த ராமனை, अनुव्रताः- அநுஸரித்திருக்கிறார்கள்

13. (பொ-ரை) புருஷோத்தமனை ராகவன் கண்ணுக்கு எட்டாமல் வெகுதூரம் தாண்டிப்போன போதிலும் அவரை விட்டு மனதையாவது, கண்களையாவது, திருப்புவதற்கு ஒரு புருஷனாலும் முடியாது. (அப்படியிருக்க ஸ்த்ரீகளால் முடியாது என்பதை சொல்லப்ரஸக்தியில்லை).

14. (பொ-ரை) யாவனொருவன் ஸ்ரீராமனை ஒரு தடவையாவது பார்க்கவில்லையோ, எவனை ஸ்ரீராமன் ஒரு தடவையாவது கடாக்ஷிக்கவில்லையோ, அவனை உலகமடங்கலும் நிந்திப்பதும் தவிர தானும் தன்னை "அய்யோ நாம் ஒருதடவையாவது ராமஸேவையை அடையவில்லை. ஸ்ரீராமனாவது நம்மை ஒருதடவை கடாக்ஷிக்கப் பெறவுமில்லை." சீ! சீ! நம்முடைய தௌர்பாக்யமன்றோ இது என்று தன்னை நிந்தித்துக்கொள்ளுவன்.

15. (பொ-ரை) தர்மாத்மாவான இந்த ஸ்ரீராமன், நாலு வர்ணங்களிலும் எல்லாஜனங்களிடத்திலும் அவரவர்கள் வயதை அனுஸரித்து கருணை செய்கிறார் அதனாலன்றோ அவர்கள் அந்த ஸ்ரீராமனை அநுஸரித்திருக்கிறார்கள்.

*இதனால் எந்த ஜனமாயிருந்தாலும் பகவானுடைய ஸேவையையும், பகவானுடைய கடாக்ஷத்தையும் ஒரு தடவையாவது அடையவேண்டும். அப்படி இல்லாத பக்ஷத்தில் அவனுடைய ஜன்மமே வீணென்று சொன்னதாயிற்று.

चतुष्पथान्देवपथांश्चैत्यान्यायतनानि च ।
प्रदक्षिणं परिहरन्जगाम नृपतेः सुतः ॥ 16 ॥
स राजकुलमासाद्य मेघसङ्घोपमैः शुभैः ।
प्रासाद शृङ्गैर्विविधैः कैलासशिखरोपमैः ॥ 17 ॥
आवारयद्भिर्गगनं विमानैरिव पाण्डुरैः ।
* वर्धमानगृहैश्चापि रत्नजालपरिष्कृतैः ॥ 18 ॥
तत्पृथिव्यां गृहवरं महेन्द्रभवनोपमम् ।
राजपुत्रः पितुर्वेश्म प्रविवेश श्रिया ज्वलन् ॥ 19 ॥

---

16. (ப-ரை) नृपतेः सुतः- அந்த ராஜகுமாரன், चतुष्पथान्- நாற்சந்தி வீதிகளையும், देवपथान्- தேவாலயங்களையும், चैत्यानि- சைத்ய வ்ருக்ஷங்களையும், आयतनानि च- ஸபா மண்டபங்களையும், प्रदक्षिणं- தனக்குப்ரதிக்ஷணமாயிருக்கும்படி, परिहरन्- ஒதுங்கிக் கொண்டு, जगाम- போனார்.

17-18-19. (ப-ரை) सः- அந்த ராஜகுமாரன், राजकुल- ராஜக்ருஹத்தை, आसाद्य- அடைந்து, मेघसङ्घोपमैः- மேகக்கூட்டங்களுக்கு ஸமானமாயும், कैलासशिखरोपमैः- கைலாஸ சிகரத்திற்கு ஸமானமாயும், विविधैः- பலவிதங்களான, शुभैः- அழகான, प्रासादशृङ्गैः- உப்பரிகைகளின் சிகரங்களால், गगनं- ஆகாயத்தை, आवारयद्भिः- மறைக்கின்றதுகளாயும், विमानैः इव- விமானங்கள்போலும், पाण्डुरैः- வெளுத்ததுகளாயும், रत्नजालपरिष्कृतैः- நவரத்னஸமூகங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கிற, वर्धमानगृहैश्चापि- வர்த்தமானமென்கிற லக்ஷணமுள்ள க்ருஹங்களாலும, (சூழப்பட்டும்). पृथिव्यां- பூமியில், गृहवरं- சிறந்த க்ருஹமாயும், महेन्द्रभवनोपमम्- இந்திரனுடைய அரண்மனைக்கு ஸமானமாயும் இருக்கிற, पितुः वेश्म- பிதாவினுடைய அரண்மனையை, श्रिया- அழகினால், ज्वलन्- ப்ரகாசித்துக்கொண்டு, प्रविवेश- ப்ரவேசித்தார்.

16. (பொ-ரை) இந்த ராஜகுமாரனை ஸ்ரீராமன் நாற்சந்திவீதிகளையும் தேவாலயங்களையும், தெருக்களில் மேடைகட்டிவைத்திருக்கிற அரசமரம் முதலான வ்ருக்ஷங்களையும் ஸபாமண்டபங்களையும் ப்ரதிக்ஷிணமாக ஒதுங்கிச்சென்றார்.

17-18-19. (பொ-ரை) அந்த ராஜபுத்ரனை ராமன் மிக்கசோபையினால்

---

*वर्धमानगृहं- வர்த்தமானமென்று, स्वस्तिक, सर्वतोभद्र, नद्यावर्त, पिच्छन्दक-முதலான க்ருஹங்களைப்போல் ஒருவித லக்ஷணமுள்ள க்ருஹம், அல்லது, वर्धमानगृहं- மேலே உயரமாக அநேக உப்பரிகைகள் கட்டுவதற்க்காக அடியில் விஸ்தாரமாக ஆரம்பித்த க்ருஹம் அல்லது, वर्धमानगृहं- க்ரீடா க்ருஹம் என்றும் சொல்லலாம்.

स कक्ष्या धन्विभिर्गुप्तास्तिस्रोऽतिक्रम्य वाजिभिः ।
पदातिरपरे कक्ष्ये द्वे जगाम नरोत्तमः ॥ 20 ॥
स सर्वाः समतिक्रम्य कक्ष्या दशरथात्मजः ।
सन्निवर्त्य जनं सर्वं शुद्धान्तं पुनरभ्यगात् ॥ 21 ॥
ततः प्रविष्टे पितुरन्तिकं तदा जनः स सर्वो मुदितो नृपात्मजे ।
प्रतीक्षते तस्य पुनश्चनिर्गमं यथोदयं चन्द्रमसः सरित्पतिः ॥ 22 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
सप्तदशः सर्गः ॥ 17 ॥

---

20. (ப-ரை) सः नरोत्तमः- அந்த புருஷோத்தமனான ராமன், धन्विभिः- வில்லாளிகளால், गुप्ताः- காக்கப்பட்டிருக்கிற, तिस्रः कक्ष्याः- மூன்று கட்டுகளை, वाजिभिः- குதிரைகளால், अतिक्रम्य- தாண்டி, पदातिः सन्- கால்நடையாகவே, द्वे कक्ष्ये- இரண்டு கட்டுகளிலும், जगाम- போனார்.

21. (ப-ரை) सः दशरथात्मजः- அந்த தசரதகுமாரனான ஸ்ரீராமன், सर्वाः कक्ष्याः- எல்லா கட்டுகளையும், समतिक्रम्य- கடந்து, सर्वं जनं- எல்லா ஜனத்தையும், सन्निवर्त्य- திருப்பிவிட்டு, शुद्धान्तं- அந்தப்புறத்தை, पुनः अभ्यगात्- மறுபடியும் சென்றார்.

22. (ப-ரை) ततः- பிறகு, नृपात्मजे- ராஜகுமாரன், पितुः- பிதாவினுடைய, अन्तिकं- ஸமீபத்தை, प्रविष्टे सति- ப்ரவேசித்தவளவில், तदा- அப்பொழுது, सः- அந்த, सर्वः जनः- எல்லா ஜனமும், मुदितः- ஸந்தோஷப்பட்டுக்கொண்டு, सरित्पतिः- ஸமுத்ரமானது, चन्द्रमसः- சந்திரனுடைய, उदयं- உதயத்தை, यथा- (प्रतीक्षते)- எதிர்பார்ப்பது போல், पुनः च- மறுபடியும், तस्य- அந்த ராமனுடைய, निर्गमं- திரும்பிவரலை, प्रतीक्षते- எதிர்பார்த்துக் கொண்டிருந்தது.

---

20. (பொ-ரை) அந்த புருஷோத்தமனான ஸ்ரீராமன், வில்லுகளைக்கையிற் பிடித்துக்கொண்டு, காவலாளிகளால் காக்கப்பட்டிருக்கிற மூன்றுகட்டுகளையும தேரில் பூட்டின குதிரைகளோடேசென்று, கால்நடையாக இரண்டுகட்டுகளிலும் சென்றார்.

21. (பொ-ரை) அந்த தசரத புத்ரன் இவ்விதம் ஐந்து கட்டுகளையும் கடந்து தன்னோடுகூட வந்த எல்லா ஜனத்தையும் நிறுத்திவிட்டு பிதாவினுடைய அந்தப்புறத்திற்குச் சென்றார்.

22. (பொ-ரை) பிறகு அந்த ராஜகுமாரன் பிதாவின் ஸமீபத்திற்கு சென்ற ஸமயத்தில் அவ்விடமிருந்த ஸமஸ்த ஜனங்களும் ஸந்தோஷத்துடன், சந்திரோதயத்தை ஸமுத்ரம் எதிர்பார்ப்பதுபோல், மறுபடியும் ஸ்ரீராமன் அங்கிருந்து வெளி வருவதை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

अष्टादशः सर्गः ॥ 18 ॥

स ददर्शासने रामो निषण्णं पितरं शुभे ।
कैकेयीसहितं दीनं मुखेन परिशुष्यता ॥ 1 ॥

स पितुश्चरणौ पूर्वमभिवाद्य विनीतवत् ।
ततो ववन्दे चरणौ कैकेय्याः सुसमाहितः ॥ 2 ॥

रामेत्युक्त्वा च वचनं बाष्पपर्याकुलेक्षणः ।
शशाक नृपतिर्दीनो नेक्षितुं नाभिभाषितुम् ॥ 3 ॥

1. (ப-ரை) सः रामः- அந்த ஸ்ரீராமன், शुभे आसने- அழகான கட்டிலில், निषण्णं- உட்கார்ந்துகொண்டும், कैकेयी सहितं- கைகேயியுடன்கூடியும், दीनं- தைன்யமுள்ளவராயும், परिशुष्यता- வாடியிருக்கிற, मुखेन- முகத்தோடுகூடிய, पितरं- பிதாவை, ददर्श- பார்த்தார்.

2. (ப-ரை) सः- அவர், विनीतवत्- வணக்கத்துடன், पूर्वं- முன்னே, पितुः- பிதாவினுடைய, चरणौ- திருவடிகளை, अभिवाद्य- நமஸ்கரித்து, ततः- பிறகு, सुसमाहितः- மிகவும் தெளிந்த மனதுடையவராய், कैकेय्याः- கைகேயியினுடைய, चरणौ- பாதங்களை, ववन्दे- ஸேவித்தார்.

3. (ப-ரை) नृपतिः- அரசன், दीनः सन्- தைன்யமுடையவராய்க்கொண்டு, राम इति- ராமா என்று, वचनं उक्त्वा- ஒரு வார்த்தையைச்சொல்லி, बाष्पपर्याकुलेक्षणः- நீர்ததும்பின கண்களையுடையவராய்க்கொண்டு, ईक्षितुं- (ராமனை) பார்ப்பதற்கு, न शशाक- ஸமர்த்தராகவில்லை, अभिभाषितुम्- சொல்லுவதற்கும், न शशाक- ஸமர்த்தராகவில்லை.

1. (பொ-ரை) ஸ்ரீராமன், அழகான பர்யங்கத்தில் கைகேயியுடன்கூடி தீனமாய் வாடியமுகத்துடன் உட்கார்ந்துகொண்டிருக்கிற, பிதாவை பார்த்தார்.

2. (பொ-ரை) ஸ்ரீராமன் மிகவும் வணக்கத்துடன் பிதாவின் திருவடிகளை ஸேவித்துவிட்டு, பிறகு கைகேயி, தனக்கும் இஷ்டமானதைச் செய்து, உலகத்திற்கும், ஹிதத்தை செய்கிறவளாகையால் மிகவும் தெளிந்த மனதுடையவராய்; அவளுடைய சரணங்களையும் வணங்கினார்.

3. (பொ-ரை) தசரதர் மிக வருத்தமுடையவராய், கண்களில் நீர்ததும்பிக்கொண்டு "ராமா" என்று ஒரு சப்தத்தை மாத்திரம் சொல்லிவிட்டு, மறுபடி ராமனைப் பார்ப்பதற்கும், பார்த்து ஒரு வார்த்தை சொல்லுவதற்கும் சக்தி இல்லாதவராயிருந்துவிட்டார்.

तदपूर्वं नरपतेर्दृष्ट्वा रूपं भयावहम् ।
रामोऽपि भयमापन्नः पदा स्पृष्ट्वेवा पन्नगम् ॥ 4 ॥
इन्द्रियैरप्रहृष्टैस्तं शोकसन्तापकर्शितम् ।
निश्वसन्तं महाराजं व्यथिताकुलचेतसम् ॥ 5 ॥
ऊर्मिमालिनमक्षोभ्यं क्षुभ्यन्तमिव सागरम् ।
उपप्लुतमिवादित्यमुक्तानृतमृषिं यथा ॥ 6 ॥

4. (ப-ரை) अपूर्वं- முன் ஒருக்காலத்திலும் உண்டாயிராத, भयावहम्- பயங்கரமான, नरपतेः- அரசனுடைய, तत् रूपं- அந்த ரூபத்தை, दृष्ट्वा- பார்த்து, पन्नगम्- ஸர்ப்பத்தை, पदा- காலால், स्पृष्ट्वा इव- மிதித்து பயமடைவதுபோல், रामोऽपि- ராமனும், भयं- பயத்தை, आपन्नः- அடைந்தார்.

5-6. (ப-ரை) अप्रहृष्टैः- ஸந்தோஷமில்லாத, इन्द्रियैः- இந்திரியங்களுடன், शोकसतापकर्शितम्- சோகத்தினாலும் மனக்கொதிப்பினாலும் இளைத்தும், निश्वसन्तं- பெருமூச்செறிந்தும, व्यथिताकुलचेतसम्- வருத்தமடைந்து பதறின மனதுடையவராயும், ऊर्मिमालिनं- அலைகளின் வரிசைகளையுடையதாய், अक्षोभ्यं- கலக்கமுடியாததாயும், क्षुभ्यन्तं- (பிறகு) கலங்கியிருக்கிற, सागरं इव- ஸமுத்ரம் போன்றவராயும், उपप्लुतं- ராகுகேதுக்ரஸ்தமான, आदित्य इव- ஸூர்யனைப்போலவும், उक्तानृतम्- பொய் சொல்லிய, ऋषिं यथा- ரிஷியைப்போலவுமிருக்கிற, तं महाराजं- அந்த அரசனை, दृष्ट्वा- பார்த்து, भयं आपन्नः- ராமன் பயத்தை அடைந்தார்.

4. (பொ-ரை) ராமனும் இதற்குமுன் ஒருஸமயத்திலும் இவ்விதம் தான் பார்த்திராத பயங்கரமான அவ்வரசன் நிலைமையைப்பார்த்து எவ்வித துக்கத்திலும் மனது கலக்கமில்லாதவராயிருந்தும், ஸர்ப்பத்தைக் காலால் மிதித்தவன் பயப்படுவதுபோல் பயமடைந்தார்.

5-6. (பொ-ரை) ஸந்தோஷமில்லாத இந்திரியங்களோடு சோகத்தினாலும், மனக்கொதிப்பினாலும், தேஹம் இளைத்து பெருமூச்செறிந்து, வ்யஸனத்தினால் பதறின மனதை உடையவராய் அலைகளெறிந்து ஒருவராலும் கலக்கமுடியாமலிருந்தும் கலங்கின ஸமுத்ரம்போன்றும் ராகுகேதுக்களால் பிடிக்கப்பட்ட ஸூர்யன்போலும், பொய்சொல்லி தேஜஸ்ஸு அழிந்த ரிஷிபோலவுமிருக்கிற அந்த மஹாராஜனைப்பார்த்து ராமன் மிக பயமடைந்தார்.

अचिन्त्यकल्पं हि पितुस्तं शोकमुपधारयन् ।
बभूव संरब्धतरः समुद्र इव पर्वणि ॥ 7 ॥
चिन्तयामास च तदा रामः पितृहिते रतः ।
किं स्विदद्यैव नृपतिर्न मां प्रत्यभिनन्दति ॥ 8 ॥
अन्यदा मां पिता दृष्ट्वा कुपितोऽपि प्रसीदति ।
तस्य मामद्य संप्रेक्ष्य किमायासः प्रवर्तते ॥ 9 ॥

7. (ப-ரை) अचिन्त्यकल्पं- நினைக்கமுடியாததான, पितुः- பிதாவினுடைய, तं शोकं- அந்த துக்கத்தை, उपधारयन्- நினைத்துக்கொண்டு, पर्वणि- பர்வகாலத்தில், समुद्र इव- ஸமுத்ரம்போல், संरब्धतरः- மிகவும் கலங்கினவராக, बभूव- ஆனார்.

8-9. (ப-ரை) तदा- அப்போழுது, रामः- ராமன், पितृ हिते रतः- பிதாவுக்கு ஹிதத்தைச் செய்வதில் ஆசையுடையவராய், किं स्वित्- இதென்ன! नृपतिः- அரசன், अद्यैव- இன்றையதினமே, मां- என்னைப்பார்த்து, न प्रत्यभिनन्दति- ஸந்தோஷப்படாமலிருக்கிறார், अन्यदा- இதற்கு முன்காலங்களிலெல்லாம், पिता- தந்தையானவர், कुपितः अपि- கோபமுள்ளவராயிருந்தும், मां दृष्ट्वा- என்னைப் பார்த்து, प्रसीदति- கோபம் தெளிந்து விடுவார், तस्य- அப்படிப்பட்டவருக்கு, अद्य- இப்பொழுது, मां- என்னை, सम्प्रेक्ष्य-பார்த்து, आयासः- மனவருத்தமானது, प्रवर्तते- உண்டாயிருக்கிறது, किं- இதென்ன! (என்று), चिन्तयामास च- மனதில் எண்ணமும் கொண்டார்.

---

7. (பொ-ரை) இவ்விதம் நேரக்கூடியதென்று ஒருக்காலும் நினைக்கமுடியாததான அந்த பிதாவின் துக்கத்தைப்பார்த்து, இது என்ன காரணத்தினால் உண்டாயிருக்கலாம் என்று ஆலோசித்து பர்வகாலத்தில் ஸமுத்ரம்போல மிகவும் கலங்கினவராக ஆனார்.

8-9. (பொ-ரை) அப்பொழுது ராமன் பிதாவுக்கு ஹிதத்தைச்செய்ய எண்ணமுள்ளவராய், இதென்ன? அரசன் நம்மைப்பார்த்து இன்றையதினமே ஸந்தோஷப்படாமலிருக்கிறார். இதற்கு முந்திய காலங்களிலெல்லாம், பிதா வேறுவிதமாக கோபமுள்ளவராக இருந்தாலும், என்னைப்பார்த்தவுடனே அந்த கோபங்களைவிட்டு, மனது தெளிந்து விடுவார். அப்படிப்பட்டவருக்கு இப்பொழுது என்னைப் பார்த்து மனவருத்தமுண்டானதற்கு காரணமென்னவோ என்று மனதில் சிந்தையும் அடைந்தார்.

स दीन इव शोकार्तो विषण्णवदनद्युतिः ।
कैकेयीमभिवाद्यैव रामो वचनमब्रवीत् ॥ 10 ॥
कच्चिन्मया नापराद्धमज्ञानाद्येन मे पिता ।
कुपितस्तन्ममाचक्ष्व त्वं चैवैनं प्रसादय ॥ 11 ॥
अप्रसन्नमनाः किं नु सदा मां प्रति वत्सलः ।
विवर्णवदनो दीनो न हि मामभिभाषते ॥ 12 ॥

10 (ப-ரை) सः रामः- அந்த ராமன், दीन इव- தீனன்போல், शोकार्तः- துக்கத்தினால் பீடிக்கப்பட்டு, विषण्णवदनद्युतिः- வ்யஸனமடைந்த முகத்தின் ஒளியை உடையவராகவுமிருந்து, कैकेयीं- கைகேயியை, अभिवाद्य एव- நமஸ்காரம்செய்துவிட்டு, वचनं- ஒரு வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

11. (ப-ரை) मया- என்னால், न अपराद्धं कच्चित्- அபராதம் செய்யப்படவில்லையே, अज्ञानात्- தெரியாமையால், येन- எந்த அபராதத்தினால், मे पिता- என்னுடைய பிதாவானவர், कुपितः- கோபித்துக்கொண்டிருக்கிறாரோ, तत्- அந்த அபராதத்தை, मम- எனக்கு, आचक्ष्व- நீர் சொல்லும், त्वं च एव- நீரே, एनं- இவரை, प्रसादय च- க்ஷமாதானமும் செய்யும்.

12. (ப-ரை) सदा- எப்பொழுதும், मां प्रति- என்னைக்குறித்து, वत्सलः- வாத்ஸல்யமுடைய என் பிதா, अप्रसन्नमनाः- கலங்கின மனதுடையவராகவிருக்கிறாரே- किं नु- அது ஏன்! हि- ஏனென்றால், विवर्णवदनः- வர்ணம் மாறிய முகத்தையுடையவராய், दीनः- தைன்யமுடையவராயும், मां- என்னை, न अभिभाषते- முகம்நோக்கி பேசாமலிருக்கிறார்.

10. (பொ-ரை) ராமன் தைன்யமுள்ளவன்போல் துக்கத்தினால் பீடிக்கப்பட்டு முகத்தின் ஒளியும் மழுங்கி கைகேயியை நமஸ்காரம் செய்துவிட்டு (அவளைப் பார்த்து) ஒரு வார்த்தை சொன்னார்.

11. (பொ-ரை) நான் ஒரு அபராதமும் புத்திபூர்வமாகச் செய்யவில்லையே, அஜ்ஞானத்தினால் ஏதாவது அபராதம் நேர்ந்து அதனால் கோபித்துக்கொண்டிருந்தால் அந்த அபராதத்தை இன்னதென்று எனக்கு நீர் தெரிவிப்பதுடன், பிதாவையும், க்ஷமாதானம் செய்யும்.

12. (பொ-ரை) எப்பொழுதும் என்விஷயத்தில் மிகவும் வாத்ஸல்யமுள்ள என் பிதா இப்பொழுது ஏன் மனம் கலங்கினவராயிருக்கிறார். ஏனென்றால் முகத்தின் வர்ணம் மாறி தைன்யமுள்ளவராயிருந்து என்னைப் பார்த்து நேரில் பேசாமலிருக்கிறாரே.

शारीरो मानसो वापि कच्चिदेनं न बाधते ।
संतापो वाभितापो वा दुर्लभं हि सदा सुखम् ॥ 13 ॥

कच्चिन्न किंचिद्भरते कुमारे प्रियदर्शने ।
शत्रुघ्ने वा महासत्वे मातृणां वा ममाशुभम् ॥ 14 ॥

अतोषयन्महाराजमकुर्वन्वा पितुर्वचः ।
मुहूर्तमपि नेच्छेयं जीवितुं कुपिते नृपे ॥ 15 ॥

13. (ப-ரை) शारीरः- சரீரஸம்பந்தமான, सन्तापः वा- வ்யாதியோ, मानसः अपि तापः वा- மனோவ்யாதியோ, एनं- இவரை, न बाधते कच्चित्- வருத்தப்படுத்தாமலிருக்கிறதா, हि- ஏனென்றால், सुखं- (மனுஷ்யர்களுக்கு) ஸுகமனது, सदा- எப்பொழுதும், दुर्लभं- கிடைக்காததன்றோ.

14. (ப-ரை) प्रियदर्शने- ப்ரியமான காக்ஷியையுடைய, कुमारे भरते- குமாரனான பரதனிடத்திலோ, महासत्वे- மிக்க தீரனான, शत्रुघ्ने वा- சத்ருக்னனிடத்திலோ, मम- என்னுடைய, मातृणां वा- தாய்மார்கள் விஷயத்திலோ, किंचित्- अशुभम्- ஏதாவது அநிஷ்டமானது, न कच्चित्- இல்லாமலிருக்கிறதா.

15. (ப-ரை) नृपे- அரசன், कुपिते सति- கோபித்துக்கொண்டிருக்கும்பொழுது, महाराजं- மஹாராஜனான அவரை, अतोषयन्- ஸந்தோஷப்படுத்தாதவனாகவும், पितुः- பிதாவினுடைய, वचः- வார்த்தையை, अकुर्वन्- செய்யாதவனாகவும், मुहूर्तं अपि- ஒரு முஹூர்த்தகாலமும், जीवितुं- உயிருடன் இருப்பதற்கு, न इच्छेयं- ஆசைப்படமாட்டேன்.

13. (பொ-ரை) சரீரத்தில் வ்யாதியோ, அல்லது மனதில் விசாரமோ, இவரை பாதிக்காமலிருக்கிறதா, ஏனென்றால், மனுஷ்ய சரீரம் புண்யபாபங்களால் ஏற்பட்டபடியால் ஸுகமும் துக்கமும் மாறி மாறி வருமே தவிர ஒரே ரீதியாக ஸுகமாயிருக்கக்கிடைப்பது அறிது.

14. (பொ-ரை) மிகவும் பார்க்கப்ரியனான குமாரனான பரதனிடத்திலோ, மஹா தைர்யசாலியான சத்ருக்கனனிடத்திலோ என்னுடைய தாய்மார்கள் விஷயத்திலோ ஏதாவது ஒரு அநிஷ்டம் உண்டாகாமலிருக்கிறதா.

15, (பொ-ரை) மஹாராஜா கோபித்துக்கொண்டிருக்கையில் அவரை ஸந்தோஷப்படுத்தாமலும், அவருடைய சொற்படி செய்யாமலும் ஒரு முஹூர்த்த காலம் கூட உயிருடன் இருக்க எனக்கு எண்ணமுண்டாகாது.

यतोमूलं नरः पश्येत्प्रादुर्भावमिहात्मनः ।
कथं तस्मिन्न वर्तेत प्रत्यक्षे सति दैवते ॥ 16 ॥

कच्चित्ते परुषं किंचिदभिमानात्पिता मम ।
उक्तो भवत्या कोपेन यत्रास्य लुलितं मनः ॥ 17 ॥

एतदाचक्ष्व मे देवि तत्त्वेन परिपृच्छतः ।
किं निमित्तमपूर्वोऽयं विकारो मनुजाधिपे ॥ 18 ॥

16. (ப-ரை) इह- இந்த உலகத்தில், नरः. மனிதனானவன், आत्मनः- தன்னுடைய, प्रादुर्भावं- பிறப்பை, यतोमूल- யாதொருவரை காரணமாக உடையதாக, पश्येत्- பார்ப்பானோ, प्रत्यक्षे- ப்ரத்யக்ஷமாயிருக்கிற, दैवते सति- தெய்வமாயிருக்கிற, तस्मिन्- அந்த பிதாவினிடத்தில், कथं- ஏன், न वर्तेत- (வசமாகி) இருக்கமாட்டான்.

17. (ப-ரை) ते- உன்னுடைய, अभिमानात्- ப்ரியத்தினாலோ, कोपेन वा- கோபத்தினாலோ, मम पिता- என்னுடைய பிதாவானவர், भवत्या- உன்னால், किंचित्-परुषं- ஏதுவாகிலும், கடும் சொல்லை, उक्तः कच्चित्- சொல்லப்பட்டாரா என்ன? यत्र- யாதொரு கடும சொல்லால், अस्य- இவருடைய, मनः- மனதானது, लुलितं- கலங்கியிருக்கிறதோ.

18. (ப-ரை) हे देवि- ஹே தேவியே! मनुजाधिपे- அரசனிடத்தில், अयं विकारः– இந்த விகாரமானது, अपूर्वः- முன்னொரு நாளும் பார்க்கப்படாதது, किं निमित्तं- இதற்கு என்ன காரணம்! परिपृच्छतः- கேட்கின்ற, मे- எனக்கு, एतत्- இந்த காரணத்தை, तत्त्वेन- உண்மையாக, आचक्ष्व- சொல்லும அம்மா!

16. (பொ-ரை) இவ்வுலகத்தில் தான் சரீரம் அடைந்தது அந்த பிதா மூலமாகவன்றோ, இது தெரிந்த எந்த விவேகி தான், ப்ரத்யக்ஷ தெய்வமான அந்த பிதாவுக்கு வசப்பட்டிருக்கமாட்டான்.

17. (பொ-ரை) அம்மா! மஹாராஜா உம்மிடத்தில் ப்ரியமாகவிருக்கிறார் என்கிற பெருமையினாலோ, கோபத்தினாலோ என் பிதாவினுடைய மனது கலங்கும்படியாக ஏதுவாகிலும் கடுமையாக நீர் சொன்னீரா என்ன?

18. (பொ-ரை) மஹாராஜருக்கு இதற்குமுந்தி ஒருநாளும நான் பாராத ஒரு விகாரம் உண்டாயிருக்கிறதே, இதற்கு என்ன காரணம. இதைத் தெரிந்துக் கொள்ளவேணுமென்று கேட்கின்ற எனக்கு இதின் காரணத்தை உண்மையாகச் சொல்லவேணும் அம்மா.

एवमुक्ता तु कैकेयी राघवेण महात्मना ।
उवाचेदं सुनिर्लज्जा धृष्टमात्महितं वचः ॥ 19 ॥
न राजा कुपितो राम व्यसनं नास्य किंचन ।
किंचिन्मनोगतं त्वस्य त्वद्भयान्नाभिभाषते ॥ 20 ॥
प्रियं त्वामप्रियं वक्तु वाणी नास्योपवर्तते ।
तदवश्यं त्वया कार्यं यदनेना श्रुतं मम ॥ 21 ॥
एष मह्यं वरं दत्त्वा पुरा मामभिपूज्य च ।
स पश्चात्तप्यते राजा यथान्यः प्राकृतस्तथा ॥ 22 ॥

---

19. (ப-ரை) महात्मना- மஹாத்மாவாயிருக்கிற, राघवेण- ஸ்ரீராமனால், एवं- இவ்விதம், उक्ता- சொல்லப்பட்ட, कैकेयी तु- கைகேயியும், सुनिर्लज्जा सती- மிகவும் வெட்கமில்லாதவளாய்க்கொண்டு, आत्महितं- தனக்கு ஹிதமான, इदं वचः- இந்த வார்த்தையை धृष्टं- தைர்யமாக, उवाच- சொன்னாள்.

20-21. (ப-ரை) हे राम- ஓ ராமனே! राजा- அரசன், न कुपितः- கோபித்துக் கொள்ளவுமில்லை, अस्य- இவருக்கு, किंचन व्यसनं- ஒரு வ்யஸனமும், न- இல்லை, किं तु- ஆனால், अस्य- இவருடைய, मनोगतं- மனதிலிருக்கிற விஷயத்தை, त्वद्भयात्- உன்னிடத்தில் பயத்தினால், न अभिभाषते- உன்னைப்பார்த்துச்சொல்லாமலிருக்கிறார், प्रियं- மிகவும் ப்ரியனாயிருக்கிற, त्वां- உன்னைக் (குறித்து), अप्रियं- ப்ரியமில்லாத வார்த்தையை, वक्तुं- சொல்வதற்கு, वाणी- வாக்கானது, अस्य- இவருக்கு, न उपवर्तते- ப்ரவர்த்திக்கிறதில்லை, अनेन- இவரால், मम- எனக்கு, यत्- யாதொன்று, आश्रुतं- ப்ரதிஜ்ஞை செய்யப் பட்டதோ, तत्- அது, त्वया- உன்னால், अवश्यं- அவச்யமாக, कार्यं- செய்யத்தகுந்தது.

22. (ப-ரை) सः- மிகவும் புகழ்பெற்ற, एषः राजा- இந்த அரசன், पुरा- முன்னொரு காலத்தில், मां- என்னை, अभिपूज्य च- கௌரவப்படுத்தி, मह्यं- என் பொருட்டு, वरं- ஒரு வரத்தைக்கொடுத்து, अन्यः प्राकृतः यथा- அல்பனான வேறுமனிதன் எப்படி பச்சாத்தாபப்படுவானோ, तथा- அப்படி, पश्चात् तप्यते- பசசாத்தாபப்படுகிறார்.

---

19. (பொ-ரை) இவ்விதம் மஹாத்மாவான, ஸ்ரீராமனுடைய வார்த்தையைக்கேட்டு, கைகேயி கொஞ்சமேனும் லஜ்ஜையில்லாதவளாய், தனக்கு ஹிதமான வார்த்தையை, தைர்யத்துடன் சொல்ல ஆரமபித்தாள்.

20-21. (பொ-ரை) ராமா! உன்பிதாவுக்குக்கோபமுமில்லை, சாரீரமான வ்யாதியோ, மனோ விசாரமோ அதுவுமில்லை, ஆனால் அவர் மனதில் ஒன்று எண்ணியிருக்கிறார், அதை உன்னிடத்தில் சொல்வதற்கு பயப்படுகிறார், ஏனென்றால், மிகவும் ப்ரியமான உன்னைப்பார்த்து ப்ரியமல்லாத விஷயத்தை சொல்வதற்கு வாய் வரவில்லை. ஆகையால் அவர் எனக்கு முன் ப்ரதிக்ஞை செய்திருந்தபடி அவச்யம் நீ செய்யவேண்டியது.

22. (பொ-ரை) உலகமெல்லாம் புகழ்பெற்ற இந்த அரசன் முன்னொருகா

अतिसृज्य ददानीति वरं मम विशां पतिः ।
स निरर्थं गतजले सेतुं बन्धितुमिच्छति ॥ 23 ॥
धर्ममूलमिदं राम विदितं च सतामपि ।
तत्सत्यं न त्यजेद्राजा कुपितस्त्वत्कृते यथा ॥ 24 ॥
यदि तद्वक्ष्यते राजा शुभं वा यदि वाशुभम् ।
करिष्यसि ततः सर्वमाख्यास्यामि पुनस्त्वहम् ॥ 25 ॥

23. (ப-ரை) विशां पतिः- இந்த அரசன், मम- எனக்கு, वरं- வரத்தை, ददानि- கொடுக்கிறேன், इति- என்று, अतिसृज्य- ப்ரதிஜ்ஞையையும் செய்து வரத்தையும் கொடுத்து, गतजले- தண்ணீர் போன இடத்தில், निरर्थं- வீணாக, सेतुं- அணையை, बन्धितुं- கட்ட, इच्छति- விரும்புகிறார்.

24. (ப-ரை) हे राम- ஓ ராமனே! इदं सत्यं- இந்த ஸத்யமானது, धर्ममूलं- தர்மத்திற்குக் காரணமானது, सतामपि- பெரியோர்களுக்கும், विदितं च- அறியப்பட்டது, तत् सत्यं- அந்த ஸத்தியத்தை, राजा- அரசன், कुपितः- கோபித்துக்கொண்டு, त्वत् कृते- உனக்காக, यथा- எப்படி, न त्यजेत्- விடாமலிருப்பரோ, (तथा कुरु- நீ அப்படிச் செய்ய வேணும்).

25. (ப-ரை) शुभं वा- நல்லதோ, अशुभम् यदि वा- கெட்டதோ, तत्- அந்த ப்ரதிஜ்ஞை செய்ததை राजा- அரசன் वक्ष्यते- சொல்லுவர், करिष्यसि यदि- (நீ அதை) செய்வாயேயானால், ततः- அப்போது, अहं- நானே, सर्वं- முழுவதையும், आख्यास्यामि- சொல்லுகிறேன்.

---

லத்தில் என்னிடம் கௌரவமவைத்து, எனக்கு ஒரு வரனைத்தானே கொடுத்து விட்டு, பிறகு அல்பமான மனிதன்போல் பச்சாத்தாபப்படுகிறார்.

23. (பொ-ரை) இவ்வரசன் எனக்கு வரம் கொடுக்கிறேனென்று ப்ரதிஜ்ஞையைசெய்துவிட்டு இப்பொழுது வீணாக தண்ணீர்போனபிறகு அணைகட்ட ப்ரயத்தனம் செய்கிறார். (அதாவது) முன்தானே கொடுத்த வரத்தை இப்போது கொடுக்கமாட்டேனென்று சொல்லுவது, தண்ணீர்போனபிறகு அணைகட்டுவது எப்படி வீணாகுமோ, அதுபோல் வீணாகும்.

24. (பொ-ரை) ஸத்யமென்பது தர்மத்திற்குக் காரணமானது. இப்படியே பெரியோர்களும் தெரிந்துகொண்டிருக்கிறார்கள், ஆகையால் அந்த ஸத்யத்தை அரசன் என்மேல் கோபித்துக்கொண்டு உனக்காக விடாமலிருக்கும்படி செய்யவேண்டும்.

25. (பொ-ரை) நல்லதாயிருந்தாலும், கெட்டதாயிருந்தாலும், அரசன் எனக்கு ப்ரதிஜ்ஞைசெய்த விஷயத்தை, உன்னிடம் சொல்லுவார். நீயும் அதை செய்வதாயிருந்தால் அப்போது நானே முழுவதையும் விஸ்தாரமாகச் சொல்லுகிறேன்.

यदि त्वभिहितं राज्ञा त्वयि तन्न विपत्स्यते ।
ततोऽहमभिधास्यामि न ह्येष त्वयि वक्ष्यति ॥ 26 ॥
एतत्तु वचनं श्रुत्वा कैकेय्या समुदाहृतम् ।
उवाच व्यथितो रामस्तां देवीं नृपसन्निधौ ॥ 27 ॥
अहो धिङ्नार्हसे देवि वक्तुं मामीदृशं वचः ।
अहं हि वचनाद्राज्ञः पतेयमपि पावके ॥
भक्षयेयं विषं तीक्ष्णं मज्जेयमपि चार्णवे ॥ 28 ॥

26. (ப-ரை) राज्ञा- அரசனால், अभिहितं- சொல்லப்பட்ட, तत्- அந்த விஷயமானது, त्वयि- உன்னிடத்தில், न विपत्स्यते यदि- வீணாகப்போகாமலிருக்கும் பக்ஷத்தில், ततः- அப்பொழுது, अहं- நான், अभिधास्यामि- சொல்லுகிறேன், एषः- இவர், त्वयि- உன்னிடத்தில், न वक्ष्यति हि- சொல்லமாட்டாரன்றோ.

27. (பரை) रामः- ராமன், कैकेय्या- கைகேயினால், समुदाहृतम्- சொல்லப்பட்ட, एतत् वचनं- இந்த வார்த்தையை, श्रुत्वा तु- கேட்டு, व्यथितः सन्- மனவருத்தமுடையவராய்க்கொண்டு, नृप सन्निधौ- அரசன் முன்னிலையில், तां देवीं- அந்த கைகேயியைப் பார்த்து, उवाच- சொன்னார்.

28. (ப-ரை) अहो धिक्- அய்யோ கெட்டேன், हे देवि- தேவியே, ईदृशं वचः- இப்படிப்பட்ட வார்த்தையை, मां- என்னைக்குறித்து, वक्तुं- சொல்லுவதற்கு, न अर्हसि- நீ தகுந்தவளல்ல, हि- ஏனென்றால், अहं- நான், राज्ञः- அரசனுடைய, वचनात्- வார்த்தையினால், पावके अपि- நெருப்பிலும், पतेयं- விழுவேன், तीक्ष्णं- கொடியதான, विषं- விஷத்தையும், भक्षयेयं- சாப்பிடுவேன், अपि च- பின்னும், अर्णवे- ஸமுத்ரத்திலும், मज्जेयं- முழுகுவேன்.

---

26. (பொ-ரை) மஹாராஜா எனக்குச்சொன்னவிஷயம் உன்னிடத்தில் வீணாகாமலிருக்கும் பக்ஷத்தில் நானே அதைச்சொல்லுகிறேன். ஏனென்றால் உனக்கு அப்ரியமான விஷயத்தை ப்ரியமான உன்னிடத்தில் நேரில் சொல்லமாட்டார்

27. (பொ-ரை) ஸ்ரீராமன் கைகேயிசொன்ன வார்த்தையைக் கேட்டு மனவருத்தத்துடன் அரசன் முன்னிலையில் கைகேயியைப் பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

28. (பொ-ரை) அய்யோ! கஷ்டம். என்னைப் பார்த்து "அரசன் சொன்னதை நீ செய்வாயோ செய்யமாட்டாயோ"வென்று இப்படி ஸம்சயமான வார்த்தையை நீர் சொல்லத்தகுதியல்ல, ஏனென்றால் அரசன் எதைச் சொன்னாலும், நான்செய்ய ஸித்தனாக இருக்கிறேன். நெருப்பிலும் விழுவேன், கொடியதான விஷத்தையும் ஸாப்பிடுவேன், ஸமுத்திரத்திலும் முழுகிவிடுவேன்.

नियुक्तो गुरुणा पित्रा नृपेण च हितेन च ॥ 29 ॥

तद्ब्रूहि वचनं देवि राज्ञो यदभिकाङ्क्षितम् ।
करिष्ये प्रतिजाने च रामो द्विर्नाभिभाषते ॥ 30 ॥

तमार्जवसमायुक्तमनार्या सत्यवादिनम् ।
उवाच रामं कैकेयी वचनं भृशदारुणम् ॥ 31 ॥

29. (ப-ரை) गुरुणा- குருவாயும், नृपेण- அரசனையும், हितेन च- ஹிதத்தைக் கோருகின்றவருமான, पित्रा- என் பிதாவினால், नियुक्तः- ஏவப்பட்டவனாய்க்கொண்டு, तत् करिष्ये- அவ்விதம் செய்வேன்.

30. (ப-ரை) हे देवि- ஹே தேவியே! राज्ञः- அரசனுக்கு, यत्- யாதொன்று, अभिकाङ्क्षितम्- விருப்பமுள்ளதோ; तत् वचनं- அந்த வார்த்தையை, ब्रूहि- சொல்லும், करिष्ये- (அதை) செய்கிறேன், प्रतिजाने च- ப்ரதிஜ்ஞையையும் செய்கிறேன், रामः- ராமன் द्विः- இரண்டுவிதமாக, न अभिभाषते- சொல்லுகிறவனல்ல.

31. (ப-ரை) अनार्या- துஷ்டையான, कैकेयी- கைகேயியானவள், आर्जवसमायुक्तं- நேரான தன்மையோடுகூடிய, सत्यवादिनम्- உண்மையைச் சொல்லுகின்ற, तं रामं- அந்த ராமனைப் (பார்த்து), भृशदारुणं- மிகவும் கொடியதான, वचनं- வார்த்தையை, उवाच- சொன்னாள்.

29. (பொ-ரை) இஹலோகத்திற்கும், பரலோகத்திற்கும் ஹிதத்தை உபதேசித்தவராயும், அரசனையும, எப்பொழுதும நம்முடைய நன்மையிலே நோக்கமுற்றவருமான, என் பிதாவினால், கட்டளையிடப்பட்டதை நான் அவச்யம் செய்வேன்.

30. (பொ-ரை) தேவி! அரசன் மனதில், எதை எண்ணி இருக்கிறாரோ நீர் சொல்லும், அதை நான் செய்கிறேன். ப்ரதிஜ்ஞையையும் செய்கிறேன். ராமன் ஒருவிதமாக முன் சொல்லிவிட்டு. அதற்கு விருத்தமாக ஒருநாளும் சொல்லுகிறவனல்ல.

31. (பொ-ரை) துஷ்டையான கைகேயி ருஜுபுத்தியாயும், (உள்ளும்புறமும் ஒரேமாதிரியாய்) உண்மையே சொல்லுகின்ற அந்த ராமனைப் பார்த்து மிகவும் கொடியதான வார்த்தையைச் சொன்னாள்.

पुरा दैवासुरे युद्धे पित्रा ते मम राघव ।
रक्षितेन वरौ दत्तौ सशल्येन महारणे ॥ 32 ॥

तत्र मे याचितो राजा भरतस्याभिषेचनम् ।
गमनं दण्डकारण्ये तव चाद्यैव राघव ॥ 33 ॥

यदि सत्यप्रतिज्ञं त्वं पितरं कर्तुमिच्छसि ।
आत्मानं च नरश्रेष्ठ मम वाक्यमिदं शृणु ॥ 34 ॥

32. (பதை) हे राघव- ஓ ராகவனே, पुरा- முன்னொருகாலத்தில், दैवासुरे- தேவாஸுரயுத்தத்தில், महारणे- (ஒரு நாள் நடந்த) பெரும் சண்டையில், सशल्येन- பாணத்தினால் அடிபட்டு, रक्षितेन- (பிறகு என்னால்) ரக்ஷிக்கப்பட்ட, ते पिता- உன்னுடைய பிதாவினால், मम- எனக்கு, वरौ- இரண்டு வரங்கள், दत्तौ- கொடுக்கப்பட்டன.

33. (ப-ரை) हे राघव- ஓ ராகவனே! तत्र- அந்த வரம் கொடுத்த விஷயத்தில் राजा- அரசன், भरतस्य- பரதனுடைய, अभिषेचनम्- ராஜ்ய பட்டாபிஷேகத்தையும், तव- உனக்கு, अद्यैव- இப்பொழுதே, दण्डकारण्ये- தண்டகாவனத்தில், गमनं- போவதையும், मे- என்னால், याचितः- யாசிக்கப்பட்டார்.

34. (ப-ரை) हे नरश्रेष्ठ- ஹே புருஷோத்தமனே, त्वं- நீ, पितरं- பிதாவையும், आत्मानं च- உன்னையும், सत्यप्रतिज्ञं- ஸத்யமான ப்ரதிஜ்ஞையுடையவராக, कर्तुं- செய்வதற்கு, इच्छसि यदि- விரும்புவயேயானால், मम- என்னுடைய, इदं वाक्यं- இந்த வார்த்தையை, शृणु- கேள்.

32. (பொ-ரை) ஹே ராமா! முன் தேவாஸுரயுத்தம் நடந்தகாலத்தில் ஒருநாள் நடந்த பெரிய போரில் உன்னுடைய பிதா ரொம்பவும் பாணத்தினால் அடிபட்டார். பிறகு நான் அதற்குவேண்டிய உபசாரங்களைச்செய்து காப்பாற்றவே அவர் எனக்கு இரண்டு வரங்கள் கொடுத்தார்.

33. (பொ-ரை) ஹே ராமா! அவர் முன்கொடுத்த இரண்டு வரன்களை பரதனுக்கு ராஜ்யபட்டாபிஷேகம் பண்ணவேணுமென்றும், இப்பொழுதே நீ தண்டகாவனம் போகவேணுமென்றும் அரசனை நான் கேட்டுக்கொண்டேன்.

34. (பொ-ரை) ஓ புருஷச்ரேஷ்டனே! உன்னுடைய பிதாவையும், உன்னையும், ஸத்யமான ப்ரதிஜ்ஞையை உடையவராக செய்ய அபிப்ராயப்பட்டால், நான் சொல்லுகிற வார்த்தையைக் கேள்.

सन्निदेशे पितुस्तिष्ठ यथानेन प्रतिश्रुतम् ।
त्वयारण्यं प्रवेष्टव्यं नव वर्षाणि पञ्च च ॥ 35 ॥

भरतस्त्वभिषिच्येत यदेतदभिषेचनम् ।
त्वदर्थे विहितं राज्ञा तेन सर्वेण राघव ॥ 36 ॥

सप्त सप्त च वर्षाणि दण्डकारण्यमाश्रितः ।
अभिषेकमिमं त्यक्त्वा जटाजिनधरो वस ॥ 37 ॥

35. (ப-ரை) यथा- எப்படி, तेन- அவரால், प्रतिश्रुतम्- ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டதோ, (तथा- அப்படி), पितुः- உன்பிதாவினுடைய, सन्निदेशे- ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றும் விஷயத்தில், तिष्ठ- நிலையாகநில், त्वया- உன்னால், नव-पञ्च च- பதினன்கு, वर्षाणि- வருஷங்களை, अरण्य- தண்டகாவனமானது, प्रवेष्टव्यं- ப்ரவேசிக்கத்தகுந்தது.

36. (ப-ரை) हे राघव- ஹே ராகவ! राज्ञा- அரசனால், त्वदर्थे- உனக்காக, यदेतत्- யாதொரு இந்த, अभिषेचनम्- பட்டாபிஷேக ஸாமக்ரியானது, विहितं- ஏற்படுத்தப்பட்டிருக்கிறதோ, तेन सर्वेण- அது எல்லாவற்றினும், भरतः- பரதனானவன், अभिषिच्येत- பட்டாபிஷேகம் செய்யப்படவேண்டும்

37. (ப-ரை) इमं अभिषेक- இந்த பட்டாபிஷேகத்தை, त्यक्त्वा- நீ விட்டுவிட்டு, सप्त सप्त च वर्षाणि- பதினன்கு வருஷங்களை, दण्डकारण्यम्- தண்டகாவனத்தை, आश्रितः- அடைந்தவனாய், जटाजिनधरः- ஜடையும், க்ருஷ்ணாஜினத்தையும் தரித்துக்கொண்டு, वस- வாஸம் பண்ணவேண்டும்.

35. (பொ-ரை) உன்னுடைய பிதா நமக்கு ப்ரதிஜ்ஞை செய்தபடி அவருடைய ப்ரதிஜ்ஞையை காப்பாற்றும் விஷயத்தில் நீ உறுதியாக நிற்கவேணும். ஆகையால் பதினன்கு வருஷங்கள் நீ தண்டகாவனம் போகவேண்டியது.

36. (பொ-ரை) ராகவா! உனக்காக மஹாராஜா இப்போதுசேகரித்திருக்கிற பட்டாபிஷேக ஸாமக்ரி முழுவதையும்கொண்டு பரதனுக்கு பட்டாபிஷேகம் செய்விக்கவேண்டும்.

37. (பொ-ரை) ராமா! நீ இந்த பட்டாபிஷேகத்தை விட்டுவிட்டு, ஜடையும், க்ருஷ்ணாஜினத்தையும் தரித்துக்கொண்டு பதினன்குவருஷம் தண்டகாவனத்தில் வாஸம் பண்ணவேண்டும்.

भरतः कोसलपुरे प्रशास्तु वसुधामिमाम् ।
नानारत्नसमाकीर्णां सवाजिरथकुञ्जराम् ॥ 38 ॥

एतेन त्वां नरेन्द्रोऽयं कारुण्येन समाप्लुतः ।
शोकसंक्लिष्टवदनो न शक्नोति निरीक्षितुम् ॥ 39 ॥

एतत्कुरु नरेन्द्रस्य वचनं रघुनन्दन ।
सत्येन महता राम तारयस्व नरेश्वरम् ॥ 40 ॥

38. (ப-ரை) भरतः- பரதன், कोसलपुरे- கோஸல நகரத்திலேயே, (இருந்து கொண்டு), नानारत्नसमाकीर्णा- நானுவிதங்களான ரத்னங்களால் நிறைந்தும், सवाजिरथकुञ्जराम्- குதிரைகளோடும் தேர்களோடும், யானைகளோடும், கூடியிருக்கிற, इमां वसुधां- இந்த பூமியை, प्रशास्तु- ஆளவேண்டும்.

39. (ப-ரை) कारुण्येन- கருணையினுல், समाप्लुतः- நிறைந்திருக்கிற, अयं नरेन्द्रः- இந்த அரசன், एतेन- இந்த காரணத்தினுல், शोकसंक्लिष्टवदनः- துக்கத்தினுல் வாடின முகமுடையவராய்க்கொண்டு, त्वां- உன்னை, निरीक्षितुम्- பார்ப்பதற்கு, न शक्नोति- சக்தியற்றவராயிருக்கிருர்.

40. (ப-ரை) हे रघुनन्दन राम- ஓ ரகுகுலத்தில் பிறந்த குழந்தாய் ராமனே! नरेन्द्रस्य- அரசனுடைய, एतत् वचनं- இந்த வார்த்தையை, कुरु- நீ செய்யவேண்டும், महता सत्येन- இந்த பெரிய ஸத்யத்தினுல், नरेश्वरम्- அரசனை, तारयस्व- கரையேற்ற வேண்டும்.

38. (பொ-ரை) பரதன் அயோத்யா நகரத்திலேயே இருந்துகொண்டு, நானுவிதங்களான ரத்னங்களால் நிறைந்தும், குதிரைகள், தேர்கள், யானைகள், இவைகளுடன்கூடிய இந்த பூமியை ஆளவேண்டும.

39. (பொ-ரை) மிகவும் கருணையுள்ள இந்த அரசன் இவ்விதம் இரண்டு வரம் எனக்குக் கொடுத்தபடியால், முகம்வாடி உன்னை நேரில் பார்ப்பதற்கே சக்தியற்றவராயிருக்கிருர்.

40. (பொ-ரை) ஹே ரகுகுலத்தில்பிறந்த குழந்தாய் ராமனே! அரசன் நமக்கு ப்ரதிஜ்ஞை செய்தபடி, நீ செய்யவேணும். இவ்விதம் இந்த ஸத்யபரிபாலனமாகிற பெரிய தர்மத்தினுல் மஹாராஜனை நீ கரையேற்றவேண்டும்.

इतीव तस्यां परुषं वदन्त्यां न चैव रामः प्रविवेश शोकम् ।
प्रविव्यथे चापि महानुभावो राजा तु पुत्रव्यसनाभितप्तः ॥ 41 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
अष्टादशः सर्गः ॥ 18 ॥

41. (ப-ரை) तस्यां– அந்த கைகேயி, इति इव- என்று இதுபோல, परुषं- க்ரூரமான சிலவார்த்தைகளை, वदन्त्यां (सत्यां)- சொல்லுங்காலத்தில், रामः- ராமன், शोकम्- துக்கத்தை, न च प्रविवेशएव- அடையவேயில்லை, महानुभावः- மஹாப்ரபாவமுள்ள, राजा तु– அரசனோவென்றால் पुत्रव्यसनाभितप्तः- புத்திரனுடைய வ்யஸனத்தில் மிகவும் தபித்துக்கொண்டு, प्रविव्यथे च अपि- மிகவும் வருத்தமடைந்தார்.

41. (பொ-ரை) இவ்வாறும், இன்னும் கொடியதுமான வார்த்தைகளை கைகேயிசொல்லக்கேட்டும், ராமன் கொஞ்சமேனும் மனதிலும் வருத்தம் அடையவில்லை. அதினால் முகத்தில் வாட்டம் முதலாகிய விகாரத்தையும் அடையவில்லை. மஹானுபாவரான அரசனோவென்றால், இனி ராமனை விட்டுப்பிரியநேரிட்டதே என்று புத்திரசோகத்தினால் மிகவும் பரிதபித்துக்கொண்டிருந்தார்.

---

एकोनविंशः सर्गः ॥ 19 ॥

तदप्रियममित्रघ्नो वचनं * मरणोपमम्
श्रुत्वा न विव्यथे रामः कैकेयीं चेदमब्रवीत् ॥ 1 ॥

1, (ப-ரை) अमित्रघ्नः- சத்ருக்களைவெல்லக்கூடிய, रामः- ராமன், अप्रियं- ப்ரியமல்லாததும், मरणोपमम्- மரணத்திற்கு ஸமானமுமான, तत् वचनं- அந்த வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, न विव्यथे- வ்யஸனப்படவில்லை, कैकेयीं- கைகேயியைப்பார்த்து, इदं- இந்த வார்த்தையை, अब्रवीत् च- சொன்னார்.

1. (பொ-ரை) சத்ருக்களை ஜெயிக்கக்கூடிய வல்லமையுள்ள ஸ்ரீராமன், மரணத்திற்கு ஸமானமான அந்த அப்ரியமான வார்த்தையைக் கேட்டு கொஞ்சமாகிலும் மனவருத்தமில்லாமல், கைகேயியைப்பார்த்து ஒரு வார்த்தையும் சொன்னார்.

* एवमस्तु गमिष्यामि वनं वस्तुमहं त्वितः ।
जटाजिनधरो राज्ञः प्रतिज्ञामनुपालयन् ॥ 2 ॥
इदं तु ज्ञातुमिच्छामि किमर्थं मां महीपतिः ।
नाभिनन्दति दुर्धर्षो यथापुरमरिंदमः ॥ 3 ॥
मन्युर्न च त्वया कार्यो देवि ब्रूमि तवाग्रतः ।
यास्यामि भव सुप्रीता वनं चीरजटाधरः ॥ 4 ॥

2. (ப-ரை) एवमस्तु- அப்படியே ஆகட்டும், अहं- நான், राज्ञः- அரசனுடைய, प्रतिज्ञां- ப்ரதிஜ்ஞையை, अनुपालयन्- பரிபாலனம் பண்ணிக்கொண்டு, जटाजिनधरः- ஜடையையும் க்ருஷ்ணாஜினத்தையும் தரித்துக்கொண்டு, इतः- இவ்விடமிருந்து, वन वस्तु- வனத்தில் வாஸம் பண்ணுவதற்காக, गमिष्यामि- போகிறேன்.

3. (ப-ரை) दुर्धर्षः- ஒருவராலும் ஜெயிக்கமுடியாதவராயும், अरिंदमः- சத்ருக்களை அடக்க ஸமர்த்தருமான, महीपतिः- மஹாராஜா, किमर्थं- ஏன், यथापुरं- முன்போல, मां- என்னைப் (பார்த்து), न अभिनन्दति- ஸந்தோஷப்படாமலிருக்கிறார். इदं तु- இதை மாத்திரம், ज्ञातुं- அறிவதற்கு, इच्छामि- விரும்புகிறேன்.

4. (ப-ரை) हे देवि- ஹே தேவியே, त्वया- உம்மால், मन्युः- கோபமானது, न कार्यः च- செய்யப்படவேகூடாது, तव अग्रतः- உம்முடைய முன்னிலையில், ब्रूमि- சொல்லுகிறேன், चीरजटाधरः- மரவுரி, ஜடை, இவைகளை தரித்துக்கொண்டு, वनं- வனத்தைக்குறித்து, यास्यामि- போய்விடுகிறேன், सुप्रीता- நீர் மிகவும் ப்ரீதியுள்ளவராக, भव- இரும்.

---

2. (பொ-ரை) அம்மா அப்படியே ஆகட்டும். நானும் அரசனுடைய ப்ரதிஜ்ஞையை பரிபாலனம் செய்வதற்காக ஜடையையும், க்ருஷ்ணாஜினத்தையும தரித்துக்கொண்டு இப்பொழுதே இவ்விடமிருந்து வனத்தில் வஸிப்பதற்காக போய்விடுகிறேன்.

3. (பொ-ரை) ஆனால் இதைமாத்திரம் கேட்கவேணுமென்று இருக்கிறேன். ஒருவராலும் ஜெயிக்கமுடியாதவரும், சத்ருக்களை அடக்க வல்லவருமான, மஹாராஜா முன்போல் என்னைப் பார்த்து ஸந்தோஷப்படாமலிருக்கிறார், அதற்கு என்ன காரணம்.

4. (பொ-ரை) அம்மா! நீர் கொஞ்சமேனும் கோபித்துக்கொள்ளக்கூடாது. உம்முடைய முன்னிலையில் சொல்லுகிறேன். நான் வனம்போய்விடுகிறேன். நீர் மிக ஸந்தோஷப்பட்டுக்கொண்டிரும்.

---

*1. (சுலோகம்) "मरणोपमम्"- என்கிறது ஸ்ரீராமனுடைய நினைவின்படி அன்று, உலகத்தார் நினைவின்படி.

*2. (சுலோகம்) एवमस्तु- என்கிறதற்கு, நீர் சொல்லியபடியே பரதனுக்குப் பட்டாபிஷேகம் ஆகட்டும் என்றும் சொல்லலாம் இங்கு.

हितेन गुरुणा पित्रा कृतज्ञेन नृपेण च ।
नियुज्यमानो विस्रब्धः किं न कुर्यामहं प्रियम् ॥ 5 ॥
अलीकं मानसं त्वेकं हृदयं दहतीव मे ।
स्वयं यन्नाह मां राजा भरतस्याभिषेचनम् ॥ 6 ॥
अहं हि सीतां राज्यं च प्राणानिष्टान्धनानि च ।
हृष्टो भ्रात्रे स्वयं दद्यां भरतायाप्रचोदितः ॥ 7 ॥
किं पुनर्मनुजेन्द्रेण स्वयं पित्रा प्रचोदितः ।
तव च प्रियकामार्थं प्रतिज्ञामनुपालयन् ॥ 8 ॥

5. (ப-ரை) हितेन- எனக்கு ஹிதத்தையே கோருகிறவரும், गुरुणा- ஜ்ஞானோபதேசம் செய்தவரும், कृतज्ञेन- உமக்கு தான் முன் செய்திருந்த ப்ரதிஜ்ஞையை நினைத்திருப்பவரும், नृपेण च- அரசனுமான, पित्रा- என் பிதாவினால், नियुज्यमानः- கட்டளையிடப்பட்ட, अहं- நான், विस्रब्धः- (सन्)- கொஞ்சமேனும், ஆலோசியாதவனாய்க் கொண்டு, प्रियं-(அவருக்கு)ப்ரியமான கார்யத்தை, किं न कुर्यां- ஏன் செய்யமாட்டேன்.

6. (ப-ரை) राजा- அரசன், भरतस्य- பரதனுடைய अभिषेचनं- அபிஷேகத்தைக் குறித்து, स्वयं- தானாகவே, मां- என்னைப்பார்த்து, यत् न आह- சொல்லவில்லையென்கிற, एकं अलीकं- இந்த ஒரு அநிஷ்டமானது, मानसं- மனதிலிருந்துகொண்டு, मे- என்னுடைய, हृदयं- ஹ்ருதயப்ரதேசத்தை, दहति इव- கொளுத்துகிறதுபோலிருக்கிறது.

7-8. (ப-ரை) हि- ஏனென்றால், अहं- நான், सीतां- ஸீதையையும், राज्यं च- ராஜ்யத்தையும், इष्टान् प्राणान्- இஷ்டமான ப்ராணன்களையும், धनानि च- தனங்களையும், अप्रचोदितः- (அரசனால்) ஏவப்படாதவனாய்க்கொண்டே, स्वयं- நானாகவே, हृष्टः- ஸந்தோஷமுள்ளவனாய், भ्रात्रे भरताय- ப்ராதாவான பரதன் பொருட்டு, दद्यां- கொடுத்துவிடுவேன், मनुजेन्द्रेण- அரசனான, पित्रा- என் பிதாவினால், प्रचोदितः (सन्)- ஏவப்பட்ட

---

5. (பொ-ரை) எனக்கு ஹிதம் செய்வதிலே நோக்கமுள்ளவரும், மந்த்ரோபதேசம்செய்த குருவாயும், முன்காலத்தில் நீர் செய்திருந்த உபகாரத்திற்கு ப்ரத்யுபகாரம் செய்யவேணுமென்று எண்ணமுங்கொண்ட அரசனுமான என் பிதாவினால், "ராமா இவ்விதம் நீ செய்" என்று ஏவப்பட்ட நான் கொஞ்சமேனும் ஆலோசியாமல் ஏன் அவருக்கு ப்ரியமானதைச் செய்யமாட்டேன்.

6. (பொ-ரை) ஆனால் அரசன், பரதனுடைய பட்டாபிஷேகத்தைக் குறித்து என்னிடம் ஏன் தாமே நேரில் சொல்லவில்லை, என்கிற இந்த ஒரு வருத்தம் மாத்திரம் என் மனதிலிருந்துகொண்டு ஹ்ருதயத்தை எரிக்கிறதுபோலிருக்கிறது.

7-8. (பொ-ரை) ஏனென்றால் நான் வில்லைமுறிக்குங்காலத்தில் ஸீதையையும், ராஜ்யத்தையும், இஷ்டமான ப்ராணன்களையும், தனங்களையும், மஹாராஜா

तदाश्वासय ह्रीमं त्वं किन्विदं यन्महीपतिः ।
वसुधासक्तनयनो मन्दमश्रूणि मुञ्चति ॥ 9 ॥
गच्छन्तु चैवानयितुं दूताः शीघ्रजवैर्हयैः ।
भरतं मातुलकुलादद्यैव नृपशासनात् ॥ 10 ॥
दण्डकारण्यमेषोऽहमितो गच्छामि सत्वरः ।
अविचार्य पितुर्वाक्यं समा वस्तुं चतुर्दश ॥ 11 ॥

---

வனுய்க்கொண்டு, तव- உம்முடைய, प्रियकामार्थं- இஷ்டத்தைச் செய்யவேணுமென்கிற தற்காகவும், प्रतिज्ञां- (அரசனுடைய) ப்ரதிஜ்ஞையை, अनुपालयन्- பரிபாலனம் செய்வ தற்காகவும், (दद्यां- கொடுத்து விடுவேன் என்பது,) किं पुनः- சொல்லவும்வேண்டுமா.

9. (ப-ரை) तत्- ஆகையால், त्वं- நீர், इमं- இந்த மஹாராஜாவை, आश्वासय- ஸமாதானம் செய்யும், महीपतिः- மஹாராஜா, वसुधासक्तनयनः (सन्)- தரையில், பற்றிய கண்களை உடையவராய்க்கொண்டு, मन्दं- மெதுவாக, अश्रूणि- கண்ஜலங்களை, मुञ्चति इति यत्- விடுகிறாரென்பது, किं नु इदं- இது என்ன.

10. (ப-ரை) मातुलकुलात्- மாமாவினுடைய க்ருஹத்திலிருந்து, भरतं- பரதனை, आनयितुं- கூட்டி வருவதற்காக, अद्यैव- இப்பொழுதே, नृपशासनात्- அரசனுடைய உத்தி ரவினால், शीघ्रजवैः- மிகவும் வேகமுள்ள, हयैः- குதிரைகளினால், दूताः- தூதர்கள், गच्छन्तु- போகட்டும்.

11. (ப-ரை) एषः अहं- இந்த நான், पितुः- பிதாவினுடைய, वाक्यं- (நீவனத் திற்குப்போ என்கிற) வார்த்தையை, अविचार्य- விசாரிக்காமலே, चतुर्दश समाः- பதி னான்கு வருஷங்களை, वस्तुं- வஸிப்பதற்கு, इतः- இங்கிருந்து, सत्वरः- அவஸரமாக, दण्डकारण्यं- தண்டகாவனத்தைக்குறித்து, गच्छामि- போகிறேன்.

---

ஆஜ்ஞாபிக்காமல் மனதில் எண்ணியிருந்தாலே ஸந்தோஷத்துடன் ப்ராதாவான பரதனுக்கு கொடுத்திருப்பேன். அப்படியிருக்க, நமக்கு பிதாவான மஹாராஜாவி னால் ஆஜ்ஞாபிக்கப்பட்டு, அவருடைய ப்ரதிஜ்ஞையை பூர்த்திசெய்வதற்காகவும், உம்முடைய இஷ்டத்தை நிறைவேற்றுவதற்காகவும் கொடுப்பேனென்பது சொல்லு வானேன்.

9. (பொ-ரை) ஆகையால் அம்மா நீர் இவரை சமாதானம் செய்யும். மஹா ராஜா தரையைப் பார்த்துக்கொண்டு கண்ணீர் விட்டுக்கொண்டிருக்கிறாரே, இதற் கென்ன காரணம்.

10. (பொ-ரை) மாமாவினுடைய க்ருஹத்திலிருந்து பரதனை இங்கு அழை த்துவருவதற்காக, மிகவும் வேகமுள்ள குதிரைகளில் ஏறிக்கொண்டு தூதர்கள் அரசன் உத்திரவினால் இப்பொழுதே போகட்டும்.

11. (பொ-ரை) இதோ நான் பிதா நம்மைப்பார்த்து நீ வனத்திற்குப்போ

सा हृष्टा तस्य तद्वाक्यं श्रुत्वा रामस्य कैकयी ।
प्रस्थानं श्रद्दधाना हि त्वरयामास राघवम् ॥ 12 ॥
एवं भवतु यास्यन्ति दूताः शीघ्रजवैर्हयैः ।
भरतं मातुलकुलादुपावर्तयितुं नराः ॥ 13 ॥
तव त्वहं क्षमं मन्ये नोत्सुकस्य विलम्बनम् ।
राम तस्मादितः शीघ्रं वनं त्वं गन्तुमर्हसि ॥ 14 ॥

---

12. (ப-ரை) सा कैकयी- அந்த கைகேயியானவள், तस्य रामस्य- அந்த ராமனுடைய, तत् वाक्यं- அந்த வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, हृष्टा- ஸந்தோஷமுள்ளவளாய், प्रस्थानं- (ராமன் வனத்திற்குப்) போவதை, श्रद्दधाना हि- நம்பிக்கொண்டு, राघवम्-ராமனை त्वरयामास- அவஸரப்படுத்தினாள்.

13. (ப-ரை) एवं भवतु- அப்படியே ஆகட்டும், भरतं- பரதனை, मातुलकुलात्- மாமாவினுடைய க்ருஹத்திலிருந்து, उपावर्तयितुं- இங்கு கூட்டிவருவதற்கு, दूताः नराः- தூதுபோகக்கூடிய மனிதர்கள், शीघ्रजवैः- மிகவும் வேகமுள்ள, हयैः- குதிரைகளால், यास्यन्ति- போவார்கள்.

14. (ப-ரை) तु- ஆகிலும், उत्सुकस्य- (பரதனுடைய பட்டாபிஷேகத்தைப் பார்க்க) ஆசையுள்ளவனை, तव- உன்னுடைய, विलम्बनम्- தாமதத்தை, अहं- நான், क्षमं- உசிதமாக, न मन्ये- நினைக்கவில்லை, हे राम- ஹே ராமனே, तस्मात्- ஆகையால், त्वं- நீ, शीघ्रं- சீகரமாக, इतः- இங்கிருந்து, वनं गन्तुं- வனம் போவதற்கு, अर्हसि- தகுந்தவன்.

---

என்று நேரில் சொல்லவில்லையே என்று ஆலோசிக்காமலே பதினான்கு வருஷம் தண்டகாவனத்தில் வாஸம் செய்வதற்காக இங்கிருந்து த்வரையுடன் போகிறேன்.

12. (பொ-ரை) அந்த கைகேயி, அந்த ராமனுடைய வார்த்தையைக்கேட்டு, மிகவும ஸந்தோஷத்துடன் அவச்யம ராமன் காட்டுக்குப் போகப்போகிறான் என்று நம்பிக்கையுடன் ராமனை வனவாஸத்திற்காக அவஸரப்படுத்தினாள்.

13. (பொ-ரை) ராமா, இவ்விதமே கார்யம் நடக்கட்டும், மாமாவினுடைய க்ருஹத்திலிருந்து பரதனை இங்கு அழைத்துவர தூதர்கள் வேகமான குதிரைகளிலேறிப்போவார்கள்.

14. (பொ-ரை) ராமா!, நீ பரதனுக்கு நடக்கப்போகிற பட்டாபிஷேகத்தை பார்க்க ஆசைப்பட்டுக்கொண்டு நீ இங்கு தாமஸம் செய்வது அவ்வளவு உசிதமன்று'' என்று நான் எண்ணுகிறேன். ஆகையால் நீ இப்பொழுதே இங்கிருந்து சீக்ரமாக வனத்திற்குப்போகவேண்டும்.

व्रीडान्वितः स्वयं यच्च नृपस्त्वां नाभिभाषते ।
नैतत्किंचिन्नरश्रेष्ठ मन्युरेषोपनीयताम् ॥ 15 ॥
यावत्त्वं न वनं यातः पुरादस्मादभित्वरन् ।
पिता तावन्न ते राम स्नास्यते भोक्ष्यतेऽपि वा ॥ 16 ॥
धिक्कष्टमिति निःश्वस्य राजा शोकपरिप्लुतः ।
मूर्च्छितो न्यपतत्तस्मिन्पर्यङ्के हेमभूषिते ॥ 17 ॥

15. (ப-ரை) हे नरश्रेष्ठ- ஓ புருஷோத்தமனே, नृपः- அரசன், व्रीडान्वितः सन्- வெட்கத்துடன் கூடினவராய், स्वयं- தானே நேரில், त्वां- உன்னைக்குறித்து, नाभिभाषते यच्च- சொல்லவில்லையென்கிற, एतत्- இது, न किंचित्- ஒன்றுமில்லை, एषः- இந்த मन्युः- கோபமானது, अपनीयतां- உன்னால் போக்கடிக்கப்படலாம்.

16. (ப-ரை) हे राम- ராமனே! त्वं- நீ, अभित्वरन्- த்வரையுள்ளவனாய், अस्मात् पुरात्- இந்த நகரத்திலிருந்து, वनं- வனத்தைக்குறித்து, यावत्- எதுவரையில், न यातः- போகவில்லையோ, तावत्- அதுவரையில், ते पिता- உன் தகப்பனார், न स्नास्यते- ஸ்நானம் செய்யப்போகிறதில்லை, भोक्ष्यते अपि वा- போஜனமும் செய்யப்போகிறதில்லை.

17. (ப-ரை) राजा- அரசன், धिक्कष्टं- அய்யோ கஷ்டம், इति निश्वस्य- என்று பெருமூச்சிட்டுக்கொண்டு, शोकपरिप्लुतः- சோகத்தில் முழுகி, मूर्च्छितः- மூர்ச்சை அடைந்தவராய், हेम भूषिते- ஸ்வர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்ட, तस्मिन् पर्यङ्के- அந்தக்கட்டிலில், न्यपतत्- விழுந்தார்.

---

15. (பொ-ரை) ஹே புருஷோத்தமனே, ராஜா துக்கப்பட்டுக்கொண்டு உன்னைப்பார்த்து நேரில் சொல்லவில்லையே என்று இதை ஒரு பொருட்டாக நினைக்கவேண்டாம். *நேரில் சொல்லவில்லையே என்று நீ மனதில் கோபமும் கொள்ள வேண்டாம்.

16. (பொ-ரை) ராமா! நீ சீக்கிரமாக இந்நகரத்தைவிட்டு தண்டகாவனம் போகாமல் இருக்கும்வரையில் உன் பிதா ஸ்நானமும் செய்யப்போகிறதில்லை, போஜனமும் செய்யப்போகிறதில்லை.

17. (பொ-ரை) இவ்விதம் கைகேயி, சொல்வதைக்கேட்டு அரசன், அய்யோ கஷ்டமென்று பெருமூச்செறிந்து துக்கத்திலாழ்ந்து மூர்ச்சை அடைந்து ஸ்வர்ணமயமான அந்த கட்டிலில் விழுந்து விட்டார்.

---

* இந்த मन्युः என்றால் மனதில் வருத்தத்திற்கும் அர்த்தம் அதை இங்கு வைத்துக்கொள்ளும் பக்ஷத்தில், மஹாராஜா உன்னைப்பார்த்து காட்டுக்குப்போ என்று சொல்லுவதற்கு வெட்கபட்டுக்கொண்டு கைகேயிக்கு கொடுத்த வரம் தவறி விட்டதே என்று வருத்தப்படுகிறார். அவருக்கு உண்டான அந்த வருத்தத்தை போக்குவதற்காக நீ உடனே காட்டுக்குப்போய்விடு, என்று அர்த்தம் சொல்லலாம்.

रामोऽप्युत्थाप्य राजानं कैकेय्याभिप्रचोदितः ।
कशयेवाहतो वाजी वनं गन्तुं कृतत्वरः ॥ 18 ॥
तदप्रियमनार्याया वचनं दारुणोदयम् ।
श्रुत्वा गतव्यथो रामः कैकेयीं वाक्यमब्रवीत् ॥ 19 ॥
* नाहमर्थपरो देवि लोकमावस्तुमुत्सहे ।
विद्धि मामृषिभिस्तुल्यं केवलं धर्ममास्थितम् ॥ 20 ॥

18. (ப-ரை) रामः अपि- ஸ்ரீராமனும், राजान- அரசனை, उत्थाप्य- எழுப்பி (உட்கார்த்தி), कैकय्या- கைகேயியால், अभिप्रचोदितः मन्- ஏவப்பட்டவராய்க்கொண்டு, कशया- கொரடாவினால், आहतः- அடிக்கப்பட்ட, वाजी इव- குதிரைபோல், वनं गन्तुं- தண்டகாரண்யம் போவதற்கு, कृतत्वरः- த்வரையுள்ளவராக, (अभूत- ஆனார்).

19. (ப-ரை) रामः- ராமன், अनार्यायाः- துஷ்டையான கைகேயினுடைய, दारुणोदयम्- க்ரூரமான சொல்மேலிட்டதாய், अप्रिय- ப்ரியமல்லாத, तत् वचनं- அந்த வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, गतव्यथः- வ்யஸனமில்லாதவராய், कैकेयीं- கைகேயியைப் பார்த்து, वाक्य अब्रवीत्- ஒருவார்த்தையைச் சொன்னார்.

20. (ப-ரை) हे देवि- ஓ தேவியே! अहं- நான், अर्थपरः- தனத்தையே முக்யமாகக்கொண்டு, लोके- உலகத்தில், आवस्तुं- வஸிப்பதற்கு, न उत्सहे- ஆசைப்படவில்லை, मां- என்னை, केवल धर्मं- தர்மத்தைமாத்திரம, आस्थितम्- அடைந்தவனும், ऋषिभिः तुल्यं- ரிஷிகளோடு ஸமானமானவனுமாக, विद्धि- தெரிந்துகொள்ளும்.

---

18. (பொ-ரை) ராமனும ப்ரார்த்தனையினால் விழுந்த அரசனை எழுப்பி உட்கார்த்தி, கைகேயி அடிக்கடி தூண்டவே கசையினால் அடிபட்ட குதிரை போல் தண்டகா வனம் போவதற்கு மிகவும் த்வரை கொண்டார்.

19. (பொ-ரை) ஸ்ரீராமன் கொடிய சொற்களை மேலிட்டு மிகவும அப்ரியமான அந்த துஷ்டையின் வார்த்தையை கேட்டும் மன வருத்தமில்லாதவராய் கைகேயியைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

20. (பொ-ரை) அம்மா தேவியே, நான் தனத்திலே பேராசை கொண்டு இந்த லோகத்தில் வஸிக்கவேண்டுமென்று ஆசை உள்ளவனன்று, கேவலம தர்மத்தை மாத்திரம் கைப்பிடித்து ரிஷிகளுக்கு ஸமானமானவனென்று என்னை நீ அறிந்துகொள்ளும்.

---

*अहमर्थपरः- அஹமர்த்தமான ஜீவாத்மாவைக்காட்டிலும் மேலான பரமாத்மாவான நான், ना- மனிதனாக அவதாரம்கொண்டு, लोकं आवस्तुं उत्सहे- இந்த உலகத்தில் சிலகாலம் வஸிக்கவேணுமென்றிருக்கிறேன், मां- என்னை, केवलं धर्मं आस्थितम्- எனக்கு முக்கிய தர்மமான சரணாகத ரக்ஷணத்தை கைப்பிடித்து இருக்கிறவனாகவும்,

यदत्रभवतः किंचिच्छक्यं कर्तुं प्रियं मया ।
प्राणानपि परित्यज्य सर्वथा कृतमेव तत् ॥ 21 ॥
न ह्यतो धर्मचरणं किंचिदस्ति महत्तरम् ।
यथा पितरि शुश्रूषा तस्य वा वचनक्रिया ॥ 22 ॥
अनुक्तोऽप्यत्रभवता भवत्या वचनादहम् ।
वने वत्स्यामि विजने वर्षाणीह चतुर्दश ॥ 23 ॥

21. (ப-ரை) अत्र भवतः- பூஜ்யராயிருக்கிற பிதாவுக்கு, प्रियं यत् किंचित्- ப்ரீ மான எதோ ஒன்று, मया- என்னால், कर्तुं- செய்வதற்கு, शक्यं- முடியுமேயானால் तत्- அது, प्राणान् परित्यज्य अपि- ப்ராணனை விட்டாகிலும், सर्वथा- ஸர்வ ப்ரகாரத்த லும், कृतं एव- (என்னால்) செய்யப்பட்டதாகவே, (विद्धि- நீர் தெரிந்துகொள்ளும்).

22. (ப-ரை) पितरि- பிதாவினிடத்தில், शिश्रूषा- பணிவிடை செய்வதுப் अथवा- அல்லது, तस्य- அவருடைய, वचनक्रिया- சொன்னபடி செய்வதும், यथा-எப்ப சிறந்ததோ, अतः- இதைக்காட்டிலும், महत्तरम्- மிகவும் பெரிதான, किंचित्धर्मचरण ஒரு தர்மாநுஷ்டானமானது, न हि- இல்லை அன்றோ!

23, (ப-ரை) अहं- நான், अत्र भवता- பூஜ்யரான பிதாவினால், अनुक्तः अपि- ( தண்டகாவனம் போகவேணுமென்று) சொல்லப்படாமலிருந்தபோதிலும், भवत्याः உம்முடைய, वचनात्- வார்த்தையினாலே, विजने- ஜனஸஞ்சாரமில்லாத, वने- தண்டக வனத்தில், चतुर्दश वर्षाणि- பதினான்கு வருஷங்களை, इह- இப்பொழுது, वत्स्यामि- வஸி பேன்.

21. (பொ-ரை) பூஜ்யரான நம பிதாவுக்குப்ரியமானது எதுவாகிலும் என்னால் செய்யமுடியுமேயானால் அது ஸர்வப்ரகாரத்தினாலும் ப்ராணன்களைவிட் டாவது என்னால் செய்துமுடித்ததாகவே நீர் தெரிந்துகொள்ளும்.

22. (பொ-ரை) பிதாவுக்கு பணிவிடை செய்வதையும அவனுடைய வா ர்த்தைப்படி நடப்பதையும் காட்டில் மிகவும் உயர்ந்ததான தர்மானுஷ்டானப

23. (பொ-ரை) பூஜ்யரான என் பிதா "ராமா நீ வனம் போகவேண்டு"மெ ன்று எனக்கு உத்திரவு செய்யாமலிருந்தபோதிலும், உமமுடைய வார்த்தையின லேயே ஜனசூன்யமான தண்டகாவனத்தில் நான் வாஸம் செய்வேன்.

---

तुल्यं- ஸுகதுக்கங்களிலோ, சத்ருமித்ர உதாஸீனர்களிலோ ஸமானமாக விருக்கிற வனாகவும், ऋषिभिः- மஹரிஷிகளால், विद्धि- நீர் அறிந்து கொள்ளவும், என்றும் தத்வ விஷயமாகவும் ஒரு அர்த்தம் இந்த ச்லோகத்திற்கு ஏற்படுகிறது என்று சொல்லு வாரும் உண்டு.

न नूनं मयि कैकेयि कंचिदाशंससे गुणम् ।
यद्राजानमवोचस्त्वं ममेश्वरतरा सती ॥ 24 ॥
यावन्मातरमापृच्छे सीतां चानुनयाम्यहम् ।
ततोऽद्यैव गमिष्यामि दण्डकानां महद्वनम् ॥ 25 ॥
भरतः पालयेद्राज्यं शुश्रूषेच्च पितुर्यथा ।
तथा भवत्या कर्तव्यं स हि धर्मः सनातनः ॥ 26 ॥

24. (ப-ரை) हे कैकेयि- ஹே கைகேயியே! मयि- என்னிடத்தில், गुणम्- குணத்தை, कंचित्- கொஞ்சமேனும், न आशंससे- (நீர்) தெரிந்துகொள்ளவில்லை, यत्- ஏனென்றால், त्वं- நீர், मम- எனக்கு, ईश्वरतरा सती- எஜமானியாயிருந்தும், राजानं- ராஜாவை, अवोचः- சொன்னீர், (கேட்டுக்கொண்டீர்).

25. (ப-ரை) अहं- நான், मातरं- மாதாவை, यावत् आपृच्छे- எதுவரையில் கேட்டுக்கொள்ளுகிறேனோ, सीतां च- ஸீதையையும், अनुनयामि- எதுவரையில் ஸமாதானம் சொல்லுவேனோ (அதுவரையில் எனக்கு நீர் அநுமதி கொடுக்கவேணும்), ततः-பிறகு अद्यैव- இன்றையதினமே, महत् दण्डकानां वनम्- பெரியதான தண்டகாவனத்தைக குறித்து, गमिष्यामि- போய்விடுவேன்.

26. (ப-ரை) भरतः- பரதன், राज्यं- ராஜ்யத்தை, यथा- எப்படி, पालयेत्- பரிபாலனம் செய்வனோ, (यथा-எப்படி), पितुः- பிதாவுக்கு, शुश्रूषेत् च- சிச்ருஷையும் செய்வானோ, तथा- அப்படி, भवत्या- உமமால், कर्तव्यं- செய்யத்தகுந்தது, स हि- அதுவன்றோ सनातनः धर्मः- நித்தியமான தர்மம்.

24. (பொ-ரை) கைகேயி! நீரே எனக்கு நேரில் "காட்டுக்குப்போ"வென்று உத்திரவுசெய்ய பூர்ணமான அதிகாரமுள்ளவளாயிருந்தும், அவ்விதம் என்னிடம் நேரில் சொல்லாமல் அதற்காக ராஜாவை கேட்டுக்கொண்டீரே. அதினால் என்னிடத்தில் குணமிருக்கிறதாக கொஞ்சமேனும் நீர் நினைக்கவில்லை. இது நிச்சயம்.

25. (பொ-ரை) அம்மா! நான் மாதாவினிடத்தில் அனுமதி பெற்றுக்கொண்டு, ஸீதைக்கும் ஸமாதானம் சொல்லும்வரையில் எனக்கு அவகாசம் கொடுக்கவேணும். பிறகு நான் இப்பொழுதே பெரியதான தண்டகாவனம் சென்றுவிடுவேன்.

26. (பொ-ரை) அம்மா! பரதன் ராஜ்யத்தை க்ரமமாக பரிபாலித்து பிதாவுக்கும் சிச்ருஷை செய்துவரும்படியாக நீர்தான் செய்துவரவேண்டும். இதுதான் அநாதியான தர்மம்.

स रामस्य वचः श्रुत्वा भृशं दुःखहतः पिता ।
शोकादशक्नुवन्बाष्पं प्ररुरोद महास्वनम् ॥ 27 ॥
वन्दित्वा चरणौ रामो विसंज्ञस्य पितुस्तदा ।
कैकेय्याश्चाप्यनार्याया निष्पपात महाद्युतिः ॥ 28 ॥
स रामः पितरं कृत्वा कैकेयीं च प्रदक्षिणम् ।
निष्क्रम्यान्तःपुरात्तस्मात्स्वं ददर्श सुहृज्जनम् ॥ 29 ॥

27. (ப-ரை) सः पिता- அந்த பிதாவான தசரதர், रामस्य- ராமனுடைய, वचः- வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, भृशं- மிகவும், दुःखहतः- துக்கத்தினால் பீடிக்கப்பட்டு, शोकात्- மனவருத்தத்தினால், बाष्पं- கண்ணீரை, अशक्नुवन्- (தடுக்க) சக்தியற்றவராய், महास्वनम्- பெரும் குரலாக, प्ररुरोद- அழுதார்.

28. (ப-ரை) तदा- அப்பொழுது, रामः- ராமன், विसंज्ञस्य- தன்நினைவில்லாமலிருக்கிற, पितुः- பிதாவினுடையவும், अनार्यायाः- துஷ்டையான, कैकेय्याः च अपि- கைகேயியினுடையவும், चरणौ- திருவடிகளை, वन्दित्वा- ஸேவித்துவிட்டு, महाद्युतिः (सन्)- அதிகமான காந்தியுடையவராய்க்கொண்டு, निष्पपात- வெளிப்புறப்பட்டார்.

29. सः रामः- அந்த ராமன், पितरं- பிதாவையும், कैकेयीं च- கைகேயியையும், प्रदक्षिणम् कृत्वा- ப்ரதக்ஷிணம் செய்து, तस्मात् अन्तःपुरात्- அந்த அந்தப்புறத்திலிருந்து, निष्क्रम्य–வெளியில் வந்து, स्वं- தன்னுடைய, सुहृज्जनम्- ஸ்நேஹித ஜனத்தை, ददर्श- கண்டார்.

27. (பொ-ரை) பிதாவான அந்த தசரதமஹாராஜனும் ராமனுடைய வார்த்தையைக்கேட்டு மிகவும் துக்கத்தினால் கண்ணீரை அடக்கமுடியாமல் பெரிய சப்தத்துடன் கதறினார்.

28. (பொ-ரை) அப்பொழுது ஸ்ரீராமன் தன்நினைவு இல்லாமல் அழுதுக்கொண்டிருக்கிற பிதாவினுடையவும், துஷ்டையான அந்த கைகேயியினுடையவும் திருவடிகளை ஸேவித்துவிட்டு முகமலர்ச்சியுடன் வெளியில் வந்தார்.

29. (பொ-ரை) அந்த ராமன் பிதாவையும் கைகேயியையும் ப்ரதக்ஷிணம் செய்துவிட்டு, அந்த அந்தப்புறத்தில் நின்றும் வெளியில்வந்து அங்கு நின்றிருக்கும் தன் தோழன்மார்களைக்கண்டார்.

तं बाष्पपरिपूर्णाक्षः पृष्ठतोऽनु जगाम ह ।
लक्ष्मणः परमक्रुद्धः सुमित्रानन्दवर्धनः ॥ 30 ॥
आभिषेचनिकं भाण्डं कृत्वा रामः प्रदक्षिणम् ।
शनैर्जगाम सापेक्षो दृष्टिं तत्राविचालयन् ॥ 31 ॥
*न चास्य महतीं लक्ष्मीं राज्यनाशोऽपकर्षति ।
लोककान्तस्य कान्तत्वाच्छीतरश्मेरिव क्षपा ॥ 32 ॥

30. (ப-ரை) सुमित्रानन्दवर्धनः- ஸுமித்ராதேவிக்கு ஆனந்தத்தை வ்ருத்தி செய்கின்ற, लक्ष्मणः- லக்ஷ்மணன், परमक्रुद्धः- மிகவும் கோபமுள்ளவராய், बाष्पपरिपूर्णाक्षः- கண்ணீரால் நிறைந்த கண்களை உடையவராயக்கொண்டு, तं- அந்த ஸ்ரீராமனை, पृष्ठतः- பின்புறமாக, अनुजगाम ह- தொடர்ந்து சென்றார்.

31. (ப-ரை) रामः- ஸ்ரீராமன், आभिषेचनिकं- அபிஷேசனத்திற்காக வைக்கப்பட்டிருக்கிற, भाण्डं- ஸாமக்ரியை, प्रदक्षिणम् कृत्वा- ப்ரதக்ஷிணம் செய்து, सापेक्षः- அதில் ஆசையில்லாதவராயும், तत्र- அந்த ஸாமக்ரியில், दृष्टिं- கண்ணை, अविचालयन्- வைக்காதவராயும், शनैः- மெதுவாக, जगाम- போனார்.

32. (ப-ரை) कान्तत्वात्- அழிவில்லாத அழகோடுகூடினவரானபடியால், अस्य- இவருடைய, महतीं लक्ष्मीं- அதிகமான முகசோபையை, राज्यनाशः- ராஜ்ய நைவந்து தவறினது, लोककान्तस्य- உலகத்திற்கெல்லாம் அழகாயிருக்கிற, शीतरश्मेः- சந்திரனுடைய, लक्ष्मीं- காந்தியை, क्षपा इव- இரவானது (போக்கடிக்காதது) போல, न अपकर्षति- போக்கடிக்கவில்லை.

30. (பொ-ரை) ஸுமித்ராதேவிக்கு பரமாநந்தத்தைச்செய்துகொண்டிருக்கிற லக்ஷ்மணன் மிகவும் கோபத்துடன் கண்களில் நீர் ததும்பிக்கொண்டு, அந்த ராமனைப்பின்தொடர்ந்துபோனார்.

31. (பொ-ரை) ஸ்ரீராமன் தன்னுடைய அபிஷேகத்திற்காக சேகரித்து வைக்கப்பட்டிருக்கும் ஸாமக்ரியைப்ரதக்ஷிணம் செய்து அதில் ஆசையில்லாதவராய், கண்ணையும் வைக்காமல் மெதுவாகச்சென்றார். (மங்களகரமான வஸ்துக்களைக்கண்டால் ப்ரதக்ஷிணம் செய்யவேண்டியது என்று சாஸ்த்ரம்).

32. (பொ-ரை) உலகத்திற்கெல்லாம் அழகான சந்திரனுடைய காந்தியை இரவு போக்கடிக்காததுபோல இயற்கையான அழகையுடைய அந்த ஸ்ரீராமன் முககாந்தியை கைவந்தராஜ்யம தவறினது போக்கமுடியவில்லை.

---

*இந்த திருஷ்டாந்தத்தினால் ஸ்ரீராமனுக்கு இன்னும் அதிகமான முகத்தில் சோபை உண்டாயிற்றென்று தோன்றுகிறது. சந்திரனுக்கு இரவினால் ப்ரகா

न वनं गन्तुकामस्य त्यजतश्च वसुन्धराम् ।
सर्वलोकातिगस्येव लक्ष्यते चित्तविक्रिया ॥ 33 ॥
प्रतिषिध्य शुभं छत्रं व्यजने च स्वलङ्कृते ।
विसर्जयित्वा स्वजनं रथं पौरांस्तथा जनान् ॥ 34 ॥
धारयन्मनसा दुःखमिन्द्रियाणि निगृह्य च ।
प्रविवेशात्मवान्वेश्म मातुरप्रियशंसिवान् ॥ 35 ॥

33. (ப-ரை) वनं गन्तुकामस्य- வனத்திற்குப்போகவேணுமென்று ஆசை கொண்டவராயும், वसुन्धराम्- ராஜ்யத்தை, त्यजतः च- விட்டிருக்கிறவருமான, அந்த ஸ்ரீராமனுக்கு, सर्वलोकातिगस्य इव- எல்லாலோகத்தையும தாண்டின பரமயோகிக்குப் போல், चित्तविक्रिया- மனதில் விகாரமானது, न लक्ष्यते- காணப்படவில்லை.

34-35. (ப-ரை) शुभ- மங்களகரமான, छत्र- குடையையும், स्वलङ्कृते- நன்றாய் அலங்காரம் செய்யப்பட்ட, व्यजने च- சாமரங்களையும, प्रतिषिध्य- தடுத்துவிட்டு, स्वजनं- தன்னுடைய ஜனத்தையும், रथं- தேரையும், तथा- அப்படியே, पौरान् जनान्- பட்டணத்து ஜனங்களையும், विसर्जयित्वा- விட்டுவிட்டு, मनसा- மனதினால், दुःख- துக்கத்தை, धारयन्- அடக்கிக்கொண்டு, इन्द्रियाणि- இந்திரியங்களை, निगृह्य च- தன் வசப்படுத்தி, आत्मवान्- மிகவும தைர்யமுடையவராய்க்கொண்டு, अप्रियशंसिवान्- அநிஷ்டத்தைச சொல்லுவதற்காக, मातुः वेश्म- தன் தாயாரின் அரண்மனையை, प्रविवेश- நுழைந்தார்.

---

33 (பொ-ரை) மானவமானங்களிலும, ஸுகதுககங்களிலும் ஸமமான மனதின்நிலைமையை உடைய பரமயோகிக்கு ஒருவிதத்திலும மனதில விகாரமானது உண்டாகாததுபோல், ராஜ்யத்தையும் விட்டு வனத்திற்கும போக நினைத்துக் கொண்டிருக்கிற ஸ்ரீராமனுக்கு அதனால மனதில் ஒருவிதமான விகாரமும் காணப்படவில்லை. (முதல் சுலோகத்தில் சரீரமான விகாரமில்லாமையும், இந்த சுலோகத்தில் மனதைபபற்றிய விகாரமில்லாமையும சொல்லப்பட்டது).

34-35. (பொ-ரை) சுபமான வெண்குடையையும நன்றாய அலங்காரம் செய்யப்பட்ட சாமரங்களையும, தனக்குவேண்டாமென்று தடுத்துவிட்டு, தமமுடைய ஜனத்தையும் ரதத்தையும பட்டணதது ஜனங்களையும விட்டுவிட்டு, தனக்கு பட்டாபிஷேகம் தவறிப்போனதால் தம் ஸ்நேஹிதர்களுககுண்டாகும துக்கத்தை நினைத்து அதற்காக தன் துககத்தை மனதில் வைத்து வெளிக்காட்டாமல் இந்திரியங்களையும் அடக்கி மிக்க தைர்யத்துடன் தாயாருக்கு மிகவும ப்ரியமல்லாத இந்த விஷயத்தைத்தெரிவிப்பதற்காக கௌஸல்யாதேவியின் அரண்மனைக்குச்சென்றார்.

---

சம் அதிகமாக உண்டாகிறதுபோல, ஸ்ரீராமனுக்கும் கிடைத்த ராஜ்யம் தவறினது அவதாரப்ரயோஜனமான சாதுபரித்ராணரூப கார்யத்திற்கு மிகவும அனுகூலமாகையால் முன்னைககாட்டிலும அதிக சோபை உண்டானதென்று சந்திரத்ருஷ்டாந்தத்தினால் அறியலாம்.

सर्वो ह्यभिजनः श्रीमाञ्श्रीमतः सत्यवादिनः ।
नालक्षयत रामस्य किंचिदाकारमानने ॥ 36 ॥
उचितं च महाबाहुर्न जहौ हर्षमात्मनः ।
शारदः समुदीर्णांशुश्चन्द्रस्तेज इवात्मजम् ॥ 37 ॥
वाचा मधुरया रामः सर्वं संमानयञ्जनम् ।
मातुः समीपं धीरात्मा प्रविवेश महायशाः ॥ 38 ॥

36. (ப-ரை) श्रीमान्- அலங்காரம் பண்ணிக்கொண்டிருக்கிற, सर्वः अपि अभिजनः- நான்கு புறத்திலும் இருக்கிற அந்த எல்லா ஜனமும், श्रीमतः- அழகுள்ளவராயும், सत्यवादिनः- ஸத்யத்தையே சொல்லும் தன்மையையுடையவருமான, रामस्य- ராமனுடைய, आनने- முகத்தில், आकार- விகாரமான குறியை, किंचित्- கொஞ்சமேனும், न आलक्षयत- காணவேயில்லை.

37. (ப-ரை) समुदीर्णांशुः- நன்றாய் விருத்தியடைந்த கிரணங்களையுடைய, शारदः चन्द्रः- சரத்கால சந்திரன், आत्मज- தனக்கு ஸ்வாபாவிகமான, तेजः इव- தேஜஸ்ஸை, (விடாமலிருப்பதுபோல). महाबाहुः- பெருத்த நீண்ட தோள்களையுடைய, அந்த ஸ்ரீராமன், आत्मनः- தனக்கு, उचितं- தகுந்ததான, हर्षं- ஸந்தோஷத்தை, न जहौ- விடவில்லை.

38. (ப-ரை) धीरात्मा- கலங்காத மனதுடையவராயும், महायशाः- அதிக கீர்த்தியை உடையவருமான, रामः- அந்த ஸ்ரீராமன், मधुरया वाचा- இனிதான பேச்சால், सर्वं जनम्- எல்லா ஜனத்தையும், संमानयन् (सन्)- ஸந்தோஷப்படுத்திக்கொண்டு, मातुः- மாதாவினுடைய, समीपं- ஸமீபத்தை, प्रविवेश- ப்ரவேசித்தார்.

36. (பொ-ரை) ஸ்ரீராமனுடைய பட்டாபிஷேகத்திற்காக அலங்காரம்செய்துகொண்டு அங்கு எங்கும் நிறைந்திருக்கும் எல்லா ஜனமும் மஹா உத்ஸாஹத்துடனகூடி ஸத்யவாதியான அந்த ஸ்ரீராமனுடைய திருமுகத்தில் கொஞ்சமேனும் கெட்டவிகாரத்தைக் காணவேயில்லை.

37. (பொ-ரை) நன்றாய் ப்ரகாசித்திருக்கிற சரத்கால சந்திரனைவிட்டு, இயற்கையான அவருடைய தேஜஸ்ஸானது விலகாததுபோல், நீண்டு பெருத்த தோள்களையுடைய ஸ்ரீராமனைவிட்டு. அவருடைய இயற்கையான ஸந்தோஷமும் விலகவில்லை.

38. (பொ-ரை) எவ்வித துக்கத்தாலும் கலங்காத மனதுடையவரும், மிக்க புகழுடையவருமான அந்த ஸ்ரீராமன் அங்கிருக்கிற எல்லா ஜனத்தையும் இனிமையாகப்பேசி, ஸந்தோஷப்படுத்திக்கொண்டு (வெகுமானப்படுத்திக்கொண்டு) தன் மாதாவான கௌஸல்யாதேவியின் ஸமீபத்திற்குச் சென்றார்.

तं गुणैः समतां प्राप्तो भ्राता विपुलविक्रमः ।
सौमित्रिरनुवव्राज धारयन्दुःखमात्मजम् ॥ 39 ॥
प्रविश्य वेश्मातिभृशं मुदान्वितं समीक्ष्य तां चार्थविपत्तिमागताम् ।
न चैव रामोऽत्र जगाम विक्रियां सुहृज्जनस्यात्मविपत्तिशङ्कया ॥ 40 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे

एकोनविंशः सर्गः ॥ 19 ॥

---

39. (ப-ரை) गुणैः- குணங்களால், समतां प्राप्तः- அவருக்கு ஸமானமாகவிருக்கையை அடைந்தவராயும், विपुलविक्रमः- அதிகமான பராக்ரமமுடைய, भ्राता- ப்ராதாவான, सौमित्रिः- ஸௌமித்ரையின் புத்ரரான லக்ஷ்மணனும், आत्मजम्- தனக்கு உண்டாயிருக்கின்ற, दुःखं- துக்கத்தை, धारयन्- அடக்கிக்கொண்டு, तं- அந்த ஸ்ரீராமனை, अनुवव्राज- பின்தொடர்ந்துபோனார்.

40. (ப-ரை) रामः- ஸ்ரீராமன், अति भृशं- மிகவும் அதிகமாக, मुदा अन्वितं- ஸந்தோஷத்தோடுகூடிக்கொண்டிருக்கிற, वेश्म- (தாயாருடைய) க்ருஹத்தை, प्रविश्य- நுழைந்து, आगताम्- (அப்பொழுது தனக்கு) வந்திருக்கிற, तां- அந்த, अर्थविपत्तिं च- காரியத்தின் கெடுதலையும், समीक्ष्य- பார்த்து, सुहृज्जनस्य- தம்முடைய ஸ்நேஹித ஜனத்திற்கு, आत्मविपत्ति शङ्कया- ப்ராண நாசம் உண்டாய் விடுமென்று எண்ணத்தினால், अत्र- இவ்விஷயத்தில், विक्रियां- விகாரத்தை, न जगाम च एव- அடையவேயில்லை.

---

39. (பொ-ரை) ஸகல குணங்களினாலும், ஸ்ரீராமனுக்கு ஸமானரும் விசாலமான பராக்ரமமுமுடைய ப்ராதாவான லக்ஷ்மணனும், தனக்கு உண்டாயிருக்கும் துக்கத்தை மனதில் அடக்கிக்கொண்டு ஸ்ரீராமனுக்குப்பின்னே சென்றார்.

40. (பொ-ரை) மிகவும் ஆனந்தம் நிறைந்திருக்கிற தன் மாதாவின் க்ருஹத்தில் ப்ரவேசித்து, தக்காலத்தில் தனக்கு ஏற்பட்டிருக்கிற ராஜ்யநாசத்தை பார்த்து தம்முடைய ஸ்நேஹிதர்களுக்கு சரீரநாசமுண்டாய்விடுமென்று எண்ணி ஸ்ரீராமன் கொஞ்சமேனும் முகத்தில் விகாரத்தை அடையவேயில்லை.

---

विंशः सर्गः ॥ 20 ॥

तस्मिंस्तु पुरुषव्याघ्रे निष्क्रामति कृताञ्जलौ ।
आर्तशब्दो महाञ्जज्ञे स्त्रीणामन्तःपुरे तदा ॥ 1 ॥

---

1. (ப-ரை) तस्मिन्- அந்த, पुरुषव्याघ्रे तु- புருஷோத்தமனான ஸ்ரீராமன், कृताञ्जलौ- கைகூப்பினவராக, निष्क्रामति (सति)- வெளிப்புறப்படுமளவில், तदा- அப்

---

1. (பொ-ரை) அந்த புருஷோத்தமனான ஸ்ரீராமன் கைகூப்பிக்கொண்டு,

कृत्येष्वचोदितः पित्रा सर्वस्यान्तः पुरस्य च ।
गतिर्यः शरणं चापि स रामोऽद्य प्रवत्स्यति ॥ 2 ॥
कौसल्यायां यथा युक्तो जनन्यां वर्तते सदा ।
तथैव वर्ततेऽस्मासु जन्मप्रभृति राघवः ॥ 3 ॥
न क्रुध्यत्यभिशप्तोऽपि क्रोधनीयानि वर्जयन् ।
क्रुद्धान्प्रसादयन्सर्वान्स इतोऽद्य प्रवत्स्यति ॥ 4 ॥

---

பொழுது, अन्त:पुरे- அந்தப்புறத்தில், स्त्रीणां- ஸ்த்ரீகளுடைய, आर्तशब्द:- தீன சப்தமானது, महान्- பெரிதாக, जज्ञे- உண்டாயிற்று.

2. (ப-ரை) यः- யாதொரு ஸ்ரீராமன், पित्रा- பிதாவினால், अचोदितः- ஏவப்படாதவராகவே, सर्वस्य- ஸமஸ்த ஜனத்தினுடைய, अन्तःपुरस्य च- அந்தப்புறத்தினுடையவும, कृत्येषु- அவச்யம் செய்யவேண்டிய காரியங்களிலே, (प्रवर्तते- முயலுகிறானோ;) गतिः- (எல்லாருக்கும) கதியாயும், शरणं च अपि- ரக்ஷகனாகவுமிருக்கிற, सः रामः- அந்த ஸ்ரீராமன், अद्य- இன்றையதினம், प्रवत्स्यति- தண்டகாவனம் போகப்போகிறான்.

3. (ப-ரை) राघवः- ஸ்ரீராமன், जनन्यां- மாதாவான, कौसल्यायां- கௌஸல்யாதேவியினிடத்தில், यथा- எப்படி, युक्तः- ஸாவதானமாகவே, सदा- எப்பொழுதும், वर्तते- இருக்கிறானோ, तथैव- அப்படியே, जन्मप्रभृति- பிறந்ததுமுதல், अस्मासु- நம்மிடத்திலும், वर्तते- இருக்கிறான்.

4. (ப-ரை) अभिशप्तः- अपि- (ஜனங்களால்) திட்டப்பட்டாலும், न क्रुध्यति-கோபித்துககொள்ளுகிறதில்லை, क्रोधनीयानि- (பிறருக்கு) கோபமுண்டுபண்ணக்கூடிய காரியங்களை, वर्जयन्- பரிஹரிக்கிறவனும், क्रुद्धान्- (ஆக்ரஹத்தினால்) கோபித்துக்கொண்டிருக்கிற, सर्वान्- எல்லா ஜனங்களையும, प्रसादयन्- ஸமாதானம செய்துவருகிறவனுமான, सः- அந்த ராமன், अद्य- இன்று, इतः- இங்கிருந்து, प्रवत्स्यति- வனத்திலே வாஸம் செய்யப்போகிறான்.

---

வெளியில் வருமகாலத்தில் அந்தப்புறத்தில் ஸ்த்ரீகளுடைய, பெரிதான ஆர்த்த சப்தம உண்டாயிற்று.

2. (பொ-ரை) ஸமஸ்த ஜனத்திற்கும அந்தப்புறத்திற்கும, அவசயமாய் செய்யவேண்டிய காரியங்களில் பிதாவினுடைய உத்திரவு இல்லாமலே தானே செய்துவருகின்றவனும், ஸமஸ்தஜனங்களுக்கும கதியாயும் ரக்ஷகனுயுமிருக்கிற ஸ்ரீராமன் இன்று காட்டுக்குப்போகப்போகிறான்.

3. (பொ-ரை) ஸ்ரீராமன் தன் மாதாவான கௌஸல்யாதேவியினிடத்தில் எப்பொழுதும் எப்படி ஸாவதானமாக சிச்ருஷைசெய்துவருகிறானோ, அவ்விதமே பிறந்ததுமுதல் நம்மிடத்திலும் சிச்ருஷை செய்துகொண்டிருக்கிறான்.

4. (பொ-ரை) அந்த ஸ்ரீராமன் பிறரால் திட்டப்பட்டபோதிலும் கோபித்

अबुद्धिर्बत नो राजा जीवलोकं चरत्ययम् ।
यो गतिं सर्वलोकानां परित्यजति राघवम् ॥ 5 ॥
इति सर्वा महिष्यस्ता विवत्सा इव धेनवः ।
पतिमाचुक्रुशुश्चैव सस्वरं चापि चुक्रुशुः ॥ 6 ॥
स हि चान्तःपुरे घोरमार्तशब्दं महीपतिः ।
पुत्रशोकाभिसंतप्तः श्रुत्वा व्यालीयतासने ॥ 7 ॥

5. (ப-ரை) यः- யாதொரு அரசன், सर्वलोकानां- எல்லாலோகங்களுக்குப் गतिं- ரக்ஷகனாயிருக்கிற, राघवम्- ஸ்ரீராமனை, परित्यजति- காட்டுக்குத்துரத்திவிடுகிறானோ अयं- இந்த, नः राजा- நம்மரசன், अबुद्धिः- கொஞ்சமேனும் புத்தியில்லாதவன், बत- ஐயோ जीवलोकं- ப்ராணி ஸமூகத்தை, चरति- பக்ஷிக்கிறானே.

6. (ப-ரை) इति- என்று, ताः- அந்த, सर्वाः महिष्यः- அரசன்மனைவிகளெல்லாரும், विवत्साः- கன்றை இழந்த, धेनवः इव- பசுக்கள்போல, पतिं- பர்த்தாவை, आचुक्रुशुः- திட்டினார்கள், सस्वरं च अपि- பெரிய சப்தத்துடனும், चुक्रुशुः- கதறினார்கள்.

7. (ப-ரை) सः महीपतिः च- அந்த அரசனும், अन्तःपुरे- அந்தப்புறத்தில், घोरं- கொடியதான, आर्तशब्दं- அழுகைக்குரலை, श्रुत्वा- கேட்டு, पुत्रशोकाभिसन्तप्तः- புத்ரசோகத்தினால் நன்றாய்தபிக்கப்பட்டவராய், आसने- ஆஸனத்தில், व्यालीयत- பதுங்கிவிட்டார்.

---

துக்கொள்ளுகிறவனல்ல, அயலாருக்குக் கோபத்தை உண்டாக்கக்கூடிய கார்யங்களைச் செய்கிறதேயில்லை. கேவலம் ஆக்ரஹத்தினால் யாராகிலும் காரணமின்றி கோபித்துக்கொண்டாலும் அவர்களையும் ஸமாதானம் செய்கிறவன். இப்படிப்பட்ட ஸ்ரீராமன் இன்று இந்நகரத்தைவிட்டு, காட்டில் வஸிக்கப்புறப்படப்போகிறானே.

5. (பொ-ரை) ஸர்வலோகத்திற்கும் ரக்ஷகனான ஸ்ரீராமனை காட்டுக்குத் துரத்துகிற நம்மரசன் கொஞ்சமேனும் புத்தியில்லாதவன், ப்ராணிகளை உயிரோடு வாயில்போட்டுத் தின்றுவிடுகிறானே.

6. (பொ-ரை) இவ்விதம் அரசனுடைய மஹிஷிகள் எல்லாரும், கன்றைப் பிரிந்த பசுக்கள்போல் பெரிய கூக்குரலுடன் அழுதுகொண்டு பர்த்தாவைத் திட்டினார்கள்.

7. (பொ-ரை) அந்த அரசனும், அந்தப்புறத்தில் உண்டான கொடிய அழுகைக்குரலைக்கேட்டு முன்னைவிட அதிகமாக புத்ரசோகம்மேலிட்டு பரிதபித்துக்கொண்டு, தான் உட்கார்ந்துகொண்டிருக்கும் ஆஸனத்திலே தேஹமெல்லாம் முடக்கி பதுங்கிக்கொண்டுவிட்டார்.

रामस्तु भृशमायस्तो निःश्वसन्निव कुञ्जरः ।
जगाम सहितो भ्रात्रा मातुरन्तःपुरं वशी ॥ 8 ॥
सोऽपश्यत्पुरुषं तत्र वृद्धं परमपूजितम् ।
उपविष्टं गृहद्वारि तिष्ठतश्चापरान्बहून् ॥ 9 ॥
दृष्ट्वैव तु तदा रामं ते सर्वे सहसोत्थिताः ।
जयेन जयतां श्रेष्ठं वर्धयन्ति स्म राघवम् ॥ 10 ॥

8. (ப-ரை) वशी- ஜிதேந்த்ரியரான, रामः तु- ஸ்ரீராமனும், भृश- மிகவும், आयस्तः- ஆயாஸமுள்ளவராக, कुञ्जरः इव- யானைபோல், निःश्वसन्- பெருமூச்செறிந்துகொண்டு, भ्रात्रा सहितः- ப்ராதாவுடன் கூடினவராய், मातुः अन्तःपुरं- மாதாவினுடைய அந்தப்புரத்தைக் குறித்து, जगाम- சென்றார்.

9. (ப-ரை) सः- அந்த ஸ்ரீராமன், तत्र- அவ்விடத்தில், गृहद्वारि- வீட்டின் வாசலில், उपविष्टं- உட்கார்ந்துகொண்டும், परमपूजितम्- மிகவும் கௌரவத்தை அடைந்தும், वृद्धं- கிழவனுமான, पुरुषं- த்வாரபாலகனையும், तिष्ठतः- நின்றுகொண்டிருக்கிற, अपरान्- மற்ற, बहून्- அநேகம் பேர்களையும், अपश्यत्- பார்த்தார்.

10. (ப-ரை) तदा- அப்பொழுது, ते सर्वे तु- அவர்களெல்லாரும், रामं- ஸ்ரீராமனை, दृष्ट्वा एव- பார்த்த உடனே, सहसा- திடீரென்று, उत्थिताः (सन्तः)- எழுந்தவர்களாய், जयतां- ஜெயம்பெற்றவர்களுக்குள், श्रेष्ठं- சிறந்தவரான, राघवं- ஸ்ரீராமனை, जयेन- ஜய சப்தத்தினால், वर्धयन्ति स्म- வாழ்த்தினார்கள்.

8. (பொ-ரை) ஜிதேந்திரியனான ஸ்ரீராமனும், தம ஜனங்கள் படுகிற வருத்தத்தைக்கண்டு, மிகவும் வருத்தமுடையவராய், மதயானைபோல் பெருமூச்செறிந்துகொண்டு, தம்பியுடன்கூட மாதாவின் அந்தப்புரத்தை நோக்கிச்சென்றார்.

9. (பொ-ரை) அந்த ஸ்ரீராமன், தாயாருடைய க்ருஹத்தில் முன் வாசலில் உட்கார்ந்துகொண்டிருக்கிற மிகவும் கௌரவமுடைய, வ்ருத்தனான ஒரு புருஷனையும், அவ்விடத்திலேயே நின்றுகொண்டிருக்கிற மற்ற அநேகம் ஆள்களையும் பார்த்தார்.

10. (பொ-ரை) அப்பொழுது, அவர்களெல்லோரும், ராமனைக்கண்டவுடனே பறபறப்புடன் எழுந்திருந்து ஜயம் அடைந்தவர்களில் சிறந்தவரான ஸ்ரீராமனை "ஜயாவிஜயீபவ" என்று வாழ்த்தினார்கள்.

प्रविश्य प्रथमां कक्ष्यां द्वितीयायां ददर्श सः ।
ब्राह्मणान्वेदसंपन्नान्वृद्धान्राज्ञाभिसत्कृतान् ॥ 11 ॥
प्रणम्य रामस्तान्वृद्धांस्तृतीयायां ददर्श सः ।
स्त्रियो वृद्धाश्च बालाश्च द्वाररक्षणतत्पराः ॥ 12 ॥
वर्धयित्वा प्रहृष्टास्ताः प्रविश्य च गृहं स्त्रियः ।
न्यवेदयन्त त्वरिता राममातुः प्रियं तदा ॥ 13 ॥

11. (ப-ரை) सः- அந்தராமன், प्रथमां कक्ष्यां- முதல்கட்டை, प्रविश्य- ப்ரவே சித்து, द्वितीयायां- இரண்டாவது கட்டில், वेदसम्पन्नान्- வேத ஸம்பத்தை உடையவர் களாயும், राज्ञा- அரசனால், अभिसत्कृतान्- நன்றாய் ஸம்மானம் செய்யப்பட்ட, वृद्धान ब्राह्मणान्- வ்ருத்தர்களான ப்ராம்மணர்களை, ददर्श- பார்த்தார்.

12. (ப-ரை) सः रामः- அந்த ஸ்ரீராமன், तान् वृद्धान्- அந்த வ்ருத்தப்ராம் மணர்களை, प्रणम्य- நமஸ்கரித்து, तृतीयायां- மூன்றாவது கட்டில், द्वाररक्षणतत्पराः- வாசல் காவலில் ஜாகரூகர்களாக இருக்கிற, वृद्धाः स्त्रियाः च- வ்ருத்தர்களான ஸ்த்ரீகளையும், बालाः च- சிறு பெண்களையும், ददर्श- பார்த்தார்.

13. (ப-ரை) तदा- அப்பொழுது, प्रहृष्टाः- ஸந்தோஷமுள்ள, ताः- स्त्रियः- அந்த ஸ்த்ரீகள், वर्धयित्वा- ஜெயஆசீர்வாதத்தினால் வாழ்த்தி, त्वरिताः- த்வரையுள்ளவர் களாய், गृहं-प्रविश्य च- க்ருஹத்தை ப்ரவேசித்து, राममातुः- ஸ்ரீராமன் தாயாருக்கு, प्रियं- ப்ரியமான ஸ்ரீராமன் வரவை, न्यवेदयन्त- தெரிவித்தார்கள்.

11. (பொ-ரை) ஸ்ரீராமன் முதல் கட்டில் ப்ரவேசித்து அதை தாண்டி இரண்டாவது கட்டில், வேதங்கள் ஓதி அரசனால் பலவிதமாக ஸம்மானம் செய்யப் பட்ட வ்ருத்தர்களான ப்ராம்மணர்களை கண்டார்.

12. (பொ-ரை) ஸ்ரீராமன் அந்த வ்ருத்தர்களான ப்ராம்மணர்களை ஸே வித்துவிட்டு, மூன்றாவது கட்டில் வாசல் காவலில் ஊக்கமுள்ள கிழவிகளான ஸ்த் ரீகளையும், சிறுபெண்களையும் கண்டார்.

13. (பொ-ரை) அப்பொழுது, அந்த ஸ்த்ரீகள் மிகவும் ஸந்தோஷத்துடன் "ஜெயாவிஜயீபவ" என்று ஸ்ரீராமனை வாழ்த்தி பறபறப்புடன் உள்ளே சென்று, ராமமாதாவான கௌஸல்யாதேவியிடம் ஸ்ரீராமன் வந்திருக்கிறானென்று இந்த ப்ரி யமான ஸங்கதியைத்தெரிவித்தார்கள்

कौसल्यापि तदा देवी रात्रिं स्थित्वा समाहिता ।
प्रभाते त्वकरोत्पूजां विष्णोः पुत्रहितैषिणी ॥ 14 ॥
सा क्षौमवसना हृष्टा नित्यं व्रतपरायणा ।
अग्निं जुहोति स्म तदा मन्त्रवत्कृतमङ्गला ॥ 15 ॥
प्रविश्य च तदा रामो मातुरन्तःपुरं शुभम् ।
ददर्श मातरं तत्र हावयन्तीं हुताशनम् ॥
देवकार्यनिमित्तं च तत्रापश्यत्समुद्यतम् ॥ 16 ॥

---

14. (ப-ரை) कौसल्या देवी अपि- கௌஸல்யாதேவியும், पुत्रहितैषिणी-(सती)-புத்திரனுககு ஹிதத்தைவேண்டினவளாய், रात्रिं- ராத்ரிமுழுவதும், समाहिता स्थित्वा- நியமமுள்ளவளாயிருந்து, तदा-प्रभाते- அப்பொழுது காலைவேளையில், विष्णोः पूजां-பகவானுடைய பூஜையை, अकरोत्- செய்துகொண்டிருந்தாள்.

15. (ப ரை) सा- அந்த கௌஸல்யாதேவி, क्षौमवसना- வெண்பட்டை தரித்தவளாய், हृष्टा- ஸந்தோஷமுள்ளவளாய், नित्यं- எப்பொழுதும், व्रतपरायणा- வ்ரதத்திலேயே நோக்கமுள்ளவளாய், कृतमङ्गला- மங்களகார்யங்களையும் செய்கின்றவளாயிருந்து, तदा-அப்பொழுது, मन्त्रवत्- மந்திரத்துடன், अग्निं- அக்நியை, जुहोति स्म- ஹோமஞ்செய்விக்துக்கொண்டிருநதாள்.

16. (ப ரை) तदा- அப்பொழுது, रामः- ஸ்ரீராமன், शुभम्- அழகான, मातुः- மாதாவினுடைய, अन्तःपुर- அநதப்புறத்தை, प्रविश्य- ப்ரவேசித்து, तत्र- அவ்விடத்தில், हुताशनम्- அக்நியை, हावयन्तीं- ஹோமம் செய்வித்துக்கொண்டிருக்கிற, मातरं- தாயாரை, ददर्श- பார்த்தார், तत्र- அவ்விடத்தில், समुद्यतम्- சேகரித்துவைக்கப்பட்டிருக்கிற, देवकार्यनिमित्तम् च- பகவானுடைய ஆராதனத்திற்குவேண்டிய த்ரவ்யத்தையும், अपश्यत्- பார்த்தார்.

---

14. (பொ-ரை) அப்பொழுது கௌஸல்யாதேவியும புத்திரனுடைய க்ஷேமத்தைப்ப்ரார்த்தித்துக்கொண்டு ராத்ரிமுழுவதும் நியமத்துடனிருந்து அந்த விடியற்காலவேளையில் ஸ்ரீபகவானுடைய ஆராதனத்தைச்செய்துகொண்டிருநதாள்.

15. (பொ-ரை) அந்த கௌஸல்யாதேவியும், பட்டுவஸ்திரமதரித்து ஸந்தோஷத்துடன் வ்ரதங்களைச்செய்துகொண்டும் மற்றும் மங்களமான கார்யங்களைச் செய்துகொண்டும், அப்பொழுது மந்த்ரத்துடன் ப்ராம்மணர்களால் அக்நியில் ஹோமம் செய்வித்துக்கொண்டிருந்தாள்.

16. (பொ-ரை) அப்பொழுது ஸ்ரீராமன் அழகான தன்னுடைய மாதாவினுடைய அநதப்புறத்திற் சென்று, ப்ராம்மணர்களால் அக்நியில் ஹோமம் செய்வித்துக்கொண்டிருக்கிற தாயாரையும், பகவானுடைய ஆராதனத்திற்காக சேகரித்து வைக்கப்பட்டிருக்கிற பதார்த்தங்களையும் கண்டார்.

दध्यक्षतं घृतं चैव मोदकान्हविषस्तथा ॥ 17 ॥
लाजान्माल्यानि शुक्लानि पायसं कृसरं तथा ।
समिधः पूर्णकुम्भांश्च ददर्श रघुनन्दनः ॥ 18 ॥
तां शुक्लक्षौमसंवीतां व्रतयोगेन कर्शिताम् ।
तर्पयन्तीं ददर्शाद्भिर्देवतां देववर्णिनीम् ॥ 19 ॥
सा चिरस्यात्मजं दृष्ट्वा मातृनन्दनमागतम् ।
अभिचक्राम संहृष्टा किशोरं वडबा यथा ॥ 20 ॥

---

17-18. (ப-ரை) रघुनन्दनः- ரகுகுலத்துப்புத்திரனுன அந்த ஸ்ரீராமன், दधि- தயிர், अक्षतं- அக்ஷதை, घृतं च एव- நெய், मोदकान्- கொழுக்கட்டைகள், तथा- அவ்விதம், हविषः- ஹவிஸ்ஸுக்கள், लाजान्- பொரிகள், शुक्लानि माल्यानि- வெளுத்த புஷ்பங்களி னுல் கட்டின மாலைகள், पायसं- பாயஸம், तथा- அப்படியே, कृसरं- எள்ளோஹரை, समिधः- ஸமித்துக்கள், पूर्णकुम्भान् च- பூர்ணகும்பங்கள் என்னுமிவைகளையும், ददर्श- பார்த்தார்.

19. (ப-ரை) शुक्लक्षौमसंवीतां- வெண்பட்டு உடுத்திக்கொண்டுப, व्रतयोगेन- வ்ரதம் செய்ததினுல், कर्शिताम्- இளைத்தும், अद्भिः- தீர்த்தங்களால், देवतां- தேவதையை, तर्पयन्तीं- த்ருப்தி செய்துகொண்டும், देववर्णिनीम्- தேவதை போன்றவளுமான, तां- அந்த கௌஸல்யாதேவியை, ददर्श- பார்த்தார்.

20. (ப-ரை) मातृनन्दन- மாதாவுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணுகிற, आगतं आत्मजं- வந்திருக்கிற தன் புத்திரனை, सा- அந்த கௌஸல்யாதேவி, अचिरस्य- சீக்ரமாக दृष्ट्वा- பார்த்து, सहृष्टा (सती)- ஸந்தோஷமுடையவளாய், वडबा- பெண் குதிரையானது, किशोरं यथा- குட்டியைப்பார்த்து வருவதுபோல், अभिचक्राम- எதிரே வந்தாள்.

---

17-18. (பொ-ரை) ரகுகுலத்தில் பிறந்த அந்த ஸ்ரீராமன், தயிர், அக்ஷதை, நெய், கொழுக்கட்டை, ஹவிஸ்ஸு, பொரி, மல்லிகை முல்லை முதலான வெள்ளைபுஷ்பத்தினுல் கட்டிய மாலைகள், பாயஸம, எள்ளோஹரை, ஸமித்துக்கள், பூர்ணகும்பங்கள் என்னுமிவைகள் இங்கே சேகரிக்கப்பட்டுவைத்திருந்தது. அவைகளையும பார்த்தார்.

19. (பொ-ரை) வெண்பட்டு தரித்துக்கொண்டும், வ்ரதம் செய்துகொண்டு வருவதால் தேஹம் இளைந்து அபிஷேகத்திற்காக தேவதையைக்குறித்து தீர்த்தத்தினுல் தர்பணம் செய்துகொண்டிருக்கிற தேவதை போன்ற அந்த கௌஸல்யாதேவியைப்பார்த்தார்.

20. (பொ-ரை) மாதாவுக்கு மிக்க ஸந்தோஷத்தை உண்டுபண்ணுகின்ற தன் புத்திரன் அங்கே வருவதைக்கண்டு உடனே ஸந்தோஷத்துடன், பெண்குதிரை தன் குட்டியை எதிர்நோக்கி வருவதுபோல் கௌஸல்யாதேவியும் ஸ்ரீராமனுக்கு எதிரே வந்தாள்.

स मातरमभिक्रान्तामुपसंगृह्य राघवः ।
परिष्वक्तश्च बाहुभ्यामुपाघ्रातश्च मूर्धनि ॥ 21 ॥
तमुवाच दुराधर्षं राघवं सुतमात्मनः ।
कौसल्या पुत्रवात्सल्यादिदं प्रियहितं वचः ॥ 22 ॥
वृद्धानां धर्मशीलानां राजर्षीणां महात्मनाम् ।
प्राप्नुह्यायुश्च कीर्तिं च धर्मं चोपहितं कुले ॥ 23 ॥

21. (ப-ரை) सः राघवः- அந்த ஸ்ரீராமன், अभिक्रान्तां- தன்னை எதிர்கொண்டு வருகின்ற, मातरं- மாதாவை, उपसंगृह्य- அபிவாதனம் செய்து, बाहुभ्यां- இரண்டு கைகளாலும், परिष्वक्तः च- அணைக்கப்பட்டவராயும், मूर्धनि- சிரஸில், उपाघ्रातः च- முகரப்பட்டவராயும், (स्थितः- இருந்தார்.)

22. (ப-ரை) कौसल्या- கௌஸல்யாதேவியும், दुराधर्षं- ஒருவராலும் அசைக்க முடியாதவரான, आत्मनः सुतं- தன் பிள்ளையான, राघवं- ஸ்ரீராமனைப் (பார்த்து), पुत्रवात्सल्यात्- புத்திரனிடத்தில் மிகவும் அன்பினால், प्रियहित- ப்ரியமாயும் ஹிதமாயுமிருக்கிற, इदं वचः- இந்த வார்த்தையை, उवाच- சொன்னாள்.

23. (ப-ரை) वृद्धानां- வ்ருத்தர்களாயும், धर्मशीलानां- தார்மிஷ்டர்களாயும், महात्मनाम्- மஹாத்மாக்களுமாயிருக்கிற, राजर्षीणां- ராஜரிஷிகளுடைய, आयुः च- ஆயுஸ்ஸையும், कीर्तिं च- யசஸ்ஸையும், कुले- குலத்தில், उपहितं- தகுந்ததான, धर्मं च- தர்மத்தையும், प्राप्नुहि- நீ அடையவேண்டும்.

21. (பொ-ரை) அந்த ராகவன் தன்னை எதிர்கொண்டு வருகின்ற மாதாவை நமஸ்கரித்து, அவளால் இரண்டு கைகளாலும அணைந்து உச்சிமுகரப்பட்டுநின்றார்.

22. (பொ-ரை) ஒருவராலும் கலக்கமுடியாத தைர்யமுடைய தன் புத்திரனை ஸ்ரீராமனைப்பார்த்து கௌஸல்யாதேவி பிள்ளையிடத்தில் மிக அன்பினால் ப்ரியமும் ஹிதமுமான வார்த்தையைச் சொன்னாள்.

23. (பொ-ரை) வ்ருத்தர்களும், தார்மிகஸ்வபாவமுடையவர்களும், மஹாத்மாக்களுமான ராஜரிஷிகளுடைய ஆயுஸ்ஸையும், கீர்த்தியையும், நம் குலத்திற்குத் தகுந்த தர்மத்தையும் நீ அடையவேண்டும்.

सत्यप्रतिज्ञं पितरं राजानं पश्य राघव ।
अद्यैव हि त्वां धर्मात्मा यौवराज्येऽभिषेक्ष्यति ॥ 24 ॥
दत्तमासनमालभ्य भोजनेन निमन्त्रितः ।
मातरं राघवः किंचिद्व्रीडात्प्राञ्जलिरब्रवीत् ॥ 25 ॥
स स्वभावविनीतश्च गौरवाच्च तदाऽऽनतः ।
प्रस्थितो दण्डकारण्यमाप्रष्टुमुपचक्रमे ॥ 26 ॥

24. (ப-ரை) हे राघव- ஓ ராகவனே, पितरं- பிதாவான, राजानं- அரசனே सत्यप्रतिज्ञं- ஸத்யமான ப்ரதிஜ்ஞை உடையவராக, पश्य- நீ பார், धर्मात्मा- தார்மிகரான மஹாராஜா, अद्य एव हि-இன்றையதினமே, त्वां-உன்னை, यौवराज्ये- இளவரசில், अभिषेक्ष्यति அபிஷேகம் செய்யப்போகிறார்.

25-26 (ப-ரை) राघवः- ஸ்ரீராமன், भोजनेन- போஜனத்தினால், निमन्त्रितः- நியமிக்கப்பட்டவராய், दत्त- மாதாவினால் போடப்பட்ட, आसनं- மணையை, आलभ्य தொட்டுவிட்டு, स्वभावविनीतः- ஸ்வபாவத்தினாலேயே வணக்கமுள்ளவரும, गौरवात् च (மாதாவென்கிற) கௌரவத்தினாலும், आनतः-வணக்கமுள்ளவராய், तदा-அப்பொழுது प्राञ्जलिः- கைகூப்பிக்கொண்டு, किंचित् व्रीडात्- கொஞ்சம் வெட்கத்தினால், दण्डकारण्यं- தண்டகாவனத்தைககுறித்து, प्रस्थितः- புறப்படப்ரயத்தனம் செய்துகொண்டு आप्रष्टुं- அநுமதி கேட்பதற்காக, उपचक्रमे வந்திருக்கிறேன், (इति- என்று), मातरं- மாதாவைக்குறித்து, अब्रवीत्- சொன்னார்.

24. (பொ-ரை) ராகவா! உன் பிதாவான மஹாராஜா தான்செய்த ப்ரதிஜ்ஞையை ஒருக்காலும் தவறமாட்டார். இதை நீ நன்றாய் தெரிந்துகொள்ளு. தார்மிஷ்டரான அவ்வரசன் இன்றையதினமே உனக்கு யௌவராஜ்யபட்டாபிஷேகம் செய்யப்போகிறார்.

25–26. (பொ-ரை) அந்த ஸ்ரீராகவன் போஜனத்திற்காக நியமிக்கப்பட்டு தாயார்போட்டிருக்கிற ஆஸனத்தைக் கையால் தொட்டுவிட்டு, ஸ்வபாவத்தினாலேயும், மாதாவினிடத்தில் கௌரவத்தினாலும், மிகவும் வணககத்துடன் பட்டாபிஷேகம் நமக்கு நடக்கப்போகிறது என்று ஸந்தோஷப்பட்டுக்கொண்டிருக்கிற மாதாவினிடத்தில் இந்த அநிஷ்ட வ்ருத்தாந்தத்தை நாம தெரிவிக்கவேண்டியதாக நேர்ந்துவிட்டதே என்று கொஞ்சம வெட்கத்துடன் கைகூப்பிக்கொண்டு "அம்மா நான் தண்டகாவனத்திற்கு புறப்பட அநுமதிகேட்க வந்திருக்கிறேன்" என்று தாயாரிடம் சொன்னார்.

देवि नूनं न जानीषे महद्भयमुपस्थितम् ।
इदं तव च दुःखाय वैदेह्या लक्ष्मणस्य च ॥ 27 ॥
गमिष्ये दण्डकारण्यं किमनेनासनेन मे ।
विष्टरासनयोग्यो हि कालोऽयं मामुपस्थितः ॥ 28 ॥
चतुर्दश हि वर्षाणि वत्स्यामि विजने वने ।
मधुमूलफलैर्जीवन्हित्वा मुनिवदामिषम् ॥ 29 ॥

27. (ப-ரை) हे देवि- அம்மா! महत् भय- பெரிய பயமானது, उपस्थितं- ஸமீபித்திருக்கிறது, न जानीषे- நீ அதை அறிந்துகொள்ளவில்லை, नूनं- நிச்சயம், इदं- இந்த பயமானது, तव च- உனக்கும், वैदेह्याः- ஸீதைக்கும், लक्ष्मणस्य च- லக்ஷ்மணனுக்கும், दुःखाय- துக்கத்தின் பொருட்டு, (நேர்ந்து விட்டது).

28. (ப-ரை) दण्डकारण्यं- தண்டகாரண்யத்தைக்குறித்து, गमिष्ये- நான் போகப்போகிறேன், अनेन आसनेन- இந்த ஆஸனத்தினால், मे- எனக்கு, किं- என்ன ப்ரயோஜனம், हि- ஏனென்றால், विष्टरासनयोग्यः- தர்பாஸனத்திற்குத் தகுந்ததான, अयं कालः- இந்த காலமானது, मां- என்னை, उपस्थितः- ஸமீபித்துவிட்டது.

29. (ப-ரை) आमिषम्- போக்ய பதார்த்தங்களை, हित्वा- விட்டு, मधु मूल फलैः- தேன், கிழங்கு, பழம், இவைகளால், जीवन्- சரீரதாரணம் செய்து கொண்டு, विजने ஜனங்களில்லாத, वने- வனத்தில், चतुर्दश वर्षाणि- பதினான்கு வருஷங்கள், मुनिवत्- ரிஷி போல், वत्स्यामि हि- வஸிக்கப்போகிறேனல்லவா!

---

27. (பொ-ரை) அம்மா! ஒரு மஹத்தான பயம் ஸமீபித்துவிட்டது. இதை நீர் தெரிந்துகொள்ளவில்லை. நிச்சயம். இது உமக்கும், ஸீதைக்கும், லக்ஷ்மணனுக்கும் துக்கத்திற்காக ஏற்பட்டிருக்கிறது.

28. (பொ-ரை) அம்மா நான் தண்டகாவனம் போகப்போகிறேன். நவரத்னமிழைத்த இந்த ஸ்வர்ணாஸனத்தினால் எனக்கென்ன ப்ரயோஜனம். தர்பாஸனத்தில் உட்காரக்கூடிய காலம் எனக்கு இப்பொழுது ஸமீபித்துவிட்டது.

29. (பொ-ரை) நான் ராஜார்ஹமான போக்யபதார்த்தங்களை விட்டுவிட்டு, தேன், கிழங்கு, காய், பழம், இவைகளால் ஜீவித்துக்கொண்டு, ஜனங்களில்லாத தண்டகாவனத்தில் வாஸம் செய்யப்போகிறேன். (இங்கு, "आमिषम्" என்கிற பதத்திற்கு சமைக்கப்படாத மாம்ஸமென்றும் சொல்லலாம்.)

भरतस्य महाराजो यौवराज्यं प्रयच्छति ।
मां पुनर्दण्डकारण्ये विवासयति तापसम् ॥ 30 ॥
सषट् चाष्टौ च वर्षाणि वत्स्यामि विजने वने ।
आसेवमानो वन्यानि फलमूलैश्च वर्तयन् ॥ 31 ॥
सा निकृत्तेव सालस्य यष्टिः परशुना वने ।
पपात सहसा देवी देवतेव दिवश्च्युता ॥ 32 ॥

30. (ப-ரை) महाराजः- மஹாராஜர், भरताय- பரதன் பொருட்டு, यौवराज्यं- இளவரசை, प्रयच्छति- கொடுக்கிறார், मां पुनः- என்னையோவென்றால், तापसम्- ரிஷியாக, दण्डकारण्ये- தண்டகாவனத்தில், विवासयति- வஸிப்பிக்கப்போகிறார்.

31. (ப-ரை) (ஆகையால்), वन्यानि- வனத்திலே வஸிக்கும் வானப்ரஸ்தர்கள் செய்யும் கர்மங்களை, आसेवमानः- செய்துகொண்டு, फलमूलैः च- பழங்களாலும், கிழங்குகளாலும், वर्तयन्- ஜீவனம் செய்துகொண்டு, विजने- ஜனமில்லாத, वने- வனத்தில், सषट्- ஆறுகளோடே கூடிய, अष्टौ च वर्षाणि- எட்டு வருஷங்கள், वत्स्यामि- வஸிக்கப்போகிறேன்.

32. (ப-ரை) वने- வனத்தில், परशुना- கோடாலியினால், निकृत्ता- வெட்டப்பட்ட, सालस्य- மரத்தினுடைய, यष्टिः इव- கிளைபோலும், दिवः- ஸ்வர்க்கத்திலிருந்து च्युता- நழுவின, देवतेव- தேவஸ்த்ரீபோலவும், सा देवी- அந்த கௌஸல்யை, सहसा- திடீரென்று, पपात- விழுந்தாள்.

30. (பொ-ரை) அம்மா நம் மஹாராஜர் பரதனுக்கு யௌவராஜ்யபட்டாபிஷேகம் செய்வித்து என்னை ரிஷிவேஷத்துடன் தண்டகாவனத்திற்கு துரத்தப்போகிறார்.

31. (பொ-ரை) ஆகையால் வனத்திலே வஸித்துக்கொண்டிருக்கும் வானப்ரஸ்தர்கள்செய்யும் தர்மங்களைச்செய்து பழம் கிழங்கு இலைகளை புசித்து ஜீவனம் செய்துகொண்டு ஜனஸஞ்சாரமில்லாத தண்டகாவனத்தில் நான் பதினான்கு வருஷம் வாஸம் செய்யப்போகிறேன்.

32. (பொ-ரை) இதைக்கேட்டு கோடாலியினால் வெட்டப்பட்ட வனத்திலிருக்கும் மரத்தின் கிளைபோலவும், ஸ்வர்க்கத்திலிருந்து நழுவின தேவஸ்த்ரீபோலவும், அந்த கௌஸல்யாதேவி திடீரென்று கீழே விழுந்துவிட்டாள்.

तामदुःखोचितां दृष्ट्वा पतितां कदलीमिव ।
रामस्तूत्थापयामास मातरं गतचेतसम् ॥ 33 ॥
उपावृत्त्योत्थितां दीनां बडबामिव वाहिताम् ।
पांसुकुण्ठितसर्वाङ्गीं विममर्श च पाणिना ॥ 34 ॥
सा राघवमुपासीनमसुखार्ता सुखोचिता ।
उवाच पुरुषव्याघ्रमुपशृण्वति लक्ष्मणे ॥ 35 ॥

33. (ப-ரை) रामः तु- ஸ்ரீராமனும், अदुःखोचितां- துக்கம் அநுபவிக்கத்தகாதவளும், (अत एव- ஆகையால்,) कदलीं इव- வாழைமரம்போல், पतितां- விழுந்தும், गतचेतसम्- ஜ்ஞானம் தவறியுமிருக்கிற, तां मातरं- அந்த தாயான கௌஸல்யையை, दृष्ट्वा- பார்த்து, उत्थापयामास- எழுப்பினர்.

34. (ப-ரை) वाहितां- சுமைசுமப்பிக்கப்பட்டும், उपावृत्य उत्थितां- பிறகு தரையில் புறண்டு எழுந்திருந்தும், दीनां- ரொம்பவும் சோர்ந்துமிருக்கிற, बडबां इव- பெண் குதிரையைப்போல், पांसुकुण्ठितसर्वाङ्गीं- புழுதிபடிந்த ஸகல அவயவங்களையுமுடைய (அந்த கௌஸல்யா தேவியை,) पाणिना- தன்னுடைய கையினால், विममर्श च- தடவினார்.

35. (ப-ரை) सुखोचिता- ஸுகத்தை அநுபவிக்கத்தகுந்தவளும், असुखार्ता- துக்கத்தினால் பீடிக்கப்பட்டவளுமான, सा- அந்த கௌஸல்யை, उपासीनं- ஸமீபத்திலிருக்கின்ற, पुरुषव्याघ्रं- புருஷச்ரேஷ்டனை, राघवं- ஸ்ரீராமனைப்பார்த்து, लक्ष्मणे- லக்ஷ்மணன், उपशृण्वति (सति) ஸமீபத்திலிருந்து கேட்டுக்கொண்டிருக்கையில், उवाच- சொன்னாள்,

33. (பொ-ரை) ஒருக்காலும் துக்கம் அநுபவித்து வழக்கமில்லாதபடியால் இந்த துக்கத்தைக் கேட்டமாத்திரத்திலே, வாழைமரம்போல் கீழேவிழுந்து மூர்ச்சை அடைந்திருந்தும, தன் தாயாரைப்பார்த்து ராமன் உடனே எடுத்து உட்கார்த்தினார்.

34. (பொ-ரை) பாரம் சுமந்து ச்ரமபரிஹாரத்திற்காக தரையில் விழுந்து புறண்டு எழுந்து சோர்வை அடைந்த பெண்குதிரைபோல் தேஹமெல்லாம் புழுதியடைந்த அந்த கௌஸல்யாதேவியை ஸ்ரீராமன் தம்முடைய திருக்கையால் தடவித்துடைத்தார்.

35. (பொ-ரை) ஸுகானுபவத்திற்கே ஏற்றவளான கௌஸல்யாதேவி மிகவும் துக்கப்பட்டுக்கொண்டு, லக்ஷ்மணனும் ஸமீபத்திலிருந்து கேட்டுக்கொண்டிருக்கும்பொழுது புருஷோத்தமனை ஸ்ரீராமனைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னாள்.

यदि पुत्र न जायेथा मम शोकाय राघव ।
न स्म दुःखमतो भूयः पश्येयमहमप्रजाः ॥ 36 ॥

एक एव हि वन्ध्यायाः शोको भवति मानसः ।
अप्रजास्मीति सन्तापो न ह्यन्यः पुत्र विद्यते ॥ 37 ॥

न दृष्टपूर्वं कल्याणं सुखं वा पतिपौरुषे ।
अपि पुत्रेऽपि पश्येयमिति रामाऽऽस्थितं मया ॥ 38 ॥

36. (ப-ரை) हे पुत्र राघव- என்குழந்தாய் ராகவனே! मम- என்னுடை दुःखाय- துக்கத்திற்காக, न जायेथाः यदि- நீ பிறக்காமல் இருப்பாயேயானால், अतः- இவ க்காட்டிலும், भूयः- அதிகமான दुःखं- துக்கத்தை, अप्रजाः- மலடியான, अहं- நா न पश्येयं स्म- பார்க்காமலிருப்பேன்.

37. (ப-ரை) पुत्र- குழந்தாய், वन्ध्यायाः- மலடிக்கு, अप्रजा अस्मि- பிள்ளைப் லாதவளாயிருக்கிறேன், इति- என்று, मानसः सन्तापः- மனவருத்தமானது, एक एव हि ஒன்றேதான், अन्यः- வேறு துக்கம், न विद्यते- இல்லை.

38. (ப-ரை) राम- ராமனே! पतिपौरुषे- பர்த்தாவுக்கு நம்மிடத்தில் செல்வ யிருக்கும் காலத்தில், न दृष्टपूर्वं- முன் காணப்படாத, कल्याणं- மங்கள கார்யத்தையு सुखं वा- ஸுகத்தையும், पुत्रे अपि- புத்ரன் உண்டானால், पश्येयं इति- காணலா யென்று, मया- என்னால், आस्थितं- இருக்கப்பட்டது.

36. (பொ-ரை) குழந்தாய் ராகவா! நீ என்னை கஷ்டப்படுத்துவதற்க பிறந்திராத பக்ஷத்தில், உன்னை விட்டுப்பிரிகின்ற இந்த துக்கத்தைக் காட்டில் அ மான துக்கத்தை நான் பாராமலே இருந்து விடுவேன்.

37. (பொ-ரை) ஏனென்றால், குழந்தாய், மலடியான ஸ்த்ரீக்கு "நமக்கு பிள்ளையில்லையே" என்கிற மனக்குறைவு ஒன்று தவிற வேறு கிடையாதன்றோ!

38. (பொ-ரை) ஹேராமா! பர்த்தா நம்மிடம் ப்ரியமாயிருந்து ஸந்தோஷ படுத்துங்காலத்தில் ஜேஷ்ட பத்னியென்று ஒருவித ஐச்வர்யத்தையும் அதற்கேற் ஸுகத்தையும் நான் காணவில்லை ஒருக்கால் பிள்ளை பிறந்தாலாவது இந்தப் பெருமை களை காணலாமோ வென்று நான் எதிர்பார்த்திருந்தேன்.

सा बह्वन्यमनोज्ञानि वाक्यानि हृदयच्छिदाम् ।
अहं श्रोष्ये सपत्नीनामवराणां वरा सती ॥ 39 ॥
अतो दुःखतरं किं नु प्रमदानां भविष्यति ।
मम शोको विलापश्च यादृशोऽयमनन्तकः ॥ 40 ॥
त्वयि संनिहितेऽप्येवमहमासं निराकृता ।
किं पुनः प्रोषिते तात ध्रुवं मरणमेव मे ॥ 41 ॥

39. (ப-ரை) सा- இப்படியிருக்கின்ற நான், वरा सती- எல்லாருக்கும் மேலானவளாயிருந்தும், हृदयच्छिदाम्- மனதைப் புண்படுத்துகின்ற, अवराणां- மிகவும் இளப்பமுள்ள, सपत्नीनां- சக்களத்திகளுடைய, अमनोज्ञानि- மிகவும் கொடியவைகளான, बहूनि वाक्यानि- அநேகமான வார்த்தைகளை, अहं- நான், श्रोष्ये- கேட்கப்போகிறேன்.

40. (ப-ரை) अतः- இதைக்காட்டிலும், प्रमदानां- ஸ்த்ரீகளுக்கு, दुःखतरं- மிகவும் துக்கமாக, किं नु भविष्यति- என்ன உண்டாகப்போகிறது, मम- என்னுடைய, अयं- இந்த, शोकः- துக்கமும், विलापः च- அழுகையும், यादृशः- இவ்வளவு என்று சொல்ல முடியாதது, अनन्तकः- எல்லையுமில்லாதது.

41. (ப-ரை) तात- அப்பா குழந்தாய், त्वयि- நீ, सन्निहिते अपि- ஸமீபத்திலிருக்கும் ஸமயத்திலேயே, अहं- நான், एवं- இவ்விதம், निराकृता- அவமதிக்கப்பட்டவளாக, आसं- இருக்கிறேன், प्रोषिते (सति)- நீ தேசாந்திரம் போனையேயானால், किं पुनः- என்ன சொல்லவேண்டும், मे- எனக்கு, मरण एव- மரணமேதான், ध्रुवं- நிச்சயம்.

39. (பொ-ரை) இவ்விதம் ஒரு ஸுகத்தையும் அடையாதவளான நான் எல்லாருக்கும் மேலானவளாயிருந்தும் மனதைப்புண்படுத்துகின்ற மிகவும் இளப்பமான சக்களத்திகளுடைய, கடுமையான அநேகம் வார்த்தைகளை இனி கேட்டுக் கொண்டிருக்கப்போகிறேன்.

40. (பொ-ரை) இவ்விதம் சக்களத்திகளின் கடுமையான சொற்களை கேட்பதைக்காட்டிலும் ஸ்த்ரீகளுக்கு மிகவும் துக்கமானது என்ன இருக்கிறது. என்னுடைய இந்த துக்கமும் அதனாலுண்டான அழுகையும் இவ்வளவு என்று வாயினால் சொல்லமுடியாது, ஆகையால் இரண்டும் முடிவில்லாதது.

41. (பொ-ரை) அப்பா குழந்தாய்! நீ ஸமீபத்திலிருக்குங்காலத்திலேயே பலவிதமான அவமானத்தை அடைந்து கொண்டிருக்கிறேன், அது உனக்கும் நன்றாய் தெரியும, இப்படி இருக்க நீ தேசாந்திரம் போய்விட்டால் கேட்பானேன், ஆகையால் நான் இப்பொழுது மரணத்தை அடைவதுதான் உசிதம், இது நிச்சயம்.

अत्यन्तं निगृहीताऽस्मि भर्तुर्नित्यमतन्त्रिता ।
परिवारेण कैकेय्याः समा वाप्यथवाऽवरा ॥ 42 ॥
यो हि मां सेवते कश्चिदथवाप्यनुवर्तते ।
कैकेय्याः पुत्रमन्वीक्ष्य स जनो नाभिभाषते ॥ 43 ॥
नित्यक्रोधतया तस्याः कथं नु खरवादि तत् ।
कैकेय्या वदनं द्रष्टुं पुत्र शक्ष्यामि दुर्गता ॥ 44 ॥

42- (ப-ரை) भर्तुः- பர்த்தாவினால், अत्यन्तं- மிகவும், निगृहीता- அவமதிக்கப் பட்டவளான நான், नित्यं- எப்பொழுதும், अतन्त्रिता अस्मि- ப்ரதானம் அல்லாதவளாக செய்யப்பட்டிருக்கிறேன். (अतः- ஆகையால்), कैकेय्याः- கைகேயினுடைய, परिवारेण- கூலிக்காரியோடு, समा- ஸமானமாகவோ, अथवा- அல்லது, अवरा वा- அதைவிட இளப் பமாகவோ, अस्मि- இருக்கிறேன்.

43. (ப-ரை) यः- யாதொரு, कश्चित् जनः- ஒரு ஜனமானது, मां- என்னை' सेवते- உபசரிக்கிறதோ, अथवा अपि- அல்லது, अनुवर्तते- ப்ரியமான வார்த்தைகளைப் பேசிக்கொண்டிருக்கிறதோ, सः जनः- அந்த ஜனமும், कैकेय्याः पुत्रं- கைகேயியின் புத்ரனான பரதனை, अन्वीक्ष्य- பார்த்து, न अभिभाषते- என்னெதிரில் நின்று வார்த்தை சொல்லப்போகிறதேயில்லை.

44. (ப-ரை) हे पुत्र- ஹே குழந்தாய், तस्याः नित्यक्रोधतया- அவள் எப்பொழு தும் கோபமுள்ளவளாகையால், खरवादि- கடும் சொற்களைப் பேசுகின்ற, तत्- அந்த, कैकेय्याः वदनं- கைகேயின் முகத்தை, द्रष्टुं- பார்ப்பதற்கு दुर्गता- இந்த துர்கதையை அடைந்த நான், कथं शक्ष्यामि- எப்படி சக்தியுடையவளாவேன்.

42. (பொ-ரை) அப்பா! பர்த்தா என்னிடம் ஜ்யேஷ்டமஹிஷி என்கிற கௌரவம் வைக்காமல் என்னை பலவிதமாக அவமதித்துவருகிறார். இப்பொழுது என்னுடைய நிலைமையைப்பார்த்தால், கைகேயியினுடைய வேலைக்காரிக்கு ஸமான மாகவோ, நன்றாய் ஆலோசிக்குங்காலத்தில் அவளுக்கும் கீழ்படியாகவோ என்னை அரசன் வைத்திருக்கிறார்.

43. (பொ-ரை) இப்பொழுது, எனக்கு உபகாரம் செய்துகொண்டும், இனி மையான பேச்சுக்களைப்பேசிக்கொண்டிருக்கும ஜனமும் கைகேயியினுடைய புத்ர னை பரதனைப்பார்த்து அவனிடம் பயத்தினால் என்னிடம பேசவே போகிறதில்லை.

44. (பொ-ரை) குழந்தாய் இந்த கைகேயி எப்பொழுதும் கோபமுள்ளவ ளாகையால் எப்பொழுதும் கடும் சொற்களையே சொல்லிக்கொண்டிருக்கிற அந்த கைகேயியின் முகத்தை இவ்வளவு துக்கநிலைமையிலிருக்கிற நான் எப்படிப்பார்க்க ஸஹிப்பேன்.

दश सप्त च वर्षाणि तव जातस्य राघव ।
आसितानि प्रकाङ्क्षन्त्या मया दुःखपरिक्षयम् ॥ 45 ॥
तदक्षयमहद्दुःखं नोत्सहे सहितुं चिरम् ।
विप्रकारं सपत्नीनामेवं जीर्णापि राघव ॥ 46 ॥
अपश्यन्ती तव मुखं परिपूर्णशशिप्रभम् ।
कृपणा वर्तयिष्यामि कथं कृपणजीविकाम् ॥ 47 ॥

45. (ப-ரை) हे राघव- ராகவனே! तव जातस्य- நீ பிறந்த பிறகு, दुःखपरिक्षयम्- துக்கம் கழிவதை, प्रकाङ्क्षन्त्या- நினைத்துக்கொண்டிருக்கிற, मया- என்னால், दश सप्त च वर्षाणि- இந்த பதினேழு வருஷங்கள், आसितानि- ஸோகமாக இருக்கப்பட்டதுகள்.

46. (ப-ரை) तत्- ஆகையால், हे राघव- ராகவனே, एवं जीर्णा अपि- இவ்வளவு கிழத்தனமடைந்திருந்தபோதிலும், सपत्नीनाम्- சக்களத்திகளுடைய, विप्रकारं- அவமதிப்பாகிற, अक्षय- ஒரு நாளும் அழியாத, महत्- दुःखं- பெரிய துக்கத்தை, चिरं- நெடுநாள், सहितुं- ஸஹித்துக்கொண்டிருப்பதற்கு, न उत्सहे- முடியாதவளாயிருக்கிறேன்.

47. (ப-ரை) परिपूर्णशशिप्रभम्- பூர்ண சந்திரன் போல் ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற, तव मुखं- உன்னுடைய முகத்தை अपश्यन्ती- பாராதவளாய், कृपणा- மிகவும் தீனையான நான், कृपणजीविकाम्- காிக்கிரன் பிழைப்பை, कथं वर्तयिष्यामि- எப்படிச் செய்யப்போகிறேன்

45. (பொ-ரை) அப்பா! நீ பிறந்த பிறகு இனி குழந்தைக்கு யௌவராஜ்ய பட்டாபிஷேகம் கிடைக்கும் நமக்கு இதுவரையில் நேர்ந்த துக்கங்களெல்லாம் கழிந்துவிடுமென்று நினைத்துக்கொண்டே நான் இந்த பதினேழு வருஷகாலம் ஒரு விகாரமில்லாமல் ஸோகமாயிருந்துவிட்டேன்.

46. (பொ-ரை) அப்பா ராகவா! நான் இவ்வளவு சக்களத்தியின் கொடிய வார்த்தைகளைக்கேட்டு, தளர்ந்திருந்த காலத்திலும், அவர்கள் செய்யும் அவமதிப்பால் உண்டான எல்லையில்லாத மஹா துக்கத்தை இன்னும் நெடுநாள் பொறுக்க முடியாது.

47. (பொ-ரை) பூர்ண சந்திரன்போல் ப்ரகாசமுள்ள உன் முகத்தைக் காணாமல் மிகவும் தீனையாயிருந்துகொண்டு நான் எவ்விதம் ஏழைப்பிழைப்பாக பிழைப்பேன்.

उपवासैश्च योगैश्च बहुभिश्च परिश्रमैः ।
दुःखं संवर्धितो मोघं त्वं हि दुर्गतया मया ॥ 48 ॥
स्थिरं तु हृदयं मन्ये ममेदं यन्न दीर्यते ।
प्रावृषीव महानद्याः स्पृष्टं कूलं नवाम्भसा ॥ 49 ॥
ममैव नूनं मरणं न विद्यते न चावकाशोऽस्ति यमक्षये मम ।
यदन्तकोऽद्यैव न मां जिहीर्षति प्रसह्य सिंहो रुदतीं मृगीमिव ॥ 50 ॥

48. (ப-ரை) दुर्गतया- துர்ப்பாக்யமுள்ளவளான, मया- என்னால், उपवासैः च- உபவாஸங்களாலும், योगैः च- தேவதாத்யானங்களாலும், बहुभिः परिश्रमैः च- அநேகம் வ்ரதங்களாலும், त्वं-दुःखं- (यथा-तथा)- கஷ்டப்பட்டு, मोघं- வீணாக, संवर्धितः (असि)- வளர்க்கப்பட்டாய்.

49. (ப-ரை) प्रावृषि- மழைகாலத்தில், महानद्याः- மஹாநதியினுடைய, नव अम्भसा- புதிய ஜலத்தினால், स्पृष्टं- தொடப்பட்ட, कूलं इव- கரைபோல், मम- என்னுடைய, इदं- இந்த, हृदयं- நெஞ்சானது, यत्- யாதொரு காரணத்தினால், न दीर्यते- பிளக்கவில்லையோ! (तत्- ஆகையால்), स्थिरं तु மிகவும் உறுதியுள்ளதாக, मन्ये- எண்ணுகிறேன்.

50. (ப-ரை) मम- எனக்கு, मरणं-एव- மரணமே, न विद्यते- இல்லை, नूनं- இது நிச்சயம், यमक्षये- எமலோகத்தில், मम- எனக்கு, अवकाशः च- இருக்குமிடமும், न अस्ति- இல்லை, यत्- ஏனென்றால், सिंहः- ஸிம்மமானது, रुदतीं- அழுகின்ற, मृगीं इव- பெண் மானைப்போல், अन्तकः- எமனெனவன், मां- என்னை, प्रसह्य- பலாத்காரமாக, अद्य एव- இப்பொழுதே, न जिहीर्षति- கொண்டுபோக நினையாதிருக்கிறானே!

---

48. (பொ-ரை) அப்பா! அநேக உபவாஸங்களும், தேவதா த்யானங்களும் அநேகம் வ்ரதங்களும், உனக்காக அநுஷ்டித்து வெகு கஷ்டப்பட்டு உன்னை நான் வளர்த்தினேன், துர்ப்பாக்யமுள்ளவளான நான் செய்த கார்யம வீணாகப்போய் விட்டது.

49. (பொ-ரை) வருஷாகாலத்தில் நதியின் புதுப்ரவாஹத்தினால் அலை அடிக்கப்பட்ட கரையானது இடிந்துவிடுவது போல், என்னுடைய ஹ்ருதயமும், நீ காட்டுக்குப் போகிற வ்ருத்தாந்தத்தைக்கேட்டுமே இரு பிளவாகவேண்டியிருக்க அப்படி ஆகாமையால் இது மிகவும் உறுதியுள்ளதென்று நினைக்கிறேன்.

50. (பொ-ரை) எனக்கு சாவே இல்லை, நிச்சயம், எமலோகத்தில் எனக்கு இருக்க இடமில்லைபோல் தோன்றுகிறது, ஏனென்றால் அழுதுகொண்டிருக்கிற பெண்மானை ஸிம்மமானது பலாத்காரமாக பிடிப்பதுபோல் யமனும் என்னைப்பிடிக்க நினைக்காமலிருக்கிறானே.

स्थिरं हि नूनं हृदयं ममायसं न भिद्यते यद्भुवि नावदीर्यते ।
अनेन दुःखेन च देहमर्पितं ध्रुवं ह्यकाले मरणं न विद्यते ॥ 51 ॥
इदं तु दुःखं यदनर्थकानि मे व्रतानि दानानि च संयमाश्च हि ।
तपश्च तप्तं यदपत्यकारणात्सुनिष्फलं बीजमिवोप्तमूषरे ॥ 52 ॥
यदि ह्यकाले मरणं स्वयेच्छया लभेत कश्चिद्गुरुदुःखकर्शितः ।
गताहमद्यैव परेतसंसदं विना त्वा धेनुरिवात्मजेन वै ॥ 53 ॥

51. (ப-ரை) अनेन दुःखेन- இந்த துக்கத்தினால், अर्पितं- அடிக்கப்பட்டிருக்கிற, मम हृदयं- என்னுடைய ஹ்ருதயமும், यत्- யாதொரு காரணத்தினால், न भिद्यते- இரு பிளவாக பிளக்கவில்லையோ, देहं- சரீரமும் भुवि- பூமியில் (விழுந்து) न अवदीर्यते- வெடித்துப் போகவில்லையோ, तत्- ஆகையால், आयसं- உருக்கினால் செய்யப்பட்டது, स्थिरं- உறுதியாயுமிருக்கிறது, नूनं- நிச்சயம், अकाले- அகாலத்தில், मरणं- மரணமானது, न विद्यते हि- உண்டாகிறதில்லையன்றோ! ध्रुवं- இது நிச்சயம்,

52. (ப-ரை) किं तु- ஆனால், इदं दुःखं- இது ஒரு துக்கம், यत्- யெதுஎன்றால், अपत्यकारणात्- பிள்ளையின் நிமித்தமாக, मे व्रतानि- என்னுடைய வ்ரதங்களும், दानानि- தானங்களும், संयमाः च- த்யானங்களும், यत्- யாதொரு, तपः च- தபஸ்ஸும், तप्तं- செய்யப்பட்டதோ, (तत्- அதுவும்)- ऊषरे- களர் நிலத்தில், उप्तं- விதைக்கப்பட்ட, बीजं इव- விதைபோல், सुनिष्फलं- மிகவும் வீணாய் விட்டது.

53. (ப-ரை) कश्चित्- ஒருவன், गुरुदुःखकर्शितः- அதிகமான துக்கத்தால் பீடிக்கப்பட்டு, अकाले- குறிப்பிடாத காலத்தில், स्वया इच्छया- தன்னுடைய இஷ்டப்படி, मरणं- மரணத்தை, लभेत यदि- அடைவானேயானால், अहं अपि- நானும், आत्मजेन विना- கன்றில்லாமல், धेनुः इव- பசுபோல, आत्मजेन- புத்திரனை, त्वया विना- நீ இல்லாமல், परेतसंसदं- யமன் ஸபையை, अद्यैव- இப்பொழுதே, गता- அடைவேன்.

51. (பொ-ரை) இந்த பூமியில் இப்படிப்பட்ட துக்கத்தினால் பீடிக்கப்பட்டிருக்கிற என்னுடைய நெஞ்சு இருபிளவாக பிளந்து போகவேண்டியிருந்தும அப்படியில்லாமையாலும், சரீரமும் துணுக்குத்துணுக்காகப் போகவேண்டியிருக்க அப்படிப்போகாமையாலும், இவை இரண்டும் உருக்கினால் செய்யப்பட்டு மிகவும உறுதியாயிருக்கின்றனவென்று எண்ணுகிறேன் இது நிச்சயம், குறிப்பிடாதகாலத்தில் மரணம் உண்டாகாதன்றோ!

52. (பொ-ரை) புத்ரனுக்காக நான் செய்து வந்த வ்ரதங்களும், தானங்களும், த்யானங்களும், தபஸ்ஸும், களர் நிலத்தில் விதைத்த விதையானது எப்படி வீணாகிவிடுமோ அவ்விதம் வீணாகிவிட்டன, என்று இது எனக்கு ஒரு பெரிய துக்கம்.

53 (பொ-ரை) ஒருவன் தனக்கு நேர்ந்திருக்கிற பெரும் கஷ்டம் பொறுக்

अथापि किंजीवितमद्य मे वृथा त्वया विना चन्द्रनिभाननप्रभ ।
अनुव्रजिष्यामि वनं त्वयैव गौः सुदुर्बला वत्समिवानुकाङ्क्षया ॥ 54 ॥
भृशमसुखममर्षिता तदा बहु विललाप समीक्ष्य राघवम् ।
व्यसनमुपनिशाम्य सा महत्सुतमिव बद्धमवेक्ष्य किन्नरी ॥ 55 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे

विंशः सर्गः ॥ 20 ॥

---

54. (ப-ரை) हे चन्द्रनिभाननप्रभ- சந்திரனுக்கு ஸமானமான முகத்தின் காந்தியுடைய குழந்தாய்! अथापि- அப்படி அகாலத்தில் மரணம் கிடைக்காத காலத்திலும், त्वया विना- உன்னைவிட்டு, मे- என்னுடைய, किं जीवितं- இந்த இழிவான பிழைப்பானது, वृथा- வீண், सुदुर्बला- மிகவும் துர்பலமான, गौः- பசுவானது, अनुकाङ्क्षया- வாத்ஸல்யத்தினால், वत्सं इव- கன்றைப்பின்தொடர்ந்து செல்லுவதுபோல், त्वयैव- உன்னுடனேயே, वनं- வனத்தைக்குறித்து, अनुव्रजिष्यामि- பின்தொடர்ந்து செல்லுவேன்.

55. (ப-ரை) तदा- அப்பொழுது, भृशं- மிகவும், असुखं- துக்கத்தை, अमर्षिता- ஸஹிக்கமுடியாத அந்த கௌஸல்யை, महत्- பெரிதான, व्यसनं- துக்கத்தை, उपनिशाम्य- ஸமீபத்தில் நேர்ந்து விட்டதாக ஆலோசித்து, बद्धं- கட்டப்பட்டிருக்கிற सुतं- குழந்தையை, अवेक्ष्य- பார்த்து, किन्नरी इव- கின்னர ஸ்த்ரீ (கதறுவது) போல் (बद्धं- ஸத்ய பாசத்தினால் கட்டப்பட்ட), राघवं- (தன் பிள்ளையான) ஸ்ரீராமனை, समीक्ष्य- பார்த்து, बहु- பலபடியாக, विललाप- கதறினாள்.

கமாட்டாமல் அகாலத்தில் தன் இஷ்டப்படி மரணத்தை அடைவேனேயானால், கன்றைப்பிரிந்த பசுபோல புத்ரனை உன்னைவிட்டுப்பிரிந்த நானும் யமலோகம் போய் சேருவேனே!

54. (பொ-ரை) சந்திரனுக்கு ஸமானமான திருமுகத்தழகை உடையவனை உன்னைவிட்டுப்பிரிந்து நான் உயிருடன் இருப்பது மிகவும் இழிவானது, ஆதலால் அது வீண், ஆகையால் கன்றைவிட்டுப்பிரிந்து இருக்கமுடியாத பசு வாத்ஸல்யத்தினால் கன்றை தொடர்ந்து செல்வதுபோல் உன்னைவிட்டு பிரிந்து இருக்க ஸஹியாத நானும் உன்னுடனே பின்தொடர்ந்து வருவேன்.

55. (பொ-ரை) அப்பொழுது, அதிகமான துக்கத்தைப்பொருக்கமுடியாத அந்த கௌஸல்யாதேவி ராமன் வனவாஸம்போகிற துக்கம் நமக்கு ஸமீபத்தில் நேர்ந்துவிட்டது என்பதை ஆலோசித்து கயிற்றால் கட்டப்பட்ட தன் குழந்தையைப்பார்த்து ஒரு கின்னர ஸ்த்ரீ கதறுவதுபோல் ஸத்யமென்கிற பாசத்தினால் கட்டுப்பட்ட தன் பிள்ளையான ஸ்ரீ ராமனைப்பார்த்து பலவிதமாகக் கதறினாள்

एकविंशः सर्गः ॥ 21 ॥

तथा तु विलपन्तीं तां कौसल्यां राममातरम् ।
उवाच लक्ष्मणो दीनस्तत्कालसदृशं वचः ॥ 1 ॥
न रोचते ममाप्येतदार्ये यद्राघवो वनम् ।
त्यक्त्वा राज्यश्रियं गच्छेत्स्त्रिया वाक्यवशंगतः ॥ 2 ॥
विपरीतश्च वृद्धश्च विषयैश्च प्रधर्षितः ।
नृपः किमिव न ब्रूयाच्चोद्यमानः समन्मथः ॥ 3 ॥

1. (ப-ரை) तथा तु- அப்படி, विलपन्तीं- ப்ரலாபம் செய்கின்ற, राममातरम्- ஸ்ரீ ராமன் திருத்தாயாரான, तां कौसल्यां- அந்த கௌஸல்யா தேவியைப்பார்த்து, लक्ष्मणः- லக்ஷ்மணன், दीनः (सन्)- மிகவும் தைன்யமுடையவராய், तत्कालसदृश- அந்த ஸமயத்திற்குத்தகுந்த, वचः- வார்த்தையை, उवाच- சொன்னார்.

2. (ப-ரை) आर्ये- அம்மா! राघवः- ஸ்ரீராமன், स्त्रियाः- ஒரு ஸ்த்ரீயினுடைய, वाक्यवशंगतः- வார்த்தைக்கு வசப்பட்டு, राज्यश्रियं- ராஜ்ய ஸம்பத்தை, त्यक्त्वा- விட்டு, वनम्- வனத்தை, गच्छेत् इति यत्- போகவேண்டுமென்கிற, एतत्- இது, मम अपि- எனக்கும், न रोचते- ருசிக்கவில்லை.

3. (ப-ரை) नृपः- அரசன், वृद्धः च- கிழவனார், विपरीतः च- விபரீதமான மனமுடையவர், विषयैः- சப்தாதிவிஷயங்களினால், प्रधर्षितः च- கலக்கப்பட்டவர், समन्मथः- மன்மத விகாரத்தோடும் கூடியவர் चोद्यमानः- (கைகேயினால்) ஏவப்பட்டவர், किं इव- எதைத்தான், न ब्रूयात्- சொல்லமாட்டார்.

1. (பொ-ரை) அவ்விதம் அழுதுகொண்டிருக்கின்ற ஸ்ரீராமன் திருத்தாயாரான கௌஸல்யாதேவியைப்பார்த்து லக்ஷ்மணன் மிகவும் தைன்யத்துடன் அந்த ஸமயத்திற்கு தகுந்த வார்த்தை சொல்லுகிறார்.
(அந்த ஸமயத்திற்குத்தகுந்த என்பதால், லக்ஷ்மணன் சொல்லுகிற வார்த்தைகளெல்லாம் கௌஸல்யாதேவியின் திருப்திக்காகவே யல்லாமல், அவருடைய வாஸ்தவமான அபிப்ராயமன்று என்று ஏற்படுகிறது.)

2 (பொ-ரை) அம்மா! ஸ்ரீராகவன், ஒரு ஸ்த்ரீயின் வார்த்தைக்கு வசப்பட்டு, ராஜ்ய ஸம்பத்தை விட்டுவிட்டு, தண்டகாவனம் போகவேணுமென்கிற இந்த வார்த்தை எனக்குமிஷ்டமில்லை.

3. (பொ-ரை) நம்மரசன் கிழத்தன்மை அடைந்து புத்தியும வயதை அநுஸரித்து விபரீதமாகிவிட்டது. சப்தாதி விஷயங்களாலும், கலங்கின மனதுடையவர், அதுடன் காம விகாரத்துடன் கூடியவர், கைகேயியினால் தூண்டப்பட்டவர், அவர் எதைத்தான் சொல்லமாட்டார்.

नास्यापराधं पश्यामि नापि दोषं तथाविधम् ।
येन निर्वास्यते राष्ट्राद्वनवासाय राघवः ॥ 4 ॥
न तं पश्याम्यहं लोके परोक्षमपि यो नरः ।
स्वमित्रोपि निरस्तोपि योस्य दोषमुदाहरेत् ॥ 5 ॥
देवकल्पमृजुं दान्तं रिपूणामपि वत्सलम् ।
अवेक्षमाणः को धर्मं त्यजेत्पुत्रमकारणात् ॥ 6 ॥

---

4. (ப-ரை) राघवः- ஸ்ரீராமன், येन- எந்த காரணத்தினால், राष्ट्रात्- தேசத்திலிருந்து, वनवासाय- வனத்தில் வஸிப்பதற்காக, निर्वास्यते- துறக்கப்படுகிறாரோ, तथाविधम्- அப்படிப்பட்ட, अपराधं- குற்றத்தை, अस्य- இவருக்கு, न पश्यामि- நான் பார்க்கவில்லை, दोषं (अपि)- (அப்படிப்பட்ட) மஹாபாதகம் முதலான பாபத்தையும், न पश्यामि- பார்க்கவில்லை.

5. (ப-ரை) सु अमित्रः अपि- மிகவும் சத்ருவாயிருந்தாலும், निरस्तः अपि- (ஸ்ரீராமனால்) தள்ளப்பட்டவனாயிருந்தபோதிலும், यः- யாவனொருவன், परोक्ष अपि- காணாமலிருந்தாவது, अस्य- இந்த ஸ்ரீராமனுக்கு, दोषं- தோஷத்தை, उदाहरेत्- சொல்லுவனோ! तं- அப்படிப்பட்ட புருஷனை, अहं- நான், लोके- இவ்வுலகத்தில், न पश्यामि- காணவில்லை.

6. (ப-ரை) देवकल्पं- தேவதைக்கு ஸமானமாயும், ऋजुं- கரணத்ரயங்களிலும நேர்மையுடையவனாயும், दान्तं- குருக்களால் சிக்ஷிக்கப்பட்டும், रिपूणां अपि- சத்ருககள் விஷயத்திலும், वत्सलम्- வாத்ஸல்யமுள்ள, पुत्रं- புத்திரனை, धर्मं अवेक्षमाणः- தர்மத்தை அறிந்த, कः- எந்த மனிதன் தான், अकारणात्- காரணமில்லாமல், त्यजेत्- விட்டு விடுவன்.

4. (பொ-ரை) ஸ்ரீராமனை ராஜ்யத்தைவிட்டு வனவாஸத்திற்காகத்துறத்துவதற்கு என்னகாரணம். இவரிடத்தில் அப்படி ஒரு குற்றமும் காணவில்லை பஞ்சமகாபாதகம் முதலான பாபத்தையும் நான் காணவில்லை.

5. (பொ-ரை) ராமனுக்கு மிகவும் சத்ருவாயிருந்தவனும் ஸ்ரீராமனால் எதோ ஒரு தோஷத்தினால் தேசத்தைவிட்டு துறத்தப்பட்டவனும், ஸ்ரீராமனிடத்திலே ஒருவிதமான தோஷத்தையும், மறைவிலாவது சொல்லுகிறவன் இந்த லோகத்திலேயே கிடையாது.

6. (பொ-ரை) தேவர்களுக்கு ஸமானமாயும், மனோவாக்காயங்களிள் ஒரே ரீதி உள்ளவனும், குருக்களிடம் நன்றாய் சிக்ஷைபெற்றவனும் சத்ருக்களிடத்திலும் மிக வாத்ஸல்யமுள்ளவனுமான புத்திரனை தர்மிஷ்டனை எந்த மனிதன்தான் நிஷ்காரணமாக விட்டுவிடுவன்.

तदिदं वचनं राज्ञः पुनर्बाल्यमुपेयुषः ।
पुत्रः को हृदये कुर्याद्राजवृत्तमनुस्मरन् ॥ 7 ॥
यावदेव न जानाति कश्चिदर्थमिमं नरः ।
तावदेव मया सार्धमात्मस्थं कुरु शासनम् ॥ 8 ॥
मया पार्श्वे सधनुषा तव गुप्तस्य राघव ।
कः समर्थोऽधिकं कर्तुं कृतान्तस्येव तिष्ठतः ॥ 9 ॥

7. (ப-ரை) पुनः- மறுபடியும், बाल्यं- பாலப்பிராயத்தை, उपेयुषः- அடைந்திருக்கிற, राज्ञः- அரசனுடைய, तत् इदं वचनं- அப்படிப்பட்ட இந்த வார்த்தையை, राजवृत्तं- ராஜநீதியை, अनुस्मरन्- ஆலோசித்தவனுன, कः पुत्रः- எந்த புத்திரன்தான், हृदये- மனதில், कुर्यात्- செய்வன்.

8. (ப-ரை) इमं अर्थं- இந்த வ்ருத்தாந்தத்தை, कश्चित् नरः- ஒருமனிதன், यावदेव- எதற்குள்ளாக, न जानाति- அறிகின்றதில்லையோ, तावदेव- அதற்குள்ளாகவே, मया सार्धं- என்னோடுகூட, शासनम्- ராஜ்யத்தை, आत्मस्थं- உம்முடைய ஸ்வாதீனமாக, कुरु- செய்து கொள்ளும்.

9. (ப-ரை) राघव- ராகவனே-! पार्श्वे பக்கத்தில், सधनुषा- வில்லுடன்கூடி இருக்கிற, मया- என்னால், गुप्तस्य- ரக்ஷிக்கப்பட்டும், कृतान्तस्य- इव- யமன்போல், तिष्ठतः- நிற்கின்ற, तव- உம்முடைய, अधिकं- பௌருஷத்தை மீறி, कर्तुं- செய்வதற்கு, कः-समर्थः- எவன் ஸாமர்த்யமுள்ளவன்.

7. (பொ-ரை) கிழவனுயிருந்து மறுபடியும் பால்யம் திரும்பியிருக்கிற அரசனுடைய இந்தப்பேச்சை ராஜதர்மம் தெரிந்த எந்த புத்திரன்தான் மனதில் வாங்கிக்கொள்ளுவன்.

8. (பொ-ரை) இந்த வ்ருத்தாந்தத்தை, ஒருவனும் தெரிந்து கொள்ளாதிருக்கும் முன்னமே என்னுடன் இந்த ராஜ்யத்தை நீர் கைவசமாக்கிக்கொள்ளும்.

9. (பொ-ரை) அண்ணு! பக்கத்தில், வில்லைக்கையிற்பிடித்து என்னால் ரக்ஷிக்கப்பட்டு, யமன்போல் நிற்கின்ற உம்முடைய ஆண்மைத்தனத்தை மீறிநடக்க சக்தியுள்ளவன் எவனிருக்கிறுன்.

निर्मनुष्यामिमां सर्वामयोध्यां मनुजर्षभ ।
करिष्यामि शरैस्तीक्ष्णैर्यदि स्थास्यति विप्रिये ॥ 10 ॥
भरतस्याथ पक्ष्यो वा यो वास्य हितमिच्छति ।
सर्वानेतान्वधिष्यामि मृदुर्हि परिभूयते ॥ 11 ॥
प्रोत्साहितोऽयं कैकेय्या स दुष्टो यदि नः पिता ।
अमित्रभूतो निःसङ्गं वध्यतां बध्यतामपि ॥ 12 ॥

10. (ப-ரை) मनुजर्षभ- புருஷோத்தமா! (नृपः- அரசன்), विप्रिये- உமக்கு விரோதத்தில், स्थास्यति यदि- நிற்பாரேயானால், इमां अयोध्यां- இந்த அயோத்யா நகரத்தை, सर्वां- முழுமையும், तीक्ष्णैः शरैः- தீக்ஷ்ணங்களான பாணங்களால், निर्मनुष्यां- மனுஷ்யர்கள் இல்லாததாக, करिष्यामि- செய்து விடுவேன்.

11. (ப-ரை) अथ– அல்லது, भरतस्य- பரதனுடைய, पक्ष्यः वा- அவன் பக்ஷத்தில் சேர்ந்தவனோ, यो वा- வேறு எவனோ, अस्य– இவருக்கு, हित- நன்மையை, इच्छति- செய்யவிரும்புகிறானோ, एतान् सर्वान्- இவர்கள் எல்லோரையும், वधिष्यामि- கொல்லுவேன். हि- ஏனென்றால், मृदुः- ஸாதுவாயிருக்கிறவன், परिभूयते- அவமதிக்கப்படுகிறான்.

12. (ப-ரை) कैकेय्या- கைகேயியினால், प्रोत्साहितः- தூண்டப்பட்டிருக்கிற, अयं सः- இந்த, नः पिता- நம்முடைய தகப்பன், दुष्टः- துஷ்டராகி, अमित्रभूतः यदि- விரோதியாகயிருப்பாரேயானால், निःसङ्गं- ஆலோசிக்காமல், वध्यतां- கொல்லப்படலாம், बध्यतां अपि- (அல்லது) கட்டப்படலாம்.

---

10. (பொ-ரை) புருஷோத்தமா! நம்மரசன் உமக்குப்ரதிகூலமாயிருக்கும் பக்ஷத்தில் அயோத்யா நகரம் முழுமையும் கூர்மையான பாணங்களினால் ஒரு மனுஷ்யர்கூட இல்லாமலிருக்கும்படிச் செய்து விடுவேன்.

11. (பொ-ரை) அல்லது, பரதனுக்குச்சேர்ந்த மாமன் முதலானவர்களோ, வேறொருவனோ அவனுக்கு அநுகூலம் செய்யவிரும்பினால் அவர்களெல்லோரையும் நான் கொன்றுவிடுகிறேன், ஏனென்றால் ஸாதுவாயிருக்கிறவனன்றோ அவமதிக்கப்படுகிறான்.

12. (பொ-ரை) கைகேயியின் தூண்டுதலால் மிகவும் துஷ்டரான இந்த நம் தந்தை நமக்கு சத்ருவாக வருவாரேயானால், கொஞ்சமேனும் கூசாமல், கொல்லவாகிலும் கொல்லலாம், அல்லது கட்டினாலும் கட்டலாம்.

(த்ரேதாயுக, த்வாபரயுகங்களின் ஸந்தியில் இந்த ஸ்ரீராமாவதாரம் நடந்தபடியால், அக்காலத்தில் கால் பாகத்திற்குமேல் அதர்மம் ப்ரவேசித்தபடியால், அதை அநுஸரித்து லக்ஷ்மணன் இவ்விதம் பேசுகிறானென்றும், கைகேயிக்கு

गुरोरप्यवलिप्तस्य कार्याकार्यमजानतः ।
उत्पथं प्रतिपन्नस्य कार्यं भवति शासनम् ॥ 13 ॥
बलमेष किमाश्रित्य हेतुं वा पुरुषर्षभ ।
दातुमिच्छति कैकेय्यै राज्यं स्थितमिदं तव ॥ 14 ॥
त्वया चैव मया चैव कृत्वा वैरमनुत्तमम् ।
कास्य शक्तिः श्रियं दातुं भरतायारिशासन ॥ 15 ॥

13. (ப-ரை) अवलिप्तस्य- மதங்கொண்டும், कार्याकार्य- இது செய்யலாம் இது செய்யக்கூடாது என்பதை, अजानतः- அறியாதவரும், उत्पथं- சாஸ்த்ர விருத்தமான மார்க்கத்தை, प्रतिपन्नस्य- அடைந்துமிருக்கிற, गुरोः (अपि)- குருவுக்கும், शासनम्- தண்டனையானது, कार्यं भवति- செய்யத்தகுந்ததாக ஆகின்றது.

14. (ப-ரை) हे पुरुषर्षभ- ஹே புருஷோத்தமா! तव- உமக்கு, स्थितं- இருக்கின்ற, इदं राज्यं- இந்த ராஜ்யத்தை, एषः- இந்த அரசன், किं बलं आश्रित्य- எந்த பலத்தை அடைந்து, अथवा- அல்லது, (क) हेतुं (आश्रित्य)- எந்த காரணத்தை அடைந்து, कैकेय्यै- கைகேயியின் பொருட்டு, दातुं इच्छति- கொடுக்க விரும்புகிறார்.

15. (ப-ரை) हे अरिशासन- சத்ருக்களை தண்டிக்கவல்லவரே!, त्वया च एव- உன்னோடும், मया च एव- என்னோடும், अनुत्तमम्- மிகவும் அதிகமான, वैरं- விரோதத்தை, कृत्वा- செய்துகொண்டு, भरताय- பரதன் பொருட்டு, श्रियं- ராஜ்யலெக்ஷ்மியை, दातुं- கொடுப்பதற்க்கு, अस्य- இவருக்கு, शक्तिः- வல்லமை, का- ஏது?

பிறருடைய உபதேசத்தினால் இவ்விதம் புத்தி கெட்டுவிட்டதென்றும், தர்மாத்மாவான பகவானும் மோசமாக வார்த்தையைக்கொன்றுபினறும் திலக வ்யாகயானத்தில் காண்கிறது).

13. (பொ-ரை) அஹங்காரம் கொண்டு க்ருத்யாக்ருத்ய விவேக சூன்யனாய் சாஸ்த்ரமர்யாதையை மீறிநடக்கின்ற குருவுக்கும் சிக்ஷை செய்யவேண்டியது அவச்யம்.

14. (பொ-ரை) ஹே புருஷோத்தமா! உமக்குக்கிடைத்திருக்கிற இந்த ராஜ்யத்தை நம் பிதாவானவர் எந்த பலத்தைக்கொண்டு அல்லது எந்தக்காரணத்தைக்கொண்டு கைகேயிக்குக் கொடுக்க நினைக்கிறார்.

15. (பொ-ரை) சத்ருக்களை அடக்கவல்ல அண்ணா! உம்முடனும் என்னுடனும் மஹத்தான விரோதத்தைச்செய்துகொண்டு, பரதனுக்கு ராஜ்யத்தைக் கொடுக்க இவ்வரசனுக்கு சக்தி ஏது.

अनुरक्तोऽस्मि भावेन भ्रातरं देवि तत्त्वतः ।
सत्येन धनुषा चैव दत्तेनेष्टेन ते शपे ॥ 16 ॥
दीप्तमग्निमरण्यं वा यदि रामः प्रवेक्ष्यति ।
प्रविष्टं तत्र मां देवि त्वं पूर्वमवधारय ॥ 17 ॥
हरामि वीर्याद्दुःखं ते तमः सूर्य इवोदितः ।
देवी पश्यतु मे वीर्यं राघवश्चैव पश्यतु ॥ 18 ॥

16. (ப-ரை) हे देवि- அம்மா, तत्त्वतः- உண்மையாக, भावेन- மனதுடன், भ्रातरं- அண்ணாவைக்குறித்து, अनुरक्तः अस्मि- நான் ஸ்நேஹமுள்ளவனாகவிருக்கிறேன், सत्येन- (என்னுடைய) ஸத்யத்தினாலும், धनुषा च एव- தனுஸ்ஸினாலும், दत्तेन- தானத்தினாலும், इष्टेन- தேவதா பூஜையினாலும், ते- உனக்கு, शपे- ஆணையிட்டுச்சொல்லுகிறேன்.

17. (ப-ரை) हे देवि- அம்மா! रामः- ஸ்ரீராமன், दीप्तं अग्निं- எறிகின்ற நெருப்பையோ, अरण्यं वा- வனத்தையோ, प्रवेक्ष्यति (यदि)- ப்ரவேசிப்பாரேயானால், तत्र- அவைகளில், मां- என்னை, पूर्वं- முன்னம், प्रविष्टं- ப்ரவேசித்தவனாக, त्वं- நீர், अवधारय- நிச்சயங்கொள்ளும்.

18. (ப-ரை) उदितः- உதிக்கின்ற, सूर्यः- ஸூர்யன், तमः इव- இருளை (ப்போக்குவது) போல், ते- உம்முடைய, दुःखं- மனவருத்தத்தை, वीर्यात्- ஸாமர்த்யத்தினால், हरामि- நான் போக்கிவிடுகிறேன், मे वीर्यं- என்னுடைய பராக்ரமத்தை, देवी- அம்மா, पश्यतु- நீரும் பாரும், राघवः च एव- (அண்ணாவான) ஸ்ரீராகவனும், (पश्यतु-பார்க்கட்டும்.)

16. (பொ-ரை) அம்மா! என்னுடைய ஸத்யம், தனுஸ்ஸு, தானம் தேவதாராதனம் இவைகளின்மேல் ஆணையிட்டுச்சொல்லுகிறேன், உண்மையாக மனப்பூர்வமாய் நம் அண்ணாவான ஸ்ரீராமனிடத்தில் மிகவும் ப்ரீதி வைத்திருக்கிறேன்.

17. (பொ-ரை) அம்மா! எறிகின்ற நெருப்பிலோ, அல்லது வனத்திலோ ஸ்ரீராமன் ப்ரவேசிப்பாரேயானால் அவைகளில் நான் முன்னதாக ப்ரவேசிப்பேன் இதைநீர் நிச்சயமாய்த்தெரிந்து கொள்ளும்.

18. (பொ-ரை) ஸூர்யன் உதயமாகி இருளைப்போக்குவதுபோல் என்னுடைய ஸாமர்த்யத்தினால் நான் உம்முடைய துக்கத்தைப்போக்கி விடுகிறேன், அம்மா நீரும் இதைப்பாரும், ஸ்ரீராமனும் இதைப்பார்க்கட்டும்.

एतत्तु वचनं श्रुत्वा लक्ष्मणस्य महात्मनः ।
उवाच रामं कौसल्या रुदन्ती शोकलालसा ॥ 19 ॥

भ्रातुस्ते वदतः पुत्र लक्ष्मणस्य श्रुतं त्वया ।
यदत्रानन्तरं कार्यं कुरुष्व यदि रोचते ॥ 20 ॥

न चाधर्म्यं वचः श्रुत्वा सपत्न्या मम भाषितम् ।
विहाय शोकसन्तप्तां गन्तुमर्हसि मामितः ॥ 21 ॥

---

19. (ப-ரை) महात्मनः- மஹாத்மாவான, लक्ष्मणस्य- லக்ஷ்மணனுடைய, एतत् वचनं- இந்த வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, कौसल्या- கௌஸல்யையானவள், शोकलालसा- சோகத்தினால் வருத்தப்பட்டுக்கொண்டு, रुदन्ती- அழுதுகொண்டும், रामं- ஸ்ரீராமனை (பார்த்து), उवाच- சொன்னாள்.

20. (ப-ரை) पुत्र- குழந்தாய், वदतः- சொல்லுகின்ற, ते भ्रातुः- உன் ப்ராதாவான, लक्ष्मणस्य- லக்ஷ்மணனுடைய, (வார்த்தையானது), त्वया- உன்னால், श्रुतं- கேட்கப்பட்டதா, अत्र- இந்த ஸமயத்தில், अनन्तरं- அடுத்தாற்போல், यत्- யாதொன்று, कार्यं- செய்யவேண்டியதோ, (तत् - அதை)- रोचते- (यदि)- நீ இஷ்டப்பட்டாயேயானால், कुरुष्व- செய்.

21. (ப-ரை) मम सपत्न्या- என்னுடைய சக்களத்தியால், भाषितम्- சொல்லப்பட்ட, अधर्म्यं- தர்ம விருத்தமான, वचः- வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, शोकसन्तप्तां- சோகத்தினால் தபித்துக்கொண்டிருக்கிற, मां- என்னை, विहाय- விட்டுவிட்டு, इतः- நகரத்தைவிட்டு, गन्तुं- போவதற்கு, न अर्हसि- நீ தகாதவன்.

19. (பொ-ரை) மஹாத்மாவான லக்ஷ்மணனுடைய, இந்த வார்த்தையைக் கேட்டு சோகத்தினால் மிகவும் வருத்தமடைந்த கௌஸல்யாதேவி அழுதுகொண்டு ஸ்ரீராமனைப்பார்த்து ஒருவார்த்தை சொன்னாள்.

20. (பொ-ரை) அப்பா குழந்தாய்! இவ்விதம் சொல்லுகின்ற உன் தம்பியான லக்ஷ்மணன் வார்த்தை முழுவதையும் நீ கேட்டாயா! இந்த ஸமயத்தில் இனி எது செய்யவேண்டியதோ அதை நீ இஷ்டமிருந்தால் செய்.

21. (பொ-ரை) என் சக்களத்தியால் சொல்லப்பட்ட தர்ம விருத்தமான வார்த்தையைக்கேட்டு, துக்கத்தினால் பரிதபித்துக்கொண்டிருக்கிற என்னை இங்கு விட்டுவிட்டு நீ வனம்போகத்தகுந்தவனன்று.

धर्मज्ञ यदि धर्मिष्ठो धर्मं चरितुमिच्छसि ।
शुश्रूष मामिहस्थस्त्वं चर धर्ममनुत्तमम् ॥ 22 ॥

शुश्रूषुर्जननीं पुत्रः स्वगृहे नियतो वसन् ।
परेण तपसा युक्तः काश्यपस्त्रिदिवं गतः ॥ 23 ॥

यथैव राजा पूज्यस्ते गौरवेण तथा ह्यहम् ।
त्वां नाहमनुजानामि न गन्तव्यमितो वनम् ॥ 24 ॥

22. (ப-ரை) हे धर्मज्ञ- தர்மங்களை நன்றாய்த்தெரிந்தவனே! त्वं- நீ, धर्मिष्ठः (सन्)- தார்மிஷ்டனாயிருந்து, धर्मं- தர்மத்தை, चरितुं- செய்வதற்கு, इच्छसि यदि- ஆசைப்பட்டாயேயானால், इहस्थः- இங்கிருந்துகொண்டு, मां शुश्रूष- எனக்கு சிச்ரூஷை செய், अनुत्तमम्- மிகவும் உத்தமமான, धर्मं- தர்மத்தை, चर- செய்.

23. (ப-ரை) पुत्रः- (கச்யபருடைய) பிள்ளையான, काश्यपः- காச்யபப்ரஜாபதி, नियतः- நியமத்துடன் கூடினவராய், जननीं- தன் தாயாரை, शुश्रूषुः- பணிவிடை செய்துகொண்டு, स्वगृहे- தன்னுடைய க்ருஹத்திலேயே, वसन्- வஸித்துக்கொண்டு, परेण- மிகவும் சிறந்ததான, तपसा- (மாத்ரு சிச்ரூஷை என்கிற) தபஸ்ஸோடு. युक्तः- கூடினவராய், त्रिदिवं- ஸ்வர்க்கத்தை, गतः- அடைந்தார்.

24. (ப-ரை) गौरवेण- கௌரவத்தினால், राजा- அரசன், ते- உனக்கு, यथा एव- எப்படி, पूज्यः- பூஜிக்கத்தகுந்தவரோ, अहं- நானும், तथाहि- அப்படியே, (பூஜிக்கத்தகுந்தவள்) अहं- நான், त्वां- உன்னை, न अनुजानामि- அநுமதிகொடுக்கமாட்டேன், इतः- இவ்விடமிருந்து, वनम्- வனமானது, न गन्तव्यं- (உன்னால்) போகக்கூடாது.

22. (பொ-ரை) அப்பா! நீ எல்லா தர்மங்களும் தெரிந்தவனல்லவா! நீ தார்மிஷ்டனாயிருந்து தர்மானுஷ்டானம் செய்யவிரும்புகிறாயாகில் இங்கிருந்துகொண்டே எனக்கு சிச்ரூஷை செய். இதுவன்றோ எல்லா தர்மங்களிலும் உத்தமமான தர்மம்.

23. (பொ-ரை) கச்யபருடைய புத்திரனான காச்யபப்ரஜாபதியும் நியமத்துடன் தன் மாதாவுக்கு சிச்ரூஷை செய்துகொண்டு, தன்னுடைய க்ருஹத்திலேயே இருந்து மாத்ருசிச்ரூஷையென்கிற சிறந்த தபஸ்ஸினால் ஸ்வர்க்கத்தை அடைந்தார்.

24. (பொ-ரை) அரசன் குருவானபடியால் எவ்விதம் உனக்குப் பூஜிக்கத்தகுந்தவரோ, அப்படியன்றோ நானும உனக்குப்பூஜிக்கத்தகுந்தவள். நான் உனக்கு அநுமதி கொடுக்கமாட்டேன். ஆகையால் நீ நகரத்தைவிட்டு வனம்போகக்கூடாது.

त्वद्वियोगान्न मे कार्यं जीवितेन सुखेन वा ।
त्वया सह मम श्रेयस्तृणानामपि भक्षणम् ॥ 25 ॥
यदि त्वं यास्यसि वनं त्यक्त्वा मां शोकलालसाम् ।
अहं प्रायमिहासिष्ये न हि शक्ष्यामि जीवितुम् ॥ 26 ॥
ततस्त्वं प्राप्स्यसे पुत्र निरयं लोकविश्रुतम् ।
*ब्रह्महत्यामिवाधर्मात्समुद्रः सरितां पतिः ॥ 27 ॥

25. (ப-ரை) त्वद्वियोगात्- உன்னுடைய வியோகத்தை (விட்டுப்பிரிவது) அடைந்து, मे- எனக்கு, जीवितेन- உயிருடன் இருப்பதினாலாவது, सुखेन वा- ஸுகத்தினாலாவது, न कार्यं- செய்யத்தகுந்தது ஒன்றுமில்லை, त्वया सह- உன்னோடுகூட, मे- எனக்கு, तृणानां- புற்களுடைய, भक्षणम् अपि- தின்பதும், श्रेयः- நன்மையானது.

26. (ப-ரை) शोकलालसाम्- துக்கத்தினால் மிகவும் தபித்துக்கொண்டிருக்கிற, मां- என்னை, त्यक्त्वा- விட்டுவிட்டு, त्वं- நீ, वनं- வனத்தை, यास्यसि यदि- அடைவாயேயானால், अहं- நான், इह- இங்கேயே, प्रायं- ப்ராயோபவேசனத்தை,(ஆஹாரமில்லாமையை), आसिष्ये-அடைவேன், हि-ஏனென்றால், जीवितुम्- பிழைத்திருப்பதற்கு, न शक्ष्यामि- பொருக்கமாட்டேன்.

27. (ப-ரை) हे पुत्र- அப்பா குழந்தாய், सरितां पतिः- நதிகளுக்கு பர்த்தாவான, समुद्रः- ஸமுத்ர ராஜன், अधर्मात्- (பிப்பிலாதரென்பவர் விஷயத்தில் செய்த) அபராதத்தினால், ब्रह्महत्यां इव- ப்ரம்ம ஹத்தியை (அடைந்தது) போல், ततः- அந்த தோஷத்தினால், त्वं- நீயும், लोकविश्रुतम्- உலகமுழுவதும் ப்ரஸித்தமான, निरयं- துக்கத்தை, प्राप्स्यसे- அடையப்போகிறாய்.

---

25. (பொ-ரை) உன்னை விட்டுப்பிரிந்து நான் உயிருடனிருந்தும் ஸுகத்தை அடைந்தும் ஆகவேண்டியது ஒன்றுமில்லை. ஆகையால் உன்னோடுகூடவே வனத்திலிருந்துகொண்டு புல் முதலானதுகளை பக்ஷித்துக்கொண்டிருப்பதே எனக்குமிகவும் ச்ரேயஸ்ஸு.

26. (பொ-ரை) மிகவும் துக்கத்தினால் தபித்துக்கொண்டிருக்கின்ற என்னை விட்டுவிட்டு நீ வனம் போவாயேயானால், ப்ராயோபவேசனமென்கிற வ்ரதம் செய்து ப்ராணனை விட்டுவிடுவேன். ஏனென்றால் உன்னைவிட்டு உயிருடனிருக்க என்னால் முடியாது.

27. (பொ-ரை) அப்பா குழந்தாய்! நதிகளுக்கு அரசனை ஸமுத்ரராஜன் பிப்பிலாதர் என்கிற ஒருவர் விஷயத்தில் அபராதம் செய்து அதனால் அவரால் உண்டுபண்ணப்பட்ட பிசாசத்தினால் துக்கம் அடைந்ததுபோல் மாதாவுக்கு மனத்தை உண்டுபண்ணக்கூடிய அதர்மமான கார்யத்தை நீ செய்தபடியால உலகமெல்லாம் ப்ரஸித்தமான பெரியதுக்கத்தை அடைவாய்.

*(ஸமுத்ரராஜனும மாதாவுக்கு துக்கத்தை உண்டுபண்ணி அதனால் ப்ரும்மஹத்திசெய்தவன் அடையக்கூடிய சில நரகங்களை அடைந்தானென்றும ஒரு புராணத்தில் கூறப்பட்டிருக்கிறது.)

विलपन्तीं तथा दीनां कौसल्यां जननीं ततः ।
उवाच रामो धर्मात्मा वचनं धर्मसंहितम् ॥ 28 ॥

नास्ति शक्तिः पितुर्वाक्यं समतिक्रमितुं मम ।
प्रसादये त्वा शिरसा गन्तुमिच्छाम्यहं वनम् ॥ 29 ॥

ऋषिणा च पितुर्वाक्यं कुर्वता व्रतचारिणा ।
गौर्हता *जानता धर्मं कण्डुनापि विपश्चिता ॥ 30 ॥

---

28. (ப-ரை) ततः- பிறகு, तथा- அப்படி, दीनां- தீனையாயும், विलपन्तीं- அழுது கொண்டிருக்கிற, जननीं- மாதாவான, कौसल्यां- கௌஸல்யாதேவியைப் (பார்த்து), धर्मात्मा- தார்மிஷ்டரான, रामः- ஸ்ரீராமன், धर्मसंहित- தர்மத்துடன் சேர்ந்திருக்கிற, वचनं- வார்த்தையை, उवाच- சொன்னார்.

29. (ப-ரை) पितुः- பிதாவினுடைய, वाक्यं- வார்த்தையை, समतिक्रमितुं- மீறி நடப்பதற்கு, मम- எனக்கு शक्तिः- வல்லமை, न अस्ति- இல்லை, त्वां- உம்மை, शिरसा- தலையினால் (வணங்கி), प्रसादये- ஸமாதானம் செய்து கொள்ளுகிறேன், अहं- நான், वनम्- தண்டகாவனத்தைக்குறித்து, गन्तुं- போவதற்கு, इच्छामि- விரும்புகிறேன்.

30. (ப-ரை) व्रतचारिणा- வ்ரதங்களை அநுஷ்டிக்கின்றவரும், धर्मं- தர்மத்தை, जानता- அறிந்தவரும், विपश्चिता- பண்டிதருமான, कण्डुना अपि-ऋषिणा च- கண்டுவென்கிற மஹரிஷியினாலும், पितुः- பிதாவினுடைய, वाक्यं- வார்த்தையை, कुर्वता (सता)- செய்பவராகவிருந்து, गौः- பசுவானது, हता- கொல்லப்பட்டது.

28. (பொ-ரை) பிறகு, இவ்விதம் கதறிக்கொண்டு தீனையான தன் மாதாவான கௌஸல்யாதேவியைப்பார்த்து தர்மாத்மாவான ஸ்ரீராமன், தர்மத்துடன் சேர்ந்திருக்கிற, ஒரு வார்த்தையைச்சொன்னார்.

29. (பொ-ரை) அம்மா! பிதாவின் வார்த்தையை மீறி நடக்க என்னால் முடியவே முடியாது. ஆகையால் நான் உம்மைத்தலையால் வணங்கிக்கேட்டுக்கொள்ளுகிறேன். நான் தண்டகாவனம் போகவிரும்புகின்றேன்.

30. (பொ-ரை) வ்ரதங்களை அநுஷ்டிப்பவரும், ஸகல தர்மங்களையும் தெரிந்த பண்டிதராயும் மந்த்ரங்களை ஸாக்ஷாத்கரித்தவருமான கண்டுவென்கிற மஹரிஷியும், பிதாவின் வார்த்தையை அநுஷ்டிப்பது தர்மமென்று எண்ணி ஒரு பசுவைக்கொன்றிருக்கிறார்.

---

*இவ்விடத்தில் "धर्मं जानता-" தர்மத்தை அறிந்தவர் என்றும், अधर्मं जानता- அதர்மமென்று அறிந்தவராயிருந்தும், என்றும் பொருள் கொள்ளலாம்.

अस्माकं च कुले पूर्वं सगरस्याज्ञया पितुः ।
खनद्भिः सागरैर्भूमिमवाप्तः सुमहान्वधः ॥ 31 ॥
जामदग्न्येन रामेण रेणुका जननी स्वयम् ।
कृत्ता परशुनारण्ये पितुर्वचनकारिणा ॥ 32 ॥
एतैरन्यैश्च बहुभिर्देवि देवसमैः कृतम् ।
पितुर्वचनमक्लीबं करिष्यामि पितुर्हितम् ॥ 33 ॥

---

31. (ப-ரை) पूर्वं- முன் காலத்தில், अस्माकं- நம்முடைய, कुले च- குலத்திலும், पितुः- பிதாவான, सगरस्य- ஸகர மஹாராஜனுடைய, आज्ञया- உத்திரவினுல், भूमिं- பூமியை, खनद्भिः- தோண்டுகின்ற, सागरैः- ஸகரபுத்திரர்களினுல், सुमहान्- மிகவும் பெரிதான, वधः- மரணமானது, अवाप्तः- அடையப்பட்டது.

32. (ப-ரை) पितुः- பிதாவினுடைய, वचनकारिणा- வார்த்தையைச் செய்கின்ற, जामदग्न्येन रामेण- ஜமதக்னி புத்ரரான பரசுராமனுல், जननी- தன் தாயாரான, रेणुका- ரேணுகை யென்பவள், अरण्ये- அரண்யத்தில், परशुना- கோடாலியினுல், स्वयम्- தன்னுலேயே, कृत्ता- வெட்டப்பட்டாள்.

33. (ப-ரை) देवि- அம்மா! एतैः- இவர்களாலும், देवसमैः- தேவர்களுக்கு ஸமானமான, अन्यैः- மற்றவர்களான, बहुभिः च- அநேகம் பேர்களாலும், पितुः वचनं- பிதாவினுடைய வார்த்தையானது, अक्लीबं- பயமில்லாமல், कृतम्- செய்யப்பட்டது. (ஆகையால் நானும்), पितुः- பிதாவுக்கு, हितम्- ஹிதமான கார்யத்தையே, करिष्यामि- செய்வேன்.

31. (பொ-ரை) முன்னொருகாலத்தில் நம் குலத்திலும், பிதாவான ஸகர மஹாராஜருடைய கட்டளையினுல், பூமிகளைத்தோண்டி, அதனுல் அவருடைய அறுபதினுயிரம் புத்ரர்களும் ஒரேகாலத்தில் மரணத்தை அடைந்துவிட்டார்கள் (நம் குலத்திலேயே இப்படிப்பட்ட அநுஷ்டானங்கள் ஏற்பட்டிருக்க, ஸ்வல்பகாலம் வனவாஸம செல்வதாகிற துக்கத்தை நாம் அநுபவிப்பது ஒரு பெரிய கார்யமல்ல. ஆகையால் நான் பிதாவினுடைய உத்திரவுப்படி வனவாஸம் செய்தே தீருவேனென்று கருத்து).

32. (பொ-ரை) ஜமதக்னி ரிஷியின் குமாரனுன பரசுராமனும், பிதாவினுடைய வார்த்தையினுல் தன் தாயாரான ரேணுகாதேவியை தானே கோடாலியினுல் அரண்யத்திலே வெட்டிவிட்டார்.

33. (பொ-ரை) அம்மா! இவர்களாலும் தேவர்களுக்கு ஸமானமான இன்னம் அநேகம பேர்களாலும், பிதாவினுடைய ஆக்ஞை அநுஷ்டிக்கப்பட்டிருக்கிறபடியால் நானும் அவ்விதம் செய்து பிதாவுக்கு ஹிதத்தையே செய்வேன்.

न खल्वेतन्मयैकेन क्रियते पितृशासनम् ।
एतैरपि कृतं देवि ये मया तव कीर्तिताः ॥ 34 ॥
नाहं धर्ममपूर्वं ते प्रतिकूलं प्रवर्तये ।
पूर्वैरयमभिप्रेतो गतो मार्गोऽनुगम्यते ॥ 35 ॥
तदेतत्तु मया कार्यं क्रियते भुवि नान्यथा ।
पितुर्हि वचनं कुर्वन्न कश्चिन्नाम हीयते ॥ 36 ॥

34. (ப-ரை) हे देवि- அம்மா! एतत् पितृशासनम्- இந்த பிதாவின் ஆக்ஞையானது, मया एकेन- என்னால் ஒருவனாலே மாத்திரம், न क्रियते खलु- செய்யப்படவில்லையன்றோ! ये- யாவரொருவர்கள், मया- என்னால், तव- உனக்கு, कीर्तिताः- சொல்லப்பட்டார்களோ, एतैः अपि- இவர்களாலும், कृतं- செய்யப்பட்டது.

35. (ப-ரை) अहं- நான், अपूर्वं- முன்னோர்களால் செய்யப்படாத, ते- உனக்கு, प्रतिकूलं- விரோதமான, धर्मं- தர்மத்தை, न प्रवर्तये- செய்யமாட்டேன், पूर्वैः- முன்னோர்களால், अभिप्रेतः- அங்கீகரிக்கப்பட்டும், गतः- அநுஷ்டிக்கப்பட்டுமிருக்கிற, अयंमार्गः- இந்த வழியானது, अनुगम्यते- (என்னால்) அநுஸரிக்கப்படுகிறது.

36. (ப-ரை) तत्- ஆகையால், भुवि- லோகத்தில், कार्यं- அவச்யமாய் அநுஷ்டிக்கவேண்டியதான, एतत्- இந்த பித்ருவசனமானது, मया तु- என்னாலும, क्रियते- செய்யப்படுகிறது, अन्यथा- வேறாக, न- இல்லை, हि- ஏனென்றால், पितुः- பிதாவின், वचनं- வார்த்தையை, कुर्वन्- செய்கின்ற, कश्चित्- ஒருவனும், न हीयते नाम- கெட்டுப்போகமாட்டானன்றோ!

34. (பொ-ரை) அம்மா! பிதாவின் ஆக்ஞையை நான் ஒருவன் மாத்திரம் செய்யவில்லை. என்னாலே உனக்குச்சொல்லப்பட்ட, கண்டு, பரசுராமன் முதலானவர்களும் செய்திருக்கிறார்கள்.

35. (பொ-ரை) அம்மா! முன்னோர்கள் செய்யாததும் பூர்வாசாரத்திற்கு ப்ரதிகூலமுமான இந்த தர்மத்தை நான் செய்யவில்லை. முன்னோர்களால் அங்கீகரிக்கப்பட்டு, அநுஷ்டித்துவந்த இந்த வழியை நானும் அநுஸரிக்கிறேன்.

36. (பொ-ரை) ஆகையால் உலகத்தில் அவச்யம்செய்யவேண்டியதாக ஏற்பட்ட பித்ருவாக்யத்தை நானும் செய்யப்போகிறேன். இது அக்ருத்யமன்று. ஏனென்றால் பிதாவின் சொற்படி செய்கின்ற ஒருவனும் கெடுதலையடையமாட்டானன்றோ!

तामेवमुक्त्वा जननीं लक्ष्मणं पुनरब्रवीत् ।
वाक्यं वाक्यविदां श्रेष्ठः श्रेष्ठः सर्वधनुष्मताम् ॥ 37 ॥
तव लक्ष्मण जानामि मयि स्नेहमनुत्तमम् ।
विक्रमं चैव सत्वं च तेजश्च सुदुरासदम् ॥ 38 ॥
मम मातुर्महद्दुःखमतुलं शुभलक्षण ।
अभिप्रायमविज्ञाय सत्यस्य च शमस्य च ॥ 39 ॥

37. (ப-ரை) वाक्यविदां- வார்த்தை சொல்லத்தெரிந்தவர்களுக்குள், श्रेष्ठः- சிரேஷ்டராயும், सर्वधनुष्मताम्- எல்லாவில்லாளிகளுக்குள், श्रेष्ठः- சிரேஷ்டருமான, (ஸ்ரீ ராமன்) तां जननीं- அந்தத்தாயாரைப்பார்த்து, एवं- இவ்விதம், उक्त्वा- சொல்லிவிட்டு, पुनः- பிறகு, लक्ष्मणं- லக்ஷ்மணனைக்குறித்து, अब्रवीत्- சொன்னார்.

38. (ப-ரை) हे लक्ष्मण- லக்ஷ்மணனே! तव- உனக்கு, मयि- என்னிடத்தில், उत्तमम्- மிகவும் அதிகமான, स्नेहं- ஸ்நேஹத்தையும், विक्रमं च एव- பராக்ரமத்தையும், सत्वं च- தைர்யத்தையும், सुदुरासदम्- ஒருவராலும் கலக்கமுடியாததான, तेजः च- தேஜஸ்ஸையும், जानामि- அறிகிறேன்.

39. (ப-ரை) हे शुभलक्षण-சுபமான லக்ஷணமுடையவனே, सत्यस्य च- ஸத்யத்தினுடையவும், शमस्य च- பொறுமையினுடையவும், अभिप्रायं- ரஹஸ்யத்தை, अविज्ञाय- தெரிந்துகொள்ளாமல், मम मातुः- என் தாயாருக்கு, अतुलं- நிகரற்ற, महत् दुःखं- பெரிதான துக்கமானது, जायते- உண்டாகிறது.

37. (பொ-ரை) வார்த்தை சொல்லுகிறவர்களுக்குள்ளும், எல்லாவில்லாளிகளுக்குள்ளும், உயர்ந்தவரான ஸ்ரீராமன், தன் தாயாரான கௌஸல்யாதேவியைப் பார்த்து இவ்விதம் சொல்லிவிட்டு பிறகு லக்ஷ்மணனைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

38. (பொ-ரை) லக்ஷ்மணா! உனக்கு என்னிடத்தில் அதிகமான ஸ்நேஹமும், பராக்ரமும் தைர்யமும் ஒருவராலும் கலக்கமுடியாத தேஜஸ்ஸுமிருக்கிற தென்று நான் தெரிந்துகொண்டிருக்கிறேன்.

39. (பொ-ரை) லக்ஷ்மணா! ஸத்யத்தினுடையவும், பொறுமையினுடைய வும், ஸூக்ஷ்மத்தை அறியாதபடியால் என் தாயாருக்கு நிகரற்ற பெரிய துக்கம் உண்டாய்விட்டது. அவைகளை நன்றாயறிந்த உனக்கு என் இவ்விதம் மனவருத்த முண்டாயிற்று.

धर्मो हि परमो लोके धर्मे सत्यं प्रतिष्ठितम् ।
धर्मसंश्रितमेतच्च पितुर्वचनमुत्तमम् ॥ 40 ॥
संश्रुत्य च पितुर्वाक्यं मातुर्वा ब्राह्मणस्य वा ।
न कर्तव्यं वृथा वीर धर्ममाश्रित्य तिष्ठता ॥ 41 ॥
सोऽहं न शक्ष्यामि पितुर्नियोगमतिवर्तितुम् ।
पितुर्हि वचनाद्वीर कैकेय्याहं प्रचोदितः ॥ 42 ॥

40. (ப-ரை) लोके- உலகத்தில், धर्मः हि- தர்மமன்றோ, परमः- மேலானது, धर्मे- தர்மத்தில், सत्यं- ஸத்யமானது, प्रतिष्ठितम्- நிலைநின்றிருக்கின்றது, उत्तमम्- மிகவும் மேலானதான, एतत्- இந்த, पितुः वचनं च- பிதாவினுடைய வார்த்தையும், धर्मसंश्रितं- தர்மத்தையே பலமாகக்கொண்டது.

41. (ப-ரை) हे वीर- வீரனே! धर्मं- தர்மத்தை, आश्रित्य- அடைந்து, तिष्ठता- நிற்கின்ற ஒருவனால், पितुः- பிதாவினுடைய, वाक्यं- வார்த்தையையோ, मातुः- மாதாவினுடைய, (वाक्यं वा- வார்த்தையையோ), ब्राह्मणस्य- ப்ராம்மணனுடைய, (वाक्यं वा- வார்த்தையையோ), संश्रुत्य- ப்ரதிக்ஞை செய்து, वृथा- வீணாக, न कर्तव्यं- செய்யத்தகுந்ததன்று.

42. (ப-ரை) हे वीर- ஓ வீரனே! सः अहं- அப்படிப்பட்ட நான், पितुः- பிதாவின், नियोगं- ஆக்ஞையை, अतिवर्तितुम्- மீறி நடப்பதற்கு, न शक्ष्यामि- சக்தியுள்ளவனில்லை, पितुः- பிதாவினுடைய, वचनात् हि- வார்த்தையினாலன்றோ, कैकेय्या- கைகேயியினால், अहं- நான், प्रचोदितः- ஏவப்பட்டேன்.

40. (பொ-ரை) உலகத்தில் தர்மந்தான் மேலானது. ஸத்யமும் தர்மத்திலேயே நிலைநின்றிருக்கின்றது. மிகவும் சிறந்ததான இந்த பித்ருவசனபரிபாலனமும் தர்மத்தையே முக்யப்ரயோஜனமாகக்கொண்டது.

41 (பொ-ரை) வீரா! தர்மத்தை அநுஷ்டிக்கின்ற ஒருவன் பிதாவினுடையதேவா, மாதாவினுடையதேவா, ப்ராம்மணனுடையதேவா, வார்த்தையை செய்கிறேனென்று ப்ரதிக்ஞை பண்ணி பிறகு வேறு எந்த காரணத்தினாலும் அதை வீணாக செய்யக்கூடாது.

42 (பொ-ரை) ஹே வீரா! அவ்விதம் ப்ரதிக்ஞை செய்திருக்கிற நான் பிதாவின் கட்டளையை மீறி நடக்க துணியாதவனாயிருக்கிறேன். பிதாவின் வார்த்தையினாலன்றோ கைகேயி எனக்கு கட்டளையிட்டிருக்கிறாள்.

तदेनां विसृजानार्यां क्षत्रधर्माश्रितां मतिम् ।
धर्ममाश्रय मा तैक्ष्ण्यं मद्बुद्धिरनुगम्यताम् ॥ 43 ॥
तमेवमुक्त्वा सौहार्दाद्भ्रातरं लक्ष्मणाग्रजः ।
उवाच भूयः कौसल्यां प्राञ्जलिः शिरसा नतः ॥ 44 ॥
अनुमन्यस्व मां देवि गमिष्यन्तमितो वनम ।
शापितासि मम प्राणैः कुरु स्वस्त्ययनानि मे ॥ 45 ॥

43. (ப-ரை) तत्- ஆகையால், अनार्यां- கெட்டதாயும், क्षत्रधर्माश्रितां- க்ஷத்ரியர்கள் தர்மத்தை அடைந்துமிருக்கிற, एनां मतिम्- இந்த புத்தியை, विसृज- விட்டுவிடு, धर्मं- தர்மத்தை, आश्रय- கைப்பிடித்துக்கொள், तैक्ष्ण्यं- கொடுந்தொழிலை, मा (आश्रय)- கைப்பற்றாதே, मद्बुद्धिः- என்னுடைய புத்தியானது, अनुगम्यताम्- (உன்னால்) அநுஸரிக்கப்படவேண்டும்.

44. (ப-ரை) लक्ष्मणाग्रजः- லக்ஷ்மணரின் தமயனாரான ஸ்ரீராமன், तं भ्रातरं- அந்த ப்ராதாவான லக்ஷ்மணனைப்பார்த்து, सौहार्दात्- ஸ்நேஹத்தினால், एवं- இவ்விதம், उक्त्वा- சொல்லிவிட்டு, प्राञ्जलिः- கைகூப்பினவராய், शिरसा नतः- தலையினால் வணங்கிக்கொண்டு, भूयः- மறுபடியும், कौसल्यां- கௌஸல்யாதேவியைப்பார்த்து, उवाच- சொன்னார்.

45. (ப-ரை) हे देवि- அம்மா! इतः- இவ்விடமிருந்து, वनम्- வனத்தைக் குறித்து, गमिष्यन्तं- போகப்போகின்ற, मां- என்னை, अनुमन्यस्व- அநுமதிசெய்ய வேண்டும், (அப்படி செய்யாத பக்ஷத்தில்), मम- என்னுடைய, प्राणैः- ப்ராணன்களினால், शापिता असि- ஆணையிடப்பட்டவராக ஆகிறீர், मे- எனக்கு. स्वस्त्ययनानि- க்ஷேமத்தைக் கொடுக்குங்கார்யங்களை, कुरु- செய்யக்கடவீர்.

---

43. (பொ-ரை) ஆகலால் கெட்டதாயும் கேவலம் மொறட்டுத்தனம் கொண்ட க்ஷத்ரிய தர்மத்தை தழுவியதுமான இந்த புத்தியை விட்டுவிடு, தர்மத்தையே கைப்பிடி, கொடுந்தொழிலை கைப்பற்றாதே. என்னுடைய அபிப்பிராயத்தை அநுஸரித்து நடந்து வா.

44. (பொ-ரை) லக்ஷ்மணனுடைய அண்ணாவான ஸ்ரீராமன் தம்பியான லக்ஷ்மணனைப்பார்த்து ஸ்நேஹத்தினால் இவ்விதம் சொல்லிவிட்டு பிறகு கைகூப்பி தலையினால் வணங்கிக்கொண்டு கௌஸல்யையைப்பார்த்து மறுபடியும் சொல்லுகிறார்.

45. (பொ-ரை) அம்மா! இதைவிட்டு நான் வனம் போகப்போகிறேன், எனக்கு நீர் அநுமதி கொடுக்கவேண்டும், என்னுடைய ப்ரயாணத்திற்கு தடை செய்யவேண்டாம், அப்படிச்செய்யும் பக்ஷத்தில் என் ப்ராணன்பேரில் ஆணையிடுவேன், ஆகையால் என்னுடைய ப்ரயாணத்திற்குத் தகுந்த மங்கள கார்யங்களைச் செய்து என்னை அநுப்பவேண்டும்.

तीर्णप्रतिज्ञश्च वनात्पुनरेष्याम्यहं पुरीम् ।
ययातिरिव राजर्षिः पुरा हित्वा पुनर्दिवम् ॥ 46 ॥
शोकः संधार्यतां मातर्हृदये साधु मा शुचः ।
वनवासादिहैष्यामि पुनः कृत्वा पितुर्वचः ॥ 47 ॥
त्वया मया च वैदेह्या लक्ष्मणेन सुमित्रया ।
पितुर्नियोगे स्थातव्यमेष धर्मः सनातनः ॥ 48 ॥

46. (ப-ரை) पुरा- முன்காலத்தில், ययातिः राजर्षिः- யயாதி என்கிற ராஜ ரிஷியானவர், दिवं- ஸ்வர்கத்தை, हित्वा- விட்டுவிட்டு, पुनः- மறுபடியும், (दिवं) इव- (ஸ்வர்கத்தை அடைந்தது)போல், अहं- நான், तीर्णप्रतिज्ञः- ப்ரதிஜ்ஞை நிறைவேற்றின வனாய்க்கொண்டு, वनात्- வனத்திலிருந்து, पुनः- மறுபடியும், पुरीम्- நகரத்தைக்குறித்து, एष्यामि- வந்துவிடுவேன்.

47. (ப-ரை) हे मातः- அம்மா! शोकः- துக்கமானது, हृदये- ஹ்ருதயத்திலே யே, संधार्यतां- அடக்கப்படவேண்டும, साधुः- (இதுதான்) நல்லது, मा शुचः- துக்கப் படாதே, पितुः- பிதாவின், वचः- வார்த்தையை, कृत्वा- செய்துவிட்டு, वनवासात्- வன வாஸத்திலிருந்து, इह- இவ்விடத்திற்கு, पुनः- மறுபடியும், एष्यामि- வந்துவிடுவேன்.

48. (ப-ரை) त्वया- உன்னாலும், मया च- என்னாலும், वैदेह्या- ஸீதையினாலும், लक्ष्मणेन च- லக்ஷ்மணனாலும், सुमित्रया- ஸுமித்ரையினாலும், पितुः- பிதாவினுடைய, नियोगे- கட்டளையில், स्थातव्यं- இருக்கத்தகுந்தது, एषः- இதுதான், सनातनः- அனாதி யான, धर्मः- தர்மம்.

---

46. (பொ-ரை) முன்னொருகாலத்தில் யயாதி என்கிற ராஜரிஷி ஸ்வர்கத் திலிருந்து நழுவி மறுபடியும் ஸ்வர்கத்தை அடைந்ததுபோல், நானும் செய்த ப்ரதி ஜ்ஞையை நிறைவேற்றிவிட்டு, வனத்திலிருந்து மறுபடியும், நகரம வந்து சேர்ந்து விடுவேன்.

47. (பொ-ரை) அம்மா! மனதிலேயே துக்கத்தை அடக்கிக்கொள்ளு, இது தான் மிக நல்லது. நீர் துக்கப்படவேண்டாம். பிதாவினுடைய ஆஜ்ஞைப்ரகாரம் செய்துவிட்டு, வனத்திலிருந்து மறுபடியும் இங்கு வந்து சேருவேன்.

48. அம்மா! நீரும், நானும், ஸீதையும், லக்ஷ்மணனும், ஸுமித்ரையும், பிதாவின் உத்திரவுப்படி நடக்கவேண்டியவர்கள், இதுதான் அனாதியான தர்மம்.

अम्ब संहृत्य सम्भारान्दुःखं हृदि निगृह्य च ।
वनवासकृता बुद्धिर्मम धर्म्यानुवर्त्यताम् ॥ 49 ॥
एतद्वचस्तस्य निशम्य माता सुधर्म्यमव्यग्रमविक्लवं च ।
मृतेव संज्ञां प्रतिलभ्य देवी समीक्ष्य रामं पुनरित्युवाच ॥ 50 ॥
यथैव ते पुत्र पिता तथाहं गुरुः स्वधर्मेण सुहृत्तया च ।
न त्वानुजानामि न मां विहाय सुदुःखितामर्हसि गन्तुमेवम् ॥ 51 ॥

---

49. (ப-ரை) अम्ब- அம்மா! सम्भारान्- (பட்டாபிஷேகத்திற்குரிய) ஸாமக்ரிகளை, संहृत्य- தள்ளிவிட்டு, हृदि- மனதில், दुःखं- துக்கத்தை, निगृह्य च- அடக்கிக்கொண்டும், वनवासकृता- வனவாஸம் செய்ய நிச்சயிக்கப்பட்ட, धर्म्या- தர்மத்துடன் கூடிய, मम बुद्धिः- என்னுடைய புத்தியானது, अनुवर्त्यताम्- (உம்மால்) அநுஸரிக்கப்படவேண்டும்.

50. (ப-ரை) सुधर्म्यम्- மிகவும் தர்மமுள்ளதும், अव्यग्रं- தைர்யமுடையதும், अविक्लवं च- மிகவும் உறுதியுள்ளதுமான, तस्य- அந்த ஸ்ரீராமனுடைய, एतत् वचः- இந்த வார்த்தையை, माता देवी- தாயான கௌஸல்யாதேவி, निशम्य- கேட்டு, मृता इव- மறித்தவள்போலிருந்து, पुनः- மறுபடியும், संज्ञां- ப்ரஜ்ஞையை, प्रतिलभ्य- அடைந்து, रामं समीक्ष्य- ராமனைப்பார்த்து, इति- இவ்விதம், उवाच- சொன்னாள்.

51. (ப-ரை) पुत्र- குழந்தாய்! स्वधर्मेण- போஷணம் முதலிய தன்னுடைய தர்மத்தினாலும், सुहृत्तया च- ஸ்நேஹத்தினாலும், यथैव- எப்படி, ते- உனக்கு, पिता- தகப்பன், गुरुः- பூஜ்யனோ, तथा- அப்படியே, अहं- நானும், गुरुः- உனக்குப்பூஜிக்கத்தகுந்தவள், (ஆகையால்) अहं- நான், त्वां- உன்னை, न अनुजानामि- அநுமதிசெய்யமாட்டேன், एवं- இவ்விதம், सुदुःखितां- மிகவும் துக்கித்துக்கொண்டிருக்கிற, मां- என்னை, विहाय- விட்டுவிட்டு, गन्तुं- (வனம்) போவதற்கு, न अर्हसि- (நீ) தகுந்தவனன்று.

49. (பொ-ரை) அம்மா! என்னுடைய பட்டாபிஷேகத்திற்காக சேர்க்கப்பட்ட ஸாமக்ரிகளையும் தள்ளிவிட்டு, துக்கத்தையும் மனதிலே அடக்கிக்கொண்டு, வனவாஸம் செய்ய நிச்சயித்திருக்கிற தார்மிஷ்டமான என்னுடைய அபிப்ராயத்தையே நீரும் அநுஸரிக்கவேண்டும்.

50. (பொ-ரை) மிகவும் தர்மமுள்ளதும், தைர்யமுள்ளதும், உறுதியுள்ளதுமான, ஸ்ரீராமனுடைய இந்த வார்த்தையை, மாதாவான கௌஸல்யாதேவியானவள் போல் மூர்ச்சையடைந்து சிலகாலம் கழித்து மூர்ச்சை தெளிந்து மறுபடியும் ஸ்ரீராமனைப்பார்த்து இவ்விதம் சொன்னாள்.

51. (பொ-ரை) போஷணம் முதலான தான் செய்யவேண்டிய கார்யத்தி

किं जीवितेनेह विना त्वया मे लोकेन वा किं स्वधयाऽमृतेन ।
श्रेयो मुहूर्तं तव सन्निधानं ममेह कृत्स्नादपि जीवलोकात् ॥ 52 ॥

नरैरिवोल्काभिरपोह्यमानो महागजोऽध्वानमनुप्रविष्टः ।
भूयः प्रजज्वाल विलापमेनं निशम्य रामः करुणं जनन्याः ॥ 53 ॥

52. (ப-ரை) त्वया विना- நீ இல்லாமல், मे- எனக்கு, इह- இந்த லோகத்தில், जीवितेन- பிழைத்திருப்பதினால், किं- என்ன ப்ரயோஜனம், लोकेन वा- பரலோகத்தினாலாவது, स्वधया- பித்ரு லோகத்தில் அடையப்பட்ட ஸ்வதையினாலாவது, अमृतेन- ஸ்வர்க லோகத்தில் அடையப்பட்ட அம்ருதத்தினாலாவது, किं- என்ன ப்ரயோஜனம், कृत्स्नात्- முழுமையான, जीवलोकात् अपि- ப்ராணி வர்க்கங்களைக்காட்டிலும், मम- எனக்கு, इह- இந்த லோகத்திலே, मुहूर्तं- ஒரு முஹூர்த்தகாலமாவது, तव- உன்னுடைய, सन्निधानं- முன்னிலையானது, श्रेयः- நன்மை.

53. (ப-ரை) नरैः- மனிதர்களால், उल्काभिः- கொள்ளிககட்டைகளால், अपोह्यमानः- துறத்தப்பட்டும், अध्वानं- மார்க்கத்தை, अनुप्रविष्टः- ப்ரவேசித்திருக்கிற, महागजः इव- பெரிய மதயானைபோல, रामः- ஸ்ரீராமன், जनन्याः- தாயாருடைய, करुणं- தீனமான, एनं विलापं- இந்த அழுகையை, निशम्य- கேட்டு, भूयः- மறுபடியும், प्रजज्वाल- மனக்கொதிப்புடனிருந்தார்

னாலும், எப்படி உனக்கு உன் பிதா பூஜிக்கத்தகுந்தவரோ, அப்படியல்லவோ நானும் உனக்குப் பூஜிககத்தகுந்தவர், ஆகையால் இவ்விதம் மிகவும துககப்பட்டுககொண்டிருககிற என்னை விட்டுவிட்டு, நீ வனம் போககூடாது, உனக்கு நான் அநுமதி கொடுக்கமாட்டேன்.

52. (பொ-ரை) உன்னை விட்டுப்பிறிந்து நான் இந்த லோகத்தில் பிழைத்திருப்பதினாலாவது, பரலோகத்தை அடைந்தாலாவது, பித்ருலோகத்தை அடைந்து அங்கே கிடைத்த ஸ்வதையை புஜிப்பதினாலாவது, அல்லது ஸ்வர்கலோகம சென்று அங்குக்கிடைத்த அம்ருததகை புஜிப்பதினாலாவது ஸமஸ்தலோகத்திலுமுள்ள ப்ராணி வர்க்கங்களெல்லாம நமமுன்னிலையில் நின்றாலும், அதைவிட இரண்டு நாழிகையாவது நீ என்னுடைய ஸமீபத்திலிருப்பது தான் எனக்கு நன்மை.

53. (பொ-ரை) காட்டில் புதிய யானைப்பிடிக்கும் ஜனங்களால், கொள்ளிக் கட்டைகளைக்கொண்டு துறத்தப்பட்டு, ஸரியான மார்க்கத்தையடைந்த யானைபோல் ஸ்ரீராமனும் வனவாஸம் போகவேண்டாமென்று கதறுகின்ற தாயாருடைய, இவ் விதம் அழுகையைக்கேட்டு மறுபடியும் மனம் கொதித்து நின்றார்.

(அதாவது, இவ்வளவு நான் சொன்னபோதிலும் தான் பிடித்தபிடியாகவே தர்மமார்க்கத்திலிருந்து என்னைத் தவறும்படியான வார்த்தைகளையே சொல்லுகிறன் என்று ரொமபவும் மனம் க [illegible] கிறார் என்றபடி.)

स मातरं चैव विसंज्ञकल्पामार्तं च सौमित्रिमभिप्रतप्तम् ।
धर्मे स्थितो धर्म्यमुवाच वाक्यं यथा स एवार्हति तत्र वक्तुम् ॥ 54 ॥

अहं हि ते लक्ष्मण नित्यमेव जानामि भक्तिं च पराक्रमं च ।
मम त्वभिप्रायमसन्निरीक्ष्य मात्रा सहाभ्यर्दसि मां सुदुःखम् ॥ 55 ॥

54. (ப-ரை) धर्मे स्थित:- தர்மத்தில் நிலையாகநிற்கின்ற, स:- அந்த ஸ்ரீராமன், विसंज्ञकल्पां- மூர்ச்சை அடைந்தவள்போலிருக்கின்ற, मातरं च एव- தாயாரையும், आर्तं- துக்கத்தினால் பீடிக்கப்பட்டும், अभिप्रतप्तम्- மிகவும் மனம தபித்துக்கொண்டுமிருக்கிற, सौमित्रिं च- லக்ஷ்மணனையும், (பார்த்து) तत्र- அந்த ஸமயத்தில், धर्म्यं- தர்மத்துடன் கூடிய, वाक्यं- வார்த்தையை, उवाच- சொன்னார், यथा- ஏனென்றால், तत्र- அந்த தர்ம ஸங்கடமான ஸமயத்தில், वक्तुं- சொல்வதற்கு, स: एव- அந்த ஸ்ரீராமனே, अर्हति- தகுந்தவர்

55. (ப-ரை) हे लक्ष्मण- லக்ஷ்மணனே! ते- உன்னுடைய, भक्तिं च- (என் விஷயத்தில்) பக்தியையும், पराक्रमं च- பராக்ரமத்தையும், अहं- நான், नित्यं एव- எப்பொழுதுமே, जानामि हि- அறிந்திருக்கிறேனல்லவா! तु- ஆனால், मम- என்னுடைய, अभिप्रायं- மனக்கருத்தை, असन्निरीक्ष्य- தெரியாமல், मात्रा सह- மாதாவான கௌஸல்யையுடன் கூட, मां- என்னை, सुदुःखम्- மிகவும் கஷ்டப்படும்படி, अभ्यर्दसि- வருத்துகிறாய்.

54. (பொ-ரை) தர்மத்திலேயே, நிலைநிற்கின்றவரான அந்த ஸ்ரீராமன் மூர்ச்சை அடைந்தவள்போல் இருக்கிற தன் தாயாரையும். துக்கத்தினால் பீடிக்கப்பட்டு மனம் பரிதபித்துக்கொண்டிருக்கிற லக்ஷ்மணனையும் பார்த்து தர்மத்திற்கிணங்கிய ஒரு வார்த்தை சொன்னார், ஏனென்றால் அவ்விதம் தர்மஸங்கடம் நேரும் காலத்தில் தகுந்தபடி சொல்லத்தக்கவர் ஸ்ரீராமன் ஒருவனே'

55. (பொ-ரை) லக்ஷ்மணா! உனக்கு என் விஷயத்தில் பக்தியும், பராக்ரமமும் இருக்கிறதென்று நான் எப்பொழுதுமே தெரிந்துகொண்டிருக்கிறேன். ஆனாலும் நீ மாத்திரம் என்னுடைய மனக்கருத்தை நன்றாய் ஆலோசியாமல் என் மாதாவுடன்கூட மிகவும் கஷ்டப்படும்படி தொந்திரவு செய்கிறாய்.

*तस्मिन्पुनर्जीवति धर्मराजे विशेषतः स्वे पथि वर्तमाने ।
देवी मया सार्धमितोऽपगच्छेत्कथं स्विदन्या विधवेव नारी ॥ 60 ॥
सा मानुमन्यस्व वनं व्रजन्तं कुरुष्व नः स्वस्त्ययनानि देवि ।
यथा समाप्ते पुनराव्रजेयं यथा हि सत्येन पुनर्ययातिः ॥ 61 ॥

60. (ப-ரை) धर्मराजे- தர்மத்தை நடத்துகின்றவராயும், विशेषतः- விசேஷமாக, स्वे पथि- தன்னுடைய மார்க்கத்தில், वर्तमाने- நிற்கின்றவருமான, तस्मिन्- அந்த அரசன், जीवति पुनः- ஜீவித்திருக்குங்காலத்தில், देवी- பட்ட மஹிஷியான கௌஸல்யாதேவியானவள், विधवा- விதவையான, अन्या नारी इव- வேறு ஸ்த்ரீபோல, कथ- எப்படி, इतः- இங்கிருந்து, मया सार्धं- என்னுடன்கூட, अपगच्छेत्- வனம்போகமுடியும்.

61. (ப-ரை) देवि- அம்மா! सा- அப்படிப்பட்ட நீர், वनं- வனத்தைக்குறித்து, व्रजन्त- போகின்ற, मा- என்னைக்குறித்து, अनुमन्यस्व- அநுமதி செய்யக்கடவீர், ययातिः- யயாதி மஹாராஜா, सत्येन- ஸத்யத்தினல், पुनः- மறுபடியும், यथा हि- எப்படி, (ஸ்வர்க்கமடைந்தாரோ), तथा- அப்படி, (अहं- நான்), समाप्ते- (பதினன்கு வருஷமட வனவாஸம்) முடிந்தவளவில், पुनः- மறுபடியும, यथा- எப்படி, आव्रजेयं- நகரத்தைக் குறித்து வருவேனே, तथा- அப்படி, नः- எங்களுக்கு, स्वस्त्ययनानि- க்ஷேமகரங்களான கார்யங்களை, कुरुष्व- செய்யக்கடவீர்.

---

60. (பொ-ரை) தர்மத்தை நடததுகின்றவரும், முன்னேர்களைவிட விசேஷமாக தனக்குரிய மார்க்கத்தில் நடப்பவருமான அநத அரசன் ஜீவித்திருக்கும காலத்தில், பட்டத்துக்கரசியான கௌஸல்யாதேவி விதவையான அல்ப ஸ்த்ரீபோல் இவ்விடம் விட்டு என்னுடன் கூட எவ்விதம வனம் வரக்கூடும்.

61. (பொ-ரை) அம்மா! பர்த்தா உயிருடனிருக்கும்பொழுது அவரைவிட்டு

---

*धर्म राजे- आचारोप्रभवो धर्मः धर्मस्य प्रभुरच्युतः- என்கிறபடி, தர்மத்திற்குப்ரபுவாயுமிருக்கிற, तस्मिन्- தத் சப்தவாச்யனன பரமபுருஷனுகிய நான், वि शेषतः- பெரிய திருவடியையும், திருவநந்தாழ்வான் முதலான நித்ய ஸூரிகளேயும விட்டு, அதாவது (பரமபதத்தைவிட்டு என்கிறபடி) ल्यप् लोपे पञ्चमि. मया सार्धं- பிராட்டியுடன்கூட, जीवति- ஜீவன்போல் அவதரித்து, स्वे पथि- எனக்கு அஸாதாரணமான சரணுகத ரக்ஷணமென்கிற மார்க்கத்தில், वर्तमाने सति- இருக்குங்காலத்தில், மேல் உத்தரார்த்தம் முன்போலவே என்று ஒரு அர்த்தம் ஏற்படுகிறது அதாவது தர்மத்திற்குப்ரபுவாய் வேதாந்த ப்ரஸித்தனை நான் திருவநந்தாழ்வான் பெரிய திருவடிமுதலான நித்ய ஸூரிகளைவிட்டு, கர்மவச்யனை ஜீவனைப்போல் பிராட்டியுடன் அவதரித்து சரணுகத ரக்ஷணம் என்கிற எனக்கேயேற்ற விசேஷ தர்மத்தை அநுஷ்டிப்பதற்காக வனம் போகுங் காலத்தில் நீ எதற்காகக் கூடவருகிறுய் என்று கருத்து. ஆனுல் இந்த அபிப்ராயம வால்மீகி மஹரிஷிக்கும் ஸ்ரீசக்ரவர்த்தித் திருமகனுக்குமில்லாமவிருந்தபோதிலும் இந்த சுலோகத்தில் ஏற்பட்ட பதங்களின் ஸாமர்த்யத்தால் கிடைத்ததும பெரியோர்களிடம் கேட்டதுமான அர்த்தத்தை எழுதினேன்.

यशो ह्यहं केवलराज्यकारणान्न पृष्ठतः कर्तुमलं महोदयम् ।
अदीर्घकाले न तु देवि जीविते वृणेऽवरामद्य महीमधर्मतः ॥ 62 ॥
प्रसादयन्नरवृषभः स्वमातरं पराक्रमाज्जिगमिषुरेव दण्डकान् ।
अथानुजं भृशमनुशास्य दर्शनं चकार तां हृदि जननीं प्रदक्षिणम् ॥ 63 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
एकविंशः सर्गः ॥ 21 ॥

62. (ப-ரை) देवि- அம்மா! अहं- நான், केवलराज्यकारणात्- தர்மமில்லாமல் ராஜ்யம் ஒன்றுக்காக மாத்திரம், महोदयम्- அதிக பலனுள்ள, यशः- கீர்த்தியை, पृष्ठतः कर्तुं- உபேக்ஷை செய்ய, न अलं- சக்தியுள்ளவனன்று, अदीर्घकाले- நீடித்த காலமல்லாத, जीविते- ப்ராணனை தரிக்கும் விஷயத்தில், अवरां- ரொம்பவும் அல்பமான, महीं- பூமியை, अद्य- இப்பொழுது, अधर्मतः अதர்மத்தினால், न वृणे- நான் கைக்கொள்ளமாட்டேன்.

63. (ப-ரை) नरवृषभः- புருஷோத்தமனான ஸ்ரீராமன், स्वमातरं- தன் தாயாரை, प्रसादयन् (सन्)- ஸமாதானம் செய்துகொண்டு, पराक्रमात्- கைகேயியின் தூண்டுதலால், दण्डकान्- தண்டகா வனத்தைக்குறித்து, जिगमिषुः एव- போக விருப்பமுள்ளவராயும், अथ- பிறகு, अनुजं- தம்பியைக்குறித்து, दर्शनं- தம்முடைய மதத்தை, भृशं- மிகவும், अनुशास्य- போதித்து, तां जननीम्- அந்தத்தாயாரை, हृदि- மனதில், प्रदक्षिणम् चकार- பிரதக்ஷிணம் செய்தார்.

நீ என்னுடன் வருவது அநுசிதமானதால், இவ்விடத்திலேயே இருந்துகொண்டு வனவாஸம் போகின்ற எனக்கு அநுமதிகொடும். ஸ்வர்க்கத்திலிருந்து பூமியில் விழுந்த யயாதி மஹாராஜன் மறுபடியும் ஸத்யத்தினால் ஸ்வர்க்கத்தை அடைந்தது போல் நானும் நகரத்தைவிட்டு பதினான்கு வருஷம் வனவாஸம் செய்து வ்ரதத்தை முடித்து திரும்பி நகரத்தை அடையும்படியாக எங்களுக்குவேண்டிய ஆசீர்வாதங்களை நீ செய்யவேண்டும்.

62. (பொ-ரை) அம்மா! தர்மமில்லாமல் ராஜ்யம் ஒன்றுக்காக மாத்திரம் விசேஷமான பயனைக்கொடுக்கக்கூடிய பெருமபுகழைக்கைவிட துணியமாட்டேன் பின்னும் நீடித்திராத இந்தப்ப்ராணனை தரிப்பதற்காக மிகவும் அல்பமான இந்தப் பூமியை அதர்மமாகக் கைக்கொள்ளவும் ஆசைப்படமாட்டேன்.

63. (பொ-ரை) புருஷோத்தமனான ஸ்ரீராமன் தம் தாயாருக்கு இவ்விதம் ஸமாதான வார்த்தைகளைச் சொல்லி கைகேயியின் தூண்டுதலால் சீக்ரம் வனம் போக விரும்பிக்கொண்டு, தம்முடைய அபிப்ராயத்தை தம்பிக்கும் நன்றாய் போதித்து தன் தாயாரை ப்ரதக்ஷிணம் செய்யவேணுமென்று மனதில் நினைத்தார்.

द्वाविंशः सर्गः ॥ 22 ॥

अथ तं व्यथया दीनं सविशेषममर्षितम् ।
श्वसन्तमिव नागेन्द्रं रोषविस्फारितेक्षणम् ॥ 1 ॥
आसाद्य रामः सौमित्रिं सुहृदं भ्रातरं प्रियम् ।
उवाचेदं स धैर्येण धारयन्सत्वमात्मवान् ॥ 2 ॥
निगृह्य रोषं शोकं च धैर्यमाश्रित्य केवलम् ।
अवमानं निरस्येमं गृहीत्वा हर्षमुत्तमम् ॥ 3 ॥
उपक्लृप्तं हि यत्किंचिदभिषेकार्थमद्य मे ।
सर्वं विसर्जय क्षिप्रं कुरु कार्यं निरत्ययम् ॥ 4 ॥

---

1—2. (ப-ரை) अथ- பிறகு, आत्मवान्- ஸ்வாதீனமான மனதை உடைய, सः रामः- அந்த ராமன், व्यथया- வ்யஸனத்தினுல், दीनं- தைன்யத்தையடைந்தும், सविशेषं- மிகவும் விசேஷமாக, अमर्षितम्- கைகேயி விஷயத்தில் பொராமையுள்ளவராயும், श्वसन्तं- பெருமூச்சு விடுகின்ற, नागेन्द्रं इव- ஸர்ப்பம் போன்றவராய், रोषविस्फारितेक्षणम्- கோபத்தினுல் நன்ருய் விழிக்கப்பட்ட கண்களையுடையவராயும், सुहृदं- தன்னிடத்தில் ஸ்நேஹமுள்ளவராயும், प्रियं भ्रातरं- அன்புள்ள ப்ராதாவுமான, सौमित्रिं- லக்ஷ்மணனை, आसाद्य- எதிர்நின்று நோக்கி, धैर्येण- தைர்யத்தினுல், सत्वं- (தன்னுடைய) பலத்தை, धारयन्- வெளிக்குக்காட்டாதவராய், इदं- இந்த வார்த்தையை, उवाच- சொன்ஞர்.

3—4. (ப-ரை) केवलं धैर्यं- தைர்யம் ஒன்றையுமே, आश्रित्य- கைப்பற்றிக்கொண்டு, रोषं- கோபத்தையும், शोकं च- துக்கத்தையும், निगृह्य- அடக்கிக்கொண்டு, इमं अवमानं- இந்த அவமானத்தை, निरस्य- தள்ளிவிட்டு, उत्तमम्- हर्षं- உயர்ந்த ஸந்தோஷத்தை, गृहीत्वा- அடைந்து, अद्य- இப்பொழுது, मे- என்னுடைய, अभिषेकार्थं- பட்டாபிஷேகத்திற்காக, यत् किंचित्- யாதொரு வஸ்து, उपक्लृप्तं- ஏற்படுத்தப்பட்டதோ, (तत्) सर्वं- (அது) எல்லாவற்றை, विसर्जय- விட்டுவிடு, निरत्ययम्- அழிவில்லாத, कार्यं- கார்யத்தை, क्षिप्रं- சீக்ரமாக, कुरु- நீ செய்யவேண்டும்.

---

1—2. (பொ-ரை) பிறகு மனதை ஸ்வாதீனமாகக்கொண்ட அந்த ஸ்ரீராமன் துக்கத்தினுலே தைன்யமடைந்து இதர ஜனங்களைக்காட்டிலும் விசேஷமாக மிகவும் ரோஷமுள்ளவராய் ஸர்ப்பம்போலே சீறிக்கொண்டு கோபத்தினுல் விஸ்தாரமான கண்களுள்ளவராய் தனக்கு மிகவும் ஸுஹ்ருத்தாயும ப்ரியமான ப்ராதாவுமான அந்த லக்ஷ்மணனைப்பார்த்து எதிரில் நின்று தைர்யத்தினுல் தனக்கிருக்கிற ஸர்வ பலத்தையும் வெளிக்காட்டாமல் உள்ளடக்கிக்கொண்டு ஒரு வார்த்தை சொல்லுகிருர்.

3—4. (பொ-ரை) அப்பா! பிதா, கைகேயீ முதலானவர்கள் விஷயமான

सौमित्रे योऽभिषेकार्थे मम सम्भारसम्भ्रमः ।
अभिषेकनिवृत्त्यर्थे सोऽस्तु सम्भारसम्भ्रमः ॥ 5 ॥

यस्या मदभिषेकार्थे मानसं परितप्यते ।
माता मे सा यथा न स्यात्सविशङ्का तथा कुरु ॥ 6 ॥

5. (ப-ரை) सौमित्रे- லக்ஷ்மண! मम- என்னுடைய, अभिषेकार्थे- பட்டாபிஷேக விஷயத்தில், यः- யாதொரு, सम्भारसम्भ्रमः- பதார்த்தம் சேகரிப்பதில் உத்ஸாஹம் (இருக்கிறதோ), सः- அந்த, सम्भारसम्भ्रमः- பதார்த்தம் சேகரிப்பதில் உத்ஸாஹமானது, अभिषेकनिवृत्त्यर्थे- அபிஷேகமில்லாமல் வனவாஸம் போகிற கார்யத்தில், अस्तु- இருக்கட்டும்.

6. (ப-ரை) मदभिषेकार्थे- என் பட்டாபிஷேக விஷயத்தில், यस्याः- யாதொருவளுடைய, मानसं- மனதானது, परितप्यते- பரிதபிக்கிறதோ, सा- அந்த, मे माता- என் தாயார், यथा- எப்படி, सविशङ्का- சங்கையோடு கூடினவளாக, न स्यात्- ஆகமாட்டாளோ, तथा- அப்படி, कुरु- நீ செய்யவேண்டும்.

---

கோபத்தையும் என் விஷயமான துக்கத்தையும் தைர்யத்தினால் அடக்கிக்கொண்டு, ஆரம்பித்த பட்டாபிஷேகம் நின்றுபோய்விட்டதே யென்கிற அவமானத்தையும் தள்ளிவிட்டு, நம் பிதா செய்த ப்ரதிக்ஜையை நிறைவேற்றி அவரை உத்தாரணம் செய்யும்படியான நமக்கு நேர்ந்ததைக்குறித்து ஸந்தோஷமடைந்து, இப்பொழுது நம்முடைய பட்டாபிஷேகத்திற்காக ஏற்படுத்திய அலங்காரம முதலியவைகளை விட்டுவிட்டு, அழிவில்லாத வனவாஸத்திற்குரிய மரவுரி, க்ருஷ்ணாஜினம் முதலியவைகளை தரிக்கும கார்யத்தையே சீக்ரமாகச்செய்.
(தைர்யமாவது:— மனது கலங்கக்கூடிய காரணம் நேர்ந்த காலத்திலும் கலங்காம லிருக்கை )

5. (பொ-ரை) லக்ஷ்மண! என் பட்டாபிஷேகத்திற்காக ஸாமக்ரிகள் சேகரிக்கும் விஷயத்தில் உண்டான உத்ஸாஹத்தை, பட்டாபிஷேகம் நின்று வனவாஸம் போகவேண்டியதற்காக ஸாமக்ரி சேகரிக்கவேண்டிய விஷயத்தில் உபயோகப் படுத்திக்கொள்ளு.

6. (பொ-ரை) எனக்குப்பட்டாபிஷேகம் நடப்பதைப்பற்றி யாதொரு கைகேயிதேவி மனதில் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிறாளோ, இந்த என் தாயார், என் விதம் மனதில் சங்கையில்லாமலிருப்பாளோ அப்படி நீ செய்யக்கடவாய்.

(இங்கு சங்கையாவது:— ராமன் லக்ஷ்மணனோடு ஆலோசித்து காட்டுக்குப் போகாமல் ராஜ்யத்தைப் பிடுங்கிக்கொள்ளுவானோ என்கிற எண்ணம) मदभिषेकार्थे- என்கிற பதத்தில், अर्थ- சப்தத்திற்கு நிவிருத்தியை சொல்லும் பொருளில் எனக்கு நிச்சயித்த பட்டாபிஷேகம் நின்றுவிட்டதென்று என் மாதாவான கௌஸல்யா தேவியானவள் மனதில் வருத்தப்படாமலிருக்கும்படி உசிதமாக உபதேசம் நீ செய்யவேண்டும் என்றும் பொருள் கொள்ளலாம்.

तस्याः शङ्कामयं दुःखं मुहूर्तमपि नोत्सहे ।
मनसि प्रतिसंजातं सौमित्रेऽहमुपेक्षितुम् ॥ 7 ॥
न बुद्धिपूर्वं नाबुद्धं स्मरामीह कदाचन ।
मातृणां वा पितुर्वाहं कृतमल्यं च विप्रियम् ॥ 8 ॥
सत्यः सत्याभिसन्धश्च नित्यं सत्यपराक्रमः ।
परलोकभयाद्भीतो निर्भयोऽस्तु पिता मम ॥ 9 ॥

7. (ப-ரை) सौमित्रे- லக்ஷ்மணா! तस्याः- அந்த கைகேயியினுடைய, मनसि- மனதில், प्रतिसजात- உண்டாயிருக்கிற, शङ्कामयं- சங்கா ரூபமான, दुःखं- துக்கத்தை, मुहूर्तं अपि- ஒரு முஹூர்த்தகாலமும்கூட, उपेक्षितुम्- உபேக்ஷிப்பதற்கு, न उत्सहे- ஸமர்த்தனாகிறேனில்லை.

8. (ப-ரை) इह- இங்கு, मातृणां वा- தாய்மார்கள் விஷயத்திலோ, पितुः वा- பிதாவினுடைய விஷயத்திலோ, बुद्धिपूर्वं- புத்தி பூர்வமாக, अल्प विप्रियम्- அல்பமான விரோதத்தை, कदाचन- ஒருக்காலும், अहं- நான், कृतं- செய்யப்பட்டதாக, न स्मरामि- நினைக்கவில்லை, अवुद्धं- புத்திபூர்வமல்லாததாகவாவது, (செய்யப்பட்டதாக நினைக்கவில்லை)

9. (ப-ரை) सत्यः- ஸத்யமான வாக்குள்ளவரும், सत्याभिसन्धः च- ஸத்யமான ப்ரதிக்ஞை உள்ளவரும், सत्यपराक्रमः- ஸத்யமான பராக்ரமத்தை உடையவரும், परलोकभयात्- பரலோகத்தில் பயத்தில் நின்றும், भीतः- பயந்தவருமான, मम पिता- என் பிதாவானவர், निर्भयः अस्तु- பயமில்லாதவராக இருக்கட்டும்.

7. (பொ-ரை) லக்ஷ்மணா! அந்த கைகேயியினுடைய மனதில், இவ்விதம் சங்கை உண்டாய் விட்டதேயானால் அந்த துக்கத்தை முஹூர்த்தகாலங்கூட நான் பார்த்து ஸஹிக்கமாட்டேன்.

8. (பொ-ரை) இங்கு தாய்மார்கள் விஷயத்திலோ அல்லது தகப்பனார் விஷயத்திலோ, புத்தி பூர்வகமாகவோ, அபுத்தி பூர்வமாகவோ, ஒரு காலத்திலும் அல்பமான விரோதம் கூட நான் செய்ததாகத் தோன்றவில்லையே.

9. (பொ-ரை) ஸத்யமான வாக்குள்ளவரும், ஸத்யமான ப்ரதிக்ஞையுள்ளவரும், ஸத்யமான பராக்ரமமுள்ளவருமான என் பிதா கைகேயி தேவிக்கு சொன்னவண்ணம் செய்யாவிடில் ஸத்யம் தவறி பரலோகம் நமக்கு கிடையாமல் போய் விடுமே யென்கிற பயமில்லாமலிருக்கும்படி நான் வனவாஸம் செய்யவேண்டும்.

तस्यापि हि भवेदस्मिन्कर्मण्यप्रतिसंहृते ।
सत्यं नेति मनस्तापस्तस्य तापस्तपेच्च माम् ॥ 10 ॥
अभिषेकविधानं तु तस्मात्संहृत्य लक्ष्मण ।
अन्वगेवाहमिच्छामि वनं गन्तुमितः पुनः ॥ 11 ॥
मम प्रव्राजनादद्य कृतकृत्या नृपात्मजा ।
सुतं भरतमव्यग्रमभिषेचयिता ततः ॥ 12 ॥

10. (ப-ரை) अस्मिन्कर्मणि- இந்த என்னுடைய பட்டாபிஷேக கார்யமானது, अप्रतिसंहृते सति- நிறுத்தப்படாமலிருக்கும் பக்ஷத்தில், तस्यापि- அந்த தசரத மஹாராஜாவுக்கும், सत्यं न- ஸத்யம தவறிவிட்டதே, इति- என்று, मनस्तापः- மன வருத்தமானது, भवेत्- உண்டாய்விடும், तस्य तापः- அவருடைய மனவருத்தமானது, माम् च- என்னையும், तपेत्- வருத்தப்படுத்தும்.

11. (ப-ரை) तस्मात्- ஆகையாலே, हे लक्ष्मण- லக்ஷ்மணனே, अभिषेकविधानं तु- பட்டாபிஷேகம் செய்துகொள்ளுவதை, संहृत्य- நிறுத்திவிட்டு, अन्वक् एव- சீக்ரமாகவே, अहं- நான், इतः पुनः- இவ்விடமிருந்தே, वनं गन्तुं- தண்டகாவனம் போவதற்கு, इच्छामि- விரும்புகிறேன்.

12. (ப-ரை) नृपात्मजा- ராஜபுத்ரியான கைகேயி, अद्य- இப்பொழுது, मम- என்னுடைய, प्रव्राजनात्- அரண்ய ப்ரயாணத்தினால், कृतकृत्या सती- செய்யவேண்டிய கார்யத்தை செய்து முடித்துக்கொண்டவளாகவிருந்து, ततः- பிறகு, सुतं भरतं- பிள்ளையான பரதனை, अव्यग्रं यथा तथा- கவலையில்லாமலிருக்கும்படி, अभिषेचयिता- பட்டாபிஷேகம் செய்விப்பாள்.

10. (பொ-ரை) ஏனென்றால், இப்பொழுது எனக்கு ஏற்பட்ட பட்டாபிஷேகத்தை நிறுத்தாத பக்ஷத்தில், தசரதமஹாராஜாவுக்கு "நாம் கைகேயிக்குக்கொடுத்த வரம் இல்லாமல் நம்முடைய ஸத்யம் தவறிவிட்டதே" என்று மனவருத்தமுண்டாகும். அவருடைய வருத்தத்தினால் எனக்கும் அதிகமாக வருத்தமுண்டாகும்.

11. (பொ-ரை) லக்ஷ்மணா! ஆகையால், நான் பட்டாபிஷேகம செய்துகொள்ளுவதை நிறுத்திவிட்டு, இந்த க்ஷணமே இவ்விடம்விட்டு வனம்போக விரும்புகிறேன்.

12. (பொ-ரை) இப்பொழுது நான் காட்டிற்குப்போய்விட்டால் ராஜபுத்ரியான கைகேயியானவள் தனக்கு முக்யமான கார்யம் நிறைவேறிற்றென்று விசாரமில்லாமல் பிள்ளையான பரதனுக்கு ராஜ்யபட்டாபிஷேகம் செய்விப்பாள்.

मयि चीराजिनधरे जटामण्डलधारिणि ।
गतेऽरण्यं च कैकेय्या भविष्यति मनः सुखम् ॥ 13 ॥
बुद्धिः प्रणीता येनेयं मनश्च सुसमाहितम् ।
तं तु नार्हामि संक्लेष्टुं प्रव्रजिष्यामि मा चिरम् ॥ 14 ॥
कृतान्तस्त्वेव सौमित्रे द्रष्टव्यो मत्प्रवासने ।
राज्यस्य च वितीर्णस्य पुनरेव निवर्तने ॥ 15 ॥

---

13. (ப-ரை) चीराजिनधरे- மாவுரியும், க்ருஷ்ணாஜினமும் தரித்தும், जटामण्डलधारिणि- ஜடாமண்டலத்தை தரித்தும், मयि- நான், अरण्यं च- அரண்யத்தைக்குறித்து, गते सति- போனவளவில், कैकेय्याः- கைகேயிக்கு मनः सुखम्- மனதில் ஸுகமானது, भविष्यति- உண்டாகும்.

14. (ப-ரை) येन- யாதொரு என்னால், इयं बुद्धिः- வனவாஸம் போகவேணு மென்கிற இந்த புத்தியானது, प्रणीता- கற்கப்பட்டதோ, मनः च- மனதும், सुसमाहितम्- நன்ருக உறுதி செய்யப்பட்டதோ, तं- அப்படிப்பட்ட என்னை, संक्लेष्टुं- வருத்தப்படுத்திக்கொள்ள, न अर्हामि- தகுந்தவனல்ல, (अतः- ஆதலால்), प्रव्रजिष्यामि- வனவாஸம் செய்யப்போகிறேன், मा चिरम्- காலதாமதம் வேண்டாம்.

15. (ப-ரை) हे सौमित्रे- லக்ஷ்மணா! मत्प्रवासने- நான் காட்டிற்குப்போவதிலும், वितीर्णस्य- (பிதாவினல்) கொடுக்கப்பட்ட, राज्यस्य- ராஜ்யத்திலுடைய, पुनः एव- மறுபடியும், निवर्तने च- மாற்றுவதிலும், कृतान्तः तु एव- தைவமேதான், द्रष्टव्यः- காரணமாக அறியத்தகுந்தது.

---

13. (பொ-ரை) மாவுரியும் க்ருஷ்ணாஜினமும் உடுத்துக்கொண்டு, தலையில் வட்டமாக சடையும் கட்டிக்கொண்டு நான் தண்டகாவனம் போய்விட்டபிறகு தான் கைகேயியின் மனதிற்கு ஸுகமுண்டாகும்.

14. (பொ-ரை) கைகேயியின் வார்த்தையினல் வனவாஸம் செய்வதாக எண்ணி மனதையும் நன்ருய் திடப்படுத்திக்கொண்டுவிட்டேன். இனி இதை மாற்றும்விஷயத்தில் "எண்ணிய கார்யம் கெட்டுவிட்டதே"யென்று மனவருத்தமுண்டாகும். ஆகையால் தாமதப்படாமல் வனத்தைக்குறித்துப்போகப்போகிறேன்.

கைகேயி, மந்தரை முதலானவர்கள் ஒன்று சேர்ந்து ஆலோசித்து என்னுடைய பட்டாபிஷேகத்தை நிறுத்தி என்னைக்காட்டிற்கு அநுப்புவதாயும் பரதனுக்குப்பட்டாபிஷேகம் செய்வதாயும் தீர்மானித்து இவ்விதமே நானும் ஒப்புக்கொண்டு அதனல் அவர்களுடைய மனது மிகவும ஸந்தோஷப்பட்டுக்கொண்டிருக்க, இப்பொழுது நான் வனம்போகாதபக்ஷத்தில் அவர்களுக்கு எவ்வளவு வருத்தமுண்டாகும. இதற்கு நானன்றே காரணமாகிவிடுகிறேன். அந்த வருத்தத்தை நான் பார்த்து ஸஹிக்கமாட்டேன். ஆகையால் உடனே வனம் போகிறேனென்றும் சில வ்யாக்யாதாக்களின் கருத்து.

15. (பொ-ரை) லக்ஷ்மணா! நான் காட்டிற்குப்போவதற்கும், பிதாவி

कैकेय्याः प्रतिपत्तिर्हि कथं स्यान्मम पीडने ।
यदि भावो न दैवोऽयं कृतान्तविहितो भवेत् ॥ 16 ॥
जानासि हि यथा सौम्य न मातृषु ममान्तरम् ।
भूतपूर्वं विशेषो वा तस्या मयि सुतेपि वा ॥ 17 ॥
सोऽभिषेकनिवृत्त्यर्थैः प्रवासार्थैश्च दुर्वचैः।
उग्रैर्वाक्यैरहं तस्या नान्यद्दैवात्समर्थये ॥ 18 ॥

---

16. (ப-வை) दैव: अयंभाव:- கைகேயினுடைய இந்த எண்ணமானது, कृतान्त-विहित:- தைவத்தினுல் செய்யப்பட்டதாக, न भवेत् यदि- ஆகாமலிருக்குமேயானுல், मम पीडने- எனக்கு வருத்தம் உண்டாக்குவதில், कैकेय्या:- கைகேயி தேவிக்கு, प्रतिपत्ति:- எண்ணமானது, कथं स्यात् हि- எவ்விதம் உண்டாகும்.

17. (ப-வை) हे सौम्य- அப்பா லக்ஷ்மண! मातृषु- தாய்மார்களிடத்தில், मम- எனக்கு, अन्तरम्- பேதமானது, यथा- எப்படி, न भूतपूर्व- முன்னொருகாலத்திலும் இல்லையோ, तस्या:- அந்த கைகேயிக்கும், मयि- என்னிடத்திலோ, सुते अपि वा- பிள்ளையான பரதனிடத்திலோ, विशेष:- வித்யாஸமானது, न भूतपूर्व:- முன்னொருக் காலும் உண்டாகவில்லையோ, तथा- அப்படி, जानासि हि- நீ அறிவாயன்றோ.

18. (ப-வை) स: अह- அப்படிப்பட்ட நான், अभिषेकनिवृत्त्यर्थै:- பட்டாபிஷேகத்தை நிறுத்துவதற்காகவும், प्रवासार्थै: च- நான் வனம்போவதற்காகவும், दुर्वचै:- வாயினுல் சொல்லமுடியாத, तस्या:- அந்த கைகேயியினுடைய, उग्रै: वाक्यै:- க்ரூரமான வார்த்தைகளால், दैवात्- தெய்வத்தைக்காட்டிலும், अन्यत्- வேறு (புத்தி கலைவதற்குக்காரணத்தை), न समर्थये- நிச்சயிக்கவில்லை.

---

னுல் கிடைத்த ராஜ்யம் மறுபடி நமக்குக்கிடைக்காமல் போவதற்கும், முக்யமான காரணம் தைவமென்றே தெரிந்துகொள்.

16. (பொ-வை) கைகேயியின் இந்த எண்ணமானது தைவத்தினுல் ஏற்படாத பக்ஷத்தில் மாதாவான கைகேயிக்கு என்னை வருத்தப்படுத்த எப்படி எண்ணமுண்டாகும்.

17. (பொ-வை) அப்பா லக்ஷ்மணு! எனக்கு தாய்மார்கள் விஷயத்தில் நாளதுவரையில் கொஞ்சமாவது வித்யாஸமில்லையென்பதையும், அந்த கைகேயிதேவிக்கு என்னிடத்திலும் தன் ஸொந்தபிள்ளையான பரதனிடத்திலும் இதுவரையில் கொஞ்சமாவது வித்யாஸம் இல்லையென்பதையும் நீ நன்றாய் தெரிந்துகொண்டிருக்கிறுயல்லவா.

18. (பொ-வை) ஆகையினுலே, நான் பட்டாபிஷேகத்தை நிறுத்துவதற்காகவும், வனவாஸம் போவதற்காகவும், வாயினுல் இவ்வளவுயென்று சொல்லமுடியாத இந்த கைகேயிதேவி சொன்ன க்ரூரமான வார்த்தைகளை ஆலோசிக்கும்பக்ஷத்

कथं प्रकृतिसंपन्ना राजपुत्री तथागुणा ।
ब्रूयात्सा प्राकृतेव स्त्री मत्पीडां भर्तृसन्निधौ ॥ 19 ॥
यदचिन्त्यं तु तद्दैवं भूतेष्वपि न हन्यते ।
व्यक्तं मयि च तस्यां च पतितो हि विपर्ययः ॥ 20 ॥
कश्चिद्दैवेन सौमित्रे योद्धुमुत्सहते पुमान् ।
यस्य न ग्रहणं किंचित्कर्मणोऽन्यत्र दृश्यते ॥ 21 ॥

19. (ப-ரை) प्रकृतिसंपन्ना- நல்ல ஸ்வபாவத்தோடு கூடினவளும், राजपुत्री- உத்தமராஜகுலத்திற் பிறந்தவளும், तथा गुणा- அப்படிப்பட்ட குணங்களுமுள்ள, सा- அந்த கைகேயி தேவியானவள், प्राकृता स्त्री इव- அல்பமான ஸ்த்ரீபோல, भर्तृसन्निधौ- பர்தாவின் ஸன்னிதியில், मत्पीडां- எனக்குக் கஷ்டத்தை, कथं ब्रूयात्- எப்படி சொல்லுவள்.

20. (ப ரை) अचिन्त्यं- சிந்திக்கமுடியாத ப்ரபாவமுடைய, यत् दैवं- யாதொரு தெய்வமுண்டோ, तत्- அது, भूतेषु अपि- எல்லாப்ராணிகளிடத்திலும், न हन्यते- தடுக்கப்படுகிறதில்லை, व्यक्तं- இது நிச்சயம், हि- அதினாலன்றோ, मयि च- என்னிடத்திலும் तस्यां च- அந்த கைகேயியினிடத்திலும், विपर्ययः- விபரீதமானது, पतितः- நேர்ந்துவிட்டது.

21. (ப-ரை) हे सौमित्रे- லக்ஷ்மண! यस्य- யாதொரு தெய்வத்தினுடைய, ग्रहणं- அறியும காரணமானது, कर्मणः- கார்யமான பலத்தைக்காட்டிலும், अन्यत्र- வேறு,

தில் இதற்குக்காரணம் தெய்வம்தான். மற்றொருவருமன்று. என்று தீர்மானித்துக் கொண்டேன்.

19. (பொ-ரை) நல்ல ஸ்வபாவமுள்ளவளாய் மஹாராஜகுலத்திற் பிறந்தும் நாளதுவரையில் எல்லாரும் ப்ரத்யக்ஷமாய் அநுபவித்துவந்த தயை, பொறுமை, முதலான ஸத்குணங்களை உடையவளான அந்த கைகேயி தேவி பர்தாவின் ஸன்னிதியில் தானாகவே நேரில் மிகவும் அன்பிற்கு இடமான எனக்கு வருத்தமுண்டாக்கவேணுமென்று துஷ்ட ஸ்வபாவமுள்ளவளாய், துஷ்டகுலத்திற் பிறந்த அல்பமான ஒரு ஸ்தரீஜாதி போல எப்படி சொல்லத்துணிவாள். ஆகையால் தான் தெய்வம் காரணமென்று சொல்லுகிறேன்.

20. (பொ-ரை) அப்பா! தெய்வமென்பது ஒருவராலும் நினைக்கமுடியாத ப்ரபாவமுள்ளது, எந்தப்ராணிகளிடத்திலும் அதின் ஸாமர்த்யம் தடுக்கமுடியாதது, இது நிச்சயம். அதனாலன்றோ எனக்குக்கிடைத்த ராஜ்யம் தவறினதும் இதுவரையில் என்னிடத்தில் மிகவும் வாத்ஸல்யமுள்ள கைகேயிதேவிக்கு என்னைக்காட்டிற்குத் துறத்தவேணுமென்ற எண்ணமுண்டானதுமாகிற இந்த விபரீதம் நேர்ந்திருக்கிறது.

21. (பொ-ரை) லக்ஷ்மண! ப்ரத்யக்ஷமாக அறிவதற்கு முடியாது, கார்யத்

सुखदुःखे भयक्रोधौ लाभालाभौ भवाभवौ ।
यच्च किंचित्तथाभूतं ननु दैवस्य कर्म तत् ॥ 22 ॥
ऋषयोऽप्युग्रतपसो दैवेनाभिप्रपीडिताः ।
उत्सृज्य नियमांस्तीव्रान्भ्रंश्यन्ते काममन्युभिः ॥ 23 ॥
असंकल्पितमेवेह यदकस्मात्प्रवर्तते ।
निवर्त्यारम्भमारब्धं ननु दैवस्य कर्म तत् ॥ 24 ॥

---

किंचित्- ஒன்றும், न दृश्यते- காணப்படுகிறதில்லையோ, दैवेन- அந்த தெய்வத்தோடு. कः चित् पुमान्- எந்த மனிதன், योद्धुं- சண்டைபோடுவதற்கு, उत्सहते- ஸமர்த்தனாகிறான்.

22. (ப-ரை) सुखःदुःखे- ஸுகமும், துக்கமும், भयक्रोधौ- பயமும், கோபமும், लाभालाभौ- லாபமும் நஷ்டமும், भव अभवौ- உத்பத்தியும் விநாசமும், यच्च किंचित्- எந்த வஸ்துவானது, तथाभूतं- காரணமின்னதென்று அறியப்படாமலிருக்கிறதோ, तत- அந்த கார்யமும், दैवस्य- தெய்வத்தினுடைய, कर्म ननु- கார்யமன்றோ.

23. (ப-ரை) उग्रतपसः உக்ரமான தபஸைச் செய்கின்ற, ऋषयः अपि- விச்வாமித்ரர் முதலான ரிஷிகளும், दैवेन- தெய்வத்தினால், अभिप्रपीडिताः- மிகவும் பீடிக்கப்பட்டவர்களாய்க்கொண்டு, काममन्युभिः- காமங்களாலும், கோபங்களாலும், तीव्रान- மிகவும் த்ருடமான, नियमान्- வ்ரதம் முதலாகிய நியமங்களை, उत्सृज्य- விட்டுவிட்டு, भ्रश्यन्ते- (தபஸ்ஸிலிருந்து) நழுவிவிடுகிறார்கள்.

24. (ப-ரை) इह- இந்த லோகத்தில், आरब्धं- ஆரம்பிக்கப்பட்ட, आरम्भं- ஒரு கார்யத்தை, निवर्त्य- தள்ளிவிட்டு, असंकल्पितं एव- நம்மால் நினைக்காததான, यत्- யாதொரு கார்யம், अकस्मात्- திடீரென்று, प्रवर्तते- உண்டாகிறதோ, तत्- அதுவும், दैवस्य- தெய்வத்தினுடைய, कर्म ननु- கார்மமல்லவா.

---

தினால் அதாவது பலத்தினால் தெய்வமிருக்கிறதென்று அறிந்துகொள்ளலாமே தவிர தெய்வத்தை அறியவேறு உபாயமில்லை அப்படிப்பட்ட தெய்வத்துடன் சண்டைபோட யாரால முடியும.

22. (பொ-ரை) ஸுகதுக்கங்களும், பயமும் கோபமும், லாபநஷ்டங்களும் உத்பத்தி விநாசமும் இன்னும் இதுதவிர காரணமின்னதென்று அறியமுடியாதது என்ன உண்டோ அதுவும் தெய்வத்தினுடைய கார்யமன்றோ.

(இங்கு பயசப்தத்தினால், கோபத்திற்கு எதிர்த்தட்டான சாந்தியைச் சொல்லுகிறது.)

23. (பொ-ரை) கொடிய தபஸ்ஸை செய்கின்ற விச்வாமித்ரர் முதலான மஹரிஷிகள் கூட தெய்வத்தினால் மிகவும் பீடிக்கப்பட்டு த்ருடமான வ்ரதம் உபவாஸம் முதலாகிய நியமங்களை விட்டுவிட்டு, காமக்ரோதங்களினால் தபஸ்ஸிலிருந்து நழுவி விடுகிறார்கள.

24. (பொ-ரை) இவ்வுலகத்தில் ஒருவன் ஆரம்பித்த ஒரு கார்யத்தை தள்ளி

एतया तत्त्वया बुद्ध्या संस्तभ्यात्मानमात्मना ।
व्याहतेऽप्यभिषेके मे परितापो न विद्यते ॥ 25 ॥
तस्मादपरितापः संस्त्वमप्यनुविधाय माम् ।
प्रतिसंहारय क्षिप्रमाभिषेचनिकीं क्रियाम् ॥ 26 ॥
एभिरेव घटैः सर्वैरभिषेचनसंभृतैः
मम लक्ष्मण तापस्ये व्रतस्नानं भविष्यति ॥ 27 ॥

25. (ப-ரை) एतया- இந்த, तत्त्वया बुद्ध्या- உண்மையான புத்தியினால், आत्मानं- மனதை, आत्मना- தானாகவே, संस्तभ्य- அடக்கிக்கொண்டு, (स्थितस्य-இருக்கின்ற), मे- எனக்கு, अभिषेके- பட்டாபிஷேகமானது, व्याहते अपि- நிறுத்தப்பட்டபோதிலும், परिताप:- வருத்தமானது, न विद्यते- இல்லை.

26. (ப-ரை) तस्मात्- ஆகையால், त्वं अपि- நீயும், माम्- என்னை- अनुविधाय-அநுஸரித்து, अपरितापः सन्- மனவருத்தமில்லாதவனுய்க்கொண்டு, अभिपचनिकी- பட்டாபிஷேக ஸம்பந்தமான, क्रियाम्- அலங்காரம் செய்து கொள்ளுவதை, क्षिप्र- சீக்ரமாக, प्रतिसहारय- நிறுத்திவிடு.

27. (ப-ரை) हे लक्ष्मण- லக்ஷ்மணனே! अभिषेचनसंभृतैः- பட்டாபிஷேகத்திற்காக சேகரிக்கப்பட்டிருக்கிற, एभि:- இந்த, सर्वैः घटैः एव- எல்லாதீர்த்த குடங்களாலுமே, मम- என்னுடைய, तापस्ये- தபஸ்வியாயிருப்பதற்குறிய கார்யத்தில், व्रतस्नानं- வ்ரதத்திற்கு ஆரம்பத்தில் செய்யவேண்டிய ஸ்நானமானது, भविष्यति- ஆகப்போகின்றது.

விட்டு, நாம் நினைக்காமலேயிருக்கிற வேறொரு கார்யம் திடீரென்று நேர்ந்துவிடுகிறது, அதுவும் தெய்வத்தினுடைய செயல்தான்.

25. (பொ-ரை) இவ்விதம் தத்வஜ்ஞானத்தினால் நானாகவே மனதை அடக்கிக்கொண்டு விட்டபடியால் பட்டாபிஷேகம் நின்றுவிட்டதைப்பற்றி கொஞ்சமேனும் எனக்கு மனவருத்தமில்லை.

26. (பொ-ரை) தத்வத்தின் நிலைமை இவ்விதமிருக்கிறபடியால் நீயும் என்னை அநுஸரித்து மனவருத்தமில்லாமல் பட்டாபிஷேகத்திற்காக ஏற்பட்ட அலங்காரம் முதலியவைகளை உடனே நிறுத்திவிடு.

27. (பொ-ரை) லக்ஷ்மணா! என் பட்டாபிஷேகத்திற்காகக் கொண்டுவந்து சேர்க்கப்பட்டிருக்கிற இந்த தீர்த்த குடங்கள் எல்லாவற்றாலுமே, நான் வனத்தில் ரிஷியாக வஸிக்கவேண்டியதற்குரிய கார்யத்தில் வ்ரதஸ்நானம் நடக்கப்போகின்றது

अथवा किं ममै व नेन राजद्रव्यमतेन तु ।
उद्धृतं मे स्वयं तोयं व्रतादेशं करिष्यति ॥ 28 ॥

मा च लक्ष्मण संतापं कार्षीर्लक्ष्म्या विपर्यये ।
राज्यं वा वनवासो वा वनवासो महोदयः ॥ 29 ॥

28. (ப-ரை) अथवा- அல்லது, राजद्रव्यमतेन- ராஜாவின் ஸொத்தாக ஒப்புக்கொள்ளப்பட்ட, एतेन- இந்த தீர்த்தத்தினால், मम किं- எனக்கு என்ன, (ஆகவேண்டியது,) स्वयं- நானாகவே, उद्धृतं- எடுக்கப்பட்ட, तोयं- தீர்த்தமானது, मे- எனக்கு, व्रतादेशं- வ்ரதத்தின் அதிகாரத்தை, करिष्यति- செய்யப்போகிறது.

29. (ப-ரை) हे लक्ष्मण- லக்ஷ்மணனே! लक्ष्म्याः विपर्यये- ராஜ்ய லக்ஷ்மி கைதவறின விஷயத்தில், सन्तापं- மனவருத்தத்தை, मा च कार्षीः- நீ அடையவேண்டாம், राज्यं वा- ராஜ்யமோ, वनवासो वा- வனவாஸமோ, (उभौ अपि तुल्यौ- இரண்டும் ஸமானந்தான். (विचार्यमाणे- ஆலோசிக்குங்காலத்தில்,) वनवासः- வனவாஸமே, महोदयः- விசேஷமான பயனுள்ளது.

28. (பொ-ரை) ராஜ்யத்தை விட்டுப்போகின்ற எனக்கு ராஜத்ரவ்யமான இந்தத்தீர்த்தந்தான் எதற்காகவேண்டும், இந்த தீர்த்தத்தை எடுத்து வனவாஸத்திற்காக நான் வ்ரதஸ்நானம் செய்யும் பக்ஷத்தில் ராஜ்ய பட்டாபிஷேகத்திற்காக மங்களஸ்நானம் செய்கிறேனென்று கைகேயியின் மனதில் சங்கையுண்டாகும், ஆகையால் இந்த தீர்த்தமே எனக்கு வேண்டாம், நான் என் கையாலெடுத்த தீர்த்தத்தினாலேயே வ்ரதஸ்நானம் செய்கிறேன்.

28. (பொ-ரை) அப்பா லக்ஷ்மணா! கிடைத்த ராஜ்யம் தவறிவிட்டதே என்று கொஞ்சமேனும் மனதில் வருத்தப்படாதே, நமக்கு ராஜ்யமும் வனவாஸமும் இரண்டும் துல்யம் தான், ஆனால் நன்றாய் ஆலோசித்துப்பார்க்குங்கால் வனவாஸமே மேலானது, ஏனென்றால் ராஜ்யத்திலிருந்து ஸமஸ்த ஜனங்களையும் அவரவர்களுக்கு வேண்டிய கார்யங்களைச்செய்துகொடுத்து ரக்ஷிக்கிற ச்ரமம் வனவாஸத்தில் இல்லாமையாலும், அபூர்வமான வஸ்துக்களைப்பார்த்து புதிதாய் ஒரு ஆனந்தமேற்படுகிறபடியாலும் வனவாஸமே மேலானது.

न लक्ष्मणास्मिन्खलु कर्मविघ्ने माता यवीयस्यतिशङ्कनीया ।
दैवाभिपन्ना हि वदत्यनिष्टं जानासि दैवं च तथाप्रभावम् ॥ 30 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे

द्वाविंशः सर्गः ॥ 22 ॥

---

30. (ப-ரை) हे लक्ष्मण- லக்ஷ்மணனே, अस्मिन् कर्मविघ्ने- இந்தக்கார்யத்திற்குத் தடை ஏற்பட்ட விஷயத்தில், यवीयसी माता- இளையதாயான கைகேயியானவள், न अतिशङ्कनीया खलु- உன்னால் ஸம்சயிக்கக்கூடியவளன்று, हि- ஏனென்றால், दैवाभिपन्ना- தெய்வத்தின் வசப்பட்டவளாய், अनिष्टं- நமக்கு அநிஷ்டமான கார்யத்தை, वदति- சொல்லுகிறாள், दैवं च- தெய்வத்தையும், तथाप्रभावम्- அப்படிப்பட்ட மஹிமையுள்ளதாக, जानासि- நீயுமறிந்து கொண்டிருக்கிறாய்.

30. (பொ-ரை) அப்பா லக்ஷ்மணா! நம் பட்டாபிஷேகத்திற்கு விக்னம் இவளால் ஏற்பட்டதென்று நம் இளையமாதாவான கைகேயியினிடத்தில் நீ ஸம்சயப்படவேண்டாம். தெய்வத்திற்கு வசமாயிருந்தன்றோ அவள் இவ்விதம் அநிஷ்டமான வார்த்தைகளைச் சொல்லுகிறாள், அந்த தெய்வத்தின் ஸாமர்த்யமோ ஒருவராலும் தடுக்க முடியாததென்று நீயும் நன்றாய் தெரிந்துகொண்டிருக்கிறாய்.

---

त्रयोविंशः सर्गः ॥ 23 ॥

इति ब्रुवति रामे तु लक्ष्मणोऽधः शिरा मुहुः ।
श्रुत्वा मध्यं जगामेव मनसा दुःखहर्षयोः ॥ 1 ॥

1. (ப-ரை) इति- இப்படி, रामे- ஸ்ரீராமன், मुहुः- அடிக்கடி, ब्रुवति सति- சொல்லுகின்றவளவில், लक्ष्मणः- லக்ஷ்மணன், अधः शिराः सन्- தலைகுனிந்தவராய்க்கொண்டு, दुःखहर्षयोः- துக்கத்தினுடையவும் ஸந்தோஷத்தினுடையவும், मध्यं- நடுவை, मनसा- மனதினால், जगाम इव- அடைந்தார் போல.

1. (பொ-ரை) இவ்விதம் ஸ்ரீராமன் அடிக்கடி சொல்லுங்காலத்தில் லக்ஷ்மணன் கேட்டு தனக்கு இவ்விஷயம் ஸம்மதமில்லை என்பதைத் தெரிவிப்பதற்காக தலை குனிந்துகொண்டு ஸ்ரீராமன் வனம் போகிறானென்கிற துக்கத்தையும், தர்மத்தைக்கைவிடாமல் நிற்கிறானென்கிற ஸந்தோஷத்தையும் மனதிலடைந்தார்.

तदा तु बद्ध्वा भ्रुकुटीं भ्रुवोर्मध्ये नरर्षभः ।
निशश्वास महासर्पो बिलस्थ इव रोषितः ॥ 2 ॥
तस्य दुष्प्रतिवीक्षं तद्भ्रुकुटीसहितं तदा ।
बभौ क्रुद्धस्य सिंहस्य मुखस्य सदृशं मुखम् ॥ 3 ॥
अग्रहस्तं विधून्वंस्तु हस्तीहस्तमिवात्मनः ।
तिर्यगूर्ध्वं शरीरे च पातयित्वा शिरोधराम् ॥
अग्राक्ष्णा वीक्षमाणस्तु तिर्यग्भ्रातरमब्रवीत् ॥ 4 ॥

2. (ப-ரை) नरर्षभः- புருஷோத்தமனான அந்த லக்ஷ்மணன், तदा तु- அப்பொழுது, भ्रुवोः- புருவங்களுடைய, मध्ये- நடுவில், भ्रुकुटीं- நெரித்தலை, बद्ध्वा- செய்து, बिलस्थः- பெட்டியிலிருக்கிற, रोषितः- கோபமுள்ளதான, महासर्पः इव- பெரிய ஸர்ப்பம் போல், निशश्वास- பெருமூச்செறிந்தார்.

3. (பரை) तदा- அப்பொழுது, भ्रुकुटीसहित- புருவநெரித்தலோடுகூடியும், दुष्प्रतिवीक्ष- பார்க்க முடியாமலுமிருக்கிற, तस्य- அந்த லக்ஷ்மணனுடைய, तत् मुखम्-அந்த முகமானது, क्रुद्धस्य- கோபமுள்ள, सिंहस्य- ஸிம்மத்தினுடைய, मुखस्य- முகத்திற்கு, सदृशं- ஸமானமாக, बभौ- விளங்கினது.

4. (ப-ரை) हस्ती- யானையானது, आत्मनः- தன்னுடைய, हस्त इव- துதிக்கையை உதறுவதுபோல், अग्रहस्तं- தன்னுடைய நுனிக்கையை, विधून्वन् तु- உதறிக்கொண்டு, शिरोधराम्- கழுத்தை, तिर्यक्-குறுக்காகவும், ऊर्ध्वं- மேலேயும், शरीरे- சரீரத்தினுட, (அதாவது மார்பிலும்,) पातयित्वा च- திருப்பிக்கொண்டு, अग्राक्ष्णा- கடைக்கண்ணால், तिर्यक्- குறுக்காக, वीक्षमाणः तु- பார்த்துக்கொண்டும், भ्रातरम्- ப்ராதாவான ஸ்ரீராமனைப்பார்த்து, अब्रवीत्- சொன்னார்.

2. (பொ-ரை) அப்பொழுது புருஷோத்தமனான லக்ஷ்மணன் நடுநெற்றியில் கோபத்தினால் புருவ நெரித்தலுடன் பெட்டிக்குள் அடைக்கப்பட்ட மிகவும் கோபமுள்ள பெரிய ஸர்ப்பம்போல் பெருமூச்செறிந்தார்.

3. (பொ-ரை) அப்பொழுது புருவ நெரித்தலோடு கூடியும் அதனால் பார்க்கமுடியாமலிருக்கிற அந்த லக்ஷ்மணனுடைய முகமானது கோபமுள்ள ஸிம்மத்தின் முகம்போல் ப்ரகாசித்தது.

4. (பொ-ரை) யானையானது தன் துதிக்கையை உதறுவதுபோல் லக்ஷ்மணன் தன் நுனிக்கையை உதறிக்கொண்டு குறுக்காகவும், கீழும், மேலுமாக தன் கழுத்தை உதறிக்கொண்டும் கடைக்கண்ணினால் குறுக்காகப் பார்த்துக்கொண்டும், ப்ராதாவான ஸ்ரீராமனைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

अस्थाने सम्भ्रमो यस्य जातो वै सुमहानयम् ।
धर्मदोषप्रसङ्गेन लोकस्यानतिशङ्कया ॥ 5 ॥
कथं ह्येतदसंभ्रान्तस्त्वद्विधो वक्तुमर्हति ।
यथा दैवमशौण्डीरं शौण्डीर क्षत्रियर्षभ ॥ 6 ॥
किं नाम कृपणं दैवमशक्तमभिशंससि ।
पापयोस्ते कथं नाम तयोः शङ्का न विद्यते ॥ 7 ॥

5. (ப-ரை) धर्मदोषप्रसङ्गेन- தர்மத்திற்கு ஹானி நேர்ந்துவிடும என்பதினுலும், लोकस्य अनतिशङ्कया- உலகத்தார் நம்மிடம் ஸந்தேஹப்படாமலிருக்கவேண்டும் என்பதினுலும், यस्य- யாதொரு உமக்கு, जातः- உண்டாயிருக்கிற, अयं- இந்த, सुमहान्- மிகவும் பெரிதான, सम्भ्रमः- பதற்றமானது, अस्थाने वै- உசிதமேயன்று.

6. (ப-ரை) हे शौण्डीर- மிகவும ஸாமர்த்யமுடையவரே, क्षत्रियर्षभ- க்ஷத்ரியர்களுக்குள் சிரேஷ்டரானவரே, अशौण्डीरं- ஸாமர்த்ய மில்லாத, एतत् दैवं- இந்த தெய்வத்தை, यथा- நீர் எப்படி, (ஸாமர்த்ய முள்ளதாகச் சொல்லுகிறீரோ,) एवं- இவ்விதம் असम्भ्रान्तः- ப்ரமமில்லாத, त्वद्विधः- உம்மைப்போன்றவன், कथ हि- எப்படி, वक्तु अर्हति- சொல்லத்தகுகிறுன்.

7. (ப-ரை) कृपणं- தீனமாயும், अशक्त- சக்தியற்றதுமான, दैवं- தெய்வத்தை, किं नाम- எதற்காக, अभिशंससि-ஸ்தோத்ரம் பண்ணுகிறீர், पापयोः- மிகவும் பாபிகளான तयोः- அந்த கைகேயி, தசரதர்கள் விஷயத்தில், ते- உமக்கு, शङ्का- (பாபிகள் என்கிற) எண்ணமானது, कथ नाम- ஏன், न विद्यते- உண்டாகவில்லை.

---

5. (பொ-ரை) பித்ரு வசன பரிபாலனமென்கிற தர்மத்திற்கு ஹானி நேர்ந்துவிடுமென்றும் பிதாவினுடைய வார்த்தையைக் கேளாதவன் எவ்விதம் நம்மைக் காப்பாற்றுவன் என்று ஜனங்களுக்கு சங்கை உண்டாகாமலிருக்கவேண்டுமென்றும் உமக்கு இப்பொழுது ஏற்பட்ட இந்தப்பெரிய பதற்றமானது மிகவும உசிதமேயன்று.

6. (பொ-ரை) மிகவும் ஸாமர்த்தியமுள்ள க்ஷத்ரியோத்தமனே! சக்தியில்லாத இந்தத் தெய்வத்தை சக்தியுடையதாக நீர்சொல்லுகிறதுபோல் உம்மைப்போல் ப்ரமமில்லாத ஒருவனும எப்படி சொல்லத்துணிவன்.

இதனுல் சக்தியில்லாதவனும் புத்தி ப்ரமித்தவனுமான புருஷன்தான் தெய்வத்தை அநுஸரிப்பன். சூரனும ப்ரமமில்லாதவனுமானவன் ஒருநாளும தெய்வததை அநுஸரிக்கமாட்டான என்றபடி.

7. (பொ-ரை) புத்தியில்லாதவனும், சக்தியில்லாதவனும், தெய்வத்தைப் பற்றவேண்டுமென்று ப்ருஹஸ்பதி சொல்லியபடி, சக்தியில்லாதவன் பிடிக்கககூடிய தீனமாயும், சக்தியற்றதுமான அந்தத்தெய்வத்தை என் நீர் பலவிதமாகப் புகழு

सन्ति धर्मोपधाः श्लक्ष्णा धर्मात्मन्किं न बुध्यसे ।
तयोः सुचरितं स्वार्थं शाठ्यात्परिजिहीर्षतोः ॥ 8 ॥
यदि नैवं व्यवसितं स्याद्धि प्रागेव राघव ।
तयोः प्रागेव दत्तश्च स्याद्वरः प्रकृतश्च सः ॥ 9 ॥

8. (ப-ரை) धर्मात्मन्- தர்ம புத்தியுடையவரே, धर्मोपधाः- தர்மத்தை வ்யாஜமாகக்கொண்டவர்களாயும், श्लक्ष्णाः- மிகவும் கெட்டிக்காரர்களும், सन्ति-(உலகத்தில்) இருக்கிறார்கள், शाठ्यात्- மனதில் கெட்ட எண்ணம் வைத்துக்கொண்டு, स्वार्थं- நம்முடைய கார்யமான பட்டாபிஷேகத்தை, परिजिहीर्षतोः- நிறுத்த எண்ணமுள்ளவர்களான, तयोः- அந்த கைகேயினுடையவும், தசரதனுடையவும், सुचरितं- நல்ல ஆலோசனையை. किं न बुध्यसे- நீர் ஏன் அறிந்துகொள்ளவில்லை.

9. (ப-ரை) हे राघव- ஹே ரகுகுலத்து மன்னவனே! प्राक् एव- முன்னமேயே. एवं- இவ்விதமாக, तयोः- அவ்விருவர்களுக்கும், व्यवसितं- தீர்மானமானது, यदि न स्यात्- இல்லாமலிருக்கும் பக்ஷத்தில், प्रकृतः- இப்போ ப்ரக்ருதமான, सः वरः च- அந்தவரமும், प्राक् एव- முன்னமேயே, दत्तः स्यात्- கொடுக்கப்பட்டிருக்கலாம்.

---

கின்றீர். மஹாபாபிகளான அந்தக் கைகேயி, தசரதர் விஷயத்தில் அவர்கள் பாபிகள என்கிற எண்ணமானது உமக்கு ஏன் உண்டாகவில்லை.

8. (பொ-ரை) தர்மாத்மாவான அண்ணா! லோகத்தில் தர்மத்தை வ்யாஜமாகக்கொண்டு, தன்னுடைய கெட்ட அபிப்ராயத்தை மறைத்துக்கொள்ளும்படியான சதுரர்கள் (புத்திமான்கள்) அநேகம் பேர்களிருக்கின்றார்கள். அதில் சேர்ந்தவர்கள் இவ்விருவர்கள்- மனதில் கெட்ட எண்ணம் வைத்துக்கொண்டு உமக்கு ஏற்பட்ட பட்டாபிஷேகத்தை நிறுத்தவேண்டுமென்று எண்ணியன்றோ, அந்தகைகேயி தசரதர் இருவர்களும தனித்து ஆலோசனை செய்துகொண்டிருக்கிறார்கள். அதை நீர் ஏன தெரிந்துகொள்ளவில்லை:—

அதாவது, பரதனுக்கு அவசயம் ராஜ்ய பட்டாபிஷேகம் செய்யவேண்டும். ஆனால் ராமன் ஜ்யேஷ்டனானபடியால் அவனுக்கு பட்டாபிஷேகம் செய்ய ஆரம்பிக்கிறேன் அந்த ஸமயத்தில் நீ என்னைப்பார்த்து முன் எனக்குக்கொடுத்திருக்கிற இரண்டு வரத்தையும் கொடும என்று கேட்கவேண்டும். அதில் ஒருவரத்தினால் ராமனைசகாட்டிற்குத் துரத்தவேண்டுமென்றும், மற்றொருவரத்தினால பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்விக்கவேண்டுமென்றும் நீ என்னை நிர்ப்பந்திக்கவேண்டும் என்று கைகேயியும் தசரதனும் ஒன்றுபேசிக்கொண்டிருக்கிறார்கள்.

9. (பொ-ரை) அப்படியில்லாத பக்ஷத்தில் அந்தக்கைகேயி முன்னமே தனக்குக்கிடைத்த அந்த இரண்டு வரங்களையும் இதுவரையில் ஏன் கேட்டிருக்கக்கூடாது. அவள் கேட்காமலிருந்தாலும் ஸத்ய ப்ரதிக்ஞரான அரசன்தான் ஏன் முன்னமே அதற்குப்பரிஹாரம் செய்திருக்கக்கூடாது. இதுகளெல்லாம் ஆலோசித்தன்றோ நான் அவர்களைப்பாபிகளென்றும், கபடிகளென்றும் சொல்லுகிறேன்.

लोकविद्विष्टमारब्धं त्वदन्यस्याभिषेचनम् ।
नोत्सहे सहितुं वीर तत्र मे क्षन्तुमर्हसि ॥ 10 ॥
येनेयमागता द्वैधं तव बुद्धिर्महामते ।
स हि धर्मो मम द्वेष्यः प्रसङ्गाद्यस्य मुह्यसि ॥ 11 ॥
कथं त्वं कर्मणा शक्तः कैकेयीवशवर्तिनः ।
करिष्यसि पितुर्वाक्यमधर्मिष्ठं विगर्हितम् ॥ 12 ॥

---

10. (ப-ரை) हे वीर- சூரனே! लोकविद्विष्टं- (यथा तथा)- லோகவிருத்தமாக இருக்கும்படி, आरब्धं- (இப்பொழுது) ஆரம்பிக்கப்பட்டிருக்கிற, त्वदन्यस्य- உம்மைத் தவிர மற்றவனுடைய, अभिषेचनम्- பட்டாபிஷேகத்தை, सहितु- பொருப்பதற்கு, न उत्सहे- ஸமர்த்தனாகமாட்டேன், तत्र- அந்த விஷயத்தில், (செய்யப்போகிற), मे- என்னுடைய, (கார்யத்தை), क्षन्तुं-अर्हसि- பொறுத்துக்கொள்ளத்தகுந்தவர்.

11. (ப-ரை) इयं- இந்த, ते बुद्धिः- உம்முடைய புத்தியானது, येन- (பித்ரு வசனபரிபாலனமென்கிற) எந்த தர்மத்தினால், द्वैधं- இரண்டு விதத்தை, आगता- அடைந்திருக்கிறதோ, यस्य- யாதொரு தர்மத்தினுடைய, प्रसङ्गात्- ப்ரஸ்தாபத்தினால், मुह्यसि- மயங்குகின்றீரோ, सः धर्मः- அந்த தர்மமானது, मम- எனக்கு, द्वेष्यः- த்வேஷிக்கத்தகுந்தது.

12. (ப-ரை) कर्मणा- கார்யத்தினால், शक्तः त्वं- சக்தியுள்ளவரான நீர், कैकेयी- वशवर्तिनः- கைகேயியிக்கு வசப்பட்டிருக்கிற, पितुः- பிதாவினுடைய, अधर्मिष्ठं- தர்ம விருத்தமான, विगर्हितम्- நிந்திககப்பட்டுமிருக்கிற, वाक्यं- வார்த்தையை, कथ- ஏன், करिष्यसि- செய்யப்போகிறீர்.

---

10. (பொ-ரை) சூரனான அண்ணா! குணங்களாலும், பிறப்பினாலும் ஜேஷ்டரான உம்மை விட்டு கநிஷ்டனான மற்றொருவனுக்கு பட்டாபிஷேகம் செய்வது உலகத்திற்கே விருத்தம். அதை நான் எப்படி பொருத்துக்கொண்டிருப்பேன். அந்த விஷயத்தில் எனக்குத் தோன்றினதை செய்யப்போகிறேன். அதை நீர் பொறுத்துக்கொண்டிருக்கவேண்டும்.

11. (பொ-ரை) பட்டாபிஷேகம் செய்துகொள்ள நிச்சயித்த உம்முடைய புத்தியானது, பித்ருவசன பரிபாலனமென்கிற எந்த தர்மத்தினால், வனவாஸம செய்யவேணுமென்று மாறிவிட்டதோ, யாதொரு தர்மத்தை அநுஷ்டிக்காத பக்ஷத்தில் நமக்குப்பாபம் உண்டாகுமென்று நீர் ப்ரமிக்கின்றீரோ அந்த தர்மத்தில் எனக்கு த்வேஷமுண்டாயிற்று.

12. (பொ-ரை) அண்ணா! உமக்கு ப்ரமமில்லாத பக்ஷத்தில் கார்யத்தினால் பரிஹாரம் செய்து கொள்ள சக்தியுள்ளவராயிருந்தும், கைகேயின் வசப்பட்ட பிதாவினுடைய அதர்மிஷ்டமாயும், பழிக்கப்பட்டதுமான வார்த்தையை ஏன் செய்யப் போகிறீர்.

यद्ययं किल्बिषाद्भेदः कृतोप्येवं न गृह्यते ।
जायते तत्र मे दुःखं धर्मसङ्गश्च गर्हितः ॥ 13 ॥
मनसापि कथं कामं कुर्यास्त्वं कामवृत्तयोः ।
तयोस्त्वहितयोर्नित्यं शत्र्वोः पित्रभिधानयोः ॥ 14 ॥
यद्यपि प्रतिपत्तिस्ते दैवी चापि तयोर्मतम् ।
तथाप्युपेक्षणीयं ते न मे तदपि रोचते ॥ 15 ॥

13. (ப-ரை) अय भेदः- இந்த பட்டாபிஷேக விக்னமானது, किल्बिषात्- கபடத்தினால், कृतः अपि- அவ்விருவர்களால் செய்யப்பட்டிருந்தும், एवं- இவ்விதமென்று, न गृह्यते यदि- உம்மால் அறியப்படாதபோனால், तत्र- அவ்விஷயத்தில், मे- எனக்கு, दुःखं- மனவருத்தமானது, जायते- உண்டாகிறது, धर्म सङ्गः च- இப்படிப்பட்ட தர்மத்தில் பற்றுதலும், गर्हितः- நிந்திக்கப்பட்டது.

14. (ப-ரை) कामवृत्तयोः- காம வ்யாபாரமுள்ளவர்களாயும், नित्यं- எப்பொழுதும், अहितयोः- நமக்கு ப்ரதிகூலர்களாயும், पित्रभिधानयोः- மாதாபிதாக்களென்று பேர்கொண்ட, तयोः शत्र्वोः- அந்த சத்ருக்களுடைய, कामं- இஷ்டத்தை, त्वं- நீர், कथं- எப்படி, मनसापि- மனதினாலும், कुर्याः- செய்வீர்.

15. (ப-ரை) तयोः- அந்த மாதாபிதாக்களுடைய, प्रतिपत्तिः- பட்டாபிஷேகத்தைத்தடுத்த இந்த எண்ணமானது, दैवी च अपि- தெய்வத்தினால் ஏற்பட்டது, (इति- என்று), ते- உமக்கு, मतम् यद्यपि- அபிப்ராயமாகவே இருக்கலாம், तथा अपि- ஆகிலும், ते- உம்மால், तत्- அந்த விஷயம், उपेक्षणीय- உபேக்ஷிக்கத்தகுந்தது, तदपि- அந்த தெய்வமும, मे- எனக்கு, न रोचते- பிடிக்கவில்லை.

13. (பொ-ரை) உமக்கு ஏற்பட்ட பட்டாபிஷேக விக்னமானது கைகேயி, தசரதர் இவர்களுடைய கபடத்தால் நேர்ந்திருக்கிறது, என்கிற விஷயத்தை நீர் தெரிந்துகொள்ளவில்லையென்று அவ்விஷயத்தில் எனக்கு மிகவும் மனவருத்தமுண்டாகிறது. அதுவும் தவிர இப்படிப்பட்ட தர்மத்தை நாம் அவசியமாகச் செய்யவேணுமென்கிற ஆசையும் விருத்தமானது.

14. (பொ-ரை) கேவலம் காமுகர்களாய் எப்பொழுதும் நம் விஷயத்தில் ப்ரதிகூலர்களாய், மாதாபிதாக்களென்று பெயர்கொண்ட அந்த சத்ருக்களின் இஷ்டத்தை மனதினாலும் நீர் எப்படிச்செய்யலாம.

15. (பொ-ரை) நம் பட்டாபிஷேகத்தை நிறுத்தவேணுமென்று, மாதாபிதாக்களுக்கேற்பட்ட இந்த புத்தியானது. தெய்வஸங்கல்பத்தினால் நேர்ந்துவிட்டது என்று நீர் தெரிந்துகொண்டிருந்தாலும் அதை உபேக்ஷிக்கவேண்டியது. நீர் ஒப்புக்கொண்டிருக்கிற தெய்வமும் எனக்குப்பிடிக்கவில்லை.

विक्लबो वीर्यहीनो यः स दैवमनुवर्तते ।
वीराः सम्भावितात्मानो न दैवं पर्युपासते ॥ 16 ॥
दैवं पुरुषकारेण यः समर्थः प्रबाधितुम् ।
न दैवेन विपन्नार्थः पुरुषः सोऽवसीदति ॥ 17 ॥
द्रक्ष्यन्ति त्वद्य दैवस्य पौरुषं पुरुषस्य च ।
दैवमानुषयोरद्य व्यक्ता व्यक्तिर्भविष्यति ॥ 18 ॥

---

16. (ப-ரை) यः- யாதொருவன், विक्लबः- பயந்தவனுயும், वीर्यहीनः- சக்தியற்றவனுயும், (இருக்கின்றனே), सः- அவன், दैवं- தெய்வத்தை, अनुवर्तते- அநுஸரிக்கிறன். वीराः- சூரர்களாயும், सम्भावितात्मानः- மிகவும் த்ருடமான மனதுமுடையவர்களும், दैवं- தெய்வத்தை, न पर्युपासते- அடையமாட்டார்கள்.

17. (ப-ரை) पुरुषकारेण- ஆண்மைத்தனத்தினுல், दैवं- தெய்வத்தை, यः- யாதொருவன், प्रबाधितुम्- தடுப்பதற்கு, समर्थः- ஸமர்த்தனே, सः पुरुषः- அந்த புருஷன், दैवेन- தெய்வத்தினுல், विपन्नार्थः- கெடுக்கப்பட்ட கார்யத்தையுடையவனுய்க்கொண்டு, न अवसीदति- துக்கப்படுகிறதில்லை.

18. (ப-ரை) अद्य तु- இப்பொழுது, दैवस्य- தெய்வத்தினுடையவும், पुरुषस्य च- புருஷனுடையவும், पौरुषं- ஸாமர்த்யத்தை, द्रक्ष्यन्ति- (எல்லோரும்) பார்க்கப்போகிறார்கள், दैवमानुषयोः- தெய்வத்தினுடையவும், புருஷனுடையவும், व्यक्तिः- வித்யாஸமானது, अद्य- இப்பொழுது, व्यक्ता- ஸ்பஷ்டமாக, भविष्यति- ஆகப்போகிறது.

16. (பொ-ரை) பயந்தவனும், வீர்யமில்லாதவனும் தெய்வத்தை அநுஸரிப்பன். சூரர்களாய் த்ருடமான மனதுடையவர்கள் தெய்வத்தை அநுஸரிக்கமாட்டார்கள்.

17. (பொ-ரை) எந்த புருஷன் தன் பலத்தினுலே தெய்வத்தை அடக்க ஸமர்த்தனுகிறனே, அந்த புருஷன் தெய்வத்தினுல் தன்னுடைய கார்யம் கெட்டுப்போய் துக்கப்படமாட்டான்.

18. (பொ-ரை) தெய்வத்தினுடையவும், புருஷனுடையவும் ஸாமர்த்யத்தை இப்பொழுது எல்லோரும் பார்க்கப்போகிறார்கள். தெய்வமனுஷ்யர்களில் எது ப்ரபலம், எது துர்ப்பலம் என்பதும் இப்பொழுதுதான் ஸ்பஷ்டமாக ஆகப்போகிறது.

अद्य मत्पौरुषहतं दैवं द्रक्ष्यन्ति वै जनाः ।
यद्दैवादाहतं तेऽद्य दृष्टं राज्याभिषेचनम् ॥ 19 ॥
अत्यङ्कुशमिवोद्दामं गजं मदबलोद्धतम् ।
प्रधावितमहं दैवं पौरुषेण निवर्तये ॥ 20 ॥
लोकपालाः समस्तास्ते नाद्य रामाभिषेचनम् ।
न च कृत्स्नास्त्रयो लोका विहन्युः किं पुनः पिता ॥ 21 ॥

19. (ப-ரை) ते- உம்முடைய, राज्याभिषेचनम्- ராஜ்யபட்டாபிஷேகமானது, यद्दैवात्- எந்த தெய்வத்தினால், आहतं- தடைசெய்யப்பட்டதாக, अद्य- இப்பொழுது, दृष्टं- காணப்படுகிறதோ, तत् दैवं- அந்த தெய்வத்தை, अद्य- இப்பொழுது, मत्पौरुषहतं- என் ஸாமர்த்யத்தினால் அடிக்கப்பட்டதாக, जनाः- ஜனங்கள், द्रक्ष्यन्ति वै- பார்க்கவே போகிறார்கள்.

20. (ப-ரை) अत्यङ्कुशं- மாவெட்டியை மீறியும், उद्दामं- கட்டுத்தறியை முறித்தும், मदबलोद्धतम्- மதத்தினாலும், தேஹபலத்தினாலும் செருக்குக்கொண்டும், प्रधावितं- (ஒருவராலும் தடுக்க முடியாமல்) ஓடுகின்ற, गजं इव- யானையைப்போல், दैवं- தெய்வத்தை, अहं- நான், पौरुषेण- ஸாமர்த்யத்தினால், निवर्तये- திருப்பிவிடுகிறேன்.

21. (ப-ரை) हे राम- ஸ்ரீராமனே! ते- ப்ரஸித்தர்களான, समस्ताः- लोकपालाः- எல்லா லோகபாலர்களுமே, अद्य- இப்பொழுது, अभिषेचनम्- உம்முடைய பட்டாபிஷேகத்தை, न विहन्युः- கெடுக்க சக்தியுள்ளவர்களன்று, कृत्स्नाः- முழுமையான, त्रयः- लोकाः च- மூன்றுலோகங்களுமே, न विहन्युः- தடுக்க சக்தியுள்ளவைகளல்ல, पिता- பிதாவானவர், किं पुनः- தடுக்கமாட்டாரென்பது கேழ்ப்பானேன்.

19. (பொ-ரை) உம்முடைய பட்டாபிஷேகத்திற்கு எந்த தெய்வம் தடைசெய்ததோ அந்த தெய்வத்தை என் ஸாமர்த்யத்தினால் அடிக்கப்பட்டதாக ஜனங்களெல்லோரும் பார்க்கப்போகிறார்கள்.

20. (பொ-ரை) தெய்வமானது, மாவெட்டியை தள்ளிவிட்டு, கட்டுத்தறியை முறித்து மதத்தாலும், பலத்தாலும், செருக்கடைந்து ஒருவராலும் தடுக்கமுடியாமல் ஓடுகின்ற யானை போன்றது என்றல்லவோ உமதுடைய எண்ணம். அந்த தெய்வத்தை நான் இப்பொழுது என் ஸாமர்த்யத்தினால் தடுத்துவிடுகிறேன் பாரும்.

21. (பொ-ரை) ராமா! லோகபாலர்கள் எல்லாரும் ஒன்றுசேர்ந்தபோதிலும், மூன்றுலோகங்களும் ஒருவன்கூட மீதியில்லாமல் ஒன்றுசேர்ந்தபோதிலும், உம்முடைய பட்டாபிஷேகத்தைத்தடுக்க முடியாது, அப்படியிருக்க நம் பிதா ஒருவரால் என்ன முடியும்

यैर्विवासस्तवारण्ये मिथो राजन्समर्थितः ।
अरण्ये ते विवत्स्यन्ति चतुर्दश समास्तथा ॥ 22 ॥

अहं तदाशां छेत्स्यामि पितुस्तस्याश्च या तव ।
अभिषेकविघातेन पुत्रराज्याय वर्तते ॥ 23 ॥

मद्बलेन विरुद्धाय न स्याद्दैवबलं तथा ।
प्रभविष्यति दुःखाय यथोग्रं पौरुषं मम ॥ 24 ॥

22. (ப-ரை) राजन्- அரசனே! यैः- எவர்களால், मिथः- ரஹஸ்யமாக, तव- உம்முடைய, अरण्ये-विवासः- காட்டில் வாஸமானது, समर्थितः- ஆலோசித்து தீர்மானம் செய்யப்பட்டதோ, ते- அவர்கள், तथा- அப்படியே, चतुर्दश समाः- பதினான்கு வருஷகாலம், अरण्ये- வனத்தில், विवत्स्यन्ति- வஸிக்கப்போகிறார்கள்.

23. (ப-ரை) या- யாதொரு கைகேயி, तव- உம்முடைய, अभिषेकविघातेन- பட்டாபிஷேகம் நிறுத்துவதால், पुत्रराज्याय- புத்திரனுக்கு ராஜ்யத்தின்பொருட்டு, वर्तते- ப்ரவர்த்தித்திருக்கிறாளோ, तस्याः च- அவளுடையவும், पितुः- பிதாவினுடையவும், तदाशां- அந்தப்பேராசையை, अहं- நான், छेत्स्यामि- துலைத்துவிடுகிறேன்.

24. (ப-ரை) मत् बलेन- என்னுடைய பலத்தினால், विरुद्धाय- விரோதியான ஜனத்திற்கு, उग्रं- க்ரூரமான, मम- என்னுடைய, पौरुषं- ஸாமர்த்யமானது, यथा- எப்படி, दुःखाय- துக்கத்தின் பொருட்டு, प्रभविष्यति- ஸமர்த்தமாகிறதோ, तथा- அப்படி दैवबलं- தெய்வமானது, न स्यात्- (ஸுகத்தின்பொருட்டு) ஆகமாட்டாது.

22. (பொ-ரை) ஹே ராஜனே! எவர்கள் ஏகாந்தத்தில் உம்மைக்காட்டிற்குத் துறத்தவேணுமென்று ஆலோசித்து நிச்சயித்திருக்கிறார்களோ, அவர்களே உமக்குச் சொல்லியபடி அந்த பதினான்குவருஷம் வனவாஸம் செய்யப்போகிறார்கள்,

23. (பொ-ரை) உமக்கு பட்டாபிஷேகத்தை நிறுத்திவிட்டு புத்திரனுக்கு ராஜ்யம் கிடைக்கவேணுமென்றிருக்கிற அந்த கைகேயியின் ஆசையையும் பிதாவினுடைய ஆசையையும் நான் துலைத்துவிடுகிறேன.

24. (பொ-ரை) என்னுடைய பலத்தோடு விரோதம் செய்தவனுக்கு என்னுடைய ஸாமர்த்யம் எப்படி துக்கத்தை யுண்டுபண்ணுமோ அப்படி ஸுகத்தை யுண்டுபண்ண தெய்வபலத்தால் முடியாது.

ऊर्ध्वं वर्षसहस्रान्ते प्रजापाल्यमनन्तरम् ।
आर्यपुत्राः करिष्यन्ति वनवासं गते त्वयि ॥ 25 ॥
पूर्वं राजर्षिवृत्त्या हि वनवासो विधीयते ।
प्रजा निक्षिप्य पुत्रेषु पुत्रवत्परिपालने ॥ 26 ॥
स चेद्राजन्यनेकाग्रे राज्यविभ्रमशङ्कया ।
नैवमिच्छसि धर्मात्मन्राज्यं राम त्वमात्मनि ॥ 27 ॥
प्रतिजाने च ते वीर मा भूवं वीरलोकभाक् ।
राज्यं च तव रक्षेयमहं वेलेव सागरम् ॥ 28 ॥

25. (ப-ரை) ऊर्ध्वं- மேலே, वर्षसहस्रान्ते- அதாவது அநேகமாயிரம் வருஷங்களின்முடிவில், त्वयि- நீர், वनवासं गते सति- வனவாஸம் சென்றவளவில், अनन्तरं- பிறகு आर्यपुत्राः- அண்ணாவான உமமுடைய புத்திரர்கள், प्रजापाल्यं- ப்ரஜைகளின் ரக்ஷண கார்யத்தை, करिष्यन्ति- செய்யப்போகிறார்கள்.

26. (ப-ரை) पुत्रेषु- (உம்முடைய) புத்திரர்களிடத்திலும், प्रजाः- (ராஜ்யத்து) ஜனங்களை, पुत्रवत्- ஔரஸ புத்திரனைப்போல், परिपालने- ரக்ஷிப்பதற்காக, निक्षिप्य- ஒப்புவித்துவிட்டு, पूर्वराजर्षिवृत्त्या- முன்னோர்களான ராஜரிஷிகளின் ஆசாரப்படி, वनवासः- வனவாஸமானது, विधीयते- விதிக்கப்பட்டிருக்கிறது.

27—28. (ப-ரை) हे धर्मात्मन्- தர்மசிந்தையுள்ளவரான, हे राम- ஸ்ரீராமனே! सः त्वं- அப்படிப்பட்ட நீ, राजनि- தசரதமஹாராஜன், एवं- இவ்விதமாக, अनेकाग्रे सति- சஞ்சல புத்தியுள்ளவராயிருக்குங்காலத்தில், राज्यविभ्रमशङ्कया- ராஜ்யம் பலவிதமாய் கெட்டுவிடுமென்கிற எண்ணத்தினால், आत्मनि- உமமிடத்தில், राज्यं- ராஜ்யத்தை, न इच्छसि चेत्- விரும்பாமற்போவீரேயானால, अहं- நான், तव राज्यं- உம்முடைய ராஜ்யத்தை, वेला- கரையானது, सागरम् इव- ஸமுத்ரத்தை ரக்ஷிப்பதுபோல், रक्षेयं- ரக்ஷிப்பேன், (नो चेत्- இல்லாத பக்ஷத்தில்), वीरलोकभाक्- வீரர்கள் அடையவேண்டிய லோகத்தை அடைகின்றவனாக, मा भूवम्- ஆகமாட்டேன், ते- உமக்கு, प्रतिजाने च- ப்ரதிஜ்ஞையும் செய்கிறேன்.

---

25. (பொ-ரை) அநேகமாயிரம வருஷம் நீர் ராஜ்ய பரிபாலனம் செய்து அதற்குமேல் வானப்ரஸ்த வ்ருத்தியாக நீர் வனவாஸம் போனபிறகு உமமுடைய குழந்தைகள் ராஜ்ய பரிபாலனம் செய்யப்போகிறார்கள்.

26. (பொ-ரை) அண்ணா! உம்முடைய ராஜ்யத்து ஜனங்களை புத்திரர்களைப்போல் பரிபாலனம் செய்வதற்காக உம்முடைய புத்திரர்களிடத்தில் ஒப்புவித்துவிட்டு முன்னோர்களான ராஜரிஷிகளின் அநுஷ்டானப்படியன்றோ வனவாஸம் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கிறது.

27—28. (பொ-ரை) மஹாராஜருக்கு புத்தி சஞ்சலமாயிருக்கிறபடியால்

मङ्गलैरभिषिञ्चस्व तत्र त्वं व्यापृतो भव ।
अहमेको महीपालानलं वारयितुं बलात् ॥ 29 ॥
न शोभार्थाविमौ बाहू न धनुर्भूषणाय मे ।
नासिराबन्धनार्थाय न शराः स्तम्भहेतवः ॥
अमित्रदमनार्थं मे सर्वमेतच्चतुष्टयम् ॥ 30 ॥
न चाहं कामयेऽत्यर्थं यः स्याच्छत्रुर्मतो मम ।
असिना तीक्ष्णधारेण विद्युच्चलितवर्चसा ॥
प्रगृहीतेन वै शत्रुं वज्रिणं वा न कल्पये ॥ 31 ॥

29. (ப-ரை) मङ्गलैः- மங்களதீர்த்தங்களினல், अभिषिञ्चस्व- நீர் பட்டாபிஷேகம் செய்துகொள்ளும், तत्र- அந்த கார்யத்தில், व्यापृतः- ப்ரயத்தனமுள்ளவராக, भव- இரும், अहं एकः- நான் ஒருவனே, महीपालान्- அரசர்களை, बलात्- (என்னுடைய) பலத்தினல், वारयितुं- தடுப்பதற்கு, अलं- சக்தியுள்ளவன்.

30. (ப-ரை) इमौ बाहू- (என்னுடைய) இந்த கைகள் இரண்டும், न शोभार्थौ- அழகுக்காக ஏற்பட்டவைகளன்று, धनुः- வில்லானது, मे- எனக்கு, भूषणाय- அலங்காரத்திற்காக, न- அன்று, असिः- கத்தி, आबन्धनार्थाय- நன்ருய் கட்டிக்கொள்ளுவதற்காக, न- அன்று, शराः- பாணங்கள், स्तम्भहेतवः- அம்புராபொதியில் வெருமனே வைப்பதற்காக, न- அன்று, मे- என்னுடைய, एतत् चतुष्टयम् सर्वं- இந்நான்கு முழுதும, अमित्रदमनार्थं- சத்ருக்களை அடக்குவதற்காக (ஏற்பட்டது).

31. (ப-ரை) यः- யாதொருவன், मम- எனக்கு, अत्यर्थं- மிகவும், शत्रुः- சத்ரு

---

ராஜ்யம் பலவிதமாக அழிந்துவிடுமென்று எண்ணி நீர் இந்த ராஜ்யத்தை ஒப்புக்கொள்ளாத பக்ஷத்தில் கரையானது ஸமுத்ரத்தை ரக்ஷிப்பதுபோல் உம்முடைய ராஜ்யத்தை நான் ரக்ஷிக்கிறேன். அப்படியில்லாதபக்ஷத்தில் வீரர்கள் அடையவேண்டிய லோகம் எனக்கு இல்லாமல் போகட்டும். இந்த விஷயத்தை நான் உம்மிடத்தில் ப்ரதிக்ஞை செய்து சொல்லுகிறேன்.

29. (பொ-ரை) ஆகையால் நீர் இந்த மங்கள தீர்த்தங்களினல் வஸிஷ்டாதிகளைக்கொண்டு பட்டாபிஷேகம் செய்துகொள்ளும். அதற்கு வேண்டிய கார்யங்களைச்செய்ய ப்ரயத்தனம செய்யவேண்டும். அதற்கு விரோதியாக வரும் அரசர்களை நான் என்னுடைய பலத்தினல் தடுக்க சக்தியுள்ளவன்.

30. (பொ-ரை) என்னுடைய இந்த இரண்டு கைகளும் அழகுக்காக ஏற்படவில்லை. இந்த வில்லும் அலங்காரத்திற்காக ஏற்படவில்லை. கத்தியும் ஒரு கார்யமுமில்லாமல் இடுப்பில் கட்டிக்கொள்வதற்காகவும் ஏற்பட்டதன்று. பாணங்களும அம்புராப்பொதியில் வைப்பதற்காகவும் ஏற்பட்டதன்று. மற்றெதற்காகவென்றல் இந்நான்கும் சத்ருக்களை அடக்குவதற்காகவே ஏற்பட்டது.

31. (பொ-ரை) நமக்கு சத்ருவென்று எவன் தோன்றுகிறனே அவன்உயி

खड्गनिष्पेषनिष्पिष्टैर्गहना दुश्चरा च मे ।
हस्त्यश्वनरहस्तोरुशिरोभिर्भविता मही ॥ 32 ॥
खड्गधाराहता मेऽद्य दीप्यमाना इवाद्रयः ।
पतिष्यन्ति द्विपा भूमौ मेघा इव सविद्युतः ॥ 33 ॥

---

வாக, मतः- எண்ணப்பட்டவனாக, स्यात्- ஆகிறானோ, (तं- அவனை), अहं- நான், न कामये- (உயிரோடிருக்க) விரும்பமாட்டேன், तीक्ष्णधारेण- கூர்மையான நுனியுடையதாயும், विद्युच्चलित वर्चसा- மின்னல்போல் மின்னுகிற காந்தியையுடையதாயும், प्रगृहीतेन- கையிற் பிடிக்கப்பட்ட, असिना- கத்தியினால், वज्रिणं वा- இந்திரனாயிருந்தாலும், शत्रुं- சத்ருவை, न कल्पये- (உலகத்தில்) வைக்கமாட்டேன்.

32. (ப-ரை) मही- பூமியானது, मे- என்னுடைய, खड्गनिष्पेषनिष्पिष्टैः- கத்தியின் வெட்டுதலால் பொடிபண்ணப்பட்ட, हस्त्यश्वनरहस्तोरुशिरोभिः- யானை, குதிரை, மனிதர் இவர்களுடைய கைகள், துடைகள், தலைகள் இவைகளால், गहना- நெருக்கமுள்ளதாய், दुश्चरा च- கால்வைத்து ஸஞ்சரிக்க முடியாததாக, भविता- ஆகப்போகிறது.

33. (ப-ரை) अद्य- இப்பொழுது, द्विपाः- (சத்ருக்களின்) யானைகள், मे- என்னுடைய, खड्गधाराहताः- கத்தியின் கூரான நுனிகளால் வெட்டப்பட்டு, दीप्यमानाः- ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற, अद्रयः इव- பர்வதங்கள்போலவும், सविद्युतः- மின்னல்களோடுகூடிய, मेघाः इव- மேகங்கள் போலவும், भूमौ- பூமியில், पतिष्यन्ति- விழப்போகின்றன.

---

ரோடிருக்க நான் ஸம்மதிக்கமாட்டேன். கூர்மையான நுனியையுடையதாயும் மின்னல்போல் பரக்கிற நெருப்புப்பொரிகளையுடைய கத்தியைக்கையிற்பிடித்து இந்திரனாயிருந்தாலும் அந்த சத்ருவை உலகத்தில் வைக்கமாட்டேன். அவனைக்கொன்றேவிடுவேன்.

32. (பொ-ரை) பூமியானது என்னுடைய கத்தியினால் வெட்டுப்பட்டு பொடியாகக்கப்பட்ட யானை, குதிரை, மனிதர் இவர்களுடைய கைகள், துடைகள், தலைகள் இவைகளால் நிறைந்து கால்வைகக முடியாததாக ஆய்விடும.

33. (பொ-ரை) இப்பொழுது என்னுடைய கூர்மையான கத்தியால் வெட்டப்பட்டு அதனால் நெருப்புப்பொரி பரக்கின்ற சத்ரு யானைகள், எரிகின்ற மலைகள் போலவும், மின்னலுடன்கூடிய மேகங்கள் போலவும், கீழே விழப்போகின்றன.

बद्धगोधाङ्गुलित्राणे प्रगृहीतशरासने ।
कथं पुरुषमानी स्यात्पुरुषाणां मयि स्थिते ॥ 34 ॥
बहुभिश्चैकमत्यस्यन्नेकेन च बहूञ्जनान् ।
विनियोक्ष्याम्यहं बाणान्नृवाजिगजमर्मसु ॥ 35 ॥
अद्य मेऽस्त्रप्रभावस्य प्रभावः प्रभविष्यति ।
राज्ञश्चाप्रभुतां कर्तुं प्रभुत्वं च तव प्रभो ॥ 36 ॥

34. (ப-ரை) बद्धगोधाङ्गुलित्राणे- விரல்களுக்கு கவசமணிந்துகொண்டும், प्रगृहीतशरासने- கையிற் வில்லைப்பிடித்தவனுமான, मयि- நான், स्थिते सति- இருக்கும் காலத்தில், पुरुषाणां- மனிதர்களுக்குள், पुरुषमानी- நான் ஆண்பிள்ளையென்று கர்வமுடையவன், कथं स्यात्- எப்படி இருக்கமுடியும்.

35. (ப-ரை) अह- நான், बहुभिः- அநேகம் பாணங்களினால், एकं- ஒரு சூரனையும், एकेन- ஒரு பாணத்தில், बहून् जनान्- அநேகம் அல்ப ஜனங்களையும், अत्यस्यन्- நன்றாய் அடித்து, नृवाजिगजमर्मसु- மனிதர்கள், குதிரைகள், யானைகள், இவைகளுடைய மர்மஸ்தானங்களில், बाणान्- பாணங்களை, विनियोक्ष्यामि- ப்ரயோகிக்கப்போகிறேன்.

36. (ப-ரை) हे प्रभो- ப்ரபுவான அண்ணா! राज्ञः- அரசனுக்கு, अप्रभुतां- ப்ரபுவல்லாமல் இருக்கையும், तव- உமக்கு, प्रभुत्वं च- ப்ரபுவாயிருக்குகையையும், कर्तुं- செய்வதற்கு, अद्य- இப்பொழுது, मे- என்னுடைய, अस्त्रप्रभावस्य- அஸ்த்ரத்தின் மஹிமையினுடைய, प्रभावः- ப்ரதாபமானது, प्रभविष्यति- கிளம்பப்போகின்றது.

---

34. (பொ-ரை) விரல்களுக்குக்கவசம போட்டுக்கொண்டு கையிற் வில்லைப் பிடித்து நான் நிற்கும்பொழுது என் முன்னிலையில், நான் ஆண்பிள்ளை யென்கிற செருக்குடையவன் மனிதர்களுக்குள் எப்படியிருக்க முடியும்.

35. (பொ-ரை) அநேக பாணங்களினால் சூரனை ஒருவனையும், ஒரு பாணத்தினால் அநேகம் அல்ப ஜனங்களையும் நன்றாயடித்து இவ்விதமாக மனிதர்கள் குதிரைகள், யானைகள் இவைகளுடைய உயிர் நிலைகளில் பாணங்களை நான் ப்ரயோகிக்கப்போகிறேன்.

36. (பொ-ரை) ப்ரபோ! இப்பொழுது நம்மரசனை ப்ரபுவல்லாமல்செய்வதற்கும், உம்மை ப்ரபுவாகச் செய்தற்கும் என்னுடைய அஸ்த்ர ப்ரபாவத்தின் ப்ரதாபமானது கிளம்பப்போகின்றது.

अद्य चन्दनसारस्य केयूरामोक्षणस्य च ।
वसूनां च विमोक्षस्य सुहृदां पालनस्य च || 37 ||
अनुरूपाविमौ बाहू राम कर्म करिष्यतः ।
अभिषेचनविघ्नस्य कर्तॄणां ते निवारणे || 38 ||
ब्रवीहि कोऽद्यैव मया वियुज्यतां तवासुहृत्प्राणयशः सुहृज्जनैः ।
यथा तवेयं वसुधा वशे भवेत्तथैव मां शाधि तवास्मि किङ्करः || 39 ||

37-38. (ப-ரை) हे राम- ஸ்ரீராமனே! चन्दनसारस्य- ச்ரேஷ்டமான சந்தன பூச்சுக்கும், केयूर आमोक्षणस्य च- தோள்வளைகளை அணிந்துக்கொள்வதற்கும், वसूनां विमोक्षस्य च- தநங்களை தானம் செய்வதற்கும், सुहृदां- ஸ்நேஹிதர்களுடைய, पालनस्य च- ரக்ஷணத்திற்கும், अनुरूपौ- (ராஜபுத்திரனுகையால்) தகுந்ததான, इमौ बाहू- இந்த கைகள், ते- உம்முடைய, अभिषेचनविघ्नस्य- பட்டாபிஷேகத்தின் விக்னத்தை, कर्तॄणां- செய்கிறவர்களுடைய, निवारणे- தடுக்கிற விஷயத்தில், अद्य- இப்பொழுது, कर्म करिष्यतः- வேலை செய்யப்போகின்றன.

39. (ப-ரை) तव- உம்முடைய, कः असुहृत्- எந்த சத்ரு, प्राणयशः सुहृज्जनैः- ப்ராணன், யசஸ்ஸு, ஸ்நேஹிதர்கள் இவர்களால், अद्यैव- இப்பொழுதே, मया- என்னால், वियुज्यतां- விடுவிக்கப்படலாம், ब्रवीहि- சொல்லும், इयं वसुधा- இந்த பூமியானது, यथा- எப்படி, तव- உம்முடைய, वशे- ஸ்வாதீனத்தில், भवेत्- ஆகுமோ, तथैव- அப்படியே, मां- என்னை, शाधि- கட்டளை இடவேண்டும், तव- உமக்கு, किङ्करः- வேலைக்காரனாக, अस्मि- இருக்கிறேன்.

---

37-38. (பொ-ரை) ஸ்ரீராம! ராஜபுத்திரனுகையால் உயர்ந்த சந்தனம் பூசிக்கொள்ளுவதற்கும், தோள்வளைகளை அணிந்துகொள்ளுவதற்கும் பலபடியாக தநங்களை தானம் செய்வதற்கும், தோழன்மார்களை பரிபாலனம் செய்வதற்கும், உரியதுகளான இந்த என்னுடைய கைகள் உம்முடைய பட்டாபிஷேகத்தை தடைசெய்தவர்களைக்குறித்து செய்யவேண்டிய கார்யத்தை இப்பொழுது செய்யப்போகின்றன.

39. (பொ-ரை) அண்ணு! உமக்கு எவன் விரோதியோ அவனைச்சொல்லவேணும். இப்பொழுதே அவனை நான் ப்ராணன், கீர்த்தி, ஸ்நேஹிதர், இவைகளை இழக்கும்படி செய்கிறேன். இந்த பூமி முழுவதையும் உமமுடைய வசமாக்கிவைத்துவிடுகிறேன். ஆனல் எனக்கு நீர் அவ்விதம் கட்டளையிடவேண்டும். ஏனென்றல் நான் உம்முடைய கிங்கானன்றே.

विमृज्य बाष्पं परिसान्त्व्य चासकृत्स लक्ष्मणं राघववंशवर्धनः ।
उवाच पित्र्ये वचने व्यवस्थितं निबोध मामेष हि सौम्य सत्पथः ॥ 40 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
त्रयोविंशः सर्गः ॥ 23 ॥

40. (ப-ரை) राघववंशवर्धनः- ரகு வம்சத்திற்கு பெருமையை விருத்தி செய்கின்ற, सः- அந்த ஸ்ரீராமன், बाष्पं- கண்ஜலத்தை, विमृज्य- துடைத்து, असकृत्- அடிக்கடி, लक्ष्मणं- லக்ஷ்மணனை, परिसान्त्व्य च- ஸமாதானமும் செய்து, हे सौम्य- அப்பா! मां- என்னை, पित्र्ये- தகப்பனாருடையதான, वचने- வார்த்தையில், व्यवस्थितं- நிலையுள்ளவனாக, निबोध- நன்றாய் அறிந்துகொள், एष हि- இதுவன்றோ, सत्पथः- பெரியோர்கள் நடந்த வழி, (इति- என்று, उवाच- சொன்னார்).

---

40. (பொ-ரை) தம்முடைய அவதாரத்தினால் ரகு வம்சத்திற்கு பெருமையை விருத்தி செய்கின்ற அந்த ஸ்ரீராமன், லக்ஷ்மணனுக்குப்பலவிதமான ஸமாதானம் சொல்லி அவர் கண்ணீரையும் துடைத்து அப்பா லக்ஷ்மணா! பிதாவின் வார்த்தையின்படியே நான் நடப்பேன். இதை நீ நன்றாய்த்தெரிந்துகொள். ஏனென்றால் இதுதான் பெரியோர்கள் நடந்த வழி என்று சொன்னார்.



चतुर्विंशः सर्गः ॥ 24 ॥

तं समीक्ष्य त्ववहितं पितुर्निर्देशपालने ।
कौसल्या बाष्पसंरुद्धा वचो धर्मिष्ठमब्रवीत् ॥ 1 ॥

1. (ப-ரை) तं- அந்த ஸ்ரீராமனை, पितुः-பிதாவினுடைய, निर्देशपालने- ஆஜ்ஞையை பரிபாலனம் செய்வதில், अवहित- மிகவும் கவனமுள்ளவராக, समीक्ष्य- தெரிந்துகொண்டு, कौसल्या- கௌஸல்யா தேவியானவள், बाष्पसंरुद्धा सती- கண்ணீரை அடக்கிக்கொண்டு, धर्मिष्ठं- தர்மிஷ்டமான, वचः- வார்த்தையை, अब्रवीत्- சொன்னாள்.

1. (பொ-ரை) பிறகு கௌஸல்யாதேவி எவ்வளவு சொன்னபோதிலும் நம்முடைய பேச்சைக்கேளாமல் பிதாவின் ஆக்ஞைப்படியே ராமன் வனம் போவதில் ஊக்கமுள்ளவனாயிருக்கிறானென்பதைத்தெரிந்துகொண்டு கண்ணீரை அமங்களமென்று வெளிவிடாமல் உள்ளடக்கிக்கொண்டு (ஸ்ரீராமனைப்பார்த்து) தர்மிஷ்டமான ஒரு வார்த்தை சொன்னாள்.

अदृष्टदुःखो धर्मात्मा सर्वभूतप्रियंवदः ।
मयि जातो दशरथात्कथमुञ्छेन वर्तयेत् ॥ 2 ॥
यस्य भृत्याश्च दासाश्च मृष्टान्यन्नानि भुञ्जते ।
कथं स भोक्ष्यते नाथो वने मूलफलान्ययम् ॥ 3 ॥
क एतच्छ्रद्दधेच्छ्रुत्वा कस्य वा न भवेद्भयम् ।
गुणवान्दयितो राज्ञा राघवो यद्विवास्यते ॥ 4 ॥

---

2. (ப-ரை) अदृष्टदुःखः- ஒருக்காலும் துக்கத்தை அறியாதவன், धर्मात्मा- தர்மமே வடிவு கொண்டவன், सर्वभूतप्रियंवदः- எல்லாப்பிராணிகளிடத்திலும் இனிதாகப் பேசுகிறவன், दशरथात्- தசரத மஹாராஜனால், मयि- என்னிடத்தில், जातः- பிறந்தவன், वने- வனத்தில், कथं- எப்படி, उञ्छेन- உஞ்சவ்ருத்தியினால், वर्तयेत्- ஜீவிப்பன்.

3. (ப-ரை) यस्य- எவனுடைய, भृत्याः च- படர்களும், (மந்திரி முதலானவர்களும்), दासाः च- வேலைக்காரர்களும், मृष्टानि- மிகவும் ச்லாக்யங்களான, अन्नानि- ஆஹாரங்களை, भुञ्जते- புஜிக்கிறார்களோ, सः- அப்படிப்பட்ட, अयं- नाथः- இந்த நாதனை ராமன், वने- வனத்தில், मूलफलानि- வேருகளையும், காய்கனிகளையும், कथ वा- எப்படி, भोक्ष्यते- சாப்பிடப்போகிறானோ.

4. (ப-ரை) गुणवान्- அநேக ஸத்குணமுள்ளவனும், दयितः- மிகவும் ப்ரியமுள்ளவனுமான, राघवः- ராகவன், राज्ञा- அரசனால், विवास्यते इति यत्- காட்டுக்குத்துரத்

2 (பொ-ரை) ஒருநாளும் துக்கமென்பதையே அறியாதவன், தர்மஸ்வரூபமானவன், ஸர்வ ப்ராணிகளிடத்திலும் ப்ரியமாகப்பேசும் ஸ்வபாவமுள்ளவன், சக்ரவர்த்தியான ஸ்ரீ தசரத மஹாராஜனுக்கு ஜ்யேஷ்டமஹிஷியான என்னிடத்தில் புத்திரனாய்ப்பிறந்தவன். இப்படிப்பட்டவன் வனத்தில் எப்படி உஞ்ச வ்ருத்தி செய்து ஜீவிப்பன். (உஞ்ச வ்ருத்தியாவது:— வயல்களில் உதிர்ந்திருக்கிற தான்யங்களை ஒவ்வொன்றாகப்பொருக்குகை.)

3. (பொ-ரை) எந்த ராமனுடைய படர்களும், வேலைக்காரர்களும், ச்லாக்யமான அன்னங்களை புஜித்துக்கொண்டிருக்கிறார்களோ, அந்த என்னுடைய நாதனை இந்த ராமன் வனத்தில் காய், கிழங்கு, கனிகளை எவ்விதம் புஜிப்பானோ.

भृत्याः- என்கிற இடத்தில் பரிக்ககூடியவர்கள் என்று பொருள்கொண்டு மந்திரி முதலானவர்களென்றும் ஒரு வ்யாக்யாதாவின் அபிப்ராயம். உத்தரார்த்தத்தில் भोक्ष्यते नाथः- என்கிறவிடத்தில் अनाथः என்றும் பதம் பிரிக்கலாமாகையால் இத்தனை பேர்களுக்கும் நாதனாயிருந்தும், நமமுடைய பிள்ளை அனாதனாக விருக்கிறானென்றும் பொருள் கொள்ளலாம்.

4. (பொ-ரை) ஸகல ஸத்குணம் பொருந்தியும், மிகவும் தனக்கு ப்ரியனுமான ஸ்ரீ ராமனை அரசன் காட்டிற்குத் துரத்திவிட்டாரென்பதைக் கேட்டால்

नूनं तु बलवाल्लोके कृतान्तः सर्वमादिशन् ।
लोके रामाभिरामस्त्वं वनं यत्र गमिष्यसि ॥ 5 ॥
अयं तु मामात्मभवस्तवादर्शनमारुतः ।
विलापदुःखसमिधो रुदिताश्रुहुताहुतिः ॥ 6 ॥
चिन्ताबाष्पमहाधूमस्तवादर्शनचित्तजः ।
कर्शयित्वा भृशं पुत्र निश्वासायाससंभवः ॥ 7 ॥
त्वया विहीनामिह मां शोकाग्निरतुलो महान् ।
प्रधक्ष्यति यथा कक्षं चित्रभानुर्हिमात्यये ॥ 8 ॥

---

தப்படுகிருன் என்பது யாதொன்றுண்டு, एतत्- இதை, श्रुत्वा- கேட்டு, कः- எவன் தான், श्रद्दधेत्- நம்புவான், कस्य वा- எவனுக்குத்தான், भयम्- அச்சமானது, न भवेत्- உண்டாகாது.

5. (ப-ரை) हे राम- ஹே ராமனே! लोके- உலகத்தில், अभिरामः- மிகவும் அழகுள்ளவனை, त्वं- நீ, यत्र- யாதொரு தெய்வத்தினுல், वनं- வனத்தை, गमिष्यसि- அடையப்போகிருயோ, सर्वं- (ஸுகதுக்கம் முதலிய) எல்லாவற்றையும், आदिशन्- கொடுத்துக்கொண்டிருக்கிற, कृतान्तः- அந்த தெய்வமானது, लोके- உலகத்தில், बलवान्- மிகவும் பலமுள்ளது, नूनं- तु- இது நிச்சயம்.

6-7-8. (ப-ரை) हे पुत्र- குழந்தாய், तव- உன்னுடைய, अदर्शनमारुतः- காணுமையை காற்ருகவுடையதாயும், विलापदुःखसमिधः- அழுகையினுலுண்டான துக்கத்தை விறகாகவுடையதாயும், रुदित अश्रु हुत आहुतिः- அழுகையினுலுண்டான கண்ணீரை ஹோமம் செய்யப்பட்ட த்ரவ்யமாகவுடையதாயும், चिन्ताबाष्पमहाधूमः- மனவிசாரத்தினுலுண்டான மனக்கொதிப்பை பெரும் புகையாகவுடையதாயும்,

---

எவன்தான் இது நடந்திருக்கலாமென்று நம்புவன். தவிரவும் இதைக்கேட்டவன் குணமுள்ள ப்ரியமான தன் புத்திரனைக் காட்டிற்கு நிஷ்காரணமாகத்துறத்தின அரசன் ஒரு ஸமயம் நம்மையும் காட்டிற்குத்துறத்தினுலும் துறத்துவன் என்று எல்லோரும் பயப்படுவார்கள்.

5 (பொ—ரை) உலகத்தில் எல்லோருக்கும் மிகப்ரியமுள்ளவனை நீயே காட்டிற்குப் போகும்படியாக தெய்வ ஸங்கல்பம் ஏற்பட்டபடியால் எல்லாப்ராணிகளுக்கும் ஸுக துக்கம் முதலானதுகளை கொடுத்துக்கொண்டிருக்கிற அந்த தெய்வம்தான் உலகத்தில் மிகப்பெரியது என்பது நிச்சயம்.

6—7—8. (பொ—ரை) குழந்தாய் உன்னைக்காணுமையாகிற காற்றுடையதாய், அழுகையினுலுண்டான கண்ணீரை ஹோமத்ரவ்யமாகக்கொண்டு, சிந்தையினுலுண்டான மனக்கொதிப்பை பெரும் புகையாக உடையதாய், உன்னைக்காணுமையால் மனதில் உண்டாகி, என் சரீரத்தில் பற்றி பெருமூச்சாகிற ப்ரயத்னத்தால்

कथं हि धेनुः स्वं वत्सं गच्छन्तं नानुगच्छति ।
अहं त्वानुगमिष्यामि पुत्र यत्र गमिष्यसि ॥ 9 ॥
तथा निगदितं मात्रा तद्वाक्यं पुरुषर्षभः ।
श्रुत्वा रामोऽब्रवीद्वाक्यं मातरं भृशदुःखिताम् ॥ 10 ॥

तव अदर्शनचित्तजः- உன்னுடைய தர்சனமில்லாமையால் மனதிலுண்டானதாயும், अतुलः- நிகறற்றதாய், आत्म भवः- சரீரத்திலுண்டானதுமான, अयं- இந்த, महान्- பெரிதான, शोकाग्निः- சோகமாகிற அக்நியானது, निश्वासायाससम्भवः- பெருமூச்சாகிற மனிதனுடைய ப்ரயத்னத்தால் நன்றாக வ்ருத்தியடைந்ததாய், भृश- மிகவும், मां- என்னை, कर्शयित्वा- க்ருசமாகச்செய்து, त्वया- உன்னாலே, विहीनां- விட்டுப்பிரிந்திருக்கிற, मां- என்னை, चित्रभानुः- அக்நி, हिमात्यये- வெயிற் காலத்தில், कक्षं- புதரை, यथा- எப்படி- (எரிக்குமோ,) तथा- அப்படி, इह- இப்பொழுது, प्रधक्ष्यति- எரிக்கப்போகின்றது.

9. (ப-ரை) पुत्र- குழந்தாய், गच्छन्तं- போகின்ற, स्वं वत्सं- தன்னுடைய கன்றை, धेनुः- பசுவானது, कथ हि- ஏன், नानुगच्छति- பின்தொடர்ந்து போகாது, तथा- அப்படியே (त्वं- நீ) यत्र- எவ்விடத்திற்கு, गमिष्यसि- போகப்போகின்றாயோ, (तत्र- அங்கு), अहं- நான், त्वा- உன்னை, अनुगमिष्यामि- பின்தொடர்ந்து போவேன்.

10. (ப-ரை) मात्रा- தாயாரால், तथा- அப்படி, निगदितं- சொல்லப்பட்ட, तत् वाक्यं- அந்த வார்த்தையை, पुरुषर्षभः- புருஷச்ரேஷ்டனை, रामः- ஸ்ரீராமன், श्रुत्वा- கேட்டு, भृशदुः खिताम्- மிகவும் துக்கித்துக்கொண்டிருக்கிற, मातरं- தாயாரைப் (பார்த்து), वाक्यं- ஒரு வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

வ்ருத்தியடைந்து, நிகரற்ற பெரிதான இந்த சோகமாகிற நெருப்பானது உன்னை விட்டுப்பிரிந்த என்னை க்ருசமாகச்செய்து, வெயிற்காலத்தில் காட்டுத்தீ உலர்ந்த ஒரு புதரை எரிப்பதுபோல் இப்பொழுது என்னை எரிக்கப்போகிறது.

9. (பொ-ரை) குழந்தாய்! கன்று போகும்பொழுது பசு அதைப்பின் சென்று போகுமல்லவா. அதைப்போல் நானும் நீ போகுமிடத்திற்கு உன்னைப்பின் தொடர்ந்து போவேன்.

10. (பொ-ரை) புருஷோத்தமனை ஸ்ரீராமன் அவ்விதம் மாதாவினால் சொல்லப்பட்ட அந்த வார்த்தையைக்கேட்டு மிகவும் துக்கித்துக்கொண்டிருக்கிற மாதாவைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

कैकेय्या वञ्चितो राजा मयि चारण्यमाश्रिते ।
भवत्या च परित्यक्तो न नूनं वर्तयिष्यति ॥ 11 ॥
भर्तुः किल परित्यागो नृशंसः केवलं स्त्रियाः ।
स भवत्या न कर्तव्यो मनसापि विगर्हितः ॥ 12 ॥
यावज्जीवति काकुत्स्थः पिता मे जगतीपतिः ।
शुश्रूषा क्रियतां तावत्सहि धर्मः सनातनः ॥ 13 ॥

11. (ப—ரை) कैकेय्या- கைகேயியினால், वञ्चितः- மோசம் பண்ணப்பட்ட, राजा- அரசன், मयि च- நானும், अरण्यं- அரண்யத்தை, आश्रिते सति- அடைந்த ஸமயத்தில், भवत्या च- உம்மாலும், परित्यक्तः- கைவிடப்பட்டவராய், न वर्तयिष्यति- ஜீவித்திருக்கப்போகிறதில்லை, नूनं- நிச்சயம்.

12. (ப-ரை) भर्तुः- பர்த்தாவினுடைய, परित्यागः- கைவிடுவது, स्त्रियाः- ஸ்த்ரீ ஜாதிக்கு, केवलं नृशंसः- மிகவும் கொடிதான கார்யம், किल- இப்படியன்றோ லோக ப்ரஸித்தம், विगर्हितः- (எல்லோராலும்) பழிக்கப்பட்ட, सः- அந்தக்கார்யமானது, मनसा अपि- மனதினாலும், न कर्तव्यः- (உம்மால்) செய்யத் தகுந்ததல்ல.

13. (ப-ரை) काकुत्स्थः- ககுத்ஸ்த வம்சத்தில் பிறந்தவராயும், जगती पतिः- மஹாராஜாவுமான, मे पिता- என்னுடைய தகப்பனார், यावत्- எவ்வளவு நாள்கள்வரை, जीवति- பிழைத்திருக்கின்றாரோ, तावत्- அதுநாள்வரை, शुश्रूषा- (அவருக்கு)ப் பணிவிடை, क्रियतां- (உம்மால்) செய்யப்படவேண்டும், हि- ஏனென்றால், सः- அதுதான், सनातनः- நித்யமான, धर्मः- தர்மம்.

11. (பொ-ரை) கைகேயியானவள் மோசமாக என்னைக்காட்டிற்குப்போகும்படி செய்து அரசனுக்கு துக்கத்தை உண்டாக்கிவிட்டாள். நானும் காட்டிற்குப்போய் நீரும் அவரைக்கைவிட்டால் அவர் உயிரோடிருக்கமாட்டார். இது நிச்சயம்.

12. (பொ-ரை) பர்த்தாவைக்கைவிடுவது ஸ்த்ரீகளுக்கு மிகவும் கொடியதான கார்யம். எல்லோராலும் பழிக்கப்பட்ட இந்தக்கொடுந்தொழிலை செய்யவேணுமென்று நீர் மனதினிலும் நினைக்கக்கூடாது

13. (பொ-ரை) ககுத்ஸ்த வம்சத்தில் பிறந்து அரசனாகிய என் பிதா உயிருடனிருக்கிறவரையில் அவருக்கு நீர் பணிவிடை செய்யவேண்டும். அதுவன்றோ அழிவில்லாத தர்மம்.

एवमुक्ता तु कौसल्या रामेण शुभदर्शना ।
तथेत्युवाच सुप्रीता राममक्लिष्टकारिणम् ॥ 14 ॥
एवमुक्तस्तु वचनं रामो धर्मभृतांवरः ।
भूयस्तामब्रवीद्वाक्यं मातरं भृशदुःखिताम् ॥ 15 ॥
मया चैव भवत्या च कर्तव्यं वचनं पितुः ।
राजा भर्ता गुरुः श्रेष्ठः सर्वेषामीश्वरः प्रभुः ॥ 16 ॥

---

14. (ப-ரை) एवं- இவ்விதம், रामेण- ராமனால், उक्ता- சொல்லப்பட்ட, शुभदर्शना- தர்மபுத்தியுள்ள, कौसल्या तु- கௌஸல்யா தேவியும், सुप्रीता सती- மிகவும் ப்ரீதி உள்ளவளாய்க்கொண்டு, अक्लिष्टकारिणम्- ச்ரமமில்லாமல் கார்யத்தைச் செய்கின்ற, रामं- ராமனைப்பார்த்து, तथा इति- அப்படியே ஆகட்டுமென்று, उवाच- சொன்னாள்.

15. (ப-ரை) एवं- இவ்விதம், वचनं- வார்த்தையை, उक्तः- கௌஸல்யையால் சொல்லப்பட்ட, धर्मभृतां- தர்மிஷ்டர்களுக்குள், वरः- ச்ரேஷ்டரான, रामः- ஸ்ரீராமன், भृशदुःखिताम्- மிகவும் துக்கித்துக்கொண்டிருக்கிற, तां मातरं- அந்தத்தாயாரைப்பார்த்து, भूयः- மறுபடியும், वाक्यं- ஒருவார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

16. (ப-ரை) मया च एवं- என்னாலும், भवत्या च- உம்மாலும், पितुः वचनं- பிதாவினுடைய வார்த்தையானது, कर्तव्यं- செய்யத்தகுந்தது, ஏனென்றால், सः- அவர், राजा- அரசனாகவும், भर्ता- போஷகராகவும், श्रेष्ठः- ச்ரேஷ்டரான, गुरुः- குருவாகவும், सर्वेषां- எல்லோருக்கும், ईश्वरः- ஈச்வரனாகவும், प्रभुः- பலன்களைக்கொடுக்கிறவராகவும், (இருக்கிறார்).

14. (பொ-ரை) இவ்விதம் ஸ்ரீராமனால் சொல்லப்பட்ட, தர்மபுத்தியுள்ள அந்த கௌஸல்யையும் மிகவும் ஸந்தோஷமுடையவளாய்க்கொண்டு மனவருத்தமில்லாமல் வனவாஸம் செய்யத்துணிந்த ஸ்ரீராமனைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னாள்.

15. (பொ-ரை) தர்மிஷ்டர்களுக்குள் உயர்ந்தவரான ஸ்ரீராமன் இவ்விதம் தாயாருடைய வார்த்தையைக்கேட்டு மிகவும் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிற அந்த த்தாயாரைப்பார்த்து மறுபடியும் ஒரு வார்த்தை சொல்லுகிறார்.

16. (பொ-ரை) அம்மா! நானும் நீரும் பிதாவின் வார்த்தையின்படி நடக்க வேண்டும்; ஏனென்றால் அவர் அரசனாகவும் போஷணம் செய்கிறவராகவும், உயர்ந்த குருவாகவும், எல்லோருக்கும் ஈச்வரனாகவும் அவரவர்களுக்கு தக்கபடி பலன்களைக்கொடுக்கக்கூடிய ப்ரபுவாகவுமிருக்கிறார்.

इमानि तु महारण्ये विहृत्य नव पञ्च च ।
वर्षाणि परमप्रीतः स्थास्यामि वचने तव ॥ 17 ॥
एवमुक्त्वा प्रियं पुत्रं बाष्पपूर्णानना तदा ।
उवाच परमार्ता तु कौसल्या पुत्रवत्सला ॥ 18 ॥
आसां राम सपत्नीनां वस्तुं मध्ये न मे क्षमम् ।
नय मामपि काकुत्स्थ वनं वन्यां मृगीं यथा ।।
यदि ते गमने बुद्धिः कृता पितुरपेक्षया ॥ 19 ॥

17. इमानि- இந்த, नव पञ्च च वर्षाणि- பதினைன்கு வருஷங்களை, महारण्ये- பெரிய வனத்தில், विहृत्य- விளையாடிவிட்டு, परमप्रीत:- மிகவும் ஸந்தோஷமுடையவனாய்க் கொண்டு, तव- உம்முடைய, वचने- வார்த்தையில், स्थास्यामि- நிலையாய் நிற்பேன்.

18. (ப-ரை) एवं- இவ்விதம், उक्त्वा- சொல்லப்பட்ட, पुत्रवत्सला- புத்திரவாத்ஸல்யமுடைய, कौसल्या तु- கௌஸல்யாதேவியானவள், तदा- அப்பொழுது, परमार्ता- மிகவும் துக்கமுடையவளாய், बाष्पपूर्णानना- கண்ணீரால் நிறைந்த முகமுடையவளாய்க்கொண்டு, प्रियं पुत्रं- ப்ரியமான புத்திரனைப்பார்த்து, उवाच- ஒரு வார்த்தை சொன்னாள்.

19. (ப-ரை) हे काकुत्स्थ- ககுத்ஸ்த குலத்தில் பிறந்த குழந்தாய், पितु:- பிதாவினுடைய, अपेक्षया- இச்சையினால், गमने- (தண்டகாவனம்) போவதில், बुद्धि:- எண்ணமானது, ते- உன்னால், कृता यदि- செய்யப்படுமேயானால், वन्यां- வனத்திலுண்டான, मृगीं यथा- பெண் மானைப்போல், मां अपि- என்னையும், वनं-வனத்தைக்குறித்து, नय- அழைத்துக்கொண்டுபோ, हे राम- ராமனே! आसां- இந்த, सपत्नीनां- சக்களத்திகளுடைய, मध्ये- நடுவில், वस्तुं- வஸிப்பதற்கு, मे- எனக்கு, न क्षमम्- தகுந்ததன்று.

---

17. (பொ-ரை) பிதாவின் உத்திரவுப்படி இந்த பதினைந்து வருஷங்களும் தண்டகாவனமென்கிற பெரிய வனத்தில் விளையாடினதுபோலிருந்துவிட்டு, பிறகு பரமஸந்தோஷத்துடன் உம்முடைய சொற்படி அவசியம் நடக்கிறேன்.

18. (பொ-ரை) இவ்விதம் ஸ்ரீராமனுடைய வார்த்தையைக்கேட்டு, புத்திரவாத்ஸல்யமுடைய கௌஸல்யையானவள், மிகவும் துக்கத்தினால், கண்ணீர் நிறைந்த முகமுடையவளாய்க்கொண்டு ப்ரியனான புத்திரனைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னாள்.

19. (பொ-ரை) ககுத்ஸ்த குலத்தில் பிறந்த ராமா! பிதாவினுடைய வார்த்தைக்காக வனம்போக நிச்சயத்திருக்கும் பக்ஷத்தில், காட்டில் பிறந்து வளர்ந்த பெண் மானைப்போல் என்னையும் அந்த வனத்திற்கே அழைத்துக்கொண்டு போ. இந்த சக்களத்திகள் கூட்டத்தின் நடுவில் இருக்க எனக்குக் கொஞ்சம்கூட முடியாது.

तां तथा रुदतीं रामो रुदन्वचनमब्रवीत् ॥ 20 ॥
जीवन्त्या हि स्त्रिया भर्ता दैवतं प्रभुरेव च ।
भवत्या मम चैवाद्य राजा प्रभवति प्रभुः ॥ 21 ॥
न ह्यनाथा वयं राज्ञा लोकनाथेन धीमता ।
भरतश्चापि धर्मात्मा सर्वभूतप्रियंवदः ॥
भवतीमनुवर्तेत स हि धर्मरतः सदा ॥ 22 ॥

20. (ப-ரை) तथा- அப்படி, रुदतीं- அழுதுகொண்டிருக்கிற, तां- அந்த கௌஸல்யையை (ப்பார்த்து), रामः- ஸ்ரீராமன், रुदन्- அழுதுகொண்டு, वचनं- வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

21. (ப-ரை) जीवन्त्याः- வாழ்ந்து கொண்டிருக்கிற, स्त्रियाः- ஸ்த்ரீக்கு, भर्ता हि- கணவனன்றோ, दैवतं- தெய்வமாகவும், प्रभुः एव च- ப்ரபுவாகவுமிருக்கிறார், अद्य- இப்பொழுது, भवत्याः- உமக்கும், मम च एव- எனக்கும், राजा- தசரத மஹாராஜா, प्रभुः- ப்ரபுவாகவுமிருக்கிறார், प्रभवति- ஸகலத்துக்காரியங்களையும் உண்டுபண்ண சக்தராகவுமிருக்கிறார்.

22. (ப-ரை) लोकनाथेन- லோகங்களுக்கெல்லாம் நாதனையும், धीमता- சிறந்த புத்தியுள்ளவருமான, राज्ञा- அரசனால், वयं- நாம், अनाथाः न हि- அனாதர்களல்லாதவராயிருக்கிறோம். धर्मात्मा- தர்மாத்மாவான, भरतः च अपि- பரதனும், सर्वभूतप्रियंवदः- எல்லாப்ராணிகளிடத்திலும் இனிய பேச்சுப்பேசுகிறவன், भवतीं- உம்மை, अनुवर्तेत- அநுஸரிப்பன், हि- ஏனென்றால், सः- அவன், सदा- எப்பொழுதும், धर्मरतः- தர்மத்தில் அதிகமான ஆசையுள்ளவன்.

20. (பொ-ரை) அவ்விதம் அழுதுகொண்டிருக்கிற மாதாவைப்பார்த்து ஸ்ரீராமனும், தானும் அழுதுகொண்டு ஒரு வார்த்தை சொல்லுகிறார்.

21. (பொ-ரை) வாழ்ந்துகொண்டிருக்கிற ஸ்த்ரீகளுக்கு பர்த்தாவன்றோ தெய்வமாகவும் ப்ரபுவாகவுமிருக்கிறார். ஆகையால் ப்ரபுவான தசரதமஹாராஜா இப்பொழுது எனக்கும், உமக்கும், ப்ரபுவன்றோ.

22. (பொ-ரை) உலகத்திற்கெல்லாம் நாதனையும், சிறந்த புத்தியுடையவருமான நம் மஹாராஜா ஒருவரிருக்க நாம் ஏன் அனாதர்களாயிருக்கவேண்டும். தர்மாத்மாவான பரதனும ஸர்வப்ராணிகளிடத்திலும் இனிதாகப்பேசக்கூடிய ஸ்வபாவமுள்ளவன். அவனும் ஜ்யேஷ்டமாதாவான உம்மை அநுஸரித்தே நடப்பன். ஏனென்றால் அவனெப்பொழுதுமே தர்மத்தில் விசேஷமான ப்ரீதியுள்ளவன்.

यथा मयि तु निष्क्रान्ते पुत्रशोकेन पार्थिवः ।
श्रमं नावाप्नुयात्किंचिदप्रमत्ता तथा कुरु ॥ 23 ॥
दारुणश्चाप्ययं शोको यथैनं न विनाशयेत् ।
राज्ञो वृद्धस्य सततं हितं चर समाहिता ॥ 24 ॥
व्रतोपवासनिरता या नारी परमोत्तमा ।
भर्तारं नानुवर्तेत सा तु पापगतिर्भवेत् ॥ 25 ॥

23. (ப-ரை) मयि-நான், निष्क्रान्ते-तु- நகரத்தைவிட்டு, புறப்பட்டுப்போன வளவில், पार्थिवः- அரசன், पुत्रशोकेन- புத்திரனுன என் விஷயமான வருத்தத்தினுல், यथा- எப்படி, श्रमं- கஷ்டத்தை, किंचित्- கொஞ்சமேனும், न अवाप्नुयात्- அடையாம லிருப்பாரோ, तथा- அப்படி, त्वं- நீர், अप्रमत्ता सती- கவனமுள்ளவராயிருந்து, कुरु- செய்யக்கடவீர்.

24. (ப-ரை) दारुणः च अपि- மிகவும் கொடியதான, अयं शोकः- இந்த புத்திர சோகமானது, एनं- இந்த பிதாவை, यथा- எப்படி, न विनाशयेत्- அழித்துவிடாம லிருக்குமோ, समाहिता- நீர் ஜாக்ரதையாயிருந்துகொண்டு, वृद्धस्य- கிழவரான, राज्ञः- அரசனுக்கு, सततं- எப்பொழுதும், तथा- அப்படி, हितं- அநுகூலத்தை, चर- செய்து வரவேண்டும்.

25. (ப-ரை) या नारी- எந்த ஸ்த்ரீ, व्रत उपवास निरता- வ்ரதங்களிலும், உபவா ஸங்களிலும் ஊக்கமுடையவளாய், परमं उत्तमा- அதனுல் மிகவும் உத்தமையாயிருந்து கொண்டு, भर्तारं- பர்த்தாவை, न अनुवर्तेत- அநுஸரிக்கிறதில்லையோ, सा तु-அவள், पापगतिः- பாபத்தின் பலமான நரகத்தை அடைகின்றவளாக, भवेत्- ஆகிவிடுவள்.

23. (பொ-ரை) நான் இதை விட்டு வனம் போனகாலத்தில் அரசன் என் விஷயமான சோகத்தினுல் சிறிதேனும் ச்ரமப்படாமலிருக்கும்படி நீர ரொம்பவும் அவரை கவனித்துக்கொள்ளவேண்டும்.

24. (பொ-ரை) கொடியதான இந்த புத்திரசோகத்தினுல் அரசன் எப்படி அழிந்து விடாமலிருப்பாரோ அவ்விதமான நன்மைகளை நீர் ஜாக்ரதையா யிருந்து கிழவரான நம்மரசனுக்கு செய்துவரவேண்டும்.

25. (பொ-ரை) எந்த ஸ்த்ரீவ்ரதம் உபவாஸம் இவைகளில் ஊக்கமுடைய வளாகி மிகவும் உத்தமியாய்க்கொண்டு பர்த்தாவுக்கு சிச்ருஷை பண்ணுமலிருக்கி ருளோ அவள் பாபத்தின் பலனுக நரகத்தை அடைந்துவிடுவாள்.

भर्तुः शुश्रूषया नारी लभते स्वर्गमुत्तमम् ।
अपि या निर्नमस्कारा निवृत्ता देवपूजनात् ॥ 26 ॥
शुश्रूषामेव कुर्वीत भर्तुः प्रियहिते रता ।
एष धर्मः पुरा दृष्टो लोके वेदे श्रुतः स्मृतः ॥ 27 ॥
अग्निकार्येषु च सदा सुमनोभिश्च देवताः ।
पूज्यास्ते मत्कृते देवि ब्राह्मणाश्चैव सुव्रताः ॥ 28 ॥

26. (ப-ரை) या- எந்த ஸ்த்ரீ, निर्नमस्कारा अपि- பர்த்தாவைத் தவிர மற்றவர்களை நமஸ்காரம் செய்யாதவளும், देवपूजनात्- தேவபூஜையிலிருந்து, निवृत्ता- விலகினவளாயிருக்கிறாளோ, सा नारी- அந்த ஸ்த்ரீயானவள், भर्तुः- பர்த்தாவினுடைய, शुश्रूषया- பணிவிடையால், उत्तमम् स्वर्गं- உயர்ந்த பலமான ஸ்வர்க்கத்தை, लभते- அடைகின்றாள்.

25. (ப-ரை) (ஆகையால்), भर्तुः- பர்த்தாவினுடைய, प्रियहिते- ப்ரியம் செய்வதிலும் ஹிதம் செய்வதிலும், रता- ஆசையுள்ளவளாகவிருந்து, शुश्रूषां एव- (பர்த்தாவின்) சிச்ரூஷையையே, कुर्वीत- செய்யக்கடவள், एषः धर्मः- இந்த தர்மமானது, लोके- உலகத்தில், पुरा- அநாதியாக, दृष्टः- காணப்பட்டது, वेदे- வேதத்திலும், श्रुतः- கேழ்க்கப்பட்டது, स्मृतः- தர்ம சாஸ்த்ரத்திலும் சொல்லப்பட்டது.

28. (ப-ரை) हे देवी- அம்மா! अग्निकार्येषु च- அக்நிஹோத்ரம் முதலான கார்யங்களிலும், सदा- மற்ற எல்லா காலங்களிலும், देवताः- தேவதைகளும், सुव्रताः- நல்ல வ்ரதமுடையவர்களான, ब्राह्मणाः च एव- ப்ராமமணர்களும், मत्कृते- என்னுடைய க்ஷேமத்திற்காக, सुमनोभिः च- புஷ்பங்களாலே, ते- உன்னால், पूज्याः- பூஜிக்கத்தகுந்தவர்கள்.

26. (பொ-ரை) எந்த ஸ்த்ரீ பர்த்தாவைத்தவிர மற்றவர்களை ஸேவிக்காதவளும், தேவபூஜை செய்யாதவளுமாகவிருக்கிறாளோ, அந்த ஸ்த்ரீ பர்த்தாவின் சிச்ரூஷையினால் உயர்ந்த ஸ்வர்க்கத்தை அடைகிறாள்.

27. (பொ-ரை) ஆகையால் ஸ்த்ரீயானவள் பர்த்தாவுக்குப்ரியத்தையும் ஹிதத்தையும், செய்ய ஆசையுள்ளவளாய் சிச்ரூஷையே செய்யக்கடவள். பர்த்ரு சிச்ரூஷை என்கிற இந்த தர்மம்தான் உலகத்திலும் அநாதியாக ஏற்பட்டது. வேதத்திலும் தர்ம சாஸ்த்ரங்களிலும் சொல்லப்பட்டது.

28. (பொ-ரை) அம்மா நீ ஒரு கார்யமும் செய்யாமலிருந்தால் உனக்கு அதிகமாக புத்ரசோகம் உண்டாய்விடும். ஆகையால் இதைப்பாராட்டாமலிருக்கும்படி அக்நிஹோத்ரம் முதலான அக்நிகார்யங்களைச்செய்துகொண்டும் என்னுடைய க்ஷேமத்தைக்குறித்து தேவதைகளையும் சுத்தமான வ்ரதமுடைய ப்ராம்மணர்களையும் நீர் ஆராதனை செய்துகொண்டிரும்.

एवं कालं प्रतीक्षस्व ममागमनकाङ्क्षिणी ।
नियता नियताहारा भर्तृशुश्रूषणे रता ॥ 29 ॥
प्राप्स्यसे परमं कामं मयि प्रत्यागते सति ।
यदि धर्मभृतां श्रेष्ठो धारयिष्यति जीवितम् ॥ 30 ॥
एवमुक्ता तु रामेण बाष्पपर्याकुलेक्षणा ।
कौसल्या पुत्रशोकार्ता रामं वचनमब्रवीत् ॥ 31 ॥

---

29. (ப-ரை) एवं- இவ்விதமாக, नियता- நியமமுள்ளவளாய், नियताहारा- சுத்தமான ஆஹாரமுள்ளவளாய், भर्तृशुश्रूषणे- பர்த்தாவின் பணிவிடையில், रता- ஊக்கமுடையவளாய்க் கொண்டும், मम- என்னுடைய, आगमनकाङ्क्षिणी सती- வரவை இச்சித்துக் கொண்டு, कालं- காலத்தை, प्रतीक्षस्व- எதிர்பார்த்துக்கொண்டிரும்.

30. (ப-ரை) मयि- நான், प्रत्यागते सति- திரும்பிவந்தவளவில், धर्मभृतां-தர்மானுஷ்டானம் செய்பவர்களுக்குள், श्रेष्ठः- சிறந்தவரான (பர்த்தாவானவர்), जीवितं- ப்ராணனை, धारयिष्यति यदि- தரித்துக்கொண்டிருப்பாரேயானால், परमं कामं- முடிவான மனோரதத்தை, प्राप्स्यसे- நீர் அடைவீர்.

31. (ப-ரை) एवं- இவ்விதம், रामेण- ஸ்ரீராமனால், उक्ता- சொல்லப்பட்ட, कौसल्या तु- கௌஸல்யாதேவி, बाष्पपर्याकुलेक्षणा- கண்ணீர் ததும்புகின்ற கண்களை உடையவளாய், पुत्रशोकार्ता- புத்திர சோகத்தினால் பீடிக்கப்பட்டவளாய், रामं- ராமனைக்குறித்து, वचनं- ஒரு வார்த்தையை, अब्रवीत्- சொன்னாள்.

---

29. (பொ-ரை) இவ்விதம் ஸ்நானம் முதலான நியமத்துடன் மது மாம்ஸம் முதலியவைகளைவிட்டு சுத்தமான ஆஹாரத்தையும் செய்துகொண்டு, பர்த்தாவின் சிச்ருஷையில் கவனமுள்ளவளாயிருந்து நான் வருவதையே விரும்பிக்கொண்டு வனவாஸம் முடிகிற காலத்தை எதிர்பார்த்துக்கொண்டிரும்.

30. (பொ-ரை) நானும் பதினான்கு வருஷம் வனவாஸம் கழிந்து திரும்பி வந்து பர்த்தாவும் உயிருடன் இருப்பாரேயானால் அப்பொழுதுதான் நீர் முடிவான மனோரதத்தை அடையப்போகிறீர்.

1. (பொ-ரை) இவ்விதம் ஸ்ரீராமனால் சொல்லப்பட்ட கௌஸல்யாதேவி கண்களில் நீர்கள் ததும்பப் புத்திர சோகத்தினால் பீடிக்கப்பட்டு ஸ்ரீராமனைப் பார்த்து ஒரு வார்த்தை சொன்னாள்.

गमने सुकृतां बुद्धिं न ते शक्नोमि पुत्रक ।
विनिवर्तयितुं वीर नूनं कालो दुरत्ययः ॥ 32 ॥
गच्छ पुत्र त्वमेकाग्रो भद्रं तेऽस्तु सदा विभो ।
पुनस्त्वयि निवृत्ते तु भविष्यामि गतक्लमा ॥ 33 ॥
प्रत्यागते महाभागे कृतार्थे चरितव्रते ।
पितुरानृण्यतां प्राप्ते त्वयि लप्स्ये परं सुखम् ॥ 34 ॥

32. (ப-ரை) हे वीरपुत्रक- வீரனான குழந்தாய், गमने- (தண்டகாவனம்) போவதில், सुकृतां- நன்றாக தீர்மானம் செய்யப்பட்ட, ते बुद्धिं- உன்னுடைய புத்தியை, विनिवर्तयितुं- திருப்புவதற்கு, न शक्नोमि- சக்தியுள்ளவளன்று, कालः- காலமானது, दुरत्ययः- (ஒருவராலும்) மீறமுடியாதது, नूनं- இது நிச்சயம்.

33. (ப-ரை) पुत्र- குழந்தாய், त्वं- நீ, एकाग्रः- ஒரே மனதுடையவனாய், गच्छ- புறப்பட்டுப்போ, विभो- ப்ரபுவே, ते- உனக்கு, सदा- எப்பொழுதும், भद्रं- மங்களம், अस्तु- உண்டாகட்டும், त्वयि- நீ, पुनः- மறுபடியும், निवृत्ते तु- திரும்பிவந்தவளவில், गतक्लमा- மனவருத்தம் தீர்ந்தவளாக, भविष्यामि- ஆவேன்.

34. (ப-ரை) महाभागे- பெரிய பாக்யமுடையவனான, त्वयि- நீ, कृतार्थे- கார்யத்தை முடித்தவனாய், चरितव्रते- (வனவாஸமென்கிற) வ்ரதத்தையும் செய்தவனாய், पितुः- பிதாவிஷயத்தில், आनृण्यता- கடன்காரன் அல்லாமையையும், प्राप्ते- அடைந்தவனாக, प्रत्यागते सति- திரும்பிவந்தவளவில், परं सुखम्- மேலான ஸுகத்தை, लप्स्ये- (நான்) அடையப்போகிறேன்.

32. (பொ-ரை) வீரனான குழந்தாய், தண்டகாவனம் போவதாய் தீர்மானித்திருக்கிற உன்னுடைய புத்தியை மாற்றுவதற்கு என்னால் முடியாது. காலத்தை மீறமுடியாதென்பது நிச்சயம்.

33 (பொ-ரை) குழந்தாய்! நீ ஒரே மனதாகப்புறப்பட்டுப்போ. ப்ரபோ! உனக்கு எப்பொழுதும் மங்களம் உண்டாகவேண்டும். பதினான்கு வருஷம் வனவாஸம் தீர்ந்து நீ திரும்பிவந்த பிறகு நான் என்னுடைய ஆயாஸங்களையெல்லாம் தீர்த்துக்கொள்ளுவேன்.

34. (பொ-ரை) மிகவும் பாக்யசாலியான நீ வனவாஸமென்கிற வ்ரதத்தையும் அனுஷ்டித்து, பிதாவின் கடனையும் தீர்த்து க்ருதார்த்தனாய் திரும்பிவந்தபிறகு நான் மேலான ஸுகத்தை அடையப்போகிறேன்.

कृतान्तस्य गतिः पुत्र दुर्विभाव्या सदा भुवि ।
यस्त्वां संचोदयति मे वच आच्छिद्य राघव ॥ 35 ॥
गच्छेदानीं महाबाहो क्षेमेण पुनरागतः ।
नन्दयिष्यसि मां पुत्र साम्ना वाक्येन चारुणा ॥ 36 ॥
अपीदानीं स कालः स्याद्वनात्प्रत्यागतं पुनः ।
यत्त्वां पुत्रक पश्येयं जटावल्कलधारिणम् ॥ 37 ॥

35. (ப-ரை) राघव पुत्र- ரகுவம்சத்தில் பிறந்த குழந்தாய், यः- யாதொரு தெய்வமானது, मे वचः- என்னுடைய வார்த்தையை, आच्छिद्य- தள்ளிவிட்டு, त्वां- உன்னை, संचोदयति- (வனம்போக) தூண்டுகின்றதோ, कृतान्तस्य- அந்த தெய்வத்தினுடைய, गतिः- நிலைமையானது, भुवि- உலகத்தில், सदा- எப்பொழுதும், दुर्विभाव्या- அறியமுடியாதது.

36. (ப-ரை) महाबाहो पुत्र- பெரியதோள் வலியுடைய குழந்தாய், इदानीं- இப்பொழுது, गच्छ- வனத்தைக்குறித்து புறப்படு, क्षेमेण- க்ஷேமமாக, पुनः- மறுபடியும், आगतः- வந்தவனாய், साम्ना- ஸமாதானம் செய்யக்கூடிய, चारुणा- அழகான, वाक्येन- வார்த்தையினால், नन्दयिष्यसि- ஸந்தோஷப்படுத்தப்போகிறாய்.

37. (ப-ரை) हे पुत्रक- குழந்தாய், जटावल्कलधारिणम्- சடையையும், மரவுரியையும் தரித்தவனாய், वनात्- வனத்திலிருந்து, पुनः- மறுபடி, प्रत्यागतं- திரும்பி வந்த, त्वां- உன்னை, यत्- எந்தக்காலத்தில், पश्येयं- பார்ப்பேனோ, सः कालः- அந்தக் காலமானது, इदानीं- இப்பொழுதே, अपि स्यात्- வருமோ!

---

35. (பொ-ரை) ரகு குலத்தில் பிறந்த குழந்தாய்! உலகத்தில் தெய்வத்தினுடைய செயல் ஒருவராலும் எப்பொழுதும் அறியமுடியாதது. ஏனென்றால் வனம் போகவேண்டாமென்று நிர்பந்தித்துக்கொண்டிருக்கிற என்னுடைய வார்த்தையையும் ஒரே பிடிவாதமாகத்தள்ளிவிட்டு வனம் போகும்படியான புத்தியை உனக்குக்கொடுத்ததல்லவா.

36. (பொ-ரை) மஹா சூரனான குழந்தாய்! இப்பொழுது நீ வனவாஸத்திற்காகப் புறப்படு. வனவாஸம் செய்து முடித்து க்ஷேமமாய்த்திரும்பிவந்து ய பேச்சுக்களால் எனக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணப்போகிறாய்.

37. (பொ-ரை) குழந்தாய்! சடை, மரவுரி இவைகளைத்தரித்து வனத்திலிருந்து பதினான்கு வருஷம் முடிந்து திரும்பிவந்த உன்னைநான் பார்க்கக்கூடியதான காலம் இப்பொழுதே வந்துவிடலாகாதா!

तथा हि रामं वनवासनिश्चितं समीक्ष्य देवी परमेण चेतसा ।
उवाच रामं शुभलक्षणं वचो बभूव च स्वस्त्ययनाभिकाङ्क्षिणी ॥ 38 ॥
इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
चतुर्विंशः सर्गः ॥ 24 ॥

38. (ப-ரை) देवी- கௌஸல்யாதேவி, राम- ஸ்ரீராமனை, तथा हि- அவ்விதமாக, वनवासनिश्चित- வனவாஸத்தில் நிர்மாணிக்கவராக, समीक्ष्य- பார்த்து, परमेण चेतसा- மிகவும் சிறந்த ஆதரத்தினால், शुभलक्षण- சுபமான லக்ஷணங்களோடுகூடிய, राम- ஸ்ரீராமனைப்பார்த்து, वचः- வார்த்தையை, उवाच- சொன்னாள், स्वस्त्ययनाभिकाङ्क्षिणी- க்ஷேமத்தைக் கோருகின்றவளாகவும், बभूव- ஆனாள்.

38. (பொ-ரை) கௌஸல்யாதேவி, ஸ்ரீராமன் தன்னுடைய வார்த்தையை மீறி வனவாஸம் செய்கிறது நிச்சயம் எனத் தெரிந்துகொண்டு மிகவும் அதிகமான ஆதரத்தோடு, ஸ்ரீராமனுக்கு மங்களத்தை வேண்டிக்கொண்டு மிகவும் சுபமான லக்ஷணங்களையுடைய ஸ்ரீராமனைப்பார்த்து ஒரு வார்த்தையும் சொன்னாள்.

இங்கு "शुभलक्षण" என்கிற பதத்தை ராமனுக்கு விசேஷமாக சொல்லிற்று. वचः- என்பதற்கு விசேஷணமாகக் கொள்ளும் பக்ஷத்தில் "மங்களங்களைக்குறிக்கக்கூடிய" என்று பொருள் கொள்ளவும்.



पञ्चविंशः सर्गः ॥ 25 ॥

सापनीय तमायासमुपस्पृश्य जलं शुचि ।
चकार माता रामस्य मङ्गलानि मनस्विनी ॥ 1 ॥

1. (ப-ரை) सा- அந்த, रामस्य माता- ஸ்ரீராமனுடைய தாய், तं आयास- அந்த ஆயாஸத்தை, अपनीय- தள்ளிவிட்டு, जल-उपस्पृश्य- ஜலத்தை ஆசமனம் செய்து, शुचिः- பரிசுத்தையாயும், मनस्विनी- சிறந்த மனதுடையவளாய்க்கொண்டு, मङ्गलानि- மங்களாசாஸனங்களை, चकार- செய்தாள்.

---

1. (பொ-ரை) அந்த ஸ்ரீராமனுடைய மாதா, அந்த மன வருத்தத்தைத் தள்ளிவிட்டு, ஆசமனம் செய்து பரிசுத்தையாயிருந்து கம்பீரமான மனதுடன் ஸ்ரீராமனுக்கு மங்களாசாஸனம் செய்தாள்.

न शक्यसे वारयितुं गच्छेदानीं रघूत्तम ।
शीघ्रं च विनिवर्तस्व वर्तस्व च सतां क्रमे ॥ 2 ॥
यं पालयसि धर्मं त्वं धृत्या च नियमेन च ।
स वै राघवशार्दूल धर्मस्त्वामभिरक्षतु ॥ 3 ॥
येभ्यः प्रणमसे पुत्र चैत्येष्वायतनेषु च ।
ते च त्वामभिरक्षन्तु वने सह महर्षिभिः ॥ 4 ॥

---

2. (ப-ரை) हे रघूत्तम- ரகுகுலத்து மன்னர்களில் சிறந்தவனே, वारयितुं- தடுப்பதற்கு, न शक्यसे- முடியவில்லை, इदानीं- இப்பொழுது, गच्छ- புறப்பட்டுப்போ, शीघ्रं च- சீக்ரமாகவும், विनिवर्तस्व- திரும்பிவிடு, सतां- பெரியோர்களுடைய, क्रमे- மார்க்கத்தில், वर्तस्व च- நிற்கவேண்டும்.

3. (ப-ரை) हे राघवशार्दूल- ரகுகுலத்து மன்னவர்களில் ச்ரேஷ்டனே, त्वं- நீ, यं धर्मं- யாதொரு தர்மத்தை, धृत्या च- ப்ரீதியுடனும், नियमेन च- குறைவில்லாமலும், पालयसि- பரிபாலிக்கிறாயோ, सः वै धर्मः- அந்த ப்ரஸித்தமான தர்மம், त्वां- உன்னை, अभिरक्षतु- நன்றாய் ரக்ஷிக்கட்டும்.

4. (ப-ரை) हे पुत्र- குழந்தாய், चैत्येषु- நாற்சந்திவீதிகளிலும், आयतनेषु च- தேவாலயங்களிலும், येभ्यः- யாதொரு தேவர்கள் பொருட்டு, प्रणमसे- நமஸ்காரம் செய்கிறாயோ, ते च- அந்த தேவர்களும், महर्षिभिः सह- மஹரிஷிகளுடன் கூட, वने- வனத்தில், त्वां- உன்னை, अभिरक्षन्तु- எங்கும் ரக்ஷிக்கவேண்டும்.

2. (பொ-ரை) ரகு குலத்தில் பிறந்தவர்களில் சிறந்தவனே, வனம்போவதாக தீர்மானித்த உன்னைத்தடுக்க முடியவில்லை. ஆகையால் இப்பொழுது புறப்பட்டுப்போ. வனவாஸகாலமான பதினான்கு வருஷம் முடிந்த உடன் சீக்ரமாகத் திரும்பிவந்து முன்னோர்களின் மார்க்கத்தில் நிற்கவேண்டும். அதாவது பட்டாபிஷேகம் செய்துகொண்டு ராஜ்ய பரிபாலனம் செய்யும் நிலைமையில் உறுதியாக நீ நிற்கவேண்டும்.

3. (பொ-ரை) ரகு குலத்தில் பிறந்தவர்களுக்குள் சிறந்தவனே! நீ ப்ரீதியுடனும், குறைவில்லாமலும், எந்த தர்மத்தை ரக்ஷிக்கின்றாயோ, ப்ரஸித்தமான அந்த தர்மமானது உன்னை எங்கும் ரக்ஷிக்கவேண்டும்.

4. (பொ-ரை) குழந்தாய் நாற்சந்தி வீதிகளிலும், தேவாலயங்களிலும், இருக்கிற எந்த தேவதைகளை நீ வணங்கி வருகின்றாயோ. அந்த தேவதைகளும், மஹரிஷிகளும் வனத்தில் உன்னை எங்கும் ரக்ஷிக்கவேண்டும்.

यानि दत्तानि तेऽस्त्राणि विश्वामित्रेण धीमता ।
तानि त्वामभिरक्षन्तु गुणैः समुदितं सदा ॥ 5 ॥
पितृशुश्रूषया पुत्र मातृशुश्रूषया तथा ।
सत्येन च महाबाहो चिरं जीवाभिरक्षितः ॥ 6 ॥
समित्कुशपवित्राणि वेद्यश्चायतनानि च ।
स्थण्डिलानि विचित्राणि शैला वृक्षाः क्षुपा ह्रदाः ॥
पतङ्गाः पन्नगाः सिंहास्त्वां रक्षन्तु नरोत्तम ॥ 7 ॥

5. (ப-ரை) धीमता- சிறந்த ஜ்ஞானமுள்ளவரான, विश्वामित्रेण- விச்வாமித்ர மஹரிஷியினால், यानि अस्त्राणि- எந்த அஸ்த்ரங்கள், ते- உனக்கு, दत्तानि- கொடுக்கப்பட்டனவோ, तानि- அவைகள், गुणैः- குணங்களால், समुदितं- நிறைந்திருக்கின்ற, त्वां- உன்னை, सदा- எப்பொழுதும், अभिरक्षन्तु- ரக்ஷிக்கவேண்டும்.

6. (ப-ரை) महाबाहो- நீண்ட தோள்வலியுடைய, पुत्र- குழந்தாய், पितृशुश्रूषया- பிதாவின் சிச்ருஷையினாலும், तथा- அப்படி, मातृशुश्रूषया- மாதாவினுடைய சிச்ருஷையினாலும், सत्येन च- ஸத்யத்தினாலும், अभिरक्षितः- நன்றாய் ரக்ஷிக்கப்பட்டு, चिरं जीव- நெடுநாள் நீ வாழ்ந்திருக்கவேண்டும்.

7. (ப-ரை) हे नरोत्तम- ஹே புருஷோத்தமனே! समित्कुशपवित्राणि- ஸமித்துக்களும், தர்ப்பங்களும், பவித்ரங்களும், वेद्यः च- யாகவேதிகளும், आयतनानि च- தேவாலயங்களும், विचित्राणि- விசித்ரங்களான, स्थण्डिलानि- தேவதைகளைப் பூஜை செய்யக் கூடிய ஸ்தலங்களும், शैलाः- பர்வதங்களும், वृक्षाः- மரங்களும், क्षुपाः- சிறு செடிகளும், ह्रदाः- மடுவுகளும், पतङ्गाः- பக்ஷிகளும், पन्नगाः- ஸர்ப்பங்களும், सिंहाः- ஸிம்ஹங்களும், त्वां- உன்னை, रक्षन्तु- ரக்ஷிக்கட்டும்.

5. (பொ-ரை) மஹாஜ்ஞானியான விச்வாமித்ர மஹரிஷி உனக்கு எந்த அஸ்த்ரங்களை உபதேசம் செய்தாரோ அந்த அஸ்த்ரங்கள் (அந்த அஸ்த்ர தேவதைகள்) ஸகல குணங்களும் பொருந்திய உன்னை எப்பொழுதும் காப்பாற்றவேண்டும்.

6. (பொ-ரை) நீண்ட தோள்வலியுடைய குழந்தாய் பிதாவின் சிச்ருஷையினாலும், மாதாவின் சிச்ருஷையினாலும், ஸத்யத்தினாலும், நன்றாய் ரக்ஷிக்கப்பட்டு நீ நெடுநாள் வாழ்ந்திருக்கவேண்டும்.

7. (பொ-ரை) புருஷோத்தமா! ஸமித்துக்களும், தர்ப்பங்களும், பவித்ரங்களும், அக்னி குண்டங்களும், தேவாலயங்களும், தேவர்களை ஆராதனை பண்ணி பூஜை செய்வதற்குரிய விசித்ரமான ஸ்தலங்களும், பர்வதங்களும், வ்ருக்ஷங்களும், சிறு கிளைகளுள்ள செடிகளும், மடுவுகளும், பக்ஷிகளும், ஸர்ப்பங்களும், ஸிம்ஹங்களும் உன்னை ரக்ஷிக்கவேண்டும்.

स्वस्ति साध्याश्च विश्वे च मरुतश्च महर्षयः ।
स्वस्ति धाता विधाता च स्वस्ति पूषा भगोऽर्यमा ॥ 8 ॥
लोकपालाश्च ते सर्वे वासवप्रमुखास्तथा ।
ऋतवश्चैव पक्षाश्च मासाः संवत्सराः क्षपाः ॥
दिनानि च मुहूर्ताश्च स्वस्ति कुर्वन्तु ते सदा ॥ 9 ॥
स्मृतिर्धृतिश्च धर्मश्च पातु त्वां पुत्र सर्वतः ॥ 10 ॥

8–9. (ப-ரை) साध्याः च- ஸாத்யர்களும், विश्वे च- விச்வே தேவர்களும், मरुतः च- ஸப்த மருத்துக்களும், महर्षयः- மஹரிஷிகளும், स्वस्ति- (உனக்கு) க்ஷேமத்தைச் செய்யட்டும், धाता- தாதாவும், विधाता च- விதாதாவும், स्वस्ति- (உனக்கு) க்ஷேமத்தைச்செய்யவேண்டும், पूषा- பூஷாவும், भगः- பகனும், अर्यमा- அர்யமாவும், (இவர்கள் பனிரண்டு ஸூர்யர்களில் உள்பிரிவு.) स्वस्ति- (உனக்கு) க்ஷேமத்தைச் செய்யவேண்டும், वासवप्रमुखाः- இந்திரனைத்தலைவராகவுடைய, ते लोकपालाः- அந்த லோகபாலர்கள், सर्वे- எல்லோரும், ऋतवः च एव- ருதுக்களும், पक्षाः च- பக்ஷங்களும், मासाः- மாஸங்களும், संवत्सराः- வருஷங்களும், क्षपाः- ராத்ரிகளும், दिनानि च- தினங்களும, मुहूर्ताः च- முஹூர்த்தங்களும், ते- உனக்கு, सदा- எப்பொழுதும், स्वस्ति- க்ஷேமத்தை, कुर्वन्तु- செய்யட்டும்.

10. (ப-ரை) हे पुत्र- குழந்தாய், स्मृतिः- த்யானமும, धृतिः च- யோகமும், धर्मः च- தர்மமும், त्वां- உன்னை, सर्वतः- எல்லாவிடங்களிலும், पातु- ரக்ஷிக்கட்டும்.

8—9. (பொ-ரை) ஸாத்யர்களென்கிற தேவர்களின் வகுப்பினரும், விச்வே தேவர்களும், ஸப்தமருத்துக்களும, மஹரிஷிகளும், தாதாவும, விதாதாவும, பூஷாவும. பகனும், அர்யமாவும, இந்திரன் முதலான அஷ்ட திக்கு பாலர்களெல்லோரும், வஸந்தம் முதலாகிய ஆறு ருதுக்களும, சுக்ல, க்ருஷ்ண என்கிற பக்ஷங்களும், மாஸங்களும, ஸம்வத்ஸரங்களும், இரவுகளும், தினங்களும், முஹூர்த்தங்களும், உனக்கு எப்பொழுதும் க்ஷேமத்தை செய்யவேண்டும.

(முஹூர்த்தமாவது:— தினத்தில் முப்பதில் ஒருபாகம்—அதாவது—இரண்டு நாழிகை)

10. (பொ-ரை) குழந்தாய்! த்யானம், யோகம், தர்மம இவைகளும் உன்னை எங்கும் ரக்ஷிக்கட்டும்.

स्कन्दश्च भगवान्देवः सोमश्च सबृहस्पतिः ।
सप्तर्षयो नारदश्च ते त्वां रक्षन्तु सर्वतः ॥ 11 ॥
याश्चापि सर्वतः सिद्धा दिशश्च सदिगीश्वराः ।
स्तुता मया वने तस्मिन्पान्तु त्वां पुत्र नित्यशः ॥ 12 ॥
शैलाः सर्वे समुद्राश्च राजा वरुण एव च ।
द्यौरन्तरिक्षं पृथिवी नद्यः सर्वास्तथैव च ॥ 13 ॥
नक्षत्राणि च सर्वाणि ग्रहाश्च सहदेवताः ।
अहोरात्रे तथा सन्ध्ये पान्तु त्वां वनमाश्रितम् ॥ 14 ॥

---

11. (ப-ரை) भगवान्- பூஜ்யரான, स्कन्दः च- ஸனத்குமாரரும், सबृहस्पतिः- ப்ருஹஸ்பதியோடு கூடிய, सोमः- देवः च- ஸோமதேவரும், सप्तर्षयः च- மரீசி முதலான ஸப்த ரிஷிகளும், नारदः च- நாரதரும், ते- இவர்களும், त्वां- உன்னை, सर्वतः- எல்லாவிடங்களிலும், रक्षन्तु- ரக்ஷிக்கவேண்டும்.

12. (ப-ரை) पुत्र- குழந்தாய்! सर्वतः सिद्धाः- உலகமெங்கும் ப்ரஸித்தங்களான, सदिगीश्वराः- திக்பாலகர்களுடன் கூடிய, याः च अपि- दिशः च- எந்த திக்குகள் உண்டோ, (ताः- அவைகளும்) मया- என்னால், स्तुताः- ஸ்தோத்ரம் பண்ணப்பட்டவைகளாய்க்கொண்டு, तस्मिन् वने- அந்த தண்டகாவனத்தில், त्वां- உன்னை, नित्यशः- எப்பொழுதும், पान्तु- ரக்ஷிக்கவேண்டும்.

13-14. (ப-ரை) शैलाः- பர்வதங்களும், सर्वे समुद्राः च- எல்லா ஸமுத்ரங்களும், राजा- குபேரனும், वरुणः एव च- வருணனும், द्यौः- ஸ்வர்கலோகமும், अन्तरिक्षं- ஆகாயமும், पृथिवी- பூமியும், तथैव- அப்படியே, सर्वाः नद्यः च- எல்லா நதிகளும், सर्वाणि नक्षत्राणि च- எல்லா நக்ஷத்திரங்களும், सहदेवताः- தேவதைகளோடு கூடிய, ग्रहाः च- அங்காரகன் முதலான க்ரஹங்களும், अहोरात्रे- இரவும் பகலும், तथा- அப்படி, सन्ध्ये- இரண்டு ஸந்த்யைகளும், वन- आश्रितम्- வனத்தை அடைந்திருக்கின்ற, त्वां- உன்னை, पान्तु- காப்பாற்றவேண்டும்.

11. (பொ-ரை) ஞானசக்தி குணங்கள் நிறைந்த ஸ்கந்ததேவர், ப்ருஹஸ்பதியோடு கூடிய ஸோமதேவர், ஸப்தரிஷிகள், நாரதர் இவர்களும் உன்னை எல்லாவிடங்களிலும் ரக்ஷிக்கவேண்டும்.

12. (பொ-ரை) குழந்தாய்! உலகமெங்கும் ப்ரஸித்தங்களான திக்பாலர்களோடு கூடிய திக்குக்களும், என்னால் ஸ்தோத்ரம் பண்ணப்பட்டு நீ ஸஞ்சரிக்கப்போகின்ற வனத்தில் உன்னை எப்பொழுதும் காப்பாற்றவேண்டும்.

13—14. (பொ-ரை) பர்வதங்களும், எல்லா ஸமுத்ரங்களும், குபேரனும், வருணனும், ஸ்வர்க்கமும், ஆகாயமும், பூமியும், எல்லா நதிகளும், எல்லா நக்ஷத்திரங்களும், அதிதேவதைகளோடு கூடிய அங்காரகன் முதலான க்ரஹங்களும், இரவும்,

ऋतवश्चैव षट् पुण्या मासाः संवत्सरास्तथा ।
*कलाश्च *काष्ठाश्च तथा तव शर्म दिशन्तु ते ॥ 15 ॥
महावने विचरतो मुनिवेषस्य धीमतः ।
तवादित्याश्च दैत्याश्च भवन्तु सुखदाः सदा ॥ 16 ॥
राक्षसानां पिशाचानां रौद्राणां क्रूरकर्मणाम् ।
क्रव्यादानां च सर्वेषां मा भूत्पुत्रक ते भयम् ॥ 17 ॥

15. (ப-ரை) षट् ऋतवः च एव- ஆறு ருதுக்களும், पुण्याः मासाः- புண்யங்களான மாஸங்களும், तथा- அப்படியே, ते संवत्सराः- அந்த வருஷங்களும், कलाः च- கலைகளும், काष्ठाः च- காஷ்டைகளும், तव- உனக்கு, शर्म- ஸுகத்தை, दिशन्तु- கொடுக்கட்டும்.

16. (ப-ரை) मुनिवेषस्य- ரிஷிவேஷம் கொண்டவனும், महावने- பெரிய அரண்யத்தில், विचरतः- ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிற, धीमतः- புத்திசாலியான, तव- உனக்கு, आदित्याः च- தேவர்களும், दैत्याः च அஸுரர்களும், सदा- எப்பொழுதும், सुखदाः- ஸுகத்தைக்கொடுக்கிறவர்களாக, भवन्तु- இருக்கவேண்டும்.

17. (ப-ரை) हे पुत्रक- குழந்தாய், रौद्राणां- கொடியவர்களான, राक्षसानां- ராக்ஷஸர்களுடையவும், पिशाचानां- பிசாசங்களுடையவும், क्रूरकर्मणाम्- கொடிய செய்கைகளை உடைய, सर्वेषां- ஸமஸ்தமான, क्रव्यादानां च- மாம்ஸ போஜிகளான, ப்ராணிகளுடையவும், भयम्- பயமானது, ते- உனக்கு, माभूत्- உண்டாகாமலிருக்கவேண்டும்.

பகலும், ப்ராதஸந்த்யை, ஸாயம் ஸந்த்யையும் வனத்திலிருக்கும் காலத்தில் உன்னைக் காப்பாற்றவேணும்.

15. (பொ-ரை) ஆறு ருதுக்களும், புண்ய மாஸங்களும், ஸம்வத்ஸரங்களும், கலைகளும், காஷ்டைகளும், உனக்கு ஸுகத்தைக்கொடுக்கவேண்டும்.

16. (பொ-ரை) முனிவேஷத்துடன் தண்டகாவனமென்கிற பெரிய வனத்தில் ஸஞ்சரிக்கின்ற புத்திமானான உனக்கு தேவர்களும், அஸுரர்களும், எப்பொழுதும் ஸுகத்தைக்கொடுத்துக்கொண்டேயிருக்கவேண்டும்.

17. (பொ-ரை) குழந்தாய்! கொடியவர்களான ராக்ஷஸர்கள், பிசாசங்கள், கொடிய தொழில்களைச்செய்கின்ற மாம்ஸ போஜிகளான ப்ராணிகள், இவைகளெல்லாவற்றினுமிருந்து உனக்கு எப்பொழுதும் பயம் உண்டாகாமலிருக்கவேண்டும்.

---

*काष्ठै- யாவது:--பதினெட்டு இமைகொட்டு காலம்.

*कलै- யாவது:—அந்த காஷ்டை முப்பதுகொண்ட காலம்.

प्लवगा वृश्चिका दंशा मशकाश्चैव कानने ।
सरीसृपाश्च कीटाश्च मा भूवन्गहने तव ॥ 18 ॥
महाद्विपाश्च सिंहाश्च व्याघ्रा ऋक्षाश्च दंष्ट्रिणः ।
महिषाः शृङ्गिणो रौद्रा न ते द्रुह्यन्तु पुत्रक ॥ 19 ॥
नृमांसभोजना रौद्रा ये चान्ये सत्वजातयः ।
मा च त्वां हिंसिषुः पुत्र मया संपूजितास्त्विह ॥ 20 ॥

18. (ப-ரை) प्लवगाः- குரங்குகளும், वृश्चिकाः- தேள்களும், दंशाः- காட்டு ஈக்களும், मशकाः च एव- கொசுக்களும், सरीसृपाः च- மலைப்பாம்புகளும், कीटाः च- புழுக்களும், गहने कानने- நுழையமுடியாத வனத்தில், तव- உனக்கு, माभूवन्- இல்லாமலிருக்கவேண்டும்.

19. (ப-ரை) हे पुत्रक- குழந்தாய்! महाद्विपाः च- பெரிய காட்டு யானைகளும், सिंहाः च- சிங்கங்களும், व्याघ्राः- புலிகளும், ऋक्षाः च- கரடிகளும், दंष्ट्रिणः- காட்டுப்பன்றிகளும், शृङ्गिणः- பெரிய கொம்புகளுள்ளவைகளாயும், रौद्राः- க்ரூரஸ்வபாவங்களான, महिषाः- காட்டு எருமைகளும், ते- உன் பொருட்டு, न द्रुह्यन्तु- த்ரோஹம் செய்யாமலிருக்கவேண்டும்.

20. (ப-ரை) पुत्र- குழந்தாய், नृमांसभोजनाः- மநுஷ்ய மாம்ஸத்தை புஜிக்கின்ற, रौद्राः- கொடியவைகளான, ये च- யாவை சில, अन्ये- வேறு, सत्वजातयः- ஜந்துக்கள், (இருக்கின்றனவோ). ते तु- அவைகளும், इह- இவ்விடத்தில், मया- என்னாலே, पूजिताः- நன்றாய் பூஜிக்கப்பட்டவைகளாயிருந்து, त्वां- உன்னை, मा च हिंसिषुः- ஹிம்ஸிக்காமலிருக்கவேண்டும்.

18. (பொ-ரை) குரங்குகளும், தேள்களும், காட்டு ஈக்களும், கொசுக்களும், மலைப்பாம்புகளும், புழுக்களும், பெரிய காட்டில் உனக்கு ஒருவித கஷ்டங்களையும் செய்யாமலிருக்கவேண்டும்.

19. (பொ-ரை) குழந்தாய்! பெரிய காட்டு யானைகளும், சிங்கங்களும், புலிகளும், கரடிகளும், காட்டுப்பன்றிகளும், பெரிய கொம்புகளையுடைய க்ரூரங்களான காட்டு எருமைகளும், உனக்கு ஒருவிதமான த்ரோஹத்தையும் செய்யாமலிருக்கவேண்டும்.

20 (பொ-ரை) குழந்தாய்! மநுஷ்ய மாம்ஸம் தின்கின்ற கொடியவைகளான யாவை சில துஷ்ட ஜந்துக்களுண்டோ அவைகளையும், நான் இங்கு பூஜிக்கிறேன் அவைகள் உனக்கு வனத்தில் ஒரு ஹிம்ஸையையும் செய்யாமலிருக்கவேண்டும்.

आगमास्ते शिवाः सन्तु सिध्यन्तु च पराक्रमाः ।
सर्वसंपत्तये राम स्वस्तिमान्गच्छ पुत्रक ॥ 21 ॥
स्वस्ति तेऽस्त्वान्तरिक्षेभ्यः पार्थिवेभ्यः पुनः पुनः ।
सर्वेभ्यश्चैव देवोभ्यो ये च ते परिपन्थिनः ॥ 22 ॥
गुरुः सोमश्च सूर्यश्च धनदोऽथ यमस्तथा ।
पान्तु त्वामर्चिता राम दण्डकारण्यवासिनम् ॥ 23 ॥

21. *(ப-ரை)* हे पुत्रक राम- *குழந்தாய் ராமனே!* ते- *உனக்கு,* आगमा:- *போகும் வழிகள்,* शिवा:- *க்ஷேமகரங்களாக,* सन्तु- *இருக்கவேண்டும்.* सर्वसम्पत्तये- *ஸகலவித ஸம்பத்துமுண்டாவதற்காக,* पराक्रमा:- *பராக்ரமங்கள்,* सिध्यन्तु च- *ஸித்தி அடைய வேண்டும்,* स्वस्तिमान्- *க்ஷேமமுடையவனாய்,* गच्छ- *நீ போய்வரவேண்டும்.*

22. *(ப-ரை)* आन्तरीक्षेभ्य:- *ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்றதுகளும்,* पार्थिवेभ्य:- *பூமியில் ஸஞ்சரிக்கின்றதுகளுமான, ப்ராணிகளிடத்திலிருந்து,* पुन: पुन:- *அடிக்கடி,* ते- *உனக்கு,* स्वस्ति- *க்ஷேமமானது,* अस्तु- *உண்டாகவேண்டும்,* ये च- *எவைகளை,* ते- *உனக்கு,* परिपन्थिन:- *விரோதிகளோ,* (तेभ्य:- *அந்த*), सर्वेभ्य: देवेभ्य: च एव- *எல்லா தேவர்களிடமிருந்தும்,* स्वस्ति अस्तु- *உனக்கு க்ஷேமமுண்டாகவேண்டும்.*

23. *(ப-ரை)* हे राम- *ராமனே!* गुरु:- *ப்ருஹஸ்பதியும்,* सोम: च- *சந்திரனும்,* सूर्य: च- *ஸூர்யனும்,* धनद:- *குபேரனும்,* अथ- *பிறகு,* तथा- *அப்படியே,* यम - *யமனும்,* अर्चिता:- (*என்னால்*) *பூஜிக்கப்பட்டவர்களாய்க்கொண்டு,* दण्डकारण्यवासिनम्- *தண்டகாவனத்தில் வாஸம் செய்கின்ற,* त्वां- *உன்னை,* पान्तु- *ரக்ஷிக்கவேண்டும்.*

21. *(பொ-ரை)* *குழந்தாய் ராமா! நீ போகும் வழிகள் உனக்கு க்ஷேமகரங்களாயிருக்கவேண்டும். வனத்தில் பழம், காய், கிழங்கு முதலியவைகள் எல்லாம் கிடைப்பதற்காக உன் பராக்ரமங்கள் ஸித்திக்கவேண்டும். நீயும் க்ஷேமமாய் போய் வரவேண்டும்.*

22 *(பொ-ரை)* *ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்றதுகளும் பூமியில் ஸஞ்சரிக்கின்றதுகளுமான ப்ராணிகளிடத்திலிருந்தும், உனக்கு விரோதியான ஸகல தேவர்களிடத்திலிருந்தும் அடிக்கடி உனக்கு க்ஷேமமுண்டாகவேண்டும்.*

23. *(பொ-ரை)* *ராமா! ப்ருஹஸ்பதியும், சந்திரனும், ஸூர்யனும், குபேரனும், யமனும், என்னால் பூஜிக்கப்பட்டு தண்டகாவனத்தில் வாஸம் பண்ணுகின்ற உன்னைக் காப்பாற்றவேண்டும்.*

अग्निर्वायुस्तथा धूमो मन्त्राश्चर्षिमुखाच्च्युताः
उपस्पर्शनकाले तु पान्तु त्वां रघुनन्दन ॥ 24 ॥
सर्वलोकप्रभुर्ब्रह्मा भूतभर्ता तथर्षयः ।
ये च शेषाः सुरास्ते त्वां रक्षन्तु वनवासिनम् ॥ 25 ॥
इति माल्यैः सुरगणान्गन्धैश्चापि यशस्विनी ।
स्तुतिभिश्चानुरूपाभि रानर्चायतलोचना ॥ 26 ॥

24. (ப-ரை) हे रघुनन्दन- ரகு குலக்கொழுந்தாய், अग्निः- அக்நியும், वायुः- வாயுவும், तथा- அப்படியே, धूमः- (ஹோமத்தின்) புகையும், ऋषिमुखात्- ரிஷிகளின் வாயில் நின்றும், च्युताः- வெளிவந்த, मन्त्राः च- மந்திரங்களும், उपस्पर्शनकाले तु- ஆசமனம் செய்யுங்காலத்தில், त्वां- உன்னை, पान्तु- ரக்ஷிக்கவேண்டும்.

25. (ப-ரை) सर्वलोकप्रभुः- ஸர்வலோகங்களுக்கும் ப்ரபுவான, ब्रह्मा- சதுர்முகனும், भूतभर्ता- ஸகலப்ராணிகளுக்கும் ஆதாரமான, ஸ்ரீமந் நாராயணனும், तथा- அப்படியே, ऋषयः- ரிஷிகளும், शेषाः- மீதியான, ये च सुराः- யாதொரு தேவர்கள் இருக்கின்றார்களோ, ते- அவர்களும், वनवासिनम्- வனவாஸம் செய்கின்ற, त्वां- உன்னை रक्षन्तु- ரக்ஷிக்கவேண்டும்.

26. (ப-ரை) यशस्विनी- கீர்த்தியுடையவளாயும், आयतलोचना- விசாலமான கண்களையுடையவளுமான, கௌஸல்யாதேவி, इति- இவ்விதம் எண்ணிக்கொண்டு, माल्यैः- மாலைகளாலும், गन्धैः च- अपि- சந்தனங்களாலும், अनुरूपाभिः- தகுந்தவைகளான, स्तुतिभिः च- ஸ்தோத்ரங்களாலும், सुरगणान्- தேவ ஸமூஹங்களை, आनर्च- பூஜித்தாள்.

---

24. (பொ-ரை) ரகுநந்தனா! அக்நியும், வாயுவும், ஹோமத்தின் புகையும் ரிஷிகளின் வாக்கிலிருந்து புறப்பட்டு வெளிக்கிளம்பிய மந்திரங்களும், ஆசமன காலத்தில் உன்னை ரக்ஷிக்கவேண்டும்.

25. (பொ-ரை) ஸர்வலோகங்களுக்கும் ப்ரபுவான ப்ரம்ம தேவனும், ஸர்வ ப்ராணிகளுக்கும் ஆதாரமான ஸ்ரீமந் நாராயணனும், ரிஷிகளும், முன் சொன்னவர்களைத் தவிர மற்றுமுள்ள தேவர்களும், வனவாஸம் செய்கின்ற உன்னை ரக்ஷிக்கவேண்டும்.

26. (பொ-ரை) கீர்த்தியுடையவளும், விசாலமான கண்களையுடையவளுமான கௌஸல்யாதேவி இப்படிச் சொல்லியபடி மனதில் த்யானித்துக்கொண்டு, மாலைகளாலும், சந்தனங்களாலும், தகுந்த ஸ்தோத்ரங்களாலும் தேவ ஸமூஹங்களை பூஜித்தாள்.

ज्वलनं समुपादाय ब्राह्मणेन महात्मना ।
हावयामास विधिना राममङ्गलकारणात् ॥ 27 ॥

घृतं श्वेतानि माल्यानि समिधः श्वेतसर्षपान् ।
उपसंपादयामास कौसल्या परमाङ्गना ॥ 28 ॥

उपाध्यायः स विधिना हुत्वा शान्तिमनामयम् ।
हुतहव्यावशेषेण बाह्यं बलिमकल्पयत् ॥ 29 ॥

**27.** (ப-ரை) राममङ्गलकारणात्- ராமனுக்கு மங்களம் உண்டாகவேண்டிய நிமித்தமாக, ज्वलनं- அக்நியை, समुपादाय- வைத்துக்கொண்டு, महात्मना- மஹாத்மாவான, ब्राह्मणेन- ப்ராம்மணனால், विधिना- சாஸ்த்ர முறைமையாய், हावयामास- ஹோமம் செய்வித்தாள்.

**28.** (ப-ரை) परमाङ्गना- உத்தம ஸ்த்ரீயான कौसल्या- கௌஸல்யை, घृतं- நெய்யையும், श्वेतानि माल्यानि- வெளுப்பான மாலைகளையும், समिधः- ஸமித்துக்களையும், श्वेतसर्षपान्- வெள்ளைக்கடுகுகளையும், उपसंपादयामास- பக்கத்தில் சேகரித்துவைத்தாள்.

**29** (ப-ரை) सः उपाध्यायः- அந்த உபாத்யாயர், अनामयं- ஆரோக்யத்தை உத்தேசித்து, शान्तिं- சாந்தி ஹோமத்தை, विधिना- சாஸ்த்ர விதிப்படி, हुत्वा- செய்து, हुतहव्य अवशेषेण- ஹோமம் செய்த ஹவிஸ்ஸின் மீதியால், बाह्यं- வெளியில் செய்யவேண்டிய, बलिं- பலியை, अकल्पयत्- செய்தார்.

**27.** (பொ-ரை) ஸ்ரீராமனுக்கு மங்களம் உண்டாகவேண்டிய நிமித்தம் அக்நியை வளர்த்தி மஹாத்மாவான ப்ராம்மணனைக்கொண்டு சாஸ்த்ர விதிப்படி ஹோமமும் செய்வித்தாள்.

**28.** (பொ-ரை) உத்தம ஸ்த்ரீயான கௌஸல்யாதேவி, ஹோமத்திற்காக நெய், மல்லிகை முதலான வெள்ளை புஷ்பங்களினால் கட்டின மாலை, ஸமித்துக்கள், வெள்ளைக்கடுகுகள் இவைகளையும் சேகரித்து ஸமீபத்தில் வைத்துக்கொண்டாள்.

**29** (பொ-ரை) அந்த உபாத்யாயரும், ஸ்ரீராமனுடைய ஆரோக்யத்தை உத்தேசித்து சாஸ்த்ரப்படி சாந்தி ஹோமம் செய்து, மீதியான ஹவிஸ்ஸினால் வெளியில் திக்பாலகர்களுக்காக செய்யவேண்டிய பலியையும் செய்தார்.

मधुदध्यक्षतघृतैः स्वस्तिवाच्य द्विजांस्ततः ।
वाचयामास रामस्य वने स्वस्त्ययनक्रियाः ॥ 30 ॥
ततस्तस्मै द्विजेन्द्राय राममाता यशस्विनी ।
दक्षिणां प्रददौ काम्यां राघवं चेदमब्रवीत् ॥ 31 ॥
यन्मङ्गलं सहस्राक्षे सर्वदेवनमस्कृते ।
वृत्रनाशे समभवत्तत्ते भवतु मङ्गलम् ॥ 32 ॥

30 (ப-ரை) ततः- பிறகு. मधु दधि अक्षत घृतैः- தேன், தயிர், அக்ஷதை, நெய் இவைகளால், द्विजान्- ப்ராம்மணர்களை, स्वस्ति वाच्य- ஸ்வஸ்திவாசனம் சொல்லும்படி செய்வித்து. रामस्य- ராமனுக்கு, वने- வனத்தில், स्वस्त्ययनक्रियाः- க்ஷேமத்தையுண்டு பண்ணக்கூடிய மந்த்ரங்களை, वाचयामास- சொல்லும்படி செய்தாள்.

31. (ப-ரை) ततः- பிறகு, यशस्विनी- புகழையுடையவளான, राममाता- ஸ்ரீ ராமனுடைய தாயார், तस्मै द्विजेन्द्राय- அந்த ப்ராம்மணோத்தமரின் பொருட்டு, काम्यां- இஷ்டமான, दक्षिणां- தக்ஷிணையை, प्रददौ- கொடுத்தாள், राघवं- ஸ்ரீராமனைப்பார்த்து, इदं च- இந்த வார்த்தையையும், अब्रवीत्- சொன்னாள்.

32. (ப-ரை) वृत्रनाशे- வ்ருத்ராஸுரனை ஸம்ஹாரம் செய்த நிமித்தமாக, सर्वदेवनमस्कृते- ஸர்வதேவர்களாலும் நமஸ்கரிக்கப்பட்ட, सहस्राक्षे- ஆயிரம் கண்ணுள்ள இந்திரனிடத்தில், यत् मङ्गलं- யாதொரு மங்களமானது, समभवत्- உண்டாயிற்றோ, तत् मङ्गलं- அந்த மங்களமானது, ते- உனக்கு, भवतु- உண்டாகவேண்டும்.

30. (பொ-ரை) பிறகு தேன், தயிர், அக்ஷதை, நெய் இவைகளை தக்ஷிணையாகக்கொடுத்து, ப்ராம்மணர் மூலமாக ஸ்வஸ்திவாசனமும் செய்து வனத்தில் ராமனுக்கு க்ஷேமமுண்டாகும்படி மந்த்ரங்களையும் சொல்லும்படி செய்தாள்.

31. (பொ-ரை) பிறகு கீர்த்தியுடையவளான ஸ்ரீராமன் தாயார் ஹோமம் செய்த அந்த ப்ராம்மணோத்தமருக்கு அபீஷ்டமான தக்ஷிணையையும் கொடுத்து ஸ்ரீராமனைப்பார்த்துப் பின்வருமாறு சொன்னாள்.

32. (பொ-ரை) வ்ருத்ராஸுரனை ஸம்ஹாரம் செய்ததற்காக ஸர்வதேவர்களாலும் நமஸ்கரிக்கப்பட்ட இந்திரனுக்குண்டான மங்களம் உனக்கும் உண்டாகவேண்டும்.

यन्मङ्गलं सुपर्णस्य विनताऽकल्पयत्पुरा ।
अमृतं प्रार्थयानस्य तत्ते भवतु मङ्गलम् ॥ 33 ॥
अमृतोत्पादने दैत्यान्घ्नतो वज्रधरस्य यत् ।
अदितिर्मङ्गलं प्रादात्तत्ते भवतु मङ्गलम् ॥ 34 ॥
त्रीन्विक्रमान्प्रक्रमतो विष्णोरमिततेजसः ।
यदासीन्मङ्गलं राम तत्ते भवतु मङ्गलम् ॥ 35 ॥

33 (ப-ரை) पुरा முன்காலத்தில், अमृतं- அம்ருதத்தை, प्रार्थयानस्य- வேண்டிச் சென்ற, सुपर्णस्य- கருடனுக்கு, विनता- விநதா தேவியானவள், यत् मङ्गलम्- யாதொரு மங்களத்தை, अकल्पयत्- செய்தாளோ, तत् मङ्गलम्- அந்த மங்களமானது, ते- உனக்கு, भवतु- உண்டாகட்டும்.

34. (ப-ரை) अमृतोत्पादने- அம்ருதம் உண்டாகும் காலத்தில், दैत्यान्- அஸுரர்களை, घ्नतः- கொல்லுகின்ற, वज्रधरस्य- இந்திரனுக்கு, यत् मङ्गलं- யாதொரு மங்களத்தை, अदितिः- அதிதி தேவியானவள், प्रादात्- கொடுத்தாளோ, तत्- मङ्गलम्- அந்த மங்களமானது, ते- உனக்கு, भवतु- உண்டாகவேண்டும்

35. (ப-ரை) हे राम- ஸ்ரீராமனே! त्रीन् विक्रमान्- மூன்று அடிகளை, प्रक्रमतः- வைத்தவராயும், अमित तेजसः- அளவிறந்த தேஜஸ்ஸை உடையவராயுமான, विष्णोः- விஷ்ணுவுக்கு, यत् मङ्गलं- யாதொரு மங்களமானது, आसीत्- முன் உண்டாயிற்றோ, तत् मङ्गलम्- அந்த மங்களமானது, ते- உனக்கு, भवतु- உண்டாகவேண்டும்.

33 (பொ-ரை) முன் காலத்தில் அம்ருதம் கொண்டுவருவதற்காக தேவலோகத்திற்குப் புறப்பட்ட கருடனைக் குறித்து அவர் மாதாவான விநதா தேவி என்ன மங்களத்தைச் செய்தாளோ அந்த மங்களம் உனக்கு உண்டாகவேண்டும்.

34. (பொ-ரை) அம்ருதம் உண்டாவதற்காக ஸமுத்ரத்தைக் கடையும் காலத்தில் அஸுரர்களை ஸம்ஹரித்த வஜ்ரதாரியான இந்திரனுக்கு அதிதி தேவி என்ன மங்களம் செய்தாளோ அந்த மங்களம் உனக்கும் உண்டாகவேண்டும்.

35. (பொ-ரை) ஹே ராமா! முன் காலத்தில் மூன்றடிகளால் உலகங்களை அளந்த அளவற்ற ப்ரபாவமுடைய மஹாவிஷ்ணுவுக்கு எந்த மங்களம் உண்டாயிற்றோ அந்த மங்களம் உனக்கும் உண்டாகவேண்டும்.

उवाचातिप्रहृष्टेव सा दुःखवशवर्तिनी ।
वाङ्मात्रेण न भावेन वाचा संसज्जमानया ॥ 39 ॥
आनम्य मूर्ध्नि चाघ्राय परिष्वज्य यशस्विनी ।
अवदत्पुत्र सिद्धार्थो गच्छ राम यथासुखम् ॥ 40 ॥
अरोगं सर्वसिद्धार्थमयोध्यां पुनरागतम् ।
पश्यामि त्वां सुखं वत्स सुस्थितं राजवर्त्मनि ॥ 41 ॥

39. (ப-ரை) दुःखवशवर्तिनी- துக்கத்திற்கு வசப்பட்ட, सा- அந்த கௌஸல்யை, अतिप्रहृष्टा इव- மிகவும் ஸந்தோஷமுள்ளவள் போல, ससज्जमानया- துக்கத்தினால் தழதழக்கிருக்கிற, वाचा- வாக்குடன், वाङ्मात्रेण- வாயினால் மாத்திரம், उवाच- சொன்னாள், भावेन- மனதினால், न- இல்லை.

40. (ப-ரை) यशस्विनी- கீர்த்தியுடையவளான கௌஸல்யை, आनम्य- (ராமனை) வணக்கி, मूर्ध्नि- தலையில், आघ्राय च- முகர்ந்தும், परिष्वज्य- அணைத்துக் கொண்டும், “ पुत्र राम- குழந்தாய் ராமா, सिद्धार्थः- காரியம் கைகூடினவனாய், यथासुखम्- ஸுகமாக, गच्छ- போய்விட்டுவா,” इति- என்று, अवदत्- சொன்னாள்.

41. (ப-ரை) वत्स- குழந்தாய்! अरोग- ரோகமில்லாதவனாய், सर्वसिद्धार्थ- எல்லா காரியங்களும் கைகூடினவனாய், अयोध्यां- அயோத்யையைக் குறித்து, पुनः- மறுபடியும், आगतम्- வந்தவனாய், राजवर्त्मनि- ராஜமார்க்கத்தில், सुखं- ஸுகமாக, सुस्थितं- இருக்கின்ற, त्वां- உன்னை, पश्यामि- நான் பார்க்கப்போகிறேன்.

39. (பொ-ரை) துக்கத்திற்கு வசப்பட்டிருக்கிற அந்த கௌஸல்யை புத்ரனுக்கு மனவருத்தமுண்டாகுமென்று துக்கத்தை வெளிக்காட்டாமல் மிகவும் ஸந்தோஷப்பட்டவளைப்போலிருந்து மிகவும் தழதழக்க வாக்குடன் மனதில் இல்லாமல் வாயினால் மாத்திரம் ஸ்ரீராமனைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னாள்.

40. (பொ-ரை) கீர்த்தியுடையவளான கௌஸல்யாதேவி, ஸ்ரீராமனை வணக்கி, உச்சி முகர்ந்து, கையால் அணைத்து “ குழந்தாய் ராமா, காரியம் கைகூடினவனாய், ஸுகமாய் போய் விட்டுவா’ என்று சொன்னாள்.

41. (பொ-ரை) குழந்தாய்! பதினான்கு வருஷம் வனவாஸம் செய்து சரீரத்தில் ஒருவிதமான வ்யாதியுமில்லாமல் காரியங்களெல்லாம் நிறைவேறி திரும்பவும் அயோத்திக்கு வந்து ஸுகமாய் அரசாட்சி செய்துகொண்டிருக்கிற உன்னை நான் பார்க்கவேண்டும்.

मयार्चिता देवगणाः शिवादयो महर्षयो भूतमहासुरोरगाः ।
अभिप्रयातस्य वनं चिराय ते हितानि काङ्क्षन्तु दिशश्च राघव ॥ 45 ॥
इतीव चाश्रुप्रतिपूर्णलोचना समाप्य च स्वस्त्ययनं यथाविधि ।
प्रदक्षिणं चैव चकार राघवं पुनः पुनश्चापि निपीड्य सस्वजे ॥ 46 ॥
तथा तु देव्या स कृतप्रदक्षिणो निपीड्य मातुश्चरणौ पुनः पुनः ।
जगाम सीतानिलयं महायशाः स राघवः प्रज्वलितः स्वया श्रिया ॥ 47 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
पञ्चविंशः सर्गः ॥ 25 ॥

45. (ப-ரை) हे राघव- ராகவனே! मया- என்னாலே, अर्चिताः- பூஜிக்கப்பட்ட, शिवादयः- சிவன் முதலான, देवगणाः- தேவக் கூட்டங்களும், महर्षयः- மஹரிஷிகளும், भूत महासुर उरगाः- பூதர்களும், மஹாஸுரர்களும், உரகர்களும், दिशः च- திக்குகளும், चिराय- நெடுநாள், वनं- வனத்தைக்குறித்து, अभिप्रयातस्य- புறப்பட்டுப் போகின்ற, ते- உனக்கு, हितानि- நன்மைகளை, काङ्क्षन्तु- விரும்பவேண்டும்.

46. (ப-ரை) इति इव- என்று இப்படிப்போல், यथाविधि- சாஸ்த்ரப்படி, स्वस्त्ययनं- மங்களாசாஸனத்தை, समाप्य च- முடித்து, अश्रुप्रतिपूर्णलोचना च- கண்ணீரால் நிறைந்த கண்களை உடையவளாய்க்கொண்டு, राघवं- ராகவனை, प्रदक्षिणं च एव- ப்ரதக்ஷிணமும், चकार- செய்தாள், पुनः च अपि- அடிக்கடியும், निपीड्य- இறுகி, सस्वजे- அணைத்துக்கொண்டாள்.

47. (ப-ரை) तथा तु- அவ்விதம், देव्या- ராஜமஹிஷியான கௌஸல்யையால், कृतप्रदक्षिणः- ப்ரதக்ஷிணம் செய்யப்பட்ட, महायशाः- அதிக கீர்த்தியுடையவரான, स

ளான ஸீதைக்கும், இஷ்டமான வஸ்துக்களை மேன் மேலும் வ்ருத்தி செய்துகொண்டிருக்கவேண்டும். போய்விட்டுவா.

45. (பொ-ரை) ரகு குலத்திற் பிறந்த குழந்தாய்! கீழ்ச்சொல்லியபடி என்னாலே பூஜிக்கப்பட்ட சிவன் முதலான தேவக்கூட்டங்களும், மஹரிஷிகளும், பூதங்களும், மஹா அஸுரர்களும், உரக ஜாதிகளும், திக்குக்களும், நெடுநாள் வனவாஸம் செய்யப் புறப்பட்டுப் போகின்ற உனக்கு க்ஷேமங்களைக் கோரிக்கொண்டிருக்க வேண்டும்

46. (பொ-ரை) இதுபோல் இன்னும் பலவிதமாக சாஸ்த்ரப்படி மங்களாசாஸனம் செய்து முடித்து கண்ணீர் நிறைந்த கண்களையுடையவளாய் ஸ்ரீராமனை ப்ரதக்ஷிணமும் செய்தாள். அடிக்கடி அதாவது பலதடவை அழுத்தி அணைத்துக் கொண்டாள்.

47. (பொ-ரை) அவ்வாறு, கௌஸல்யா தேவியினால் ப்ரதக்ஷிணம் செய்யப்பட்ட, பெரும் கீர்த்தியையுடைய அந்த ராமன் மாதாவின் திருவடிகளை அடிக்கடி

राघव:- அந்த ராகவன், मातु:- தாயாருடைய, चरणौ- திருவடிகளை, पुन: पुन:- அடிக்கடி, निपीड्य- ஸேவித்துவிட்டு, स्वया- தன்னுடையதான, श्रिया- சோபையினால், प्रज्वलित:- விளங்கினவராய்க்கொண்டு, सीतानिलयं- ஸீதையின் அரண்மனையைக்குறித்து, जगाम- புறப்பட்டார்.

---

ஸேவித்துவிட்டு இயற்கையான தன்னுடைய சோபையினால் விளங்கிக்கொண்டு ஸீதையின் அரண்மனையைக்குறித்துச்சென்றார்.

षड्विंश: सर्ग: ॥ 26 ॥

अभिवाद्य च कौसल्यां राम: संप्रस्थितो वनम् ।
कृतस्वस्त्ययनो मात्रा धर्मिष्ठे वर्त्मनि स्थित: ॥ 1 ॥
विराजयन्राजसुतो राजमार्गं नरैर्वृतम् ।
हृदयान्याममन्थेव जनस्य गुणवत्तया ॥ 2 ॥
वैदेही चापि तत्सर्वं न शुश्राव तपस्विनी ।
तदेव हृदि तस्याश्च यौवराज्याभिषेचनम् ॥ 3 ॥

1-2 (ப-ரை) धर्मिष्ठे- மிகவும் தர்மமுள்ளதான, वर्त्मनि- மார்க்கத்தில், स्थित:- நிலைநிற்கிறவரும், वनं- வனத்தைக்குறித்து, प्रस्थित:- புறப்பட்டுமிருக்கிற, राजसुत:- ராஜபுத்ரனான, राम:- ஸ்ரீராமன், कौसल्यां- கௌஸல்யாதேவியை, अभिवाद्य च- அபிவாதனம் செய்தும், मात्रा- மாதாவினால், कृतस्वस्त्ययन:- ஆசீர்வாதம் செய்யப்பட்டும், नरै:- ஜனங்களால், वृतम्- சூழப்பட்ட, राजमार्गं- ராஜமார்க்கத்தை, विराजयन् सन्- ப்ரகாசப்படுத்திக்கொண்டு, गुणवत्तया- குணமுடையவராயிருக்கையால், जनस्य- ஜனத்தினுடைய, हृदयानि- மனதுகளை, आममन्थ इव- கலக்கினார் போலும்.

3. (ப-ரை) तपस्विनी- (பட்டாபிஷேகத்திற்கான) வ்ரதங்களைச் செய்து கொண்டிருக்கிற, वैदेही च अपि- ஸீதாதேவியும், तत् सर्वं- பட்டாபிஷேகத்திற்கு ஏற்பட்ட விக்னம் முதலானது முழுவதையும், न शुश्राव- காதால் கேட்டவளேயன்று, तस्या:- அவளுடைய, हृदि च- மனதில், तत्- அந்த, यौवराज्याभिषेचनम् एव- யௌவராஜ்ய பட்டாபிஷேகமே, (वर्तते- இருந்து கொண்டிருக்கிறது).

---

1—2. (பொ-ரை) தர்ம மார்க்கத்தில் நிலைநின்ற ராஜபுத்ரனான ஸ்ரீராமன் வனம் போவதாகப்புறப்பட்டு, கௌஸல்யாதேவியை நமஸ்கரித்து, மாதாவினால் ஆசீர்வாதமும் செய்யப்பட்டு தன்னைப்பார்க்கவந்த ஜனங்களால் நிறைந்த ராஜமார்க்கத்தை ப்ரகாசிப்பித்துக்கொண்டு ஸகல கல்யாண குணம் நிறைந்தவரானபடியால், பார்க்கின்ற ஸர்வ ஜனங்களுடைய மனதையும் கலக்கினார்போலும்.

3. (பொ-ரை) ஸ்ரீராமனுடைய பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய வ்ரத உபவாஸ நியமங்களைச்செய்துகொண்டிருக்கிற, விதேஹ ராஜபுத்ரியான ஸீதாதேவியும், பட்டாபிஷேகத்திற்கு ஏற்பட்ட விக்னம் முதலானதுகளை காதால் கேட்டவ

देवकार्यं स्वयं कृत्वा कृतज्ञा हृष्टचेतना ।
अभिज्ञा राजधर्माणां राजपुत्रं प्रतीक्षते ॥ 4 ॥
प्रविवेशाथ रामस्तु स्वं वेश्म सुविभूषितम् ।
प्रहृष्टजनसंपूर्णं ह्रिया किंचिदवाङ्मुखः ॥ 5 ॥
अथ सीता समुत्पत्य वेपमाना च तं पतिम् ।
अपश्यच्छोकसंतप्तं चिन्ताव्याकुलितेन्द्रियम् ॥ 6 ॥

4. (ப-ரை) कृतज्ञा செய்யவேண்டியதை அறிந்தவளும், स्वयं- தானே, देवकार्यं- தேவபூஜையை, कृत्वा- செய்துவிட்டு, हृष्टचेतना सती- ஸந்தோஷமுள்ள மனமுடையவளாய், राजधर्माणां अभिज्ञा- ராஜ தர்மங்களைத் தெரிந்தவளாய், राजपुत्रं- ராஜபுத்ரனை ஸ்ரீராமனை, प्रतीक्षते- எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறாள்.

5. (ப-ரை) अथ- பிறகு, रामस्तु- ஸ்ரீராமனும், ह्रिया- வெட்கத்தினால், किंचित्- கொஞ்சம், अवाङ्मुखः सन्- தலைகுனிந்தவராயிருந்துகொண்டு, प्रहृष्टजनसंपूर्णं- ஸந்தோஷமுள்ள ஜனங்களால் நிறைந்ததும், सुविभूषितम्- நன்றாய் அலங்கரிக்கப்பட்டதுமான, स्वं वेश्म- தமது திருமாளிகையை, प्रविवेश- ப்ரவேசித்தார்.

6. (ப-ரை) अथ- பிறகு, सीता- ஸீதையானவள், समुत्पत्य- (ஆஸனத்தினின்று) எழுந்து, वेपमाना च- நடுங்கிக்கொண்டு, शोकसन्तप्तं- சோகத்தினால் தபிக்கப்பட்டவரும், चिन्ताव्याकुलित इन्द्रियं- மனோவிசாரத்தினால் கலங்கிய புலன்களையுடையவரும், तं पतिं- அந்த பர்த்தாவான ஸ்ரீராமனை, अपश्यत्- பார்த்தாள்.

---

வேயன்று, ஆகவே அவளுடைய மனதில் முன் சொல்லியபடி [illegible] பட்டாபிஷேக வ்ருத்தாந்தமே [illegible]கொண்டிருந்தது.

4. (பொ-ரை) பட்டாபிஷேகம் செய்துகொள்ளப்போகிற [illegible] ஸமயத்தில் பட்டமஹிஷிகள் அவ்விஷயத்தில் செய்யவேண்டியவைகளை [illegible] முதலியவைகளை ஆசாரங்களை நன்றாய் தெரிந்தவளான ஸீதை, காலையில் தேவபூஜையைச் செய்துவிட்டு, ஆசாரத்துக்கு ஏற்றபடி ஸமயம், பகவானைப் பூஜித்த பிறகு [illegible] ராஜபுத்ரனான ஸ்ரீராமன் வரப்போகிறாரென்று [illegible] எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறாள்.

5. (பொ-ரை) அனந்தரம் ஸ்ரீராமனும், தம் மாதாபிதாக்கள் செய்யப்பட்டாபிஷேகவிக்னத்தையும், வனவாஸத்தையும், [illegible] விஷயத்தை [illegible] கண்கிற வெட்கத்தினால் தலைகுனிந்துகொண்டு, ஸந்தோஷமுள்ள ஜனங்கள் நிறைந்து நன்றாய் அலங்கரிக்கப்பட்ட தம் திருமாளிகையில் ப்ரவேசித்தார்.

6. (பொ-ரை) பிறகு ஸீதை, தான் உட்கார்ந்துகொண்டிருந்த ஆஸனத்தினின்று எழுந்து, நடுங்கிக்கொண்டும், சோகத்தினால் பரிதபித்துக்கொண்டும், விசாரத்தினால் கலங்கிய இந்திரியங்களையுடைய அந்த பர்த்தாவைப் பார்த்தாள்.

तां दृष्ट्वा सहि धर्मात्मा न शशाक मनोगतम् ।
तं शोकं राघवः सोढुं ततो विवृततां गतः ॥ 7 ॥
विवर्णवदनं दृष्ट्वा तं प्रस्विन्नममर्षणम् ।
आह दुःखाभिसन्तप्ता ॥ 8 ॥
किमिदानीमिदंप्रभो ।
अद्य बार्हस्पतः श्रीमानुक्तः पुष्यो नु राघव ।
प्रोच्यते ब्राह्मणैः प्राज्ञैः केन त्वमसि दुर्मनाः ॥ 9 ॥

7. (ப-ரை) धर्मात्मा- தார்மிஷ்டரான, सः- அந்த, राघवः- ஸ்ரீராமன், तां- அந்த ஸீதையை, दृष्ट्वा- பார்த்து. मनोगतम्- மனதிலிருக்கிற, तं शोकं- அந்த துக்கத்தை, सोढुं- ஸஹிப்பதற்கு, न शशाक- சக்தியுள்ளவராகவில்லை, ततः- ஆகையினால், विवृततां- பிரகாசமுள்ளவராயிருப்பதை, गतः- அடைந்து விட்டார்.

8. (ப-ரை) विवर्णवदनं- வாடியமுகமுடையவரும், प्रस्विन्नं- வேர்வையுடன் கூடினவரும், अमर्षणम्- துக்கத்தை அடக்கமுடியாதவருமான, तं- அந்த ஸ்ரீராமனை, दृष्ट्वा- பார்த்து, दुःखाभिसन्तप्ता सती- துக்கத்தினாலே மிகவும் பரிதாபமுள்ளவளாக, आह- (ஸீதை) சொல்லுகிறாள்.

9. (ப-ரை) प्रभो- ப்ரபுவே! इदानीं- (ஸந்தோஷப்படவேண்டிய) இந்த காலத்தில், इदं இந்த துக்கம், किं- என்ன? हे राघव- ரகு குலத்தில் அவதரித்தவரே, बार्हस्पतः- ப்ருஹஸ்பதியை தேவதையாயுடையதும், श्रीमान्- ஸம்பத்தை உண்டுபண்ணக்கூடியதும், उक्तः- (பட்டாபிஷேகத்திற்கு காலமாக) சொல்லப்பட்ட, पुष्यः- புஷ்ய

7. (பொ-ரை) தர்மாத்மாவான அந்த ஸ்ரீ ராகவன், அவ்விதம் ஸந்தோஷமுள்ள அந்த ஸீதையைப்பார்த்து, மனதிலிருக்கிற அந்த துக்கத்தை அடக்கமுடியாமல் வெளியாக்கிவிட்டார்.

8. (பொ-ரை) முகம் வாடி, கைவந்த ராஜ்யம் தவறி வனவாஸம் செய்யப்போகிற ஸங்கதியை இந்த ஸீதையினிடம் எவ்விதம் சொல்லுகிறது என்கிற சோகத்தினால் தேஹம் வியர்த்து, துக்கத்தை மனதில் அடக்கிக்கொள்ள சக்தியற்ற அந்த ஸ்ரீராமனைப்பார்த்து ஸீதாதேவி மிகவருத்தமுடையவளாய் ஒரு வார்த்தை சொல்லுகிறாள்.

9. (பொ-ரை) ப்ரபோ! இதென்ன, ஸந்தோஷப்படவேண்டிய காலத்தில் துக்கம், ப்ருஹஸ்பதி தேவதையாக உடையதும் சுபகார்யம் செய்கிறவர்களுக்கு ஸம்பத்தை உண்டுபண்ணக்கூடியதும், உம்முடைய பட்டாபிஷேகத்திற்கு குறிப்

न ते शतशलाकेन जलफेननिभेन च ।
आवृतं वदनं वल्गु छत्रेणापि विराजते ॥ 10 ॥
व्यजनाभ्यां च मुख्याभ्यां शतपत्रनिभेक्षणम् ।
चन्द्रहंसप्रकाशाभ्यां वीज्यते न तवाननम् ॥ 11 ॥
वाग्मिनो बन्दिनश्चापि प्रहृष्टास्त्वां नरर्षभ ।
स्तुवन्तो नात्र दृश्यन्ते मंगलैः सूतमागधाः ॥ 12 ॥

---

நக்ஷத்திரம், अद्य- இன்றையதினம் (என்று), प्राज्ञैः- பண்டிதர்களான, ब्राह्मणैः- ப்ராம்ம ணர்களால், प्रोच्यते- नु- சொல்லப்படுகிறது அல்லவா! (அப்படியிருக்க), त्वं- நீர், केन- என்ன காரணத்தினால், दुर्मनाः- துக்கித்தவராக, असि- இருக்கிறீர்.

10. (ப-ரை) शतशलाकेन- நூறுகம்பிகளையுடையதும், जलफेन निभेन च- ஜலத்தி லிருக்கின்ற நுரைக்கு ஸமானமுமான, छत्रेण- வெண்குடையினால், वल्गु- அழகான, ते- உம்முடைய, वदनं- முகமானது, आवृतं- சூழப்பட்டதாய், न विराजते अपि- ஏன் விளங்கவில்லை.

11. (ப-ரை) चन्द्रहंसप्रकाशाभ्यां- சந்திரன்போலும், ஹம்ஸம்போலும் ப்ரகா சித்துக்கொண்டிருக்கிற, मुख्याभ्यां- சிரேஷ்டமான, व्यजनाभ्यां च- ஆலவட்டங்களினால், शतपत्रनिभेक्षणम्- தாமரைப்புஷ்பங்களையொத்த கண்களையுடைய, तव- உம்முடைய, आननम्- முகமானது, न वीज्यते- ஏன் வீசப்படவில்லை.

12. (ப-ரை) नरर्षभ- புருஷோத்தம! प्रहृष्टाः- ஸந்தோஷமுடையவர்களாய், त्वां- உம்மை, मगलैः- மங்களசப்தங்களினால், स्तुवन्तः- ஸ்தோத்ரம் செய்கின்ற, वाग्मिनः- சிறந்த வாக்குகளையுடைய, वन्दिनः च अपि- ஸ்துதிபாடகர்களும், सूतमागधाः- ஸூதர் களும், மாகதர்களும், अत्र- இங்கு, न दृश्यन्ते- ஏன் காணப்படவில்லை.

---

பிட்டதுமான புஷ்யநக்ஷத்திரம் இன்றையதினமென்று ப்ராக்ஞர்களான ப்ராம மணர்கள் சொல்லியிருக்க நீர் என்ன காரணத்தினால் மனவருத்தங்கொண்டிருக்கி றீர்.

10. (பொ-ரை) அழகான உம்முடைய திருமுகமானது, நூறு கம்பிகளு ள்ளதும், நீரிலிருக்கின்ற நுரைபோல் வெளுத்ததுமான குடையினால் சூழப்பட்டு ஏன் விளங்கவில்லை.

11. (பொ-ரை) தாமரைப் புஷ்பத்திற்கு ஸமானங்களான கண்களையுடைய உம்முடைய முகமானது, சந்திரன்போலும், ஹம்ஸம்போலும் ப்ரகாசிக்கின்ற சிரே ஷ்டங்களான இரண்டு திருவால வட்டங்களினால் ஏன் வீசப்படவில்லை.

12. (பொ-ரை) புருஷோத்தம! மிகவும் ஸந்தோஷத்துடன் மங்கள சப் தங்களினால் உம்மை ஸ்தோத்திரம் பண்ணுகின்ற சிறந்த வாக்குகளையுடைய வந்தி களும், ஸூதர்களும், மாகதர்களும், இங்கு ஏன் காணப்படவில்லை.

न ते क्षौद्रं च दधि च ब्राह्मणा वेदपारगाः ।
मूर्ध्नि मूर्धाभिषिक्तस्य दधति स्म विधानतः ॥ 13 ॥
न त्वां प्रकृतयः सर्वाः श्रेणीमुख्याश्च भूषिताः ।
अनुव्रजितुमिच्छन्ति पौरजानपदास्तथा ॥ 14 ॥
चतुर्भिर्वेगसंपन्नैर्हयैः काञ्चनभूषितैः ।
मुख्यः पुष्यरथो युक्तः किं न गच्छति तेऽग्रतः ॥ 15 ॥

13. (ப-ரை) मूर्धाभिषिक्तस्य- பட்டாபிஷேகம் செய்யப்பட்ட, ते- உம்முடைய, मूर्ध्नि- தலையில், वेदपारगाः- வேதங்களைக்கரைகண்ட, ब्राह्मणाः- ப்ராம்மணர்கள், विधानतः- சாஸ்த்ரவிதிப்படி, क्षौद्रं- தேனையும், दधि च- தயிரையும், न दधतिस्म- ஏன் சேர்க்காமலிருக்கிறார்கள்.

14. (ப-ரை) सर्वाः- ஸமஸ்தமான, प्रकृतयः- மந்திரி முதலானவர்களும், श्रेणीमुख्याः च- ஸபைகளில் முதன்மையானவர்களும், पौराः- பட்டணத்து ஜனங்களும், तथा- அவ்விதமே, जानपदाः- நாட்டு ஜனங்களும், भूषिताः सन्तः- அலங்கரித்துக்கொண்டு, त्वां- உம்மை, अनुव्रजितुं- பின்சென்றுவருவதற்கு, न इच्छन्ति- ஏன் விரும்பவில்லை.

15. (ப-ரை) काञ्चनभूषितैः- ஸ்வர்ணங்களால் அலங்கரிக்கப்பட்ட, वेगसम्पन्नैः- மிகவும் வேகமுள்ள, चतुर्भिः हयैः- நான்கு குதிரைகளோடு, युक्तः- கூடிய, मुख्यः- சிரேஷ்டமான, पुष्यरथः- புஷ்பரதமானது, ते- உம்முடைய, अग्रतः- முன்னே, किं न गच्छति- ஏன் வரவில்லை.

13. (பொ-ரை) வேதங்களை ஓதி கரைகண்ட ப்ராம்மணோத்தமர்கள், பட்டாபிஷேகம் செய்துகொண்ட உம்முடைய சிரஸில் தேனையும், தயிரையும், ஏன் சாஸ்த்ரப்படி அபிஷேகம் செய்யாமலிருக்கிறார்கள்.

14. (பொ-ரை) ஸமஸ்தமான மந்திரிகளும், அந்தந்தத்தொழிலாளர்களில் முக்யமானவர்களும், (ஸபைகளில் தலைவர்களும்,) பட்டணத்துஜனங்களும், வெளிநாட்டு ஜனங்களும், அலங்கரித்துக்கொண்டு உம்முடன் கூட வருவதற்கு ஏன் ஆசைப்படவில்லை.

15. (பொ-ரை) ஸ்வர்ணங்களால் அலங்கரிக்கப்பட்டு, வேகமுள்ள நான்கு குதிரைகள் பூட்டிய புஷ்ய ரதமானது ஏன் உம்முடைய முன்னே வரவில்லை.

புஷ்ய ரதம் என்பது யுத்தத்திற்கு உபயோகப்படாதது. ஆனால், மஹாராஜாக்கள் விசேஷமான காலத்தில் ஊர்வலம் செய்யும்பொழுது அவர்கள் முன்னே அலங்காரமாக வரக்கூடியது.

न हस्ती चाग्रतः श्रीमांस्तव लक्षणपूजितः ।
प्रयाणे लक्ष्यते वीर कृष्णमेघगिरिप्रभः ॥ 16 ॥
न च काञ्चनचित्रं ते पश्यामि प्रियदर्शन ।
भद्रासनं पुरस्कृत्य यातं वीरपुरस्कृतम् ॥ 17 ॥
अभिषेको यथा सज्जः किमिदानीमिदं तव ।
अपूर्वो मुखवर्णश्च न प्रहर्षश्च लक्ष्यते ॥ 18 ॥

16. (ப-ரை) हे वीर- வீரனே! श्रीमान्- அழகுள்ளதாயும், लक्षणपूजित:- நல்ல லக்ஷணங்கள் பொருந்தி புகழப்பட்டு, कृष्णमेघगिरिप्रभः- கார்மேகத்துடன் கூடிய பர்வதத்திற்கு ஸமானமான, हस्ती- பட்டத்து யானையானது, तव- உம்முடைய, प्रयाणे- ப்ரயாணகாலத்தில், अग्रत:- முன்னே, न लक्ष्यते- ஏன் காணப்படவில்லை.

17. (ப-ரை) हे प्रियदर्शन- ப்ரியமான காக்ஷியுடையவரே, काञ्चनचित्र- ஸ்வர்ணத்தினால் விசித்ரவேலை செய்தும், वीरपुरस्कृतम्- வீரர்களால் புரஸ்கரிக்கப்பட்ட, भद्रासन- பத்ராஸனத்தை, पुरस्कृत्य- முன்னிட்டுக்கொண்டு, ते- உம்முடைய, यात- வரவை, नपश्यामि च- நான் காணவில்லை.

18. (ப-ரை) अभिषेक:- உம்முடைய பட்டாபிஷேகமானது, यथा सज्ज:- யதா ப்ரகாரம் ஸித்தமாகவே இருக்கிறது, इदानीं- இப்பொழுது, तव- உம்முடைய, मुखवर्ण: च- முகத்தின் வர்ணமானது, अपूर्व:- முன்னிருந்ததுபோல் இராமலிருக்கிறது, प्रहर्ष: च- ஸந்தோஷமும், न लक्ष्यते- காணப்படவில்லையே, किं इद- என்ன இது.

16. (பொ-ரை) வீர! மிகவும் அழகுள்ளதாய், லக்ஷணங்கள் பொருந்தி எல்லோராலும் புகழப்பட்டு கார்மேகத்துடன் கூடிய பர்வதத்திற்கு ஸமானமான பட்டத்து யானை, நீர் புறப்பட்டு வருங்காலத்தில் உம்முடைய முன்னே ஏன் வாராமலிருக்கிறது.

17. (பொ-ரை) ப்ரியமான தரிசனமுடையவரே! ஸ்வர்ணங்களால் விசித்ர வேலைகள் செய்து வீரர்களால் புரஸ்கரிக்கப்பட்ட பத்ராஸனத்தை முன்னிட்டுக் கொண்டு உம்முடைய வரவை நான் காணவில்லையே. அதற்கு என்னகாரணம்.

18. (பொ-ரை) முன் சொல்லியபடி உம்முடைய பட்டாபிஷேகமும் இப்பொழுது ஸித்தமாகவே இருக்கிறதே. அப்படியிருக்க உம்முடைய முகவர்ணமும் முன்போல் இல்லை. மனதில் ஸந்தோஷமும் இல்லாததுபோல் காணப்படுகிறதே. இதற்கென்ன காரணம்.

इतीव विलपन्तीं तां प्रोवाच रघुनन्दनः ।
सीते तत्रभवांस्तातः प्रव्राजयति मां वनम् ॥ 19 ॥
कुले महति संभूते धर्मज्ञे धर्मचारिणि ।
शृणु जानकि येनेदं क्रमेणाभ्यागतं मम ॥ 20 ॥
राज्ञा सत्यप्रतिज्ञेन पित्रा दशरथेन च ।
कैकेय्यै मम मात्रे तु पुरा दत्तौ महावरौ ॥ 21 ॥

19. (ப-ரை) इतीव– இதுபோல, विलपन्तीं- பலவிதமாகச் சொல்லுகின்ற, तां- அந்த ஸீதையைப்பார்த்து, सीते- ஸீதே! तत्र भवान्- மிகவும் பூஜ்யரான, तातः- பிதாவானவர், मां- என்னை, वनम्- வனத்தைக்குறித்து, प्रव्राजयति- வாஸம் செய்யப் போகச்சொல்லுகிறார், इति- என்று, रघुनन्दनः– ஸ்ரீராமன், प्रोवाच- சொன்னார்.

20. (ப-ரை) महति कुले- மஹாகுலத்தில், सम्भूते- பிறந்தவளே, धर्मज्ञे- தர்மத்தை அறிந்தவளே, धर्मचारिणि- தர்மங்களை அநுஷ்டிக்கின்றவளே, हे जानकि- ஜனகராஜன் புத்ரியே, इदं- எனக்கு நேர்ந்த இந்த வனவாஸமானது, येनक्रमेण- எந்த முறைமையி ஞல், मम- எனக்கு, अभ्यागत- வந்திருக்கிறதோ, शृणु- (அந்தக்ரமத்தை) கேள்

21 (ப-ரை) सत्यप्रतिज्ञेन- ஸத்யமான ப்ரதிஜ்ஞையையுடையவரும், राज्ञा- அரசனுமான, पित्रा च- பிதாவுமான, दशरथेन- தசரத ராஜனால், मम- என்னுடைய, मात्रे- மாதாவான, कैकय्यै- கைகேயியின் பொருட்டு, पुरा तु- முன்னொரு காலத்தில், महा वरौ- இரண்டு பெரிய வரங்கள், दत्तौ- கொடுக்கப்பட்டன.

19. (பொ-ரை) இதுபோல் பலவிதமாக துக்கத்துடன் சொல்லுகின்ற அந்த ஸீதையைப்பார்த்து, ஸீதே! மிகவும் பூஜ்யரான பிதாவானவர் என்னைக்காட்டில் வாஸம் செய்யும்படி அஜ்ஞாபித்திருக்கிறாரென்று ஸ்ரீ ரகுநந்தனன் சொன் ஞர்.

20. (பொ-ரை) உத்தம குலத்திற் பிறந்து, தர்மங்களைத்தெரிந்து, அநுஷ் டிக்கின்றவளுமான ஜனகராஜ புத்ரியே, இந்த வனவாஸமானது எந்த வழியால் எனக்கு நேர்ந்திருக்கிறதோ அந்த வழியைச்சொல்லுகிறேன் கேள்.

21. (பொ-ரை) செய்த ப்ரதிஜ்ஞையை தவராதவரான நம பிதாவான தசரத மஹாராஜனால் என் மாதாவான கைகேயிக்கு முன்காலத்தில் இரண்டு பெரிய வரங்கள் கொடுக்கப்பட்டன.

तयाद्य मम सज्जेऽस्मिन्नभिषेके नृपोद्यते ।
प्रचोदितः स समयो धर्मेण प्रतिनिर्जितः ॥ 22 ॥
चतुर्दश हि वर्षाणि वस्तव्यं दण्डके मया ।
पित्रा मे भरतश्चापि यौवराज्ये नियोजितः ॥
सोऽहं त्वामागतो द्रष्टुं प्रस्थितो विजनं वनम् ॥ 23 ॥
भरतस्य समीपे तु नाहं कथ्यः कदाचन ॥ 24 ॥
ऋद्धियुक्ता हि पुरुषा न सहन्ते परस्तवम् ।
तस्मान्न ते गुणाः कथ्या भरतस्याग्रतो मम ॥ 25 ॥

22. (ப-ரை) अद्य- இப்பொழுது, नृपोद्यते- ராஜாவினால் சொல்லப்பட்ட मम- என்னுடைய, अस्मिन् अभिषेके- இந்த பட்டாபிஷேகமானது, सज्जे सति- ஸித்தமாக இருந்தவளவில், तया- அந்த கைகேயியால், प्रचोदितः- முன்சொன்ன இரண்டு வரங்களையும் இப்பொழுது எனக்குக் கொடுக்கவேணும் என்று ஏவப்பட்டும், स समयः- ப்ரதிஜ்ஞை செய்தவருமான, (அரசன்), धर्मेण- தர்மத்தினால், प्रतिनिर्जितः- கன்வரமாகச் செய்யப்பட்டார்.

23. (ப-ரை) हि- ஆகையால், चतुर्दश वर्षाणि- பதினைந்து வருஷங்கள், मया- என்னாலே, दण्डके- தண்டகாவனத்தில், वस्तव्यं- வஸிக்கவேண்டும், भरतः च अपि- பரதனும், मे पिता- என்னுடைய பிதாவினால், यौवराज्ये- இளவரசில், नियोजितः- ஏவப்பட்டிருக்கிறான். सः- அப்படிப்பட்ட, अहं- நான், विजनं- ஜனசூன்யமான, वनम्- வனத்தைக் குறித்து, प्रस्थितः सन्- புறப்பட்டவனாக, त्वां உன்னை, द्रष्टुं- பார்ப்பதற்கு, आगतः- வந்திருக்கிறேன்.

24-25 (ப-ரை) (कि) तु- ஆனால், भरतस्य- பரதனுடைய, समीपे- ஸமீபத்தில், अहं- நான், कदाचन- ஒருக்காலும், न कथ्यः- ச்லாகிக்கத்தகுந்தவனல்ல, हि- ஏனென்றால்,

22. (பொ-ரை) இப்பொழுது, அரசன் எனக்குப் பட்டாபிஷேகம் செய்வதாக ஆரம்பித்து ஸித்தமாக இருக்குங்காலத்தில், முன்னமே தனக்கு இரண்டு வரங்கள் கொடுக்கிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்திருந்த அரசனைப்பார்த்து அந்த இரண்டு வரங்களையும் இப்பொழுதே நீர் கொடுக்கவேண்டும் என்று நிர்ப்பந்திக்கவே அவரும் தர்மத்தினால் அவளுக்கு கட்டுப்பட்டுவிட்டார்.

23. (பொ-ரை) ஆகையால் நான் பதினைந்து வருஷம் தண்டகாவனத்தில் வாஸம் பண்ணவேண்டும். பரதனும் இளவரசு பட்டம் ஆளவேண்டும். இவ்விதம் என் பிதாவினுடைய நியமனம். ஆகையால் நான் நிர்ஜனமான தண்டகாவனம் போவதாகப்புறப்பட்டு, உன்னைப்பார்ப்பதற்காக இங்கு வந்தேன்.

24—25. (பொ-ரை) ஆகையால் நான் பிதாவின் உத்திரவுப்படி பதினைந்து வருஷம் தண்டகா வனம்போய் வருகிறேன். நீ இங்கே இருந்துகொண்டிரு.

नापि त्वं तेन भर्तव्या विशेषेण कदाचन ।
अनुकूलतया शक्यं समीपे ह्यस्य वर्तितुम् ॥ 26 ॥
तस्मै दत्तं नृपतिना यौवराज्यं सनातनम् ।
स प्रसाद्यस्त्वया सीते नृपतिश्च विशेषतः ॥ 27 ॥

ऋद्धियुक्ताः- செல்வத்தோடு கூடிய, पुरुषाः- மனிதர்கள், परस्तवम्- பிறர்களுடைய ஸ்தோத்ரத்தை, न सहन्ते- பொறுக்கமாட்டார்கள், तस्मात्- ஆகையாலே, भरतस्य अग्रतः- பரதனுடைய முன்னிலையில், मम- என்னுடைய, गुणाः- குணங்கள், ते- உன்னால், न कथ्याः- சொல்லத்தக்கவையல்ல.

26. (ப-ரை) त्वं अपि- நீயும், तेन- அந்த பரதனால், कदाचन- ஒருக்காலும், विशेषेण- விசேஷமாக, न भर्तव्या- போஷிக்கத்தக்கவளன்று, किं तु- ஆனால், अनुकूलतया- அநுகூலமாகவே, अस्य- இந்த பரதனுடைய, समीपे- ஸமீபத்திலே, वर्तितुम्- இருப்பதற்கு, शक्यं- யோக்யமானது.

27. (ப-ரை) हे सीते- ஸீதையே! तस्मै- அந்த பரதன் பொருட்டு, सनातनम्- அநாதியாக வந்த, यौवराज्यं- இளவரசு பட்டமானது, नृपतिना- அரசனால், दत्तं- கொடுக்கப்பட்டது, विशेषतः- விசேஷமாக, नृपतिः च- அரசனுமான, सः- அந்த பரதன் त्वया- உன்னால், प्रसाद्यः- அநுஸரிக்கத்தக்கவன்.

எப்பொழுதாவது நான் சேவிப்பதற்காக பரதன் வந்தால் அவன் எதிரில் என்னைப்புகழலாகாது. ஏனென்றால் செல்வத்தோடு கூடிய மனிதர்கள் தம் எதிரில் பிறர்களை ஸ்தோத்ரம் பண்ணினால் பொறுக்கமாட்டார்கள். ஆகையால் நான் பரதன் முன்னிலையில் என்னுடைய சௌர்ய வீர்யாதி குணங்களைப்பற்றிப் புகழ வேண்டாமென்று சொல்லுகிறேன்.

26 (பொ-ரை) வஸ்த்ராபரணம் முதலானதுகளைக்கொடுத்து உன்னை பரதன் போஷிக்கும் காலத்தில், நமது ஜ்யேஷ்டருடைய பத்னியாகையால் இலக்ஷ்மணன் சத்ருக்னன் இவர்களுடைய பார்யைகளைக்காட்டிலும் விசேஷமாகப் பெருமைப்படுத்தப்படவேண்டுமென்று நீ ஆசைப்படக்கூடாது. பொதுவாக இருந்தாலன்றோ அவன் முன்னிலையில் இருக்க முடியும்.

27. (பொ-ரை) ஹே ஸீதே! அந்த பரதனுக்கு அரசன் அநாதியான யௌவராஜ்யத்தைக்கொடுத்திருக்கிறார். ஆகையால் அவனை விசேஷமாக அரசன் என்று நீ அநுஸரித்து வரவேண்டும்.

अहं चापि प्रतिज्ञां तां गुरोः समनुपालयन् ।
वनमद्यैव यास्यामि स्थिरा भव मनस्विनी ॥ 28 ॥
याते च मयि कल्याणि वनं मुनिनिषेवितम् ।
व्रतोपवासपरया भवितव्यं त्वयाऽनघे ॥ 29 ॥
काल्यमुत्थाय देवानां कृत्वा पूजां यथाविधि ।
वन्दितव्यो दशरथः पिता मम नरेश्वरः ॥ 30 ॥

---

28. (ப-ரை) अहं च अपि- நானும், गुरोः- குருவான பிதாவினுடைய, तां प्रतिज्ञां- அந்த ப்ரதிஜ்ஞையை, अनुपालयन्- பரிபாலிப்பதற்காக, वनं- தண்டகாவனத்தைக் குறித்து, अद्य एव- இப்பொழுதே, यास्यामि- போகப்போகிறேன், मनस्विनी- த்ருடமான மனதையுடைய நீ, स्थिरा- என்னிடத்தில் நிலையான ப்ரீதியுடையவளாக, भव-இருக்க வேண்டும்.

29. (ப-ரை) हे कल्याणि- மங்களமுள்ளவளே! अनघे- குற்றமில்லாதவளே, मयि-நான், मुनिनिषेवितम्- முனிகளாலடையப்பட்ட, वनं- வனத்தைக்குறித்து, याते सति- போனவளவில், त्वया- உன்னால், व्रतोपवासपरया- வ்ரதம் உபவாஸம் இவைகளில் ஊக்கமுள்ளவளாக, भवितव्यं- இருக்கத்தகுந்தது.

30. (ப-ரை) काल्यं- விடியற்காலத்தில், उत्थाय- எழுந்திருந்து, यथाविधि- சாஸ்த்ரப்படி, देवानां- தேவர்களுடைய, पूजां- பூஜையை, कृत्वा- செய்து, नरेश्वरः- அரசனையும், मम पिता-என் பிதாவுமான, दशरथः- தசரதர், वन्दितव्यः- நமஸ்கரிக்கத்தகுந்தவர்.

28. (பொ-ரை) நானும் அந்த பிதாவின் ப்ரதிஜ்ஞையை, பரிபாலனம் செய்வதற்காக இப்பொழுதே தண்டகாவனம் போகப்போகின்றேன். நீயும் த்ருடமான மனதுடன் என்னிடத்தில் வைத்திருக்கிற ப்ரீதியுடன் இங்கேயே இருந்துகொண்டிரு.

29. (பொ-ரை) மங்களமுள்ளவளே! குற்றமில்லாதவளே! நான் முனிகள் வஸிக்கின்ற தண்டகாவனம் போனபின்பு நீயும் இங்கேயிருந்துகொண்டு வ்ரதோபவாஸம் முதலியவைகளை தவறாமல் செய்துகொண்டிருக்கவேண்டும்.

30. (பொ-ரை) ஒவ்வொரு தினங்களிலும் விடியற்காலமே எழுந்திருந்து சாஸ்த்ரமுறைப்படி தேவபூஜைகளையும் செய்து முடித்துவிட்டு, என் பிதாவான தசரதமஹாராஜாவை நீ ஸேவித்துவரவேண்டும்.

माता च मम कौसल्या वृद्धा सन्तापकर्शिता ।
धर्ममेवाग्रतः कृत्वा त्वत्तः सम्मानमर्हति ॥ 31 ॥
वन्दितव्याश्च ते नित्यं याः शेषा मम मातरः ।
स्नेहप्रणयसम्भोगैः समा हि मम मातरः ॥ 32 ॥
भ्रातृपुत्रसमौ चापि द्रष्टव्यौ च विशेषतः ।
त्वया भरतशत्रुघ्नौ प्राणैः प्रियतरौ मम ॥ 33 ॥

31. (பதவுரை) वृद्धा- கிழவியாயும், सन्तापकर्शिता- (என்னை விட்டுப்பிரிந்த) துக்கத்தினால் இளைத்த, मम माता च- என் தாயாரான, कौसल्या- கௌஸல்யாதேவியானவள், धर्मम् एव- தர்மம் ஒன்றையே, अग्रतः कृत्वा- முன்னிட்டுக்கொண்டு, இருக்கிற, त्वत्तः- உன்னிடமிருந்து, सम्मान- வெகுமானத்தை, अर्हति- அடையத்தகுந்தவள்.

32 (பதவுரை) शेषाः- மற்றவர்களான, याः- யாவரோ, मम मातरः- என் தாய்மார்கள் (இருக்கின்றார்களோ), ताः- அவர்கள், ते- உன்னால், वन्दितव्याः- நமஸ்கரிக்கத் தக்கவர்கள், हि- ஏனென்றால், मम मातरः- அந்த என் தாய்மார்கள், स्नेहप्रणयसम्भोगैः- ப்ரீதியாலும், நல்ல ஸம்மானம் வைப்பதாலும், நம்மை வளர்த்ததாலும், समाः- (என் தாயோடு) துல்யமானவர்கள்.

33 (பதவுரை) भरतशत्रुघ्नौ- பரதனும், சத்ருக்னனும், मम- எனக்கு, प्राणैः- (प्राणेभ्यः)- ப்ராணனைக்காட்டிலும், प्रियतरौ- மிகவும் ப்ரியமானவர்கள் (ஆகையால் அவர்கள்), त्वया- உன்னால், विशेषतः- விசேஷமாக, भ्रातृपुत्रसमौ च अपि- ப்ராதாவுக்கும், புத்ரனுக்கும் ஸமானமானவர்களாகவும், द्रष्टव्यौ- பார்க்கத்தகுந்தவர்கள்.

31 (பொ-ரை) கிழத்தனமாயும் என்னை விட்டுப்பிரிந்த துக்கத்தினால் இளைத்தவளான என் தாயாரான கௌஸல்யாதேவியை தர்மம் ஒன்றையே ப்ரதானமாகக் கைப்பற்றியிருக்கிற நீ கௌரவித்துக்கொண்டிருக்கவேண்டும்.

32 (பொ-ரை) கௌஸல்யாதேவியைத்தவிர மற்ற என்னுடைய ஸகல மாதாக்களையும் ப்ரதிதினமும் நீ நமஸ்கரிக்கவேண்டும். ஏனென்றால் அவர்கள் என்னிடத்திலே அன்பு செய்வதாலும் நல்ல ஸம்மானத்துடனிருப்பதாலும் என்னை வளர்த்ததாலும் என் தாயாரான கௌஸல்யாதேவிக்குத் துல்யமானவர்கள்.

33. (பொ-ரை) பரதனும், சத்ருக்னனும், எனக்கு ப்ராணனை விட ப்ரியமானவர்கள். அவர்கள் உனக்கு மைத்துனர்களாக இருக்கிறபடியால் கௌரவம் செய்யவேண்டியிருப்பதுடன் ப்ராதாவுக்கும், புத்ரனுக்கும் ஸமானமாக எண்ணியிருக்கவேண்டும்.

विप्रियं न च कर्तव्यं भरतस्य कदाचन ।
स हि राजा प्रभुश्चैव देशस्य च कुलस्य च ॥ 34 ॥
आराधिता हि शीलेन प्रयत्नैश्चोपसेविताः ।
राजानः संप्रसीदन्ति प्रकुप्यन्ति विपर्यये ॥ 35 ॥
औरसानपि पुत्रान्हि त्यजन्त्यहितकारिणः ।
समर्थान्संप्रगृह्णन्ति जनानपि नराधिपाः ॥ 36 ॥

34. (ப-ரை) कदाचन- ஒருக்காலமு, भरतस्य- பரதனுக்கு, विप्रियं च- ப்ரியமல்லாத காரியம, न कर्तव्य- உன்னால் செய்யத்தகுந்ததன்று, हि- ஏனென்றால், सः- அவன், देशस्य च- இந்த கோஸல தேசத்திற்கும, कुलस्य च- நமமுடைய குலத்திற்கும, राजा- அரசனையும், प्रभुः च एव- ப்ரபுவாகவுட, (இருக்கிறான்).

35. (ப-ரை) हि- ஏனென்றால், राजानः- அரசர்கள், शीलेन- நன்னடக்கையி ஞல், आराधिताः- ஸந்தோஷப்பட்டும, प्रयत्नैः च- ப்ரயத்னத்தினுலும், उपसेविताः सन्तः- ஸேவிக்கப்பட்டவர்களாய்க் கொண்டும, सप्रसीदन्ति- கருணைபுரிவார்கள், विपर्यये- அப்படியில்லாமலிருக்கும் பக்ஷத்தில், प्रकुप्यन्ति- கோபம் கொள்ளுவார்கள்.

36. (ப-ரை) नराधिपाः- அரசர்கள், औरसान् अपि पुत्रान्- தன்னுடைய ஔரஸ புத்ரர்களையும், अहितकारिणः- தனக்கு ஹிதமல்லாத காரியத்தைச் செய்பவர்களாயிருந்தால், त्यजन्ति- விட்டுவிடுகிறார்கள், जनान् अपि- பந்துவில்லாத மற்ற ஜனத்தை, समर्थान्- கெட்டிக்காரர்களாயிருந்தால், सप्रगृह्णन्ति- கைக்கொள்ளுகிறார்கள்

34. (பொ-ரை) நீ ஒருககாலுமு பரதனுக்கு ப்ரியமல்லாத காரியத்தை செய்யக்கூடாது. ஏனென்றால் அவன் இந்த தேசத்திற்கும, நம குலத்திற்கும அரசனுகவும், ப்ரபுவாகவுமிருக்கிறான்.

35. (பொ-ரை) ஏனென்றால் நன்னடைக்கையுடன் சோப்பல முதலியவை யில்லாமல் பணிவிடை செய்துவநதால் மாத்திரம அரசர்கள் மனது கலக்கமில்லாதிருக்கும. அப்படிக்கில்லாமல் இருந்தால உடனே கோபித்துக்கொள்ளுவார்கள்.

36 (பொ-ரை) அரசர்களுடைய ஸ்வபாவமென்னவென்றால் சொல்லுகிறேன் கேள். தன் ஔரஸபுத்ரர்களாயினும் தனக்குப்ரியமில்லாத காரியத்தைச் செய்தால் அவர்களை விட்டுவிடுவார்கள். ஒருவிதமான பந்துவல்லாதவர்களும் தனக்கு அநுகூலமாய் யிருந்த கெட்டிக்காரர்களாயிருந்தால் அவர்களைக்கைக்கொள்ளுவார்கள்.

सा त्वं वसेह कल्याणि राज्ञः समनुवर्तिनी ।
भरतस्य रता धर्मे सत्यव्रतपरायणा ॥ 37 ॥
अहं गमिष्यामि महावनं प्रिये त्वया हि वस्तव्यमिहैव भामिनी ।
यथा व्यलीकं कुरुपे न कस्यचित्तथा त्वया कार्यमिदं वचो मम ॥ 38 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये अयोध्याकाण्डे
षड्विंशः सर्गः ॥ 26 ॥

37. (ப-ரை) हे कल्याणि- மங்களமுள்ளவளே! सा त्वं- அப்படிப்பட்ட நீ, सत्यव्रत परायणा- ஸத்தியத்தையும், வ்ரதத்தையும் முக்யமாகக்கொண்டவளாய், धर्मे- தர்மத்திலே, रता- அன்புள்ளவளாய், राज्ञः- அரசனான, भरतस्य- பரதனுடைய, समनुवर्तिनी- அநுவர்த்தனம் செய்துகொண்டு, इह- இங்கு, वस- வஸித்துக்கொண்டிரு.

27. (ப-ரை) हे प्रिये- மிகவும் ப்ரியமான, भामिनि- அழகுள்ளவளே! अहं-நான், महावनं- பெரிதான வனத்தைக்குறித்து, गमिष्यामि- போகப்போகிறேன், त्वया हि- உன்னால், इह एव- இவ்விடத்திலேயே, वस्तव्यं- வஸிக்கத்தகுந்தது, कस्यचित्- எந்த ப்ராணிகளுக்கும், यथा- எப்படி, व्यलीकं- அப்ரியத்தை, न कुरुपे- செய்யாமலிருப்பாயோ! तथा- அப்படி, मम- என்னுடைய इदं वचः- இந்த வார்த்தையும், त्वया- உன்னால் कार्यं- செய்யத்தகுந்தது.

37. (பொ-ரை) ஹே மங்களமுள்ளவளே! இவ்விஷயங்களையெல்லாம் நன்றாய் அறிந்துகொண்டு நீ ஸத்யத்தையும் வ்ரதத்தையும் முக்யமாகக்கைக்கொண்டு தர்மாநுஷ்டானத்திலும் விசேஷமாக அன்புவைத்து அரசனான பரதனை அநுஸரித்து இங்கேயே வஸித்துக்கொண்டிரு.

38. (பொ-ரை) மிகவும் ப்ரியமாயும் அழகுள்ளவளுமான ஸீதே நான் தண்டகாவனம் புறப்பட்டுப்போகிறேன். நீ இவ்விடத்திலேயே வாஸம் பண்ணிக்கொண்டிரு. ஒருவருக்கும் ஒருவிதமான விரோதமும் செய்யாமலிருக்கவேண்டும். நான் சொல்லியபடியும் செய்யவேண்டும்.

—⁂—

सप्तविंशः सर्गः ॥ 27 ॥

एवमुक्ता तु वैदेही प्रियार्हा प्रियवादिनी ।
प्रणयादेव संक्रुद्धा भर्तारमिदमब्रवीत् ॥ 1 ॥
किमिदं भाषसे राम वाक्यं लघुतया ध्रुवम् ।
त्वया यदपहास्यं मे श्रुत्वा नरवरात्मज ॥ 2 ॥
[वीराणां राजपुत्राणां शस्त्रास्त्रविदुषां नृप ।
अनर्हमयशस्यं च न श्रोतव्यं त्वयेरितम् ॥ 1 ॥]

---

1. (ப-ரை) एवं- இவ்விதமாக, उक्ता- சொல்லப்பட்டும், प्रियार्हा- ப்ரியமான வார்த்தையைக் கேட்கத்தகுந்தவளும், प्रियवादिनी- ப்ரியத்தைச் சொல்லும் ஸ்வபாவமுள்ளவளுமான, वैदेही तु- ஸீதையும், प्रणयात् एव- ஸ்நேஹத்தினாலேயே, संक्रुद्धा सती- கோபமுள்ளவளாய்க்கொண்டு, भर्तारं- பர்த்தாவைப்பார்த்து, इदं- இந்த வார்த்தையை. अब्रवीत्- சொன்னாள்.

2. (ப-ரை) हे राम- ஸ்ரீராமனே! किं इदं- என்ன இது! त्वया- உம்மால், लघुतया- மிகவும் துச்சமென்று, ध्रुवम्- நிச்சயிக்கப்பட்ட, वाक्यं- வார்த்தையை, भाषसे- சொல்லுகின்றீர், हे नरवरात्मज- ராஜபுத்ரனே! यत्- யாதொரு வார்த்தை, श्रुत्वा- கேட்டு मे- எனக்கும், अपहास्यं- சிரிக்கத்தகுந்ததாயிருக்கிறது.

[1. (ப-ரை) हे नृप- மன்னவனே! शस्त्रास्त्रविदुषां- சஸ்த்ரங்களையும், அஸ்த்ரங்களையும் நன்றாய் அறிந்த, वीराणां- சூரர்களான, राजपुत्राणां- ராஜகுமாரர்களுக்கு, अनर्हं- தகாததும், अयशस्यं च- அபகீர்த்திகரமானதும், त्वया ईरितम्- உம்மால் சொல்லப்பட்ட வார்த்தையானது, न श्रोतव्यं- கேட்கத்தகாதது.]

---

1. (பொ-ரை) ப்ரியத்தை கேட்கத்தகுந்தவளும் ப்ரியத்தையே சொல்லும் ஸ்வபாவமுள்ளவளுமான ஸீதையைப்பார்த்து ஸ்ரீராமன் இவ்விதம் ப்ரியமில்லாத வார்த்தையைச்சொல்லவே ஸீதாதேவியும் ஸ்ரீராமனிடத்தில் தனக்கிருக்கும் அன்பினால் ஒருக்காலும் விட்டுப்பிரியாமல் இருக்கக்கூடிய என்னை இவ்விதம் கூசாமல் இங்கேயே இரு என்று சொல்லுகிறாரே என்று கோபத்தினால் பர்த்தாவைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னாள்.

2. (பொ-ரை) ராஜகுமாரா ஸ்ரீராமா பெண்பிள்ளையான நான் கேட்டு சிரிக்கத்தகுந்த இவ்விதம் லேசான வார்த்தையை நீர் சொல்லுகிறீர். இதென்ன புதுமாதிரியாயிருக்கிறது அதாவது:—உன்னை இவ்விடத்திலேயே நிறுத்திவிட்டு நான் மாத்திரம் வனம் போய்வருகிறேன் என்று சொல்லுகிற உம்முடைய வார்த்தை இதுநாள்வரையில் நானும் நீரும் அநுஸரித்துவந்த அன்பிற்கு கொஞ்சமும் பொருந்தாதது.

[1. (பொ-ரை) ப்ரபோ! சஸ்த்ராஸ்த்ரங்களை நன்றாயறிந்த சூரர்களான ராஜகுமாரர்களுக்குத் தகாததும் அபகீர்த்திகரமாக உம்மால் சொல்லப்பட்ட இந்த வார்த்தை காதால் கேட்கவே தகாதது ]

* आर्यपुत्र पिता माता भ्राता पुत्रस्तथा स्नुषा ।
स्वानि पुण्यानि भुञ्जानाः स्वं स्वं भाग्यमुपासते ॥ 3 ॥
भर्तुर्भाग्यं तु भार्यैका प्राप्नोति पुरुषर्षभ ।
अतश्चैवाहमादिष्टा वने वस्तव्यमित्यपि ॥ 4 ॥
न पिता नात्मजो नात्मा न माता न सखीजनः ।
इह प्रेत्य च नारीणां पतिरेको गतिः सदा ॥ 5 ॥

---

3. (ப-ரை) हे आर्यपुत्र- ஆர்ய புத்ரரே! पिता-தகப்பனும், माता- தாயாரும், भ्राता- கூடப்பிறந்தவனும், पुत्रः-பிள்ளையும், तथा- அப்படியே, स्नुषा- மருமகளும், स्वानिपुण्यानि- தங்கள், தங்கள் புண்ய பலங்களை, भुञ्जानाः-அநுபவித்துக்கொண்டு, स्वं स्वं- தங்களுக்கே ஏற்பட்ட, भाग्य- சுப, அசுப கர்மத்தை, उपासते- செய்கின்றார்கள்.

4. (ப-ரை) हे पुरुषर्षभ- புருஷோத்தமா! भार्या एका तु- பார்யை ஒருவள் மாத்திரம், भर्तुः- பர்த்தாவினுடைய, भाग्यं- சுபாசுப பலத்தை, प्राप्नोति- அடைகின்றாள், अतः च एव- அதினாலேயே, अहं-अपि- நானும், वने- वस्तव्यं इति- வனத்தில் வஸிக்க வேண்டுமென்று, आदिष्टा- கட்டளையிடப்பட்டேன்.

5. (ப-ரை) इह- இந்த உலகத்திலும், प्रेत्य च- பரலோகத்திலும், नारीणां- ஸ்த்ரீகளுக்கு, पिता न गतिः- பிதாவும் கதியன்று, आत्मजः न- பிள்ளையும் கதியன்று, आत्मा न- தானும் கதியன்று, न माता- மாதாவும் கதியன்று, न सखीजनः- தோழியும் கதியன்று, पतिः एकः- பர்த்தா ஒருவன்தான், सदा- எப்பொழுதும், गतिः கதி.

3. (பொ-ரை) ஆர்யபுத்ரரே! உலகத்தில் தகப்பனார், தாயார், கூடப்பிறந்தவன், பிள்ளை, மருமகள், என்னும் இவர்கள், அவரவர்கள் செய்த புண்ய பாப பலங்களை அநுபவித்துக்கொண்டு புண்ய பாப ரூபமான கர்மங்களைச்செய்கின்றார்கள்.

4 (பொ-ரை) புருஷோத்தமா! பார்யை ஒருவள் மாத்திரம் பர்த்தாசெய்த ஸுக்ருத துஷ்க்ருத பலத்தை அநுபவிக்கின்றவள். ஏனென்றால் "अर्धो वा एष आत्मनः यत पत्नी" என்று ச்ருதியின்படி பர்த்தாவின் பாதி சரீரமானபடியால் வனவாஸம் செய்யவேண்டுமென்று உமக்குத் தகப்பனார் செய்த உத்தரவில் நானும் சேர்ந்தவள். அதாவது நீயும் வனவாஸம் செய்யவேண்டியவள் என்று எனக்கும் அவர் கட்டளையிட்டதுதான்.

5. (பொ-ரை) உலகத்தில் ஸ்த்ரீகளுக்கு இந்த லோகத்திலாகட்டும், பரலோகத்திலாகட்டும், பிதாவும், பிள்ளையும், தானும், மாதாவும், தோழிமார்களும், கதியல்ல. பர்த்தா ஒருவன் மாத்திரந்தான் கதி.

---

* "आर्यपुत्र" என்பது பர்த்தாவைக்குறித்து பார்யை ப்ரியமாக அழைக்கின்றபதம்.

यदि त्वं प्रस्थितो दुर्गं वनमद्यैव राघव ।
अग्रतस्ते गमिष्यामि मृद्नन्ती कुशकण्टकान् ॥ 6 ॥
ईर्ष्यारोषौ बहिष्कृत्य भुक्तशेषमिवोदकम् ।
नय मां वीर विस्रब्धः पापं मयि न विद्यते ॥ 7 ॥
प्रासादाग्रैर्विमानैर्वा वैहायसगतेन वा ।
सर्वावस्थागता भर्तुः पादच्छाया विशिष्यते ॥ 8 ॥

---

6. (ப-ரை) हे राघव- ரகுகுலத்துக் குமாரரே! त्वं- நீர், दुर्गं- போகமுடியாமலிருக்கிற, वनं- வனத்தைக்குறித்து, अद्य एव- இப்பொழுதே, प्रस्थित: यदि- புறப்பட்டீரேயானால், कुशकण्टकान्- முள்ளுபோல்கூரான தர்பம் முதலிய புற்களை, मृद्नन्ती सती- காலால் மிதித்துக்கொண்டு, ते अग्रत:- உமக்கு முன்னே, गमिष्यामि- போவேன்.

7. (ப-ரை) हे वीर- வீரனே! ईर्ष्यारोषौ- பொறாமையையும், கோபத்தையும், भुक्तशेषं- குடித்துமிச்சமான, उदकम् इव- தண்ணீரைப்போல், बहिष्कृत्य- விட்டுவிட்டு. विस्रब्ध:- சங்கையில்லாதவராய், मां- என்னை, नय- கூட அழைத்துக்கொண்டுபோக வேண்டும், मयि- என்னிடத்தில், पापं- பாபமானது, न विद्यते- இல்லை.

8. (ப-ரை) प्रासादाग्रै:- உப்பரிகைகளின் நுனிகளில் வஸிப்பதைக்காட்டிலும் (पञ्चम्यर्थे तृतीया), विमानै: वा- விமானங்களில் ஸஞ்சரிப்பதைக்காட்டிலும், वैहायसगतेन वा- அஷ்டைச்வர்யம் பெற்று ஆகாசத்தில் ஸஞ்சரிப்பதைக்காட்டிலும். भर्तु:- பர்த்தாவி

---

6. (பொ-ரை) ஹே ராகவா! மரங்களும், செடிகளும், புதர்களுமடர்ந்து நுழையமுடியாத வனத்திற்கு நீர் போவதாக இப்பொழுதே புறப்படுவதில் முள்ளுபோல் கூர்மையாயிருக்கிற தர்பம் முதலான புற்களை மிதித்து மெதுவாகச் செய்துகொண்டு உமக்கு முன்னே நடப்பேன்.

7. (பொ-ரை) வீரா! நம்முடன் கூடவந்து இவள் என்ன காரியத்தைச் செய்யப்போகிறாள் என்று பொறாமையையும், இங்கேயே இரு என்று நான் பலதடவை சொன்னபோதிலும் ஒரு ஸ்த்ரீ கேட்காமல் தானும் வருகிறேனென்று சொல்லுகிறாளென்கிற கோபத்தையும், குடித்து மிச்சமான தீர்த்தத்தை தள்ளிவிடுவதுபோல் தள்ளிவிட்டு, வனத்திற்கு இவள் வந்தால் இவளால் நமக்கு என்ன கஷ்டம் நேரிடுமோவென்கிற சங்கையேயில்லாமல் என்னைக்கூடவே அழைத்துக்கொண்டு போகவேண்டும். உம்மைவிட்டுப்பிரிந்து இருப்பதற்குக் காரணமான பாபம் என்னிடத்திலில்லை. ("भुक्तशेषं इवोदकम्" என்கிற த்ருஷ்டாந்தத்தை ईर्ष्यारोषौ बहिष्कृत्य என்பதிலும், नय मां वीर विस्रब्ध: என்பதிலும், அன்வயித்துக்கொள்ளலாம் என்று சில வ்யாக்யானத்தின் கருத்து.)

8. (பொ-ரை) உயர்ந்த உப்பரிகைகளின்மேலே வாஸம் பண்ணுவதைக் காட்டிலும், ஸ்வர்க்கலோகம் சென்று தேவர்களைப்போல் விமானத்திலேறி ஸஞ்சரிப்பதைக்காட்டிலும், அணிமா முதலாகிய அஷ்டைச்வர்யம் பெற்று ஆகாசத்தில்

अनुशिष्टास्मि मात्रा च पित्रा च विविधाश्रयम् ।
नास्मि सम्प्रतिवक्तव्या वर्तितव्यं यथा मया ॥ 9 ॥
अहं दुर्गं गमिष्यामि वनं पुरुषवर्जितम् ।
नानामृगगणाकीर्णं शार्दूलवृकसेवितम् ॥ 10 ॥
सुखं वने विवत्स्यामि यथैव भवने पितुः ।
अचिन्तयन्ती त्रीन्लोकांश्चिन्तयन्ती पतिव्रतम् ॥ 11 ॥

---

னுடைய, पादच्छाया- சரணாரவிந்த ஸேவையானது, सर्वावस्थागता- பலவித கஷ்டமாயிருந்த போதிலும், विशिष्यते- மேலானது.

9. (ப-ரை) यथा- எப்படி, मया- என்னால், वर्तितव्यं- (பர்த்தாவிஷயத்தில்) இருக்கவேண்டுமோ, तथा- அப்படி, मात्रा- மாதாவினாலும், पित्रा च- பிதாவினாலும், विविधाश्रयम्- பலபடியாக, अनुशिष्टा अस्मि- கட்டளையிடப்பட்டிருக்கிறேன், सम्प्रति- இப்பொழுது, वक्तव्या- (புதியதாக) சொல்லவேண்டியவளாக, न अस्मि- இல்லை.

10. (ப-ரை) दुर्गं- ப்ரவேசிக்க முடியாததாயும், पुरुषवर्जितम्- ஜன ஸஞ்சாரமில்லாததாயும், नानामृगगणाकीर्णं- பலவிதங்களான, மருகங்களின் கூட்டங்களால் நிறைந்ததாயும், शार्दूलवृकसेवितम्- புலிகளாலும், செந்நாய்களாலும் ஸேவிக்கப்பட்டிருக்கிற, वनं- வனத்தைக்குறித்து, अहं- நான், गमिष्यामि- போவேன்.

11. (ப-ரை) त्रीन् लोकान्- மூன்று உலகங்களையும், अचिन्तयन्ती- (ஒரு பொருளாக) நினையாதவளாய், पतिव्रतम्- பர்த்தாவின் விஷயமான சிச்ருஷையை, चिन्तयन्ती- (மிகவும் சிறந்ததாக) எண்ணிக்கொண்டு, पितुः- பிதாவினுடைய, भवने यथा एव- அரண்மனையில் போலவே, वने- வனத்தில், सुखं- ஸுகமாக, विवत्स्यामि- வாஸம் செய்வேன்.

ஸ்வேச்சையாய் ஸஞ்சரிப்பதைக்காட்டிலும், பர்த்தாவினுடைய பாதஸேவை, எவ்வளவு கஷ்டமாயிருந்தாலும், பதிவ்ரதா ஸ்த்ரீகளுக்கு மிகவும் விசேஷமானது.

9. (பொ-ரை) நான் பர்த்தா விஷயத்தில் எப்படி நடந்துகொள்ளவேண்டுமோ அந்த விதத்தை பலபடியாக என் மாதாவும், பிதாவும் முன்னமே நன்றாய் கற்பித்திருக்கிறார்கள் இப்பொழுது புதிதாக சொல்லவேண்டியவளன்று.

10. (பொ-ரை) ஆகையால் நீ போகின்ற வனம் ப்ரவேசிப்பதற்கே கஷ்டமாயிருந்தாலும் ஸரி, பலவித ம்ருகங்களின் கூட்டங்கள் நிறைந்திருந்தாலும் ஸரி, மிகவும் பயங்கரமான புலிகள், செந்நாய்கள் முதலிய துஷ்ட ஜந்துக்களோடு கூடியிருந்தாலும் ஸரி, அவசியம் நானும் வருவேன்.

11. (பொ-ரை) த்ரிலோக ஐச்வர்யத்தையும் ஒரு பொருளாக மதியாமல் பர்த்தாவுடன் கூட இருந்து சிச்ருஷை செய்வதையே சிறந்ததனமாக எண்ணிக்கொண்டு, பிதாவின் அரண்மனையில் வஸிப்பதுபோல் கண்டகாரண்யத்திலும் ஸுகமாக வஸிப்பேன்.

शुश्रूषमाणा ते नित्यं नियता ब्रह्मचारिणी ।
सह रंस्ये त्वया वीर वनेषु मधुगन्धिषु ॥ 12 ॥
त्वं हि कर्तुं वने शक्तो राम सम्परिपालनम् ।
अन्यस्यापि जनस्येह किं पुनर्मम मानद ॥ 13 ॥
सह त्वया गमिष्यामि वनमद्य न संशयः ।
नाहं शक्या महाभाग निवर्तयितुमुद्यता ॥ 14 ॥

---

12. (ப-ரை) हे वीर- சூரனே! नियता- நியமமுடையவளாய், ब्रह्मचारिणी- இந்திரியங்களை அடக்கிக்கொண்டும், नित्यं- எப்பொழுதும், ते- உமக்கு, शुश्रूषमाणा- பணிவிடை செய்துகொண்டும், मधुगन्धिषु- தேன்வாஸனைகளுள்ள, वनेषु- வனங்களிலே, त्वया सह- உம்முடன்கூட, रंस्ये- விளையாடிக்கொண்டிருப்பேன்.

13. (ப-ரை) हे मानद- (அடைந்தவர்களுக்கு) பெருமையைக்கொடுக்கும், राम- ஸ்ரீராம, त्वं- நீர், इह वने- இந்த தண்டகாவனத்தில், अन्यस्य अपि जनस्य- இதர ஜனத்திற்குமே, सम्परिपालनम्- பரிபாலனத்தை, कर्तुं- செய்வதற்கு, शक्तः हि- வல்லவரன்றோ, मम पुनः- எனக்கோவென்றால், किं पुनः- சொல்லவேண்டுமென்ன.

14. (ப-ரை) हे महाभाग- மஹாபாக்யசாலியே! अद्य- இப்பொழுது, अहं- நான், त्वया सह- உம்முடன்கூட, वनं- வனத்தைக்குறித்து, आगमिष्यामि- வருவேன், न संशयः- ஸந்தேகமில்லை, उद्यता- (ப்ரயாணத்திற்கு) ஸித்தமாயிருக்கிற நான், निवर्तयितुं- திருப்புவதற்கு, न शक्या- முடிந்தவளன்று.

---

12. (பொ-ரை) நியமத்துடன் கூடி, காமபோகங்களை வர்ஜித்து, இந்த்ரியங்களை அடக்கி எப்பொழுதும உமக்கு சுச்ரூஷைசெய்துகொண்டு, தேன், வாஸனைகளுடன் கூடிய வனங்களில் அபூர்வ வஸ்துக்களைப்பார்த்துக்கொண்டு உம்முடன் கூட விளையாடிக்கொண்டிருப்பேன்.

13. (பொ-ரை) அடைந்தவர்களுக்கு பெருமைகொடுக்கக்கூடிய ஸ்ரீராம! ஒரு உறவுமில்லாத இதர ஜனங்களையும், அந்த வனத்தில் காப்பாற்ற சக்தியுள்ளவராயிருக்கின்றீரே அப்படியிருக்க, உமமை விட்டுப்பிரிந்து இருக்கக்கூடாத என்னைக்காப்பாற்றும் விஷயத்தில் சொல்லவேண்டுமாமோ என்.

14. (பொ-ரை) மஹா பாக்யமுடையவரே! நானும் உம்முடன்கூட இப்பொழுது வனத்திற்கு வருவேன். இதில் ஸம்சயமில்லை. வனப்ரயாணத்திற்கு ஸித்தமாயிருக்கிற என்னை திருப்ப முடியாது.

फलमूलाशना नित्यं भविष्यामि न संशयः ।
न ते दुःखं करिष्यामि निवसन्ती सह त्वया ॥ 15 ॥
[अग्रतस्ते गमिष्यामि भोक्ष्ये भुक्तवति त्वयि ॥]
इच्छामि सरितः शैलान्पल्वलानि वनानि च ।
द्रष्टुं सर्वत्र निर्भीता त्वया नाथेन धीमता ॥ 16 ॥
हंसकारण्डवाकीर्णाः पद्मिनीः साधु पुष्पिताः ।
इच्छेयं सुखिनी द्रष्टुं त्वया वीरेण सङ्गता ॥ 17 ॥

15. त्वया सह- உம்முடன்கூட, निवसन्ती- வஸித்துக்கொண்டு, नित्यं- எப்பொழுதும், फलमूलाशना- பழங்களையும், கிழங்குகளையும், ஆஹாரமாகவுடையவளாக, भविष्यामि- இருப்பேன், ते- உமக்கு, दुःखं- கஷ்டத்தை, न करिष्यामि- செய்யமாட்டேன், न संशयः- இதில் ஸந்தேகமில்லை.

[(ப-ரை) ते अग्रतः- உமக்கு முன்னே, गमिष्यामि- போவேன், त्वयि- நீர், भुक्तवति सति- ஸாப்பிட்டபிறகு, भोक्ष्ये- நானும் ஸாப்பிடுகிறேன்.]

16. (ப-ரை) धीमता- புத்திசாலியாயும், नाथेन- ரக்ஷகனுமான, त्वया- உம்மால், सर्वत्र- எங்கும், निर्भीता सती- பயமில்லாதவளாய், सरितः- நதிகளையும், शैलान्- பர்வதங்களையும், पल्वलानि- குட்டைகளையும, वनानि च- காடுகளையும், द्रष्टुं- பார்ப்பதற்கு, इच्छामि- ஆசைப்பட்டுக்கொண்டிருக்கிறேன்.

17. (ப-ரை) वीरेण- சூரரான, त्वया- உம்மோடு, सङ्गता- சேர்ந்துகொண்டு, सुखिनी- ஸுகமுடையவளாய், हंसकारण्डवाकीर्णाः- ஹம்ஸங்களும், நீர்க்கோழிகளும், साधु पुष्पिताः- நன்றாய்மலர்ந்த புஷ்பங்களுமுள்ள, पद्मिनीः- தாமரை ஓடைகளை, द्रष्टुं- பார்ப்பதற்கு, इच्छेयं- விரும்புகிறேன்.

---

15. (பொ-ரை) பழம, கிழங்கு, முதலியவைகளை புஜித்துக்கொண்டு, உம்முடன் கூடவே வனத்தில் வஸிக்கின்றேன். உமக்கு கொஞ்சமும் ச்ரமத்தையுண்டுபண்ணமாட்டேன். இதில் ஸம்சயமில்லை.

[(பொ-ரை) நீர் வனத்தில் ஸஞ்சரிக்கும் காலத்தில் உமக்கு முன்னமேய நடப்பேன். காய், கிழங்குகளை நீர் புஜித்தபிறகு மீதியை நான் சாப்பிடுவேன்.]

16. (பொ-ரை) மிகவும் புத்திசாலியும், ரக்ஷகனுமான உம்முடன்கூட வருகிறபடியால் எங்கும் பயமில்லாமல் நதிகளையும், மலைகளையும், குட்டைகளையும், வனங்களையும் பார்க்க ஆசைப்படுகிறேன்.

17. (பொ-ரை) வீரனான உம்முடன் சேர்ந்து, மிகுந்த ஸுகமுடையவளாய் அன்னங்களும், நீர்க்கோழிகளும நிறைந்து, அழகாய் மலர்ந்த புஷ்பங்களுமுடைய தாமரை ஓடைகளைப்பார்க்க ஆசைப்படுகின்றேன்.

अभिषेकं करिष्यामि तासु नित्यं यतव्रता ।
सह त्वया विशालाक्ष रंस्ये परमनन्दिनी ॥ 18 ॥
एवं वर्षसहस्राणां शतं वाहं त्वया सह ।
व्यतिक्रमं न वेत्स्यामि स्वर्गोऽपि न हि मे मतः ॥ 19 ॥
स्वर्गेऽपि च विना वासो भविता यदि राघव ।
त्वया मम नरव्याघ्र नाहं तमपि रोचये ॥ 20 ॥

18. (ப-ரை) हे विशालाक्ष- அகன்ற கண்களையுடையவரே! परमनन्दिनी- மிகவும் ஆனந்தமுடையவளாய், नित्यं- எப்பொழுதும், यतव्रता- நியதமான வ்ரதமுடையவளாய், त्वया सह- உம்முடன்கூட, तासु- அந்த தாமரை ஓடைகளில், अभिषेकं करिष्यामि- ஸ்நாநம் செய்வேன், रंस्ये- விளையாடிக்கொண்டிருப்பேன்.

19. (ப-ரை) एवं- இவ்விதம், त्वया सह- உம்முடன்கூட, (வஸித்துக்கொண்டு), व्यतिक्रमं- கழிந்த, वर्षसहस्राणां- ஆயிரம் வருஷங்களுடைய, शत वा- நூறையும், न वेत्स्यामि- அறியமாட்டேன், स्वर्गः अपि- (உம்மைவிட்டு) ஸ்வர்க்கம், मे- எனக்கு, न मतः हि- ப்ரியமானதல்ல.

20. (ப-ரை) हे राघव- ஸ்ரீராகவனே! नरव्याघ्र- புருஷோத்தமனே! मम- எனக்கு, स्वर्गे अपि च- ஸ்வர்க்கத்திலும், वासः- வாஸமானது, त्वया विना- உம்மைவிட்டு, भविता यदि- உண்டாகுமேயானால், तमपि- அதையும், अहं- நான், न रोचये- ஆசைப்படமாட்டேன்.

18. (பொ-ரை) அகன்ற கண்களையுடையவரே! எப்பொழுதும் நியதமான வ்ரதங்களுடன் உம்முடன்கூட அந்த தாமரை ஓடைகளிலே ஸ்நானம் செய்துகொண்டும், பரமானந்தத்துடன் விளையாடிக்கொண்டிருப்பேன்.

19. (பொ-ரை) இவ்விதம் உம்முடன்கூட வஸித்துக்கொண்டிருக்குங்காலத்தில் நூறு ஆயிரம் வருஷங்கள கழிந்தாலும் அதை ஒரு க்ஷணமாகவே நினைத்திருப்பேன். அப்படியிருக்க இந்த அல்பமான பதினான்கு வருஷம் ஒரு பெரிதா, ஆகையால் உம்மைப்பிரிந்து ஸ்வர்க்க வாஸத்திலும் எனக்கு ப்ரியமில்லை.

20. (பொ-ரை) ஸ்ரீராமா! புருஷோத்தமா! நீர் இல்லாமல் எனக்கு ஸ்வர்க்கவாஸம் கிடைத்தாலும் அதையும் நான் ஆசைப்படமாட்டேன்.

* अहं गमिष्यामि वनं सुदुर्गमं मृगायुतं वानरवारणैर्युतम् ।
वने निवत्स्यामि यथा पितुर्गृहे तवैव पादावुपगृह्य संयता ॥ 21 ॥

21. (ப-ரை) अहं- நான், मृगायुतं- ம்ருகங்களோடு கூடினதாயும், वानरवारणैः युतम्- வானரங்களோடும், யானைகளோடும் கூடினதாயும், (अत एव- ஆகையினாலேயே), सुदुर्गमं- மிகவும் ப்ரவேசிக்கமுடியாததுமான, वनं- தண்டகாவனத்தை, (க்குறித்து) गमिष्यामि- போவேன், सयता- மிகவும் நியமம் உள்ளவளாய்க்கொண்டு, तव- உம்முடைய, पादौ एव- திருவடிகளையே, उपगृह्य- பிடித்துக்கொண்டு, पितुः- பிதாவினுடைய, गृहे यथा- அரண்மனையில் (வஸிப்பது) போல, वने- அரண்யத்தில், निवत्स्यामि- வஸிப்பேன்.

21. (பொ-ரை) ம்ருகங்கள், வானரங்கள், யானைகள் இவைகள் நிறைந்து ப்ரவேசிக்கமுடியாமலிருக்கிற தண்டகாவனத்தைக்குறித்து நான் அவச்யம் வருவேன். அந்த நியமத்துடன் உம்முடைய திருவடிகளையே பிடித்துக்கொண்டு (சுச்ரூஷை செய்துகொண்டு) பிதாவின் அரண்மனையில் வஸிப்பதுபோல் ஸுகமாய் வாஸம் செய்வேன்.

* இவ்விடத்தில் मृग, वानर, वारण, என்றும் பதங்களும். वनं, वने, என்று இரண்டு பதங்களும் இருக்கின்றபடியால் ஒரு அர்த்தம் தோன்றுகிறது. அதாவது, வனத்தில் மாரீச மாயா ம்ருகம் ஒன்று காணப்படப்போகிறது. அதின் வழியாக உமக்கும், நமக்கும் பிரிவு நேரப்போகின்றது. அந்த ஸமயத்தில் உன்னையும் நம்மையும் யார் மறுபடி ஒன்று சேர்ப்பார்கள், சேருமளவையில் என்னைவிட்டு எப்படி உன்னால் க்ஷணகாலமும் ஸஹிக்கமுடியும் என்று இவ்வாறு ஆலோசிக்கின்ற ஸ்ரீராமனைக்குறித்து ஸீதை ஸூசனையாகச் சொல்லுவதாவது, ஸுக்ரீவன் முதலான, வானர ச்ரேஷ்டர்கள் உம்முடன் என்னைச்சேர்ப்பிக்கப்போகின்றார்கள். நான் பிரிந்திருக்குங்காலத்தில், அசோக வனத்தில் வஸிக்க நேரிடப்போகிறது. அப்பொழுது உம்முடைய திருவடிகளையே மனதில் நினைத்துக்கொண்டு நியமத்துடன் இருக்கப்போகிறேன் என்று கோவிந்த ராஜீயத்தில் காண்கிறது.

* अनन्यभावामनुरक्तचेतसं त्वया वियुक्तां मरणाय निश्चिताम् ।
नयस्व मां साधु कुरुष्व याचनां न ते मयातो गुरुता भविष्यति ॥ 22 ॥

22. (ப-ரை) अनन्यभावां- வேறொருவரிடத்திலும், மனதை வைக்காதவளாய், अनुरक्तचेतसं- (உம்மிடத்திலேயே) அன்புள்ள மனதை உடையவளும், त्वया वियुक्तां- உம்மால் பிரிந்தவளும், मरणाय निश्चिताम्- மரணம் அடைவதின்பொருட்டு, தீர்மானித்திருக்கிற, मां- என்னை, नयस्व- (கூடவே) அழைத்துக்கொண்டுபோம், याचनां- (என்னுடைய) ப்ரார்த்தனையை, साधु- ஸபலமாக, कुरुष्व- செய்யவேண்டும், अतः- ஆகையினாலே, ते- உமக்கு, मया- என்னாலே, गुरुता- பாரமானது, न भविष्यति- உண்டாகமாட்டாது.

22. (பொ-ரை) வேறொருவரிடத்திலும் மனதைச்செலுத்தாமல், உம்மிடத்திலேமாத்திரம் மிகவும் அன்புள்ள மனதுடையவளாயும், உம்மைவிட்டுப்பிரிந்தால் உடனே மறித்து விடுவதாக நிச்சயித்துமிருக்கிற என்னை நீர் கூடவே அழைத்துக்கொண்டுபோகவேண்டும். இவ்வளவு செய்கின்ற என்னுடைய ப்ரார்த்தனையை வீணாக்கக்கூடாது. என்னால் உமக்கு வனத்தில் யாதொரு கஷ்டமும் ஏற்படாது.

* இந்த ச்லோகத்திலும், பதங்களின் ஸந்தர்ப்பங்களினால் ஒரு பாவம் ஏற்படுகிறது. அதாவது, அசோக வனத்தில் நான் வஸிக்குங்காலத்தில், ராவணன் என்னைத் தனக்கு வசமாக்கிக்கொள்ளவேணுமென்று தன்னுடைய ஐச்வர்யம், வீர்யம், குலம் முதலானதுகளை எடுத்துக்காட்டியும் அவைகள் ஒன்றிலும் நான் ஆசை வைக்காமல் உம்முடைய சரணாரவிந்தத்திலே மிகவும் அன்புள்ளவளாயும், அப்படியிருக்கும் ஸமயத்தில் உம்முடைய வ்ருத்தாந்தம் எனக்குத்தெரியாமல் இனிமேல் ப்ராணனை விடுவதுதான் நியாயமென்று அதற்குவேண்டிய உபாயங்களைச் செய்துகொண்டிருக்கிற என்னை, ஹனுமான் மூலமாக அழைத்துக்கொண்டுபோகவேண்டுமென்றும், ஆதியில் தேவர்கள் செய்த யோசனை. அதாவது, ராவண ஸம்ஹார ப்ரார்த்தனையை நிறைவேற்றவேண்டுமென்றார்.

तथा ब्रुवाणामपि धर्मवत्सलो न च स्म सीतां नृवरो निनीषति ।
उवाच चैनां बहु सन्निवर्तने वने निवासस्य च दुःखितां प्रति ॥ 23 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
सप्तविंशः सर्गः ॥ 27 ॥

23. (ப-ரை) धर्मवत्सलः- தர்மத்தில் வாத்ஸல்யமுள்ளவரான, नृवरः- புருஷச்ரேஷ்டன், तथा- அப்படி, ब्रुवाणां अपि- சொல்லுகின்றவளாயிருந்தும், सीतां- ஸீதையை, न निनीषति स्म- அழைத்துக்கொண்டுபோக எண்ணவே இல்லை, सन्निवर्तने- திருத்தும் விஷயத்தில், वने- வனத்திலே, निवासस्य- வாஸம் செய்வதினுடைய, दुःखितां प्रति- கஷ்டமாயிருக்குமென்பதைக்குறித்தும், एनां- இந்த ஸீதையைக்குறித்து, बहु- அநேகவிதமாக, उवाच च- வார்த்தையையும் சொன்னார்.

23. (பொ-ரை) புருஷோத்தமனான ஸ்ரீராமன், இவ்விதமாக ஸீதை ப்ரார்த்திக்கப்போகிறார், வனத்திற்கு வந்தால் அவள் படும் கஷ்டங்களை நினைத்து பொருக்காதவராய், ஸீதையை தம்முடன் அழைத்துக்கொண்டுபோக நினைக்கவேயில்லை. அதுவுமல்லாமல் வனத்திற்கு வராமல் ஸீதையை இங்கேயே நிறுத்துவதற்காக "வனவாஸம் செய்வது மிகவும் கஷ்டம்" என்று பலபடியாகவும் ஸீதையைப்பார்த்து சொல்லுகிறார்.



अष्टाविंशः सर्गः ॥ 28 ॥

स एवं ब्रुवतीं सीतां धर्मज्ञो धर्मवत्सलः ।
न नेतुं कुरुते बुद्धिं वने दुःखानि चिन्तयन् ॥ 1 ॥

1. (ப-ரை) धर्मज्ञः- தர்மம் தெரிந்தவரும், धर्मवत्सलः- தர்மத்தில் ப்ரீதியுடையவருமான, सः- அந்த ஸ்ரீராமன், वने- வனத்தில், दुःखानि- கஷ்டங்களை, चिन्तयन् सन्- நினைத்துக்கொண்டு, एवं- இவ்விதம், ब्रुवतीं- சொல்லுகின்ற, सीतां- ஸீதையை, नेतुं- அழைத்துக்கொண்டுபோவதற்கு, बुद्धिं- எண்ணத்தை, न कुरुते- செய்யவில்லை.

1 (பொ-ரை) தர்மம் தெரிந்தவரும், தர்மத்தில் மிக அன்புள்ளவருமான அந்த ஸ்ரீராமன், வனத்திலுண்டாகும் (இருக்கிற) கஷ்டங்களை நினைத்துக்கொண்டு இவ்வளவு தூரம் ப்ரார்த்திக்கப்போகிறும், ஸீதையைத் தம்முடன் அழைத்துப்போக எண்ணம் கொள்ளவில்லை.

सान्त्वयित्वा पुनस्तां तु बाष्पपर्याकुलेक्षणाम् ।
निवर्तनार्थे धर्मात्मा वाक्यमेतदुवाच ह ॥ 2 ॥
सीते महाकुलीनासि धर्मे च निरता सदा ।
इहाचर स्व धर्मं त्वं मा *यथा मनसः सुखम् ॥ 3 ॥
सीते यथा त्वां वक्ष्यामि तथा कार्यं त्वयाऽबले ।
वने दोषा हि बहवो वदतस्तान्निबोध मे ॥ 4 ॥

---

2. (ப—ரை) धर्मात्मा- தர்மாத்மாவான ஸ்ரீராமன், बाष्पपर्याकुलेक्षणाम्- கண்ணீர் ததும்பின கண்களையுடைய, तां- அந்த ஸீதையை, पुनः तु- மறுபடியும், सान्त्वयित्वा- ஸமாதானம் செய்து, निवर्तनार्थे- நிறுத்துவதற்க்காகவே, एतत् वाक्यं- இந்த வார்த்தையை, उवाच ह- சொன்னார்.

3. (ப-ரை) हे सीते- ஸீதையே! महाकुलीना असि- நீ மஹா குலத்தில் பிறந்திருக்கிறாய், सदा- எப்பொழுதும், धर्मे- தர்மத்தில், निरता च- ஊக்கமுடையவளாகவுமிருக்கிறாய், (ஆகையால்), इह- இவ்விடத்தில் (இருந்துகொண்டே), स्वधर्मं- உனக்கு ஏற்பட்ட தர்மத்தை, आचर- செய்து கொண்டிரு, यथा- எப்படி, मनसः- மனதிற்கு, सुखम्- ஸுகம் உண்டாகுமோ, (तथा- அப்படி,) मा- செய்யவேண்டாம்.

4. (ப-ரை) हे अबले- மருந்த ஸ்வபாவமுள்ள, सीते- ஸீதையே, त्वां- உன்னைக் குறித்து, यथा- எப்படி, वक्ष्यामि- நான் சொல்லுவேனோ, तथा- அப்படி, त्वया- உன்னால், कार्यं- செய்யத்தகுந்தது, वने- வனத்தில், दोषाः- கஷ்டங்கள், बहवः हि- அநேகங்களன்றோ, तान्- அவைகளை, वदतः- சொல்லுகின்ற, मे- என்னிடமிருந்து, निबोध- தெரிந்துகொள்.

2. (பொ—ரை) தர்மாத்மாவான ஸ்ரீராமன், கண்களில் நீர் ததும்பிக்கொண்டிருக்கிற அந்த ஸீதையைப்பார்த்து மறுபடியும், சில வார்த்தைகளைச்சொல்லி ஸமாதானம் செய்து நிறுத்துவதற்கு வேண்டிய வார்த்தைகளையும் சொல்லுகிறார்.

3. (பொ-ரை) ஸீதே! நீ உயர்ந்த குலத்தில் பிறந்தவள். எப்பொழுதும் தர்மத்திலேயே நோக்கமுடையவள். ஆகையால் இங்கிருந்துகொண்டே உன்னுடைய தர்மத்தை செய்துகொண்டிரு. உன் மனதிற்கு இஷ்டமானபடி செய்ய வேண்டாம்.

4. (பொ-ரை) மருதுவான ஸ்வபாவமுள்ள ஸீதே, நான் உனக்குச்சொல்லுகிறபடி நீ கேட்கவேண்டும். வனவாஸத்தில் அநேக கஷ்டங்களிருக்கின்றன. அவைகளை ஒவ்வொன்றாய்ச் சொல்லுகின்றேன் கேள்

---

* यथा मनसः सुखं भवति तथा मा मां उद्दिश्य इह स्वधर्मं चर- அதாவது உன் மனதிற்கு ஸுகமாயிருக்கும்படி இங்கிருந்துகொண்டே என்னை உத்தேசித்து தர்மானுஷ்டானம் செய்துகொண்டிரு என்றும் ஒரு வ்யாக்யானத்தில் காண்.

सीते विमुच्यतामेषा वनवासकृता मतिः ।
बहुदोषं हि कान्तारं वनमित्यभिधीयते ॥ 5 ॥
हितबुद्ध्या खलु वचो मयैतदभिधीयते ।
सदा सुखं न जानामि दुःखमेव सदा वनम् ॥ 6 ॥
गिरिनिर्झरसम्भूता गिरिकन्दरवासिनाम् ।
सिंहानां निनदा दुःखाः श्रोतुं दुःखमतो वनम् ॥ 7 ॥

5. (ப-ரை) सीते- ஸீதையே! वनवासकृता- வனவாஸம் செய்வதாக நிச்சயித்திருக்கின்ற, एषा मतिः- இந்த எண்ணமானது, विमुच्यतां- விடப்படலாம், हि- ஏனென்றால், कान्तारं- ஒருவராலும் ப்ரவேசிக்கமுடியாத, वनं- வனமானது, बहुदोषं- इति- அநேக கஷ்டங்களை உடையது என்று, अभिधीयते- சொல்லப்படுகிறது.

6. (ப-ரை) हितबुद्ध्या खलु- ஹித புத்தியினாலன்றோ, मया- என்னால், एतत् वचः இந்த வார்த்தையானது, अभिधीयते- சொல்லப்படுகின்றது, वनं- வனத்தை, सदा सुखं- எப்பொழுதும் ஸுகமுடையதாக, न जानामि- நான் அறியவில்லை, सदा- எப்பொழுதும், दुःखम् एव- துக்கமேயென்று, जानामि- நான் தெரிந்துகொண்டிருக்கிறேன்.

7. (ப-ரை) गिरिनिर्झरसम्भूताः- மலை அருவிகளில் உருத்தியடைந்தவைகளான, गिरिकन्दरवासिनाम्- மலைகளின் குகைகளில் வஸித்துக்கொண்டிருக்கிற, सिंहानां- ஸிம்மங்களுடைய, निनदाः- சப்தங்கள், श्रोतुं- கேட்பதற்கு, दुःखाः- துக்ககரமானதுகள், अतः- ஆகையால், वनम्- வனமானது, दुःखं- கஷ்டம்.

5. (பொ-ரை) ஸீதே! வனவாஸம் செய்வதாக தீர்மானம் செய்த இந்த எண்ணத்தை விட்டுவிடு. ஏனென்றால் வனமானது ஒருவராலும் ப்ரவேசிக்கமுடியாதது. புலி, கரடிகள், ஸர்ப்பம் முதலான துஷ்ட ஜந்துக்களும், முள் முதலியவைகளும் நிறைந்திருக்கிறபடியால் அநேக கஷ்டங்களை உடையதென்று சொல்லுகிறார்கள்.

6. (பொ-ரை) உனக்கு ஹிதத்தைச்செய்யவேணுமென்று எண்ணத்தினாலன்றோ நான் இந்த வார்த்தையைச் சொல்லுகிறேன். அல்லது உன்னை அழைத்துக்கொண்டுபோனால் எனக்கு ரொம்பவும் ச்ரமமுண்டாகுமென்ற எண்ணத்தினாலன்று. வனத்தில் எப்பொழுதும் ஸுகமே கிடையாது. எப்பொழுதும் கஷ்டமேதான் என்று என்னுடைய எண்ணம்.

7. (பொ-ரை) மலையருவிகளுடைய சப்தங்களோடு சேர்ந்து அதிகமான மலைகளின் குகைகளில் வஸித்துக்கொண்டிருக்கிற ஸிம்மங்களின் சப்தங்கள் கேழ்ப்பதற்கு மிகவும் துக்ககரங்கள். ஆகையால் வனவாஸம் மிகவும் கஷ்டம்.

क्रीडमानाश्च विस्रब्धा मत्ताः शून्ये महामृगाः ।
दृष्ट्वा समभिवर्तन्ते सीते दुःखमतो वनम् ॥ 8 ॥
सग्राहाः सरितश्चैव पङ्कवत्यश्च दुस्तराः ।
मत्तैरपि गजैर्नित्यमतो दुःखतरं वनम् ॥ 9 ॥
लताकण्टकसंकीर्णाः कृकवाकूपनादिताः ।
निरपाश्च सुदुर्गाश्च मार्गा दुःखमतो वनम् ॥ 10 ॥

8. (ப-ரை) हे सीते- ஸீதே! शून्ये- ஜன ஸஞ்சாரமில்லாத ப்ரதேசத்தில், विस्रब्धाः- பயமில்லாமல், क्रीडमानाः च- விளையாடிக்கொண்டிருக்கிற, महामृगाः- புலி, ஸிம்மம் முதலிய பெரிய ம்ருகங்கள், दृष्ट्वा- நம்மைப்பார்த்து, समभिवर्तन्ते- எதிர்த்து வரும், अतः- ஆகையாலே, वनम्- வனமானது, दुःखं- கஷ்டமானது.

9. (ப-ரை) सरितः च एव- நதிகளும், सग्राहाः- முதலைகளோடு கூடியவைகளாயும், पङ्कवत्यः च-மிகுந்த சேறுஉடையவைகளாயும், दुस्तराः- மிகவும் தாண்ட முடியாதவைகளாயும், मत्तैः- மதித்திருக்கின்ற, गजैः अपि- கஜங்களோடும், (युक्ताः- கூடினவைகளாயும், सन्ति- இருக்கின்றதுகள், अतः- ஆகையாலே,) वनम्- வனமானது, नित्यं- எப்பொழுதும், दुःखतरं- மிகவும் கஷ்டமுள்ளது.

10. (ப-ரை) मार्गाः- வழிகள், लताकण्टकसंकीर्णाः- கொடிகளாலும், முட்களாலும் நிறைந்து, कृकवाकूपनादिताः- காட்டுக்கோழிகளின் சப்தங்களையுடையதுகளுமாய், निरपाः च- தண்ணீரும் இல்லாதவைகளாய், सुदुर्गाः च- மிகவும் ப்ரவேசிக்கமுடியாதவைகளாகவும் (இருக்கும்), अतः- ஆகையால், वनम्- வனமானது, दुःखं- துக்கமானது.

---

8 (பொ-ரை) ஸீதே! நிர்மானுஷ்யமான காடுகளில் பயமில்லாமல் விளையாடிக்கொண்டிருக்கிற புலி, ஸிம்மம் முதலிய பெரிய ம்ருகங்கள் புதிய மனிதர்களைக்கண்டால் எதிர்த்து வரும். ஆகையால் வனவாஸம் கஷ்டமானது.

9. (பொ-ரை) வனங்களிலிருக்கிற நதிகளும், அநேக முதலைகளுள்ளவைகளாயும், மிகவும் சேறு உடையவைகளாயும், தாண்ட முடியாதவைகளாயும், எப்பொழுதும் கரைகளில் மதயானைகளின் ஸஞ்சாரமுள்ளவைகளாயுமிருக்கும். ஆகையால் வனம் எப்பொழுதும் மிகுந்த கஷ்டத்தைக்கொடுக்கக்கூடியது.

10. (பொ-ரை) ஸீதே! வனத்தில் வழிகளும், கால்களைப்பிடித்து இழுக்கக்கூடிய கொடிகளாலும், காலில் தைக்கக்கூடிய முள்ளுகளாலும் நிறைந்து, காட்டுக்கோழிகளால் கூவப்பட்டு, தண்ணீரில்லாமல் ப்ரவேசிக்க மிகவும் கஷ்டமானவைகளாயுமிருக்கும். ஆகையால் வனம் கஷ்டமானது.

सुप्यते पर्णशय्यासु स्वयं भग्नासु भूतले ।
रात्रिषु श्रमखिन्नेन तस्माद्दुःखतरं वनम् ॥ 11 ॥
अहोरात्रं च सन्तोषः कर्तव्यो नियतात्मना ।
फलैर्वृक्षावपतितैः सीते दुःखमतो वनम् ॥ 12 ॥
उपवासश्च कर्तव्यो यथाप्राणेन मैथिलि ।
जटा भारश्च कर्तव्यो वल्कलाम्बर धारिणा ॥ 13 ॥

11. (ப-ரை) श्रमखिन्नेन- ச்ரமத்தினால் வருத்தப்படுகின்ற ஜனத்தினால், रात्रिषु- இராத்ரிகாலங்களிலே, भूतले- தரையில், स्वयं-भग्नासु- தானகவேபழுத்து விழுந்திருக்கின்ற, पर्णशय्यासु- இலைப்படுக்கைகளில், सुप्यते- படுக்கப்படுகிறது, तस्मात्- ஆகையாலே, वनम्- வனமானது, दुःखतरं- மிகவும் கஷ்டமானது.

12 (ப-ரை) हे सीते- ஸீதே! नियतात्मना- அடக்கப்பட்ட மனதையுடையவனாகவிருந்து, वृक्षावपतितैः-மரங்களினின்றும் தானாகவே விழுந்த, फलैः- பலங்களால், अहोरात्र च- இரவும் பகலும், सन्तोषः- (ஆஹாரத்தில்) த்ருப்தி, कर्तव्यः- செய்யத்தகுந்தது, अतः- ஆகையால், वनम्- வனமானது, दुःख- கஷ்டம்.

13. (ப-ரை) हे मैथिलि- மிதிலாநகரத்து அரசன் புத்ரியே! यथाप्राणेन- சக்திக்கு அநுகுணமாக, उपवासः च- உபவாஸமும, कर्तव्यः- செய்யத்தகுந்தது, वल्कलाम्बरधारिणा- மரவுரியை வஸ்த்ரமாக தரித்துக்கொண்டு, जटा भारः च- ஜடாபாரமும், कर्तव्यः- செய்யத்தகுந்தது.

11. (பொ-ரை) பகல் முழுவதும ஆஹாரத்திற்காக காய், கிழங்குகளை தேடியதிரிந்து மிகவும் வருத்தமடைந்த ஜனமானது, இராத்ரி காலங்களில் தரையில் தானாக விழுந்திருக்கிற இலைகளை ஒன்றுப்கூட்டி, அதைப்படுக்கையாகக்கொண்டு அதில் தூங்கும். ஆகையால் நமக்கும அநேகமான கஷ்டங்கள் நேரிடும. ஆதலால் வனவாஸம மிகவும் கஷ்டமானது.

12 (பொ-ரை) ஸீதே! இதர ஆஹாரங்களை எதிர்பாராமல் மனதை அடக்கிக்கொண்டு, தானாகவே மரங்களிலிருந்து விழுந்த காய்கனிகளை புஜித்து, இரவும் பகலும் த்ருப்தியடையவேண்டும. ஆகையால் வனவாஸம மிகவும் கஷ்டம.

13. (பொ-ரை) ஹே மைதிலி! சக்தியை அநுஸரித்து உபவாஸமிருக்கவேண்டும். மரவுரியை வஸ்த்ரமாக தரித்துக்கொண்டு, சடையும போட்டுக்கொள்ளவேணும்.

देवतानां पितॄणां च कर्तव्यं विधिपूर्वकम् ।
प्राप्तानामतिथीनां च नित्यशः प्रतिपूजनम् ॥ 14 ॥

कार्यस्त्रिरभिषेकश्च काले काले च नित्यशः ।
चरता नियमेनैव तस्माद्दुःखतरं वनम् ॥ 15 ॥

उपहारश्च कर्तव्यः कुसुमैः स्वयमाहृतैः ।
आर्षेण विधिना वेद्यां बाले दुःखमतो वनम् ॥ 16 ॥

14. (ப-ரை) देवतानां- தேவதைகளுக்கும், पितॄणां च- பித்ருக்களுக்கும், प्राप्तानां- வந்தவர்களான, अतिथीनां च- அதிதிகளுக்கும், नित्यशः- தினந்தோறும், विधिपूर्वकम्- சாஸ்த்ரப்படி, प्रतिपूजनम्- பூஜையானது, कर्तव्यं- செய்யத்தகுந்தது.

15. (ப-ரை) नियमेन एव- நியமத்துடனே, चरता- வனவாஸம் செய்கிற மனிதனால், नित्यशः- தினந்தோறும், काले काले- அந்தந்த காலத்தில், अभिषेकः च- ஸ்நானமும், त्रिः- மூன்றுதடவை, कार्यः- செய்யத்தகுந்தது, तस्मात्- ஆகையால், वनम्- வனமானது, दुःखतरं- மிகவும் கஷ்டம்.

16. (ப-ரை) हे बाले- சிறுமியே! स्वयं आहृतैः- தானே கொண்டுவந்த, कुसुमैः- புஷ்பங்களால், आर्षेण- ரிஷிகளால் சொல்லப்பட்ட, विधिना- முறையினால், वेद्यां- மேடையில், उपहारः च- பூஜையும், कर्तव्यः- செய்யவேண்டும், अतः- ஆகையால், वनम्- வனமானது, दुःखं- கஷ்டம்.

14. (பொ-ரை) தேவர்களுக்கும், பித்ருதேவர்களுக்கும், வந்தவர்களான அதிதிகளுக்கும், சாஸ்த்ர விதிப்படி எப்பொழுதும் பூஜைசெய்யவேண்டியதாகையால், அதற்கு வேண்டிய ஸாமக்ரிகளை ஸம்பாதிப்பது மிகவும் கஷ்டம். ஆகையால் வனவாஸம் கஷ்டம்.

15. (பொ-ரை) வனத்தில் நியமத்தோடு வஸித்துக்கொண்டு, தினந்தோறும் அந்தந்த காலங்களில் மூன்று தடவை ஸ்நானமும் செய்யவேணும். ஆகையால் வனம் மிகவும் கஷ்டமானது.

16. (பொ-ரை) பாலே! தானகவே ஸ்ரமப்பட்டு புஷ்பங்களை ஸம்பாதித்து ரிஷிகள் சொல்லியபடி பூஜாவேதியில் புஷ்பபலி ஸமர்ப்பிக்கவேண்டும். ஆகையால் வனவாஸம் மிகவும் கஷ்டமானது.

यथालब्धेन सन्तोषः कर्तव्यस्तेन मैथिलि ।
यताहारैर्वनचरैर्नित्यं दुःखमतो वनम् ॥ 17 ॥
अतीव वातास्तिमिरं बुभुक्षा चात्र नित्यशः ।
भयानि च महान्त्यत्र ततो दुःखतरं वनम् ॥ 18 ॥
सरीसृपाश्च बहवो बहुरूपाश्च भामिनि ।
चरन्ति पृथिवीं दर्पात्ततो दुःखतरं वनम् ॥ 19 ॥

---

17, (ப-ரை) हे मैथिलि- ஹே ஸீதே! यताहारैः- நியதமான ஆஹாரம் உள்ளவர்களான, वनचरैः- வனத்தில் வஸிப்பவர்களால், यथालब्धेन- சக்திக்கநுகுணமாகக் கிடைத்த, तेन- அந்த பழம் முதலியதினால், सन्तोषः- த்ருப்தியானது, नित्य- எப்பொழுதும், कर्तव्यः- செய்துகொள்ளவேண்டும், अतः- ஆகையால், वनम्- வனமானது, दुःखं- துக்ககரம்,

18. (ப-ரை) अत्र- இந்த வனத்தில், अतीव वाताः- அதிகமான காற்றுகளும், तिमिरं- இருட்டும், बुभुक्षा च- பசியும், नित्यशः- எப்பொழுதும், सन्ति- இருக்கின்றன, अत्र- இந்தவனத்தில், महान्ति- அதிகமான, भया नि च- பயங்களும், (இருக்கின்றன), ततः- ஆகையால், वनम्- வனமானது, दुःखतरं- மிகவும் கஷ்டத்தை உண்டுபண்ணக் கூடியது.

19. (ப-ரை) हे भामिनि- அழகுள்ளவளே! बहुरूपाः- அநேக ரூபமுள்ளவைகளாயும், बहवः- அநேகங்களான, सरीसृपाः च- மலைப்பாம்புகளும், दर्पात्- மதத்தினால், पृथिवीं- பூமியை, चरन्ति- ஸஞ்சரிக்கும், ततः- ஆகையினாலே, वनम्- வனமானது, दुःखतरं- மிகவும் துக்கமானது.

17. (பொ-ரை) ஹே மைதிலி! வனத்தில் வஸிப்பவர்கள் நியதமான ஆஹாரத்துடன் ஒவ்வொரு தினங்களிலும், சக்திக்கு அநுகுணமாக கிடைத்தமட்டில் பழம், கிழங்கு முதலியவைகளை புஜித்து த்ருப்திப்படவேண்டும். ஆகையால் வனவாஸம் எப்பொழுதும் துக்ககரம்.

18. (பொ-ரை) ஸீதே! வனத்தில் எப்பொழுதும் பெரும் காற்றுகள் வீசிக்கொண்டிருக்கும். செடிகளும், மரங்களும் அடர்ந்திருக்கிறபடியால், பார்க்குமிடமெங்கும் இருட்டாகவே இருக்கும். அப்படிப்பட்ட வனத்தில் ஸஞ்சாரம் ஏற்படுகிறபடியால், எப்பொழுதும் அதிக பசி உண்டாகும். புலி, கரடி, சிங்கம் முதலான துஷ்ட ஜந்துக்கள் ஸஞ்சரிக்கின்றபடியால், அவைகளால் அநேக ஸமயத்திலாவது பயங்களுமுண்டாகும். ஆகையால் வனவாஸம் மிகவும் கஷ்டத்தைக்கொடுக்கக் கூடியது.

19 (பொ-ரை) ஹே ஸுந்தரி! பெரிய சரீரமுடைய அநேகம் மலைப்பாம்புகள் பூமியில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கும். ஆகையால் வனவாஸம் மிகவும் கஷ்டம்.

नदीनिलयनाः सर्पा नदीकुटिलगामिनः ।
तिष्ठन्त्यावृत्य पन्थानं ततो दुःखतरं वनम् ॥ 20 ॥

पतङ्गा वृश्चिकाः कीटा दंशाश्च मशकैः सह ।
बाधन्ते नित्यमबले सर्वदुःखतरं वनम् ॥ 21 ॥

द्रुमाः कण्टकिनश्चैव कुशकाशाश्च भामिनि ।
वने व्याकुलशाखाग्रास्तेन दुःखतरं वनम् ॥ 22 ॥

20. (ப-ரை) नदीनिलयनाः- நதிக்கரையில் வஸிக்கின்றதுகளும், नदीकुटिलगामिनः- நதிகள்போல் கோணலாக ஸஞ்சரிக்கின்ற, सर्पाः- ஸர்ப்பங்கள், पन्थानं- வழிகளை, आवृत्य- வளைத்துக்கொண்டு, तिष्ठन्ति- இருக்கும், ततः- ஆகையினால், वनम्- வனமானது, दुःखतरं- மிகவும் கஷ்டம்.

21. (ப-ரை) हे अबले- பயந்தவளே! पतङ्गाः- விட்டில் பூச்சிகளும், वृश्चिकाः- தேள்களும், कीटाः- புழுக்களும், मशकैः सह- கொசுக்களுடன் கூட, दंशाः च- காட்டு ஈக்களும், नित्यं- எப்பொழுதும், बाधन्ते- பாதிக்கும், (ஆகையால்) वनम् सर्वं- வனம் முழுவதும், दुःखतरं- மிகவும் கஷ்டமானது.

22. (ப-ரை) हे भामिनि- மிகவும் அழகுடையவளே! कण्टकिनः- முள்ளுள்ளவைகளான, द्रुमाः च एव- மரங்களும், कुशकाशाः च- தர்ப்பங்களும், நாணல்களும், वने- வனத்தில், व्याकुलशाखाग्राः- காற்றால் அலைந்துகொண்டிருக்கிற கிளைகளின் நுனிகளையுடையவைகளாகவிருக்கும், तेन- அதனால், वनम्- காடு, दुःखतरं- மிகவும் கஷ்டமானது.

20. (பொ-ரை) நதிக்கரையில் வாஸம் பண்ணிக்கொண்டு, நதிகள் போல் கோணலாக ஸஞ்சரிக்கின்ற ஸர்ப்பங்கள், காட்டிலே வழியைத் தடுத்துக்கொண்டிருக்கும். ஆகையால் வனவாஸம் மிகவும் கஷ்டம்.

21. (பொ-ரை) ஹே அபலே! விளக்கு விட்டில் பூச்சிகளும், தேள்களும், புழுக்களும், கொசுக்களும், காட்டு ஈக்களும், எப்பொழுதும் சரீரத்தைப் பிடித்துக்கொண்டிருக்கும். ஆகையால் வனம் முழுவதும் கஷ்டமானது.

22. (பொ-ரை) கட்டழகியே! வனத்தில் முள்ளுள்ள இலந்தை, கருவேல் முதலான மரங்களும், தர்ப்பத்தூறுகளும், நாணற்புதறுகளும், எப்பொழுதும் காற்றடித்து கிளை நுனிகள் அலைந்துகொண்டு, ஸஞ்சரிக்கின்றவர்களுடைய சரீரங்களை கீறி பாதிக்கும். ஆகையால் வனவாஸம் மிகவும் கஷ்டமானது.

कायक्लेशाश्च बहवो भयानि विविधानि च ।
अरण्यवासे वसतो दुःखमेव ततो वनम् ॥ 23 ॥
क्रोधलोभौ विमोक्तव्यौ कर्तव्या तपसे मतिः ।
न भेतव्यं च भेतव्ये नित्यं दुःखमतो वनम् ॥ 24 ॥
तदलं ते वनं गत्वा क्षमं न हि वनं तव ।
विमृशन्निह पश्यामि बहुदोषतरं वनम् ॥ 25 ॥

23. (ப-ரை) अरण्यवासे- வனவாஸத்தில், वसतः- இருக்கின்ற ஜனத்திற்கு, बहवः- அநேக விதங்களான, कायक्लेशाः च- காயக்லேசங்களும், विविधानि- நானாவிதங்களான, भयानि च- பயங்களும், (भवन्ति- உண்டாகும்,) ततः- ஆகையினால், वनम्- வனமானது, दुःखम् एव- கஷ்டத்தையே உண்டுபண்ணக்கூடியது.

24. (ப-ரை) क्रोधलोभौ- கோபமும் லோபத்தையும், विमोक्तव्यौ- விடத்தக்குந்தது, तपसे- காயக்லேசத்தின் பொருட்டு, मतिः- எண்ணமானது, कर्तव्या- செய்யத்தகுந்தது. भेतव्ये- பயப்படக்கூடிய விஷயம் நேருங்காலத்தில், न भेतव्यं- பயப்படக்கூடாது. अतः- ஆகையால், वनम्- வனவாஸம், नित्यं- எப்பொழுதும், दुःखं- கஷ்டமானது.

25. (ப-ரை) तत्- ஆகையாலே, ते- உனக்கு, वनं गत्वा- வனம் அடைந்து, अलं- போதும், तव- உனக்கு, वनं- வனமானது, न क्षमं हि- தகாததன்றோ? इह- இவ்விஷயத்தில், विमृशन् सन्- ஆலோசித்துப்பார்க்கவும், वनम्- வனத்தை, बहुदोषतरं- அநேக தோஷங்களையுடையதாக, पश्यामि- பார்க்கிறேன்.

23. (பொ-ரை) வனவாஸம் செய்கிறவர்களுக்கு, அநேக விதமான சரீர கஷ்டமும், புலி, சிங்கம் முதலான துஷ்ட ஜந்துக்களால் பலவித பயங்களும், அஸஹ்யமாக உண்டாகும். ஆகையால் வனம் துக்கத்தையே உண்டுபண்ணக்கூடியது.

24. (பொ-ரை) வனத்திலே வசிப்பவர்கள் காமக்ரோதங்களை விடவேண்டும். தவம் செய்வதிலேயே எண்ணம் வைக்கவேண்டும். பயப்படக்கூடிய ஸர்ப்பம், புலி, சிங்கம் முதலியவைகளைக் கண்டால் பயப்படாமலிருக்கவேண்டும். ஆகையால் வனவாஸம் செய்வது கஷ்டம்.

25. (பொ-ரை) ஆகையால், நீ வனம் போகவேண்டுமென்கிற எண்ணத்தை நிறுத்திவிடு. உன் ஸ்வபாவத்திற்கு வனவாஸம் உசிதமேயன்று. இவ்விஷயத்தில் நான் பலவிதமாக ஆலோசித்துப்பார்க்குங்காலத்தில், வனம் அநேக தோஷங்களுடையதென்றே எண்ணுகிறேன்.

वनं तु नेतुं न कृता मतिस्तदा बभूव रामेण यदा महात्मना ।
न तस्य सीता वचनं चकार तत्ततोऽब्रवीद्राममिदं सुदुःखिता ॥ 26 ॥
इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
अष्टाविंशः सर्गः ॥ 28 ॥

26. (ப-ரை) महात्मना- மஹாத்மாவான, रामेण- ஸ்ரீராமனால், वन तु- வனத்தைக்குறித்து, नेतुं- (ஸீதையை) கூட்டிக்கொண்டு போவதற்கு, यदा- எப்பொழுது, मतिः- எண்ணமானது, न कृता- செய்யப்படாததாக, बभूव- இருந்ததோ, तदा- அப்பொழுது, सीता- ஸீதை, तस्य- அந்த ராமனுடைய, तत् वचनं- அந்த வார்த்தையை, न चकार- செய்யவேயில்லை, ततः- ஆகையால், सुदुःखिता सती- மிகவும் துக்கமுடையவளாய்க்கொண்டு, रामं- ஸ்ரீராமனைக்குறித்து, इदं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்

26. (பொ-ரை) மஹாத்மாவான ஸ்ரீராமன் வனவாஸத்தில் அநேக கஷ்டங்களை எடுத்துக்காட்டி, ஸீதையைத் தம்முடன் அழைத்துப்போக எண்ணமில்லாமல் சொல்லிய வார்த்தைகளை, ஒன்றையுமே ஸீதை அங்கிகரிக்காமல், மிகவும் துக்கத்துடன் ஸ்ரீராமனைப்பார்த்து இதைச்சொல்ல ஆரம்பித்தாள்.



एकोनत्रिंशः सर्गः ॥ 29 ॥

एतत्तु वचनं श्रुत्वा सीता रामस्य दुःखिता ।
प्रसक्ताश्रुमुखी मन्दमिदं वचनमब्रवीत ॥ 1 ॥

1. (ப-ரை) सीता- ஸீதையானவள், रामस्य- ஸ்ரீராமனுடைய, एतत् वचनं- இந்த வார்த்தையை, श्रुत्वा तु- கேட்டு, दुःखिता- துக்கமுடையவளாய், प्रसक्ता श्रुमुखी- கொஞ்சம் கண்ணீருள்ள முகமுடையவளாய்க்கொண்டு, मन्दं- மெதுவாக, इदं वचनं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னாள்.

1. (பொ-ரை) ஸ்ரீராமனுடைய இந்த வார்த்தையைக்கேட்டு, ஸீதாதேவி மிகவும் துக்கத்துடன் கண்களில் நீர் பெருக்கிக்கொண்டு மெதுவாக, பின்வருமாறு ஒரு வார்த்தை சொல்லுகிறாள்.

ये त्वया कीर्तिता दोषा वने वस्तव्यतां प्रति ।
गुणानित्येव तान्विद्धि तवस्नेहपुरस्कृतान् ॥ 2 ॥
मृगाः सिंहा गजाश्चैव शार्दूलाः शरभास्तथा ।
पक्षिणः सृमराश्चैव ये चान्ये वनचारिणः ॥ 3 ॥
अदृष्टपूर्वरूपत्वात्सर्वे ते तव राघव ।
रूपं दृष्ट्वाऽपसर्पेयुर्भये सर्वे हि बिभ्यति ॥ 4 ॥

---

2. (ப-ரை) वने- வனத்தில், वस्तव्यतां प्रति- வஸிப்பதைக்குறித்து, ये दोषाः- யாதொரு குற்றங்கள், त्वया- உம்மால், कीर्तिताः- சொல்லப்பட்டதுகளோ, तान्- அவைகளை, तव- உம்முடைய, स्नेहपुरस्कृतान्- ஸ்நேஹத்தை முன்னிட்டுக்கொண்டிருக்கிற, गुणान् इति एव- குணங்கள் என்றே, विद्धि- நீர் அறியும்.

3—4. (ப-ரை) हे राघव- ரகு குலத்து மன்னவனே, मृगाः- மான்களும், सिंहाः- ஸிம்மங்களும், गजाः च एव- யானைகளும், शार्दूलाः- பெரும்புலிகளும், तथा- அப்படியே, शरभाः- சரபங்களும், पक्षिणः- பக்ஷிகளும, सृमराः च एव- சவுரிமான்களும், अन्ये- மற்றவைகளான, वनचारिणः- வனத்தில் ஸஞ்சரிக்கின்ற, ये च- யாதொரு ஜந்துக்களுண்டோ, ते सर्वे- அவைகளெல்லாம், अदृष्टपूर्वरूपत्वात्- இவ்விதரூபத்தை முன்பார்த்திராதபடியால், तव- உம்முடைய, रूपं- உருவத்தை, दृष्ट्वा- பார்த்து, अपसर्पेयुः- ஓடிவிடும், हि- ஏனென்றால், भये-(सति)- பயங்கரமான வஸ்து இருக்குமளவில், सर्वे- எல்லா ஜந்துக்களும், बिभ्यति- பயப்படுமல்லவா.

---

2 (பொ-ரை) வனத்தில் வஸிப்பதைக்குறித்து எந்த தோஷங்கள் உம்மால் எடுத்துக்காட்டப்பட்டதுகளோ, அவைகள் முழுமையும உம்மிடத்தில் நான் ப்ரீதியுடன் கூடியிருக்கிறபடியால் குணங்களென்றே அறியவேண்டும்.

அதாவது:- ப்ரியனை கூடவேகூட இருக்கிறபடியால், எனக்கு அவைகளெல்லாம குளிரின் சபதம், சந்தனம, தென்னல்காற்று, நிலவு முதலிய அநுகூல வஸ்துக்கள்போல ஸுகவும ஸாதகங்களாகவேயிருக்கும், இதை நீர் தெரிந்து கொள்ளும இதனால் பகவத் விஷயத்தில் நிரதிசய ப்ரீதி உள்ளவனுக்கு, மற்றவனுக்கு ப்ரதிகூலமாகத்தோன்றுகிற வஸ்துக்களெல்லாம அநுகூலமாகவே தோன்றும், என்கிற சாஸ்த்ரார்த்தமும தெரிவிக்கப்பட்டது.

3–4. (பொ-ரை) மான்களும, ஸிம்மங்களும், யானைகளும், புலிகளும், ஸிம மத்தையும் அடிக்கக்கூடிய சரபமென்கிற எட்டுக்கால் மருகங்களும, பக்ஷிகளும், சவுரிமான்களும், வனத்தில் ஸஞ்சரிக்கின்ற மற்ற ப்ராணிகளும, இப்படிப்பட்ட ரூபத்தை முன் ஒருநாளும் பார்த்திராதபடியால், உம்முடைய இந்த ரூபத்தைப் பார்த்து ஓடிவிடும். ஏனென்றால், பயங்கரமான வஸ்துவைக்கண்டால் மற்ற ப்ராணிகளெல்லாம் பயப்படுவது ஸஹஜமன்றோ.

त्वया च सह गन्तव्यं मया गुरुजनाज्ञया ।
त्वद्वियोगेन मे राम त्यक्तव्यमिह जीवितम् ॥ 5 ॥
न च मां त्वत्समीपस्थामपि शक्नोति राघव ।
सुराणामीश्वरः शक्रः प्रधर्षयितुमोजसा ॥ 6 ॥
पतिहीना तु या नारी न सा शक्ष्यति जीवितुम् ।
काममेवंविधं राम त्वया मम विदर्शितम् ॥ 7 ॥

5. (ப-ரை) गुरुजनाज्ञया- குருக்களுடைய ஆஜ்ஞையினால், मया- என்னாலே, त्वया च सह- உம்மோடு கூடவே, गन्तव्य- செல்லத்தகுந்தது. हे राम- ஸ்ரீராம, त्वत् वियोगेन- உம்மைவிட்டுப்பிரிந்ததினால், इह- இவ்விடத்திலேயே, जीवितम्- ப்ராணனானது, त्यक्तव्यं- விடத்தகுந்தது.

6. (ப-ரை) हे राघव- ஸ்ரீராமனே! त्वत्समीपस्थां- உம்முடைய ஸமீபத்திலிருக்கின்ற, मां- என்னை, सुराणां ईश्वरः- தேவர்களுக்கெல்லாம் அரசனான, शक्रः अपि- இந்திரனும், ओजसा- தன்னுடைய ஸாமர்த்யத்தினால், प्रधर्षयितु பலாத்காரம் செய்வதற்கு, न शक्नोति- சக்தியுள்ளவனல்ல.

7. (ப-ரை) या नारी- எந்த ஸ்த்ரீயானவள், पतिहीना- பர்த்தாவைவிட்டுப் பிரிந்திருக்கின்றாளோ, सा- அவள், जीवितुम्- உயிருடனிருக்க, न शक्ष्यति- சக்தியுள்ளவளன்று, एवं- என்று இவ்விதம், त्वया- உம்மால், मम- எனக்கு, काम- அநேகதடவை, विदर्शितम्- உபதேசிக்கப்பட்டிருக்கின்றது.

5. (பொ-ரை) ஸ்ரீராம! பர்த்தாவினுடைய பாதி சரீரம் பத்னி என்று வேதத்தில் சொல்லியபடி, நானும், நீரும் ஒன்றானபடியால், உமக்கு செய்திருக்கிற கட்டளை எனக்குமானதாலும், பாணிக்ரஹண காலத்தில், என் மாதா பிதாக்கள் "सह धर्मं चरी तव" என்று சொல்லி, எக்காலத்திலும் உம்மைவிட்டுப் பிரியாதிருக்க வேணுமென்று கன்னிகாதானம் செய்திருக்கிறபடியாலும் நான் உம்முடன் கூடவே வரத்தகுந்தவள். உம்மைவிட்டுப் பிரிந்தால் இப்பொழுதே ப்ராணனை விடவேண்டியவள்.

6. (பொ-ரை) ராகவ! வனத்தில் உம்முடைய ஸமீபத்திலிருக்கின்ற என்னை பலாத்காரம் செய்ய தேவர்களுக்கெல்லாம் அரசனான இந்திரனாலும் முடியாது.

7. (பொ-ரை) எந்த ஸ்த்ரீ பர்த்தாவை விட்டுப் பிரிந்திருக்கின்றாளோ அவள் உயிருடன் இருக்கமாட்டாள் என்று இவ்விதம் நீர் எனக்கு அநேகம் தடவைகளில் உபதேசம் செய்திருக்கின்றீர்.

अथ चापि महाप्राज्ञ ब्राह्मणानां मया श्रुतम्
पुरा पितृगृहे सत्यं वस्तव्यं किल मे वने ॥ 8 ॥
लक्षणिभ्यो द्विजातिभ्यः श्रुत्वाहं वचनं पुरा ।
वनवासकृतोत्साहा नित्यमेव महाबल ॥ 9 ॥
आदेशो वनवासस्य प्राप्तव्यः स मया किल ।
सा त्वया सह तत्राहं यास्यामि प्रिय नान्यथा ॥ 10 ॥

8. (ப-ரை) अथ चापि- பின்னும், महाप्राज्ञ- மிகவும் ப்ரஜ்ஞையுடையவரே! पुरा- முன் காலத்தில், पितृगृहे- பிதாவின் க்ருஹத்தில், ब्राह्मणानां- ப்ராம்மணர்களிடத்திலிருந்து, मया- என்னாலே, श्रुतम्- கேட்கப்பட்டிருக்கிறது,(ஆகையால்), मे- என்னால், वने- வனத்திலே, सत्यं- ஸத்யமாக, वस्तव्यं किल- வாஸம் செய்யத்தகுந்தது.

9. (ப-ரை) हे महाबल- மிகுந்த பராக்ரமமுடையவரே! पुरा- முன் காலத்திலே, अहं- நான், लक्षणिभ्यः- ஸாமுத்ரிகலக்ஷணம் தெரிந்தவர்களான, द्विजातिभ्यः- ப்ராம்மணர்களிடமிருந்து, वचनं- "இவள் வனவாஸம் செய்ய வேண்டும்" என்கிற வார்த்தையைக் கேட்டு, नित्यम् एव- எப்பொழுதுமே, वनवासकृतोत्साहा- வனவாஸத்தில் மிகுந்த ஆசையுள்ளவளாக இருக்கிறேன்.

10 (ப-ரை) हे प्रिय- மிகவும் அன்புக்கு இடமானவரே! सः- அந்த, वनवासस्य- வனவாஸத்தினுடைய, आदेशः- கட்டளையானது, मया- என்னால், प्राप्तव्यः किल- அடையவேண்டியது அல்லவா, सा- அப்படி கட்டளை இடப்பட்ட, अहं- நான், त्वया सह- உம்முடன் கூட, तत्र- அங்கு, यास्यामि- செல்வேன், अन्यथा- வேறுவிதமாக, न- இல்லை.

8. (பொ-ரை) அதுவுமன்றி, எல்லாம் தெரிந்தவரே. நான் முன் பித்ருக்ருஹத்தில் கன்னிகையாயிருந்த காலத்தில், அங்கு அடிக்கடி ப்ராம்மணர்கள் வருவார்கள், அவர்களால் சொல்லி நான் கேட்டிருக்கிறேன். அவர்கள் சொல்லியது ஸத்யமல்லவா. அதனால், நான் வனத்தில் வாஸம் செய்ய வேண்டியவள்.

9. (பொ-ரை) மஹாபலமுடையவரே! முன்காலத்தில் நான், பித்ருக்ருஹத்திலிருக்கும்பொழுது, ஸாமுத்ரிகா லக்ஷணம் தெரிந்த ப்ராம்மணர்கள் என்னுடைய கைரேகைகளைப்பார்த்து "சிலகாலத்திற்குப்பிறகு இவளுக்கு வனவாஸம் நேரிடப்போகிறது" என்று சொல்லியதைக்கேட்டு எப்பொழுது நமக்கு வனவாஸம் நேரப்போகிறதோவென்று, அதில் மிகுந்த ஆசை வைத்துக்கொண்டிருக்கிறேன்.

10. (பொ-ரை) ப்ராம்மணர்கள் முன் எனக்குச்சொல்லியபடி அந்த வனவாஸம், நான் செய்யவேண்டியவளல்லவா, தலையெழுத்தை ஒருநாளும் மாற்றமுடியாது. ஆகையால் அவர்கள் சொல்லியபடி அந்த வனவாஸம் செய்வதற்காக நான் உம்முடன் அவச்யம் செல்கிறேன். கேவலம் என்னுடைய ஆசையினாலன்று.

कृतादेशा भविष्यामि गमिष्यामि सह त्वया ।
कालश्चायं समुत्पन्नः सत्यवाग्भवतु द्विजः ॥ 11 ॥

वनवासेऽभिजानामि दुःखानि बहुधा किल ।
प्राप्यन्ते नियतं वीर पुरुषैरकृतात्मभिः ॥ 12 ॥

कन्यया च पितुर्गेहे वनवासः श्रुतो मया ।
भिक्षिण्याः साधुवृत्ताया मम मातुरिहाग्रतः ॥ 13 ॥

प्रमादितश्च वै पूर्वं त्व वै बहुविधं प्रभो ।
गमनं वनवासस्य काङ्क्षितं हि सह त्वया ॥ 14 ॥

---

11. (ப-ரை) अहं- நான், कृतादेशा- ப்ராம்மணர்களுடைய ஆஜ்ஞையை நடத்தினவளாக, भविष्यामि- ஆகுவேன், त्वया सह- உம்முடன் கூட, गमिष्यामि- போவேன், अयं कालः च- இந்த வனவாஸ காலமும், समुत्पन्नः- நேர்ந்திருக்கின்றது, द्विजः- ப்ராம்மணனும், सत्यवाक्- நிஜம் சொன்னவனாக, भवतु- ஆகட்டும்.

12. (ப-ரை) हे वीर- வீரனே! वनवासे- வனவாஸத்தில், बहुधा- பலவிதங்களாக, दुःखानि- கஷ்டங்களை, अभिजानामि किल- நன்றாய் தெரிந்து கொண்டிருக்கின்றேன், अकृतात्मभिः- மனதை அடக்காதவர்களான, पुरुषैः- மனிதர்களால், नियतं- நிச்சயமாக, प्राप्यन्ते- (அந்தக்கஷ்டங்கள்) அடையப்படுகிற.

13—14. (ப-ரை) कन्यया च- கன்னிகையாயிருக்கிற, मया- என்னால், पितुः गेहे- பிதாவின் க்ருஹத்தில், मम- என்னுடைய, मातुः- தாயாருடைய, अग्रतः- முன்னி

---

11. (பொ-ரை) ப்ராம்மணர்களின் கட்டளையை நானும் செய்தவளாக ஆவேன். ஆகையால் உம்முடன் நான் வருவேன். அந்த வனவாஸத்திற்கு குறித்த காலமும் நேர்ந்திருக்கின்றது. எனது லக்ஷணம் பார்த்துச் சொல்லிய ப்ராம்மணர்களுடைய வார்த்தையும் நிஜமாக ஆகும்.

12. (பொ-ரை) வனவாஸம் செய்தால், அநேகம் கஷ்டங்கள் உண்டாகுமென்று எனக்கு நன்றாய்த் தெரியும். ஆனால் அந்த கஷ்டங்களெல்லாம் மனதை அடக்காதவர்களுக்கு உண்டாகுமே தவிர, உம்மைப்போலும், என்னைப்போலுமிருக்கிற திடமனதையுடையவர்களுக்கு ஒருக்காலும் உண்டாகமாட்டாது.

13—14. (பொ-ரை) ப்ரபோ! நான் கன்னிகையாயிருந்த காலத்தில்,

कृतक्षणाहं भद्रं ते गमनं प्रति राघव ।
वनवासस्य शूरस्य चर्या हि मम रोचते ॥ 15 ॥
शुद्धात्मन्प्रेमभावाद्धि भविष्यामि विकल्मषा ।
भर्तारमनुगच्छन्ती भर्ता हि मम दैवतम् ॥ 16 ॥

ஊரில், साधुवृत्तायाः- ஸதாசாரமுடைய, भिक्षिण्याः- பிக்ஷுகையான ஸ்த்ரீயினிடத்தி லிருந்து, वनवासः- வனவாஸமானது, श्रुतः- கேழ்க்கப்பட்டிருக்கிறது, हे प्रभो- ப்ரபுவே! त्वया सह- உம்முடன் கூட, वनवासस्य गमनं- வனவாஸத்திற்காகச் செல்லுகை, काङ्क्षितं हि- என்னால் விரும்பப்பட்டது, त्वं वै- நீரும், पूर्वं- இதற்கு முன்னம், बहुविधं- பலவிதமாக, प्रसादितः च वै- வேண்டிக்கொள்ளப்பட்டிருக்கிறீர்.

15. (பதவுரை) हे राघव- ராகவா! अहं- நான், गमनं प्रति- வனத்திற்குப் புறப்படுவதைக் குறித்து, कृतक्षणा- ஸந்தோஷமுடையவளாயிருக்கிறேன், ते- உமக்கு, भद्रं- மங்களமுண்டாகட்டும், वनवासस्य- வனத்தில் வாஸம் செய்கின்ற, शूरस्य- சூரனான உம்முடைய, चर्या- சிசுருஷையானது, मम- எனக்கு, रोचते- மனதிற்குப்பிடித்திருக்கிறது.

16. (பதவுரை) हे शुद्धात्मन्- களங்கமில்லாத மனதுடையவரே! प्रेमभावात्- ப்ரீதியென்னும் ஸ்வபாவத்தினால், भर्तारं- பர்த்தாவான உம்மை, अनुगच्छन्ती सती- பின் சென்றுகொண்டு, विकल्मषा- பாபமில்லாதவளாக, भविष्यामि- ஆகுவேன், भर्ता हि- பர்த்தாவன்றோ, मम- எனக்கு, दैवतम्- தெய்வம்.

பிதாவின் அரண்மனையில் என் மாதாவின் முன்னிலையில் ஒரு ஸதாசாரமுடையவளான தபஸ் செய்கிற ஸ்த்ரீயானவள் என்னுடைய லக்ஷணங்களைப்பார்த்து "இவளுக்கு வனவாஸம் நேரப்போகிறது" என்று சொல்லக்கேட்டு, இப்பொழுது அதை நான் நினைத்துக்கொண்டு, கங்கை முதலான நதிக்கரைகளி லிருக்கிற, ரிஷிகளின் ஆச்ரமங்களைப்பார்த்துக்கொண்டு, வேடிக்கையாய் சிலகால மிருக்கவேணுமென்று உம்மை நான் பலவிதமாக இதற்கு முன்னே கேட்டுக்கொள் ளவில்லையா.

15. (பொருள்) ராகவா! நானும் உம்முடன்கூட வனத்திற்குப் புறப்படுவதற் காக மிகவும் ஸந்தோஷத்துடன் காத்துக்கொண்டிருக்கிறேன். சூரனான நீர் வனத்தில் வஸிக்குங்காலத்தில், உமக்குப் பணிவிடை செய்யவேணுமென்று நான் ஆசைப்படுகிறேன். உமக்கு மங்களங்கள் உண்டாகட்டும்.

16. (பொருள்) பரிசுத்தமான மனதுடையவரே! நான் ஸ்வாபாவிகமான ப்ரீதியினால் உம்முடன் வனத்திற்கு வந்து உமக்கு சிச்ருஷை செய்துகொண்டு பாபமில்லாதவளாக ஆகவேண்டுமல்லவா. பர்த்தாவன்றோ எனக்கு தெய்வம்.

प्रेत्यभावेऽपि कल्याणः संगमो मे सह त्वया ॥ 17 ॥
श्रुतिर्हि श्रूयते पुण्या ब्राह्मणानां तपस्विनाम् ।
इह लोके च पितृभिर्या स्त्री यस्य महामते ॥
अद्भिर्दत्ता स्वधर्मेण प्रेत्यभावेऽपि तस्य सा ॥ 18 ॥
एवमस्मात्स्वकां नारीं सुवृत्तां हि पतिव्रताम् ।
नाभिरोचयसे नेतुं त्वं मां केनेह हेतुना ॥ 19 ॥

---

17. (ப-ரை) प्रेत्यभावे अपि- பரலோகத்திலும், मे- எனக்கு, त्वया सह- உம்முடன் கூட, संगमः- சேர்க்கையானது, कल्याणः- க்ஷேமகரமானது.

18. (ப-ரை) हे महामते- விசாலமான புத்தியுடையவரே, या स्त्री- எந்த ஸ்த்ரீயானவள், इह लोके च- இந்த உலகத்தில், पितृभिः- தகப்பன் முதலானோர்களால், स्वधर्मेण- தங்கள் தர்மப்படி, अद्भिः- தீர்த்தங்களால், यस्य- எந்த புருஷனுக்கு, दत्ता- (விவாஹம் செய்து) கொடுக்கப்படுகிறாளோ, सा- அவள், प्रेत्य भावे अपि- பரலோகத்திலும, तस्य- அவனுக்கே, (பார்யையாக ஆகிறாள்), इति- என்று, तपस्विनाम्- தவம் புரிந்தவர்களான, ब्राह्मणानां- ப்ராம்மணர்களிடமிருந்து, पुण्या- மிகவும் புண்யமான, श्रुतिः- வேதவாக்யமானது, श्रूयते हि- கேழ்க்கப்படுகின்றதல்லவா.

19. (ப-ரை) एवं- இவ்விதமிருக்க, स्वकां नारीं உமக்கு ஸ்வாதீன ஸ்த்ரீயாயும், सुवृत्तां-ஸதாசாரமுடையவளாயும், पतिव्रताम्- பதிவ்ரதையுமான, मां- என்னை, इह- இப்பொழுது, केन हेतुना- என்ன காரணத்தினால், अस्मात्- இந்தயத்திலிருந்து, வனத்திற்கு அழைத்துக்கொண்டுபோக, न अभिरोचयसे-இஷ்டப்படாமலிருக்கிறீர்.

17. (பொ-ரை) பரலோகத்திலும், உம்முடன் சேர்ந்திருப்பதுதான் எனக்கு மங்களகரமானது.

18. (பொ-ரை) எந்த ஸ்த்ரீயானவள் இந்த உலகத்தில் தன் பிதா முதலான பெரியோர்களால் தங்கள் தங்கள் ஆசாரப்படி தீர்த்தத்தினால் எந்த புருஷனுக்கு விவாஹம் செய்து பார்யையாகக் கொடுக்கப்படுகிறாளோ, அவள் பரலோகத்திலும் அவனுக்கே பார்யை ஆகிறாளென்று உலகமெல்லாம் புகழ்பெற்ற ப்ராம்மணர்கள் சொல்லும் வேத வாக்யமும் என்னால் கேழ்க்கப்பட்டிருக்கிறது.

19. (பொ-ரை) இவ்விதம் அநேக காரணங்களிருக்கும்பொழுது, உமக்குச் சேர்ந்தவளாய் ஸதாசாரமுடையவளாய் பதிவ்ரதையுமாயிருக்கிற என்னை நீர் என்ன காரணத்தினாலே இங்கிருந்து வனத்திற்கு அழைத்துக்கொண்டுபோக இஷ்டமில்லாமலிருக்கிறீர்.

भक्तां पतिव्रतां दीनां मां समां सुखदुःखयोः ।
नेतुमर्हसि काकुत्स्थ समानसुखदुःखिनीम् ॥ 20 ॥
यदि मां दुःखितामेवं वनं नेतुं न चेच्छसि ।
जलमग्निं विषं वाहमास्थास्ये मृत्युकारणात् ॥ 21 ॥
एवं बहुविधं तं सा याचते गमनं प्रति ।
नानुमेने महाबाहुस्तां नेतुं विजनं वनम् ॥ 22 ॥

20. (ப-ரை) हे काकुत्स्थ- ககுத்ஸ்த வம்சத்தில் அவதரித்தவரே! भक्तां- உம்மிடத்தில் பக்தியுள்ளவளாயும், पतिव्रतां- பதிவ்ரதையாயும், दीनां- தைன்யத்துடன் கூடினவளாயும், सुखदुःखयोः- ஸுகத்திலும்துக்கத்திலும், समां-ஒரே மாதிரியாயிருக்கின்றவளும், समानसुखदुःखिनीम्- உமக்குண்டான ஸுக துக்கங்களை எனக்கும் பொதுவாகநினைக்கின்றவளுமான, मां- என்னை, नेतुं- வனத்திற்கு அழைத்துக்கொண்டு போக, अर्हसि- தகுந்தவர்.

21. (ப-ரை) एवं- இவ்விதம், दुःखितां- துக்கித்துக்கொண்டிருக்கிற, मां- என்னை, वनं- வனத்தைக்குறித்து, नेतुं- கூட அழைத்துக்கொண்டு போவதற்கு, न च इच्छसि यदि- நீர் இஷ்டப்படாமல் போவீரேயானால், मृत्युकारणात्- மரணத்தை அடைவதற்காக, जलं- ஜலத்தையோ, अग्निं- நெருப்பையோ, विषं वा- விஷத்தையோ, अहं- நான், आस्थास्ये- கைக்கொள்ளுவேன்.

22. (ப-ரை) एवं- இவ்விதமாக, सा- அந்த ஸீதை, गमनं प्रति- வனம் போவதைக்குறித்து, बहुविधं- பலவிதமாக, तं- அந்த ராமனை, याचते- வேண்டிக்கொண்டாள், महाबाहुः- பெரிய தோள்வலியுடைய ஸ்ரீராமன், तां- அவளை, विजनं- பந்து ஜனங்களில்லாத, वनम्- வனத்தைக்குறித்து, नेतुं- அழைத்துக்கொண்டுபோக, न अनुमेने- ஒத்துக்கொள்ளவேயில்லை.

20. (பொ-ரை) ஹே காகுத்ஸ்தா! உமமிடத்தில் மிகவும் பக்தையாயும், பதிவ்ரதையாயும், தீனையாயும், ஸுகம் வந்தாலும், துக்கம் வந்தாலும மனதில் விகாரமில்லாமல் ஒரே ரூபமாயிருக்கின்றவளும, உமக்கு ஒரு ஸமயம ஸுக துக்கங்கள் ஏற்பட்டால், அதுவே எனக்கும் ஸுக துக்கங்களென்று எண்ணக்கூடியவளுமான என்னை நீர் வனத்திற்கு அழைத்துக்கொண்டுபோகவேண்டும்.

21. (பொ-ரை) இவ்விதம துக்கத்துடன ப்ரார்த்திக்கின்ற என்னை, வனத்திற்கு அழைத்துக் கொண்டுபோக நீர் இஷ்டப்படாமலிருந்தால், விஷத்தைத் தின்றோ, நெருப்பில் குதித்தோ, ஜலத்தில் விழுந்தோ நான் ப்ராணனை விட்டுவிடுவேன்.

22. (பொ-ரை) இவ்விதம் அந்த ஸீதையானவள் தானும் வனத்திற்குப்

एवमुक्ता तु सा चिन्तां मैथिली समुपागता।
स्नापयन्तीव गामुष्णैरश्रुभिर्नयनच्युतैः ॥ 23 ॥
चिन्तयन्तीं तथा तां तु निवर्तयितुमात्मवान्।
ताम्रोष्ठीं स तदा सीतां काकुत्स्थो बह्वसान्त्वयत् ॥ 24 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
एकोनत्रिंशः सर्गः ॥ 29 ॥

23. (பதவுரை) एवं- இவ்விதமாக, उक्ता- சொல்லப்பட்டிருக்கிற, सा मैथिली तु- அந்த மைதிலியும், नयनच्युतैः- கண்களிலிருந்து பெருகுகின்ற, उष्णैः- சூடான, अश्रुभिः- நீர்களால், गां- பூமியை, स्नापयन्ती इव- நனைக்கின்றவள் போலிருந்து, चिन्तां- பெரிய விசாரத்தை, उपागता- அடைந்துவிட்டாள்.

24. (பதவுரை) तथा- அப்படி, चिन्तयन्तीं- மனதில் விசாரப்பட்டுக்கொண்டும், ताम्रोष्ठीं- மிகவும் சிவந்த உதடுகளையுடைய, तां सीतां- அந்த ஸீதாதேவியை, निवर्तयितुं- திருப்புவதற்காக, आत्मवान्- மிகவும் தைர்யமுடையவராயும், काकुत्स्थः- ககுத்ஸ்த குலத்திற் பிறந்தவருமான, सः- அந்த ஸ்ரீராமன், बहु- பலவிதமாக, असान्त्वयत्- ஸமாதானம் செய்தார்.

---

போகவேணுமென்று. அந்த ஸ்ரீராமனைப் பலவாறு கேட்டுக்கொண்டும், மஹாபாஹுவான ஸ்ரீராமன், பந்து ஜனங்களில்லாத அந்த தண்டகாவனத்திற்கு அவளை அழைத்துக்கொண்டுபோக ஸம்மதிக்கவேயில்லை

23. (பொழிப்புரை) இவ்விதம் ஸ்ரீராமன் சொல்லைக்கேட்டு மைதிலியான ஸீதாதேவியும், பெரும் துக்கமடைந்து பூமி நனையும்படி உஷ்ணமான நீரைக் கண்களில் பெருக்கிக்கொண்டு பெரிய விசாரங்கொண்டாள்,

24. (பொழிப்புரை) இவ்வாறு விசாரப்பட்டுக்கொண்டுள்ள உதடுகள் சிவந்திருக்கின்ற அந்த ஸீதையை, இவ்விடத்திலே நிறுத்துவதற்காக மஹா தீரனான அந்த காகுத்ஸ்தர் பலபடியாக ஸமாதானம் சொன்னார்.

—※—

त्रिंशः सर्गः ॥ ३० ॥

सान्त्व्यमाना तु रामेण मैथिली जनकात्मजा।
वनवासनिमित्ताय भर्तारमिदमब्रवीत् ॥ 1 ॥

1. (பதவுரை) जनकात्मजा- ஜனகருடைய புத்ரியான, मैथिली- மைதிலியானவள், रामेण- ஸ்ரீராமனால், सान्त्व्यमाना तु- ஸமாதானம் செய்யப்பட்டவளாய்க்கொண்டு, वनवासनिमित्ताय- வனவாஸம் செய்யும் நிமித்தமாக, भर्तारं- பர்த்தாவைப்பார்த்து, इदं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னாள்.

---

1. (பொழிப்புரை) மிதிலாநகரத்திற்கு அரசனான ஜனகர் திருமகள், ஸ்ரீராம

सा तमुत्तमसंविग्ना सीता विपुलवक्षसम् ।
प्रणयाच्चाभिमानाच्च परिचिक्षेप राघवम् ॥ 2 ॥

* किं त्वा मन्यत वैदेहः पिता मे मिथिलाधिपः ।
राम जामातरं प्राप्य स्त्रियं पुरुषविग्रहम् ॥ 3 ॥

2. (ப-ரை) सा सीता- அந்த ஸீதையானவள், उत्तमसंविग्ना सती- மிகவும் நடுநடுங்கிக்கொண்டு, विपुलवक्षसम्- அகன்ற மார்புடைய, राघवम्- ரகு குலத்துக் குமாரனை, प्रणयात् च- ஸ்நேஹத்தினாலும், अभिमानात् च- நம்மைச்சேர்ந்தவர் என்கிற அபிமானத்தினாலும், परिचिक्षेप- நிந்தித்தாள்.

3. (ப-ரை) हे राम- ஸ்ரீராமனே! वैदेहः- விதேஹ குலத்திற் பிறந்தவரான, मिथिलाधिपः- மிதிலா நகரத்திற்கரசனான, मेपिता- என் பிதாவானவர், त्वा- இப்படி மனைவியை விட்டுச்செல்லும் உம்மை, प्राप्य- தெரிந்து, स्त्रियं-பெண்ணின் ஸ்வபாவமுடைய உம்மை, पुरुषविग्रहम्- புருஷவேஷம்தரித்த, जामातरं- மாப்பிள்ளையாக, अमन्यत किं- எண்ணிவிட்டாரா என்ன?

றால் இவ்விதம் ஸமாதானப்படுத்தப்பட்டும், வனவாஸம் செய்யும் நிமித்தமாக பர்த்தாவையடைந்து இந்த வார்த்தை சொன்னாள்.

2. (பொ-ரை) இந்த ஸீதையானவள் மிகவும் நடுநடுங்கிக்கொண்டு அகன்ற மார்புடையவரான, ஸ்ரீராகவனை ப்ரணயகோபத்தினால் நிந்தித்தாள்.

3. (பொ-ரை) ஸ்ரீராம! விதேஹகுலத்திற் பிறந்து, மிதிலாநகரத்தை நன்றாய் ஆண்டுவந்த என் பிதா, பாணிக்ரஹணம்செய்த தன் பத்னி ஒருவளைக்கூட ரக்ஷிப்பதற்கு சக்தியில்லாமல் நகரத்திலேயே விட்டுவிட்டு நீர் வனம் போனதைக் கேட்டால் "ஸமாதுவிட்டோமவே! ஒருபெண் புருஷவேஷம் தரித்துக்கொண்டு என் பெண்ணை விவாஹம்செய்துகொண்டு எனக்கு மாப்பிள்ளையென்னும் முறைமையும் அடைந்துவிட்டாள்" என்றல்லவோ எண்ணுவர்.

---

* वैदेहः- என்கிற பதத்தினால், कर्मणैव हि संसिद्धिं आस्थिता जनकादयः- என்று சொல்லியபடி கர்ம யோகத்தையே ப்ரதானமாகக்கொண்டவராகையால் ஒரு க்ஷண காலமும் கூட பத்நியை விட்டுப்பிரிவதை ஸஹியாதவர். ஆகலால், அவர், நீர் என்னை விட்டுபோனதை கேட்டால் என்ன பாடுபடுவர்.

मिथिलाधिपः- என்ற விசேஷணத்தால், மிதிலா தேசத்தை முழுவதும நன்றாய் ரக்ஷித்து வருகின்ற என் பிதா, என்னை ஒருவளைக்கூட ரக்ஷிக்கமுடியாமல் இவ்விடத்திலே நிறுத்திவிட்டுப்போனது கேட்டால் என்ன பாடுபடுவர்.

अनृतं बत लोकोऽयमज्ञानाद्यद्धि वक्ष्यति ।
तेजो नास्ति परं रामे तपतीव दिवाकरे ॥ 4 ॥
किं हि कृत्वा विषण्णस्त्वं कुतो वा भयमस्ति ते ।
यत्परित्यक्तुकामस्त्वं मामनन्यपरायणाम् ॥ 5 ॥
द्युमत्सेनसुतं वीर सत्यवन्तमनुव्रताम् ।
सावित्रीमिव मां विद्धि त्वमात्मवशवर्तिनीम् ॥ 6 ॥

4. (ப-ரை) तपति- நன்றாய்க் காய்ந்துகொண்டிருக்கிற, दिवाकरे इव- ஸூர்யனிடத்தில்போல, रामे- ராமனிடத்தில், परं तेज:- மிகுந்த தேஜஸ்ஸானது, अस्ति- இருக்கிறது, इति- என்று, अयं लोक:- இந்த லோகமானது, अज्ञानात्- அறிவில்லாமையால், यत् वक्ष्यति- யாதொன்றைச்சொல்லுகின்றதோ, (तत्- அது), अनृतं- பொய், हि- ஏனென்றால், तेज:- ப்ரதாபமானது, न- இல்லை.

5. (ப-ரை) त्वं- நீர், किं हि कृत्वा- என்ன அகார்யத்தைச்செய்து, विषण्ण:- வருத்தப்படுகின்றீர், ते- உமக்கு, कुत:- யாரிடமிருந்து, भयं- பயமானது, अस्ति- இருக்கிறது, अनन्यपरायणाम्- வேறு கதியில்லாதவளாயிருக்கிற, मां- என்னை, त्वं- நீர், यत्- எந்த காரணத்தினால், परित्यक्तुकाम:- விடவேணுமென்று நினைத்திருக்கின்றீரோ.

6. (ப-ரை) हे वीर- வீரனே! द्युमत्सेनसुतं- த்யுமத்ஸேனருடைய புத்ரரான, सत्यवन्तं- ஸத்யவானை, अनुव्रताम्- அநுஸரித்திருக்கின்ற, सावित्रीं इव- ஸாவித்ரியைப்போல், मां- என்னை, आत्मवशवर्तिनीम्- உம்முடைய ஸ்வாதீனத்திலிருப்பவளாக, त्वं- நீர், विद्धि- அறியும்.

4. (பொ-ரை) தபித்துக்கொண்டிருக்கிற ஸூர்யனிடத்தில்போல, ஸ்ரீராமனிடத்திலும் மிகுந்த தேஜஸ்ஸிருக்கிறதென்று, இவ்வுலகம் முழுமையும் அஜ்ஞானத்தினால் சொல்லுகின்றது. அது பொய். ராமனிடத்தில் கொஞ்சமேனும் தேஜஸ் லேசில்லையாது.

5. (பொ-ரை) என்ன அகார்யத்தைச் செய்தவர் போல் வ்யஸனப்படுகிறீரே! அப்படிப்பட்ட அகார்யம் நீர் என்ன செய்து விட்டீர்! மஹா சூரனை உமக்கு யாரிடமிருந்து பயம் வேண்டியிருக்கிறது. உம்மைத்தவிர வேறு கதியில்லாதவளான என்னை விட்டுவிட வேணுமென்று நினைக்கின்றீரே, அதற்கும் ஒரு காரணமும் காணவில்லையே.

6. (பொ-ரை) ஹே வீர! த்யுமத்ஸேனரின் புத்ரனை ஸத்யவானை, எப்பொழுதும் அநுஸரித்திருக்கும் அவர் பத்நியான ஸாவித்ரியைப்போல், என்னையும் உம்மை எப்பொழுதும் அநுஸரித்திருக்கின்றவளாக நீர் அறிந்துகொள்ளும்.

न त्वहं मनसाप्यन्यं द्रष्टास्मि त्वदृतेऽनघ ।
त्वया राघव गच्छेयं यथान्या कुलपांसिनी ॥ 7 ॥
स्वयं तु भार्यां कौमारीं चिरमध्युषितां सतीम् ।
शैलूष इव मां राम परेभ्यो दातुमिच्छसि ॥ 8 ॥
*यस्य पथ्यं च रामात्थ यस्य चार्थेवरुध्यसे ।
त्वं तस्य भव वश्यश्च विधेयश्च सदानघ ॥ 9 ॥

7. (ப-ரை) हे अनघ– குற்றமில்லாதவரே! राघव- ராகவனே! कुलपांसिनी- குலத்தைக்கெடுக்கின்ற, अन्या यथा- வேறு ஸ்த்ரீபோல, अहं- நான், मनसा अपि- மனதினாலும், त्वत् ऋते- உம்மைத்தவிர, अन्य- வேறொருவனை, न द्रष्टास्मि– பார்க்கமாட்டேன், (ஆகையால்), त्वया- உம்முடன் கூடவே, गच्छेय- போவேன்.

8. (ப-ரை) हे राम– ஸ்ரீராமனே! कौमारीं- குமாரியாயிருக்குங்காலத்திலே பரிபக்வமாய், सतीम्- பதிவ்ரதையாயும், चिरं- நெடுநாளாக, अध्युषितां- உம்மிடத்திலேயே இருக்கின்ற, भार्यां– பார்யையான, मां- என்னை, शैलूष इव- பார்யையைக்கொடுத்து ஜீவிப்பவன்போல், स्वयं- நீராகவே, परेभ्यः- பிறர்களின் பொருட்டு, दातुं- கொடுப்பதற்கு, इच्छसि- விரும்புகிறீர்.

9. (ப-ரை) हे अनघ राम- குற்றமில்லாதவரான ஸ்ரீராம! यस्य- யாதொரு

7. (பொ-ரை) குற்றமில்லாத ஸ்ரீராகவா! குலத்தைக் கெடுக்கின்ற அற்பமான ஸ்த்ரீயன்றோ வேறு புருஷனைப்பார்ப்பாள். அப்படிப்பட்டவளன்று நான். உம்மைத்தவிர வேறு புருஷனை மனதாலும் நினைக்கமாட்டேன். ஆகையால் உம்முடனே வருவேன்

8 (பொ-ரை) ஹே ராமா! சிறு வயதிலேயே உமக்கு பார்யையாயிருந்து, நெடுநாள் இங்கேயே வஸித்துக்கொண்டிருப்பவளுமானபதிவ்ரதையுமான என்னை, பார்யையைப்பிறருக்குக்கொடுத்து ஜீவனம் செய்கிறவன்போல் நீரும் அயலாருக்குக்கொடுக்க எண்ணுகின்றீரே.

9. (பொ-ரை) குற்றமில்லாத ஸ்ரீராமனே! யாதொரு தாய்மாருக்கு ஹிதத்தைச் சொல்லுகின்றீரோ, யாதொருவர் கார்யமாக என்னை நீர் இங்கே நிறுத்துகி

இந்த ச்லோகத்தில் यस्य-तस्य என்று ஒருவரையும் குறிப்பிட்டு சொல்லாதபடியால், வேறுவிதமாகவும் வ்யாக்யானம் செய்திருக்கிறார். அதாவது:— யாதொரு எனக்கு ஹிதத்தைச்சொல்லுகிறீரோ, யாதொரு என்னிமித்தமாக வருத்தப்படுகிறீரோ. அப்படிப்பட்ட எனக்கு நீதான் அநுகூலமாகவும் சொன்ன வேலையை செய்கிறவராகவும் இருக்கவேண்டும். அதாவது:– என்னுடைய வார்த்தையைத்தான் நீர் கேளும் என்று.
இன்னொரு அர்த்தம்:– யாதொரு பரதனுக்கு அநுகூலத்தைச்சொல்லி, அவருடைய பட்டாபிஷேக நிமித்தமாக பிதாவினால் தடைசெய்யப்பட்டீரோ, அந்த பரதனுக்கு அநுகூலராகவும், விதேயராகவும் நீர் இரும் என்றும்.

स मामनादाय वनं न त्वं प्रस्थातुमर्हसि ।
तपो वा यदि वाऽरण्यं स्वर्गो वा मे सह त्वया ॥ 10 ॥
न च मे भविता तत्र कश्चित्पथि परिश्रमः ।
पृष्ठतस्तव गच्छन्त्या विहारशयनेष्विव ॥ 11 ॥
कुशकाशशरेषीका ये च कण्टकिनो द्रुमाः ।
तूलाजिनसमस्पर्शा मार्गे मम सह त्वया ॥ 12 ॥

---

மாத்ரு ஜனத்திற்கு, पथ्य- ஹிதத்தை, आत्थ- சொல்லுகின்றீரோ, यस्य च- யாதொருவருடைய, अर्थे- கார்யத்தில், अवरुध्यसे- (என்னை) நிறுத்துகிறீரோ, तस्य- அந்த மாத்ரு ஜனத்திற்கு, त्वं- நீர், सदा- எப்பொழுதும், वश्यः- அநுகூலராகவும், विधेयः च- பணிவிடை செய்கிறவராகவும், भव- இரும்.

10. (ப-ரை) सः त्व- அப்படிப்பட்ட நீர், मां- என்னை, अनादाय- அழைத்துக் கொண்டு போகாமல், वनं- வனத்தைக்குறித்து, प्रस्थातुं- புறப்படுவதற்கு, न अर्हसि- தகுந்தவரல்ல, तपो वा- தபஸ்ஸோ, यदि वा- அல்லது, अरण्यं- ஆரண்யமோ, स्वर्गो वा- ஸ்வர்க்கத்தில் வாஸமோ, मे- எனக்கு, त्वया सह- உம்முடன் கூட, भवतु- உண்டாக வேண்டும்.

11. (ப-ரை) तव- உம்முடைய, पृष्ठतः பின்னால், गच्छन्त्याः- போகின்ற, मे- எனக்கு, विहारशयनेषु इव- உத்யானவனத்தில் உலாவுங்காலத்திலும், படுக்கையில் படுத்துக் கொள்ளுங்காலத்திலும், (ச்ரமமுண்டாகாதது) போல், तत्र- அந்த வனத்தில், पथि- வழியில், कश्चित् परिश्रमः- ஒருவிதமான ச்ரமமும், न भविता- உண்டாகமாட்டாது.

12. (ப-ரை) कुशकाशशरेषीकाः- தர்பம், காசம், நாணல், இஷீகம் இவைகளும், ये च- யாதொரு, कण्टकिनः- முள்ளுள்ளவைகளான, द्रुमाः- மரங்களுண்டோ, அவைகளும், मार्गे- வழியில், त्वया सह- உம்முடன் கூட, (गच्छन्त्याः- போகின்ற), मम- எனக்கு, तूलाजिनसमस्पर्शाः- பஞ்சையும், க்ருஷ்ணாஜினத்தையும் தொட்டது போலிருக்கும்.

றீரோ, அந்தத்தாய்மாருக்கு நீரே எப்பொழுதும் அநுகூலமாகவும் சிச்ருஷை செய்கின்றவராகவும் இரும். நான் உம்மைத்தான் பின்தொடருவேன்.

10. (பொ-ரை) அப்படிப்பட்ட நீர், என்னை அழைத்துக்கொண்டு போகாமல் வனத்திற்குப்புறப்படக்கூடாது. நான் தபஸ் செய்தாலும், வனவாஸம் செய்தாலும், ஸ்வர்க்கவாஸம் செய்தாலும் உம்முடன்கூட இருந்தே செய்யவேண்டும்.

11. (பொ—ரை) நீர் போகும்பொழுது, உம்முடைய பின்னால் நான் வரும் காலத்தில் உத்யானத்தில் உலாவும் ஸமயத்திலும், பஞ்சமெத்தையில் படுத்துக் கொள்ளும் ஸமயத்திலும், கொஞ்சமேனும் ச்ரமம் உண்டாகாதது போல், வனத்தில் வழிகளில் ஒருவித ச்ரமமும் எனக்கு உண்டாகமாட்டாது.

12. (பொ-ரை) கூர்மையான தர்பங்களும், காசங்களும், நாணல்களையும், இஷீகங்களையும் (கணாப்புல்) முள்ளுள்ள மரங்களையும் உம்முடன்கூட பின்சென்று

महावातसमुद्धूतं यन्मामपकरिष्यति ।
रजो रमण तन्मन्ये परार्ध्यमिव चन्दनम् ॥ 13 ॥

शाद्वलेषु यथा शिश्ये वनान्ते वनगोचर ।
कुथास्तरणतल्पेषु किं स्यात्सुखतरं ततः ॥ 14 ॥

पत्रं मूलं फलं यत्त्वमल्पं वा यदि वा बहु ।
दास्यसि स्वयमाहृत्य तन्मेऽमृतरसोपमम् ॥ 15 ॥

13. (ப-ரை) हे रमण- காந்த! महावातसमुद्धूतं- பெரும் காற்றினால் உயரக்கிளப்பப்பட்ட, यत्-रजः- யாதொரு புழுதியானது, मां- என்னை, अपकरिष्यति- கெடுத்துவிடுகிறதோ, तत्- அந்த புழுதியை, परार्ध्यं- ச்ரேஷ்டமான, चन्दनम् इव- சந்தனப்பொடியைப்போல, मन्ये- எண்ணுவேன்.

14. (ப-ரை) हे वनगोचर- காட்டிற்கிலக்கானவரே! वनान्ते- வனப்ரதேசத்தில், शाद्वलेषु- இளம் புற்களுள்ள ப்ரதேசங்களில், यथा शिश्ये- எவ்விதம், (உம்முடன்கூட ஸுகமாய்) படுத்துக்கொள்ளுவேனோ, ततः- அதைக்காட்டிலும், कुथास्तरणतल्पेषु- சித்ரகம்பளமும், மேல் விரிப்புக்களும உடைய படுக்கைகளில், सुखतरं- அதிக ஸுகமானது स्यात किं- உண்டாகுமா என்ன!

15. (ப-ரை) पत्र- இலையோ, मूल- கிழங்கோ, फल- பழமோ, यत्- எதையாகிலும், अल्पं वा- கொஞ்சமாகவோ, बहु यदि वा- அதிகமாகவோ, स्वयं आहृत्य- தானாகவே கொண்டுவந்து, त्वं- நீ, दास्यसि- கொடுப்பீரோ, तत्- அது, मे- எனக்கு, अमृतरसोपमम्- அம்ருத ரஸத்திற்கு ஸமானமானது.

வரும்பொழுது மிகுந்த பசிகாலத்தில் பழத்தையும், பதம் செய்த க்ருஷ்ணாஜினத்தையும், மிக்கதும்போல் மருந்துவாயிருக்கும்.

13. (பொ-ரை) காந்த! வனத்திற்போகும்பொழுது பெருங்காற்றினால் கிளப்பப்பட்டு புழுதிகள் என்மேல் விழுந்தகையால் அவைகளை உயர்ந்த சந்தனப்பொடிகளைப்போல தூளினதாக நினைப்பேன்.

14. (பொ-ரை) வனத்தில் ஸஞ்சரிப்பவரே! வனங்களில் இளம்புற்களுள்ள இடங்களில் உமமுடன்கூட நான் படுத்துக்கொண்டு ஸுகப்படுவதைக்காட்டிலும், சித்ரகம்பளமும், மேல்விரிப்புமுள்ள படுக்கையில் என்ன அதிகமான ஸுகமுண்டாகும்.

15. (பொ-ரை) இலையோ, கிழங்கோ, பழமோ, எதுவாகிலும், கொஞ்சமோ, அதிகமோ, நீரே பறித்து எனக்குக்கொடுத்தால் அது எனக்கு அம்ருதம்போல் மிக ருசியுள்ளதாயிருக்கும்.

न मातुर्न पितुस्तत्र स्मरिष्यामि न वेश्मनः ।
आर्तवान्युपभुञ्जाना पुष्पाणि च फलानि च ॥ 16 ॥
न च तत्र गतः किंचिद्द्रष्टुमर्हसि विप्रियम् ।
मत्कृते न च ते शोको न भविष्यामि दुर्भरा ॥ 17 ॥
यस्त्वया सह स स्वर्गो निरयो यस्त्वया विना ।
इति जानन्परां प्रीतिं गच्छ राम मया सह ॥ 18 ॥

16. (ப-ரை) तत्र- அந்த வனத்தில், आर्तवानि- அந்தந்த ருதுக்களுக்கேற்ற, पुष्पाणि च- புஷ்பங்களையும், फलानि च- பழங்களையும், उपभुञ्जाना सती- புஜித்துக்கொண்டு, मातुः- மாதாவையும், न स्मरिष्यामि- நினைக்கமாட்டேன், पितुः- பிதாவையும், न- நினைக்கமாட்டேன்.

17. (ப-ரை) तत्र- அந்த வனத்தில், गतः போயிருக்கிற நீர், मत्कृते- எனக்காக, किंचित् विप्रियम्- ஒரு கஷ்டத்தையும், द्रष्टुं- பார்ப்பதற்கு, न अर्हसि- தகுந்தவரல்ல, ते- உமக்கு, शोकः च- வ்யஸனமும், न- உண்டாகமாட்டாது, दुर्भरा- கஷ்டப்பட்டு போஷிக்கத் தகுந்தவளாகவும், न भविष्यामि- ஆகமாட்டேன்.

18. (ப-ரை) हे राम- ஸ்ரீராம! त्वया सह- உம்முடன் கூட, यः- யாதொரு வாஸமோ, सः- அது, स्वर्गः- ஸ்வர்க்க வாஸத்திற்கு ஸமானம், त्वया विना- உம்மை விட்டு, यः- யாதொரு வாஸமோ, सः- அது, निरयः- நரகவாஸத்திற்கு ஸமானம், इति- என்று, परां- மேலான, प्रीतिं- என்னுடைய அன்பை, जानन् நீர் தெரிந்தவராய், मया सह- என்னுடன் கூட, गच्छ- (வனத்திற்கு) ப்போகவேண்டும்.

16. (பொ-ரை) வனத்தில் அந்தந்த காலங்களுக்குரிய புஷ்பங்களையும், பழங்களையும் புஜித்துக்கொண்டு, அந்த ஆனந்தத்தினால் பிதாவையும் நினைக்கமாட்டேன். மாதாவையும் நினைக்கமாட்டேன். க்ருஹங்களையும் நினைக்கமாட்டேன்.

17. (பொ-ரை) நீர் என்னுடன் வனம் போனபிறகு என்னால் நீர் ஒருவித கஷ்டத்தையும் பார்க்கமாட்டீர். உமக்கு சோகமும் உண்டாகமாட்டாது. சிரமப்பட்டு என்னை நீர் ரக்ஷிக்கவும் வேண்டாம்.

18. (பொ-ரை) ஸ்ரீராம! உம்முடன்கூட வஸிப்பது ஸ்வர்க்கத்தில் வஸிப்பதுபோல். உம்மைவிட்டுவஸிப்பது நரகவாஸம்போலென்று, எனக்கு உம்மிடத்திலிருக்கிற அதிகமான அன்பைநீர் தெரிந்துகொண்டிருப்பதால் என்னுடன் கூடவே வனம் போகவேண்டும்.

अथ मामेवमव्यग्रां वनं नैव नयिष्यसि ।
विषमद्यैव पास्यामि मा विशं द्विषतां वशम् ॥ 19 ॥
पश्चादपि हि दुःखेन मम नैवास्ति जीवितम् ।
उज्झितायास्त्वया नाथ तदैव मरणं वरम् ॥ 20 ॥
इमं हि सहितुं शोकं मुहूर्तमपि नोत्सहे ।
किं पुनर्दश वर्षाणि त्रीणि चैकं च दुःखिता ॥ 21 ॥

19. (ப-ரை) अथ- அல்லது, एवं- இவ்விதம், अव्यग्रां- வனம்போவதில் பயமில்லாமலிருக்கின்ற, मां- என்னை, न नयिष्यसि एव- கூட அழைத்துக்கொண்டுபோகாமலிருப்பீரேயானால், अद्य एव- இப்பொழுதே, विषं- விஷத்தை, पास्यामि- குடித்துவிடுவேன், द्विषतां- சத்ருக்களுடைய. वशम्- ஸ்வாதீனத்தை, मा विशं- அடையமாட்டேன்.

20. (ப-ரை) हे नाथ- நாதனே! त्वया- உம்மால், उज्झितायाः- விடப்பட்டிருக்கிற, मम- எனக்கு, दुःखेन- துக்கத்தினால், पश्चात् अपि- நீர் வனம் போனபிறகும், जीवितम्- ப்ராணனானது, न एव अस्ति- இருக்கவே இராது, (ஆகையால்), तदा एव- இப்பொழுதே, मरण- உயிரை விடுவது, वरम्- ச்ரேஷ்டமானது.

21. (ப-ரை) इमं शोकं- இந்த துக்கத்தை, मुहूर्तं अपि- க்ஷணகாலமுங்கூட, सहितुं- பொறுப்பதற்கு, न उत्सहे हि- சக்தியற்றவளன்றோ, दश वर्षाणि- பத்து வருஷங்களும், त्रीणि च- மூன்று வருஷங்களும், एकं च- ஒரு வருஷம், दुःखिता सती- துக்கமுடையவளாய், किं पुनः- ஸஹிக்கமாட்டேனென்று சொல்லவேண்டுவானேன்.

19. (பொ-ரை) இவ்விதம் வனம் போவதில் பயமில்லாமல் உத்ஸாஹத்துடனிருக்கிற என்னை நீர் வனத்திற்கு அழைத்துக்கொண்டுபோகாமல் போனால் இப்பொழுதே விஷத்தை தின்றுவிடுவேன். பரதன் முதலான சத்ருக்கள் வசத்தில் இருக்கமாட்டேன்.

20. (பொ-ரை) நாத! நீர் என்னை இவ்விடத்தில் விட்டுவிட்டுப்போனால் உம்மைவிட்டுப்பிரிந்த துக்கம் பொறுக்கமாட்டாமல் என்னுடைய ப்ராணன் போவது நிச்சயம். ஆகையால் உம்முடைய முன்னிலையிலேயே நான் ப்ராணனை விடுவது மேல்.

21. (பொ-ரை) உம்மை விட்டுப்பிரிந்த இந்த கஷ்டத்தை க்ஷணகாலமும் கூட நான் பொறுக்கமாட்டேன். அப்படியிருக்க, பதினான்கு வருஷம், துக்கத்தை எவ்விதம் பொறுக்க முடியும்.

इति सा शोकसन्तप्ता विलप्य करुणं बहु ।
चुक्रोश पतिमायस्ता भृशमलिङ्ग्य सस्वरम् ॥ 22 ॥
सा विद्धा बहुभिर्वाक्यैर्दिग्धैरिव गजाङ्गना ।
चिरसन्नियतं बाष्पं मुमोचाग्निमिवारणिः ॥ 23 ॥
तस्याः स्फटिकसंकाशं वारि सन्तापसम्भवम् ।
नेत्राभ्यां परिसुस्राव पङ्कजाभ्यामिवोदकम् ॥ 24 ॥

22. (ப-ரை) इति- என்று, सा- அந்த ஸீதை, शोकसन्तप्ता- சோகத்தினால் பரிதபித்தவளாய், करुण- தீனமாக, बहु- பலபடியாக, विलप्य- கதறி, आयस्ता- சரீரத்தில் தளர்ச்சியுடையவளாய்க்கொண்டு, पतिं- பர்த்தாவை, आलिङ्ग्य- அணைத்துக்கொண்டு, सस्वरम्- பெரும் குரலுடன், भृशं- நன்றாக, चुक्रोश- கதறினாள்.

23. (ப-ரை) सा- அந்த ஸீதை, दिग्धैः- விஷம் பூசின பாணங்களால், गजाङ्गना इव- பெண்யானைபோல், बहुभिः- பலவிதங்களான, वाक्यैः- ஸ்ரீராமனுடைய வார்த்தைகளால், विद्धा- அடிக்கப்பட்டு, चिरसन्नियतं- வெகு காலமாய் அடக்கப்பட்டிருக்கிற, बाष्पं- கண்ணீரை, अरणिः- அரணிக்கட்டையானது, अग्निं इव- அக்னியைப்போல், मुमोच- விட்டாள்.

24. (ப-ரை) तस्याः- அவளுடைய, नेत्राभ्यां- கண்களிலிருந்து, स्फटिकसंकाशं- ஸ்படிகத்திற்கு ஸமானமான, सन्तापसम्भवम्- துக்கத்தினாலுண்டான, वारि- ஜலமானது, पंकजाभ्यां- தாமரை மலர்களிலிருந்து, उदकम् इव- தேன் (பெருகினது) போல், परिसुस्राव- பெருகினது.

22. (பொ-ரை) அந்த ஸீதை இவ்வாறு சோகத்தினால் பரிதபித்துக்கொண்டு தீனமாகவும் கேட்கிறவர்களுக்கு கருணையுண்டாகும்படியும், வெகுவாய்ப்பலாபம் செய்து துக்கத்தினால் தேஹமெல்லாம் தளர்ந்து பர்த்தாவை இருகையாலும் அணைத்துக்கொண்டு பெருங் குரலுடன் நன்றாய் அழுதாள்.

23. (பொ-ரை) விஷம் பூசிய பாணங்களினால் அடிக்கப்பட்ட பெண்யானைப்போல், ஸ்ரீராமனுடைய, பலவிதமான வார்த்தைகளால் அடிபட்ட அந்த ஸீதை, அரணிக்கட்டை உள்ளே அடங்கியிருக்கிற அக்நியை வெளியிடுவதுபோல் வெகு நேரமாக உள்ளே அடக்கப்பட்டிருக்கிற கண்ணீரை வெளிவிட்டாள்.

24. (பொ-ரை) அந்த ஸீதையினுடைய கண்களிலிருந்து ஸ்படிகம்போல் நிர்மலமாயும், ஸந்தாபத்தினாலுண்டானநீர், தாமரை புஷ்பங்களிலிருந்து தேன் பெருகுவதுபோல் பெருகினது.

तच्चैवामलचन्द्राभं मुखमायतलोचनम् ।
पर्यशुष्यत बाष्पेण जलोद्धृतमिवाम्बुजम् ॥ 25 ॥
तां परिष्वज्य बाहुभ्यां विसंज्ञामिव दुःखिताम् ।
उवाच वचनं रामः परिविश्वासयंस्तदा ॥ 26 ॥
न देवि तव दुःखेन स्वर्गमप्यभिरोचये ।
न हि मेऽस्ति भयं किंचित्स्वयंभोरिव सर्वतः ॥ 27 ॥

25. (ப-ரை) अमलचन्द्राभं- களங்கமில்லாத சந்திரனுக்கு ஸமானமாயும், आयतलोचनम्- அகன்ற கண்களையுடையதுமான, तत् मुखं च एव- அந்த (ஸீதாதேவியின்) முகமும், जलोद्धृत- ஜலத்திலிருந்து எடுக்கப்பட்ட, अम्बुजम् इव- தாமரைப்பூபோல், बाष्पेण- வெப்பத்தால், पर्यशुष्यत- நன்றாய் வாடிவிட்டது.

26. (ப-ரை) रामः- ஸ்ரீராமன், दुःखिताम्- மிகவும் துக்கமுடையவளாய், विसंज्ञां इव- மூர்ச்சை அடைந்தவள்போலுமிருக்கின்ற, तां- அந்த ஸீதையை, बाहुभ्यां- இரு கைகளாலும், परिष्वज्य- நன்றாய் அணைத்துக்கொண்டு, परिविश्वासयन्- நன்றாய் ஸமாதானப்படுத்திக்கொண்டும், तदा- அப்பொழுது, वचनं- வார்த்தையை, उवाच- சொன்னார்.

27. (ப-ரை) हे देवि- தேவியே! तव- உன்னுடைய, दुःखेन- துக்கத்தினால் स्वर्गं अपि- ஸ்வர்க்க லோகத்தையும், न अभिरोचये- ஆசைப்படமாட்டேன், मे- எனக்கு, स्वयंभोः इव- நாராயணனுக்குப்போல, सर्वतः- எந்த இடத்திலும், किंचित् भयं- ஒரு பயமும், न अस्ति हि- இல்லையல்லவா.

25. (பொ-ரை) களங்கமற்ற சந்திரன் போலும் அகன்ற கண்களையுடைய அந்த ஸீதாதேவியின் அழகான முகமும், ஜலத்திலிருந்து எடுத்து வெளியில் போடப்பட்ட தாமரை புஷ்பம் வாடியது போல் கண்ணீர் ஜலத்தின் கொதிப்பினால் நன்றாய் வாடிவிட்டது.

26. (பொ-ரை) ஸ்ரீராமன் மிகவும் துக்கித்து மூர்ச்சையடைந்தவள் போலிருக்கின்ற அந்த ஸீதையை இரு கையாலும் அணைத்துக்கொண்டு ஸமாதானம் செய்வதற்காக அப்பொழுது ஒரு வார்த்தை சொன்னார்.

27. (பொ-ரை) தேவி! நீ துக்கப்பட்டுக்கொண்டிருக்கும் பொழுது எனக்கு ஸ்வர்க்கம் கிடைத்தாலும் நான் ஆசைப்படமாட்டேன். ஸ்ரீநாராயணனுக்கு எங்கும் பயமில்லாதது போல் எனக்கு ஓரிடத்திலும் ஒரு பயமும் கிடையாதல்லவா.

तव सर्वमभिप्रायमविज्ञाय शुभानने ।
वासं न रोचयेऽरण्ये शक्तिमानपि रक्षणे ॥ 28 ॥
यत्सृष्टासि मया सार्धं वनवासाय मैथिलि ।
न विहातुं मया शक्या कीर्तिरात्मवता यथा ॥ 29 ॥
धर्मस्तु गजनासोरु सद्भिराचरितः पुरा ।
तं चाहमनुवर्तेऽद्य यथा सूर्यं सुवर्चला ॥ 30 ॥

28. (ப-ரை) हे शुभानने- அழகான முகமுடையவளே! रक्षणे- உன்னைக்காப்பாற்றுவதில், शक्तिमान् अपि- நான் சக்தியுள்ளவனாக இருந்தும், तव- உன்னுடைய, अभिप्रायं सर्वं- அபிப்ராயம் முழுவதையும், अविज्ञाय- அறியாமல், अरण्ये- வனத்தில், वासं- நீ வஸிப்பதை, न रोचये- நான் இஷ்டப்படவில்லை.

29. (ப-ரை) हे मैथिलि- ஸீதே! मया सार्धं- என்னுடன்கூட, वनवासाय- வனத்தில் வஸிப்பதற்காக, यत्- யாதொரு காரணத்தினால், सृष्टा- ஸ்ருஷ்டிக்கப்பட்டவளாக, असि- இருக்கிறாயோ, (तत्- ஆகையால்), आत्मवता- ஸச்சரித்திரமுடையவனால், कीर्तिः यथा- கீர்த்தியானது எப்படி, (விடமுடியாதோ), (तथा- அப்படி), मया- என்னால், विहातुं- விடுவதற்கு, न शक्या- முடியாது.

30. (ப-ரை) हे गजनासा ऊरु- யானையின் துதிபோன்ற தொடையுடையவளே! धर्मः तु- (இந்த வானப்ரஸ்த) தர்மமானது, सद्भिः- மஹான்களால், पुरा- முன்காலத்தில், आचरितः- செய்யப்பட்டது, तं च- அந்த தர்மத்தையே, अहं- நானும், सुवर्चला- ஸுவர்ச்சலாதேவி, सूर्यं यथा- ஸூர்யனை அநுஸரித்ததுபோல், अद्य- இப்பொழுது, अनुवर्ते- அநுஸரிக்கின்றேன்.

---

28. (பொ-ரை) அழகுள்ள முகமுடையவளே! உன்னைக் காப்பாற்ற சக்தியுள்ளவனாக இருந்தும் உன்னுடைய அபிப்ராயம் முழுவதையும் நன்றாய் அறியாமல் உன்னை அரண்யத்திற்கு அழைத்துக்கொண்டுபோக, இதுவரையில் ஸம்மதிக்காமலிருந்தேன்.

29 (பொ-ரை) மைதிலீ! என்னுடன் கூட வனவாஸம் செய்வதற்காகவே, பகவான் உன்னை ஸ்ருஷ்டித்திருக்கிறான். ஆகையினால், ஸதாசாரமுடையவன் கீர்த்தியை எப்படி விடமுடியாதோ, அவ்விதம் நானும் உன்னை விடமுடியாது.

30. (பொ-ரை) யானையின் துதிபோன்ற அழகாய தொடையுடையவளே! பத்னியுடன் சேர்ந்து வனத்தில் வஸிக்கக்கூடிய இந்த வானப்ரஸ்த தர்மத்தை ஸபத்னீகர்களான ராஜரிஷிகள் முன்காலத்தில் அநுஷ்டித்திருக்கின்றார்கள். அந்த தர்மத்தையே ஸுவர்ச்சலாதேவி ஸூர்யனை அநுஸரித்ததுபோல், நானும் இப்பொழுது அநுஸரிக்கின்றேன்.

அல்லது. அந்த தர்மத்தை நானும் அநுஷ்டிக்கப்போகின்றேன். ஆகையால் ஸுவர்ச்சலாதேவி ஸூர்யனை விடாமலிருந்தது போல் நீயும் என்னை விடாமல் என்னுடன் புறப்படு என்றார் சொல்லலானார்.

न खल्वहं न गच्छेयं वनं जनकनन्दिनि ।
वचनं तन्नयति मां पितुः सत्योपबृंहितम् ॥ 31 ॥
एष धर्मस्तु सुश्रोणि पितुर्मातुश्च वश्यता ।
अतश्च तं व्यतिक्रम्य नाहं जीवितुमुत्सहे ॥ 32 ॥
अस्वाधीनं कथं दैवं प्रकारैरभिराध्यते ।
स्वाधीनं समतिक्रम्य मातरं पितरं गुरुम् ॥ 33 ॥

31. (ப-ரை) हे जनकनन्दिनि– ஸீதே! सत्योपबृंहितम्- ஸத்யத்தோடுகூடிய, पितुः वचनं– பிதாவினுடைய வார்த்தை, मां- என்னை, वनं- வனத்தை, नयति खलु– அடையச் செய்கின்றது அல்லவா, तत्- ஆகையாலே, अहं- நான், वनं- வனத்தைக்குறித்து, न गच्छेयं- (इति) न– போகமாட்டேனென்பது இல்லை.

32. (ப-ரை) हे सुश्रोणि- அழகிய இடை உடையவளே! पितुः- பிதாவுக்கும், मातुः च- மாதாவுக்கும, वश्यता- வசப்பட்டிருப்பது, (என்கிற), एषः तु- இதுதான், धर्मः- தர்மம், अतः च- ஆகையினால், तं- அந்த தர்மத்தை, व्यतिक्रम्य- தாண்டி, अहं- நான் जीवितुं– பிழைத்திருக்க, न उत्सहे– சக்தியுள்ளவனாக இல்லை.

33. (ப-ரை) स्वाधीन- ப்ரத்யக்ஷமாயிருந்து நமக்குக் கட்டளையிடுகின்ற मातरं- மாதாவையும், पितर-பிதாவையும், गुरुम्– குருவையும், समतिक्रम्य- தாண்டிவிட்டு, अस्वाधीनं- நமக்கு ஸ்வாதீனமல்லாத, दैवं- தெய்வமானது, कथं प्रकारैः- எந்த விதங்க ளினால், अभिराध्यते- ஆராதிக்கப்படும்.

31. (பொ-ரை) ஜனகநந்தினி! நான் வனத்திற்கு போகாதிருக்கமுடியாது. ஏனென்றால்? ஸத்யத்தோடு கூடிய பிதாவின் ஆஜ்ஞையானது என்னை வனத்திற்கு அனுப்புகிறது.

32. (பொ-ரை) அழகான இடை உடையவளே! பிதாவுக்கும், மாதாவுக்கும் அடங்கியிருப்பது என்பது தான் தர்மம ஆகையால் அந்த தர்மத்தைவிட்டு என் னால் ஜீவித்திருக்க முடியாது.

33. (பொ-ரை) ப்ரத்யக்ஷமாயிருந்து நமக்கு ஆஜ்ஞாபனம் செய்கின்ற, மாதா, பிதா, குரு இவர்களின் சொல்லை மறுத்துவிட்டு, ப்ரத்யக்ஷமல்லாமலிருக்கிற தெய்வத்தை எந்த விதத்தினால் ஆராதிக்கலாம்.

*यत्त्रयं तत्त्रयो लोकाः पवित्रं तत्समं भुवि ।
नान्यदस्ति शुभापांगे तेनेदमभिराध्यते ॥ 34 ॥
न सत्यं दानमानौ वा न यज्ञाश्चाप्तदक्षिणाः ।
तथा बलकराः सीते यथा सेवा पितुर्हिता ॥ 35 ॥

34. (ப-ரை) हे शुभापाङ्गे- அழகிய கடைக்கண்களையுடையவளே! यत् त्रयं- யாதொரு மாதா, பிதா, குரு என்கிற மூன்றுண்டோ, तत्- அம்மூன்றும், त्रयो लोकाः- மூன்றுலோகங்கள், भुवि- உலகத்தில், तत्समं- அந்த மூன்றுக்கும் ஒப்பான, पवित्रं- பரிசுத்த வஸ்து, अन्यत्- வேறு, न अस्ति- இல்லை, तेन- ஆகையினால், इदं- இந்த மூன்றும், अभिराध्यते- பூஜிக்கப்படுகிறது.

35. (ப-ரை) हे सीते- ஸீதே! हिता- ஹிதத்தைச்செய்கின்ற, पितुः- பிதாவினுடைய, सेवा- சிச்ருஷையானது, यथा- எப்படி, बलकरी- பலத்தைச்செய்யுமோ, तथा- அப்படி, सत्यं- ஸத்யமும், दान मानौ वा- தானமும், ஸம்மானமும், न बलकराः- பலத்தை செய்ய மாட்டா, आप्तदक्षिणाः- இஷ்டமான தக்ஷிணைகளையுடைய, यज्ञाः च- யஜ்ஞங்களும் न बलकराः- பலத்தைச் செய்யமாட்டா.

---

34. (பொ-ரை) அழகிய கண்களை உடையவளே! மாதா, பிதா, குரு என்கிற மூன்று பேர்களும் மூன்று உலகங்கள். இந்த உலகத்தில் அவர்களுக்கு ஸமானமான பரிசுத்தமான வஸ்து வேறொன்றும் கிடையாது ஆகையால் இம் மூவர்களையும் நாம் அவச்யம் பூஜிக்கவேண்டியது.

35. (பொ-ரை) ஸீதே! புத்திரனுக்கு எப்பொழுதும் ஹிதத்தையே செய்கின்ற பிதாவின் சிச்ருஷையானது பரலோகத்தை அடைவதற்காக எவ்வளவு பலத்தை செய்யுமோ, அவ்வளவு பலத்தை ஸத்யமும், தானமும், ஸம்மானமும் சாஸ்த்ரத்தில் சொல்லியபடி தக்ஷிணை கொடுத்து செய்த யாகங்களும், செய்யமாட்டாதுகள்.

* அதாவது:— இம்மூவர்களை ஆராதித்தால் மூன்று லோகமும் அதின் பலமாக கிடைக்கும் என்று தாத்பர்யம்.

அல்லது இம்மூவர்களை ஆராதித்தால் மூன்று உலகத்திலுள்ள மற்ற தேவதைகளையெல்லாம் ஆராதித்த பலம் உண்டென்றும் சொல்லாம்.

स्वर्गो धनं वा धान्यं वा विद्याः पुत्राः सुखानि च ।
गुरुवृत्त्यनुरोधेन न किंचिदपि दुर्लभम् ॥ 36 ॥
देवगन्धर्वगोलोकान्ब्रह्मलोकांस्तथा नराः ।
प्राप्नुवन्ति महात्मानो मातापितृपरायणाः ॥ 37 ॥
स मां पिता यथा शास्ति सत्यधर्मपथे स्थितः ।
तथा वर्तितुमिच्छामि स हि धर्मः सनातनः ॥ 38 ॥

36. (ப-ரை) स्वर्गः- ஸ்வர்க்கலோகமும், धनं वा- தனமோ, धान्यं वा- தான்யமோ, विद्याः- வித்யைகளோ, पुत्राः- புத்திரர்களோ, सुखानि च- ஸுகங்களோ, (இவைகளெல்லாம்) गुरुवृत्त्यनुरोधेन- குரு சிச்ருஷை செய்வதினால், (सिध्यन्ति- கிடைக்கும்,) दुर्लभम्- கிடைக்காதது, किंचित् अपि न- ஒன்றுமில்லை.

37. (ப-ரை) मातापितृपरायणाः- மாதாபிதாக்களின் சிச்ருஷையையே முக்யமாகக்கொண்ட, महात्मानः- உறுதியான மனதுடைய, नराः- மனிதர்கள், देवगन्धर्वगोलोकान्- தேவலோகங்களையும், கந்தர்வ லோகத்தையும், கோலோகத்தையும், तथा- அப்படியே, ब्रह्मलोकान्- ப்ரமலோகங்களையும், प्राप्नुवन्ति- அடைகின்றார்கள்.

38. (ப-ரை) सत्यधर्मपथे- ஸத்யமென்கிற தர்ம மார்க்கத்தில், स्थितः- நிலைநிற்கின்ற, सः पिता- அப்படிப்பட்ட என் தந்தை, मां- என்னை, यथा- எப்படி, शास्ति- ஆஜ்ஞாபிக்கின்றாரோ, तथा- அப்படி, वर्तितुं- நடக்க, इच्छामि- விரும்புகிறேன், सः हि- அதுவன்றோ, सनातनः- நித்யமான, धर्मः- தர்மம்.

36. (பொ-ரை) ஸ்வர்க்கம், தனம், தான்யம், வித்யை, புத்ரர்கள், ஸுகங்கள், இவைகளெல்லாம் குரு சிச்ருஷை செய்து வந்தால் கிடைக்கும்; அதினால் கிடைக்காதவைகள் ஒன்றுமில்லை.

37. (பொ-ரை) த்ருடமான மனதுடன், மாதாபிதாக்களின் சிச்ருஷை செய்வதையே முக்கியமாகக்கொண்ட மஹாத்மாக்களான மனிதர்கள், தேவர்கள், கந்தர்வர்கள், பசுக்கள் இவைகளுடைய லோகங்களையும், அடைந்து க்ரமமாக ப்ரம்மலோகத்தையுமடைவார்கள்.

38. (பொ-ரை) ஸத்யமார்க்கத்தில் நிலைநின்றவரான அவ்வளவு பெருமையடைந்த என் பிதா எனக்கு எவ்விதம் ஆஜ்ஞாபிக்கின்றாரோ, அப்படியே அதைச் செய்ய விரும்புகின்றேன், அவர் சொல்லியபடி நடப்பதன்றோ நித்யமான தர்மம்.

मम सन्ना मतिः सीते त्वां नेतुं दण्डकावनम् ।
वसिष्यामीति सा त्वं मामनुयातुं सुनिश्चिता ॥ 39 ॥
सा हि सृष्टाऽनवद्याङ्गि वनाय मदिरेक्षणे ।
अनुगच्छस्व मां भीरु सहधर्मचरी भव ॥ 40 ॥

39. (ப-ரை) हे सीते– ஸீதே! वसिष्यामि इति- தண்டகாவனத்தில் வஸிக்கப் போகிறேனென்று, मां- என்னை, अनुयातुं- பின் செல்லுவதற்கு, सुनिश्चिता- நன்றாகத் தீர்மானம் கொண்டிருக்கிறாய், अतः- ஆதலால், त्वां- உன்னை, दण्डकावनम्- தண்டகா வனத்தைக்குறித்து, नेतुं- அழைத்துக் கொண்டுபோக, मम- என்னுடைய, मतिः புத்தியானது, सन्ना- ஸித்தமாயிருக்கிறது.

40. (ப-ரை) हे अनवद्याङ्गि- குற்றமில்லாத அவயவங்களுடையவளே! मदिरेक्षणे அழகுள்ள கண்களையுடையவளே! भीरु- என்னை விட்டுப்பிரிய பயமுடையவளே सा- அப்படிப்பட்ட நீ, वनाय- வனவாஸம் செய்வதற்காக, सृष्टा- ஸ்ருஷ்டிககப்பட்டிருக்கின்றாய், (ஆகையால்). मां- என்னை, अनुगच्छस्व- பின் செல்லவேண்டும் सहधर्मचरी- என்னுடன் கூட தர்மங்களை செய்கின்றவளாக, भव- இரு.

39. (பொ-ரை) ஸீதே! அப்படிப்பட்ட நீ 'நானும் தண்டகாவனத்தில் வஸிப்பதற்காக உம்முடன் வருகிறே'னென்று உறுதியாகயிருககின்றபடியால் உன்னை கண்டகாவனத்திற்கு அழைத்துக்கொண்டுபோக எனக்கு எண்ணமுண்டாயிற்று. உன்னுடைய அபிப்பிராயம் தெரியாதபடியால், உன்னை அழைத்துக்கொண்டுபோக எனக்கு இதுவரை எண்ணமில்லாமலிருந்தது. இப்பொழுது நானும் வருகிறேனென்று என்னுடன் புறப்பட ஸித்தமாயிருக்கிறபடியால் அந்த எணணத்தை மாற்றிககொண்டுவிட்டேன்.

40. (பொ-ரை) அழகுள்ள அவயவங்களையும், கண்களையுமுடையவளே கூணகாலமும் என்னைவிட்டுப்பிரிய பயமுள்ளவளே! நீ வனவாஸம் செய்வதற்காக வன்றோ தெய்வத்தினால் ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கிறாய். ஆகையால் என்னுடன் கூட நீயும் தர்மஙகளைச்செய்துகொண்டிரு.

सृष्टा- என்கிற பதத்திற்கு என்னால் அநுமதி செய்யப்பட்டாயென்று அர்த்தம் சொலலலாம்.

सहधर्मचरी- என்கிற பதத்தினால் வனத்தில் போய் நான் செய்யப்போகிற ராக்ஷஸ ஸம்ஹாரம் நீ இல்லாமல் முடியாததால் அந்த கர்மத்தில் நீயும் ஸம்பந்தப்பட வேணும் என்று தோன்றுகிறது.

सर्वथा सदृशं सीते मम स्वस्य कुलस्य च ।
व्यवसायमतिक्रान्ता कान्ते त्वमतिशोभनम् ॥ 41 ॥
आरभस्व शुभश्रोणि वनवासक्षमाः क्रियाः ।
नेदानीं त्वदृते सीते स्वर्गोऽपि मम रोचते ॥ 42 ॥
ब्राह्मणेभ्यश्च रत्नानि भिक्षुकेभ्यश्च भोजनम् ।
देहि चाशंसमानेभ्यः सन्त्वरस्व च मा चिरम् ॥ 43 ॥

41. (ப-ரை) कान्ते- ப்ரியமானவளே! त्वं- நீ, अतिशोभनम्- மிகவும் க்ஷேமகரமான, व्यवसायं- (பர்த்தாவை பின் செல்லவேணும் என்கிற) உறுதியான எண்ணத்தை, अतिक्रान्ता- நன்ருக அடைந்திருக்கிருய், हे सीते- ஸீதையே! (एतत्- இது), मम- என்னுடையவும், स्वस्य च- உன்னுடையவும், कुलस्य- குலத்திற்கு, सर्वथा- பலபடியாலும், सदृश- பொருந்தியிருக்கிறது.

42. (ப-ரை) हे शुभश्रोणि- அழகான இடையுடைய, सीते- ஸீதையே, वनवासक्षमाः- வனவாஸத்திற்குத்தகுந்த, क्रियाः- கார்யங்களை, आरभस्व- நீ செய்ய ஆரம்பிக்கவேண்டும், इदानीं- இப்பொழுது, त्वदृते- நீ இல்லாமல், स्वर्गः अपि- ஸ்வர்க்கலோகமும், मम- எனக்கு, न रोचते- இஷ்டமாயில்லை.

43. (ப-ரை) ब्राह्मणेभ्यः- ப்ராம்மணர்களின்பொருட்டு, रत्नानि च- உயர்ந்த வஸ்துக்களையும், आशसमानेभ्यः- யாசிக்கின்ற, भिक्षुकेभ्यः- பிச்சைக்காரர்களின் பொருட்டு, भोजनम्- சாப்பாட்டையும், देहि च- கொடு, सन्त्वरस्व- த்வரையாகச்செய், मा चिरम्- ஸாவகாசம் வேண்டாம்.

41. (பொ-ரை) இஷ்ட நாயகியான ஸீதே! பர்த்தாவையே பின் செல்லவேணுமென்கிற இந்த நல்ல எண்ணத்தை நீ கொண்டிருப்பது என் குலத்திற்கும் உன் குலத்திற்கும் எல்லாவிதத்தாலும் தகுந்திருக்கின்றது.

42. (பொ-ரை) அழகான இடையுடைய ஸீதே! வனம்போவதற்கு வேண்டிய யாத்ராதானம் முதலான கார்யங்களை செய்யத்துடங்கிவிடு, நீ இல்லாமல் இப்பொழுது எனக்கு ஸ்வர்க்கவாஸமும் ப்ரியமன்று.

43 (பொ-ரை) ப்ராம்மணர்களுக்கு ரதனம் முதலான உயர்ந்த வஸ்துக்களையும், அன்னம் வேண்டுகின்ற பிச்சைக்காரர்களுக்கு போஜனத்தையும் கொடு, செய்யவேண்டிய கார்யங்களை பரபரப்புடன்செய், தாமதப்படுத்தாதே.

भूषणानि महार्हाणि वरवस्त्राणि यानि च ।
रमणीयाश्च ये केचित्क्रीडार्थाश्चाप्युपस्कराः ॥ 44 ॥
शयनीयानि यानानि मम चान्यानि यानि च ।
देहि स्वभृत्यवर्गस्य ब्राह्मणानामनन्तरम् ॥ 45 ॥
अनुकूलं तु सा भर्तुर्ज्ञात्वा गमनमात्मनः ।
क्षिप्रं प्रमुदिता देवी दातुमेवोपचक्रमे ॥ 46 ॥

44-45. (ப-ரை) महार्हाणि-விலையுயர்ந்த भूषणानि-பூஷணங்களையும், यानि वरवस्त्राणि-ச்ரேஷ்டங்களான யாதொரு வஸ்த்ரங்களுண்டோ அவைகளையும், क्रीडार्थाः च- விளையாடுவதற்கு உபயோகமுள்ள, रमणीयाः च- அழகானவைகளுமான, ये केचित् उपस्कराः- யாவை சில வஸ்துக்களுண்டோ, (அவைகளையும்), मम- என்னுடைய, शयनीयानि च- கட்டில்களையும், यानानि- வாஹனங்களையும், अन्यानि- மற்றவைகளான, यानि च- யாவை சில வஸ்துக்களுண்டோ, (அவைகளையும), ब्राह्मणानां- ப்ராம்மணர்களுக்கு, अनन्तरं- (கொடுத்த) பிறகு, स्वभृत्यवर्गस्य- நம் வேலைக்காரர் ஸமூஹத்திற்கு. देहि- கொடு.

46. (ப-ரை) सा देवी- அந்த ஸீதாதேவி, आत्मनः- தன்னுடைய, गमन- வனம் போவதை, भर्तुः- பர்த்தாவுக்கு, अनुकूलं तु- ஸம்மதம் என்று, ज्ञात्वा- தெரிந்துகொண்டு, प्रमुदिता सती- ஸந்தோஷமுடையவளாய்க்கொண்டு, क्षिप्र एव- சீக்ரமாகவே, दातुं- (முன் சொல்லிய பதார்த்தங்களை) கொடுப்பதற்கு, उपचक्रमे- ஆரம்பித்தாள்.

44-45. (பொ-ரை) விலையுயர்ந்த பூஷணங்களையும், ச்ரேஷ்டமான வஸ்த்ரங்களையும், விளையாடுவதற்காக ஏற்பட்ட அழகான பொம்மை முதலானவைகளையும், என்னுடைய கட்டில்களையும், வாஹனங்களையும், இன்னும் மற்ற சிலவஸ்துக்களையும், முதலில் ப்ராமணர்களுக்குக் கொடுத்துவிட்டு பிறகு நம் வேலைக் காரர்களுக்குக் கொடு.

46 (பொ-ரை) அந்த ஸீதாதேவி, தானும் வனத்திற்கு வருவதை பர்த்தா ஸம்மதித்து விட்டாரென்று தெரிந்துகொண்டு பரம ஸந்தோஷத்துடன் உடனே முன் சொல்லிய வஸ்துக்களை தானம்செய்ய யத்னித்துவிட்டாள்.

ततः प्रहृष्टा प्रतिपूर्णमानसा यशस्विनी भर्तुरवेक्ष्य भाषितम् ।
धनानि रत्नानि च दातुमङ्गना प्रचक्रमे धर्मभृतां मनस्विनी ॥ 47 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
त्रिंशः सर्गः ॥ 30 ॥

47. (ப-ரை) ततः- பிறகு, यशस्विनी- உயர்ந்த கீர்த்தியுடையவளாயும் अङ्गना- உத்தம ஸ்த்ரீயாயும், मनस्विनी- விசாலமான மனதுடையவளுமான அந்த ஸீதை, भर्तुः- பர்த்தாவினுடைய, भाषितम्- வார்த்தையை, अवेक्ष्य- ஆலோசித்து, प्रहृष्टा- ஸந்தோஷமுடையவளாய், प्रतिपूर्णमानसा- நிறைந்த மனதுடையவளுமாய், धनानि- தனங்களையும், रत्नानि च- உயர்ந்த வஸ்துக்களையும், धर्मभृतां- தர்மிஷ்டர்களுக்கு, दातुं- கொடுப்பதற்கு, प्रचक्रमे- ஆரம்பித்தாள்.

47. (பொ-ரை) பிறகு, உயர்ந்த கீர்த்தியுடையவளும், விசாலமான மனதை உடையவளும் உத்தமஸ்த்ரீயுமான அந்த ஸீதை, நீயும வனத்திற்கு வரவேண்டுமென்று ஸ்ரீராமன் சொன்ன வார்த்தையை கேட்டு பரமஸந்தோஷத்துடன் நிறைந்த மனதுடையவளாய் (விசாரமில்லாதவளாய்) தர்மிஷ்டர்களுக்கு தனங்களையும், ரத்னம முதலான உயர்ந்த வஸ்துக்களையும் தானம்செய்ய ஆரம்பித்தாள்.



एकत्रिंशः सर्गः ॥ 31 ॥

एवं श्रुत्वा तु संवादं लक्ष्मणः पूर्वमागतः ।
बाष्पपर्याकुलमुखः शोकं सोढुमशक्नुवन् ॥ 1 ॥
*स भ्रातुश्चरणौ गाढं निपीड्य रघुनन्दनः ।
सीतामुवाचातियशाः राघवं च महाव्रतम् ॥ 2 ॥

1, 2. (ப-ரை) एवं- இவ்விதமான, संवादं- ஸீதைக்கும், ராமனுக்கும், நடந்த ஸம்பாஷணத்தை, पूर्वं आगतः- முன்னமே வந்தவராயும், रघुनन्दनः- ரகுகுலத்துபுத்ரனு

1-2. (பொ-ரை) முன் சொல்லியபடி ஸீதைக்கும் ராமனுக்கும் நடந்த ஸம்வாதத்தை, கௌஸல்யையின் க்ருஹத்திலிருந்து ஸ்ரீராமனுடன்கூட முன்ன

* இந்த இரண்டு ச்லோகங்களில் இளையபெருமாள், பெருமாளுடைய கைங்கர்யம் தனக்குக்கிடைக்கவேணுமென்று சரணாகதிசெய்கிறார், அந்த சரணாகதியி

யும், अतियशाः-சிறந்த கீர்த்தியுடையவருமான, सः- அந்த, लक्ष्मणः- லக்ஷ்மணன், श्रुत्वा- கேட்டு, शोकं- துக்கத்தை, सोढुं- பொறுப்பதற்கு, अशक्नुवन्- சக்தியில்லாதவராய், बाष्पपर्याकुलमुखः- கண்ணீரால் கலங்கின முகத்தையுடையவராய், भ्रातुः- தமையனுருடைய, चरणौ- திருவடிகளை, गाढं- உறுதியாக, निपीड्य- பிடித்துக்கொண்டு, सीतां- ஸீதையைப்பார்த்தும், महाव्रतम्- பெரிய வ்ரதமுடையவருமான, राघवं च- ரகுகுலத்தில் பிறந்த ஸ்ரீராமனையும் பார்த்து, उवाच- சொன்னார்.

மேலே வந்திருக்கின்ற பெரும் புகழுடைய ரகுகுலத்துப்பிள்ளையான அந்த லக்ஷ்மணன் கேட்டு, ஒருக்காலும் தன்னைவிட்டுப்பிரியாமல் 'புருஷனோடு பாதி சரீரமென்று' வேதங்களில் சொல்லியிருக்கிற பத்னியை வனத்திற்குத் தன்னுடன் கூட அழைத்துக்கொண்டு போவதையே வெகு கஷ்டப்பட்டு ஒப்புக்கொண்டவர் நான் கூடவருவதில் என்ன செய்யப்போகிறாரோ, வென்று மனதிலுண்டான துக்கத்தை பொறுக்கமுடியாமல் கண்களால் நீர் பெறுக்கி முகங்கெளல்லாம் நனைத்துக்கொண்டு மிகவருத்தத்துடன் ப்ராதாவான ஸ்ரீராமனுடைய திருவடிகளை கெட்டியாகப்பிடித்துக்கொண்டு ஸீதையை புருஷகாரமாகக் கொண்டு சரணாகத ரக்ஷணத்தை வ்ரதமாக உடைய ரகுகுலத்தில் அவதரித்த ஸ்ரீராமனைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகிறார்,

னுடைய அதிகாரம், அங்கம் முதலியவைகள் அங்கங்கு ஸ்பஷ்டமாகக் காண்கிறது. இங்கு, सः- என்கிற பதத்தினால் ஸ்ரீராமனுடைய கைங்கர்ய ரூப பலத்திற்கு வேறு உபாயமில்லாதவர் என்ற அதிகாரம், भ्रातुः- என்கிற பதத்தினால் அவச்யம் ரக்ஷிக்க வேண்டிய முறைமையும் चरणौ निपीड्य- என்று சரணாகதியும், गाढं- என்கிற பதம் நழுவாமல் இருப்பதை சொல்லுகிறபடியால் மஹாவிச்வாஸமும், अतियशाः- என்கிற பதத்தினால் ஆநுகூல்ய ஸங்கல்பம், ப்ராதிகூல்ய வர்ஜனம், என்கிற அங்கங்களும், सीतां- என்கிற பதத்தினால் ஸீதையை புருஷகாரமாகக் கொண்டாரென்பதும், महाव्रतम्, मित्रभावेन सम्प्राप्तं न त्यजेयं कथञ्चन- अभयं सर्वभूतेभ्यो ददाम्येतद्व्रतं मम- என்று சொல்லியபடி பெருமாள் சரணாகத ரக்ஷணத்தை வ்ரதமாகக்கொண்டவரென்றும், राघवम्- என்கிற பதத்தினால் ரகு ராக்ஷஸ ஸம்வாதம் முதலியவைகளில் ப்ரஸித்தமான தன் குலத்திற்கேற்பட்ட முக்ய தர்மம் சரணாகத ரக்ஷணமென்னும், उवाच- என்கிற பதத்தினால் சரணாகதி ஸகலபல ஸாதனமாயிருக்கிறபடியால் தனக்கு அபிமதமான பலத்தை விஜ்ஞாபனம் பண்ணிக்கொள்ளுகையாகிற, गोप्तृत्ववरणं नाम स्वाभिप्राय निवेदनम्- என்கிற அங்கமும் சொல்லப்பட்டது. ஆக सभ्रातुः- என்றாரம்பித்து निपीड्य- என்கிற வரையில் த்வயத்தின் பூர்வ கண்டத்தில் சொல்லப்பட்ட சரணாகதியும், राघवम् उवाच- என்கிறதினால் உத்தர கண்டத்தில் சொல்லப்பட்ட பலப்ரார்த்தனையும் காண்பிக்கப்பட்டன

यदि गन्तुं कृता बुद्धिर्वनं मृगगजायुतम् ।
अहं त्वानुगमिष्यामि वनमग्रे धनुर्धरः ॥ 3 ॥
मया समेतोऽरण्यानि बहूनि विचरिष्यसि ।
पक्षिभिर्मृगयूथैश्च संघुष्टानि समन्ततः ॥ 4 ॥
*न देवलोकाक्रमणं नामरत्वमहं वृणे ।
ऐश्वर्यं वापि लोकानां कामये न त्वया विना ॥ 5 ॥

3. (ப-ரை) मृगगजायुतं- ம்ருகங்களோடும், யானைகளோடும் கூடிய, वनं-வனத்தைக்குறித்து, (गन्तुं)- போவதற்கு, बुद्धि:- புத்தியானது, कृता यदि- செய்யப்பட்டதேயானால், अहं- நான், त्वा- உமக்கு, अनु- பின்னையும், अग्रे- முன்னையும், धनुर्धर: सन्- வில்லைதரித்துக்கொண்டு, गमिष्यामि- போவேன்.

*4. (ப-ரை) पक्षिभि:- பக்ஷிகளாலும், मृगयूथै:च- ம்ருகங்களின் கூட்டங்களாலும் समन्तत:- எல்லா இடங்களிலும், सघुष्टानि- சப்திக்கப்பட்ட, बहूनि-அநேகங்களான, अरण्यानि- அரண்யங்களை, मया समेत:- என்னோடு கூடிக்கொண்டு, विचरिष्यसि- நீர் ஸஞ்சரிக்கப்போகிறீர்.

5. (ப-ரை) अहं- நான், त्वया विना- உம்மைவிட்டு, देवलोकाक्रमणं- பரமபதம் அடைவதையும், न वृणे- ஆசைப்படமாட்டேன், अमरत्वं- கைவல்யத்தையும், न वृणे- ஆசைப்படமாட்டேன், लोकानां- லோகங்களுடைய, ऐश्वर्यं वा अपि- ஆதிபத்யத்தையும், न कामये- விரும்பமாட்டேன்.

---

3. (பொ-ரை) ம்ருகங்களோடும் யானைகளோடும் கூடிய வனத்திற்குப் போவதாக நீர் நிச்சயம் செய்திருக்கும் பக்ஷத்தில் நானும் கையில் வில்லை எடுத்துக் கொண்டு உமக்கு பின்னையும், முன்னையுமாக போவேன்.

4. (பொ-ரை) பக்ஷிகளாலும ம்ருகக்கூட்டங்களாலும், எங்கும் சப்தமுள்ளதுகளான எல்லா வனங்களிலும், என்னோடுகூடவே நீர் ஸஞ்சரிக்க வேண்டும்.

5. (பொ-ரை) உம்முடைய கைங்கர்யமில்லாமல் பரமபதம் கிடைத்தாலும வேண்டேன், கைவல்யமும் வேண்டேன். சதுர்முகனைப்போல் அண்டாதிபதியாக இருக்கவும் வேண்டேன்.

---

यदि- என்கிற பதத்தினால் ஸ்ரீராமன் காட்டிற்கு எழுந்தருளுகிறது லக்ஷமணனுக்கு இஷ்டமேயில்லையென்றும, मृगगजायुतम्- என்கிற விசேஷணத்தினால் வில்லை தரித்துக்கொண்டு போவதற்குக்காரணமும சொல்லப்பட்டது. धनुर्धर:- என்பதற்கு தான் தன்னுடைய வில்லை தரித்துக்கொண்டு வருவதாகவும், ஸ்ரீராமனுடைய வில்லை எடுத்துக்கொண்டுவருவதாகவும் சொல்லலாம்.

*இங்கு மேன்மேலும் உயர்ந்த ஸ்தானத்தைச் சொல்லி அவைகளில் எனக்கு ஆசையில்லையென்று சொல்லவேண்டியிருக்க, முதலில் உயர்ந்த ஸ்தானத்தைச்

एवं ब्रुवाणः सौमित्रिर्वनवासाय निश्चितः ।
रामेण बहुभिः सान्त्वैर्निषिद्धः पुनरब्रवीत् ॥ 6 ॥
अनुज्ञातश्च भवता पूर्वमेव यदस्म्यहम् ।
किमिदानीं पुनरिदं क्रियते मे निवारणम् ॥ 7 ॥

---

6. (ப-ரை) वनवासाय- வனவாஸத்தின்பொருட்டு, निश्चितः- நிச்சயங்கொண்டவராய், एवं ब्रुवाणः- இவ்விதம் சொல்லுகின்ற, सौमित्रिः-லக்ஷ்மணன், रामेण- ஸ்ரீராமனால், बहुभिः- பலவிதங்களான, सान्त्वैः- ஸமாதான வார்த்தைகளால், निषिद्धः- தடுக்கப்பட்டும், पुनः- மறுபடியும், अब्रवीत्- சொன்னார்.

7. (ப-ரை) यत्- யாதொரு காரணத்தினால், अहं- நான், पूर्वं एव- முன்னமே, भवता- உம்மால், अनुज्ञातः च- அநுமதி செய்யப்பட்டவனாகவே, अस्मि- இருக்கிறேன், इदानीं पुनः- இப்பொழுதோ வென்றால், मे- எனக்கு, इदं निवारणम्- இந்தத்தடையானது, क्रियते- செய்யப்படுகிறது, किं- (இதற்குக்காரணம்) என்ன?

---

6. (பொ-ரை) வனவாஸம் செய்வதாய் நிச்சயித்துக்கொண்டு இவ்விதம் விஜ்ஞாபனம் செய்கின்ற லக்ஷ்மணனைப்பார்த்து, ஸ்ரீராமன் பலவிதமான ஸமாதானங்களைச்சொல்லி தடுத்தும் அதை கேழ்க்காமல் மறுபடியும் சொல்லுகிறார்.

7. (பொ-ரை) நானும் வனத்திற்கு வருவதைப்பற்றி முன்னமே எனக்கு நீர் அநுமதி கொடுத்திருக்கின்றீர் அப்படியிருக்க இதென்ன மறுபடியும் என்னைத் தடுக்கின்றீர்

---

சொல்லி பிறகு அதற்குக்கீழ்ப்பட்ட ஸ்தானத்தைச்சொல்லியிருப்பதால் पतत्प्रकर्ष दोषं என்கிற ஒரு தோஷம் ஏற்படுகிறது. அதற்குப்பரிஹாரம் சதுர்முகஸ்தானத்தையும், அதற்குமேற்பட்ட ஸ்வாத்மாநுபவரூபமான கைவல்யத்தையும், அதற்குமேலானதான பரமபதத்தையும் என்று அன்வயம் கொண்டும், அல்லது உம்முடைய கைங்கர்யமில்லாமல் பரமபதம் கிடைத்தாலும், எனக்கு வேண்டாமென்றிருக்க, கேவல ஆத்மாநுபவரூபமாகிற கைவல்யத்தையும், அண்டாதிபதியான சதுர்முகஐசுவர்யத்தையும் நான் விரும்ப மாட்டேனென்று சொன்னாலும் அந்த தோஷத்திற்குப்பரிஹாரம் சொல்லலாம்.

स भ्रातुः- என்கிற இரண்டாவது ச்லோகத்தினால் தன்னுடைய பலத்திற்கு பகவத் சரணாகதியைத்தவிர வேறு உபாயமில்லாதவனென்கிற அனன்யோபாயத்வம் சொல்லப்பட்டது.

அந்த 5வது ச்லோகத்தினால் பகவத் கைங்கர்யம் தவிர வேறு புருஷார்த்தம் தனக்கில்லையென்கிற அனன்ய ப்ரயோஜனத்வம் சொல்லப்பட்டது.

இதற்குமுன் லக்ஷ்மணனைப்பார்த்து "என் பட்டாபிஷேகத்திற்கு வேண்டி சேகரிக்கிருக்கின்ற இந்த பதார்த்தங்களில் நீ கண் வையாமல் மேல் நடக்கவேண்டிய கார்யத்தை கவனித்துவா என்றும்" வேறு இடத்திலும் "ஆகையாலே நீ மனதில் வருத்தமில்லாமல் என்னை அநுஸரித்து பட்டாபிஷேகத்திற்குவேண்டிய கார்

यदर्थं प्रतिषेधो मे क्रियते गन्तुमिच्छतः ।
एतदिच्छामि विज्ञातुं संशयोऽयं ममानघ ॥ 8 ॥
ततोऽब्रवीन्महातेजा रामो लक्ष्मणमग्रतः ।
स्थितं प्राग्गामिनं वीरं याचमानं कृताञ्जलिम् ॥ 9 ॥

8. (பதவுரை) गन्तुं इच्छतः- வனத்திற்குப்போக விரும்புகின்ற, मे- எனக்கு, यदर्थं- எதற்காக, प्रतिषेधः- தடை, क्रियते- செய்யப்படுகின்றதோ, एतत्- இதை, विज्ञातुं- அறிவதற்கு, इच्छामि- விரும்புகின்றேன், हे अनघ- குற்றமில்லாதவரே! मम- எனக்கு, अयं- संशयः- இந்த ஸம்சயம், (உண்டாயிருக்கிறது).

9. (பதவுரை) ततः- பிறகு, महातेजाः- மிகவும் தேஜஸ்ஸை உடைய, रामः- ஸ்ரீராமன், अग्रतः स्थितं- முன்னே நின்று, प्राग् गामिनं- முன்னே புறப்பட முயற்சியுடையவராயும், कृताञ्जलिम्- கைகூப்பிக்கொண்டும், याचमानं- தன்னை ப்ரார்த்தித்துக் கொண்டுமிருக்கிற, लक्ष्मणं- லக்ஷ்மணனைப்பார்த்து, अब्रवीत्- சொன்னார்.

8. (பொ-ரை) வனம புறப்படுவதாக நிச்சயித்துக்கொண்டிருக்கிற என்னை எதற்காக நீர் தடுக்கிறீர். அந்தக்காரணத்தைத்தெரிந்துகொள்ளவிரும்புகிறேன் எனக்கு ஒரு ஸம்சயமுண்டாகிவிட்டது. முன்னமே அநுமதி கொடுத்திருக்க மறுபடி என்னை வேண்டாமென்று சொல்வதால். தெரிந்தோ தெரியாமலோ நான் உடமிடத்தில் அபராதம செய்துவிட்டேனோ வென்று.

9. (பொ-ரை) பிறகு மஹா பராக்ரமசாலியான ஸ்ரீராமன் முன்னே நின்றுகொண்டு தனக்கு முன்னே புறப்படுவதாகத்தீர்மானித்து கைகூப்பிக்கொண்டு வேண்டுகின்ற லக்ஷ்மணனைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

---

யங்களை நிறுத்திவிடு" என்று லக்ஷ்மணனைப்பார்த்து சொன்னபடியாலும், ஸீதையைப்பார்த்து "நான் பதினாலு வருஷம் வனவாஸம செய்கிறேன் அதுவரையில் என் தம்பி மார்களான பரதனையும், சத்ருக்னனையும் கூடப்பிறந்தவன்போலும், புத்திரனைப்போலும்பார்த்துக்கொண்டிரு" என்று தன்னைவிட்டு ஸ்ரீராமன் அருளிச்செய்ததையும் பார்த்து தானும் காட்டுக்கு வரும்படி முன்னமேயே ஸ்ரீராமன் அநுமதி கொடுத்ததாக சொன்னார்.

स्निग्धो धर्मरतो वीरः सततं सत्पथे स्थितः ।
प्रियः प्राणसमो वश्यो भ्राता चासि सखा च मे ॥ 10 ॥
मयाद्य सह सौमित्रे त्वयि गच्छति तद्वनम् ।
को भरिष्यति कौसल्यां सुमित्रां वा यशस्विनीम् ॥ 11 ॥

10. (ப-ரை) स्निग्धः- நீ என்னிடத்தில் ஸ்நேஹமுள்ளவன், धर्मरतः- தர்மத்தில் ஆசையுள்ளவன், वीरः- சூரன், सततं- எப்பொழுதும், सत्पथे- ஸன்மார்க்கத்தில், स्थितः- நிலைநின்றவன், प्रियः- என்னுடைய ப்ரீதிக்கும் இடமானவன், प्राणसमः- எனது ப்ராணனுக்கும் ஸமானமானவன், वश्यः- நான் சொல்லியபடி கேழ்க்கத்தகுந்தவன், भ्राता च- எனக்குப்ராதாவாகவும், मे- எனக்கு, सखा च- தோழனாகவும், असि- இருக்கிறாய்.

11. (ப-ரை) सौमित्रे- லக்ஷ்மண! मया सह- என்னுடன் கூட, अद्य இப்பொழுது; त्वयि- நீ, तत् वनम्- அந்த வனத்தைக் குறித்து, गच्छति सति- வந்துவிடுங்காலத்தில், कौसल्यां- கௌஸல்யாதேவியையும், यशस्विनीम्- கீர்த்தியுள்ளவளான, सुमित्रां वा- ஸுமித்ராதேவியையும், कः- யார், भरिष्यति- காப்பாற்றுவார்.

10. (பொ-ரை) லக்ஷ்மண! நீ என்னிடத்தில் மிகவும் அன்பு வைத்தவனாகவும், தர்மத்தில் ஆசையுள்ளவனாகவும், சூரனாகவும், எப்பொழுதும் ஸன்மார்க்கத்தில் நிலை நின்றவனாகவும் என்னுடைய ப்ராணனுக்கு துல்யமானவனாகவும், எனக்கு எப்பொழுதும் வசப்பட்டவனாகவும் என் உடன்பிறந்தவனாகவும் எனக்குத்தோழனாகவுமிருக்கின்றாய். (ஆகையால்) என்னுடைய கார்யத்தை செய்துகொடுக்க நீயே தகுந்தவன்.

11. (பொ-ரை) லக்ஷ்மண! நீயும் இப்பொழுதே என்னுடன்கூட அந்த வனத்திற்கு வந்துவிட்டால் கௌஸல்யா தேவியையும், மிகவும் கீர்த்திபெற்ற ஸுமித்ராதேவியையும் காப்பாற்றுகிறவர் யார்.

ஆகையால் இதற்காகத்தான் உன்னை கூடவரவேண்டாமென்று சொல்லுகிறேனே தவிர, எனக்கு ஒத்தாசை செய்யக்கூடிய குணமும், ஸாமர்த்யமும் இல்லையென்றும், வேறுவிதமான குற்றம்செய்துவிட்டாயென்றும் உன்னை நான் தடுக்கவில்லை.

अभिवर्षति कामैर्यः पर्जन्यः पृथिवीमिव ।
स कामपाशपर्यस्तो महातेजा महीपतिः ॥ 12 ॥
सा हि राज्यमिदं प्राप्य नृपस्याश्वपतेः सुता ।
दुःखितानां सपत्नीनां न करिष्यति शोभनम् ॥ 13 ॥
न स्मरिष्यति कौसल्यां सुमित्रां च सुदुःखिताम् ।
भरतो राज्यमासाद्य कैकेय्यां पर्यवस्थितः ॥ 14 ॥

---

12. (பதவுரை) पर्जन्यः—முழங்கிக்கொண்டிருக்கிற மேகமானது, पृथिवीं इव- பூமியைப்போல், यः- யாதொருவர், कामैः- இஷ்டமான வஸ்துக்களால், अभिवर्षति- வர்ஷிக்கின்றாரோ, सः- அந்த, महातेजाः- மிக்க தேஜஸ்ஸை உடைய, महीपतिः- மஹாராஜாவும், कामपाशपर्यस्तः- (கைகேயிக்குக்கொடுத்த) வரமென்கிற பாசத்தினால் கட்டுப்பட்டிருக்கிறார்.

13. (ப-ரை) अश्वपतेः— கேகயமஹாராஜாவின், सुता— பெண்ணான, सा हि- அந்த கைகேயியும், नृपस्य- அரசனுடைய, इदं राज्यं- இந்த ராஜ்யத்தை, प्राप्य- அடைந்து, दुःखितानां- துக்கித்துக்கொண்டிருக்கின்ற, सपत्नीनां- கௌஸல்யை முதலான சக்களத்திமார்களுக்கு, शोभनम्- நன்மையை, न करिष्यति- செய்யப்போகிறதில்லை.

14 (ப-ரை) भरतः- பரதனும், राज्यं- ராஜ்யத்தை, आसाद्य- அடைந்து, कैकेय्यां- கைகேயியின் வார்த்தையில், पर्यवस्थितः- நிலையாகநின்றுக்கொண்டு, सुदुःखिताम्-மிகவும் துக்கித்துக்கொண்டிருக்கிற, कौसल्यां- கௌஸல்யையையும், सुमित्रां च- ஸுமித்ரையையும், न स्मरिष्यति- நினைக்கப்போகிறதேயில்லை

---

12. (பொ-ரை) மின்னலுடன் முழங்கிக்கொண்டிருக்கிற மேகம் யதேஷ்டமான மழையைப்பொழிந்து பூமிக்கு த்ருப்தி செய்வதுபோல், கௌஸல்யாதேவிக்கும், ஸுமித்ராதேவிக்கும் வேண்டிய இஷ்டவஸ்துக்களைக்கொடுத்து போஷிக்கக்கூடிய அந்த மஹாராஜாவும் கைகேயிக்குக்கொடுத்த வரம் என்கிற பாசத்தினால் கட்டுப்பட்டிருக்கிறார்.

13. (பொ-ரை) அச்வபதியான கேகயமஹாராஜாவின் புத்ரியான அந்த கைகேயியும், நம்மரசனுடைய ராஜ்யத்தை கைப்பற்றிக்கொண்டு, துக்கித்துக்கொண்டிருக்கும் கௌஸல்யை முதலான சக்களத்திமார்களுக்கு அநுகூலம் செய்யப்போகிறதில்லை.

14. (பொ-ரை) பரதனும், ராஜ்யம் கைவந்த பிறகு கைகேயியின் சொற்படி நின்று, துக்கித்துக்கொண்டிருக்கின்ற கௌஸல்யையையும், ஸுமித்ரையையும் நினைக்கமாட்டான்.

तामार्यां स्वयमेवेह राजानुग्रहणेन वा ।
सौमित्रे भर कौसल्यामुक्तमर्थमिमं चर ॥ 15 ॥
एवं मयि च ते भक्तिर्भविष्यति सुदर्शिता ।
धर्मज्ञ गुरुपूजायां धर्मश्चाप्यतुलो महान् ॥ 16 ॥
एवं कुरुष्व सौमित्रे मत्कृते रघुनन्दन ।
अस्माभिर्विप्रहीणायाः मातुर्नो न भवेत्सुखम् ॥ 17 ॥

---

15. (ப-ரை) सौमित्रे- லக்ஷ்மணா, आर्यां- பூஜிக்கத்தகுந்த, तां- कौसल्यां- அந்த கௌஸல்யாதேவியை, राजानुग्रहणेन वा- ராஜாவின் அநுமதியினாலேயோ, स्वयमेव- நீயாகவேவோ, इह- இங்கிருந்துகொண்டே, भर- போஷித்துவரவேண்டும், उक्तं- சொல்லப்பட்ட, इमं अर्थं- இந்த விஷயத்தை, चर- செய்யவேண்டும்.

16. (ப-ரை) एवं- இப்படி நீ செய்தால், मयि च- என்னிடத்திலும், ते- भक्तिः- உனக்கு இருக்கும், பக்தியானது, सुदर्शिता- நன்றாக காட்டப்பட்டதாக, भविष्यति- ஆகும், हे धर्मज्ञ- தர்மங்களையெல்லாம் தெரிந்தவனே! गुरुपूजायां- மாதாபிதாக்களுடைய பூஜையில், अतुलः- நிகரில்லாத, महान्– பெரிதான, धर्मः च अपि- தர்மமும, (भवेत्- உண்டாகும்.)

17. (ப-ரை) हे रघुनन्दन- ரகு குலத்துப்புத்ரனே, सौमित्रे- லக்ஷ்மணா' मत्कृते– எனக்காக, एवं- இவ்விதம், कुरुष्व- நீ செய்யவேண்டும், अस्माभिः- நம்மால், विप्रहीणायाः- பிரிந்திருக்கின்ற, नः मातुः- நம் தாயாருக்கு, सुखम्- ஸுகமானது, न भवेत्- உண்டாக மாட்டாது.

15. (பொ-ரை) லக்ஷ்மணா! நமக்குத்தாயாரான அந்த கௌஸல்யா தேவியை ராஜாவின் அநுமதியைக்கொண்டோ அல்லது நீயாகவேயோ இங்கேயேயிருந்து ரக்ஷித்துக்கொண்டிரு நான் சொன்ன இவ்விஷயத்தை செய்யவேண்டும், இதற்கு பதில் சொல்லாதே.

16. (பொ-ரை) இவ்விதம நான் சொல்லியபடி நீ செய்துவந்தால் என்னிடத்தில் உனக்கு பூர்ணமாக பக்தியிருக்கிறதென்று நன்றாகக்காட்டப்பட்டதாகவுமாகிறது. தவிர நீ ஸகல தர்மமும் தெரிந்தவனனபடியாலே மாதா முதலான குருக்களை பூஜித்துவந்தால் ஒப்பில்லாத பெரிய தர்மமும் உண்டாகும்என்பதையும் தெரிந்திருக்கிறாய்.

17. (பொ-ரை) ரகு வம்சத்து அரசர்களுக்கு ஆநந்தத்தை விளைவிக்கின்ற லக்ஷ்மணா! எனக்காக இவ்விதம நீ செய்யவேண்டும். நாமில்லாமற்போனால் நம் தாயாருக்கு கொஞ்சமும ஸுகமுண்டாகமாட்டாது.

एवमुक्तस्तु रामेण लक्ष्मणः श्लक्ष्णया गिरा ।
प्रत्युवाच तदा रामं वाक्यज्ञो वाक्यकोविदम् ॥ 18 ॥
तवैव तेजसा वीर भरतः पूजयिष्यति ।
कौसल्यां च सुमित्रां च प्रयतो नात्र संशयः ॥ 19 ॥
[यदि दुष्टो न रक्षेत भरतो राज्यमुत्तमम् ।
प्राप्य दुर्मनसा वीर गर्वेण च विशेषतः ॥ 1 ॥
तमहं दुर्मतिं क्रूरं वधिष्यामि न संशयः ।
तत्पक्ष्यानपि तान्सर्वांस्त्रैलोक्यमपि किं नु मा] ॥ 2 ॥

---

18. (ப-ரை) एव- இவ்விதம், रामेण- ஸ்ரீராமனாலே, उक्तः- சொல்லப்பட்ட, वाक्यज्ञः- வார்த்தை சொல்லத் தெரிந்தவரான, लक्ष्मणः तु- லக்ஷ்மணனும், वाक्यकोविदम्- வார்த்தை சொல்லுவதில் மிகவும் ஸமர்த்தரான, रामम्- ஸ்ரீராமனைப்பார்த்து, श्लक्ष्णया- ம்ருதுவான வார்த்தையால், तदा- அப்பொழுது, प्रत्युवाच- பதில் சொன்னார்.

19. (ப-ரை) हे वीर- சூரனே! तव- உம்முடைய, तेजसा एव- ப்ரபாவத்தினாலேயே, भरतः- பரதனானவன், प्रयतः सन्- ரொம்பவும் ஜாக்ரதையாயிருந்துகொண்டு, कौसल्यां च- கௌஸல்யையையும், सुमित्रां च- ஸுமித்ரையையும், पूजयिष्यति- பூஜிப்பன், अत्र- இவ்விஷயத்தில், सशयः न- ஸந்தேஹமில்லை.

[1-2. (ப-ரை) दुष्टः- துஷ்டனான, भरतः- பரதன், उत्तमम्- राज्यं- உத்தமமான ராஜ்யத்தை, प्राप्य- அடைந்து, दुर्मनसा- கெட்ட எண்ணத்தினாலும், विशेषतः- விசேஷமான, गर्वेण च- கர்வத்தினாலும், न रक्षेत यदि- ரக்ஷிக்காமல் போவனேயானால், हे वीर சூரனே! दुर्मतिं- துர்ப்புத்தியுள்ளவனும், क्रूरं- கொடியவனுமான, तं- அந்த பரதனை,

---

18. (பொ-ரை) வார்த்தை சொல்லுவதில் மிகவும் ஸமர்த்தரான லக்ஷ்மணன், ஸ்ரீராமனுடைய இவ்விதம் ம்ருதுவான வார்த்தையைக்கேட்டு நன்றாய்ப் பேசத்தெரிந்த அந்த ஸ்ரீராமனைப்பார்த்து பதில் சொன்னார்.

19. (பொ-ரை) ஹே வீரா! பரதன் உம்முடைய ப்ரபாவத்தினாலேயே கௌஸல்யாதேவியையும், ஸுமித்ராதேவியையும் மிகவும் ச்ரத்தையுடன் பூஜிப்பான். இதில் ஸந்தேஹமே கிடையாது.

[1-2, (பொ-ரை) ஹேவீரா, பரதன் ராஜ்யத்தை அக்ரமமாகவடைந்து அந்த ஸந்தோஷத்தினாலோ, அல்லது கைகேயியின் மனத்தை அநுஸரித்து கெட்ட எண்ணத்தினாலோ விசேஷமாக நாம மஹாராஜனென்கிற கர்வத்தினாலோ அந்த கௌஸல்யாதேவியை ரக்ஷிக்காமற் போவானேயானால் அந்த துஷ்டனும் கொடியவனுமான அந்த பரதனை நான் கொன்றுவிடுவேன், அவனுக்கு ஒத்தாசைக்காக தேவர்கள் ஒன்றுசேர்ந்து வந்தால் அவர்களையும், மூன்று லோகத்தையும் கொன்றுவிடுவேன், இதில் ஸம்சயமில்லை, அப்படி இருக்க அந்த கைகேயியோ அல்லது

कौसल्या बिभृयादार्या सहस्रमपि मद्विधान् ।
यस्याः सहस्रं ग्रामाणां संप्राप्तमुपजीविनाम् ॥ 20 ॥
तदात्मभरणे चैव मम मातुस्तथैव च ।
पर्याप्ता मद्विधानां च भरणाय यशस्विनी ॥ 21 ॥
कुरुष्व मामनुचरं वैधर्म्यं नेह विद्यते ।
कृतार्थोऽहं भविष्यामि तव चार्थः प्रकल्पते ॥ 22 ॥

वधिष्यामि- கொன்றுவிடுவேன், न संशयः- இதில் ஸம்சயமில்லை, तत्पक्ष्यान् अपि- பாதனைச் சேர்ந்தவர்களான, तान् सर्वान् अपि- அவர்களெல்லோரையும், त्रैलोक्यं अपि- மூன்று லோகத்தையும், वधिष्यामि- கொல்லுவேன், सा- அந்த கைகேயி, किं नु- எவ்வளவு.]

20. (ப-ரை) यस्याः- யாதொரு கௌஸல்யையினுடைய, उपजीविनाम्- அண்டிப் பிழைக்குகிறவர்களுக்கு, ग्रामाणां सहस्रं- ஆயிரக்கணக்கான க்ராமம், संप्राप्तं- கிடைத்திருக்கிறதோ, (सा- அந்த), आर्या- பூஜ்யையாயிருக்கிற कौसल्या- கௌஸல்யாதேவி, मद्विधान्- என்னைப்போன்ற, सहस्रं अपि- ஆயிரம் ஜனத்தையும், बिभृयात्- ரக்ஷிப்பார்.

21. (ப-ரை) तत्- ஆகையால், यशस्विनी- மிகுந்த கீர்த்தியுடையவளான கௌஸல்யை, आत्मभरणे च एव- தன்னைப்போஷித்துக்கொள்ளுவதிலும், तथैव- அப்படியே, मम मातुः च- என் தாயாருடையவும், मद्विधानां च- என்னைப்போன்றவர்களுடையவும், भरणाय- போஷிப்பதற்கு, पर्याप्ता- சக்தியுள்ளவள்.

22. (ப-ரை) मां- என்னை, अनुचरं- ஸேவகனாக, कुरुष्व- செய்துகொள்ளும், इह- இவ்விஷயத்தில், वैधर्म्यं- மாறாட்டமானது, न विद्यते- இல்லை, अहं- நான், कृतार्थः- க்ருதார்த்தனாக, भविष्यामि- ஆவேன், तव च- உமக்கும். अर्थः- காரியமும், प्रकल्पते- கிடைக்கிறது.

---

பாதனே நமக்கு எம்மாத்திரம்.]

20 (பொ-ரை) யாதொரு கௌஸல்யாதேவியை, அண்டிப் பிழைத்துக்கொண்டிருக்கிறவர்களுக்கு ஆயிரம் க்ராமங்கள் விடப்பட்டிருக்கின்றதோ, அப்படிப்பட்ட பூஜ்யையான நம் கௌஸல்யையும், நம்மைப்போன்ற ஆயிரம்பேர் வந்தாலும் போஷிப்பாள்

21. (பொ-ரை) ஆகையால், மிகவும் கீர்த்தியுடைய அந்த கௌஸல்யாதேவி தன்னைப்போஷித்துக்கொள்ளுவதற்கும், என் தாயாரான ஸுமித்ரையையும் என்னைப்போன்ற இன்னும் அநேகம்பேர்களையும் போஷிப்பதற்கும் சக்தியுள்ளவள்.

22. (பொ-ரை) உம்முடைய கைங்கர்யத்திற்காக என்னை நீர் கைக்கொள்ள வேண்டும், நீர் ஸ்வாமியாகையாலும், நான் தாஸனாகையாலும், இதில் யாதொரு வித வித்யாஸமும் இல்லையல்லவா, இப்படிச்செய்தால், சேஷபூதனான எனக்கு சேஷவ்ருத்தி ரூபமான கைங்கர்யமாகிற பலமும் கிடைத்துவிடுகிறது, உமக்கு வனத்தில் ச்ரமமில்லாமல் கந்த மூல பலாதிகளை நான் கொண்டுவந்து கொடுப்பதால் உம்முடைய கார்யமும் ஸுகமாக நடக்கும்.

धनुरादाय सशरं खनित्रपिटकाधरः ।
अग्रतस्ते गमिष्यामि पन्थानमनुदर्शयन् ॥ 23 ॥
आहरिष्यामि ते नित्यं मूलानि च फलानि च ।
वन्यानि यानि चान्यानि स्वाहाराणि तपस्विनाम् ॥ 24 ॥
भवांस्तु सह वैदेह्या गिरिसानुषु रंस्यते ।
अहं सर्वं करिष्यामि जाग्रतः स्वपतश्च ते ॥ 25 ॥

23. (ப-ரை) सशरं- பாணத்துடன் கூடிய धनुः- வில்லை, आदाय- கையிற் பிடித்துக்கொண்டு, खनित्र पिटकाधरः- மண்வெட்டியையும், சிறு கூடையையும், தரித்துக்கொண்டு, पन्थानं- (உமக்கு) வழியை, अनुदर्शयन्- காண்பிப்பதற்காக, ते- अग्रतः- உமக்கு முன்பே, गमिष्यामि- போவேன்.

24. (ப-ரை) नित्यं- எப்பொழுதும், मूलानि- கிழங்குகளையும், फलानि च- பழங்களையும், तपस्विनाम्- ரிஷிகளுக்கு, स्वाहाराणि- நல்ல ஆஹாரங்களான, वन्यानि- வனத்திலுண்டான अन्यानि च- வேறு, यानि- யாதொரு வஸ்துக்களுண்டோ, (அவைகளையும்), ते- உமக்கு आहरिष्यामि- கொண்டுவந்து கொடுப்பேன்.

25. (ப-ரை) भवान् तु- தேவரீர், वैदेह्या सह- ஸீதையுடன், गिरिसानुषु- மலைத்தாழ்வரைகளில், रंस्यते- விளையாடப்போகிறீர், अहं- நான், जाग्रतः- விழித்துக்கொண்டும், स्वपतः च- தூங்கிக்கொண்டுமிருக்கிற, ते- உமக்கு, सर्वं- ஸர்வவித கைங்கர்யத்தையும், करिष्यामि- செய்வேன்.

23 (பொ-ரை) பாணங்களுடன்கூட, வில்லையும் எடுத்துக்கொண்டு, பழம் முதலியவைகளை கொண்டுவருவதற்காக சிறு கூடையையும், கிழங்குகளைத்தோண்டுவதற்காக மண்வெட்டியையும், எடுத்துக்கொண்டு உமக்கு வழிகாட்டிக்கொண்டே உம்முடைய முன்னே போவேன்.

24 (பொ-ரை) கிழங்குகளையும், காய், கனிகளையும், இது தவிர ரிஷிகள் ஸாதமாக புஜிக்கக்கூடிய இன்னும் சில வஸ்துக்களையும் நான் உமக்கு தினந்தோறும் கொண்டுவந்து கொடுப்பேன்.

25. (பொ-ரை) தேவரீர் ஸீதையுடன்கூட, மலைத்தாழ்வரைகளில் இஷ்டப்படி விளையாடிக்கொண்டிரும், தேவரீர் தூங்கும்காலத்திலும், விழித்துக்கொண்டிருக்கும் காலத்திலும், நானும் ஸர்வவித கைங்கர்யத்தையும், தேவரீருக்குச் செய்வேன்.

रामस्त्वनेन वाक्येन सुप्रीतः प्रत्युवाच तम् ।
व्रजापृच्छस्व सौमित्रे सर्वमेव सुहृज्जनम् ॥ 26 ॥
ये च राज्ञो ददौ दिव्ये महात्मा वरुणः स्वयम् ।
जनकस्य महायज्ञे धनुषी रौद्रदर्शने ॥ 27 ॥
अभेद्यकवचे दिव्ये तूणी चाक्षयसायकौ ।
आदित्यविमलौ चोभौ खड्गौ हेमपरिष्कृतौ ॥ 28 ॥
सत्कृत्य निहितं सर्वमेतदाचार्यसद्मनि ।
स त्वमायुधमादाय क्षिप्रमाव्रज लक्ष्मण ॥ 29 ॥

26. (ப-ரை) रामः तु- ஸ்ரீராமனும், अनेन वाक्येन- இந்த வார்த்தையினால், सुप्रीतः सन्- மிகவும் ப்ரீதியுடையவராய்க்கொண்டு, तम्- அந்த லக்ஷ்மணனைக்குறித்து, प्रत्युवाच- பதில் சொன்னார், हे सौमित्रे- லக்ஷ்மணா! व्रज- என்னுடன் கூடவா, सर्वं- ஸமஸ்தமான, सुहृज्जनम् एव- ஸ்நேஹித ஜனத்தை, आपृच्छस्व- கேட்டுக்கொண்டுவா.

27-28-29. (ப-ரை) महायज्ञे- மஹாயஜ்ஞத்தில், महात्मा- மஹாத்மாவான, वरुणः- வருணன், स्वयम्- தானாகவே, जनकस्य राज्ञः- ஜனக மஹாராஜாவுக்கு, रौद्रदर्शने- பயங்கரமான காக்ஷியையுடைய, दिव्ये- தெய்வதன்மை பொருந்திய, ये च धनुषी- எந்த வில்லுகளை, ददौ- கொடுத்தாரோ, அவைகளென்ன दिव्ये- திவ்யமான अभेद्यकवचे- பிளக்கமுடியாத கவசங்களென்ன, अक्षयसायकौ- எடுக்கஎடுக்கக் குறையாத பாணங்களையுடைய, तूणी च- அம்பராத்தூணிகளென்ன, आदित्यविमलौ- ஸூர்யன் போல், ப்ரகாசித்தும், हेमपरिष्कृतौ- ஸ்வர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்டுமிருக்கிற, उभौ खड्गौ च- இரண்டு கத்திகளென்ன, एतत् सर्वं- இது முழுவதும், आचार्यसद्मनि- ஆசார்யருடைய க்ருஹத்தில், सत्कृत्य- பூஜைசெய்து, निहितं- வைக்கப்பட்டிருக்கிறது.

---

26. (பொ-ரை) ஸ்ரீராமன் இவ்விதம் லக்ஷ்மணனுடைய வார்த்தையைக் கேட்டு, பரம ஸந்தோஷத்துடன் லக்ஷ்மணனைப்பார்த்து "அப்பா லக்ஷ்மணா அப்படியே செய், என்னுடன்கூட புறப்படு, நம்முடைய ஸ்நேஹிதர்கள் எல்லாரிடத்திலுமே சொல்லிவிட்டு அநுமதிபெற்றுக்கொண்டுவா

27-28-29. (பொ-ரை) லக்ஷ்மணா, மஹா யஜ்ஞத்தில், ஜனக மஹாராஜாவுக்கு மஹாத்மாவான வருணன் பார்ப்பதற்கு பயங்கரமான இரண்டு வில்லுகளை தானே கொடுத்திருக்கிறார், அவைகளும், உடைக்கமுடியாததான ச்லாக்யமான இரண்டு கவசங்களும் எடுக்கஎடுக்க பாணம் குறையாததான இரண்டு அம்பராத் தூணிகளும், ஸூர்யன்போல் ப்ரகாசித்தும், தங்கப்பிடிகள்போட்டு அழகாயுமிருக்கின்ற இரண்டு கத்திகளும், நம் ஆசார்யரான வஸிஷ்டருடைய க்ருஹத்தில் பூஜைக்காக வைக்கப்பட்டிருக்கிறதுகள், இவைகள் எல்லாவற்றையுமெடுத்துக்கொண்டு

स सुहृज्जनमामन्त्र्य वनवासाय निश्चितः ।
इक्ष्वाकुगुरुमागम्य जग्राहायुधमुत्तमम् ॥ 30 ॥
तद्दिव्यं राजशार्दूलसत्कृतं माल्य भूषितम् ।
रामाय दर्शयामास सौमित्रिः सर्वमायुधम् ॥ 31 ॥
तमुवाचात्मवान्रामः प्रीत्या लक्ष्मणमागतम् ।
काले त्वमागतः सौम्य काङ्क्षिते मम लक्ष्मण ॥ 32 ॥

हे लक्ष्मण- லக்ஷ்மணனே! सः त्व- அப்படிப்பட்ட நீ, आयुध– இந்த ஆயுதத்தை, आदाय- எடுத்துக்கொண்டு, क्षिप्र- சீக்ரமாக, आव्रज- என்னுடன்வா.

30. (ப-ரை) वनवासाय வனவாஸத்தின் பொருட்டு, निश्चितः- நிச்சயம் செய்யப்பட்ட, स.- அந்த லக்ஷ்மணன், सुहृज्जन- ஸ்நேஹித ஜனத்தை, आमन्त्र्य- கேட்டுக் கொண்டு, इक्ष्वाकुगुरु- இக்ஷ்வாகு வம்சத்திற்கு, குலகுருவான வஸிஷ்டரை, आगम्य- அடைந்து, उत्तम- ச்ரேஷ்டமான, आयुधं- முன்சொல்லிய ஆயுதத்தை, जग्राह- எடுத்துக் கொண்டார்.

31. (ப-ரை) दिव्यं- ச்ரேஷ்டமாயும், राजशार्दूलसत्कृतं- ராஜச்ரேஷ்டர்களால் வெகுமதிக்கப்பட்டும், माल्यभूषितम्- மாலைகளால் அலங்கரிக்கப்பட்டதுமான, तत् सर्वं आयुधं- அந்த ஆயுதம் முழுவதையும், सौमित्रिः- லக்ஷ்மணன், रामाय- ஸ்ரீராமன் பொருட்டு, दर्शयामास- காண்பித்தார்.

32. (ப-ரை) आत्मवान्- மிக்கதீரனான, रामः- ஸ்ரீராமன், आगतम्- வந்திருக்கின்ற, तम्-लक्ष्मण- லக்ஷ்மணனைப்பார்த்து, हे सौम्य लक्ष्मण- அப்பா லக்ஷ்மணா! काङ्क्षिते- விரும்பப்பட்ட काले- காலத்திலே, त्वं- நீ, आगतः- வந்துவிட்டாய், (इति- என்று), प्रीत्या- அன்புடன், उवाच- சொன்னார்.

---

ஸ்நேஹிதர்களிடத்திலும் அநுமதிபெற்றுக்கொண்டு, நீ என்னுடன் சீக்ரமாகப் புறப்படு

30 (பொ-ரை) வனவாஸம் செய்வதாக நிச்சயித்த அந்த லக்ஷ்மணனும், தம் ஸ்நேஹிதர்களிடத்தில், "நானும் வனம் போய்வருகிறேன்" என்று சொல்லிக் கொண்டு, இக்ஷ்வாகு குலகுருவான வஸிஷ்டருடைய க்ருஹம்வந்து முன்சொல்லிய ஆயுதங்களை வாங்கிக்கொண்டார்.

31. (பொ-ரை) ராஜாக்களால் வெகுமதிக்கப்பட்டும் மாலைகளால் அலங்கரிக்கப்பட்டும், திவ்யமான அந்த ஆயுதங்கள் முழுவதையும் லக்ஷ்மணன் எடுத்துக்கொண்டுவந்து ஸ்ரீராமனுக்குக்காண்பித்தார்.

32. (பொ-ரை) மிகவும் தைர்யமுள்ள ஸ்ரீராமன் வந்திருக்கிற லக்ஷ்மணனைப்பார்த்து அப்பா லக்ஷ்மணா! நீ நல்ல ஸமயத்தில் வந்து சேர்ந்தாய்" என்று மிகப்ரீதியுடன் சொன்னார்.

अहं प्रदातुमिच्छामि यदिदं मामकं धनम् ।
ब्राह्मणेभ्यस्तपस्विभ्यस्त्वया सह परन्तप ॥ 33 ॥
वसन्तीह दृढं भक्त्या गुरुषु द्विजसत्तमाः ।
तेषामपि च मे भूयः सर्वेषां चोपजीविनाम् ॥ 34 ॥
वसिष्ठपुत्रं तु सुयज्ञमार्यं त्वमानयाशु प्रवरं द्विजानाम् ।
अभिप्रयास्यामि वनं समस्तानभ्यर्च्य शिष्टानपरान्द्विजातीन् ॥ 35 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
एकत्रिंशः सर्गः ॥ 31 ॥

---

33. (ப-ரை) हे परन्तप- சத்ருக்களை வெல்லக்கூடியவனே, यत्- யாதொரு, मामकं- என்னுடையதான. इद धनम्- இந்த தனமானது, अस्ति- இருக்கின்றதோ, तत्- அதை, ब्राह्मणेभ्यः- ப்ராம்மணர்களின் பொருட்டும், तपस्विभ्यः- ரிஷிகளின் பொருட்டும, त्वया सह- உன்னுடன் கூடவே, अहं- நான், प्रदातुं- தானம் செய்வதற்கு, इच्छामि- விரும்புகிறேன்.

34. (ப-ரை) इह- இந்த நகரத்தில், गुरुषु- குருக்களிடத்தில், दृढं- த்ருடமாக, भक्त्या- பக்தியோடு, (ये- யாதொரு), द्विजसत्तमाः- ப்ராம்மணோத்தமர்கள், वसन्ति- வஸிக்கிறார்களோ, तेषां अपि च-அவர்களுக்கும், मे- என்னுடைய, उपजीविनाम्- அடுத்துப் பிழைக்கின்றவர்களுமான, सर्वेषां च- எல்லோர்களுக்கும், भूयः- அதிகமாக, (प्रदातुं इच्छामि- கொடுக்கவிரும்புகிறேன்.)

35. (ப-ரை) द्विजानाम्- प्रवरं- ப்ராம்மணர்களுக்குள் சிறந்தவராயும், आर्यं- எல்லாம் தெரிந்தவருமான, वसिष्ठपुत्रं- வஸிஷ்ட புத்ரரான, सुयज्ञं तु- ஸுயஜ்ஞரையும, अपरान्- மற்றவர்களான, शिष्टान्- யோக்யர்களான, द्विजातीन्- ப்ராம்மணர்களையும், त्वं- நீ, आशु- சீக்ரமாக, आनय- அழைத்துக்கொண்டுவா, समस्तान्- அவர்களெல்லாரையும், अभ्यर्च्य- பூஜித்துவிட்டு, वन- வனத்தைக்குறித்து, अभिप्रयास्यामि- புறப்படப் போகிறேன்.

---

33. (பொ-ரை) சத்ருக்களைவெல்லும ஸாமர்த்யமுடையவனே! என்னுடைய ஸொந்தமான தனம் முழுவதையும, ப்ராம்மணர்களுக்கும் ரிஷிகளுக்கும் உன்னுடன்கூடவே தானம் பண்ண விரும்புகிறேன்.

34 (பொ-ரை) இந்த நகரத்தில் யாதொருப்ராம்மணோத்தமர்கள் குருக்களிடத்தில் த்ருடமான பக்தியுடன் சிச்ருஷை செய்துகொண்டிருக்கிறார்களோ அவர்களையும், நம்மை அண்டிப்பிழைக்கின்ற எல்லோரையும், அழைத்துவா அவர்களுக்கும வழக்கப்படி ப்ரதிதினம செய்யும் தானத்தை விட அதிகமாகச்செய்யவேணுமென்று நினைக்கிறேன்.

35. (பொ-ரை) எல்லாம் தெரிந்தவராயும், ப்ராம்மணோத்தமருமான வஸிஷ்டபுத்ரரான ஸுயஜ்ஞரையும், சிஷ்டர்களான மற்ற ப்ராம்மணர்களையும், சீக்ரமாக நீ அழைத்துக்கொண்டுவா. அவர்களெல்லோரையும் பூஜித்து விட்டு வனத்திற்கு ப் புறப்பட உத்தேசித்திருக்கிறேன்.

द्वात्रिंशः सर्गः ॥ 32 ॥

ततः शासनमाज्ञाय भ्रातुः शुभतरं प्रियम् ।
गत्वा स प्रविवेशाशु सुयज्ञस्य निवेशनम् ॥ 1 ॥
तं विप्रमग्न्यगारस्थं वन्दित्वा लक्ष्मणोऽब्रवीत् ।
सखेऽभ्यागच्छ पश्य त्वं वेश्म दुष्करकारिणः ॥ 2 ॥
ततः संध्यामुपास्याशु गत्वा सौमित्रिणा सह ।
जुष्टं तत्प्राविशल्लक्ष्म्या रम्यं रामनिवेशनम् ॥ 3 ॥

---

1. (ப-ரை) ततः- பிறகு, सः-, அந்த லக்ஷ்மணன், भ्रातुः- ப்ராதாவான ஸ்ரீராம னுடைய, शुभतर- மிகவும் க்ஷேமகரமாயும், प्रियम्- தனக்கு மிகவும் பிரியமுமான, शासनं- கட்டளையை, आज्ञाय- அங்கீகரித்து, आशु- சீக்ரமாக, गत्वा- போய், सुयज्ञस्य- ஸுயஜ்ஞருடைய, निवेशनम्- கிருஹத்தை, प्रविवेश- பிரவேசித்தார்.

2. (ப-ரை) लक्ष्मणः- இலக்குமணன், अग्न्यगारस्थं- அக்னிஹோத்திர சாலையி லிருக்கின்ற, तं विप्रं- அந்த அந்தணரை, वन्दित्वा- நமஸ்கரித்து, हे सखे- வாரீர் தோழனே! दुष्करकारिणः- ஒருவராலும் செய்ய முடியாத கார்யத்தைச் செய்கின்ற, (ஸ்ரீராமனுடைய) वेश्म- அரண்மனையைக்குறித்து, त्वं- நீர், अभ्यागच्छ- வாரும், पश्य- (அவர் செய்யும் காரியத்தையும்) பாரும் (इति- என்று), अब्रवीत्- சொன்னார்.

3. (ப-ரை) ततः- பிறகு, (அந்த ஸுயஜ்ஞர்) आशु- சீக்கிரமாக, संध्यां- மாத்கியான்னிகத்தை, उपास्य- அநுஷ்டித்துவிட்டு, सौमित्रिणा सह- இலக்குமணனுடன்கூட, गत्वा- புறப்பட்டுப்போய், लक्ष्म्या- ஐச்வரியத்தினால், जुष्ट- நிறைந்த, रम्य- அழகான, तत् रामनिवेशनम्- அந்த ஸ்ரீராமன் அரண்மனையை, प्राविशत्- பிரவேசித்தார்.

---

1. (பொ-ரை) பிறகு இலக்குமணன் மிகவும் க்ஷேமகரமாயும், பிரியமுமான ப்ராதாவினுடைய உத்திரவை அங்கீகரித்து சீக்கிரமாகப்புறப்பட்டு ஸுயஜ்ஞரு டைய கிருஹத்தில் பிரவேசித்தார்.

2. (பொ-ரை) இலக்குமணன், அக்னிஹோத்திரசாலையில் இருக்கிற அந்த ஸுயஜ்ஞரென்கிற ப்ராம்மணோத்தமரை நமஸ்கரித்து அவரைப்பார்த்து "வாரீர் தோ ழனே! ஒருவராலும் செய்ய முடியாத கார்யத்தைச்செய்யத்துணிந்திருக்கிற ஸ்ரீரா மனுடைய அரண்மனைக்குவந்து அவருடைய கார்யததைப்பாரும்' என்று சொன்னார்.

3. (பொ-ரை) பிறகு அந்த ஸுயஜ்ஞரும் மாத்கியான்னிகம் செய்துவிட்டு இலக்குமணனுடன் சீக்கிரமாகப்புறப்பட்டு ஸர்வ ஸம்பத்துக்களும் நிறைந்து அழ கான ஸ்ரீராமன் திருமாளிகையில் நுழைந்தார்.

---

शुभतरं பிராம்மணர்களுக்கு உபகாரமாகையால் க்ஷேமகரமாயும். प्रियम् தானும் வனத்திற்கு கூடவருவதை ஒப்புக்கொண்டபடியால் பிரியமாயுமிருக்கிறது, என்றபடி.

இங்கு संध्यां- என்பது மாத்கியான்னிக ஸந்தியையாவது ஸந்தியாகாலத்தில் செய்ய வேண்டிய அக்னிஹோத்திரத்தையாவது சொல்லும்.

तमागतं वेदविदं प्राञ्जलिस्सीतया सह ।
सुयज्ञमभिचक्राम राघवोऽग्निमिवार्चितम् ॥ 4 ॥
जातरूपमयैर्मुख्यैरङ्गदैः कुण्डलैः शुभैः ।
सहेमसूत्रैर्मणिभिः केयूरैर्वलयैरपि ॥ 5 ॥
अन्यैश्च रत्नैर्बहुभिः काकुत्स्थः प्रत्यपूजयत् ।
सुयज्ञं स तदोवाच रामः सीताप्रचोदितः ॥ 6 ॥

---

4. (ப-ரை) राघवः- ஸ்ரீராமன், वेदविदं- வேதங்களை அறிந்தவராயும், अर्चितम्- பூஜிக்கப்பட்ட, (ஹோமம் செய்யப்பட்ட) अग्निं इव- அக்னியைப்போன்றவராயும், आगतं- (தம் திருமாளிகைக்கு) வந்திருக்கிற, तं सुयज्ञं- அந்த ஸுயஜ்ஞரை, सीतया सह- ஸீதையுடன்கூட, प्राञ्जलिः सन्- கைக்கூப்பிக்கொண்டு, अभिचक्राम- எதிர்நோக்கிச் சென்றார்.

5-6. (ப-ரை) सः काकुत्स्थः- அந்த ககுத்ஸ்த குலத்தில் பிறந்தவரான ஸ்ரீராமன், जातरूपमयैः- ஸுவர்ணமயங்களுமாய். मुख्यैः- பிரதானங்களுமான, अङ्गदैः- அங்கதங்களினாலும், (நாகமுரிகளாலும்), शुभैः- அழகாயிருக்கிற, कुण्डलैः- காதில் அணிந்துகொள்ளும் குண்டலங்களினாலும், सहेमसूत्रैः- தங்கக்கொடியோடு கூடியிருக்கிற, मणिभिः- பத்மராகம் முதலான ரத்தினங்களாலும், केयूरैः- புஜங்களில் அணிந்து கொள்ளக்கூடிய ஒரு விதமான ஆபரணங்களாலும், वलयैः अपि- வளைகளாலும், अन्यैः- மற்றவைகளான, बहुभिः रत्नैः च- அநேகங்களான உயர்ந்த ஆபரணங்களினாலும், सुयज्ञ- ஸுயஜ்ஞரை, प्रत्यपूजयत्- பூஜித்தார், तदा- அப்பொழுது, रामः- ஸ்ரீராமன் सीताप्रचोदितः- ஸீதையினால் ஏவப்பட்டவராய்க்கொண்டு, उवाच- ஒரு வார்த்தையும் சொன்னார்.

---

4. (பொ-ரை) வேதங்களையறிந்தவரும், ஹோமம் செய்யப்பட்ட அக்னி போல் ஜ்வலித்துக்கொண்டும் தம் திருமாளிகையில் வந்துமிருக்கிற அந்த ஸுயஜ்ஞரைப்பார்த்து ஸ்ரீராமன் ஸீதையுடன்கூட கைகூப்பிக்கொண்டு எதிர்கொண்டு அழைத்தார்

5-6. (பொ-ரை) ககுத்ஸ்த குலத்தில் பிறந்த ஸ்ரீராமனும் ஸுவர்ணமயமாயும், மிகவும் உயர்ந்தவைகளுமான, தோளில் அணிந்துகொள்ளும் அங்கதம் என்கிற ஆபரணங்களாலும், அழகான குண்டலங்களாலும் ஸுவர்ணக்கொடியில் கோர்த்த பத்மராகம் வைடூர்யம் முதலான மணிகளாலும், தோளில் அணிந்துகொள்ளக்கூடிய பாம்புப்படம்போல் இருக்கிற கேயூரமென்கிற ஆபரணங்களினாலும், வளைகளாலும், இவைகள் தவிர இன்னும் அநேக ஆபரணங்களினாலும் அந்த ஸுயஜ்ஞரை பூஜித்தார். பிறகு ஸீதையின் வார்த்தையினால் அவரைப்பார்த்து ஒரு வார்த்தையும் சொன்னார்.

हारं च हेमसूत्रं च भार्यायै सौम्य हारय ।
रशनां चाधुना सीता दातुमिच्छति ते सखे ॥ 7 ॥
अङ्गदानि विचित्राणि केयूराणि शुभानि च ।
प्रयच्छति सखे तुभ्यं भार्यायै गच्छती वनम् ॥ 8 ॥
पर्यङ्कमग्र्यास्तरणं नानारत्नविभूषितम् ।
तमपीच्छति वैदेही प्रतिष्ठापयितुं त्वयि ॥ 9 ॥

7. (ப-ரை) हे सौम्य- ஸௌமுகரான, सखे- தோழனே! हारं च- முக்தாஹாரத்தையும், हेमसूत्र च- ஸௌவர்ணமயமான (கழுத்தில் அணிந்துகொள்ளும்) கொடியையும், रशनां च- ஒட்டியாணத்தையும், ते भार्याय- உம்முடைய பத்தினியின்பொருட்டு, सीता- ஸீதையானவள், अधुना- இப்பொழுது, दातु इच्छति- கொடுக்க விரும்புகிறாள், (तानि- அவைகளை) हारय- அவளிடத்தில்கொண்டுபோய்க்கொடும்.

8. (ப-ரை) हे सखे- வாரீர் தோழனே! विचित्राणि- விசித்ரங்களான, अङ्गदानि- அங்கதமெனகிற ஆபரணங்களையும், शुभानि- அழகான, केयूराणि च- கேயூரமென்கிற ஆபரணங்களையும, वनम् गच्छती- வனத்தைக்குறித்து புறப்படப்போகின்ற, (ஸீதையானவள்), भार्यायै- உமமுடைய பத்னிககாக, तुभ्य- உமக்கு, प्रयच्छति- கொடுக்கிறாள்.

9. (ப-ரை) वैदेही- ஸீதையானவள், अग्र्यास्तरणं- சிரேஷ்டமான மேல் விரிப்பை யுடையதாயும், नानारत्नविभूषितम्- நாநாவித ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டது மான. त पर्यंक अपि- அந்தக்கட்டிலேயும, त्वयि- உம்மிடத்தில், प्रतिष्ठापयितुं- வைப்பதற்கு, इच्छति- விரும்புகிறாள்.

7. (பொ-ரை) ஹே ஸௌமுகனான தோழனே! முக்தாஹாரத்தையும் ஸௌவர்ணத்தினால் செய்த கண்டஸூத்ரம், ஒட்டியாணம இவைகளையும் உமமுடைய பத்னிக்குக்கொடுக்கவேண்டுமென்று ஸீதை இப்பொழுது ஆசைப்படுகிறாள். அவைகளையும் நீர் பெற்றுககொள்ளவேணும.

8. (பொ-ரை) வாரீர்! தோழனே! ஸீதை இப்பொழுது வனம்செல்லப்போகிறபடியால் அவள் அணிந்துகொண்டிருககிற விசித்திரமான அங்கதமென்னும் ஆபரணங்களையும் அழகான கேயூரமென்னும ஆபரணங்களையும் உம்முடைய பத்தினி அணிந்துகொள்ளுவதற்காக உமமிடம் கொடுக்கிறாள்.

9. (பொ-ரை) விதேஹராஜபுத்திரியான ஸீதையானவள், நாநாவிதங்களான ரத்தினங்கள் இழைத்து, சிரேஷ்டமான மேல்விரிப்போடுகூடின தன்னுடையகட்டிலேயும் உமக்கு தானம்செய்ய ஆசைப்படுகிறாள்.

नागः शत्रुंजयो नाम मातुलो यं ददौ मम ।
तं ते *गजसहस्रेण ददामि द्विजपुंगव ॥ 10 ॥
इत्युक्तः स हि रामेण सुयज्ञः प्रतिगृह्य तत् ।
रामलक्ष्मणसीतानां प्रयुयोजाशिषः शुभाः ॥ 11 ॥
अथ भ्रातरमव्यग्रं प्रियं रामः प्रियंवदः ।
सौमित्रिं तमुवाचेदं ब्रह्मेव त्रिदशेश्वरम् ॥ 12 ॥

10. (ப-ரை) हे द्विजपुंगव- பிராமணோத்தமரே! मातुलः- மாமன், मम- எனக்கு, यं- யாதொரு யானையை, ददौ- கொடுத்தாரோ, शत्रुञ्जयः नाम- சத்ருருஞ்ஜயமென்று பிரஸித்தமான, (सः-) नागः- அந்த யானை (இருக்கிறது), तं- அந்த யானையை, गजसहस्रेण- ஆயிரம் யானைகளோடுகூட, ते- உமக்கு, ददामि- தானம் செய்கிறேன்.

11. (ப-ரை) इति- என்று, रामेण- ஸ்ரீராமனால், उक्तः- சொல்லப்பட்ட, सः सुयज्ञः हि- அந்த ஸுயஜ்ஞரும், तत्- அதை, प्रतिगृह्य- பெற்றுக்கொண்டு, रामलक्ष्मणसीतानां- இராமன் இலக்ஷுமணன் சீதை இவர்களுக்கு, शुभाः- மங்களகரங்களான, आशिषः- ஆசீர்வாதங்களை, प्रयुयोज- செய்தார்.

12. (ப-ரை) अथ- பிறகு, प्रियंवदः- இனிதாக வார்த்தை சொல்லுகின்றவரான, रामः- ஸ்ரீராமன், प्रियं- தனக்குப்பிரியமான, भ्रातरं- ப்ராதாவாயும், अव्यग्रं- பரபரப்பில்லாதவருமான, तं सौमित्रिं- அந்த இலக்ஷுமணனைப்பார்த்து, ब्रह्मा- சதுர்முகனானவன், त्रिदशेश्वरम् इव- தேவராஜனான இந்திரனைப்பார்த்துச் சொல்லுவதுபோல், इदं- இந்த வார்த்தையை, उवाच- சொன்னார்.

10. (பொ-ரை) பிராம்மணோத்தமரே! என் மாமன் சத்ருருஞ்ஜயன் என்று பிரசித்தமான ஒரு யானையை எனக்குக்கொடுத்திருந்தாரல்லவா அதையும் ஆயிரம் யானைகளோடுகூட உமக்கு தானம் செய்கிறேன்.

11. (பொ-ரை) ஸ்ரீராமனால் இவ்விதம் பிரார்த்திக்கப்பட்ட அந்த ஸுயஜ்ஞர், அவைகளைப்பெற்றுக்கொண்டு இராமன் இலக்ஷுமணன் ஸீதை இவர்களுக்கு மங்களாசீர்வாதம் செய்தார்.

12. (பொ-ரை) பிறகு எல்லோரிடத்திலும் இனிதாக வார்த்தை சொல்லும் தன்மையுள்ளவரான ஸ்ரீராமன், பரபரப்பில்லாதவராயும் ப்ரியமான ப்ராதாவுமான அந்த இலக்ஷுமணனைப்பார்த்து, ப்ரம்மா இந்திரனைப்பார்த்து சொல்லுவதுபோல் ஒருவார்த்தை சொன்னார்.

---

*निष्क सहस्रेण- என்று பாடாந்திரம். निष्क सहस्रेण- ஆயிரம் மோஹராக்களுடன்

अगस्त्यं कौशिकं चैव तावुभौ ब्राह्मणोत्तमौ ।
अर्चयाहूय सौमित्रे रत्नैः सस्यमिवाम्बुभिः ॥ 13 ॥
तर्पयस्व महाबाहो गोसहस्रैश्च मानद ।
सुवर्णै रजतैश्चैव मणिभिश्च महाधनैः ॥ 14 ॥
कौसल्यां च य आशीर्भिर्भक्तः पर्युपतिष्ठति ।
आचार्यस्तैत्तिरीयाणामभिरूपश्च वेदवित् ॥ 15 ॥
तस्य यानं च दासीश्च सौमित्रे सम्प्रदापय ।
कौशेयानि च वस्त्राणि यावत्तुष्यति स द्विजः ॥ 16 ॥

---

13. (ப-ரை) हे सौमित्रे- இலக்குமணனே! अगस्त्यं- அகஸ்த்திய புத்திரனென்ன, कौशिकं च एव- விச்வாமித்திரரின் புத்திரனென்ன, तौ उभौ ब्राह्मणोत्तमौ- இந்த இரண்டு ப்ராம்மணோத்தமர்களையும், आहूय- அழைத்து, अम्बुभिः- ஜலங்களினால், सस्यं इव- பயிரைப்போல, रत्नैः- சிரேஷ்டமான வஸ்துக்களால், अर्चय- பூஜைசெய்.

14. (ப-ரை) हे महाबाहो- பெரிய தோள்வலி உள்ளவனே! मानद- பஹுமானத்தைக் கொடுக்கின்றவனே, गोसहस्रैः च- ஆயிரம் பசுக்களாலும், सुवर्णैः- தங்க நாணயங்களாலும், रजतैः च एव- வெள்ளி நாணயங்களாலும், महाधनैः- அதிக விலையுள்ள, मणिभिः च- ரத்தினங்களாலும, तर्पयस्व- சந்தோஷப்படுத்து.

15-16. (ப-ரை) हे सौमित्रे- அப்பா இலக்குமணா! तैत्तिरीयाणां- தைத்ரீயமென்கிற வேதபாகத்தை ஓதுகின்றவர்களுக்கு, आचार्यः- உபாத்தியாயராயும் अभिरूपः च- பண்டிதராயும், वेदवित्- வேதங்களை அறிந்தவருமான, यः- யாதொரு ப்ராம்மணோத்தமர், भक्तः- பக்தியுள்ளவராய், आशीर्भिः- ஆசீர்வாதங்களினால், कौसल्यां- கௌஸல்யா தேவியை, पर्युपतिष्ठति- அடுத்துக்கொண்டிருக்கிறாரோ, सः द्विजः- அந்த

---

13. (பொ-ரை) இலக்குமணா! ப்ராம்மணோத்தமர்களான அகஸ்த்தியர் குமாரனையும விச்வாமித்திரர் குமாரனையும அழைத்து, ஜலங்களினால் பயிரை சந்தோஷப்படுத்துவதுபோல் சிரேஷ்டமான வஸ்துக்களினால் அவர்களை பூஜித்து சந்தோஷப்படுத்து.

14. (பொ-ரை) எல்லோருக்கும் பெருமையைச் செய்கிறவனே! மஹாபராக்கிரமம் உடையவனே! ஆயிரம்பசுக்களையும் சுவர்ணநாணயங்களையுமவெள்ளிநாணயங்களையும் மிகவும் விலையுயர்ந்த ரத்தினங்களையும கொடுத்து அவ்விருவர்களுக்கும் த்ருப்திசெய்விக்கவேணும்.

15-16. (பொ-ரை) ஹே இலக்குமணா! பண்டிதராயும், வேதங்களெல்லாம் உணர்ந்தவராயும, தைத்திரீய சாகை ஓதுகின்றவர்களுக்கு உபாத்தியாயருமான ஒரு ப்ராமமணன், நம் தாயாரான கௌஸல்யையை ப்ரதிதினம் ஆசீர்வாதம் செய்

सूतश्चित्ररथश्चार्यः सचिवः सुचिरोषितः ।
तोषयैनं महार्हैश्च रत्नैर्वस्त्रैर्धनैस्तथा ॥
पशुकाभिश्च सर्वाभिर्गवां दशशतेन च ॥ 17 ॥
ये चेमे कठकालापा बहवो दण्डमाणवाः ।
नित्यस्वाध्यायशीलत्वान्नान्यत्कुर्वन्ति किंचन ॥ 18 ॥
अलसाः स्वादुकामाश्च महतां चापि संमताः ।
तेषामशीतियानानि रत्नपूर्णानि दापय ॥ 19 ॥

ப்பிராம்மணன், यावत्- எவ்வளவு வரையில், तुष्यति- ஸந்தோஷப்படுவாரோ, तावत्- அவ்வளவு வரையில், तस्य- அவருக்கு, यानं च- வாஹனத்தையும், दासीः च- வேலைக்காரிகளையும், कौशेयानि- பூச்சிப்பட்டினால் செய்த, वस्त्राणि च- வஸ்திரங்களையும், संप्रदापय- கொடுக்கும்படி செய்.

17. आर्यः- பூஜ்யராயும், सूतः- ஸாரதியாயும், सचिवः- மந்திரியாயுமிருக்கிற, चित्ररथः- சித்திர ரதனென்பவர், सुचिरोषितः- வெகுகாலமாக நம் கிருஹத்தில் வசித்துக் கொண்டிருப்பவர், एनं- இவரை, महार्हैः- மிகவும் விலையுயர்ந்ததான, रत्नैः च- ரத்தினங்களாலும், तथा- அப்படிப்பட்டவைகளான, वस्त्रैः- வஸ்திரங்களாலும், धनैः- தனங்களாலும், सर्वाभिः- ஸமஸ்தங்களான, पशुकाभिः च- ஆடுமுதலான சிறு பசுக்களாலும், गवां- மாடுகளுடைய, दशशतेन च- ஆயிரத்தினாலும், तोषय- சந்தோஷப்படுத்து.

18-19. (ப-ரை) कठ कालापाः- கடசாகையையும், கலாப சாகையையும ஓதுகின்றவர்களும், बहवः- அநேகங்களான, ये- யாதொரு, इमे- இந்த, दण्डमाणवाः- பலாசதண்டம் பிடித்த ப்ரம்மசாரிகள், (இருக்கிறார்களோ), (ते- அவர்கள்), नित्यस्वाध्यायशीलत्वात्- எப்போதும் வேதம் ஓதுவதே தொழிலாகையால், अन्यत् किंचन- வேறொரு கார்யத்தையும்,

---

துகொண்டு மிகவும் விச்வாசத்துடன் அடுத்துக்கொண்டிருக்கிறாரல்லவா! அந்த ப்ராம்மணருக்கு திருப்திவருமவரையில் வாஹனங்களையும், வேலைக்காரிகளையும், பட்டுவஸ்திரங்களையும் கொடுக்கும்படிசெய்.

17 (பொ-ரை) ஸாமந்திரருக்கு சமானமாயும், ஸாரதிரும், மந்திரியுமான, சித்திரரதர் என்கிற ஒருதெரிந்தவர் வெகுகாலமாக நம் அரண்மனையில் வசித்துக் கொண்டிருக்கிறார், அவருக்கு விலையுயர்ந்த ரத்தினங்களையும, வஸ்திரங்களையும், ஆடு முதலான எல்லா பசுக்களையும் ஆயிரக்கணக்கான மாடுகளையும் கொடுத்து சந்தோஷப்படுத்து.

18-19. (பொ-ரை) கட சாகையையும், கலாப சாகையையும் ஓதிக்கொண்டு பலாச தண்டம்பிடித்த பிரம்மசாரிகள் வேதம் ஓதுவதே தொழிலாகையால் வேறொரு கார்யத்தையும் செய்யாதவர்கள். அதுவுமல்லாமல் சோம்பேரிகளாகவு மிருக்கிறார்கள். ஆகிலும் ருசியுள்ள பதார்த்தங்களை சாப்பிடவேணுமென்று ஆசை

शालिवाहसहस्रं च द्वे शते भद्रकांस्तथा ।
व्यञ्जनार्थं च सौमित्रे गोसहस्रमुपाकुरु ॥ 20 ॥
मेखलीनां महासङ्घः कौसल्यां समुपस्थितः ।
तेषां सहस्रं सौमित्रे प्रत्येकं सम्प्रदापय ॥ 21 ॥
अम्बा यथा च सा नन्देत्कौसल्या मम दक्षिणाम् ।
तथा द्विजातींस्तान्सर्वांल्लँक्ष्मणार्चय सर्वशः ॥ 22 ॥

---

न कुर्वन्ति- செய்கிறதில்லை (அவர்கள்), अलसा:- சோம்பலுள்ளவர்களும், स्वादुकामा: च- ருசியுள்ள பதார்த்தங்களில் ஆசையுள்ளவர்களாயும், महतां च अपि- பெரியோர்களுக்கும், सम्मता:- யோக்யர்களென்று மனதிற்கொப்பினவர்கள், तेषां- அவர்களுக்கு, रत्नपूर्णानि- ரத்தினங்கள் நிறைந்த, अशीतियानानि- எண்பது வண்டிகளையும், दापय- கொடுக்கும்படிசெய்.

20. (ப-ரை) हे सौमित्रे- இலக்குமணா! शालिवाहसहस्रं च- செம்பாநெல் மூட்டை சுமக்கின்ற ஆயிரம் எருதுகளையும், द्वे शते- भद्रकान्- இருநூறு உழவுகாளைகளையும், तथा- அப்படியே, व्यञ्जनार्थं- தயிர், நெய் முதலியவைகளுக்காக, गो सहस्रं च- ஆயிரம் பசுக்களையும், उपाकुरु- கொடு.

21. (ப-ரை) मेखलीनां- ப்ரம்மசாரிகளுடைய, महासङ्घः- பெருங்கூட்டமானது, कौसल्यां- கௌஸல்யாதேவியை, समुपस्थितः- அடைந்திருக்கிறது, तेषां- அந்த ப்ரம்மசாரிகளுக்கும், सहस्रं- ஆயிரம் பசுக்களை, प्रत्येकं- தனித்தனியாக सम्प्रदापय- கொடுப்பி.

22. (ப-ரை) हे लक्ष्मण- இலக்குமணனே! सा- அந்த, मम अम्बा- என் தாயாரான, कौसल्या- கௌஸல்யாதேவியானவள், दक्षिणाम्- (கோதானத்திற்கு அங்கமான) தக்ஷிணையைக்குறித்து, यथा- எப்படி, नन्देत- சந்தோஷப்படுவளோ, तथा- அப்படி, तान्- அந்த, सर्वान् द्विजातीन्- ப்ராம்மணர்கள் எல்லோரையும், सर्वशः- பலபடியாலும், अर्चय- பூஜைசெய்.

யுள்ளவர்கள். பெரியோர்கள் மனதிற்கு மிகவும் ஒப்பினவர்கள். அவர்களுக்கும் ரத்தினங்கள் நிறைந்த எண்பது வண்டிகளை கொடுக்கும்படி செய்.

20. (பொ-ரை) செம்பா நெல் மூட்டைகளுடன் ஆயிரம் எருதுகளையும், இருநூறு உழவு காளைகளையும், தயிர் நெய் பால் முதலான வியஞ்ஜனங்களுக்காக ஆயிரம் பசுமாடுகளையும் கொடு.

21. (பொ-ரை) அநேகம் ப்ரம்மசாரிகள் விவாஹம் செய்துகொள்ள பணத்திற்காக கௌஸல்யா தேவியிடம் வந்து கொண்டிருக்கிறார்களே அவர்களுக்கும் தனித்தனியாக ஆயிரம் பசுக்களை கொடுக்கும்படி செய்.

22. (பொ-ரை) நம் தாயாரான கௌஸல்யாதேவி நாம் கொடுத்த தக்ஷிணையைப் பார்த்து சந்தோஷப்படும்படியாக அந்தப்ராம்மணர்கள் எல்லோரையும்

ततः स पुरुषव्याघ्रस्तद्धनं लक्ष्मणः स्वयम् ।
यथोक्तं ब्राह्मणेन्द्राणामददाद्धनदो यथा ॥ 23 ॥
अथाब्रवीद्बाष्पकलांस्तिष्ठतश्चोपजीविनः ।
संप्रदाय बहुद्रव्यमेकैकस्योपजीवनम् ॥ 24 ॥
लक्ष्मणस्य च यद्वेश्म गृहं च यदिदं मम ।
अशून्यं कार्यमेकैकं यावदागमनं मम ॥ 25 ॥

23. (பா-ரை) ततः- பிறகு, पुरुषव्याघ्रः- புருஷோத்தமனான, सः लक्ष्मणः- அந்த இலக்குமணன், यथोक्तं- (ஸ்ரீராமன்) சொன்னபடி, ब्राह्मणेन्द्राणां- ப்ராம்மணோத்தமர்களுக்கு, तत् धनं- அந்த தனத்தை, धनदः यथा- குபேரன்போல், स्वयं- தானேவே, अददात्- கொடுத்தார்.

24-25. (பா-ரை) अथ- பிறகு, (रामः- ஸ்ரீராமன்,) बाष्पकलान्- கண்ணில் நீரைப் பெறுக்கிக்கொண்டு, तिष्ठतः च- நின்றிருக்கிற, उपजीविनः- தன்னை அடுத்துப்பிழைக்கின்ற ஜனங்களை, (ப்பார்த்து), एकैकस्य- எவ்வொருவருக்கும், उपजीवनम्- ஜீவனத்திற்கு வேண்டிய, बहु द्रव्यं- அநேகம் திரவ்யத்தை, सम्प्रदाय- கொடுத்துவிட்டு, लक्ष्मणस्य- இலக்குமணனுடைய, यत् वेश्म- யாதொரு கிருஹமோ, मम च- என்னுடைய, यत् इदगृहं- யாதொரு இந்த கிருஹமோ, एकैकं- இது ஒவ்வொன்றும், मम- आगमन यावत्- நான் வருகிறவரையில், अशून्यं- காலியில்லாமல், कार्यं- செய்யத்தகுந்தது, (इति- என்று,) अब्रवीत्- சொன்னார்.

வஸ்திரம், தான்யம், தனம் முதலானவைகளைக்கொடுத்து ஸர்வப்ரகாரங்களாலும் பூஜை செய்யவேண்டும்.

23. (பொ-ரை) பிறகு புருஷோத்தமனான அந்த ஸ்ரீ இலக்குமணன், ஸ்ரீராமன் நியமனப்படி ப்ராம்மணோத்தமர்களுக்கு அந்த தனங்களை குபேரன் கொடுப்பதுபோல் தானே நேரில் கொடுத்தார்.

24-25. (பொ-ரை) பிறகு ஸ்ரீராமன் மனவருத்தத்தினால் கண்களில் நீரை பெறுக்கிக்கொண்டு நிற்கின்ற, தன்னை அடுத்துப்பிழைக்கிற ஏழைஜனங்களுக்கு ஒவ்வொருவருக்கும் ஜீவனத்திற்கு வேண்டிய அநேகம் திரவ்யங்களைக்கொடுத்து, நான் வருகிறவரையில், இலக்குமணனுடைய கிருஹத்தையும், என்னுடைய அந்த அரண்மனையையும் காலியாயிராமல் செய்யவேண்டியது, அதாவது நீங்களெல்லோரும் இரண்டு கிருஹங்களிலும் வஸித்துக்கொண்டிருக்கவேண்டும் என்று சொன்னார்.

इत्युक्त्वा दुःखितं सर्वं जनं तमुपजीविनम् ।
उवाचेदं धनाध्यक्षं धनमानीयतामिति ॥ 26 ॥
ततोऽस्य धनमाजह्रुः सर्वमेवोपजीविनः ।
स राशिः सुमहांस्तत्र दर्शनीयो ह्यदृश्यत ॥ 27 ॥
ततः स पुरुषव्याघ्रस्तद्धनं सहलक्ष्मणः ।
द्विजेभ्यो बालवृद्धेभ्यः कृपणेभ्यो ह्यदापयत् ॥ 28 ॥

---

26. (ப-ரை) दुःखितं- துக்கித்துக்கொண்டிருக்கிற, उपजीविनम्- தன்னை அண்டிப்பிழைக்கின்ற, सर्वं तं जनं- அந்த எல்லா ஜனத்தையும், (பார்த்து) इति उक्त्वा- இவ்வாறு சொல்லிவிட்டு, धनाध्यक्षं- பொக்கிஷத்து அதிகாரியைப் பார்த்து, धनं- தனமானது, आनीयतां- கொண்டுவரப்படவேண்டும், इति- என்று, इदं उवाच- இந்த வார்த்தையைச் சொன்னார்.

27. (ப-ரை) ततः- பிறகு, अस्य उपजीविनः- இந்த ஸ்ரீராமனுடைய வேலைக்காரர்கள், धनं सर्वं एव- பொருள் முழுவதையுமே, आजह्रुः- கொண்டுவந்தார்கள், तत्र- அவ்விடத்தில், सुमहान्- மிகவும் பெரிதான, सः राशिः- அந்த தனங்களின் குவியலானது, दर्शनीयः- மிகவும் ஆச்சர்யத்துடன் பார்க்கக்கூடியதாக, अदृश्यत हि- காணப்பட்டது.

28. (ப-ரை) ततः- அநந்தரம், सः पुरुषव्याघ्रः- அந்த புருஷோத்தமன், सह लक्ष्मणः- இலக்குமணனுடன் கூடினவராய், तत् धनं- அந்த தனத்தை, बालवृद्धेभ्यः- பாலர்களாயும், கிழவர்களாயுமிருக்கிற, कृपणेभ्यः- ஏழைகளான, द्विजेभ्यः- ப்ராம்மணர்களின் பொருட்டு, अदापयत् हि- கொடுப்பித்தார்.

---

26. (பொ-ரை) மிகவும் வருத்தத்துடன் தம் ஸமீபத்தில் நிற்கின்ற அந்த ஏழைஜனங்கள் முழுவதையும் பார்த்து இவ்விதம் சொல்லிவிட்டு பொக்கிஷத்து அதிகாரியை அழைத்து "நம் பொக்கிஷத்திலிருக்கின்ற தனங்களையெல்லாம் கொண்டுவாரு"மென்று கட்டளையிட்டார்.

27. (பொ-ரை) பிறகு, அந்த ஸ்ரீராமனுடைய வேலைக்காரர்கள், பொக்கிஷத்திலிருந்து தனம் முழுவதையும் கொண்டுவந்து குவித்து விட்டார்கள். மிகவும் பெரிதான அந்த தனங்களின் ராசியானது அங்கு மிகவும் ஆச்சர்யத்துடன் பார்க்கக்கூடியதாய் காணப்பட்டது.

28. (பொ-ரை) பிறகு புருஷோத்தமனான அந்த ஸ்ரீராமன் இலக்குமணனுடன்கூட பாலர்களாயும், வ்ருத்தர்களாயும், ஏழைகளுமான ப்ராம்மணர்களுக்கு அந்த தனத்தைக் கொடுப்பித்தார்.

तत्रासीत्पिङ्गलो गार्ग्यस्त्रिजटो नाम वै द्विजः ।
उञ्छवृत्तिर्वने नित्यं फालकुद्दाललांगली ॥ 29 ॥
तं वृद्धं तरुणी भार्या बालानादाय दारकान् ।
अब्रवीद् ब्राह्मणं वाक्यं दारिद्र्येणाभिपीडिता ॥ 30 ॥
अपास्य फालं कुद्दालं कुरुष्व वचनं मम ।
रामं दर्शय धर्मज्ञं यदि किंचिदवाप्स्यसि ॥ 31 ॥

29. (ப-ரை) तत्र- அப்பொழுது, पिंगलः- செம்மட்டைவர்ணமுடையவரும், वने- வனத்தில், उञ्छवृत्तिः- வனத்தில் உதிர்ந்த தான்யங்களை பொறுக்கி ஜீவிப்பவரும், नित्यं-எப்பொழுதும, फालकुद्दाललांगली- கோடாலி, கொத்து, துறட்டி இவைகளை வைத்துக்கொண்டவரும், गार्ग्यः- கர்க்க கோத்திரத்தில் பிறந்தவரும, त्रिजटः नाम- த்ரிஜடரென்று ப்ரஸித்தருமான, द्विजः- ஒரு ப்ராமமணன், आसीत्- (அங்கு)இருந்தார்.

30-31. (ப-ரை) दारिद्र्येण- ஏழைத்தனத்தினால், अभिपीडिता- மிகவும் பீடிககப்பட்டும், तरुणी- யௌவனமுடையவளுமான, भार्या- அவர் பத்தினியானவள், बालान्- சிறுவர்களான, दारकान्- புத்திரர்களை, आदाय- அழைத்துவைத்துக்கொண்டு, वृद्धं- கிழவரான, तं ब्राह्मणं- அந்த ப்ராம்மணனைப் பார்த்து, मम- என்னுடைய, वचनं- வார்த்தையை, कुरुष्व- செய்யக்கடவீர், फालं- கோடாலியையும், कुद्दालं- மண்வெட்டியையும், अपास्य- எறிந்துவிட்டு, धर्मज्ञं- தர்மம தெரிந்தவரான, रामं- ஸ்ரீராமனை, दर्शय-(நமது ஏழைத்தனத்தை) அறியும்படிசெய்யும், यदि- அப்படி தெரிவித்தால், किंचित्- ஏதுவாகிலும் கொஞ்சம், अवाप्स्यसि- அடைவீர், इति- என்று, वाक्यं- வார்த்தையை, अब्रवीत्- சொன்னாள்.

---

29. (பொ-ரை) அந்த ஸமயத்தில், செம்மட்டைவர்ணமுடையவரும், வனத்தில் உதிர்நத தான்யங்களைப்பொறுக்கி ஜீவிப்பவரும, எப்பொழுதும் கோடாலி மண்வெட்டி, தொறட்டி இவைகளை வைத்துக்கொண்டிருப்பவரும கர்க்ககோத்திரத்திற்பிறநதவருமான த்ரிஜடரென்கிற ஒரு ப்ராம்மணர் அப்போது அங்கு இருந்தார்.

30-31. (பொ ரை) மிகவும ஏழைத்தனத்தினால் வருநதிக்கொண்டிருக்கிற யௌவனப்பருவமுள்ள அநத த்ரிஜடரின் பார்யையானவள, பாலர்களான தன் குழந்தைகளைக்கையிற் பிடித்துககொண்டு, கிழவரான அந்தப்ராம்மணரைப்பார்த்து "ஸ்வாமி என் வார்ததையைக்கேளும், கோடாலி, மண்வெட்டி இவைகளை தூரததில் எறிந்துவிட்டு, ஏழைகளைக்காப்பாற்றவேணுமென்ற தர்மத்தை அறிந்தவரான ஸ்ரீராமனிடம் சென்று நம ஏழைத்தனத்தைத் தெரிவிததால் ஏதுவாகிலும் கொஞ்சம் பொருள் கிடைக்கும்" என்று சொன்னாள்.

(ஸ்ரீராமனிடத்தில் எதேஷ்டமான தனம் கிடைக்கலாமென்று சொல்லவேண்டியிருக்க ஏதுவாகிலும் கொஞ்சமென்று சொன்னது, தன்னுடைய துரத்ருஷ்டத்தை நினைதது.)

स भार्यावचनं श्रुत्वा शाटीमाच्छाद्य दुश्छदाम् ।
स प्रातिष्ठत पन्थानं यत्र रामनिवेशनम् ॥ 32 ॥
भृग्वङ्गिरसमं दीप्त्या त्रिजटं जनसंसदि ।
आ पञ्चमायाः कक्ष्याया नैनं कश्चिदवारयत् ॥ 33 ॥
स राजपुत्रमासाद्य त्रिजटो वाक्यमब्रवीत् ।
निर्धनो बहुपुत्रोऽस्मि राजपुत्र महायशः ॥
उञ्छवृत्तिर्वने नित्यं प्रत्यवेक्षस्व मामिति ॥ 34 ॥

---

32. (ப-ரை) सः- அந்த த்ரிஜடர், भार्यावचनं- பார்யையின் வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, दुश्छदाम्– (மிகவும் கந்தலாகையால், உடம்பில் இழுத்து) போர்த்தமுடியாமலிருக்கிற, शाटीं- ஒத்தைவஸ்திரத்தை, आच्छाद्य- தரித்துக்கொண்டு, यत्र- எந்த வழியில், रामनिवेशनम्- ஸ்ரீராமன் அரண்மனை (இருக்கிறதோ), पन्थानं- அந்த வழியை, (நோக்கி), सः– அவர், प्रातिष्ठत- புறப்பட்டார்.

33. (ப-ரை) दीप्त्या- ப்ரம்மதேஜஸ்ஸினால், जनसंसदि- ஜனக்கூட்டத்தில், भृग्वङ्गिरसमम्– ப்ருகு மஹரிஷிக்கும், அங்கிரஸ்ஸு மஹரிஷிக்கும் ஸமமான, एनं त्रिजटं- இந்த த்ரிஜடரை, आ पञ्चमायाः कक्ष्यायाः- ஐந்தாவது கட்டுவரையில், कश्चित्- ஒருவரும், न अवारयत्- தடுக்கவில்லை.

34. (ப-ரை) सः त्रिजटः- அந்த த்ரிஜடர், राजपुत्र- ராஜகுமாரனான ஸ்ரீராமனை, आसाद्य-அடைந்து, महायशः- பெருமை கீர்த்தியுடைய, राजपुत्र-ஹே ராஜகுமாரனே, (अहं- நான்,) निर्धनः- தனமில்லாதவன், बहुपुत्रः अस्मि- அதிகமான பிள்ளைகளைப்பெற்றவன், वने- வனத்தில், नित्य- எப்பொழுதும், उञ्छवृत्तिः- உதிர்ந்த தான்யங்களைப்பொறுக்கி ஜீவிப்பவன், मां- என்னை, प्रत्यवेक्षस्व- கடாக்ஷித்தருளவேணும், इति- என்று, वाक्यं- வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

---

32. (பொ-ரை) அந்த த்ரிஜடரும், பார்யையின் வார்த்தையைக்கேட்டு ஸ்ரீராமனை பார்ப்பதற்காக கந்தலான ஒரு வஸ்திரத்தை வெகு ப்ரயத்னத்துடன் தரித்து தேஹத்தை மறைத்துக் கொண்டு ஸ்ரீராமன் அரண்மனை இருக்கும் வீதி வழியாகப் புறப்பட்டார்.

33. (பொ-ரை) இவ்விதம் புறப்பட்டு ஜனக்கூட்டத்தில் போகும் காலத்தில் ப்ரம்மதேஜஸ்ஸினால் ப்ருகு மஹரிஷிக்கும், அங்கிரஸ்ஸு மஹரிஷிக்கும் ஸமமான இந்த த்ரிஜடரை ஸ்ரீராமன் அரண்மனையில் ஐந்தாவது கட்டு வரையில் ஒருவரும் தடுக்கவே இல்லை.

34. (பொ-ரை) அந்த த்ரிஜடரும் ஸ்ரீராமனிடம் சென்று அவரைப்பார்த்து பெருமை புகழ்படைத்த ராஜகுமாரா! நான் தனமில்லாதவன், அநேகம் பிள்ளைகளைப் பெற்றவன், நாள்தோறும் வனத்தில் உதிர்ந்த தான்யங்களைப்பொருக்கி ஜீவிப்பவன், என்னைக் கடாக்ஷித்தருளவேணுமென்று ஒருவார்த்தை சொன்னார்

तमुवाच ततो रामः परिहाससमन्वितम् ॥ 35 ॥
गवां सहस्रमप्येकं न तु विश्राणितं मया ।
परिक्षिपसि दण्डेन यावत्तावदवाप्स्यसि ॥ 36 ॥
स शाटीं त्वरितः कट्यां संभ्रान्तः परिवेष्ट्य ताम् ।
आविध्य दण्डं चिक्षेप सर्वप्राणेन वेगितः ॥ 37 ॥

35-36. (ப-ரை) ततः- பிறகு, रामः- ஸ்ரீராமன், तं- அவரைப்பார்த்து, एकं- ஒரு, गवां सहस्रं अपि- ஆயிரம் பசுமாட்டுக்கூட்டமும், मया- என்னால், न विश्राणितं तु- தானம் செய்யப்படவில்லை, दण्डेन- தடியினால், यावत्- எவ்வளவு தூரம் வரையில், परिक्षिपसि- வீசி எறிகிறீரோ, तावत्- அவ்வளவு வரையிலுள்ள மாட்டுக்கூட்டத்தை, अवाप्स्यसि- நீர் அடையலாம், (என்று) परिहाससमन्वितम्- மந்தஹாஸத்துடன்கூட, उवाच- சொன்னார்.

37. (ப-ரை) सः- அந்தப்பிராம்மணன், त्वरितः- அவஸரமுள்ளவராய், कट्यां- இடுப்பில், तां शाटीं- அந்த கந்தல் வஸ்திரத்தை, परिवेष्ट्य- நன்றாய் இருக்கிக்கட்டிக்கொண்டு, सम्भ्रान्तः- பரபரப்புடன், वेगितः- வேகமுள்ளவராய், सर्वप्राणेन- எல்லா பலத்தினாலும், दण्डं- தடியை, आविध्य- சுழற்றி, चिक्षेप- எறிந்தார்.

35-36. (பொ-ரை) பிறகு ஸ்ரீராமன் அந்த த்ரிஜடனைப்பார்த்து ஆயிரம் மாடுள்ள ஒருமந்தையாவது ஒருவருக்கும் தானம் செய்யவில்லை, ஆகையால் நீர் ஒரு தடியை வீசி எறிந்தால் இந்த மாட்டுமந்தையில் எது வரையில்போய் அந்தத்தடி விழுகிறதோ அது வரையிலுள்ளமாட்டுமந்தையை உமக்குக் கொடுத்து விடுகிறேனென்று புன்சிரிப்புடன் சொன்னார்.

வெகு குடிம்பியாய் மிகவும் தரித்திரருமான இந்த பிராம்மணைத்தமருக்கு தனத்தில் எவ்வளவு வரையில் ஆசை இருக்கிறது என்று அறிவதற்காகச்சிறிது புன்சிரிப்பு.

37. (பொ-ரை) அந்த ப்ராம்மணன் பறபறப்புடன் கந்தல் துணியை இடுப்பில் இறுக்கிக்கட்டிக்கொண்டு தன்னுடைய ஸர்வ பலத்தினாலும், தடியைச்சுழற்றி மிகவும் வேகமாக எறிந்தார்.

स तीर्त्वा सरयूपारं दण्डस्तस्य कराच्चयुतः ।
गोव्रजे बहुसाहस्रे पपातोक्षाणसन्निधौ ॥ 38 ॥
तं परिष्वज्य धर्मात्मा आ तस्मात्सरयूतटात् ।
आनयामास ता गोपैस्त्रिजटायाश्रमं प्रति ॥ 39 ॥
उवाच च ततो रामः तं गार्ग्यमभिसान्त्वयन् ।
मन्युर्न खलु कर्तव्यः परिहासो ह्ययं मम ॥ 40 ॥

38. (ப-ரை) तस्य- அந்த த்ரிஜடருடைய, करात्- கையிலிருந்து, च्युतः- நழுவின (புறப்பட்ட), सः दण्डः- அந்தத் தடியானது, सरयूपारं- ஸரயூ நதியின் கரையை, तीर्त्वा- அடைந்து, बहुसाहस्रे- அநேகம் ஆயிரம் கணக்கான, गोव्रजे- பசுமந்தையில், उक्षाणसन्निधौ- எருதின் ஸமீபத்தில், पपात- விழுந்தது.

39. (ப-ரை) धर्मात्मा— தர்ம மூர்த்தியான, ஸ்ரீராமன், तं— அவரை, परिष्वज्य- (ஸந்தோஷத்தினால்) கட்டிக்கொண்டு, आ तस्मात-सरयूतटात्- அந்த ஸரயூ நதிக்கரையிலிருந்து, ताः- அந்தப் பசுக்களை, गोपैः- இடையர்களால், त्रिजटाय- த்ரிஜடருடைய, आश्रम- प्रति- ஆச்ரமத்தைக் குறித்து, आनयामास- அநுப்பிக்கொடுத்தார்.

40. (ப-ரை) ततः- பிறகு, रामः— ஸ்ரீராமன், तं गार्ग्यं- அந்த கர்க்ககுலத்தில் பிறந்த த்ரிஜடரை, अभिसान्त्वयन्- ஸமாதானம் செய்துகொண்டு, (அவரைப்பார்த்து) (त्वया- உம்மால்), मन्युः- கோபமானது, न कर्तव्यः खलु- செய்யத்தகுந்தது அன்று, अयं- இது, मम— என்னுடைய, परिहासः हि- பரிஹாஸமல்லவா.

38 (பொ-ரை) அந்த த்ரிஜடருடைய கையிலிருந்து வெளிப்பட்ட அந்தத்தடியானது, ஸரயூ நதியின் கரைகடந்து அநேகம் ஆயிரக்கணக்கான பசுமாட்டு மந்தையில் எருதின் ஸமீபத்தில் விழுந்தது.

39. (பொ-ரை) தர்மமூர்த்தியான ஸ்ரீராமனும், அந்த த்ரிஜடரை ஸந்தோஷத்தினால் கட்டி அணைத்துக்கொண்டு, அவர் எறிந்துவிழுந்த தடியின் எல்லைக்குள் அகப்பட்ட பசுக்கள் முழுவதையும், இடையர்களைக்கொண்டு த்ரிஜடருடைய ஆச்ரமம் சேர்த்துவிட்டார்.

40. (பொ-ரை) பிறகு ஸ்ரீராமன், அந்த கர்க்ககுலத்தில் பிறந்த த்ரிஜடரை ஸமாதானம் செய்துகொண்டு ப்ராம்மணோத்தமரே! உம்மைப்பார்த்து நான் தடியை விசிறி எறியச்சொன்னது பரிஹாஸமல்லவா! இதைப்பற்றி நீர் கோபித்துக் கொள்ளக்கூடாது என்று சொன்னார்.

इदं हि तेजस्तव यद्दुरत्ययं तदेव जिज्ञासितुमिच्छता मया ।
इम भवानर्थमभिप्रचोदितो वृणीष्व किं चेदपरं व्यवस्यति ॥ 41 ॥
ब्रवीमि सत्येन न तेऽस्ति यन्त्रणा धनं हि यद्यन्मम विप्रकारणात् ।
भवत्सु सम्यक्प्रतिपादनेन तन्मयार्जितं प्रीतियशस्करं भवेत् ॥ 42 ॥
ततः सभार्यस्त्रिजटो महामुनिर्गवामनीकं प्रतिगृह्य मोदितः ।
यशोबलप्रीतिसुखोपबृंहिणीस्तदाशिषः प्रत्यवदन्महात्मनः ॥ 43 ॥

---

41. (ப-ரை) इद- இந்த, दुरत्यय- மிகவும் அதிகமான, तव- உம்முடைய, यत् तेजः- யாதொரு தேஜஸ்ஸோ, तत् एव- அதையே, जिज्ञासितु- அறிவதற்கு, इच्छता- விரும்பின, मया- என்னால், भवान- நீர், इम अर्थ- இந்தக்காரியத்தைக்குறித்து, अभिप्रचोदितः- ஏவப்பட்டீர், अपर किंचित्- வேறு ஏதாவதாகிலும், व्यवस्यति चेत्- தேவரீர் விரும்பீரேயானால், (तत्- அதை), वृणीष्व- கேளும்.

42 (ப-ரை) सत्येन- ஸத்யமாக, ब्रवीमि- சொல்லுகிறேன், ते- உமக்கு, यन्त्रणा- தடை, न अस्ति- இல்லை, हि- ஏனென்றால், मम- என்னுடைய, यत् यत् धन- எந்த எந்த தனம் உண்டோ, (तत् तत्- அது அது) विप्रकारणात्- ப்ராம்மண நிமித்தமாக, मया- आर्जित- என்னால் ஸம்பாதிக்கப்பட்டது, भवत्सु- உம்மைப் போன்ற ப்ராம்மணர்களிடத்தில், सम्यक्- நன்றாக, प्रतिपादनेन- தானம் செய்வதினால், प्रीतियशस्कर- ப்ரீதியையும், கீர்த்தியையும் செய்கிறதாக, भवेत्- ஆகும்.

43. (ப-ரை) ततः- பிறகு, सभार्यः- பார்யையுடன் கூடிய, त्रिजटः- महामुनिः- த்ரிஜட மஹரிஷியானவர், गवां अनीकं- பசுக்களின் கூட்டத்தை, प्रतिगृह्य- பெற்றுக் கொண்டு, मोदितः- ஸந்தோஷமுடையவராய். तदा- அப்பொழுது, महात्मनः- மஹாத்மாவான ஸ்ரீராமனுக்கு, यशोबलप्रीतिसुखोपबृंहिणीः- கீர்த்தி, பலம், ஸந்தோஷம், ஸுகம் இவைகளை வ்ருத்தி செய்யும்படியான, आशिषः- ஆசீர்வாதங்களை, प्रत्यवदत्- சொன்னார்.

---

41. (பொ-ரை) உம்முடைய அளவற்ற இந்த பலத்தை அறியவேணுமென்று விரும்பி நான் இந்தக்காரியத்தைச்செய்யும்படி உம்மை ஏவினேன். இன்னும் எதுவாகிலும் என்னிடம் நீர் விரும்பும் பக்ஷத்தில் அதையும் கொடுக்கிறேன் கேளும்.

42. (பொ-ரை) ஸத்யமாகச் சொல்லுகிறேன். உமக்கு ஒருவித தடையும் கிடையாது. என்னுடைய தனம் முழுவதும் ப்ராம்மணர்களுக்காகவே நான் ஸம்பாதித்திருக்கிறேன் ஆகையால் அதை உம்மைப்போலொத்த ப்ராம்மணோத்தமர்களுக்கு மனப்பூர்வகமாக தானம் செய்தால்தான், ப்ரீதியும், புகழும் எனக்கு உண்டாகும்

43. (பொ-ரை) பிறகு, பார்யையுடன் கூடிய அந்த த்ரிஜடரென்னும் மஹாமுனி, பசுமந்தைகளைப்பெற்றுக்கொண்டு பரம ஸந்தோஷத்துடன் மஹாத்மாவான ஸ்ரீராமனுக்கு அப்பொழுது, கீர்த்தி, பலம், ஸந்தோஷம், ஸுகம் இவைகளை வ்ருத்தி செய்யக்கூடிய ஆசீர்வாதங்களைச் செய்தார்.

स चापि रामः प्रतिपूर्णमानसो महद्धनं धर्मबलैरुपार्जितम् ।
नियोजयामास सुहृज्जनेऽचिराद्यथार्हसंमानवचः प्रचोदितः ॥ 44 ॥
द्विजः सुहृद्भृत्यजनोऽथवा तदा दरिद्रभिक्षाचरणश्च योऽभवत् ।
न तत्र कश्चिन्न बभूव तर्पितो यथार्हसंमाननदानसंभ्रमैः ॥ 45 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
द्वात्रिंशः सर्गः ॥ 32 ॥

44. (ப-ரை) सः- அந்த, रामः च अपि- ஸ்ரீராமனும், प्रतिपूर्णमानसः- நிறைந்த மனதுடையவராய், यथार्हसमानवचः प्रचोदितः- அவரவர்களுக்குத் தகுந்தபடி கௌரவமான வார்த்தைகளைப் பேசிக்கொண்டு, धर्मबलैः- தர்மத்துடன் கூடிய பலங்களினால், उपार्जितम्- ஸம்பாதிக்கப்பட்ட, महत् धनम्- அதிகமான தனத்தை, सुहृज्जने- தம் ஸ்நேஹித ஜனங்களிடத்தில், अचिरात्- சீக்கிரமாக, नियोजयामास- கொடுத்துவிட்டார்.

45. (ப-ரை) तदा- அப்பொழுது, द्विजः- ப்ராம்மணனோ, सुहृत्- ஸ்நேஹிதனோ, भृत्यजनः- வேலை செய்கிற ஜனமோ, अथवा- அல்லது, दरिद्रभिक्षाचरणः च- தரித்ரனான பிச்சைக்காரனோ, यः- எவன், अभवत्- (அங்கு) இருந்தானோ, तत्र- அவர்களுக்குள், कश्चित्- ஒருவனும், यथार्हसमाननदानसम्भ्रमैः- அவர்களுக்குத் தக்கபடி கௌரவிப்பது, தானம் செய்வது இவைகளில் பரபரப்பினால், न तर्पितः- த்ருப்தி செய்யப்படாதவனாக, न बभूव- இல்லை.

44. (பொ-ரை) அந்த ஸ்ரீராமனும், நிறைந்த மனதுடன் அவரவர்களுக்குத் தகுந்தபடி கௌரவமாகப் பேசிக்கொண்டு, தர்மத்துடன் கூடிய பலங்களினால் தான ஸம்பாதித்த அளவிறந்த தனங்களையெல்லாம், மிகவும் சீக்கிரமாக, தன் ஸ்நேகித ஜனங்களுக்குக் கொடுத்துவிட்டார்.

45. (பொ-ரை) அப்பொழுது அங்கு வந்திருந்த ப்ராம்மணர்களோ, ஸ்நேகிதர்களோ, வேலைக்காரர்களோ, அல்லது பிச்சையெடுக்கக்கூடிய மிகவும் ஏழைகளோ, இவர்களில் ஒருவனாவது அவரவர்களுக்குத் தக்கபடி செய்த வெகுமதியினாலோ, தனத்தினாலோ த்ருப்தி செய்விக்கப்படாதவன் இல்லை.

त्रयस्त्रिंशः सर्गः ॥ 33 ॥

दत्वा तु सह वैदेह्या ब्राह्मणेभ्यो धनं बहु ।
जग्मतुः पितरं द्रष्टुं सीतया सह राघवौ ॥ 1 ॥
ततो गृहीते दुष्प्रेक्षे त्वशोभेतां तदायुधे ।
मालादामभिराबद्धे सीतया समलङ्कृते ॥ 2 ॥
ततः प्रासादहर्म्याणि विमानशिखराणि च ।
अधिरुह्य जनः श्रीमानुदासीनो व्यलोकयत् ॥ 3 ॥

1. (ப-ரை) राघवौ- ஸ்ரீராமஇலக்ஷ்மணர்கள், वैदेह्या सह तु- ஸீதையுடன் கூடவே, ब्राह्मणेभ्यः- ப்ராம்மணர்களின் பொருட்டு, बहु धनं- அநேக தனத்தை, दत्वा- கொடுத்துவிட்டு, पितरं- பிதாவை, द्रष्टुं- பார்ப்பதற்கு, सीतया सह- ஸீதையுடன் கூட, जग्मतुः- போனார்கள்.

2. (ப-ரை) ततः- பிறகு, मालादामभिः- மாலைகளின் வரிசைகளால், आबद्धे- கட்டப்பட்டும், सीतया- ஸீதையினால் समलङ्कृते- (சந்தனம் முதலியவைகளால்) அலங்கரிக்கப்பட்டும், गृहीते- அவர்களால் கையில் பிடிக்கப்பட்டுமிருக்கிற, तदायुधे- அவ்விருவர்களுடைய ஆயுதங்களும், दुष्प्रेक्षे तु- மற்றவர்களால் கண்கொண்டு பார்க்க முடியாதவைகளாய், अशोभेतां- விளங்கின.

3 (ப-ரை) ततः- பிறகு, श्रीमान्- மிகவும் ஸந்தோஷத்தோடு கூடிய, जनः- ஜனமானது, प्रासादहर्म्याणि- அரசர்களுடையவும், ப்ரபுக்களுடையவும் உப்பரிகைகளையும், विमानशिखराणि च- அடுக்குமாளிகைகளின் நுனிகளையும், अधिरुह्य- ஏறி, उदासीनः- மனதில் ஸந்தோஷமில்லாததாய், व्यलोकयत्- (அவர்களையும்) பார்த்தது.

1. (பொ-ரை) இராம லெக்ஷ்மணர்கள் ஸீதையுடன் கூடவே ப்ராம்மணர்களுக்கு அளவற்ற தனங்களை தானம் செய்துவிட்டு, பிதாவைப்பார்க்க ஸீதையையும் அழைத்துக்கொண்டு சென்றார்கள்.

2. (பொ-ரை) பிறகு, ஸீதையினால் மாலைகள்கட்டி சந்தனம் முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்டு, இராம இலக்ஷ்மணர்களால கையிற்பிடிக்கப்பட்ட அவர்களுடைய ஆயுதங்கள், மற்றவர்களால் கண்கொண்டு பார்க்க முடியாதவைகளாய் விளங்கின.

3. (பொ-ரை) பிறகு, ஸ்ரீராம பட்டாபிஷேக நிமித்தமாக மிக்க ஸந்தோஷத்துடனிருந்த பட்டணத்து ஜனங்கள், ஸ்ரீராமன் பிதாவைப்பார்க்க இராஜ வீதியில் எழுந்தருளும்பொழுது அரசர்களுடைய உப்பரிகைகளிலும், ப்ரபுக்களுடைய மேல் மாடிகளிலும், அடுக்கு மாளிகைகளின் உச்சிகளிலும் ஏறி, மனதில் மிக துக்கத்துடன் அவர்களைப்பார்த்தார்கள்.

न हि रथ्याः स्म शक्यन्ते गन्तुं बहुजनाकुलाः ।
आरुह्य तस्मात्प्रासादान्दीनाः पश्यन्ति राघवम् ॥ 4 ॥
पदातिं वर्जितच्छत्रं रामं दृष्ट्वा तदा जनाः ।
ऊचुर्बहुविधा वाचः शोकोपहतचेतसः ॥ 5 ॥
यं यान्तमनुयाति स्म चतुरङ्गबलं महत् ।
तमेकं सीतया सार्धमनुयाति स्म लक्ष्मणः ॥ 6 ॥

4. (ப-ரை) हि- ஏனென்றால், बहुजनाकुलाः- அநேக ஜனங்களால் நிறைந்திருக்கிற, रथ्याः- வீதிகள், गन्तुं- நடப்பதற்கு, न शक्यन्ते- முடியவில்லை, तस्मात्- ஆதலால், प्रासादान्- உப்பரிகைகளை, आरुह्य- ஏறி, दीनाः सन्तः- தைன்யமுள்ளவர்களாய், राघवम्- ஸ்ரீராமனை, पश्यन्ति- பார்க்கிறார்கள்.

5. (ப-ரை) तदा- அப்பொழுது, वर्जितच्छत्रं- குடையில்லாதவராய், पदातिं- கால் நடையாய் எழுந்தருளுகிற, रामं- ஸ்ரீராமனை, जनाः- ஜனங்கள், दृष्ट्वा- பார்த்து, शोकोपहतचेतसः सन्तः- துக்கத்தினால் நிலையற்ற மனதை உடையவர்களாய்க்கொண்டு, बहुविधाः- பலவிதங்களான, वाचः- வார்த்தைகளை, ऊचुः- சொன்னார்கள்.

6. (ப-ரை) यान्तं- போகின்ற, यं- யாதொரு ஸ்ரீராமனை, महत्- பெரிதான, चतुरङ्गबलं- சதுரங்க ஸைன்யமானது, अनुयाति स्म- பின் சென்றுகொண்டிருந்ததோ, एकं तं- ஒருவராகப்போகின்ற அவரை, सीतया सार्धं- ஸீதையுடன்கூட, लक्ष्मणः- இலக்குமணன், अनुयाति स्म- பின் செல்லுகிறார்.

4. (பொ-ரை) வீதிகள் முழுவதும் அநேக ஜனங்கள் நெருங்கி நடக்க முடியாமையால் உப்பரிகைகளின்மேலேறி மன வருத்தத்துடன் இராமனைப் பார்த்தார்கள்.

5. (பொ-ரை) அப்பொழுது, அந்த ஜனங்கள் குடையில்லாமல் கால் நடையாய் எழுந்தருளுகிற அந்த ஸ்ரீராமனைப்பார்த்து, துக்கத்தினால் கலங்கின மனதை உடையவர்களாய் பலவிதமாக வார்த்தைகளைப் பேசினார்கள்.

6. (பொ-ரை) யாதொரு ஸ்ரீராமன் வீதியில் எழுந்தருளும்பொழுது பெரிதான சதுரங்க ஸைன்யம் பின் சென்று கொண்டிருந்ததோ அப்படிப்பட்டவர், ஒருவராக வீதியில் எழுந்தருளும்பொழுது ஸீதையுடன்கூட இலக்குமணன் மாத்திரம் பின்னே செல்லுகிறார்.

(एकं- என்கிற பதத்திற்கு முக்யமானவர் என்றும் பொருள்.)

ऐश्वर्यस्य रसज्ञः सन्कामिनां चैव कामदः ।
नेच्छत्येवानृतं कर्तुं पितरं धर्मगौरवात् ॥ 7 ॥
या न शक्या पुरा द्रष्टुं भूतैराकाशगैरपि ।
तामद्य सीतां पश्यन्ति राजमार्गगता जनाः ॥ 8 ॥
अङ्गरागोचितां सीतां रक्तचन्दनसेविनीम् ।
वर्षमुष्णं च शीतं च नेष्यन्त्याशु विवर्णताम् ॥ 9 ॥

7. (ப-ரை) ऐश्वर्यस्य- ஐச்வர்யத்தினுடைய, रसज्ञः- ரஸத்தை அறிந்தவரா யும், कामिनां- அர்த்தத்தில் ஆசையுள்ளவர்களுக்கு, कामदः चएव सन्- இஷ்டமான அர்த்தத்தைக்கொடுப்பவராயிருந்தும், धर्मगौरवात्- (பித்ருவசன பரிபாலனமென்கிற) தர்மத்தின் கௌரவத்தினால், पितरं- பிதாவை, अनृतं- பொய்க்காரராக, कर्तुं- செய்வதற்கு, न इच्छति एव- விரும்பாமலே இருக்கிறார்.

8. (ப-ரை) या- எந்த ஸீதையானவள், पुरा- இதற்கு முன், आकाशगैः- ஆகாசத்தில் ஸஞ்சரிக்கின்ற, भूतैः अपि- தேவர் முதலான பிராணிகளாலும், द्रष्टुं- பார்ப்பதற்கு, न शक्या- முடியாதவளோ, तां सीतां- அந்த ஸீதையை, अद्य- இப்பொழுது, जनाः- பட்டணத்து ஜனங்கள், राजमार्गगताः- ராஜவீதியை அடைந்தவர்களாய், पश्यन्ति- பார்க்கின்றார்கள்.

9. (ப-ரை) अगरागोचितां- சந்தனப் பூசுகைக்குத் தகுந்தவளாயும், रक्तचन्दनसेविनीम्- சிகப்புச் சந்தனத்தைப் பூசிக்கொண்டுமிருக்கிற, सीतां- இந்த ஸீதையை, वर्षं- மழையும், उष्णं च- வெய்யிலும், शीत च- குளிரும், आशु- சீக்ரத்தில், विवर्णताम्- வர்ணத்தின் மாராட்டத்தை, नेष्यन्ति- அடைவிக்கப்போகின்றன.

7. (பொ-ரை) இந்த ஸ்ரீராமன் அளவற்ற ஐச்வர்யங்களை ஸம்பாதித்து ஸுகத்தை அனுபவிக்க தெரிந்தவராயிருந்தும், தனங்களை விரும்பினவர்களுக்கு அவர்களிஷ்டப்படி கொடுக்கும் ஸ்வபாவமுள்ளவராயிருந்தும், பித்ருவசன பரிபாலன மென்கிற தர்மத்தில் பெருமதிப்புகொண்டு பிதாவை அஸத்தியவாதியாகச்செய்ய எண்ணமில்லாதவராயிருக்கிறார்.

8. (பொ-ரை) இதற்குமுன் ஆகாச சாரிகளான தேவர்களாலும் பார்க்க முடியாமலிருந்த ஸீதையை, இப்பொழுது நகரத்து ஜனங்கள் இராஜவீதியில் நின்றுகொண்டே பார்க்கும்படியாக ஆகிவிட்டது.

9. (பொ-ரை) குங்கும கஸ்தூரி முதலான வாஸனைத்திரவியங்களைப்பூசிக்கொள்ளத்தகுந்தவளாயும், உத்தமமான ரக்தசந்தனத்தை தத்காலம்பூசிக்கொண்டுமிருக்கிற இந்த ஸீதையின் திருமேனி வர்ணமானது காட்டில் வஸிக்கும்பொழுது வெய்யில், மழை, குளிர், இவைகளால் சீக்கிரத்தில் மாறிவிடப்போகிறது.

अद्य नूनं दशरथः सत्त्वमाविश्य भाषते ।
न हि राजा प्रियं पुत्रं विवासयितु मिच्छति ॥ 10 ॥

निर्गुणस्यापि पुत्रस्य कथं स्याद्विप्रवासनम्
किं पुनर्यस्य लोकोऽयं जितो वृत्तेन केवलम् ॥ 11 ॥

10. (ப-ரை) अद्य- இப்பொழுது, दशरथः- தசரதமஹாராஜன், सत्त्वं आविश्य- பேய்பிடித்து, भाषते- சொல்லுகிறார், नूनं- நிச்சயம், (அப்படிக்கில்லாவிடில்) राजा- அரசன், प्रियं- அன்பிற்கு இடமான, पुत्रं- புத்திரனை, विवासयितुं- காட்டிற்குத்துறத்த, न इच्छति हि- விரும்பமாட்டார் அன்றோ!

11. (ப-ரை) निर्गुणस्य अपि- குணமில்லாதவனாயினும், पुत्रस्य- புத்திரனுடைய, विप्रवासनम्- தேசத்தைவிட்டு அனுப்புவது, कथं स्यात्- எப்படி உசிதமாகும், यस्य- எவனுடைய, वृत्तेन केवलम्- சரித்திரத்தினலே மாத்திரம், अयं लोकः- இந்த உலகமானது, जितः- ஸ்வாதீனப்படுத்தப்பட்டதோ, किं पुनः- (அவனைக்காட்டிற்கு அனுப்பத்தகாதென்பது) சொல்லவேண்டுமா!

10. (பொ-ரை) இப்பொழுது அரசன் பேய்பிடித்துப் பேசுகிறார்போல் தோன்றுகிறது. இது நிச்சயம், இல்லாவிட்டால் மிகவும் ப்ரியமான தன் புத்திரனை ஊரைவிட்டுத்துறத்த எண்ணம் கொள்ளுவாரா!

11. (பொ-ரை) ஒரு விதமான குணமில்லாதவனாயிருந்தாலும் பிள்ளையைக் காட்டிற்கு அனுப்புவது எப்படி உசிதமாகும, அப்படியிருக்க யாதொரு ஸ்ரீராமனுடைய நன்னடக்கையினால் இவ்வுலக முழுவதும வசப்பட்டிருக்கிறதோ, அந்தப் புத்திரனை ஸ்ரீராமனை காட்டிற்கு அனுப்புவது உசிதம அன்று, என்பது சொல்ல வேண்டுமா!

सत्त्वं- என்றால் ஸத்துவகுணத்திற்குப் பெயராகக்கொண்டு மஹேச்வரதீர்த்தியர் வ்யாக்யானம் பண்ணியிருக்கிறார், அப்பொழுது இந்த சுலோகத்தின் அர்த்தம.

மஹாராஜன் தமோகுணத்தினால் புத்தி கலங்கி ஸ்ரீராமனைக் காட்டிற்குப் போகும்படி உத்திரவு செய்து விட்டார், இப்பொழுது அனுமதி கேட்கப்போகின்ற இராமனைப்பார்த்து ஸத்துவகுணம் மேலிட்டு நீ வனம் போகவேண்டாமென்று சொன்னாலும் சொல்லலாம், ஏனென்றால் ப்ரியமான தன் பிள்ளையைக் காட்டிற்க அனுப்ப அவருக்குமனம் வருமா! என்று,

आनृशंस्यमनुक्रोशः श्रुतं शीलं दमः शमः ।
राघवं शोभयन्त्येते षड्गुणाः पुरुषर्षभम् ॥ 12 ॥
तस्मात्तस्योपघातेन प्रजाः परमपीडिताः ।
औदकानीव सत्वानि ग्रीष्मे सलिलसंक्षयात् ॥ 13 ॥
पीडया पीडितं सर्वं जगदस्य जगत्पतेः ।
मूलस्येवोपघातेन वृक्षः पुष्पफलोपगः ॥ 14 ॥

12. (ப-ரை) आनृशंस्यं– ஒருவருக்கும் ஹிம்ஸை செய்யாமை, अनुक्रोशः- கருணை, श्रुतं- சாஸ்த்ரம் ஓதுவது, शीलं- நல்லொழுக்கம், दमः- கண் முதலான இந்திரியங்களை அடக்குதல், शमः- மனதை அடக்குதல், एते- என்கிற இந்த, षड् गुणाः- ஆறு குணங்கள், पुरुषर्षभम्- புருஷோத்தமனான, राघवं- ஸ்ரீராகவனை, शोभयन्ति- ப்ரகாசப்படு

13. (ப-ரை) तस्मात्- ஆகையால், तस्य- அந்த ஸ்ரீராமனுடைய, उपघातेन- ஹிம்ஸையினால், ग्रीष्मे- வெய்யிற்காலத்தில், सलिलसंक्षयात्- ஜலத்தின் குறைவினால், औदकानि- நீரில்வஸிக்கின்ற, सत्वानि इव- ஜந்துக்கள் போல, प्रजाः- ஜனங்கள், परमपीडिताः- மிகவும் பீடிக்கப்படுகின்றன.

14. (ப-ரை) मूलस्य- வேருக்கு, उपघातेन- கெடுதல் உண்டாவதினால், पुष्पफलोपगः- புஷ்பங்களையும், பலங்களையும் அடைந்திருக்கிற, वृक्षः- इव- மரம் (கெட்டுப்போவது) போல், जगत्पतेः- லோகநாதனை, अस्य– அந்த ஸ்ரீராமனுடைய, पीडया- (உண்டான) துக்கத்தினால், सर्वं जगत्- எல்லா உலகமும், पीडितं- பீடிக்கப்பட்டிருக்கிறது.

---

12. (பொ-ரை) ஒருவருக்கும் ஹிம்ஸை செய்யாமை, தயை, அனுஷ்டானம் வரையில் முடிவு பெற்ற சாஸ்த்ரஜ்ஞானம், நல்லஸ்வபாவம், இந்திரியங்களை அடக்குதல், மனதை அடக்குதல், ஆகிய இவ்வாறு குணங்கள் ஸ்ரீராகவனை அலங்கரிக்

13. (பொ-ரை) ஆகையால், அந்த ஸ்ரீராமனுக்கு கொஞ்சம் துக்கம் உண்டான படியால், வெய்யிற்காலத்தில் ஜலக்குறைவினால், ஜலஜந்துக்கள் கஷ்டப்படுவதுபோல் ப்ரஜைகளெல்லாம் கஷ்டப்படுகின்றன,

14. (பொ-ரை) வேருக்குக்கெடுதல் உண்டானால் பூ காய் கனிகளோடு கூடிய மரத்திற்கு கெடுதல் உண்டாவதுபோல், உலகங்களுக்கெல்லாம் பதியான இந்த ஸ்ரீராமனுக்கு கஷ்டம் நேர்ந்தபடியால், உலகமுழுவதும் கஷ்டப்படுகின்றது

मूलं ह्येष मनुष्याणां धर्मसारो महाद्युतिः ।
पुष्पं फलं च पत्रं च शाखाश्चास्येतरे जनाः ॥ 15 ॥
ते लक्ष्मण इव क्षिप्रं सपत्न्यः सहबान्धवाः ।
गच्छन्तमनुगच्छामो येन गच्छति राघवः ॥ 16 ॥
उद्यानानि परित्यज्य क्षेत्राणि च गृहाणि च ।
एकदुःखसुखा राममनुगच्छाम धार्मिकम् ॥ 17 ॥

15. (ப-ரை) हि- ஏனென்றால், धर्मसारः- தர்மத்தையே முக்யமாகவுடையவரும், महाद्युतिः- அதிகமான சோபையை யுடையவருமான, एषः- இந்த ஸ்ரீராமன், मनुष्याणां- மனுஷ்யர்களுக்கு, मूलं- வேர், इतरे जनाः- மற்ற ஜனங்களெல்லாம், अस्य- இவருக்கு, पुष्पं- புஷ்பமாயும், फलं च- பழமாயும், पत्रं च- தழைகளாயும், शाखाः च- கிளைகளாகவும், (இருக்கிறார்கள்).

16. (ப-ரை) ते- அப்படிப்பட்ட நாமும், सपत्न्यः- பத்தினிகளோடு கூடினவர்களாயும், सह बान्धवाः- பந்துக்களோடு கூடினவர்களாகவும், येन- எந்த வழியினால், राघवः- ஸ்ரீராமன், गच्छति- செல்லுகிறாரோ, तेन- அந்த வழியினாலேயே; गच्छन्तं- வனம் செல்லுகின்ற (ஸ்ரீராமனை), लक्ष्मण इव- இலக்குமணன் (பின் செல்வது) போல், क्षिप्रं- சீக்ரமாக, अनुगच्छामः- பின் செல்லுவோம்.

17. (ப-ரை) उद्यानानि- பூந்தோட்டங்களையும், क्षेत्राणि च- நிலங்களையும், गृहाणि च- வீடுகளையும், परित्यज्य- விட்டு விட்டு, एक दुःख सुखाः- (ஸ்ரீராமருடன்) ஸமானமான ஸுகதுக்கமுடையவர்களாய்க்கொண்டு, धार्मिकम्- தர்மிஷ்டரான, रामं- ஸ்ரீராமனை, अनुगच्छाम- பின் செல்லுவோம்.

---

15. (பொ-ரை) தர்மத்தையே முக்யமாகக் கைப்பற்றினவரும், சிறந்த சோபையையுமுடைய இந்த ஸ்ரீராமன், மனுஷ்யர் முதலாகிய ஸகலப்ராணிகளுக்கும் வேர் அல்லவா! இவ்விதம் வேர் ஆகிய இவருக்கு மற்றஜனங்களெல்லாம், புஷ்பங்களும், பழங்களும், இலைகளும், கிளைகளுமானவர்கள்.

16. (பொ-ரை) அப்படிப்பட்ட நாமும், பத்தினிகளையும், பந்துக்களையுமழைத்துக்கொண்டு எந்த வழியாக ஸ்ரீராமன் வனம் செல்லுகின்றாரோ அவ்வழியாகவே, இலக்குமணனைப்போல் சீக்கிரமாக ஸ்ரீராமனை பின்தொடர்ந்து போவோம்.

17. (பொ-ரை) பூந்தோட்டங்களையும், விளைநிலங்களையும், வீடுகளையும் விட்டுவிட்டு, ஸ்ரீராமனுக்கு ஏற்பட்ட ஸுக துக்கங்கள், நமக்கும் ஏற்பட்டதாகக் கொண்டு, தர்மிஷ்டரான ஸ்ரீராமனை பின் செல்லுவோம்.

समुद्धृतनिधानानि परिध्वस्ताजिराणि च ।
उपात्तधनधान्यानि हृतसाराणि सर्वशः ॥ 18 ॥
रजसाभ्यवकीर्णानि परित्यक्तानि दैवतैः ।
मूषकैः परिधावद्भिरुद्बिलैरावृतानि च ॥ 19 ॥
अपेतोदकधूमानि हीनसंमार्जनानि च ।
प्रणष्टबलिकर्मेज्यामन्त्रहोमजपानि च ॥ 20 ॥
दुष्कालेनेव भग्नानि भिन्नभाजनवन्ति च ।
अस्मत्त्यक्तानि वेश्मानि कैकेयी प्रतिपद्यताम् ॥ 21 ॥

18—19—20—21. (பதவுரை) समुद्धृत निधानानि- எடுக்கப்பட்ட புதையல்களை யுடையவைகளாயும், परिध्वस्ताजिराणि च- அழிந்த முற்றங்களுள்ளவைகளாயும், उपात्तधनधान्यानि- எடுத்துக்கொள்ளப்பட்ட தனங்களையும், தான்யங்களையுமுடையதாயும், सर्वशः- பலபடியாக, हृतसाराणि- எடுக்கப்பட்ட கட்டில், படுக்கை முதலான சிறந்த வஸ்துக்களை உடையவைகளாயும், रजसा- புழுதியினால், अभ्यवकीर्णानि- நாற்புறங்களிலும் படியப்பட்டவைகளாயும், दैवतैः- க்ருஹதேவதைகளால், परित्यक्तानि- விடப்பட்டவைகளாயும், उद्बिलैः- பாழிகளை உடைத்துக்கொண்டு, परिधावद्भिः- நாற்புறங்களிலும் ஓடுகின்ற, मूषकैः- பெருச்சாளிகளால், आवृतानि च- சூழப்பட்டவைகளாயும், अपेत उदक धूमानि- ஜலம் தெளித்தல், புகைபோடுதல், இல்லாதவைகளாயும், हीनसंमार्जनानि च- பெருக்கல் இல்லாதவைகளாயும், प्रणष्टबलि कर्म इज्या मन्त्र होम जपानि च- அழிந்திருக்கின்ற பூஜா கார்யம், யாகம், மந்திரம், ஹோமம், ஜபம், இவைகளையுடையதுமாய், भिन्नभाजन वन्ति च- உடைந்த பாத்திரங்களையுடையவைகளுமாய், दुष्कालेन- (பஞ்சகாலம். அரசர்களின் சண்டை முதலான) காலக்கொடுமையினால், भग्नानि इव- இடிக்கப்பட்டது போன்றதாயும், अस्मत्त्यक्तानि- நம்மால் விடப்பட்டவைகளுமான, वेश्मानि- க்ருஹங்களை, कैकेयी- கைகேயியானவள், प्रतिपद्यताम्- அடையட்டும்.

---

18-19-20-21. (பொழிப்புரை) புதையல்கள் எடுக்கப்பட்டு, முற்றங்களும் அழிந்து தன தான்யங்களும், உயர்ந்த, கட்டில், மெத்தை, முதலான ச்ரேஷ்டமான வஸ்துக்களும்கொண்டு போகப்பட்டும், நாற்புறமும் புழுதி படிந்தும், க்ருஹதேவதைகளால் கைவிடப்பட்டும். பாழிகளை உடைத்துக்கொண்டு அங்குமிங்கும் ஓடுகின்ற பெருச்சாளிகளால் சூழப்பட்டும், தண்ணீர் தெளித்தல், புகைகமழ்த்தல், கூட்டுதல், இல்லாததும், பூஜை, யாகம், மந்திரம், ஜபம் ஓமம் இவைகள் அழிந்ததும், பாத்திரங்கள் உடைந்ததும், க்ஷாமகாலம் அரசர்கள் சண்டைமுதலான காலக்கொடுமையினால் அழிந்ததுபோலும், நாமெல்லோரும் கைவிட்டிருக்கிற, பாழும் வீடுகளை கைகேயி அடையட்டும்.

वनं नगरमेवास्तु येन गच्छति राघवः ।
अस्माभिश्च परित्यक्तं पुरं सम्पद्यतां वनम ॥ 22 ॥

बिलानि दंष्ट्रिणः सर्वे सानूनि मृगपक्षिणः ।
त्यजन्त्वस्मद्भयाद्भीता गजाः सिंहा वनान्यपि ॥ 23 ॥

अस्मत्त्यक्तं प्रपद्यन्तां सेव्यमानं त्यजन्तु च ॥ 24 ॥

22. (ப-ரை) राघवः- ஸ்ரீராமன், येन- எந்த வனத்திலே, गच्छति- போகின்றனோ, वनं- அந்த வனமானது, नगरं एव- பட்டணமாகவே, अस्तु- ஆகவேண்டும், अस्माभिः च- நம்மால், परित्यक्तं- விடப்பட்ட, पुरं- பட்டணமானது, वनम्- காடாக, सपद्यतां- ஆகவேண்டும்.

23. (ப-ரை) अस्मद्भयात्- நம்மிடம் பயத்தினலே, भीताः- பயப்பட்ட, सर्वे दंष्ट्रिणः- எல்லா ஸர்ப்பங்களும், बिलानि- புற்றுகளையும், मृगपक्षिणः- மிருகங்களும், பக்ஷிகளும், सानूनि- தாழ்வரைகளையும், गजाः- யானைகளும், सिंहाः- ஸிங்கங்களும், वनानि अपि- வனங்களையும், त्यजन्तु- விட்டுவிட வேண்டும்.

24. (ப-ரை) अस्मत्त्यक्तं- நம்மால் விடப்பட்ட நகரத்தை, प्रपद्यन्तां- (ஸர்ப்பம் முதலானவைகள்) அடையட்டும், सेव्यमानं- நம்மால் அடையப்பட்ட வனத்தை, त्यजन्तु च- விட்டு விடட்டும.

22. (பொ-ரை) ஸ்ரீராமன் எந்த வனத்திற்குப்போகிறனோ, அந்த வனம் நகரமாக ஆகிவிடவேண்டும், நாமெல்லோரும் காலிசெய்த நகரமானது, வனமாக ஆகிவிடவேண்டும்.

23. (பொ-ரை) நம்மைக்கண்டு, பயந்து ஸர்ப்பங்கள் முழுவதும் புற்றுகளையும், மிருகங்களும், பக்ஷிகளும் தாழ்வரைகளையும், யானைகளும், ஸிம்மங்களும் வனங்களையும் விட்டு விடவேண்டும்,

24. (பொ-ரை) அந்த ஸர்ப்பம் முதலானவைகள், நாம் அடைந்த வனத்தை விட்டுவிட்டு, நாம் விட்டிருக்கிற நகரத்தை அடையட்டும்.

तृणमांसफलादानां देशं व्यालमृगद्विजम् ।
प्रपद्यतां हि कैकेयी सपुत्रा सह बान्धवैः ॥
राघवेण वने सर्वे सह वत्स्याम निर्वृताः ॥ 25 ॥
इत्येवं विविधा वाचो नानाजनसमीरिताः ।
शुश्राव रामः श्रुत्वा च न विचक्रेऽस्य मानसम् ॥ 26 ॥
स तु वेश्म पितुर्दूरात्कैलासशिखरप्रभम् ।
अभिचक्राम धर्मात्मा मत्तमातङ्गविक्रमः ॥ 27 ॥

25. (ப-ரை) तृणमांस फल आदानां- புற்களைத்தின்கின்ற மிருகங்களுக்கும், மாம்ஸங்களைத்தின்கின்ற புலி முதலானவைகளுக்கும், பழங்களைத்தின்கின்ற கிளி, காக்கை முதலான பக்ஷிகளுக்கும், देशं- இடமாயும், व्यालमृगद्विजम्- க்ரூரமான மிருகங்களையும், பக்ஷிகளையுமுடைய (இந்த நகரத்தை,) कैकेयी- கைகேயியானவள், सपुत्रा- பிள்ளையுடன் கூடினவளாய், बान्धवैः सह- பந்துக்களோடு கூட, प्रपद्यतां- அடையட்டும், सर्वे- (நாம்) எல்லோரும், राघवेण सह- இராமனோடு கூட, निर्वृताः- ஸுகமுடையவர்களாய், वने- வனத்தில், वत्स्याम- வஸிப்போம்.

26. (ப-ரை) इति- என்று, एव- இவ்விதமாக, नानाजनसमीरिताः- பல ஜனங்களால் சொல்லப்பட்ட, विविधाः- பல விதங்களான, वाचः- வார்த்தைகளை, रामः- ஸ்ரீராமன், शुश्राव- கேட்டார், श्रुत्वा च- கேட்டும், अस्य- இந்த ஸ்ரீராமனுடைய, मानसम्- மனது, न विचक्रे- விகாரத்தை அடையவில்லை.

27. (ப-ரை) धर्मात्मा- தர்மமான ஸ்வபாவமுடையவரும், मत्तमातङ्गविक्रमः- மதித்த யானைபோல் நடையை உடையவருமான, सः तु- அந்த ஸ்ரீராமனும், कैलासशिखरप्रभम्- கைலாஸ கிரியின் சிகரம்போல் விளங்கிக்கொண்டிருக்கிற, पितुः वेश्म- பிதாவின் அரண்மனையைக் குறித்து, दूरात्- வெகுதூரத்திலிருந்து, अभिचक्राम- எதிர் நோக்கிச்சென்றார்.

---

25. (பொ-ரை) நாமெல்லோரும் விட்டு விட்டபடியால் க்ரூரமான மிருகங்களும், பக்ஷிகளுமுடையதாய், புல்தின்கின்ற மான் முதலானவைகளும், மாம்ஸந்தின்கின்ற புலிமுதலானவைகளும், பழம் தின்கின்ற கிளி, காக்கைமுதலான பக்ஷிகளும், நிறைந்த இந்த நகரத்தில் கைகேயி புத்திரனுடனும், பந்துக்களுடனும், குடியிருக்கட்டும், நாமெல்லோரும் ஸ்ரீராமனுடன் கூடவே ஸுகமாய் வனத்திலே வஸித்துக்கொண்டிருப்போம்.

26. (பொ-ரை) என்று இவ்வாறு பலஜனங்கள் சொல்லிக் கொண்டிருக்கிற பலவிதமான வார்த்தைகளை ஸ்ரீராமன் கேட்டுக்கொண்டேபோகிறார், அப்படி கேட்டுக்கொண்டிருந்தும் அவருடைய மனதில் ஒருவித விகாரமும் உண்டாகவில்லை

27. (பொ-ரை) தர்ம மூர்த்தியாயும், மதித்த யானையின் நடைபோன்ற கம்பீரமான நடையுடையவருமான அந்த ஸ்ரீராமன் கைலாஸ சிகரம்போல் விளங்கிக்

विनीतवीरपुरुषं प्रविश्य तु नृपालयम् ।
ददर्शावस्थितं दीनं सुमन्त्रमविदूरतः ॥ 28 ॥
प्रतीक्षमाणोऽपि जनं तदार्तमनार्तरूपः प्रहसन्निवाथ ।
जगाम रामः पितरं दिदृक्षुः पितुर्निदेशं विधिवच्चिकीर्षुः ॥ 29 ॥
तत्पूर्वमैक्ष्वाकसुतो महात्मा रामो गमिष्यन्वनमार्तरूपम् ।
व्यतिष्ठत प्रेक्ष्य तदा सुमन्त्रं पितुर्महात्मा प्रतिहारणार्थम् ॥ 30 ॥

---

28. (ப-ரை) विनीतवीरपुरुषं- வணக்கமுள்ள சூரர்களான மனிதர்களையுடைய, नृपालयम्- அரசன் அரண்மனையை, प्रविश्य तु- ப்ரவேசித்து, अविदूरतः- (அங்கு) ஸமீபத்தில், अवस्थितं- உட்கார்ந்திருக்கிற, दीनं- தைன்யமுள்ளவரான, सुमन्त्रं- ஸுமந்த்ரரை, ददर्श- பார்த்தார்.

29. (ப-ரை) तदा- அப்பொழுது, रामः- ஸ்ரீராமன், आर्त- மனவருத்தமுடைய, जनं- (அங்கிருக்கும்) ஜனத்தை, प्रतीक्षमाणः अपि- பார்த்தவராயிருந்தும், अनार्तरूपः- வ்யஸனமில்லாதவராயும், प्रहसन् इव- சிரிக்கின்றவர் போலவும் (இருந்து), पितुः- பிதாவினுடைய, निदेशं- ஆக்ஞையை, विधिवत्- விதிப்படி, चिकीर्षुः- செய்ய எண்ணமுள்ளவராய், पितरं- பிதாவை, दिदृक्षुः सन्- பார்க்க விருப்பமுள்ளவராக, अथ- பிறகு, जगाम- (உள்ளே) சென்றார்.

30. (ப-ரை) ऐक्ष्वाकसुतः- இக்ஷ்வாகு வம்சத்துப்பிள்ளையாயும், महात्मा- மஹாபுருஷனான, रामः- ஸ்ரீராமன், वनं- வனத்தைக்குறித்து, गमिष्यन्- போகப்போகின்றவராய், तत्पूर्वं- அதற்கு முன்னமே, आर्तरूपम्- மிகவும் துக்கமுள்ளவரான, सुमन्त्रं- ஸுமந்த்ரரை, प्रेक्ष्य- பார்த்து, तदा- அப்பொழுது, पितुः- பிதாவுக்கு, प्रतिहारणार्थम्- (தான் வனம் போவதை) அறிவிப்பதற்காக, महात्मा सन्- மிக்க தைர்யமுடையவராய், व्यतिष्ठत- நின்றார்.

கொண்டிருக்கிற பிதாவின் அரண்மனையை தூரத்திலிருந்து பார்த்துக்கொண்டே சென்றார்.

28. (பொ-ரை) வணக்கமுள்ள சூரர்களான மனிதர்கள் நிறைந்த மஹாராஜரின் அரண்மனையில் பிரவேசித்து, அங்கு சமீபத்தில் தீனராய் உட்கார்ந்து கொண்டிருக்கும் ஸுமந்த்ரரைப்பார்த்தார்.

29. (பொ-ரை) அப்பொழுது ஸ்ரீராமன் துக்கத்துடன் அங்கிருக்கின்ற ஜனங்களைப்பார்த்தும் தன்னுடைய துக்கத்தை வெளிக்காட்டாமல், சிரித்த முகமுடையவர்போல் பிதாவின் கட்டளைப்படி வன வாஸத்தை க்ரமமாக நடத்த வேணுமென்று எண்ணமுடையவராய், பிதாவைப்பார்ப்பதற்காக உள்ளே சென்றார்

30. (பொ-ரை) இக்ஷ்வாகு குலத்தில் பிறந்த புத்திரனாய், மிகவும் பெருந்தன்மையுள்ள ஸ்ரீராமன் வனம் போவதற்காக, அதற்கு முன்னமேயே துக்கமுடையவரான ஸுமந்த்ரரைப்பார்த்து அப்பொழுது தான் வனம் போவதை பிதாவுக்குத் தெரிவிப்பதற்காக அதிக தைர்யத்துடன் நின்றார்.

पितुर्निदेशेन तु धर्मवत्सलो वनप्रवेशे कृतबुद्धिनिश्चयः ।
स राघवः प्रेक्ष्य सुमन्त्रमब्रवीन्निवेदयस्वागमनं नृपाय मे ॥ 31 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
त्रयस्त्रिंशः सर्गः ॥ 33 ॥

---

31. (ப-ரை) धर्मवत्सलः- தர்மத்தில் அதிக ப்ரீதியையுடைய, सः राघवः- அந்த ஸ்ரீராகவன், पितुः- பிதாவினுடைய निदेशेन तु- உத்திரவினலேயே, वनप्रवेशे- வனத்தில் ப்ரவேசிப்பதில், कृतबुद्धिनिश्चयः- செய்யப்பட்ட புத்தியின் தீர்மானத்தை யுடையவராய்க்கொண்டு, सुमन्त्रं- ஸுமந்த்ரரை, प्रेक्ष्य- பார்த்து, नृपाय- அரசன்பொருட்டு, मे- என்னுடைய, आगमनं- வரவை, निवेदयस्व- நீர் தெரிவிக்கவேண்டும், (इति- என்று), अब्रवीत्- சொன்னர்.

---

31. (பொ-ரை) தர்மத்தில் அதிகப்ரீதியுள்ளவரான அந்த ஸ்ரீராமன், பிதாவின் அனுமதி பெற்றுக்கொண்டே வனப்ரவேசம் செய்யவேணுமென்று தீர்மானித்து "நான் வந்திருப்பதை அரசனுக்குத் தெரிவியு"மென்று ஸுமந்த்ரரைப்பார்த்துச் சொன்னர்.



चतुस्त्रिंशः सर्गः ॥ 34 ॥

ततः कमलपत्राक्षः श्यामो निरुदरो महान् ।
उवाच रामस्तं सूतं पितुराख्याहि मामिति ॥ 1 ॥

---

1. (ப-ரை) ततः- பிறகு, कमलपत्राक्षः- தாமரை இதழ்போன்ற கண்களை யுடையவரும், श्यामः- கருத்த திருமேனியுடையவரும், निरुदरः- சிற்றிடையுடைய வரும், महान्- பெரும் தன்மையுள்ளவருமான, रामः- ஸ்ரீராமன், तं सूतं- அந்த ஸுமந்த்ரரை (ப்பார்த்து), मां- என்னை, पितुः- பிதாவுக்கு, आख्याहि- நீர் தெரிவியும், इति- என்று, उवाच- சொன்னர்.

---

1. (பொ-ரை) பிறகு, தாமரை இதழ் போன்ற கண்களையுடையவரும், ச்யாமளமான வர்ணமுடையவரும், சிற்றிடையுடையவரும், பெரும்தன்மை யுடையவருமான அந்த ஸ்ரீராமன், ஸாரதியான அந்த ஸுமந்த்ரரைப்பார்த்து "நான் வந்த செய்தியை பிதாவுக்கு தெரியப்படுத்தும்" என்று சொன்னர்.

स रामप्रेषितः क्षिप्रं सन्तापकलुषेन्द्रियः ।
प्रविश्य नृपतिं सूतो निःश्वसन्तं ददर्श ह ॥ 2 ॥
उपरक्तमिवादित्यं भस्मच्छन्नमिवानलम् ।
तटाकमिव निस्तोयमपश्यज्जगतीपतिम् ॥ 3 ॥
आलोक्य तु महाप्राज्ञः परमाकुलचेतसम् ।
राममेवानुशोचन्तं सूतः प्राञ्जलिरासदत् ॥ 4 ॥

---

2. (ப-ரை) सः सूतः- அந்த ஸாரதியான ஸுமந்த்ரர், रामप्रेषितः- ஸ்ரீராமனால் அனுப்பப்பட்டும், सन्तापकलुषेन्द्रियः- பரிதாபத்தினால் கலங்கிய இந்திரியங்களை உடையவராய்க்கொண்டு, क्षिप्रं- சீக்ரமாக, प्रविश्य- உள்ளே ப்ரவேசித்து, निःश्वसन्तं- பெருமூச்சு விட்டுக்கொண்டிருக்கிற, नृपतिं- அரசனை, ददर्श- கண்டார், ह- கஷ்டம்.

3. (ப-ரை) उपरक्त- ராகு கேதுக்களால் பிடிக்கப்பட்ட, आदित्य इव- ஸூர்யனைப்போலவும், भस्मच्छन्न- சாம்பலால் மூடப்பட்ட, अनलं इव- அக்நியைப்போலவும், निस्तोयं- தண்ணீர் இல்லாத, तटाकं इव- தடாகத்தைப்போலவுமிருக்கிற, जगतीपतिम्- அரசனை, अपश्यत्- பார்த்தார்.

4. (ப-ரை) महाप्राज्ञः- மிகவும் புத்திமானான, सूतः- ஸாரதியான ஸுமந்த்ரர், परमाकुलचेतसम्- மிகவும் வ்யாகுலமான மனதுடையவராயும், रामं एव अनु- ராமனைக் குறித்தே, शोचन्तं- துக்கித்துக்கொண்டுமிருக்கிற (அரசனை), आलोक्य तु- பார்த்து, प्राञ्जलिः सन्- கைகூப்பினவராய்க்கொண்டு, आसदत्- ஸமீபத்தில் சென்றார்.

---

2. (பொ-ரை) ஸ்ரீராமனால் அனுப்பப்பட்ட அந்த ஸாரதியான ஸுமந்த்ரர் மனவருத்தத்தினால் கலங்கிய இந்திரியங்களை உடையவராய் விரைவில் உள்ளே சென்று, அங்கு துக்கத்தினால் பெருமூச்செறிந்து கொண்டிருக்கிற அரசனைப்பார்த்தார்.

3. (பொ-ரை) க்ரஹண பீடையை அடைந்த ஸூர்யனைப்போலவும், சாம்பல் மூடின அக்நிபோலவும், ஜலம் இல்லாத தடாகம்போலவும் இருக்கிற அரசனை ஸுமந்த்ரர் கண்டார்.

4. (பொ-ரை) மஹாபுத்திசாலியான ஸுமந்த்ரர் மிகவும் கலங்கின மனதையுடையவராயும், ராமன் ஒருவனையேகுறித்து துக்கித்துக் கொண்டுமிருக்கிற அரசனைப்பார்த்து அஞ்ஜலி செய்துகொண்டே ஸமீபம் சென்றார்.

तं वर्धयित्वा राजानं सूतः पूर्वं जयाशिषा ।
भयविक्लवया वाचा मन्दया श्लक्ष्णमब्रवीत् ॥ 5 ॥
अयं स पुरुषव्याघ्रो द्वारि तिष्ठति ते सुतः ।
ब्राह्मणेभ्यो धनं दत्त्वा सर्वं चैवोपजीविनाम् ॥ 6 ॥
स त्वा पश्यतु भद्रं ते रामः सत्यपराक्रमः ।
सर्वान्सुहृद आपृच्छ्य त्वामिदानीं दिदृक्षते ॥ 7 ॥

5. (ப-ரை) सूतः- ஸுமந்த்ரர், पूर्वं- முதலில், तं राजानं- அந்த அரசனை, जयाशिषा- ஜெய ஜெய என்கிற ஆசீர்வாதத்தினால், वर्धयित्वा- பூஜித்து, भयविक्लवया- பயத்தினால் தழ தழத்தும், मन्दया- மெதுவாயுமிருக்கிற, वाचा- வாக்கினாலே, श्लक्ष्णं- ம்ருதுவாக, अब्रवीत्- சொன்னார்.

6. (ப-ரை) पुरुषव्याघ्रः- புருஷோத்தமனான, सः- அந்த, ते सुतः- உம்முடைய பிள்ளையான ஸ்ரீராமன், ब्राह्मणेभ्यः- ப்ராம்மணர்கள் பொருட்டும், उपजीविनाम् च एव- தன்னை அடுத்தவர்களுக்கும், धनं- பொருளையும், सर्वं- படுக்கை முதலான மற்ற எல்லா வஸ்துக்களையும், दत्त्वा- கொடுத்துவிட்டு, अयं द्वारि तिष्ठति- இதோ வாசலில் நிற்கிறார்.

7. (ப-ரை) सत्यपराक्रमः- ஸத்யமான பராக்ரமத்தை உடைய, रामः- ஸ்ரீராமன், सर्वान् सुहृदः- ஸ்நேகிதர்கள் எல்லோரையும், आपृच्छ्य- கேட்டுக்கொண்டு, इदानीं- இப்பொழுது, त्वां- உம்மை, दिदृक्षते- பார்க்க விரும்புகிறார், सः- அவர், त्वा- உம்மை, पश्यतु- பார்க்கட்டும், ते- உமக்கு, भद्रं- க்ஷேமமானது (உண்டாகட்டும்).

---

5. (பொ-ரை) ஸுமந்த்ரர் முதலில் அவ்வரசனை ஜயவிஜயீபவ என்று ஆசீர்வாதம் செய்து, பயத்தினால் தழ தழத்து மெதுவான வார்த்தையினால் ம்ருதுவாகச்சொன்னார்.

6. (பொ-ரை) புருஷோத்தமரான உம்முடைய குமாரர், ப்ராம்மணர்களுக்கும், தன்னை அடுத்தவர்களுக்கும் தனம் முழுவதையும் படுக்கை முதலான வீட்டுப் பொருள்கள் எல்லாவற்றையும், கொடுத்துவிட்டு இதோ வாசலில் நிற்கிறார்.

7. (பொ-ரை) ஸத்யபராக்ரமமுடைய ஸ்ரீராமன் தன் தோழன்மார்களெல்லோரிடத்திலும் தான் வனம் போவதைசொல்லி அநுமதி கேட்டுக்கொண்டு இப்பொழுது உமமைப்பார்க்க விரும்புகிறார், அவர் உம்மைப் பார்க்கட்டும், உமக்கு க்ஷேமம் உண்டாகவேண்டும்.

---

भय :— துக்கத்துடன் கூடியவர் என்ன பதில் சொல்லுவரோ என்கிற பயம், அல்லது, ஸ்ரீராமன் காட்டிற்குப்புறப்பட ஸித்தமாயிருக்கிறார் என்கிற இவ்விஷயத்தை எப்படி அரசனிடம் நாம் கூசாமல் சொல்லுவது என்றுபயம்.

गमिष्यति महारण्यं तं पश्य जगतीपते ।
वृतं राजगुणैः सर्वैरादित्यमिव रश्मिभिः ॥ 8 ॥
स सत्यवादी धर्मात्मा गाम्भीर्यात्सागरोपमः ।
आकाश इव निष्पङ्को नरेन्द्रः प्रत्युवाच तम् ॥ 9 ॥
सुमन्त्राऽऽनय मे दारान् ये केचिदिह मामकाः ।
दारैः परिवृतः सर्वैर्द्रष्टुमिच्छामि धार्मिकम् ॥ 10 ॥

8. (ப-ரை) हे जगतीपते- அரசனே! (सः- அவர்), महारण्यं- பெரிய அரண்யத்தைக்குறித்து, गमिष्यति- போகப்போகின்றார், रश्मिभिः- கிரணங்களால், वृतं- சூழப்பட்ட, आदित्य इव- ஸூர்யனைப்போல், सर्वैः राजगुणैः- (ப்ரதாபம் முதலான) எல்லா ராஜகுணங்களாலும், वृतं- சூழப்பட்டிருக்கிற, तं- அவரை, पश्य- பாரும்.

9. (ப-ரை) सत्यवादी- நிஜம் சொல்லுவதையே ஸ்வபாவமுடையவராயும், धर्मात्मा- தர்மத்திலேயே புத்தியுடையவரும், गाम्भीर्यात्- காம்பீர்யத்தினால், सागरोपमः- ஸமுத்ரத்திற்கு ஒப்பானவரும், आकाश इव- ஆகாயம்போல், निष्पंकः- பற்றுதல் இல்லாதவருமான. सः नरेन्द्रः- அந்த அரசன், तं- அந்த ஸுமந்த்ரரைப்பார்த்து, प्रत्युवाच- பதில் சொன்னார்.

10. (ப-ரை) हे सुमन्त्र- ஸுமந்த்ரரே! मे- என்னுடைய, दारान्- பத்னிகளேயும், मामकाः- என்னைச்சேர்ந்தவர்களான, ये केचित्- யாவர் சிலபேர்களோ (तान्- அவர்களையும்), इह- இங்கு, आनय- அழைத்துவாரும், दारैः- பத்னிகளாலும், सर्वैः- மற்ற எல்லா ஜனங்களாலும், परिवृतः सन्- சூழப்பட்டவனாய்க்கொண்டு, धार्मिकम्- தர்மிஷ்டனான ஸ்ரீராமனை, द्रष्टुं- பார்ப்பதற்கு, इच्छामि- விரும்புகிறேன்.

8. (பொ-ரை) அரசனே! அந்த ஸ்ரீராமன் பெரிய அரண்யத்தைக்குறித்து போகப்போகின்றார், கிரணங்களோடு ஸூர்யன் சேர்ந்திருப்பதுபோல், எல்லா ராஜகுணங்களோடும் சேர்ந்திருக்கின்ற அவரை நீர் பாரும்.

9. (பொ-ரை) ஸத்தியவாதியாயும், தர்மசிந்தையுள்ளவராயும், ஆழ்ந்த தன்மையினால் ஸமுத்திரம் போன்றவரும், ஆகாசம்போல் பற்றுதல் இல்லாதவருமான அவ்வரசன் ஸுமந்த்ரரைப்பார்த்து பதில் அளித்தார்.

10. (பொ-ரை) ஸுமந்த்ரரே! என்னுடைய பத்தினிகளெல்லோரையும், மற்ற என்னுடைய சொந்த ஜனங்கள் எல்லோரையும், இங்கு அழைத்துவாரும், அவர்கள் எல்லோருடன் சேர்ந்துகொண்டே தர்மிஷ்டனான அந்தப் புத்திரனைப் பார்க்க விரும்புகிறேன்,

सोऽन्तः पुरमतीत्यैव स्त्रियस्ता वाक्यमब्रवीत् ।
आर्या ह्वयति वो राजा गम्यतां तत्र मा चिरम् ॥ 11 ॥
एवमुक्ताः स्त्रियः सर्वाः सुमन्त्रेण नृपाज्ञया ।
प्रचक्रमुस्तद्भवनं भर्तुराज्ञाय शासनम् ॥ 12 ॥
अर्धसप्तशतास्तास्तु प्रमदास्ताम्रलोचनाः ।
कौसल्यां परिवार्याथ शनैर्जग्मुर्धृतव्रताः ॥ 13 ॥

11. (ப-ரை) सः- அந்த ஸுமந்த்ரர், अन्तः पुरं- அந்தப்புரத்தை, अतीत्य एव- அதிவேகமாக அடைந்து, ताः स्त्रियः- அந்த ஸ்த்ரீகளைப்பார்த்து, आर्याः- அம்மா! वः- உங்களை, राजा- அரசன், ह्वयति- அழைக்கிறார், तत्र- அங்கு, गम्यतां- போகவேண்டும், मा चिरम्- தாமதம் வேண்டாம், (इति- என்று), वाक्य अब्रवीत्- வார்த்தையைச்சொன்னார்.

12. (ப-ரை) एवं- இவ்விதம், सुमन्त्रेण- ஸுமந்த்ரரால், नृपाज्ञया- அரசனது உத்திரவினால், उक्ताः- சொல்லப்பட்ட, सर्वाः स्त्रियः- அந்த ராஜஸ்த்ரீகள் எல்லோரும், भर्तुः- பர்த்தாவினுடைய, शासनम्- கட்டளையை, आज्ञाय- தெரிந்துகொண்டு, तद्भवनं- அந்த அரசன் அரண்மனையைக்குறித்து, प्रचक्रमुः- போனார்கள்.

13. (ப-ரை) अथ- பிறகு, ताम्रलोचनाः- சிவந்த கண்களையுடையவர்களும், धृतव्रताः- பாதிவ்ருத்ய வ்ரதத்தை அடைந்தவர்களுமான, अर्धसप्तशताः- எழுநூறில் பாதியான முன்னூற்று ஐம்பது கணக்குள்ள, ताः प्रमदाः- அந்த ராஜஸ்த்ரீகள், कौसल्यां- கௌஸல்யா தேவியை, परिवार्य- சூழ்ந்துகொண்டு, शनैः- மெதுவாக, जग्मुः- சென்றார்கள்

---

11. (பொ-ரை) ஸுமந்த்ரரும், அந்தப்புரத்தில் விரைவில் சென்று அந்த ஸ்த்ரீகளைப் பார்த்து, அம்மா உங்கள் எல்லோரையும் அரசன் கூப்பிடுகிறார், அங்கு சீக்கிரமாகப்போகவேண்டும், என்ற வார்த்தையைச்சொன்னார்

12. (பொ-ரை) அரசன் உத்திரவினால் ஸுமந்த்ரர் சொன்ன வார்த்தையைக்கேட்டு, அந்த ராஜஸ்தரீகளெல்லோரும், பர்ததாவினுடைய உத்திரவைத் தெரிந்துகொண்டு, அரசன் இருக்கும் அரண்மனைக்குச்சென்றார்கள்.

13. (பொ-ரை) பிறகு, ஸ்ரீராமன் காட்டிற்குப்போகிறானென்ற துக்கத்தினால் எப்பொழுதும் அழுதுகொண்டிருக்கிறபடியால் மிகவும் சிவந்தகண்களையுடைய பதிவ்ருதா வ்ரதம்பூண்ட அந்த முன்னூற்றிஐம்பது ராஜஸ்த்ரீகளும், கௌஸல்யாதேவியைச்சூழ்ந்துகொண்டு மெதுவாகசென்றார்கள்.

आगतेषु च दारेषु समवेक्ष्य महीपतिः ।
उवाच राजा तं सूतं सुमन्त्राऽऽनय मे सुतम् ॥ 14 ॥
स सूतो राममादाय लक्ष्मणं मैथिलीं तदा ।
जगामाभिमुखस्तूर्णं सकाशं जगतीपतेः ॥ 15 ॥
स राजा पुत्रमायान्तं दृष्ट्वा दूरात्कृताञ्जलिम् ।
उत्पपातासनात्तूर्णमार्तः स्त्रीजनसंवृतः ॥ 16 ॥

14. (ப-ரை) दारेषु च- பத்நிகள், आगतेषु (सत्सु)- வந்து சேர்ந்தவளவில், महीपतिः- அரசன், समवेक्ष्य- பார்த்து, सुमन्त्र- ஸுமந்த்ரரே, मे सुतं- என்னுடைய பிள்ளையை. आनय- கூப்பிடும், इति- என்று, तं सूतं- அந்த ஸாரதியைப்பார்த்து, राजा- அரசன், उवाच- சொன்னார்.

15. (ப-ரை) तदा- அப்பொழுது, सः सूतः- அந்த ஸுமந்த்ரர், रामं- ஸ்ரீராமனையும், लक्ष्मण- இலக்குமணனையும், मैथिलीं- ஸீதையையும், आदाय- அழைத்துக் கொண்டு, जगतीपतेः- அரசனுடைய, सकाशं- ஸமீபத்தைக்குறித்து, तूर्णं- விரைவில், अभिमुखः- எதிர்நோக்கிக்கொண்டு, जगाम- சென்றார்.

16. (ப-ரை) सः राजा- அந்த அரசன், दूरात्- வெகு தூரத்திலிருந்தே, कृताञ्जलिम्- அஞ்ஜலி செய்துகொண்டு, आयान्तं- வருகின்ற, पुत्रं- பிள்ளையை, दृष्ट्वा- பார்த்து, आर्तः- துக்கமுடையவராய், स्त्रीजनसंवृतः सन्- ஸ்த்ரீ ஜனங்களால் சூழப்பட்டவராய்க்கொண்டு, तूर्णं- சீக்ரமாக, आसनात्- ஆஸனத்திலிருந்து, उत्पपात- எழுந்தார்.

---

14. (பொ-ரை) அரசன் அங்குவந்த பத்நிகளெல்லோரையும் பார்த்துவிட்டு, ஸுமந்த்ரரே, என் புத்திரனை ஸ்ரீராமனை அழைத்துவாருமென்று ஸாரதியைப்பார்த்துச்சொன்னார்.

15. (பொ-ரை) அப்பொழுது அந்த ஸாரதி, ராமன், இலக்குமணன், ஸீதை இவர்களைக்கூட்டிக்கொண்டு, சீக்கிரமாக, அரசன் ஸமீபத்திற்கு எதிர் நோக்கிச் சென்றார்.

16. (பொ-ரை) அவ்வரசன் வெகு தூரத்திலிருந்தே கைகூப்பிக்கொண்டு வருகிற புத்திரனைப்பார்த்து மிகவும் தீனராய் ஸ்த்ரீ ஜனங்களுடன் சீக்ரமாக ஆஸனத்திலிருந்து எழுந்தார்.

सोऽभिदुद्राव वेगेन रामं दृष्ट्वा विशांपतिः ।
तमसंप्राप्य दुःखार्तः पपात भुवि मूर्च्छितः ॥ 17 ॥
तं रामोऽभ्यपतत्क्षिप्रं लक्ष्मणश्च महारथः ।
विसंज्ञमिव दुःखेन सशोकं नृपतिं तदा ॥ 18 ॥
स्त्रीसहस्रनिनादश्च संजज्ञे राजवेश्मनि ।
हा हा रामेति सहसा भूषणध्वनिमूर्च्छितः ॥ 19 ॥

17. (ப-ரை) विशांपतिः- அவ்வரசன், रामं- ஸ்ரீராமனை, दृष्ट्वा- பார்த்து, वेगेन- வேகமாக, अभिदुद्राव- எதிரே போனார், तं- அந்த ராமனை, असम्प्राप्य- அடையாமல், दुःखार्तः- துக்கத்தினால் பீடிக்கப்பட்டவராய், मूर्च्छितः- மூர்ச்சை அடைந்தவராய், भुवि- பூமியில், पपात- விழுந்தார்.

18. (ப-ரை) तदा- அப்பொழுது, दुःखेन- துக்கத்தினால், विसंज्ञ इव- ப்ரக்ஞை தவறினவர் போன்றவரும், सशोकं- துக்கத்துடன் கூடியுமிருக்கிற, तं नृपतिं- அந்த அரசனை, रामः- ஸ்ரீராமன், क्षिप्रं- சீக்ரமாக, अभ्यपतत्- (எடுத்து உட்கார்த்துவதற்காக) ஸமீபத்தில் வந்தார், महारथः- மஹாரதனான, लक्ष्मणः च- இலக்குமணனும், अभ्यपतत्- ஸமீபத்தில் வந்தார்.

19. (ப-ரை) भूषणध्वनिमूर्च्छितः- ஆபரணங்களின் சப்தத்தினால் வ்ருத்தி அடைந்த, हा हा राम इति- அய்யோ, அய்யோ, ராமா! என்று, स्त्रीसहस्रनिनादः च- அநேக ஸ்த்ரீகளுடைய சப்தமும், राजवेश्मनि- அரசன் அரண்மனையில், सहसा- உடனே, संजज्ञे- உண்டாகிவிட்டது.

17. (பொ-ரை) அந்த அரசன் ராமனைப்பார்த்து வேகமாக எதிர்நோக்கிச் சென்றார், அவ்விதம் சென்றவர் ராமனிடம் போய்ச்சேராமல் துக்கத்தினால் மூர்ச்சை அடைந்து கீழே விழுந்துவிட்டார்.

18. (பொ-ரை) துக்கத்தினால் ப்ரக்ஞை தவறினவர்போலும் சோகித்துக் கொண்டுமிருக்கிற அவ்வரசனை எடுத்து உட்கார்த்துவதற்காக மஹாரதர்களான ஸ்ரீராமனும், இலக்குமணனும் அப்பொழுது உடனே ஸமீபத்திற்கு வந்தார்கள்.

19. (பொ-ரை) மார்பிலும், தலையிலும் அடித்துக் கொள்ளுவதினால் உண்டான வளையல் முதலான ஆபரணங்களின் ஓசையோடு கலந்து அதிகமான "ஐயோ ஐயோராமா" என்ற அந்த அநேகம் ஸ்த்ரீகளுடைய கூக்குரல் அரசன் அரண்மனையில் உடனே உண்டாகிவிட்டது.

तं परिष्वज्य बाहुभ्यां तावुभौ रामलक्ष्मणौ ।
पर्यंके सीतया सार्धं रुदन्तः समवेशयन् ॥ 20 ॥
अथ रामो मुहूर्तेन लब्धसंज्ञं महीपतिम् ।
उवाच प्राञ्जलिर्भूत्वा शोकार्णवपरिप्लुतम् ॥ 21 ॥
आपृच्छे त्वां महाराज सर्वेषामीश्वरोऽसि नः ।
प्रस्थितं दण्डकारण्यं पश्य त्वं कुशलेन माम् ॥ 22 ॥

20. (ப-ரை) तौ रामलक्ष्मणौ- அந்த இராம இலக்ஷ்மணர்கள், उभौ- இருவரும், सीतया सार्धं- ஸீதையுடன்கூட, बाहुभ्यां- கைகளால், तं- அவ்வரசனை, परिष्वज्य- அணைத்துக்கொண்டு, रुदन्तः सन्तः- அழுதுகொண்டு, पर्यंके- கட்டிலில், समवेशयन्- கார்த்கிறார்கள்.

21. (ப-ரை) अथ- பிறகு, मुहूर्तेन- ஒரு முஹூர்த்தகாலம் கழிந்து, लब्धसंज्ञं- மூர்ச்சை தெளிந்து, शोकार्णवपरिप्लुतम्- துக்கமாகிற ஸமுத்ரத்தில் தத்தளித்துக்கொண்டிருக்கிற, महीपतिम्- அரசனைப்பார்த்து, रामः- ஸ்ரீராமன், प्राञ्जलिः भूत्वा- கைகூப்பினவராய் இருந்து, उवाच- ஒரு வார்த்தை சொன்னார்.

22. (ப-ரை) हे महाराज- மஹாராஜரே! त्वां- தேவரீரை, आपृच्छे- கேட்டுக்கொள்ளுகிறேன், (त्वं- நீர்), सर्वेषां नः- எங்களெல்லோருக்கும், ईश्वरः असि- ப்ரபுவாக இருக்கிறீர், दण्डकारण्यं- தண்டகாவனத்தைக்குறித்து, प्रस्थितं- புறப்பட்டிருக்கின்ற, माम्- என்னை, त्वं- நீர், कुशलेन- க்ஷேமகரமான கடாக்ஷத்தினால், पश्य- பார்த்தருளவேணடும்.

20. (பொ-ரை) அந்த இராமஇலக்ஷ்மணர்கள் இருவரும், ஸீதையுடன்கூட அவ்வரசனைக் கைகளால் அணைத்து அழுதுகொண்டேகட்டிலில் உட்கார்த்கிறார்கள்

21. (பொ-ரை) பிறகு கொஞ்சகாலம் கழிந்து மூர்ச்சைதெளிந்து, துக்கமாகிற ஸமுத்திரத்தில் முழுகிக்கொண்டிருக்கிற அவ்வரசனைப்பார்த்து ஸ்ரீராமன் கை கூப்பிக்கொண்டு ஒரு வார்த்தை சொல்லுகிறார்.

22. (பொ-ரை) மஹாராஜரே! உம்மை நான் கேட்டுக்கொள்ளுகிறேன் எங்களெல்லோருக்கும் நீர் ஸ்வாமியாயிருக்கிறீர், ஆகையால் தண்டகாவனத்திற்குப் புறப்படுகின்ற என்னை நீர் க்ஷேமம் உண்டாகும்படி க்ருபையினால் கடாக்ஷித்தருளவேணும்

लक्ष्मणं चानुजानीहि सीता चान्वेति मां वनम् ।
कारणैर्बहुभिस्तथ्यैर्वार्यमाणौ न चेच्छतः ॥ 23 ॥
अनुजानीहि सर्वान्नः शोकमुत्सृज्य मानद ।
लक्ष्मणं मां च सीतां च प्रजापतिरि व प्रजाः ॥ 24 ॥
प्रतीक्षमाणमव्यग्रमनुज्ञां जगतीपतेः ।
उवाच राजा संप्रेक्ष्य वनवासाय राघवम् ॥ 25 ॥

23. (ப-ரை) लक्ष्मणं च- இலக்குமணனைக்குறித்தும், अनुजानीहि- அநுமதி கொடுக்கவேண்டும், सीता च- ஸீதையும், वनम्- வனத்தைக் (குறித்து), मां- என்னை, अन्वेति- அநுஸரிக்கின்றாள், तथ्यैः- உண்மையான, बहुभिः कारणैः- அநேக காரணங்களி னால், वार्यमाणौ च- தடுக்கப்பட்டவர்களாயிருந்தும், न इच्छतः- (இங்கு இருப்பதற்கு) ஸம்மதிக்கவில்லை.

24. (ப-ரை) हे मानद- (அடுத்தவர்களுக்கு) கௌரவத்தைக் கொடுக்கின்ற வரே! शोकं- சோகத்தை, उत्सृज्य- தள்ளிவிட்டு, प्रजापतिः- ப்ரும்மா, प्रजाः इव- ப்ரஜை களைக் (குறித்து அநுமதி கொடுப்பதுபோல்), लक्ष्मणं- இலக்குமணனையும், मांच- என்னையும், सीतां च- ஸீதையையும், सर्वान् नः- எங்களெல்லோரையும் (குறித்து), अनुजानीहि- அநுமதிகொடுக்கவேண்டும்.

25. (ப-ரை) वनवासाय- வனவாஸத்திற்காக, जगतीपतेः- அரசனுடைய, अनुज्ञां- அநுக்ஞையை, प्रतीक्षमाण- எதிர்பார்த்துக்கொண்டும், अव्यग्र- கவலையில்லாமலுமிருக்கிற, राघवम्- ஸ்ரீராமனை, संप्रेक्ष्य- பார்த்து, राजा- அரசன், उवाच- சொன்னார்.

23 (பொ-ரை) இலக்குமணனுக்கும் அநுமதிசெய்யவேண்டும், ஸீதையும் என்னுடன் வனத்திற்கு வருகின்றாள் அவளுக்கும் அனுமதிகொடுக்கவேண்டும், உண்மையாய் அநேக காரணங்களினால் இவ்விருவர்களை தடுத்தும் அவர்கள் என்னுடன்கூட வராமலிருக்க ஸம்மதிக்கவில்லை.

24. (பொ-ரை) அடுத்தவர்களுக்கு பெருமையைக்கொடுக்கும் ஸ்வபாவமுள்ளவரே! நீர் துக்கத்தைத்தள்ளிவிட்டு ப்ரும்மா ப்ரஜைகளுக்கு அனுமதிகொடுப்பதுபோல், இலக்குமணன், நான், ஸீதை ஆகியஎங்களெல்லோருக்கும் அநுமதி கொடுக்கவேண்டும்.

25. (பொ-ரை) வனவாஸம் செய்வதற்காக தன் உத்திரவை எதிர்பார்த்துக்கொண்டு கவலையில்லாமல் நிற்கின்ற இராகவனைப்பார்த்து, அரசன் சொன்னார்.

अहं राघव कैकेय्या वरदानेन मोहितः ।
अयोध्यायास्त्वमेवाद्य भव राजा निगृह्य माम् ॥ 26 ॥
एवमुक्तो नृपतिना रामो धर्मभृतां वरः ।
प्रत्युवाचाञ्जलिं कृत्वा पितरं वाक्यकोविदः ॥ 27 ॥
भवान्वर्षसहस्राय पृथिव्या नृपते पतिः ।
अहं त्वरण्ये वत्स्यामि न मे कार्यं त्वयानृतम् ॥ 28 ॥

26. (ப-ரை) हे राघव- இராகவனே! अहं- நான், वरदानेन- வரம் கொடுத்தபடியால், कैकेय्या- கைகேயியினால், मोहितः-வஞ்சிக்கப்பட்டேன், अद्य-இப்பொழுது, त्वं एव- நீயே, माम्- என்னை, निगृह्य- அடக்கிவிட்டு, अयोध्यायाः- அயோத்யா நகரத்திற்கு, राजा- அரசனாக, भव- ஆகிவிடு.

27. (ப-ரை) नृपतिना- அரசனால், एवं- இவ்விதம், उक्तः- சொல்லப்பட்டவரும், धर्मभृतां वरः- தர்மிஷ்டர்களுக்குள் ச்ரேஷ்டரும், वाक्यकोविदः- வார்த்தை சொல்வதில் புத்திசாலியுமான, रामः- ஸ்ரீராமன், अञ्जलिं कृत्वा- கைகூப்பிக்கொண்டு, पितरं பிதாவைக்குறித்து, प्रत्युवाच- பதில் சொன்னார்.

28. (ப-ரை) नृपते- மஹாராஜரே! वर्षसहस्राय- அநேக வருஷங்களாக, पृथिव्याः- பூமிக்கு, पतिः- அரசனாக இருக்கிறீர், अहं तु- நான், अरण्ये- வனத்தில், वत्स्यामि- வஸிக்கப் போகிறேன், मे- எனக்காக, त्वया- உம்மால், अनृतम्- பொய் சொல்லுகை, न कार्यं- செய்யக்கூடாது.

26. (பொ-ரை) இராகவா! நான் வரம் கொடுத்தபடியால் கைகேயியினால் வஞ்சிக்கப்பட்டுவிட்டேன், ஆகையால் நீயே இப்பொழுது என்னை அடக்கிவிட்டு அயோத்யா நகரத்திற்கு அரசனாகிவிடு.

27. (பொ-ரை) அரசனால் இவ்விதம் சொல்லப்பட்டும், தர்மம் அநுஷ்டிப்பவர்களுக்குள் ச்ரேஷ்டரும், வார்த்தை சொல்லுவதில் புத்திசாலியுமான ஸ்ரீராமன் கைகூப்பிக்கொண்டு பிதாவைப்பார்த்து பதில்சொன்னார்.

28. (பொ-ரை) மஹாராஜரே! நீர் அநேகம் ஆயிரம் வருஷங்களாக இந்த பூமண்டலத்திற்கு இராஜாவாக இருக்கிறீர். எனக்காக நீர் பொய் சொல்லக்கூடாது நான் அரண்யத்தில் வாஸம் பண்ணுகிறேன்.

नव पञ्च च वर्षाणि वनवासे विहृत्य ते ।
पुनः पादौ ग्रहीष्यामि प्रतिज्ञान्ते नराधिप ॥ 29 ॥
रुदन्नार्तः प्रियं पुत्रं सत्यपाशेन संयतः ।
कैकेय्या चोद्यमानस्तु मिथो राजा तमब्रवीत् ॥ 30 ॥
श्रेयसे वृद्धये तात पुनरागमनाय च ।
गच्छस्वारिष्टमव्यग्रः पन्थानमकुतोभयम् ॥ 31 ॥

29. (ப-ரை) हे नराधिप- மஹாராஜரே! नव पञ्च च- ஒன்பதும் ஐந்தும், वर्षाणि- (ஆகிய பதினான்கு) வருஷங்கள், वनवासे- வனவாஸத்தில், विहृत्य- விளையாடிவிட்டு, प्रतिज्ञा अन्ते- ப்ரதிக்ஞையின் முடிவில், पुनः- மறுபடியும், ते- உம்முடைய, पादौ- சரணங்களை, ग्रहीष्यामि- பிடிக்கப்போகிறேன்.

30. (ப-ரை) सत्यपाशेन- ஸத்யமாகிற கயிற்றினால், संयतः- கட்டப்பட்ட, राजा- அரசன், आर्तः- துக்கமுடையவராய், रुदन्- அழுதுகொண்டு, कैकेय्या- கைகேயியினால், मिथः- ஏகாந்தத்தில், चोद्यमानः तु- ஏவப்பட்டவராய்க்கொண்டு, प्रियं- ப்ரியமான, तं पुत्रं- அந்த புத்ரனைப்பார்த்து, अब्रवीत्- சொன்னார்.

31. (ப-ரை) हे तात- அப்பா குழந்தாய்! श्रेयसे- (பரலோகத்தின்) நன்மைக்காகவும், वृद्धये- இஹலோகத்தின் பெருமைக்காகவும், पुनः आगमनाय च- திரும்பிவருவதற்காகவும், अरिष्टं- க்ஷேமகரமாயும், अकुतोभयम्- ஒரு ப்ராணிகளிடத்திலிருந்தும் பயமில்லாமலுமிருக்கிற, पन्थानं- மார்க்கத்தை, अव्यग्रः सन्- பதட்டமில்லாதவனாய்க் கொண்டு, गच्छस्व- அடையக்கடவாய்.

29 (பொ-ரை) மஹாராஜரே! ஒன்பதும ஐந்தும் ஆகிய பதினான்கு வருஷங்களை வனவாஸத்தில் விளையாட்டாகக்கழித்து, ப்ரதிக்ஞையின் முடிவான பதினைந்தாவது வருஷத்தில் திரும்பிவந்து உம்முடைய திருவடிகளை ஸேவிக்கப்போகிறேன்.

30. (பொ-ரை) ஸத்தியமாகிற கயிற்றினால் கட்டப்பட்ட அவ்வரசன் துக்கத்தினால் அழுதுகொண்டு ரஹஸ்யமாக கைகேயியினால் தூண்டப்பட்டு ப்ரியமான தன் புத்திரனைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

31. (பொ-ரை) அப்பா குழந்தாய்! பரலோகத்தின் ஸௌக்யத்திற்காகவும், இஹலோகத்தில் பெருமைக்காகவும, திரும்பிவருவதற்காகவும், க்ஷேமகரமாயும், ஒரு ப்ராணிகளிடத்திலிருந்தும் பயமில்லாமலுமிருக்கிற மார்க்கத்தில் பதற்றமில்லாமல் செல்லக்கடவாய்.

न हि सत्यात्मनस्तात धर्माभिमनसस्तव ।
विनिवर्तयितुं बुद्धिः शक्यते रघुनन्दन ॥ 32 ॥

अद्य त्विदानीं रजनीं पुत्र मागच्छ सर्वथा ।
एकाहदर्शनेनापि साधु तावच्चराम्यहम् ॥ 33 ॥

मातरं मां च संपश्यन्वसेमामद्य शर्वरीम् ।
तर्पितः सर्वकामैस्त्वं श्वः काल्ये साधयिष्यसि ॥ 34 ॥

---

32. (ப-ரை) हे तात रघुनन्दन- அப்பா ரகுநந்தன! सत्यात्मनः- ஸத்யத்தையே ஸ்வபாவமாகவுடையவனும், धर्माभिमनसः- தர்மத்தில் நிலைநின்ற மனதை உடையவனுமான, तव- உன்னுடைய, बुद्धिः- புத்தியானது, विनिवर्तयितुं- திருப்புவதற்கு, नशक्यते हि- முடியாதல்லவா.

33. (ப-ரை) हे पुत्र- புத்திரனே! अद्य- இன்று, इदानीं रजनींतु- இந்த இராத்திரியையாவது, सर्वथा- பலபடியாலும், मा गच्छ- போகாமல் (இருந்துவிடு), एकाहदर्शनेन अपि- ஒருநாள் உன்னைப் பார்த்துக்கொண்டிருப்பதினாலாவது, अहं- நான், साधु तावत्- மிகவும் ஸுகமாக, चरामि- இருப்பேன்.

34. (ப-ரை) मातरं- தாயாரையும், मां च- என்னையும், संपश्यन्- பார்த்துக்கொண்டு, अद्य- இன்று, इमां शर्वरीम्- இந்த இரவை, वस- (இங்கு நீ) வஸிக்கவேண்டும், सर्वकामैः- இஷ்டமான எல்லா வஸ்துக்களாலும், तर्पितः सन्- திருப்தி செய்யப்பட்டவனாயிருந்து, श्वः काल्ये- நாளை காலையில், त्वं- நீ, साधयिष्यसि- போவாய்.

---

32. (பொ-ரை) அப்பா ரகுநந்தனே! ஸத்யத்தையே ஸ்வபாவமாகவுடையவனும், தர்மத்தில் நிலைநின்றமனதை உடையவனுமான உன்னுடைய இந்த வனவாஸ புத்தியைத் திருப்புவதற்குமுடியாதன்றோ.

33. (பொ-ரை) ஆனால் இன்றையதினம் இந்த ஒரு இரவாவதுஇரு; பலவிதத்திலும் நீ போகக்கூடாது, ஒருநாளாவது உன்னைப்பார்த்துக்கொண்டு நான் ஸுகமாகவிருப்பேன்.

34. (பொ-ரை) உன் தாயாரையும், என்னையும் பார்த்துக்கொண்டு இன்று இரவாவது நீ இங்கு வஸிக்கவேண்டும், உனக்குஇஷ்டமான வஸ்துக்களை அநுபவித்து திருப்தி அடைந்து நாளை காலையில் போகலாம்.

दुष्करं क्रियते पुत्र सर्वथा राघव त्वया ।
मत्प्रियार्थं प्रियांस्त्यक्त्वा यद्यासि विजनं वनम् ॥ 35 ॥
न चैतन्मे प्रियं पुत्र शपे सत्येन राघव ।
छन्नया चलितस्त्वस्मि स्त्रिया छन्नाग्निकल्पया ॥ 36 ॥
वञ्चना या तु लब्धा मे तां त्वं निस्तर्तुमिच्छसि ।
अनया वृत्तसादिन्या कैकेय्याभिप्रचोदितः ॥ 37 ॥

---

35. (ப-ரை) हे पुत्र राघव- குழந்தாய் ராகவனே! मत्प्रियार्थं- நான் பரலோகத்தில் ப்ரியத்தை அடைவதற்காக, प्रियान्- இஷ்டமான வஸ்துக்களை, त्यक्त्वा- விட்டுவிட்டு, विजनं- நிர்ஜனமான, वनम्- வனத்தைக்குறித்து, यासि इति यत्- போகிறாய் என்கிறது யாதொன்றுண்டோ, दुष्करं- ஒருவராலும் செய்யமுடியாத இந்தக்கார்யமானது, त्वया- உன்னால், सर्वथा- பலபடியாகவும், क्रियते- செய்யப்படுகிறது.

36. (ப-ரை) पुत्र राघव- குழந்தாய் ராகவா! एतत्- இது, मे- எனக்கு, प्रियं न- இஷ்டமன்று, सत्येन- ஸத்யத்தினால், शपे- ஆணையிட்டுச்சொல்கிறேன். छन्नया- மோசக்கருத்துள்ளவளாய், छन्नाग्निकल्पया- சாம்பலால் மறைந்த நெருப்பிற்கு ஸமானமான, स्त्रिया- ஸ்த்ரீயினால், चलितः अस्मि- ஸ்வாதீனத்திலிருந்து நழுவினவனாக ஆயிருக்கிறேன்.

37. (ப-ரை) या वञ्चना- யாதொரு மோசமானது, मे- எனனால், लब्धा- அடையப்பட்டதோ, तां अपि- அந்த மோசத்தையும், वृत्तसादिन्या- குலாசாரத்தை அழிப்பவளான, कैकेय्या- கைகேயியினால், अभिप्रचोदितः- ஏவப்பட்டிருக்கிற, त्वं- நீ, निस्तर्तुं- க்ரமமாக நடத்திமுடிப்பதற்கு, इच्छसि- விரும்புகிறாய்.

---

35. (பொ-ரை) புத்திரா ராகவா! நான் பரலோகத்தில் ப்ரியத்தை அநுபவிப்பதற்காக உனக்குப்பிரியமான வஸ்துக்களையெல்லாம் விட்டுவிட்டு ஜன ஸஞ்சாரமில்லாத வனம்போக நிச்சயித்துவிட்டாய், இது உன்னைத்தவிர வேறொருவராலும் பலபடியாலும் செய்யமுடியாதல்லவா!

36. (பொ-ரை) குழந்தாய் இராகவா! நீ வனம்போவது எனக்குப்பிரியமே இல்லை, ஸத்தியத்தின்மேல் ஆணை யிட்டுச்சொல்லுகிறேன், மோசக்காரியாய் சாமபலில் மறைந்த அக்நிபோன்றவளுமான கைகேயியால் என்புத்தி ஸ்வாதீனம்இல்லாமல் கலைந்து விட்டது,

37. (பொ-ரை) நான் கைகேயிக்கு முற்காலத்தில் பொதுவாகக்கொடுத்த இரண்டு வரங்களை இப்பொழுது எனக்கு நீர் கொடுக்கவேண்டுமென்று என்னிடத்தில் உறுதி மொழிபெற்றுக்கொண்டு, அந்த இரண்டு வரங்களில் ஒரு வரத்தினால் பரதனுக்குப்பட்டாபிஷேகம் செய்யவேண்டுமென்றும், மற்றொரு வரத்தினால் ராமன் பதினைந்து வருஷம் காட்டிற்குப் போகவேண்டுமென்றும் நிர்பந்தித்து

न चैतदाश्चर्यतमं यत् त्वं ज्येष्ठः सुतो मम ।
अपानृतकथं पुत्र पितरं कर्तुमिच्छसि ॥ 38 ॥
अथ रामस्तथा श्रुत्वा पितुरार्तस्य भाषितम् ।
लक्ष्मणेन सह भ्राता दीनो वचनमब्रवीत् ॥ 39 ॥
प्राप्स्यामि यानद्य गुणान्को मे श्वस्तान्प्रदास्यति ।
अपक्रमणमेवातः सर्वकामैरहं वृणे ॥ 40 ॥

---

38. (ப-ரை) हे पुत्र- குழந்தாய்! मम- எனக்கு, ज्येष्ठः सुतः- ஜ்யேஷ்ட புத்திரனாயிருக்கிற, त्वं- நீ, पितरं- பிதாவான என்னை, अपानृतकथं- பொய் வார்த்தையில்லாதவனாக, कर्तुं- செய்வதற்கு, इच्छसि इति यत्- விரும்புகிறாய் என்பது யாதொன்றுண்டோ, एतत्- இது, आश्चर्यतम न च- மிகவும் ஆச்சர்யமானதல்ல.

39. (ப-ரை) अथ- பிறகு, रामः- ஸ்ரீராமன், तथा- அவ்வாறு, आर्तस्य- துக்கப்படுகின்ற, पितुः- பிதாவினுடைய, भाषितम्- வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, भ्राता- ப்ராதாவான, लक्ष्मणेन सह- இலக்குமணனுடன்கூட, दीनः सन्- தீனராய்க்கொண்டு, वचनं- வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

40. (ப-ரை) अद्य- இன்று (अहं- நான்,) यान् गुणान्- இஷ்டமான உயர்ந்த எந்த பதார்த்தங்களை, प्राप्स्यामि- (உங்களிடமிருந்து) பெறுவேனோ, तान्- அவைகளை, कः- யார், श्वः- நாளை, मे- எனக்கு, प्रदास्यति- கொடுப்பார், अतः- ஆகையால், सर्व कामैः- எல்லா இஷ்ட வஸ்துக்களினால், अपक्रमणं एव- நகரத்தை விட்டுப்போவதையே, अहं- நான், वृणे- வேண்டுகிறேன்.

---

என்னை மோசம் செய்து விட்டாள். அவ்விதம் மோசம் செய்ததையும் கைகேயியின் தூண்டுதலால் க்ரமமாக முடித்தே தீருவேனென்று பிடிவாதமாயிருக்கிறாய். உன்னுடைய இந்த குணத்தைப்பற்றி நான என்ன சொல்லப்போகிறேன்.

38. (பொ-ரை) குழந்தாய்! நீ எனக்கு ஜ்யேஷ்டபுத்திரனானபடியால் என்னை பொய் சொல்லுகிறவனல்லாதவனாகச் செய்யவேணுமென்ற இது ஒரு பெரிய ஆச்சர்யமல்ல.

39 (பொ-ரை) பிறகு, அவ்விதம் துக்கத்துடன் சொன்ன பிதாவின்வார்த்தையைக்கேட்டு ஸ்ரீராமனும் பிதா கேட்டுக்கொண்டபடி ஒரு நாளாவது இங்கு தங்கியிருந்து அவருக்கு த்ருப்திசெய்விக்க ஸௌகர்யமில்லாமல் போய்விட்டதே என்று மனவருத்தத்துடன் கூடினவராய் இலக்குமணனுடன் கூட ஒருவார்த்தை சொன்னார்.

40. (பொ-ரை) இன்றையதினம் உங்களிடமிருந்து அடையப்போகின்ற இஷ்டமான உத்தமவஸ்துக்களை நாளையதினம் எவன் எனக்குக்கொடுக்கப்போகிறான். ஆகலால் இஷ்டமான எல்லா வஸ்துக்களுக்கும் பதிலாக பட்டணத்தை விட்டு வனம்போக அநுமதிகொடுப்பதையே நான் உங்களிடத்தில் வேண்டுகின்றேன்.

इयं सराष्ट्रा सजना धनधान्यसमाकुला ।
मया निसृष्टा वसुधा भरताय प्रदीयताम् ॥ 41 ॥

वनवासकृता बुद्धिर्न च मेऽद्य चलिष्यति ॥ 42 ॥

यस्तुष्टेन वरो दत्तः कैकेय्यै वरद त्वया ।
दीयतां निखिलेनैव सत्यस्त्वं भव पार्थिव ॥ 43 ॥

---

41. (ப-ரை) सराष्ट्रा- தேசங்களோடு கூடியதும், सजना- ஜனங்களோடு கூடியதும், धनधान्यसमाकुला- தனங்களாலும், தான்யங்களாலும் நிறைந்ததும், मया निसृष्टा- என்னால் விடப்பட்ட, इयं वसुधा- இந்த பூமியானது, भरताय- பரதன் பொருட்டு, प्रदीयताम्- கொடுக்கப்படவேண்டும்.

42. (ப-ரை) वनवासकृता- வனத்தில் வஸிப்பதாக நிச்சயித்திருக்கிற, मे बुद्धिः- என்னுடைய புத்தி, अद्य- இப்பொழுது, न चलिष्यति च- மாறப்போகிறதேயில்லை.

43. (ப-ரை) हे वरद- வேண்டுமவர்களுக்கு வேண்டிய வரங்களைக்கொடுக்கின்ற, पार्थिव- மஹாராஜரே! तुष्टेन- ஸந்தோஷமுடைய, त्वया- உம்மால், कैकेय्यै- கைகேயியின் பொருட்டு, यः वरः- யாதொரு வரம, दत्तः- கொடுக்கப்பட்டதோ, सः- அந்த வரமானது, निखिलेन एव- முழுவதுமே, दीयतां- கொடுக்கப்படட்டும், त्वं- நீர், सत्यः- ஸத்யமுள்ளவராக, भव- ஆகக்கடவீர்.

---

41. (பொ-ரை) அநேக தேசங்களோடும், ஜனங்களோடும் கூடியதும், தனதான்யங்கள் நிறைந்ததும், என்னால் விடப்பட்டதுமான இந்த அயோத்யா இராஜ்யத்தை பரதனுக்குக்கொடுத்துவிடும்.

42. (பொ-ரை) வனவாஸம் செய்யவேண்டுமென்று எனக்கு உண்டான எண்ணமானது இனி எந்த விதத்தாலும் மாறமாட்டாது.

43. (பொ-ரை) வேண்டினவர்களுக்கு வரங்களைக்கொடுக்கும் ப்ரபுவே, நீர் ஸந்தோஷப்பட்டு. கைகேயிக்குக் கொடுத்த வரம் முழுவதையுமே கொடுத்துவிடவேண்டும் அதனால் நீர் ஸத்யம் தவராதவராக ஆகவேண்டும்.

अहं निदेशं भवतो यथोक्तमनुपालयन् ।
चतुर्दश समा वत्स्ये वने वनचरैः सह ॥ 44 ॥
मा विमर्शो वसुमती भरताय प्रदीयताम् ।
न हि मे काङ्क्षितं राज्यं सुखमात्मनि वा प्रियम् ॥
यथा निदेशं कर्तुं वै तवैव रघुनन्दन ॥ 45 ॥
अपगच्छतु ते दुःखं माभूर्बाष्पपरिप्लुतः ।
न हि क्षुभ्यति दुर्धर्षः समुद्रः सरितां पतिः ॥ 46 ॥

44. (ப-ரை) अहं- நான், भवतः- உம்முடைய, निदेशं- கட்டளையை, यथोक्त- சொன்னபடியாகவே, अनुपालयन् सन्- பரிபாலனம் செய்துகொண்டு, वनचरैः सह- காட்டிற் ஸஞ்சரிக்கின்ற ஜனங்களோடுகூட, वने- வனத்தில், चतुर्दश समाः- பதினான்கு வருஷம், वत्स्ये- வஸிக்கப்போகிறேன்.

45. (ப-ரை) विमर्शः- விசாரம், मा- வேண்டாம், भरताय- பரதன் பொருட்டு, वसुमती- பூமியானது, प्रदीयताम्- கொடுக்கப்படலாம், हे रघुनन्दन- ஹே ரகுகுலத்தில் அவதரித்தவனே! आत्मनि- மனதில், सुखं वा- ஸுகத்தையோ, प्रियम् वा- ப்ரியத்தையோ (குறித்து), राज्यं- இராஜ்யமானது, मे- எனக்கு, काङ्क्षितं नहि- இஷ்டமில்லையன்றோ, तव- உம்முடைய, निदेश एव- கட்டளையையே, यथा कर्तुं वै- உள்ளபடி செய்வதற்காகவே, (काङ्क्षितं- ஆசைப்படப்பட்டது).

46. (ப-ரை) ते- உம்முடைய, दुःखं- துக்கமானது, अपगच्छतु- போய்விடவேண்டும், बाष्पपरिप्लुतः- கண்ணீரால்நனைந்தவராக, मा भूः- ஆகவேண்டாம், दुर्धर्षः- கலக்கமுடியாத, सरितां पतिः- நதிகளுக்கு அரசனான, समुद्रः- ஸமுத்ரமானது, न क्षुभ्यति हि- கலங்காது அல்லவா!

---

44. (பொ-ரை) நான் உம்முடைய உத்திரவை, சொன்னபடி செய்வதற்காக பதினான்கு வருஷம் தண்டகாவனத்தில், வனத்தில் வஸிக்கின்றவர்களோடு கூட வஸிக்கப்போகிறேன்.

45. (பொ-ரை) கொஞ்சமேனும் விசாரம் வேண்டாம். பரதனுக்கு பூமியைக் கொடுத்துவிடும். என் மனதில் ஸுகத்தை உத்தேசித்தோ, ப்ரியத்தை உத்தேசித்தோ, ராஜ்யத்தை ஆளவேணுமென்கிற எண்ணமில்லை. ஆனால் உமமுடைய ஆக்ஞையை சொன்னபடி செய்வதற்காகவே யென்னுடைய எண்ணம்.

46 (பொ-ரை) நீர் துக்கப்படவேண்டாம், துக்கத்தினால் அழுது தேஹத்தையெல்லாம் நனைத்துக்கொள்ளவும்வேண்டாம். ஒருவராலும் கலக்கமுடியாததும் நதிகளுக்கு அரசனான ஸமுத்திரம் எப்பொழுதும் கலங்காது அல்லவா.

नैवाहं राज्यमिच्छामि न सुखं न च मैथिलीम् ।
नैव सर्वानिमान्कामान्न स्वर्गं नैव जीवितम् ॥ 47 ॥
त्वामहं सत्यमिच्छामि नानृतं पुरुषर्षभ ।
प्रत्यक्षं तव सत्येन सुकृतेन च ते शपे ॥ 48 ॥
न च शक्यं मया तात स्थातुं क्षणमपि प्रभो ।
न शोकं धारयस्वैनं नहि मेऽस्ति विपर्ययः ॥ 49 ॥

47. (ப-ரை) अहं- நான், राज्यं- இராஜ்யத்தை, न एव इच्छामि- விரும்பவே இல்லை, सुखं- ஸுகத்தை, न- விரும்பவேமாட்டேன், मैथिलीम् च- ஸீதையையும், न- விரும்பமாட்டேன், इमान्- இந்த, कामान् सर्वान्- இஷ்டமான வஸ்துக்கள் முழுவதையும், न एव- விரும்பவேமாட்டேன், स्वर्गं- ஸ்வர்க்கத்தையும், न- விரும்பமாட்டேன், जीवितम्-एव- உயிரையும், न- விரும்பமாட்டேன்.

48. (ப-ரை) अहं- நான், त्वां- உம்மை, सत्यं- ஸத்யமுள்ளவராக, इच्छामि- இச்சிக்கிறேன், अनृतं- பொய்க்காரராக, न इच्छामि-(இருக்க) விரும்பமாட்டேன் हे पुरुषर्षभ- புருஷோத்தமரே! प्रत्यक्षं- ப்ரத்யக்ஷ தெய்வமான, तव- உமமுடைய (முன்னிலையில்), सत्येन- ஸத்யத்தினாலும, सुकृतेन च- ஸுக்ருதத்தினாலும், ते- உமக்காக, शपे- ஆணையிட்டுச்சொல்லுகிறேன்.

49. (ப-ரை) हे प्रभो तात- ப்ரபுவான பிதாவே! क्षणं अपि- ஒரு க்ஷணகாலமும், मया- என்னால், स्थातुं- (இந்த நகரத்தில்) இருப்பதற்கு, न च शक्यं- முடியவே முடியாது, एनं शोकं- இந்த துக்கத்தை, न धारयस्व- (நீர் மனதில்) தரித்துக்கொள்ளவேண்டாம், मे- எனக்கு, विपर्ययः (தீர்மானித்த விஷயத்தில்) மாறுபட்டமானது, न अस्ति हि- இல்லையல்லவா.

47. (பொ-ரை) நான் இந்த இராஜ்யத்தையோ, ஸுகத்தையோ, ஸீதையையோ இஷ்டமான இந்த எல்லா வஸ்துக்களையோ ஸ்வர்க்கத்தையோ, என் ப்ராணனையோ ஒன்றையும் விரும்பமாட்டேன்.

48. (பொ-ரை) புருஷோத்தமரே! நீர் ஸத்யஸந்தராக விருக்கவேண்டும். பொய் சொல்லுகிறவராக ஆகக்கூடாது, என்பதில்மாத்திரம் எனக்கு எண்ணம், ப்ரத்யக்ஷ தெய்வமான உம்மெதிரில் என்னுடைய ஸத்தியத்திலும், ஸுகத்திலும் உமக்காக ஆணையிட்டுச்சொல்லுகிறேன்,

49. (பொ-ரை) ப்ரபுவான பிதாவே! ஒரு க்ஷணகாலம்கூட இந்நகரத்தில் இருக்க எனக்கு முடியாது, ஆகையால் இந்த துக்கத்தை விட்டுவிடும். நான் வனவாஸம் போவதாகத் தீர்மானித்ததை இனி மாற்றவே மாட்டேன்.

अर्थितो ह्यस्मि कैकेय्या वनं गच्छेति राघव ।
मया चोक्तं व्रजामीति तत्सत्यमनुपालये ॥ 50 ॥
मा चोत्कण्ठां कृथा देव वने रंस्यामहे वयम् ।
प्रशान्तहरिणाकीर्णे नानाशकुननादिते ॥ 51 ॥
पिता हि दैवतं तात देवतानामपि स्मृतम् ।
तस्माद्दैवतमित्येव करिष्यामि पितुर्वचः ॥ 52 ॥

50. (ப-ரை) हि- ஏனென்றால், कैकेय्या- கைகேயியினால், हे राघव- ரகு குலத்தில் பிறந்தவனே! वन गच्छ- (நீ) வனம் போகவேண்டும், इति- என்று, अर्थितः अस्मि- கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறேன், मया च- என்னாலும், व्रजामि इति- போகிறேனென்று, उक्तं- சொல்லப்பட்டது, तत्- ஆகையால், सत्यं- அந்த ஸத்ய வார்த்தையை, अनुपालये- காப்பாற்றுகிறேன்.

51. (ப-ரை) हे देव- ஹே ப்ரபுவே! वयं- நாங்கள், प्रशान्तहरिणाकीर्णे- பொறுமையுள்ள மான்களால் நிறைந்தும், नानाशकुननादिते- பலவித பக்ஷிகளால் கூவப்பட்டுமிருக்கிற, वने- வனத்தில், रंस्यामहे- விளையாடப்போகிறோம், उत्कण्ठां- (எங்களைப் பற்றி) மன விசாரத்தை, मा कृथाः- நீர் செய்யவேண்டாம்.

52. (ப-ரை) हे तात- பிதாவே! पिता हि- தகப்பனாரன்றோ, देवतानां अपि- தேவதைகளுக்கும், दैवतं- தேவதையாக, स्मृत- சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது, तस्मात्- ஆகையால், दैवतं इति एव- தெய்வமென்று எண்ணியே, पितुः- தந்தையின், वचः- வார்த்தையை, करिष्यामि- செய்யப்போகிறேன்.

---

50. (பொ-ரை) ஏனென்றால், "இராமா நீ வனம் போகவேண்டு"மென்று கைகேயி தேவி என்னைக் கேட்டுக்கொண்டாள், நானும் அம்மா போகிறேனென்று அவருக்குச் சொல்லியும் விட்டேன். ஆகையால் அந்த சொன்னவார்த்தையை காப்பாற்றுகிறேன்.

51. (பொ-ரை) ப்ரபுவே! மிகவும் பொறுமையுள்ள மான்களும் ஸஞ்சரித்து பலவிதமான பக்ஷிகளும் சப்தித்துக் கொண்டிருக்கிற வனத்தில் நாங்கள் விளையாடுகிறதுபோல வஸிக்கப்போகிறோம், எங்களைப்பற்றி மனதில் ஒரு விதமான கவலையும் நீர் வைத்துக்கொள்ளவேண்டாம்.

52. (பொ-ரை) பிதாவே! தந்தையன்றோ, தேவதைகளுக்கும் தெய்வமென்று சாஸ்த்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது, அப்படியிருக்க மனிதர்களுக்கு சொல்லவேண்டுவானேன், ஆதலால் பிதாவை தெய்வமென்று எண்ணியே அவர் வார்த்தையின்படி செய்யப்போகிறேன்.

चतुर्दशसु वर्षेषु गतेषु नरसत्तम ।
पुनर्द्रक्ष्यसि मां प्राप्तं संतापोऽयं विमुच्यताम् ॥ 53 ॥
येन संस्तम्भनीयोऽयं सर्वो बाष्पगलो जनः ।
स त्वं पुरुषशार्दूल किमर्थं विक्रियां गतः ॥ 54 ॥
पुरं च राष्ट्रं च मही च केवला मया निसृष्टा भरताय दीयताम्
अहं निदेशं भवतोऽनुपालयन्वनं गमिष्यामि चिराय सेवितुम् ॥ 55 ॥

53. (ப-ரை) हे नरसत्तम- புருஷ ச்ரேஷ்டரே, चतुर्दशसु वर्षेषु- பதினான்கு வருஷங்கள், गतेषु सत्सु- கழிந்தவளவில், पुनः- திரும்பவும், प्राप्तं- வருகின்ற, मां- என்னை, द्रक्ष्यसि- பார்க்கப்போகிறீர், अयं संतापः- இந்த பரிதாபமானது, विमुच्यताम्- (உம்மால்) விடப்படவேண்டும்.

54. (ப-ரை) पुरुषशार्दूल- புருஷ ச்ரேஷ்டரே! बाष्पगलः- கண்ணீரைப்பெருக்குகின்ற, अयं- இந்த, जनः सर्वः- ஜனம் முழுவதும், येन- யாதொரு உம்மால, संस्तम्भनीयः- ஸமாதானம் செய்யத்தகுந்ததோ, सः त्वं- அப்படிப்பட்ட நீ, किमर्थं- ஏன், विक्रियां- விகாரத்தை, गतः- அடைகின்றீர்.

55. (ப-ரை) मया- என்னால், निसृष्टं- விடப்பட்ட, पुरं च- பட்டணமும், भरताय- பரதன் பொருட்டு, दीयताम्- கொடுக்கப்படலாம், मया निसृष्टं- என்னால் விடப்பட்ட, राष्ट्रं च- தேசமும் பரதன் பொருட்டு கொடுக்கப்படலாம், मया निसृष्टा- என்னால் விடப்பட்ட, केवला मही च- இந்த பூமி முழுவதுமே, பரதன் பொருட்டு கொடுக்கப்படலாம், अहं- நான், भवतः- உமமுடைய, निदेशं- ஆக்ஞையை, अनुपालयन्- பரிபாலனம் செய்வதற்காக, चिराय- வெகுகாலம், सेवितुम्- வஸிப்பதற்காக, वनं गमिष्यामि- வனத்தை அடையப்போகிறேன்.

53. (பொ-ரை) ஹே புருஷச்ரேஷ்டரே! பதினான்குவருஷம் கழிந்து வனத்திலிருந்து திரும்பிவருகின்ற என்னை நீர் பார்க்கபோகிறீர், இப்பொழுது இந்த துக்கத்தை விட்டு விடும்,

54. (பொ-ரை) ஹே புருஷோத்தமரே! துக்கத்தினால் கண்களில் நீரைப் பெருக்கிக்கொண்டு இருக்கிற இந்த ஜனம் முழுவதையும் நீர் அன்றோ ஸமாதானம் சொல்லி அடக்கவேண்டும், அப்படிப்பட்ட நீர் எதற்காக இப்பொழுது விசாரப்படுகிறீர்.

55. (பொ-ரை) நான் விட்ட, இந்த நகரம், இந்த தேசம், இந்த பூமிமுழுவதையும் பரதனுக்குக்கொடுத்துவிடும், நான் உம்முடைய கட்டளையை நடத்துவதற்காக பதினான்கு வருஷம் வஸிக்க வனம் போகிறேன்.

मया निसृष्टां भरतो महीमिमां सशैलषण्डां सपुरां सकाननाम् ।
शिवां सुसीमामनुशास्तु केवलं त्वया यदुक्तं नृपते तथास्तु तत् ॥ 56 ॥

न मे तथा पार्थिव धीयते मनो महत्सु कामेषु न चात्मनः प्रिये ।
यथा निदेशे तव शिष्टसम्मते व्यपैतु दुःखं तव मत्कृतेऽनघ ॥ 57 ॥

56. (ப-ரை) हे नृपते- மஹாராஜரே! मया- என்னால், निसृष्टां- விடப்பட்டும், सशैलषण्डां- பர்வத ஸமூஹங்களோடு கூடியதும், सपुरां- பட்டணங்களோடு கூடியதும், सकाननाम्- வனங்களோடு கூடியதும், शिवां- க்ஷேமகரமானதும, सुसीमां- நல்ல எல்லைகளை உடையதுமான, इमां महीं- இந்த பூமியை, केवलं- முழுவதும், भरतः- பரதன், अनुशास्तु- ஆளட்டும், त्वया- உம்மால், यत् उक्तं- (கைகேயிக்கு) எது சொல்லப்பட்டதோ, तत्- அது, तथा अस्तु- அப்படியே ஆகட்டும்.

57. (ப-ரை) हे पार्थिव- அரசனே! शिष्टसमते- பெரியோர்களுக்கு ஸம்மதமான, तव निदेशे- உமமுடைய கட்டளையிலே, यथा- எப்படி, मे- என்னுடைய, मनः- மனதானது, धीयते- வைக்கப்படுகிறதோ, तथा- அப்படி, महत्सु- பெரிதான, कामेषु- காமங்களிலும, आत्मनः- எனக்கு, प्रिये च- இஷ்ட வஸ்துவிலும், न धीयते- வைக்கப்படவில்லை, (अतः- ஆகையினால்), हे अनघ- குற்றமற்றவரே! मत्कृते- எனக்காக, तव- உமக்கு, दुःखं- துக்கமானது, व्यपैतु- போகட்டும.

56. (பொ-ரை) மஹாராஜரே! என்னால் விடப்பட்ட பர்வத ஸமூஹங்களோடும், அநேக நகரங்களோடும், வனஙகளோடும் கூடின க்ஷேமகரமான நல்ல எல்லைகளை உடைய இந்த பூமியை முழுவதும் பரதன் ஆளட்டும். நீர் கைகேயிக்கு சொன்னபடியே நடக்கட்டும்.

57. (பொ-ரை) குற்றமற்றவரான அரசனே! பெரியோர்கள் (ஸம்மதமான) ஒப்புக்கொள்ளத்தகுந்த உம்முடைய ஆக்ஞையை நடத்துவதில் என்மனம் செல்லுவதுபோல, பெரிதான காமபோகங்களிலும், எனக்குப்பிரியமான வஸ்துவிலும் மனம் செல்லவில்லை, ஆகையால் நீர் எனக்காகதுக்கப்படவே வேண்டாம்.

तदद्य नैवानघ राज्यमव्ययं न सर्वकामान्न सुखं न मैथिलीम् ।
न जीवितं त्वामनृतेन योजयन्वृणीय सत्यं व्रतमस्तु ते तथा ॥ 58 ॥
फलानि मूलानि च भक्षयन्वने गिरींश्च पश्यन्सरितस्सरांसि च ।
वनं प्रविश्यैव विचित्रपादपं सुखी भविष्यामि तवास्तु निर्वृतिः ॥ 59 ॥
एवं स राजा व्यसनाभिपन्नः शोकेन दुःखेन च ताम्यमानः ।
आलिङ्ग्य पुत्रं सुविनष्टसंज्ञो मोहं गतो नैव चिचेष्ट किंचित् ॥ 60 ॥

58. (ப-ரை) हे अनघ- *தோஷமில்லாதவரே!* तत्- *ஆகையால்,* अद्य- *இப்பொழுது,* त्वां- *உம்மை,* अनृतेन- *பொய்யோடு,* योजयन्- *சேரும்படி செய்துகொண்டு,* अव्ययं- *அழிவில்லாத,* राज्यं- *இராஜ்யத்தை,* न एव वृणीय - *விரும்பவேமாட்டேன்,* सर्वकामान्- *இஷ்டமான எல்லா வஸ்துக்களையும்,* न- *விரும்பமாட்டேன்,* सुखं- *ஸுகத்தையும்,* न- *விரும்பமாட்டேன்,* मैथिलीम्- *ஸீதையையும்,* न- *விரும்பமாட்டேன்,* जीवितं- *ப்ராணனையும்,* न- *விரும்பமாட்டேன்,* ते- *உம்முடைய,* व्रतं- *வ்ரதமானது,* तथा- *அப்படியே,* सत्यं- *ஸத்யமாக,* अस्तु- *இருக்கட்டும்.*

59. (ப-ரை) विचित्रपादपं- *விசித்ரமான வ்ருக்ஷங்களையுடைய,* वनं- *வனத்தை,* प्रविश्य एव- *ப்ரவேசித்து,* वने- *அந்த வனத்தில்,* फलानि- *பழங்களையும,* मूलानि च- *வேறுகளையும்,* भक्षयन् सन्- *புஜித்துக்கொண்டும்,* गिरीन्- *பர்வதங்களையும,* सरितः- *நதிகளையும்,* सरांसि च- *தடாகங்களையும்,* पश्यन् च- *பார்த்துக்கொண்டும,* सुखी- *ஸுகமாக,* भविष्यामि- *இருப்பேன்,* तव- *உமக்கு,* निर्वृतिः- *ஸுகமானது,* अस्तु- *உண்டாகட்டும்.*

60. (ப-ரை) एवं- *இவ்விதம (சொல்லுகின்ற),* पुत्रं- *புத்ரனை,* सः राजा- *அவ்*

58. (பொ-ரை) *தோஷமில்லாதப்ரபுவே! இப்பொழுது நான் உம்மை பொய் சொன்னவராகச்செய்து விட்டு குறைவற்ற இந்த இராஜ்யத்தையும ஸர்வ காமங்களையும், ஸுகத்தையும், ஸீதையையும பிழைத்திருக்கவேண்டுமென்பதையும் விரும்பவேமாட்டேன். நீர் கைகேயிக்கு சொன்னபடி உம்முடைய வ்ரதம ஸத்தியமாகவே இருக்கவேண்டும்.*

59. (பொ-ரை) *விசித்திரமான வ்ருக்ஷங்களையுடைய வனத்திற்குப்போய் காட்டிலிருக்கிற காய் கனிகளையும் கிழங்கு வேர் முதலியவைகளையும் புஜித்துக் கொண்டு அங்கிருக்கும் பர்வதங்களையும், நதிகளையும், தாமரைத்தடாகங்களையும் பார்த்துக்கொண்டே ஸுகமாகவிருப்பேன், ஆகையால் நீர் விசாரமில்லாமல் ஸுகமாகவேஇருக்கவேண்டும்.*

60. (பொ-ரை) *இவ்விதம் சொல்லுகின்ற புத்திரனை, மஹாராஜா நன்றாய்*

---

शोकं- *சரீரத்தில் தாபத்தை உண்டாக்கக்கூடியது.*
दुःखं- *மனதில் கஷ்டத்தை உண்டுபண்ணக்கூடியது.*

देव्यस्ततः संरुरुदुः समेतास्तां वर्जयित्वा नरदेवपत्नीम् ।
रुदन्सुमन्त्रोऽपि जगाम मूर्छां हाहाकृतं तत्र बभूव सर्वम् ॥ 61 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे

चतुस्त्रिंशः सर्गः ॥ 34 ॥

வாசன், आलिङ्य- கட்டி அணைத்துக்கொண்டு, व्यसनाभिपन्नः- வ்யஸனத்தினுல் பீடிக்கப் பட்டவராய், शोकेन- சோகத்தினுலும், दुःखेन च- துக்கத்தினுலும், ताम्यमानः- வாட்ட மடைந்தவராய், सुविनष्टसंज्ञः- நன்றாய் ப்ரக்ஞையை இழந்தவராய், मोहं गतः- மயக் கத்தை அடைந்து, किंचित्- சிறிதேனும், न एव चिचेष्ट- கைகால் அசையாமல் இருந்து விட்டார்.

61. (ப-ரை) ततः- பிறகு, तां- அந்த, नरदेवपत्नीम्- இராஜபத்நியான கைகேயி யை, वर्जयित्वा- தவிற, देव्यः- இராஜபத்நிகள் எல்லோரும், समेताः सत्यः- ஒன்றுசேர்ந் துகொண்டு, संरुरुदुः- அழுதார்கள், सुमन्त्रः अपि- ஸுமந்த்ரரும், रुदन् सन्- அழுதுகொ ண்டு, मूर्छां जगाम- மூர்ச்சையை அடைந்தார், तत्र- அங்கு, सर्वं- மற்ற எல்லா பரிஜன மும், हाहा कृतं- ஹா ஹா காரத்தை செய்துகொண்டதாக, बभूव- இருந்தது.

அணைத்துக்கொண்டு வ்யஸனத்தால் பீடிக்கப்பட்டு, சோகத்தினுலும், துக்கத் தினுலும் வாட்டமடைந்து நினைவுமாறி மயக்கமடைந்து கை கால் ஒன்றும் அசைவு அற்றுஇருந்தார்.

61. (பொ-ரை) பிறகு, அந்த இராஜபத்னியான கைகேயி ஒருவள் தவிற மற்ற இராஜபத்னிகள் எல்லோரும் ஒன்றுசேர்ந்துகொண்டு அழுதார்கள், அங்கு இருந்த ஸுமந்த்ரரும் துக்கத்தினுல் அழுதுகொண்டு ப்ரஜ்ஞைஇழந்துவிட்டார். மற்ற பரிஜனங்கள்எல்லோரும் ஹா! ஹா! என்று கதறினுர்கள்.

पञ्चत्रिंशः सर्गः ॥ 35 ॥

ततो निर्धूय सहसा शिरो निःश्वस्य चासकृत् ।
पाणिं पाणौ विनिष्पिष्य दन्तान्कटकटाप्य च ॥ 1 ॥

लोचने कोपसंरक्ते वर्णं पूर्वोचितं जहत् ।
कोपाभिभूतः सहसा सन्तापमशुभं गतः ॥ 2 ॥

मनः समीक्षमाणश्च सूतो दशरथस्य सः ।
कम्पयन्निव कैकेय्या हृदयं वाक्छरैः शितैः ॥ 3 ॥

वाक्यवज्रैरनुपमैर्निर्भिन्दन्निव चाशुगैः ।
कैकेय्याः सर्वमर्माणि सुमन्त्रः प्रत्यभाषत ॥ 4 ॥

1—2—3—4. (ப-ரை) ततः- பிறகு, सः सूतः- அந்த ஸாரதியான, सुमन्त्रः- ஸுமந்த்ரர், सहसा- திடீரென்று, शिरः- தலையை, असकृत्- அடிக்கடி, निर्धूय- அசைத்து, निःश्वस्य च- பெருமூச்சு விட்டுக்கொண்டு, पाणौ- கையில், पाणिं- கையை, विनिष्पिष्य- பிசைந்தும், दन्तान्- பற்களை, कटकटाप्य च- கடகடவென்ற சப்தம் உண்டாகும்படி கடித்து, लोचने- கண்களை- कोपसंरक्ते- கோபத்தினால் சிவந்ததாகச்செய்து, पूर्वोचितं- முன்னிருந்த, वर्णं- தேஹ காந்தியை, जहत्- விட்டவராய, सहसा- திடீரென்று, कोपाभिभूतः- கோபத்தினால் அடக்கப்பட்டவராய்க்கொண்டு, अशुभं- தீவ்ரமான, सन्तापं- மனவருத்தத்தை, गतः- அடைந்தவராகி, दशरथस्य- தசரதருடைய, मनः- மனதை, समीक्षमाणः च- நன்றாய் பார்த்துக்கொண்டும, कैकेय्याः- கைகேயியினுடைய, हृदयं- மனதை, शितैः- க்ரூரமான, वाक्छरैः- வார்த்தைகளாகிற பாணங்களால், कम्पयन् इव- நடுங்கும்படிசெய்பவர்போல, अनुपमैः- நிகரற்ற, आशुगैः इव- பாணங்கள் போன்ற, वाक्यवज्रैः- ஸாரமான சொற்களால், कैकेय्याः- கைகேயியினுடைய, सर्वमर्माणि- உயிர்நிலைபோன்ற எல்லாதோஷங்களையும, निर्भिन्दन्- ப்ரகாசப்படுத்திக்கொண்டு, प्रत्यभाषत- பதில்சொன்னார்.

---

1-2-3-4. (பொ-ரை) பிறகு, அந்த ஸாரதியான ஸுமந்த்ரர், திடீரென்று தலையை அசக்கிக்கொண்டும், அடிக்கடி பெருமூச்செறிந்துகொண்டும, கையில் கையைப்பிசைந்துகொண்டும், கடகட வென்றுசப்தம் உண்டாகும்படி பற்களைக்கடித்துக்கொண்டும, கோபத்தினல்கண்களை சிவக்கும்படி செய்துகொண்டு, ஏற்கனவே இருந்த தேஹவர்ணத்தை விட்டு விட்டு அதிக கோபங்கொண்டவராய், கொடிய ஸந்தாபத்தை அடைந்து தசரதருடைய மனது, கைகேயியினிடம் ப்ரியமில்லையென்பதையும் நன்றாய் அறிந்து மிகவும கூர்மையானசொற்களாகிய பாணங்களால், கைகேயியின் பலஹீதமானதோஷங்களை வெளிப்படுத்திக்கொண்டு அவளைப்பார்த்து பதில் சொல்லுகிறார்.

यस्यास्तव पतिस्त्यक्तो राजा दशरथः स्वयम् ।
भर्ता सर्वस्य जगतः स्थावरस्य चरस्य च ॥
न ह्यकार्यतमं किंचित्तव देवीह विद्यते ॥ 5 ॥

पतिघ्नीं त्वामहं मन्ये कुलघ्नीमपि चान्ततः ॥ 6 ॥

यन्महेन्द्रमिवाजय्यं दुष्प्रकम्प्यमिवाचलम् ।
महोदधिमिवाक्षोभ्यं सन्तापयसि कर्मभिः ॥ 7 ॥

---

5. (ப-ரை) हे देवि- மஹாராணியே! स्थावरस्य- ஸ்தாவரமாயும், चरस्य च- ஜங்கமமாயும் இருக்கிற, सर्वस्य- जगतः- எல்லா உலகத்திற்கும், भर्ता- பர்த்தாவாயும், राजा- அரசனுமான, यस्याः तव- யாதொரு உனக்கும், पतिः- கணவனுமான, दशरथः- தசரத மஹாராஜன், (त्वया- உன்னால்), स्वयं- தானாகவே, त्यक्तः- விடப்பட்டாரோ, तस्याः तव- அந்த உனக்கு, इह- இவ்வுலகத்தில், अकार्यतम- செய்யத்தகாத காரியமானது, किंचित् अपि- ஒன்றும், न विद्यते हि- இல்லையல்லவா!

6–7. (ப-ரை) महेन्द्रं इव- மஹேந்திரனைப்போல், अजय्यं- ஒருவராலும் ஜயிக்க முடியாதவரும், अचलं इव- பர்வதத்தைப்போல், दुष्प्रकम्प्यं- அசைக்கமுடியாதவரும், महोदधिं इव- பெருங் கடலைப்போல், अक्षोभ्यं- கலக்கமுடியாதவருமான அரசனை, कर्मभिः- கொடிய காரியங்களினால், यत् संतापयसि- யாதொரு காரணத்தினால் வருத்தப் படுத்துகின்றீரோ, तत्- ஆகையால், त्वां- உம்மை, अहं- நான், पतिघ्नीं- கணவனைக் கொலை செய்கிறவளாக, मन्ये- நினைக்கிறேன், अन्ततः- கடைசியாக, कुलघ्नीं अपि च- குலத்தை அழிக்கின்றவளாகவும், मन्ये- எண்ணுகிறேன்.

5. (பொ-ரை) மஹாராணியே! ஸ்தாவரமாயும், ஜங்கமமாயுமுள்ள இந்த உலகம் முழுவதையும் காப்பாற்றுகின்றவரும் உமக்குக்கணவனுமான, தசரதமகாராஜனை கூசாமல் கைவிட்ட உமக்கு, இவ்வுலகத்தில் செய்யத்தகாத காரியம் ஒன்றுமேஇல்லை.

6-7. (பொ-ரை) தேவேந்திரனைப்போல் ஒருவராலும் ஜயிக்கமுடியாதவரும், பர்வதத்தைப்போல் அசைக்கமுடியாதவரும், பெருங் கடலைப்போல் கலக்கமுடியாதவருமான மஹாராஜனை நீர் இப்படிப்பட்ட கொடிய காரியங்களைச்செய்து வருத்தப்படுத்துகிறபடியால், உம்மை நான் பர்த்தாவைக்கொல்லுகிறவளென்றும், கடைசியாக குலத்தையே அழிக்கிறவளென்றும் எண்ணுகின்றேன்,

आम्रं छित्त्वा कुठारेण निम्बं परिचरेत्तु यः ।
यश्चैनं पयसा सिञ्चेन्नैवास्य मधुरो भवेत् ॥ 14 ॥
अभिजातं हि ते मन्ये यथा मातुस्तथैव च ।
न हि निम्बात्स्रवेत् क्षौद्रं लोके निगदितं वचः ॥ 15 ॥
तव मातुरसद्ग्राहं विद्मः पूर्वं यथा श्रुतम् ॥ 16 ॥

---

14. (ப-ரை) यः- யாரொருவன், आम्रं- மாமரத்தை, कुठारेण- கோடாலியி ஞல், छित्त्वा- வெட்டிவிட்டு, निम्बं- வேப்பமரத்தை, परिचरेत् तु- (பாத்தி முதலானவை கட்டி) ரக்ஷிப்பானே, यः च- யாவனொருவன், एनं- இந்த மரத்தை, पयसा- பாலிஞல், सिञ्चेत्- நனைப்பனே, तस्य- அவனுக்கு, (अयं- இந்தவேப்பமரமானது), मधुरः- ருசியுள்ள பலத்தை கொடுக்கிறதாக, न भवेत् एव- ஆகவேமாட்டாது.

15. (ப-ரை) ते मातुः- உம் தாயாரினுடைய, अभिजातं- ஸ்வபாவமானது, यथा- எப்படியோ, तथैव- அப்படியே, तव- உம்முடைய, अभिजातं- ஸ்வபாவத்தையும், मन्ये- எண்ணுகிறேன், निम्बात्- வேப்பமரத்திலிருந்து, क्षौद्रं- தேன், न स्रवेत्- பெருகாது, (என்று), लोके- உலகத்தில், वचः- பழமொழியானது, निगदितं हि- சொல்லப்பட்டிருக்கிறதல்லவா.

16. (ப-ரை) तव मातुः- உம் தாயாருக்கு, असद्ग्राहं- கெட்ட பிடிவாதத்தை, पूर्वं- முன் காலத்தில், यथा- எவ்விதமாக, श्रुतम्- கேழ்க்கப்பட்டதோ, तथा- அப்படி, विद्मः- அறிகிறோம (நினைக்கிறோம்).

---

14. (பொ-ரை) யாவனொருவன் ருசியுள்ளபழத்தைக்கொடுக்கக்கூடிய கட்டு மாமரத்தைக் கோடாலியினுல் வெட்டிவிட்டு, கசப்புப்பழத்தைக் கொடுக்கக்கூடிய வேப்பமரத்தைவைத்து பாத்தி முதலானதுகள் கட்டி பாலை பாய்ச்சிவருகிருனே அவனுக்கு இந்த வேப்பமரமானது ஒருகாலமும மாமரம போல் ருசியுள்ள பலம கொடுக்காது.

அதாவது:—நல்லகுணமுள்ள ஸ்ரீராமனை வரன் என்கிற வ்யாஜத்தினுல் காட்டிற்குத்துறத்திவிட்டு கைகேயியின் மனதை தசரதமஹாராஜா அநுஸரிப்பது யுக்தமன்று. என்கிற அர்த்தம் ஏற்படுகிறது.

15. (பொ-ரை) உம தாயாருடைய ஸ்வபாவம் எப்படிப்பட்டதோ அப்படியே தான் உம்முடைய ஸ்வபாவமும் இருக்கிறது என்று நான் எண்ணுகிறேன். (காரணத்தின் குணத்தை அநுஸரித்ததன்றோ கார்யத்தின் குணம்.) உலகத்திலும் கூட வேம்பிலிருந்து தேன் பெருகாதென்று பழமொழியும சொல்லப்பட்டிருக்கிறது அல்லவா.

16. (பொ-ரை) உம் தாயாருக்கும் இவ்விதம் கெட்ட பிடிவாதம் உண்டு என்பதை பெரியோரிடத்தில் கேட்டிருக்கிறோம். அது இப்பொழுது நினைவுக்கு வந்தது.

पितुस्ते वरदः कश्चिद्ददौ वरमनुत्तमम् ।
सर्वभूतरुतं तस्मात्संजज्ञे वसुधाधिपः ॥
तेन तिर्यग्गतानां च भूतानां विदितं वचः ॥ 17 ॥
ततो जृम्भस्य शयने विरुताद्भूरिवर्चसः ।
पितुस्ते विदितो भावः स तत्र बहुधाऽहसत् ॥ 18 ॥
तत्र ते जननी क्रुद्धा मृत्युपाशमभीप्सती ।
हासं ते नृपते सौम्य जिज्ञासामीति चाब्रवीत् ॥ 19 ॥

---

17. (ப-ரை) कश्चित् वरदः- வரம் கொடுக்கின்ற ஒரு யோகி, ते पितुः- உம்முடைய பிதாவுக்கு, अनुत्तमम्- ச்ரேஷ்டமான, वरं- ஒரு வரத்தை, ददौ- கொடுத்தார், तस्मात्- அதினால், वसुधाधिपः- உம்முடைய தகப்பனரான மஹாராஜர், सर्वभूतरुतं- எல்லா ப்ராணிகளுடைய பேச்சையும், संजज्ञे- நன்றாய் அறிந்திருந்தார், तेन- அவரால், तिर्यग्गतानां- திர்யக் ஜாதிகளாகிய, भूतानां- (ஈ, எறும்பு முதலான) ப்ராணிகளுடைய, वचः- பேச்சு, विदितं- அறியப்பட்டிருந்தது.

18. (ப-ரை) ततः- பிறகு, भूरिवर्चसः- அதிகமான தேஜஸ்ஸையுடைய, ते पितुः- உம் தகப்பனருக்கு, शयने- கட்டிலின் கீழே, जृम्भस्य- (போகின்ற) ஒரு எறும்பினுடைய, भावः- பேச்சின் கருத்தானது, विदितः- அறியப்பட்டது, सः- அவர், तत्र- அவ்விஷயத்தில், बहुधा- பலதடவைகள், अहसत्- சிரித்தார்.

19. (ப-ரை) तत्र- அவ்விஷயத்தில், मृत्युपाशं- யமபாசத்தை, अभीप्सती- ஆசைப்பட்டவளாய், क्रुद्धा- கோபங்கொண்டு, ते जननी- உம்முடைய தாயார், हे सौम्य- ஸௌமுகரான, नृपते- மஹாராஜரே, ते- உம்முடைய, हासं- சிரிப்பின் காரணத்தை, जिज्ञासामि- அறிய விரும்புகிறேன், इति च- என்றும், अब्रवीत्- சொன்னாள்.

---

17. (பொ-ரை) எல்லோருக்கும் வரம் கொடுக்க சக்தியுள்ள ஒரு யோகி உம்முடைய பிதாவுக்கு உயர்ந்ததான ஒரு வரம் கொடுத்தார். அதினால் அவ்வரசன் ஸர்வப்ராணிகளுடைய பேச்சையும் அறிந்திருந்தார். அந்த அரசனால் திர்யக் ஜாதியான ஈ எறும்பு முதலான ப்ராணிகளின் பேச்சும் அறியப்பட்டிருந்தது.

18. (பொ-ரை) பிறகு, ஸர்வப்ராணிகள் பேச்சை அறிந்த மகாப்ரபாவமுள்ள உம்முடைய தகப்பனர் ஒரு நாள் தான் படுத்திருக்கும் கட்டிலின் கீழே செல்லுகின்ற எறும்பினுடைய பேச்சின் கருத்து தெரிய, அதின் விஷயமாய் அவர் இரண்டு மூன்று தடவை சிரித்தார்.

19. (பொ-ரை) அந்த ஸமயத்தில் உம்முடைய பிதாவுடன் கூட இருந்த உம்முடைய தாயார், பிதா சிரித்ததின் கருத்தை அறியாமல், தன்னைப்பார்த்து சிரித்ததாக எண்ணி ம்ருத்யுபாசத்தை தன் கழுத்தில் போட்டுக்கொள்ள விரும்பி கோபமுள்ளவளாய், பர்த்தாவைப்பார்த்து, ஸௌமுகரான மஹாராஜரே! நீர் சிரித்ததின் கருத்தைத்தெரிய விரும்புகிறேன், என்று கேட்டாள்.

नृपश्चोवाच तां देवीं देवि शंसामि ते यदि।
ततो मे मरणं सद्यो भविष्यति न संशयः ॥ 20 ॥
माता ते पितरं देवि ततः केकयमब्रवीत्।
शंस मे जीव वा मा वा न मामपहसिष्यसि ॥ 21 ॥
प्रियया च तथोक्तः सन् केकयः पृथिवीपतिः।
तस्मै तं वरदायार्थं कथयामास तत्त्वतः ॥ 22 ॥

20. (ப-ரை) हे देवि- தேவியே! ते- உனக்கு, शंसामि यदि- (சிரிப்பின் காரணத்தை) சொல்லுவேனேயானால், ततः- அதனால், मे- எனக்கு, सद्यः- உடனே, मरणं- மரணம், भविष्यति- உண்டாகும், न संशयः- இதில் ஸந்தேஹமில்லை, (इति- என்று), नृपः च- அரசனும், तां देवीं- அந்த ராஜமஹிஷியைப்பார்த்து, उवाच- சொன்னார்.

21. (ப-ரை) हे देवि- இராஜமஹிஷியே! ततः- பிறகு, ते माता- உம்முடைய தாயார், पितरं- உம்முடைய பிதாவான, केकयं- கேகய மஹாராஜாவைப்பார்த்து, जीव वा- (அதனால்) நீர் பிழைத்தாலும் ஸரி, मा वा- அப்படிச்செல்லாமல் மரித்தாலும ஸரி, मे- எனக்கு, शंस- (சிரிப்பின் காரணத்தைச்) சொல்லும், मां- என்னை, न अपहसिष्यसि- பரிஹாஸம் பண்ணுமல் இருக்கிறீரென்று தெரிய விரும்புகிறேன், इति- என்று, अब्रवीत्- சொன்னாள்.

22. (ப-ரை) प्रियया- தன்னுடைய பத்தினியினால், तथा- அப்படி, उक्तः- சொல்லப்பட்ட, सः- அந்த, केकयः पृथिवीपतिः च- கேகய மஹாராஜரும், वरदाय तस्मै- (தனக்கு) வரம் கொடுத்த அந்த ரிஷியின் பொருட்டு, तं अर्थं- அந்த வ்ருத்தாந்தத்தை, तत्त्वतः- உண்மையாக, कथयामास- சொன்னார்.

20. (பொ-ரை) தேவி! இதன் காரணத்தை உனக்குச்சொல்லுவேனேயானால் உடனே நான் மரித்துவிடுவேன், இதில் ஸந்தேஹமில்லை, என்று அரசனும தன் பத்னியைப்பார்த்துச் சொன்னார்,

21. (பொ-ரை) தேவி! உம்முடைய மாதாவும், உம்முடைய பிதாவான கேகய மஹாராஜாவைப்பார்த்து, நீர் பிழைத்தாலும ஸரி, மரித்தாலும் ஸரி, சிரித்ததின் காரணத்தை எனக்குச் சொல்லவேணும, ஏனென்றால், என்னை நீர் பரிஹாஸம் செய்யாமல்இருக்கிறீரா என்பதைத் தெரிந்துகொள்வதற்காக, என்று சொன்னாள்.

22. (பொ-ரை) இவ்விதம் தன் பத்தினியினால் சொல்லப்பட்ட கேகயமஹாராஜரும், தனக்கு வரம் கொடுத்த அந்த ரிஷியினிடம்சென்று இந்தவ்ருத்தாந்தத்தை உண்மையாகச் சொன்னார்,

ततः स वरदः साधू राजानं प्रत्यभाषत ।
म्रियतां ध्वंसतां वेयं मा कृथास्त्वं महीपते ॥ 23 ॥
स तच्छ्रुत्वा वचस्तस्य प्रसन्नमनसो नृपः ।
मातरं ते निरस्याशु विजहार कुबेरवत् ॥ 24 ॥
तथा त्वमपि राजानं दुर्जनाचरिते पथि ।
असद्ग्राहमिमं मोहात्कुरुषे पापदर्शिनि ॥ 25 ॥

---

23. (ப-ரை) ततः- பிறகு, सः- அந்த, वरदः- வரம் கொடுத்தவரான, साधुः- ஸாதுவான ரிஷியும், राजानं- கேகய ராஜாவைப்பார்த்து, हे महीपते- வாரீர் மஹா ராஜனே! इयं- இவள், म्रियतां- மரிக்கட்டும், ध्वंसतां- தன்னுடைய அதிகாரத்திலிருந்து நழுவட்டும், त्वं- நீர், मा कृथाः- (அவள் வார்த்தையை) செய்யவேண்டாம், (इति- என்று), प्रत्यभाषत- பதில் சொன்னார்.

24. (ப-ரை) सः नृपः- அந்த கேகய மஹாராஜர், प्रसन्नमनसः- தெளிந்த மனதை உடையவரான, तस्य- அந்த ரிஷியினுடைய, तत् वचः- அந்த வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, ते मातरं- உன் தாயாரை, आशु- சீக்ரமாக, निरस्य- தள்ளிவிட்டு, कुबेरवत्- குபேரன்போல், विजहार- விளையாடிக்கொண்டிருந்தார்.

25. (ப-ரை) हे पापदर्शिनि- கெட்ட எண்ணமுடையவளே! त्वं अपि- நீயும், तथा- அப்படி, दुर्जनाचरिते- கெட்ட ஜனங்களால் நடக்கப்பட்ட, पथि- வழியில், (स्थिता सती- இருந்துகொண்டு), मोहात्- அஜ்ஞானத்தினால், इमं राजानं- இந்த மஹாராஜனை, असद्ग्राह- கெட்ட பிடிவாதத்தை அநுஷ்டிப்பவராக, कुरुषे- செய்கிறாய்.

---

23. (பொ-ரை) பிறகு, வரம் கொடுத்த அந்த ஸாதுவும், கேகயமஹாராஜாவைப்பார்த்து, மஹாராஜனே! "உம்முடைய மரணத்தைகவனிக்காமல் தனக்குச் சொல்லவேணுமென்று நிர்ப்பந்திக்கின்ற இந்த ஸ்த்ரீ மரித்தாலும் ஸரி, அழிந்து விட்டாலும்ஸரி, அவள் இஷ்டப்படி நீர் செய்யவே வேண்டாம்", என்று சொன்னார்.

24. (பொ-ரை) பிறகு கேகயமஹாராஜரும் தெளிந்த மனதுடைய அந்த ஸாதுவின் வார்த்தையைக் கேட்டு உன் தாயாரைஉடனே துறத்திவிட்டு, குபேரன் போல் ஸந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தார்.

25. (பொ-ரை) கெட்ட எண்ணமுடையவளே! நீயும் உன் தாயாரைப் போல் துர்ஜனர்கள் நடந்த வழியில் நடந்துகொண்டு அஜ்ஞானத்தினால் இந்தமஹா ராஜாவுக்கு புத்தியைமயக்கி நீ பிடித்த பிடிவாதத்தைச் செய்யும்படியாகச்செய்கிறாய்.

सत्यश्चाद्य प्रवादोऽयं लौकिकः प्रति भाति मा ।
पितॄन्समनुजायन्ते नरा मातरमङ्गनाः ॥ 26 ॥
नैवं भव गृहाणेदं यदाह वसुधाधिपः ।
भर्तुरिच्छामुपास्वेह जनस्यास्य गतिर्भव ॥ 27 ॥
मा त्वं प्रोत्साहिता पापैर्देवराजसमप्रभम् ।
भर्तारं लोकभर्तारमसद्धर्ममुपादधाः ॥ 28 ॥

---

26. (ப-ரை) नराः- புருஷர்கள், पितॄन्- பிதாவை, सम् अनुजायन्ते- அநுஸரித்துப்பிறக்கின்றார்கள், अङ्गनाः- பெண்கள், मातरं- தாயாரை, सं अनु जायन्ते- அநுஸரித்துப்பிறக்கின்றார்கள், इति- என்கிற, अयं- இந்த, लौकिकः- உலகத்தில் வழங்கிவருகிற, प्रवादः- ஜனவாதமானது, अद्य- இப்பொழுது, मा- என் பொருட்டு, सत्यः च- ஸத்யமாக, प्रतिभाति- தோன்றுகிறது.

27. (ப-ரை) एवं- இவ்விதமாக, न भव- இருக்கவேண்டாம், वसुधाधिपः- அரசன், यत् आह- எதைச்சொல்லுகிறாரோ, इदं- இதையே, गृहाण- கைப்பிடி, भर्तुः- கணவனுடைய, इच्छां- இஷ்டத்தை, उपास्व- அநுஸரித்து நட, इह- இப்பொழுது, अस्य जनस्य- இந்த ஜனத்திற்கு, गतिः- கதியாக, भव- ஆகக்கடவாய்.

28. (ப-ரை) त्वं- நீ, पापैः- பாபிகளால், प्रोत्साहिता सती- தூண்டப்பட்டவளாய்க்கொண்டு, देवराजसमप्रभम्- தேவராஜனுக்கு ஸமானமான சோபையை உடையவரும, लोकभर्तारं- உலகங்களுக்கெல்லாம் போஷகராயும், भर्तारं- உனக்கும் கணவனுமான மஹாராஜனை, असद्धर्मं- இந்தக்கெட்ட கார்யத்தை, मा उपादधाः- செய்யுபபடி செய்யவேணடாம

26. (பொ-ரை) பிள்ளைகள் பிதாவை அநுஸரித்தும், பெண்கள் மாதாவை அநுஸரித்தும், பிறக்கிறார்கள் என்று உலகத்தில் வழங்கி வருகின்ற இந்த பழமொழியானது உண்மை என்று இப்போது எனக்கு நன்றாய்த்தோன்றுகிறது.

27. (பொ-ரை) நீ இவ்விதம் இருக்கவேண்டாம, ஆகையால் நீ உன் தாயாரைப்போல் இராமல் அரசன் சொல்லியபடி, அதாவது நாளையதினம் புஷ்ய நக்ஷத்திரத்தில் நம்முடையகுழநதையான இராமனுக்குப் பட்டாபிஷேகம் என்று சொல்லியிருநதாரல்லவா, அநத வார்த்தையையே, நீயும் கைப்பிடித்து பர்த்தாவினுடைய இஷ்டப்ரகாரம் நடக்கவேண்டும், அதுவுமல்லாமல் இங்கு வந்திருக்கிற ஸமஸ்த ஜனங்களுக்கும் நீ கதியாகவும் ஆகவேணும்.

28 (பொ-ரை) நீர் பாபிகளுடைய வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டு, தேவராஜன் போன்ற ப்ரபாவமுடையவரும், லோகரக்ஷகருமா, உனக்கு பர்த்தாவுமான இந்த மஹாராஜனை, கனிஷ்டனுக்கு பட்டாபிஷேகம் செய்வதும், ஜேஷ்டனை காட்டிற்குதுரத்துவதும் ஆகிய இநத கெட்டகார்யததைச் செய்யும்படியாக நிர்பந்திக்க வேண்டாம.

न हि मिथ्या प्रतिज्ञातं करिष्यति तवानघः ।
श्रीमान्दशरथो राजा देवि राजीवलोचनः ॥ 29 ॥
ज्येष्ठो वदान्यः कर्मण्यः स्वधर्मपरिरक्षिता ।
रक्षिता जीवलोकस्य बली रामोऽभिषिच्यताम् ॥ 30 ॥
परिवादो हि ते देवि महाँल्लोके चरिष्यति ।
यदि रामो वनं याति विहाय पितरं नृपम् ॥ 31 ॥

29. (ப-ரை) हे देवि- தேவி! राजीवलोचनः- செந்தாமரைக் கண்ணாயும், श्रीमान्- அழகுள்ளவராயும், अनघः- குற்றமற்றவருமான, दशरथः राजा- தசரதமஹாராஜர், तव- உனக்கு, प्रतिज्ञातं- ப்ரதிஜ்ஞை செய்திருந்ததை, मिथ्या- பொய்யாக, न करिष्यति- செய்யமாட்டார்.

30. (ப-ரை) ज्येष्ठः- ஜ்யேஷ்ட குமாரரும், वदान्यः- தானசீலராயும், कर्मण्यः- ஸத்கர்மங்களைச்செய்கின்றவரும், स्वधर्मपरिरक्षिता- தன்னுடைய தர்மத்தைக் காப்பாற்றுகின்றவரும், जीवलोकस्य- ப்ராணி ஸமூஹத்தை, रक्षिता- ரக்ஷிக்கின்றவராயும், बली- பலமுள்ளவருமான, रामः- ஸ்ரீராமன், अभिषिच्यताम्- பட்டாபிஷேகம் செய்விக்கப்படட்டும்.

31. (ப-ரை) हे देवि- தேவி! रामः- ஸ்ரீராமன், पितरं- பிதாவான, नृपम्- மஹாராஜரை, विहाय- விட்டுவிட்டு, वनं- வனத்தைக்குறித்து, याति यदि- போவானேயானால், लोके- உலகத்தில், ते- உனக்கு, महान्- பெரிதான, परिवादः- அபவாதம், चरिष्यति हि- பரவிவிடுமல்லவா!

29. (பொ-ரை) ஹே தேவி! "ஆனால் எனக்கு முன்னம் அரசன்செய்திருந்த ப்ரதிஜ்ஞை பொய்யாகுமே" என்று நீ விசாரப்படவேண்டாம், செந்தாமரைக் கண்ணையும், விசேஷமான அழகுள்ளவரும், குற்றமில்லாதவருமான அவ்வரசன் நீ ஆசைப்படுகிற ராஜ்யத்தைக்காட்டிலும் அதிக மதிப்புடைய தனரத்ன பூஷணம் முதலாகிய ஸம்மானங்களால் உனக்குத்திருப்திசெய்து தான் முன்செய்திருந்த ப்ரதிஜ்ஞையையும் பொய்யில்லாமல் ஸபலமாகச்செய்துவிடுவார்.

30. (பொ-ரை) ஜ்யேஷ்டனும் உதாரனும், ஸத்கர்மங்களை செய்வதில் ஊக்கமுடையவரும் தனக்கேற்பட்ட தர்மமான துஷ்டநிக்ரஹம், சிஷ்டபரிபாலனம் என்கிற தர்மத்தைக்காப்பாற்றுகின்றவரும், ப்ராணி ஸமூஹத்திற்கு ரக்ஷகருமாயும் மிக்க பலசாலியுமான ஸ்ரீராமனுக்கு பட்டாபிஷேகம் செய்ய நீர் அனுமதி கொடுக்கவேணும் அம்மா!

31. (பொ-ரை) தேவி! தன் பிதாவான மஹாராஜரை விட்டுவிட்டு ஸ்ரீராமன் வனம் போவானேயானால், உலகமுழுவதும் உனக்கு பெரிய அபவாதம் பரவிவிடும் அல்லவா!

स राज्यं राघवः पातु भव त्वं विगतज्वरा ।
*न हि ते राघवादन्यः क्षमः पुरवरे वसेत् ॥ 32 ॥
रामे हि यौवराज्यस्थे राजा दशरथो वनम् ।
प्रवेक्ष्यति महेष्वासः पूर्ववृत्तमनुस्मरन् ॥ 33 ॥
इति सान्त्वैश्च तीक्ष्णैश्च कैकेयीं राजसंसदि ।
सुमन्त्रः क्षोभयामास भूय एव कृताञ्जलिः ॥ 34 ॥

32. (ப-ரை) सः राघवः- அந்த ஸ்ரீராமன், राज्य- இராஜ்யத்தை, पातु- ஆளட்டும், त्वं- நீ, विगतज्वरा- ஸந்தாபமில்லாதவளாக, भव- இரு, हि- ஏனென்றால், ते- உன்னுடைய, पुरवरे- பட்டணத்தில், क्षमः- சக்தியுள்ள, राघवात् अन्यः- ஸ்ரீராமனைத்தவிர மற்றொருவன், न वसेत्- வஸிக்கக்கூடாது.

33. (ப-ரை) रामे- ஸ்ரீராமன், यौवराज्यस्थे- யௌவராஜ்யத்திலிருக்கும்காலத்தில், महेष्वासः- பெரிய வில்லாளியான, दशरथः राजा- தசரத மஹாராஜர், पूर्ववृत्तं- தம முன்னோர்களின் நடத்தையை, अनुस्मरन्- நினைத்துக்கொண்டு, वनम्- வனத்தை, प्रवेक्ष्यति हि- ப்ரவேசிக்கப்போகிறாரல்லவா!

34. (ப-ரை) इति- என்று, सुमन्त्रः- ஸுமந்த்ரர், राजसंसदि- அரசன் ஸபையில், सान्त्वैः च- மிருதுவான வார்த்தைகளாலும், तीक्ष्णैः च- கடுமையான வார்த்தைகளாலும், कैकेयीं- கைகேயியை, क्षोभयामास- கலக்கினார், भूय एव- மறுபடியும், कृताञ्जलिः- கை கூப்பினவராய் (இருந்தார்).

---

32. (பொ-ரை) ஆகையால், அந்த ஸ்ரீராமனே இராஜ்யத்தை ஆளவேண்டும். அதனால் நீ மனதில் ஒருவித ஸந்தாபமும் அடையவேண்டாம். ஏனென்றால் உன்னுடைய நகரத்தில் ஸ்ரீராமனைத்தவிர வேறொருவன் சக்தியுள்ளவனாயிருந்தும் வஸிக்கக்கூடாது.

33. (பொ-ரை) ஸ்ரீராமன் யௌவராஜ்யபட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டபிறகு, மஹாசூரனான தசரதமஹாராஜர் இக்ஷ்வாகு முதலான தம முன்னோர்களின் வழக்கத்தை மனதில்வைத்துக் கொண்டு வனப்ரவேசம பண்ணப்போகிறார்.

34. (பொ-ரை) இவ்விதம ஸுமந்த்ரர் அரசன் முன்னிலையில் மிருதுவாயும், கடூரமுமான சொற்களால கைகேயியைக் கலக்கிவிட்டு மறுபடியும் கை கூப்பிக்கொண்டு நின்றார்.

---

राघवात् अन्यः पुरवरे वसन्-ते न क्षमः- இராகவனைத்தவிர இந்நகரத்தில் பரதன் இராஜாவாக வஸிப்பது உனக்குத்தகுதியல்ல. அதாவது கனிஷ்டனை இராஜ்யத்தில் பட்டாபிஷேகம் செய்விப்பது தகுதியல்ல என்றும் ஒரு அர்த்தம.
राघवात् अन्यः पुरवरे वसन् हिते न क्षमः- இராகவனைத்தவிர மற்றவன் இராஜாவாகவந்தால் ஹிதம் செய்வதில் தகுந்தவனல்ல, என்றும் அர்த்தம்.

नैव सा क्षुभ्यते देवी न च स्म परिदूयते ।
न चास्या मुखवर्णस्य विक्रिया लक्ष्यते तदा ॥ 35 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे

पञ्चत्रिंशः सर्गः ॥ 35 ॥

35. (ப-ரை) सा देवी- அந்த தேவியான கைகேயியும், न क्षुभ्यते एव- மனதில் கலக்கத்தையும் அடையவில்லை, न परिदूयते स्म- மனதில் வருத்தத்தையும் அடையவில்லை, तदा- அப்பொழுது, अस्याः- இவளுடைய, मुखवर्णस्य- முகத்தின் வர்ணத்திற்கு, विक्रिया च- விகாரமும், न लक्ष्यते- காணப்படவில்லை.

35. (பொ-ரை) ஸுமந்த்ரர் சொன்ன இவ்வளவு வார்த்தைகளைக்கேட்டும் அந்த கைகேயிதேவி தான் பிடித்தபிடிவாதத்தை விடவேயில்லை, மனதில் அவளுக்கு வருத்தமும் உண்டாகவில்லை, அப்பொழுது அவள் முகத்தின் வர்ணத்திற்கு விகாரமென்கிற மாறுபாடுகள் காணப்படவில்லை.



षट्त्रिंशः सर्गः ॥ 36 ॥

ततः सुमन्त्रमैक्ष्वाकः पीडितोऽत्र प्रतिज्ञया ।
सबाष्पमतिनिश्वस्य जगादेदं पुनः पुनः ॥ 1 ॥

1. (ப-ரை) ततः- பிறகு, अत्र- இந்த வரம் கொடுத்த விஷயத்தில், प्रतिज्ञया- ப்ரதிஜ்ஞையினால், पीडितः- பீடிக்கப்பட்டிருக்கிற, ऐक्ष्वाकः- இக்ஷ்வாகு குலத்தில் பிறந்த தசரதரானவர், सबाष्प यथा तथा- கண்ணீருடன் கூடியிருக்கும்படி, पुनः पुनः- அடிக்கடி, अतिनिश्वस्य- பெருமூச்சு விட்டுக்கொண்டு, सुमन्त्र- ஸுமந்த்ரரைப்பார்த்து, इदं- இந்த வார்த்தையை, जगाद- சொன்னார்.

1. (பொ-ரை) பிறகு கைகேயிக்கு வரம் கொடுத்த விஷயத்தில் ப்ரதிக்ஞை செய்தபடியால் மிகவும் கஷ்டத்தை அடைந்த இக்ஷ்வாகுகுலத்து மன்னவர், கண்களில் நீரைப்பெருக்கி அடிக்கடி பெருமூச்செறிந்துகொண்டு ஸுமந்த்ரரைப் பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

सूत रत्नसुसंपूर्णा चतुर्विधबला चमूः
राघवस्यानुयात्रार्थं क्षिप्रं प्रतिविधीयताम् ॥ 2 ॥
रूपाजीवाश्च षालिन्यो वणिजश्च महाधनाः।
शोभयन्तु कुमारस्य वाहिनीं सुप्रसारिताः ॥ 3 ॥
ये चैनमुपजीवन्ति रमते यैश्च वीर्यतः।
तेषां बहु धनं दत्त्वा तानप्यत्र नियोजय ॥ 4 ॥

2. (ப-ரை) हे सूत- ஸாரதியே! रत्नसुसंपूर्णा- ரத்தினங்களால் நிறைந்ததும், चतुर्विधबला- நான்குவிதமான ஸேனையுடன்கூடிய, चमूः- ஸைன்யமானது, राघवस्य- ஸ்ரீராமனுடைய, अनुयात्रार्थं- அநுயாத்திரை நிமித்தமாக, क्षिप्रं- சீக்கிரம், प्रतिविधीयताम्- அநுப்பப்படவேண்டும்.

3. (ப-ரை) षालिन्यः- பிறர்களுடைய மனதை அபஹரிக்கக்கூடிய இனிய பேச்சுக்களையுடைய, रूपाजीवाः च- வேசிகளும், महाधनाः- அதிக தனமுள்ளவர்களாயும், सुप्रसारिताः- சரக்குகளை விற்பதற்காக பரப்புகின்றவர்களுமான, वणिजः च- வியாபாரிகளும், कुमारस्य- குழந்தையான ஸ்ரீராமனுடைய, वाहिनीं- ஸேனையை, शोभयन्तु- அலங்காரம் செய்யட்டும்.

4. (ப-ரை) ये च- யாதொரு ஜனங்கள், एनं- இந்த ராமனை, उपजीवन्ति- அண்டிப்பிழைக்கின்றார்களோ, (एषः- இந்த ராமனும்), यैः- யாதொரு ஜனங்களால், वीर्यतः- வீர்யம் பரீக்ஷை செய்வதற்காக, रमते- ஸந்தோஷிக்கிறானோ, तेषां- அவர்களுக்கும், बहु धनं- அநேக தனத்தை, दत्त्वा- கொடுத்து, तान्- अपि- அவர்களையும், अत्र- இந்த ஸேனையில், नियोजय- போகும்படி கட்டளை இடும்.

2 (பொ-ரை) ஸாரதியே! ஸ்ரீராமன் காட்டிற்கு போகும் காலத்தில் அவனுடன் போவதற்காக ரத்தினங்கள் நிறைந்த ரத, கஜ, துரக, பதாதி என்கிற நான்கு பிரிவுள்ளதான ஸைன்யத்தையும் சீக்கிரமாக அநுப்பவேண்டும்.

3 (பொ-ரை) பிறர்களுடைய மனதைக்கவரக்கூடிய இனிய பேச்சுக்கள் பேசுகின்ற வேசிமார்களும், அங்கங்கு விலைக்கு விற்கக்கூடிய சரக்குகளை பரப்புகின்றவர்களும் அளவிறந்த தனங்களுமுடைய வியாபாரிகளும், குழந்தையான ஸ்ரீராமனுடன் செல்லுகிற ஸைன்யங்கள் போகும் இடங்களில் போகச்சொல்லவேணும்.

4. (பொ-ரை) எந்த ஜனங்கள் ஸ்ரீராமனை அண்டிப்பிழைக்கின்றார்களோ எந்த ஜனங்களோடு தன் பலத்தைப்பரீக்ஷித்துக்கொள்ளுவதற்காக சேர்ந்து விளையாடுகிறானோ அவர்களுக்கும், தன, தான்ய, வஸ்த்ரம் முதலானவைகளைக்கொடுத்து அவர்களும் இந்த ஸைன்யங்களோடே சேர்ந்து போகவேண்டுமென்று நீர் கட்டளை இடவேண்டும்.

आयुधानि च मुख्यानि नागराः शकटानि च ।
अनुगच्छन्तु काकुत्स्थं व्याधाश्चारण्यगोचराः ॥ 5 ॥
निघ्नन्मृगान्कुञ्जरांश्च पिबंश्चारण्यकं मधु ।
नदीश्च विविधाः पश्यन्न राज्यस्य स्मरिष्यति ॥ 6 ॥
धान्यकोशश्च यः कश्चिद्धनकोशश्च मामकः ।
तौ राममनुगच्छेतां वसन्तं निर्जने वने ॥ 7 ॥

5. (ப-ரை) मुख्यानि- ப்ரதானங்களான, आयुधानि- ஆயுதங்களும், नागराः- நகரத்திலிருக்கின்ற வைச்யர்களும், शकटानि च- வண்டிகளும், अरण्यगोचराः- காட்டில் பழக்கமுள்ள, व्याधाः च- வேடர்களும், काकुत्स्थं- ஸ்ரீராமனை, अनुगच्छन्तु- பின்செல்ல வேண்டும்.

6. (ப-ரை) मृगान्- (காட்டில்) மிருகங்களையும், कुञ्जरान् च- யானைகளையும், निघ्नन्- அடித்துக்கொண்டும், आरण्यकं- காட்டில் உண்டான, मधु- தேனை, पिबन् च- குடித்துக்கொண்டும், विविधाः- நானாவிதங்களான, नदीः- நதிகளை, पश्यन् च- பார்த்துக் கொண்டும், राज्यस्य- இராஜ்யத்தை, न स्मरिष्यति- நினைக்கமாட்டான்.

7. (ப-ரை) मामकः- என்னுடையதான, यः कश्चित्- யாதொரு, धान्यकोशः च- தான்யத்தின் களஞ்சியம் (இருக்கிறதோ), धनकोशः च- பொக்கிஷம் இருக்கிறதோ, तौ- அவ்விரண்டுகளும், निर्जने- ஜனஸஞ்சாரமில்லாத, वने- அரண்யத்தில், वसन्तं- வாஸம் செய்து கொண்டிருக்கிற, रामं- ஸ்ரீராமனை, अनुगच्छेतां- பின் செல்லவேண்டும்.

5. (பொ-ரை) கத்தி, வில் முதலான ஆயுதங்களை தரித்துக்கொண்டு வீரர்களும், நம் நகரத்திலிருக்கிற வியாபாரிகளும், தயிர் பால் எண்ணெய், நெய் முதலிய பதார்த்தங்களுடன் வண்டிகளும், காட்டில் போகும்வழிகளை தெரிவிக்ககூடிய வேடர்களும், ஸ்ரீராமன் போகும்பொழுது கூடவே போகவேண்டும்.

6. (பொ-ரை) ஸ்ரீராமன், காட்டில் ஸஞ்சரிக்கின்ற மிருகங்களையும், யானைகளையும் வேட்டையாடிக்கொண்டும், அரண்யத்திலிருக்கின்ற தேனைக் குடித்துக் கொண்டும், பலவிதங்களான நதிகளைப்பார்த்துக் கொண்டும் வனத்தில் ஸஞ்சரித்தானேயானால், அவனுக்கு இராஜ்யத்தின் நினைவு ஒருங்காலும் உண்டாகாது.

7. (பொ-ரை) ஸுமந்த்ரரே! நமமுடைய அரண்மனையில் களஞ்சியத்திலிருக்கின்ற தான்யங்கள் முழுவதையும், பொக்கிஷத்திலிருக்கின்ற நாணயங்கள் முழுவதையும், வண்டிகளிலும், ஒட்டகைகளிலும் பாரம் ஏற்றி ஸ்ரீராமன் வனவாஸம் செய்ய வனத்திற்குப்போகும் பொழுது அவைகளும் கூடவே போகச்செய்ய வேண்டும்.

यजन्पुण्येषु देशेषु विसृजंश्चाप्तदक्षिणाः ।
ऋषिभिश्च समागम्य प्रवत्स्यति सुखं वने ॥ 8 ॥
भरतश्च महाबाहुरयोध्यां पालयिष्यति ।
सर्वकामैः सह श्रीमान्रामः संसाध्यतामिति ॥ 9 ॥
एवं ब्रुवति काकुत्स्थे कैकेय्या भयमागतम् ।
मुखं चाप्यगमच्छोषं स्वरश्चापि न्यरुध्यत ॥ 10 ॥

8. (ப-ரை) पुण्येषु देशेषु- புண்ய தேசங்களில், यजन्– யாகம் செய்துகொண்டும், आप्तदक्षिणाः- உசிதமான யாக தக்ஷிணைகளை, विसृजन् च- கொடுத்துக்கொண்டும், ऋषिभिः- முனிவர்களோடு, समागम्य च- சேர்ந்தும், वने- வனத்தில், सुखं- ஸுகமாக, प्रवत्स्यति– வாஸம் பண்ணுவான்.

9. (ப-ரை) महाबाहुः- பெரிய தோள்களை உடைய, भरतः च- பரதனும், अयोध्यां- அயோத்யா நகரத்தை, पालयिष्यति- ஆளுவன், श्रीमान्- அழகு பொருந்திய, रामः- ஸ்ரீராமன், सर्वकामैः सह- இஷ்டமான எல்லா வஸ்துக்களுடனும், संसाध्यतां- (வனத்திற்கு) அநுப்பப்படவேண்டும், इति- என்று, (नियोजय- கட்டளையிடவேண்டும்.)

10. (ப-ரை) काकुत्स्थे- தசரதர், एवं- இவ்விதம், ब्रुवति सति- சொல்லும் காலத்தில், कैकेय्याः- கைகேயிக்கு, भयं- பயமானது, आगतम्- வந்து விட்டது, मुखं च अपि- முகமும், शोषं- வாட்டத்தை, अगमत्- அடைந்து விட்டது, स्वरः च अपि- ஸ்வரமும், न्यरुध्यत- தடைபட்டது.

8. (பொ-ரை) கங்காதீரம் முதலாகிய புண்ய தேசங்களில் யாகங்களைச் செய்தும் யாகதக்ஷிணைகளைக்கொடுத்துக்கொண்டும் ரிஷிகளுடன் சேர்ந்தும் ஸுகமாக வனத்தில் வாஸம் பண்ணுவான்.

9. (பொ-ரை) பெரிய தோள்களையுடைய பரதன் அயோத்யா பட்டணத்தை ஆண்டுவரட்டும், மிகவும் அழகுள்ளவனை ஸ்ரீராமனை இஷ்டமான எல்லா வஸ்துக்களுடனும் காட்டிற்கு அனுப்பவேண்டும்; என்று கட்டளை இடும்படியாக ஸுமந்த்ரருக்குச்சொன்னார்.

10. (பொ-ரை) ககுத்ஸ்தகுலத்திற் பிறந்த தசரத மஹாராஜர் இவ்விதம் சொல்லும்பொழுது அதைக்கேட்டு கைகேயி பயந்துவிட்டாள். அவள் முகம் வாடியது. ஸ்வரமும் கிளம்பவில்லை.

सा विषण्णा च सन्त्रस्ता मुखेन परिशुष्यता ।
राजानमेवाभिमुखी कैकेयी वाक्यमब्रवीत् ॥ 11 ॥
राज्यं गतजनं साधो पीतमण्डां सुरामिव ।
निरास्वाद्यतमं शून्यं भरतो नाभिपत्स्यते ॥ 12 ॥
कैकेय्यां मुक्तलज्जायां वदन्त्यामतिदारुणम् ।
राजा दशरथो वाक्यमुवाचायतलोचनाम् ॥ 13 ॥

---

11. (ப-ரை) सा कैकेयी- அந்த கைகேயியானவள், विषण्णा च- வ்யஸனமுடையவளாயும், सन्त्रस्ता- பயமுடையவளாயும், परिशुष्यता- வாட்டமடைந்திருக்கிற, मुखेन- முகத்தோடுகூடினவளாய், अभिमुखी सती- எதிர்முகமாயிருந்துகொண்டு, राजानं एव- அரசனையேபார்த்து, वाक्यं- ஒரு வார்த்தையை, अब्रवीत्- சொன்னாள்.

12. (ப-ரை) हे साधो- ஓ ஸாதுவே!, पीतमण्डां- ஸாராம்சத்தை குடித்த, सुरां इव- மத்யத்தைப்போல, गतजनं- ஜனங்களில்லாததும், निरास्वाद्यतमं- அனுபவிக்கக்கூடிய போகய வஸ்துக்களில்லாததும், शून्यं- பாழாகவுமிருக்கிற, राज्यं- ராஜ்யத்தை, भरत:- பரதன், न अभिपत्स्यते- அங்கீகரிக்கப்போகிறதில்லை.

13. (ப-ரை) कैकेय्यां- கைகேயியானவள், मुक्तलज्जायां- வெட்கத்தை விட்டவளாய், अतिदारुणं-மிகவும் கடுமையாக, वदन्त्यां (सत्यां)- சொல்லும் காலத்தில், दशरथ: राजा- தசரதமஹாராஜர், आयतलोचनां- அகன்ற கண்களையுடைய, (கைகேயியைப்பார்த்து,) वाक्यं- ஒரு வார்த்தையை, उवाच- சொன்னார்.

11. (பொ-ரை) அந்த கைகேயி தேவியானவள் வ்யஸனமடைந்து பயத்துடனும், வாடிய முகத்துடனும் கூடியவளாய் ராஜாவின் எதிரே நின்றுகொண்டு அவரைப்பார்த்து, ஒருவார்த்தை சொன்னாள்.

12. (பொ-ரை) ஓ ஸாதுவே! ஸாரமான பாகத்தை குடித்துவிட்டு அஸாரமான மதுவை எப்படி ஒருவரும் கைக்கொள்ளமாட்டார்களோ அவ்விதமாகவே குடியிருக்கும் ஜனங்களுமில்லாமல், அனுபவிக்கக்கூடிய சிறந்த வஸ்துக்களுமில்லாமல் பாழான இந்த ராஜ்யத்தை பரதன் ஒருக்காலும் கைக்கொள்ளமாட்டான்.

13. (பொ-ரை) கைகேயி, வெட்கத்தைவிட்டு இவ்விதம் கடுமையான வார்த்தையை சொல்லும்பொழுது, தசரத மஹாராஜா அதைக்கேட்டு அகன்ற கண்களை உடையவளான கைகேயியைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

वहन्तं किं तुदसि मां नियुज्य धुरि माऽहिते ।
अनार्ये कृत्यमारब्धं किं न पूर्वमुपारुधः ॥ 14 ॥
तस्यैतत्क्रोधसंयुक्तमुक्तं श्रुत्वा वरांगना ।
कैकेयी द्विगुणं क्रुद्धा राजानमिदमब्रवीत् ॥ 15 ॥

14. (ப-ரை) हे अहिते- எனக்கு அனிஷ்டத்தைச் செய்கின்றவளே, धुरि- பாரத்தில், नियुज्य- ஏவி, वहन्तं- அவ்விதம் சுமக்கின்ற, *मा- என்னை, किं तुदसि- ஏன் துன்பப்படுத்துகிறாய், हे अनार्ये- அடீ கெட்டவளே, आरब्ध- (என்னால்) ஆரம்பிக்கப் பட்ட, कृत्यं- இந்தக்கார்யத்தை, पूर्वं- முன்னமேயே, किं- ஏன், न उपारुधः- கேட்டுக் கொள்ளாமலிருந்துவிட்டாய்.

15. (ப-ரை) वरांगना- உத்தம ஸ்த்ரீயான, कैकेयी- கைகேயியானவள், तस्य- அவ்வரசனுடைய, क्रोधसयुक्तं- கோபத்துடன் கூடிய, एतत् उक्त- இந்த வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, द्विगुण यथा तथा- இரட்டிப்பாக, क्रुद्धा सती- கோபித்துக்கொண்டு, राजानं- அரசனைப்பார்த்து, इदं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னாள்.

14. (பொ-ரை) எனக்கு அனிஷ்டத்தை செய்கின்றவளே! பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவேணுமென்றும், ராமனைக் காட்டிற்குத் துரத்தவேணுமென்றும் இந்த சுமக்கமுடியாத பாரத்தை என் தலையில்வைத்து அவ்விதம சுமந்து கொண்டுமிருக்கிற என்னை ஏன் மறுபடியும் நோகும்படி செய்கிறாய், அடி துஷ்டே! ஸேனை முதலானதுகளை ராமனுடன் அனுப்புவதாக ஆரம்பித்திருக்கிறேன் இதை ஏன் இப்பொழுது தடுக்கிறாய், முன்னமேயே வரம் வேண்டிம காலத்தில் ராமனை மாத்திரம் நீ காட்டிற்குத் தனிமையாக அனுப்பவேண்டும், ஸேனை முதலானவைகளை அவனுடன் அனுப்பக்கூடாதென்று ஏன் கேட்டுக்கொள்ளவில்லை, அப்படி நீ முன்னமே கேட்டுக் கொள்ளாதபடியால் இப்பொழுது நான் ஆரம்பித்த அந்தக்கார்யத்தை நிறுத்தமாட்டேன்.

15. (பொ-ரை) உத்தம ஸ்திரீயான கைகேயியும், கோபத்தோடு சொன்ன அரசன் வார்த்தையைக்கேட்டு முன்னைவிட இரட்டிப்பாகத் தானும் கோபித்துக் கொண்டு ராஜாவைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னாள்.

*தீர்த்திய வ்யாக்யானப்படி—பொழிப்புரை.

அனிஷ்டம் செய்கிறவளே, பரதனுக்குப்பட்டாபிஷேகம் செய்யவேண்டியதென்றும், ராமனைக் காட்டிற்குத் துறத்தவேண்டுமென்றும் இந்த பெரிய பாரத்தை என்னை சுமக்கும்படி ஏவி அப்படியே நானும் சுமந்துகொண்டிருக்க மறுபடியும் என்னை ஏன் வருத்தப்படுத்துகிறாய், வேண்டாம், அடி துஷ்டே! நான் ஆரம்பித்த எந்தக் கார்யத்தைத்தான் நீ தடுக்காமலிருக்கிறாய், முன்னம் ஆரம்பித்த ராம பட்டாபிஷேகத்தைத் தடுத்துவிட்டாய் இப்பொழுது அவனுக்குத்துணையாக ஸேனைகளை அனுப்ப ஆரம்பித்ததையும் தடுக்கிறாய் என்று,

तत्रैव वंशे सगरो ज्येष्ठपुत्रमुपारुधत् ।
असमञ्ज इति ख्यातं तथायं गन्तुमर्हति ॥ 16 ॥
एवमुक्तो धिगित्येव राजा दशरथोऽब्रवीत् ।
व्रीडितश्च जनः सर्वः सा च तं नावबुध्यत ॥ 17 ॥
तत्र वृद्धो महामात्रः सिद्धार्थो नाम नामतः ।
शुचिर्बहुमतो राज्ञः कैकेयीमिदमब्रवीत् ॥ 18 ॥

16. (ப-ரை) तव- உம்முடைய, वंशे एव- வம்சத்திலேயே, सगरः- ஸகரமஹாராஜன், असमञ्ज इति- அஸமஞ்ஜன் என்று, ख्यातं- ப்ரஸித்தனான, ज्येष्ठपुत्रं- ஜ்யேஷ்ட குமாரனை, उपारुधत्- காட்டிற்குத் துறத்திவிட்டார், तथा- அப்படியே, अयं- இவனும், गन्तुं अर्हति- காட்டிற்குப் போகத்தகுந்தவன்.

17. (ப-ரை) एवं- இவ்விதம், उक्तः- சொல்லப்பட்ட, दशरथः राजा- தசரத மஹாராஜர், धिक् इति एव- சீ, சீ, என்றே, अब्रवीत्- சொன்னார், सर्वः जनः च- எல்லா ஜனமும், व्रीडितः- வெட்கம் கொண்டது, सा च- அந்த கைகேயியும், तं- அந்த ஜனத்தை, न अवबुध्यत- எண்ணவே இல்லை.

18. (ப-ரை) तत्र- அங்கு, शुचिः- சுத்தராயும், राज्ञः- அரசனுக்கு, बहुमतः- வெகுமானத்திற்கு இடமாயும், नामतः- பெயரினால், सिद्धार्थः नाम- ஸித்தார்த்தரென்று ப்ரஸித்தரான, वृद्धः महामात्रः- கிழவரான ப்ரதான மந்திரியானவர், कैकेयीं- கைகேயியைப்பார்த்து, इदं- இந்த (வார்த்தையை), अब्रवीत्- சொன்னார்.

---

16. (பொ-ரை) உம்முடைய வம்சத்திலேயே, ஸகரரென்ற ஒரு அரசர், அஸமஞ்ஜனென்று, ப்ரஸித்தனான தன்னுடைய ஜ்யேஷ்ட புத்திரனை தனமில்லாமலும், கூட ஒருவரும் போகாமலும், காட்டிற்குத் துறத்திவிட்டாரல்லவோ, அப்படியேதான் இந்த ராமனும் தனியாகக் காட்டிற்குப் போகவேண்டும்.

17. (பொ-ரை) இவ்விதம் கைகேயி சொல்லும் வார்த்தையைக்கேட்டு தசரத மஹாராஜர் அந்தக் கைகேயியை, சீ, சீ, என்று திட்டினார், அங்கு இருக்கும் ஜனம் முழுவதும் வெட்கமடைந்துவிட்டது, ஆனால் கைகேயி மாத்திரம் அதை லக்ஷ்யமே செய்யவில்லை.

18. (பொ-ரை) அங்கு, அரசனால் வெகுமதிக்கப்பட்டவரும் சுத்தமான மனதையுடையவரும், ஸித்தார்த்தரென்று ப்ரஸித்தமான பெயருடையவரும், விருத்தருமான ப்ரதான மந்திரியானவர், கைகேயியைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

असमञ्जो गृहीत्वा तु क्रीडतः पथिदारकान् ।
सरय्वाः प्रक्षिपन्नप्सु रमते तेन दुर्मतिः ॥ 19 ॥

तं दृष्ट्वा नागराः सर्वे क्रुद्धा राजानमब्रुवन् ।
असमञ्जं वृणीष्वैकमस्मान्वा राष्ट्रवर्धन ॥ 20 ॥

तानुवाच ततो राजा किंनिमित्तमिदं भयम् ॥ 20½ ॥

19. (ப-ரை) असमञ्जः तु- அஸமஞ்ஜனோவென்றால், पथि- வழியில், क्रीडतः- விளையாடிக்கொண்டிருக்கிற, दारकान्- குழந்தைகளை, गृहीत्वा- எடுத்து, सरय्वाः- ஸரயூ நதியினுடைய, अप्सु- தண்ணீரில், प्रक्षिपन्- போட்டுக்கொண்டு, दुर्मतिः- துர்புத்தியுடைய அந்த அஸமஞ்ஜன், तेन- அதனால், रमते- ஸந்தோஷப்படுகிறான்.

20. (ப-ரை) तं- அவனை, सर्वे नागराः- நகரத்து ஜனங்களெல்லோரும், दृष्ट्वा- பார்த்து, क्रुद्धाः सन्तः- கோபமுடையவர்களாய், राजानं- அரசனைப்பார்த்து, हे राष्ट्रवर्धन- தேசத்தை போஷிக்கின்ற ப்ரபுவே, असमञ्जं एकं- அஸமஞ்ஜன் ஒருவனையாவது, वृणीष्व- வைத்துக்கொள்ளும், அல்லது, अस्मान् वा- எங்களையாவது, वृणीष्व- வைத்துக்கொள்ளும், इति- என்று, अब्रुवन्- சொன்னார்கள்.

20½. (ப-ரை) ततः- பிறகு, राजा- அரசன், तान्- அந்த நகரத்து ஜனங்களைப் பார்த்து, इदं भयम्- இந்த பயமானது, किं निमित्त- எந்தக்காரணத்தையுடையது, इति- என்று, उवाच- சொன்னார்.

19. (பொ-ரை) துர்புத்தியான அஸமஞ்ஜன், வீதியில் விளையாடிக்கொண்டிருக்கும் குழந்தைகளை தூக்கிக்கொண்டுபோய் ஸரயூ நதியில் போட்டுவிட்டு, அதனால் ஸந்தோஷித்துக்கொண்டிருப்பான்.

20. (பொ-ரை) இவ்விதம் செய்கின்ற அந்த அஸமஞ்ஜனைப்பார்த்து, நகரத்துஜனங்களெல்லோரும கோபத்துடன் அரசனிடம சென்று, தேசத்தை நன்றாக வளர்த்துகின்ற ப்ரபுவே! ஒன்று அஸமஞ்ஜன் ஒருவனை வைததுக்கொள்ளுகிறீரா, அல்லது எங்களெல்லோரையும வைத்துகொள்ளுகிறீரா என்று சொன்னார்கள்.

20½. (பொ-ரை) இவ்விதம் தன்னிடம் சொல்கின்ற ஜனங்களைப்பார்த்து, என்ன பயம் உங்களுக்கு ஏற்பட்டுவிட்டது, அது என்ன காரணத்தினாலுண்டானது என்று அரசன் கேட்டார்.

ताश्चापि राज्ञा संपृष्टा वाक्यं प्रकृतयोऽब्रुवन् ॥ 21 ॥

क्रीडतस्त्वेष नः पुत्रान्बालानुद्भ्रान्तचेतनः ।
सरय्वां प्रक्षिपन्मौर्ख्यादतुलां प्रीतिमश्नुते ॥ 22 ॥

स तासां वचनं श्रुत्वा प्रकृतीनां नराधिपः ।
तं तत्याजाहितं पुत्रं तेषां प्रियचिकीर्षया ॥ 23 ॥

21. (ப-ரை) राज्ञा- அரசனால், सम्पृष्टाः-கேட்கப்பட்ட, ताः प्रकृतयः च अपि- அந்த ஜனங்களும், वाक्यं- ஒரு வார்த்தையை, अब्रुवन्- சொன்னார்கள்.

22. (ப-ரை) उद्भ्रान्तचेतनः- புத்தி ப்ரமையுள்ள, एषः तु- அந்த அஸமஞ்ஜன், क्रीडतः- விளையாடிக்கொண்டிருக்கிற, नः- எங்களுடைய, बालान् पुत्रान्- சிறுவர்களான பிள்ளைகளை, सरय्वां- ஸரயூ நதியில், प्रक्षिपन् सन्- போட்டுக்கொண்டு, मौर्ख्यात्- மூடத்தன்மையால், अतुलां- ஒப்பற்ற, प्रीतिं- ஆனந்தத்தை, अश्नुते- அடைகிறான்.

23. (ப-ரை) सः नराधिपः- அவ்வரசனும், तासां प्रकृतीनां- அந்த ஜனங்களுடைய, वचनं- வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, तेषां- அவர்களுக்கு, प्रियचिकीर्षया- ப்ரியத்தைச் செய்யவேணுமென்ற ஆசையினால், अहितं- அனிஷ்டம் செய்கின்ற, तं पुत्रं- அந்தப்பிள்ளையை, तत्याज- விட்டுவிட்டார்.

21. (பொ-ரை) இவ்விதம் அரசனால் கேட்கப்பட்ட ஜனங்கள் அரசனைப் பார்த்து ஒருவார்த்தை சொன்னார்கள்.

22. (பொ-ரை) பைத்தியம் பிடித்த உம்முடைய பிள்ளையான இந்த அஸமஞ்சன் வீதியில் விளையாடிக்கொண்டிருக்கும் எங்கள் சிறுபிள்ளைகளைத் தூக்கி ஸரயூ நதியிற் போட்டுவிட்டு மூடத்தன்மையினால் அளவிறந்த ஆனந்தமடைகின்றான்.

23 (பொ-ரை) அவ்வரசனும், அந்த ஜனங்களின் வார்த்தையைக்கேட்டு அவர்களுக்கு ப்ரியம் செய்ய எண்ணங்கொண்டு, ஹிதமல்லாத தன் பிள்ளையை தள்ளிவிட்டார்.

ते यानं शीघ्रमारोप्य: सभार्य सपरिच्छदम् ।
यावज्जीवं विवास्योऽयमिति स्वानन्वशात्पिता ॥ 24 ॥
स फालपिटकं गृह्य गिरिदुर्गाण्यलोलयत ।
दिशः सर्वास्त्वनुचरन्स यथा पापकर्मकृत् ॥ 25 ॥
इत्येवमत्यजद्राजा सगरो वै सुधार्मिकः ।
रामः किमकरोत्पापं येनैवमुपरुध्यते ॥ 26 ॥

24. (ப-ரை) पिता- பிதாவான ஸகரரும், त அவனை, सभार्य- பார்யையுடனும், सपरिच्छदम्- அவனுக்கு வேண்டிய ஸாமக்ரியுடனும், यानं- வாஹனத்தை, शीघ्र- சீக்ரமாக, आरोप्य- ஏற்றிவைத்து, अय- இந்த அஸமஞ்ஜன், यावजीव- உயிருள்ள வரையில், विवास्य:- காட்டிற்குத் துறத்தத்தகுந்தவன், इति- என்று, स्वान्- தன்னுடைய ஸேவக ஜனங்களை, अन्वशात्- ஆக்ஞாபித்தார்.

25. (ப-ரை) स: அந்த அஸமஞ்ஜன், पापकर्मकृत यथा- பாபமான கார்யத்தை செய்தவன்போல், सर्वा: दिश:- எல்லா திக்குக்களையும், अनुचरन् सन्- ஸஞ்சரித்துக்கொண்டு, फालपिटक- கொத்தையும் சிறு பெட்டியையும், गृह्य- எடுத்துக்கொண்டு, गिरिदुर्गाणि- மலையில் புதருள்ள இடங்களை, अलोलयत- தோண்டிக்கொண்டிருந்தான.

26. (ப-ரை) इति एवं- என்று இவ்விதம், सुधार्मिक:- மிகவும் தர்மிஷ்டராயிருந்த, सगर: वै- ஸகர மஹாராஜர், अत्यजत्-(அஸமஞ்ஜனை) விட்டுவிட்டார், राम:- ராமன், किं पापं- என்ன பாபத்தை, अकरोत्- செய்தான், येन- யாதொரு பாபத்தினால், एवं- இவ்விதம், उपरुध्यते- துறத்தப்படுகிறான்.

24. (பொ-ரை) பிதாவான ஸகர மஹாராஜர், அந்த அஸமஞ்ஜனை, அவன் பத்தினியுடனும், அவனுடைய ஸாமக்ரிகளுடனும், சீக்கிரமாக வண்டியிலேற்றி உயிருள்ளவரையில் இவன் நகரத்திற்கு வராமலிருக்கும்படி காட்டிற்குத் துறத்திவிடுங்கள் என்று தன்னுடைய ஸேவக ஜனங்களுக்கு ஆஜ்ஞாபனம் செய்தார்.

25. (பொ-ரை) அந்த அஸமஞ்ஜன் காய் கிழங்கு தோண்டுகிற கொத்தையும் அவைகளைக்கொண்டுவரக்கூடிய சிறுபெட்டியையும் எடுத்துக்கொண்டு, பாப க்ருத்யத்தைச் செய்தவன் போல திக்குகளெல்லாம் திரிந்துகொண்டு மலையில் புதர்களை தோண்டிக்கொண்டிருந்தான்.

26. (பொ-ரை) என்று இவ்வாறு மிகவும் தர்மிஷ்டரான அந்த ஸகர மஹாராஜர், அஸமஞ்ஜனைக்காட்டிற்குத் துறத்திவிட்டார், அவ்விதமான காட்டிற்குத் துறத்தக்கூடிய என்ன பாவத்தை ஸ்ரீராமன் செய்தான்.

न हि कंचन पश्यामो राघवस्यागुणं वयम् ।
दुर्लभो ह्यस्य निरयः शशाङ्कस्येव कल्मषम् ॥ 27 ॥
अथवा देवि दोषं त्वं कंचित्पश्यसि राघवे ।
तमद्य ब्रूहि तत्त्वेन ततो रामो विवास्यताम् ॥ 28 ॥
अदुष्टस्य हि संत्यागः सत्पथे निरतस्य च ।
निर्दहेदपि शक्रस्य द्युतिं धर्मनिरोधनात् ॥ 29 ॥

27. (ப-ரை) वयं- நாங்கள், राघवस्य- ராகவனுக்கு (ராகவனிடத்தில்), कंचन अगुणं- ஒரு கெட்ட குணத்தையாவது, न पश्यामः हि- பார்க்கவில்லை, (हि-ஏனென்றால்,) शशांकस्य- சந்திரனுக்கு, कल्मषं इव- களங்கமிருப்பதுபோல், अस्य- இந்த ராமனுக்கு, निरयः- தோஷமானது, दुर्लभः- கிடையாது.

28. (ப-ரை) देवि- தேவியே, अथवा- அல்லது, राघवे- ஸ்ரீராமனிடத்தில், कंचित् दोषं- ஒரு தோஷத்தை, त्वं- நீர், पश्यसि- பார்க்கிறீரேயானால், तं- அதை, अद्य- இப்பொழுது, तत्त्वेन- உண்மையாக, ब्रूहि- சொல்லும், ततः- பிறகு, रामः- ராமன், विवास्यताम्- காட்டிற்குத்துரத்தப்படலாம.

·29. (ப-ரை) हि- ஏனென்றால், अदुष्टस्य- தோஷமில்லாதவனும், सत्पथे- ஸன் மார்க்கத்தில், निरतस्य च- ஊக்கமுடையவனுமான மனிதனுடைய, संत्यागः- பரித்யாகமானது. धर्मनिरोधनात्- தர்ம விரோதமானதையால், शक्रस्य- இந்திரனுடைய, द्युतिं अपि- தேஜஸ்ஸைக்கூட, निर्दहेत्- எரித்துவிடும்.

---

27. (பொ-ரை) நாங்களும் இதுவரையில் ராமனுக்கு (ராமனிடத்தில்) ஒரு தோஷத்தையும் பார்க்கவில்லை ஏனென்றால், சந்திரனுக்குக்களங்கமிருப்பதுபோல் ராமனுக்கு நரகத்திற்குக்காரணமான ஒரு தோஷமும் கிடையாது.

28. (பொ-ரை) ராமனிடத்தில் தோஷமில்லையென்று நாங்களெல்லோரும் எண்ணிக்கொண்டிருந்தபோதிலும், தோஷமிருக்கிறதாக ஒருகால் நீர் தெரிந்து கொண்டிருந்தால் அதை இப்பொழுது உண்மையாகச் சொல்லும் அதற்கு பிறகு ராமனைக்காட்டிற்குத் துரத்திவிடலாம்.

29. (பொ-ரை) தோஷமில்லாதவனும், ஸன்மார்க்கத்தில் ஊக்கமுடையவனுமுள்ளவனை பரித்யாகம் செய்வது தர்ம விருத்தமானதையால் இந்திரனுடைய தேஜஸ்ஸைக்கூட ஒழித்துவிடும்.

तदलं देवि रामस्य श्रिया विहतया त्वया ।
लोकतोऽपि हि ते रक्ष्यः परिवादः शुभानने ॥ 30 ॥
श्रुत्वा तु सिद्धार्थवचो राजा श्रान्ततरस्वनः ।
शोकोपहतया वाचा कैकेयीमिदमब्रवीत्
एतद्वचो नेच्छसि पापवृत्ते हितं न जानासि ममात्मनो वा ।
आस्थाय मार्गं कृपणं कुचेष्टा चेष्टा हि ते साधुपथादपेता ॥ 32 ॥

30. (ப-ரை) हे देवि- தேவியே, तत्- ஆகையால், त्वया- உன்னால், विहतया- கெடுக்கப்பட்டிருக்கிற, रामस्य श्रिया- ராமனுடைய ராஜ்யஸம்பத்தினால், अलं- போதும், हे शुभानने- அழகுள்ள முகமுள்ளவளே, लोकतः अपि- ஜனங்களிடத்திலிருந்து, ते- உனக்கு, परिवादः- வருகிற அபவாதமானது. रक्ष्यः हि- பரிஹரிக்கத்தகுந்ததல்லவா.

31. (ப-ரை) सिद्धार्थवचः- ஸித்தார்த்தருடைய வார்த்தையை, श्रुत्वा तु- கேட்டு, राजा- தசரத மஹாராஜர், श्रान्ततरस्वनः- மிகவும் தணிந்த குரலை உடையவராய், शोकोपहतया- துக்கத்தினால் மழுமழுத்த, वाचा- வாக்கினால், कैकेयीं- கைகேயியைப்பார்த்து, इदं अब्रवीत्- இந்த வார்த்தையைச் சொன்னார்.

32. (ப-ரை) हे पापवृत्ते- கெட்ட நடத்தையுள்ளவளே, एतत् वचः- இந்த ஸித்தார்த்தருடைய வார்த்தையை, न इच्छसि- நீ விரும்புகிறாயில்லை, कृपण मार्गं- கெட்ட வழியை, आस्थाय- அடைந்து, कुचेष्टा सती- கெட்ட காரியங்களைச் செய்கின்றவளாய், मम- எனக்கோ, आत्मनो वा- உனக்காகவோ, हितं- நன்மையை, न जानासि- நீ தெரிந்து கொள்ளவில்லை, हि- ஏனென்றால், ते- உன்னுடைய, चेष्टा- காரியமானது, साधुपथात्- நன்மார்க்கத்திலிருந்து, अपेता- தவறியிருக்கிறது

30. (பொ-ரை) தேவி! ராமனுடைய பட்டாபிஷேகத்தை நீ கெடுத்தது போதும், இனிமேல் யாதொரு விக்னமும் செய்யவேண்டாம், அழகுள்ள முகமுடையவளே! அதனால் உன்னை ஜனங்களெல்லோரும் பழிப்பார்களே! அதை நீ நீக்கிக்கொள்ளவேண்டாமா.

31. (பொ-ரை) இவ்விதம் கைகேயியைப்பார்த்து ஸித்தார்த்தர் சொன்னதையெல்லாம் தசரத மஹாராஜர் கேட்டு. மிகவும் தணிந்த குரலுடையவராய் துக்கத்தினால் தழுதழுத்த பேச்சுடன் கைகேயியைப்பார்த்து ஒருவார்த்தை சொன்னார்,

32. (பொ-ரை) அடி கெட்டநடத்தையுள்ளவளே! ஸித்தார்த்தர் சொன்ன இந்த வார்த்தையை நீ ஏன் அங்கீகரிக்கவில்லை எல்லோரும் பழித்த கெட்டமார்க்கத்தை அடைந்து கெட்டகாரியத்தையும் செய்து கொண்டு, நமக்கு இது நன்மையென்றும் உனக்கு இது நன்மையென்றாவது தெரிந்து கொள்ளவில்லை. ஆகையால் உன்னுடைய காரியமானது ஸன்மார்க்கத்திலிருந்து நழுவியிருக்கிறது.

अनुव्रजिष्याम्यहमद्य रामं राज्यं परित्यज्य सुखं धनं च ।
सहैव राज्ञा भरतेन च त्वं यथासुखं भुङ्क्ष्व चिराय राज्यम् ॥ 33

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
षट्त्रिंशः सर्गः ॥ 36 ॥

33. (ப-ரை) अहं- நான், अद्य- இப்பொழுது, राज्यं- ராஜ்யத்தையும், सुखं- ஸுகத்தையும், धनं च- தநத்தையும், परित्यज्य- விட்டு விட்டு, रामं- ராமனை, अनुव्रजिष्यामि- தொடர்ந்து செல்லப்போகிறேன், त्वं च- நீயும், राज्ञा- அரசனான, भरतेन- பரதனோடு, सह एव- கூடவே, यथासुखं- ஸுகமாக, राज्यं- ராஜ்யத்தை, चिराय- நெடுநாள், भुङ्क्ष्व- அநுபவித்துக்கொண்டிரு.

33. (பொ-ரை) நான் இப்பொழுது ராஜ்யத்தையும் ஸுகத்தையும், தநத்தையும் விட்டு விட்டு ராமனுடனே செல்லப்போகிறேன். நீயும் உன்னுடைய பிள்ளையான பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்து ராஜாவாயிருக்கிற அவனுடன் ஸுகமாகவெகுகாலம் ராஜ்யத்தை அநுபவித்துக் கொண்டிரு.



सप्तत्रिंशः सर्गः ॥ 37 ॥

महामात्रवचः श्रुत्वा रामो दशरथं तदा ।
अभ्यभाषत वाक्यं तु विनयज्ञो विनीतवत् ॥ 1 ॥

---

1. (ப-ரை) तदा- அப்பொழுது, विनयज्ञः- விநயத்தைத் தெரிந்தவரான, रामः- ஸ்ரீராமன், महामात्रवचः- ப்ரதான மந்திரியின் வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, विनीतवत्- வணக்கத்துடன் கூடி, दशरथं- தசரத மஹாராஜரைப்பார்த்து, वाक्यं तु- ஒரு வார்த்தையை, अभ्यभाषत- சொன்னார்.

---

1. (பொ-ரை) அப்பொழுது, ஸித்தார்த்தரென்னும் ப்ரதான மந்திரியின் வார்த்தையைக்கேட்டு வணக்கம் தெரிந்தவரான ராமன் வணக்கத்துடன் தசரதரைப் பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்

त्यक्तभोगस्य मे राजन्वने वन्येन जीवतः ।
किं कार्यमनुयात्रेण त्यक्तसङ्गस्य सर्वतः ॥ 2 ॥
यो हि दत्त्वा गज श्रेष्ठं कक्ष्यायां कुरुते मनः ।
रज्जुस्नेहेन किं तस्य त्यजतः कुञ्जरोत्तमम् ॥ 3 ॥
तथा मम सतां श्रेष्ठ किं ध्वजिन्या जगत्पते ।
सर्वाण्येवानुजानामि चीराण्येवानयन्तु मे ॥ 4 ॥

2. (ப-ரை) हे राजन्- மஹாராஜரே, त्यक्तसङ्गस्य- போகங்களை விட்டவனும், सर्वतः- எல்லாவற்றிலும், त्यक्तसङ्गस्य- பற்றுதலை விட்டவனும், वने- வனத்தில், वन्येन- காட்டிலுண்டாகும வஸ்துவினால், जीवतः- ஜீவிக்கின்ற, मे- எனக்கு, अनुयात्रेण- கூட வரும் சைன்யத்தினால், किं कार्यं- செய்யத்தகுந்தது என்ன.

3. (ப-ரை) यः हि- யாவனொருவன், गजश्रेष्ठं- உத்தமமான யானையை, दत्त्वा- கொடுத்துவிட்டு, कक्ष्यायां- யானை கட்டும் கயிற்றில், मनः- மனதை, कुरुते- செய்கிறானோ, कुञ्जरोत्तमं- ச்ரேஷ்டமான யானையை, त्यजतः- விட்டவனான, तस्य- அம்மனிதனுக்கு, रज्जुस्नेहेन- கயிற்றில் ஆசையினால், किं- என்ன ப்ரயோஜனம்.

4. (ப-ரை) हे सतां श्रेष्ठ- ஸாதுக்களிற் சிறந்தவரே, जगत्पते- உலகங்களுக்கு ப்ரபுவே, तथा- அப்படி, मम- எனக்கு, ध्वजिन्या- ஸேனையினால், किं- என்ன ப்ரயோஜனம், सर्वाणि एव- எல்லாவற்றையுமே, अनुजानामि- கொடுத்து விடுகிறேன், चीराणि एव- மரவுரிகளையே, मे- எனக்கு, आनयन्तु- கொண்டுவரட்டும்.

2. (பொ-ரை) பரபோ! போகத்தையுமவிட்டு, எல்லா வஸ்துகளிலும் பற்றுதலையும்விட்டு, வனத்திலுண்டாகும் காய கிழங்குகளை புஜித்து வனத்திலே ஜீவனம் செய்கின்ற எனக்கு கூடவரும சைன்யத்தினால் என்ன ஆகவேண்டியது.

3. (பொ-ரை) ஒருவன் உத்தமமான யானையை விட்டுவிட்டு, அதைக் கட்டும கயிற்றில் மனம் வைத்தால் யானையை விட்டுவிட்ட அம்மனிதனுக்கு கயிற்றில் ஆசையினால் என்ன ப்ரயோஜனம. அதாவது ராஜ்யத்தை விட்ட எனக்கு கூடவரும் சைன்யத்தில் என்ன ப்ரயோஜனமென்று முன்சொன்னதையே வேறு விதமாகச் சொன்னார்.

4. (பொ-ரை) ஸாதுக்களிற் சிறந்தவரான மன்னவரே! யானையை விட்டவனுக்கு கயிற்றினால் ப்ரயோஜனமில்லாதது போல், ராஜ்யத்தை விட்ட எனக்கு கூடவரும் சைன்யத்தினால் என்ன ப்ரயோஜனம. ஆகையால் நீர் எனக்குக் கொடுப்பதாக நினைத்த எல்லாவற்றையுமே நான் பரதனுக்குக் கொடுத்துவிடுகிறேன் எனக்கு வேண்டியது மரவுரிகள் மாத்திரம்தான், அவைகளை வேலைக்காரர்கள் கொண்டுவந்து கொடுக்கவேணும்.

खनित्रपिटके चोभे समानयत गच्छतः ।
चतुर्दश वने वासं वर्षाणि वसतो मम ॥ 5 ॥
अथ चीराणि कैकेयी स्वयमाहृत्य राघवम् ।
उवाच परिधत्स्वेति जनौघे निरपत्रपा ॥ 6 ॥
स चीरे पुरुषव्याघ्रः कैकेय्याः प्रतिगृह्य ते ।
सूक्ष्मवस्त्रमवक्षिप्य मुनिवस्त्राण्यवस्त ह ॥ 7 ॥

5. (ப-ரை) चतुर्दश वर्षाणि- பதினான்கு வருஷங்கள், वने- வனத்தில், वास वसतः- வாஸம் செய்பவனாக, गच्छतः- போகின்ற, मम- எனக்கு, खनित्रपिटके- மண்வெட்டி சிறு பெட்டி, उभे च- இந்த இரண்டையுமே, समानयत- கொண்டு வாருங்கள்.

6. (ப-ரை) अथ- பிறகு, कैकेयी- கைகேயியானவள், चीराणि- மரவுரிகளை, आहृत्य- கொண்டுவந்து, जनौघे- ஜனக்கூட்டத்தில், निरपत्रपा- सती- வெட்கமில்லாதவளாய்க்கொண்டு, राघवम्- ராமனைப்பார்த்து, परिधत्स्व- இதை உடுத்திக்கொள், इति- என்று, उवाच- சொன்னாள்.

7. (ப-ரை) सः पुरुषव्याघ्रः- அந்த புருஷோத்தமன், कैकेय्याः- கைகேயியினிடமிருந்து, ते चीरे- அந்த இரண்டு மரவுரிகளை, प्रतिगृह्य- வாங்கிக்கொண்டு, सूक्ष्मवस्त्रं- மிகவும் இலேசான வஸ்த்ரத்தை, अवक्षिप्य- அவிழ்த்துவிட்டு, मुनिवस्त्राणि- முனிகள் உடுக்கும் ஆடைகளை, अवस्त ह- உடுத்திக்கொண்டார்.

5. (பொ-ரை) பதினான்கு வருஷம் வனவாஸம் செய்வதற்காக புறப்பட்டுப் போகிற எனக்கு காட்டில் கிழங்கு முதலானவைகளைத்தோண்ட மண்வெட்டி, காய்கிழங்குகளை போட்டுக்கொள்ள ஒரு சிறு பெட்டி கூடை, இவ்விரண்டையும கொண்டுவாருங்கள்.

6. (பொ-ரை) பிறகு கைகேயி, தானே போய் மரவுரிகளைக்கொண்டுவந்து ஜனக்கூட்டத்தில் நின்றுகொண்டு வெட்கமில்லாமல் ராமனைப்பார்த்து "இதோ மரவுரி, உடுத்திக்கொள்" என்று சொன்னாள்.

7. (பொ-ரை) புருஷோத்தமனான அந்த ஸ்ரீராமன், கைகேயியினிடமிருந்து இரண்டு மரவுரிகளை வாங்கிக்கொண்டு, தான் முன்தரித்திருந்த ஸூக்ஷ்மமான வஸ்த்ரத்தை அவிழ்த்துவிட்டு ரிஷிகள் தரித்துக்கொள்ளும் மரவுரிகளையே உடுத்திக்கொண்டார். "ह" என்பது வால்மீகியின் மனவருத்தத்தைக்காண்பிக்கிறது.

लक्ष्मणश्चापि तत्रैव विहाय वसने शुभे ।
तापसाच्छादने चैव जग्राह पितुरग्रतः ॥ 8 ॥
अथात्मपरिधानार्थं सीता कौशेयवासिनी ।
समीक्ष्य चीरं संत्रस्ता पृषती वागुरामिव ॥ 9 ॥
सा व्यपत्रपमाणेव प्रगृह्य च सुदुर्मनाः ।
कैकेयीकुशचीरे ते जानकी शुभलक्षणा ॥ 10 ॥
अश्रुसम्पूर्णनेत्रा च धर्मज्ञा धर्मदर्शिनी ।
गन्धर्वराजप्रतिमं भर्तारमिदमब्रवीत् ॥ 11 ॥
कथं नु चीरं बध्नन्ति मुनयो वनवासिनः ॥ 11½ ॥

8. (ப-ரை) लक्ष्मणः च अपि- இலக்குமணனும், तत्र एव- அவ்விடத்திலேயே, शुभे वसने- அழகான வஸ்த்திரங்களை, विहाय-விட்டுவிட்டு, तापसाच्छादने च एव- ரிஷிகள் கட்டிக்கொள்ளும் மாவுரிகளையே, पितुः अग्रतः- பிதாவின் முன்னிலையில், जग्राह- கட்டிக் கொண்டார்.

9. (ப-ரை) अथ- பிறகு, कौशेयवासिनी- வெண்பட்டை உடுத்திக்கொண்டிருக்கிற, सीता- ஸீதையானவள், आत्मपरिधानार्थं- தான் தரித்துக்கொள்ளுவதற்காக விருக்கிற, चीरं- மாவுரியை, समीक्ष्य- பார்த்து, पृषती- பெண்மான், वागुरां इव- வலையைக் கண்டுபயந்ததுபோல், सन्त्रस्ता- பயந்தவளாக, (अभवत्- ஆனாள்.)

10-11-11½. (ப-ரை) शुभलक्षणा- சுபமான லக்ஷணங்களையுடையவளான, सा जानकी- அந்த ஸீதையானவள், व्यपत्रपमाणा इव- மிகவும் வெட்கப்பட்டவள்போல்

8. (பொ-ரை) இலக்குமணனும் அவ்விடத்திலேயே அழகான வஸ்த்ரங்களை அவிழ்த்துவிட்டு ரிஷிகள் தரித்துக்கொள்ளும் மாவுரிகளையே பிதாவின் எதிரில் தானும் தரித்துக்கொண்டார்.

9. (பொ-ரை) பிறகு, பட்டுவஸ்த்திரம் தரித்துக் கொண்டிருக்கிற ஸீதையானவள் தான் உடுத்திக் கொள்ளுவதற்காக மிருந்திருக்கிற மாவுரியைப்பார்த்து வனத்தில் வேடனால் வைக்கப்பட்ட வலையைக்கண்டு பெண்மான் பயந்ததுபோல் பயந்தாள்,

10-11-11½. (பொ-ரை) சுபமான லக்ஷணங்களை உடையவளும், பதிவ்ரதா தர்மத்தை நன்றாயறிந்தவளும் அதைநடத்திக் காட்டுகின்றவளுமான அந்த ஜானகி

इति ह्यकुशला सीता सा मुमोह मुहुर्मुहुः ॥ 12 ॥

कृत्वा कण्ठे च सा चीरमेकमादाय पाणिना ।
तस्थौ ह्यकुशला तत्र व्रीडिता जनकात्मजा ॥ 13 ॥

सुदुर्मना:- மிகவும் மனவருத்தமுடையவளாய், ते कैकेयीकुशचीरे- கைகேயியினுடைய அந்த இரண்டு மரவுரிகளையும், प्रगृह्य च- வாங்கிக்கொண்டு, अश्रुसम्पूर्णनेत्रा च- கண்ணீர் நிறைந்த கண்களை உடையவளாய், धर्मज्ञा- தர்மம் தெரிந்தவளும், धर्मदर्शिनी- தர்மத்தை நடத்திக் காட்டுகிறவளுமான (அந்த ஸீதை,) गन्धर्वराजप्रतिमं- கந்தர்வராஜனுக்கொப் பான, भर्तारं- பர்த்தாவைப்பார்த்து, वनवासिन:- வனத்தில் வஸிக்கின்ற, मुनय:- ரிஷி கள், चीरं- மரவுரியை, कथं नु- எப்படி, बध्नन्ति- உடுத்திக்கொள்ளுகிறார்கள், (इति- என்று) इद- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னாள்.

12. (ப-ரை) इति हि- என்று, सा सीता- அந்த ஸீதையானவள், अकुशला- தெரி யாதவளாக, मुहुर्मुहु:- அடிக்கடி, मुमोह- மயங்கி நின்றாள்.

13. (ப-ரை) सा जनकात्मजा- அந்த ஜானகியானவள், एकं चीरं- ஒரு மரவுரியை, पाणिना- கையினால், आदाय- எடுத்துக்கொண்டு, कण्ठे- கழுத்தில், कृत्वा च- போட்டுக் கொண்டும், अकुशला- உடுத்திக்கொள்ளத்தெரியாதவளாய், तत्र- அவ்விடத்தில், व्रीडिता- வெட்கமுடையவளாய், तस्थौ हि- நின்றாள்.

யானவள் அதிகமாக வெட்கப்பட்டவள்போல் கைகேயியினிடமிருந்து மரவுரிகள் இர ண்டையும் வாங்கிக்கொண்டு மிக மனவருத்தத்துடன் கண்களில் நீர் ததும்பி கந்தர்வ ராஜனையொற்ற தன் பர்த்தாவைப்பார்த்து வனவாஸிகளான முனிவர்கள் இவ்விதம் மடமடப்பான மரவுரியை எப்படி கட்டிக்கொள்ளுகிறார்களோ வென்று சொன்னாள்.

12. (பொ-ரை) இவ்வாறு பர்த்தாவைப்பார்த்து சொல்லிவிட்டு அந்த ஸீதையானவள் மரவுரியைஉடுத்திக்கொள்ள தெரியாதவளாகவே அடிக்கடி திகைத்து நின்றாள்.

13. (பொ-ரை) அந்த ஜானகி, இரண்டு மரவுரிகளில் ஒன்றைக்கையால் எடுத்து கழுத்தில் போட்டுக்கொண்டு மற்றொன்றை இடுப்பில் உடுத்திக்கொள்ள தெரியாதவளாய் வெட்கத்துடன், அங்கு நின்றாள்.

तस्यास्तत्क्षिप्रमागम्य रामो धर्मभृतां वरः ।
चीरं बबन्ध सीतायाः कौशेयस्योपरि स्वयम् ॥ 14 ॥
रामं प्रेक्ष्य तु सीताया बध्नन्तं चीरमुत्तमम् ।
अन्तःपुरगता नार्यो मुमुचुर्वारि नेत्रजम् ॥ 15 ॥
ऊचुश्च परमायस्ता रामं ज्वलिततेजसम् ।
वत्स! नैवं नियुक्तेयं वनवासे मनस्विनी ॥ 16 ॥

14. (ப-ரை) धर्मभृतां- தார்மிஷ்டர்களுக்குள், वरः- உத்தமமான, रामः- ஸ்ரீராமன், क्षिप्रं- சீக்கிரமாக, आगम्य-வந்து, तस्याः सीतायाः- அந்த ஸீதையினுடைய, कौशेयस्य उपरि- வெண் பட்டின்மேல், तत् चीरं- அந்த மரவுரியை, स्वयम्- தானே, बबन्ध- கட்டினார்.

15. (ப-ரை) सीतायाः- ஸீதைக்கு, चीरं- மரவுரியை, बध्नन्त- உடுத்துகின்ற, उत्तमं रामं- உத்தமனான ஸ்ரீராமனை, प्रेक्ष्य तु- பார்த்து, अन्तः पुरगताः- அந்தப்புரத்திலிருக்கின்ற, नार्यः- ஸ்த்ரீகள், नेत्रजम्- கண்களிலுண்டான, वारि- ஜலத்தை, मुमुचुः- விட்டார்கள்,

16. (ப-ரை) परमायस्ताः- மிகவும் ஆயாஸமுடையவர்களாய்க்கொண்டு, ज्वलिततेजसम्- ப்ரகாசிக்கின்ற தேஜஸ்ஸையுடையவரான, राम- ஸ்ரீராமனைப்பார்த்து, वत्स- குழந்தாய் ராமா!, मनस्विनी- சிறந்த மனதையுடைய, इयं- இந்த ஸீதை, वनवासे- வனத்தில் வஸிப்பதில், न नियुक्ता- ஏவப்படவில்லை, (इति- என்று,) ऊचुः च- ஒரு வார்த்தையையும் சொன்னார்கள்.

14. (பொ-ரை) தார்மிஷ்டர்களுக்குள் ச்ரேஷ்டரான அந்த ஸ்ரீராமன், பரபரப்புடன் வந்து, ஸீதை இடுப்பில் உடுத்திக்கொண்டிருக்கிற வெண்பட்டின் மேலேயே, அந்த மரவுரியை தானே உடுத்தினார்.

15. (பொ-ரை) ஸீதைக்கு மரவுரியை உடுத்துகின்ற ஸர்வோத்தமனான ஸ்ரீராமனைப்பார்த்து அந்தப்புரத்திலிருக்கும் ஸ்திரீகள் கண்களால் நீரைப்பெருக்கினார்கள்.

16. (பொ-ரை) மிகவும் மனவருத்தமுடையவர்களாய், ப்ரகாசிக்கின்ற தேஜஸ்ஸையுடைய ராமனைப்பார்த்து அப்பா ராமா?, கம்பீரமான மனதையுடைய இந்த ஸீதையும் இவ்விதம் மரவுரியை தரித்துக் கொண்டு வனவாஸம் செய்ய வேண்டியவளென்று உன் பிதாவினால் ஆஜ்ஞாபிக்கப்படவில்லை, என்றும் சொன்னார்கள்.

पितुर्वाक्यानुरोधेन गतस्य विजनं वनम् ।
तावद्दर्शनमस्या नः सफलं भवतु प्रभो ॥ 17 ॥
लक्ष्मणेन सहायेन वनं गच्छस्व पुत्रक ।
नेयमर्हति कल्याणी वस्तुं तापसवद्वने ॥ 18 ॥
कुरु नो याचनां पुत्र सीता तिष्ठतु भामिनी ।
धर्मनित्य स्वयं स्थातुं न हीदानीं त्वमिच्छसि ॥ 19 ॥

17. (ப-ரை) हे प्रभो- ப்ரபுவே, पितुः- பிதாவினுடைய, वाक्यानुरोधेन- சொல்லை அனுஸரித்து, विजन वनम्- நிர்ஜனமான வனத்தைக்குறித்து, गतस्य- போன, (तव- உன்னுடைய), दर्शनं- காக்ஷியானது, तावत्- நீ வருகிறவரையில், अस्यां-இவளிடத்தில், सफलं- ஸபலமாக, नः- எங்களுக்கு, भवतु—உண்டாகட்டும்.

18. (ப-ரை) पुत्रक- குழந்தாய், सहायेन- துணையான, लक्ष्मणेन- இலக்குமணன் கூட, वनं- வனத்தைக்குறித்து, गच्छस्व—போ, कल्याणी- மங்களமுள்ளவளான, इयं- இந்த ஸீதை, तापसवत्- ரிஷிஜாதியைப்போல், वने- வனத்தில், वस्तुं- வஸிப்பதற்கு, न अर्हति- தகுந்தவளல்ல,

19. (ப-ரை) हे पुत्र- குழந்தாய், नः- எங்களுடைய, याचनां- வேண்டுகோளை, कुरु- செய்யக்கடவாய், भामिनी- ஸ்த்ரீகளுக்குள் உத்தமியான, सीता- ஸீதை, तिष्ठतु- (இங்கேயே) இருக்கட்டும், हे धर्मनित्य- தர்மத்தில் நிலைநின்றவனே, त्वं- நீ, इदानीं- இப்பொழுது, स्वय स्थातुं- இங்கு இருப்பதற்கு, न इच्छसि हि- இச்சிக்கமாட்டாயல்லவா.

17. (பொ-ரை) ப்ரபோ! பிதாவின வார்த்தையை அனுஸரித்து நிர்ஜனமான வனத்திற்குப்போகின்ற உன்னை நாஙகள் மருபடி பார்க்கும வரையில் இந்த ஸீதையினிடத்திலாவது உன்னுடைய தரிசனததை ஸபலமாக்கிக் கொண்டிருக்கிறோம், அதாவது:— நீ திருமபிவருகிற வரையில் உன்னைப்பார்ப்பதற்குப்பதிலாக, ஸீதையையாவது பார்த்துககொண்டிருக்கிறோம.

18. (பொ-ரை) குழந்தாய்! நீ இலககுமணனை ஸஹாயமாகக்கொண்டு வனத்திற்குப்போ, மங்களகரையான இந்த ஸீதை ரிஷிஜாதியைப்போல் வனத்தில் வாஸம் செய்யத்தகாதவள்.

19. (பொ-ரை) குழந்தாய்! நாங்கள் வேண்டிக்கொள்ளுவதை, நீ ஸம்மதிக்க வேண்டும், மிகவும உத்தம ஸ்த்ரீயான ஸீதையானவள் இங்கேயே இருக்கட்டும், பித்ருவாக்யபரிபாலனமென்கிற தர்மத்தில் நிலையாக இருக்கிறபடியால் நீ இப்பொழுது இங்கு இருக்கஸம்மதிக்கமாட்டாயல்லவா.

तासामेवंविधा वाचः शृण्वन्दशरथात्मजः ।
बबन्धैव तदा चीरं सीतया तुल्यशीलया ॥ 20 ॥
चीरे गृहीते तु तया समीक्ष्य नृपतेर्गुरुः ।
निवार्य सीतां कैकेयीं वसिष्ठो वाक्यमब्रवीत् ॥ 21 ॥
अतिप्रवृत्ते दुर्मेधे कैकेयि कुलपांसनि ।
वञ्चयित्वा च राजानं न प्रमाणेऽवतिष्ठसे ॥ 22 ॥

20. (ப-ரை) दशरथात्मजः- தசரதகுமாரனுன ஸ்ரீராமன், तासां- அந்த ஸ்த்ரீகளுடைய, एवं विधाः- இவ்விதங்களான, वाचः- வார்த்தைகளை, शृण्वन् सन्- கேட்டுக் கொண்டு, तुल्यशीलया- (தமக்கு) ஒப்பான ஸ்வபாவமுடைய, सीतया- ஸீதைக்கு, तदा- அப்பொழுது, चीरं- மரவுரியை, बबन्ध एव- உடுத்தவே உடுத்தினார்.

21. (ப-ரை) तया- அந்த ஸீதையினால், गृहीते- கட்டிக்கொள்ளப்பட்ட, चीरे- மரவுரிகளை, समीक्ष्य तु- பார்த்து, नृपतेः गुरुः- அரசனுடைய குருவான, वसिष्ठः- வஸிஷ்டமுனிவர், सीतां- ஸீதையை, निवार्य- தடுத்துவிட்டு, कैकेयीं- கைகேயியைப்பார்த்து, वाक्यं अब्रवीत्- ஒரு வார்த்தை சொன்னார்.

22. (ப-ரை) अतिप्रवृत्ते- மீறி நடக்கின்றவளே, दुर्मेधे- துர்புத்தியுடையவளே, कुलपांसनि- குலத்தைக்கெடுக்கின்றவளே, कैकेयि-அடீகைகேயி, राजानं- அரசனை, वञ्चयित्वा च- மோசம் செய்தும், प्रमाणे- மரியாதையில், न अवतिष्ठसे- நிற்காமலிருக்கிறாய்.

20. (பொ-ரை) தசரதராஜ புத்திரனை ஸ்ரீராமன் அந்தப்புரஸ்திரீகள் சொல்லும் இவ்வித வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டே, நகரத்தில் வஸிக்க இஷ்டமில்லாமல் தன்னைப்போலே, வனவாஸம் செய்ய விரும்புகின்ற ஸீதைக்கு மரவுரியை உடுத்தவே உடுத்தினார்.

21. (பொ-ரை) ஸீதை மரவுரியை கையிற்வாங்கிக்கொள்ளும் பொழுதே, ராஜகுருவான வஸிஷ்டமஹரிஷி, அம்மா! நீ மரவுரியை உடுத்திக்கொள்ள வேண்டாம், என்று ஸீதையைத்தடுத்துவிட்டு, கைகேயியைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

22. (பொ-ரை) எல்லைமீறி நடக்கின்றவளே! துர்புத்தியுடையவளே! குலத்தைக்கெடுக்கத் தோன்றியவளே! ஹே கைகேயி! அரசனை மோசம் செய்துவிட்டும், இனியும் ஒரு மட்டில் நிற்காமலிருக்கிறாய்.

न गन्तव्यं वनं देव्या सीतया शीलवर्जिते ।
अनुष्ठास्यति रामस्य सीता प्रकृतमासनम् ॥ 23 ॥
आत्मा हि दाराः सर्वेषां दारसंग्रहवर्तिनाम् ।
आत्मेयमिति रामस्य पालयिष्यति मेदिनीम् ॥ 24 ॥
अथ यास्यति वैदेही वनं रामेण संगता ।
वयमप्यनुयास्यामः पुरं चेदं गमिष्यति ॥ 25 ॥

23. (ப-ரை) शीलवर्जिते- நன்னடக்கையை விட்டவளே, सीतया देव्या- ஸீதா தேவியினால், वनं- வனத்தைக்குறித்து, न गन्तव्यं- போகத்தகுந்ததல்ல, सीता- ஸீதை யானவள், रामस्य- ராமனுடைய, प्रकृतं- இப்பொழுது ப்ரஸ்தாபத்தில் வந்திருக்கிற, आसनं- ஸிம்ஹாஸனத்தை, अनुष्ठास्यति- அடையப்போகிறாள்.

24. (ப-ரை) दारसंग्रहवर्तिनाम्- க்ருஹஸ்தர்களான, सर्वेषां- எல்லோருக்கும், दाराः- பத்நியானவள், आत्मा हि- ஆத்மாவன்றோ. (ஆகையால்) इयं- இந்த ஸீதையும், रामस्य- ராமனுடைய, आत्मा इति- ஆத்மா என்கிற காரணத்தினால், रामस्य- ராமனு டைய, मेदिनीम्- பூமியை, पालयिष्यति- ஆளப்போகிறாள்.

25. (ப-ரை) अथ- அல்லது, रामेण- ராமனுடன், संगता- சேர்ந்துகொண்டு, वैदेही- ஸீதையானவள், वनं- வனத்தைக்குறித்து, यास्यति- போவாளேயானால், वयं अपि- நாங்களும், अनुयास्यामः- கூடவே போகப்போகின்றோம், इदं पुरं च- இந்தப்பட்ட ணமும், गमिष्यति- போகப்போகின்றது.

23. (பொ-ரை) நல்ல ஸ்வபாவத்தைக் கைவிட்டவளே! ஸீதா தேவி வனம் போகவேண்டியதில்லை. இப்பொழுது ப்ரஸ்தாபத்தில் வந்து கொண்டிருக்கிற ராம னுடைய ஸிம்மாஸனத்தில் ஸீதை ஏறப்போகிறாள்.

24. (பொ-ரை) "अर्धो वा एष आत्मनो यत्पत्नी" பத்நியானவள் புருஷனுக்கு பாதி ஆத்மா" என்று வேதத்தில் காண்கிறபடியால், க்ருஹஸ்தர்களெல்லோருக்கும் பத்நி ஆத்மாவன்றோ, ஆகையால் இவளும் ராமனுக்கு ஆத்மாவாகையால், இந்த ராஜ்யத்தை ஆளப்போகிறாள்.

25. (பொ-ரை) அப்படிக்கில்லாமல், ஸீதை ராமனுடனே, வனத்திற்குப் போகும் பக்ஷத்தில் நாங்களும் கூடவே போவோம், இந்த நகரமும் கூடவே போகப்போகிறது.

अन्तपालाश्च यास्यन्ति सदारो यत्र राघवः ।
सहोपजीव्यं राष्ट्रं च पुरं च सपरिच्छदम् ॥ 26 ॥
भरतश्च सशत्रुघ्नश्चीरवासा वनेचरः ।
वने वसन्तं काकुत्स्थमनुवत्स्यति पूर्वजम् ॥ 27 ॥
ततः शून्यां गतजनां वसुधां पादपैः सह ।
त्वमेका शाधि दुर्वृत्ता प्रजानामहिते स्थिता ॥ 28 ॥

26. (ப-ரை) सदार:- பத்நியோடுகூட, राघव:- ஸ்ரீராமன், यत्र- எவ்விடத்தேபோ) (तत्र- அங்கு) अन्तपाला: च-லேஞநாயகர்களும், यास्यंति- போவார்கள், सहोपजीव्यं- பிழைப்புக்குவேண்டிய தநங்களுடனும், राष्ट्रं च- தேசமும், सपरिच्छदम्- ஸமஸ்த உபகரணங்களோடுகூடிய, पुरं च- நகரமும், (यास्यति- போகப் போகிறது.)

27. (ப-ரை) भरत: च- பரதனும், सशत्रुघ्न:- சத்ருக்நனுடன் கூடி, चीरवासा:- மரவுரி தரித்துக்கொண்டு, वनेचर:- வனவாஸியாய், वने वसन्तं- வனத்தில் வஸிக்கின்ற, पूर्वजम्- ஜ்யேஷ்டப்ராதாவான, काकुत्स्थं- ஸ்ரீராமனை, अनुवत्स्यति- அநுஸரித்து வஸிக்கப் போகிறான்.

28. (ப-ரை) तत:- பிறகு, गतजनां- ஜனங்களில்லாமல், शून्यां- பாழான, वसुधां- பூமியை, पादपै: सह- மரங்களோடு, दुर्वृत्ता- கெட்ட நடத்தையுள்ளவளும், प्रजानां- ஜனங்களுக்கு, अहिते- அநர்த்தத்தில், स्थिता- நிற்கின்ற, त्वं एका- நீ ஒருவளே, शाधि- ஆண்டு கொண்டிரு

26. (பொ-ரை) ராமன் பத்நியோடு கூட எவ்விடம் போகப்போகிறரோ, அவ்விடமே தண்டநாயகர்களும், ஆடுமாடு தன தான்யம் முதலான வஸ்துக்களோடு கூடிய தேசமும், வேலைக்காரன் வேலைக்காரி வண்டி முதலாகிய உபகரணங்களோடு கூடிய நகரமும் போகப்போகிறது.

27. (பொ-ரை) பரதன், சத்ருக்னனுடன், மரவுரி உடுத்திக்கொண்டு வனத்திலே ஸஞ்சரித்துக்கொண்டு வனத்தில் வாஸம்பண்ணுகிற தன் ஜ்யேஷ்டப்ராதாவான காகுத்ஸ்தனுடன் கூடவே வஸிக்கப்போகிறான்.

28. (பொ-ரை) பிறகு, ஜனங்களொருவருமில்லாமல் பாழாயிருக்கும் பூமியை மரங்களோடு கூட, கெட்ட நடத்தைஉள்ளவளும், ஜனங்களுக்கு அனர்த்தம் செய்வதிலே நிலை நின்றவளுமான நீ ஒருவளே ஆண்டுகொண்டிரு,

न हि तद्भविता राष्ट्रं यत्र रामो न भूपतिः ।
तद्वनं भविता राष्ट्रं यत्र रामो निवत्स्यति ॥ 29 ॥
न ह्यदत्तां महीं पित्रा भरतः शास्तुमर्हति ।
त्वयि वा पुत्रवद्वस्तुं यदि जातो महीपतेः ॥ 30 ॥
यद्यपि त्वं क्षितितलाद्गगनं चोत्पतिष्यसि ।
पितृवंशचरित्रज्ञः सोऽन्यथा न करिष्यति ॥ 31 ॥

29. (ப-ரை) यत्र- எந்த இடத்தில், रामः- ராமன், भूपतिः न- அரசனாகயிருக்கவில்லையோ, तत्- அது, राष्ट्रं- தேசமாக, न भविता हि- ஆகப்போகிறதேயில்லை, रामः- ராமன், यत्र- எந்த வனத்தில், निवत्स्यति- வஸிக்கப்போகின்றனோ, तत् वनं- அந்த வனமானது, राष्ट्रं- தேசமாக, भविता- ஆகப்போகிறது.

30. (ப-ரை) भरतः- பரதன், पित्रा- பிதாவினால், अदत्तां- (ப்ரீதியோடு) கொடுக்கப்படாத, महीं- பூமியை, शास्तुं- ஆளுவதற்கு, न अर्हति हि- தகுந்தவனல்ல, महीपतेः- அரசனுக்கு, जातः यदि- பிறந்திருப்பானேயானால், त्वयि- உன்னிடத்தில், पुत्रवत्- புத்திரனைப்போல், वस्तुं- வஸிப்பதற்கு, न अर्हति- தகுந்தவனல்ல.

31. (ப-ரை) त्वं- நீ, क्षितितलात्- பூமியிலிருந்து, गगनं च- ஆகாயத்தை, उत्पतिष्यसि यदि- கிளம்பினாலும், पितृवंशचरित्रज्ञः- பிதாவின் குலாசாரத்தை அறிந்திருக்கிற, सः- அந்த பரதன், अन्यथा- அதற்கு வேறாக, न करिष्यति- செய்யமாட்டான்.

29. (பொ-ரை) எந்த தேசத்தை ராமன் ஆளுகிறதில்லையோ அது தேசமேயல்ல, எந்த வனத்தில் ராமன் வஸிக்கப்போகின்றனோ, அந்த வனம் தேசமாகவே ஆகப்போகிறது.

30. (பொ-ரை) பரதனும், ப்ரீதியுடன் தனக்கு பிதா கொடுக்காத ராஜ்யத்தை ஆளத்தகுந்தவனுமல்ல. தசரத மஹாராஜனுக்கு அவன் பிறந்திருக்கும் பக்ஷத்தில் பித்ரு ஹத்திபண்ணுகிற உன்னிடத்திலாவது இனிமேல் பிள்ளைமுறையாக இருக்கவும் தகுந்தவனுமல்ல.

31. (பொ-ரை) கைகேயி! நீ தரையிலிருந்து ஆகாயத்தில் கிளம்பினாலும் ஸரி, ஜ்யேஷ்டபுத்திரனுக்கே பட்டாபிஷேகம் செய்யவேண்டுமென்கிற பிதாவின் குலாசாரத்தை நன்றாய் தெரிந்துகொண்டிருக்கிற பரதன் அதற்கு வித்யாஸமாக இருக்காலும் செய்யமாட்டான்.

तत्त्वया पुत्रगर्धिन्या पुत्रस्य कृतमप्रियम् ।
लोके हि न स विद्येत यो न राममनुव्रतः ॥ 32 ॥
द्रक्ष्यस्यद्यैव कैकेयि पशुव्यालमृगद्विजान् ।
गच्छतः सह रामेण पादपांश्च तदुन्मुखान् ॥ 33 ॥
अथोत्तमान्याभरणानि देवि देहि स्नुषायै व्यपनीय चीरम् ।
न चीरमस्याः प्रविधीयतेति न्यवारयत्तद्वसनं वसिष्ठः ॥ 34 ॥

32. (ப-ரை) तत्- ஆகையால், पुत्रगर्धिन्या- புத்ரனிடத்தில் ப்ரீதியுள்ளவளான, त्वया- உன்னால், पुत्रस्य- புத்ரனுக்கு, अप्रियम्- ப்ரியமல்லாத கார்யமே, कृतं- செய்யப்பட்டது, यः- யாவனொருவன், रामं- ஸ்ரீராமனை, न अनुव्रतः- அநுஸரிக்காதவனோ, सः- அந்த புருஷன், लोके- உலகத்திலே, न विद्येत हि- இருக்கவேமாட்டான்.

33. (ப-ரை) हे कैकेयि- கைகேயியே, अद्य एव- இப்பொழுதே रामेण सह- ராமனோடு கூடவே, गच्छतः- போகின்ற, पशुव्यालमृगद्विजान्- பசுக்களையும், ஸர்ப்பங்களையும், ம்ருகங்களையும், பக்ஷிகளையும், तदुन्मुखान्- ராமன் முகத்தையே நோக்கிக்கொண்டிருக்கிற, पादपान् च- வ்ருக்ஷங்களையும், द्रक्ष्यसि- பார்க்கப்போகிறாய்.

34. (ப-ரை) अथ- பிறகு, हे देवि- தேவியே, चीरम्- மரவுரியை, व्यपनीय- வாங்கிவிட்டு, स्नुषायै- நாட்டுப்பெண்ணாகிய ஸீதையின் பொருட்டு, उत्तमानि- ச்ரேஷ்டங்களான, आभरणानि- ஆபரணங்களை, देहि- கொடு, अस्याः- இந்த ஸீதைக்கு, चीरं- மரவுரியானது, न प्रविधीयते- விதிக்கப்படவில்லை, इति- என்று, तद्वसनं- அம்மரவுரி உடுத்திக்கொள்வதை, वसिष्ठः- வஸிஷ்ட மஹரிஷி, न्यवारयत- தடுத்துவிட்டார்.

32. (பொ-ரை) ஆகையினாலே, ஹே கைகேயி? நீ புத்திரனிடத்தில் ப்ரீதியினால் செய்த கார்யம் கடைசியாக புத்திரனுக்கு அனிஷ்டமாகவே முடிந்துவிட்டது. ஏனென்றால் ராமனை அனுஸரிக்காத புருஷன் இவ்வுலகத்திலேயே ஒருவனுமில்லை.

33. (பொ-ரை) ஹே கைகேயி! ராமன் காட்டிற்குப்போகும்பொழுது, அவனுடன்கூடவே, பசு, ஸர்ப்பம், ம்ருகம் பக்ஷி இவைகள் போவதையும், ராமனையே நோக்கிக்கொண்டிருக்கிற வ்ருக்ஷங்களையும் இப்பொழுதே பார்க்கப்போகிறாய். வ்ருக்ஷங்கள் ராமனை நோக்கிக்கொண்டிருப்பதாவது:— ராமன் விஷயத்தில் அதிகமான ஸ்நேஹத்துடன் கூடியிருத்தல். இவ்விஷயம் மேலே தெளிவாகும்.

34 (பொ-ரை) பிறகு, ஹே தேவியே! ஸீதைக்கு மரவுரியைத்தள்ளிவிட்டு, உத்தமமான ஆபரணங்களைக்கொடு. இவள் மரவுரி உடுத்துக்கொள்ளத்தகாதவள், என்று வஸிஷ்ட மஹரிஷி, ஸீதை மரவுரி உடுத்துக்கொள்வதைத்தடுத்துவிட்டார்.

एकस्य रामस्य वने निवासस्त्वया वृतः केकयराजपुत्रि ।
विभूषितेयं प्रतिकर्मनित्या वसत्वरण्ये सह राघवेण ॥ 35 ॥

यानैश्च मुख्यैः परिचारकैश्च सुसंवृता गच्छतु राजपुत्री ।
वस्त्रैश्च सर्वैः सहितैर्विधानैर्नेयं वृता ते वरसम्प्रदाने ॥ 36 ॥

35. (ப-ரை) हे केकयराजपुत्रि- கேகயராஜன் பெண்ணே! एकस्य रामस्य- ராமன் ஒருவனுக்கு மாத்திரம், वने निवासः- வனத்தில் வாஸமானது, त्वया- உன்னால், वृतः- கேட்டுக்கொள்ளப்பட்டது, (अतः- ஆகையினால்), प्रतिकर्मनित्या- ப்ரதிதினமும் அலங்காரம் செய்துகொள்ளத்தகுந்த, इयं- இந்த ஸீதை, विभूषिता सती- அலங்காரம் செய்துகொண்டு, राघवेण सह- ராகவனுடன்கூட, अरण्ये- காட்டில், वसतु- வாஸம் செய்யட்டும்.

36. (ப-ரை) राजपुत्री- ராஜபுத்ரியான ஸீதை, मुख्यैः- ச்ரேஷ்டங்களான, यानैः च- வாஹனங்களாலும், परिचारकैः च- வேலைக்காரர்களாலும், वस्त्रैः- வஸ்த்ரங்களாலும், सहितैः- ஒன்று சேர்ந்திருக்கிற, सर्वैः विधानैः च- (பொற்கிண்டி முதலான) எல்லா உபகரணங்களோடும், सुसंवृता सती- நன்றாக சூழப்பட்டவளாய்க்கொண்டு, गच्छतु-போகட்டும், इयं- இந்த ஸீதை, ते- உனக்கு, वरसम्प्रदाने- கொடுத்த வரத்தில், वृता न- கேட்கப்படவில்லை.

35. (பொ-ரை) அம்மா கேகயராஜன் பெண்ணே! ராமன் ஒருவன் மாத்திரம் வனவாஸம் செய்யவேண்டுமென்று நீ வரமாகக்கேட்டுக்கொண்டாய், ஆகலால் ப்ரதிதினமும் அலங்காரம் செய்துகொள்ளத்தகுந்த இந்த ஸீதை, எல்லா ஆபரணங்களையுமணிந்துகொண்டே ராமனுடன்கூட வனத்தில் வாஸம் செய்யவேண்டும்.

36. (பொ-ரை) இந்த ஸீதை ராஜபுத்ரியாகையால் ச்ரேஷ்டங்களான வாஹனங்களுடனும், தாஸிதாஸர்களுடனும், சிறந்த வஸ்திரங்களுடனும், பொற்கிண்டி முதலான எல்லா உபகரணங்களோடும் சேர்ந்தே வனம் போகட்டும். ஏனென்றால்? இவள் உனக்குக்கொடுத்த வரத்தில் சேர்ந்தவளல்ல.

तस्मिंस्तथा जल्पति विप्रमुख्ये गुरौ नृपस्याप्रतिमप्रभावे ।
नैव स्म सीता विनिवृत्तभावा प्रियस्य भर्तुः प्रतिकारकामा ॥ 37 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
सप्तत्रिंशः सर्गः ॥ 37 ॥

37. (ப-ரை) अप्रतिमप्रभावे- நிகரற்ற மஹிமை உடையவரும், नृपस्य- ராஜாவுக்கு, गुरौ- குருவுமான, तस्मिन् विप्रमुख्ये- அந்த ப்ராம்மணோத்தமர், तथा जल्पति सति- அவ்விதம் சொல்லும்பொழுது, सीता- ஸீதையானவள், प्रियस्य भर्तुः- ப்ரியனான பர்த்தாவுக்கு, प्रतिकारकामा- ஸரியான கார்யத்தை செய்ய எண்ண முடையவளாய், विनिवृत्तभावा- எண்ணத்தை மாற்றினவளாக, न एव स्म- ஆகவேயில்லை.

37. (பொ-ரை) நிகரற்ற மஹிமையுடையவரும அரசன் குருவாயும ப்ராம மணோத்தமருமான அந்த வஸிஷ்ட மஹர்ஷி அவ்விதம் சொன்னபோதிலும், பர்த்தா செய்வதை தானும் செய்யவேணுமென்கிற எண்ணமுடையவளாகையால், மரவுரி உடுத்துவதில் உண்டான எண்ணத்தை மாற்றவேயில்லை.

अष्टत्रिंशः सर्गः ॥ 38 ॥

तस्यां चीरं वसानायां नाथवत्यामनाथवत् ।
प्रचुक्रोश जनः सर्वो धिक् त्वां दशरथं त्विति ॥ 1 ॥
तेन तत्र प्रणादेन दुःखितः स महीपतिः ।
चिच्छेद जीविते श्रद्धां धर्मे यशसि चात्मनः ॥ 2 ॥

1. (ப-ரை) नाथवत्यां- மேலான நாதனையுடையவளான, तस्यां- அந்த ஸீதை, अनाथवत्- நாதனில்லாதவள்போல், चीरं- மரவுரியை, वसानायां (सत्यां)- உடுத்திக்கொள்ளுமபோது, दशरथं त्वां- தசரதனான உன்னை, धिक्- சீ, சீ, इति -என்று, सर्वः जनः- எல்லா ஜனமும், प्रचुक्रोश- உறக்க சப்தித்தது.

2. (ப-ரை) तत्र- அப்போது, सः महीपतिः- அவ்வரசன், तेन प्रणादेन- அப்பெரும் சப்தத்தினால், दुःखितः- மிகவருத்தமடைந்து, आत्मनः- தம்முடைய, जीविते- ப்ராணனிலும், धर्मे- தர்மத்திலும், यशसि- புகழிலும், श्रद्धां- ஆசையை, चिच्छेद- அறுத்துவிட்டார்.

1. (பொ-ரை) ஸீதாதேவி, லோகநாதனான ஸ்ரீராமனைத்தனக்கு நாதனைக் கொண்டிருந்தும், திக்கற்றவள்போல், மரவுரியை உடுக்குக்கொள்ளும்பொழுது, அங்கிருக்கும் ஜனம் முழுவதும தசரத மஹாராஜாவை சீ! சீ! என்று உறக்கத்திட்டிற்று.
2. (பொ-ரை) அப்போது, அந்தப்பெருங்கூச்சலைக்கேட்டு, அந்த அரசன் மிகவருத்தமடைந்து, தன் உயிரிலும், தர்மத்திலும் கீர்த்தியிலும, ஆசையை ஒழித்துவிட்டார்.

स निःश्वस्योष्णमैक्ष्वाकस्तां भार्यामिदमब्रवीत् ।
कैकेयि कुशचीरेण न सीता गन्तुमर्हति ॥ 3 ॥
सुकुमारी च बाला च सततं च सुखोचिता ।
नेयं वनस्य योग्येति सत्यमाह गुरुर्मम ॥ 4 ॥
इयं हि कस्यापकरोति किंचित् तपस्विनी राजवरस्य कन्या ।
या चीरमासाद्य जनस्य मध्ये स्थिता विसंज्ञा श्रमणीव काचित् ॥ 5 ॥

3. (ப-ரை) ऐक्ष्वाकः- இக்ஷ்வாகு குலத்திற் பிறந்தவரான, सः- அவ்வரசன், उष्ण- சூடாக, निःश्वस्य- மூச்செறிந்து, तां भार्यां- அந்த பார்யையைப் (பார்த்து), हे कैकेयि- அடீ கைகேயீ, सीता- ஸீதையானவள், कुशचीरेण- மரவுரியுடன், गन्तुं- போவதற்கு, न अर्हति- தகுந்தவளன்று, इति- என்று, इदं- இந்தவார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

4. (ப-ரை) सुकुमारी च- மிகமெல்லிய சரீரமுடையவள், बाला च- சிறு பெண்ணுமானவள், सततं-எப்பொழுதும், सुखोचिता च-ஸுகத்துக்கேற்றவள், ஆகையால், इयं- இந்த ஸீதை, वनस्य- வனவாஸத்திற்கு, न योग्या- தகுந்தவளல்ல, इति-என்று, मम गुरुः- என்னுடைய குருவானவர், सत्यं आह- உண்மையை சொன்னார்.

5. (ப-ரை) या- யாவளொருவள், चीरं- மரவுரியை, आसाद्य- அடைந்து, जनस्य मध्ये- ஜனத்தின் நடுவில், विसंज्ञा- ஞ்ஞானமில்லாத, काचित्- श्रमणी इव- தவம் செய்கின்ற ஒரு ஸ்திரீயைப்போல், स्थिता- நிற்கின்றாளோ, तपस्विनी- தபஸ்ஸையுடையவளும், राजवरस्य ராஜச்ரேஷ்டருடைய, कन्या- பெண்ணுமான, इयं- இந்த ஸீதை, कस्य-யாருக்காவது, किंचित् - ஏதாகிலும், अपकरोति- குற்றத்தைச் செய்திருக்கிறாளா?

3. (பொ-ரை) இக்ஷ்வாகு குலத்திற் பிறந்த அந்த தசரதமஹாராஜர் அந்த கைகேயியைப்பார்த்து, "அடீ கைகேயீ! ஸீதை மரவுரியைதரித்துக்கொண்டு காட்டிற்குப்போகத்தகாது" என்று சொன்னார்.

4. (பொ-ரை) இந்த ஸீதை மிக ம்ருதுவான சரீரமுடையவள், சிறுபெண், எப்பொழுதும் ஸுகாநுபவத்திற்கே யேற்றவள், ஆகையால் இவள் வனவாஸம் செய்யத்தகாதவள் என்று நம் குருவான வஸிஷ்ட முனிவர் சொன்னது உண்மை.

5. (பொ-ரை) மரவுரியைக்கையில் வைத்துக்கொண்டு அரையில் உடுத்திக் கொள்ளத்தெரியாமல், தவம் செய்கின்ற ஒரு ஸ்திரீயைப்போல் ஜனங்களின் நடுவில் தயங்கி நிற்கின்றவளும், பாதிவ்ருத்யமென்கிற பெரும் தவமுடையவளும், ராஜச்ரேஷ்டருடைய பெண்ணுமான இந்த ஸீதை, யாருக்கு என்ன குற்றம் செய்தாள்.

चीराण्यपास्याज्जनकस्य कन्या नेयं प्रतिज्ञा मम दत्तपूर्वा।
यथासुखं गच्छतु राजपुत्री वनं समग्रा सह सर्वरत्नैः ॥ 6 ॥
* अजीवनार्हेण मया नृशंसा कृता प्रतिज्ञा नियमेन तावत् ।
त्वया हि बाल्यात्प्रतिपन्नमेतत्तन्मां दहेद्वेणुमिवात्मपुष्पम्
रामेण यदि ते पापे किंचित्कृतमशोभनम् ।
अपकारः क इह ते वैदेह्या दर्शितोऽधमे ॥ 8 ॥

---

6. (ப-ரை) जनकस्य कन्या- ஜநகராஜன் பெண்ணானவள், चीराणि- மரவுரிகளை, अपास्यात्-விட்டுவிடட்டும், इयं प्रतिज्ञा- இந்த ப்ரதிஜ்ஞையானது, मम-என்னால், न दत्तपूर्वा- முன் கொடுக்கப்படவில்லை, राजपुत्री- ராஜகுமாரியானவள், समग्रा- (எல்லா ஆபரணங்களாலும்) நிறைந்தவளாய், सर्वरत्नैः सह-சிறந்த வஸ்துக்களெல்லாவற்றுடனும், यथासुखं- ஸுகமாகவே, वनं गच्छतु- வனம் போகட்டும்.

7. (ப-ரை) अजीवनार्हेण-உயிருடனிருக்கத்தகாதவனான, मया-என்னால், नृशंसा- கொடியதான, प्रतिज्ञा- இந்த ப்ரதிஜ்ஞையானது, तावत्- முதலில், कृता- செய்யப்பட்டது, त्वया हि- உன்னால், बाल्यात्- அஜ்ஞானத்தினால், एतत्- இது, नियमेन- ஒரு நிர்ப்பந்தத்தோடு, प्रतिपन्नं- தீர்மானித்துக்கொள்ளப்பட்டது, तत्- (ஆகையால்) நான் செய்த அந்த ப்ரதிஜ்ஞையானது, आत्मपुष्पम्- தன் பூவானது, वेणु इव- மூங்கிலைக் (கொளுத்துவதுபோல்,) मां- என்னை, दहेत्- எரித்துவிடும்.

8. (ப-ரை) हे पापे- அடீ பாபீ, अधमे-துஷ்டே, रामेण- ராமனால், ते- உனக்கு, किंचित्-अशोभनं-குற்றம் ஏதாகிலும், कृतं यदि-செய்யப்பட்டிருந்த போதிலும், इह-இவ்விஷயத்தில், वैदेह्या- ஸீதையினால், कः अपकारः-என்ன குற்றமானது, दर्शितः- காட்டப்பட்டது.

---

6. (பொ-ரை) ஆகையால், ஜனகராஜன குமாரி, மரவுரிகளை எறிந்து விடவேண்டும், உடுத்திக்கொள்ளக் கூடாது, இப்படி நான் உனக்கு முன் ப்ரதிஜ்ஞை செய்திருக்கவில்லை, ஆகலால் ராஜகுமாரியான இந்த ஸீதை ஆடை ஆபரணங்களால் அலங்காரம் செய்து கொண்டு உயர்ந்தவைகளான மற்ற வஸ்துக்களுடனும் ஸுகமாக வனத்திற்குச் செல்லவேண்டும்.

7. (பொ-ரை) எனக்கு மரணகாலம் கிட்டியிருந்தபடியால், ஆதிகாலத்தில் உனக்கு கொடிதான ஒரு ப்ரதிஜ்ஞையைச் செய்துவிட்டேன். அதாவது:—நீ கேட்ட வரனைக்கொடுக்கிறேனென்று, அப்படி நான் பொதுவாகச் சொல்லியிருந்ததை நீ இப்பொழுது மூடத்தன்மையால், "பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவேண்டும், ராமனைக்காட்டிற்குத் துரத்தவேண்டும்" என்று விவரித்து நிர்ப்பந்தமாகக் கேட்கிறாய், ஆகையால், நான் முன் சொன்னது, தன பூவினால் மூங்கிலுக்கு நாசம் உண்டாவதுபோல், எனக்கு நாசத்தை உண்டாக்கிவிடும்.

8. (பொ-ரை) அடீ பாவீ! ராமனாவது உனக்கு ஏதாவது சொல்ப குற்றம் செய்திருக்கட்டும், விதேக ராஜன் புத்ரியானவள் இவ்விதம் தன்னைக்காட்டிற்குத் துரத்தத் தகுந்த அபராதம் என்ன செய்திருக்கிறதாக நீ நினைத்திருக்கிறாய்.

मृगीवोत्फुल्लनयना मृदुशीला तपस्विनी ।
अपकारं कमिह ते करोति जनकात्मजा ॥ 9 ॥
ननु पर्याप्तमेतत्ते पापे रामविवासनम् ।
किमेभिः कृपणैर्भूयः पातकैरपि ते कृतैः ॥ 10 ॥
प्रतिज्ञातं मया तावत्त्वयोक्तं देवि शृण्वता ।
रामं यदभिषेकाय त्वमिहागतमब्रवीः ॥ 11 ॥

9. (ப-ரை) मृगी इव- மான்பேடுபோல், उत्फुल्लनयना- அகன்ற கண்களையுடையவளும், मृदुशीला-ம்ருதுவான ஸ்வபாவமுடையவளும், तपस्विनी-தவமுடையவளுமான, जनकात्मजा- ஜானகியானவள், इह- இவ்விஷயத்தில், कं अपकारं- என்ன அபகாரத்தை, ते- உனக்கு, करोति- செய்கிறாள்.

10. (ப-ரை) हे पापे- அடீ பாபீ, एतत् रामविवासनं- ராமனைக்காட்டிற்குத்துரத்துகிற இந்தப்பாபமே, ते-உனக்கு, पर्याप्तं ननु- போதுமானதல்லவா, कृपणैः- மிகவும் துக்ககரங்களாயும், भूयः- மறுபடியும், कृतैः- செய்யப்பட்ட, एभिः पातकैः अपि- இந்தப் பாபங்களால், ते- உனக்கு, किं- என்ன (ப்ரயோஜனம்).

11. (ப-ரை) अभिषेकाय- பட்டாபிஷேகத்திற்காக, इह- இங்கு, आगतं- வந்த, रामं- ராமனைப்பார்த்து, त्वं- நீ, यत्- யாதொன்றை, अब्रवीः- சொன்னாயோ, देवि- தேவியே, त्वया- உன்னால், उक्तं- சொல்லப்பட்ட அந்த வார்த்தையை, शृण्वता-கேட்டிருந்த, मया- என்னாலும், तावत्- அவ்வளவுதான், प्रतिज्ञातं- ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டது.

---

9. (பொ-ரை) மான் பேடுபோல் மலர்ந்த கண்களையுடையவளும், ம்ருதுவான ஸ்வபாவமுடையவளுமான, ஜானகியானவள், இவ்விதம் வனவாஸம் செய்யும்படி, உனக்கு என்ன குற்றம் செய்கிறாள்.

10. (பொ-ரை) அடீ பாபீ! ராமனைக்காட்டிற்குத் துரத்துகிற இந்தப் பாவமே, உனக்கு ஆசந்த்ரார்க்கம் இருக்கும் வரை, நரகம் அனுபவிக்கப் போதுமானது. அப்படி இன்னும் அதிகமாகவும் வாயினால் சொல்ல முடியாத துக்கங்களை விளைக்கின்ற நீ செய்கின்ற பாவங்களால் என்ன அனுபவிக்கப் போகிறாயோ தெரியவில்லை.

*இந்த ச்லோகத்தில் பூர்வார்த்தத்தில் "नियमेन" என்கிற பதத்திற்கு சபதத்துடன் என்றும், உத்தரார்த்தத்திற்கு——நான் ராமனைக்காட்டிற்குத் துரத்துகின்றேனென்று மாத்திரம் ப்ரதிஜ்ஞை செய்திருந்தேன். இப்பொழுது, நீ அத்துடன் ஸீதையையும் வனத்திற்கு அனுப்ப ஆரம்பித்து விட்டால் இது என்னை நாசம் செய்யப்போகிறதென்றும் திர்த்தியத்தில் காண்கிறது.

11 (பொ-ரை) தேவி, பட்டாபிஷேகத்திற்காக இங்கு ராமன் வந்திருந்த போது அவனைப்பார்த்து ராமா! இப்போது உனக்கு நிச்சயம் செய்திருக்கும் பட்டாபிஷேகத்தை விட்டு விட்டு, மரவுரி, க்ருஷ்ணாஜினங்களை உடுத்திக்கொண்டு பதினான்கு வருஷம் தண்டகாவனத்தில் நீ வஸிக்க வேண்டுமென்று நீ சொன்னாய் அல்லவா! அதைக்கேட்டு நானும் அவ்வளவேதான் உனக்குப்ரதிஜ்ஞை செய்தேனே தவிர, ஸீதையையும் காட்டிற்குப்போகச் சொல்லுவதாகச் சொல்லவில்லையே.

तत्त्वेतत्समतिक्रम्य निरयं गन्तुमिच्छसि ।
मैथिलीमपि या हि त्वमीक्षसे चीरवासिनीम् ॥ 12 ॥
इतीव राजा विलपन्महात्मा शोकस्य नान्तं स ददर्श किंचित् ।
भृशातुरत्वाच्च पपात भूमौ तेनैव पुत्रव्यसने निमग्नः ॥ 13 ॥
एवं ब्रुवन्तं पितरं रामः सम्प्रस्थितो वनम् ।
अवाक्शिरसमासीनमिदं वचनमब्रवीत् ॥ 14 ॥

12. (ப-ரை) या हि-யாதொரு, त्वं-நீ, मैथिलीं अपि-ஸீதையையும், चीरवासिनीं- மரவுரியையுடுத்திக்கொள்ள, ईक्षसे- பார்க்கிறாயோ, (सा- அந்த நீ) तत्- அந்த, एतत्-இந்த ப்ரதிஜ்ஞையை, समतिक्रम्य- மீறி, निरयं- நரகத்தை, गन्तुं- அடைய, इच्छसि- விரும்புகிறாய்.

13. (ப-ரை) महात्मा- மிகுந்த தைர்யமுள்ள, सः राजा- அவ்வரசன், इति इव- இவ்வாறுபோல், विलपन् (सन्) கதறிக்கொண்டு, शोकस्य- துக்கத்தினுடைய, अन्त-முடிவை, किंचित्- கொஞ்சமேனும், न ददर्श- காணவில்லை, तेनैव- அதனாலேயே, पुत्रव्यसने-புத்திரசோகத்தில், निमग्नः- ஆழ்ந்தவராய், भृशातुरत्वाच्च- மிகவும் பீடிக்கப்பட்டமையாலும், भूमौ- தரையில், पपात- விழுந்தார்.

14. (ப-ரை) एवं- இவ்வாறு, ब्रुवन्तं- சொல்லிக்கொண்டும், अवाक्शिरस- தலை குனிந்தவராய், आसीनं- உட்கார்ந்துமிருக்கிற, पितरं- பிதாவைப் (பார்த்து) रामः- ராமன், वनं-வனத்தைக்குறித்து, सम्प्रस्थितः- புறப்பட்டுக்கொண்டு, इदं वचनं-இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

12. (பொ-ரை) நான் முன் செய்திருந்த ப்ரதிஜ்ஞையை மீறி, "ஸீதையும் மரவுரி உடுத்திக்கொண்டு வனம்போக வேண்டு"மென்று சொல்லுகிறபடியால் நீ நரகத்தையே அடைய ஆசைப்படுகிறாய்.

13. (பொ-ரை) அவ்வரசன் மிக்க தீரராயிருந்தும், இவ்வாறும், இன்னம் இது போன்ற பலவாறும் கதறி தன் துக்கத்தின் முடிவைக்காணவேயில்லை புத்திர சோகமாகிற கடலில் அமிழ்ந்து அதனால் மிகவும் நொந்திருக்கிறபடியால், திடீரென்று தரையில் விழுந்துவிட்டார்.

14. (பொ-ரை) இவ்வாறு சொல்லிக்கொண்டு, தலை குனிந்து உட்கார்ந்திருக்கிற பிதாவை நோக்கி, ராமன் காட்டிற்குப்புறப்பட ஸித்தமாயிருந்து இவ்வாறு சொன்னார்.

इयं धार्मिक! कौसल्या मम माता यशस्विनी ।
वृद्धा चाक्षुद्रशीला च न च त्वां देव गर्हते ॥ 15 ॥

मया विहीनां वरद! प्रपन्नां शोकसागरम् ।
अदृष्टपूर्वव्यसनां भूयः संमन्तुमर्हसि ॥ 16 ॥

पुत्रशोकं यथा नर्च्छेत्त्वया पूज्येन पूजिता ।
मां हि संचिन्तयन्ती सा त्वयि जीवेत्तपस्विनी ॥ 17 ॥

15-16. (ப-ரை) हे धार्मिक देव- தார்மிஷ்டரான ப்ரபுவே, इयं- இந்த, मम माता- என் தாயாரான, कौसल्या- கௌஸல்யாதேவியானவள், यशस्विनी- கீர்த்தியுடையவள் वृद्धा च- வயது முதிர்ந்தவள், अक्षुद्रशीला च- பெருந்தன்மையுடையவள், त्वां च- உமமையும், न गर्हते- நிந்திக்காமலுமிருக்கிறாள், हे वरद- கேட்ட வரங்களைக்கொடுக்கின்றவரே, मया विहीनां- என்னைப்பிரிந்தவளும், शोकसागरं- துக்கமாகிற கடலை, प्रपन्नां- அடைந்தவளும், अदृष्टपूर्वव्यसनां- இதற்குமுன் துக்கத்தைப்பாராதவளுமான அவளை, (त्वं- நீர்), भूयः- விசேஷமாக, संमन्तुं- கௌரவப்படுத்த, अर्हसि- தகுந்தவர்.

17. (ப-ரை) तपस्विनी- பதிவ்ரதையான, सा- அந்த என் தாயார், मां- என்னை, संचिन्तयन्ती- நினைத்துக்கொண்டவளாய்க்கொண்டு, पुत्रशोकं- புத்திரசோகத்தை, यथा- எப்படி, न ऋच्छेत्- அடையாமலிருப்பாளோ, तथा- அப்படி, पूज्येन- பூஜ்யரான, त्वया- உம்மால், पूजिता (सती) பூஜிக்கப்பட்டவளாய், त्वयि- உம்மிடத்தில், जीवेत्- ஜீவித்துக்கொண்டிருக்கட்டும்.

15-16. (பொ-ரை) தார்மிகரான ப்ரபுவே! என் தாயாரான இந்த கௌஸல்யா தேவி, பெரும் புகழ்பெற்றவள், வயது முதிர்ந்தவள், பெருந்தன்மை யுடையவள், ஆதலால் உம்மை இவள் நிந்திக்கமாட்டாள், ஒரு நாளும் துக்கத்தையே அறியாதவள், இப்போது என்னை விட்டுப்பிரிந்து துன்பக்கடலில் மூழ்கியிருக்கிறாள், இவளை முன்னைவிட விசேஷமாகக் கௌரவப்படுத்த வேணுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

17. (பொ-ரை) தவமுடைய என் தாயார் என்னை நினைத்துக்கொண்டு புத்திர சோகத்தை அடையாமலிருக்கும்படி பூஜ்யரான உம்மால் பெருமைப் படுத்தப்பட்டு உம்மிடத்தில் ஜீவித்திருக்கட்டும்.

इमां महेन्द्रोपम! जातगर्धिनीं तथा विधातुं जननीं ममार्हसि ।
यथा वनस्थे मयि शोककर्शिता न जीवितं न्यस्य यमक्षयं व्रजेत् ॥ 18 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
अष्टत्रिंशः सर्गः ॥ 38 ॥

18. (ப-ரை) हे महेन्द्रोपम- தேவேந்திரனுக்கு ஸமானமானவரே, (इयं-இவள்) मयि- நான், वनस्थे- (सति)- வனத்திலிருக்கும் காலத்தில், शोककर्शिता- துக்கத்தினால் இளைத்தவளாய், जीवितं- உயிரை, न्यस्य- விட்டு, यथा- எப்படி, यमक्षयं- யமலோகத்தை, न व्रजेत्- அடையாமலிருப்பாளோ, जातगर्धिनीं- புத்ரவாத்ஸல்யமுடையவளான, इमां- இந்த, मम जननीं- என் தாயாரை, तथा-அப்படி, विधातुं- செய்ய, अर्हसि- (நீர்) தகுந்தவர்.

18. (பொ-ரை) தேவேந்திரனுக்கு ஸமானமான ப்ரபுவே! புத்திரவாத்ஸல்ய முடைய என் தாயார், நான் வனத்திலிருக்கும் காலத்தில் என்னையே நினைத்துக்கொண்டு, துக்கத்தினால் சரீர மிளைத்து பிராணனை விட்டு யமலோகமடையாமலிருக்கும்படி அவளை நீர் கௌரவித்து, தேறுதல் சொல்லிக் காப்பாற்றிக் கொண்டிருக்கவேண்டும்.



एकोनचत्वारिंशः सर्गः ॥ 39 ॥

रामस्य तु वचः श्रुत्वा मुनिवेषधरं च तम् ।
समीक्ष्य सह भार्याभी राजा विगतचेतनः ॥ 1 ॥

1. (ப-ரை) रामस्य- ராமனுடைய, वचः- வார்த்தையை, श्रुत्वा तु- கேட்டும், मुनिवेषधरं- ரிஷிவேஷம் தரித்திருக்கிற, तं- அவரை, समीक्ष्य च- பார்த்தும், राजा- அரசன், विगतचेतनः- ப்ரஜ்ஞையிழந்தவராக, (अभूत्- ஆனார்).

1. (பொ-ரை) ராமனுடைய லோகவிலக்ஷணமான வார்த்தையையும் கேட்டு வேஷம் பூண்டிருக்கிற அவரையும் பார்த்து அரசன் மூர்ச்சை அடைந்தார்.

नैनं दुःखेन संतप्तो प्रत्यवेक्षत राघवम् ।
न चैनमभिसम्प्रेक्ष्य प्रत्यभाषत दुर्मनाः ॥ 2 ॥

स मुहूर्तमिवासंज्ञो दुःखितश्च महीपतिः ।
विललाप महाबाहू राममेवानुचिन्तयन् ॥ 3 ॥

मन्ये खलु मया पूर्वं विवत्सा बहवः कृताः ।
प्राणिनो हिंसिता वापि तस्मादिदमुपस्थितम् ॥ 4 ॥

2. (ப-ரை) दुःखेन- துக்கத்தினுல், संतप्तः- நன்ருகப்பரிதாபமடைந்தவராய், एनं राघवं- இந்த ராகவனை, न प्रत्यवेक्षत- பார்க்கவில்லை, दुर्मनाः- நொந்த மனமுடையவராய், एनं- இவரை, अभिसम्प्रेक्ष्य- பார்த்து, न प्रत्यभाषत-வார்த்தையும் சொல்லவில்லை.

3. (ப-ரை) महाबाहुः- பெருந்தோள்களையுடைய, सः महीपतिः- அவ்வரசன், मुहूर्तं इव-சற்றுநேரம்போல், असंज्ञः-ப்ரஜ்ஞையில்லாதவராயிருந்து, दुःखितः- துக்கமுடையவராய், रामं एव- ராமனையே, अनुचिन्तयन्- நினைத்துக்கொண்டே, विललाप- கதறினர்

4. (ப-ரை) मया- என்னுல், पूर्वं- முன்காலத்தில், बहवः- (धेनवः) அநேகம் பசுக்கள், विवत्साः- கன்றில்லாதவைகளாக, कृताः-செய்யப்பட்டிருக்கவேண்டும், प्राणिनः वा अपि- (வேறு) ப்ராணிகளாவது, हिंसिताः- ஹிம்ஸிக்கப்பட்டிருக்கவேண்டும், तस्मात्- அதனுல் தான், इदं- இது, उपस्थितं- நேர்ந்திருக்கிறது, (इति- என்று,) मन्ये खलु- நான் நினைக்கிறேன்.

---

2. (பொ-ரை) துக்கத்தினுல் பரிதாபமடைந்து, நொந்தபடியால் இந்த ராமனைப்பார்க்கவுமில்லை, பார்த்து வார்த்தை யொன்றும் சொல்லவுமில்லை.

3. (பொ-ரை) பெருந்தோள்களையுடைய அவ்வரசன், ஒரு முகூர்த்த காலம் ப்ரஜ்ஞையற்று, பிறகு துக்கத்துடன் ராமனையே நினைத்துக்கொண்டு கதறினர்.

4. (பொ-ரை) முன் காலத்தில் நான் அநேகம் பசுக்களை, கன்றுகளைவிட்டுப் பிரித்திருக்கவேண்டும், அல்லது ப்ராணிகளையாவது ஹிம்ஸித்திருக்கவேண்டும், அதனுல்தான், இந்த கஷ்டம் எனக்கு இப்பொழுது நேர்ந்திருக்கிறதென்று நான் நினைக்கிறேன்,

न त्वेवानागते काले देहाच्च्यवति जीवितम् ।
कैकेय्या क्लिश्यमानस्य मृत्युर्मम न विद्यते ॥ 5 ॥
योऽहं पावकसंकाशं पश्यामि पुरतः स्थितम् ।
विहाय वसने सूक्ष्मे तापसाच्छादमात्मजम् ॥ 6 ॥
एकस्याः खलु कैकेय्याः कृतेऽयं क्लिश्यते जनः ।
स्वार्थे प्रयतमानायाः संश्रित्य निकृतिं त्विमाम् ॥ 7 ॥

5. (ப-ரை) काले- காலமானது, अनागते (सति)- வராமலிருக்கும் பொழுது, देहात्-சரீரத்திலிருந்து, जीवितम्- ப்ராணன், नच्यवति तु- நழுவாது அல்லவா, (அதனால் தான்), कैकेय्या- கைகேயியினால், क्लिश्यमानस्य- துக்கத்தையடைவிக்கப்படுகின்ற, मम- எனக்கு, मृत्युः- மரணம், न विद्यते- இல்லை.

6. (ப-ரை) यः अहं- யாதொருநான், सूक्ष्मे- மெல்லியதான, वसने- வஸ்திரங்களை, विहाय- அவிழ்த்துவிட்டு, तापसाच्छादं- முனிகளின் வஸ்திரம் தரித்துக்கொண்டு, पावकसंकाशं- அக்நிக்கு ஸமானமாய், पुरतः स्थितं- எதிரில் நிற்கின்ற, आत्मजं- புத்திரனை, पश्यामि- பார்க்கின்றேனே, (तस्य मम मृत्युः न विद्यते)- என்று முன்ச்லோகத்தோடு ஸம்பந்தம்.

7. (ப-ரை) इमां- இந்த, निकृतिं- வஞ்சனையை, संश्रित्य- அடைந்து, स्वार्थे- தன் காரியத்தில், प्रयतमानायाः- ப்ரயத்நம் கொண்டிருக்கிற, कैकेय्याः एकस्याः- கைகேயி ஒருவளுடைய, कृते- நிமித்தமாக, अयं जनः- இந்த ஜனமானது, क्लिश्यते खलु- வருத்தப்படுகின்றதன்றோ.

5. (பொ-ரை) சரீரம் அழியும் காலம் வராமல், தேஹத்திலிருந்து ப்ராணன் வெளிப் போகாதல்லவா, அதனால் தான் கைகேயியினால் பீடிக்கப்படுகின்ற எனக்கு மரணம் உண்டாகவில்லை.

6. (பொ-ரை) யாதொருநான் ஸூக்ஷ்மமான வஸ்திரங்களை அவிழ்த்துவிட்டு ரிஷிக்கள் தரிக்கக்கூடிய மரவுரிகளைத் தரித்துக்கொண்டு அக்நிக்கு ஸமானமான தேஜஸ்ஸுடன் என்னெதிரில் நிற்கின்ற பிள்ளையைப் பார்க்கிறேன்.

7. (பொ-ரை) என்னை மோசம் செய்து அவ்வழியால் தன் காரியத்தை ஸாதித்துக்கொள்ள முயர்ச்சி செய்கின்ற இந்த கைகேயி ஒருவளுக்காகவன்றோ இந்த ஜனமுழுவ(தும் கஷ்டப் படுகிறது)தையும் நான் வருத்தப் படுத்துகிறேன்.

एवमुक्त्वा तु वचनं बाष्पेण पिहितेन्द्रियः ।
रामेति सकृदेवोक्त्वा व्याहर्तुं न शशाक ह ॥ 8 ॥
संज्ञां तु प्रतिलभ्यैव मुहूर्तात्स महीपतिः ।
नेत्राभ्यामश्रुपूर्णाभ्यां सुमन्त्रमिदमब्रवीत् ॥ 9 ॥
औपवाह्यं रथं युक्त्वा त्वमायाहि हयोत्तमैः ।
प्रापयैनं महाभागमितो जनपदात्परम् ॥ 10 ॥

8. (ப-ரை) एवं- இவ்விதம், वचनं- வார்த்தையை, उक्त्वा तु- சொல்லிவிட்டு, बाष्पेण- கண்ணீரால், पिहितेन्द्रियः- மறைக்கப்பட்ட இந்திரியங்களையுடையவராய், राम! इति- அப்பா- ராமா! என்று, सकृत् एव- ஒரு தடவை மாத்திரம், उक्त्वा- சொல்லி, व्याहर्तुं- (மறுபடி) சொல்லுவதற்கு- न शशाक- சக்தியற்றிருந்தார், ह- கஷ்டம.

9. (ப-ரை) सः महीपतिः तु- அவ்வரசனும், मुहूर्तात्- இரண்டுநாழிகைக்குப் (பிறகு) संज्ञां- ப்ரஜ்ஞையை, प्रतिलभ्य एव- அடைந்து, अश्रुपूर्णाभ्यां- கண்ணீர் நிறைந்த, नेत्राभ्यां- கண்களுடன், सुमन्त्रं- ஸுமந்த்ரரைப்பார்த்து, इदं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

10. (ப-ரை) औपवाह्यं- அரசர்கள் ஏறுவதற்குரிய, रथं- தேரை, हयोत्तमैः- உத்தமமான குதிரைகளோடு, युक्त्वा- பூட்டி, त्वं- நீர், आयाहि- கொண்டுவாரும், महाभागं பெரும்பாக்யமுடைய, एनं- இவனை, इतः- இந்த, जनपदात्- தேசத்திலிருந்து, परं- அப்புறத்தில், प्रापय- கொண்டுபோய் விட்டுவிடும்.

---

8. (பொ-ரை) இவ்விதம் சொல்லி கண்களால் நீரைப்பெருக்கிப் புலன்கள் கலங்கி, ராமா! என்று ஒரே தடவை சொல்லி மறுபடி சொல்ல சக்தியற்றவராயிருந்தார். ஐயோ! என்று வால்மீகி பரிதபிக்கிறார்.

9. (பொ-ரை) பிறகு, அவ்வரசன் இரண்டு நாழிகை கழிந்து மூர்ச்சை தெளிந்து கண்களில் நீரைப்பெருக்கிக்கொண்டு, ஸுமந்த்ரரைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

10. (பொ-ரை) ஸுமந்த்ரரே! அரசர்கள் ஏறி சவாரி செய்யத்தகுந்த தேரில், சிறந்த குதிரைகளைப்பூட்டி, பெரும்பாக்யமுடைய இந்த பிள்ளையை இந்த தேசத்திற்கு அப்புறம் கொண்டுபோய் நீர் விட்டு விடவேண்டும்.

एवं मन्ये गुणवतां गुणानां फलमुच्यते ।
पित्रा मात्रा च यत्साधुर्वीरो निर्वास्यते वनम् ॥ 11 ॥
राज्ञो वचनमाज्ञाय सुमन्त्रः शीघ्रविक्रमः ।
योजयित्वाऽऽययौ तत्र रथमश्वैरलंकृतम् ॥ 12 ॥
तं रथं राजपुत्राय सूतः कनकभूषितम् ।
आचचक्षेऽञ्जलिं कृत्वा युक्तं परमवाजिभिः ॥ 13 ॥

---

11. (ப-ரை) साधुः- ஸாதுவாயும், वीरः- சூரனுமான இவன், पित्रा- பிதாவி னுலும், मात्रा च- மாதாவினுலும், वनम्- வனத்தைக்குறித்து, यत्- யாதொரு காரணத் தினல். निर्वास्यते- துறத்தப்படுகிருனே, तत्- ஆகையால், गुणवतां- குணமுள்ளவர்க ளுடைய, गुणानां- குணங்களுக்கு, फलं-பயனுனது, एवं-இவ்விதந்தான், (इति- என்று,) मन्ये- நான் எண்ணுகிறேன்.

12. (ப-ரை) राज्ञः- அரசனுடைய, वचनं- வார்த்தையை, आज्ञाय- அறிந்து கொண்டு, सुमन्त्रः- ஸுமந்த்ரரும், शीघ्रविक्रमः- வேகமான நடையுடையவராய், अलंकृतम्- அலங்கரிக்கப்பட்ட, रथं- தேரை, अश्वैः- குதிரைகளோடு, योजयित्वा- பூட்டி, तत्र- அங்கு, आययौ- (கொண்டு) வந்தார்.

13. (ப-ரை) सूतः- ஸாரதியானவர், अञ्जलिं कृत्वा- கைகூப்பிக்கொண்டு, कनकभूषितम्- ஸ்வர்ணங்களால் அலங்கரிக்கப்பட்டதும், परमवाजिभिः-உத்தமமான குதிரை களோடு, युक्तं-பூட்டப்பட்டதுமான, तं रथं-அந்தத்தேரை, राजपुत्राय-ராஜகுமாரனுக்கு, आचक्षे-(வந்திருக்கிறதாக) சொன்னுர்.

11. (பொ-ரை) ஸகல குணங்களும் நிறைந்து ஸாதுவாயும், சூரனுமான இந்த ராமனே, தாய் தகப்பன் இரண்டுபேரும் காட்டிற்குத் துறத்துகிறபடியால் உலகத்தில் எல்லா குணசாலிகளின் குணங்களுக்கும் இப்படித்தான் பயனிருக்கு மென்று நினைக்கிறேன்.

12. (பொ-ரை) ஸுமந்த்ரரும், அரசன் மொழியைக்கேட்டு, வேகமாக நடந்துபோய், தேரை அலங்கரித்து, குதிரைகள்பூட்டி, அங்குகொண்டுவந்தார்.

13. (பொ-ரை) ஸுமந்த்ரர், ஸுவர்ணங்களால் அலங்கரிக்கப்பட்டு குதி ரைகள் பூட்டியதேர் அங்குவந்து, ஸித்தமாய் நிற்பதை ராஜகுமாரனிடம், கைகூப் பிக்கொண்டு தெரிவித்தார்.

राजा सत्वरमाहूय व्यापृतं वित्तसंचये ।
उवाच देशकालज्ञं निश्चितं सर्वतः शुचिम् ॥ 14 ॥
वासांसि च महार्हाणि भूषणानि वराणि च ।
वर्षाण्येतानि सङ्ख्याय वैदेह्याः क्षिप्रमानय ॥ 15 ॥
नरेन्द्रेणैवमुक्तस्तु गत्वा कोशगृहं ततः ।
प्रायच्छत्सर्वमाहृत्य सीतायै सममेव तत् ॥ 16 ॥

14. (ப-ரை) राजा- அரசனும், देशकालज्ञं- இடத்தையும், காலத்தையும் அறிந்தவனும், निश्चित- நிச்சயமான ஞானமுடையவனும், सर्वतः शुचिम्- உள்ளும் புறமும் சுத்தியுள்ளவனுமான, वित्तसञ्चये- தனசாலையில், व्यापृतं- அதிகாரம் பெற்றவனை, सत्वरं- பரபரப்புடன், आहूय- அழைத்து, उवाच- சொன்னார்.

15. (ப-ரை) महार्हाणि- விலையுயர்ந்த, वासांसि च- வஸ்திரங்களையும், वराणि- உயர்ந்த, भूषणानि च- ஆபரணங்களையும், एतानि- இந்த, वर्षाणि- (பதினான்கு) வருஷங்களை, संख्याय- கணக்கிட்டு, वैदेह्याः- ஸீதைக்கு, क्षिप्रं- சீக்கிரமாக, आनय- கொண்டுவந்து கொடும், (என்று சொன்னார்.)

16. (ப-ரை) नरेन्द्रेण- அரசனால், एवं- இவ்விதம், उक्तः तु- சொல்லப்பட்ட, (அதிகாரியும்) ततः- பிறகு, कोशगृहं- பொக்கிஷசாலையை, गत्वा- அடைந்து, तत् सर्वं- அதை முழுவதையும், समं एव- ஒரே காலத்தில், आहृत्य- கொண்டுவந்து, सीतायै- ஸீதையின் பொருட்டு, प्रायच्छत्- கொடுத்தார்.

---

14. (பொ-ரை) இன்ன இடத்தில், இன்ன காலத்தில் இவ்விதம் நடந்து கொள்ளவேணுமென்று தெரிந்தவனும், இன்ன இன்ன தினுசுகள் இவ்வளவு இவ்வளவு இருக்கிறதென்று நிச்சயமாகத் தெரிந்தவனும், உள்ளும் புறமும் பரிசுத்தனுமான, பொக்கிஷத்து அதிகாரியை அழைத்து அரசன் ஒரு வார்த்தை சொன்னார்.

15. (பொ-ரை) ஸீதை பதினான்கு வருஷம் வனத்தில் வஸிக்கிறபடியால் அந்த காலத்திற்கு வேண்டிய உத்தமங்களான வஸ்திரங்களையும், சிறந்த ஆபரணங்களையும், கணக்கிட்டு அவைகளை சீக்கிரம் கொண்டுவாரும் என்று சொன்னார்.

16. (பொ-ரை) இவ்விதம் அரசனால் கட்டளையிடப்பட்ட அவ்வதிகாரியும் உடனே (பொக்கிஷம்) தனசாலை சென்று, அந்த ஆடை ஆபரணங்கள் முழுவதையும் ஒரே தடவையில் கொண்டுவந்து ஸீதைக்குக்கொடுத்தார்.

सा सुजाता सुजातानि वैदेही प्रस्थिता वनम् ।
भूषयामास गात्राणि तैर्विचित्रैर्विभूषणैः ॥ 17 ॥
व्यराजयत वैदेही वेश्म तत्सुविभूषिता ।
उद्यतोंऽशुमतः काले खं प्रभेव विवस्वतः ॥ 18 ॥
तां भुजाभ्यां परिष्वज्य श्वश्रूर्वचनमब्रवीत् ।
अनाचरन्तीं कृपणं मूर्ध्न्युपाघ्राय मैथिलीम् ॥ 19 ॥

---

17. (ப-ரை) सुजाता- நல்ல பிறப்புடையவளான, सा- அந்த, वैदेही- விதேஹ ராஜகுமாரியான ஸீதை, वनं- வனத்தைக்(குறித்து,) प्रस्थिता- (सती-) புறப்படுகிறவளாய், सुजातानि- நன்றாக உண்டாயிருக்கின்ற, गात्राणि- (தன்) அங்கங்களை, विचित्रैः- ஆச்சர்யமான, तैः- அந்த, भूषणैः- ஆபரணங்களால், भूषयामास- அலங்காரம் செய்து கொண்டாள்.

18. (ப-ரை) वैदेही- ஸீதையானவள், सुविभूषिता (सती)- நன்றாய் அலங்கரித்துக் கொண்டு. काले- உதயகாலத்தில், अंशुमतः- நல்ல கிரணங்களுடையவராய், उद्यतः-உதிக்கின்ற, विवस्वतः- ஸூர்யனுடைய, प्रभा- ஒளியானது, खं इव- ஆகாயத்தை (ப்ரகாசப்படுத்துவது)போல், तत् वेश्म- அவ்வரண்மனையை, व्यराजयत- ப்ரகாசப்படுத்தினாள்.

19. (ப-ரை) श्वश्रूः- மாமியார், कृपण- அல்பமான கார்யத்தை, अनाचरन्तीं- செய்யாமலிருக்கின்ற, तां मैथिलीम्- அந்த ஸீதையை, परिष्वज्य- அணைத்துக்கொண்டு, मूर्ध्नि- தலையில், उपाघ्राय- முகர்ந்து, वचनं- வார்த்தையை, अब्रवीत्- சொன்னாள்.

---

17. (பொ-ரை) உத்தமமான பிறப்பையுடைய, அவ்விதேஹராஜன் புத்திரியான ஸீதா தேவியும், ஸாமுத்ரிகா சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட, உத்தமலக்ஷணங்கள் பொருந்திய, தன் அங்கங்களை, ஆச்சர்யப்படக்கூடிய அவ்வாபரணங்களால் அலங்கரித்துக் கொண்டாள்.

18. (பொ-ரை) காலைவேளையில் ச்லாக்யமான கிரணங்களோடு உதிக்கின்ற ஸூர்யனுடைய ஒளியானது ஆகாயத்தைப் பிரகாசப்படுத்துவதுபோல், அலங்காரம் செய்துகொண்ட அந்த ஸீதாதேவியானவள் அவ்வரண்மனையை ப்ரகாசப்படுத்தினாள்.

19. (பொ-ரை) பழிப்பில்லாத கார்யத்தைச் செய்கின்ற மிதிலராஜன் குமாரியான அந்த ஸீதாதேவியை, மாமியாரான கௌஸல்யாதேவி இருகைகளாலும் அணைத்து உச்சி முகர்ந்து ஒரு வார்த்தை சொன்னாள்.

असत्यः सर्वलोकेऽस्मिन्सततं सत्कृताः प्रियैः ।
भर्तारं नानुमन्यन्ते विनिपातगतं स्त्रियः ॥ 20 ॥
एष स्वभावो नारीणामनुभूय पुरा सुखम् ।
अल्पामप्यापदं प्राप्य दुष्यन्ति प्रजहत्यपि ॥ 21 ॥
असत्यशीला विकृताः दुर्ग्राह्यहृदयाः सदा ।
युवत्यः पापसंकल्पाः क्षणमात्राद्विरागिणः ॥ 22 ॥

20. (ப-ரை) अस्मिन्- सर्वलोके- இவ்வுலகத்தில் எங்குமே, असत्यः स्त्रियः:-கெட்ட ஸ்த்ரீகள், प्रियैः- பிரியமான வஸ்த்துக்களால், सततं- எப்பொழுதும், सत्कृताः (अपि)- பஹுமானம் செய்யப்பட்டிருந்தபோதிலும், विनिपातगतं- கஷ்டத்தை அடைந்திருக்கிற, भर्तारं–கணவனை, न अनुमन्यन्ते- லக்ஷ்யம் செய்கிறதில்லை.

21. (ப-ரை) पुरा-முன்னம், सुखं-ஸுகத்தை, अनुभूय-அனுபவித்து, अल्पां अपि- கொஞ்சமுமான, आपदं- ஆபத்தை, प्राप्य- அடைந்து, दुष्यन्ति- தோஷமுள்ளவர்களாகிவிடுகிறார்கள், प्रजहति अपि– (பர்த்தாக்களை) விட்டும் விடுகிறார்கள், एषः- இது, नारीणां- ஸ்த்ரீகளுடைய, स्वभावः- ஸ்வபாவம் (இயற்கை).

22. (ப-ரை) युवत्यः- ஸ்த்ரீகள், सदा- எப்பொழுதும், असत्यशीलाः- பொய் சொல்லுவதையே ஸ்வபாவமாகவுடையவர்கள், विकृताः- விகாரமான கார்யங்களைச் செய்பவர்கள், दुर्ग्राह्यहृदयाः- (புருஷனால்) அறியமுடியாத மனதையுடையவர்கள், पापसंकल्पाः- கெட்ட எண்ணமுடையவர்கள், क्षणमात्रात्- நொடிப்பொழுதில், विरागिणः- ஆசையில்லாதவர்கள்.

20. (பொ-ரை) இவ்வுலக மெங்கும், துஷ்டைகளான ஸ்திரீகள் கணவர்களால் எப்பொழுதும் வேண்டிய பதார்த்தங்களைக்கொடுத்து வெகுமதிக்கப்பட்டிருந்த போதிலும், நல்ல நிலைமையிலிருந்து நழுவி கஷ்ட தசையை அடைந்த கணவனை லக்ஷ்யம் செய்கிறதேயில்லை.

21. (பொ-ரை) முன்னம் அளவிறந்த ஸுகத்தை அனுபவித்து பிறகு அல்பமான ஏதாவது ஒரு ஆபத்து நேர்ந்து விட்டால், உடனே பர்த்தாக்களிடத்தில் தோஷம் சொல்லுகிறார்கள், அல்லது அவர்களை விட்டும் விடுகிறார்கள், இது ஸ்த்ரீகளுடைய ஸ்வபாவம்,

22. (பொ-ரை) உலகத்திலிருக்கும் ஸ்த்ரீகள், எப்பொழுதும் பொய் சொல்லுவதே ஸ்வபாவமுடையவர்கள், விகாரமான கார்யத்தைச் செய்யக்கூடியவர்கள், கணவனாலும் அறியமுடியாத மனதையுடையவர்கள், கெட்ட எண்ண முடையவர்; க்ஷணப்பொழுதில் அன்பையும் விட்டுவிடுவார்கள்.

न कुलं न कृतं विद्या न दत्तं नापि संग्रहम् ।
स्त्रीणां गृह्णाति हृदयमनित्यहृदया हि ताः ॥ 23 ॥
साध्वीनां हि स्थितानां तु शीले सत्ये श्रुते शमे ।
स्त्रीणां पवित्रं परमं पतिरेको विशिष्यते ॥ 24 ॥
स त्वया नावमन्तव्यः पुत्रः प्रव्राजितो मम ।
तव दैवतमस्त्वेष निर्धनः सधनोऽपि वा ॥ 25 ॥

---

23. (ப-ரை) स्त्रीणां- ஸ்த்ரீகளுடைய, हृदयं- மனதை, कुलं- நல்ல குலத்தில் பிறப்பானது, न गृह्णाति- ஸ்வாதீனப்படுத்துகிறதில்லை, कृतं- உபகாரம், न (गृह्णाति)- ஸ்வாதீனப்படுத்துகிறதில்லை, विद्या-வித்யையானது, न- ஸ்வாதீனப்படுத்துகிறதில்லை, दत्तं अपि- தானமும், न- ஸ்வாதீனப்படுத்துகிறதில்லை, संग्रहं अपि- பாணிக்ரஹணமும், न- ஸ்வாதீனப்படுத்துகிறதில்லை, हि- ஏனென்றால், ताः- அந்த ஸ்த்ரீகள், अनित्यहृदयाः- சஞ்சலமான மனதுடையவர்கள்,

24 (ப-ரை) शीले- நன்னடக்கையிலும், सत्ये- உண்மை பேசுவதிலும், श्रुते- குருஜனங்களிடம் கேட்ட உபதேசத்திலும், शमे- பொறுமையிலும், स्थितानां- நிலை நின்றவர்களான, साध्वीनां- ஸாதுக்களான, स्त्रीणां- ஸ்த்ரீகளுக்கோவென்றால், परमं पवित्रं- மிகவும் பரிசுத்தமான, पतिः एकः- பர்த்தா ஒருவன் தான், विशिष्यते- மேலானவன்.

25. (ப-ரை) प्रव्राजितः-நகரத்தைவிட்டு துறத்தப்பட்ட, मम-என்னுடைய, पुत्रः- புத்திரனுமான, सः- அப்படிப்பட்ட உன் கணவன், त्वया- உன்னால், न अवमन्तव्यः- அவமதிக்கத்தகுந்தவனல்ல, एषः- இந்த உன் கணவன், निर्धनः- தநமில்லாதவனாகவாவது, सधनः अपि वा- தனத்தோடுகூடினவனாகவாவது, अस्तु- இருக்கட்டும், तव- உனக்கு, दैवतं- தெய்வமல்லவா.

---

23. (பொ-ரை) நற்குடிப்பிறப்பும், செய்த உபகாரமும், ப்ரீதியுடன் வஸ்திர ஆபரணம் முதலியவைகளைக்கொடுப்பதும், அக்னி ஸாக்ஷிகமாக, பாணிக்ரஹணம் செய்ததும், நல்ல வித்யையும், ஸ்த்ரீகளின் மனதைகட்டுப்படுத்தாது. ஏனென்றால் அவர்கள் நிலையில்லாதமனதுடையவர்களன்றோ,

24. (பொ-ரை) நன்னடக்கையிலும், உண்மை பேசுவதிலும், மாமியார், மாமனார் முதலான குருஜனங்களிடம் கேட்ட உபதேசத்திலும். புலன்களை அடக்குவதிலும், நிலை நின்ற உத்தமியான ஸ்த்ரீகளுக்கு, மிகவும் பரிசுத்தமான பர்த்தா ஒருவன்தான் உயர்ந்தவனாகுகின்றான்.

25. (பொ-ரை) என் புத்திரனை உன்னுடைய பர்த்தா இப்பொழுது நகரத்தைவிட்டுக் காட்டிற்குத் துரத்தப்பட்டிருந்தபோதிலும், அவனை நீ அவமதிக்காதே, அவன் தனமுடையவனாகவிருந்தாலும், தனமில்லாதவனாகவிருந்தாலும் அவனை நீ தெய்வம்போல் பாவிக்கவேண்டியது.

विज्ञाय वचनं सीता तस्या धर्मार्थसंहितम् ।
कृताञ्जलिरुवाचेदं श्वश्रूमभिमुखे स्थिताम् ॥ 26 ॥
करिष्ये सर्वमेवाहमार्या यदनुशास्ति माम् ।
अभिज्ञास्मि यथा भर्तुर्वर्तितव्यं श्रुतं च मे ॥ 27 ॥
न मामसज्जनेनार्या समानयितुमर्हति ।
धर्माद्विचलितुं नाहमलं चन्द्रादिव प्रभा ॥ 28 ॥

26. (ப-ரை) सीता- ஸீதை, धर्मार्थसंहितम्- தர்மமாகிற ப்ரயோஜனத்தோடுகூடியதான तस्याः वचनं- அந்த கௌஸல்யையின் வார்த்தையை, विज्ञाय- தெரிந்துகொண்டு, अभिमुखे- எதிரில், स्थिताम्- நிற்கின்ற, श्वश्रूं- மாமியாரைப் (பார்த்து), कृताञ्जलिः सती- கைகூப்பிக்கொண்டு, इदं- இந்த வார்த்தையை, उवाच- சொன்னாள்.

27. (ப-ரை) आर्या- எல்லாம் தெரிந்தவரான நீர், मां- என்னைக்குறித்து, यत्- யாதொன்றை, अनुशास्ति- கட்டளையிடுகிறீரோ, सर्वं एव- அது முழுவதையுமே, अहं- நான், करिष्ये- செய்வேன், भर्तुः- பர்த்தாவின் விஷயத்தில், यथा- எப்படி, वर्तितव्यं- இருக்கவேண்டியதோ, अभिज्ञा अस्मि- அதை நன்றாய் அறிந்துமிருக்கிறேன், मे- என்னால், श्रुतं च- கேட்கப்பட்டுமிருக்கிறது

28. (ப-ரை) आर्या- எல்லாம் தெரிந்தவராகிய நீர், मां- என்னை, असज्जनेन- கெட்ட ஜனத்தோடு, समानयितुं- ஒப்பிடுவதற்கு, न अर्हति- தகுந்தவரல்ல, प्रभा- காந்தியானது, चन्द्रात् इव- சந்திரனிடத்திலிருந்து (மாறுவதற்கு முடியாதது) போல் अहं- நான், धर्मात्- தர்மத்திலிருந்து, विचलितुं- விலகுவதற்கு, न अलं- சக்தியுள்ளவளல்ல.

26. (பொ-ரை) தர்மத்தோடு கூடிய கௌஸல்யாதேவி சொன்ன வார்த்தையை, ஸீதை தெரிந்துகொண்டு, எதிரில் நிற்கின்ற மாமியாரைப்பார்த்து, கைகூப்பிக்கொண்டு இந்த வார்த்தைசொன்னாள்.

27. (பொ-ரை) அம்மா! எல்லாம் தெரிந்தவரான நீர், கட்டளையிடுவதை முழுவதையுமே நான் செய்வேன். பர்த்தாவினிடம் நடந்துகொள்ள வேண்டிய விஷயங்களெல்லாம் நன்றாய் அறிந்து கொண்டிருக்கிறேன். மாதா பிதா முதலான பெரியோர்களிடம் கேட்டுமிருக்கிறேன்.

28. (பொ-ரை) எல்லாம் தெரிந்தவராகிய நீர், என்னை அஸத்தான ஜனங்களோடு ஒப்பிடத்தகாது, சந்திரனை விட்டு, காந்தியானது விலகமுடியாததுபோல் நான் தர்மத்தை விட்டு விலகமுடியாதவள்.

नातन्त्री वाद्यते वीणा नाचक्रो वर्तते रथः ।
नापतिः सुखमेधेत या स्यादपि शतात्मजा ॥ 29 ॥
मितं ददाति हि पिता मितं माता मितं सुतः ।
अमितस्य हि दातारं भर्तारं का न पूजयेत् ॥ 30 ॥
साहमेवंगता श्रेष्ठाश्रुतधर्मपरावरा ।
आर्ये किमवमन्येऽहं स्त्रीणां भर्ता हि दैवतम् ॥ 31 ॥

29. (ப-ரை) वीणा- வீணையானது, अतन्त्री सती- தந்தியில்லாமல், न वाद्यते- வாசிக்கமுடியாது, रथः- தேர், अचक्रः सन्- சக்கிரமில்லாமல், न वर्तते- நடக்காது, या- யாதொருவள், शतात्मजा स्यात् अपि- நூறு பிள்ளைகளை உடையவளாயிருந்தும், अपतिः- பர்த்தா ஒருவரில்லாமல், सुखं- ஸுகமாக, न एधेत- வாழமாட்டாள்.

30. (ப-ரை) पिता- தகப்பன், मितं-ஸ்வல்பமான, (ஐஹிகஸுகத்தை,) ददाति हि- கொடுக்கிறார் அல்லவா, माता- தாய், मितं- ஸ்வல்பமான, (ஐஹிகஸுகத்தை) (ददाति- கொடுக்கிறாள்,) सुतः- பிள்ளை, मितं- அல்பமான (ஐஹிகஸுகத்தைமாத்திரம்,) (ददाति- கொடுக்கிறான்,) अमितस्य- அளவில்லாத ஸுகத்தை, दातारं- கொடுக்கின்ற, भर्तारं- கணவனை, का हि- எவள்தான், न पूजयेत्- பூஜிக்கமாட்டாள்.

31. (ப-ரை) आर्ये- அம்மா! अहं- நான், एवंगता- இவ்விதமான தன்மையை அடைந்தவள், श्रेष्ठाश्रुतधर्मपरावरा- உயர்ந்தவர்களான (மாதா முதலான பதிவ்ரதா) ஸ்த்ரீகளிடமிருந்து நன்றாய் கேட்கப்பட்ட ஸாமான்யமும், விசேஷமுமான தர்மங்களையுமுடையவள், सा अहं- அப்படிப்பட்ட நான், किं अवमन्ये- ஏன் அவமதிப்பேன், स्त्रीणां- ஸ்த்ரீகளுக்கு, भर्ता हि- பர்த்தாவன்றோ, दैवतम्- தெய்வம்.

29. (பொ-ரை) தந்தியில்லாமல் வீணை பேசாததுபோலவும், ரதமானது சக்கிரமில்லாமல் ஓடாதுபோலவும், ஸ்த்ரீயானவள், நூறுபிள்ளைகளை யுடையவளாயிருந்தும், கணவன் ஒருவனில்லாமல்போனால் ஸுகமாக வாழமாட்டாள்.

30. (பொ-ரை) பிதா, மாதா, பிள்ளை இம்மூவர்களும், அல்பமான ஐஹிகஸுகத்தைமாத்திரம் கொடுப்பார்கள். பர்த்தாவோவென்றால், ஐஹிக, ஆமுஷ்மிக என்கிற அளவில்லாத ஸுகத்தை கொடுக்கிறார், ஆகையால் அவரை எந்த ஸ்த்ரீ தான் பூஜிக்கமாட்டாள்.

31. (பொ-ரை) இவ்விதம் பதிவ்ரதா தர்மத்தை அடைந்தவளும், மிகச்சிறந்தவர்களான மாதா முதலான பதிவ்ரதா ஸ்த்ரீகளிடமிருந்து ஸாமான்ய தர்மத்தையும் விசேஷதர்மத்தையும் கேட்டிருக்கிற நான் கணவனை ஏன் அவமதிப்பேன். ஸ்த்ரீகளுக்கு கணவனன்றோ தெய்வம்.

सीताया वचनं श्रुत्वा कौसल्या हृदयंगमम् ।
शुद्धसत्त्वा मुमोचाश्रु सहसा दुःखहर्षजम् ॥ 32 ॥

तां प्राञ्जलिरभिक्रम्य मातृमध्येऽतिसत्कृताम् ।
रामः परमधर्मात्मा मातरं वाक्यमब्रवीत् ॥ 33 ॥

अम्ब! मा दुःखिता भूस्त्वं पश्य त्वं पितरं मम ।
क्षयो हि वनवासस्य क्षिप्रमेव भविष्यति ॥ 34 ॥

32. (ப-ரை) शुद्धसत्त्वा சுத்தமான ஸத்வகுணமுடைய, कौसल्या- கௌஸல்யாதேவி, हृदयंगमम्- மனதிற்கொப்பிய, सीतायाः- ஸீதையினுடைய, वचनं- வார்த்தையை, श्रुत्वा- கேட்டு, सहसा- உடனே, दुःखहर्षजम्- துக்கத்தாலும், ஸந்தோஷத்தாலுமுண்டான, अश्रु- கண்ணீரை, मुमोच- விட்டாள்.

33. (ப-ரை) मातृमध्ये- தாய்மார்கள் நடுவில், अतिसत्कृताम्- மிகப்பெருமைபடுத்தப்பட்ட, तां मातरं- மாதாவான அந்த கௌஸல்யையை, परमधर्मात्मा- மிகவும் தார்மிஷ்டராயிருக்கிற, रामः- ஸ்ரீராமன், प्राञ्जलिः सन्- கைகூப்பிக்கொண்டு, अभिक्रम्य- ப்ரதக்ஷிணம் செய்து, वाक्यं- ஒரு வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

34. (ப-ரை) अम्ब- அம்மா! त्वं- நீர், मा दुःखिता भूः- துக்கப்பட்டுக்கொண்டிருக்கவேண்டாம், त्वं- நீர், मम- என்னுடைய, पितरं-பிதாவை, पश्य-பாரும், वनवासस्य- வனவாஸம் செய்யுங்காலத்திற்கு, क्षयः- முடிவானது, क्षिप्रं एव- சீக்ரமாகவே, भविष्यति हि- உண்டாய்விடுமல்லவா.

---

32. (பொ-ரை) சுத்தமான (கலப்பில்லாத) ஸத்வகுணமுள்ள கௌஸல்யாதேவி, மனதிற்கு இனியதான ஸீதையின் வார்த்தையைக்கேட்டு, ராமன் காட்டிற்கு போகிறான் என்கிற துக்கத்தினாலும், ஸீதை இவ்விதம் நிலைநின்ற பதிவ்ரதா தர்மத்துடன்கூடியிருக்கிறாள் என்கிற ஸந்தோஷத்தினாலும் கண்களில் நீரைப் பெருக்கினாள்.

33. (பொ-ரை) மிகவும் தார்மிஷ்டரான ஸ்ரீராமன் தாய்மார்களுக்குள் மிகவும் மேன்மை பெற்றிருக்கிற அந்தத்தாயாரான கௌஸல்யாதேவியை, கைகூப்பிக்கொண்டு ப்ரதக்ஷிணம் செய்து இந்த வார்த்தை சொன்னார்.

34. (பொ-ரை) அம்மா நீர், விசாரப்பட்டுக்கொண்டிராமல் என் பிதாவை பார்த்துக்கொண்டிரும். வனவாஸகாலம் சீக்ரமாகவே முடிந்துவிடும்.

सुप्तायास्ते गमिष्यन्ति नव वर्षाणि पञ्च च ।
सा समग्रमिह प्राप्तं मां द्रक्ष्यसि सुहृद्वृतम् ॥ 35 ॥
एतावदभिनीतार्थमुक्त्वा स जननीं वचः ।
त्रयःशतशतार्धाश्च ददर्शावेक्ष्य मातरः ॥ 36 ॥
ताश्चापि स तथैवार्ताः मातृर्दशरथात्मजः ।
धर्मयुक्तमिदं वाक्यं निजगाद कृताञ्जलिः ॥ 37 ॥

---

35. (ப-ரை) ते- நீர், सुप्तायाः (सत्याः)- தூங்கிக்கொண்டிருக்கும்பொழுதே, नव- ஒன்பதுகளும், पञ्च च- ஐந்துகளுமான, वर्षाणि- வருஷங்கள், गमिष्यन्ति- கழிந்து விடும், (अथ- பிறகு,) इह- இங்கு, प्राप्तं- வந்திருக்கின்றவனும், समग्र- ஸம்பூர்ணமான மநோரதத்தையுடையவனும்,सुहृत् वृतम्– ஸ்நேஹிதர்களால் சூழப்பட்டுமிருக்கிற, मां- என்னை, सा- அப்படிப்பட்ட (நீர்) द्रक्ष्यसि- பார்க்கப்போகிறீர்.

36. (ப-ரை) सः- அந்த ஸ்ரீராமன், अभिनीतार्थं- தீர்மானமான அர்த்தமுள்ள, वचः- வார்த்தையை, एतावत्- இவ்வளவு, जननीं- தாயாரைப்பார்த்து, उक्त्वा- சொல்லி விட்டு, त्रयः शतशतार्धाः- முன்னூற்று ஐம்பது கணக்கிட்ட, मातरः च- தாய்மார்களைக்குறித்து, अवेक्ष्य- (சொல்லவேண்டிய விஷயத்தை) ஆலோசித்து, ददर्श- (அவர்களை)ப் பார்த்தார்.

37. (ப-ரை) दशरथात्मजः- அந்த தசரத குமாரரான ஸ்ரீராமன், तथा एव- அந்த கௌஸல்யையைப்போலவே, आर्ताः- துக்கமுடையவர்களான, ताः मातॄः च अपि- அந்தத்தாய்மார்களையும் பார்த்து, कृतांजलिः सन्– கைகூப்பிக்கொண்டு, धर्मयुक्त- தர்மத்துடன்கூடிய, इदं वाक्यं- இந்த வார்த்தையை, निजगाद- சொன்னார்.

35. (பொ-ரை) அம்மா! நீர் ஓர் இரவு தூங்கிக்கொண்டிருக்கும் பொழுதே இந்த பதினான்கு வருஷங்களும் கழிந்துவிடும். பிறகு என்னுடைய மநோரதங்கள் நிறைவேறி ஸ்நேஹிதர்களால் சூழப்பட்டு இங்கு வந்திருக்கின்ற என்னைப்பார்க்கப் போகிறீர்.

36. (பொ-ரை) அந்த ஸ்ரீராமன், தன் தாயாரைப்பார்த்து தீர்மானிக்கப் பட்ட அர்த்தமுள்ள இவ்வளவு வார்த்தையைச் சொல்லிவிட்டு, மற்ற முன்னூற்று ஐம்பது தாய்மார்களையுங்குறித்து தாம் சொல்லவேண்டிய விஷயம் இன்னதென்று மனதில் ஆலோசித்துக்கொண்டு அவர்களைப்பார்த்தார்.

37. (பொ-ரை) தசரத குமாரரான ஸ்ரீராமன் கௌஸல்யா தேவியைப் போலவே துக்கித்துக்கொண்டிருக்கிற அந்த முன்னூற்றுஐம்பது தாய்மார்களையும் பார்த்து கைகூப்பிக்கொண்டு தர்மத்துடன்கூடிய இந்த வார்த்தையைச்சொன்னார்.

संवासात्परुषं किंचिदज्ञानाद्वापि यत्कृतम् ।
तन्मे समनुजानीत सर्वांश्चामन्त्र्यामि वः ॥ 38 ॥
वचनं राघवस्यैतद्धर्मयुक्तं समाहितम् ।
शुश्रुवुस्ताः स्त्रियः सर्वाः शोकोपहतचेतसः ॥ 39 ॥
जज्ञेऽथ तासां सन्नादः क्रौञ्चीनामिव निस्वनः ।
मानवेन्द्रस्य भार्याणामेवं वदति राघवे ॥ 40 ॥

38. (ப-ரை) संवासात्- (நெடுநாள்) கூடப்பழகியிருந்ததினால், किंचित् परुषं-க்ரூரமாக ஏதுவாகிலும், उक्तं- (என்றால்) சொல்லப்பட்டிருக்கும், अज्ञानात्- वा अपि- அஜ்ஞானத்தினாலாவது, यत्-ஏதுவாகிலும், कृतम्- செய்யப்பட்டிருக்கும், मे-என்னுடைய, तत्- அதை, समनुजानीत- (பொருத்துக்கொண்டோம்) என்று அனுமதி கொடுங்கள், वः- உங்களை, सर्वान् च- எல்லோரையும், आमन्त्र्यामि- நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

39. (ப-ரை) धर्मयुक्तं- தர்மத்தோடு கூடியதும், समाहितम्- நல்ல அர்த்தத்தோடு கூடியதுமான, राघवस्य- ஸ்ரீராமனுடைய, एतत् वचनं- இந்த வார்த்தையை, ताः- அந்த, सर्वाः स्त्रियः- ஸ்த்ரீகளெல்லோரும், शोकोपहतचेतसः (सत्यः)- சோகத்தினால் கலங்கின மனதுடையவர்களாய்க் கொண்டு, शुश्रुवुः- கேட்டார்கள்.

40. (ப-ரை) राघवे- ஸ்ரீராமன், एवं- இவ்விதம், वदति सति- சொல்லுமளவில், अथ- பிறகு, मानवेन्द्रस्य- அரசனுடைய, भार्याणां- பத்நிகளான, तासां- அந்த ஸ்த்ரீகளுடைய, सन्नादः- பெரிய கூக்குறல், क्रौञ्चीनां-பெண் அன்றில் பக்ஷிகளுடைய, निस्वनः इव- பெரிய சப்தம் போல, जज्ञे-உண்டாச்சுது.

38. (பொ-ரை) நெடுநாள் கூடப்பழகியதால் ஏதுவாகிலும் கடுஞ்சொல் சொல்லியிருப்பேன், அஜ்ஞானத்தினால் ஏதுவாகிலும் ஒருகார்யம் செய்திருப்பேன், அவைகளையெல்லாம் பொருத்துக் கொண்டோமென்று எனக்கு நீங்கள் அனுமதி செய்யவேண்டும். உங்களெல்லோரையும் நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

39. (பொ-ரை) தர்மத்துடன் கூடியதும், நல்ல அர்த்தத்துடன் கூடியதுமான ஸ்ரீராமனுடைய இந்த வார்த்தையை அந்த ஸ்த்ரீகளெல்லோரும் துக்கத்தினால் கலங்கினமனதுடையவர்களாய் கேட்டார்கள்.

40. (பொ-ரை) ஸ்ரீராமன் இவ்வாறு சொல்லுங்காலத்தில் அரசன் பத்நிகள், பெண்அன்றில் பக்ஷிகள் பேரிரைச்சல் போட்டதுபோலபெரும் கூக்குறலைச் செய்தார்கள்.

मुरजपणवमेघघोषवद्दशरथवेश्म बभूव यत्पुरा ।
विलपितपरिदेवनाकुलं व्यसनगतं तदभूत्सुदुःखितम् ॥ 41 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
एकोनचत्वारिंशः सर्गः ॥ 39 ॥

41. (ப-ரை) यत् दशरथवेश्म- யாதொரு தசரதரின் அரண்மனையானது, पुरा- முன்னே, मुरजपणवमेघघोषवत्- முரஜமென்னும் பணவமென்னும் மேகமென்னும் சொல்லப்பட்ட வாத்யங்களுடைய கோஷமுடையதாக, बभूव- இருந்ததோ, तत्- அந்த அரண்மனையானது, (अद्य—அப்பொழுது), विलपितपरिदेवनाकुलं- பலவிதமான பேச்சுக்களாலும், அழுகை சப்தத்தினாலும் நிறைந்ததாயும், व्यसनगतं- ஆபத்தை அடைந்ததாயும், सुदुःखित-மிகவும் துக்கமுள்ளதாகவும், अभूत्- ஆயிற்று.

41. (பொ-ரை) இதற்குமுன் யாதொரு தசரத மஹாராஜரின் அரண்மனை மிருதங்கம், பணவம், மேகம், என்கிற வாத்யங்களுடைய கோஷம் முழங்கப்பெற்றிருந்ததோ, அந்த அரண்மனை இப்பொழுது, ராமனைஸ்தோத்திரம் செய்கிறதும் கைகேயியைத் திட்டுகிறதுமான பேச்சுக்களாலும், அழுகைக்குரலாலும் நிறைந்தும், ஆபத்தை அடைந்தும், மிகவும் துக்கமுடையதுமாக ஆயிற்று.



चत्वारिंशः सर्गः ॥ 40 ॥

अथ रामश्च सीता च लक्ष्मणश्च कृतांजलिः ।
उपसंगृह्य राजानं चक्रुर्दीनाः प्रदक्षिणम् ॥ 1 ॥

---

1. (ப-ரை) अथ- பிறகு रामः- ராமனும், सीता च- ஸீதையும், लक्ष्मणः च-இலக்குமணனும், कृतांजलिः-கைகூப்பிக்கொண்டு, दीनाः सन्तः- துக்கமுடையவர்களாய், राजानं- அரசனை, उपसंगृह्य- நமஸ்கரித்து, प्रदक्षिणम् चक्रुः-ப்ரதக்ஷிணம் செய்தார்கள்.

---

1. (பொ-ரை) பிறகு, ராமன், ஸீதை, இலக்குமணன் இம்மூவர்களும் கைகூப்பிக்கொண்டு அரசனை நமஸ்கரித்துவிட்டு வ்ருத்தர்களான மாதா பிதாக்களுக்கு சிச்ருஷைசெய்யும் பாக்யம் நமக்கில்லாமல் போய்விட்டதே என்று மனவருத்தத்துடன் ப்ரதக்ஷிணம் செய்தார்கள்.

तं चापि समनुज्ञाप्य धर्मज्ञः सीतया सह ।
राघवः शोकसंमूढो जननीमभ्यवादयत् ॥ 2 ॥
अन्वक्षं लक्ष्मणो भ्रातुः कौसल्यामभ्यवादयत् ।
अथ मातुः सुमित्राया जग्राह चरणौ पुनः ॥ 3 ॥
तं वन्दमानं रुदती माता सौमित्रिमब्रवीत् ।
हितकामा महाबाहुं मूर्ध्न्युपाघ्राय लक्ष्मणम् ॥ 4 ॥

---

2. (ப-ரை) धर्मज्ञः- தர்மம் தெரிந்தவரான, राघवः- ஸ்ரீராமன், सीतया सह- ஸீதையுடன்கூட, तं- அந்த அரசனை, समनुज्ञाप्य च अपि- அநுமதிகொடுக்கவேண்டிக் கொண்டு, शोकसंमूढः सन्- துக்கத்தினால் கலங்கினவராய், जननीं- தாயாரை, अभ्यवादयत्- ஸேவித்தார்.

3. (ப-ரை) लक्ष्मणः- இலக்குமணனும், भ्रातुः- ப்ராதாவுக்கு, अन्वक्षं- பிறகு, कौसल्यां- கௌஸல்யாதேவியை, अभ्यवादयत्- ஸேவித்தார், अथ- பிறகு, मातुः सुमित्रायाः- மாதாவான ஸுமித்ராதேவியினுடைய, चरणौ- திருவடிகளை, पुनः- மறுபடியும், जग्राह- பிடித்தார்.

4. (ப-ரை) वन्दमानं- நமஸ்காரம் செய்கின்றவரும், महाबाहुं- பெரிய தோள்களையுடையவருமான, सौमित्रिं- ஸுமித்ரையின் புத்திரனை, तं लक्ष्मणम्- அந்த இலக்குமணனை, हितकामा- (அவருக்கு) ஹிதத்தை விரும்புகின்ற, माता- தாயாரான ஸுமித்ரா தேவி, मूर्ध्नि- உச்சியில், उपाघ्राय- மோந்து, रुदती-सती- அழுதுகொண்டு, अब्रवीत्- சொன்னாள்.

2. (பொ-ரை) எல்லா தர்மங்களையும் தெரிந்தவரான ஸ்ரீராமன், ஸீதையுடன் கூட மஹாராஜரிடம் அநுமதி பெற்றுக்கொண்டு, துக்கத்தினால் மனம் கலங்கினவராய், தாயாரான கௌஸல்யாதேவியை நமஸ்கரித்தார்.

3. (பொ-ரை) ப்ராதாவான ஸ்ரீராமன் ஸேவித்தபிறகு இலக்குமணன் கௌஸல்யாதேவியை ஸேவித்துவிட்டு, பிறகு தன் தாயாரான ஸுமித்ரா தேவியினுடைய திருவடிகளில் நமஸ்காரம் செய்தார்.

4. (பொ-ரை) பெருந்தோள்களையுடைய தன் புத்திரனை இலக்குமணன் வந்தனம் செய்யும்பொழுது, அவனை உச்சிமுகர்ந்து மாதாவான ஸுமித்ராதேவி, அழுதுகொண்டு, அவனுக்கு ஹிதத்தை நினைத்து ஒரு வார்த்தைசொன்னாள்,

सृष्टस्त्वं वनवासाय स्वनुरक्तः सुहृज्जने ।
रामे प्रमादं मा कार्षीः पुत्र! भ्रातरि गच्छति ॥ 5 ॥

व्यसनी वा समृद्धो वा गतिरेष तवानघ ।
एष लोके सतां धर्मो यज्ज्येष्ठवशगो भवेत् ॥ 6 ॥

5. (ப-ரை) हे पुत्र- அப்பா குழந்தாய், त्वं- நீ, वनवासाय- வனத்தில் வஸிப்பதற்காகவே, सृष्टः- (தெய்வத்தினால்) ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கிறாய், सुहृज्जने- ஸ்நேஹிதஜநமான (ஸ்ரீராமனிடத்தில்), स्वनुरक्तः- மிக்க அன்புள்ளவனான நீ, भ्रातरि- ப்ராதாவான, रामे- ஸ்ரீராமன், गच्छति सति- போகும் காலத்தில், प्रमादं- ஏமாந்திருப்பதை, मा कार्षीः- நீ செய்யாதே.

6, (ப-ரை) हे अनघ- குற்றமில்லாதவனே, एषः- இவன், व्यसनी वा- வ்யஸனமுள்ளவனாகவிருந்தாலும், समृद्धः वा- செல்வமுடையவனாகவிருந்தாலும், तव- உனக்கு, गतिः- கதி, ज्येष्ठवशगः–மூத்தவனுக்கு வசப்பட்டிருப்பவனாக, भवेत् (इति) यत्-இருக்கவேணுமென்கிற, एषः- இது, लोके– உலகத்தில், सतां- பெரியோர்களுடைய, धर्मः- தர்மம்.

5. (பொ-ரை) அப்பா குழந்தாய்! நீ வனவாஸம் செய்வதற்காகவே தெய்வத்தினால் ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கிறாய். ஆகையால் பரம ஸுஹ்ருத்தான தமயனாரிடம் மிக்க அன்புள்ளவனாய் ஸீதையுடன் கூட வனத்தின் அழகைப்பார்த்துக் கொண்டே ஸ்ரீராமன்போகும் காலத்தில் அவருடையரக்ஷணத்தில் நீ ஏமாறாமல் ஜாக்ரதையாகவிரு.

உலகத்தையெல்லாம் ரக்ஷிப்பதற்காக கௌஸல்யாதேவி புத்திரனைப்பெற்றது போல், பரம ஸுஹ்ருத்தான ஸ்ரீராமனிடம் அன்புகொண்டு அவனுடன் வனவாஸம் செய்வதற்காகவே உன்னை நான் பெற்றிருக்கிறேன், ஆகையால் ப்ராதாவான அந்த ஸ்ரீராமன் வனத்தில்செல்லும் காலத்தில் அவருடன் பின்செல்லுகின்ற நீ அவர் நடைஅழகைப்பார்த்து, அவ்வனுபவத்தில் ஊக்கங்கொண்டு அவருடைய பாது காவலில் நீ ஏமாந்திராதே!

6. (பொ-ரை) குற்றமில்லாதவனே! இந்த ராமன் துக்கமுடையவனாகவிருந்தாலும், ஸுகமுடையவனாகவிருந்தாலும், இவனைதான் உனக்கு கதி, ஜ்யேஷ்டப்ராதாவுக்கு அடங்கியிருப்பதுதான் உலகில் பெரியோர்களுடைய தர்மம்.

इदं हि वृत्तमुचितं कुलस्यास्य सनातनम् ।
दानं दीक्षा च यज्ञेषु तनुत्यागो मृधेषु च ॥ 7 ॥
लक्ष्मणं त्वेवमुक्त्वा सा संसिद्धं प्रियराघवम् ।
सुमित्रा गच्छ गच्छेति पुनः पुनरुवाच तम् ॥ 8 ॥
*रामं दशरथं विद्धि मां विद्धि जनकात्मजाम् ।
अयोध्यामटवीं विद्धि गच्छ तात यथासुखम् ॥ 9 ॥

---

7. (ப-ரை) सनातनम्- பழையதான, इदं वृत्तं- இந்த அநுஷ்டானமும், दानं- தானம் செய்வதும், यज्ञेषु- யாகங்களில், दीक्षा च- தீக்ஷை செய்துகொள்ளுவதும், मृधेषु- யுத்தங்களில், तनुत्यागः च- சரீரத்தை விடுவதும், अस्य कुलस्य- இந்த குலத்திற்கு, उचितं हि- தகுந்ததல்லவா.

8. (ப-ரை) सा सुमित्रा- அந்த ஸுமித்ராதேவி, प्रियराघवम्- ராகவனிடத்தில் ப்ரியமுள்ளவரும், संसिद्धं-புறப்பட ஸித்தமாயுமிருக்கின்ற, लक्ष्मणं- இலக்குமணனைப் பார்த்து, एवं- இவ்விதம், उक्त्वा तु- சொல்லிவிட்டு, गच्छ गच्छ इति- போ போ என்று, तं- இலக்குமணனைப்பார்த்து, पुनः पुनः- அடிக்கடியும், उवाच- சொன்னாள்.

9. (ப-ரை) रामं- ஸ்ரீராமனை, दशरथं- (உன் பிதாவான) தசரதமஹாராஜராக, विद्धि- நினைத்துக்கொள், जनकात्मजाम्- ஜனகராஜன் குமாரியான ஸீதையை, मां- நானாக, विद्धि- நினைத்துக்கொள், अटवीं-அரண்யத்தை, अयोध्यां- அயோத்யா நகரமாக, विद्धि- நினைத்துக்கொள், हे तात- அப்பா குழந்தாய், यथासुखम्- ஸுகமாக, गच्छ- போ.

---

7. (பொ-ரை) ஜ்யேஷ்டனை அநுஸரிப்பது என்கிற புராதனமான இந்தக் கார்யமும், தானம் செய்வதும், யாகங்களைச்செய்வதும், யுத்தத்தில் சரீரத்தை விடுவதும், இந்தக்குலத்திற்கு தகுந்ததல்லவா!

யுத்தம்நேருங்காலத்தில் உன் சரீரத்தை விட்டாவது ராமனைக்காப்பாற்ற வேண்டும் என்று ஸுமித்ரையின் அபிப்ராயம்.

8. (பொ-ரை) ஸ்ரீராமனிடம் அன்பினால் அவரோடு வனம்போக ஸித்தராயிருக்கின்ற இலக்குமணனைப்பார்த்து, அந்த ஸுமித்ராதேவி இவ்விதம் சொல்லிவிட்டு, மறுபடியும், அவனையே, போஎன்று பலதடவை சொன்னாள். இதனால் இலக்குமணன் ராஜ்யத்தைவிட்டு ஸ்ரீராமனுடன் செல்லுவதில் ஸுமித்ராதேவிக்கு அதிக ஆசை என்றுதோன்றுகிறது.

9. (பொ-ரை) ராமனை பிதாவாகவும், ஸீதையை மாதாவாகவும், அரண்யத்தை ஸுகானுபவத்திற்கேற்ற அயோத்யா நகரமாகவும் எண்ணிக்கொண்டு ஸுகமாகப்போ.

அதாவது:-அந்த ஸ்ரீராமனை அநுஸரிப்பதுதான் உனக்கு ஏற்றஸுகம். என்றபடி.

---

*रामं दशरथं विद्धि- दशति इति दशः- दश दंशने என்ற தாது, அதினால் மத்ஸ்யம் ஸர்ப்பம் முதலான ப்ராணிகளை மூக்கினால் கொத்தித்தின்கிறபடியால் दश என்று கரு

ततः सुमन्त्रः काकुत्स्थं प्राञ्जलिर्वाक्यमब्रवीत् ।
विनीतो विनयज्ञश्च मातलिर्वासवं यथा || 10 ||

10. (ப-ரை) ततः- பிறகு, विनयज्ञः- விநயம் தெரிந்தவரும், विनीतः- முள்ளவருமான, सुमन्त्रः- ஸுமந்த்ரர், काकुत्स्थं- ஸ்ரீராமனைப்பார்த்து, प्राञ्जलिः सन्- கைகூப்பிக்கொண்டு, मातलिः- மாதலியானவன், वासवं यथा- இந்திரனைப் (பார்த்து சொல்வது)போல், वाक्यं- ஒரு வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

10. (பொ-ரை) பிறகு, விநயம் தெரிந்தவரும், வணக்கமுள்ளவருமான ஸுமந்த்ரர், கைகூப்பிக்கொண்டு ராமனைப்பார்த்து, இந்திரனைப்பார்த்து மாதலி சொல்லுவதுபோல் ஒரு வார்த்தை சொன்னார்.

---

டனைச் சொல்லுகிறது, அவனை ரதமாகக்கொண்டபடியால் தசரத என்று பகவானை சொல்லுகிறது. அதாவது ராமனை மஹாவிஷ்ணுவாக அறி என்று.

जनकात्मजां मां विद्धि- ஜனகராஜ புத்ரியான ஸீதையை मां- லக்ஷ்மியாக அறி,

अटवीं अयोध्यां विद्धि- அயோத்யை என்றால் ஒருவராலும் கலக்கமுடியாத அபராஜிதை என்கிற ஸ்ரீவைகுண்ட நகரத்தைச் சொல்லுகிறது. ஆகையால் அரண்யத்தை பகவானான மஹாவிஷ்ணு வாஸம் பண்ணுகிற ஸ்ரீவைகுண்டமாக அறி,

அல்லது, रामं दशरथं विद्धि- ராமனையும், தசரதனையும், அறிந்துபார். அதாவது இருவர்களுடைய வித்யாஸத்தை கவனித்துப்பார்.

मां जनकात्मजां विद्धि- என்னையையும், ஸீதையையும், நன்றாக கவனித்துப்பார். என்னைவிட ஸீதையே உன்னுடைய நன்மையில் நோக்குள்ளவள்.

अयोध्यां अटवीं विद्धि- அயோத்யா நகரத்தையும், நீ போகப்போகின்ற அரண்யத்தையும், நன்றாகக்கவனித்துப்பார். இந்நகரத்தைவிட வனத்திலேயே திவ்ய தம்பதிகளுடைய கைங்கர்யமே உனக்குக்குறைவில்லாமல் கிடைக்கப்போகிறபடியால் நகரத்தைவிட வனமே மேலானதென்று தெரிந்துகொள்,

அல்லது, दशरथं रामं विद्धि- ஸ்ரீராமன் காட்டிற்குப்போகிறபடியால் அவனைவிட்டு தசரதமஹாராஜா உயிருடன் இருக்கப்போகிறதில்லை என்று தெரிந்துகொள்ளு இப்பொழுது रामं- என்றால் ஒழிந்தவன் என்று அர்த்தம்.

मां जनकात्मजां विद्धि- தசரதர் இறந்தபடியால் கைகேயியினால் துறத்தப்பட்டு நானும் என் பிதாவின் வீட்டிற்கே போய்விடுவேன் என்பதையும் தெரிந்துகொள்.

अयोध्यां अटवीं विद्धि- ராமனும் வனம் அடைந்து, தசரதரும் ஸ்வர்க்கம் சென்று விட்டால் ஸ்வல்ப காலத்தில் அயோத்யா நகரமானது காடாக ஆகிவிடும். அதாவது:— நிர்மனுஷ்யமாக ஆகிவிடும் என்று தெரிந்துகொள்.

रथमारोह भद्रं ते राजपुत्र महायशः ।
क्षिप्रं त्वां प्रापयिष्यामि यत्र मां राम वक्ष्यसि । ॥ 11 ॥
चतुर्दश हि वर्षाणि वस्तव्यानि वने त्वया ।
तान्युपक्रमितव्यानि यानि देव्याऽसि चोदितः ॥ 12 ॥
तं रथं सूर्यसंकाशं सीता हृष्टेन चेतसा ।
आरुरोह वरारोहा कृत्वाऽलंकारमात्मनः ॥ 13 ॥

---

11. (பதவுரை) हे महायशः- பெரும் கீர்த்தியடைந்த, राजपुत्र- ராஜகுமாரனான, राम- ராமனே, रथं- தேரை, आरोह- ஏறும், ते- உமக்கு, भद्रं- மங்களம் (உண்டாகட்டும்). यत्र- எங்கு, मां- என்னை, वक्ष्यसि- ஏவுகிறீரோ, (तं - அந்த இடத்தை,) त्वां- உம்மை, क्षिप्रं- சீக்ரமாக, प्रापयिष्यामि- அடைவிக்கப்போகிறேன்.

12. (பதவுரை) चतुर्दश वर्षाणि- பதினான்கு வருஷங்கள், त्वया- உம்மால், वने- வனத்தில், वस्तव्यानि हि- வஸிக்கவேண்டியது அல்லவா, यानि- யாதொரு வருஷங்களைக் (குறித்து), देव्या- கைகேயியினால், चोदितः- ஏவப்பட்டவராக, असि- ஆகிறீரோ, तानि- அவைகள், उपक्रमितव्यानि- ஆரம்பிக்கத்தகுந்தவைகள்.

13. (பதவுரை) वरारोहा- உத்தமஜாதி ஸ்த்ரீயான, सीता- ஸீதையானவள், आत्मनः- தனக்கு, अलङ्कारं- அலங்காரத்தை, कृत्वा- செய்துகொண்டு, हृष्टेन- ஸந்தோஷமுள்ள, चेतसा- மனதுடன், सूर्यसंकाशं- ஸூர்யன்போல் ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற, तं रथं- அந்தத்தேரை, आरुरोह- ஏறினாள்.

11. (பொழிப்புரை) பெரும்புகழ்படைத்த ராஜகுமாரனான ஸ்ரீராமா! சீக்கிரம் தேரில் ஏறும். உமக்கு மங்களம் உண்டாகும். எந்த இடம் கொண்டுபோகவேணு மென்று எனக்குக்கட்டளையிடுகிறீரோ, அந்த இடத்திற்கு அதிசீக்கிரமாக உம்மைக் கொண்டுபோய் விடுகிறேன்.

12. (பொழிப்புரை) நீர் பதினான்கு வருஷம் வனவாஸம் செய்யவேண்டுமென் றும், இன்றையதினமே போகவேண்டுமென்றும் கைகேயிதேவி உமக்குக்கட்டளை யிட்டிருக்கிறபடியால் அந்த பதினான்கு வருஷங்களை இன்றுமுதற்கொண்டே நீர் ஆரம்பித்துவிடும்.

13. (பொழிப்புரை) அழகுள்ள அவயவங்களையுடைய உத்தமையான அந்த ஸீதாதேவி, மாமனார் தனக்குக்கொடுத்த ஆடை ஆபரணங்களினால் அலங்காரம் செய்துகொண்டு மனக்களிப்புடன் ஸூர்யன்போல் ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற அந்தத்தேரில் ஏறினாள்.

अथो ज्वलनसंकाशं चामीकरविभूषितम् ।
तमारुरुहतुस्तूर्णं भ्रातरौ रामलक्ष्मणौ ॥ 14 ॥
वनवासं हि संख्याय वासांस्याभरणानि च ।
भर्तारमनुगच्छन्त्यै सीतायै श्वशुरो ददौ ॥ 15 ॥
तथैवायुधजालानि भ्रातृभ्यां कवचानि च ।
रथोपस्थे प्रतिन्यस्य सचर्म कठिनं च तत् ॥ 16 ॥
सीतातृतीयानारूढान्दृष्ट्वा धृष्टमचोदयत् ।
सुमन्त्रः संमतानश्वान्वायुवेगसमाञ्जवे ॥ 17 ॥

---

14. (ப-ரை) अथो- பிறகு, भ्रातरौ- ப்ராதாக்களான, रामलक्ष्मणौ- ராமலக்ஷ்மணர்கள் இருவரும், चामीकरविभूषितम्- ஸுவர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்டும், ज्वलनसंकाशं- அக்நிபோல் ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற, तं- அந்தத்தேரை, तूर्णं- சீக்ரமாக, आरुरुहतुः- ஏறினார்கள்.

15-16-17. (ப-ரை) श्वशुरः- மாமனார், भर्तारं- பர்த்தாவை, अनुगच्छन्त्यै- பின்செல்லுகின்ற, सीतायै- ஸீதையின் பொருட்டு, वनवासं- வனத்தில் வஸிக்கும் காலத்தை, संख्याय- கணக்கிட்டு, (यानि- யாதொரு), वासांसि- வஸ்த்ரங்களையும், आभरणानि च- ஆபரணங்களையும், ददौ- கொடுத்திருந்தாரோ, तथा एव- அப்படியே, भ्रातृभ्यां-ப்ராதாக்களான ராமஇலக்குமணர்களின் பொருட்டு, (यानि- யாதொரு,) आयुधजालानि- ஆயுதகூட்டங்களையும், कवचानि- च- கவசங்களையும், (ददौ- கொடுத்திருந்தாரோ) तानि- அவைகளையும், सचर्म- தோல்கட்டின புட்டில் கூடையையும், तत् कठिनं च- அந்த மண்வெட்டியையும், रथोपस्थे- தேரின் நடுவில், प्रतिन्यस्य- வைத்துவிட்டு, सीतातृतीयान्-ஸீதையுடன் மூன்று பேர்களாக, आरूढान्- ஏறிக்கொண்டவர்களை, दृष्ट्वा- பார்த்து, सुमन्त्रः- ஸுமந்த்ரர், जवे- வேகத்தில், वायुवेगसमान्- வாயுவேகத்திற்கொப்பான, सम्मतान्- ச்ரேஷ்டங்களான, अश्वान्- குதிரைகளை, धृष्टं यथा तथा- தைர்யமாக, अचोदयत्- ஓட்டினார்.

---

14. (பொ-ரை) பிறகு, ப்ராதாக்களான ராமலக்குமணர்கள் இருவர்களும், பொன்களால் அலங்காரம் செய்து அக்நிபோல் விளங்குகின்ற அந்தத்தேரில் சீக்கிரமாய் ஏறினார்கள்.

15-16-17. (பொ-ரை) பர்த்தாவுடன் வனம் போகின்ற ஸீதைக்கு வனவாஸம்செய்யவேண்டும் காலத்தைக்கணக்கிட்டு, மாமனார்கொடுத்த ஆடை ஆபரணங்களையும் ப்ராதாக்களான ராமஇலக்குமணர்களுக்குக் கொடுத்திருந்த ஆயுதக்கூட்டங்களையும், கவசங்களையும், மேலில்தோல்போட்டு தைத்த காய் கிழங்குகள் கொண்டுவரத்தகுந்த சிறு புட்டில் கூடையையும், கிழங்குகள் தோண்டுவதற்கான மண்வெட்டி, களைகொட்டு முதலியவைகளையும், தேரின் நடுவில் வைத்துக்கட்டி, ஸீதையுடன் மூன்றுபேர்களும் ஏறிக்கொண்டதை ஸுமந்த்ரர் பார்த்துவிட்டு வாயுவேகம்போன்ற வேகமுடைய ச்ரேஷ்டமான தேர்குதிரைகளை மிக்க தைர்யத்துடன் ஓட்டினார்.

प्रतियाते महारण्यं चिररात्राय राघवे ।
बभूव नगरे मूर्च्छा बलमूर्च्छा जनस्य च ॥ 18 ॥
तत्समाकुलसम्भ्रान्तं मत्तसंकुपितद्विपम् ।
हयशिञ्जितनिर्घोषं पुरमासीन्महास्वनम् । ॥ 19 ॥
ततः सबालवृद्धा सा पुरी परमपीडिता ।
राममेवाभिदुद्राव घर्मार्ता सलिलं यथा ॥ 20 ॥

---

18. (ப-ரை) राघवे- ஸ்ரீராமன், महारण्यं- प्रति- பெரும் வனத்தைக்குறித்து, याते सति- சென்றவளவில், नगरे- நகரத்தில், चिररात्राय- நெடுங்காலம், मूर्च्छा- மூர்ச்சையானது, बभूव- உண்டாயிற்று, बलमूर्च्छा- ஸைன்யத்திற்கு மூர்ச்சையும், (बभूव- உண்டாயிற்று,) जनस्य च- வெளிதேசத்திலிருந்து (வந்திருந்த) ஜனத்திற்கும், (मूर्च्छा- மூர்ச்சையானது, बभूव- உண்டாயிற்று.)

19. (ப-ரை) तत् पुरं- அந்நகரமானது, समाकुलसम्भ्रान्तं-மனக்கலக்கமுள்ளதாயும், இந்திரியங்களின் கலக்கமுள்ளதாயும், मत्तसंकुपितद्विपम्- கோபமுடைய மதயானைகளையுடையதாயும், हयशिञ्जितनिर्घोषं-குதிரைகளின் ஆபரண சப்தத்தினால் சப்தமுடையதாயும், (अत एव- ஆகையினால்,) महास्वनम्- பெரும் சப்தத்தையுடையதாக, आसीत्- ஆயிற்று.

20. (ப-ரை) ततः- பிறகு, सबालवृद्धा- சிறுவர்களுடனும் கிழவர்களுடனும் கூடிய, सा पुरी- அந்த நகரமானது, परमपीडिता सती- மிகவும் பீடிக்கப்பட்டதாய்க்கொண்டு, घर्मार्ता-வெய்யிலினால் பீடிக்கப்பட்டு, सलिलं यथा- ஜலத்தை நோக்கி (ஓடுவது போல்), रामं एव- ஸ்ரீராமனையே, अभिदुद्राव- நோக்கி ஓடிற்று.

18. (பொ-ரை) ஸ்ரீராமன் மஹாவனம் சென்றவளவில், நகரத்திலிருக்கும், ஸ்த்ரீ, பாலர், முதலாகிய எல்லா ஜனத்திற்கும், குதிரை, யானை முதலாகிய ஸைன்யங்களுக்கும், பட்டாபிஷேக மஹோத்ஸவத்திற்காக வெளிதேசத்திலிருந்து வந்திருக்கும் ஜனங்களுக்கும் நெடுநேரம் மூர்ச்சையுண்டாய்விட்டது.

19. (பொ-ரை) அச்சமயம் அந்நகரம் முழுவதும் மனம் கலங்கி புலன்களும் கலங்கி, வ்யஸனம் மிகுந்து அதனால் கோபங்கொண்ட மதயானைகளையுடையதும், அதிகமான பரிதாபத்தினால் மனம் தளர்ந்து இங்குமங்கும் அலைகின்ற குதிரைகளின் ஆபரணங்களின் சப்தத்தினால் பெரும் சப்தமுடையதாய் ஓரே பேரொலியுடையதாயிருந்தது.

20. (பொ-ரை) பிறகு, ராமனை விட்டுப்பிரிந்த துக்கத்தினால், மிகவும் பீடிக்கப்பட்ட அந்நகரம் பாலர்கள் வ்ருத்தர்கள் உள்பட வெய்யிலினால் தபிக்கப்பட்டு ஜலத்தைநோக்கி ஓடுவதுபோல் ராமனையேநோக்கி ஓடிற்று.

पार्श्वतः पृष्ठतश्चापि लम्बमानास्तदुन्मुखाः ।
बाष्पपूर्णमुखाः सर्वे तमूचुर्भृशनिस्वनाः ॥ 21 ॥
संयच्छ वाजिनां रश्मीन्सूत याहि शनैः शनैः ।
मुखं द्रक्ष्याम रामस्य दुर्दर्शं नो भविष्यति ॥ 22 ॥
आयसं हृदयं नूनं राममातुरसंशयम् ।
यद्देवगर्भप्रतिमे वनं याति न भिद्यते ॥ 23 ॥

21. (ப-ரை) सर्वे- எல்லா ஜனங்களும், बाष्पपूर्णमुखाः- கண்ணீரால் நிறைந்த முகமுடையவர்களாய், तदुन्मुखाः- அந்த ராமனையே நோக்குகின்ற முகமுடையவர்களாய், पार्श्वतः- இருபுறங்களிலும், पृष्ठतः च अपि- பின்புறத்திலும், लम्बमानाः- தொங்கிக் கொண்டும், भृशनिस्वनाः- பெருமூச்சு உடையவர்களாய்க்கொண்டும், तं- அந்த ஸுமந்த்ரனைப்பார்த்து, ऊचुः- சொன்னார்கள்.

22. (ப-ரை) हे सूत- ஓ ஸாரதியே! वाजिनां- குதிரைகளுடைய, रश्मीन्- கடிவாளங்களை, संयच्छ- இழுத்துப்பிடியும், शनैः शनैः- மெள்ள மெள்ள, याहि- போம், रामस्य- ஸ்ரீராமனுடைய, मुखं- முகத்தை, द्रक्ष्याम- பார்க்கவேண்டும், (तत्- அது,) नः- எங்களுக்கு, दुर्दर्शं- காணமுடியாததாக, भविष्यति- ஆய்விடும்.

23. (ப-ரை) देवगर्भप्रतिमे- தேவகுமாரனுக்கு ஒப்பான (தன் புத்திரன்,) वनं- வனத்தைக்குறித்து, याति सति- போகும் காலத்தில், राममातुः- ராமன் தாயாருடைய, हृदयं- நெஞ்சானது, यत्- யாதொரு காரணத்தினால், न भिद्यते- பிளகாமலிருக்கிறதோ, (तत्- ஆகையினால்,) आयसं- அது இரும்பினால் செய்யப்பட்டது, नूनं- நிச்சயம், असंशयं- ஸம்சயமேயில்லை,

21. (பொ-ரை) அப்பொழுது ஜனங்களெல்லோரும் கண்களில் நீரைப்பெருக்கிக்கொண்டு அந்த ராமனையே நோக்குகின்ற முகமுடையவர்களாய், தேரை அன்ளைப்புறங்களிலும், பின்புறத்திலும் பிடித்துத்தொங்கிக்கொண்டு பெருமூச்சுடன் அந்த ஸுமந்த்ரரைப்பார்த்து சொன்னார்கள்.

22 (பொ-ரை) ஓய் ஸாரதியே! குதிரைகளின் கடிவாளத்தை இழுத்துப் பிடித்து தேரை மெள்ள மெள்ள நடத்தும். ஸ்ரீராமனுடையமுகத்தை நாங்கள் பார்க்கவேண்டும். நீர் வேகமாகஓட்டினால் அது எங்களுக்கு பார்க்கமுடியாமற் போய்விடும்.

23 (பொ-ரை) தேவகுமாரனுக்கொப்பான தன் புத்திரனை ராமன் வனம் போகும் காலத்திலும், அவர் தாயாரான கௌஸல்யாதேவியின் நெஞ்சு பிளந்து போகாமலிருப்பதினால், அது இரும்பினால் செய்யப்பட்டிருக்கும். இது நிச்சயம், இவ்விஷயத்தில் ஸந்தேஹமேயில்லை.

कृतकृत्या हि वैदेही छायेवानुगता पतिम् ।
न जहाति रता धर्मे मेरुमर्कप्रभा यथा ॥ 24 ॥
अहो लक्ष्मण सिद्धार्थः सततं प्रियवादिनम् ।
भ्रातरं देवसंकाशं यस्त्वं परिचरिष्यसि ॥ 25 ॥
महत्येषा हि ते सिद्धिरेष चाभ्युदयो महान् ।
एष स्वर्गस्य मार्गश्च यदेनमनुगच्छसि ॥ 26 ॥

24. (ப-ரை) धर्मे- தர்மத்தில், रता- ஆசையுள்ளவளாய், छाया इव- போல, पतिम्- பர்த்தாவை, अनुगता– பின் செல்லுகின்ற, वैदेही- ஸீதையானவள், अर्कप्रभा- ஸூர்ய காந்தியானது, मेरुं यथा- மேருபர்வதத்தை விடாததுபோல், न जहाति- விடாமலிருக்கிறாள், सा हि- அவளன்றோ, कृतकृत्या- செய்யவேண்டிய கார்யத்தைச் செய்துகொண்டவள்.

25. (ப-ரை) अहो लक्ष्मण- ஓ இலக்குமணரே, सततं- எப்பொழுதும், प्रियवादिनम्- ப்ரியமாகப்பேசும் ஸ்வபாவமுடையவரும், देवसंकाशं- தேவர்களுக்கொப்பான, भ्रातरं- ப்ராதாவை, यः त्वं- யாதொரு நீர், परिचरिष्यसि- பணிவிடை செய்யப்போகிறீரோ, सः- அப்படிப்பட்ட நீர் அன்றோ, सिद्धार्थः- க்ருதார்த்தர்.

26. (ப-ரை) एनं-இந்த ஸ்ரீராமனை, अनुगच्छसि इति यत्-பின் செல்லுகிறீர் என்று யாதொன்றுண்டோ, एषा हि- இதுவேதான், ते- உமக்கு, महती सिद्धिः- பெரிய ஸித்தி, एषः- இதுதான், महान्- பெரிதான, अभ्युदयः- மேன்மை, एषः– இதுதான், स्वर्गस्य- ஸ்வர்க்கத்தினுடைய, मार्गः च- வழி.

24. (பொ-ரை) பாதிவ்ருத்ய தர்மத்தில் ஊக்கமுடைவளாய் நிழல்போல, பர்த்தாவுடன் பின் சென்ற விதேஹராஜ குமாரியான ஸீதாதேவி, ஸூர்யப்ரபை மேருபர்வதத்தை விட்டுப்பிரியாததுபோல் பர்த்தாவை விட்டுப்பிரியாமலிருக்கின்றாள். அவளன்றோ க்ருதக்ருத்யை.

அதாவது:—தான் அவச்யம் செய்யவேண்டியகார்யத்தை செய்துமுடித்துக் கொண்டவள்.

25. (பொ-ரை) ஓ இலக்குமணா! எப்பொழுதும் ப்ரியமாகப்பேசும் ஸ்வபாவமுள்ளவரும், தேவர்களுக்கொப்பானவருமான, ஜ்யேஷ்டப்ராதாவுக்கு நீர் பணிவிடைசெய்யப்போகிறபடியால் நீர் தான் க்ருதார்த்தர்.

26. (பொ-ரை) இலக்குமணா! நீர் இவ்விதம் ப்ராதாவான ஸ்ரீராமனை பின் செல்லுகின்றீரல்லவா, இதுதான் உமக்கு பெரியலாபம், இதுதான் பெருஞ்செல்வம், இதுவேதான் ஸ்வர்க்கம்போவதற்கும் வழி.

एवं वदन्तस्ते सोढुं न शेकुर्बाष्पमागतम् ।
नरास्तमनुगच्छन्तः प्रियमिक्ष्वाकुनन्दनम् ॥ 27 ॥
अथ राजा वृतः स्त्रीभिर्दीनाभिर्दीनचेतनः ।
निर्जगाम प्रियं पुत्रं द्रक्ष्यामीति ब्रुवन्गृहात् ॥ 28 ॥
शुश्रुवे चाग्रतः स्त्रीणां रुदन्तीनां महास्वनः ।
यथा नादः करेणूनां बद्धे महति कुञ्जरे ॥ 29 ॥

27. (ப-ரை) प्रियं- ப்ரியனுயும், इक्ष्वाकुनन्दनम्- இக்ஷ்வாகு வம்சத்து புத்திரனுமான, तं- அந்த ராமனை, अनुगच्छन्तः- பின் செல்லுகின்ற, ते नराः- அந்த மனிதர்கள், एवं- இவ்விதம், वदन्तः (सन्तः)- சொல்லிக்கொண்டு, आगतं- (கண்களிலிருந்து) வருகின்ற, बाष्पं- கண்ணீரை, सोढुं- அடக்குவதற்கு, न शेकुः- சக்தியற்றவர்களாகவிருந்தார்கள்.

28. (ப-ரை) अथ- பிறகு, राजा- அரசன், दीनाभिः- துக்கமுள்ளவர்களான, स्त्रीभिः- ஸ்த்ரீகளால், वृतः- சூழப்பட்டும், दीनचेतनः- துக்கமடைந்த மனதையுடையவராய், प्रियं- ப்ரியமான, पुत्रं- பிள்ளையை, द्रक्ष्यामि- பார்க்கப்போகிறேன், इति- என்று, ब्रुवन् सन्- சொல்லிக்கொண்டு, गृहात्- அரண்மனையிலிருந்து, निर्जगाम- புறப்பட்டார்.

29. (ப-ரை) महति कुञ्जरे- பெரிய யானையானது, बद्धे (सति)- கட்டப்பட்டவளவில், यथा- எப்படி, करेणूनां- பெண்யானைகளுடைய, नादः- சப்தமானது, (கேட்கப்படுமோ,) तथा- அப்படி, अग्रतः- முன்னால், रुदन्तीनां- அழுதுகொண்டுபோகின்ற, स्त्रीणां- அந்தப்புரஸ்த்ரீகளுடைய, महास्वनः- பெரும் சப்தமானது, शुश्रुवे च- கேட்கப்பட்டது.

---

27. (பொ-ரை) அன்பிற்கு இடமாயும், இக்ஷ்வாகு வம்சத்து புத்திரனுமான அந்த ஸ்ரீராமனைப்பின் தொடர்ந்து இவ்வாறுசெல்லுகின்ற அந்த மனிதர்களெல்லோரும் கண்களில்பெருகுகின்ற கண்ணீரை அடக்க சக்தியற்றவரானார்கள்.

28. (பொ-ரை) பிறகு தசரத மஹாராஜர், துக்கமடைந்த ஸ்த்ரீகளோடு சூழ்ந்து தானும் கலங்கின மனதுடையவராய் ப்ரியமான பிள்ளையைப்பார்க்கப்போகிறேனென்று சொல்லிக்கொண்டு அரண்மனையிலிருந்து புறப்பட்டார்.

29. (பொ-ரை) பெரிய யானையை கட்டிவிட்டால் பெண்யானைகளின் பெரும் கூச்சல் எப்படிகேட்குமோ, அதுபோல, முன்னால் அழுதுகொண்டுபோகின்ற ராஜஸ்த்ரீகளுடைய பெரும் சப்தம் கேட்கப்பட்டது.

पिता हि राजा काकुत्स्थः श्रीमान्सन्नस्तथाभवत् ।
परिपूर्णः शशी काले ग्रहेणोपप्लुतो यथा ॥ 30 ॥
स च श्रीमानचिन्त्यात्मा रामो दशरथात्मजः ।
सूतं संचोदयामास त्वरितं वाह्यतामिति ॥ 31 ॥
रामो याहीति सूतं तं तिष्ठेति स जनस्तदा ।
उभयं नाशकत्सूतः कर्तुमध्वनि चोदितः ॥ 32 ॥

30. (ப-ரை) परिपूर्णः- பூர்ணமான, शशी- சந்திரன், काले- பர்வகாலத்தில், ग्रहेण- ராகுவென்கிற, க்ரஹத்தினால், उपप्लुतः- பிடிக்கப்பட்டவனாய், यथा-எப்படி, (सन्नः- ஒளி இழந்தவனாக ஆவனோ,) तथा- அப்படி, पिता- ஸ்ரீராமனுடைய பிதாவாயும், काकुत्स्थः- ககுத்ஸ்த வம்சத்திற் பிறந்தவரும், श्रीमान्- மிகுந்த சோபையையுமுடைய, राजा- தசரதமஹாராஜர், सन्नः- ஒளி இழந்தவராக, अभवत्- ஆனார்.

31. (ப-ரை) श्रीमान्- மிகுந்த அழகுள்ளவரும், अचिन्त्यात्मा- அளவிட அரிய தான தைர்யமுடையவரும், दशरथात्मजः- தசரத குமாரருமான, सः रामः च- அந்த ஸ்ரீராமனும், सूतं- ஸாரதியை நோக்கி, त्वरितं- சீக்ரமாக, वाह्यतां- (தேரு) ஓட்டப் படட்டும், इति- என்று, संचोदयामास- ஏவினார்.

32. (ப-ரை) रामः- ஸ்ரீராமன், सूतं- ஸாரதியை, याहि इति- போம் என்று, (अचोदयत्- ஏவினார்,) तदा- அப்பொழுதே, तिष्ठ इति- நில்லும் என்று, सः जनः- அந்த நகரத்து ஜனம், (अचोदयत्- ஏவிற்று,) अध्वनि- வழியில், चोदितः- இவ்விதம் ஏவப்பட்டிருக்கின்ற, सूतः- ஸாரதியானவர், उभयं- இரண்டு கார்யத்தையும், कर्तुं- செய்வதற்கு, न अशकत्- ஸமர்த்தராகவில்லை.

30. (பொ-ரை) மிக்க ப்ரகாசத்தோடு கூடிய பூர்ணசந்திரன், பர்வகாலத்தில் க்ரஹணத்தினால் பிடிக்கப்பட்டு ஒளி இழந்துபோவதுபோல், மிக்க தேஜஸ்ஸையுடைய, ஸ்ரீராமன் தந்தையான காகுத்ஸ்தராஜாவும், அவ்விதம் ஒளிஇழந்தவராக ஆகிவிட்டார்.

31. (பொ-ரை) மிகுந்த அழகும், இவ்வளவென்று அளவிடமுடியாத தைர்யமுடையவரும் தசரதகுமாரருமான அந்த ஸ்ரீராமனும், தேரைசீக்கிரம் ஓட்டுமென்று ஸாரதியை ஆஜ்ஞாபித்தார்.

32. (பொ-ரை) ஸ்ரீராமன் ஸுமந்த்ரரை சீக்கிரம் தேரை ஓட்டுமென்று சொல்லுகிறார், அந்த ஸமயத்திலேயே பட்டணத்து ஜனம் ஸுமந்த்ரரே நில்லுமென்று சொல்லுகிறது. இவ்விதம் ஸ்ரீராமனாலும். பட்டணத்து ஜனங்களாலும் ஒரே காலத்தில் சொல்லப்பட்ட ஸுமந்த்ரர், ராமன் சொல்லியபடி போவதற்கும், ஜனங்கள் சொல்லியபடி நிற்பதற்கும் முடியாமலிருந்துவிட்டார்.

निर्गच्छति महाबाहौ रामे पौरजनाश्रुभिः ।
पतितैरभ्यवहितं प्रशशाम महीरजः ॥ 33 ॥
रुदिताश्रुपरिद्यूनं हाहाकृतमचेतनम् ।
प्रयाणे राघवस्यासीत्पुरं परमपीडितम् ॥ 34 ॥
सुस्राव नयनैः स्त्रीणामास्रमायाससम्भवम्
मीनसंक्षोभचलितैः सलिलं पङ्कजैरिव ॥ 35 ॥

33. (ப-ரை) महाबाहौ- பெரிய தோள்களையுடைய, रामे- ஸ்ரீராமன், निर्गच्छति सति- புறப்படும் காலத்தில், महीरजः- பூமியிலுள்ள புழுதியானது, पतितैः- கீழே விழுகின்ற, पौरजनाश्रुभिः- பட்டணத்து ஜனங்களின் கண்ணீரால், अभ्यवहितं (सत्)- நனைக்கப்பட்டதாய், प्रशशाम- அடங்கிற்று.

34. (ப-ரை) राघवस्य- ஸ்ரீராமனுடைய, प्रयाणे- புறப்பாடு ஸமயத்தில், पुरं- அந்நகரமானது, रुदिताश्रुपरिद्यूनं- அழுகையுடனும், கண்ணீருடனும் மிக வருத்தமுடையதாய், हाहाकृतं- ஹா, ஹா என்கிற சப்தத்துடன் கூடியதாய், अचेतनम्- ப்ரஜ்ஞையற்றதாய், परमपीडितम्- மிகவும் பீடை யடைந்ததாய், आसीत्- ஆய்விட்டது.

प्रयाणे- ராமன் புறப்படும் காலத்தில், राघवस्य- தசரதருடைய, पुरं- நகரமானது, என்றும் சொல்லலாம்.

35. (ப-ரை) मीनसंक्षोभचलितैः- மீன்கள் துள்ளுவதினால் அலைக்கப்பட்ட, पङ्कजैः- தாமரை புஷ்பங்களிலிருந்து, सलिलं इव- தேன் (பெருகுவது) போல், स्त्रीणां- ஸ்த்ரீகளுடைய, नयनैः- கண்களிலிருந்து, आयाससम्भवम्- துக்கத்தினாலுண்டான, आस्रं- கண்ணீர், सुस्राव- பெருகினது.

पङ्कजैः नयनैः- (पञ्चम्यर्थे तृतीया).

33. (பொ-ரை) பெருந்தோள்களையுடைய ஸ்ரீராமன் நகரத்தைவிட்டுப் புறப்படும்பொழுது பூமியிலுள்ள புழுதியானது, கீழே விழுகின்ற பட்டணத்து ஜனங்களின் கண்ணீர்களால் நனைக்கப்பட்டு அடங்கிவிட்டது.

34. (பொ-ரை) ஸ்ரீராமன் நகரத்திலிருந்து, ப்ரயாணம் செய்யும் காலத்தில் அந்நகரத்திலுள்ள ஜனம முழுவதும் அழுதுகொண்டு கண்களில் நீரைப் பெருக்கி மிக துக்கமுடையதாகவும் ஹா! ஹா! என்று கதறிக்கொண்டும் சில ஸமயத்தில் ப்ரஜ்ஞையிழந்தும் ஆகி இவ்விதம் மிகவும் பீடிக்கப்பட்டதாக இருந்தது.

35. (பொ-ரை) மீன்கள் துள்ளுவதால் அலைக்கப்பட்ட தாமரை புஷ்பங்களிலிருந்து தேன் பெருகுவதுபோல் நகரத்து ஸ்த்ரீகளின் கண்களிலிருந்து, துக்கத்தினாலுண்டான நீர் பெருகிற்று.

दृष्ट्वा तु नृपतिः श्रीमानेकचित्तगतं पुरम् ।
निपपातैव दुःखेन हतमूल इव द्रुमः ॥ 36 ॥

ततो हलहलाशब्दो जज्ञे रामस्य पृष्ठतः ।
नराणां प्रेक्ष्य राजानं सीदन्तं भृशदुःखितम् ॥ 37 ॥

हा रामेति जनाः केचिद्राममातेति चापरे ।
अन्तःपुरं समृद्धं च क्रोशन्तः पर्यदेवयन् ॥ 38 ॥

36. (ப-ரை) श्रीमान्- மிக்க செல்வமுடைய, नृपतिः- அவ்வரசன், एकचित्तगतं- ஒரே மனதாயிருக்கின்ற, पुरम्- நகரத்தை, दृष्ट्वा तु- பார்த்து, हतमूलः- வேர்போயிருக்கிற, द्रुमः इव- மரம்போல், दुःखेन- துக்கத்தினால், निपपात एव- தரையில் விழுந்தேவிட்டார்.

37. (ப-ரை) ततः- பிறகு, भृशदुःखितम्- மிகவும் துக்கமுடையவரும், सीदन्तं- தளர்ந்துமிருக்கிற, राजानं- அரசனை, प्रेक्ष्य- பார்த்து, नराणां- மனிதர்களுடைய, हलहलाशब्दः- ஹலஹலவென்னும் சப்தமானது, रामस्य- ஸ்ரீராமனுடைய, पृष्ठतः- பின்னால், जज्ञे- உண்டாயிற்று.

38. (ப-ரை) केचित् जनाः- சில ஜனங்கள், हा राम इति- "ஐயோ ராமா" என்று, अपरे- மற்ற சிலர், (हा) राममाता इति- "ஐயோ ராமன் தாயே" என்று, क्रोशन्तः (सन्तः)- உறக்கக் கூவிக்கொண்டு, पर्यदेवयन्- அழுதார்கள், अन्तः पुरं समृद्धं च- அந்தப்புரமு முழுவதுமே. (पर्यदेवयन्- அவ்விதமே அழுதது.)

36. (பொ-ரை) மிக்க செல்வம் பொருந்திய அவ்வரசன் பட்டணத்துஜனங்களெல்லாம் ஒரே மனதாயிருக்கும் தன்மையைப்பார்த்து அரசன் வேர் அறுந்த மரம்போல் துக்கத்தினால் கீழே விழுந்துவிட்டார்.

37. (பொ-ரை) பிறகு, மிகவும் துக்கத்துடன் மெய்தளர்ந்த அவ்வரசனைப் பார்த்து ஜனங்களுடைய கல கல சப்தமானது ஸ்ரீராமன்பின்னால் உண்டாயிற்று.

38. (பொ-ரை) அந்த ஜனங்களில் சிலர் "ஐயோ ராமா" என்று கதறி அழுதார்கள். மற்றும சிலர், "ஐயோ ராமன் தாயே" என்று கதறி அழுதார்கள், அந்தப்புரம் முழுவதும் அவ்விதமே கதறிற்று.

अन्वीक्षमाणो रामस्तु विषण्णं भ्रान्तचेतसम् ।
राजानं मातरं चैव ददर्शानुगतौ पथि ॥ 39 ॥
स बद्ध इव पाशेन किशोरो मातरं यथा ।
धर्मपाशेन संक्षिप्तः प्रकाशं नाभ्युदैक्षत ॥ 40 ॥
पदातिनौ च यानार्हावदुःखार्हौ सुखोचितौ ।
दृष्ट्वा संचोदयामास शीघ्रं याहीति सारथिम् ॥ 41 ॥

39. (ப-ரை) अन्वीक्षमाणः- பின்னால் பார்த்துக்கொண்டுவருகின்ற, रामस्तु- ஸ்ரீராமனும், पथि- வழியில், अनुगतौ- பின்தொடர்ந்து வருகின்றவர்களும், विषण्णं- வ்யஸனமுற்றும், भ्रान्तचेतसम्- மனம் கலங்கினவருமான, राजानं- அரசனையும், (विषण्णां- வ்யஸனமுற்றவளும், भ्रान्तचेतसम्- மனம் கலங்கினவளுமான,) मातरं च एव- மாதாவை யும், ददर्श- பார்த்தார்.

40. (ப-ரை) सः- அந்த ஸ்ரீராமன், पाशेन- கயிற்றினால், बद्धः- கட்டப்பட் டிருக்கிற, किशोरः इव- குதிரைக்குட்டிபோல், धर्मपाशेन- தர்மமென்னும் கயிற்றினால், संक्षिप्तः- கட்டப்பட்டவராய்க் கொண்டு, मातरं- தாயாரை, प्रकाशं- ப்ரகாசமாக, यथा- உள்ளபடி, न अभ्युदैक्षत- எதிராக பார்க்கவில்லை.

41. (ப-ரை) यानार्हौ- வாஹனமேறத்தகுந்தவர்களும், अदुःखार्हौ- துக்கம் அனுபவிக்கத்தகாதவர்களும், सुखोचितौ- ஸுகானுபவத்திற்கே தகுந்தவர்களும், पदातिनौ- கால் நடையாக வருகின்றவர்களுமான, (पितरौ- மாதா பிதாக்களை,) दृष्ट्वा- பார்த்து, शीघ्रं- சீக்கிரமாக, याहि- போம், इति- என்று, सारथिम्- ஸாரதியை, संचोदयामास- ஸ்ரீராமன் ஏவினார்.

39. (பொ-ரை) ஸ்ரீராமன், பின்னால் கேட்கின்ற கூக்குரலை அனுஸரித்து பின்னால் திரும்பிப்பார்க்கும்பொழுது, மிகதுக்கத்துடன் மனம்கலங்கி தன்னை பின்தொடர்ந்துவருகின்ற மஹாராஜரையும், கௌஸல்யா தேவியையும் வழியில் பார்த்தார்

40. (பொ-ரை) அந்த ஸ்ரீராமன் கயிற்றினால் கட்டப்பட்ட குதிரைக் குட்டிபோல், தர்மமென்னும் கயிற்றினால் நன்றாய் கட்டுண்டபடியால், தாயாரை நன்றாகப் பார்க்கமுடியவில்லை.

41. (பொ-ரை) வாஹனமேறி வரத்தகுந்தவர்களும், துக்கம் அனுபவிக்கத் தகாதவர்களும், ஸுகானுபவத்திற்கே தகுந்தவர்களுமான தம் தாய் தந்தைகள் கால் நடையாக வருவதைப்பார்த்து ஸ்ரீராமன் "சீக்கிரமாக தேரைநடத்தும்" என்று ஸாரதிக்குக்கட்டளையிட்டார்.

न हि तत्पुरुषव्याघ्रो दुःखदं दर्शनं पितुः ।
मातुश्च सहितुं शक्तस्तोत्रार्दित इव द्विपः ॥ 42 ॥
प्रत्यगारमिवायान्ती वत्सला वत्सकारणात् ।
बद्धवत्सा यथा धेनू राममाताऽभ्यधावत ॥ 43 ॥
तथा रुदन्तीं कौसल्यां रथं तमनुधावतीम् ।
क्रोशन्तीं राम रामेति हा सीते लक्ष्मणेति च ॥ 44 ॥
रामलक्ष्मणसीतार्थं स्रवन्तीं वारि नेत्रजम् ।
असकृत्प्रैक्षत स तां नृत्यन्तीमिव मातरम् ॥ 45 ॥

42. (ப-ரை) पुरुषव्याघ्रः- புருஷோத்தமனான ஸ்ரீராமன், दुःखदं- துக்கத்தைக் கொடுக்கின்ற, पितुः- பிதாவினுடையவும், मातुः च-மாதாவினுடையவும், दर्शनं- தர்சனத்தை, तोत्रार्दितः- மாவெட்டியினால் பிடிக்கப்பட்ட, द्विपः इव-யானைபோல், सहितुं- பொறுத்துக் கொள்ளுவதற்கு, न शक्तः- சக்தியற்றவராயிருந்தார்.

43. (ப-ரை) बद्धवत्सा- கட்டின கன்றையுடையதாய், वत्सकारणात्- கன்றுக் குட்டியின் நிமித்தமாக, अगार प्रति- வீட்டைக்குறித்து, आयान्ती- வருகின்ற, धेनुः यथा इव- பசுமாடுபோல, वत्सला- புத்திரவாத்ஸல்யமுடைய, राममाता- ராமன் தாயார், अभ्यधावत- (தேரை நோக்கி) ஓடிவந்தாள்.

44-45. (ப-ரை) सः- அந்த ராமன், तथा- அவ்விதம், रुदन्तीं- அழுதுகொண்டும், तं रथं- அந்தத் தேரை, अनुधावतीम्- பின்தொடர்ந்தே வருகிறவளும், राम राम इति- ராமா, ராமா, என்றும், हा सीते- ஐயோ ஸீதையே, हा लक्ष्मण- ஐயோ இலக்கு

42. (பொ-ரை) ஏனென்றால்? புருஷோத்தமனான ஸ்ரீராமன், தனக்கு மிகவும் துக்கத்தைக்கொடுக்கின்ற மாதா பிதாக்களுடைய தர்சனத்தை, மாவெட்டியினால் அடிக்கப்பட்ட யானை, அந்த வேதனையை எப்படி பொறுக்காதோ அவ்விதம பொறுக்கமுடியாமல் இருந்தார்.

43. (பொ-ரை) மேயப்போன பசு, வீட்டில் கட்டியிருக்கிற கன்றைநினைத்துக்கொண்டு மிக அன்புடன் வீட்டைநோக்கி ஓடிவருவதுபோல், புத்திரவாத்ஸல்யமுடைய கௌஸல்யாதேவி, ராமன் ஏறிப்போகும் தேரைநோக்கி ஓடி வந்தாள்.

44-45. (பொ-ரை) அவ்விதம் அழுதுகொண்டு தேரை தொடர்ந்து ஓடி வந்து ஐயோ ராமா! ஐயோ ஸீதா! ஐயோ இலக்குமணா! என்று கதறிக்கொண்டு,

तिष्ठेति राजा चुक्रोश याहि याहीति राघवः ।
सुमन्त्रस्य बभूवात्मा चक्रयोरिव चान्तरा ॥ 46 ॥
नाश्रौषमिति राजानमुपालब्धोऽपि वक्ष्यसि ।
चिरं दुःखस्य पापिष्ठमिति रामस्तमब्रवीत् ॥ 47 ॥

மணு,! इति च- என்றும், क्रोशन्तीं- கதறுகின்றவளும், रामलक्ष्मणसीतार्थं- ராமன், இலக்கு மணன், ஸீதைஇம்மூவர்களைப்பற்றி, नेत्रजम् वारि- கண்ணீரை, स्रवन्तीं- பெருக்கு கின்றவளுமான, नृत्यन्तीं इव- ஆட்டம் ஆடுகின்றவள்போலுமிருக்கிற, तां मातरम्– அந்தத்தாயாரை, असकृत्- அடிக்கடி, प्रैक्षत- பார்த்தார்.

46. (ப-ரை) राजा- அரசன், तिष्ठ इति- நில்லும், என்று, चुक्रोश- (ஸுமந்த்ர ரைக்குறித்துக்) கதறினார், राघवः- ஸ்ரீராமன், याहि याहि इति- போம், போம் என்று, चुक्रोश- சொன்னார், (तदा-அப்பொழுது) सुमन्त्रस्य- ஸுமந்த்ரருடைய, आत्मा- மனது, चक्रयोः- இரண்டு சக்கிரங்களுடைய, अन्तरा इव च- நடுவில், (அகப்பட்டுக்கொண்டவன்) போல் बभूव- இருந்தது.

47. (ப-ரை) उपालब्धः अपि- (அரசனால்) திட்டப்பட்டிருந்தபோதிலும், न अश्रौषं- (உம்முடைய வார்த்தை எனக்கு) கேட்கவில்லை, इति– என்று, वक्ष्यसि- நீர் சொல்லிவிடும், दुःखस्य– துக்கத்தினுடைய, चिरं- தாமதமானது, पापिष्ठं- பொறுக்க முடியாதது, इति-என்று, रामः- ஸ்ரீராமன், तं- அந்த ஸுமந்த்ரரைக்குறித்து, अब्रवीत्- சொன்னார்.

ராமன், இலக்குமணன் ஸீதை என்னு மிவர்களுக்காகக் கண்களில் நீரைப்பெருக்கி ஆட்டமாடுகிறவள்போல் அங்கு மிங்கும் அலைந்துகொண்டு வருகிற அந்தத்தாயாரை ஸ்ரீராமன் பார்த்தார்.

46. (பொ-ரை) அரசன் ஸுமந்த்ரரைப்பார்த்து நில்லும் நில்லுமென்று கதறுகிறார். ஸ்ரீராமனோ, போம், போம் என்று சொல்லுகிறார். அந்த ஸமயத்தில் ஸுமந்த்ரருடைய மனதானது. இரண்டு சக்கிரங்களின் நடுவில் அகப்பட்டுக்கொண் டவன்போல் ஆயிற்று.

47. (பொ-ரை) வனத்திலிருந்து திரும்பி நகரத்திற்குப் போனபிறகு அரசன் உம்மைப்பார்த்து "ஸுமந்த்ரரே தேரை நிறுத்தும், என்று நான் கதறியும் நீர் ஏன் நிறுத்தாமலிருந்துவிட்டீர்" என்று உம்மைத்திட்டினால், ஐயோ நீர் சொன்னது என் காதில் படவேயில்லை என்று சொல்லிவிடலாம். இப்பொழுது அவர்கள் அனுபவிக்கின்ற துக்கத்தைப் பார்த்துக்கொண்டு தாமதம் செய்வது மிக வும் பாபமல்லவா, என்று ஸுமந்த்ரரைப்பார்த்து ராமன் சொன்னார்.

रामस्य स वचः कुर्वन्ननुज्ञाप्य च तं जनम् ।
व्रजतोऽपि हयाञ्शीघ्रं चोदयामास सारथिः ॥ 48 ॥
न्यवर्तत जनो राज्ञो रामं कृत्वा प्रदक्षिणम् ।
मनसाप्यश्रुवेगैश्च न न्यवर्तत मानुषम् ॥ 49 ॥
यमिच्छेत्पुनरायान्तं नैनं दूरमनुव्रजेत्
इत्यमात्या महाराजमूचुर्दशरथं वचः ॥ 50 ॥

---

48. (ப-ரை) सः- सारथिः- அந்த ஸாரதி, रामस्य- ராமனுடைய, वचः- வார்த்தையை, कुर्वन् (सन्)- செய்துகொண்டு, तं जनम्- அந்த ஜனத்தை, अनुज्ञाप्य- (ஸ்ரீராமனால்) அனுமதி செய்வித்து, व्रजतः अपि- போய்க்கொண்டிருக்கிற, हयान्- குதிரைகளை, शीघ्रं- இன்னும் சீக்கிரமாக, चोदयामास- ஓட்டினார்.

49. (ப-ரை) राज्ञः- அரசனுடைய, जनः- அந்தப்புரஜனமும், मानुषम्- மனிதர்களின் கூட்டமும், रामं- ஸ்ரீராமனை, प्रदक्षिणं- कृत्वा- ப்ரதக்ஷிணம் செய்துவிட்டு, न्यवर्तत- திரும்பியது, मनसा अपि- மனதினாலும், अश्रुवेगैः च- கண்ணீர் வேகத்தினாலும், न न्यवर्तत- திரும்பவில்லை.

50. (ப-ரை) यं- யாதொருவனை, पुनः- மறுபடி, आयान्तं- க்ஷேமத்துடன் வருகின்றவனாக, इच्छेत्- இச்சிக்கின்றானோ, एनं- இவனை, दूरं- வெகுதூரம் வரையில், न अनुव्रजेत्- பின் செல்லக்கூடாது, इति वचः- என்கிற வசனத்தை, अमात्याः- மந்திரிகள், दशरथ- महाराजं- மஹாராஜனைக்குறித்து, ऊचुः- சொன்னார்கள்.

48. (பொ-ரை) அந்த ஸாரதியான ஸுமந்த்ரரும், ஸ்ரீராமனுடைய உத்தரவுப்படியே செய்துகொண்டு; கௌஸல்யையை சூழ்ந்து தேரின் பின்னால் வருகின்ற அந்த அந்தப்புரஜனங்களையும் ஸ்ரீராமனால் நில்லுங்களென்று அனுமதி செய்வித்து ஏற்கனவே ஓடிக்கொண்டிருக்கிற குதிரைகளை மறுபடி சீக்கிரமாக ஓட்டினார்.

49. (பொ-ரை) அரசனுடைய அந்தப்புரஜனமும், நகரத்துஜனமும் ஸ்ரீராமனை ப்ரதக்ஷிணம் செய்து சரீரத்தினால் மாத்திரம் திரும்பியது. மனதுமாத்திரம் ராமனைவிட்டுத்திரும்பவேயில்லை. கண்களிலிருந்து பெருகுகின்ற ஜலத்தின் வேகமும அடங்கவில்லை.

50. (பொ-ரை) ஒருவன் ப்ரயாணம் செய்கிறபொழுது அவன் க்ஷேமமாக சீக்கிரம் திரும்பிவரவேணுமென்று எண்ணம்கொண்டவன், அவனை வெகுதூரம் வரையில் சென்று வழியனுப்பக்கூடாது, என்று சாஸ்த்ரவசனத்தை தசரதமஹாராஜனுக்கு மந்திரிகள் தெரிவித்தார்கள்.

तेषां वचः सर्वगुणोपपन्नं प्रस्विन्नगात्रः प्रविषण्णरूपः ।
निशम्य राजा कृपणः सभार्यो व्यवस्थितस्तं सुतमीक्षमाणः ॥ 51 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे

चत्वारिंशः सर्गः ॥ 40 ॥

---

51. (ப-ரை) सर्वगुणोपपन्नं- எல்லாகுணங்களும் நிறைந்த, तेषां वचः- அவர்கள் வார்த்தையை, राजा- அரசன், निशम्य- கேட்டு, प्रस्विन्नगात्रः- வியர்வையடைந்த சரீரமுடையவராய், प्रविषण्णरूपः- மிகவும் துக்கித்தவராய், कृपणः- தீனராய், सभार्यः- பத்னிகளோடு கூடினவராய், तं सुतं- அந்தப்புத்திரனை, ईक्षमाणः सन्- பார்த்துக்கொண்டு, व्यवस्थितः- நின்றுவிட்டார்.

51. (பொ-ரை) ஸர்வகுணங்களும் பொருந்திய அம்மந்திரிகளின் வார்த்தையைக்கேட்டு, அரசனும் தேஹமெல்லாம் வியர்த்து மிகுந்த பரிதாபமடைந்து, மிகவும் தீனராய் தன் பத்னிகளோடுகூட, வனம் செல்லுகின்ற புத்திரனையே பார்த்துக்கொண்டு அவ்விடமே நின்றுவிட்டார்.



एकचत्वारिंशः सर्गः ॥ 41 ॥

तस्मिंस्तु पुरुषव्याघ्रे विनिर्याते कृताञ्जलौ ।
आर्तशब्दोऽथ संजज्ञे स्त्रीणामन्तः पुरे महान् ॥ 1 ॥

1. (ப-ரை) तस्मिन् पुरुषव्याघ्रे- அந்த புருஷோத்தமன், कृताञ्जलौ- கைகூப்பினவராய், विनिर्याते सति- புறப்பட்டுப்போகுமளவில், अथ-பிறகு, अन्तःपुरे- அந்தப்புரத்திலுள்ள, स्त्रीणां- ஸ்த்ரீகளுடைய, महान्- பெரியதான, आर्तशब्दः- அழுகை சப்தமானது, संजज्ञे- உண்டாகிவிட்டது.

1. (பொ-ரை) புருஷோத்தமனான அந்த ஸ்ரீராமன், தாய்மார்களால் சூழப்பட்டிருக்கிற பிதாவைக்குறித்து கைகுவித்துக்கொண்டு, வெளியில் புறப்படுமளவில் தசரதமஹாராஜருடன் வந்திருக்கிற அந்தப்புர ஸ்த்ரீகளின் பெரிய அழுகை சப்தம் உண்டாகி விட்டது.

अनाथस्य जनस्यास्य दुर्बलस्य तपस्विनः ।
यो गतिः शरणं चासीत्स नाथः क्वनु गच्छति ॥ 2 ॥
न कुध्यत्यभिशस्तोऽपि क्रोधनीयानि वर्जयन् ।
क्रुद्धान्प्रसादयन्सर्वान्समदुःखः क्वचिद्गतः ॥ 3 ॥
कौसल्यायां महातेजा यथा मातरि वर्तते ।
तथा यो वर्ततेऽस्मासु महात्मा क्वनुगच्छति ॥ 4 ॥

2. (ப-ரை) अनाथस्य- நாதனில்லாததும், दुर्बलस्य- பலமில்லாததும், तपस्विनः- சோகிக்கத் தகுந்ததுமான, अस्यजनस्य- இந்த ஜனத்திற்கு, यः- எவர், गतिः- கதியாகவும், शरण च- ரக்ஷகனுகவும், आसीत्- இருந்தாரோ, सः नाथः- நாதனுன அந்த ராமன், क्वनु- எங்கே, गच्छति- போகிருனே.

3. (ப-ரை) अभिशस्तः अपि- திட்டப்பட்டிருந்தபோதிலும், न कुध्यति- கோபித்துக் கொள்ளார், क्रोधनीयानि- கோபித்துக்கொள்ளத்தகுந்த கார்யங்களை, वर्जयन्- விட்டவனுகவும், क्रुद्धान्- கோபித்துக்கொண்டிருக்கிற, सर्वान्- எல்லோரையும், प्रसादयन्- ஸமாதானம் செய்கிறவனும், समदुःखः- ஸமமான துக்கமுடையவனுமான, (அந்த ஸ்ரீ ராமன்), क्वचित् गतः- எங்கே போகிருனே.

4. (ப-ரை) महातेजाः- மிக்க தேஜஸ்ஸையுடைய, यः- யாதொருவன், मातरि कौसल्यां- மாதாவான கௌஸல்யா தேவியினிடத்தில், यथा- எப்படி, वर्तते- இருக்கிருனே, तथा- அப்படியே, अस्मासु- நம்மிடத்திலும், वर्तते- இருக்கிருனே, सः महात्मा- மஹாத்மாவான ராமன், क्वनु गच्छति- எங்கே போகிறனே.

2. (பொ-ரை) திக்கற்றும், பலமற்றும், சோகிக்கத்தகுந்ததுமான இந்த ஜனத்திற்கு எவன் கதியாகவும், ரக்ஷகனுகவுமிருந்தானே அந்த நாதனுன ராமன் எங்கே போகின்றுனே.

3. (பொ-ரை) யார் திட்டியபோதிலும், கோபித்துக்கொள்ளாதவன், கோபித்துக்கொள்ளத்தகுந்த கார்யங்களை செய்யாதவன், கோபித்துக்கொண்டவர்களை எல்லோரையுமே ஸமாதானம் செய்கிறவன், பிறருக்கு நேர்ந்த துக்கத்தை தனக்கு வந்ததாக எண்ணிக்கொள்ளுகிறவன் இப்படிப்பட்ட ராமன் எங்கேபோகிருனே.

4. (பொ-ரை) அதிகமான தேஜஸ்ஸையுடையவனும் மஹாத்மாவான யாதொருவன், தன் தாயாரான கௌஸல்யா தேவியினிடத்தில் ப்ரீதி வைத்தது போல் நம்மிடத்திலும் ப்ரீதிவைத்திருக்கிருனே. அந்த ராமன் எங்கே

कैकेय्या क्रियमाणेन राज्ञा संचोदितो वनम् ।
परित्राता जनस्यास्य जगतः क्वनु गच्छति ॥ 5 ॥
अहो निश्चेतनो राजा जीवलोकस्य संप्रियम् ।
धर्म्यं सत्यव्रतं रामं वनवासे प्रवत्स्यति ॥ 6 ॥
इति सर्वा महिष्यस्ता विवत्सा इव धेनवः ।
रुरुदुश्चैव दुःखार्ताः सस्वरं च विचुक्रुशुः ॥ 7 ॥

---

5. (ப-ரை) जगतः- உலகத்திற்கும், अस्य जनस्य- இந்த ஜனத்திற்கும், परित्राता- ரக்ஷகனை அந்த ராமன், कैकेय्या- கைகேயியினால், क्रियमाणेन- பிடிக்கப்படுகிற, राज्ञा- அரசனால், वनम्- தண்டகாவனத்தைக்குறித்து, संचोदितः- ஏவப்பட்டவனாய், क्वनु गच्छति- எங்கே போகிறானோ.

6. (ப-ரை) अहो- கஷ்டம், राजा- அரசன், निश्चेतनः- புத்தியில்லாதவர், जीवलोकस्य- ப்ராணி ஸமூகத்திற்கு, सम्प्रियम्- மிகவும் பிரியமாயும், धर्म्यं- தர்மத்தி லிருந்து நழுவாதவனும், सत्यव्रतं-பொய்யில்லாத வ்ரதமுடையவனுமான, रामं- ராமனை, वनवासे- வனவாஸ விஷயத்தில், प्रवत्स्यति- ஊரைவிட்டுத்துறத்துகிறார்.

7. (ப-ரை) इति- என்று, ताः- அந்த, सर्वाः महिष्यः- அரசன் மனைவிகள் எல்லோரும், विवत्साः- கன்றில்லாத, धेनवः इव- பசுக்கள் போல, रुरुदुः च एव- அழுதார் கள், दुःखार्ताः- துக்கத்தினால் பிடிக்கப்பட்டவர்களாய், सस्वरं- பெரும் சப்தத்தோடு கூடியதாக, विचुक्रुशुः च- கதறினார்கள்.

5. (பொ-ரை) இவ்வுலகத்திற்கும், நமக்கும் ரக்ஷகனை ஸ்ரீராமன் கைகே யினால் பிடிக்கப்பட்ட அரசனால், வனத்திற்கு அனுப்பப்பட்டு எங்கேபோகிறானோ.

6. (பொ-ரை) அய்யோ! அரசன் புத்தியில்லாதவர், உலகத்திலுள்ள பிராணிகளெல்லோருக்கும் இஷ்டனாயும், தர்மம் தவறாதவனாயும், செய்தப்ரதிஜ் ஞையை ஸத்தியமாக நடத்தும் வ்ரதமுடையவனுமான, இந்த ராமனை வனவாஸம் செய்வதற்காக நகரத்தை விட்டுத்துறத்து கின்றாரே.

7. (பொ-ரை) இவ்விதம் அவ்வரசன் மனைவிகளெல்லோரும் கன்றுகளை விட்டுப்பிரிந்த பசுக்கள்போல், கண்களில் நீர் பெருக்கி துக்கத்தினால் பிடிக்கப்பட்டு உறக்க சப்தத்துடன் கதறினார்கள்.

स तमन्तःपुरे घोरमार्तशब्दं महीपतिः ।
पुत्रशोकाभिसंतप्तः श्रुत्वा चासीत्सुदुःखितः ॥ 8 ॥
नाग्निहोत्राण्यहूयन्त नापचन्गृहमेधिनः ।
अकुर्वन्न प्रजाः कार्यं सूर्यश्चान्तरधीयत ॥ 9 ॥
व्यसृजन्कवलान्नागाः गावो वत्सान्न पाययन् ।
पुत्रं प्रथमजं लब्ध्वा जननी नाभ्यनन्दत ॥ 10 ॥

8. (ப-ரை) पुत्रशोकाभिसंतप्तः-புத்திரசோகத்தினால், மனம் கொதித்திருக்கிற, सः महीपतिः- அவ்வரசன், अन्तः पुरे- அந்த புரத்தில் (உண்டான) घोरं- பயங்கரமான, तं आर्तशब्दं- அந்த அழுகைக்குரலை, श्रुत्वा- கேட்டு, सुदुःखितः- மிகவும் துக்கமடைந்தவராய், आसीत् च- ஆனார்.

9. (ப-ரை) अग्निहोत्राणि- அக்நிஹோத்திரங்கள், न अहूयन्त-செய்யப்படவில்லை, गृहमेधिनः- க்ருஹஸ்தர்கள், न अपचन्- சமையல் செய்யவில்லை, प्रजाः- ஜனங்கள், कार्यं- ஒரு கார்யத்தையும், न अकुर्वन्-செய்யவில்லை, सूर्यः च- ஸூர்யனும், अन्तः अधीयत-ஒளி இழந்து விட்டான்.

10. (ப-ரை) नागाः- யானைகள், कवलान्- கவளங்களை, व्यसृजन्- விட்டுவிட்டதுகள், गावः- பசுக்கள், वत्सान्- கன்றுக்குட்டிகளை, न पाययन्- ஊட்டக்கொடுக்கவில்லை, जननी- தாயார், प्रथमज- முதல் கர்ப்பத்தில் பிறந்த, पुत्रं- பிள்ளையை, लब्ध्वा- அடைந்து, न अभ्यनन्दत- ஸந்தோஷப்படவில்லை.

8. (பொ-ரை) புத்திர சோகத்தினால் மனக்கொதிப்பை அடைந்த அவ்வரசனும் அந்தப்புரத்திலுண்டான கோரமான அவ்வழுகை சப்தத்தைக்கேட்டு, இன்னும் அதிகமாக துக்கங்கொண்டார்.

9. (பொ-ரை) ஸ்ரீராமன் வனம்போனபிறகு, ஔபாஸனம் அக்நிஹோத்திரம் முதலான அக்னிகார்யங்களை ஒருவரும் செய்யவில்லை, குடும்பிகள் ஒருவராவது வீடுகளில் சமைக்கவில்லை, ஒரு ஜனமாவது அவரவர்கள் செய்யவேண்டிய ஒரு கார்யத்தையும் செய்யவில்லை. ஸூர்யனும் ஒளி இழந்து மங்கி விட்டான்.

10. (பொ-ரை) யானைகள் கவளம் (ஆஹாரம்) எடுப்பதை விட்டு விட்டன. பசுக்கள் கன்றுகளுக்கு ஊட்டக்கொடுக்கிறதேயில்லை, தாயாரும் மூத்தகர்ப்பம் புத்திரனைப்பிறந்தும் ஸந்தோஷப்படுவதில்லை.

त्रिशङ्कुर्लोहितांगश्च बृहस्पतिबुधावपि ।
दारुणाः सोममभ्येत्य ग्रहाः सर्वे व्यवस्थिताः ॥ 11 ॥

नक्षत्राणि गतार्चींषि ग्रहाश्च गततेजसः ।
विशाखास्तु सधूमाश्च नभसि प्रचकाशिरे ॥ 12 ॥

कालिकानिलवेगेन महोदधिरिवोत्थितः ।
रामे वनं प्रव्रजिते नगरं प्रचचाल तत् ॥ 13 ॥

11. (ப-ரை) त्रिशंकुः- த்ரிசங்குவும், लोहितांगः च- அங்காரகனும், बृहस्पति बुधौ अपि- ப்ருஹஸ்பதியும், புதனும், दारुणाः- கொடியதுகளான, सर्वे ग्रहाः- (மற்ற) எல்லா க்ரஹங்களும், सोमं- சந்திரனை, अभ्येत्य- அடைந்து, व्यवस्थिताः- வக்ர கதியில் நிற்கின்றார்கள்.

12. (ப-ரை) नक्षत्राणि- நக்ஷத்திரங்கள், गतार्चींषि- ஒளி அழிந்தவைகளாயும், ग्रहाः च- க்ரஹங்களும், गततेजसः- போன ஒளியை உடையவைகளாயும், विशाखास्तु- விசாகா நக்ஷத்திரம், सधूमाः च- புகையுடன் கூடினவைகளாயும், नभसि- ஆகாயத்தில், प्रचकाशिरे- மின்னிக்கொண்டிருந்தன.

13. (ப-ரை) रामे- ஸ்ரீராமன், वनं- வனத்தைக்குறித்து, प्रव्रजिते सति- போன வளவில், कालिकानिलवेगेन- மேகக்கூட்டங்களோடு கூடிய காற்றின் வேகத்தினால், उत्थितः- மேலே கிளம்பின, महोदधिः इव- பெரும் கடல்போல, तत् नगरं- அந்நகரமானது, प्रचचाल- நடுங்கிவிட்டது.

11. (பொ-ரை) இக்ஷ்வாகு குலத்தின் கூடஸ்த்தரான த்ரிசங்குவும், அங்காரகனும், ப்ருஹஸ்பதியும், புதனும், மற்ற எல்லாக்ரஹங்களும், க்ரூரங்களாயிருந்துகொண்டு சந்திரனைச்சேர்ந்து வக்ரகதியாக நிற்கின்றார்கள்.

12. (பொ-ரை) நக்ஷத்திரங்கள் ஒளி இழந்தவைகளாயும், க்ரஹங்களும் காந்தியில்லாதவைகளாயும், இக்ஷ்வாகு தேசத்திற்கு ஏற்பட்ட விசாகா நக்ஷத்திரம் புகையினால் சூழப்பட்டதாயும் ஆகாயத்தில் தோன்றின.

13. (பொ-ரை) மேகத்தோடேகூடிய பெரும்காற்றின் வேகத்தினால் மேலே பொங்கி எழுந்த பெருங்கடல் நடுங்குவதுபோல், ஸ்ரீராமன் வனம் போனதினால் அந்நகரம் நடுங்கிற்று.

दिशः पर्याकुलाः सर्वास्तिमिरेणेव संवृताः ।
न ग्रहो नापि नक्षत्रं प्रचकाशे न किंचन ॥ 14 ॥
अकस्मान्नागरः सर्वो जनो दैन्यमुपागमत् ।
आहारे वा विहारे वा न कश्चिदकरोन्मनः ॥ 15 ॥
शोकपर्यायसंतप्तः सततं दीर्घमुच्छ्वसन् ।
अयोध्यायां जनः सर्वः शुशोच जगतीपतिम् ॥ 16 ॥

14. (ப-ரை) सर्वाः दिशः- திக்குக்கள் முழுவதும், पर्याकुलाः- மிகவும் கலங்கியவைகளாயும், तिमिरेण- இருளால், संवृताः इव- சூழப்பட்டதுபோல், (बभूवुः- ஆய்விட்டன), ग्रहः- க்ரஹமும், (जात्यैक वचनं) न प्रचकाशे- ப்ரகாசிக்கவில்லை, नक्षत्रं अपि- அச்வநீ முதலான நக்ஷத்திரமும், (न प्रचकाशे- ப்ரகாசிக்கவில்லை,) किंचन- மற்றொன்றும், (न प्रचकाशे- ப்ரகாசிக்கவில்லை.)

15. (ப-ரை) नागरः- அயோத்யா நகரத்திலிருக்கிற, सर्वः जनः- எல்லாஜனமும், अकस्मात्- திடீரென்று, दैन्यं- தைன்யத்தை, (சோர்வையை), उपागमत्- அடைந்தது, कश्चित्- ஒருவனும், आहारे वा- ஆஹாரத்திலோ, विहारे वा- விளையாட்டிலோ, मनः- மனதை, न अकरोत्- செலுத்தவில்லை.

16. (ப-ரை) अयोध्यायां- அயோத்திமா நகரத்தில், सर्वः जनः- எல்லா ஜனமும், शोकपर्यायसंतप्तः- துக்கத்தின் தொடர்ச்சியினால் பரிதபித்துக்கொண்டும், सततं- எப்பொழுதும், दीर्घं उच्छ्वसन्- நெடுமூச்செறிந்துகொண்டும், जगतीपतिम्- அரசனைக்குறித்து, शुशोच- வருத்தப்பட்டது.

14. (பொ-ரை) திக்குக்களெல்லாம் கலங்கி இருள்மூடியதுபோல் ஆய்விட்டன. நவக்ரஹங்களும் அச்வநீ முதலாகிய நக்ஷத்திரங்களும், ஸப்த ரிஷி, த்ருவன், முதலான மற்றவைகளும் ப்ரகாசிக்கவேயில்லை.

15. (பொ-ரை) அயோத்திமா நகரத்திலுள்ள ஜனமுழுவதும் ஒரு விதமான காரணமில்லாமலே திடீரென்று மனத்தளர்ச்சி அடைந்தது, ஒரு ஜனமாவது ஆஹாரத்திலோ, விளையாடுவதிலோ மனதைச்செலுத்தவேயில்லை.

16. (பொ-ரை) அயோத்திமா நகரத்திலிருக்கிற ஜனமுழுவதும் சோகத்தின் தொடர்ச்சியினால் பரிதாபமடைந்து எப்பொழுதும் நெடுமூச்சு விட்டுக்கொண்டு மஹாராஜரைக்குறித்து துக்கப்பட்டது.

बाष्पपर्याकुलमुखो राजमार्गगतो जनः ।
न हृष्टो लक्ष्यते कश्चित्सर्वः शोकपरायणः ॥ 17 ॥
न वाति पवनः शीतो न शशी सौम्यदर्शनः ।
न सूर्यस्तपते लोकं सर्वं पर्याकुलं जगत् ॥ 18 ॥
*अनर्थिनः सुताः स्त्रीणां भर्तारो भ्रातरस्तथा ।
सर्वे सर्वं परित्यज्य राममेवान्वचिन्तयन् ॥ 19 ॥

---

17. (ப-ரை) राजमार्गगतः- ராஜவீதியில் போகின்ற, जनः- ஜனமானது, बाष्पपर्याकुलमुखः- கண்ணீரால் கலங்கிய முகத்தையுடையதாயிருந்தது, कश्चित्- ஒரு ஜனமும், हृष्टः- ஸந்தோஷமுடையதாக, न लक्ष्यते- காணப்படவில்லை, सर्वः- எல்லா ஜனமும், शोकपरायणः- துக்கத்தையே முக்யமாகக் கைக்கொண்டிருந்தது.

18. (ப-ரை) पवनः- காற்று, शीतः- குளிர்ந்து, न वाति- வீசுகிறதில்லை, शशी- சந்திரன், सौम्यदर्शनः- அழகான காக்ஷியுடையவனாக, न- இல்லை, सूर्यः- ஸூர்யன், लोकं- லோகத்தை, न तपते- தபிக்கிறதில்லை, सर्वं जगत्- எல்லா உலகமும், पर्याकुलं- கலவரப்பட்டுவிட்டது.

19. (ப-ரை) सुताः- குழந்தைகள், स्त्रीणां- ஸ்த்ரீகளை (தாய்மார்களை) अनर्थिनः- விரும்பவில்லை, भर्तारः- பர்த்தாக்கள், (स्त्रीणां- பார்யைகளை), (अनर्थिनः- விரும்பவில்லை), तथा- அப்படியே, भ्रातरः- ஸஹோதரர்கள், (अन्योन्यां- ஒருவருக்கொருவரை, अनर्थिनः- விரும்பவில்லை), सर्वे- எல்லோரும், सर्वं- எல்லாவற்றையும், परित्यज्य- விட்டுவிட்டு, रामं एव- ராமனையே, अनु अचिन्तयन्- நினைத்துக்கொண்டிருந்தார்கள்.

---

17. (பொ-ரை) ராஜவீதியில்போகிற ஜனமுழுவதும் கண்ணீரால் கலங்கிய முகமுடையதாகவே போயிற்று. ஒருவனாவது ஸந்தோஷமுடையவனாகக் காணப்படவில்லை. எல்லா ஜனமும் துக்கத்திலேயே ஆழ்ந்துவிட்டது.

18. (பொ-ரை) காற்று குளிர்ந்து வீசுவதில்லை, சந்திரன் பார்ப்பதற்கு அழகில்லாமலாகிவிட்டான். ஸூர்யனுடைய வெய்யில் உலகத்திற்கு உஷ்ணமாகவேயில்லை. இவ்விதம் உலகமுழுவதும் கலங்கிவிட்டது.

19. (பொ-ரை) குழந்தைகள் தாய்மார்கள் வேணுமென்று ஆசைப்படவேயில்லை. பர்த்தாக்களும் பார்யைகளிடத்தில் ஆசைவைக்கவில்லை. பார்யைகளும் பர்த்தாக்களிடத்தில் ஆசைவைக்கவில்லை. அவ்விதமே ஸஹோதரர்களும் ஒருவருக்கொருவர் ஆசைவைக்கவில்லை. இவ்வாறு எல்லாஜனங்களும் எல்லாவற்றிலும் ஆசையொழித்துவிட்டு ராமன் ஒருவனையே எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருந்தார்கள்.

---

*ராமன் வனம் போகுங்காலத்தில் கைகேயி தடுக்காமலிருந்ததைப்பார்த்து, தாய்மார்கள் ப்ரயோஜனமில்லையென்று பிள்ளைகள் தாயாரை கைவிட்டார்கள்.

ये तु रामस्य सुहृदः सर्वे ते मूढचेतसः ।
शोकभारेण चाक्रान्ताः शयनं न जहुस्तदा ॥ 20 ॥
ततस्त्वयोध्या रहिता महात्मना पुरन्दरेणेव मही सपर्वता ।
चचाल घोर भयशोकपीडिता सनागयोधाश्वगणा ननाद च ॥ 21 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
एकचत्वारिंशः सर्गः ॥ 41 ॥

20. (ப-ரை) रामस्य- ஸ்ரீராமனுடைய, येतु सुहृदः- ஸ்நேஹிதர்கள் எவர்களோ सर्वे ते- அவர்களெல்லோரும், मूढचेतसः- மோகமடைந்த மனதை உடையவர்களாய், शोक भारेण- சோகத்தின் பாரத்தினால், आक्रान्ताः च- அமிழ்த்தப்பட்டவர்களாய், तदा- அப்பொழுது, शयनं- படுக்கையை, न जहुः- விடவில்லை.

21. (ப-ரை) ततः- பிறகு, पुरन्दरेण- இந்திரனால், रहिता- இல்லாமலிருக்கிற, सपर्वता- பர்வதங்களோடுகூடிய, मही इव- பூமியானது (நடுங்கினதுபோல்,) महात्मना- மஹானுபாவனான ஸ்ரீராமனால், (रहिता- இல்லாததாயும்), सनागयोधाश्वगणा- யானைகளோடும், காலாட்களோடும், குதிரைக்கூட்டத்தோடும் கூடின, अयोध्या- அயோத்திமா நகரமானது, भयशोकपीडिता सती- பயத்தினாலும் துயரத்தினாலும் பீடிக்கப்பட்டதாய்க் கொண்டு, चचाल- நடுங்கியது, ननाद च-சப்தித்தது.

ராமனும் வ்ருத்தையான தாயாரை விட்டு வனம் போவதைப்பார்த்து பிள்ளையினால் ஒரு ப்ரயோஜனமுமில்லையென்று எண்ணி தாய்மார்களும் பிள்ளையை விட்டு விட்டார்கள்.

பர்த்தாவுக்கு உபத்திரவம் செய்கின்ற கைகேயியைப்பார்த்து பர்த்தாக்கள் தங்கள் பார்யைகளைக் கைவிட்டார்கள்,

கௌஸல்யையை கவனியாமல் அவள் புத்திரனை ராமனை வனத்திற்கு அனுப்பிய தசரத மஹாராஜனைப்பார்த்து பார்யைகளும் பர்த்தாக்களைக் கைவிட்டார்கள். பரதனை ராமபட்டாபிஷேகத்தின் தடங்கலுக்குக்காரணமாக நினைத்து ப்ராதாக்கள், ப்ராதாக்களை விட்டார்கள், என்று திர்த்தியத்தில் காண்கிறது,

20. (பொ-ரை) ஸ்ரீராமனுடைய தோழன்மார்கள் எல்லோரும் புத்தி மோஹமடைந்து துக்கமாகிற பெரும் பாரத்தினால் அமிழ்த்தப்பட்டு அந்த ஸமயத்தில் படுக்கையைவிட்டு எழுந்திருக்கவேயில்லை,

21. (பொ-ரை) இந்திரனை விட்டுப்பிரிந்து பர்வதங்களோடு கூடிய பூமியானது நடுங்குவதுபோல், மஹாத்மாவான ஸ்ரீராமனை விட்டுப்பிரிந்த இந்த அயோத்திமா நகரமும் பயத்தினாலும், சோகத்தினாலும் பீடிக்கப்பட்டு யானைகள் காலாட்கள், குதிரைக்கூட்டங்கள் இவைகளுடன் நடுங்கிச் சப்தித்தது.

द्विचत्वारिंशः सर्गः ॥ 42 ॥

यावत्तु निर्यतस्तस्य रजोरूपमदृश्यत ।
नैवेक्ष्वाकुवरस्तावत्संजहारात्मचक्षुषी ॥ 1 ॥
यावद्राजा प्रियं पुत्रं पश्यत्यत्यन्तधार्मिकम् ।
तावद्व्यवर्धतेवास्य धरण्यां पुत्रदर्शने ॥ 2 ॥
नपश्यति रजोप्यस्य यदा रामस्य भूमिपः ।
तदार्तश्च विषण्णश्च पपात धरणीतले ॥ 3 ॥

---

1. (ப-ரை) निर्यतः- புறப்படுகின்ற, तस्य- அந்த ராமனுடைய, रजोरूपं- புழுதியின் உருவமானது, यावत् तु- எதுவரையில், अदृश्यत- காணப்பட்டதோ, तावत्- அதுவரையில், इक्ष्वाकुवरः- இக்ஷ்வாகு குலத்துச் ச்ரேஷ்டரான தசரதர், आत्मचक्षुषी- தன் கண்களை, न संजहार एव- திருப்பவேயில்லை.

2. (ப-ரை) राजा- அரசன், प्रियं- ப்ரியமுள்ளவராயும், अत्यन्तधार्मिकम्- மிகவும் தார்மிஷ்டருமான, पुत्रं- புத்திரனை, यावत्- எது வரையில், पश्यति- பார்த்துக்கொண்டிருக்கிறாரோ, तावत्- அதுவரையில், अस्य- இவருக்கு, पुत्रदर्शने- பிள்ளையைப்பார்க்கும் நிமித்தத்தில், धरण्यां- பூமியில், (रजः- புழுதியானது) व्यवर्धत इव- வளர்ந்தது போலிருந்தது.

3. (ப-ரை) भूमिपः- அரசன், यदा- எப்பொழுது, अस्य रामस्य- இந்த ஸ்ரீராமனுடைய, रजः अपि- புழுதியையும், न पश्यति- பார்க்கவில்லையோ, तदा- அப்பொழுது, आर्तः च- சரீரத்தில் பீடை அடைந்தவராயும், विषण्णः च- மனதில் துக்கமுடையவராயும், धरणीतले- பூமியில், पपात- விழுந்தார்.

---

1. (பொ-ரை) அந்த ஸ்ரீராமன் புறப்படும்பொழுது பூமியிலிருந்து கிளம்பின புழுதி கண்ணுக்குத்தெரியும் வரையில் இக்ஷ்வாகு மனனவரில் சிறந்தவரான தசரத மஹாராஜர், அதையே பார்த்துக்கொண்டிருந்தார், தன் கண்களைத்திருப்பவேயில்லை.

2. (பொ-ரை) மஹாராஜர், மிகவும் தார்மிஷ்டராயும், அன்பிற்கு இடமுமான தன் புத்திரனை புழுதியின் வழியாக பார்த்துக்கொண்டிருக்கும வரையில் இவர் புத்திரனை பார்க்கும் நிமித்தமாக பூமியில் புழுதி வளர்ந்ததுபோலிருந்தது.

3. (பொ-ரை) இந்த ராமனுடைய புழுதியும், அரசன் கண்களுக்குத்தெரியாமல் மறைந்து விடவே, சரீரத்தில் பீடையை அடைந்து, மனதில் துக்கத்தை அடைந்து அரசன் தரையில் விழுந்து விட்டார்.

तस्य दक्षिणमन्वागात्कौसल्या बाहुमङ्गना ।
वामं चास्यान्वगात्पार्श्वं कैकेयी भरतप्रिया ॥ 4 ॥
तां नयेन च सम्पन्नो धर्मेण विनयेन च ।
उवाच राजा कैकेयीं समीक्ष्य व्यथितेन्द्रियः ॥ 5 ॥
कैकेयि मा ममाङ्गानि स्प्राक्षीस्त्वं दुष्टचारिणी ।
न हि त्वां द्रष्टुमिच्छामि न भार्या न च बान्धवी ॥ 6 ॥

4. (ப-ரை) कौसल्या अङ्गना- உத்தம ஸ்த்ரீயான கௌஸல்யை, दक्षिणं बाहुं- வலதுகையை, (ப்பிடித்துக்கொண்டு) अन्वागात्- கூடச்சென்றாள், भरतप्रिया-பரதனிடத்தில் அன்புள்ள, कैकयी- கைகேயியானவள், अस्य- இவருடைய, वामं पार्श्वं च- இடது பக்கத்தையும், अन्वगात्- அநுஸரித்துக் கூடச்சென்றாள்.

बाहुं- என்றதனால் கௌஸல்யை அரசனுடைய தோளைப்பிடித்துக்கொண்டு போனாள் என்றும், पार्श्वं- என்றதினால் கைகேயி அரசன் கையைத்தொடாமல் அள்ளையில் போனாள் என்று ஏற்படுகிறது.

5. (ப-ரை) नयेन- நீதியுடனும், धर्मेण- தர்மத்துடனும், विनयेन च- நல்லொழுக்கத்துடனும், सम्पन्नः- கூடியிருக்கிற, राजा- அரசன், तां कैकेयीं- அந்த கைகேயியை समीक्ष्य- பார்த்து, व्यथितेन्द्रियः सन्- பீடிக்கப்பட்ட புலன்களையுடையவராய்க்கொண்டு, उवाच- சொன்னார்.

6. (ப-ரை) हे कैकेयि-அடீ கைகேயி! मम-என்னுடைய, अङ्गानि-அவயவங்களை, मा स्प्राक्षीः- தொடாதே, दुष्टचारिणी- (நீ) கெட்ட நடத்தையுள்ளவள், त्वां- உன்னை, द्रष्टुं- பார்ப்பதற்கு, न इच्छामि हि- (நான்) விரும்பவில்லை, (त्वं- நீ), भार्या न- (எனக்கு) பார்யையுமன்று, बान्धवी न- பந்துவுமன்று.

4. (பொ-ரை) உத்தம ஸ்த்ரீயான கௌஸல்யாதேவி மஹாராஜரின் வலது கையைப்பிடித்துக் கொண்டே சென்றாள், பரதனிடத்தில் பிரியமுள்ளவளான கைகேயி இவருடைய இடதுபக்கத்தில் கூடச்சென்றாள்,
5. (பொ-ரை) நீதி, தர்மம், நல்லொழுக்கம் இவைகளால் நிறைந்த அவ்வரசன் அந்த கைகேயியைப்பார்த்து, இந்திரியங்கள் கலங்கி சொன்னார்,
6. (பொ-ரை) அடீ கைகேயி! நீ என் அவயவங்களைத்தொடாதே, நீ மிகவும் கெட்ட நடத்தையுள்ளவள். உன்னைப்பார்ப்பதற்கு எனக்கு மனமேயில்லை. நீ எனக்கு பார்யையுமன்று, பந்துவுமன்று.

ये च त्वामनुजीवन्ति नाहं तेषां न ते मम ।
केवलार्थपरां हि त्वां त्यक्तधर्मां त्यजाम्यहम् ॥ 7 ॥
अगृह्णां यच्च ते पाणिमग्निं पर्यणयं च यत् ।
अनुजानामि तत्सर्वमस्मिन्लोके परत्र च ॥ 8 ॥
भरतश्चेत्प्रतीतः स्याद्राज्यं प्राप्येदमव्ययम् ।
यन्मे स दद्यात्पित्रर्थं मां मा तद्दत्तमागमत् ॥ 9 ॥

7. (ப-ரை) ये च- யாவொருவர்கள், त्वां अनु- உன்னை அனுஸரித்து, जीवन्ति- பிழைக்கின்றார்களோ, तेषां- அவர்களுக்கு, अहं- நான், (प्रभुः) न- யஜமானனல்ல, ते- அவர்களும், मम- எனக்கு, न- ஆட்பட்டவர்களல்ல, केवलार्थपरां- தனம் ஒன்றிலேயே நோக்கமுடையவளாய், त्यक्तधर्मां- தர்மத்தைக் கைவிட்டவளான, त्वां- உன்னை, अहं- நான், त्यजामि- விட்டுவிடுகிறேன்.

8. (ப-ரை) (अहं- நான்), ते- உன்னுடைய, पाणिं- கையை, अगृह्णां च यत्- பிடித்தேன் என்கிறது எதுவோ, अग्निं- அக்னியை, पर्यणयं च यत्- ப்ரதக்ஷிணம் செய்தேனென்கிறது எதுவோ, तत्- அதையும், अस्मिन् लोके- இந்த லோகத்திலும், परत्र च- பரலோகத்திலும், यत्- யாதொன்று உண்டோ, सर्वं- அது முழுவதையும், अनुजानामि- விட்டுவிடுகிறேன்.

9. (ப-ரை) भरतः- பரதனும், अव्ययम्- அழிவில்லாத, इदं राज्यं- இந்த ராஜ்யத்தை, प्राप्य- அடைந்து, प्रतीतः चेत्- ஸந்தோஷப்படுவானேயானால், सः- அவன், पित्रर्थं- பிதாவுக்கான, यत्- யாதொரு தர்ப்பணம் முதலானதுகளை, मे- எனக்கு, दद्यात्- கொடுப்பனோ, तत् दत्तं- அப்படி கொடுக்கப்பட்ட அது, मां- என்னை, मा गमत्- அடையவேண்டாம்.

---

7. (பொ-ரை) அடீ கைகேயி! உன்னைச்சேர்ந்த ஜனங்களுக்கும் நான் ராஜாவல்ல. அவர்களும் எனக்கு ஆட் பட்டவர்களல்ல. தனம் ஒன்றிலேயே நோக்கங்கொண்டு அதனால் தர்மத்தை விட்டிருக்கின்ற உன்னை நான் பரித்யாகம் செய்துவிடுகிறேன்.

8. (பொ-ரை) உன்னை நான் பாணிக்ரஹணம் செய்ததையும், அக்நி ப்ரதக்ஷிணம் செய்ததையும், இந்த உலகத்திலும், பரலோகத்திலும் உன்னுடைய ஸம்பந்தத்தால் வரத்தகுந்த நன்மை முழுவதையும் நான் இப்பொழுது விட்டு விட்டேன்.

9. (பொ-ரை) அழிவில்லாத இந்த ராஜ்யத்தை அடைந்து பரதன் பேரானந்தம் கொண்டானேயானால், அவன் எனக்குக்கொடுக்கும் பித்ரு தர்ப்பணம் முதலானது எனக்குச் சேராவே வேண்டாம்,

अथ रेणुसमुध्वस्तं तमुत्थाप्य नराधिपम् ।
न्यवर्तत तदा देवी कौसल्या शोककर्शिता ॥ 10 ॥
हत्वेव ब्राह्मणं कामात्स्पृष्ट्वाग्निमिव पाणिना ।
अन्वतप्यत धर्मात्मा पुत्रं संचिन्त्य तापसम् ॥ 11 ॥
निवृत्त्यैव निवृत्त्यैव सीदतो रथवर्त्मसु ।
राज्ञो नातिबभौ रूपं ग्रस्तस्यांशुमतो यथा ॥ 12 ॥

10. (ப-ரை) अथ- பிறகு, शोककर्शिता- சோகத்தினால் இளைத்திருக்கின்ற, कौसल्या देवी- கௌஸல்யா தேவியானவள், रेणुसमुध्वस्तं- புழுதியினால் மூடப்பட்டிருக்கிற, तं नराधिपम्- அவ்வரசனை, उत्थाप्य- எழுப்பி, तदा- அப்பொழுது, (तेन सह- அவருடன் கூடி) न्यवर्तत- திரும்பினாள்.

11. (ப-ரை) धर्मात्मा- தர்மாத்மாவான தசரதர், ब्राह्मणं- ப்ராம்மணனை, हत्वा इव-கொன்றுவிட்டு, (பரிதபிப்பது போலும்) कामात्-ஆசையினால், अग्निं-நெருப்பை, पाणिना- கையினால், स्पृष्ट्वा इव- தொட்டு பரிதபிப்பதுபோலவும், तापसम्- ரிஷிவேஷம் பூண்டிருக்கிற, पुत्रं- பிள்ளையை, संचिन्त्य- நினைத்து, अन्वतप्यत- பச்சாத்தாபமடைந்தார்.

12. (ப-ரை) रथवर्त्मसु- தேர்போன வழிகளில், निवृत्य एव- निवृत्य एव- திரும்பித் திரும்பிபார்த்து, सीदतः- துக்கப்படுகின்ற, राज्ञः- அரசனுடைய, रूपं-உருவமானது, ग्रस्तस्य- ராகுவினால் பிடிக்கப்பட்ட, अंशुमतः- ஸூர்யனுடைய, (रूपं) यथा- உருவம் போல், न अति बभौ- அதிகமாக விளங்கவில்லை

10. (பொ-ரை) பிறகு, புத்ரசோகத்தினால் தேஹமிளைத்திருக்கிற கௌஸல்யாதேவி, தரையில் விழுந்து புழுதி படிந்த அவ்வரசனை எழுப்பிக்கொண்டு, அவருடன் கூடவே அப்பொழுது திரும்பினாள்.

11. (பொ-ரை) தர்மசிந்தையுடையவரான தசரத மஹாராஜர் புத்திபூர்வகமாக ப்ரம்மஹத்தி செய்தவன்போலவும், கையினால் நெருப்பைத்தொட்டவன் போலவும், ரிஷிவேஷம் பூண்டிருக்கிற தன் பிள்ளையை நினைத்து நினைத்து பச்சாத்தாபமடைந்தார்.

12. (பொ-ரை) ஸ்ரீராமன் ஏறிப்போகும் தேர்வழிகளில் திரும்பித் திரும்பிப்போய் மிகவும் துக்கப்படுகின்ற அரசனுடைய ரூபமானது, க்ரஹணம் பிடித்த ஸூர்யனுடைய உருவம்போல் அதிகப்ரகாசமில்லாமலிருந்தது.

विललाप च दुःखार्तः प्रियं पुत्रमनुस्मरन् ।
नगरान्तमनुप्राप्तं बुध्वा पुत्रमथाब्रवीत् ॥ 13 ॥
वाहनानां च मुख्यानां वहतां तं ममात्मजम् ।
पदानि पथि दृश्यन्ते स महात्मा न दृश्यते ॥ 14 ॥
यः सुखेषूपधानेषु शेते चन्दनरूषितः ।
वीज्यमानो महार्हाभिः स्त्रीभिर्मम सुतोत्तमः ॥ 15 ॥
स नूनं क्वचिदेवाद्य वृक्षमूलमुपाश्रितः ।
काष्ठं वा यदि वाश्मानमुपधाय शयिष्यते ॥ 16 ॥

13. (ப-ரை) प्रियं पुत्रं- ப்ரியமான பிள்ளையை, अनुस्मरन्- நினைத்துக்கொண்டு, दुःखार्तः- துக்கத்தினால், பீடிக்கப்பட்டவராய், विललाप च- கதறினார், पुत्रं- புத்திரனை, नगरान्तं- பட்டணத்தின் எல்லையை, अनुप्राप्तं- அடைந்தவனாக, बुध्वा- தெரிந்துகொண்டு, अथ- பிறகு, अब्रवीत्- சொன்னார்

14. (ப-ரை) तं- அப்படிப்பட்ட, मम आत्मजम्- என்புத்திரனை, वहतां- சுமந்து கொண்டுபோகிற, मुख्यानां-சிரேஷ்டங்களான, वाहनानां-வாஹனங் (குதிரை) களுடைய, पदानि च-கால் அடிகளும், पथि- வழியில், दृश्यन्ते- காணப்படுகின்றன, स महात्मा- அந்த மஹானுபாவன், न दृश्यते- காணப்படவில்லை.

15-16. (ப-ரை) यः- யாதொரு, मम- என்னுடைய, सुतोत्तमः- உத்தமனான புத்திரன், चन्दनरूषितः- சந்தனத்தினால் பூசப்பட்டும், महार्हाभिः- சிரேஷ்டர்களான, स्त्रीभिः- பெண்களால், वीज्यमानः सन्- (சாமரம் விசிரி இவைகளால்) வீசப்பட்டவனாய்க் கொண்டு, सुखेषु- ஸுகங்களான, उपधानेषु- பஞ்சு மெத்தைகளில், शेते- படுத்துக் கொண்டிருக்கிறானோ, सः- அப்படிப்பட்டவன், अद्य- இப்பொழுது क्वचित् एव- ஒரிடத்தில், वृक्षमूलं- மரத்தின் அடியை, उपाश्रितः सन्- அடைந்தவனாய்க்கொண்டு, काष्ठं वा- மரக்கட்டையையோ, अश्मानं-यदि वा-கல்லையோ, उपधाय-தலை அணையாக வைத்துக் கொண்டு, शयिष्यते- படுத்துக்கொள்ளுவான், नूनं- நிச்சயம்.

---

13. (பொ-ரை) ப்ரியமான பிள்ளையை நினைத்துக்கொண்டு, துக்கத்தினால் பீடிக்கப்பட்டுக் கதறினார், இவ்வளவுகாலத்தில் நம்முடைய புத்திரன் நகரத்தின் எல்லையை தாண்டிப்போயிருப்பன், என்று தெரிந்துகொண்டு சொல்லுகிறார்.

14. (பொ-ரை) என் பிள்ளையான ராமனை சுமந்துகொண்டு போகின்ற உத்தமங்களான யானை குதிரை முதலான வாஹனங்களுடைய காலடிகள்மாத்திரம் வழியில் காணப்படுகின்றன, மஹாத்மாவான என் குழந்தை ராமன் காணக்கிடைக்கவில்லையே.

15-16. (பொ-ரை) சந்தனம் பூசிக்கொண்டு, சிறந்தவர்களான பரிசாரிகஸ்த்ரீகளால் ஆலவட்டம் முதலியவைகளால் வீசப்பெற்று ஸுகமான பஞ்சு மெத்தை

उत्थास्यति च मेदिन्याः कृपणः पांसुकुण्ठितः ।
विनिश्वसन्प्रस्रवणात्करेणूनामिवर्षभः ॥ 17 ॥
द्रक्ष्यन्ति नूनं पुरुषा दीर्घबाहुं वनेचराः ।
राममुत्थाय गच्छन्तं लोकनाथमनाथवत् ॥ 18 ॥
सा नूनं जनकस्येष्टा सुता सुखसदोचिता ।
कण्टकाक्रमणाक्रान्ता वनमद्य गमिष्यति ॥ 19 ॥

17. (ப-ரை) पांसुकुण्ठितः- புழுதியினால் பூசப்பட்டு, कृपणः सन्- துக்கப்படக்கூடியவனாய்க்கொண்டு, मेदिन्याः- பூமியிலிருந்து, करेणूनां- பெண் யானைகளுக்கு, ऋषभः- நாதனான யானையானது, विनिश्वसन् सन्- பெருமூச்சு விட்டுக்கொண்டு, प्रस्रवणात् इव- மலையருவியிலிருந்து (எழுந்திருப்பது) போல், उत्थास्यति च- எழுந்திருப்பன்.

18. (ப-ரை) उत्थाय- (காலையில்) எழுந்து, अनाथवत्- அனாதனைப்போல், गच्छन्तं- போகின்ற, लोकनाथं- லோகநாதனுமான, दीर्घबाहुं- நீண்ட கைகளையுடைய, रामं- ஸ்ரீராமனை, वनेचराः- வனத்தில் ஸஞ்சரிக்கின்ற, पुरुषाः- புருஷர்கள், द्रक्ष्यन्ति- பார்ப்பார்கள், नूनं- நிச்சயம்.

19. (ப-ரை) सुखसदोचिता- எப்பொழுதும் ஸுகப்படுவதற்கே தகுந்தவளும், जनकस्य- ஜனகமஹாராஜருடைய, इष्टा सुता- ப்ரியமான பெண்ணான, सा- அந்த ஸீதை, कण्टकाक्रमणाक्रान्ता- முள்ளுகளில் கால்வைத்து நடந்துகொண்டு, अद्य- இப்பொழுது, वनं- வனத்தை, गमिष्यति- அடையப்போகிறாள், नूनं- இது நிச்சயம்.

களில் உத்தமமான தலையணைகள்வைத்து படுத்துக்கொண்டிருந்த என்னுடைய உத்தமனான குமாரன், இப்பொழுது வனம் போய், ஓரிடத்தில் ஒரு மரத்தடியில் சேர்ந்து, மரக்கட்டையையோ, கல்லையோ தலை அணையாக வைத்து தரையில் படுத்துக்கொள்ளப் போகிறான். இது நிச்சயம்

17 (பொ-ரை) சரீரமெல்லாம் புழுதி படிந்து பார்த்தவர்களெல்லாம ஐயோ! என்று துக்கப்படக்கூடியவனாய் அநேகம பெண்யானைகளுக்குத் தலைவனான ஆண் யானை பெருமூச்சுவிட்டுக்கொண்டு மலை அருவியின் ஸமீபத்திலிருந்து எழுந்திருப்பதுபோல் தரையிலிருந்து எழுந்திருப்பான்.

18. (பொ-ரை) லோகநாதனும், நீண்ட திருதோள்களையுமுடைய ராமன், காலையில் எழுந்து அனாதன்போல் போகும காலத்தில், வனத்தில் ஸஞ்சரிக்கின்றவர்கள் எல்லோரும் அவனைப்பார்ப்பார்கள், நிச்சயம.

19. (பொ-ரை) எப்பொழுதும், ஸுகானுபவத்திற்கே ஏற்றவளான அந்த ஜனகராஜனுடைய மனதிற்கு இனிய பெண்ணானவள் இப்பொழுது முட்களின்மேல் காலைவைத்து வைத்து நடந்துகொண்டு வனத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருப்பாள். இது நிச்சயம்.

विललाप च दुःखार्तः प्रियं पुत्रमनुस्मरन् ।
नगरान्तमनुप्राप्तं बुध्वा पुत्रमथाब्रवीत् ॥ 13 ॥
वाहनानां च मुख्यानां वहतां तं ममात्मजम् ।
पदानि पथि दृश्यन्ते स महात्मा न दृश्यते ॥ 14 ॥
यः सुखेषूपधानेषु शेते चन्दनरूषितः ।
वीज्यमानो महार्हाभिः स्त्रीभिर्मम सुतोत्तमः ॥ 15 ॥
स नूनं क्वचिदेवाद्य वृक्षमूलमुपाश्रितः ।
काष्ठं वा यदि वाश्मानमुपधाय शयिष्यते ॥ 16 ॥

13. (ப-ரை) प्रियं पुत्रं- ப்ரியமான பிள்ளையை, अनुस्मरन्- நினைத்துக்கொண்டு, दुःखार्तः- துக்கத்தினால், பீடிக்கப்பட்டவராய், विललाप च- கதறினார், पुत्रं- புத்திரனை, नगरान्तं- பட்டணத்தின் எல்லையை, अनुप्राप्तं- அடைந்தவனாக, बुध्वा- தெரிந்துகொண்டு, अथ- பிறகு, अब्रवीत्- சொன்னார்

14. (ப-ரை) तं- அப்படிப்பட்ட, मम आत्मजम्- என்புத்திரனை, वहतां- சுமந்து கொண்டுபோகிற, मुख्यानां-சிரேஷ்டங்களான, वाहनानां-வாஹனங் (குதிரை) களுடைய, पदानि च-கால் அடிகளும், पथि- வழியில், दृश्यन्ते- காணப்படுகின்றன, स महात्मा- அந்த மஹானுபாவன், न दृश्यते- காணப்படவில்லை.

15-16. (ப-ரை) यः- யாதொரு, मम- என்னுடைய, सुतोत्तमः- உத்தமனான புத்திரன், चन्दनरूषितः- சந்தனத்தினால் பூசப்பட்டும, महार्हाभिः- சிரேஷ்டர்களான, स्त्रीभिः- பெண்களால், वीज्यमानः सन्- (சாமரம் விசிரி இவைகளால்) வீசப்பட்டவனாய்க் கொண்டு, सुखेषु- ஸுகங்களான, उपधानेषु- பஞ்சு மெத்தைகளில், शेते- படுத்துக் கொண்டிருக்கிறானோ, सः- அப்படிப்பட்டவன், अद्य- இப்பொழுது क्वचित् एव- ஓரிடத்தில், वृक्षमूलं- மரத்தின் அடியை, उपाश्रितः सन्- அடைந்தவனாய்க்கொண்டு, काष्ठं वा- மரக்கட்டையையோ. अश्मानं-यदि वा-கல்லையோ, उपधाय-தலை அணையாக வைத்துக் கொண்டு, शयिष्यते- படுத்துக்கொள்ளுவான், नूनं- நிச்சயம்.

---

13. (பொ-ரை) ப்ரியமான பிள்ளையை நினைத்துக்கொண்டு, துக்கத்தினால் பீடிக்கப்பட்டுக் கதறினார், இவ்வளவுகாலத்தில் நம்முடைய புத்திரன் நகரத்தின் எல்லையை தாண்டிப்போயிருப்பன், என்று தெரிந்துகொண்டு சொல்லுகிறார்.

14. (பொ-ரை) என் பிள்ளையான ராமனை சுமந்துகொண்டு போகின்ற உத்தமங்களான யானை குதிரை முதலான வாஹனங்களுடைய காலடிகள்மாத்திரம் வழியில் காணப்படுகின்றன, மஹாத்மாவான என் குழந்தை ராமன் காணக்கிடைக்கவில்லையே.

15-16. (பொ-ரை) சந்தனம் பூசிக்கொண்டு, சிறந்தவர்களான பரிசாரிகஸ்த்ரீகளால் ஆலவட்டம் முதலியவைகளால் வீசப்பெற்று ஸுகமான பஞ்சு மெத்தை

उत्थास्यति च मेदिन्याः कृपणः पांसुकुण्ठितः ।
विनिश्वसन्प्रस्रवणात्करेणूनामिवर्षभः ॥ 17 ॥
द्रक्ष्यन्ति नूनं पुरुषा दीर्घबाहुं वनेचराः ।
राममुत्थाय गच्छन्तं लोकनाथमनाथवत् ॥ 18 ॥
सा नूनं जनकस्येष्टा सुता सुखसदोचिता ।
कण्टकाक्रमणाक्रान्ता वनमद्य गमिष्यति ॥ 19 ॥

17. (ப-ரை) पांसुकुण्ठितः- புழுதியினால் பூசப்பட்டு, कृपणः सन्- துக்கப்படக்கூடியவனாய்க்கொண்டு, मेदिन्याः- பூமியிலிருந்து, करेणूनां- பெண் யானைகளுக்கு, ऋषभः- நாதனான யானையானது, विनिश्वसन् सन्- பெருமூச்சு விட்டுக்கொண்டு, प्रस्रवणात् इव- மலையருவியிலிருந்து (எழுந்திருப்பது) போல், उत्थास्यति च- எழுந்திருப்பன்.

18. (ப-ரை) उत्थाय- (காலையில்) எழுந்து, अनाथवत्- அனாதனைப்போல், गच्छन्तं- போகின்ற, लोकनाथं- லோகநாதனுமான, दीर्घबाहुं- நீண்ட கைகளையுடைய, रामं- ஸ்ரீராமனை, वनेचराः- வனத்தில் ஸஞ்சரிக்கின்ற, पुरुषाः- புருஷர்கள், द्रक्ष्यन्ति- பார்ப்பார்கள், नूनं- நிச்சயம்.

19. (ப-ரை) सुखसदोचिता- எப்பொழுதும் ஸுகப்படுவதற்கே தகுந்தவளும், जनकस्य- ஜனகமஹாராஜருடைய, इष्टा सुता- ப்ரியமான பெண்ணான, सा- அந்த ஸீதை, कण्टकाक्रमणाक्रान्ता- முள்ளுகளில் கால்வைத்து நடந்துகொண்டு, अद्य- இப்பொழுது, वनं- வனத்தை, गमिष्यति- அடையப்போகிறாள், नूनं- இது நிச்சயம்.

களில் உத்தமமான தலையணைகள்வைத்து படுத்துக்கொண்டிருந்த என்னுடைய உத்தமனான குமாரன், இப்பொழுது வனம் போய், ஓரிடத்தில் ஒரு மரத்தடியில் சேர்ந்து, மரக்கட்டையையோ, கல்லையோ தலை அணையாக வைத்து தரையில் படுத்துக்கொள்ளப் போகிறான். இது நிச்சயம்

17 (பொ-ரை) சரீரமெல்லாம் புழுதி படிந்து பார்த்தவர்களெல்லாம ஐயோ! என்று துக்கப்படக்கூடியவனாய் அநேகம பெண்யானைகளுக்குத் தலைவனான ஆண் யானை பெருமூச்சுவிட்டுக்கொண்டு மலை அருவியின் ஸமீபத்திலிருந்து எழுந்திருப்பதுபோல் தரையிலிருந்து எழுந்திருப்பான்.

18. (பொ-ரை) லோகநாதனும், நீண்ட திருதோள்களையுமுடைய ராமன், காலையில் எழுந்து அனாதன்போல் போகும் காலத்தில், வனத்தில் ஸஞ்சரிக்கின்றவர்கள் எல்லோரும் அவனைப்பார்ப்பார்கள், நிச்சயம.

19. (பொ-ரை) எப்பொழுதும், ஸுகானுபவத்திற்கே ஏற்றவளான அந்த ஜனகராஜனுடைய மனதிற்கு இனிய பெண்ணானவள் இப்பொழுது முட்களின் மேல் காலைவைத்து வைத்து நடந்துகொண்டு வனத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருப்பாள். இது நிச்சயம.

महाह्रदमिवाक्षोभ्यं सुपर्णेन हृतोरगम् ।
रामेण रहितं वेश्म वैदेह्या लक्ष्मणेन च ॥ 25 ॥
अथ गद्गदशब्दस्तु विलपन्मनुजाधिपः ।
उवाच मृदु मन्दार्थं वचनं दीनमस्वरम् ॥ 26 ॥
कौसल्याया गृहं शीघ्रं राममातुर्नयन्तु माम् ।
नह्यन्यत्र ममाश्वासो हृदयस्य भविष्यति ॥ 27 ॥

25. (ப-ரை) रामेण- ஸ்ரீராமனாலும், वैदेह्या- ஸீதையினாலும், लक्ष्मणेन च-இலக்குமணனாலும், रहितं- இல்லாமலும், अत एव- ஆகையினாலே, अक्षोभ्यं- கலக்கமுடியாததாய், सुपर्णेन- கருடனால், हृतोरगम्- எடுக்கப்பட்ட ஸர்ப்பங்களையுடைய, महाह्रदं इव- பெரிய மடுவுபோன்றதுமான, वेश्म-க்ருஹத்தை, (प्राविशत्-ப்ரவேசித்தார் என்று முந்திய ச்லோகத்தில் இருப்பதை வைத்துக்கொள்ளுவது.)

26. (ப-ரை) अथ- பிறகு, मनुजाधिपः- நரபதியானவர், गद्गदशब्दः तु- தழுதழுத்த சப்தமுடையவராய், विलपन् सन्- அழுதுகொண்டு, मन्दार्थं- அல்பமான அர்த்தமுடையதாய், अस्वरम्- ஸ்வரம் அடங்கினதாய், दीनं- சோகிக்கத்தகுந்ததான, वचनं- வார்த்தையை, मृदु- மெதுவாக, उवाच- சொன்னார்.

27. (ப-ரை) मां- என்னை, राममातुः- ராமன் தாயாரான, कौसल्यायाः- கௌஸல்யையினுடைய, गृहं- அரண்மனையைக்குறித்து, शीघ्रं- சீக்ரமாக, नयन्तु- கொண்டுவிடுங்கள், हि- ஏனென்றால்! अन्यत्र- வேறு க்ருஹத்தில், मम- என்னுடைய, हृदयस्य- மனதிற்கு, आश्वासः-ஆறுதலானது, न भविष्यति- உண்டாகமாட்டாது.

25. (பொ-ரை) ராமன், ஸீதை, இலக்குமணன் இம்மூவர்களில்லாதபடியால், கருடனால் எடுக்கப்பட்ட ஸர்ப்பங்களையுடைய தாய், ஒருவராலும் கலக்கமுடியாத பெரிய மடுவுபோன்ற தன் க்ருஹத்தில் நுழைந்தார்.

26. (பொ-ரை) பிறகு, மஹாராஜர் தழுதழுத்து விக்கி விக்கி அழுதுகொண்டு, அதிகமான சப்தங்களுடன் ஸ்வல்பமான அர்த்தங்களுடன் ஸ்வரம் அடங்கினதாய், தீனமாக ஒரு வார்த்தை ம்ருதுவாகச்சொன்னார்.

27. (பொ-ரை) ராமன் தாயாரான கௌஸல்யையின் அரண்மனையில் என்னை சீக்கிரம் கொண்டுபோய் விடுங்கள். ஏனென்றால்? அந்தஇடம் தவிர வேறு இடத்தில் கொண்டுபோய்விட்டால் என்னுடைய மனதிற்கு ஆறுதல் உண்டாக மாட்டாது.

इति ब्रुवन्तं राजानमनयन्द्वारदर्शिनः ।
कौसल्याया गृहं तत्र न्यवेशयत विनीतवत् ॥ 28 ॥

ततस्तस्य प्रविष्टस्य कौसल्याया निवेशनम् ।
अधिरुह्यापि शयनं बभूव लुलितं मनः ॥ 29 ॥

पुत्रद्वयविहीनं च स्नुषयापि विवर्जितम् ।
अपश्यद्भवनं राजा नष्टचन्द्रमिवाम्बरम् ॥ 30 ॥

28. (ப-ரை) इति- என்று, ब्रुवन्तं- சொல்லுகின்ற, राजानं- அரசனை, द्वारदर्शिनः- வாசல் காப்போர்கள், विनीतवत्- வணக்கத்துடன், कौसल्यायाः गृहं- கௌஸல்யையினுடைய க்ருஹத்தைக்குறித்து, अनयन्- கொண்டுபோய்விட்டார்கள், तत्र- அங்கு, न्यवेशत- உட்கார்த்தப்பட்டார்.

29. (ப-ரை) ततः- பிறகு, कौसल्यायाः- கௌஸல்யையினுடைய, निवेशनं- க்ருஹத்தை, प्रविष्टस्य- ப்ரவேசித்தவராயிருந்தும், शयनं- படுக்கையை, अधिरुह्य- ஏறி; (स्थितस्य) अपि- இருந்தும், तस्य- அவருடைய, मनः- மனதானது, लुलितं— கலங்கியதாகவே, बभूव- இருந்தது.

30. (ப-ரை) पुत्रद्वयविहीनं- இரண்டு பிள்ளைகளில்லாததும், स्नुषया अपि- நாட்டுப்பெண்ணினாலும், विवर्जितम्- இல்லாமலிருக்கிற, भवनं- அந்த க்ருஹத்தை, राजा- அரசன், नष्टचन्द्रं- சந்திரனில்லாத, अम्बरम् इव-ஆகாசத்தைப்போல், अपश्यत्-பார்த்தார்.

28. (பொ-ரை) இவ்விதம் சொல்லுகின்ற அரசனை த்வாரபாலகர்கள் வணக்கத்துடன் கௌஸல்யையின் க்ருஹத்திற்குக் கொண்டுபோய், அங்கு அவரை உட்கார்த்தினார்கள்,

29. (பொ-ரை) அரசன் கௌஸல்யையின் க்ருஹம்சென்று அவளுடைய படுக்கையில் ஏறி உட்கார்ந்திருந்தும், அரசன் மனம்கலங்கியே இருந்தது.

30. (பொ-ரை) ராமலக்ஷ்மணராகிய இரண்டுபிள்ளைகளும், நாட்டுப்பெண்ணான ஸீதையும் இல்லாத அந்த க்ருஹம், அரசனுக்கு சந்திரனில்லாத ஆகாயம் போல் தோன்றிற்று.

तच्च दृष्ट्वा महाराजो भुजमुद्यम्य वीर्यवान् ।
उच्चैः स्वरेण चुक्रोश हा राघव जहासि माम् ॥ 31 ॥
सुखिता बत तं कालं जीविष्यन्ति नरोत्तमाः ।
परिष्वजन्तो ये रामं द्रक्ष्यन्ति पुनरागतम् ॥ 32 ॥
अथ रात्र्यां प्रपन्नायां कालरात्र्यामिवात्मनः ।
अर्धरात्रे दशरथः कौसल्यामिदमब्रवीत् ॥ 33 ॥

---

31. (ப-ரை) वीर्यवान्- பராக்கிரம சாலியான, महाराजः- அவ்வரசன், तत् च- அந்த க்ருஹத்தை, दृष्ट्वा- பார்த்து, भुजं- கையை, उद्यम्य- தூக்கிக்கொண்டு, हा राघव- ஐயோ ராகவா, माम- என்னை, जहासि- விட்டுவிடுகிறாய், (इति- என்று) उच्चैः- स्वरेण- பெரும் குரலோடு, चुक्रोश- கதறினார்.

32. (ப-ரை) पुनः आगतं- திரும்பிவந்த, रामं- ராமனை, ये- யாரொருவர்கள், परिष्वजंतः- அணைத்துக்கொண்டு, द्रक्ष्यन्ति- பார்க்கப்போகிறார்களோ, (ते) नरोत्तमाः- அந்த புருஷோத்தமர்கள், सुखिताः- ஸுகமுடையவர்களாய், तं कालं- அந்த காலத்தில், அல்லது அந்த காலம் வரையில், जीविष्यन्ति- ஜீவிக்கப்போகிறார்கள், बत- கஷ்டம்.

33. (ப-ரை) अथ- பிறகு, आत्मनः- தமக்கு, कालरात्र्यां इव- காளராத்திரிபோல, रात्र्यां- இரவானது, प्रपन्नायां (सत्यां)- வந்தவளவில், अर्धरात्रे- நிசி ராத்திரியில், दशरथः- தசரதமஹாராஜர், कौसल्यां- கௌஸல்யையைப்பார்த்து, इदं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

कालरात्रि- ஸம்ஹாரம் செய்யும் ராத்திரி.

31. (பொ-ரை) மிக்க பராக்ரமமுடைய அம்மஹாராஜர் அந்த கௌஸல்யையின் க்ருஹத்தைப்பார்த்துவிட்டு கையை உயரத்தூக்கிக்கொண்டு, ஐயோ ராகவா!

32. (பொ-ரை) பதினான்கு வருஷம் வனவாஸம் கழிந்து திரும்பி வருகின்ற ராமனை ஆனந்தத்தினால் அணைத்துக்கொண்டு பார்க்கப்போகின்ற புருஷோத்தமர்கள் அந்த காலத்தில் ஸுகமாக ஜீவிக்கப்போகிறார்கள், கஷ்டம்,

33. (பொ-ரை) பிறகு, தன்னை ஸம்ஹாரம்செய்யும் ராத்திரிபோல், இரவும் வந்தது. அர்த்த ராத்திரியும் ஆகிவிட்டது. அப்பொழுது தசரதமஹாராஜர் கௌஸல்யையைப்பார்த்து இதைச்சொன்னார்.

*रामं मेऽनुगता दृष्टिरद्यापि न निवर्तते ।
न त्वा पश्यामि कौसल्ये साधु मां पाणिना स्पृश ॥ 34

34. (ப-ரை) हे कौसल्ये- ஓ கௌஸல்யையே, मे- என்னுடைய, दृष्टिः- கண்ணானது, रामं अनुगता- ராமனுடனே கூடப்போய்விட்டது, अद्यापि- இப்பொழுதும், न निवर्तते- திரும்பவில்லை, (ஆகையினால்,) त्वा-உன்னை, न पश्यामि- நான் பார்க்கவில்லை, मां- என்னை, साधु- நன்றாக, पाणिना- கையினால், स्पृश- தொடு, (इति- என்று சொன்னாரென்று முன் ச்லோகத்தோடு அந்வயம்.)

34. (பொ-ரை) கௌஸல்யையே! ராமன் வநம்போகிறபோது என்னுடைய கண்ணும் அவனுடன்கூடவே சென்றுவிட்டது. அது இன்னும் திரும்பவில்லை. ஆகையினால் நான் உன்னைப் பார்க்கமுடியவில்லை. நீயாவது என்னை கையால் நன்றாக தொடு. என்று சொன்னார்.

*"முடியானே" என்கிற திருவாய் மொழியில் ஆழ்வாருடைய கரணங்கள் பெருமாள் பக்கல் தனித்தனியாகவே அநந்யார்ஹ சேஷமானபடி, தசரத சக்ரவர்த்தியினுடைய கரணங்களும் ஸ்ரீராகவன் பக்கலிலே அநந்யார்ஹ சேஷமானபடியைச் சொல்லுகிறது.

राम मे अनुगता दृष्टिः- अद्यापि न निवर्तते- கடல்கொண்ட வஸ்து மீளப்புகுகிறதோ என்கிறார், "समुद्र इव गाम्भीर्ये"- என்றும், "समस्तकल्याणगुणामृतोदधिः-" என்றும், "गुणानामाकरो महान्"- என்றும், அவர் தம்மை கடலாகச்சொல்லுகிறதிறே.

राम मे अनुगता दृष्टिः- रामो रमयतां वरः- என்கிறபடியே சேதநாசேதந விபாகமற துவக்குகிறவர் மினுமினுக்கைக்கண்டுபோனது குற்றமோ.

राम मे अनुगता दृष्टिः— சக்ஷுரிந்த்ரியம் ரூபவான்களை க்ரஹிக்குமதொழிய ரூபவான்கள் சக்ஷுரிந்த்ரியத்தை க்ரஹித்துக்கொண்டுபோம்படியாவதே.

रूप रूपि रूपैकार्थ समवेत ग्राहि- யாயிறே சக்ஷுஸ் இருப்பது. அதாவது (ரூபம் ரூபி என்று இரண்டும் ஒன்று சேர்ந்த வஸ்து என்று அர்த்தம்).

अनुगता- பதார்த்த தர்சனத்திற்கே கண்ட காணம் பாதக்ருத்யமான கமனத்தை அனுஷ்டிப்பதே.

रामं मे अनुगता दृष्टिः- "येन येन धाता गच्छति" (எந்தெந்த வழியாக பரமாத்மா செல்லு கின்றானோ என்னும்) कामरूप्यनुसंचरन्- (நினைத்தபடி சரீரமெடுத்துக்கொண்டு ஸஞ்ச ரிக்கிறான் என்னும்) அவ்வஸ்துவை பின் செல்லுகை ஒரு சேதநன் க்ருத்யமாயி ருக்க அசேதனமான இந்த்ரியம் அனுஷ்டிப்பதே.

रामं मे अनुगता- அதுதான் செய்யுமிடத்தில், ஒரு தேசவிசேஷத்திலே போனால் ஸ்ரீவைகுண்டநாதன் பக்கல் பண்ணும் அநுதாவனத்தை (தொடர்ந்துபோவதை) "இங்கே காண இப்பிறப்பே மகிழ்வர்," என்கிறபடியே இஸ்ஸம்ஸாரத்திலே ராமவி ஷயத்திலே பண்ணப்பெறுவதே?

दृष्टिः रामं अनुगता-"चक्षुर्देवाना मुत मर्त्यानां-என்றும், கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு" என்றும், ஜகத்ப்ரதானமான கரணம் முன்னே போகத் துடங்கின வாரே நீக்கிநின்ற கண்ணும் அதன் பின்னேபோக துடங்கிற்று.

दृष्टिः-दृशि प्रेक्षणे-என்கிற தாதுவின் அர்த்தத்தின்படியே ஸாராஸாரவிவேகம் பண்ணி து, விசேஷ க்ரஹண சக்தமாகையிறே அதுக்கடி என்கிறார். दृष्टिः- நமக்ககப்பட்ட நன்மைதீமைகளை அறிவிக்குமது தனக்கு அது அறியாதிராது.

मे दृष्टिः- எனக்கு சேஷமாய் வைத்தன்றோ தன் கார்யம் செய்கிறது. சேஷமா வார் சேஷிக்கு அதிசய ஆதானம் பண்ணவேண்டாவோ?

मे दृष्टिः- அழகியதாக நெடுங்காலம் பழகிப்போந்தோம், मे दृष्टिः राममनुगता- நெடு நாள் பழகிய நானிருக்க அங்கே இதொரு கண்ணோட்டமிருந்தபடி என்? मे दृष्टिः- இதுதான் ஸ்வதந்த்ரமாய்த்தாகிலும் அப்படி செய்யலாமிறே.

मे दृष्टिः- கைகேயி, மந்தரை முதலானவர்களுடைய கண்ணாயிருந்தால் அப்படி செய்யாதிறே, "नन्दामि पश्यन्नपि दर्शनेन-" என்று அதுக்கு வழிகாட்டிக்கொடுத்தவன் நானே கிடீர்!

मे दृष्टिः- கண்டதிலே கால் தாழும்படி சபலனான என்னுடைய த்ருஷ்டி ஆகை யிரே, இப்படி செய்கிறது. मे दृष्टिः- அவ்விஷயத்திலே ப்ரவணமானபடியாலே அதுதான் விட்டுப்போகச்செய்தேயும், இவனத்தோடே தனக்கு ஸம்பந்தத்தை எடுத்துக்காட்டுகிறான். "பெத்ததாயரை விட்டகன்று" என்று பெண்பிள்ளைதான் விட்டுப்போகச்செய்தேயிறே! திருத்தாயார் "என் மடவாள்" என்ற ஸம்பந்தம்

मे दृष्टिः रामं अनुगता- என்னுடைய இந்த்ரியமானால் என்னெஞ்சை பின் செல் லுமத்தனை போக்கி ராமனைப் பின் செல்லுவதே, அதுக்கு உறவென்? தனக்கு விஷயமானவளவும் பின் செல்லுகிறது. அனந்தரம் மீளாதோ என்னில்.

अद्यापि न निवर्तते- "अतिक्रान्तेपि राघवे"- என்று ஸ்வவிஷயத்தை கழிந்தபோதும் மீளக்காண்கிறிலோம்.

दृष्टिः अद्यापि न निवर्तते- இங்கேவரில் இன்னமும் கைகேயி முகத்திலே விழிக்க வேண்டில் செய்வதென்? என்கிற பயத்தாலே இன்னும் வருகிறதில்லை.

मे दृष्टिः अद्यापि न निवर्तते- ஒருவனுக்கு ஒரு க்லேசம் பிறந்தால் பரிகா பூதரான வர்கள் அடையவந்து உதவக்கடவதாயிரேயிருப்பது, ஆக இத்தனை நான் ராமவிர ஹத்தாலே க்லேசிதனானவளவிலும் வந்து உதவுகிறதில்லை.

मे दृष्टिः अद्यापि न निवर्तते- நெடுங்காலம் பண்ணின வாஸனையெல்லாம் கிடக்க "नोपजनं स्मरन्निदं शरीरं"-(இந்த சரீரத்தை நினைக்காமல்) என்கிறபடியே நம்மை நேராக மறந்து வாராதொழிவதே?

दृष्टिः अद्यापि न निवर्तते- போன பெருமாளை மீட்கமாட்டாதாகிலும் தான் மீளத் தட்டென்?

राम अनुगता दृष्टिः न निवर्तते- ஏதேனுமாக அவ்வஸ்துவைப் பின்சென்றார்க்கு "न च पुनरावर्तते" (மறுபடி திரும்புகிறதில்லை) என்கிறபடியே மீட்சியில்லையாயிருந்த திதேற?

மீட்சியில்லையாவதென்? அது உம்மைவிட்டு போயிற்றோ மீளுகைக்கு, என்ன?

न त्वा पश्यामि- கெடுவாய்? தோத்துகிற சோளகை அன்றுகாண். சக்ஷுரிந்த்ரிய மாவது அதீந்த்ரியமாகையாலே கார்யகல்ப்யம், ஆனபின்பு முன்னே நிற்கின்ற உன்னைக்காணாமையாலே போயிற்று என்றேன் என்கிறான்.

न त्वा पश्यामि- உன்னைக்காணுதபோது கண் தோற்றாதேயும், உன்னைக்கண்ட போது கண்விழித்தும் போகக்கடவனுன நான் நீ முன்னே நிற்கச்செய்தேயும் காணுதொழிகிறேன்.

त्वा- என்னை ஸன்னிஹிதையாக சொல்லாநிற்கச்செய்தே "न त्वा पश्यामि" என்கிறபடி என்னென்னில், न त्वा पश्यामि- अपितु शृणोमि-(ஆனால் கேட்கிறேன்).

"वचसा ज्ञातस्वरेणामुकः- என்று (வார்த்தை சொல்லுகையாலே ஸன்னிஹிதை என்று அநுமித்தேன் இத்தனை. சக்ஷுரிந்த்ரியம் குடிப்போகையாலே ப்ரத்ய க்ஷிக்கப்பெற்றிலேன்.

न त्वा पश्यामि- அவர் முகத்திலே விழிக்கப்பெறுதொழிந்தால் அவரைப்பெற்ற உன் முகத்திலாகிலும் விழிக்கலாமென்றிருந்தேன். அதுவும கிடையாதொழிவதே?

रामं मे अनुगता दृष्टिः नत्वा पश्यामि- ப்ரதான பரிகரமான கண் அவர் பின்னே போ கையாலே அஸன்னிஹிதமாயிற்று. ஸன்னிஹிதையான உன்னை யோ காணப்பெ றுகிறிலேன். நான் என் செய்வேன்?

रामं मे अनुगता दृष्टिः- न त्वा पश्यामि- "அண்டர் கோன் அணியரங்கன் என்னமுதனைக்கண்ட கண்கள் மற்றொன்றினைக்காணாவே" என்னுமாப்போலே அவ்விஷயத்தில் ஆழங்கால் பட்டது. இனி வேறொன்றைக்காணவற்றோ?

இப்படி சக்ஷுரிந்த்ரியம் தனக்கு உதவாமையாலே வாக் இந்த்ரியத்தைக் கொண்டாகிலும் ஆச்வாஸிப்போம் (தேறியிருப்போம்) என்று பார்த்து அவள் பேரைச் சொல்லி ஆறுகிறான்.

"कौसल्ये एष मे जीवितस्यान्तो रामो यद्यभिषिच्यते" ராமனுக்குப்பட்டாபிஷேகம் செய்தால் அன்றோடு என் உயிர் முடிந்தது என்று தென்றல் பகையாய் பெருமாளுடைய அன்வயத்தில் முடியத்தேடுகிற கைகேயியும் ஒருத்தி.

"किं पुनःप्रोषिते तात ध्रुवं मरणमेव मे" உன்னைக்காட்டுக்குத்துறத்தினால் நான் அன்றே மாணமடைவேன். இது நிச்சயம் என்று அவர் வ்யதிரேகத்தில் (பிரிவதில்) முடியத்தேடுகிற நீயும் ஒருத்தி,

कौसल्ये- "कौसल्या लोकभर्तारं सुषुवे यं मनस्विनी" என்று, நீ நாடுவாழ மனோரதித்து பிள்ளை பெற்றபடியும், அதெல்லாம் கிடக்க நாடோடு என்னோடு வாசியற கெடும்படியாவதே?

कौसल्ये त्वा न पश्यामि- அனர்த்தகரையான கைகேயியை இத்தனைபோது கண்ட கண்கள் ஆச்வாஸ கரையான (ஆறுதல் செய்கிற) உன்னைக்காணதொழிவதே? இவன் இப்படி தன் தளர்த்தி தோற்ற "கௌஸல்யே" என்று அழைத்தவாறே தியங்கின இவனையும் இழக்கலாகாதே புகுகிறோம் என்று துணுக்கோடே கிட்ட வந்து, செய்யவேண்டுவதென்? என்று கேட்க.

साधु मां पाणिना स्पृश- என்னுடைய க்லேசமெல்லாம் போம்படி உன்னுடைய கரக்கையாலே தடவி ஆச்வாஸிக்கப்பாராய்.

पाणिना स्पृश- புரோவர்த்தியான (முன்னே நிற்கின்ற) உன்னைக்காணாமையாலே சக்ஷுரிந்த்ரியம் குடிப்போயிற்றென்று அறிந்தேன். உன்னுடைய வாக்யச்ரவணம் பண்ணினபடியாலே ச்ரவணேந்த்ரியம் கிடந்ததென்று அறிந்தேன். कौसल्ये- என்று உன்னுடைய நாமக்ரஹணம் பண்ணின படியாலே வாக் இந்த்ரியம் கிடந்ததென்று அறிந்தேன். கந்த க்ரஹணம் பண்ணாமையாலே அவரை உச்சிமோந்த க்ராணேந்த்ரியம் போயிற்றென்று அறிந்தேன். ஸ்பர்சேந்த்ரியம் செய்தபடி என்? என்றில் அதறியலாம்படி என்னை அணைத்துக்காணாய். கள்ளர் புகுந்துபோன க்ருஹத்திலே கிடந்ததும் கிடவாததும் ஆராய்வாரைப்போலே, வந்து போனவர் தாம் வஞ்சக்கள்வனிறே. "என்னைம்புலனுமெழிலும் கொண்டு இங்கே நெருநலெழுந்தருளிப்போன புனிதர்" என்றாரிறே.

तं राममेवानुविचिन्तयन्तं समीक्ष्य देवी शयने नरेन्द्रम् ।
उपोपविश्याधिकमार्तरूपा विनिश्वसन्ती विललाप कृच्छ्रम् ॥ 35

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
द्विचत्वारिंशः सर्गः ॥ 42 ॥

35. (ப-ரை) तं रामं एव- அந்த ராமனையே, अनुविचिन्तयन्तं- அடிக்கடி நினைத்துக்கொண்டிருக்கிற, नरेन्द्रम्- அரசனை, देवी- கௌஸல்யாதேவியானவள், समीक्ष्य- பார்த்து, शयने- படுக்கையில், उपोपविश्य- ஸமீபத்தில் உட்கார்ந்துகொண்டு, अधिकं- அதிகமாக, आर्तरूपा- துக்கமுடையவளாய், विनिश्वसन्ती सती- பெருமூச்செறிந்துகொண்டு, कृच्छ्रम्- கஷ்டமாக, विललाप- அழுதாள்.

35. (பொ-ரை) இவ்விதம் ராமனையே நினைத்துக்கொண்டிருக்கிற அரசனை பார்த்து கௌஸல்யாதேவி படுக்கையில் ஸமீபத்தில் உட்கார்ந்துகொண்டு மிகவும் துக்கமடைந்தவளாய் பெருமூச்சு எறிந்து மிக கஷ்டத்துடன் கதறினாள். (அழுதாள்.)



साधु स्पृश- "இத்தனைபோது கைகேயியோடே ஒரு மிடறாய் அவனைக்காடேறப் போகவிட்டு இப்போதாக நின்று ஆராதனம் அடியானின்றான், என்று நினைத்திராதே. அவித்யா ஸ்பர்சத்தாலே இக்கலக்கம் இவருக்கு வந்தேறி இப்பாவி என் செய்வான் என்று, நெஞ்சிறக்கத்தோடே தொடவேணும்.

पाणिना स्पृश- ஸர்வாங்கங்களாலும் என்னை அணைத்து வெள்ளக்கேடாகாமே ஸாத்மிக்கும்படி ஏகாவயவத்தாலே ஸ்பர்சிக்கவேணும்.

साधु मा पाणिना स्पृश- பெருமாளை எடுப்பது ஒப்பிப்பதாய் அவருடைய அங்கஸ்பர்சத்தாலே பரிமளிதமான அக்கையாலே தொடவேணும்.

मा स्पृश-ராமஸ்பர்சம் பெறில் உஜ்ஜீவிக்கும்பெறாதபோது முடியும்படியாயிருக்கிற என்னை, அவரைப்பெற்ற உன்னுடைய அக்கையாலே அணைக்கவேண்டும். பகவத்ஸ்பர்சம் நேர்கொடுநேர் கிடையாதொழிந்தால் அவருடைய ஸம்பந்தி ஸம்பந்தி ஸம்பந்திகளுடைய ஸ்பர்சம் கொண்டு உஜ்ஜீவிக்கக்கடவதாயிறே இருப்பது.

"तां स्पृष्ट्वा मामपि स्पृश" (அவளைத்தொட்டு என்னையும் தொடு.) என்று அவர்தாமும் இத்தலையை பெறாதபோது இப்படிப்பட்டாரிறே.

पाणिना स्पृश- "அணிமிகு தாமரைக்கையையந்தோ அடிச்சியோம் தலைமிசை நீ யணியாய்" என்று அவ்விஷயத்தில் சொல்லக்கடவ பாசுரத்தை அது கிடையாமையாலே ததீய விஷயத்திலே சொல்லுகிறாரிறே.

त्रिचत्वारिंशः सर्गः ॥ 43 ॥

ततः समीक्ष्य शयने सन्नं शोकेन पार्थिवम् ।
कौसल्या पुत्रशोकार्ता तमुवाच महीपतिम् ॥ 1 ॥

राघवे नरशार्दूले विषमुप्त्वा विजिह्मताम् ।
विचरिष्यति कैकेयी निर्मुक्तेव हि पन्नगी ॥ 2 ॥

विवास्य रामं सुभगा लब्धकामा समाहिता ।
त्रासयिष्यति मां भूयो दुष्टाहिरिव वेश्मनि ॥ 3 ॥

1. (ப-ரை) ततः- பிறகு, शोकेन- துக்கத்தினால, सन्नं- தளர்ச்சி அடைந்தவராய், शयने- படுக்கையில், (இருக்கிற), पार्थिवम्- அரசனை, समीक्ष्य- பார்த்து, कौसल्या- கௌஸல்யாதேவி, पुत्रशोकार्ता- புத்திரசோகத்தினால் பீடிக்கப்பட்டவளாய், तं महीपतिं- அம்மன்னவரைக்குறித்து, उवाच- சொன்னாள்.

2. (ப-ரை) कैकेयी- கைகேயியானவள், नरशार्दूले- புருஷச்ரேஷ்டனான, राघवे- ராகவனிடத்தில், विजिह्मताम्- கபடமாகிற, विष-விஷத்தை, उप्त्वा- கக்கிவிட்டு, निर्मुक्ता- சட்டை உறித்த, पन्नगी इव- பெண் ஸர்ப்பம்போல், विचरिष्यति- திரியப்போகிறாள்.

3. (ப-ரை) सुभगा- பாக்கியமுள்ளவளான கைகேயி, रामं- ராமனை, विवास्य- துறத்திவிட்டு, लब्धकामा- தன் ஆசை கைகூடியவளாய், समाहिता- கவலையில்லாதவளாய், वेश्मनि- வீட்டில், (இருக்கிற) दुष्टाहिः इव-கொடிய ஸர்ப்பம் போல், मां- என்னை, भूयः- அதிகமாக, त्रासयिष्यति- வெருட்டப்போகிறாள்.

---

1. (பொ-ரை) பிறகு, துக்கத்துடன் தேஹம் தளர்ந்து படுக்கையில் படுத்துக்கொண்டிருக்கிற அவ்வரசனைப்பார்த்து கௌஸல்யாதேவி புத்திரசோகம் பொறுக்கமுடியாதவளாய் அவரைநோக்கிசொன்னாள்.

2. (பொ-ரை) கைகேயியானவள், புருடோத்தமனான ஸ்ரீராமனிடத்தில் தன் கபடத்தொழிலாகிற விஷத்தை உபயோகப்படுத்திவிட்டு, சட்டை உறித்த பாம்புபோல் திரிந்துகொண்டிருக்கப்போகிறாள்.

3. (பொ-ரை) கைகேயின் பாக்யமே பாக்யம். அவள் ராமனைக்காட்டிற்குத் துறத்திவிட்டு தன் எண்ணம் நிறைவேறி மனதில் யாதொரு கவலையுமில்லாதவளாயிருந்துகொண்டு, வீட்டிலிருக்கிற கொடிய ஸர்ப்பம் போல் முன்னைவிட அதிகமாக என்னை பயப்படுத்தப்போகிறாள்.

अथ स्म नगरे रामश्चरन्भैक्षं गृहे वसेत् ।
कामकारो वरं दातुमपि दासं ममात्मजम् ॥ 4 ॥
पातयित्वा तु कैकेय्या रामं स्थानाद्यथेष्टतः ।
प्रदिष्टो रक्षसां भागः पर्वणीवाहिताग्निना ॥ 5 ॥
गजराजगतिर्वीरो महाबाहुर्धनुर्धरः ।
वनमाविशते नूनं सभार्यः सहलक्ष्मणः ॥ 6 ॥

---

4. (ப-ரை) अथ स्म- அவ்விதமிருந்தாலும், रामः- ராமன், नगरे- பட்டணத்தில், भैक्षं- பிக்ஷையை, चरन् सन्- எடுத்துக்கொண்டு, गृहे- க்ருஹத்திலேயே, वसेत्- வஸிக்கலாமே, मम आत्मज- என்னுடைய பிள்ளையை, दासं- (பரதனுக்கு) வேலைக்காரனாக, दातुं- கொடுப்பதற்கு, कामकारः- நினைப்பதும், वरं- மேலானது.

5. (ப-ரை) कैकेय्या- கைகேயியினால், रामं- ராமனை, यथेष्टतः- இஷ்டப்படி, स्थानात्-ராஜ்யத்திலிருந்து, पातयित्वा तु-தள்ளிவிட்டு, पर्वणि-பர்வ காலத்தில், आहिताग्निना- அக்னிஹோத்திரம் செய்கிறவனால், रक्षसां-இராக்கதர்களுக்கு, भागः इव- பாகம் (கொடுப்பது) போல், रामः- ராமன், रक्षसां-भागः-இராக்கதர்களின் பாகமாக, प्रदिष्टः- கொடுக்கப்பட்டான்.

6 (ப-ரை) गजराजगतिः- பெரிய மதயானைபோல் நடக்கின்றவனும், वीरः- சூரனும், महाबाहुः- பெரிய தோள்களையுடையவனும், धनुर्धरः- வில்பிடித்தவனுமான, (என் புத்திரன்) सभार्यः- பார்யையுடனும், सहलक्ष्मणः- இலக்குமணனுடனும், वनं- வநத்தை, आविशते- ப்ரவேசித்துக்கொண்டிருக்கிறான். नूनं- நிச்சயம்.

---

4. (பொ-ரை) பரதனுக்கு ராஜ்யம் கொடுக்கவேண்டியது மஹாராஜருக்கு முக்கியமான எண்ணமிருந்தபோதிலும், இந்த ராமனைக்காட்டிற்குத்துறத்தாமல் பட்டணத்திலேயே அங்குமிங்கும் பிச்சை எடுத்துக்கொண்டு க்ருஹத்திலேயே வஸித்துக்கொண்டிருக்கும்படி செய்திருக்கலாமே, அப்படிக்கில்லாமல் வநத்திற்குத்துறத்தினது எதற்காகவோ? அல்லது என் புத்திரனை பரதனுக்கு ஆள்காரனாக இருக்கும்படி அரசன் ஸம்மதித்தாலும் அது எனக்கு ரொம்பவும் இஷ்டமே, இந்த வநவாஸத்தைவிட அதுமேலானதல்லவா?

5. (பொ-ரை) பர்வகாலத்தில் ஆஹிதாக்னியானவன் நெல் உமியை இராக்கதர்களுக்கு பாகமாக கொடுப்பதுபோல், நீரும் இந்த ராமனை கைகேயியினால் இஷ்டப்படி ராஜ்யத்திலிருந்து துறத்திவைத்து இராக்கதர்களுக்கு பாகமாகக்கொடுத்துவிட்டீர்.

6. (பொ-ரை) மதயானைபோல் மதித்த நடையுடையவனும், பெரும் தோள்களையுடையவனும், அந்தத்தோள்களுக்கேற்றவில்லை கையிற்தரித்துக்கொண்டு வீரனுமான என் புத்திரன் பார்யையுடனும், இலக்குமணனுடனும், இக்காலங்களில் வநத்தில் போய்க்கொண்டிருப்பன். இது நிச்சயம்.

वने त्वदृष्टदुःखानां कैकेय्यानुमते त्वया ।
त्यक्तानां वनवासाय का न्ववस्था भविष्यति ॥ 7 ॥
ते रत्नहीनास्तरुणाः फलकाले विवासिताः ।
कथं वत्स्यन्ति कृपणाः फलमूलैः कृताशनाः ॥ 8 ॥
अपीदानीं स कालः स्यान्मम शोकक्षयः शिवः ।
सभार्यं यत्सह भ्रात्रा पश्येयमिह राघवम् ॥ 9 ॥

7. (ப-ரை) वने तु- வநத்தில், अदृष्टदुःखानां- துக்கத்தை பாராதவர்களாயும், कैकेय्याः-கைகேயியினுடைய, अनुमते-அநுமதியில், (இஷ்டத்தைச்செய்வதில்), (स्थितेन- இருக்கின்ற), त्वया- உம்மால், वनवासाय-வநத்தில் வஸிப்பதற்காக, त्यक्तानां- அனுப்பப் பட்டவர்களுமான, (அம்மூவர்களுக்கும்) का अवस्था- என்ன அவஸ்த்தையானது, भविष्यति नु- உண்டாகப்போகிறதோ?

8. (ப-ரை) रत्नहीनाः- உயர்ந்த வஸ்த்துக்களை இழந்தவர்களாய், फलकाले- பலம் அநுபவிக்கும காலத்தில், विवासिताः- காட்டிற்குத்துறத்தப்பட்ட, ते तरुणाः- யௌவனமுடைய அம்மூன்று பேர்களும், फलमूलैः- காய்கனிகளாலும், கிழங்குகளா லும், कृताशनाः- ஆஹாரம் செய்தவர்களாய், कृपणाः- மிகவும் சோகிக்கத்தகுந்தவர்க ளாய், कथं वत्स्यन्ति- எவ்விதம் (வநத்தில்), வாஸம் செய்வார்களோ?

9. (ப-ரை) यत्- எந்த காலத்தில், सभार्यं- பார்யையுடன் கூடின, राघवम्- ஸ்ரீ ராமனை, भ्रात्रा सह- தம்பியுடன்கூட, इह- இங்கு, पश्येयं- பார்ப்பேனோ, शोकक्षयः- துக் கத்தைப்போக்குகின்றதும், शिवः- மங்களகரமுமான, सः कालः- அந்தக்காலமானது, इदानीं- இப்பொழுது, मम- எனக்கு, अपि स्यात्- உண்டாகுமா.

---

7. (பொ-ரை) ஒருக்காலும் வநவாஸதுக்கத்தை அறியாதவர்களான அம் மூவர்களையும கைகேயியின் இஷ்டத்தைச் செய்யவேணுமென்று எண்ணங்கொண்ட நீர், வநவாஸம் செய்யவேண்டுமென்று காட்டிற்குத்துறத்தியபடியால் அங்கு அவர்கள் என்ன அவஸ்த்தையை அடையப்போகிறார்களோ.

8. (பொ-ரை) ஸுகானுபவம செய்யவேண்டியகாலத்தில் காட்டிற்குத் துறத்தப்பட்டு நல்ல படுக்கை நல்ல ஆஹாரம்முதலான உயர்ந்த வஸ்த்துக்களையும் இழந்த யௌவன வயதுடையவர்களுமான அம மூன்றுபேர்களும் காய் கிழங்கு களை ஆஹாரம் செய்துகொண்டு மிகவும் தீனர்களாய் வநத்தில் எவ்வாறு வஸிக்கப் போகின்றார்களோ?

9. (பொ-ரை) பார்யையுடனும், தம்பியுடனும், பதினான்குவருஷம் வநவா ஸம் செய்து திரும்பிவரப்போகிற காலமானது இன்றையதினமே எனக்கு வாக் கூடாதா? என்னுடைய சோகங்களெல்லாம் தீர்ந்து மங்களமுண்டாகுமே.

सुप्त्वैवोपस्थितौ वीरौ कदायोध्यां गमिष्यतः ।
यशस्विनी हृष्टजना सूच्छ्रितध्वजमालिनी ॥ 10 ॥
कदा प्रेक्ष्य नरव्याघ्रावरण्यात्पुनरागतौ ।
नन्दिष्यति पुरी हृष्टा समुद्र इव पर्वणि ॥ 11 ॥
कदायोध्यां महाबाहुः पुरीं वीरः प्रवेक्ष्यति
पुरस्कृत्य रथे सीतां वृषभो गोवधूमिव ॥ 12 ॥

10. (ப-ரை) (या- யாதொரு நகரமானது), यशस्विनी- கீர்த்தியடைந்ததாயும், हृष्टजना- களிப்புடன்கூடின ஜனங்களையுடையதாயும், सूच्छ्रितध्वजमालिनी- நன்றாய் உயரக்கட்டப்பட்ட த்வஜங்களின் வரிசையை உடையதாயுமிருக்கிறதோ, (तां- அந்த), अयोध्यां- அயோத்திமாநகரத்தை, वीरौ- சூரர்களான ராமலக்ஷ்மணர்களிருவரும், सुप्त्वा इव- தூங்கி (எழுந்தவர்களை) ப்போல், उपस्थितौ- நகரத்தைக்கிட்டி, कदा- எப்பொழுது, गमिष्यतः- வரப்போகின்றார்கள்.

11. (ப-ரை) अरण्यात्- வநத்திலிருந்து, पुनः आगतौ- திரும்பிவருகின்ற, नरव्याघ्रौ-புருஷோத்தமர்களை, हृष्टा-ஸந்தோஷமுடைய, पुरी-நகரமானது, प्रेक्ष्य-பார்த்து, पर्वणि- பர்வகாலத்தில், समुद्रः इव- ஸமுத்திரம் (களிப்பது) போல், कदा-எப்பொழுது, नन्दिष्यति- களிக்கப்போகின்றது.

12. (ப-ரை) महाबाहुः- பெரும் தோள்களையுடைய, वीरः- சூரனான என் பிள்ளை, वृषभः-காளையானது, गोवधूं इव- பசுமாட்டை (முன்னிட்டுக்கொண்டுவருவது) போல், रथे- தேரில், सीतां- ஸீதையை, पुरस्कृत्य- முன்னிட்டுக்கொண்டு, कदा- எப்பொழுது, अयोध्यां पुरीं- அயோத்திமாநகரத்தை, प्रवेक्ष्यति- ப்ரவேசிக்கப்போகிறான்.

10. (பொ-ரை) வீரர்களான அந்த ராமலக்ஷ்மணர்கள் தூங்கி எழுந்தவர்கள்போல் மிகவும் புகழ் உடையதாயும், ஸந்தோஷமடைந்த ஜனங்களையுடையதாயும், அழகாய் உயர்த்திக் கட்டப்பட்ட டக்கயங்களின் வரிசைகளை உடையதுமான அயோத்திமா நகரத்தைக்கிட்டி எப்பொழுதுவரப்போகிறார்களோ.

11. (பொ-ரை) வநத்திலிருந்து திரும்பிவருகின்ற அந்த புருஷோத்தமர்களைப்பார்த்து அயோத்திமா நகரத்து ஜனமானது, தேஹமெல்லாம் மயிர்க்கூச்சலெடுத்து, பர்வகாலத்தில் ஸமுத்திரம் ஆனந்தப்படுவதுபோல் எப்பொழுது ஆனந்தப்படப்போகிறது.

12. (பொ-ரை) பெருத்த தோள்களையுடைய வீரனான என் புத்திரன், காளையானது பசுவை முன்னிட்டுக்கொண்டு வருவதுபோல் தேரில் ஸீதையை முன்னிட்டுக்கொண்டு எப்பொழுது அயோத்திமா நகரத்தில் ப்ரவேசிக்கப்போகிறான்.

कदा प्राणिसहस्राणि राजमार्गे ममात्मजौ ।
लाजैरवकिरिष्यन्ति प्रविशन्तावरिंदमौ ॥ 13 ॥
प्रविशन्तौ कदायोध्यां द्रक्ष्यामि शुभकुण्डलौ ।
उदग्रायुधनिस्त्रिंशौ सशृङ्गाविव पर्वतौ ॥ 14 ॥
कदा सुमनसः कन्या द्विजातीनां फलानि च ।
प्रदिशन्त्यः पुरीं हृष्टाः करिष्यन्ति प्रदक्षिणम् ॥ 15 ॥

13. (ப-ரை) अरिंदमौ-சத்ருக்களை வெல்லுகின்றவர்களும், प्रविशन्तौ-(அயோத்திமா நகரத்தில்) ப்ரவேசிக்கின்றவர்களுமான, मम आत्मजौ- என்னுடைய பிள்ளைகளை, प्राणिसहस्राणि- ஆயிரக்கணக்கான ப்ராணிகள், राजमार्गे- ராஜவீதியில், लाजैः- நெல்பொரிகளால், कदा- எப்பொழுது, अवकिरिष्यन्ति- இறைக்கப்போகின்றார்கள்.

14. (ப-ரை) शुभकुण्डलौ- அழகான குண்டலங்களை அணிந்துகொண்டும், उदग्रायुधनिस्त्रिंशौ- உயர்ந்த வில்லுகளையும் கத்திகளையுமுடையவர்களாய், सशृङ्गौ- சிகரங்களோடுகூடிய, पर्वतौ इव- பர்வதங்கள் போன்றவர்களாய், अयोध्यां- அயோத்திமாநகரத்தை, प्रविशन्तौ- ப்ரவேசிக்கின்ற (அவ்விருவர்களை), कदा- எப்பொழுது, द्रक्ष्यामि- (நான்) பார்க்கப்போகிறேனே.

15. (ப-ரை) द्विजातीनां- ப்ராம்மணர்களுடைய, कन्याः- கன்னிகைகள், हृष्टाः (सत्यः)- ஸந்தோஷமுடையவர்களாய்க்கொண்டு, सुमनसः- புஷ்பங்களையும், फलानि च- பழங்களையும், प्रदिशन्त्यः सत्यः-கொடுத்துக்கொண்டு, कदा- எப்பொழுது, पुरीं- அயோத்திமா நகரத்தை, प्रदक्षिणम् करिष्यन्ति- ப்ரதக்ஷிணம் செய்யப்போகின்றார்கள்.

13. (பொ-ரை) சத்ருக்களை அடக்கும் மிடுக்குடைய என் பிள்ளைகள் அரண்யத்திலிருந்து அயோத்திமாநகரம் நுழையும் காலத்தில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் ராஜ வீதியில் எப்பொழுது பொரிகளால் இறைக்கப்போகின்றார்கள்.

14. (பொ-ரை) அழகான குண்டலங்களணிந்து உயர்ந்த விற்களையும், கத்திகளையுமெடுத்துக்கொண்டு, சிகரங்களையுடைய பர்வதங்கள்போல் அயோத்திமா நகரம் நுழைகின்ற என் பிள்ளைகளை எப்பொழுது நான் பார்க்கப்போகின்றேன்.

15. (பொ-ரை) ப்ராம்மண கன்னிகைகள் ஸந்தோஷத்துடன், புஷ்பங்களையும், பழங்களையும் கொடுத்துக்கொண்டு எப்பொழுது அயோத்திமாநகரத்தை ப்ரதக்ஷிணம் செய்யப்போகிறார்கள்.

कदा परिणतो बुद्ध्या वयसा चामरप्रभः ।
अभ्युपैष्यति धर्मज्ञस्त्रिवर्ष इव लालयन् ॥ 16 ॥
निःसंशयं मया मन्ये पुरा वीर कदर्यया ।
पातुकामेषु वत्सेषु मातॄणां शातिताः स्तनाः ॥ 17 ॥
साहं गौरिव सिंहेन विवत्सा वत्सला कृता ।
कैकेय्या पुरुषव्याघ्र बालवत्सेव गौर्बलात् ॥ 18 ॥

16. (ப-ரை) बुद्धया- புத்தியினால், परिणतः- முதிர்ந்தவனும், वयसा- வயதினால், अमरप्रभः च- தேவகுமாரன்போல் விளங்குகின்றவனும், धर्मज्ञः- தர்மங்களைத்தெரிந்தவனுமான, (அந்த ராமன்) त्रिवर्षः इव- மூன்று வயது குழந்தைபோல், लालयन्- (எனக்கு) சீராட்டுவதை செய்துகொண்டு, कदा- எப்பொழுது, अभि उपैष्यति- (என்னுடைய), எதிரில் வரப்போகிறான்.

17. (ப-ரை) हे वीर- சூரனான ப்ரபுவே, वत्सेषु- குழந்தைகள், पातुकामेषु- ஸ்தன்யபானம் செய்ய விரும்புமளவில், पुरा- முன்ஜன்மத்தில், कदर्यया- அல்பையான, मया- என்னால், मातॄणां- (அந்த குழந்தைகளின்) தாய்மார்களுடைய, स्तनाः- ஸ்தனங்கள், शातिताः- அறுக்கப்பட்டிருக்கும், मन्ये- என்று எண்ணுகிறேன், निः संशयं- இதில் ஸம்சயமில்லை.

18. (ப-ரை) हे पुरुषव्याघ्र- புருஷச்ரேஷ்டரே! बालवत्सा- இளங்கன்றையுடைய, गौः इव- பசுவானதுபோல், वत्सला- (குழந்தையிடத்தில்) வாத்ஸல்யமுடைய, सा अहं- அப்படிப்பட்ட நான், सिंहेन- ஸிம்மத்தினால், गौः इव- பசுவானது (கன்றையிழந்த தாய், செய்யப்பட்டது) போல், कैकेय्या- கைகேயியினால், बलात्- பலாத்காரமாக, विवत्सा- குழந்தையையிழந்தவளாக, कृता- செய்யப்பட்டேன்.

---

16. (பொ-ரை) புத்தியினால் முதிர்ந்தவனும், இருபத்தைந்துவயதுடைய தேவகுமாரனை ஒத்தவனும், தர்மங்களைத்தெரிந்தவனுமான அந்த ராமன் மூன்று வயதுகுழந்தைபோல் எனக்கு சீராட்டுவதில் ஆசையை உண்டுபண்ணிக்கொண்டு எப்பொழுது என்னெதிரில் வரப்போகின்றான்.

17. (பொ-ரை) ஹே வீரனான ப்ரபுவே! குழந்தைகள் மாதாவின் ஸ்தன்யபானம்பண்ண நினைக்கும்ஸமயத்தில் அல்பபுத்தியுடையநான் முன் ஜன்மத்தில் அந்தத் தாய்மார்களுடைய ஸ்தனங்களை அறுத்திருப்பேன், என்று நினைக்கிறேன் இதில் ஸம்சயமில்லை.

18. (பொ-ரை) இளங்கன்றுள்ள பசு கன்றிடத்தில் அன்புவைத்திருப்பது போல் புத்திரனிடத்தில் மிகவும் வாத்ஸல்யம் வைத்திருக்கிற என்னை ஸிம்மமானது பலாத்காரமாக கன்றைக்கொன்று அதன்தாயான பசுவை கன்றை இழந்ததாகச் செய்ததுபோல், கைகேயியானவள் குழந்தையை இழந்தவளாக செய்துவிட்டாள்.

वर्तते चोत्तमां वृत्तिं लक्ष्मणोऽस्मिन्सदानघः ।
दयावान्सर्वभूतेषु लाभस्तस्य महात्मनः ॥ 5 ॥
अरण्यवासे यद्दुःखं जानती वै सुखोचिता ।
अनुगच्छति वैदेही धर्मात्मानं तवात्मजम् ॥ 6 ॥

आचरिते- அனுஷ்டிக்கப்பட்டதுமான, धर्मे- தர்மத்தில், सम्यक्- நன்ருக, स्थितः सन्- நலை நின்றுகொண்டு, राज्यं- ராஜ்யத்தை, त्यक्त्वा- விட்டுவிட்டு, सत्यवादिनम्- ஸத்யத்தை சொல்லும் ஸ்வபாவமுடையவரும், महात्मानं- மஹாநுபாவருமான, पितरं- பிதாவை, साधु- நல்லவராக, कुर्वन्- செய்துகொண்டு, गतः- வனம் சென்ருனே, सः रामः- அந்த ராமன், श्रेष्ठः- எல்லாரிலும் சிறந்தவன், कदाचन- ஒருக்காலும், न शोच्यः- சோகிக்கத் தகுந்தவனுமல்ல.

5. (ப-ரை) अनघः- தோஷமில்லாதவனும், सर्वभूतेषु- எல்லா ப்ராணிகளிடத்திலும், दयावान्- கருணையுள்ளவனுமான, लक्ष्मणः- இலக்குமணன், अस्मिन्- இந்த ராமனிடத்தில், सदा- எப்பொழுதும், उत्तमां वृत्तिं- சிறந்த நடத்தையை, (கைங்கர்யத்தை என்றபடி) वर्तते- செய்துவருகிருன், महात्मनः-மஹானுபாவனுன, तस्य- அந்த இலக்குமணனுக்கு, (एषः- இது) लाभः- லாபம்.

6. (ப-ரை) सुखोचिता- ஸுகம் அனுபவிப்பதற்கே தகுந்தவளான, वैदेही- விதேஹராஜபுத்ரியானவள், अरण्यवासे- வனவாஸத்தில், यत् दुःखं- யாதொரு கஷ்டமிருக்கிறதோ, तत्- அதை, जानती वै- அறிந்துகொண்டே, धर्मात्मानं- தர்மஸ்வபாவரான, तव आत्मजं- உம்முடைய பிள்ளையை, अनुगच्छति- பின் செல்லுகின்ருள்.

நின்று, கிடைத்த ராஜ்யத்தையும் விட்டு விட்டு, மஹானுபாவனுய், ஸத்யவாதியுமான தன் பிதாவை இன்னமும் நல்லவராகச் செய்யவேணுமென்று வனம சென்றுவிட்டான், உலகத்திலெல்லாம் சிறந்தவனுன அந்த ராமனைக்குறித்து நீர் ஒருக்காலும் சோகப்படவேண்டாம்,

5. (பொ-ரை) குற்றமற்றவனும், ஸர்வப்ராணிகளிடத்திலும் கருணையுள்ளவனுமான இலக்குமணனும், இந்த ராமனுக்கு உத்தமமான தொழிலை (கைங்கர்யத்தை) செய்துவருகிருன், மஹாத்மாவான இவனுக்கு அதுபெரிதான லாபமல்லவா?

6. (பொ-ரை) விதேஹராஜபுத்திரியான ஸீதையானவள், ஸுகானுபவத்திற்கே ஏற்றவளாயிருந்தும், வனவாஸம் செய்வதினுல், அங்கு அவச்யம் நேரக்கூடிய கஷ்டங்களைத்தெரிந்து கொண்டே, தர்மஸ்வரூபியான உம்முடைய புத்திரருடன் பின் செல்லுகின்ருள்,

कीर्तिभूतां पताकां यो लोके भ्रमयति प्रभुः ।
धर्मसत्यव्रतधनः किं न प्राप्तस्तवात्मजः ॥ 7 ॥
व्यक्तं रामस्य विज्ञाय शौचं माहात्म्यमुत्तमम् ।
न गात्रमंशुभिः सूर्यः संतापयितुमर्हति ॥ 8 ॥
शिवः सर्वेषु कालेषु काननेभ्यो विनिःसृतः ।
राघवं युक्तशीतोष्णः सेविष्यति सुखोऽनिलः ॥ 9 ॥

7. (ப-ரை) यः प्रभुः- யாதொரு ப்ரபுவானவன், कीर्तिभूतां- கீர்த்தியாகிற, पताकां- கொடியை, लोके- உலகத்தில், भ्रमयति- சுழற்றுகிறானோ, धर्मसत्यव्रतधनः- தர்மத்தையும், ஸத்யத்தையும், வ்ரதமாகவும், தனமாகவும் கொண்ட, तव आत्मजः- உம்முடைய பிள்ளை, किं न प्राप्तः- எதைத்தான் அடையவில்லை.

8. (ப-ரை) रामस्य- ராமனுடைய. शौचं- சுத்தியையும், उत्तमं- உயர்ந்ததான, माहात्म्य- மஹிமையையும், विज्ञाय- அறிந்துகொண்டு, सूर्यः- ஸூர்யன், अंशुभिः- (தன்) கிரணங்களால், गात्र- (ஸ்ரீராமனுடைய) திருமேனியை, सन्तापयितुं- தபிப்பதற்கு, (சுடுவதற்கு) न अर्हति- தகுந்தவனாகமாட்டான், व्यक्तं- நிச்சயம்.

9. (ப-ரை) सर्वेषु कालेषु- எல்லா காலங்களிலும், युक्तशीतोष्णः- தகுந்ததான குளிர்ச்சியையும், சூட்டையும், உடையதாய், काननेभ्यः- காடுகளிலிருந்து, विनिःसृतः- புறப்படுகின்ற, शिवः- மங்களகரமான, सुखः- ஸுகமுமான, अनिलः- காற்று, राघवं- ஸ்ரீராமனை, सेविष्यति- ஸேவிக்கப்போகிறது.

7. (பொ-ரை) யாதொருப்ரபுவான ராமன் கீர்த்தி என்கிற கொடியை, உலகத்தில் சுழற்றுகின்றானோ, தர்மத்தையும், ஸத்யத்தையும், வ்ரதமாகவும், தனமாகவுங்கொண்ட அந்த உம்முடையபிள்ளைக்கு எந்த நன்மைதான் கிடைக்காதது. கீர்த்தியாகிற கொடியை உலகத்தில் சுழற்றுகிறதாவது:— உலகமுழுவதும்ப்ரஸித்தியை அடைந்திருத்தல்,

8. (பொ-ரை) ஸூர்யனும், ராமனுடைய சுத்தியையும், சிறந்த மஹிமையையும் தெரிந்துகொண்டு, தன்னுடைய கிரணங்களால் ஸ்ரீராமனுடைய திருமேனியில் உஷ்ணமான வெய்யில் அடிக்கவே மாட்டான், இது நிச்சயம்,

9. (பொ-ரை) வஸந்தம்முதலான எல்லாருதுக்களிலும், அந்தந்த காலத்திற்கு ஏற்பட்ட வஸ்துக்களில் ஸம்பந்தப்பட்டு, அதனால் உசிதமான சீதோஷ்ணத்தை உடையதாய், காட்டிலிருந்து புறப்படுகின்ற மங்களகரமான ஸுககரமுமானகாற்று வீசிக்கொண்டு ராமனுக்குப்பணிவிடை செய்யப்போகிறது.

शयानमनघं रात्रौ पितेवाभिपरिष्वजन् ।
रश्मिभिः संस्पृशञ्शीतैश्चन्द्रमा ह्लादयिष्यति ॥ 10 ॥
ददौ चास्त्राणि दिव्यानि यस्मै ब्रह्मा महौजसे ।
दानवेन्द्रं हतं दृष्ट्वा तिमिध्वजसुतं रणे ॥ 11 ॥
स शूरः पुरुषव्याघ्रः स्वबाहुबलमाश्रितः ।
असंत्रस्तोप्यरण्यस्थो वेश्मनीव निवत्स्यति ॥ 12 ॥

10. (ப-ரை) चन्द्रमाः- சந்திரன், अनघं- குற்றமற்றவனாய், रात्रौ-இரவில், शयानं-படுத்துக்கொண்டிருக்கிற (இந்த ராமனை) अभिपरिष्वजन्-அணைத்துக்கொண்டிருக்கிற, पिता इव- பிதாபோல், शीतैः- குளிர்ந்த, रश्मिभिः- கிரணங்களால், संस्पृशन्- தொட்டுக்கொண்டு, ह्लादयिष्यति- ஸந்தோஷப்படுத்தப்போகிறான்.

11-12. (ப-ரை) तिमिध्वजसुतं- சம்பராஸுரன் புத்திரனை, दानवेन्द्रं- ஒரு அஸுரச்ரேஷ்டனை, रणे- யுத்தத்தில், हतं-(ஸ்ரீராமனால்) கொல்லப்பட்டவனாக, दृष्ट्वा- பார்த்து, महौजसे- பெருத்த வீர்யமுடைய, यस्मै- யாதொரு ராமன் பொருட்டு, ब्रह्मा- பிரம்மாவானவர், दिव्यानि- தெய்வத்தன்மை பொருந்திய, अस्त्राणि- அஸ்த்ராங்களை, ददौ- கொடுத்தாரோ, शूरः- சூரனான, सः पुरुषव्याघ्रः- அந்த புருஷோத்தமன், स्वबाहुबल- தன் கைபலத்தை, आश्रितः- அடைந்தவனாய், अरण्यस्थः अपि- அரண்யத்திலிருந்தபோதிலும், वेश्मनि इव- க்ருஹத்தில் (இருப்பவன்) போல், असंत्रस्तः- பயமில்லாதவனாய், निवत्स्यति- வாஸம் செய்வான்.

10. (பொ-ரை) சந்திரனும், இரவில் படுத்துக்கொண்டிருக்கிற குற்றமற்ற உன்குமாரனை, பிதா அணைத்துக் கொண்டிருப்பதுபோல், குளிர்ந்த தன் கிரணங்களால் தொட்டுக்கொண்டு ஸந்தோஷப்படுத்துவான்,

11-12. (பொ-ரை) சூரனும், புருஷோத்தமனுமான அந்த ராமன், யுத்தத்தில் திமித்வஜன் என்கிற சம்பராஸுரன் புத்திரனை தாநவேந்திரனை யுத்தத்தில் ஸம்ஹரித்ததைக்கண்டு, ப்ரம்மதேவன் ஸ்ரீராமனுக்கு திவ்யாஸ்த்ராங்களை கொடுத்திருக்கிறார், அவ்விதம் மஹாப்ரபாவமுள்ள அந்த ராமன் தன்னுடைய கைபிடிக்கை அடைந்து அரண்யத்தில் வஸித்தபோதிலும் க்ருஹத்திலிருப்பவன் போல் பயமற்று வஸிப்பான்.

यस्येषुपथमासाद्य विनाशं यान्ति शत्रवः ।
कथं न पृथिवी तस्य शासने स्थातुमर्हति ॥ 13 ॥
या श्रीः शौर्यं च रामस्य या च कल्याणसत्त्वता ।
निवृत्तारण्यवासः स क्षिप्रं राज्यमवाप्स्यति ॥ 14 ॥
सूर्यस्यापि भवेत्सूर्यो ह्यग्नेरग्निः प्रभोः प्रभुः ।
श्रियः श्रीश्च भवेदग्र्या कीर्तिः कीर्त्याः क्षमाक्षमा ॥ 15 ॥
दैवतं दैवतानां च भूतानां भूतसत्तमः ।
तस्य के ह्यगुणा देवि राष्ट्रे वाप्यथ वा पुरे ॥ 16 ॥

---

13. (ப-ரை) यस्य-எவனுடைய, इषुपथं-பாணம் (வருகின்ற) வழியை, आसाद्य-அடைந்து, शत्रवः-சத்ருக்கள், विनाशं- நாசத்தை, यान्ति- அடைகின்றார்களோ, तस्य-அவனுடைய, शासने- ஆஜ்ஞையில், पृथिवी- இந்த பூமியானது, स्थातुं- நிற்பதற்கு, कथं न अर्हति- ஏன் தகாது.

14. (ப-ரை) रामस्य- ராமனுக்கு, या श्रीः- யாதொரு சரீர காந்தியோ, (यत्) शौर्यं च-யாதொரு சௌர்யமோ, या कल्याण सत्त्वता च-யாதொரு மங்களகரமான பலமும் (இருக்கிறதோ). सः- அந்த ஸ்ரீராமன், क्षिप्रं- சீக்கிரத்தில், निवृत्त अरण्यवासः-வனவாஸம் கழிந்தவனாய், राज्यं- ராஜ்யத்தை, अवाप्स्यति-அடையப்போகிறான்.

15-16. (ப-ரை) देवि- அம்மா, सूर्यस्य अपि- ஸூர்யனுக்கும், सूर्यः भवेत्-ஸூர்யனாகி இருக்கிறான், अग्नेः-அக்னிக்கும், अग्निः- அக்னியாக இருக்கிறான், प्रभोः-ப்ரபுவுக்கும், प्रभुः- ப்ரபுவாக இருக்கிறான், श्रियः- ஸம்பத்திற்கும், अग्र्या-சிரேஷ்டமான, श्रीः-

---

13. (பொ-ரை) எவனுடைய பாணம் வருகிறவழியில் அகப்பட்டுக்கொண்டு சத்துருக்கள் அழிந்துபோகிறார்களோ, அப்படிப்பட்ட இந்த ராமனுடைய ஆஜ்ஞையின்கீழ் இந்த ராஜ்யமானது ஏன் நிற்கத்தகாது.

14. (பொ-ரை) ஸ்ரீராமனுக்கு, ஸர்வலக்ஷணங்களோடுகூடிய சரீரத்தின் காந்தியும், எல்லோரையும் ஜயிக்கும் வல்லமையும், எல்லோராலும் புகழப்படுகிற சிறந்த சரீரபலமும் இருக்கிறபடியால், அவன் சீக்கிரத்தில் வனவாஸம்கழிந்து ராஜ்யம் ஆளப்போகிறான்.

15-16. (பொ-ரை) அம்மா கௌஸல்யாதேவியே! உம்முடையபிள்ளை, ஸகல லோகத்திற்கும் ப்ரகாசத்தைக்கொடுக்கின்ற ஸூர்யனுக்கும் ப்ரகாசத்தைக்கொடுக்கின்றவன், ஸகல வஸ்துக்களையும் தஹிக்கின்ற அக்னியையும் தஹிக்கின்றவன், ஸர்வப்ராணிகளையும் ஆளுகின்ற ப்ரம்மாவுக்கும் ஈச்வரன், எல்லோருக்கும் மேன்மையைக்கொடுக்கின்ற செல்வத்திற்கும் மேன்மையைக்கொடுக்கின்றவன், கீர்த்திக்-

पृथिव्या सह वैदेह्या श्रिया च पुरुषर्षभः ।
क्षिप्रं तिसृभिरेताभिः स ह रामोऽभिषेक्ष्यति ॥ 17 ॥
दुःखजं विसृजन्त्यास्रं निष्क्रामन्तमुदीक्ष्य यम् ।
अयोध्यायां जनाः सर्वे शोकवेगसमाहताः ॥ 18 ॥

---

ஸம்பத்தாகவிருக்கிறான், कीर्त्याः-கீர்த்திக்கும், कीर्तिः-கீர்த்தியாகவிருக்கிறான், क्षमाक्षमा-(क्षमायाः)- பொறுமைக்கும், क्षमा- பொறுமையாயிருக்கிறான், देवतानां- தேவதைகளுக்கும், दैवतं- தெய்வமாகவிருக்கிறான், भूतानां- ஸர்வப்ராணிகளுக்கும், भूतसत्तमः- சிறந்த ப்ராணியாகவிருக்கிறான், तस्य- அப்படிப்பட்ட ராமனுக்கு, अगुणाः- தடையாகின்றவர்கள், राष्ट्रे वा- தேசத்திலேயோ, अथ- அல்லது, पुरे वा- பட்டணத்திலேயோ, के हि- எவர்களிருக்கிறார்கள்.

17-18. (ப-ரை) निष्क्रामन्तं- (நகரத்திலிருந்து) புறப்படுகிற, यम्- யாதொருவனை, उदीक्ष्य- பார்த்து, अयोध्यायां- அயோத்திமா நகரத்திலுள்ள, जनाः सर्वे- ஜனங்களெல்லோரும், शोकवेगसमाहताः सन्तः- துக்கத்தின் வேகத்தினால் நன்றாய் அடிபட்டவர்களாய்க்கொண்டு, दुःखजं- துக்கத்தினாலுண்டான, आस्रं- கண்ணீரை, विसृजन्ति- விட்டுக்கொண்டிருக்கிறார்களோ, पुरुषर्षभः- புருஷோத்தமனான, सः रामः- அந்த ஸ்ரீ ராமன், पृथिव्या- பூமி, वैदेह्या- ஸீதை, श्रिया च- ஜயலக்ஷ்மி, एताभिः तिसृभिः- என்னும் இம்மூவர்களுடன், सह-கூட, क्षिप्रं-சீக்கிரமாக, अभिषेक्ष्यति ह- பட்டாபிஷேகம் செய்துகொள்ளப்போகிறான், ஸந்தோஷம்.

---

கும் மேன்மையைக்கொடுக்கிறவன். எல்லாவற்றையும பொருத்துக்கொள்ளுகிற பூமிக்கும், அந்த குணத்தைககொடுத்தவன், (பொறுமையென்கிற குணத்திற்கும உயர்வைக்கொடுத்தவன்) தேவர்களுக்கும் தேவனானவன், அதாவது (மனிதர்களுடைய ஸகல கார்யத்தையும தேவர்கள் முடித்துக்கொடுப்பதுபோல், தேவர்களுடைய ஸகல கார்யத்தையும் முடித்துக்கொடுக்கிறவன்.) ஸர்வ பூதங்களுககுள் சிரேஷ்டமான பூதம், அதாவது (பூத என்கின்ற சப்தத்தினால் ஸத்தை (இருப்பை) சொல்லுகிறது, ஸர்வப்ராணிகளுடைய ஸத்தையும் இவனதீனமாயிருக்கிறதென்றபடி.) இவ்விதம் ஸகல குணங்களும் நிறைந்த அந்த ராமனுக்கு தேசத்திலாவது, நகரத்திலாவது தடங்கல் செய்கின்றவர்கள்யார்? (ஒருவருமில்லையென்றபடி.)

17-18. (பொ-ரை) யாதொருவன் அயோத்திமா நகரத்தைவிட்டு, வநத்திற்குப்புறப்படும் காலத்தில், அந்நகரத்திலுள்ள ஸகலஜனங்களும் அவனைப்பார்த்து சோகவேகத்தினால் மிகவும் அடிபட்டு, துக்கத்தினால் கண்களில் நீரைப்பெருக்குகின்றதுகளோ, அந்த புருஷோத்தமனான ஸ்ரீராமன், பூமி, ஸீதை, ஜயலக்ஷ்மி என்னும் இம்மூவர்களுடன் சீக்கிரமாக பட்டாபிஷேகம் செய்துகொள்ளப் போகிறான், நீர் பார்த்து ஆனந்தப்படப்போகிறீர்.

कुशचीरधरं देवं गच्छन्तमपराजितम् ।
सीतेवानुगता लक्ष्मीस्तस्य किं नाम दुर्लभम् ॥ 19 ॥
धनुर्ग्रहवरो यस्य बाणखड्गास्त्रभृत्स्वयम् ।
लक्ष्मणो व्रजति ह्यग्रे तस्य किं नाम दुर्लभम् ॥ 20 ॥
निवृत्तवनवासं तं द्रष्टासि पुनरागतम् ।
जहि शोकं च मोहं च देवि सत्यं ब्रवीमि ते ॥ 21 ॥

19. (ப-ரை) कुशचीरधर- மரவுரியை தரித்துக்கொண்டும், देव- மிகவும் விளங்குகின்றவனும், अपराजितम्- வெல்லமுடியாதவனையும், गच्छन्तं- போகின்ற ராமனை, लक्ष्मीः- ராஜ்யலக்ஷ்மியானவள், सीता इव- ஸீதைபோல், अनुगता- பின் செல்லுகின்றாள், तस्य- அவனுக்கு, दुर्लभम्- கிடைக்காதது, किं नाम- எது.

20. (ப-ரை) धनुर्ग्रहवरः- வில்லாளிகளுக்குள் ச்ரேஷ்டனான, लक्ष्मणः- இலக்குமணன், स्वयम्- தானாகவே, बाणखड्गास्त्रभृत्-பாணங்களையும, கத்திகளையும், அஸ்த்ரங்களையும் தரித்துக்கொண்டு. यस्य- யாதொருவனுடைய, अग्रे-முன்னே, व्रजति हि-செல்லுகிறானே, तस्य- அவனுக்கு, दुर्लभम्- கிடைக்காதது, किं नाम- என்ன.

21. (ப-ரை) हे देवि- அம்மா கௌஸல்யே, निवृत्तवनवासं- வநவாஸம் கழித்தவனாய், पुनः आगतम्- திரும்பி வருகின்ற, तं- அந்த ராமனை, द्रष्टासि- நீர் பார்க்கப்போகிறீர், शोक च- துக்கத்தையும், मोह च- மயக்கத்தையும், जहि- விட்டுவிடும், ते- உமக்கு, सत्यं- ஸத்யமாய், ब्रवीमि- (நான்) சொல்லுகிறேன்.

19. (பொ-ரை) யாதொரு ராமன் மரவுரிகளை தரித்தும் அதனால்மிகவும் விளங்கிக்கொண்டு, ஒருவராலும் வெல்லமுடியாதவனாக வநம் போகும்பொழுது இந்த ராஜ்யலக்ஷ்மியும் ஸீதைபோல் அவனுடன் பின் சென்றாள் அல்லவா, அப்படிப்பட்டவனுக்கு கிடைக்காதது என்ன.

20. (பொ-ரை) யாதொரு ராமன் வநம்போகும்பொழுது வில்லாளிகளிற் சிறந்தவனான இலக்குமணனும், பாணம், கத்தி, அஸ்த்ரம் இவைகளை தானே தூக்கிக்கொண்டு முன்னே போகிறானே, அந்த ராமனுக்குக்கிடைக்காதது என்ன இருக்கிறது,
அதாவது:— ஒரு குறைவும் இல்லை என்றபடி.

21. (பொ-ரை) அம்மா! வன வாஸம் கழிந்து திரும்பிவருகின்ற உம்முடைய பிள்ளையை நீர் பார்க்கப்போகிறீர், இந்த வ்யஸநத்தையும் மோஹத்தையும் விட்டு விடும், உமக்குநான் ஸத்யமாகச்சொல்லுகிறேன்

शिरसा चरणावेतौ वन्दमानमनिन्दिते ।
पुनर्द्रक्ष्यसि कल्याणि पुत्रं चन्द्रमिवोदितम् ॥ 22 ॥
पुनः प्रविष्टं दृष्ट्वा तमभिषिक्तं महाश्रियम् ।
समुत्स्रक्ष्यसि नेत्राभ्यां क्षिप्रमानन्दजं पयः ॥ 23 ॥
मा शोको देवि दुःखं वा न रामे दृश्यतेऽशिवम् ।
क्षिप्रं द्रक्ष्यसि पुत्रं त्वं ससीतं सहलक्ष्मणम् ॥ 24 ॥

---

22. (ப-ரை) हे अनिन्दिते- பழிப்பில்லாதவரே! हे कल्याणि- மங்களமுடையவரே, उदितम्-உதயமாகின்ற, चन्द्रं इव-சந்திரனைப்போல், एतौ चरणौ- இந்த (உம்) பாதங்களை, शिरसा- தலையினால், वन्दमानं- வணங்குகின்ற, पुत्रं- புத்திரனை, पुनः- திரும்பியும், द्रक्ष्यसि- (நீர்) பார்க்கப்போகிறீர்.

23. (ப-ரை) पुनः- திரும்பி, प्रविष्टं- நகரத்தில் ப்ரவேசித்து, अभिषिक्तं- பட்டாபிஷேகம் செய்யப்பட்டு, महाश्रियम्- பெரும் சோபையுடையவனை, तं- அந்த ராமனை, दृष्ट्वा- கண்டு, नेत्राभ्यां- கண்களிலிருந்து, आनन्दजं- ஆனந்தத்தினாலுண்டான, पयः- ஜலத்தை, क्षिप्रं- சீக்கிரமாக, समुत्स्रक्ष्यसि- விடப்போகிறீர்.

24. (ப-ரை) हे देवि- தேவியே, शोकः मा- சோகம் வேண்டாம், दुःखं वा- துக்கமும், मा- வேண்டாம், रामे- ராமனிடத்தில், अशिवम्- அசுபமும், न दृश्यते- காணப்படவில்லை, त्वं- நீர், ससीतं- ஸீதையுடன் கூடியும், सहलक्ष्मणम्- இலக்குமணனுடன் கூடியும், पुत्रं- (வருகின்ற) புத்திரனை, क्षिप्रं- சீக்கிரமாக, द्रक्ष्यसि- பார்க்கப்போகிறீர்.

22. (பொ-ரை) பழிப்பில்லாதவரே! மங்களமுடையவரே! பூர்ணசந்திரன் உதிப்பதுபோல் வந்து உம்முடைய திருவடிகளில் வணங்குகின்ற புத்திரனை நீர் மறுபடியும் பார்க்கப்போகின்றீர்.

23. (பொ-ரை) வநத்திலிருந்து திரும்பிவந்து பட்டாபிஷேகம்செய்து கொண்டு மஹத்தான ப்ரகாசமுடையவனை, அந்த ராமனைப்பார்த்து ஆனந்தத்தினாலுண்டான ஜலத்தை கண்களிலிருந்து நீர் சீக்கிரமாக விடப்போகிறீர்.

24. (பொ-ரை) தேவி! நீர் இவ்விதம் கதறவும்வேண்டாம், மனவருத்தப் படவும்வேண்டாம், ராமனிடத்தில் ஒருவிதமான அசுபமுமில்லை, சீக்கிரத்தில், ஸீதையுடனும், இலக்குமணனுடன் கூடிவருகிற, உம்முடைய புத்திரனை நீர் பார்க்கப்போகிறீர்.

त्वयाऽशेषो जनश्चैव समाश्वास्यो यदाऽनघे ।
किमिदानीमिमं देवि करोषि हृदि विक्लबम् ॥ 25 ॥
नार्हा त्वं शोचितुं देवि यस्यास्ते राघवः सुतः ।
न हि रामात्परो लोके विद्यते सत्पथे स्थितः ॥ 26 ॥
अभिवादयमानं तं दृष्ट्वा ससुहृदं सुतम् ।
मुदाश्रु मोक्ष्यसे क्षिप्रं मेघलेखेव वार्षिकी ॥ 27 ॥

25. (ப-ரை) हे अनघे- देवि- குற்றமில்லாத தேவியே, यदा- எப்பொழுது, अशेषः- ஸமஸ்தமான, जनः च एव- ஜனமும், त्वया- உம்மால், समाश्वास्यः- ஸமாதானப் படுத்தத்தகுந்ததோ, इदानीं-இப்பொழுது, हृदि-மனதில், इमं-இந்த, विक्लबम्-அதைர்யத் தை, करोषि- செய்கிறீர், किं- இது என்ன!.

26. (ப-ரை) हे देवि- அம்மா! यस्याः ते- யாதொரு உமக்கு, राघवः- ராகவன், सुतः-பிள்ளையாகப்பிறந்திருக்கிறானோ, (सा) त्व-அப்படிப்பட்ட நீர், शोचितुं-துக்கப்படுவ தற்கு, न अर्हा- தகுந்தவரல்ல, लोके- உலகத்தில், रामात्- ராமனைக்காட்டிலும், परः- வே றொருவன், सत्पथे- நல்வழியில், स्थितः- இருப்பவன், न विद्यते हि- இல்லையல்லவா!

27. (ப-ரை) ससुहृद- தோழர்களுடன் கூடினவனும், अभिवादयमानं- அபிவாத னம் செய்கின்ற, तं सुतं- அந்தப்புத்திரனை, दृष्ट्वा- பார்த்து, वार्षिकी- வருஷாகாலத் திலுண்டான, मेघलेखा-इव- மேகபங்க்திபோல், मुदा- ஸந்தோஷத்தினால், अश्रु- கண் ஜலத்தை, क्षिप्रं- சீக்கிரமாக, मोक्ष्यसे- விடப்போகிறீர்.

25. (பொ-ரை) குற்றமில்லாத தேவி! இந்த ஜனமுழுவதிற்கும் நீர் ஸமா தானம் சொல்லவேண்டியிருக்க, நீரே இப்பொழுதுமனதில் அதைர்யப்படுகிறீரே, என்ன இது!

26. (பொ-ரை) அம்மா! ராமனைப்புத்திரனாகப்பெற்ற நீர், இனி சோகிப்பது உசிதமல்ல, ஏனென்றால்? ராமனைத்தவிற, வேறொருவன் இவ்வுலகத்தில் நல்வழியி லிருப்பவன் கிடையாது.

27. (பொ-ரை) தோழர்களுடன் உம்மிடம் வந்து நமஸ்காரம்செய்யப்போகி ன்ற, உம்முடைய புத்திரனைப்பார்த்து, மழைகாலத்து மேகவரிசையானது நீரைப் பெருக்குவதுபோல், நீரும் சீக்கிரமாக ஆனந்தக்கண்ணீரைப் பெருக்கப்போகிறீர்.

पुत्रस्ते वरदः क्षिप्रमयोध्यां पुनरागतः ।
पाणिभ्यां मृदुपीनाभ्यां चरणौ पीडयिष्यति ॥ 28 ॥
अभिवाद्य नमस्यन्तं शूरं ससुहृदं सुतम् ।
मुदास्रैः प्रोक्ष्यसि पुनर्मेघराजिरिवाचलम् ॥ 29 ॥
आश्वासयन्ती विविधैश्च वाक्यैः वाक्योपचारे कुशलाऽनवद्या ।
रामस्य तां मातरमेवमुक्त्वा देवी सुमित्रा विरराम रामा ॥ 30 ॥

28. (ப-ரை) वरदः- வேண்டிய வரன்களைக்கொடுக்கத்தகுந்த, ते पुत्रः- உம்முடைய புத்திரன், क्षिप्रं- சீக்கிரமாக, अयोध्यां- அயோத்திமா நகரை, पुनः आगतः- திரும்பிவந்தவனாய், मृदुपीनाभ्यां- ம்ருதுவாய் பெருத்துமிருக்கிற, पाणिभ्यां- கைகளால், चरणौ- (உம்முடைய) பாதங்களை, पीडयिष्यति- பிடிக்கப்போகிறான்.

29. (ப-ரை) शूरं- சூரனையும், ससुहृदं- தோழர்களோடுகூடியும், अभिवाद्य- (உம்மை) அபிவாதனம் செய்து, नमस्यन्तं-நமஸ்காரம் செய்யப்போகின்ற, सुतं- பிள்ளையை, मेघराजिः- மேகங்களின் வரிசையானது, अचलम् इव- பர்வதத்தை (ஜலத்தினால் தெளிப்பது) போல், पुनः- மறுபடியும், मुदास्रैः- ஆனந்தக்கண்ணீர்களால், प्रोक्ष्यसि-ப்ரோக்ஷணம் செய்யப்போகிறீர்.

30. (ப-ரை) वाक्योपचारे- வார்த்தையினால் உபசாரம் செய்வதில், कुशला- ஸமர்த்தையும், अनवद्या- குற்றமற்றவளும், रामा- அழகுள்ளவளுமான, सुमित्रा देवी- ஸுமித்ராதேவியானவள், विविधैः-பலவிதங்களான, वाक्यैः-வாக்யங்களால், आश्वासयन्ती सती- ஸமாதானம் செய்துகொண்டு, रामस्य- ராமனுடைய, तां मातरं-அந்தத்தாயாரைக் குறித்து, एवं उक्त्वा- இவ்விதம் சொல்லிவிட்டு, विरराम- ஓய்ந்தாள்.

---

28. (பொ-ரை) ஸகல ஜனங்களுக்கும், வேண்டிய வரன்களைக்கொடுக்கத் தகுந்த, உம்முடைய பிள்ளை, சீக்கிரத்தில், வநத்திலிருந்து திரும்பி அயோத்திமா நகரம் வந்து ம்ருதுக்களாயும், பெருத்துமிருக்கிற தமமுடைய கைகளால், உம்முடைய பாதங்களை, பிடித்து நமஸ்கரிக்கப்போகிறான்.

29. (பொ-ரை) சூரனான உம்முடைய பிள்ளை, ஸ்நேகிதர்களுடன் சூழ்ந்துகொண்டு, உம்மை அபிவாதனம்செய்து நமஸ்கரிக்கும்பொழுது, மேகபங்க்தியானது பர்வதத்தில் நீரை தெளிப்பதுபோல், ஆனந்த ஜலத்தை, அவன்மேல் தெளிக்கப்போகின்றீர்.

30. (பொ-ரை) வார்த்தை சொல்லி ஸமாதானம் செய்வதில், கெட்டிக்காரியாயும், குற்றமற்றவளும், அழகுள்ளவளுமான ஸுமித்ராதேவி, பலவிதமான வார்த்தைகளைச்சொல்லி, ராமன் தாயாரான கௌஸல்யையை ஸமாதானம் செய்து மேல் ஒன்றும் சொல்லாமல் நின்று விட்டாள்.

निशम्य तल्लक्ष्मणमातृवाक्यं रामस्य मातुर्नरदेवपत्न्याः ।
सद्यः शरीरे विननाश शोकः शरद्गतो मेघ इवाल्पतोयः ॥ 31 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
चतुश्चत्वारिंशः सर्गः ॥ 44 ॥

31. (ப-ரை) तत्- அந்த, लक्ष्मणमातृवाक्यं- இலக்குமணன் தாயார் வார்த்தையை, निशम्य- கேட்டு, नरदेवपत्न्याः- தசரத மஹாராஜரின் பத்னியான, रामस्य- मातुः-ஸ்ரீராமன் தாயாருடைய, शरीरे- சரீரத்தில், शोकः- சோகமானது, अल्पतोयः- ஸ்வல்ப நீரையுடைய, शरद्गतः- சரத்காலத்திலிருக்கின்ற, मेघः इव- மேகம்போல், सद्यः- உடனே, विननाश- நாசமடைந்துவிட்டது.

---

31. (பொ-ரை) இலக்குமணன் மாதாவான ஸுமித்ராதேவிசொன்ன அந்த வார்த்தையைக்கேட்டு, ராஜபத்தினியாயும், ஸ்ரீராமன் தாயாருமான கௌஸல்யாதேவியினுடைய சரீரத்திலிருந்த சோகமானது, ஸ்வல்ப நீரோடு கூடிய சரத்காலத்து மேகம் ஒழிந்து விடுவதுபோல், உடனே ஒழிந்துவிட்டது.



पञ्चचत्वारिंशः सर्गः ॥ 45 ॥

अनुरक्ता महात्मानं रामं सत्यपराक्रमम् ।
अनुजग्मुः प्रयान्तं तं वनवासाय मानवाः ॥ 1 ॥
निवर्तितेऽपि च बलात्सुहृद्वर्गे च राजनि ।
नैव ते संन्यवर्तन्त रामस्यानुगता रथम् ॥ 2 ॥
अयोध्यानिलयानां हि पुरुषाणां महायशाः ।
बभूव गुणसंपन्नः पूर्णचन्द्र इव प्रियः ॥ 3 ॥

1. (ப-ரை) महात्यमानं- பெரிய மனதுடையவரும், सत्यराक्रमम्- உண்மையான பராக்ரமமுடையவரும், वनवासाय- வநத்தில் வஸிப்பதற்காக, प्रयान्त- புறப்பட்டிருக்கின்ற, तं रामं- அந்த ஸ்ரீராமனை, मानवाः- மனிதர்கள், अनुरक्ताः सन्तः- அன்புடையவர்களாய்க்கொண்டு, अनुजग्मुः- பின் சென்றார்கள்.

2. (ப-ரை) सुहृद्वर्गे- ஸ்நேஹித ஜனத்தின் கூட்டமும், राजनि च- அரசனும், बलात्- பலாத்காரமாக, निवर्तिते अपिच- திருப்பப்பட்டிருந்த காலத்திலும், रामस्य- ராமனுடைய, रथम्- தேரை, अनुगताः- பின் செல்லுகின்ற, ते- அந்த ஜனங்கள், न एव- संन्यवर्तन्त- திரும்பவே இல்லை.

3. (ப-ரை) गुणसपन्नः குணங்கள் நிறைந்தவரான, महायशाः- அதிக கீர்த்தியையுடையவருமான அந்த ராமன், अयोध्यानिलयानां-அயோத்தியில் வஸிக்கின்ற, पुरुषाणां- மனிதர்களுக்கு, पूर्णचन्द्रः इव- பூர்ண சந்திரன் போல், प्रियः-ப்ரியமாக, बभूव- இருந்தார்.

1. (பொ-ரை) மஹா புத்திசாலியாய் அழிவில்லாத பராக்ரம முடையவனும் வநத்தில் வஸிப்பதற்குப் புறப்படுகின்றவருமான அந்த ராமனை நகரத்து ஜனங்களெல்லோரும் அன்போடு பின் தொடர்ந்தார்கள்.

2. (பொ-ரை) தம்முடைய ரதத்தோடு வருகின்ற, மஹாராஜனையும், அவருடைய ஸுஹ்ருத்தான அந்தப்புரஸ்த்ரீஜனத்தையும் நகரத்துஜனத்தையும ஸ்ரீராமன் பலாத்காரமாக திரும்பிப்போகச் சொல்லியும், அரசனும், அந்தப்புர ஸ்த்ரீஜனமும் திரும்பி நகரம்போனார்களே ஒழிய, மற்ற ஜனங்கள் ஒருவரும் திரும்பிப்போகாமல் ஸ்ரீராமனுடைய தேரைத்தொடர்ந்தே வந்துகொண்டிருக்கிறார்கள்.

3. (பொ-ரை) பெரிய கீர்த்தியுடையவரும், எல்லாகுணங்களும் நிறைந்தவருமான அந்த ராமன், அயோத்திமாநகரத்திலுள்ள ஜனங்களுக்கு பூர்ணசந்திரன் போல் மிகவும் ப்ரியமாயிருந்தார்.

स याच्यमानः काकुत्स्थः स्वाभिः प्रकृतिभिस्तदा ।
कुर्वाणः पितरं सत्यं वनमेवान्वपद्यत ॥ 4 ॥

अवेक्षमाणः सस्नेहं चक्षुषा प्रपिबन्निव ।
उवाच रामः स्नेहेन ताः प्रजाः स्वाः प्रजा इव ॥ 5 ॥

या प्रीतिर्बहुमानश्च मय्ययोध्यानिवासिनाम् ।
मत्प्रियार्थं विशेषेण भरते सा निवेश्यताम् ॥ 6 ॥

4. (ப-ரை) तदा- அப்பொழுது, काकुत्स्थः- ஸ்ரீராமன், स्वाभिः प्रकृतिभिः- தம்முடைய ஜனங்களால், याच्यमानः- திரும்பிவரவேண்டுமென்று வேண்டப்பட்டும், पितरं- பிதாவை, सत्य- ஸத்யமுள்ளவராக, कुर्वाणः- செய்வதற்காக, वनं एव- வனத்தையே, अन्वपद्यत- அடைந்தார்.

5. (ப-ரை) रामः- ஸ்ரீராமன், चक्षुषा- கண்ணால், प्रपिबन् इव- குடித்துவிடுகிறவர்போல், ताः प्रजाः- அந்த ஜனங்களை, स्वाः प्रजाः इव- தம் குழந்தைகளைப்போல், सस्नेहं- ஸ்நேஹத்துடன், अवेक्षमाणः- பார்த்துக்கொண்டு, स्नेहेन- ப்ரீதியோடு, उवाच- சொன்னார்.

6. (ப-ரை) अयोध्यानिवासिनाम्- அயோத்தியில் வஸிக்கின்றவர்களான, (युष्माकं- உங்களுக்கு,) मयि- என்னிடத்தில், या प्रीतिः- யாதொரு ப்ரீதியும், (यः) बहुमानः च- (யாதொரு) கௌரவமும், (अस्ति- இருக்கிறதோ,) सा- அது, मत्प्रियार्थं- என்னுடைய ப்ரீதிக்காக, विशेषेण- விசேஷமாக, भरते- பரதனிடத்தில், निवेश्यताम्- வைக்கப்படலாம்.

4. (பொ-ரை) அப்பொழுது, அந்த காகுத்ஸ்தன், தம்முடைய ஜனங்களால், "திரும்பிவரவேண்டும், திரும்பிவரவேண்டு" மென்று, ப்ரார்த்திக்கப்பட்டும், தம் பிதா செய்த ப்ரதிஜ்ஞையை ஸத்தியமாகச்செய்வதற்காக வனத்திற்கே சென்றார்.

5. (பொ-ரை) ராமன், கண்ணால் குடித்து விடுகிறவர்போல் அந்த ஜனங்களை தன்னுடைய ஔரஸ புத்திரர்களைப்போல், அன்போடு பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

6. (பொ-ரை) அயோத்திமா நகரத்தில் வஸிக்கின்ற நீங்கள், என்னிடத்தில் வைத்திருக்கின்ற அன்பையும், கௌரவத்தையும் என்னுடைய ப்ரீதிக்கு வேண்டி, விசேஷமாக பரதனிடத்தில் வையுங்கள்.

स हि कल्याणचारित्रः कैकेय्यानन्दवर्धनः ।
करिष्यति यथावद्वः प्रियाणि च हितानि च ॥ 7 ॥
ज्ञानवृद्धो वयोबालो मृदुर्वीर्यगुणान्वितः ।
अनुरूपः स वो भर्ता भविष्यति भयापहः ॥ 8 ॥
स हि राजगुणैर्युक्तो युवराजः समीक्षितः ।
अपिचापि मया शिष्टैः कार्यं वो भर्तृशासनम् ॥ 9 ॥

7. (ப-ரை) हि- ஏனெனின்றால், कल्याणचारित्रः- சுபமான நடத்தையுள்ளவனும், कैकेय्यानन्दवर्धनः- கைகேயிக்கு ஆனந்தத்தை விளைக்கிறவனுமான, सः- அந்த பரதன், वः- உங்களுக்கு, प्रियाणि च- ப்ரியங்களையும், हितानि च- ஹிதங்களையும், यथावत्- க்ரமப்படி, करिष्यति- செய்வான்.

8. (ப-ரை) वयोबालः (अपि)- வயதினால் சிறுவனாயிருந்தாலும், ज्ञानवृद्धः- ஜ்ஞானத்தினால் முதிர்ந்தவனும், मृदुः (अपि)- ம்ருதுவாயிருந்தாலும், वीर्यगुणान्वितः- சௌர்யமென்கிற குணத்தோடுகூடினவனுமான, सः- அந்த பரதன், वः- உங்களுக்கு, अनुरूपः भर्ता- தகுந்த அரசனாகவும், भयापहः- பயத்தைப் போக்குகின்றவனாகவும், भविष्यति- ஆகப்போகிறான்

9. (ப-ரை) हि- ஏனெனின்றால், सः- அந்த பரதன், राजगुणैः- ராஜகுணங்களோடு, युक्तः- கூடியவன், वः- உங்களுக்கு, युवराजः- இளவரசனாகவும், (राज्ञा- அரசனால்) समीक्षितः- பார்க்கப்பட்டிருக்கிறான், अपि च- பின்னும், मया अपि- என்னாலும், शिष्टैः- மற்றவர்களாலும், भर्तृशासनम्- அரசன் உத்திரவு, कार्यं- செய்யத்தகுந்தது.

7 (பொ-ரை) கைகேயி தேவிக்கு ஆனந்தத்தை விளைக்கிற அந்த பரதன், சுபமான நடத்தையுள்ளவன். ஆதலால் அவன் உங்களுக்கு இம்மைக்கும், மறுமைக்கும், ப்ரியத்தையும, ஹிதத்தையும், க்ரமப்படி செய்வான்.

8. (பொ-ரை) அந்த பரதன், வயதினால் சிறுவனாயிருந்தாலும், அறிவினால் முதிர்ந்தவன், ம்ருதுவாயிருந்தாலும் வீர்ய குணத்தோடு கூடினவன், ஆகையால் அவன் உங்களுக்குத் தகுந்தநாயகனாகவும பயத்தைப்போக்குகின்றவனாகவும் ஆவான்.

9. (பொ-ரை) ஏனெனின்றால், அந்த பரதன் அரசர்களுக்குரிய குணங்கள் நிறைந்தவன், அதுவுமல்லாமல் நம் மஹாராஜரும் அவனை உங்களுக்கு இளவரசனாக தீர்மானம் செய்திருக்கிறார், இன்னமும் நானும் மற்றவர்களும் அரசனுடைய உத்திரவுப்படி நடக்கவேண்டும்.

न च तप्येद्यथा चासौ वनवासं गते मयि ।
महाराजस्तथा कार्यो मम प्रियचिकीर्षया ॥ 10 ॥
यथा यथा दाशरथिर्धर्म एव स्थितोऽभवत् ।
तथा तथा प्रकृतयो रामं पतिमकामयन् ॥ 11 ॥
बाष्पेण पिहितं दीनं रामः सौमित्रिणा सह ।
चकर्षेव गुणैर्बध्वा जनं पुरनिवासिनम् ॥ 12 ॥

10. (ப-ரை) मयि- நான், वनवासं- வநவாஸத்தை, गते- (सति) அடைந்தவள வில், असौ महाराज:- இந்த தசரதமஹாராஜர், यथा च- எப்படி, न च तप्येत्- பரிதாப மடையாமலிருப்பாரோ, तथा- அப்படி, मम- எனக்கு, प्रियचिकीर्षया- ப்ரியத்தைச் செய்யவேண்டுமென்கிற ஆசையினால், कार्य:- செய்யத்தகுந்தவர்.

11. (ப-ரை) दाशरथि:- தசரத குமாரர், यथा यथा- எவ்வளவுக்கெவ்வளவு, धर्मे एव- தர்மத்திலேயே, स्थित:- நிலைநின்றவராக, अभवत्- இருந்தாரோ, तथा तथा- அவ்வளவுக்கவ்வளவு, प्रकृतय:- ஜனங்கள், राम- ராமனை, पतिं- ராஜாவாக, अकामयन्- ஆசைப் பட்டார்கள்.

12 (ப-ரை) बाष्पेण- கண்ணீரால், पिहित- மறைக்கப்பட்டு, दीनं- மிகவும் தீன மான, पुरनिवासिनम्- நகரத்தில் வஸிக்கின்ற, जनं- அந்த ஜனத்தை, राम:- ஸ்ரீராமன், सौमित्रिणा सह- இலக்குமணனுடன் கூட, गुणै:- (தம்முடைய) குணங்களாகிற கயிறு களினால், बद्ध्वा- கட்டி, चकर्ष इव- இழுத்துக்கொண்டுபோனார்போலும்.

10. (பொ-ரை) நான் வநவாஸஞ் சென்றவளவில், நம் மஹாராஜர் பரிதா பமடையாமலிருக்கும்படி நீங்கள் எனக்குப்ரியம செய்யவேண்டுமென்கிற எண்ணத் தினால் செயயவேண்டும்.

11. (பொ-ரை) தசரத குமாரனான ஸ்ரீராமன் எவ்வளவுக் கெவ்வளவு பித் ருவசன பரிபாலனமென்கிற தர்மத்திலேயே நிலையாக நின்றாரோ அவ்வளவுக் கவ்வ ளவு ஜனங்கள் எல்லோரும அவரையே, அரசனாகவிருக்கவேணடுமென்று விரும்பி னார்கள்.

ஆதியில் அரசன் ஜேஷ்டபுத்திரனை உம்மையே எங்களைரக்ஷிப்பதற்கு யுவரா ஜராக ஏற்படுத்தியிருந்தார். ஆகையால், இவ்விதம் நீரும் நாங்களும் ஒப்புக்கொண்டு நடக்கவேண்டியதல்லவா, என்று அர்த்தம்.

12. (பொ-ரை) மிகவும் தீனமாய் கண்களில் நீரைப்பெருக்கிக்கொண்டி ருக்கின்ற அயோத்திமா நகரவாஸியான அந்த ஜனத்தை ராமன், இலக்குமண னுடன்கூட தம்முடைய ஸௌசீல்ய, வாத்ஸல்யம் முதலான குணங்களாகிற கயிறுகளால் கட்டி இழுத்துக்கொண்டு போனார் போல.

द्विजातींस्तु पदातींस्तान्रामश्चारित्रवत्सलः ।
न शशाक घृणाचक्षुः परिमोक्तुं रथेन सः ॥ 19 ॥
गच्छन्तमेव तं दृष्ट्वा रामं संभ्रान्तचेतसः ।
ऊचुः परमसंतप्ता रामं वाक्यमिदं द्विजाः ॥ 20 ॥
ब्राह्मण्यं कृत्स्नमेतत्त्वां ब्रह्मण्यमनुगच्छति ।
द्विजस्कन्धाधिरूढास्त्वामग्नयोऽप्यनुयान्त्यमी ॥ 21 ॥

19. (ப-ரை) चारित्रवत्सलः- நன்னடக்கையில், மிக அன்புள்ளவரும், घृणाचक्षुः- கருணையுடன் கூடிய த்ருஷ்டியுடையவருமான, सः रामः- அந்த ஸ்ரீராமன், पदातीन्- கால் நடையாய் வருகின்ற, तान् द्विजातीन् तु- அந்த ப்ராம்மணர்களை, रथेन- தேருடன், (தேரினுல்) परिमोक्तुं- விடுவதற்கு. न शशाक- ஸமர்த்தராகவில்லை.

20. (ப-ரை) गच्छन्तं एव- போய்க்கொண்டே இருக்கின்ற, तं रामं- அந்த ராமனை, दृष्ट्वा- பார்த்து, संभ्रान्तचेतसः- கலங்கின மனதையுடையவர்களாய், परमसंतप्ताः- மிகவும் ஸந்தாபத்தை அடைந்தவர்களாய், द्विजाः- ப்ராம்மணர்கள், रामं- ராமனைப் பார்த்து, इदं वाक्यं- இந்த வார்த்தையை, ऊचुः- சொன்னர்கள்.

21. (ப-ரை) एतत्- இந்த, ब्राह्मण्य सर्वं- ப்ராம்மணக்கூட்டம் முழுவதும், ब्रह्मण्यं-ப்ராம்மணர்களிடத்தில் அநுகூலராயிருக்கிற, त्वां- உம்மை, अनुगच्छति- தொடர்ந்துவருகிறது, अमी- இந்த, अग्नयः अपि- அக்நிகளும், द्विजस्कन्धाधिरूढाः (सन्तः)- ப்ராம்மணர்களின் தோளில் ஏறிக்கொண்டு, त्वां- உம்மை, अनुयान्ति- தொடர்ந்துவருகின்றன.

19. (பொ-ரை) நன்னடக்கையில் மிக அன்புள்ளவரும் ப்ராம்மணர்களிடத்தில் விசேஷமாக கருணைகூர்ந்தவருமான அந்த ராமன், பிதாவான மஹாராஜரையும் தாய்மார்களையும் தேரிலிருந்தபடியே திரும்பிப்போக கேட்டுக்கொண்டபடி, கால்நடையாக வருகின்ற ப்ராம்மணோத்தமர்களை தேரிலிருந்தபடியே திரும்பிப்போகச் சொல்லத்துணியவில்லை.

20. (பொ-ரை) அந்த ப்ராம்மணர்கள், ராமன் திரும்பி வருவதற்காக அநேக காரணங்களை எடுத்துக்காட்டியும், பித்ருவசன பரிபாலனமென்கிற தர்மத்தையே நடத்த வேணுமென்கிற எண்ணத்தினுல் திரும்பாமல் நடந்துகொண்டே இருக்கிற அவரைப்பார்த்து, மனம் ப்ரமித்து மிக ஸந்தாபத்துடன் இந்த வார்த்தை சொன்னர்கள்.

21. (பொ-ரை) இந்த ப்ராம்மணக்கூட்டம் முழுவதும், ப்ராம்மணர்கள விஷயத்தில் உபகாரம் செய்கின்றவரான உம்மைத்தொடர்ந்து வருகின்றன. அக்நியும், அரணிக்கட்டையில் ஆவாஹனம் செய்யப்பட்டு, ப்ராம்மணர்களின் தோளின் மீது இருந்து உம்மைத்தொடர்ந்து வருகின்றன.

वाजपेयसमुत्थानि छत्राण्येतानि पश्य नः ।
पृष्ठतोऽनुप्रयातानि मेघानिव जलात्यये ॥ 22 ॥
अनवाप्तातपत्रस्य रश्मिसंतापितस्य ते ।
एभिश्छायां करिष्यामः स्वैश्छत्रैर्वाजपेयिकैः ॥ 23 ॥
या हि नः सततं बुद्धिर्वेदमन्त्रानुसारिणी ।
त्वत्कृते सा कृता वत्स वनवासानुसारिणी ॥ 24 ॥

---

22. (ப-ரை) जलात्यये- சரத்காலத்தில், मेघान् इव- மேகங்களைப்போல், (வெண்மையாயும்,) पृष्ठतः- (உம்முடைய) பின்னே, अनुप्रयातानि- தொடர்ந்துவருகின்றதும், वाजपेयसमुत्थानि- வாஜபேய யாகத்தினால் ஸம்பாதிக்கப்பட்ட, एतानि- இந்த, नः छत्रानि- எங்கள் குடைகளை, पश्य- பாரும்.

23. (ப-ரை) अनवाप्तातपत्रस्य- குடையில்லாதவராய், रश्मिसंतापितस्य- ஸூர்ய கிரணத்தினால் தபித்தாகக்கொண்டிருக்கிற, ते- உமக்கு, वाजपेयिकैः- வாஜபேயத்தினால் ஸம்பாதிக்கப்பட்ட, एभिः- இந்த, स्वैः छत्रैः- எங்கள் ஸொந்தமான குடைகளால், छायां- நிழலை, करिष्यामः- (நாங்கள்) செய்யப்போகிறோம்.

24. (ப-ரை) हे वत्स- குழந்தாய் ராமா! या- யாதொரு, नः- எங்களுடைய, बुद्धिः- புத்தியானது, सततं- எப்பொழுதும், वेदमन्त्रानुसारिणी- வேதமந்திரங்களை அனுஸரித்திருந்ததோ, सा- அந்த புத்தியானது, त्वत्कृते-உன் நிமித்தமாக, वनवासानुसारिणी- வனவாஸத்தை அனுஸரித்ததாக, कृता- செய்யப்பட்டது.

22. (பொ-ரை) சரத்காலத்து மேகம்போல் வெளுத்தும், வாஜபேய யாகம் செய்து ஸம்பாதிக்கப்பட்டதுமான எங்கள் குடைகள் பின்னாலே உம்மைத்தொடர்ந்து வருகின்றன. அவைகளைப்பாரும்.

23. (பொ-ரை) குடையில்லாமல் வெய்யிலால் தபிக்கப்பட்டிருக்கிற உமக்கு, நாங்கள் வாஜபேய யாகம் பண்ணி ஸம்பாதித்த இந்த எங்கள் குடைகளால் நிழலைச் செய்கிறோம்.

24. (பொ-ரை) எப்பொழுதும் வேத மந்திரங்களை சொல்லுவதிலேயே ஊக்கமுள்ளதான எங்களுடைய புத்தியானது, இப்பொழுது உமக்காக வனவாஸம் செய்வதை அனுஸரித்துவிட்டது.

हृदयेष्वेव तिष्ठन्ति वेदा ये नः परं धनम् ।
वत्स्यन्त्यपि गृहेष्वेव दाराश्चारित्ररक्षिताः ॥ 25 ॥
न पुनर्निश्चयः कार्यस्त्वद्गतौ सुकृता मतिः ।
त्वयि धर्मव्यपेक्षे तु किं स्याद्धर्ममपेक्षितुम् ॥ 26 ॥
याचितो नो निवर्तस्व हंसशुक्लशिरोरुहैः ।
शिरोभिर्निभृताचार महीपतनपांसुलैः ॥ 27 ॥

25. (ப-ரை) नः- எங்களுக்கு, परं धनम्- உயர்ந்த தநமான, ये वेदाः- யாதொரு வேதங்களுண்டோ, (तै॰ அவைகள்,) हृदयेषु एव- (எங்கள்) மனதிலேயே, तिष्ठन्ति- இருக்கின்றன, दाराः अपि- பத்னிகளும், चारित्ररक्षिताः सन्तः- பதிவ்ரதா தர்மத்தினால் காக்கப்பட்டவர்களாய், गृहेषु एव- க்ருஹங்களிலேயே, वत्स्यन्ति- வஸிப்பார்கள்.

26. (ப-ரை) त्वद्गतौ- நீர் திரும்பிவருவதில், मतिः- எங்கள் புத்தியானது, सुकृता- நன்றாகச்செய்யப்பட்டிருக்கிறது, पुनः- மறுபடியும், निश्चयः- (வனம்போகிற) நிச்சயமானது, न कार्यः- (உன்னால்) செய்யத்தகுந்ததல்ல, त्वयि- நீர், धर्मव्यपेक्षे-तु- தர்மத்தில் ஆசையுள்ளவராயிருக்கும் காலத்தில், अस्माभिः- எங்களால், धर्मं- தர்மத்தை, अपेक्षितुं- பரிபாலிப்பதற்கு, किं स्यात्- எதுகாரணமாக ஆகும். அதாவது நீர் வநம் போய் விட்டால் நாங்கள் தர்மத்தை விட்டுவிடவேண்டியதுதான் என்றபடி.

27. (ப-ரை) हे निभृताचार- கர்மானுஷ்டானத்தில் நிலைநின்றவனே? हंसशुक्लशिरोरुहैः- ஹம்ஸம்போல் வெளுத்த தலைமயிர்களையுடையதும், महीपतनपांसुलैः- பூமியில் விழுந்ததினால் புழுதி படிந்துமிருக்கிற, नः शिरोभिः- எங்கள் தலைகளால், याचितः- ப்ரார்த்திக்கப்பட்டவனுய்க்கொண்டு, निवर्तस्व- திரும்பிவிடும்.

---

25. (பொ-ரை) எங்களுக்கு சிறந்த செல்வமான வேதங்கள் எங்கள் மனதிலேயே இருக்கின்றன, எங்கள் பத்நிகளும், தங்களுடைய பதிவ்ரதாதர்மத்தினால் காப்பாற்றப்பட்டு, க்ருஹத்திலேயே வஸிப்பார்கள்,

26. (பொ-ரை) உமமை வனம்போகாமல் திருப்பவேணுமென்று நாங்கள் நிச்சயம் செய்திருக்கிறோம, ஆகையால் நீர் வனம்போகவேணுமென்கிற நிச்சயத்தை மறுபடியும் செய்யவேண்டாம், நீர் பித்ருவசனபரிபாலன ரூபமான தர்மத்தில் கவனமுள்ளவராயிருக்கும் காலத்தில், நாங்கள் என்னகாரணத்தினால் தர்மத்தை பரிபாலனம் செய்யமுடியும.

27. (பொ-ரை) ஸதாசாரத்தில் நின்றும் நழுவாத ராமனே! ஹம்ஸம்போல்வெளுத்த தலைமயிர்களையுடையதும், ஸாஷ்டாங்கப்ரணாமம் செய்யுங்காலத்தில் பூமியில்பட்டு புழுதிபடிந்ததுமான எங்கள் தலைகளால், நாங்கள் உம்மை வேண்டிக்கொள்ளுகிறோம, நீர் திரும்பவேண்டும்.

बहूनां वितता यज्ञा द्विजानां य इहागताः ।
तेषां समाप्तिरायत्ता तव वत्स निवर्तने ॥ 28 ॥
भक्तिमन्ति हि भूतानि जङ्गमाजङ्गमानि च ।
याचमानेषु राम त्वं भक्तिं भक्तेषु दर्शय ॥ 29 ॥
अनुगन्तुमशक्तास्त्वां मूलैरुद्धतवेगिनः ।
उन्नता वायुवेगेन विक्रोशन्तीव पादपाः ॥ 30 ॥

28. (ப-ரை) हे वत्स!- குழந்தாய், ये- யாதொரு ப்ராம்மணர்கள், इह-இங்கு, आगताः- வந்திருக்கிறார்களோ, बहूनां तेषां द्विजानां- அந்த ப்ராம்மணர்கள் எல்லோருடையவும், ये यज्ञाः- யாதொரு யாகங்கள், वितताः- ஆரம்பிக்கப்பட்டிருக்கிறதோ, तेषां- அவைகளுடைய, समाप्तिः- முடிவானது, तव-உம்முடைய, निवर्तने-திரும்புவதில், आयत्ता- அதீனமாயிருக்கிறது.

29. (ப-ரை) हे राम- ராமனே! जङ्गम अजङ्गमानि-அசைகின்றதும் அசையாதவைகளுமான, भूतानि- ப்ராணிகள், भक्तिमन्ति- (உம்மிடத்தில்) பக்தியுள்ளவைகளாயிருக்கின்றன. याचमानेषु- வேண்டிக்கொள்ளுகின்ற, भक्तेषु- பக்தர்களிடத்தில், भक्तिं- பக்தியை, त्वं- நீர், दर्शय- ஸபலமாக்கும்.

30. (ப-ரை) पादपाः- வ்ருக்ஷங்கள், मूलैः- வேர்களால், त्वां- உம்மை, अनुगन्तुं- தொடர்ந்து வருவதற்கு, अशक्ताः- சக்தியற்றவைகளாயும், उद्धतवेगिनः- தடைப்பட்ட வேகமுடையவைகளாயும், वायुवेगेन- காற்றின் வேகத்தினால், उन्नताः- உயர்ந்தும், विक्रोशन्ति इव- கதறுகின்றனபோல.

---

28. (பொ-ரை) குழந்தாய் ராமா! இங்கு வந்திருக்கின்ற ப்ராம்மணர்கள் எல்லோரும் யாகம் செய்வதற்காகவேண்டி ஸாமக்ரிகளை சேர்த்திருக்கிறார்கள், நீ திரும்பிவந்தால்தான் அந்த யாகங்களை க்ரமமாகச்செய்துமுடிக்கலாம், நீ திரும்பி வராதபக்ஷத்தில் அந்த யாகங்கள் முழுவதும் முடியாமல் நின்றுபோய்விடும்,

29. (பொ-ரை) ராமா! பசு பக்ஷி முதலான ஜங்கமப்ராணிகளும், மரம் செடி முதலான ஸ்தாவரப்ராணிகளும், உம்மிடத்தில் விசேஷமான பக்தியுடன் நீர் திரும்பிவரவேணுமென்று ப்ரார்த்திக்கின்றதுகள், ஆகையால் பக்தர்களான அந்த ப்ராணிகளுடைய ப்ரார்த்தனையை ஸபலமாகச் செய்யவேண்டும்.

30. (பொ-ரை) வ்ருக்ஷங்கள், பட்டணத்துஜனங்கள் ராமனுடன் செல்லுகின்றதை பார்த்து தாங்களும் கூடவே செல்லவேணுமென்று எண்ணம்கொண்டு கிளம்பவே, வேர் த்ருடமாக ஊன்றியிருக்கிறபடியால் நகரமுடியாமல் வேகம்தடைப்பட்டு பட்டணத்துஜனங்களைப்போல் ராமனுடன் போகிற பாக்யம் நமக்குக்கிடைக்கவில்லையே என்று வாயுவேகத்தினால் உயர்ந்த கிளைகளாகிற கைகளைத்தூக்கிக்கொண்டு பெருங்கூச்சலிடுகின்றனபோல்.

निश्चेष्टाहारसंचारा वृक्षैकस्थानविष्ठिताः ।
पक्षिणोऽपि प्रयाचन्ते सर्वभूतानुकम्पिनम् ॥ 31 ॥
एवं विक्रोशतां तेषां द्विजातीनां निवर्तने ।
ददृशे तमसा तत्र वारयन्तीव राघवम् ॥ 32 ॥
ततः सुमन्त्रोऽपि रथाद्विमुच्य श्रान्तान्हयान्संपरिवर्त्य शीघ्रम् ।
पीतोदकांस्तोयपरिप्लुताङ्गा नचारयद्वै तमसाविदूरे ॥ 33 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
पञ्चचत्वारिंशः सर्गः ॥ 45 ॥

---

31. (ப-ரை) पक्षिणः अपि- பக்ஷிகளும், निश्चेष्टाहारसंचाराः- அசைதல், ஆஹாரம், ஸஞ்சாரம் இவைகளில்லாதவைகளாய், वृक्षैकस्थानविष्ठिताः- தாங்கள் வாஸம் செய்யும் மரங்களிலேயே இருந்துகொண்டு, सर्वभूतानुकम्पिनम्- எல்லா ப்ராணிகளிடத்திலும் கருணை உள்ளவரான, (त्वां- உம்மை,) प्रयाचन्ते- யாசிக்கின்றதுகள்.

32. (ப-ரை) एवं- இவ்விதம், तेषां द्विजातीनां- அந்த ப்ராம்மணர்கள், निवर्तने- ராமனைத்திருப்பும் விஷயத்தில், विक्रोशतां (सतां)- கதறிக்கொண்டிருக்கும் காலத்தில், राघवम्- ராமனை, वारयन्ती इव- தடுக்கின்றதுபோல், तमसा- தமஸாநதி, तत्र- அங்கு, ददृशे- காணப்பட்டது.

33. (ப-ரை) ततः- பிறகு, सुमन्त्रः अपि- ஸுமந்த்ரரும், श्रान्तान्- இளைப்படைந்த, हयान्- குதிரைகளை, शीघ्रं- சீக்ரமாக, रथात्- தேரிலிருந்து, विमुच्य- விடுவித்து, संपरिवर्त्य- (புழுதியில்) புறளப்படுத்தி, पीतोदकान्- தண்ணீர் குடித்ததாயும், तोयपरिप्लुताङ्गान्- ஜலத்தினால் நனைந்த சரீரங்களை உடையதாகவும் (செய்து), तमसाविदूरे वै- தமஸா நதியின் ஸமீபத்திலேயே, अचारयत्- மேய்த்தார்.

---

31. (பொ-ரை) பக்ஷிகளும, அசையாமலும், ஆஹாரம்' கொள்ளாமலும், அங்குமிங்கும் ஸஞ்சரிக்காமலும' தாங்கள் வாஸம் செய்கின்ற மரங்களிலேயே இருந்துகொண்டு, எல்லாப்ராணிகளிடத்திலும் க்ருபையுள்ளவரான உம்மை, "நீர் திரும்பிவாரும்" என்றுப்ரார்த்திக்கின்றன.

32. (பொ-ரை) இவ்விதம் ஸ்ரீராமன் திரும்பிவருவதற்காக அந்த ப்ராம்மணர்களெல்லோரும கதறிக்கொண்டிருக்கும்பொழுது அங்கு தமஸாநதியும், ராமனை தடுக்கின்றதுபோல் எதிரில் காணப்பட்டது.

33. (பொ-ரை) பிறகு ஸுமந்த்ரரும், வழிநடந்து இளைப்பாயிருக்கிற குதிரைகளை தேரிலிருந்து அவிழ்த்து, தரையில் புறள விட்டு தண்ணீர் காட்டி தண்ணீரினால் கழுவி தமஸா நதியின் ஸமீபத்திலேயே மேய்த்தார்.

षट्चत्वारिंशः सर्गः ॥ 46 ॥

ततस्तु तमसातीरं रम्यमाश्रित्य राघवः ।
सीतामुद्वीक्ष्य सौमित्रिमिदं वचनमब्रवीत् ॥ 1 ॥
इयमद्य निशा पूर्वा सौमित्रे प्रहिता वनम् ।
वनवासस्य भद्रं ते स नोत्कण्ठितुमर्हसि ॥ 2 ॥
पश्य शून्यान्यरण्यानि रुदन्तीव समन्ततः ।
यथानिलयमायद्भिर्निलीनानि मृगद्विजैः ॥ 3 ॥

1. (ப-ரை) ततः- பிறகு, राघवः- ராகவன், रम्यं- அழகான, तमसातीरं- तु- தமஸா நதியின் கரையை, आश्रित्य- அடைந்து, सीतां- ஸீதையை, उद्वीक्ष्य- உத்தேசித்து, सौमित्रिं- இலக்குமணனைப் (பார்த்து), इदं वचनं- இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

2. (ப-ரை) हे सौमित्रे- இலக்குமணா! वनवासस्य- வனவாஸத்தினுடைய, पूर्वा- முதலாவதான, अद्य- இன்று, इयं निशा- இந்த இரவானது, वनं प्रहिता- வனத்தில் வந்துவிட்டது, अतः- ஆதலால், सः त्वं- அந்த நீ, उत्कण्ठितुं- ஆசைப்பட, न अर्हसि- தகுந்தவனல்ல.

3. (ப-ரை) शून्यानि- ஒளி இழந்தவைகளும், यथानिलयं- அவையவைகள் குடியிருக்குமிடத்தைக்குறித்து, आयद्भिः- வந்துகொண்டிருக்கிற, मृगद्विजैः- மிருகங்களாலும், பட்சிகளாலும், निलीनानि- சூழப்பட்டுமிருக்கிற, अरण्यानि- அரண்யங்களை, पश्य- பார், समन्ततः- நாற்புறங்களிலும், रुदन्ति इव- அழுகின்றனபோலிருக்கின்றன.

1. (பொ-ரை) பிறகு ஸ்ரீராகவன், அழகான தமஸா நதியின் கரைக்குச் சென்று ஸீதையை உத்தேசித்து, இலக்குமணனைப்பார்த்து இந்த வார்த்தையைச் சொன்னார்.

2. (பொ-ரை) அப்பா இலக்குமணா! நாம் வனவாஸம்செய்து கழிக்கவேண்டிய இரவுகளில் முதலாவதான இன்று இந்த இரவு வனத்தில் வந்துவிட்டது. ஆதலால், நீ க்ருஹத்திலுண்டான, ஸௌக்யம் முதலானவைகளில் ஆசைவைத்து, அவைகளையே நினைத்துக்கொண்டிருக்கக்கூடாது.

3. (பொ-ரை) இலக்குமணா! ஒளி அழிந்தும் தங்கள் தங்கள் இருப்பிடம் வந்துசேருகின்ற மிருகங்களாலும், பட்சிகளாலும் சூழப்பட்டுமிருக்கின்ற, இந்த ஆரண்யங்கள், அந்தஸமயம் உண்டான பட்சிகளின் மிருகங்களின் சப்தங்களினால், நாற்புறங்களிலும் அழுகின்றதுபோல் இருக்கின்றன, பார்.

अद्यायोध्या तु नगरी राजधानी पितुर्मम ।
सस्त्रीपुंसा गतानस्माञ्शोचिष्यति न संशयः ॥ 4 ॥
अनुरक्ता हि मनुजा राजानं बहुभिर्गुणैः ।
त्वां च मां च नरव्याघ्र शत्रुघ्नभरतौ तथा ॥ 5 ॥
पितरं चानुशोचामि मातरं च यशस्विनीम् ।
अपि वान्धौ भवेतां तु रुदन्तौ तावभीक्ष्णशः ॥ 6 ॥

4. (ப-ரை) अद्य- இப்பொழுது, सस्त्रीपुंसा- ஸ்த்ரீகளுடனும், புருஷர்களுடனும் கூடியதும், मम पितुः- என் தந்தையினுடைய, राजधानी- ப்ரதான நகரமுமான, अयोध्या नगरी तु- அயோத்திமா நகரமானது, गतान्- (அரண்யம்) சென்றிருக்கிற, अस्मान्- நம்மைக் (குறித்து) शोचिष्यति- வருந்தப்படப்போகிறது, न संशयः- ஸந்தேஹமில்லை.

5. (ப-ரை) हि- ஏனென்றால், हे नरव्याघ्र- புருஷோத்தமா! मनुजाः- (அயோத்திமா நகரத்து) மனிதர்கள், बहुभिः- அநேகங்களான, गुणैः- குணங்களினால், राजानं- அரசனையும், त्वां च- உன்னையும், मां च- என்னையும், तथा- அவ்விதமே, शत्रुघ्नभरतौ- சத்ருக்னனையும், பரதனையும், (குறித்து) अनुरक्ताः- ப்ரீதியுள்ளவர்களாக இருக்கிறார்.

6. (ப-ரை) तौ- அவர்கள், अभीक्ष्णशः- அடிக்கடி, रुदन्तौ- அழுதுகொண்டு, अन्धौ- குருடர்களாக, भवेतां वा अपि किं- ஆய் விடுவார்களோ என்று, पितरं च- பிதாவையும், यशस्विनीम्- கீர்த்தியுடையவளான, मातरं च- மாதாவையும் குறித்து, अनुशोचामि- வருந்தப்படுகிறேன்.

4. (பொ-ரை) இன்று நம் பிதாவின் ராஜதானியான அயோத்திமா நகரத்திலுள்ள, ஆண், பெண் அடங்கலும், வனத்திற்கு வந்திருக்கிற நம்மைப்பற்றி வ்யஸனப்பட்டுக்கொண்டிருக்கும், இது நிச்சயம், ஸந்தேகமேயில்லை.

5. (பொ-ரை) புருஷோத்தமா! நம் நகரத்திலுள்ளவர்களெல்லோருமே, நம்மரசனிடத்திலும், உன்னிடத்திலும், என்னிடத்திலும், சத்ருக்னனிடத்திலும், பரதனிடத்திலும், அநேக குணங்களிருக்கிறபடியால, அதிக அன்புவைத்திருக்கிறார்களல்லவா?

6. (பொ-ரை) இலக்ஷ்மணா! நம் மாதா பிதாக்கள் நம்மிடத்தில் அதிகப்ரியம் வைத்தபடியால், நம்மையே நினைத்து நினைத்து அழுது, அதனால் குருடர்களாகி விடுவார்களோவென்று, நம் பிதாவையும், மிகவும் புகழ்படைத்த நம் மாதாவையும் நினைத்து வருந்தப்படுகிறேன்.

भरतः खलु धर्मात्मा पितरं मातरं च मे ।
धर्मार्थकामसहितैः वाक्यैराश्वासयिष्यति ॥ 7 ॥

भरतस्यानृशंसत्वं विचिन्त्याहं पुनः पुनः ।
नानुशोचामि पितरं मातरं चापि लक्ष्मण ॥ 8 ॥

त्वया कार्यं नरव्याघ्र मामनुव्रजता कृतम् ।
अन्वेष्टव्या हि वैदेह्या रक्षणार्थे सहायता ॥ 9 ॥

7. (ப-ரை) भरतः- பரதன், धर्मात्मा खलु- தர்ம புத்தியுடையவனல்லவா?, (सः- அவன்), पितरं- பிதாவையும், मे- என்னுடைய, मातरं च- தாயாரையும், धर्मार्थकामसहितैः- தர்மம், அர்த்தம், காமம் இவைகளோடு கூடிய, वाक्यैः- வார்த்தைகளால், आश्वासयिष्यति- ஸமாதானப்படுத்துவான்.

8. (ப-ரை) हे लक्ष्मण- அப்பா இலக்குமணா! अहं- நான், भरतस्य- பரதனுடைய, अनृशंसत्व- கொடுமையில்லாதிருப்பதை, पुनः पुनः- அடிக்கடி, विचिन्त्य- நினைத்து, पितरं- பிதாவையும், मातरं च अपि- மாதாவையும் (குறித்து), न अनुशोचामि- வருத்தப்படுகிறதில்லை.

9. (ப-ரை) हे नरव्याघ्र- புருஷ ச்ரேஷ்டனே! मां- என்னை, अनुव्रजता- தொடர்ந்து வந்திருக்கிற, त्वया- உன்னால், कार्यं- செய்யத்தகுந்த காரியமானது, कृतं- செய்யப்பட்டது, हि- ஏனென்றால், वैदेह्याः- ஸீதையினுடைய, रक्षणार्थे- ரக்ஷிக்கும் விஷயத்தில் सहायता- துணையானது, अन्वेष्टव्या- தேடத்தகுந்தது.

7. (பொ-ரை) ஆனாலும், பரதன் தர்ம புத்தியுள்ளவனாதலால் நம் மாதா பிதாக்களுக்கு தர்மமான வார்த்தைகளைச்சொல்லி பொருள்களையும் கொடுத்து, இஷ்டமான வஸ்துக்களையும் கொடுத்து தேறுதல் செய்வான்.

8. (பொ-ரை) இலக்குமணா! நான் பரதனுடைய ம்ருதுவான ஸ்வபாவத்தை அடிக்கடி நினைத்து நம் மாதா பிதாக்களைப்பற்றி துக்கப்படுகிறதுமில்லை.

9. (பொ-ரை) புருஷோத்தமா! என்னுடன் நீயும் வனம் வந்தபடியால் நீ அவசியம் செய்யவேண்டிய காரியம் செய்துவிட்டாய், ஏனென்றால், ஸீதையைக் காப்பாற்றுவதற்கு ஒத்தாசை அவசியம் தேடவேண்டியதல்லவா.

अद्भिरेव तु सौमित्रे वत्स्याम्यद्य निशामिमाम् ।
एतद्धि रोचते मह्यं वन्येऽपि विविधे सति ॥ 10 ॥

एवमुक्त्वा तु सौमित्रिं सुमन्त्रमपि राघवः ।
अप्रमत्तस्त्वमश्वेषु भव सौम्येत्युवाच ह ॥ 11 ॥

सोऽश्वान्सुमन्त्रः संयम्य सूर्येऽस्तं समुपागते ।
प्रभूतयवसान्कृत्वा बभूव प्रत्यनन्तरः ॥ 12 ॥

10. हे सौमित्रे- இலக்குமணா! अद्य- இன்று, इमां निशां- இந்த இரவில், अद्भिः एव तु- தீர்த்தங்களினாலேயே, वत्स्यामि- வாஸம் செய்யப்போகிறேன், विविधे- பலவித மான, वन्ये- காட்டிலுள்ள காய் கிழங்கு முதலியது, सति अपि- இருந்த போதிலும், एतत् हि- இதுவேதான், मह्यं- என் பொருட்டு (எனக்கு), रोचते- பிடிக்கிறது.

11. (ப-ரை) राघवः- ராமன், सौमित्रिं- இலக்குமணனைப்பார்த்து, एवं उक्त्वा तु- இவ்விதம் சொல்லிவிட்டு, सुमन्त्रं अपि- ஸுமந்த்ரரைக்குறித்தும், सौम्य- வாரீர் ஸுமந்த்ரரே, त्वं- நீர், अश्वेषु- குதிரைகள் விஷயத்தில், अप्रमत्तः- கவனமுள்ளவராக, भव- இரும், इति- என்று, उवाच ह- சொன்னார்.

12. (ப-ரை) सूर्ये- ஸூர்யன், अस्तं- அஸ்தமானத்தை, समुपागते सति- அடைந்தவளவில், सः सुमन्त्रः- அந்த ஸுமந்த்ரர், अश्वान्- குதிரைகளை, संयम्य- கட்டி, प्रभूतयवसान्- யதேஷ்டமான புற்களை உடையவைகளாய், कृत्वा- செய்துவிட்டு, प्रत्यनन्तरः- மேலே செய்யவேண்டிய கார்யத்தில் கவனமுள்ளவராக, बभूव- இருந்தார். (प्रत्यनन्तरः- बभूव- ஸமீபத்தில் வந்திருந்தார் என்றும் சொல்லலாம்).

10. (பொ-ரை) இலக்குமணா! இன்று இந்தஇரவு வனவாஸத்தின் ஆரம்ப தினமாகையாலும், பலவிதமான கந்த மூல பல முதலிய காட்டுப்பதார்த்தங்கள் கிடைக்கக் கூடியதாயிருந்தும், தீர்த்தத்தைமாத்திரம் அருந்திவிட்டு உபவாஸம் இருந்து விடலாமென்று எனக்குத்தோற்றுகிறது.

11. (பொ-ரை) ராகவன், இலக்குமணனைப்பார்த்து இவ்வாறு சொல்லி விட்டு, ஸுமந்த்ரரைக்குறித்து, ஸுமந்த்ரரே! குதிரைகளிடம் ஜாக்கிரதையாக விரும், என்று சென்னார்.

12. (பொ-ரை) அந்த ஸுமந்த்ரரும் ஸூர்யாஸ்தமனமானதும் குதிரைகளை கட்டி தீனிகளையும் போட்டு விட்டு, மேலே செய்யவேண்டிய கார்யத்தில் கவனமுள் ளவராயிருந்தார்.

उपास्य तु शिवां सन्ध्यां दृष्ट्वा रात्रिमुपस्थिताम् ।
रामस्य शयनं चक्रे सूतः सौमित्रिणा सह ॥ 13 ॥
तां शय्यां तमसातीरे वीक्ष्य वृक्षदलैः कृताम् ।
रामः सौमित्रिणा सार्धं सभार्यः संविवेश ह ॥ 14 ॥
सभार्यं संप्रसुप्तं तं भ्रातरं वीक्ष्य लक्ष्मणः ।
कथयामास सूताय रामस्य विविधान्गुणान् ॥ 15 ॥

13. (ப-ரை) शिवां- மங்களமான, सन्ध्यां- ஸாயம் ஸந்தியை, उपास्य- உபாஸனம் செய்துவிட்டு, रात्रिं- இரவை, उपस्थिताम्- ஸமீபித்துவிட்டதாக, दृष्ट्वा- பார்த்து, सूतः- ஸாரதியானவர், सौमित्रिणा सह- இலக்குமணனுடன்கூட, रामस्य- ஸ்ரீராமனுக்கு, शयनं- படுக்கையை, चक्रे- செய்தார்.

14. (ப-ரை) तमसातीरे- தமஸா நதியின் கரையில், वृक्षदलैः- மரங்களின் இலைகளால், सौमित्रिणा सार्धं- இலக்குமணனுடன்கூட, कृताम्- (ஸுமந்த்ரரால்) செய்யப்பட்ட, तां शय्यां- அந்தப்படுக்கையை, वीक्ष्य- பார்த்து, रामः- ஸ்ரீராமன், सभार्यः सन्- பார்யையுடன்கூட, सविवेश- சயனித்துக்கொண்டார், ह- கஷ்டம்.

15. (ப-ரை) सभार्यं- பார்யையுடன்கூட, संप्रसुप्तं- நன்றாகத்தூங்கிக்கொண்டிருக்கிற, तं भ्रातरं- அந்த தமயனை, वीक्ष्य- பார்த்து, लक्ष्मणः- இலக்குமணன், सूताय- ஸாரதியின் பொருட்டு, रामस्य- ஸ்ரீராமனுடைய, विविधान् गुणान्- பலவிதங்களான குணங்களை, कथयामास- சொல்லிக்கொண்டிருந்தார்.

13. (பொ-ரை) பிறகு ஸுமந்த்ரர் மங்களமான அந்த ஸாயம்ஸந்தியை உபாஸித்துவிட்டு, (ஸந்தியாவந்தனம் செய்துவிட்டு) இரவு நெருங்கினதைத்தெரிந்துகொண்டு, இலக்குமணனுடன் கூட ஸ்ரீராமனுக்கு படுத்துக்கொள்ளும் இடத்தை ஏற்படுத்தினார்.

14. (பொ-ரை) தமஸா நதியின் கரையில், மரங்களின் இலைகளைப்பரித்து இலக்குமணனும், ஸாரதியும் செய்த, அந்தப்படுக்கையை ஸ்ரீராமன் பார்த்து, பத்னியுடன் அதில் படுத்துக்கொண்டார்.

15. (பொ-ரை) பிறகு இலக்குமணன், பார்யையுடன் கூட அந்தப்படுக்கையில் படுத்துக்கொண்டிருக்கும் ப்ராதாவைப்பார்த்து ஸ்ரீராமனுடைய பலவிதமான குணங்களை ஸாரதியான ஸுமந்த்ரரிடம் சொல்லிக்கொண்டிருந்தார்.

जाग्रतो ह्येव तां रात्रिं सौमित्रेरुदितो रविः ।
सूतस्य तमसातीरे रामस्य ब्रुवतो गुणान् ॥ 16 ॥
गोकुलाकुलतीरायास्तमसाया विदूरतः ।
अवसत्तत्र तां रात्रिं रामः प्रकृतिभिः सह ॥ 17 ॥
उत्थाय तु महातेजाः प्रकृतीस्ता निशाम्य च ।
अब्रवीद्भ्रातरं रामो लक्ष्मणं पुण्यलक्षणम् ॥ 18 ॥

16. (ப-ரை) तमसातीरे- தமஸாநதியின் கரையில், तां रात्रिं- அந்த இரவு முழுவதும், जाग्रत:- விழித்துக்கொண்டு, सूतस्य- ஸாரதியான ஸுமந்த்ரருக்கு, रामस्य- ஸ்ரீ ராமனுடைய, गुणान्- குணங்களை, सौमित्रे:- இலக்குமணன், ब्रुवत: (एव सत:)- சொல்லிக் கொண்டிருக்குமளவில், रवि:- ஸூர்யன், उदित:- உதயமாகிவிட்டார்.

17. (ப-ரை) गोकुलाकुलतीराया:- பசுமந்தைகளால் சூழப்பட்ட கரையையுடைய तत्र तमसाया:- அந்த தமஸா நதியினுடைய, विदूरत:- ஸமீபத்தில், राम:- ஸ்ரீராமன், प्रकृतिभि: सह- பட்டணத்து ஜனங்களோடும் கூட, तां रात्रिं- அந்த இரவை, अवसत्- வஸித்தார்.

18. (ப-ரை) महातेजा:- அதிக தேஜஸ்ஸையுடைய, राम:- ஸ்ரீராமன், ता: प्रकृती:- அந்த ஜனங்களை, निशाम्य च- பார்த்து, उत्थाय च- எழுந்திருந்து, पुण्यलक्षणम्- புண்யமான லக்ஷணங்களையுடைய, भ्रातरं लक्ष्मणं- தம்பியான இலக்குமணனைப்பார்த்து अब्रवीत्- சொன்னார்.

16. (பொ-ரை) அந்த தமஸா நதியின் கரையில், அவ்விரவு முழுவதும், விழித்துக்கொண்டே, ஸுமந்த்ரருக்கு, ஸ்ரீராமனுடைய குணங்களை, பொழுது போக்குவதற்காக, இலக்குமணன் சொல்லிக்கொண்டிருக்கும் பொழுதே, ஸூர்யோதயம் ஆகிவிட்டது.

17. (பொ-ரை) ஸ்ரீராமன், பசுக்கூட்டங்களால் நிறைந்த கரையையுடைய தமஸா நதியின் ஸமீபத்தில் பட்டணத்து ஜனங்களுடன் கூட அன்றுஇரவு தங்கியிருந்தார்.

18 (பொ-ரை) மிகுந்த தேஜஸ்ஸையுடைய, ஸ்ரீராமன் எழுந்திருந்து, அந்த ஜனங்கள் முழுவதும் தூங்கிக்கொண்டிருக்கிறதைப் பார்த்துவிட்டு, புண்யமான லக்ஷணங்கள்பொருந்திய தம்பியான இலக்குமணனைப்பார்த்து ஒரு வார்த்தை

अस्मद्व्यपेक्षान्सौमित्रे निरपेक्षान्गृहेष्वपि ।
वृक्षमूलेषु संसुप्तान्पश्य लक्ष्मण सांप्रतम् ॥ 19 ॥
यथैते नियमं पौराः कुर्वन्त्यस्मन्निवर्तने ।
अपि प्राणानसिष्यन्ति न तु त्यक्ष्यन्ति निश्चयम् ॥ 20 ॥
यावदेव तु संसुप्तास्तावदेव वयं लघु ।
रथमारुह्य गच्छाम पन्थानमकुतोभयम् ॥ 21 ॥

19. (ப-ரை) हे सौमित्रे- ஸௌமித்திரையின் புத்திரனே, लक्ष्मण- அப்பா இலக்குமணு! अस्मद्व्यपेक्षान्- நம்மிடத்திலேயே விசேஷமான ஆசை வைத்தவர்களாய், गृहेषु अपि- க்ருஹங்களிலும், निरपेक्षान्- ஆசையற்றவர்களாய், वृक्षमूलेषु- மரங்களின் அடிகளில், संसुप्तान्- தூங்கிக்கொண்டிருக்கிற இவர்களே, सांप्रतम्- இப்பொழுது, पश्य- பார்.

20. (ப-ரை) पौराः- பட்டணத்து ஜனங்கள், अस्मन्निवर्तने- நம்மைத்திருப்பும் விஷயத்தில், यथा- எவ்விதமாக, नियमं- பிடிவாதத்தை, कुर्वन्ति- செய்கிறார்களோ, (तथा- அவ்விதமாக), प्राणान् अपि- ப்ராணன்களைக்கூட, असिष्यन्ति- விட்டு விடுவார்கள், निश्चयम् तु- (தங்கள்) தீர்மானத்தை மாத்திரம், न त्यक्ष्यन्ति- விடமாட்டார்கள்.

21. (ப-ரை) (एते- இவர்கள்), यावत् एव तु- எவ்வளவு காலம் வரையில், संसुप्ताः- நன்றாகத்தூங்கிக்கொண்டிருக்கிறார்களோ, तावत् एव- அவ்வளவு காலத்திலேயே, वयं- நாம், लघु சீக்ரமாக, रथं- தேரை, आरुह्य- ஏறிக்கொண்டு, अकुतोभयम्- எங்கும் பயமில்லாத, पन्थानं- வழியை, गच्छाम- போய்விடுவோம்.

19. (பொ-ரை) அப்பா ஸௌமித்திரையின் குழந்தாய் இலக்குமணு! நம்மிடத்திலேயே அதிகமாக அன்புவைத்து, க்ருஹங்களிலும ஆசையற்று, மரத்தடியில் நன்றாகத்தூங்கிக் கொண்டிருககும் ஜனங்களே இப்பொழுது பார்.

20. (பொ-ரை) இந்த பட்டணத்துஜனங்கள் நம்மைத்திருப்புவதற்காக கொண்டிருக்கும் பிடிவாதத்தைப்பார்த்தால், ஒருஸமயம் நாம் திரும்பாதபக்ஷத்தில் பிராணனைக்கூட விட்டாலும் விடுவார்களே ஒழிய, தங்கள் பிடிவாதத்தை விடமாட்டார்களே.

21. (பொ-ரை) அப்பா! இந்த ஜனங்களெல்லோரும், நன்றாகத்தூங்கிக் கொண்டிருக்கிறார்கள். அதற்குள்ளாகவே நாம், சீக்கிரம் தேரிலேறிக்கொண்டு ஒரு விதத்தாலும் பயமில்லாத மார்க்கத்திலே சென்றுவிடுவோம்.

अतो भूयोपि नेदानीमिक्ष्वाकुपुरवासिनः ।
स्वपेयुरनुरक्ता मां वृक्षमूलानि संश्रिताः ॥ 22 ॥
पौरा ह्यात्मकृताद्दुःखाद्विप्रमोक्ष्या नृपात्मजैः ।
नतु खल्वात्मना योज्या दुःखेन पुरवासिनः ॥ 23 ॥
अब्रवील्लक्ष्मणो रामं साक्षाद्धर्ममिव स्थितम् ।
रोचते मे तथा प्राज्ञ क्षिप्रमारुह्यतामिति ॥ 24 ॥

22. (ப-ரை) अतः- அவ்விதமானால், इक्ष्वाकुपुरवासिनः- அயோத்திமா நகரத்தில் வஸிக்கின்ற இந்த ஜனங்கள், मां अनुरक्ताः- என்னிடத்தில் மிக்க அன்புள்ளவர்களாய், वृक्षमूलानि- மரத்து அடிகளை, संश्रिताः सन्तः- அடைந்தவர்களாய்க்கொண்டு, इदानीं (इव)- இப்பொழுது போல, भूयः अपि- மறுபடியும், न स्वपेयुः- தூங்கமாட்டார்கள்.

23. (ப-ரை) हि- ஏனென்றால், पौराः- பட்டணத்து ஜனங்கள், आत्मकृतात्- தங்கள் தங்களால் செய்யப்பட்ட, दुःखात्- துக்கத்திலிருந்து, नृपात्मजैः- ராஜகுமாரர்களால், विप्रमोक्ष्याः- விடுவிக்கத்தக்கவர்கள், पुरवासिनः- நகரத்துஜனங்கள், आत्मना- தன்னால், दुःखेन- துக்கத்தோடு, न योज्याः तु खलु- சேரும்படி செய்யத்தகுந்தவர்கள் அன்றல்லவா.

24. (ப-ரை) लक्ष्मणः- இலக்குமணன், साक्षात्- ப்ரத்யக்ஷமான, धर्मं इव- தர்மதேவதையைப்போல், स्थितम्- இருக்கின்ற, रामं- ஸ்ரீராமனைப் (பார்த்து), हे प्राज्ञ- மிகவும் புத்திசாலியான அண்ணா, मे- எனக்கும், तथा- அப்படியே, रोचते- ருசிக்கிறது, क्षिप्रं- சீக்ரமாக, रथः- தேரானது, आरुह्यतां- ஏறப்படலாம், इति- என்று, अब्रवीत्- சொன்னார்.

22. (பொ-ரை) நாம் அப்படி செய்து விட்டோமேயானால், அயோத்திமா நகரத்திய இந்த ஜனங்களெல்லோரும், நம்மிடத்தில் அதிக அன்புகொண்டு மரங்களின் அடிகளில் படுத்துக்கொண்டு இப்பொழுது தூங்குவதுபோல், இனி தூங்கமாட்டார்களல்லவா

23. (பொ-ரை) பட்டணத்து ஜனங்கள் தாங்களே தங்களுக்கு ஏதுவாகிலும் துக்கத்தை விளைத்துக்கொண்டார்களேயானால், அதை ராஜகுமாரர்கள் பரிஹரிக்க வேண்டியிருக்க, ராஜகுமாரர்களே அந்த நகரத்து ஜனங்களுக்கு துக்கத்தை உண்டுபண்ணுவது உசிதமன்றல்லவா.

24. (பொ-ரை) பிறகு இலக்குமணன், ப்ரத்யக்ஷமான தர்மதேவதைபோலிருக்கின்ற அந்த ராமனைப்பார்த்து அண்ணா! எல்லாம் தெரிந்தவராகிய நீர் சொல்லியபடியே என் மனதிற்கும் ஒப்பியிருக்கிறது. ஆகையால் தேரின்மேல் ஏறும் என்றார்.

अथ रामोऽब्रवीच्छ्रीमान्सुमन्त्रं युज्यतां रथः ।
गमिष्यामि ततोऽरण्यं गच्छ शीघ्रमितः प्रभो ॥ 25 ॥
सूतस्ततः संत्वरितः स्यन्दनं तैर्हयोत्तमैः ।
योजयित्वाथ रामाय प्राञ्जलिः प्रत्यवेदयत् ॥ 26 ॥
अयं युक्तो महाबाहो रथस्ते रथिनां वर ।
त्वमारोहस्व भद्रं ते ससीतः सहलक्ष्मणः ॥ 27 ॥

---

25. (ப-ரை) अथ- பிறகு, श्रीमान्- மிக்க உத்ஸாஹமுடைய, रामः- ஸ்ரீராமன், सुमन्त्रं- ஸுமந்த்ரரைப்பார்த்து, प्रभो-ப்ரபுவான ஸுமந்த்ரரே, रथः- தேர், युज्यतां- பூட்டப்படலாம், अरण्यं- அரண்யத்தைக்குறித்து, गमिष्यामि- போகப்போகிறேன், ततः- ஆதலால், इतः- இங்கு இருந்து, शीघ्रं- விரைவில், गच्छ- போம், इति- என்று, अब्रवीत्- சொன்னார்.

26-27. (ப-ரை) ततः- பிறகு, सूतः- ஸாரதி, संत्वरितः सन्- மிகவும் த்வரையுடையவராய், तैः हयोत्तमैः- உயர்ந்த அந்த குதிரைகளால், स्यन्दनं- தேரை, योजयित्वा- பூட்டி, अथ- பிறகு, प्राञ्जलिः सन्- கைகூப்பிக்கொண்டு, हे महाबाहो- பெரும்தோள்களையுடையவரே, रथिनां वर- தேராளிகளுக்குள் சிறந்தவரே, ते रथः-உமமுடைய தேரானது, अयं युक्तः- இதோ ஸித்தமாகவிருக்கின்றது, त्वं- நீர், ससीतः- ஸீதையுடன் கூடியும், सहलक्ष्मणः- இலக்குமணனுடன் கூடியும, आरोहस्व- ஏறும், ते- உமக்கு, भद्रं- மங்களமானது, (अस्तु- உண்டாகட்டும). इति- என்று, रामाय- ஸ்ரீராமன்பொருட்டு, प्रत्यवेदयत्- தெரிவித்தார்.

25. (பொ-ரை) பிறகு மிகுந்த உத்ஸாஹமுடைய ஸ்ரீராமன் ஸுமந்த்ரரைப்பார்த்து "மிகவும் கெட்டிக்காரரான ஸாரதியே, குதிரைகளைப்பூட்டித்தேரைக் கொண்டுவாரும் நான் அரண்யம்போகப்போகிறேன் ஆதலால் இங்கு இருந்து சீக்கிரம போம்" என்று சொன்னார்.

26-27. (பொ-ரை) பிறகு ஸாரதியான ஸுமந்த்ரரும், வேகமாக அந்த உயர்ந்த குதிரைகளை தேரில் பூட்டி, பிறகு, ஸ்ரீராமனிடம் வந்து கைகூப்பிக்கொண்டு பெரும் தோள்களையுடையவரே! தேராளிகளுக்குள் சிறந்தவரே! இதோ உம்முடையதேர் ஸித்தமாயிருக்கிறது. ஸீதையுடனும், இலக்குமணனுடனும். நீர் இதில் ஏறும், உமக்கு மங்களம் உண்டாகவேண்டும் என்று தெரிவித்தார்.

तं स्यन्दनमधिष्ठाय राघवः सपरिच्छदः ।
शीघ्रगामाकुलावर्तां तमसामतरन्नदीम् ॥ 28 ॥
स संतीर्य महाबाहुः श्रीमाञ्शिवमकण्टकम् ।
प्रापद्यत महामार्गमभयं भयदर्शिनाम् ॥ 29 ॥
मोहनार्थं तु पौराणां सूतं रामोऽब्रवीद्वचः ।
उदङ्मुखः प्रयाहि त्वं रथमास्थाय सारथे ॥ 30 ॥
मुहूर्तं त्वरितं गत्वा निवर्तय रथं पुनः ।
यथा न विद्युः पौरा मां तथा कुरु समाहितः ॥ 31 ॥

28. (ப-ரை) राघवः- ராகவன், सपरिच्छदः सन्- ஸாமான்களுடன் கூடி, तं स्यन्दनं- அந்த ரதத்தை, अधिष्ठाय- ஏறி, आकुलावर्तां- (आवर्ताकुलां)- சுழல்களால் நிறைந்தும், शीघ्रगां- வேகமாகபோகின்றதுமான, तमसां नदीम्- தமஸா நதியை, अतरत्- தாண்டினார்.

29. (ப-ரை) महाबाहुः-பெரிய தோள்களையுடையவரும், श्रीमान्-மிகுந்த செல்வமுடையவருமான, सः-அந்த ஸ்ரீராமன், संतीर्य-(தமஸாநதியைத்) தாண்டி, भयदर्शिनाम्- பயத்தைக்காட்டுகின்ற (புலிமுதலான ஜந்துக்களுடைய), अभयं- பயமில்லாததாயும், अकण्टकम्- முள்ளில்லாததும், शिवं-அழகாயுமிருக்கிற, महामार्गं-பெரிய வழியை, प्रापद्यत- அடைந்தார்.

30—31. (ப-ரை) रामः- ஸ்ரீராமன், पौराणां- பட்டணத்து ஜனங்களுக்கு, मोहनार्थं- ப்ரமத்தை உண்டுபண்ணுவதற்காக, सूतं- ஸாரதியைப்பார்த்து, हे सारथे- ஓ ஸுமந்த்ரரே, त्वं- நீர், रथं- தேரை, आस्थाय- ஏறிக்கொண்டு, उदङ्मुखः- வடக்கு முகமாக, प्रयाहि- போம், मुहूर्तं- ஒரு முகூர்த்தகாலம், त्वरितं- வேகமாக, गत्वा- போய், रथं- தேரை, पुनः- மறுபடியும், निवर्तय- திருப்பும், पौराः- பட்டணத்து ஜனங்கள், मां-

28. (பொ-ரை) ஸ்ரீராகவன் வில், கவசம், மண்வெட்டி, பொட்டில் கூடை முதலான ஸாமக்ரிகளுடன் அந்த தேரில் ஏறிக்கொண்டு சுழல்கள் நிறைந்து வேகமாக ஓடுகின்ற தமஸா நதியைத்தாண்டினார்.

29. (பொ-ரை) பெரும் தோள்களையுடையவரும், செல்வமுடையவருமான அந்த ஸ்ரீராமன், தமஸா நதியைத்தாண்டி, பார்க்கிறவர்களுக்கு பயத்தை உண்டாக்கும் புலி, கரடி முதலான துஷ்ட ஜந்துக்களின் பயமில்லாமல், முள்களுமில்லாமல் அழகாயிருக்கின்ற பெரிய வனமார்க்கத்தில் கால் நடையாகச் சென்றார்.

30. 31. (பொ-ரை) ஸ்ரீராமன், பட்டணத்து ஜனங்களை ஏமாற்றுவதற்காக ஸாரதியைப்பார்த்து ஸுமந்த்ரரே, நீர் தேரின்மேல் ஏறிக்கொண்டு தேரை வடக்கு

रामस्य वचनं श्रुत्वा तथा चक्रे स सारथिः ।
प्रत्यागम्य च रामस्य स्यन्दनं प्रत्यवेदयत् ॥ 32 ॥
तौ संप्रयुक्तं तु रथं समास्थितौ तदा ससीतौ रघुवंशवर्धनौ ।
प्रचोदयामास ततस्तुरङ्गमान्ससारथिर्येन पथा तपोवनम् ॥ 33 ॥

---

என்னை, यथा– எப்படி, न विद्युः– அறிந்து கொள்ளாமலிருப்பார்களோ, तथा– அப்படி, समाहितः– கவனமுள்ளவராக, कुरु– செய்யும், इति– என்று, वचः– வார்த்தையை, अब्रवीत्– சொன்னார்.

32. (ப-ரை) सः सारथिः– அந்த ஸாரதியானவர், रामस्य– ராமனுடைய, वचनं– வார்த்தையை, श्रुत्वा– கேட்டு, तथा– அவ்விதமே, चक्रे– செய்தார், प्रत्यागम्य च– (வேறு வழியாகத்) திரும்பிவந்து, रामस्य– ராமனுக்கு, स्यन्दनं– ரதத்தை, प्रत्यवेदयत्– தெரிவித்தார்.

33. (ப-ரை) तदा– அப்பொழுது, रघुवंशवर्धनौ– ரகு குலத்திற்கு வ்ருத்தியை உண்டுபண்ணுகின்ற, तौ– அந்த ராம இலக்குமணர்கள், ससीतौ सन्तौ– ஸீதையுடன்

முகமாக சற்று நேரம் வேகமாக நடத்தி, மறுபடி தேரை திருப்பி விடும், நாம் போகும் வழியை பட்டணத்து ஜனங்கள் அறிந்து கொள்ளாமலிருக்கும்படி. நீர் கவனமாகச்செய்யும்" என்று சொன்னார்.

கருணாமூர்த்தியான ஸ்ரீராமன் தம்மைவிட்டுப் பிரிவதைப்பொறுக்காமல் தம்மிடத்தில் அளவற்ற ப்ரீதியுள்ள பட்டணத்து ஜனங்களை இவ்விதம் மோசம்செய்வது உசிதமல்லவே என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம்:– இது மோசமல்ல. பட்டணத்து ஜனங்களுக்கு அதிகமான ஆனந்தம் உண்டாகி அதனால் சரீர நாசமும் உண்டாகாமலிருக்கவேண்டுமென்று எண்ணி, அந்த ஆனந்தத்திற்கு சற்று தடை உண்டாக்கி ஸ்வானுபவத்தைக்கொடுத்தால் அது நன்றாயிருக்குமாகையால் வனவாஸமென்கிற வ்யாஜத்தினால் சிலகாலம் அவர்களை விட்டுப்பிரிந்திருக்கவேண்டுமென்று ஸங்கல்பித்தபடியால் இது மிகவும் ஹிதமான வ்யாபாரமானதால் இது வஞ்சனையில் சேராது. ஸ்ரீராமனுக்கு அப்படி ஸங்கல்பமில்லாத பக்ஷத்தில் நகரத்து ஜனங்களெல்லோருமே ஸுமந்த்ரனையும் இலக்குமணனையும்போல் அவர்களுக்குள் எவனாவது ஒருவன் தூங்காமலிருக்கக்கூடாதா. ஆகலால் வ்ருணத்திற்கு சிகித்ஸை பண்ணுவது தக்காலம் கஷ்டமாயிருந்தாலும் பிற்பாடு ஹிதமாவதுபோல் இதுவும் ஹிதம் என்று தெரிந்துகொள்வது.

32. (பொ-ரை) அந்த ஸாரதியான ஸுமந்த்ரரும், ஸ்ரீராமன் வார்த்தையைக்கேட்டு, அவ்விதமே தேரை சற்றுநேரம் வடக்குதிக்கில் நடத்தி, மறுபடி வேறு வழியாகத்தேரை திருப்பி ஓட்டிக்கொண்டுவந்து, ஸ்ரீராமனிடம் தெரிவித்தார்

33. (பொ-ரை) அப்பொழுது, ரகுகுலத்திற்கு பெருமையை உண்டுபண்ணுகின்ற அந்த ராம இலக்குமணர்கள், தாம் சொன்னபடியே செய்து கொண்டுவ

ततः समास्थाय रथं महारथः ससारथिर्दाशरथिर्वनं ययौ ।
उदङ्मुखं तं तु रथं चकार सप्रयाणमांगल्यनिमित्तदर्शनात् ॥ 34 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध்யाकाण्डे
षट्चत्वारिंशः सर्गः ॥ 46 ॥

கூட, संप्रयुक्तं- நன்ருகக் கொண்டுவரப்பட்ட, रथं- தேரை, समास्थितौ- அடைந்தவர்களாக, (अभूतां- ஆனுர்கள்), ततः- பிறகு, सः सारथिः- அந்த ஸாரதியானவர், येन पथा- எந்த வழியினுல், तपोवनम्- தபோவனமானது, (प्राप्यते- அடையப்படுகிறதோ), तेन- அந்த வழியாக, तुरङ्गमान्- குதிரைகளை, प्रचोदयामास- ஓட்டினுர்.

34. (ப-ரை) सः- அந்த ஸுமந்த்ரர், प्रयाणमाङ्गल्यनिमित्तदर्शनात्- ப்ரயாணத்திற்கு அநுகூலமான சுப சகுனங்களைப்பார்த்தபடியால், तं रथं- அந்த தேரை, उदङ्मुखं तु—வடக்குமுகமாக, चकार— செய்தார், ततः- பிறகு, महारथः- மஹாரதராயும், दाशरथिः- தசரதகுமாரருமான, सः- அந்த ஸ்ரீராமன், रथं- தேரை, आस्थाय- ஏறிக்கொண்டு, वनं- வனத்தைக்குறித்து, ययौ- சென்ருர்.

ரப்பட்டிருக்கிற தேரில் ஸீதையுடன் ஏறினுர்கள். பிறகு ஸுமந்த்ரரும், மஹரிஷிகள் வாஸம்செய்யும் தபோ வநத்திற்குப்போகும் வழியாகவே குதிரைகளை ஓட்டினுர்.

34. (பொ-ரை) அப்பொழுது, ப்ரயாணத்திற்கு அநுகூலமான சுப சகுனங்கள் உண்டாகவே அதற்காக ஸுமந்த்ரர் தேரை வடக்கு முகமாகத்திருப்பினுர். பிறகு, மகாரதராயும், தசரத குமாரருமான அந்த ராமன் தேரின்மேல் ஏறிக்கொண்டு அரண்யம் சென்ருர்.



सप्तचत्वारिंशः सर्गः ॥ 47 ॥

प्रभातायां तु शर्वर्यां पौरास्ते राघवं विना ।
शोकोपहतनिश्चेष्टा बभूवुर्हतचेतसः ॥ 1 ॥
शोकजाश्रुपरिद्यूना वीक्षमाणास्ततस्ततः ।
आलोकमपि रामस्य न पश्यन्ति स्म दुःखिताः ॥ 2 ॥
ते विषादार्तवदना रहितास्तेन धीमता ।
कृपणाः करुणा वाचो वदन्ति स्म मनस्विनः ॥ 3 ॥

1. (ப-ரை) शर्वर्यां तु- இரவானது, प्रभातायां (सत्यां)- விடிந்தவளவில், ते पौराः- அந்தபட்டணத்துஜனங்கள், राघवं- ஸ்ரீராமனை, विना- விட்டுப்பிரிந்து, शोकोपहतनिश्चेष्टाः- துக்கத்தினல் அடிபட்டு, ஒரு வ்யாபாரமும் இல்லாதவர்களாய், हतचेतसः- மோஹம் அடைந்தவர்களாக. बभूवुः- ஆனார்கள்.

2. (ப-ரை) दुःखिताः- துக்கமுடையவர்களாய், शोकजाश्रुपरिद्यूनाः- சோகத்தினுலுண்டான கண்ணீரினுல் மிகவும்வாடினவர்களாய், ततस्ततः- அங்கங்கு, वीक्षमाणाः- பார்த்துக்கொண்டவர்களாய், (இருந்தும்) रामस्य- ராமனுடைய, आलोकं अपि- (போகும்) அடையாளத்தையும், न पश्यन्ति- பார்க்கவில்லை.

3. (ப-ரை) मनस्विनः- நல்ல மனதையுடைய, ते- அவர்கள், धीमता- சிறந்த புத்தியுடைய, तेन- அந்த ஸ்ரீராமனுல், रहिताः- பிரிந்தவர்களாய், विषादार्तवदनाः- துக்கத்தினுல் வாடிய முகமுடையவர்களாய், कृपणाः-மிகவும் தீனர்களாய், करुणाः-இரக்கமுள்ளவைகளான, वाचः- வார்த்தைகளை, वदन्तिस्म- சொன்னுர்கள்.

பிறகு இரண்டு ஸர்க்கங்களினுல் நகரத்து ஜனங்களின் வ்ருத்தாந்தம் சொல்லப்படுகிறது.

1. (பொ-ரை) பொழுது நன்ருய் விடிந்தவுடன் பட்டணத்து ஜனங்கள் ஸ்ரீராமன் காணுமல்போகவே, துக்கத்தினுல் மிகவும் பீடிக்கப்பட்டு, ஒரு வ்யாபாரமும் செய்யாமல் மனம் கலங்கினவர்களாக ஆகிவிட்டார்கள்.

2. (பொ-ரை) மிகவும் துக்கமுடையவர்களாய் சோகத்தினுல் கண்களில் நீர் பெருக்கி வாட்டமடைந்து, அங்குமிங்கும் பார்த்தும் ராமன் தேர்போன அடையாளத்தையும், புழுதிமுதலானதையும் கூடக் காணவில்லை.

3. (பொ-ரை) ஸ்ரீராமனிடத்தில் மிக அன்புள்ள மனதுடையவர்களான நகரத்து ஜனங்கள சிறந்த புத்தியையுடைய அந்த ஸ்ரீராமனைவிட்டுப்பிரிந்து துக்கத்தினுல் முகம் வாடி, மிகவும் தீனர்களாய் இரக்கமான வார்த்தைகளை ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டார்கள்.

धिगस्तु खलु निद्रां तां ययाऽपहृतचेतसः ।
नाद्य पश्यामहे रामं पृथूरस्कं महाभुजम् ॥ 4 ॥
कथं नाम महाबाहुः स तथाऽवितथक्रियः ।
भक्तं जनं परित्यज्य प्रवासं राघवो गतः ॥ 5 ॥
यो नः सदा पालयति पिता पुत्रानिवौरसान् ।
कथं रघूणां स श्रेष्ठस्त्यक्त्वा नो विपिनं गतः ॥ 6 ॥

4. (ப-ரை) यया- யாதொரு தூக்கத்தினால், अपहृतचेतसः- கவரப்பட்ட மனதுடையவர்களாய், पृथूरस्कं- அகன்ற மார்புடையவரும், महाभुजम्- பெரும் தோள்களை உடையவருமான, रामं- ஸ்ரீராமனை, अद्य- இப்பொழுது, न पश्यामहे- (நாம்) பார்க்காமலிருக்கின்றோமோ, तां निद्रां- அந்தத் தூக்கத்திற்கு, धिक्- நிந்தையானது, अस्तु खलु- உண்டாகட்டும்.

5. (ப-ரை) अवितथक्रियः- வீணாகாத ஸேவையை உடையவரும், महाबाहुः- பெரும் தோள்களை உடையவருமான, सः राघवः- அந்த ராகவன், तथा भक्तं- அப்படி பக்தி உள்ளதான, जनं- ஜனத்தை, परित्यज्य- விட்டு விட்டு, कथं नाम- எப்படி, प्रवासं- வனவாஸத்தைக்குறித்து, गतः- சென்றுவிட்டார்.

6. (ப-ரை) पिता- தகப்பன், औरसान् पुत्रान् इव- ஔரஸ புத்திரர்களை (ரக்ஷிப்பது) போல, यः- யாதொருவர், नः- நம்மை, सदा- எப்பொழுதும், पालयति- ரக்ஷிக்கின்றாரோ, सः- அந்த, रघूणां श्रेष्ठः- ரகு குலத்து அரசரில் சிறந்தவரான ராமன், नः- நம்மை, त्यक्त्वा- விட்டு விட்டு, कथं- எப்படி, विपिनं- வனத்தைக்குறித்து, गतः- சென்றுவிட்டார்.

4. (பொ-ரை) சீ! சீ! ஐயோ நாம் என்ன தூக்கம் தூங்கிவிட்டோம், அதனாலன்றோ நாம் புத்தியில்லாமல், அகன்ற மார்புடையவரும், பெருத்த தோள்களையுடையவருமான அந்த ஸ்ரீராமனை இப்பொழுது பார்க்காமலிருந்து விட்டோம்.

5. (பொ-ரை) தம்மிடத்தில் செய்த ஸேவையை வீணாகச்செய்யாதவரும், பெரும் தோள்களையுடையவருமான அந்த ஸ்ரீராகவன், க்ருஹம் முதலானவைகளை விட்டு தம்மிடத்திலேயே மிகவும் அன்புள்ள ஜனத்தை விட்டு விட்டு, எப்படி வனம் சென்றுவிட்டார்.

6. (பொ-ரை) தகப்பன் ஔரஸபுத்திரர்களைக் காப்பாற்றுவதுபோல் நம்மை எப்பொழுதும் காப்பாற்றிக்கொண்டுவந்த ரகு குலத்து அரசர்களில் சிறந்தவரான அந்த ஸ்ரீராமன் நம்மை விட்டு எப்படி வனம் சென்றுவிட்டார்.

इहैव निधनं यामो महाप्रस्थानमेव वा ।
रामेण रहितानां हि किमर्थं जीवितं हि नः ॥ 7 ॥
सन्ति शुष्काणि काष्ठानि प्रभूतानि महान्ति च ।
तैः प्रज्वाल्य चितां सर्वे प्रविशामोऽथ पावकं ॥ 8 ॥
किं वक्ष्यामो महाबाहुरनसूयः प्रियंवदः ।
नीतः स राघवोऽस्माभिरिति वक्तुं कथं क्षमम् ॥ 9 ॥

---

7. (ப-ரை) इह एव- இங்கேயே, निधनं- மரணத்தை, यामः- அடைவோம், वा- அல்லது, महाप्रस्थानं एव- மஹாப்ரஸ்தானத்தையோ, यामः- அடைவோம், हि- ஏனென்றால், रामेण- ஸ்ரீராமனால், रहितानां- பிரிந்திருக்கிற, नः- நமக்கு, जीवितं- உயிரானது, किमर्थं हि- எதற்காக.

8. (ப-ரை) अथ- அல்லது, शुष्काणि- உலர்ந்த, महान्ति- பெரிதான, काष्ठानि- கட்டைகள், प्रभूतानि- ஏராளமாக, सन्ति- இருக்கின்றன, तैः- அவைகளால், चितां- சிதையை (செய்து), प्रज्वाल्य- எறித்து, पावकं- நெருப்பை, सर्वे- நாமெல்லோரும், प्रविशामः- ப்ரவேசிப்போம்.

9. (ப-ரை) किं वक्ष्यामः- என்ன சொல்லுவோம், महाबाहुः- பெருந்தோள்களையுடையவராய், अनसूयः- அஸூயையில்லாதவராய், प्रियं वदः- இனிதாகப் பேசுகின்றவருமான, सः राघवः- அந்த ராகவன், अस्माभिः- எங்களால், (वनं- வனத்தை), नीतः- அடைவிக்கப்பட்டார், इति- என்று, वक्तुं- சொல்லுவதற்கு, कथं क्षमं- எப்படிமுடியும்.

7. (பொ-ரை) ஆதலால் நாம் இங்கேயே, ப்ராயோபவேசனம்செய்து மரணத்தை அடையவேண்டும், அல்லது மஹாப்ரஸ்தானத்தையாவது செய்யவேண்டும் ஏனென்றால், ராமனைவிட்டுப்பிரிந்த நமக்கு இனி உயிர் எதற்காக.

8. (பொ-ரை) அல்லது, இந்த வனத்தில் உலர்ந்தபெருங்கட்டைகள் ஏராளமாகவிருக்கின்றன. அவைகளால் சிதை அடுக்கி நெருப்பு எரித்து, அந்த நெருப்பில் நாமெல்லோரும் விழுந்தாவது ப்ராணனை விடவேண்டும்.

9. (பொ-ரை) நாமென்ன சொல்லுவோம், பெருந்தோள்களையுடையவராய் அஸூயையில்லாதவராய், எல்லோரிடத்திலும் இனிதாகப்பேசுகின்றவருமான அந்த ராகவனை நாங்கள் வனத்திற்கு அழைத்துக்கொண்டுபோய் விட்டோம் என்று எப்படி சொல்ல முடியும்.

---

* ப்ராயோபவேசனம்- என்றால், ஆஹாரமில்லாமலிருப்பது, மஹாப்ரஸ்தானம் என்றால், மரித்தே விடவேண்டுமென்று ஸங்கல்பத்துடன், வடக்குதிக்கை நோக்கி செல்லுதல்.

सा नूनं नगरी दीना दृष्ट्वाऽस्मान्राघवं विना ।
भविष्यति निरानन्दा सस्त्रीबालवयोधिका ॥ 10 ॥
निर्यातास्तेन वीरेण सह नित्यं जितात्मना ।
विहीनास्तेन च पुनः कथं पश्याम तां पुरीम् ॥ 11 ॥
इतीव बहुधा वाचो बाहुमुद्यम्य ते जनाः ।
विलपन्ति स्म दुःखार्ता विवत्सा इव धेनवः ॥ 12 ॥

10. (ப-ரை) सा नगरी- அந்த அயோத்திமா நகரமானது, राघवं विना- ராகவனை விட்டுப்பிரிந்து, (गतान्- போயிருக்கின்ற), अस्मान्- நம்மை, दृष्ट्वा- பார்த்து. सस्त्रीबालवयोधिका- ஸ்த்ரீகள், பாலர்கள், கிழவர்கள் இவர்களுடன் கூடியதாய். निरानन्दा- ஆனந்தமில்லாததாய், दीना- தைன்யம் அடைந்ததாய், भविष्यति- ஆய்விடும். नूनं- இது நிச்சயம்.

11. (ப-ரை) नित्यं- எப்பொழுதும், जितात्मना- ஜிதேந்திரியராய், वीरेण- சூரனை, तेन सह- அந்த ராமனுடன், निर्याताः- புறப்பட்டுவந்த நாம், तेन- அவரால், विहीनाः सन्तः- பிரிந்தவர்களாய்க்கொண்டு, तां पुरीं- அந்த நகரத்தை, पुनः- மறுபடியும், कथं पश्याम- எப்படிப் பார்ப்போம்.

12. (ப-ரை) ते जनाः- அந்த ஜனங்கள், बाहुं- கையை, उद्यम्य- உயரத்தூக்கிக்கொண்டு, इति इव- இவ்வாறுபோல, बहुधा- பலவிதமாக, वाचः- வார்த்தைகளை (சொல்லிக்கொண்டு), विवत्साः- கன்றைப் பிரிந்திருக்கிற, धेनवः इव- பசுக்கள் போல், दुःखार्ताः- துக்கத்தினால் பீடிக்கப்பட்டவர்களாய், विलपन्ति स्म- கதறினார்கள்.

10. (பொ-ரை) அந்த அயோத்திமா நகரமானது, ராகவனைப்பிரிந்து வந்திருக்கும் நம்மைப்பார்த்து, ஸ்த்ரீகள், பாலர்கள், கிழவர்கள் உள்பட, ஆனந்தமிழந்து மிகவும் தைன்யமடைந்ததாய் ஆய்விடும, இது நிச்சயம்.

11. (பொ-ரை) நாம், ஜிதேந்திரியராய், மஹா வீரனுமான அந்த ஸ்ரீராமனுடன் பட்டணத்திலிருந்து புறப்பட்டு, இப்பொழுது அவரைவிட்டுப்பிரிந்து, மறுபடி போய், அந்த நகரத்தை எப்படிப்பார்ப்போம்.

12. (பொ-ரை) அந்த நகரத்து ஜனங்கள், கையை உயரத்தூக்கிக்கொண்டு கன்றை இழந்த பசுக்கள்போல், துக்கத்தினால் பீடிக்கப்பட்டவர்களாய், இதுபோல் மற்றும் பலவிதமாக சொல்லிக்கொண்டு கதறினார்கள்.

ततो मार्गानुसारेण गत्वा किंचित्क्षणं पुनः ।
मार्गनाशाद्विषादेन महता समभिप्लुताः ॥ 13 ॥
रथस्य मार्गनाशेन न्यवर्तन्त मनस्विनः ।
किमिदं किं करिष्यामो दैवेनोपहता इति ॥ 14 ॥
ततो यथागतेनैव मार्गेण क्लान्तचेतसः ।
अयोध्यामगमन्सर्वे पुरीं व्यथितसज्जनाम् ॥ 15 ॥

13. (ப-ரை) ततः- பிறகு, मार्ग अनुसारेण- ரதத்தின் வழியை அநுஸரித்துக் கொண்டு, किंचित्क्षण- கொஞ்சநாழிகை, गत्वा- சென்று, पुनः- மறுபடி, मार्गनाशात्- வழி தெரியாமையால், महता- பெரிதான, विषादेन- துக்கத்தினால், समभिप्लुताः- சூழப் பட்டார்கள்.

14. (ப-ரை) रथस्य- தேரினுடைய, मार्गनाशेन- வழிகாணாமையால், दैवेन- தெய்வத்தினால், उपहताः- கெடுக்கப்பட்டோம், इति- என்று, (प्रलपन्तः सन्तः- ப்ரலாபம் செய்து கொண்டு,) किं इदं- என்ன இது, किं करिष्यामः- என்ன செய்வோம், इति- என்று, मनस्विनः सन्तः- திடமனதுடையவர்களாய், न्यवर्तन्त- திரும்பினார்கள்.

15. (ப-ரை) ततः- பிறகு, यथागतेन मार्गेण एव- முன் வந்த வழியாகவே, क्लान्तचेतसः- கலங்கினமனதுடையவர்களாய், सर्वे- எல்லா ஜனங்களும், व्यथितसज्जनाम्- துக்கமடைந்த பெரியோர்களையுடைய, अयोध्यां- पुरीं- அயோத்திமா நகரத்தைக் குறித்து, अगमन्- சென்றார்கள்.

13. (பொ-ரை) பிறகு, ஸ்ரீராமன் ஏறிப்போன தேர் வழியை அநுஸரித்தே கொஞ்சநேரம் சென்று, மறுபடி அந்த வழியும் காணாமையால், அதிகமான துக்கத்தினால் சூழப்பட்டார்கள்.

பட்டணத்து ஜனங்களை ஏமாற்றுவதற்காகவே, புல், செடி, புதற்கள் நிறைந்த வழியால் தேரை ஓட்டிக்கொண்டுபோனபடியால், தேர்போன தாரை தெரியவில்லை.

14. (பொ-ரை) தேர்போன வழிகாணாமையால் ஐயோ! நம்மை தெய்வம் கெடுத்து விட்டதே, என்று அழுதுகொண்டு, என்ன இப்படி நமக்கு நேர்ந்து விட்டது, இனிநாம் என்ன செய்வோம் என்று ஒருவாறு மனதை கொஞ்சம திடப் படுத்திக்கொண்டு திரும்பினார்கள்.

15. (பொ-ரை) பிறகு அவர்களெல்லோரும், மனம் கலங்கினவர்களாய், துக்கமடைந்த ஸாது ஜனங்களையுடைய அயோத்திமா நகரத்தைக்குறித்து வந்த வழியாகவே சென்றார்கள்.

आलोक्य नगरीं तां च क्षयव्याकुलमानसाः ।
अवर्तयन्त तेऽश्रूणि नयनैः शोकपीडितैः ॥ 16 ॥
एषा रामेण नगरी रहिता नातिशोभते ।
आपगा गरुडेनेव ह्रदादुद्धृतपन्नगा ॥ 17 ॥
चन्द्रहीनमिवाकाशं तोयहीनमिवार्णवम् ।
अपश्यन्निहतानन्दं नगरं ते विचेतसः ॥ 18 ॥

16-17. (ப-ரை) ते- அவர்கள், तां नगरीं- அந்த நகரத்தை, आलोक्य- பார்த்து, क्षयव्याकुलमानसाः- வீடுகளைகுறித்து, கலங்கின மனதுடையவர்களாய், रामेण- ராமனால், रहिता- பிரிந்திருக்கிற, एषा नगरी- இந்நகரமானது, गरुडेन- கருடனால், ह्रदात्- மடுவிலிருந்து, उद्धृतपन्नगा- எடுக்கப்பட்ட ஸர்ப்பத்தையுடைய, आपगा इव- நதியானது போல, न अतिशोभते- அதிகமாக விளங்கவில்லை, इति- என்று, शोकपीडितैः- துக்கத்தினால் கலங்கியிருக்கிற, नयनैः- கண்களால், अश्रूणि- நீர்களை, अवर्तयन्त- பெருக்கினார்கள்.

18. (ப-ரை) विचेतसः- மோஹங்கொண்டவர்களான, ते- அவர்கள், निहतानन्द- ஆனந்தம் கெட்டு இருக்கிற, नगरं- அந்த நகரத்தை, चन्द्रहीनं- சந்திரனில்லாத, आकाशं इव- ஆகாயத்தைப்போலவும், तोयहीनं- ஜலமில்லாத, अर्णवम् इव- ஸமுத்திரத்தைப்போலவும், अपश्यन्- பார்த்தார்கள்.

16-17. (பொ-ரை) அந்த ஜனங்கள் அந்நகரத்தைப்பார்த்து, வீடுகளில் நுழையலாமா வேண்டாமா என்று மனக்கவலையுடையவர்களாய், ராமனில்லாமல இந்நகரமானது, ஒரு நதியின் மடுவிலிருந்து, கருடன் ஸர்ப்பத்தைத்தூக்கிக் கொண்டுபோய்விட்டால் அந்நதி எவ்வாறு விளங்காதோ, அவ்வாறு விளங்கவில்லை, என்று சொல்லிக்கொண்டு சோகத்தினால் கலங்கின கண்களின் வழியால் நீர்களைப் பெருக்கினார்கள்.

18. (பொ-ரை) இவ்வாறு மனங்கலங்கின அந்த ஜனங்கள், ஆனந்தமில்லாத அந்நகரத்தை, சந்திரனில்லாத ஆகாயம்போலவும், ஜலமில்லாத ஸமுத்திரம் போலவும் எண்ணினார்கள்.

ते तानि वेश्मानि महाधनानि दुःखेन दुःखोपहता विशन्तः ।
नैव प्रजज्ञुः स्वजनं जनं वा निरीक्षमाणाः प्रविनष्टहर्षाः ॥ 19 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
सप्तचत्वारिंशः सर्गः ॥ 47 ॥

---

19. (ப-ரை) दुःखोपहता:- துக்கத்தினலடிபட்டிருக்கிற, ते- அவர்கள், महा- धनानि- மிகவும் விலையுயர்ந்ததுகளான, तानि वेश्मानि- அந்த க்ருஹங்களை, दुःखेन– துக்கத்துடன், विशन्त:- ப்ரவேசித்திருந்தும், स्वजनं- தன்னுடை ஜனத்தையும், जनं वा- இதர ஜனத்தையும், निरीक्षमाणा:- பார்த்தவர்களாயிருந்தும், प्रविनष्टहर्षा: सन्त:- போயிருக்கிற ஸந்தோஷத்தையுடையவர்களாய்க் கொண்டு, न प्रजज्ञुः एव- அறியவே இல்லை.

19. (பொ-ரை) இவ்வாறு, துக்கத்தினல் பீடிக்கப்பட்ட அந்த ஜனங்கள் மிகவும் விலையுயர்ந்த தங்கள் தங்கள் க்ருஹத்தில் நுழைந்தவர்களாயிருந்தும், தன்னுடைய பந்து ஜனங்களையும், மற்ற ஜனங்களையும் பார்த்துக்கொண்டிருந்தும், மனதில் ஆனந்தமில்லாதபடியால், இது நம்ம வீடு, இது அயலார் வீடு, இவன் நம்முடைய பந்து, இவன் பந்துவல்ல, என்பதைத் தெரிந்துகொள்ளவேயில்லை.



अष्टचत्वारिंशः सर्गः ॥ 48 ॥

तेषामेवं विषण्णानां पीडितानामतीव च ।
बाष्पविप्लुतनेत्राणां सशोकानां मुमूर्षया ॥ 1 ॥

अनुगम्य निवृत्तानां रामं नगरवासिनाम् ।
उद्गतानीव सत्त्वानि बभूवुरमनस्विनाम् ॥ 2 ॥

स्वं स्वं निलयमागम्य पुत्रदारैः समावृताः ।
अश्रूणि मुमुचुः सर्वे बाष्पेण पिहिताननाः ॥ 3 ॥

1-2. (ப-ரை) एवं- இவ்விதம், विषण्णानां- மனம் தளர்ந்தவர்களாயும், अतीव- மிகவும், पीडितानां- च- பீடையை அடைந்தவர்களாயும், बाष्पविप्लुतनेत्राणां- கண்ணீரினால் நிறைந்த கண்களையுடையவர்களாயும், सशोकानां- சோகமுடையவர்களாயும், मुमूर्षया- மரணமடைவதில் எண்ணத்தோடு, (उपलक्षितानां-கூடினவர்களாயும்,) रामं- ஸ்ரீராமனை, अनुगम्य- பின்சென்று, निवृत्तानां- திரும்பினவர்களாயும், अमनस्विनाम्- தைர்யமில்லாதவர்களுமான, नगरवासिनाम्- அந்நகரத்தில் வஸிக்கும் ஜனங்களுடைய, सत्त्वानि- ப்ராணன்கள், उद्गतानि इव- வெளிக்கிளம்பினவைபோல், बभूवुः- ஆய்விட்டன.

3. (ப-ரை) सर्वे- அவர்களெல்லோரும், स्वं स्वं- தங்கள் தங்களது, निलयं- க்ருஹத்தை, आगम्य- அடைந்து, पुत्रदारैः- புத்திரர்களாலும், பார்யைகளாலும், समावृताः- சூழப்பட்டவர்களாயும், बाष्पेण- கண்ணீரால், पिहिताननाः- மூடப்பட்ட முகங்களையுடையவர்களாய்க்கொண்டு, अश्रूणि- கண்ணீர்களை, मुमुचुः- விட்டார்கள்.

1—2. (பொ-ரை) இவ்விதம், மனம் தளர்ந்து, மிகப்பீடை அடைந்து, கண்களில் கண்ணீர் ததும்பி, மிகவும் சோகத்துடன், ப்ராணனை விட்டுவிடுவோமென்கிற எண்ணங்கொண்டும், ஸ்ரீராமனுடன் வெகு தூரம் போய் திரும்பிவந்து, தைர்யமற்றவர்களான, அந்த அயோத்திமா நகரத்தில் வஸிக்கும் ஜனங்களுடைய, ப்ராணன்கள் சரீரத்தைவிட்டு வெளிக்கிளம்பினதுகள்போலிருந்தன. ஜனங்கள் மூர்ச்சை அடைந்தார்கள் என்கிறபடி.

3 (பொ-ரை) அவர்களெல்லோரும், தங்கள் தங்கள் க்ருஹம் வந்து சேர்ந்து, புத்திரர்களோடும், பார்யைகளோடும் சூழ்ந்து கொண்டு, கண்ணீரினால் நிறைந்த முகங்களையுடையவர்களாய் கண்ணீர் விட்டார்கள்.

न चाहृष्यन्न चामोदन्वणिजो न प्रसारयन् ।
न चाशोभन्त पुण्यानि नापचन्गृहमेधिनः ॥ 4 ॥
नष्टं दृष्ट्वा नाभ्यनन्दन्विपुलं वा धनागमम् ।
पुत्रं प्रथमजं लब्ध्वा जननी नाभ्यनन्दत ॥ 5 ॥
गृहे गृहे रुदन्त्यश्च भर्तारं गृहमागतम् ।
व्यगर्हयन्त दुःखार्ता वाग्भिस्तोत्रैरिव द्विपान् ॥ 6 ॥

4. (ப-ரை) न अहृष्यन् च- (ஒருவராவது) ஸந்தோஷப்படவில்லை, न अमोदन् च- மனக்களிப்பையும் அடையவில்லை, वणिजः- வ்யாபாரிகள், (पण्यानि- சரக்குகளை) न प्रसारयन्- பரப்பவில்லை, पुण्यानि- புண்யத்தின் பலனுன, புத்திரன், பார்யை முதலானவைகள், न अशोभन्त च- விளங்கவில்லை, गृहमेधिनः- க்ருஹஸ்தர்கள், न अपचन्- சமைக்கவில்லை.

5. (ப-ரை) नष्टं- காணுமலிருந்த வஸ்துவை, दृष्ट्वा- பார்த்தும், विपुलं- அதிகமான, धनागमम् वा- தனத்தின் வரவைப்பற்றியும், न अभ्यनन्दन्- ஸந்தோஷப்படவில்லை, जननी- தாயார், प्रथमजं- முதலில் பிறந்த, पुत्रं- பிள்ளையை, लब्ध्वा- அடைந்து, न अभ्यनन्दत- ஸந்தோஷப்படவில்லை.

6. (ப-ரை) (स्त्रियः- ஸ்த்ரீகள்), गृहे गृहे- ஒவ்வொரு வீடுகளிலும், रुदन्त्यः च- அழுது கொண்டும், दुःखार्ताः- துக்கத்தினல் பீடிக்கப்பட்டும், गृहं आगतम्- வீட்டிற்கு வந்திருக்கின்ற, भर्तारं- தங்கள் கணவனை, द्विपान्- யானைகளை, तोत्रैः इव- மாவெட்டிகளால் வருத்தப் படுத்துவதுபோல், वाग्भिः- வார்த்தைகளினுல், व्यगर्हयन्त- நிந்தித்தார்கள்.

4. (பொ-ரை) ஒருவராவது ஸ்நேஹிதன் முதலானவர்களைப்பார்த்தும் ஸந்தோஷப்படவில்லை. அபூர்வமான வஸ்து கிடைத்ததிலும் ஸந்தோஷப்படவில்லை. வ்யாபாரிகள் விற்பனைக்காக கடையில் ஸாமான்களை வைக்கவில்லை. புண்யத்தின் பலனுன புத்திர, களத்திரம் முதலானவைகள் விளங்கவில்லை, க்ருஹஸ்தர்கள் சமயல் செய்யவில்லை.

5. (பொ-ரை) நெடுநாள் காணுமற்போயிருந்த வஸ்து கிடைத்தைப்பற்றியோ, அதிகமான நிதி முதலானது கிடைத்ததைப்பற்றியோ, ஒருவரும் ஸந்தோஷப்படவில்லை. முதற் கர்ப்பம் புத்திரனைப் பிறந்தும் அதைப்பற்றி தாயாரும் ஸந்தோஷப்படவிலலை.

6. (பொ-ரை) ஸ்த்ரீகளெல்லோரும் அவரவர்கள் வீடுகளில் அழுதுகொண்டும், அதிகமான சோகத்தை அடைந்தும், வீட்டிற்கு வந்திருக்கிற பர்த்தாக்களைப் பார்த்து, மாவெட்டிகளால் யானைகளை வருத்தப்படுத்துவதுபோல், கடுமையான வார்த்தைகளைச்சொல்லி நிந்தித்தார்கள்.

किं नु तेषां गृहैः कार्यं किं दारैः किं धनेन वा ।
पुत्रैर्वा किं सुखैर्वापि ये न पश्यन्ति राघवम् ॥ 7 ॥

एकः सत्पुरुषो लोके लक्ष्मणः सह सीतया ।
योऽनुगच्छति काकुत्स्थं रामं परिचरन्वने ॥ 8 ॥

आपगाः कृतपुण्यास्ताः पद्मिन्यश्च सरांसि च ।
येषु स्नास्यति काकुत्स्थो विगाह्य सलिलं शुचि ॥ 9 ॥

---

7. (ப-ரை) ये- யாவரொருவர்கள், राघवं- ராகவனை, न पश्यन्ति- பார்க்கவில்லையோ, तेषां- அவர்களுக்கு, गृहैः- க்ருஹங்களால், किं नु कार्यं- என்ன ஆகவேண்டியது, दारैः- பார்யைகளால், किं- என்ன ஆகவேண்டியது, धनेन वा- தனத்தினாலாவது, किं- என்ன ஆகவேண்டியது, पुत्रैः वा- புத்திரர்களினாலாவது, किं- என்ன ஆகவேண்டியது, सुखैः अपि वा- மற்ற ஸுகங்களினாலாவது, என்ன ஆகவேண்டியது.

8. (ப-ரை) यः लक्ष्मणः- யாவனொரு இலக்குமணன், काकुत्स्थं- ககுஸ்த்தவம்சத்தில் அவதரித்த, रामं- ஸ்ரீராமனை, सीतया सह- ஸீதையுடன்கூட, वने- வநத்தில், परिचरन्- சிச்ருஷை செய்வதற்காக, अनुगच्छति- பின் செல்லுகின்றனரோ, सः एकः- அவர் ஒருவரேதான், लोके- உலகத்தில், सत्पुरुषः- பாக்யம் செய்த புருஷன்.

9. (ப-ரை) काकुत्स्थः- காகுஸ்த்தர், शुचि- சுத்தமான, सलिलं- ஜலத்தை, विगाह्य- ப்ரவேசித்து, येषु- யாவதொரு, நதிமுதலானவைகளில், स्नास्यति- ஸ்நானம் பண்ணுவாரோ, ताः आपगाः- அந்த நதிகளும், पद्मिन्यः च- தாமரை ஓடைகளும் कृतपुण्याः- பாக்யம் செய்தவைகள், सरांसि च- அந்தக்குளங்களும், (कृतपुण्यानि- பாக்யம் செய்தவைகள்.

---

7. (பொ-ரை) ஸ்ரீராமனைப்பாராதவர்களுக்கு வீடுகளினாலாவது, பார்யைகளினாலாவது, பொருளினாலாவது, புத்திரர்களினாலாவது, மற்ற ஸுகங்களினாலாவது என்ன ஆக வேண்டியது.

அளவிறந்த கருணையினால் ஸகல ப்ராணிகளையும், ஸம்ஸார ஸமுத்திரத்திலிருந்து கரையேற்றுவதற்காக மனுஷ்ய ரூபமாக அவதாரம் செய்து, தங்கள் தேசத்திலும், நகரத்திலுமிருக்கின்ற ஸ்ரீராமரூபியான பகவானை, பரமானந்தத்துடன் ஸேவித்து ஆனந்தமடையாமல், புத்திர, தாரம், முதலானவைகளிலே ஆசைகொண்டவர்கள் மிகவும் பாபமுள்ளவர்களாகையால், மறுபடியும் ஸம்ஸாரத்திலே உழலுவார்கள், என்று தீர்த்தீயத்தில் இந்த சுலோகத்தின் ரஹஸ்ய தாத்பர்யம் எழுதப்பட்டிருக்கிறது.

8. (பொ-ரை) ககுத்ஸ்த வம்சத்தில் அவதரித்த ஸ்ரீராமனை, ஸீதையுடன் கூட வனத்தில் சிச்ருஷை செய்வதற்காக ஸ்ரீராமனுடன் சென்ற அந்த இலக்குமணன் ஒருவர்தான் உலகத்தில் ஸத்புருஷன்.

9. (பொ-ரை) இலக்குமணனுடைய பாக்யத்தைப்பற்றி நாம் புகழ்வது

शोभयिष्यन्ति काकुत्स्थमटव्यो रम्यकाननाः ।
आपगाश्च महानूपाः सानुमन्तश्च पर्वताः ॥ 10 ॥
काननं वापि शैलं वा यं रामोभिगमिष्यति ।
प्रियातिथिमिव प्राप्तं नैनं शक्ष्यन्त्यनर्चितुम् ॥ 11 ॥
विचित्रकुसुमापीडाः बहुमञ्जरिधारिणः ।
राघवं दर्शयिष्यन्ति नगा भ्रमरशालिनः ॥ 12 ॥

10. (ப-ரை) रम्यकाननाः- அழகான மரங்களின் வரிசைகளையுடைய, अटव्यः- அரண்யங்களும், महा अनूपाः- விசாலமான ஜலக்கரைகளையுடைய, आपगाः च-நதிகளும், सानुमन्तः- அழகான தாழ்வரைகளையுடைய, पर्वताः च-- பர்வதங்களும், काकुत्स्थं- ஸ்ரீராமனை, शोभयिष्यन्ति- ஸந்தோஷப்படுத்தப் போகின்றன.

11. (ப-ரை) रामः-ஸ்ரீராமன், यत् काननं वा-எந்த காட்டையோ, यं शैलं वा अपि- எந்த பர்வதத்தையோ, अभिगमिष्यति- நோக்கிச்செல்லுகிறாரோ, (तत्- அந்தக்காடும் सः- அந்தப்பர்வதமும்), प्राप्तं- தம்மிடம் வந்திருக்கிற, (एनं- இவரை), प्रियातिथिं इव- ப்ரியமான விருந்தாளியைப்போல, अनर्चितुम्- பூஜிக்காமலிருப்பதற்கு, न शक्ष्यन्ति- முடியாது.

12. (ப-ரை) विचित्र कुसुमा पीडाः- விசித்திரங்களான புஷ்பங்களால் சிரோ பூஷணங்கொண்டவைகளாய், बहुमञ्जरिधारिणः- அதிகமான பூங்கொத்துகளை தரித்தவை களாய், भ्रमरशालिनः- வண்டுகளோடே கூடினவைகளுமான, नगाः- வ்ருக்ஷங்கள், राघवं- ராமனைக்குறித்து. दर्शयिष्यन्ति- (தங்கள் உருவங்களைக்) காட்டப்போகின்றன.

இருக்கட்டும் காகுஸ்த்தர் வனத்தில் நதிகளிலும், தாமரை ஓடைகளிலும், குளங்களிலும் இறங்கி பரிசுத்தமான தீர்த்தங்களில் ஸ்நாநம் செய்யப்போகிறபடியால், அசேதனங்களான அந்நதிகள், தாமரை ஓடைகள், குளங்கள் இவைகளுடைய பாக்யத்தை யாரால் புகழ முடியும்.

10. (பொ-ரை) அழகான மரங்களின் கூட்டங்களையுடைய காடுகளும், விசாலமான கரைகளையுடைய நதிகளும், அழகான தாழ்வரைகளையுடைய பர்வதங்களும், ஸ்ரீராமனுக்கு மிகவும் ஆனந்தத்தை விளைவிக்கப்போகின்றன.

11. (பொ-ரை) ஸ்ரீராமன் எந்தக்காடுகளையோ, எந்த மலைகளையோ நோக்கிச்செல்லுகிறாரோ, அந்த மலைகளும், காடுகளும், ப்ரியமான அதிதிபோல் வந்திருக்கிற இவரை பூஜிக்காமலிருக்குமா!

12. (பொ-ரை) வ்ருக்ஷங்கள் விசித்திரமான புஷ்பங்களால் சிரஸில் அலங்காரம் செய்துகொண்டும், மிகுந்த பூங்கொத்துகளை தரித்துக்கொண்டும், வண்டுகள் ரீங்காரம் செய்யப்பெற்றும் ஸ்ரீராமன் முன்னே நிற்கப்போகின்றன.

வ்ருக்ஷங்கள் ஸ்ரீராமனை பரமாத்மாவாக தெரிந்துகொண்டு, தங்களிடமிருக்கிற வண்டுகளின் ரீங்காரத்தை, ஸ்தோத்ர சப்தங்களாகக்கொண்டும், தங்கள் கிளைகளா

अकाले चापि मुख्यानि पुष्पाणि च फलानि च ।
दर्शयिष्यन्त्यनुक्रोशाद्गिरयो राममागतम् ॥ 13 ॥
प्रस्रविष्यन्ति तोयानि विमलानि महीधराः ।
विदर्शयन्तो विविधान्भूयश्चित्रांश्च निर्झरान् ॥
पादपाः पर्वताग्रेषु रमयिष्यन्ति राघवम् ॥ 14 ॥
यत्र रामो भयं नात्र नास्ति तत्र पराभवः ।
स हि शूरो महाबाहुः पुत्रो दशरथस्य च ॥ 15 ॥

---

13. (ப-ரை) गिरयः- பர்வதங்கள், आगतं- (தங்களிடம்) வந்திருக்கிற, रामं- ஸ்ரீ ராமனைக்குறித்து, अनुक्रोशात्- அன்பினால், अकाले चापि- அகாலத்திலும், मुख्यानि- ச்ரேஷ்டங்களான, पुष्पाणि च- புஷ்பங்களையும், फलानि च- பலங்களையும், दर्शयिष्यन्ति- காட்டப்போகின்றன.

14. (ப-ரை) विविधान्- நானுவிதங்களாயும், भूयः चित्रान् च- மிகவும் ஆச்சர்யங்களுமான, निर्झरान्- மலை அருவிகளை, विदर्शयन्तः- வெளிக்காட்டுகின்ற, महीधराः- மலைகள், विमलानि- நிர்மலங்களான, तोयानि- தீர்த்தங்களை, प्रस्रविष्यन्ति- பெருக்கப்போகின்றன, पर्वताग्रेषु- மலை உச்சிகளில் (இருக்கின்ற), पादपाः- வ்ருக்ஷங்கள், राघवं- ஸ்ரீராகவனை, रमयिष्यन्ति- ஸந்தோஷப்படுத்தும்.

15. (ப-ரை) रामः- ஸ்ரீராமன், यत्र- எவ்விடத்தில், (वर्तते- இருக்கிறாரோ), अत्र- அவ்விடத்தில், भयं- அச்சமானது, न- இல்லை, तत्र- அவ்விடத்தில், पराभवः- அவமதிப்பும், न अस्ति- இல்லை, हि- ஏனெனன்றால், सः- அவர், शूरः- மஹாசூரர், महाबाहुः- பெருந்தோள்களையுடையவர், दशरथस्य- தசரதருடைய, पुत्रः च- புத்ரருமானவர்

---

கிற கைகளினால் பூங்கொத்துகளை எடுத்துக்கொண்டு ஸ்ரீராகவனை அர்ச்சனை செய்யப்போகின்றன. என்று தீர்த்தியத்தில் காணப்படுகிறது.

13. (பொ-ரை) ஸ்ரீராமன் வனத்தில் செல்லுங்காலத்தில் அங்கிருக்கும் பர்வதங்களெல்லாம், அவரிடத்தில் மிக அன்பினால் காலமல்லாக் காலத்திலும், உயர்ந்த புஷ்பங்களையும், பழங்களையும், ஸ்ரீராமனுக்குக கொடுக்கும்.

14. (பொ-ரை) மிகவும் ஆச்சர்யங்களுமான மலை அருவிகளை காட்டுகின்ற பர்வதங்கள் ஸ்ரீராமனுக்காக தெளிந்த தீர்த்தங்களை பெருக்கப்போகின்றதுகள், மலைகளின் உச்சிகளிலிருக்கிற வ்ருக்ஷங்களும் ஸ்ரீராமனுக்கு ஸந்தோஷத்தை உண்டு பண்ணப்போகின்றன.

15. (பொ-ரை) அந்த ராமன் மஹாசூரனுமாய், பெருந்தோள்களையுடையவருமாய், தசரத மஹாராஜரின் புத்திரருமானபடியால் அவர் இருக்குமிடத்தில், ஒருவித பயமும் கிடையாது, ஒருவரால் அவமதிப்பும் கிடையாது.

पुरा भवति नो दूरादनुगच्छाम राघवम् ॥ 16 ॥
पादच्छाया सुखा भर्तुस्तादृशस्य महात्मनः ।
स हि नाथो जनस्यास्य स गतिः स परायणम् ॥ 17 ॥
वयं परिचरिष्यामः सीतां यूयं तु राघवम् ।
इति पौरस्त्रियो भर्तृन्दुःखार्तास्तत्तदब्रुवन् ॥ 18 ॥

16. (ப-ரை) सः- அவர், नः- நமக்கு, दूरात्- வெகு தூரமாக, पुरा भवति- ஆகி விடுவார், ततः- ஆதலால், राघवम्- ராகவனை, अनुगच्छाम- பின்செல்லுவோம்.

17. (ப-ரை) तादृशस्य- அப்படிப்பட்ட, महात्मनः- மஹாத்மாவான, भर्तुः- நாதனுடைய, पादच्छाया- பாதநிழலையானது, सुखा- ஸுகத்திற்குக்காரணம், सः- அவர், अस्य जनस्य- இந்த ஜனத்திற்கு, नाथः- நாதன், सः- அவர், गतिः- கதி, सः- அவர், परायणम्- சிறந்த ஆதாரம்.

18 (ப-ரை) वयं- நாங்கள், सीतां- ஸீதையை, परिचरिष्यामः- உபசரிப்போம், यूयं तु- நீங்களோவென்றால், राघवम्- ராகவனை, (परिचरिष्यथ- உபசரியுங்கள்), इति- என்று, पौरस्त्रियः- பட்டணத்து ஸ்த்ரீகள், दुःखार्ताः सत्यः- துக்கத்தினால் பீடிக்கப்பட்டவர்களாய்க்கொண்டு, भर्तृन्- (தங்கள்) பர்த்தாக்களைக்குறித்து, तत् तत्- அதனை, अब्रुवन्- சொன்னார்கள்.

16. (பொ-ரை) அந்த ராகவன் வெகுதூரம்போய்விடுவார், ஆதலால் நாம் அதற்கு முன்னமேயே பின் செல்லுவோம. "अदूरात्" என்று பதம்பிரித்துக் கொண்டு" ராகவன் ஸமீபமாகத்தான் போய்க்கொண்டிருப்பார்" என்று தீர்த்திய வ்யாக்யானம்.

17. (பொ-ரை) மஹாத்மாவான அப்படிப்பட்ட ஸ்வாமியினுடைய பாத நிழலையானது ஸுகத்திற்கு ஸாதனமாயிருக்கிறது, இந்த ஜனத்திற்கு அவரே நாதன், அவர்தான்முக்யமானகதி, அவரேதான் சிறந்த ஆதாரமுமானவர்.

18. (பொ-ரை) நாங்கள் பெண்டுகளாகையால் ஸீதா தேவிக்கு பணிவிடை செய்கிறோம், நீங்கள் புருஷர்களாதலால் ராகவனுக்குப்பணிவிடை செய்யுங்கள், என்று அந்நகரத்து ஸ்த்ரீகளெல்லோரும துக்கத்தினால் பீடிக்கப்பட்டு தங்கள் தங்கள் பர்த்தாக்களைப்பார்த்து அவரவர்களுக்குத் தோன்றியபடி சொன்னார்கள்.

युष्माकं राघवोऽरण्ये योगक्षेमं विधास्यति ।
सीता नारीजनस्यास्य योगक्षेमं करिष्यति ॥ 19 ॥
को न्वनेनाप्रतीतेन सोत्कण्ठितजनेन च ।
सम्प्रीयेतामनोज्ञेन वासेन हृतचेतसा ॥ 20 ॥
कैकेय्या यदि चेद्राज्यं स्यादधर्म्यमनाथवत् ।
न हि नो जीवितेनार्थः कुतः पुत्रैः कुतो धनैः ॥ 21 ॥

---

19. (ப-ரை) राघवः- ராமன், अरण्ये- அரண்யத்தில், युष्माकं- உங்களுக்கு, योगक्षेमं- யோக க்ஷேமங்களை, विधास्यति- செய்வார், सीता- ஸீதையானவள், अस्य नारीजनस्य- இந்த ஸ்த்ரீ ஜனத்திற்கு, योग क्षेमम्- யோக க்ஷேமத்தை, करिष्यति- செய்வாள்.

20. (ப-ரை) अप्रतीतेन- ப்ரசஸ்தமல்லாததாய், (மிகவும் இளப்பமானதாய) सोत्कण्ठितजनेन- துக்கத்தை நினைத்துக் கொண்டிருக்கிற ஜனங்களையுடையதாய, अमनोज्ञेन- மனதிற்கு ஒப்பாததாய், हृतचेतसा- புத்தியைக்கெடுக்கின்றதான, अनेन वासेन நாம் வஸிக்கின்ற இந்த நகரத்தினால், को नु- எந்த ஜனமானது, सम्प्रीयेत- ப்ரீதியடையும்.

21. (ப-ரை) राज्यं- இந்த ராஜ்யமானது, कैकेय्याः- கைகேயிக்கு, यदि चेत् ஆகுமேயானால், अधर्म्यं- அதர்மமுடையதாகவும், अनाथवत्- திக்கற்றதாகவும், स्यात् ஆய்விடும், (तस्मिन्- அந்த ராஜ்யத்தில்), नः- நமக்கு, जीवितेन- ஜீவனத்தினால், अर्थः ப்ரயோஜனம், न हि- இல்லை, पुत्रैः- பிள்ளைகளினால், कुतः- (ப்ரயோஜனம்) ஏது, धनैः தனங்களினால், कुतः- (ப்ரயோஜனம்) ஏது.

---

19. (பொ-ரை) அரண்யத்தில், புருஷர்களாகிய உங்களுக்கு ராமன் யோகக்ஷேமங்களைச்செய்வார். இந்த ஸ்த்ரீஜனத்திற்கு ஸீதை யோகக்ஷேமத்தைச்செய்வாள்.

20. (பொ-ரை) ஸாதுக்களுக்குத் தகாததாய், எப்பொழுதும துக்கத்தையே நினைத்துக்கொண்டிருக்கிற ஜனங்களையுடையதாய், மனதிற்கு மிகவும் பயத்தை உண்டுபண்ணக்கூடியதாய், புத்தியை அழிக்கக்கூடியதுமான இந்நகர வாஸம் செய்வதில் யாருக்குத்தான் ப்ரீதியுண்டாகும்; ஆகையால் இந்நகரவாஸத்தை விட்டுவிடவேணும்.

21. (பொ-ரை) இந்த ராஜ்யம் கைகேயிக்கு வந்துவிடுமேயானால், தர்மம் கழிந்து, அதர்மங்கள் மிகுந்து திக்கற்றதாய் ஆகிவிடும். ஆதலால் இந்த ராஜ்யத்தில் நாம் உயிருடனிருப்பதினால் என்னப்ரயோஜனம், பிள்ளைகளினால் அல்லது பொருள்களினால் தான் என்னப்ரயோஜனம.

योगः-अप्राप्तद्रव्य प्राप्तिः- கிடைக்காத வஸ்து கிடைப்பது.
क्षेमः-प्राप्तस्य रक्षणं- கிடைத்த வஸ்துவைக் காப்பாற்றுவது.

481



यया पुत्रश्च भर्ता च त्यक्तावैश्वर्यकारणात् ।
क सा परिहरेदन्यं कैकेयी कुलपांसनी ॥ 22 ॥
कैकेय्या न वयं राज्ये भृतका निवसेम हि ।
जीवन्त्या जातु जीवन्त्यः पुत्रैरपि शपामहे ॥ 23 ॥
या पुत्रं पार्थिवेन्द्रस्य प्रवासयति निर्घृणा ।
कस्तां प्राप्य सुखं जीवेदधर्म्यां दुष्टचारिणीम् ॥ 24 ॥

22. (ப-ரை) यया- யாதொருவளால், ऐश्वर्यकारणात्- ஐச்வர்யத்தின் நிமித்தமாக, पुत्रः च- புத்திரனும், भर्ता च- பர்த்தாவும், त्यक्तौ- விடப்பட்டார்களோ, कुलपांसनी- குலத்திற்குப் பழி விளைக்கின்ற, सा कैकेयी- அந்த கைகேயியானவள், अन्यं कं- வேறு எவனை, परिहरेत्- (ஆபத்தில் நின்றும்) ரக்ஷிப்பாள்.

23. (ப-ரை) कैकेय्याः- கைகேயியானவள், जीवन्त्याः सत्याः- ஜீவித்திருக்கும் காலத்தில், राज्ये- (அவளது) ராஜ்யத்தில், वयं- நாங்கள், भृतकाः- கூலிக்காரர்களாக, जीवन्त्यः- ஜீவித்துக்கொண்டு, जातु- ஒருக்காலும், न निवसेम हि- வஸிக்கமாட்டோம், पुत्रैः अपि- பிள்ளைகள் மேலும், शपामहे- ஆணையிட்டுச்சொல்லுகிறோம்.

24. (ப-ரை) या- எவளொருவள், निर्घृणा सती- கருணையற்றவளாய், पार्थिवेन्द्रस्य- ராஜேந்திரனுடைய, पुत्रं- புத்திரனை, प्रवासयति- ஊரைவிட்டுத் துறத்துகிறளோ, अधर्म्यां- அதர்மமுடையவளாயும், दुष्टचारिणीम्- துஷ்ட நடத்தையுமுடைய, तां- அவளை, प्राप्य- அடைந்து, कः- யார், सुखं- ஸௌக்யமாக, जीवेत्- பிழைப்பான்.

22. (பொ-ரை) ஐச்வர்யத்திற்காக புத்திரனை ராமனையும், பர்த்தாவான தசரத மஹாராஜனையும் கைவிட்ட, குலக்கேடியான அந்த கைகேயி, வேறுயாரைத்தான் கைவிடமாட்டாள், (ரக்ஷிப்பாள்).

23. (பொ-ரை) கைகேயி, உயிருடன் இருக்கும்காலத்தில் அவள் ராஜ்யத்தில் நாங்கள் வேலை செய்து கூலிவாங்கிக்கொண்டு வாஸம் செய்யவேமாட்டோம், பிள்ளைகள்மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறோம்.

24. (பொ-ரை) யாதொருவள் கருணையில்லாமல் ராஜேந்திரனை தசரத குமாரனை நகரத்தைவிட்டுத் தொரத்திவிட்டாளோ, அவ்விதம் கெட்ட நடத்தையுள்ளவளும், அதர்மிஷ்டையுமான அவளிடமிருந்து யார்தான் ஸௌக்யமாக ஜீவிப்பார்.

उपद्रुतमिदं सर्वमनालम्बमनायकम् ।
कैकेय्या हि कृते सर्वं विनाशमुपयास्यति ॥ 25 ॥
न हि प्रव्राजिते रामे जीविष्यति महीपतिः ।
मृते दशरथे व्यक्तं विलापस्तदनन्तरम् ॥ 26 ॥
ते विषं पिबतालोड्य क्षीणपुण्याः सुदुर्गताः ।
राघवं वानुगच्छध्वमश्रुतिं वापि गच्छत ॥ 27 ॥

---

25. (ப-ரை) इदं सर्वं- இது முழுவதும், उपद्रुत- பீடிக்கப்பட்டும், अनालम्बं- ஆதாரமில்லாததும், अनायकम्- நாதனில்லாமலுமிருக்கிறது, कैकेय्याः- கைகேயியினுடைய, कृते- நிமித்தமாக, सर्वं- எல்லாம், विनाशं- நாசத்தை, उपयास्यति हि- அடையப் போகிறதல்லவா.

26. (ப-ரை) रामे- ஸ்ரீராமன், प्रव्राजिते सति- காட்டுக்குப்போனவளவில், महीपतिः- அரசன், न जीविष्यति हि- உயிருடன் இருக்கப்போகிறதேயில்லை, दशरथे- தசரத மஹாராஜர், मृते सति- மரித்தவளவில், तदनन्तरम्- அதன்பிறகு, विलापः- விநாசம்தான், व्यक्तं- நிச்சயம். विलीपः- என்று தீர்த்தியத்தில் காண்கிறது.

27. (ப-ரை) क्षीणपुण्याः- புண்யம் குறைந்தவர்களாய், सुदुर्गताः- மிகவும் ஏழைகளுமான, ते- அப்படிப்பட்ட நீங்கள், आलोड्य- ஆராய்ந்து பார்த்து, विषं- விஷத்தை, पिबत- குடித்து விடுங்கள், (அல்லது) राघवं वा- ஸ்ரீராகவனையாவது, अनुगच्छध्वं- பின் செல்லுங்கள், अश्रुतिं वा अपि- உங்கள் பேர்கேட்க்காத தேசத்தையாவது, गच्छत- அடையுங்கள்.

25. (பொ-ரை) இதெல்லாம் துக்கத்தினால் பீடிக்கப்பட்டதாகவும், ஆதாரமில்லாததாகவும், நாதனற்றதாகவும், (ஆய் விட்டது) ஆகலால் எல்லாம் கைகேயி ஒருவளால் அழிந்து போய்விடப்போகிறது.

26. (பொ-ரை) ஸ்ரீராமன் வநவாஸம் சென்றபிறகு தசரத மஹாராஜர் பிழைத்திருக்கப்போகிறதில்லை. தசரதர் மரித்துவிட்டால் அதன் பிறகு விநாசம் தான், இது நிச்சயம்.

27. (பொ-ரை) புண்யம் குறைந்துவிட்டபடியாலும், ராமனென்கிற பெரும் செல்வத்தையிழந்து ஏழைகளாய் விட்டபடியாலும், நீங்கள் நன்றாக ஆலோசித்துப் பார்த்து விஷத்தையாவது குடித்து ப்ராணனை விடுங்கள். அல்லது ராகவனுடனாவது வனம் செல்லுங்கள். அல்லது கண் காணாமலும் உங்களுடைய பேர் கேளாமலுமிருக்கிற தேசத்திற்காவது போய் விடுங்கள்.

मिथ्या प्रव्राजितो रामः ससीतः सहलक्ष्मणः ।
भरते संनिसृष्टाः स्मः सौनिके पशवो यथा ॥ 28 ॥
पूर्णचन्द्राननः श्यामो गूढजत्रुररिंदमः ।
आजानुबाहुः पद्माक्षो रामो लक्ष्मणपूर्वजः ॥ 29 ॥
पूर्वाभिभाषी मधुरः सत्यवादी महाबलः ।
सौम्यश्च सर्वलोकस्य चन्द्रवत्प्रियदर्शनः ॥ 30 ॥

---

28. (ப-ரை) रामः– ஸ்ரீராமன், ससीतः- ஸீதையுடனும், सहलक्ष्मणः- இலக்குமணனுடனும், मिथ्या प्रव्राजितः- மோசமாகக் காட்டிற்குத் துறத்தப்பட்டார், सौनिके- பசுக்களை கொலை செய்கிறவன் (கசாப்புக்காரன்) இடத்தில், पशवः यथा- பசுக்கள் விடப்பட்டது போல், (राज्ञा- அரசனால்) நாம், भरते- பரதனிடத்தில், संनिसृष्टाः स्मः- ஒப்பிவிக்கப்பட்டோம்.

29. (ப-ரை) लक्ष्मणपूर्वजः- இலக்குமணனுக்கு முன்பிறந்தவரான, रामः- ஸ்ரீராமன், पूर्णचन्द्राननः- பூர்ண சந்திரன்போன்ற முகமுடையவர், श्यामः- ச்யாமள வர்ணமுடையவர், गूढजत्रुः- மறைந்த தோள் எலும்புகளை உடையவர், अरिंदमः– சத்ருக்களை அடக்குகின்றவர், आजानुबाहुः– முழங்கால் வரையில் (தொங்குகிற) கைகளையுடையவர், पद्माक्षः- தாமரை மலர் போன்ற கண்களையுமுடையவர்.

30. (ப-ரை) पूर्वाभिभाषी– (எல்லோரிடத்திலும்) முன்னதாய்ப்பேசுகிறவர், मधुरः- இனிதாகப் பேசுகின்றவர், सत्यवादी- ஸத்யத்தையே பேசும் ஸ்வபாவமுடையவர், महाबलः- அதிகமான சரீர பலமுடையவர். सौम्यः च– ஸௌமுகரானவர் (கடுந்தன்மையில்லாதவர்), सर्वलोकस्य– எல்லா லோகத்திற்கும், चन्द्रवत्- சந்திரன்போல், प्रियदर्शनः- ப்ரியமான காக்ஷியை யுடையவர்.

28. (பொ-ரை) தசரத மஹாராஜர், ஸீதையுடனும், இலக்குமணனுடனும் ராமனை வஞ்சனையாகக்காட்டிற்குத்துறத்திவிட்டு, கசாப்புக்காரனிடத்தில் ஆடுமாடுகளை விடுவதுபோல் பரதனிடத்தில் நம்மை விட்டுவிட்டார்.

29. (பொ-ரை) இலக்குமணனுக்கு ஜ்யேஷ்டப்ராதாவான ஸ்ரீராமன், பூர்ண சந்திரன் போன்ற திருமுகமண்டலத்தையுடையவர், நீலமேகம்போல் ச்யாமளமான வர்ணமுடையவர், மறைந்த தோளகளின் எலும்பையுடையவர், சத்ருக்களை அடக்கும் தன்மையுள்ளவர், முழங்கால்வரை நீண்ட திருக்கைகளையுடையவர், செந்தாமரை மலர் போன்ற அழகாய திருக்கண்களையுடையவர்

30 (பொ-ரை) ஸர்வ ப்ராணிகளிடத்திலும தனக்கு அன்பு மிகுந்திருக்கிறபடியால் எல்லோரிடத்திலுமே முன்னதாகப்பேசுகிறவர். இனிதாகப்பேசுகிறவர், ப்ராணிகளுக்கு ஹிதமான வார்த்தையையே சொல்லும் ஸ்வபாவமுடையவர், மஹா பலமுடையவர், ஸௌமுகமாயிருக்கிறவர், ஸர்வ லோகத்திற்தும் சந்திரனைப் போல் பார்க்கும்பொழுதே ஸந்தோஷத்தை உண்டுபண்ணுகிறவர்.

नूनं पुरुषशार्दूलो मत्तमातङ्गविक्रमः ।
शोभयिष्यत्यरण्यानि विचरन्स महारथः ॥ 31 ॥

तास्तथा विलपन्त्यस्तु नगरे नागरस्त्रियः ।
चुक्रुशुर्दुःखसंतप्ता मृत्योरिव भयागमे ॥ 32 ॥

इत्येवं विलपन्तीनां स्त्रीणां वेश्मसु राघवम् ।
जगामास्तं दिनकरो रजनी चाभ्यवर्तत ॥ 33 ॥

31. (ப-ரை) मत्तमातङ्गविक्रमः- மதயானை போல் நடையை யுடையவரும், महारथः- மஹாரதருமான, पुरुषशार्दूलः- புருஷோத்தமன், विचरन् सन्- ஸஞ்சரித்துக்கொண்டு, अरण्यानि- வனங்களை, शोभयिष्यति- அலங்கரிக்கப்போகிறார், नूनं- நிச்சயம்.

32. (ப-ரை) तथा- அவ்விதம், नगरे- அயோத்திமா நகரத்தில், नागरस्त्रियः- நகரத்து ஸ்த்ரீகள், विलपन्त्यः- அழுதுகொண்டும், दुःखसन्तप्ताः- துக்கத்தினால் பரிதபித்துக் கொண்டும், मृत्योः- மரணத்திற்கு (காரணமான), भयागमे (सति इव)- பயம் நேரிடும் காலத்தில் கூப்பிடுவதுபோல, चुक्रुशुः- உறக்கக் கூப்பிட்டார்கள்.

33. (ப-ரை) इति एवं- என்று இவ்வாறு, राघवम्- ராகவனைக்குறித்து, वेश्मसु- வீடுகளில், स्त्रीणां- ஸ்த்ரீகள், विलपन्तीनां (सतीनां)- அழுதுகொண்டிருக்கும்பொழுது, दिनकरः- ஸூர்யன், अस्तं- அஸ்தமனத்தை, जगाम- அடைந்தார், रजनी च- இரவும், अभ्यवर्तत- வந்துவிட்டது.

31. (பொ-ரை) மதயானைப்போல் அசைந்த நடையையுடையவரும், மஹாரதருமான அந்த புருஷோத்தமன், வநத்தில் ஸஞ்சரித்துக்கொண்டே, வநத்திற்கு ஒருவிதமான சோபையை உண்டாக்குவர், நிச்சயம்.

32. (பொ-ரை) இவ்விதம் அந்த அயோத்திமா நகரத்தில், நகரத்து ஸ்த்ரீகளெல்லோரும் அழுதுகொண்டு மிகவும் துக்கத்தினால் பரிதாபமடைந்து மரணத்திற்குக்காரணமான பயம் நேர்ந்தால் எவ்விதம் கூப்பிடுவார்களோ அவ்வாறு கூப்பிட்டார்கள், (கதறினார்கள்).

33. (பொ-ரை) என்று இவ்வாறு, வீடுகள்தோறும், நகரத்து ஸ்த்ரீகள் ஸ்ரீராமனைக்குறித்து அழுதுகொண்டிருக்கும்பொழுது, ஸூர்யனும் அஸ்தமனமாகி, இரவும் வந்துவிட்டது.

नष्टज्वलनसंपाता प्रशान्ताध्यायसत्कथा ।
तिमिरेणाभिलिप्तेव सा तदा नगरी बभौ ॥ 34 ॥
उपशान्तवणिक्पण्या नष्टहर्षा निराश्रया ।
अयोध्या नगरी चासीन्नष्टतारमिवाम्बरम् ॥ 35 ॥
तथा स्त्रियो रामनिमित्तमातुरा यथा सुते भ्रातरि वा विवासिते ।
विलप्य दीना रुरुदुर्विचेतसः सुतैर्हि तासामधिको हि सोऽभवत् ॥ 36 ॥

34. (ப-ரை) तदा- அப்பொழுது, नष्टज्वलनसम्पाता- ஹோமத்திற்காக அக்கி மூட்டுவது இல்லாததும், प्रशान्त अध्याय सत्कथा- வேதம் ஓதுவதும், புராணம் முத லான கதைகள் படிப்பதுமில்லாமலிருக்கிற, सा नगरी- அந்த அயோத்திமா நகரமா னது, तिमिरेण- இருளினால், अभिलिप्ता इव- நன்றாகப்பூசப்பட்டதுபோல், बभौ- தோன் றியது.

35. (ப-ரை) उपशान्तवणिक्पण्या- வ்யாபாரிகளால் கடை வைக்கப்படாததும், नष्टहर्षा- ஸந்தோஷமிழந்ததும், निराश्रया- ராமனென்கிற ஆதாரமில்லாததுமான, अयोध्या नगरी- அயோத்திமா நகரமானது, नष्टतारं- நக்ஷத்திரங்களில்லாத, अम्बरं इव च- ஆகா யம் போலவும், आसीत्- ஆய் விட்டது.

36. (ப-ரை) सुते- புத்திரனாவது, भ्रातरि वा- ப்ராதாவாவது, विवासिते (सति)- காட்டிற்குத் துறத்தப்பட்டவளவில், यथा- எப்படி (வருத்தப்படுவார்களோ), तथा- அப்படி, स्त्रियः- நகரத்து ஸ்த்ரீகள், रामनिमित्त- ராமனுக்காக, आतुराः (सत्यः)- வருத்த மடைந்தவர்களாய்க்கொண்டு, दीनाः- மனம் தளர்ந்தவர்களாக, विलप्य- கதறி, विचेतसः- ஜ்ஞானமில்லாதவர்களாய், रुरुदुः- அழுதார்கள், हि- ஏனென்றால், सः- அந்த ராகவன், तासां- அந்த ஸ்த்ரீகளுக்கு, सुतैः- (सुतेभ्यः पञ्चम्यर्थे तृतीया)- பிள்ளைகளைக்காட்டிலும், अधिकः- அதிகமாக, अभवत् हि- இருந்தானல்லவா.

34. (பொ-ரை) அப்பொழுது, ஹோமம் செய்வதற்காக அக்னியை ஜ்வலிப் பிக்காமலும், வேதம் ஓதுவதும், புராணம் படிப்பதும் இல்லாமலிருக்கிற அந்நகர மானது நாற் புறங்களிலும் இருள் மூடியதுபோலிருந்தது.

35. (பொ-ரை) அப்பொழுது, வியாபாரிகள் ஒருவரும் கடைவைக்கவில்லை, ஒருவருக்காவது மனதில் களிப்பில்லை. ஸ்ரீராமனென்கிற ஆதாரமில்லாத, அந்நகரத் தைப்பார்த்தால் நக்ஷத்திரங்களில்லாத ஆகாயம்போலிருந்தது.

36. (பொ-ரை) தங்களுடைய பிள்ளைகளையோ, ப்ராதாக்களையோ, காட் டிற்குத்துறத்திவிட்டால் எவ்விதம் வருத்தப்படுவார்களோ அவ்விதம் நகரஸ்த்ரீகள்

प्रशान्तगीतोत्सवनृत्तवादना व्यपास्तहर्षा पिहितापणोदया ।
तदा ह्ययोध्या नगरी बभूव सा महार्णवः संक्षिपितोदको यथा ॥ 37 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
अष्टचत्वारिंशः सर्गः ॥ 48 ॥

---

37. (ப-ரை) तदा- அப்பொழுது, प्रशान्त गीत उत्सव नृत्त वादना- ஒழிந்த கானத்தையும், உத்ஸவத்தையும், நாட்டியத்தையும், வாத்யம் வாசிப்பதையுமுடையதாய், व्यपास्तहर्षा- ஸந்தோஷமில்லாததாய், पिहितापणोदया- மூடப்பட்ட கடையில் வஸ்துக்களையுடையதுமான, सा अयोध्या नगरी- அந்த அயோத்திமா நகரமானது, संक्षिपित उदकः- வற்றின ஜலத்தையுடைய, महार्णवः यथा- பெருங்கடல் போல், बभूव- இருந்தது.

---

ராமனைப்பற்றி வருத்தமடைந்து மனம் தளர்ந்து, கதறி, ப்ரஜ்ஞையையுமிழந்து அழுதார்கள். ஏனென்றால் அந்த ஸ்ரீராமன், அந் நகரத்து ஸ்த்ரீகளுக்கு ஔரஸ புத்திரர்களைக்காட்டிலும், கூடப்பிறந்தவர்களைக்காட்டிலும் அதிகப்ரியமாக இருந்தார்.

37. (பொ-ரை) பாட்டுப்பாடுகிறதும், உத்ஸவம் கொண்டாடுகிறதும், நாட்டியம் ஆடுவதும், வீணைமுதலான வாத்யங்கள் வாசிப்பதும் ஒழிந்தும், ஒருவருக்கும் மனக்களிப்பில்லாமலும், கடைவீதிகளும் மூடப்பட்டுமிருக்கும் அந்த ஸமயத்தில் அயோத்திமாநகரத்தைப்பார்த்தால், ஜலம் வற்றின பெரும் கடல்போலிருந்தது.



एकोनपञ्चाशः सर्गः ॥ 49 ॥

रामोऽपि रात्रिशेषेण तेनैव महदन्तरम् ।
जगाम पुरुषव्याघ्रः पितुराज्ञामनुस्मरन् ॥ 1 ॥
तथैव गच्छतस्तस्य व्यपायाद्रजनी शिवा ।
उपास्य स शिवां संध्यां विषयान्तं व्यगाहत ॥ 2 ॥
ग्रामान्विकृष्टसीमान्तान्पुष्पितानि वनानि च ।
पश्यन्नतिययौ शीघ्रं शनैरिव हयोत्तमैः ॥
शृण्वन्वाचो मनुष्याणां ग्रामसंवासवासिनाम् ॥ 3 ॥

1. (ப-ரை) पुरुषव्याघ्रः- புருஷோத்தமனான, रामः अपि- ஸ்ரீராமனும், पितुः-பிதாவினுடைய, आज्ञां- கட்டளையை, अनुस्मरन् सन्- நினைத்துக்கொண்டு, तेन- அந்த, रात्रिशेषेण एव- மிகுதியான இரவிலேயே, महत् अन्तरम्- வெகுதூரம், जगाम- போனார்.

2. (ப-ரை) तथा एव- அப்படியே, तस्य- அந்த ராமன், गच्छतः (सतः)- போய்க்கொண்டிருக்குமளவில், शिवा- மங்களகரமான, रजनी- இரவானது, व्यपायात्- கழிந்தது, सः- அந்த ராமன், शिवां- மங்களகரமான, संध्यां- காலை ஸந்த்யையை, उपास्य- நமஸ்கரித்துவிட்டு, विषयान्तं- தேசத்தின் முடிவை, व्यगाहत- ப்ரவேசித்தார்.

3. (ப-ரை) विकृष्टसीमान्तान्-நன்றாக உழப்பட்ட நிலங்களின் எல்லைகளையுடைய, ग्रामान्- கிராமங்களையும், पुष्पितानि- புஷ்பித்திருக்கின்ற, वनानि च- வனங்களையும், पश्यन्- பார்த்துக்கொண்டும், ग्रामसंवासवासिनाम्- பெரிய கிராமங்களிலும், சிறு கிராமங்களிலும் வஸிக்கின்ற, मनुष्याणां- மனிதர்களுடைய, वाचः- வார்த்தைகளை, शृण्वन् सन्- கேட்டுக்கொண்டும், हयोत्तमैः- ச்ரேஷ்டமான குதிரைகளால், शनैः इव- மெள்ளபோவதுபோல், शीघ्रं- சீக்கிரமாகவே, ययौ- சென்றார்.

---

1. (பொ-ரை) புருஷோத்தமனான ஸ்ரீராமனும், பிதாவின் ஆஜ்ஞையை நினைத்துக்கொண்டு, பட்டணத்து ஜனங்களை விட்டுவந்த அந்த இரவிலேயே, வெகு தூரம் சென்று விட்டார்.

2. (பொ-ரை) அவ்விதம் ஸ்ரீராமன் சென்றுகொண்டிருக்கும்பொழுதே, ஸுகமாக இரவும் கழிந்தது, ஸ்ரீராமனும் மங்களகரமான காலை ஸந்த்யாவந்தனத்தை செய்து விட்டு உத்தர கோஸலதேசத்தின் கடைசி எல்லையில் ப்ரவேசித்தார்.

3. (பொ-ரை) தான்யங்கள் விதைப்பதற்காக நன்றாக உழுது ஸித்தமாக வைக்கப்பட்ட நிலங்களையுடைய கிராமங்களையும், நன்றாகபுஷ்பித்திருக்கின்ற வனங்களையும் பார்த்துக்கொண்டும், பெரிய கிராமங்களிலும் சிறு கிராமங்களிலும் வஸிக்கின்ற ஜனங்களுடைய பலவிதமான பேச்சுக்களையும் காதால் கேட்டுக்கொண்டும், உத்தமங்களான தேர் குதிரைகளின் சாதுர்யமான நடைகளாலும், புஷ்பித்திருக்கின்ற வனங்களின் அழகைப்பார்த்துக்கொண்டு அதில் மனதை வைத்திருந்ததினாலும், மெள்ள போகிறதுபோல் சீக்கிரமாகவே சென்றுகொண்டிருந்தார்.

राजानं धिग्दशरथं कामस्य वशमास्थितम् ।
हा नृशंसाऽद्य कैकेयी पापा पापानुबन्धिनी ॥ 4 ॥
तीक्ष्णा संभिन्नमर्यादा तीक्ष्णकर्मणि वर्तते ॥ 5 ॥
या पुत्रमीदृशं राज्ञः प्रवासयति धार्मिकम् ।
वनवासे महाप्राज्ञं सानुक्रोशं जितेन्द्रियम् ॥ 6 ॥
कथं नाम महाभागा सीता जनकनन्दिनी ।
सदा सुखेष्वभिरता दुःखान्यनुभविष्यति ॥ 7 ॥

---

4—5—6. (ப-ரை) कामस्य- காமத்திற்கு, वश आस्थितम्- வசப்பட்டிருக்கின்ற, दशरथ राजानं- தசரத மஹாராஜனை, धिक्- நிந்திக்கவேண்டும், या- யாதொருவள், धार्मिकम्- தார்மிஷ்டராயும், महाप्राज्ञ- பெரும புத்தியுடையவராயும், सानुक्रोशं- கருணையுடையவராயும், जितेन्द्रियम्- இந்திரியங்களை ஜயித்தவருமான, ईदृशं- இப்படிப்பட்ட, राज्ञः पुत्रं- ராஜகுமாரனை, वनवासे- வனவாஸ நிமித்தமாக, प्रवासयति- துறத்துகிருளோ, सा- அப்படிப்பட்ட, कैकेयी- கைகேயியானவள், अद्य- இப்பொழுது, हा- ஐயோ, नृशंसा- மஹா காதுகை, पापा- பாப ஸ்வபாவமுடையவள், पापानुबन्धिनी- தொடர்ச்சியாக பாபத்தையே செய்கின்றவள், तीक्ष्णा- கொடியவள், संभिन्नमर्यादा- மரியாதையை அழித்தவள், तीक्ष्णकर्मणि- க்ரூரமான கார்யத்தில், वर्तते- இருக்கின்ருள்.

7. (ப-ரை) सदा- எப்பொழுதும், सुखेषु- ஸுகங்களிலேயே, अभिरता- ஆசையுள்ளவளாய், जनकनन्दिनी- ஜனகமஹாராஜரின் பெண்ணான, महाभागा- பெரும் பாக்யமுள்ள, सीता- ஸீதையானவள், दुःखानि- துக்கங்களை, कथ नाम- எப்படி, अनुभविष्यति- அனுபவிப்பாள்.

ஜனங்கள் பேசுகின்ற பேச்சுகளை நாலரை ச்லோகங்களினல் சொல்லுகிருர்.

4-5-6. (பொ-ரை) காமத்திற்கு வசப்பட்ட தசரத மஹாராஜனை, சீ! சீ! என்று எல்லோரும் திட்டவேண்டும். ஐயோ! தார்மிஷ்டராய், மஹாப்ராஜ்ஞராய், எல்லோரிடத்திலும் கருணையுள்ளவராய், இந்திரியங்களை அடக்கினவருமான, இப்படிப்பட்ட ராஜகுமாரனை காட்டுக்குத்துரத்துகிருளே! கைகேயீ, ஐயோ! மஹா கொடியவள்! மஹா பாபஸ்வபாவமுள்ளவள், மேன்மேலும் தொடர்ச்சியாக பாபத்தையே செய்கின்றவள், மிகவும் க்ரூரமானவள், லோகமரியாதை, சாஸ்த்ர மரியாதை இவ்விரண்டையும் கெடுத்தவள். இப்பொழுது க்ரூரமான கார்யத்திலும் தலைப்பட்டு விட்டாள்.

7. (பொ-ரை) ஜனக மஹாராஜன் குமாரியாய் மிக்க பாக்யமுள்ளவளுமாய், எப்பொழுதும் ஸுகாநுபவத்திலேயே ஆசையுள்ளவளுமான ஸீதாதேவி எவ்விதம் துக்கங்களை அநுபவிப்பாளோ!

अहो दशरथो राजा निःस्नेहः स्वसुतं प्रियम् ।
प्रजानामनघं रामं परित्यक्तुमिहेच्छति ॥ 8 ॥

एता वाचो मनुष्याणां ग्रामसंवासवासिनाम् ।
शृण्वन्नतिययौ धीरः कोसलान्कोसलेश्वरः ॥ 9 ॥

ततो वेदश्रुतिं नाम शिववारिवहां नदीम् ।
उत्तीर्याभिमुखः प्रायादगस्त्याध्युषितां दिशम् ॥ 10 ॥

8. (ப-ரை) अहो- ஐயோ! प्रजानां- ப்ரஜைகளுக்கு, प्रियम्- இஷ்டராயும், अनघं- குற்றமற்றவராயும், स्वसुतं- தன் புத்திரனுமான, रामं- ஸ்ரீராமனை, इह- இப்பொழுது, परित्यक्तुं- விட்டுவிடுவதற்கு, इच्छति- விரும்புகிறார், (अतः- ஆதலால்), दशरथः राजा- தசரத ராஜன், निःस्नेहः- (பிள்ளையினிடத்தில்), அன்பில்லாதவர்.

9 (ப-ரை) कोसलेश्वरः- கோஸல தேசத்திற்கு ப்ரபுவாயும், वीरः- வீரனுமான அந்த ஸ்ரீராமன், ग्रामसंवासवासिनाम्- பெரிய க்ராமங்களிலும், சிறிய க்ராமங்களிலும் வஸிக்கின்ற, मनुष्याणां- மனிதர்களுடைய, एताः वाचः- இவ்விதங்களான வார்த்தைகளை, शृण्वन् सन्- கேட்டுக்கொண்டே, कोसलान्- கோஸல தேசங்களை, अति ययौ- தாண்டிச் சென்றார்.

10. (ப-ரை) ततः- பிறகு, शिववारिवहां- அழகான தீர்த்தம் பெருகுகின்ற, वेदश्रुतिं नाम- வேதச்ருதியென்று ப்ரஸித்தமான, नदीम्- நதியை, उत्तीर्य- தாண்டி, अगस्त्याध्युषितां- அகஸ்த்யரால் வஸிக்கப்பட்ட, दिशम्- திக்கைக் குறித்து, अभिमुखः- எதிர்முகமாக, प्रायात्- சென்றார்.

8. (பொ-ரை) ப்ரஜைகளுக்கெல்லாம் மிகவும் ப்ரியராயும், (தன்பிள்ளைகளுக்குள் மிகவும் ப்ரியராயும்) ஒருவிதமான குற்றமில்லாதவருமான தன் பிள்ளை ராமனை தசரத மஹாராஜர் இப்பொழுது விட்டுவிடத்துணிந்து விட்டாரே, ஐயோ, கொஞ்சமாகிலும் பிள்ளையினிடத்தில் அன்பில்லாதவராக ஆகிவிட்டார்.

9. (பொ-ரை) கோஸல தேசத்து அரசனும், வீரனுமான அந்த ஸ்ரீராமன் பெரிய க்ராமங்களிலும், சிறிய கிராமங்களிலும், வஸித்துக்கொண்டிருக்கிற ஜனங்களுடைய இவ்விதமான, வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டே, கோஸலதேசத்தைத்தாண்டிச்சென்றார்.

10. (பொ-ரை) பிறகு, குளிர்ந்து அழகான தீர்த்தங்களையுடைய வேதச்ருதியென்கிற நதியைத்தாண்டி, அகஸ்த்யர் வஸிக்கின்ற தெற்குதிக்கை நோக்கிச் சென்றார்.

गत्वा तु सुचिरं कालं ततः शिवजलां नदीम् ।
गोमतीं गोयुतानूपामतरत्सागरंगमाम् ॥ 11 ॥

गोमतीं चाप्यतिक्रम्य राघवः शीघ्रगैर्हयैः ।
मयूरहंसाभिरुतां ततार स्यन्दिकां नदीम् ॥ 12 ॥

स महीं मनुना राज्ञा दत्तामिक्ष्वाकवे पुरा ।
स्फीतां राष्ट्रावृतां रामो वैदेहीमन्वदर्शयत् ॥ 13 ॥

11. (ப-ரை) ततः- பிறகு, सुचिरं कालं- நெடுநேரம், गत्वा तु- சென்று, शिवजलां- அழகான ஜலமுடையதாய், गोयुत अनूपां- பசுக்களோடு கூடிய கரைகளையுடையதாய், सागरंगमाम्- ஸமுத்திரம்போய் விழுகின்றதுமான, गोमतीं नदीम्- கோமதி என்னும் நதியை, अतरत्- தாண்டினார்.

12. (ப-ரை) राघवः- ஸ்ரீராமன், शीघ्रगैः- வேகமாகப்போகின்ற, हयैः- குதிரைகளினால், गोमतीं चापि- கோமதி என்னும நதியையும், अतिक्रम्य- தாண்டி, मयूरहंसाभिरुतां- மயில்களாலும், ஹம்ஸங்களினாலும், நாற்புறங்களிலும் சப்திக்கப்பட்ட, स्यन्दिकां नदीम्- ஸ்யந்திகை என்கிற நதியை, ततार- தாண்டினார்.

13. (ப-ரை) सः रामः- அந்த ஸ்ரீராமன், पुरा- முன்காலத்தில், मनुना राज्ञा- மனு என்னும் ப்ரஜாபதியினால், इक्ष्वाकवे- இக்ஷ்வாகு அரசருக்காக, दत्तां- கொடுக்கப்பட்டும், स्फीतां- செழுமையுடையதுமாய், राष्ट्रावृतां- அவாந்தரதேசங்களினால் சூழப்பட்டதுமான, महीं- கோஸல தேசத்தை, वैदेहीं- ஸீதையைக (குறித்து), अन्वदर्शयत्- காட்டினார்.

11. (பொ-ரை) பிறகு நெடுநேரம் சென்று அழகான தீர்த்தமுடையதாய், பசுக்கள் நிறைந்த கரை ஓரங்களையுடையதாய், ஸமுத்திரமபோய் விழுவதுமான கோமதி என்னும் நதியைத்தாண்டினார்.

12. (பொ-ரை) ஸ்ரீராமன், வேகமாகப்போகின்ற குதிரைகளினால் கோமதி என்னும் நதியையும் தாண்டி, மயில்களுடையவும், ஹம்ஸங்களுடையவும் அழகான சப்தங்களையுடைய ஸ்யந்திகை என்னும நதியைத்தாண்டினார்.

13. (பொ-ரை) அந்த ஸ்ரீராமன், முன்காலத்தில் மனுப்ரஜாபதியினால் இக்ஷ்வாகு என்னும் அரசனுக்குக் கொடுக்கப்பட்டும், அநேக தேசங்களால் சூழப்பட்டும், மிகவும் செழித்துமிருக்கிற அந்த கோஸல தேசத்தை ஸீதைக்குக் காட்டினார்.

सूत इत्येव चाभाष्य सारथिं तमभीक्ष्णशः ।
हंसमत्तस्वरः श्रीमानुवाच पुरुषर्षभः ॥ 14 ॥
कदाहं पुनरागम्य सरय्वाः पुष्पिते वने ।
मृगयां पर्यटिष्यामि मात्रा पित्रा च संगतः ॥ 15 ॥
राजर्षीणां हि लोकेऽस्मिन्नत्यर्थं मृगया वने ।
काले वृतां तां मनुजैर्धन्विनामभिकाङ्क्षिताम् ॥ 16 ॥
नात्यर्थमभिकाङ्क्षामि मृगयां सरयूवने ।
रतिर्ह्येषातुला लोके राजर्षिगणसंमता ॥ 17 ॥

---

14. (ப-ரை) श्रीमान्- மிக்க சோபையை உடையவராய், पुरुषर्षभः- அந்தப் புருஷோத்தமன், सूत इति एव च- ஸாரதியே என்று, तं सारथिं- அந்த ஸாரதியை, अभीक्ष्णशः- அடிக்கடி, आभाष्य- கூப்பிட்டு, हंसमत्तस्वरः- மதித்த ஹம்ஸம்போல் இனிதான குரலுடையவராய், उवाच- சொன்னார்.

15 (ப-ரை) कदा- எப்பொழுது, अहं- நான், पुनः आगम्य- மறுபடி வந்து, मात्रा- மாதாவுடனும், पित्रा च-பிதாவுடனும், संगतः (सन्)-கூடினவனாய், सरय्वाः-ஸரையூ நதியினுடைய, पुष्पिते- புஷ்பித்திருக்கிற, वने- வனத்தில், मृगयां- வேட்டையை, पर्यटिष्यामि- ஆடப்போகிறேன்.

16-17. (ப-ரை) हि- ஏனென்றால், अस्मिन् लोके- இவ்வுலகில், वने- வனத்

---

14. (பொ-ரை) மிகவும அழகுள்ளவராய், புருஷோததமமான ஸ்ரீராமன், ஸாரதியே என்று அடிக்கடி, அந்த ஸுமந்தரரைக் கூப்பிட்டு, அவரைப்பார்த்து ஹம்ஸத்தின் குரல்போல் இனிய தன் குரலுடன் ஒரு வார்த்தை சொன்னார்.

15. (பொ-ரை) ஸுமந்தரரே! எப்பொழுது நான் திரும்பிவந்து மாதா பிதாக்களுடன் சேர்ந்துகொண்டு அழகாய் புஷ்பித்திருக்கின்ற ஸரையூ நதியின் கரையிலுள்ள வனங்களில் வேட்டையாடப்போகிறேன்.

16-17. (பொ-ரை) ஏனென்றால், இவ்வுலகில், வனத்தில் வேட்டையாடுவது ராஜரிஷிகளுக்கு விளையாட்டிற்காக ஏற்பட்டது.

---

* ஸதாசாரமுள்ளவர்களால் ச்ராத்தம முதலான காலத்தில் ஒப்புகொள்ளப் பட்டும, வில்லாளிகள் ஆசைப்பட்டுமிருககிற அந்த வேட்டையை, நான் ஸரையூ நதிக்கரையிலிருக்கிற வனத்தில் எப்பொழுதும ஆடவேண்டுமென்று ஆசைப்படவிலலை. ஏதோ சிலகாலத்தில்தான் வேட்டையாடுவது ராஜரிஷிகளெல்லோரும் ஒப்புக்கொண்ட உயர்ந்த விளையாட்டு.

* முன் காலத்தில் மிருகாதி மாம்ஸங்களை ச்ராத்தத்தில் உபயோகப்படுத்துவது சாஸ்திர விஹிதமாகையால் அந்த காலத்தில் வேட்டையாடுவது உசிதமென்றும், வில்லாளிகள் ஓடுகின்ற மிருகத்தைக்குறித்து குறிதவராமல் அடித்துப்பழக வேண்டியதற்காக, வில்லாளிகளால் ஒப்புக்கொள்ளப்பட்டதென்றும் சொல்லப் பட்டது.

स तमध्वानमैक्ष्वाकः सूतं मधुरया गिरा ।
तं तमर्थमभिप्रेत्य ययौ वाक्यमुदीरयन् ॥ 18 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
एकोनपञ्चाशः सर्गः ॥ 49 ॥

தில், मृगया– வேட்டையாடுவது, राजर्षीणां- ராஜரிஷிகளுக்கு, रत्यर्थं- விளையாட்டுக்காக, (ஏற்பட்டிருக்கிறது), मनुजैः- மனிதர்களால், काले- சிராத்தம் முதலான காலத்தில், वृतां– அங்கீகரிக்கப்பட்டும், धन्विनां- வில்லாளிகளுக்கு, अभिकाङ्क्षितां- விரும்பக்கூடியதுமான, तां मृगयां– அந்த வேட்டையை, सरयूवने- ஸரையூ வனத்தில், (अहं- நான்), अत्यर्थं- அதிகமாக, न अभिकाङ्क्षामि- ஆசைப்படவில்லை, एषा- இது, लोके- இவ்வுலகில், राजर्षिगणसम्मता- ராஜரிஷிகளின் கூட்டங்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட, अतुला- ஒப்பற்ற, रतिः हि- விளையாட்டல்லவா.

18. (ப-ரை) ऐक्ष्वाकः- இக்ஷ்வாகு குலத்தில் அவதரித்த, सः- அந்த ஸ்ரீ ராமன், सूतं- ஸாரதியைக்குறித்து, तं तं अर्थं- அந்தந்த விஷயத்தை, अभिप्रेत्य- மனதில் வைத்துக்கொண்டு, मधुरया गिरा- இனிதான பேச்சினால், वाक्यं- வார்த்தையை, उदीरयन्- சொல்லிக்கொண்டு, तं अध्वानं- அந்த வழியை, ययौ- சென்றார்.

18. (பொ-ரை) இக்ஷ்வாகு குலத்திற்பிறந்த அந்த ஸ்ரீராமன் அந்தந்த விஷயங்களை மனதில்வைத்துக்கொண்டு, ஸாரதியைப்பார்த்து, இனிதான பேச்சினால் வார்த்தைகளையும் சொல்லிக்கொண்டு அந்த வழியில் சென்றார்.

* மனதில் வைத்துக்கொண்டு ஸ்ரீராமன் ஸுமந்த்ரரிடம் சொன்னதை ஸுமந்த்ரர், தசரதரிடம் வெளியாக்கப்போகிறார்.



पञ्चाशः सर्गः ॥ 50 ॥

विशालान्कोसलान्रम्यान्यात्वा लक्ष्मणपूर्वजः ।
अयोध्याभिमुखो धीमान्प्राञ्जलिर्वाक्यमब्रवीत् ॥ 1 ॥
आपृच्छे त्वां पुरिश्रेष्ठे काकुत्स्थपरिपालिते ।
दैवतानि च यानि त्वां पालयन्त्यावसन्ति च ॥ 2 ॥
निवृत्तवनवासस्त्वामनृणो जगतीपतेः ।
पुनर्द्रक्ष्यामि मात्रा च पित्रा च सह संगतः ॥ 3 ॥

1. धीमान्- சிறந்த புத்தியையுடையவரான, लक्ष्मणपूर्वजः- இலக்குமணனுடைய ஜ்யேஷ்ட ப்ராதாவான ஸ்ரீராமன், विशालान्- விசாலங்களாய், रम्यान्- அழகாயுமுள்ள, कोसलान्- கோஸல தேசங்களை, यात्वा- (தாண்டி) சென்று, अयोध्याभिमुखः- அயோத்திக்கு எதிர்முகமாயிருந்து, प्राञ्जलिः (सन्)- கைகூப்பிக்கொண்டு, वाक्यं- வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

2. (ப-ரை) काकुत्स्थपरिपालिते-காகுத்ஸ்த்தர்களால பரிபாலனம் செய்யப்பட்ட, हे पुरिश्रेष्ठे- ச்ரேஷ்டமான நகரமே, त्वां- உன்னையும், यानि- யாதொரு தேவதைகள், त्वां- உன்னை, पालयन्ति- ரக்ஷிக்கின்றனவோ, आवसन्ति च- வஸிக்கின்றனவோ, (तानि- அந்த). दैवतानि च- தெய்வங்களையும், आपृच्छे- நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

3. (ப-ரை) अहं- நான், जगतीपतेः- மஹாராஜருக்கு, अनृणः- கடன்காரனல்லா

நகரத்தைவிட்டு வனத்திற்குப் புறப்படும்காலத்தில் பெரியோர்கள் ஸம்ப்ரதாயப்படி ஏற்பட்ட நகர தேவதா நமஸ்காரம் அந்த ஸமயம் செய்ய ஸௌகர்யமில்லாமலிருந்தபடியால், இப்பொழுது அயோத்தியா ராஜ்யத்தின் எல்லையில் நின்றுகொண்டு, தான் ஆரம்பித்த பதினான்கு வருஷம் வநவாஸமாகிற வ்ரதம இடையூறு இன்றி முடிவுபெறுவதற்காக நகரதேவதையை நமஸ்காரம் செய்து அனுமதி கேட்டுக்கொள்ளுகிறார்.

1. (பொ-ரை) சிறந்த புத்தியுடையவராய் இலக்குமணனுடைய தமயனாருமான ஸ்ரீராமன், விசாலங்களாய், அழகுள்ளவைகளுமான தக்ஷிண கோஸல தேசங்களின் எல்லைவரையில் சென்று, அயோத்திமா நகரத்திற்கு எதிர் முகமாய் நின்று கை கூப்பிக்கொண்டு ஒருவார்த்தை சொன்னார்.

2. (பொ-ரை) ககுத்ஸ்த்தவம்சத்திற்பிறந்த அரசர்களால் பரிபாலனம் செய்யப்பட்ட உத்தமமான அயோத்தியா புரியே! உன்னையும், உன்னிடத்தில் வாஸம் செய்துகொண்டு உன்னை பரிபாலித்துவருகின்ற தேவதைகளையும் நான் அனுமதி கேட்டுக்கொள்ளுகிறேன்.

3. (பொ-ரை) நான், அரசனுடைய கடனை கட்டிவிட்டு வனவாஸத்

ततो रुधिरताम्राक्षो भुजमुद्यम्य दक्षिणम् ।
अश्रुपूर्णमुखो दीनोऽब्रवीज्जानपदं जनम् ॥ 4 ॥

अनुक्रोशो दया चैव यथार्हं मयि वः कृतः ।
चिरं दुःखस्य पापीयो गम्यतामर्थसिद्धये ॥ 5 ॥

தவனாய், निवृत्तवनवास:- வனவாஸத்தையும் கழித்தவனாய், मात्रा च- மாதாவோடும், पित्रा च सह- பிதாவுடனும் கூட, संगत:- சேர்ந்துகொண்டு, पुन:- மறுபடியும், त्वां- உன்னை, द्रक्ष्यामि- பார்க்கப்போகிறேன்.

4. (ப-ரை) तत:- பிறகு, रुधिरताम्राक्ष:- இரத்தம்போல் சிவந்த கண்களையுடையவராய், अश्रुपूर्णमुख:- கண்ணீரால் நிறைந்த முகமுடையவராய்க்கொண்டு, दक्षिण भुजं- வலது கையை, उद्यम्य- உயரத் தூக்கிக்கொண்டு, जानपदं- தேசத்திலிருந்து வந்திருக்கிற, जनम्- ஜனத்தைப்பார்த்து, दीन:- இரக்கமுடையவராய், अब्रवीत्- சொன்னார்.

5. (ப-ரை) अनुक्रोश:- ஆதரமும், दया च एव- கருணையும், यथार्हं- தகுந்தபடி, मयि- என்னிடத்தில், व:- உங்களால், कृत:- செய்யப்பட்டது, दु:खस्य- துக்கத்தினுடைய, चिरं- காலதாமதமானது, पापीय:- மிகவும் பாபமானது, अत:- ஆதலால், अर्थसिद्धये- காரியங்களை முடிப்பதற்காக, गम्यतां- போகப்படலாம்.

திலிருந்து திரும்பிவந்து, மாதாவுடனும், பிதாவுடனும் சேர்ந்து மறுபடி உன்னை நான் பார்க்கப்போகிறேன்.

4. (பொ-ரை) பிறகு, இரத்தம்போல் சிவந்த கண்களையும், கண்ணீரால் நிறைந்த முகத்தையுமுடையவராய் வலது கையை உயரத்தூக்கிக்கொண்டு தன்னைப் பார்ப்பதற்காக அங்குவந்திருக்கின்ற ஜனங்களைப்பார்த்து மிகவும் பரிதாபத்துடன் சொன்னார்.

5. (பொ-ரை) ஆதரமும் (அன்பும்) கருணையும் என்னிடத்தில் நீங்கள் செய்தது தகுந்தது தான், இப்பொழுது நீங்கள் என்னைப்பார்த்துக்கொண்டு அனுபவிக்கிற துக்கத்தை வளர்த்துவது மிகவும் பாபமானது. ஆதலால் உங்கள் சொந்த கார்யத்தைச்செய்வதற்காக நீங்கள் போங்கள்.

தகுந்தபடி என்னிடத்தில் நீங்கள் அன்பும் கருணையும் வைத்திருந்தபடியால் இப்பொழுது அது உங்களுக்கு நெடுநாள் துக்கமனுபவிப்பதற்குக் காரணமாகிவிட்டது, இனிநாம் என்னசெய்யலாம். இப்பொழுது நீங்கள் திரும்பிப்போங்கள். நானும் ஆரம்பித்த கார்யத்தை முடிக்கப்போகிறேன்.

அதாவது அவதாரத்தின் ப்ரயோஜனமான இராவணவதம்முதலாகிய கார்யங்களைச்செய்யப்போகிறேனென்று சொல்லியபடி, என்று தீர்த்தியாபிப்ராயம்.

तेऽभिवाद्य महात्मानं कृत्वा चापि प्रदक्षिणम् ।
विलपन्तो नरा घोरं व्यतिष्ठन्त क्वचित्क्वचित् ॥ 6 ॥
तथा विलपतां तेषामतृप्तानां च राघवः ।
अचक्षुर्विषयं प्रायाद्यथाऽर्कः क्षणदामुखे ॥ 7 ॥
ततो धान्यधनोपेतान्दानशीलजनाञ्छिवान् ।
अकुतश्चिद्भयान्रम्यांश्चैत्ययूपसमावृतान् ॥ 8 ॥
उद्यानाम्रवणोपेतान्संपन्नसलिलाशयान् ।
तुष्टपुष्टजनाकीर्णान्गोकुलाकुलसेवितान् ॥ 9 ॥
लक्षणीयान्नरेन्द्राणां ब्रह्मघोषाभिनादितान् ।
रथेन पुरुषव्याघ्रः कोसलानत्यवर्तत ॥ 10 ॥

6. (ப-ரை) ते- அந்த ஜனங்கள், महात्मानं- மஹாத்மாவான அந்த ஸ்ரீராமனை, अभिवाद्य- ஸேவித்து, प्रदक्षिणं च अपि- ப்ரதக்ஷிணத்தையும், कृत्वा- செய்துவிட்டு, घोरं (यथा तथा)- மிகவும் கோரமாயிருக்கும்படி, विलपन्तः (सन्तः)- அழுதுகொண்டு, क्वचित् क्वचित्- ஒவ்வொரு இடத்தில், व्यतिष्ठन्त- நின்றுகொண்டிருந்தார்கள்.

7. (ப-ரை) तेषां- அவர்கள், अतृप्तानां- த்ருப்தி அடையாதவர்களாய், तथा- அவ்வாறு, विलपतां (सतां)- அழுதுகொண்டிருக்குங்காலையில், क्षणदामुखे- ஸாயங்காலத்தில், अर्कः- ஸூர்யன், यथा- எப்படி, (கண்ணுக்குத்தெரியாமல் மறைவாரோ), (तथा- அப்படி), राघवः- ஸ்ரீராமன், अचक्षुर्विषयं- கண்ணுக்குத் தெரியாமலிருப்பதை, प्रायात्- அடைந்துவிட்டார்.

8-9-10. (ப-ரை) ततः- பிறகு, धान्य धन उपेतान्- தான்யங்களோடும், தனங்க

6. (பொ-ரை) அந்த ஜனங்களும், மஹாத்மாவான ஸ்ரீராமனைஸேவித்து ப்ரதக்ஷிணமும் செய்துவிட்டு கோரமாகக்கதறிக்கொண்டு ஒவ்வொரு இடங்களிலும் நின்றுகொண்டேயிருந்தார்கள்.

7. (பொ-ரை) அவ்வாறு அந்த ஜனங்கள் ஸ்ரீராமனைப்பார்த்து த்ருப்தி அடையாமல் அழுதுகொண்டிருக்கும்பொழுது ஸாயங்காலத்தில் ஸூர்யன் கண்ணுக்குத்தெரியாமல் மறைந்து விடுவதுபோல் ஸ்ரீராமனும் அந்த ஜனங்கள் கண்ணுக்குத்தெரியாமல் மறைந்துவிட்டார்.

அதாவது வெகுதூரம் சென்றுவிட்டார் என்றபடி.

8-9-10. (பொ-ரை) பிறகு, புருஷோத்தமனான ஸ்ரீராமன், தான்யங்களும்

मध्येन मुदितं स्फीतं रम्योद्यानसमाकुलम् ।
राज्यं भोग्यं नरेन्द्राणां ययौ धृतिमतां वरः ॥ 11 ॥

ளோடும் கூடியவைகளாயும், दानशीलजनान्- தானம் பண்ணுவதையே ஸ்வபாவமாகவுடைய ஜனங்களையுடையதாயும், शिवान्- மங்களகரங்களாயும், अकुतश्चित् भयान्- எங்(கு) (ம்) பயமில்லாதவைகளாயும், रम्यान्- அழகானவைகளாயும், चैत्य यूप समावृतान्- தேவாலயங்களாலும் யூபஸ்த்தம்பங்களாலும் சூழப்பட்டவைகளாயும், उद्यान आम्रवण उपेतान्- பூந்தோட்டங்களோடும், மாந்தோட்டங்களோடும் கூடினவைகளாயும், सम्पन्नसलिलाशयान्- நிறைந்த ஜலங்களையுடைய தடாகங்களையுடையவைகளாயும், तुष्टपुष्टजनाकीर्णान्- ஸந்தோஷமுடையவர்களாய், செழித்துமிருக்கிற ஜனங்களால் நிறைந்தவைகளுமாய், गोकुलाकुलसेवितान्- பசுக்கூட்டங்களால் நிறைந்து ஸேவிக்கப்பட்டும், नरेन्द्राणां- அரசர்களுக்கு, लक्षणीयान्- குறிக்கத்தகுந்தவைகளாயும், ब्रह्म घोष अभिनादितान्- வேதகோஷங்களால் எங்கும் சப்திக்கப்பட்டவைகளாயுமிருக்கிற, कोसलान्- கோஸலதேசத்து கிராமங்களை, पुरुषव्याघ्रः- புருஷோத்தமன், रथेन- தேருடனே, अत्यवर्तत- கடந்து சென்றார்.

11. (ப—ரை) धृतिमतां- தீரர்களுக்குள், वरः- சிறந்தவரான ஸ்ரீராமன், मुदितं- ஸந்தோஷமுள்ளதாயும், स्फीतं- செழிப்புடையதாயும், रम्य उद्यानसमाकुलम्- அழகான பூந்தோட்டஙகளால் நிறைந்ததாயும், नरेन्द्राणां- அரசர்களுக்கு, भोग्यं- நன்றாக அனுபவிக்கத்தகுந்ததுமான, राज्य मध्येन- ராஜ்யத்தின் மத்தியில், ययौ- சென்றுகொண்டிருந்தார்.

தனங்களுமுள்ளவைகளாய், எப்பொழுதும் யாசகர்களுக்கு தானம் கொடுப்பதே ஸ்வபாவமான ஜனங்களையுடையதுகளாய், மங்களகரங்களாய், எங்கும் பயமற்றவைகளாய், அழகு பொருந்தியவைகளாய், தேவாலயங்களாலும், ஸர்வமேதாமுகம் முதலான யாகங்களைச்செய்து நாட்டிய யூபஸ்தம்பங்களாலும் சூழப்பட்டும், பூந்தோட்டங்களோடும், மாந்தோட்டங்களோடும் கூடியவைகளாய், எப்பொழுதும் தீர்த்தம் நிறைந்த தடாகங்களை உடையவைகளாய், மனக்களிப்புடன் செழித்துமிருக்கிற ஜனங்களால் நிறைந்தவைகளாய், பசுக்கூட்டங்களால் எப்பொழுதும் நிறைந்தவைகளா(ய்), ஒவ்வொன்றும் அரசர்கள் வாஸம் செய்யக்கூடிய ராஜதானியென்று அரசர்க(ளால்) காணப்பட்டவைகளாய், வேதகோஷம் எங்கும் நிறைந்த கோஸல தேசத்திய கிராமங்களை தேருடனே தாண்டிச்சென்றார்.

11. (பொ—ரை) மிகவும் களிப்புடன் செழித்து அழகான பூந்தோட்டங்களால் சூழப்பட்டு, மஹாராஜாக்கள் இருந்து அனுபவிக்கவேணுமென்று ஆசைப்படக்கூடிய கோஸல ராஜ்யத்தை பார்த்துக்கொண்டே, இதை இழந்துவிட்டோமேயென்கிற விசாரம் மனதில் கொஞ்சமேனுமில்லாமல் புத்தி கலங்காதவராய் ராஜ்யத்தின் நடுவழியே சென்றார்.

तत्र त्रिपथगां दिव्यां शिवतोयामशैवलाम् ।
ददर्श राघवो गंगां पुण्यामृषिनिषेवितान् ॥ 12 ॥
आश्रमैरविदूरस्थैः श्रीमद्भिः समलङ्कृताम् ।
कालेऽप्सरोभिर्हृष्टाभिः सेविताम्भोह्रदां शिवाम् ॥ 13 ॥
देवदानवगन्धर्वैः किन्नरैरुपशोभिताम् ।
नानागन्धर्वपत्नीभिः सेवितां सततं शिवाम् ॥ 14 ॥

12. (ப-ரை) तत्र- அங்கு, शिवतोयां- தெளிந்த தீர்த்தங்களையுடையதாய், अशैवलाम्- பாசிக்கொத்துகளில்லாததாய், पुण्यां- புண்யகரமாய், ऋषिनिषेविताम्- ரிஷிகளால் ஸேவிக்கப்பட்டுமிருக்கிற, त्रिपथगां- மூன்று வழிகளில் செல்லுகின்ற, दिव्यां गंगां- திவ்ய கங்கையை, राघवः- ஸ்ரீராமன், ददर्श- பார்த்தார்.

13. (ப-ரை) श्रीमद्भिः- மிகவும் அழகாயும், (செல்வம் பொருந்தியும்), अविदूरस्थैः- ஸமீபத்திலிருக்கின்ற, आश्रमैः- ஆச்ரமங்களால், समलंकृताम्- நன்றாயலங்கரிக்கப்பட்டும், काले- விளையாடும் காலத்தில், हृष्टाभिः- ஸந்தோஷமுள்ளவர்களான, अप्सरोभिः- அப்ஸரஸ்த்ரீகளால், सेवित अम्भो ह्रदां- ஸேவிக்கப்பட்ட ஜலங்களையுடையதான, மடுவுகளுடையதும், शिवाम्- பரிசுத்தமாயும்.

14. (ப-ரை) देवदानवगन्धर्वैः- தேவர்களாலும், அஸுரர்களாலும், கந்தர்வர்களாலும், किन्नरैः- கின்னரர்களாலும், उपशोभिताम्- ஸமீபத்தில் ப்ரகாசிக்கப்பட்டதாயும், नानागन्धर्वपत्नीभिः- பலவிதங்களான கந்தர்வ ஸ்த்ரீகளால், सेवितां- ஸேவிக்கப்பட்டும், सततं शिवाम्- எப்பொழுதும் பரிசுத்தமாயும்.

---

12. (பொ-ரை) அந்த கோஸல தேசத்தின் தெற்குப்ரதேசத்தில், தெளிந்த ஜலமுடையதாய், பாசிகொத்துகளில்லாததாய் பாபத்தைப்போக்குகின்றதாய், ரிஷிகளால் ஸேவிக்கப்பட்டும் ஸ்வர்க்கலோகம், பூலோகம, பாதாளலோகம் என்கிற மூன்று லோகங்களிலும் ப்ரவஹித்துக்கொண்டிருக்கிற தேவ கங்கையை ஸ்ரீராகவன் கண்டார்.

13. (பொ-ரை) தர்மங்களாகிற செல்வம் பொருந்தி ஸமீபத்திலிருக்கின்ற மஹா ரிஷிகளின் ஆச்சிரமங்களினால் நன்றாயலங்கரிக்கப்பட்டும், ஜலக்ரீடை செய்யும்காலத்தில் களிப்படைந்த அப்ஸரஸ்த்ரீகள் இறங்கி விளையாடுகின்ற மடுவுகளையுடையதுமாய், விளையாட்டிற்காக தீர்த்தத்தைத்தொட்டாலும் பாபத்தைப்போக்கி பரிசுத்தியையுண்டுபண்ணுகிறதாயும்,

14. (பொ-ரை) தேவர்கள், தானவர்கள், கந்தர்வர்கள், கின்னரர்கள் இவர்களால் விளங்கிக்கொண்டும், தேவகந்தர்வர்களென்றும், மனுஷ்ய கந்தர்வர்களென்றும் பலவித பேதமுள்ள கந்தர்வஸ்த்ரீகளால் அடையப்பட்டும், எந்த ஜாதியாராயிருந்தாலும் ஸ்நானஞ்செய்கின்றவர்களை எப்பொழுதும் பரிசுத்தி செய்கின்றதாய்.

देवाक्रीडशताकीर्णां देवोद्यानशतायुताम् ।
देवार्थमाकाशगमां विख्यातां देवपद्मिनीम् ॥ 15 ॥
जलाघाताट्टहासोग्रां फेननिर्मलहासिनीम् ।
क्वचिद्वेणीकृतजलां क्वचिदावर्तशोभिताम् ॥ 16 ॥
क्वचित्स्तिमितगम्भीरां क्वचिद्वेगजलाकुलाम् ।
क्वचिद्गम्भीरनिर्घोषां क्वचिद्भैरवनिस्वनाम् ॥ 17 ॥

---

15. (ப-ரை) देव आक्रीड शत आकीर्णां- தேவர்கள் விளையாடத்தகுந்த அநேகம் சிறு குன்றுகளால் நிறைந்ததும், देव उद्यान शत आयुताम्-தேவர்கள் விளையாடத்தகுந்த அநேகம் பூந்தோட்டங்களோடு கூடியதுமாய், देवार्थ- தேவர்களுக்காக, आकाशगमां- ஆகாசத்தையடைந்ததுமாய், देवपद्मिनीम्- தேவார்ஹமான தாமரை புஷ்பங்களையுடையதுமாய், विख्यातां- ப்ரஸித்தியடைந்ததுமாய்.

16. (ப-ரை) जल आघात अट्टहास उग्रां- நீர் வீழ்ச்சியினாலுண்டான சப்தமாகிற அட்டஹாஸத்தினால் பயங்கரமாயும், फेन निर्मल हासिनाम्- நுரையாகிற நிர்மலமான சிரிப்பை யுடையதுமாய், क्वचित्- ஓரிடத்தில், वेणीकृतजलां- பின்னலாக செய்யப்பட்ட ஜலத்தையுடையதுமாய், क्वचित्- ஓரிடத்தில், आवर्तशोभिताम्- சுழல்களால் ப்ரகாசிக்கின்றதுமாய்.

17. (ப-ரை) क्वचित्- ஓரிடத்தில், स्तिमितगम्भीरां- அசையாமல் கம்பீரமுமாய், क्वचित्- ஓரிடத்தில், वेगजलाकुलाम्- வேகமாகப்போகின்ற ஜலங்களால் நிறைந்ததாயும், क्वचित्- ஓரிடத்தில், गम्भीर निर्घोषां- கம்பீரமான சப்தமுடையதாயும், क्वचित्- ஓரிடத்தில், भैरवनिस्वनाम्- பயங்கரமான சப்தமுடையதாயும்.

---

15. (பொ-ரை) தேவர்கள் விளையாடத்தகுந்த அநேகம் சிறு குன்றுகளால் நிறைந்ததும், தேவர்களின் விளையாட்டிற்குரிய அநேகம் பூந்தோட்டங்களுடன் கூடியதும, தேவர்கள் பூஜிப்பதற்காக ஆகாசத்தையடைந்ததும், உலகங்களில் ப்ரஸித்திபெற்றதும், தேவர்களுக்கு அர்ஹமான தாமரை புஷ்பங்களையுடையதும.

16. (பொ-ரை) பாரைகளின்மேல் ஜலம் விழுவதாலுண்டான சப்தத்தினால் அட்டஹாஸம் செய்கின்றதுபோல் பயங்கரமாயும், வெளுப்பான நுரைகள் இருக்கின்றமையால் புன்னகை செய்கிறதுபோலும், ஓரிடத்தில் உயர்ந்தும் தாழ்ந்ததுமான கல் தரைகளில் நீர் விழுந்து தனித்தனியாகப்பிரிந்து போகிறபடியால் பின்னலுடன் கூடியதுபோலும், ஓரிடத்தில் சுழல்களால் நிறைந்ததுமாய்.

17. (பொ-ரை) ஆழமான இடத்தில் ஜலம் விழுகிறபொழுது அசையாமல் கம்பீரமுமாயும், ஓரிடத்தில் மிகவும் வேகமுள்ள ஜலமுடையதாயும், ஓரிடத்தில் ம்ருதங்கத்தின் சப்தம்போல் கம்பீரமான சப்தமுடையதாயும், ஓரிடத்தில் இடியின் சப்தம்போல் பயங்கரமான சப்தமுடையதாயும்.

देवसंघाप्लुतजलां निर्मलोत्पलशोभिताम् ।
क्वचिदाभोगपुलिनां क्वचिन्निर्मलवालुकाम् ॥ 18 ॥
हंससारससंघुष्टां चक्रवाकोपकूजिताम् ।
सदा मत्तैश्च विहगैरभिसंन्नादितान्तराम् ॥
क्वचित्तीररुहैर्वृक्षैर्मालाभिरिवशोभिताम् ॥ 19 ॥
क्वचित्फुल्लोत्पलच्छन्नां क्वचित्पद्मवनाकुलाम् ।
क्वचित्कुमुदषण्डैश्च कुड्मलैरुपशोभिताम् ॥ 20 ॥

---

18. (ப-ரை) देवसङ्घ आप्लुत जलां-தேவர்களின் கூட்டங்களால் ஸ்நாநம் செய்யப்பட்ட ஜலத்தையுடையதுமாய், निर्मल उत्पल शोभिताम्- நிர்மலங்களான கருநெய்தல் புஷ்பங்களால் விளங்குகின்றதுமாய், क्वचित्- ஓரிடத்தில், आभोगपुलिनां- விசாலமான மணல் தரைகளையுடையதுமாய், क्वचित्- ஓரிடத்தில், निर्मलवालुकाम्- நிர்மலமான மணலையுடையதுமாய்.

19. (ப-ரை) हंससारस संघुष्टां- ஹம்ஸங்களாலும், ஸாரஸ பக்ஷிகளாலும் சப்திக்கப்பட்டும், चक्रवाक उपकूजिताम्- சக்ரவாகபக்ஷிகளால் ஸமீபத்தில் கூவப்பட்டும், सदा मदैः- எப்பொழுதும் மதம் உடையவைகளான, विहगैः च- மற்ற பக்ஷிகளாலும், अभिसन्नादित अन्तराम्- நாற்புறங்களிலும் சப்திக்கப்பட்ட ஸமீப ப்ரதேசத்தையுடையதுமாய், क्वचित्- ஓரிடத்தில், तीररुहैः- கரைகளில் முளைத்திருக்கின்ற, वृक्षैः- மரங்களால், मालाभिः इव-மாலைகளினால் (விளங்குவது)போல், शोभिताम्-விளங்குகின்றதாயும்.

20. (ப-ரை) क्वचित्- ஓரிடத்தில், फुल्ल उत्पल छन्नां- மலர்ந்த கருநெய்தல்களால் மறைக்கப்பட்டும், क्वचित्- ஓரிடத்தில், पद्म वन आकुलाम्- தாமரைக்காடுகளால் சூழப்பட்டும், क्वचित्- ஓரிடத்தில், कुमुदषण्डैः- ஆம்பல்களின் கூட்டங்களாலும், कुड्मलैः च- மொக்குள்களாலும், उपशोभिताम्- நன்றாய் விளங்குகின்றதாயும்.

---

18. (பொ-ரை) தேவகணங்கள் எப்பொழுதும் ஸ்நாநம் செய்கின்ற ஜலமுடையதாயும், நிர்மலமான கருநெய்தல் புஷ்பங்களால் விளங்குகின்றதாயும், ஓரிடத்தில் விசாலமாய், நிர்மலமுமான மணல்களையுடைதுமாய்.

19. (பொ-ரை) ஹம்ஸ, ஸாரஸ, சக்ரவாக என்னும் பக்ஷிகளுடைய இனிதான சப்தங்களையுடையதுமாய், எப்பொழுதும் மதங்கொண்ட மற்ற பக்ஷிகளின் சப்தம் நிறைந்த ஸமீபப்ரதேசத்தை யுடையதுமாய், ஓரிடத்தில் மாலைபோல் வரிசையாக கரைகளில் முளைத்திருக்கின்ற மரங்களினால் விளங்குகின்றதுமாய்.

20. (பொ-ரை) ஓரிடத்தில் நன்றாகமலர்ந்த கருநெய்தல் புஷ்பங்கள் அடர்ந்திருப்பதினால் மறைந்த ஜலமுடையதாயும், ஓரிடத்தில் தாமரை ஓடைகளால் நிறைந்ததாயும், ஓரிடத்தில் ஆம்பல் காடுகளாலும், செங்கழுநீர் முதலானபுஷ்பங்களின் மொக்குள்களாலும், விளங்குகின்றதுமாயும்.

नानापुष्परजोध्वस्तां समदामिव च क्वचित् ।
व्यपेतमलसंघातां मणिनिर्मलदर्शनाम् ॥ 21 ॥

दिशागजैर्वनगजैर्मत्तैश्च वरवारणैः ।
देवौपवाह्यैश्च मुहुः संनादितवनान्तराम् ॥ 22 ॥

प्रमदामिव यत्नेन भूषितां भूषणोत्तमैः ।
फलैः पुष्पैः किसलयैर्वृतां गुल्मैर्द्विजैस्तथा ॥ 23 ॥

---

21. (ப-ரை) नानापुष्परजोध्वस्तां- பலவிதங்களான புஷ்பங்களுடைய பொடிகளால் கலங்கினதாய், (अतः- ஆதலால்) क्वचित्- ஓரிடத்தில், समदामिव स्थितां- மதத்துடன் கூடியதுபோல் இருக்கின்றதாயும், व्यपेतमलसंघातां- போயிருக்கின்ற அழுக்குக்கூட்டங்களையுடையதாய், (अतः- ஆதலால்) मणिनिर्मलदर्शनाम्- ஸ்படிகம்போல் நிர்மலமான காட்சியை உடையதாயும்.

22. (ப-ரை) दिशागजैः- திக்கு யானைகளாலும், वनगजैः- காட்டுயானைகளாலும், मत्तैः- மதம்பிடித்திருக்கின்ற, देव औपवाह्यैः- தேவர்களுக்கு வாஹனமான, वरवारणैः च- உயர்ந்தயானைகளாலும், मुहुः- அடிக்கடி, संनादितवनान्तराम्- சப்தமுடையதாக செய்யப்பட்ட வனப்ரதேசங்களை யுடையதாயும்.

23. (ப-ரை) फलैः- பழங்களாலும், पुष्पैः- புஷ்பங்களாலும், किसलयैः- தளிர்களாலும், गुल्मैः- புதர்களாலும், तथा- அவ்விதம், द्विजैः- பக்ஷிகளாலும், वृतां- சூழப்பட்டதாயும், (अतः- ஆதலால்) यत्नेन- ப்ரயத்னத்தினால், भूषणोत्तमैः- சிறந்த ஆபரணங்களினால், भूषितां- அலங்கரிக்கப்பட்ட, प्रमदां इव (स्थितां)- ஸ்த்ரீபோல் இருக்கின்றதுமாய்.

21. (பொ-ரை) ஓரிடத்தில் புஷ்பங்களின் தூளிகள் விழுந்து கலங்கியிருப்பதைப்பார்த்தால், மதங்கொண்டதுபோலவும், வண்டல் முதலானவைகளில்லாதபடியால் ஸ்படிகம்போல் பார்ப்பதற்கு நிர்மலமாயும்,

22. (பொ-ரை) திக்கு யானைகளும், காட்டுயானைகளும், தேவர்களுக்கு வாஹனமான மதம் பிடித்த சிறந்த யானைகளும் அடிக்கடி, ஸஞ்சரித்து சப்திக்கின்ற வனங்களையுடையதாயும்.

23. (பொ-ரை) பழங்களும், புஷ்பங்களும், துளிர்களும், புதர்களும், அதில் பக்ஷிகளும் நிறைந்திருப்பதினால், மிகவும் ப்ரயத்நத்துடன் உத்தமமான ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட ஸ்த்ரீ போன்றதுமாயும்.

शिशुमारैश्च नक्रैश्च भुजङ्गैश्च निषेविताम् ।
विष्णुपादच्युतां दिव्यामपापां पापनाशिनीम् ॥ 24 ॥
[तां शंकरजटाजूटाद्भ्रष्टां सागरतेजसा] ।
समुद्रमहिषीं गंगां सारसक्रौञ्चनादिताम् ।
आससाद महाबाहुः शृङ्गबेरपुरं प्रति ॥ 25 ॥
तामूर्मिकलिलावर्तामन्ववेक्ष्य महारथः ।
सुमन्त्रमब्रवीत्सूतमिहैवाद्य वसामहे ॥ 26 ॥

---

24. (ப-ரை) शिशुमारैः च- நீர் குரங்குகளாலும், नक्रैः च- முதலைகளாலும், भुजंगैः च- ஸர்ப்பங்களாலும், निषेविताम्- அடையப்பட்டதாயும், विष्णुपादच्युतां- விஷ்ணுவினுடைய பாதத்திலிருந்து நழுவினதுமாய், दिव्यां- தெய்வத்தன்மை பொருந்தியதுமாய், अपापां- பாபமில்லாததுமாய், पापनाशिनीम्- பாபத்தைப்போக்குகின்றதுமாய்.

25. (ப-ரை) शंकरजटाजूटात्- சிவபெருமானுடைய சடைமுடியிலிருந்து, सागरतेजसा- ஸகரபுத்திரர்களுடைய ப்ரபாவத்தினால், भ्रष्टां- நழுவினதாயும், सारसक्रौञ्चनादिताम्- ஸாரஸமென்னும் பக்ஷிகளாலும், அன்றில் பக்ஷிகளாலும் சப்திக்கப்பட்டு, समुद्रमहिषीं- ஸமுத்திர ராஜனுடைய பட்ட மஹிஷியுமான, गगां- கங்கா நதியை, महाबाहुः- பெரும் தோள்களையுடைய ஸ்ரீராமன், शृङ्गबेरपुर प्रति- ச்ருங்கிபேரம் என்னும் நகரத்தின் ஸமீபத்தில், आससाद- அடைந்தார்.

26. (ப-ரை) ऊर्मि कलिल आवर्तां- அலைகளோடு கூடிய சுழல்களையுடையதான, तां- அந்த கங்கா நதியை, अन्ववेक्ष्य- பார்த்து, महारथः- மஹாரதரான ஸ்ரீராமன், सूत सुमन्त्रं- ஸாரதியான ஸுமந்த்ரரைப்பார்த்து, अब्रवीत्- சொன்னார், अद्य- இன்று, इह एव- இங்கேயே, वसामहे- வாஸம் செய்வோம்.

---

24. (பொ-ரை) நீர் குரங்குகளாலும், முதலைகளாலும், பாம்புகளாலும் அடையப்பட்டும், விஷ்ணுவின் பாதத்திலிருந்து புறப்பட்டும், தெய்வத்தன்மை பொருந்தியும், பாபமற்றதாயும, பாபததைப்போக்குகின்றதாயும.

25. (பொ-ரை) சிவபெருமானுடைய சடைமுடியிலிருந்து, ஸகரகுமாரர்களின் ப்ரபாவத்தினால் கீழே விழுந்தும, ஸாரஸமெனறும், க்ரௌஞ்சமென்றும் பக்ஷிகளால் சப்திககபபட்டும், ஸமுத்திரராஜன் மஹிஷியான கங்கா நதியை, பெரும் தோள்களையுடைய ஸ்ரீராமன், ச்ருங்கிபேர நகரத்தின் ஸமீபத்தில் அடைந்தார்.

26. (பொ-ரை) அலைகளுடன் கூடிய சுழல்களையுடையதான அந்த கங்கா நதியைப்பார்த்து விட்டு, மஹாரதரான ஸ்ரீராமர், ஸாரதியான ஸுமந்த்ரரைப் பார்த்து "இன்றையதினம் நாம இங்கேயே தங்கியிருப்போம்". என்று சொன்னார்.

अविदूरादयं नद्याः बहुपुष्पप्रवालवान् ।
सुमहानिङ्गुदीवृक्षो वसामोऽत्रैव सारथे ॥ 27 ॥

द्रक्ष्यामः सरितां श्रेष्ठां संमान्यसलिलां शिवाम् ।
देवदानवगन्धर्वमृगमानुषपक्षिणाम् ॥ 28 ॥

लक्ष्मणश्च सुमन्त्रश्च बाढमित्येव राघवम् ।
उक्त्वा तमिङ्गुदीवृक्षं तदोपययतुर्हयैः ॥ 29 ॥

27. (ப-ரை) हे सारथे- வாரீர் ஸுமந்த்ரரே! नद्याः- நதியினுடைய, अविदूरात्- ஸமீபத்தில், बहुपुष्पप्रवालवान्- அதிகமான புஷ்பங்களையும், தளிர்களையுமுடையதாய், सुमहान्- மிகப் பெரிதான, इङ्गुदीवृक्षः- இங்குதீ என்னும் மரமானது, अयं- இதோ (தெரிகிறது) अत्र एव- இங்கேயே, वसामः- வஸிப்போம்.

28. (ப-ரை) देव दानव गन्धर्व मृग मानुष पक्षिणाम्-தேவர்கள், தானவர்கள், கந்தர்வர்கள், ம்ருகங்கள், மனிதர்கள், பக்ஷிகள் இவர்களுக்கு, संमान्यसलिलां- பஹுமானிக்கத்தகுந்த தீர்த்தமுடையதாய், शिवाम्- பரிசுத்தமானதாய், सरितां श्रेष्ठां- நதிகளுக்குள் உத்தமமான (கங்காநதியை) द्रक्ष्यामः- பார்ப்போம்

29. (ப-ரை) लक्ष्मणः च- இலக்குமணனும், सुमन्त्रः च- ஸுமந்த்ரரும், बाढं इति एव- அப்படியே என்று, राघवम्- ராகவனைப்பார்த்து, उक्त्वा- சொல்லிவிட்டு, तदा- அப்பொழுது, हयैः- குதிரைகளோடு, तं इङ्गुदीवृक्षं- அந்த இங்குதீ மரத்தின், उप ययतुः- ஸமீபத்திற் சென்றார்கள்.

27. (பொ-ரை) ஸுமந்த்ரரே! இதோ நதியின் ஸமீபத்தில் நிறைந்த புஷ்பங்களும், தளிர்களுமுடையதாய் மிகப்பெரிதான ஒரு இங்குதீ என்னும் மரம் தெரிகின்றது. இங்கேயே இன்று தங்கிவிடுவோம்.

28. (பொ-ரை) தேவர்கள், தானவர்கள், கந்தர்வர்கள், ம்ருகங்கள், மனிதர்கள், பக்ஷிகள் இவைகளால் புகழத்தக்க தீர்த்தமுடையதாய் பரிசுத்தமுமாய் நதிகளுக்குள் உத்தமமுமான கங்கா நதியைப்பார்ப்போம்.

29. (பொ-ரை) இலக்குமணனும் ஸுமந்த்ரரும் அப்படியே செய்வோமென்று ஸ்ரீராகவனிடம் சொல்லிவிட்டு அப்பொழுது குதிரைகளுடனே அந்த இங்குதீமரத்தின் ஸமீபம் சென்றார்கள்.

रामोऽभियाय तं रम्यं वृक्षमिक्ष्वाकुनन्दनः ।
रथादवातरत्तस्मात्सभार्यः सहलक्ष्मणः ॥ 30 ॥

सुमन्त्रोऽप्यवतीर्यास्मान्मोचयित्वा हयोत्तमान् ।
वृक्षमूलगतं राममुपतस्थे कृताञ्जलिः ॥ 31 ॥

तत्र राजा गुहो नाम रामस्यात्मसमः सखा ।
निषादजात्यो बलवान्स्थपतिश्चेति विश्रुतः ॥ 32 ॥

---

30. (ப-ரை) इक्ष्वाकुनन्दनः- இக்ஷ்வாகு குலத்திற்கு ஆனந்தத்தை விளைக்கின்ற, रामः- ஸ்ரீராமன், तं- அந்த, रम्यं वृक्षं- அழகான மரத்தை, अभियाय- அடைந்து, सभार्यः- பார்யையுடனும், सहलक्ष्मणः- இலக்குமணனுடனும், तस्मात्- रथात्- அந்தத்தேரிலிருந்து, अवातरत्- இறங்கினார்.

31. (ப-ரை) सुमन्त्रः अपि- ஸுமந்த்ரரும், अवतीर्य- இறங்கி, अस्मात्- இந்த ரதத்திலிருந்து, हयोत्तमान्- உத்தமமான குதிரைகளை, मोचयित्वा- அவிழ்த்துவிட்டு, वृक्षमूलगतं- மரத்து அடியில் இருக்கின்ற, रामं- ஸ்ரீராமனை, कृताञ्जलिः (सन्)- கை கூப்பிக்கொண்டு, उपतस्थे- ஸேவித்துக்கொண்டு நின்றார்.

32. (ப-ரை) तत्र- அங்கு, निषादजात्यः- வேட ஜாதியில் பிறந்தவரும், बलवान्- மிக்க பலமுடையவரும், स्थपतिः च इति- (வேடர்களுக்கு) அதிகாரியென்று, विश्रुतः- ப்ரஸித்தரும், रामस्य- ஸ்ரீராமனுக்கு, आत्मसमः- ப்ராணனுக்கொப்பான, सखा- தோழனும், गुहः नाम- குஹன் என்று ப்ரஸித்தருமான, राजा- ஒரு அரசன் (आसीत्- இருந்தார்)

---

30. (பொ-ரை) இக்ஷ்வாகு குலத்திற்கு பேரானந்தத்தை விளைக்கின்றவரான ஸ்ரீராமன், அழகான அந்த இங்குதிமரத்தின் ஸமீபம் சென்று ஸீதையுடனும் இலக்குமணனுடனும், தேரிலிருந்து இறங்கினார்.

31. (பொ-ரை) ஸுமந்த்ரரும், தேரில் இருந்து இறங்கி குதிரைகளை அவிழ்த்துவிட்டு மரத்து அடியில் இருக்கின்ற ஸ்ரீராமனிடம் கை கூப்பிக்கொண்டு ஸேவித்து நின்றார்.

32. (பொ-ரை) அங்கு, குஹனென்று ப்ரஸித்தமான பெயருடையவராய், ஸ்ரீராமனுக்கு ப்ராணனையொத்த தோழனாய் வேடஜாதியிற் பிறந்தவராய் மிக்க பலமுடையவராய் வேடர்களுக்கு அதிபதியென்று உலகமெங்கும் ப்ரஸித்தருமான ஒரு காட்டு அரசன் இருந்தார்.

स श्रुत्वा पुरुषव्याघ्रं रामं विषयमागतम् ।
वृद्धैः परिवृतोऽमात्यैर्ज्ञातिभिश्चाप्युपागतः ॥ 33 ॥
ततो निषादाधिपतिं दृष्ट्वा दूरादुपस्थितम् ।
सह सौमित्रिणा रामः समागच्छद्गुहेन सः ॥ 34 ॥
तमार्तः संपरिष्वज्य गुहो राघवमब्रवीत् ।
यथाऽयोध्या तथेयं ते राम किं करवाणि ते ॥ 35 ॥
ईदृशं हि महाबाहो कः प्राप्स्यत्यतिथिं प्रियम् ॥ 36 ॥

33. (ப-ரை) सः- அவர், पुरुषव्याघ्र- புருஷோத்தமனான, राम- ஸ்ரீராமனை विषयं- தம்முடைய தேசத்தை, आगतम्- வந்திருக்கிறவராக, श्रुत्वा- கேட்டு, वृद्धैः- பெரியோர்களான, अमात्यैः- மந்த்ரிகளாலும், ज्ञातिभिः चापि- பந்துக்களாலும், परिवृतः (सन्)- சூழப்பட்டவராய்க்கொண்டு, उपागतः- (ஸ்ரீராமனுடைய) ஸமீபத்திற்கு வந்தார்.

34. (ப-ரை) ततः- பிறகு, सः रामः- அந்த ஸ்ரீராமன், दूरात्- வெகு தூரத்திலே, उपस्थितम्- வந்து கொண்டிருக்கிற, निषादाधिपतिं- வேட ராஜனை, दृष्ट्वा- பார்த்து, सौमित्रिणा सह- இலக்குமணனுடன்கூட, गुहेन- குஹனுடன், समागच्छत्- சேர்ந்தார்.

35-36. (ப-ரை) गुहः- குஹன், आर्तः (सन्)- மிகவும் துக்கமுடையவராய்க்கொண்டு, तं राघवं- அந்த ராகவனை, संपरिष्वज्य- நன்றாகக்கட்டிக்கொண்டு, हे राम- ப்ரபோ ராமா! ते- உமக்கு, अयोध्या- அயோத்திமா நகரமானது, यथा- எப்படியோ, तथा- அப்படியே, इयं- என்னுடைய இந்த நகரமும், ते- உமக்கு, (अहं- நான்), किं करवाणि- என்ன செய்யவேண்டியவன், हे महाबाहो- பெரும் தோளுடையவரே, ईदृशं- இப்படிப்பட்ட, प्रियम्- அன்புள்ள, अतिथिं- அதிதியை, कः- எவன், प्राप्स्यति हि- அடைவான், इति- என்று, अब्रवीत्- சொன்னார்.

---

33. (பொ-ரை) அந்த குஹனும் புருஷோத்தமனான ஸ்ரீராமன் தன்னுடைய தேசத்திற்கு எழுந்தருளினதைக்கேட்டு வ்ருத்தர்களான மந்த்ரிகளுடனும், பந்துக்களுடனும் சூழ்ந்து ஸ்ரீராமன் ஸமீபம் வந்தார்.

34. (பொ-ரை) பிறகு ஸ்ரீராமன் வேடர்களுக்கதிபதியான குஹன், வெகு தூரத்தில் வருவதைக்கண்டு, இலக்குமணனுடன் குஹனோடு சேர்ந்தார்.

அதாவது, இலக்குமணனைப்போல் குஹனையும ப்ராதாவாக நினைத்தார் என்று தாத்பர்யம்.

35-36. (பொ-ரை) குஹனும், ஸ்ரீராமனைப்பார்த்தவுடனே அவர் மரவுரியை தரித்துக்கொண்டிருப்பதினால் மிகதுக்கமடைந்து ஸ்ரீராமனைப்பார்த்து, ராமா! "உமக்கு அயோத்யாபட்டணம் எவ்வளவு ஸ்வாதீனமோ, அப்படியே என்னுடைய பட்டணமும் உமக்கு ஸ்வாதீனம், தாஸனாகிய நான் உமக்கு இப்பொழுது என்ன செய்யவேண்டும், பெரும் தோள்களையுடையவரே? இப்படிப்பட்ட ப்ரியமான அதிதி இவ்வுலகத்தில் எவனுக்குக்கிடைக்கும்" என்று சொன்னார்.

ततो गुणवदन्नाद्यमुपादाय पृथग्विधम् ।
अर्घ्यं चोपानयत्क्षिप्रं वाक्यं चेदमुवाच ह ॥ 37 ॥
स्वागतं ते महाबाहो तवेयमखिला मही ।
वयं प्रेष्या भवान्भर्ता साधु राज्यं प्रशाधि नः ॥ 38 ॥
भक्ष्यं भोज्यं च पेयं च लेह्यं चेदमुपस्थितम् ।
शयनानि च मुख्यानि वाजिनां खादनं च ते ॥ 39 ॥

37. (ப-ரை) ततः- பிறகு, गुणवत्- அதிக குணமுள்ளதாய், पृथग्विधम्- பலவிதமான, अन्नाद्य- அன்னம் முதலானதை. क्षिप्रं- சீக்கிரமாக, उपादाय- எடுத்துக்கொண்டு வந்து, अर्घ्यं च- அர்க்ய தீர்த்தத்தையும், उपानयत्- கொண்டுவந்தார். इदं वाक्यं च- இந்த வார்த்தையையும், उवाच ह- சொன்னார்.

38. (ப-ரை) हे महाबाहो- பெருந்தோளுடையவரே, ते- உமக்கு, स्वागतं- நல்வரவு, इयं मही- இந்த பூமி, अखिला- முழுவதும், तव- உம்முடையது. वयं- நாங்கள், प्रेष्याः- வேலைக்காரர்கள், भवान्- நீர், भर्ता- (எங்களுக்கு) அரசன், नः- எங்களுடைய, राज्यं- இந்த ராஜ்யத்தை, साधु- நன்றாய், प्रशाधि- ஆளவேண்டும்.

39. (ப-ரை) भक्ष्यं- பக்ஷ்யமும், भोज्यं च- போஜ்யமும், पेयं च- பேயமும், लेह्य च- லேஹ்யமும், मुख्यानि- உத்தமங்களான, शयनानि च- படுக்கைகளும், ते- உம்முடைய, वाजिनां- குதிரைகளுக்கு, खादनं च- தீனியும், इदं उपस्थितम्- இதோ ஸித்தமா[illegible]க்கின்றது.

37. (பொ-ரை) பிறகு, மிகவும் குண முள்ளதாய் நானாவிதமான அன்னம் முதலானதையும், அர்க்ய தீர்த்தத்தையும, சீக்கிரமாக கொண்டுவந்து வைத்து ஸ்ரீராமனைப்பார்த்து ஒருவார்த்தை சொன்னார்.

தனக்கு இஷ்ட தெய்வமான ஸ்ரீராமன், தன் நகரத்திற்கு எழுந்தருளினதைப் பார்த்து பரமானந்தத்துடன் ஸ்ரீகுஹப்பெருமான் தன்னுடைய ஸொத்து முழுவதையும ஸ்ரீராமனுக்கு ஸமர்ப்பிக்[illegible]ர்.

38. (பொ-ரை) மஹா பாஹுவே! நீர் ஸௌக்யமாக வரவேணும், இந்த வனம், பூமிமுழுதும் உம்முடையது. நாங்கள் எல்லோரும் உங்களுக்கு வேலைக்காரர்கள். நீர் எங்களுக்கு ராஜா, எங்களுடைய ராஜ்யம் முழுவதையும் நீர் நன்றாய் ஸ்வீகரித்துக் கொள்ளவேணும்.

39. (பொ-ரை) ப்ரபோ! பக்ஷ்ய, போஜ்ய, பேய, லேஹ்ய என்னும் பலவிதமான வஸ்துக்களும் நீர்படுத்துக்கொள்ளத்தகுந்த உத்தமங்களான கட்டில் மெத்தை முத்

गुहमेवं ब्रुवाणं तु राघवः प्रत्युवाच ह ।
अर्चिताश्चैव हृष्टाश्च भवता सर्वथा वयम् ॥
पद्भ्यामभिगमाच्चैव स्नेहसंदर्शनेन च ॥ 40 ॥
भुजाभ्यां साधु पीनाभ्यां पीडयन्वाक्यमब्रवीत् ॥ 41 ॥
दिष्ट्या त्वां गुह पश्यामि ह्यरोगं सह बान्धवैः ।
अपि ते कुशलं राष्ट्रे मित्रेषु च धनेषु च ॥ 42 ॥

40. (ப-ரை) एवं- இவ்விதம், ब्रुवाणं तु- சொல்லுகின்ற, गुहं–குஹனைப்பார்த்து, पद्भ्यां- अभिगमात् च एव- கால்நடையாக வந்ததினாலும், स्नेहसंदर्शनेन च- அன்பைக் காட்டியபடியாலும், वयं- நாங்கள், सर्वथा- பலபடியாலும், भवता-உம்மால், अर्चिताः च एव- பூஜிக்கப்பட்டோம். हृष्टाः च- ஸந்தோஷமுமடைந்தோம். (इति- என்று.) राघवः- ஸ்ரீரா மன், प्रत्युवाच ह-பதில் சொன்னார்.

41–42. (ப-ரை) पीनाभ्यां- பெருத்திருக்கின்ற, भुजाभ्यां-தோள்களால், साधु- நன்றாக, पीडयन्- அணைத்துக்கட்டிக்கொண்டு, हे गुह- வாரீர் குஹரே! दिष्ट्या- தெய்வா தீனமாய், बान्धवैः सह- பந்துக்களோடுகூட, त्वां- உம்மை, अरोग-ரோகமில்லாதவராக, पश्यामि- பார்க்கிறேன், ते- உம்முடைய, राष्ट्रे- தேசத்திலும், मित्रेषु च- தோழர்களிடத் திலும், धनेषु च- தனங்களிலும், कुशलं अपि- க்ஷேமமா? इति- என்று, वाक्यं- வார்த்தை யை, अब्रवीत्- சொன்னார்.

லானவைகளும் உம்முடைய குதிரைகளுக்குவேண்டிய, கொள், புல் முதலானவை களும் இதோஸித்தமாக வந்திருக்கின்றது.

பக்ஷ்யம். -பற்களால் மெல்லத்தகுந்தபக்ஷணம், காய்கறிமுதலானதுகள் போஜ்யம்- அன்னம், பேயம். -பானகம் நீர்மோர் முதலான குடிக்கத்தகுந்த பதார்த் தங்கள். லேஹ்யம்- நாக்கினால் நக்கக்கூடிய ரஸாயனம் முதலானதுகள்.

40. (பொ-ரை) இவ்விதம் சொல்லுகின்ற குஹனைப்பார்த்து, தோழரே, நாம் இங்குவந்திருப்பதை நீர் தெரிந்துகொண்டு கால்நடையாக நடந்து வந்து என் னிடம் அன்பை காட்டினதினாலேயே நாங்கள் உம்மால் பூஜிக்கப்பட்டோம். பரம ஸந்தோஷத்தையுமடைந்தோம், என்று ஸ்ரீராமன், பதில் சொன்னார்.

41–42. (பொ-ரை) ஸ்ரீராமன் மறுபடியும், பெருத்த தம்முடைய இரு தோள்களாலும், அந்த குஹனை நன்றாய் அணைத்துக்கட்டிக்கொண்டு, வாரீர் குஹரே! உம்முடைய பந்துக்களும் நீரும், ஸௌக்யமாயிருப்பதைப்பார்த்து நான் மிகவும் ஸந்தோஷப்படுகின்றேன், உம்முடைய தேசம், தோழர்கள், தனங்கள், முதலியவைகளுக்கு ஒரு குறைவுமில்லாமல் க்ஷேமம்தானே? என்று கேட்டார்.

यत्त्विदं भवता किंचित्प्रीत्या समुपकल्पितम् ।
सर्वं तदनुजानामि नहि वर्ते प्रतिग्रहे ॥ 43 ॥
कुशचीराजिनधरं फलमूलाशिनं च माम् ।
विद्धि प्रणिहितं धर्मे तापसं वनगोचरम् ॥ 44 ॥
अश्वानां खादनेनाहमर्थी नान्येन केनचित् ।
एतावताऽत्र भवता भविष्यामि सुपूजितः ॥ 45 ॥

---

43. (ப-ரை) भवता- உம்மால், प्रीत्या- அன்போடு, समुपकल्पितम्- கொண்டு வரப்பட்ட, यत् तु इदं किंचित्-யாதொரு இந்த கிலபதார்த்தம் உண்டோ, सर्वं तत्-அவை முழுவதையும், अनुजानामि- நன்றாக உபசரித்தீரென்று ஒப்புக்கொள்ளுகிறேன், हि- ஏனென்றால், प्रतिग्रहे- (ஒருவரிடம்) வாங்குகிற தன்மையில், न वर्ते- (நான்) இருக்க வில்லை.

44. (ப-ரை) मां- என்னை, धर्मे- (பித்ருவசன பரிபாலன) தர்மத்தில், प्रणिहितं- கவனமுள்ளவனாய், कुशचीराजिनधरं- தர்பம், மாவுரி, கிருஷ்ணாஜினம் இவைகளைத் தரித்துக்கொண்டு, वनगोचरम्– வநத்தில் ஸஞ்சரிக்கின்றவனாய், फलमूलाशिनं- காய், கனி, கிழங்கு இவைகளை புஜித்துக்கொண்டு இருக்கிற, तापस- ரிஷியாக, विद्धि- (நீர்) தெரிந்துகொள்ளும்.

45. (ப-ரை) अहं- நான், अश्वानां- குதிரைகளுக்கு, (வேண்டிய) खादनेन- தீனியினால், अर्थी- ப்ரயோஜன முடையவனாக விருக்கிறேன். अन्येन केनचित्- மற்ற ஒன்றினாலும், न- अर्थी- ப்ரயோஜன முடையவனல்ல. एतावता– இவ்வளவு மாத்திரத்தினாலே, अत्र भवता- உம்மால், सुपूजितः- நன்றாக பூஜிக்கப்பட்டவனாக, भविष्यामि- ஆவேன்.

43. (பொ-ரை) அன்பனே! நீர் ப்ரீதியுடன் கொண்டுவந்த இந்த வஸ்த்துக்களையெல்லாம பார்த்து நன்றாக உபசரித்தீரென்று, ஸந்தோஷப்படுகிறேன். ஆனால் இப்பொழுது நான் ஒருவரிடமிருந்தும் ஒருவஸ்துவையும் வாங்கிக்கொள்ளும நிலைமையில் இல்லை. ஆதலால் இவையெல்லாவற்றையும் நீர் எடுத்துக்கொண்டு போம்.

44. (பொ-ரை) நான் இப்பொழுது பித்ருவசன பரிபாலனத்திற்காக தர்பம, மாவுரி, கிருஷ்ணாஜினம் இவைகளை தரித்துக் கொண்டு, காய், கனி, கிழங்கு முதலியவைகளை புஜித்து ரிஷிவேஷத்துடன் வநத்தில் ஸஞ்சரிக்கிறேன். இதை நீர் தெரிந்து கொள்ளும்.

45. (பொ-ரை) ஆனால் நான் உம்மிடத்தில் வேண்டுவது, குதிரைகளுக்கு புல், கொள்ளு, இவை மாததிரம் தான், மற்ற எந்த வஸ்துவும் வேண்டாம். இவ்வளவு மாத்திரம் நீர் கொடுத்தால் என்னை நன்றாய் நீர் பூஜித்ததாக ஆகும்.

एते हि दयिता राज्ञः पितुर्दशरथस्य मे ।
एतैः सुविहितैरश्वैर्भविष्याम्यहमर्चितः ॥ 46 ॥

अश्वानां प्रतिपानं च खादनं चैव सोऽन्वशात् ।
गुहस्तत्रैव पुरुषांस्त्वरितं दीयतामिति ॥ 47 ॥

ततश्चीरोत्तरासंगः संध्यामन्वास्य पश्चिमाम् ।
जलमेवाऽऽददे भोज्यं लक्ष्मणेनाऽऽहृतं स्वयम् ॥ 48 ॥

46. (ப-கை) हि- ஏனென்றால், एते- இந்த குதிரைகள், मे पितुः- என் பிதாவான, दशरथस्य राज्ञः- தசரத மஹாராஜருக்கு, दयिताः- மிகவும் ப்ரியமானவைகள், सुविहितैः- நன்றாக போஷிக்கப்படுகின்ற, एतैः अश्वैः- இந்தக் குதிரைகளினால், अहं- நான் अर्चितः- பூஜிக்கப்பட்டவனாக. भविष्यामि- ஆவேன்.

47. (ப-கை) सः गुहः- அந்த குஹன், तत्र एव- அப்பொழுதே, पुरुषान्- தன்னுடைய வேலைஆள்களைக்குறித்து, अश्वानां- குதிரைகளுக்கு, प्रतिपानं च- குடிக்கும் தண்ணீரும், खादनं च एव- தீனியும், त्वरितं-சீக்கிரமாக, दीयतां-கொடுக்கப்படவேண்டும்,इति- என்று, अन्वशात्- கட்டளையிட்டார்.

48. (ப-கை) ततः- பிறகு, (रामः- ஸ்ரீராமன்) चीर उत्तरासङ्गः- மரவுரியை உத்தரீயமாகவுடையவராய், पश्चिमाम् संध्यां- ஸாயம் ஸந்த்யையை, अन्वास्य- உபாஸனம் செய்துவிட்டு, लक्ष्मणेन- இலக்குமணனால், स्वयम्- தானாகவே, आहृतं- கொண்டுவரப்பட்ட, जलं एव- தீர்த்தத்தையே, भोज्यं- ஆஹாரமாக, आददे- ஸ்வீகரித்தார்.

---

46. (பொ-கை) ஆதலால் இவைகளுக்கு நன்றாகத்தீனிபோட்டு போஷணம் செய்தால் எனக்கு பூஜைசெய்தது போலாகும்.

47. (பொ-கை) அந்த குஹனும், குதிரைகளுக்கு குடிக்கும் தண்ணீரும், கொள்ளு, புல் முதலானவைகளும், சீக்கிரம் கொண்டுவந்து கொடுங்கள் என்று உடனே தம்முடைய ஆள்களுக்கு உத்திரவுசெய்தார்.

48 (பொ-கை) பிறகு ஸ்ரீராமன் ஸ்நானம் செய்துவிட்டு, மரவுரியைமேல் உத்தரீயமாக தரித்துக்கொண்டு, ஸாயம் ஸந்தியாவந்தனம் செய்துவிட்டு, இலக்குமணன் தானே கொண்டுவந்து ஸமர்ப்பித்த தீர்த்தத்தையே ஆஹாரமாக உட்கொண்டார்.

तस्य भूमौ शयानस्य पादौ प्रक्षाल्य लक्ष्मणः ।
सभार्यस्य ततोऽभ्येत्य तस्थौ वृक्षमुपाश्रितः ॥ 49 ॥
गुहोऽपि सह सूतेन सौमित्रिमनुभाषयन् ।
अन्वजाग्रत्ततो राममप्रमत्तो धनुर्धरः ॥ 50 ॥
तथा शयानस्य ततोऽस्य धीमतो यशस्विनो दाशरथेर्महात्मनः ।
अदृष्टदुःखस्य सुखोचितस्य सा तदा व्यतीयाय चिरेण शर्वरी ॥ 51 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
पञ्चाशः सर्गः ॥ 50 ॥

---

49. (ப-ரை) ततः- பிறகு, सभार्यस्य- பார்யையுடன் கூடியவராய், भूमौ- தரையில், शयानस्य- படுத்துக்கொண்டிருக்கிற, तस्य- அந்த ஸ்ரீராமனுடைய, पादौ- திருவடிகளை, प्रक्षाल्य- அலம்பிவிட்டு, लक्ष्मणः- இலக்குமணன், ततः- அவ்விடமிருந்து, अभ्येत्य- (குஹருக்கு எதிரில்) வந்து, वृक्षं- மரத்தை, उपाश्रितः- அடைந்தவராக, तस्थौ- இருந்தார்.

50. (ப-ரை) ततः- பிறகு, गुहः अपि- குஹரும், सूतेन सह- ஸாரதியுடன்கூட, सौमित्रि- இலக்குமணனை, अनुभाषयन्- (ராமனுடைய குணங்களை) சொல்லச் சொல்லிக்கொண்டு, रामं- ஸ்ரீராமனைக்குறித்து, अप्रमत्तः- ஜாகரூகராய், धनुर्धरः- வில்லை தரித்துக்கொண்டு, अन्वजाग्रत्- விழித்துக்கொண்டிருந்தார்.

51. (ப-ரை) धीमतः- மஹா ப்ராஜ்ஞராய், यशस्विनः- கீர்த்தியுடையவராய், महात्मनः- மிக்க தைர்யத்தையுடையவராய், अदृष्टदुःखस्य- ஒருநாளும் துக்கத்தையே பாராதவருமாய், सुखोचितस्य- ஸுகத்திற்கே தகுந்தவருமான, दाशरथेः- தசரத குமாரரான, तस्य- அந்த ஸ்ரீராமன், तथा- அவ்விதம், शयानस्य- தரையில் படுத்துக்கொண்டிருக்கையில், तदा- அப்பொழுது, सा शर्वरी- அந்த இரவானது, चिरेण- நெடுங்காலம் சென்று, व्यतीयाय- கழிந்தது.

---

49. (பொ-ரை) பிறகு, ஸீதையுடன், ராமன, தரையில் படுத்துககொண்டஉடனே, இலககுமணன், ஸ்ரீராமனுடைய திருவடிகளை அலம்பி துடைத்துவிட்டு, அங்கிருந்து குஹருக்கு எதிரே வநது அநத மரத்து அடியில் நின்று கொண்டிருந்தார்.

50. (பொ-ரை) பிறகு, குஹரும், ஸுமந்த்ரருடன்கூட ராமகுணங்களை இலக்குமணன் சொல்லக்கேட்டுக்கொண்டே, ஸ்ரீராமனுக்குக் காவலாக, கையிற் வில்லைத்தரித்து ஜாக்கிரதையாக இலக்குமணனுடன் தானும் விழித்துக்கொண்டிருந்தார்.

51, (பொ-ரை) பிறகு, மஹா ப்ராஜ்ஞராய். பெரும் கீர்த்தியுடையவராய், மஹா தீரராய், ஒருக்காலும் துக்கத்தையே பாராதவராய், ஸுகானுபவத்திற்கே ஏற்றவராய், தசரதசக்கிரவர்த்தியின் குமாரரான அந்த ஸ்ரீராமன் அவ்வாறு ஸீதையுடன் மரத்து அடியில் தரையில் படுத்துக்கொண்டிருக்கவே, அந்த இரவானது தீர்க்கமாக வளர்ந்து முடிவு அடைந்தது.

एकपञ्चाशः सर्गः ॥ 51 ॥

तं जाग्रतमदम्भेन भ्रातुरर्थाय लक्ष्मणम् ।
गुहः संतापसंतप्तो राघवं वाक्यमब्रवीत् ॥ 1 ॥
इयं तात! सुखा शय्या त्वदर्थमुपकल्पिता ।
प्रत्याश्वसिहि साध्वस्यां राजपुत्र! यथासुखम् ॥ 2 ॥
उचितोऽयं जनः सर्वः क्लेशानां त्वं सुखोचितः ।
गुप्त्यर्थं जागरिष्यामः काकुत्स्थस्य वयं निशां ॥ 3 ॥

---

1. (ப-ரை) अदम्भेन- கபடமில்லாமல், भ्रातुः- தமயனுருடைய, अर्थाय- ரக்ஷணத்திற்காக, जाग्रतं- விழித்துக்கொண்டிருக்கிற, राघवं- ரகு குலத்து புத்திரரான, तं लक्ष्मणम्- அந்த இலக்குமணனைப்பார்த்து, गुहः- குஹபிரான், संतापसंतप्तः (सन्)- துக்கத்தினுல் மிகவும் தபிக்கப்பட்டவராய்க்கொண்டு, वाक्यं- ஒரு வார்த்தையை, अब्रवीत्- சொன்னுர்.

2. (ப-ரை) हे तात- அப்பா! त्वदर्थं- உமக்காக, इयं शय्या- இந்த படுக்கையானது, सुखा- ஸுகமாக, उपकल्पिता- அமைக்கப்பட்டிருக்கிறது, हे राजपुत्र- ராஜகுமாரரே, अस्यां- இதில், यथासुखम्- ஸுகமாக, साधु- நன்ருய், प्रत्याश्वसिहि- (படுத்துக்கொண்டு) இளைப்பாரும்.

3. (ப-ரை) अयं सर्वः जनः- இந்த ஜனம் முழுவதும், क्लेशानां- கஷ்டங்களுக்கு, उचितः- தகுந்தது, त्वं- நீர், सुख उचितः- ஸுகத்திற்குத் தகுந்தவர், वयं- நாங்கள், काकुत्स्थस्य- ஸ்ரீராமனுடைய, गुप्त्यर्थं- ரக்ஷணத்திற்காக, निशां- இரவை, जागरिष्यामः- விழித்துக்கொண்டிருக்கிறோம்.

1. (பொ-ரை) தமயனை ஸ்ரீராமனை ரக்ஷிப்பதற்காக, கபடமில்லாமல், இரவில் கண்விழித்துக்கொண்டிருக்கிற ரகு குலத்து குமாரரான இலக்குமணனைப் பார்த்து, குஹன் ஸ்ரீராமனது கஷ்ட நிலைமையைப்பார்த்ததினுலுண்டான துக்கத்தினுல் மிகவும் பரிதாபமடைந்து ஒரு வார்த்தை சொல்லுகிறுர்.

2. (பொ-ரை) அப்பா ராஜகுமாரரே! இதோ உமக்காகப்படுக்கை ஸுகமாக அமைக்கப்பட்டிருக்கிறது. நீர் இதில் ஸுகமாய் ப்படுத்துக்கொண்டு நன்ருக இளைப்பாரும்.

3. (பொ-ரை) நாங்கள் எல்லோரும் வனத்தில் திரிகின்ற வேடஜாதியாகையால் கஷ்டம் அனுபவிப்பதே எங்களுக்கு வழக்கமாக ஏற்பட்டிருக்கிறது. நீர் ராஜ குமாரராகையால் ஸுகானுபவத்திற்கே ஏற்றவராயிருக்கிறீர், ஆதலால் ககுத்ஸ்த வம்சத்தில் அவதரித்த ஸ்ரீராமனுடைய காவலுக்காக நாங்கள் இ.வு முழுவதும் தூங்காமல் கண்விழித்துக்கொண்டேயிருக்கப்போகிறோம்.

न हि रामात्प्रियतमो ममास्ति भुवि कश्चन ।
ब्रवीम्येतदहं सत्यं सत्येनैव च ते शपे ॥ 4 ॥
अस्य प्रसादादाशंसे लोकेऽस्मिन्सुमहद्यशः ।
धर्मावाप्तिं च विपुलामर्थावाप्तिं च केवलाम् ॥ 5 ॥
सोहं प्रियसखं रामं शयानं सह सीतया ।
रक्षिष्यामि धनुष्पाणिः सर्वतो ज्ञातिभिः सह ॥ 6 ॥

---

4. (ப-ரை) भुवि- பூலோகத்தில், मम- எனக்கு, रामात्- ராமனைக்காட்டிலும், प्रियतमः- மிகவும் ப்ரியமானவர், कश्चन- ஒருவரும், न अस्ति हि- இல்லையல்லவா, एतत्- இதை, अहं- நான், सत्य- ஸத்யமாக, ब्रवीमि- சொல்லுகிறேன், सत्येन एव च- ஸத்யத்தினாலேயே, ते- உமக்கு, शपे- ஆணையிடுகிறேன்.

5. (ப-ரை) अस्मिन् लोके- இவ்வுலகில், अस्य- இவருடைய, प्रसादात्- அநுக்ரஹத்தினால், सुमहत् यशः- மிகவும் உயர்ந்த கீர்த்தியையும், विपुलां- மிகவும் விசாலமான, धर्मावाप्तिं च- தர்மங்களின் லாபத்தையும், केवलाम्- अर्थावाप्तिं च- பொருளின் லாபத்தையுமே, आशसे- (கிடைக்கவேண்டுமென்று) வேண்டுகின்றேன்.

6. (ப-ரை) सः अहं- அப்படிப்பட்ட நான், सीतया सह- ஸீதையுடன்கூட, शयान- படுத்துக்கொண்டிருக்கும், प्रियसखं- ப்ரியமான தோழரான, राम- ஸ்ரீராமனை, धनुष्पाणिः सन्- கையில் வில்லையுடையவனாய்க்கொண்டு, ज्ञातिभिः सह- என் பந்துக்களுடன்கூட, सर्वतः- நான்கு திக்கிலும், रक्षिष्यामि- ரக்ஷிக்கப்போகின்றேன்.

4, (பொ-ரை) எனக்கு ஸ்ரீராமனைக்காட்டிலும் மிகவும் ப்ரியமானவர் ஒருவரும் இவ்வுலகில் இல்லை இதை நான் உண்மையாகச்சொல்லுகிறேன். ஸத்தியத்தின்மேல் ஆணையிட்டும் உமக்குச்சொல்லுகிறேன்

5. (பொ-ரை) இவ்வுலகத்தில் இந்த ஸ்ரீராமனுடைய அனுக்ரஹத்தினாலேயே, பெரிதான ஸத்கீர்த்தியும், விசாலமானதர்மலாபமும், விசேஷமான பொருள்களின்லாபமும், உண்டாகவேண்டுமென்று நான்வேண்டிக்கொண்டிருக்கிறேன்.

6. (பொ-ரை) ஆகையால், ஸீதையுடன்கூட மரத்து அடியில் சயனித்துக்கொண்டிருக்கும எனது அன்புள்ள தோழனை ஸ்ரீராமனை என்னுடைய ஜ்ஞாதிகளுடன் நான் கையிற் வில்லைப்பிடித்துக்கொண்டு நாற்புறங்களிலும் சுற்றி நின்று ரக்ஷிக்கப்போகிறேன்.

---

केवल- என்று பாடமானால், प्रसादात् केवलं- அநுக்ரஹத்தினாலேயே என்றும் சொல்லலாம்.

न हि मेऽविदितं किंचिद्वनेऽस्मिंश्चरतः सदा ।
चतुरङ्गं ह्यपि बलं सुमहत्प्रसहेमहि ॥ 7 ॥
लक्ष्मणस्तं तदोवाच रक्ष्यमाणास्त्वयाऽनघ! ।
नात्र भीता वयं सर्वे धर्ममेवानुपश्यता ॥ 8 ॥
कथं दाशरथौ भूमौ शयाने सह सीतया ।
शक्या निद्रा मया लब्धुं जीवितं वा सुखानि वा ॥ 9 ॥

7. (ப-ரை) अस्मिन् वने- இந்த வனத்தில், सदा- எப்பொழுதும், चरतः- ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிற, मे- எனக்கு, अविदितं- தெரியாதது, किंचित्- ஒன்றும், न हि- இல்லை, सुमहत्- மிகவும் பெரிதான, चतुरङ्गं- நான்கு அங்கங்களோடு கூடிய, बलं अपि- ஸைன்யத்தையும், प्रसहेमहि हि- பொறுப்பேன்.

8. (ப-ரை) तदा- அப்பொழுது, लक्ष्मणः- இலக்குமணன், तं- அந்த குஹனைப் பார்த்து, उवाच- சொன்னார், हे अनघ- குற்றமற்றவரே, धर्मं एव- தர்மத்தையே, अनुपश्यता- கவனித்துப் பார்க்கின்ற, त्वया- உம்மால், रक्ष्यमाणाः- ரக்ஷிக்கப்பட்ட, वयं सर्वे- நாங்கள் எல்லோரும், अत्र- இவ்வனத்தில், न भीताः- பயப்படவில்லை.

9. (ப-ரை) दाशरथौ- தசரதமஹாராஜரின் குமாரரான ஸ்ரீராமன், भूमौ- தரையில், सीतया सह- ஸீதையுடன் கூட, शयाने सति- படுத்துக்கொண்டிருக்குமளவில், मया- என்னால், निद्रा- தூக்கமோ, जीवितं वा- உயிரோ, सुखानि वा- மற்ற ஸுகங்களோ, लब्धुं- அடைவதற்கு, कथं- எப்படி, शक्या- முடியும்.

7. (பொ-ரை) இந்த வநத்தில் நான் எப்பொழுதும் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிறபடியால், எனக்குத்தெரியாதது ஒன்றுமில்லை. ரத கஜ துரக பதாதி என்ற நான்கு அங்கங்களையுடைய மிகவும் பெரிதான ஸைன்யங்கள் வந்தாலும் அதுடன் எதிர்த்து ஜயிக்க சக்தியுள்ளவன்.

8. (பொ-ரை) அப்பொழுது, இலக்குமணன் அவ்விதம் சொல்லுகின்ற குஹனைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னார். குற்றமற்றவரே! கேவலம் தர்மம் ஒன்றிலேயே நோக்கங்கொண்டு நீர் எங்களெல்லோரையும் காப்பாற்றுகின்றபடியால் எங்களெல்லோருக்கும் இவ்வநத்தில் யாதொருபயமுமில்லை.

9. (பொ-ரை) தசரத மஹாராஜரின் குமாரரான, ஸ்ரீராமன், ஸீதையுடன் கூட தரையில் படுத்துக்கொண்டிருக்கும்பொழுது உயிருடனிருக்கவாவது, மற்ற ஸுகங்களை அடைவதற்காவது, தூங்குவதற்காவது என்னால் எப்படி முடியும்.

योनदेवासुरैः सर्वैः शक्यः प्रसहितुं युधि ।
तं पश्य सुखसंविष्टं तृणेषु सह सीतया ॥ 10 ॥

यो मन्त्रतपसा लब्धो विविधैश्च परिश्रमैः ।
एको दशरथस्येष्टः पुत्रः सदृशलक्षणः ॥ 11 ॥

अस्मिन्प्रव्राजिते राजा न चिरं वर्तयिष्यति ।
विधवा मेदिनी नूनं क्षिप्रमेव भविष्यति ॥ 12 ॥

10. (ப-ரை) यः- யாதொருவர், युधि- யுத்தத்தில், देवासुरैः सर्वैः- தேவர்கள் அஸுரர்கள் எல்லோராலும், प्रसहितुं- ஜயிப்பதற்கு, न शक्यः- முடியாதவரோ, सीतया सह- ஸீதையுடன் கூட, तृणेषु- புல்லுகளில், सुखसविष्टं- ஸுகமாகப் படுத்துக்கொண்டிருக்கிற, तं- அந்த ஸ்ரீராமனை, पश्य- பாரும்.

11-12. (ப-ரை) दशरथस्य- தசரதருடைய, मन्त्रतपसा- மந்திரத்தினாலும், தவத்தினாலும், विविधैः- பலவிதங்களான, परिश्रमैः च-(யஜ்ஞம் முதலான), ச்ரமப்படக்கூடிய கார்யங்களாலும், लब्धः- அடையப்பட்டவராய், सदृशलक्षणः- தனக்கு ஸமானமான, ராஜலக்ஷணங்களையுடையவராய், इष्टः- அன்புள்ளவராய், यः- யாதொரு, एकः- முக்யரான, पुत्रः- புத்திரன் உண்டோ, अस्मिन्- இந்தப்புத்திரன், प्रव्राजिते सति- வநத்தைக்குறித்து போக்கப்பட்டவளவில், राजा- அரசன், चिरं- அதிக காலம், न वर्तयिष्यति- உயிருடனிருக்கப்போகிறதில்லை. मेदिनी- பூமியும், क्षिप्रं एव- சீக்கிரமாகவே, विधवा- நாதனற்றதாக, भविष्यति- ஆய்விடப்போகின்றது. नूनं- நிச்சயம்.

10. (பொ-ரை) தேவர்கள், அஸுரர்கள், எல்லோரும் ஒன்றுசேர்ந்து வந்தாலும், யுத்தத்தில் வெல்ல முடியாதவரான நம் தமயனார், ஸீதையுடன் கூட இந்த புல்ப் படுக்கையில் ஸுகமாக சயனித்துக்கொண்டிருப்பதைப்பாரும்.

11-12. (பொ-ரை) தசரத மஹாராஜருக்கு, மந்த்ரங்களாலும், தபஸ்ஸுகளினாலும், புத்திர காமேஷ்டி யாகம் முதலான சரீரச்ரமப்படக்கூடிய அநேக கார்யங்களாலும் கிடைத்து தனக்கு ஸமானமான ராஜ லக்ஷணங்கள் பொருந்தியவராய் மிகவும் அன்பிற்கிடமான முக்யமான புத்திரனை, இந்த ஸ்ரீராமன், இவ்விதம் காட்டிற்குத்துரத்தப்பட்டு வரவே இனி அரசன் அதிகநாள் உயிருடனிருக்கப் போகிறதில்லை. அந்த ராஜ்யமும் கூடியசீக்கிரத்தில் ஆளுகிறவர்களற்று அநாதமாய் விடப்போகின்றது. இது நிச்சயம்.

विनद्य सुमहानादं श्रमेणोपरताः स्त्रियः ।
निर्घोषोपरतं चाऽतो मन्ये राजनिवेशनम् ॥ 13 ॥
कौसल्या चैव राजा च तथैव जननी मम ।
नाशंसे यदि जीवन्ति सर्वे ते शर्वरीमिमाम् ॥ 14 ॥
जीवेदपि हि मे माता शत्रुघ्नस्यान्ववेक्षया ।
तद्दुःखं यत्तु कौसल्या वीरसूर्विनशिष्यति ॥ 15 ॥

13. (ப-ரை) स्त्रियः- ஸ்த்ரீகள், सुमहानादं (यथातथा)- மிகவும் கூக்குரலுடன் கூட, विनद्य- கதறி, श्रमेण- ச்ரமத்தினால், उपरताः- ஓய்ந்தவர்களாக, (भविष्यन्ति- ஆகப் போகின்றார்கள்), अतः- ஆதலால், राजनिवेशनं च- அரசன் அரண்மனையும், निर्घोष-उपरतं- (उपरतनिर्घोषं)-பெருங்குரல் ஓய்ந்ததாக, (भवेत्-ஆய்விடும்), मन्ये-என்று எண்ணுகிறேன்.

14. (ப-ரை) कौसल्या चैव- கௌஸல்யாதேவியும், राजा च- அரசனும், तथैव- அவ்விதமே, मम- என்னுடைய, जननी- தாயாரும், (जीवन्ति- ஜீவித்திருப்பார்கள், (என்று) न आशंसे- (நான்) எண்ணவில்லை, ते सर्वे- அவர்களெல்லோரும், यदि जीवन्ति- ஜீவித்திருப்பார்களேயானால், इमां शर्वरीं- இன்று இரவு (மாத்திரம் தான்).

15. (ப-ரை) शत्रुघ्नस्य-சத்ருக்னனுடைய, अन्ववेक्षया-ஸ்நேஹத்தினால், मे माता- என் தாயார், जीवेत् अपि हि- ஜீவித்திருந்தாலுமிருக்கலாம், वीरसूः- வீரனைப்பெற்றவளான, कौसल्या- கௌஸல்யாதேவி, विनशिष्यति इति यत्- ப்ராணனை விட்டுவிடுவாள், என்பது யாதொன்றுண்டோ, तत् तु- அதுவன்றோ, दुःखं- துக்கமானது.

13. (பொ-ரை) நம் நகரத்திலுள்ள ஸ்த்ரீகளும், பெரும் சப்தத்துடன் கதறி அழுது அழுது, ச்ரமத்தினால் ஓய்ந்துவிடப்போகிறார்கள். அதனால் நம்மரசன் அரண்மனையும் அழுகைசப்தம் ஓய்ந்திருக்குமென்று எண்ணுகிறேன்.

14. (பொ-ரை) கௌஸல்யா தேவியும், அரசனும், என் தாயாரான ஸுமித்ரையும், உயிருடனிருப்பதாக நான் எண்ணவேயில்லை. ஒருகால் அவர்களெல்லோரும் பிழைத்திருந்தால் இன்றிரவு மாத்திரம்தான் பிழைத்திருக்கலாம்.

15. (பொ-ரை) சத்ருக்னனிடத்தில் இருக்கிற, அன்பினால் அவனைப்பார்க்கவேணுமென்று என்தாயார் ஒருக்கால் ஜீவித்திருந்தாலுமிருக்கலாம். வீரனை இவனைப்பெற்ற கௌஸல்யாதேவி ப்ராணனை விட்டுவிடுவாள். இது தான் நினைக்க நினைக்க ஸஹிக்கமுடியாத துக்கம்.

अनुरक्तजनाकीर्णा सुखा लोकप्रियावहा ।
राजव्यसनसंसृष्टा सा पुरी विनशिष्यति ॥ 16 ॥

कथं पुत्रं महात्मानं ज्येष्ठं प्रियमपश्यतः ।
शरीरं धारयिष्यन्ति प्राणा राज्ञो महात्मनः ॥ 17 ॥

विनष्टे नृपतौ पश्चात्कौसल्या विनशिष्यति ।
अनन्तरं च माताऽपि मम नाशमुपैष्यति ॥ 18 ॥

16. (ப-ரை) अनुरक्तजनाकीर्णा- (அரசனிடத்தில்) ப்ரீதியுள்ள ஜனங்களால் நிறைந்ததும், सुखा- ஸுகமாயும், लोकप्रियावहा- ஜனங்களுக்கு ப்ரியத்தைச் செய்கின்றதுமான, सा पुरी- அந்த அயோத்திமா நகரமானது, राजव्यसनसंसृष्टा सती- அரசன் மரித்த வ்யஸனத்தோடுகூடிக்கொண்டு, विनशिष्यति- அழிந்துவிடப்போகிறது.

17. (ப-ரை) महात्मान- மஹா ப்ரபாவமுடையவராய், प्रियं- மிகவும் ப்ரியமான, ज्येष्ठं पुत्रं- மூத்த குமாரனை, अपश्यतः- பாராமலிருக்கிற, महात्मनः- மிகவும் தீரருமான, राज्ञः- அரசனுடைய, प्राणाः- ப்ராணன்கள், कथं- எப்படி, शरीरं- சரீரத்தை, धारयिष्यन्ति- தரித்துக்கொண்டிருக்கப்போகின்றதுகள்.

18. (ப-ரை) नृपतौ- அரசன், विनष्टे सति- நாசமடைந்தவளவில், पश्चात्- பிறகு, कौसल्या- கௌஸல்யாதேவியும், विनशिष्यति-அழிந்துவிடப்போகிறாள், अनन्तरंच-அதன் பிறகு, मम- என்னுடைய, माता अपि- தாயாரும், नाशं- நாசத்தை, उपैष्यति- அடைந்துவிடுவாள்.

16. (பொ-ரை) அரசனிடத்தில் மிகவும் அன்புள்ள ஜனங்கள் நிறைந்ததும் ஜனங்களுக்கு ப்ரியத்தையும, ஸுகத்தையும் உண்டுபண்ணுகிற அயோத்திமா நகரமானது, அரசன் மரணமடைந்த துக்கத்தினால் அழிந்து விடப்போகிறது.

17. (பொ-ரை) மஹாப்ரபாவமுள்ளவராய், ப்ரியமான ஜேஷ்ட குமாரரை பாராமல், எவ்வளவு தீரராயிருந்தும் அரசனுடைய சரீரத்தில் ப்ராணன்கள் எப்படி நிற்கும்.

18. (பொ-ரை) அரசன் மரித்தால் அதன் பிறகு கௌஸல்யாதேவியும் மரித்து விடுவாள். அதன்பிறகு என் தாயாரும் மரித்து விடுவாள்.

अतिक्रान्तमतिक्रान्तमनवाप्य मनोरथम् ।
राज्ये राममनिक्षिप्य पिता मे विनशिष्यति ॥ 19 ॥
सिद्धार्थाः पितरं वृत्तं तस्मिन्कालेऽप्युपस्थिते ।
प्रेतकार्येषु सर्वेषु संस्करिष्यन्ति भूमिपम् ॥ 20 ॥
रम्यचत्वरसंस्थानां सुविभक्तमहापथाम् ।
हर्म्यप्रासादसंपन्नां गणिकावरशोभिताम् ॥ 21 ॥
रथाश्वगजसंबाधां तूर्यनादविनादिताम् ।
सर्वकल्याणसंपूर्णां हृष्टपुष्टजनाकुलाम् ॥ 22 ॥
आरामोद्यानसंपन्नां समाजोत्सवशालिनीम् ।
सुखिता विचरिष्यन्ति राजधानीं पितुर्मम ॥ 23 ॥

19. (ப-ரை) मे पिता- என் தகப்பனார், राज्ये- ராஜ்யத்தில், रामं- ஸ்ரீராமனை, अनिक्षिप्य- வைக்காமல், मनोरथम्- (தன்) மனோபீஷ்டத்தையும், अनवाप्य- அடையாமல், विनशिष्यति इति एत्- அழிந்துவிடப்போகிறார் என்பது யாதொன்றுண்டோ, (तस्मात्- அதினால்) अतिक्रान्तं अतिक्रान्तं- எல்லாம் கழிந்தே போய்விட்டது.

20. (ப-ரை) अस्मिन्काले-இந்த காலமானது, उपस्थिते अपि-நேரிடும் பொழுது, सिद्धार्थाः- பாக்யவான்கள், वृत्तं-மரித்த, पितरं- பிதாவான, भूमिपम्-அரசனை, सर्वेषु प्रेतकार्येषु- எல்லா ப்ரேதகார்யங்களிலும், संस्करिष्यन्ति- ஸம்ஸ்காரம் செய்யப்போகின்றார்கள்.

21-22-23. (ப-ரை) रम्य चत्वर संस्थानां- அழகான முற்றங்களின் ஸன்னிவேசங்களையுடையதாயும், सुविभक्तमहापथाम्- நன்றாகப்பிரிக்கப்பட்ட பெரிய தெருக்களையு

19. (பொ-ரை) என் தகப்பனார் ஸ்ரீராமனை ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் பண்ணிவைக்காமல் நெடுநாளாக தன் மனதிலுண்டான ஆசையையுமடையாமல் இவ்விதம் மரணத்தை அடைவதால் எல்லாப்ரயோஜனங்களும் கழிந்து கழிந்தே போயிற்றன.

20. (பொ-ரை) அவ்விதம் பிதாவுக்கு மரணம்நேரிடும் காலத்தில் அப்போது ஸமீபத்திலிருக்கும் பாக்யவான்கள், அந்த ப்ரேதகார்யங்கள் முழுவதிலும் கூடவே யிருந்து மரணமடைந்த என் பிதாவான அரசனுக்கு ஸம்ஸ்காரம் செய்யப் போகின்றார்கள். நாம் அந்த பாக்கியத்தைஇழக்கும்படி நேர்ந்து விட்டது.

21-22-23. (பொ-ரை) அழகான முற்றங்களையுடையதுமாய், ஒன்றோடொன்று கலக்காமல் நன்றாகப்பிரிக்கப்பட்ட பெரும் தெருக்களையும் அநேக

अपि जीवेद्दशरथो वनवासात्पुनर्वयम् ।
प्रत्यागम्य महात्मानमपि पश्येम सुव्रतम् ॥ 24 ॥

---

டையதுமாய், हर्म्यप्रासादसंपन्नां- தனிகர்களுடைய வீடுகளாலும், அரசர்களின் க்ருஹங்களாலும் நிறைந்ததுமாய், गणिका वरशोभितम्- மிகவும் உத்தமர்களான தாஸிகளால் விளங்கியதுமாய், रथ अश्व गज संबाधां-தேர்களாலும் குதிரைகளாலும், யானைகளாலும் நெருங்கியதுமாய், तूर्यनादविनादिताम्- தூர்யம் முதலான வாத்தியங்களின் சப்தங்கள் முழங்கப்பட்டதுமாய், सर्वकल्याण संपूर्णा- எல்லா மங்களகார்யங்களும் நிறைந்ததுமாய், हृष्टपुष्टजनाकुलाम्-மனதில் களிப்படைந்து தேஹம் பூரித்த ஜனங்களால் நிறைந்ததுமாய், आरामोद्यानसंपन्नां-பூந்தோட்டங்களாலும், (அரசர்கள் விளையாடும்) உத்யான வனங்களாலும் நிறைந்ததுமாய், समाजोत्सवशालिनीम्- பலபேர்கள்கூடி செய்கின்ற திருவிழாக்களால் விளங்கியதுமான, मम पितु:- என் பிதாவினுடைய, राजधानीं- ராஜதானியை, सुखिता:- ஸுகமுடையவர்களான, (பரதன் முதலியவர்கள்) विचरिष्यन्ति- ஸஞ்சரிக்கப் போகின்றார்கள்.

24. (ப-ரை) दशरथ:- தசரத மஹாராஜர், अपि जीवेत्- ஜீவித்திருப்பாரா! वयं- நாங்களும், वनवासात्- வனவாஸத்திலிருந்து, पुन:-மறுபடியும், प्रत्यागम्य- திரும்பிவந்து, महात्मानं- மஹாத்மாவாயும், सुव्रतम्- நல்ல வ்ரதமுடையவருமான அவரை, अपि पश्येम- பார்ப்போமா?

தனவான்களின் வீடுகளும், அசரர்களின் வீடுகளும் நிறைந்ததும், உயர்ந்த வேசி ஸ்த்ரீகளால் விளங்குகின்றதும், தேர், குதிரை, யானை இவைகளால் நெருக்கமுள்ளதும், தூர்யம முதலான வாத்யங்கள் முழங்கப்பெற்றதும், புத்திரோத்ஸவம் முதலான ஸகலவித மங்களங்கள் நிறைந்ததும், மனம் களித்து தேஹம் பூரித்த ஜனங்களால் சூழப்பட்டதும், பூந்தோட்டங்களும், அரசர்கள் விளையாடக்கூடிய உத்யான வனங்களும் நிறைந்ததும், அநேக ஜனங்கள் ஒன்றுசேர்ந்து செய்கின்ற தேவோத்ஸவம் முதலானவைகளால் நிறைந்ததுமான என் தந்தையின் ராஜதானியில் பரதன் முதலானவர்கள் மிகுந்த ஸுகத்துடன் ஸஞ்சரிப்பார்கள்.

24. (பொ-ரை) தசரத மஹாராஜர் பிழைத்திருப்பாரா! நாங்களும் வனவாஸத்தை க்ரமமாகச்செய்துமுடித்துத் திரும்பிவந்து, மஹாத்மாவாய், வ்ரதங்களை செய்து முடித்தவருமான அம்மன்னவரை பார்ப்போமா!

अपि सत्यप्रतिज्ञेन सार्धं कुशलिना वयम् ।
निवृत्त वनवासेऽस्मिन्नयोध्यां प्रविशेमहि ॥ 25 ॥
परिदेवयमानस्य दुःखार्तस्य महात्मनः ।
तिष्ठतो राजपुत्रस्य शर्वरी साऽत्यवर्तत ॥ 26 ॥
तथा हि सत्यं ब्रुवति प्रजाहिते नरेन्द्रपुत्रे गुरुसौहृदाद्गुहः ।
मुमोच बाष्पं व्यसनाभिपीडितो ज्वरातुरो नाग इव व्यथातुर. ॥ 27 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
एकपञ्चाशः सर्गः ॥ 51 ॥

25. (ப-ரை) सत्यप्रतिज्ञेन- ஸத்யமான ப்ரதிஜ்ஞையையுடையவராய், कुशलिना- க்ஷேமமுடையவருமான (அரசனோடு), सार्धं- கூட, अस्मिन्- இந்த ஸ்ரீராமன், निवृत्त वनवासे (सति)- வநவாஸம் கழிந்தவளவில், वयम्- நாங்கள், अयोध्यां-அயோத்திமா நகரத்தை, प्रविशेमहि- ப்ரவேசிப்போமா!

26. (ப-ரை) महात्मनः- மஹாத்மாவான, राजपुत्रस्य- ராஜகுமாரனை இலக்குமணன், दुःखार्तस्य- துக்கத்தினால் பீடிக்கப்பட்டவராய், परिदेवयमानस्य- அழுதுகொண்டே, तिष्ठतः सतः-நின்றுகொண்டிருக்கும் பொழுதே, सा शर्वरी-அவ்விரவானது, अत्यवर्तत- கழிந்தது.

27. (ப-ரை) प्रजाहिते- ஜனங்களுக்கு ஹிதத்தை செய்யுமவரான, नरेन्द्रपुत्रे- ராஜகுமாரனை இலக்குமணன், गुरुसौहृदात्- குருக்களான (மாதாபிதாக்களிடத்தில்,) ப்ரீதியினால், तथा हि- அவ்வாறு, सत्यं- உண்மையை, ब्रुवति सति-சொல்லுங்காலத்தில், गुहः- குஹர், व्यसनाभि पीडितः- வ்யஸனத்தினால் நன்றாய் பீடிக்கப்பட்டவராய், ज्वरातुरः- ஜ்வரத்தினால் பீடிக்கப்பட்ட, नाग इव-யானைபோல், व्यथातुरः-வருத்தமடைந்தவராய், बाष्पं- கண்ணீரை, मुमोच- விட்டார்.

25. (பொ-ரை) இந்த ஸ்ரீராமன் வநவாஸம கழிநது ஸத்யப்ரதிஜ்ஞராய். க்ஷேமமாயிருக்கின்ற பிதாவோடுகூட அயோத்திமா நகரத்தில் ப்ரவேசிப்போமா!
இந்த வநவாஸம கழிந்து தம்முடைய ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றி க்ஷேமமாக வருகின்ற நம் தமயனோடு அயோத்திமா நகரத்தில் நாம் ப்ரவேசிப்போமா! என்று தீர்த்தியத்தில் காண்கிறது.

26. (பொ-ரை) மஹாத்மாவான அந்த ராஜகுமாரனை இலக்குமணன் துக்கம் பொருக்கமுடியாமல் அவ்வாறு அழுதுகொண்டே நின்றிருக்குங்காலத்தில் அவ்விரவும் கழிந்துவிட்டது.

27. (பொ-ரை) ஜனங்களிடத்தில் மிகவும் அன்புகொண்ட அந்த ராஜகுமாரனை இலக்குமணன், மாதா பிதாக்களிடத்தில் மிகவும் அன்பினால் இவ்வாறு உண்மையாக பேசிக்கொண்டிருக்குங்காலத்தில், அதைக்கேட்டு, குஹரும் அந்த வ்யஸனத்தினால் பீடையடைந்தவராய் ஜ்வரத்தினால் பீடிக்கப்பட்ட யானைபோல் துக்கம் அடைந்தவராய் கண்களில் நீர் விட்டார்.

द्विपञ्चाशः सर्गः ॥ 52 ॥

प्रभातायां तु शर्वर्यां पृथुवक्षा महायशाः ।
उवाच रामः सौमित्रिं लक्ष्मणं शुभलक्षणम् ॥ 1 ॥
भास्करोदयकालोऽयं गता भगवती निशा ।
असौ सुकृष्णो विहगः कोकिलस्तात कूजति ॥ 2 ॥
बर्हिणानां च निर्घोषः श्रूयते नदतां वने ।
तराम जाह्नवीं सौम्य शीघ्रगां सागरंगमाम् ॥ 3 ॥

1. (ப-ரை) शर्वर्यां तु- இரவானது, प्रभातायां (सत्यां)- நன்றாக விடிந்தவளவில், पृथुवक्षाः- அகன்ற மார்பைஉடையவரும், महायशाः- பெரிய கீர்த்தியுடையவருமான, रामः- ஸ்ரீராமன், शुभलक्षणम्- சுபமான லக்ஷணங்களுடையவரும், सौमित्रिं- ஸுமித்திரையின் புத்திரனுமான, लक्ष्मणं- இலக்குமணனைப் (பார்த்து), उवाच- சொன்னார்.

2. (ப-ரை) हे तात- அப்பா! अयं- இது, भास्कर उदयकालः- ஸூர்யன் உதயமாகும் காலம், भगवती- காமத்தை வ்ருத்திபண்ணுகின்ற, निशा- இரவானது, गता- போய்விட்டது, असौ- இந்த, सुकृष्णः विहगः- மிகவும் கருப்பான (பரத்வாஜ)பக்ஷியும், कोकिलः- குயிலும், कूजति- சப்திக்கிறது.

3. (ப-ரை) वने- வநத்தில், नदतां- கூவுகின்ற, बर्हिणानां- மயில்களுடைய, निर्घोषः च- சப்தமும், श्रूयते- கேட்கப்படுகிறது, हे सौम्य- அப்பா! शीघ्रगां- வேகமாக ஓடுகின்றதும், सागरंगमाम्- ஸமுத்திரத்தில் சேருகின்றதுமான, जाह्नवीं- கங்காநதியை, तराम- தாண்டுவோம்.

1. (பொ-ரை) அன்றிரவு நன்றாய் விடிந்தபிறகு அகன்றமார்புடையவரும், பெருங்கீர்த்தியுடையவருமான ஸ்ரீராமன், அழகான லக்ஷணங்களுடன் கூடிய ஸுமித்திரையின் புத்திரனை இலக்குமணனைப்பார்த்து சொன்னார்.

2. (பொ-ரை) அப்பா இலக்குமணா! இதோ ஸூர்யோதய காலமாகிவிட்டது. ஆண்பெண்களுக்கு காமத்தை வ்ருத்திசெய்கின்ற ராத்திரிகாலமும் கழிந்துவிட்டது. இதோ மிகவும் கருப்பு வர்ணமுள்ள பரத்வாஜ (வலியன்) பக்ஷியும், குயிலும் கூவுகின்றது.

3. (பொ-ரை) அப்பா! இதோ வநத்தில் கூவுகின்ற மயில்களின் சப்தமும் கேட்கப்படுகின்றது. வேகமாக சென்று ஸமுத்திரம் போய்ச்சேருகின்ற கங்கா நதியை நாம் தாண்டுவோம்.

विज्ञाय रामस्य वचः सौमित्रिर्मित्रनन्दनः ।
गुहमामन्त्र्य सूतं च सोऽतिष्ठद्भ्रातुरग्रतः ॥ 4 ॥
स तु रामस्य वचनं निशम्य प्रतिगृह्य च ।
स्थपतिस्तूर्णमाहूय सचिवानिदमब्रवीत् ॥ 5 ॥
अस्य वाहनसंयुक्तां कर्णग्राहवतीं शुभाम् ।
सुप्रतारां दृढां तीर्थे शीघ्रं नावमुपाहर ॥ 6 ॥

4. (ப-ரை) मित्रनन्दनः- தோழர்களை ஸந்தோஷப்படுத்துகின்றவரான, सौमित्रिः- இலக்குமணன், रामस्य- ஸ்ரீராமனுடைய, वचः- வார்த்தையை, विज्ञाय- அறிந்துகொண்டு, गुहं- குஹனையும், सूतं च- ஸாரதியையும், आमन्त्र्य- அழைத்துக்கொண்டு, भ्रातुः- தமையனாருடைய, अग्रतः- முன்னிலையில், सः- அந்த இலக்குமணன், अतिष्ठत्- நின்றார்.

5. (ப-ரை) सः- அந்த, स्थपतिः तु- குஹரும், रामस्य- ஸ்ரீராமனுடைய, वचनं- வார்த்தையை, निशम्य- கேட்டு, प्रतिगृह्य च-ஒப்புக்கொண்டும், तूर्णं-சீக்கிரமாக, सचिवान्- மந்த்ரிகளை, आहूय- அழைத்து, इदं- இந்த, (வார்த்தையை) अब्रवीत्- சொன்னார்.

6. (ப-ரை) अस्य- இந்த ஸ்ரீராமனுககு, वाहनसंयुक्तां- துடுப்பு, ஓடம் தள்ளும் கோல் இவைகளோடு கூடியதாய், कर्णग्राहवतीं- உயர்ந்த ஓடக்காரர்களை உடையதாய், शुभाम्- அழகாய், सुप्रतारां- ஸுகமாக தாண்டக்கூடியதாய், दृढां- கெட்டியாயுமிருக்கின்ற, नावं-ஓடத்தை, शीघ्रं- விரைவில், तीर्थे- (ஓட) துறையில், उपाहर- கொண்டுவா.

4. (பொ-ரை) தோழர்களுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணும் ஸ்வபாவமுடைய ஸுமித்திரையின் புத்திரனை அந்த இலக்குமணனும், ஸ்ரீராமன் சொன்ன வார்த்தையின் கருத்தை அறிந்துகொண்டு, குஹனிடமும், ஸாரதியினிடமும் இவ்விஷயத்தைத்தெரிவித்து, அவர்களுடன் தமையனார் முன்னே நின்றார்.

5. (பொ-ரை) அந்த குஹரும் ஸ்ரீராமனுடைய வார்த்தையைக் கேட்டவுடன், அப்படியே செய்கிறேன் என்று தலைவணங்கி ஒப்புக்கொண்டு, தன் மந்த்ரிகளை சீக்கிரமாக அழைத்து இந்த வார்த்தை சொன்னார்

6. (பொ-ரை) ஸ்ரீராமன் கங்கையைத்தாண்டிப் போகவேண்டியதால் அதற்காக, உறுதியான ஓடம் தள்ளும் கோல்கள், துடுப்புகள் இவைகளுடன் கூடினதாய் கெட்டிக்காரர்களான ஓடக்காரர்களுடன் கூடியதாய் அழகாய் மிகவும் கெட்டியான ஓடத்தை, சீக்கிரமாக துறையில் கொண்டு வாருங்கள்.

तं निशम्य समादेशं गुहामात्यगणो महान् ।
उपोह्य रुचिरां नावं गुहाय प्रत्यवेदयत् ॥ 7 ॥

ततः स प्राञ्जलिर्भूत्वा गुहो राघवमब्रवीत् ।
उपस्थितेयं नौर्देव भूयः किं करवाणि ते ॥ 8 ॥

तवामरसुतप्रख्य तर्तुं सागरगां नदीम् ।
नौरियं पुरुषव्याघ्र तां त्वमारोह सुव्रत ॥ 9 ॥

7. (ப-ரை) महान्- பெரிதான, गुह अमात्यगण:– குஹருடைய மந்திரிகளின் கூட்டம். तं समादेश- அந்த (குஹருடைய) உத்திரவை, निशम्य- கேட்டு, रुचिरां- அழகான, नावं- ஓடத்தை, उपोह्य- ஸமீபத்தில் கொண்டுவந்து, गुहाय-குஹரின் பொருட்டு, प्रत्यवेदयत्- தெரிவித்தது.

8-9. (ப-ரை) ततः- பிறகு, सः गुहः- அந்த குஹன், प्राञ्जलिः भूत्वा– கைகூப்பிக் கொண்டு, हे देव- ப்ரபோ! इयं नौः- இதோ ஓடம், उपस्थिता– வந்துவிட்டது, भूयः- மற்றும், ते- உமக்கு, अहं- நான், किं करवाणि- என்ன செய்யவேண்டும், अमरसुतप्रख्य- தேவகுமாரனை ஒத்தவரே! पुरुषव्याघ्र- புருடோத்தமனே, सुव्रत- நல்ல வ்ரதமுடையவரே, सागरगां- ஸமுத்திரம்போய் சேருகின்ற, नदीम्- (கங்கா) நதியை, तर्तुं- தாண்டுவதற்காக, इयं नौः- இந்த ஓடம், तव- உமக்கு, (उपस्थिता- வந்துவிட்டது), तां- அதை, त्वं- நீர், आरोह- ஏறும், इति- என்று, राघवं- ராமனைப்பார்த்து, अब्रवीत्- சொன்னார்.

7. (பொ-ரை) அந்த பெரியவர்களான குஹருடைய மந்திரிகள், குஹருடைய உத்திரவைக்கேட்டு, உடனே அழகானஓடத்தை துறையின் ஸமீபத்தில் கொண்டுவந்து வைத்துவிட்டு, குஹரிடம தெரிவித்தார்கள்.

8-9. (பொ-ரை) பிறகு அந்த குஹன் கைகூப்பிக்கொண்டு ஸ்வாமி புருடோத்தமா! நல்ல வ்ரதமுடையவரே! இதோஓடம் வந்துவிட்டது. இன்னும் உமக்கு நான் என்ன செய்யவேண்டும். ஸமுத்திரம்போய்ச்சேருகிற கங்காநதியை தாண்டுவதற்காக உமக்கு வந்திருக்கிற இந்த ஓடத்தில் நீர் ஏறிக்கொள்ளவேணுமென்று ஸ்ரீராகவனைப்பார்த்து சொன்னார்.

अथोवाच महातेजा रामो गुहमिदं वचः ।
कृतकामोऽस्मि भवता शीघ्रमारोप्यतामिति ॥ 10 ॥
ततः कलापान्संनह्य खड्गौ बद्ध्वा च धन्विनौ ।
जग्मतुर्येन तौ गङ्गां सीतया सह राघवौ ॥ 11 ॥
राममेवं तु धर्मज्ञमुपगम्य विनीतवत् ।
किमहं करवाणीति सूतः प्राञ्जलिरब्रवीत ॥ 12 ॥

10. (ப-ரை) अथ- பிறகு, महातेजा:- மிகுந்த தேஜஸ்ஸையுடைய, राम:- ஸ்ரீராமன், भवता- உம்மால், (अहं- நான்), कृतकाम:- अस्मि-எண்ணம் நிறைவேறினவனாக, ஆகிறேன், शीघ्रं- சீக்கிரமாக, आरोप्यतां- (மண்வெட்டி, புட்டில் கூடை முதலியவைகள் ஓடத்தில்) ஏற்றப்படலாம், इति- என்று गुहं-குஹனைக்குறித்து, इदं वच:-இந்த வார்த்தை, उवाच- சொன்னார்.

11. (ப-ரை) तत:- பிறகு, धन्विनौ- வில்லாளிகளான, तौ राघवौ- அந்த ராமலக்குமணர்கள், संनह्य- கவசம் அணிந்து, कलापान्- அம்புராப்பொதிகளையும், खड्गौ च- கத்திகளையும், बद्ध्वा- கட்டிக்கொண்டு, येन- எந்த மார்க்கத்தினால், (ஜனங்கள் கங்கையைச் சேருவார்களோ), (तेन- அந்த மார்க்கத்தினால்), सीतया सह- ஸீதையுடன் கூட, गङ्गां- கங்கையைக் (குறித்து), जग्मतु:- சென்றார்கள்.

12. (ப-ரை) धर्मज्ञं-தர்மங்களைத்தெரிந்தவரான, रामं तु-ராமனை (பார்த்து), सूत:-ஸாரதியானவர், विनीतवत्- வணக்கமுடையவராய், उपगम्य- ஸமீபத்தில் நின்றுகொண்டு, अहं- நான், किं करवाणि- என்ன செய்யட்டும், इति- என்று, प्राञ्जलि:- கைகூப்பினவராய், एवं- இவ்வாறு, अब्रवीत्- சொன்னார்.

---

10. (பொ-ரை) பிறகு, மஹாப்ரபாவமுடையவரான ஸ்ரீராமன் குஹனைப் பார்த்து, அப்பா! நான் எண்ணியகார்யததை உம்மால் முடித்துககொண்டேன். சீக்கிரமாக, மண்வெட்டி, சிறுகூடை, ஸீதையின் வஸ்திரம் முதலானவைகள் இவைகளை ஓடத்தில் எடுத்துவையும் என்று சொன்னார்.

11. (பொ-ரை) பிறகு, அந்த ராமலக்குமணர்கள், கவசங்களைஅணிந்து கொண்டு, அம்புராத்தூணிகளையும், கத்திகளையும நன்றாய்க்கட்டிக்கொண்டு, வில்லுகளையுமெடுத்துக்கொண்டு, ஜனங்களெல்லோரும் எந்தவழியாக கங்கா நதிக்குச் செல்லுகின்றார்களோ, அந்த வழியாகவே, ஸீதையுடன்கூட கங்கையைநோக்கிச் சென்றார்கள்.

12. (பொ-ரை) பிறகு, ஸகல தர்மங்களும் தெரிந்தவரான ஸ்ரீராமனிடம், ஸுமந்த்ரர், வணக்கத்துடன் வந்து கைகூப்பிக்கொண்டு, ஸ்வாமி!, இனி நான் செய்யவேண்டியதுஎன்ன?, என்று விக்ஞாபனம்செய்து கொண்டார்.

ततोऽब्रवीद्दाशरथिः सुमन्त्रं स्पृशन्करेणोत्तमदक्षिणेन ।
सुमन्त्र शीघ्रं पुनरेव याहि राज्ञः सकाशे भव चाप्रमत्तः ॥ 13 ॥
निवर्तस्वेत्युवाचैनमेतावद्धि कृतं मम ।
रथं विहाय पद्भ्यां तु गमिष्यामो महावनम् ॥ 14 ॥
आत्मानं त्वभ्यनुज्ञातमवेक्ष्यार्तः स सारथिः ।
सुमन्त्रः पुरुषव्याघ्रमैक्ष्वाकमिदमब्रवीत् ॥ 15 ॥

13. (ப-ரை) ततः- பிறகு, दाशरथिः- தசரத குமாரரான ஸ்ரீராமன், दक्षिणेन करेण- வலதுகையினால், सुमन्त्रं- ஸுமந்த்ரரை, स्पृशन् सन्- தொட்டுக்கொண்டு, हे उत्तम सुमन्त्र- உத்தமரான ஸுமந்த்ரரே! शीघ्रं एव- சீக்கிரமாகவே, पुनः याहि- திரும்பிப்போம், राज्ञः- அரசனுடைய, सकाशे- ஸமீபத்தில், अप्रमत्तः च- கவனமுள்ளவராயும், भव- இரும் (என்று) अब्रवीत्- சொன்னார்.

14. (ப-ரை) मम- எனக்கு, एतावत्- இவ்வளவு, कृतं हि- செய்யப்பட்டதல்லவா, रथं- தேரை, विहाय- விட்டுவிட்டு, पद्भ्यां- கால் நடையாக, महावनम्- பெரும் காட்டை, गमिष्यामः- அடையப்போகிறோம், निवर्तस्व-(நீர்) திரும்பிப்போம, इति-என்று, एनं- இந்த ஸுமந்த்ரரைப்பார்த்து, उवाच- சொன்னார்.

15. (ப-ரை) सः सारथिः सुमन्त्रः तु- அந்த ஸாரதியான ஸுமந்த்ரரும், आत्मानं- தன்னை, अभ्यनुज्ञातं- அனுமதி செய்யப்பட்டவராக, अवेक्ष्य-அறிந்துகொண்டு, आर्तः सन्- மிகவும் துக்கமுடையவராய், ऐक्ष्वाकं-இக்ஷ்வாகு குலத்திற்பிறந்த, पुरुषव्याघ्रं-புருடோத்தமனைக்குறித்து, इदं- இதை, अब्रवीत्- சொன்னார்.

13 (பொ-ரை) பிறகு, தசரத குமாரரான ஸ்ரீராமன், இவ்வாறு சொல்லுகின்ற ஸுமந்த்ரரை, தமதுடைய வலதுகையினால் தட்டிக்கொடுத்துக்கொண்டு, உத்தமரான ஸுமந்த்ரரே? "நீர் சீக்கிரமதிரும்பி நகரம்போய்சேரும். ராஜாவினுடைய ஸமீபத்தில் மிகவும் கவனமுள்ளவராகவும இரும்" என்று சொன்னார்.

14. (பொ-ரை) ஸுமந்த்ரரே! கங்காநதியின் கரைவரையில் தேரில் ஏற்றி வந்த இவ்வளவு காரியம் உம்மால் செய்யப்பட்டதல்லவா, இதுவே போதுமானது, அரசனுடைய உத்திரவு இவ்வளவுதான். இனிமேல் தேரை விட்டு விட்டு, கால்நடையாகவே வநம்போகின்றோம், ஆதலால் நீர் திரும்பிப்போம், என்று சொன்னார்.

15. (பொ-ரை) பிறகு அந்த ஸாரதியான ஸுமந்த்ரர் தன்னைத்திரும்பிப் போகும்படி ஸ்ரீராமன் அனுமதி கொடுத்ததைப்பற்றி மிகவும் வருத்தமுடையவராய் இக்ஷ்வாகு குலத்தில் அவதரித்த அந்த புருடோத்தமனைப்பார்த்து சொல்லுகிறார்.

नातिक्रान्तमिदं लोके पुरुषेणेह केनचित् ।
तव सभ्रातृभार्यस्य वासः प्राकृतवद्वने ॥ 16 ॥
न मन्ये ब्रह्मचर्येऽस्ति स्वधीते वा फलोदयः ।
मार्दवार्जवयोर्वापि त्वां चेद्व्यसनमागतम् ॥ 17 ॥
सह राघव वैदेह्या भ्रात्रा चैव वने वसन्
त्वं गतिं प्राप्स्यसे वीर त्रिलोकांस्तु जयन्निव ॥ 18 ॥

16. (ப-ரை) सभ्रातृभार्यस्य-ப்ராதாவுடனும், பார்யையுடனும்கூடிய, तव-உமக்கு प्राकृतवत्- ஒரு அற்பமான மனிதனுக்குப்போல், वने वासः- வநத்தில் வாஸம் என்பது யாதொன்றுண்டோ, इदं- இது, इह लोके- இந்த உலகத்தில், केनचित् पुरुषेण- ஒரு புருஷனாலும், न अतिक्रान्तं- ஒப்புக்கொள்ளப்படமாட்டாது.

17. (ப-ரை) त्वां- உம்மை, व्यसनं- கஷ்டமானது, आगतं चेत्- அடைந்து விட்டது என்றால், ब्रह्मचर्ये- ப்ரம்மசர்ய வ்ரதத்திலும், स्वधीते वा- நன்றாக வேதம் ஓதுவதிலும், मार्दव आर्जवयोः वा अपि- கருணையிலும் கபடமில்லாமையிலும், फलोदयः- பலஸித்தியானது, न अस्ति- இல்லை, (इति- என்று) मन्ये- எண்ணுகிறேன்.

18. (ப-ரை) हे वीर राघव- வீரனான ராகவனே, त्वं- நீர், वैदेह्या- ஸீதையுடனும், भ्रात्रा च एव- ப்ராதாவுடனும் கூட, वने- வநத்தில், वसन् (सन्)- வஸித்துக்கொண்டு, त्रिलोकान् तु- மூன்று உலகங்களையும், जयन् इव- ஜயிக்கின்ற (விஷ்ணு) போல், गतिं- கீர்த்தியை, प्राप्स्यसे- அடையப்போகின்றீர்.

16. (பொ-ரை) ஸாதாரணமான ஒரு புருஷனுக்கு நேர்ந்ததுபோல் ப்ராதாவுடனும், பார்யையுடனும் உமக்கு நேர்ந்த இந்த வநவாஸம் இவ்வுலகத்தில் ஒருமனிதனும் ஸரியென்று ஒப்புக்கொள்ளமாட்டான்.

17. (பொ-ரை) ஸகல குணம்பொருந்திய உமக்கே கஷ்டம் நேர்ந்துவிட்டதென்றால், உலகத்தில் எல்லோரும் உயர்ந்த ஸாதனமாகச் சொல்லுகின்ற, ப்ரம்மசர்ய வ்ரதத்திலோ, குருமுகமாக நன்றாக வேதம் ஓதுவதிலோ, ஸகல ப்ராணிகளிடத்திலும கருணைவைத்திருப்பதிலோ, கபடமில்லாமலிருக்கும் தன்மையிலோ, ஒரு பலமும் கிடையாதென்று நான் எண்ணுகிறேன்.

18. (பொ-ரை) ஹே வீரா! ஸ்ரீராமா! நீர், வைதேஹியுடனும், ப்ராதாவுடனும் வநத்தில் வஸித்துக்கொண்டு, மூன்று உலகங்களையும் ஜயித்தவரான மஹாவிஷ்ணுபோல் நிகரில்லாத கீர்த்தியை அடையப்போகின்றீர்.

वयं खलु हता राम ये त्वयाप्युपवञ्चिताः ।
कैकेय्या वशमेष्यामः पापाया दुःखभागिनः ॥ 19 ॥
इति ब्रुवन्नात्मसमं सुमन्त्रः सारथिस्तदा ।
दृष्ट्वा दूरगतं रामं दुःखार्तो रुरुदे चिरम् ॥ 20 ॥
ततस्तु विगते बाष्पे सूतं स्पृष्टोदकं शुचिम् ।
रामस्तु मधुरं वाक्यं पुनः पुनरुवाच तम् ॥ 21 ॥

19. (ப-ரை) ये वयं- யாவொரு நாங்கள், त्वया अपि- உம்மாலும், उपवञ्चिताः ஏமாற்றப்பட்டு, दुःखभागिनः- துக்கத்தை அடைந்தவர்களாய்க்கொண்டு, पापायाः- பாபியான, कैकेय्याः- கைகேயியினுடைய, वशं- ஸ்வாதீனத்தை, एष्यामः-அடையப்போகின்றோம், (अतः- ஆதலால்), हे राम- ராமா! वयं- நாங்கள், हताः- खलु- கெட்டுவிட்டோம்.

20. (ப-ரை) तदा- அப்பொழுது, सारथिः सुमन्त्रः- ஸாரதியான ஸுமந்த்ரர், इति- இவ்வாறு, आत्मसमं (यथा तथा)- தன் நிலைமைக்குத்தக்கபடி, ब्रुवन् (सन्)- சொல்லிக்கொண்டு, रामं- ஸ்ரீராமனை, दूरगतं- வெகுதூரம் போகின்றவராக, दृष्ट्वा- நிச்சயித்து, दुःखार्तः- துக்கத்தினால் பீடிக்கப்பட்டவராய், चिरं- நெடுநாழிகை, रुरुदे- அழுதார். आत्मसमं- ப்ராணனை ஒத்த என்று ராமனுக்கு விசேஷணமாகவும் சொல்லலாம்.

21. (ப-ரை) ततः तु- பிறகு, बाष्पे- கண்ணீர், विगते (सति)- அடங்கினவளவில், स्पृष्टोदकं- ஆசமனம் செய்தும, शुचिम्- பரிசுத்தருமான, तं सूतं-அந்த ஸாரதியைப் (பார்த்து) रामः तु- ஸ்ரீராமனும், मधुरं वाक्यं- இனிதான வார்த்தையை, पुनः पुनः-அடிக்கடி, उवाच- சொன்னார்.

19. (பொ-ரை) ஹே ராமா! இவ்விதம் எங்களை நீரும் மோசம் செய்துவிட்டீர். துக்கத்துடன் மஹாபாபிஷ்டையான கைகேயியின் வசத்திலும் இருக்கப்போகிறோம். ஆதலால் நாங்கள் பலபடியாகக் கெட்டுவிட்டோம்.

20. (பொ-ரை) அப்பொழுது, ஸாரதியான ஸுமந்த்ரர், ப்ருத்யனாயிருக்கிற தன்னுடைய நிலைமைக்குத் தகுந்தபடி இவ்வாறு சொல்லிக்கொண்டு, ஸ்ரீராமன் நெடுந்தூரம் போவதை நிச்சயித்து, துக்கத்தினால் பீடிக்கப்பட்டு வெகுநேரம் அழுதார்.

21. (பொ-ரை) பிறகு, அழுத கண்ணீரும் அடங்கி ஆசமனம் செய்து பரிசுத்தரான அந்த ஸாரதியைப்பார்த்து ஸ்ரீராமன் இனிதான ஒரு வார்த்தையை அடிக்கடி சொன்னார்.

इक्ष्वाकूणां त्वया तुल्यं सुहृदं नोपलक्षये ।
यथा दशरथो राजा मां न शोचेत्तथा कुरु ॥ 22 ॥
शोकोपहतचेताश्च वृद्धश्च जगतीपतिः ।
कामभारावसन्नश्च तस्मादेतद्ब्रवीमि ते ॥ 23 ॥
यद्यदाज्ञापयेत्किंचित्स महात्मा महीपतिः ।
कैकेय्याः प्रियकामार्थं कार्यं तदविकाङ्क्षया ॥ 24 ॥

22. (ப-ரை) इक्ष्वाकूणां- இக்ஷ்வாகு வம்சத்து அரசர்களுக்கு, त्वया- உம்மோடு, तुल्यं-ஸமானமான, सुहृदं-தோழனை, न उपलक्षये-நான் காணவில்லை, दशरथः राजा- தசரதமஹாராஜா, मां- என்னைக்குறித்து, यथा- எப்படி, न शोचेत्- துக்கப்படாமலிருப்பாரோ, तथा இப்படி, कुरु- (நீர்) செய்யவேண்டும்.

23. (ப-ரை) जगतीपतिः- அரசன், शोकोपहतचेताः च- துக்கத்தினால் அடிபட்ட மனதுடையவர், वृद्धः च-கிழவர், कामभारावसन्नः च-அதிகமான காமவேகத்தாலும் பீடிக்கப்பட்டவர், तस्मात्- ஆகலால், एतत्- இதை, ते- உமக்கு, ब्रवीमि- சொல்லுகிறேன்.

24. (ப-ரை) महात्मा- மஹானுபாவரான, सः महीपतिः- அந்த ராஜா, कैकेय्याः- கைகேயியினுடைய, प्रियकामार्थं- ப்ரியத்தைச்செய்வதற்காக, यत् यत् किंचित्- எதுவாகிலும் ஒன்றை, आज्ञापयेत्- கட்டளையிடுவார், तत्- அதை, अविकाङ्क्षया- அலக்ஷ்யமில்லாமல், कार्यं- செய்யத்தகுந்தது.

22. (பொ-ரை) இக்ஷ்வாகு வம்சத்து அரசர்களுக்கு உமக்கு ஸமானமான தோழன் ஒருவரையும் நான் பார்க்கவில்லை. ஆதலால் தசரத மஹாராஜா என்னைப் பற்றி துக்கப்படாமலிருக்கும்படி நீர் செய்ய வேண்டும்.

23. (பொ-ரை) அவ்வரசன் சோகத்தினால் மனம் நொந்தவர், கிழவராயுமிருக்கிறார். அத்துடன் அதிகமான காமத்தின் வேகத்தாலும் பீடிக்கப்பட்டிருக்கிறார். ஆதலால் நான் உமக்கு இவ்விதம் சொல்லுகிறேன்.

24. (பொ-ரை) மஹாத்மாவான அந்த அரசன், கைகேயியின் ப்ரியத்தை செய்ய ஆசைப்பட்டு எதுவாகிலுமொன்றை செய்யும்படி உத்திரவு செய்வார், அதை அலக்ஷ்யம் செய்யாமல் அவச்யம் செய்து வரவேண்டும்.

एतदर्थं हि राज्यानि प्रशासति नरेश्वराः ।
यदेषां सर्वकृत्येषु मनो न प्रतिहन्यते ॥ 25 ॥
यद्यथा स महाराजो नालीकमधिगच्छति ।
न च ताम्यति दुःखेन सुमन्त्र! कुरु तत्तथा ॥ 26 ॥
अदृष्टदुःखं राजानं वृद्धमार्यं जितेन्द्रियम् ।
ब्रूयास्त्वमभिवाद्यैव मम हेतोरिदं वचः ॥ 27 ॥

25. (ப-ரை) एषां– இவர்களுடைய, मनः- மனது, सर्वकृत्येषु- எல்லா கார்யங்களிலும், न प्रतिहन्यते इति यत्– தடைப்படுகிறதில்லை என்பது யாதொன்றுண்டோ, एतदर्थं हि- இதற்காகவன்றோ, नरेश्वराः- அரசர்கள், राज्यानि- ராஜ்யங்களை, प्रशासति- ஆளுகிறார்கள்.

26. (ப-ரை) हे सुमन्त्र- ஸுமந்த்ரரே! सः महाराजः- அந்த மஹாராஜர், यत्- எந்தக்கார்யத்தைக்குறித்து, अलीकं- அப்ரியத்தை, न अधिगच्छति- அடையாமலிருப்பாரோ, दुःखेन– துக்கத்தினால், न ताम्यति च- வாட்டமடையாமலுமிருப்பாரோ, तत्- அந்தக்கார்யத்தை, तथा- அவ்விதம, कुरु- செய்யும்.

27. (ப-ரை) अदृष्टदुःखं- ஒருக்காலும், துக்கத்தைக் காணாதவராயும், वृद्धं- வயது சென்றவராயும், आर्यं- எல்லோராலும் பூஜிக்கத்தகுந்தவராயும், जितेन्द्रियम्- இந்திரியங்களை அடக்குகின்றவராயுமிருக்கிற, राजानं- அரசனை, मम हेतोः- எனக்காக, त्वं- நீர், अभिवाद्य एव- அபிவாதனம் செய்துவிட்டே, इदं वचः- இந்த வார்த்தையை, ब्रूयाः- சொல்லவேண்டும்.

25. (பொ-ரை) எந்த கார்யங்களும் நாம் நினைத்தபடி தடைப்படாமல் நடக்கின்றது என்கிற பெருமைக்காகவன்றோ அரசர்கள் ராஜ்யங்களை ஆளுகிறது.

26. (பொ-ரை) ஸுமந்த்ரரே! அந்த மஹாராஜர் எது வாகிலும் ஒரு கார்யத்தைப்பற்றி அப்ரியமடையாமலிருக்குமபடியும், துக்கத்தினால் மனம் நோகாமலிருக்கும் படியும் நீர் செய்யவேண்டும்.

27. (பொ-ரை) அவ்வரசன் ஒரு நாளும் துக்கத்தையே காணாதவர், கிழவர், எல்லோராலும் பூஜிக்கத்தகுந்தவர், ஜிதேந்த்ரியர், அவரை நீர் எனக்காக நமஸ்கரித்து நான் சொல்லப்போகின்ற இந்த வார்த்தைகளைச் சொல்லவேண்டும்.

नैवाहमनुशोचामि लक्ष्मणो न च मैथिली ।
अयोध्यायाश्च्युताश्चेति वने वत्स्यामहेति च ॥ 28 ॥
चतुर्दशसु वर्षेषु निवृत्तेषु पुनः पुनः ।
लक्ष्मणं मां च सीतां च द्रक्ष्यसि क्षिप्रमागतान् ॥ 29 ॥
एवमुक्त्वा तु राजानं मातरं च सुमन्त्र मे ।
अन्याश्च देवीः सहिताः कैकेयीं च पुनः पुनः ॥ 30 ॥
आरोग्यं ब्रूहि कौसल्यामथ पादाभिवन्दनम् ।
सीताया मम चार्यस्य वचनाल्लक्ष्मणस्य च ॥ 31 ॥

28. (ப-ரை) अयोध्याया:- அயோத்தியிலிருந்து, च्युता: च इति- வந்துவிட்டோமென்றும், वने- வநத்தில், वत्स्यामहे इति च- வஸிக்கப்போகிறோம என்றும், अहं- நான், न एव अनुशोचामि- துக்கப்படவேயில்லை, लक्ष्मण:- இலக்குமணனும், न अनुशोचति- துக்கப்படுகிறதில்லை, मैथिली च- ஸீதையும், न अनुशोचति- துக்கப்படுகிறதில்லை.

29. (ப-ரை) चतुर्दशसु वर्षेषु- பதினான்கு வருஷங்கள், निवृत्तेषु-सत्सु- கழிந்தவளவில், क्षिप्र-சீக்கிரமாக, आगतान्- வநத்திலிருந்துவந்திருக்கின்ற, लक्ष्मण-இலக்குமணனையும், मां च- என்னையும், सीतां च- ஸீதையையும், पुन: पुन:- அடிக்கடி, द्रक्ष्यसि- பார்க்கப்போகிறீர்.

30-31. (ப-ரை) सुमन्त्र- ஸுமந்த்ரரே! राजानं- அரசனையும், मे मातरं च- என் தாயாரையும், सहिता:- (கௌஸல்யையுடன்) சேர்ந்திருக்கிற, अन्या: देवी: च- மற்ற தேவிகளையும், कैकेयीं च- கைகேயியையும் (பார்த்து) पुन: पुन:- அடிக்கடி, एवं- இவ்வாறு, उक्त्वा तु- சொல்லிவிட்டு, अथ- பிறகு, कौसल्यां- கௌஸல்யையைக்குறித்து, सीताया:- ஸீதையினுடையவும, मम च- என்னுடையவும், आर्यस्य- எல்லாம் தெரிந்தவனை, लक्ष्मणस्य- இலக்குமணனுடையவும், वचनात्- வார்த்தையினால். आरोग्यं- க்ஷேமத்தையும, पादाभिवन्दन च- திருவடிகளில் நமஸ்காரத்தையும், ब्रूहि- (நீர்) சொல்லவேண்டும்.

---

28. (பொ-ரை) அயோத்தியை விட்டு வந்து விட்டோமென்றும், வநத்தில் வஸிக்கப்போகிறோமென்றும் எனக்கும் வருத்தமில்லை, இலக்குமணனுக்கும் ஸீதைக்கும் வருத்தமில்லை.

29. (பொ-ரை) பதினான்கு வருஷம் கழித்து வநவாஸத்திலிருந்து திரும்பி அயோத்திமா நகரம் வந்து சேர்ந்த, இலக்குமணனையும், ஸீதையையும், என்னையும் நீர் அன்புடன் அடிக்கடி பார்த்துக்கொண்டிருக்கப்போகிறீர்.

30-31. (பொ-ரை) ஸுமந்த்ரரே! அரசன், என்தாயார், கௌஸல்யையுட

ब्रूयाश्च हि महाराजं भरतं क्षिप्रमानय ।
आगतश्चापि भरतः स्थाप्यो नृपमते पदे ॥ 32 ॥
भरतं च परिष्वज्य यौवराज्येऽभिषिच्य च ।
अस्मत्संतापजं दुःखं न त्वाममभिभविष्यति ॥ 33 ॥
भरतश्चापि वक्तव्यो यथा राजनि वर्तसे ।
तथा मातृषु वर्तेथाः सर्वास्वेवाविशेषतः ॥ 34 ॥
यथा च तव कैकेयी सुमित्रा च विशेषतः ।
तथैव देवी कौसल्या मम माता विशेषतः ॥ 35 ॥
तातस्य प्रियकामेन यौवराज्यमवेक्षता ।
लोकयोरुभयोः शक्यं नित्यदा सुखमेधितुम् ॥ 36 ॥

32. (ப-ரை) महाराजं- மஹாராஜரைக்குறித்து, ब्रूयाः च हि- நீர் சொல்லும், भरतं- பரதனை, क्षिप्र- சீக்கிரம், आनय- அழைத்துவாரும், आगतः- வந்திருக்கிற, भरतः च अपि- பரதனும், नृपमते- ராஜா இஷ்டப்பட்டிருக்கிற, पदे- ஸ்தானத்தில், स्थाप्यः-ஸ்தாபிக்கத்தகுந்தவன்.

33 (ப-ரை) भरतं- பரதனை, परिष्वज्य च- அணைத்துக்கொண்டும், यौवराज्ये-இளவரசில், अभिषिच्य च- பட்டாபிஷேகம் செய்தும், अस्मत्संतापजं- எங்கள் கஷ்டத்திலுண்டான, दुःखं- சோகமானது, त्वां- உம்மை, न अभिभविष्यति- பீடிக்காது.

34-35-36. (ப-ரை) राजनि- அரசனிடத்தில், यथा- எப்படி, वर्तसे- நீ இருக்கி

னிருக்கின்ற மற்ற ராஜஸ்த்ரீகள், கைகேயி என்னுமிவர்களுடன் அடிக்கடி நான் சொன்னதாக இவ்வாறு சொல்லி விட்டு, பிறகு கௌஸல்யாதேவியிடம், ஸீதை, நான், எல்லாம் தெரிந்தவனுன இலக்குமணன் ஆக இம்மூவர்களும் சொன்னதாக க்ஷேமத்தை சொல்லிவிட்டு திருவடிகளில் தண்டனிட்டதாகவும் நீர் சொல்ல வேண்டும்

32. (பொ-ரை) மஹாராஜரிடம் நீர் சொல்லும், பரதனை சீக்கிரமாக அழைத்து வரவேண்டும். அவன் வந்ததும மஹாராஜர் ஆசைப்பட்டுக்கொண்டிருந்த யௌவராஜ்யத்தில் பட்டாபிஷேகம் பண்ணவேண்டும்.

33. (பொ-ரை) பரதனை, கட்டி அணைந்து கொண்டு, யௌவராஜ்ய பட்டாபிஷேகமும் அவனுக்குச்செய்து விட்டால், எங்களை விட்டுப்பிரிந்ததினுலுண்டான வருத்தமும் உமக்கு உண்டாகமாட்டாது.

இந்த சுலோகம் இரண்டும் ஸுமந்த்ரர் மூலமாக தசரத மஹாராஜருக்கு சொன்னதாகவும் கொள்ளலாம்.

34-35-36. (பொ-ரை) நீ மஹாராஜரிடமிருப்பது போலவே, நம் தாய்மார்

निवर्त्यमानो रामेण सुमन्त्रः शोककर्शितः ।
तत्सर्वं वचनं श्रुत्वा स्नेहात्काकुत्स्थमब्रवीत् ॥ 37 ॥
यदहं नोपचारेण ब्रूयां स्नेहादविक्लवः ।
भक्तिमानिति तत्तावद्वाक्यं त्वं क्षन्तुमर्हसि ॥ 38 ॥

ருயோ, तथा- அப்படியே, सर्वासु एव- ஸமஸ்தமான, मातृषु- தாய்மார்களிடத்திலும், अविशेषत:- பேதமில்லாமல், वर्तेथा:- இருக்கவேண்டும், तव- உனக்கு, कैकेयी च- கைகேயி யும், सुमित्रा च- ஸுமித்ரையும், यथा- எப்படி, विशेषत:- விசேஷமானவர்களோ, तथा एव- அப்படியே, मम माता- என் தாயாரான, कौसल्या देवी- கௌஸல்யாதேவியும், विशेषत:- விசேஷமானவள், तातस्य- பிதாவுக்கு, प्रियकामेन- ப்ரியத்தை செய்ய எண்ணு முள்ளவனாய், यौवराज्यं- இளவரசை, अवेक्षता- அங்கீகரித்திருக்கிற, (त्वया- உன்னால்) नित्यदा- எப்பொழுதும், उभयो: लोकयो:- இரண்டு லோகங்களிலும், सुखं- ஸுகத்தை, एधितुम्- வளர்ப்பதற்கு, शक्यं- முடியும், (इति- என்று), भरत: चापि- பரதனும், वक्तव्य:- (உம்மால்), சொல்லத்தகுந்தவன்.

37. (ப-ரை) रामेण- ராமனால், निवर्त्यमान:- திருப்பப்பட்ட, सुमन्त्र:- ஸுமந்த்ரர், शोककर्शित:- சோகத்தினால் இளைத்தவராய், तत्- அந்த, वचनं सर्वं- வார்த்தை முழுவதையும், श्रुत्वा- கேட்டு, स्नेहात्-ஸ்நேகத்தினால், काकुत्स्थं- ஸ்ரீராமனைப்பார்த்து, अब्रवीत्- சொன்னார்.

38. (ப-ரை) अहं- நான், न उपचारेण-உபசாரமில்லாமல், स्नेहात्- ஸ்நேகத்தினால், अविक्लव:- தைர்யமுடையவனாய், यत् वच:- யாதொரு வார்த்தையை, ब्रूयां- சொல்லுவே னோ, तत् वाक्यं तावत्- அந்த வார்த்தை முழுவதையும், भक्तिमान् इति- (நம்மிடத்தில்) பக்தியுள்ளவன் என்று, त्वं- நீர், क्षन्तुं-अर्हसि- பொறுத்துக்கொள்ளத்தகுந்தவர்.

---

களெல்லோரிடத்திலுமே வித்யாஸமில்லாமலிருக்க வேண்டும். கைகேயியும், ஸுமித்ரையும் உனக்கு விசேஷமானவர்கள்போல், என் தாயாரான கௌஸல்யா தேவியும் விசேஷமானவள், பிதாவின் ப்ரியத்திற்காக யௌவராஜ்யத்தை நீ ஒப்புக் கொண்டால் இரண்டு லோகங்களிலும் எப்பொழுதும்ஸுகம வளர்ந்து வரும்படி செய்யமுடியும், என்று பரதனுக்கு நான் சொன்னதாகவும் சொல்லும்.

37. (பொ-ரை) இவ்வாறு ஸ்ரீராமனால் ஊருக்குப் போகும்படி அனுமதி செய்யப்பட்ட ஸுமந்த்ரரும், துக்கத்தினால் சரீரம இளைத்து ஸ்ரீராமன் சொன்ன வார்த்தை முழுவதையும் கேட்டுக்கொண்டு, அன்பினால் காகுத்ஸ்தரைப்பார்த்துச் சொன்னார்.

38. (பொ-ரை) ஸ்வாமின்! நான் ஸேவக முறைமை தப்பி ஸ்நேகத்தினால் தைர்யத்துடன் சிலவார்த்தைகளை உம்மிடம் சொலலப் போகிறேன். அவைகள் முழுவதையும் நம்மிடத்தில் இவன் பக்தியுள்ளவன் என்கிறதைக்கொண்டு நீர் க்ஷமித்தருள வேண்டும்.

कथं हि त्वद्विहीनोऽहं प्रतियास्यामि तां पुरीम् ।
तव तावद्वियोगेन पुत्रशोकाकुलामिव ॥ 39 ॥
सराममपि तावन्मे रथं दृष्ट्वा तदा जनः ।
विना रामं रथं दृष्ट्वा विदीर्येतापि सा पुरी ॥ 40 ॥
दैन्यं हि नगरीगच्छेद्दृष्ट्वा शून्यमिमं रथम् ।
सूतावशेषं स्वं सैन्यं हतवीरमिवाहवे ॥ 41 ॥

39. (ப—ரை) तव तावत्- உம்முடைய, वियोगेन- பிரிவினால், पुत्रशोकाकुलां इव- புத்திரசோகத்தினால் கலங்கியதுபோலிருக்கின்ற, तां पुरीं-அந்த அயோத்திமா நகரத்தைக்குறித்து, अहं- நான், त्वद्विहीनः-நீர் இல்லாமல், कथं हि- எப்படி, प्रतियास्यामि- திரும்பிப்போவேன்.

40. (ப-ரை) तदा तावत्- முன்னம், सराम अपि- ராமனோடுகூடிய, मे- என்னுடைய, रथं- தேரை, दृष्ट्वा- பார்த்திருந்த, जनः-ஜனமும், सा पुरी-அந்நகரமும், रामं विना- ராமனில்லாமல், रथं- ரதத்தை, दृष्ट्वा- (இப்பொழுது) பார்த்து, विदीर्येत अपि- வெடித்தாலும் வெடிக்குமே.

41. (ப-ரை) आहवे- யுத்தத்தில், हतवीरं- கொல்லப்பட்ட வீரனை, दृष्ट्वा- பார்த்து, स्वं सैन्यं इव- தன்னுடைய ஸைன்யமானதுபோல், सूतावशेषं- ஸாரதி மாத்திரம் மீதியாய், शून्यं- (நீர்) இல்லாமலிருக்கிற, इमं रथं-இந்தத்தேரை, दृष्ट्वा- பார்த்து, नगरी- அயோத்திமா நகரமானது, दैन्यं- துக்கத்தை, गच्छेत् हि- அடையுமல்லவா.

39. (பொ-ரை) உம்மை விட்டுப்பிரிந்த துக்கத்தினால், புத்திரனை விட்டுப் பிரிந்து துக்கங்கொண்டது போலிருக்கின்ற அந்த அயோத்யா பட்டணத்திற்கு, நான் உம்மை விட்டுத்தனியாக எவ்வாறு திரும்பிப்போவேன்.

40. (பொ-ரை) முதலில் நீர் ஏறிவருகின்ற இந்த ரதத்தைப்பார்த்திருந்த அந்நகரத்து ஜனமும், அந்நகரமும இப்பொழுது நீர் இல்லாமல் காலியான ரதத்தைப்பார்த்தால் துக்கத்தினால் ஜனங்களுடைய சரீரமும், அந்நகரமும வெடித்து விடுமோவென்று எண்ணுகிறேன்.

(நகரம் என்றது ஜனங்களைத்தவிர, யானை குதிரை பசு முதலியவற்றைச் சொன்னது.)

41. (பொ-ரை) யுத்தத்தில் சத்ருக்களால் அடிபட்டு இறந்த ரதியைப்பார்த்து, அவன் ஸைன்யம் வருத்தப்படுவதுபோல், ஸாரதியான நான் மாத்திரம் ஏறி, நீரில்லாமல் சூன்யமாக வருகிற என் தேரைப்பார்த்து நகரத்துஜனம் முழுவதும் மிகவும் வருத்தப்படும்.

दूरेऽपि निवसन्तं त्वां मानसेनाग्रतः स्थितम् ।
चिन्तयन्त्योऽद्य नूनं त्वां निराहाराः कृताः प्रजाः ॥ 42 ॥
दृष्टं तद्धि त्वया राम यादृशं त्वत्प्रवासने ।
प्रजानां संकुलं वृत्तं त्वच्छोकक्लान्तचेतसाम् ॥ 43 ॥
आर्तनादो हि यः पौरैर्मुक्तस्त्वद्विप्रवासने ।
सरथं मां निशाम्यैव कुर्युः शतगुणं ततः ॥ 44 ॥

42. (ப-ரை) अद्य- இப்பொழுது, प्रजाः- ஜனங்கள், दूरे- வெகுதூரத்தில், निवसन्तं अपि- வஸித்துக்கொண்டிருக்கிற, त्वां- உம்மை, अग्रतः स्थितं- எதிரில் இருக்கின்றவராக, त्वां- உம்மை, मानसेन-மனதினால், चिन्तयन्त्यः-நினைத்துக்கொண்டு, निराहाराः- ஆஹாரமில்லாதவர்களாக, कृताः- செய்யப்பட்டார்கள், नूनं- நிச்சயம்.

43. (ப-ரை) हे राम- ஸ்ரீராமா! त्वत्प्रवासने- நீர் வநத்திற்குப்புறப்படும் காலத்தில், त्वच्छोकक्लान्तचेतसाम्- உம்முடைய துக்கத்தினால் வாடியமனமுடையவர்களான, प्रजानां- ஜனங்களுக்கு, यादृशं- எப்படிப்பட்ட, संकुलं- கலக்கமானது, वृत्तं- உண்டாயிற்றோ, तत्- அது, त्वया- உம்மால், दृष्टं हि- பார்க்கப்பட்டதல்லவா.

44. (ப-ரை) सरथं- (நீர் இல்லாத) ரதம் ஏறி வருகின்ற, मां- என்னை, निशाम्य एव- பார்த்து, त्वद्विप्रवासने- நீர் வநத்திற்குப் புறப்படுங்காலத்தில், पौरैः- நகரத்து ஜனங்களால், यः आर्तनादः- யாதொரு அழுகை சப்தமானது, मुक्तः हि- செய்யப்பட்டதோ, ततः- அதைக்காட்டிலும், शतगुणं- நூறு மடங்காக, (आर्तनादं- அழுகை சப்தத்தை) कुर्युः- செய்யும்.

42. (பொ-ரை) இப்பொழுது நீர் நகரத்தை விட்டு வெகு தூரத்தில் இருந்தபோதிலும் எதிரில் நிற்கிறவராக மனதினால் உம்மை நினைத்துக்கொண்டு, அயோத்திமா நகரத்து ஜனங்கள் ஆஹாரத்திலும் எண்ணமில்லாமலிருக்கிறார்கள்.

43. (பொ-ரை) ஸ்ரீராமா! நீர் நகரத்தை விட்டு வநத்திற்கு ப்புறப்படுங்காலத்தில் உம்மை விட்டுப்பிரிந்ததினாலுண்டான துக்கத்தினால் மனம வாடிய நகரத்து ஜனங்களுக்கு மனதில் எவ்வளவு கலக்கமுண்டானது என்பதை நீர் நேரிலே பார்த்திருக்கின்றீரல்லவா!

44. (பொ-ரை) நீர் இல்லாமல் நான் மாத்திரம் தேரை ஓட்டிக்கொண்டு போகும் பொழுது, என்னைப்பார்த்து முன் நீர் வநம் புறப்படுங்காலத்தில் எவ்விதமாகக்கூக்குரலிட்டு அழுதார்களோ அதைவிட நாறு மடங்கு அதிகமாக பட்டணத்து ஜனங்கள் அழுவார்கள்.

अहं किं चापि वक्ष्यामि देवीं तव सुतो मया ।
नीतोऽसौ मातुलकुलं संतापं मा कृथा इति ॥ 45 ॥
असत्यमपि नैवाहं ब्रूयां वचनमीदृशम् ।
कथमप्रियमेवाहं ब्रूयां सत्यमिदं वचः ॥ 46 ॥
मम तावन्नियोगस्थास्त्वद्बन्धुजनवाहिनः ।
कथं रथं त्वया हीनं प्रवक्ष्यन्ति हयोत्तमाः ॥ 47 ॥

---

45–46. (ப-ரை) अहं चापि– நானும், देवीं- கௌஸல்யைப்பார்த்து, किंवक्ष्यामि- என்ன சொல்லுவேன், असौ- இந்த, तव सुतः– உம்முடைய பிள்ளை, मया- என்னால், मातुलकुलं– மாமாவினுடைய க்ருஹத்தைக்குறித்து, नीतः- அழைத்துக்கொண்டு போகப்பட்டான், संतापं– மன வருத்தத்தை, मा कृथाः– செய்யவேண்டாம், इति- என்று, ईदृशं- இப்படிப்பட்ட, असत्य अपि वचनं- பொய்யான வார்த்தையை, अहं- நான், न एव ब्रूयां– சொல்லவேமாட்டேன், अप्रियं- அப்ரியமாயிருக்கிற, सत्यं इदं वचः- உண்மையான இந்த வார்த்தையை, कथं- எப்படி, अहं- நான், ब्रूयां एव- சொல்லுவேன்.

47. (ப–ரை) त्वद्बन्धुजनवाहिनः– உம்முடைய பந்துக்களைச் சுமக்கின்றவைகளாய், मम– என்னுடைய, नियोगस्थाः– ஆஜ்ஞையிலிருக்கின்ற, हयोत्तमाः- இந்த உத்தமமான குதிரைகள், त्वया हीनं- நீர் இல்லாத, रथं- தேரை, कथं- எப்படி, प्रवक्ष्यन्ति- இழுக்கும்.

45-46. (பொ-ரை) ஜனங்களின் நிலைமை இவ்விதமிருக்கட்டும், கௌஸல்யாதேவி என்னைக்கண்டு கேட்டால் அந்த அம்மாவுக்கு நான் என்ன பதில் சொல்லப்போகிறேன் "அம்மா' உம்முடைய பிள்ளையை, மாமன் க்ருஹத்திற்கு அழைத்துக்கொண்டுபோனேன், நீர் மனவருத்தப்படவேண்டாம்" என்று சொல்லவேணும், அஸத்யமான இந்த வார்த்தையை நான் எப்படி சொல்லமுடியும், அல்லது உண்மையையே சொல்லலாமென்றால் அது மிகவும்அநிஷ்டமாகையால் அதைத்தான் நான் எப்படி சொல்லுவேன்.

47. (பொ–ரை) நெடுநாளாக உம்முடைய குலத்து ஜனங்களை இழுத்துக்கொண்டுவந்த எனக்கு வசப்பட்ட இந்த உத்தமமான குதிரைகள் நீர் இல்லாத இந்த தேரை இழுத்துக்கொண்டு எப்படி நகரம் பொகும்.

---

त्वद्बन्धुजन- என்பதற்கு உம்முடைய குலத்து முன்னோர்களென்றும், உம்முடைய பந்துவான ஸீதை இலக்ஷ்மணன் என்றும் அர்த்தம்.

तन्न शक्ष्याम्यहं गन्तुमयोध्यां त्वदृतेऽनघ ।
वनवासानुयानाय मामनुज्ञातुमर्हसि ॥ 48 ॥
यदि मे याचमानस्य त्यागमेव करिष्यसि ।
सरथोऽग्निं प्रवेक्ष्यामि त्यक्तमात्र इह त्वया ॥ 49 ॥
भविष्यन्ति वने यानि तपोविघ्नकराणि ते ।
रथेन प्रतिबाधिष्ये तानि सत्त्वानि राघव ॥ 50 ॥

48. (ப-ரை) हे अनघ- குற்றமற்றவரே! तत्- ஆகையால், अहं- நான், त्वत् ऋते- நீர் இல்லாமல், अयोध्यां- அயோத்தியைக்குறித்து, गन्तु- போவதற்கு, न शक्ष्यामि- துணியமாட்டேன், वनवासानुयानाय- வநவாஸத்திற்கு கூடவரும்படி, मां- என்னை, अनुज्ञातु- அனுமதிசெய்ய, अर्हसि- நீர் தகுகிறீர்.

49. (ப-ரை) याचमानस्य- வேண்டிக்கொள்ளுகின்ற, मे- எனக்கு, त्यागं एव- பரித்யாகத்தையே, करिष्यसि यदि- (நீர்) செய்வீரேயானால், त्वया- உம்மால், त्यक्तमात्रः- விடப்பட்ட மாத்திரம், अहं- நான், इह- இவ்விடத்திலேயே, सरथः- தேருடன் கூட, अग्निं- அக்நியை, प्रवेक्ष्यामि- ப்ரவேசித்து விடுவேன்.

50. (ப-ரை) हे राघव- ராகவா! वने- வநத்தில், यानि- யாதொரு ப்ராணிகள், ते- உமக்கு, तपोविघ्नकराणि- தவத்திற்கு இடையூறு செய்கின்றனவாக, भविष्यन्ति- ஆகுமோ, तानि सत्वानि- அந்த ப்ராணிகளை, रथेन- இந்தத்தேரினால், प्रतिबाधिष्ये- தடுத்து விடுவேன்.

48. (பொ-ரை) ஒருவித குற்றமுமில்லாதவரே! ஆதலால் நான் உம்மை விட்டு தனியாக அயோத்தியா பட்டணம் போகமுடியாது. வநவாஸத்திற்கு உம்மோடுகூடவே வரும்படி எனக்கும் நீர் அனுமதி கொடுக்கவேண்டும்.

49. (பொ-ரை) இவ்வளவு நான் வேண்டியும் நீர் என்னைக் கைவிடும் பக்ஷத்தில் நீர் விட்டவுடனே நான் தேருடன் இவ்விடத்திலேயே நெருப்பில் விழுந்து விடுவேன்.

50. (பொ-ரை) ராகவா! என்னையும் வநத்திற்கு வரும்படி அனுமதி கொடுத்தால் நானும்கூடவே வந்து நீர் வநத்தில் செய்கின்ற உம்முடைய தவத்திற்கு விக்னம் செய்யும் ப்ராணிகளை இந்த ரதத்தினால் தடுத்துவிடுவேன்.

त्वत्कृते न मयाऽवाप्तं रथचर्याकृतं सुखम् ।
आशंसे त्वत्कृतेनाहं वनवासकृतं सुखम् ॥ 51 ॥
प्रसीदेच्छामि तेऽरण्ये भवितुं प्रत्यनन्तरः ।
प्रीत्याभिहितमिच्छामि भव मे प्रत्यनन्तरः ॥ 52 ॥
इमे चापि हया वीर यदि ते वनवासिनः ।
परिचर्यां करिष्यन्ति प्राप्स्यन्ति परमां गतिम् ॥ 53 ॥

51. (ப-ரை) त्वत्कृते- உமக்காக, रथचर्याकृतं- தேர் ஓட்டுவதினுலுண்டான, सुखम्- ஸுகமானது, मया- என்னுல், न अवाप्तं- அடையப்படவில்லை, (तथापि- ஆகிலும்) त्वत्कृतेन- உமக்கு உதவி செய்வதினுல், वनवासकृतं- வநவாஸத்தினுலுண்டான, सुखम्- ஸுகத்தையாவது, आशंसे- வேண்டுகிறேன்.

52. (ப-ரை) अरण्ये- அரண்யத்தில், ते- உமக்கு, प्रत्यनन्तरः- ஸமீபத்திலிருப்பவனுக, भवितुं- ஆவதற்கு, इच्छामि- விரும்புகிறேன். मे- எனக்கு, प्रत्यनन्तरः-ஸமீபத்திலிருப்பவனுக, भव- (நீர்) ஆகவேண்டும், (इति- என்று), प्रीत्या- அன்பினுல், अभिहितं- சொல்லப்பட்ட வார்த்தையை, इच्छामि- விரும்புகிறேன், प्रसीद- அநுக்ரஹம் செய்யும்.

53. (ப-ரை) हे वीर- வீரரே! इमे- இந்த, हयाः चापि- குதிரைகளும், वनवासिनः- வநத்தில் வஸிக்கின்ற, ते- உமக்கு, परिचर्यां- பணிவிடையை, करिष्यन्ति यदि- செய்து கொண்டிருக்குமேயானுல், परमां- உயர்ந்ததான, गतिम्- கதியை, (ஸ்தானத்தை) प्राप्स्यन्ति- அடையும்.

51. (பொ-ரை) நீர் ராஜ்ய பட்டாபிஷேகம் செய்துகொண்டு, அரசனுயிருக்குங்காலத்தில் நான் ஸாரதியாய் இருந்து ஸுகத்தை அடையவேணுமென்று ஆசைப்பட்டுக்கொண்டிருந்தேன். அந்த பாக்யம் எனக்குக்கிடைக்காமலிருந்தபோதிலும் நீர் வநவாஸம் செய்யும்பொழுது உமக்கு உதவியாயிருந்து அந்த ஸுகத்தையாவது அடையவேணுமென்று ஆசைப்படுகிறேன்.

52. (பொ-ரை) அரண்யத்தில் உம்முடைய ஸமீபத்திலேயே நான் இருக்கவேண்டுமென்று ஆசைப்படுகிறேன். ஆதலால் "ஸுமந்த்ரரே நீர் என்னுடைய ஸமீபத்திலேயே இப்பொழுதும் இருந்துகொண்டிரும்" என்று அன்புடன் என்னைப் பார்த்து சொல்லுவீரென்று எண்ணுகிறேன். அவ்வாறு அநுக்ரஹம் செய்ய வேண்டும்.

53. (பொ-ரை) வீரா! இந்த தேர் குதிரைகளும் வநத்தில் வஸிக்கின்ற உமக்கு பணிவிடை செய்து வருமேயானுல் உயர்ந்த பதவியையுமடையும்.

तव शुश्रूषणं मूर्ध्ना करिष्यामि वने वसन् ।
अयोध्यां देवलोकं वा सर्वथा प्रजहाम्यहम् ॥ 54 ॥
न हि शक्या प्रवेष्टुं सा मयाऽयोध्या त्वया विना ।
राजधानी महेन्द्रस्य यथा दुष्कृतकर्मणा ॥ 55 ॥
वनवासे क्षयं प्राप्ते ममैष हि मनोरथः ।
यदनेन रथेनैव त्वां वहेयं पुरीं पुनः ॥ 56 ॥

---

54. (ப-ரை) अहं- நான், वने- வனத்தில், वसन्- வஸித்துக்கொண்டு, तव- உமக்கு, शुश्रूषणं- பணிவிடையை, मूर्ध्ना- தலையால், करिष्यामि- செய்துகொண்டிருப்பேன், अयोध्यां- அயோத்திமா நகரத்தையோ, देवलोकं वा- தேவலோகத்தையோ, सर्वथा- பல படியாலும், प्रजहामि- விட்டுவிடுவேன்.

55. (ப-ரை) दुष्कृतकर्मणा- பாபம் செய்த புருஷனால், महेन्द्रस्य- தேவேந்திர னுடைய, राजधानी- ராஜதானியான ஸ்வர்க்க லோகமானது, यथा- எப்படி, प्रवेष्टुं- ப்ர வேசிப்பதற்கு, न शक्या- முடியாததோ, (तथा- அப்படி), त्वया विना- உம்மைவிட்டு, मया- என்னால், सा अयोध्या- அந்த அயோத்திமா நகரமானது, प्रवेष्टुं- ப்ரவேசிப்ப தற்கு, न शक्या हि- முடியாததன்றோ!

56. (ப-ரை) वनवासे- வனவாஸமானது, क्षयं- முடிவை, प्राप्ते सति- அடைந்த வளவில், अनेन- இந்த, रथेन एव- ரதத்தினாலேயே, त्वां- உம்மை, पुनः- மறுமடியும், पुरीं- அயோத்திமா நகரத்தை, वहेयं इति यत्- கொண்டுபோக வேண்டுமென்பது யாதொன்றுண்டோ, एषः हि- இதுவேதான், मम मनोरथः- என்னுடைய மனதில் ஆசை.

54. (பொ-ரை) நான், உம்முடன் கூட வனத்தில் வஸித்துக்கொண்டு உமக்கு சிச்ருஷையை தலையினால் செய்து கொண்டிருப்பேன். அயோத்தியும், அல்லது தேவ லோகமும் எனக்குக்கிடைத்தாலும் பலவிதத்திலும் எனக்கு அவைகள் வே ண்டாமென்றே சொல்லிவிடுவேன்.

55. (பொ-ரை) பாபிகளுக்கு தேவலோகத்தில் எப்படி ப்ரவேசிக்கமுடியா தோ அப்படி நீர் இல்லாமல் நான் அந்த அயோத்தியில் ப்ரவேசிக்கமுடியாது.

56. (பொ-ரை) வனவாஸம் முடிந்த பிறகு இந்தத் தேரிலேயே உம்மை ஏற் றிக்கொண்டு திரும்பவும் அயோத்திமா நகரத்திற்கு அழைத்துக்கொண்டுபோகவே ண்டும் என்கிற இதுதான் என்னுடைய கோறிக்கை.

चतुर्दश हि वर्षाणि सहितस्य त्वया वने ।
क्षणभूतानि यास्यन्ति शतसंख्यान्यतोऽन्यथा ॥ 57 ॥
भृत्यवत्सल! तिष्ठन्तं भर्तृपुत्रगते पथि ।
भक्तं भृत्यं स्थितं स्थित्यां त्वं न मां हातुमर्हसि ॥ 58 ॥
एवं बहुविधं दीनं याचमानं पुनः पुनः ।
रामो भृत्यानुकम्पी तु सुमन्त्रमिदमब्रवीत् ॥ 59 ॥

57. (ப-ரை) वने- வநத்தில், त्वया- உம்மோடு, सहितस्य- சேர்ந்திருக்கிற, (मम- எனக்கு), चतुर्दश वर्षाणि- பதினான்கு வருஷங்கள், क्षणभूतानि—ஒரு நொடிப்பொழுதாய், यास्यन्ति- போய்விடும், अतः अन्यथा- இதற்கு மாறியிருக்குமேயானால், शतसंख्यानि— நூற்றுக்கணக்குகளாக, (भवेयुः- ஆய்விடும்).

58. (ப-ரை) हे भृत्यवत्सल- ப்ருத்யர்களிடத்தில் (வேலைக்காரர்களிடத்தில்) வாத்ஸல்யமுடையவரே? भर्तृपुत्रगते- ராஜகுமாரன் போன, पथि- வழியில், तिष्ठन्त- நிற்கின்றவனும், स्थित्यां— மரியாதையில், स्थितं- இருக்கின்றவனும், भक्त भृत्यं- பக்தியுள்ள வேலைக்காரனுமான, मां— என்னை, त्वं- நீர், हातु- விடுவதற்கு, न अर्हसि- தகுந்தவரல்ல.

59. (ப-ரை) एवं- இவ்விதம், दीनं (यथा तथा)- தைன்யத்துடன், बहुविधं— பல விதமாக, पुनः पुनः- அடிக்கடி, याचमान- வேண்டுகின்ற, सुमन्त्र- ஸுமந்த்ரரைப்பார்த்து भृत्यानुकम्पी- ப்ருத்யர்களிடம் கருணையுள்ளவரான, रामः तु- ஸ்ரீராமன், इदं— இந்த வார்த்தையை, अब्रवीत्- சொன்னார்.

57. (பொ-ரை) உம்முடன்கூட நான் வநத்தில் இருக்கும்காலத்தில் இந்த பதினான்கு வருஷங்களும் எனக்கு ஒரு நொடிப்பொழுதாக கழிந்துவிடும், அப்படிக்கில்லாமல்போனால் (உம்மைவிட்டுப் பிரிந்திருக்கும்பக்ஷத்தில்) நூற்றுக்கணக்காக ஆகிவிடும்.

58. (பொ-ரை) புத்திரர்களிடத்தில்போல், வேலைக்காரர்களிடத்தில்மிக அன்புள்ளப்ரபுவே! நமது ராஜகுமாரரான நீர் ஒப்புக்கொண்ட வநவாஸத்தை நானும் செய்யவேணுமென்று ஆசைப்பட்டவனும், வேலைக்காரர்கள் செய்யக்கடமைப்பட்டநிலைமையில் நின்றவனும், பக்தியுள்ள வேலைக்காரனுமான என்னை நீர் விட்டுவிடுவது நியாயமல்ல.

59. (பொ-ரை) இவ்வாறு தைன்யத்துடன் பல விதமாக அடிக்கடி கேட்கின்ற ஸுமந்த்ரரைப்பார்த்து அடியார்களிடம் மிகவும் கருணையுள்ளவரான ஸ்ரீராமன் ஒரு வார்த்தை சொன்னார்.

जानामि परमां भक्तिं मयि ते भर्तृवत्सल! ।
शृणु चापि यदर्थं त्वां प्रेषयामि पुरीमितः ॥ 60 ॥
नगरीं त्वां गतं दृष्ट्वा जननी मे यवीयसी ।
कैकेयी प्रत्ययं गच्छेदिति रामो वनं गतः ॥ 61 ॥
परितुष्टा हि सा देवी वनवासं गते मयि ।
राजानं नातिशङ्केत मिथ्यावादीति धार्मिकम् ॥ 62 ॥

60. (ப-ரை) हे भर्तृवत्सल- அரசனிடத்தில் அன்புள்ளவரே! ते- உமக்கு, मयि- என்னிடத்தில், परमां भक्तिं- உயர்ந்த பக்தியை, जानामि- அறிகிறேன், यदर्थं- எதற்காக, त्वां- உம்மை, इतः- இங்கிருந்து, पुरीं- நகரத்தைக்குறித்து, प्रेषयामि- அனுப்புகிறேனோ, (तत्- அதை), शृणु चापि- கேளும்.

61. (ப-ரை) नगरीं- அயோத்யா பட்டணத்தை, गतं- அடைந்திருக்கிற, त्वां- உம்மை, मे- என்னுடைய, यवीयसी जननी- இளைய தாயாரான, कैकेयी- கைகேயி, दृष्ट्वा- பார்த்து, रामः- ராமன், वनं गतः- வநம் சென்றுவிட்டான், इति- என்று, प्रत्ययं- நம்பிக்கையை, गच्छेत्- அடைவாள்.

62. (ப-ரை) मयि- நான், वनवासं- வநவாஸத்தை, गते सति- அடைந்தவளவில், सा देवी- அந்த கைகேயி, परितुष्टा- மிகவும் ஸந்தோஷமுடையவளாய்க்கொண்டு, धार्मिकं- தார்மிஷ்டரான, राजानं- அரசனை, मिथ्यावादी- इति- பொய் பேசுகிறவரென்று, न अतिशङ्केत- ஸந்தேஹப்படாமலிருப்பாள்.

60 (பொ-ரை) எஜமானனிடம் மிகவும் அன்புள்ளவரே! உமக்கு என்னிடத்தில் சிறந்த பக்தியிருக்கிறதென்பதை நான் தெரிந்துகொண்டிருக்கிறேன். ஆனால் இங்கிருந்து உம்மை நான் அயோத்திமா நகரத்திற்கு எதற்காக அனுப்புகின்றேனோ அதைக்கேளும்.

61. (பொ-ரை) நீர் பட்டணம்போய் சேர்ந்தால், உம்மைப்பார்த்து எனது சிறியதாயாரான கைகேயிக்கு ராமன் வநம்போய் சேர்ந்து விட்டான் என்று நம்பிக்கையுண்டாகும்.

62. (பொ-ரை) நான் வநவாஸம் சென்றுவிட்டால் அதனால் அவள் மிகவும் ஸந்தோஷமடைந்து தார்மிஷ்டரான அரசனை பொய்க்காரரென்று ஸந்தேஹப்படாமலிருப்பாள்.

एष मे प्रथमः कल्पो यदम्बामे यवीयसी ।
भरतारक्षितं स्फीतं पुत्रराज्यमवाप्नुयात् ॥ 63 ॥
मम प्रियार्थं राज्ञश्च सरथस्त्वं पुरीं व्रज ।
सन्दिष्टश्चासि यानर्थांस्तांस्तान्ब्रूयास्तथा तथा ॥ 64 ॥
इत्युक्त्वा वचनं सूतं सान्त्वयित्वा पुनः पुनः ।
गुहं वचनमक्लीबो रामो हेतुमदब्रवीत् ॥ 65 ॥

63. (ப-ரை) मे- என்னுடைய, यवीयसी अम्बा- சிறிய தாயார், भरतारक्षितं- பரதனால் ரக்ஷிக்கப்பட்ட, स्फीतं- ஸம்ருத்தமான, पुत्रराज्यं- புத்திரனுடைய ராஜ்யத்தை, अवाप्नुयात्- அடையவேண்டும், इति यत्- என்பது யாதொன்றுண்டோ, एषः- இதுதான், मे- என்னுடைய, प्रथमः कल्पः- முக்கியமான எண்ணம்.

64. (ப-ரை) मम- என்னுடையவும், राज्ञः च- மஹாராஜருடையவும், प्रियार्थं ப்ரியத்திற்காக, त्वं- நீர், सरथः (सन्)- தேருடன் கூடியவராய், पुरीं- நகரத்தைக்குறித்து, व्रज- போகவேண்டும், यान् अर्थान्- எந்த விஷயங்களை, सन्दिष्टः च असि- கட்டளையிடப்பட்டீரோ, तान् तान्- அந்தந்த விஷயங்களை, तथा तथा- அப்படி அப்படியே, ब्रूयाः- சொல்லவேண்டும.

65. (ப-ரை) इति वचनं- என்கிற வார்த்தையை, रामः- ஸ்ரீராமன், उक्त्वा- சொல்லிவிட்டு, सूतं- ஸாரதியை, पुनः पुनः- அடிக்கடி, सान्त्वयित्वा- ஸமாதானம் செய்து, अक्लीबः- தீரராய், हेतुमत्- யுக்தியோடு கூடினதான, वचनं- வார்த்தையை, गुहं प्रति- குஹனைக்குறித்து, अब्रवीत्- சொன்னார்.

63. (பொ-ரை) எனது சிறியதாயார், தன் புத்திரனை பரதன் ஆண்டு, செழித்த இந்த ராஜ்யத்தை அடைவதுதான் என்னுடைய லாபங்களில் முக்கியமானது.

64 (பொ-ரை) ஆதலால் நீர் என்னுடைய ப்ரியத்திற்காகவும், மஹாராஜருடைய ப்ரியத்திற்காகவும, தேருடனேயே, நகரம் போய்ச்சேரவேண்டும். நான் உம்மிடம் எந்தெந்த வார்த்தைகளைச் சொன்னேனோ அந்தந்த வார்த்தைகளை அவர்களிடம் அந்தந்தப்படியே சொல்லவேண்டும்.

65. (பொ-ரை) ஸ்ரீராமன், இவ்வாறு சொல்லிவிட்டு, ஸுமந்த்ரரை அடிக்கடி ஸமாதானம் செய்து குஹனைப்பார்த்து மிகவும் தைர்யத்துடன், யுக்தியுடன் ஒரு வார்த்தை சொன்னார்.

नेदानीं गुह योग्योऽयं वासो मे सजने वने ।
अवश्यं ह्याश्रमे वासः कर्तव्यस्तद्गतो विधिः ॥ 66 ॥

सोऽहं गृहीत्वा नियमं तपस्विजनभूषणम् ।
हितकामः पितुर्भूयः सीताया लक्ष्मणस्य च ॥
जटाः कृत्वा गमिष्यामि न्यग्रोधक्षीरमानय ॥ 67 ॥

66. (ப-ரை) हे गुह- குஹனே! सजने- ஜனங்களுடன் கூடிய, वने- வநத்தில், मे- என்னுடைய, अयं वासः- இந்த வாஸமானது, इदानीं- இப்பொழுது, न योग्यः- தகுந்ததன்று, आश्रमे- ஆச்ரமத்தில், वासः- வாஸமானது, कर्तव्यः- செய்யத்தகுந்தது, अवश्यं हि- அவச்யமல்லவா, विधिः- (பிதாவின்) ஆஜ்ஞையும், तद्गतः- அந்த விஷயமானது.

67. (ப-ரை) सः अहं- அப்படிப்பட்ட நான், तपस्विजनभूषणम्- ரிஷி ஜனங்களுக்கு அலங்காரமான, नियमं- நியமத்தை, गृहीत्वा- ஒப்புக்கொண்டு, पितुः- பிதாவுக்கும், सीतायाः- ஸீதைக்கும், लक्ष्मणस्य च- இலக்குமணனுக்கும், भूयः हितकामः- அதிகமான ஹிதத்தைச் செய்ய இச்சையுள்ளவனாய், जटाः- சடைகளை, कृत्वा- செய்துகொண்டு, गमिष्यामि- போகப்போகிறேன், न्यग्रोधक्षीरं- ஆலம்பாலை, आनय- கொண்டுவாரும், इति गुहं अब्रवीत्- என்று குஹனைப்பார்த்து சொன்னார்.

என்று 65-வது ச்லோகத்துடன் அன்வயம்.

66. (பொ-ரை) குஹனே! ஜனங்களோடு கூடிய வநத்தில் நான் இவ்விதம் வாஸம்பண்ணுவது உசிதமல்ல, ஆச்ரமத்திலேயே வாஸம் செய்வதுதான் அவச்யமானது. என் பிதாவின் கட்டளையும் அப்படியேதான்.

67. (பொ-ரை) பட்டாபிஷேகத்தை நிறுத்திவிட்டு, மரவுரி, க்ருஷ்ணாஜினம் சடை இவைகளை தரித்துக்கொண்டு, பதினான்குவருஷம் தண்டகாவநத்தில் வாஸம் செய்யவேண்டுமென்று கைகேயியினால் ஏவப்பட்டநான் ரிஷிகளுக்கு அலங்காரமான தரையில் படுப்பதுமுதலான நியமத்தை ஒப்புக்கொண்டு பிதாவுக்கும் ஸீதைக்கும் இலக்குமணனுக்கும், பரலோகத்திற்கு வேண்டிய மிகவும் புண்யத்தைச் செய்யவேண்டுமென்று ஆசையுடன் சடையை தரித்துக்கொண்டு போகப்போகிறேன். அதற்காக நீர் ஆலம்பால் கொண்டுவாரும் (என்று சொன்னார்)

तत्क्षीरं राजपुत्राय गुहः क्षिप्रमुपाहरत् ।
लक्ष्मणस्यात्मनश्चैव रामस्तेनाकरोज्जटाः ॥ 68 ॥
दीर्घबाहुर्नरव्याघ्रो जटिलत्वमधारयत् ॥ 69 ॥
तौ तदा चीरवसनौ जटामण्डलधारिणौ ।
अशोभेतामृषिसमौ भ्रातरौ रामलक्ष्मणौ ॥ 70 ॥
ततो वैखानसं मार्गमास्थितः सहलक्ष्मणः ।
व्रतमादिष्टवान्रामः सहायं गुहमब्रवीत् ॥ 71 ॥

---

68—69. (ப-ரை) **क्षिप्रं** - சீக்கிரமாக. **गुहः** - குஹன், **तत् क्षीरं** - அந்தப் பாலை, **राजपुत्राय** - ராஜகுமாரன் பொருட்டு, **उपाहरत्** - கொண்டுவந்து கொடுத்தார். **रामः** - ராமன். **तेन** - அதனால், **लक्ष्मणस्य** - இலக்குமணனுக்கும், **आत्मनः च एव** - தனக்கும். **जटाः** - சடைகளை. **अकरोत्** - செய்துகொண்டார். **दीर्घबाहुः** - நீண்ட தோள்களையுடைய. **नरव्याघ्रः** - புருஷோத்தமன், **जटिलत्वं** - சடை உடையவனாயிருக்கையை. **अधारयत्** - தரித்துக்கொண்டார்.

70. (ப-ரை) **भ्रातरौ** - ப்ராதாக்களான, **तौ रामलक्ष्मणौ** - அந்த ராம லக்குமணர்கள், **तदा** - அப்பொழுது. **चीरवसनौ** - மரவுரியைத் தரித்தவர்களும், **जटामण्डलधारिणौ** - சடை முடியைத் தரித்தவர்களுமாயிருந்து. **ऋषिसमौ** - ரிஷிகளுக்குத் துல்யரானவர்களாய். **अशोभेतां** - விளங்கினார்கள்.

71. (ப-ரை) **ततः** - பிறகு. **रामः** - ராமன், **सहलक्ष्मणः** - இலக்குமணனுடன் கூடியவராய், **वैखानसं** - விகனஸ் என்கிற ரிஷிகாட்டிய, **मार्गं** - வழியை தர்மத்தை, **आस्थिताः** அடைந்து கொண்டு, **व्रतं** - நியமத்தையும், **आदिष्टवान्** -

---

68—69. (பொ-ரை) உடனே குஹனும், ராஜபுத்திரருக்கு அந்த ஆலம் பாலைக் கொண்டுவந்து கொடுத்தார். அதனால் ராமன், இலக்குமணனுக்கும், தனக்கும் சடைபோட்டுக் கொண்டார்.

இது ரிஷிவாக்யம் :— நீண்ட தோள்களையுடையவராயும், புருஷோத்தமனுமான ஸ்ரீராமன் சடைபோட்டுக்கொண்டு விட்டார் என்று ரிஷி வருத்தப்படுகிறார்.

70. (பொ-ரை) ப்ராதாக்களான அந்த ராம லக்குமணர்கள் மரவுரியுடன், சடைமுடியும் தரித்துக்கொண்டிருக்கும் பொழுது ரிஷிகள்போல் விளங்கினார்கள்.

71. (பொ-ரை) பிறகு, ஸ்ரீராமன், இலக்குமணனுடன், விகனஸர் என்கிற மஹாரிஷியினால் சொல்லப்பட்ட வானப்ரஸ்த்த தர்மத்தை அடைந்து

अप्रमत्तो बले कोशे दुर्गे जनपदे तथा ।
भवेथा गुह राज्यं हि दुरारक्षतमं मतम् ॥ 72 ॥
ततस्तं समनुज्ञाय गुहमिक्ष्वाकुनन्दनः ।
जगाम तूर्णमव्यग्रः सभार्यः सहलक्ष्मणः ॥ 73 ॥
स तु दृष्ट्वा नदीतीरे नावमिक्ष्वाकुनन्दनः ।
तितीर्षुः शीघ्रगां गङ्गामिदं लक्ष्मणमब्रवीत् ॥ 74 ॥

அங்கீகரித்தார், **सहायं** - தனக்குத்துணையான, **गुहं** - குஹனைக் குறித்து, **अब्रवीत्** - (ஒரு வார்த்தையும்) சொன்னார்.

72. (ப - ரை) **हे गुह** - வாரீர் குஹரே! **बले** - ஸைன்யத்திலும், **कोशे** - பொக்கிஷத்திலும், **दुर्गे** - கோட்டையிலும், **तथा** - அப்படியே, **जनपदे** - தேசத்திலும், **अप्रमत्तः** - நீர் ஜாக்கிரதையாக, **भवेथाः** - இருக்கவேண்டும், **हि** - ஏனென்றால், **राज्यं** - ராஜ்யமானது, **दुरारक्षतमं** - மிகவும் கஷ்டப்பட்டு ரக்ஷிக்கக் கூடியது, **मतम्** - (என்று) என்னுடைய எண்ணம்.

73. (ப - ரை) **ततः** - பிறகு, **इक्ष्वाकुनन्दनः** - இக்ஷ்வாகு குலத்தினருக்கு ஸந்தோஷத்தைச் செய்கின்ற ராமன், **तं गुहं** - அந்த குஹனை, **अनुज्ञाय** - அனுமதி செய்து விட்டு, **सभार्यः** - பார்யையுடனும், **सहलक्ष्मणः** - இலக்குமணனுடனும், **अव्यग्रः** - வேறு சிந்தையில்லாதவராய், **तूर्णं** - சீக்கிரமாக, **जगाम** - சென்றார்.

74. (ப - ரை) **सः इक्ष्वाकुनन्दनः तु** - அந்த இக்ஷ்வாகு வம்சத்து குமாரரான ஸ்ரீராமன், **नदीतीरे** - நதியின் கரையில், **नावं** - ஓடத்தை, **दृष्ट्वा** - பார்த்து, **शीघ्रगां** - வேகமாக ஓடுகின்ற, **गङ्गां** - கங்கா நதியை, **तितीर्षुः** - தாண்ட இச்சையுடையவராய், **लक्ष्मणं** - இலக்குமணனைக்குறித்து, **इदं** - இதை, **अब्रवीत्** - சொன்னார்.

---

கொண்டு ப்ரம்மசர்யம் முதலான வ்ரதத்தையும் அங்கீகரித்துக்கொண்டார். ஸஹாயமான குஹரைப்பார்த்து ஒரு வார்த்தையும் சொன்னார்.

72. (பொ - ரை) அப்பா குஹரே! நீர் உம்முடைய ஸைன்யத்திலும், பொக்கிஷத்திலும், கோட்டையிலும், தேசத்திலும் மிகவும் ஜாக்கிரதை யுள்ளவராக விருக்கவேண்டும். ஏனென்றால், ராஜ்யத்தை ரக்ஷிப்பது மிகவும் கஷ்டமான கார்யம் என்று என்னுடைய அபிப்ராயம்.

73. (பொ - ரை) பிறகு, இக்ஷ்வாகு குலத்து குமாரரான அந்த ஸ்ரீராமன் குஹருக்கு நிற்கும்படி அனுமதி செய்துவிட்டு ஒரு விதமான மனக்கவலையுமில்லாமல் பார்யையுடனும், இலக்குமணனுடனும் சீக்கிரமாக புறப்பட்டார்.

74. (பொ - ரை) அந்த இக்ஷ்வாகு வம்சத்து புத்திரரான ஸ்ரீராமன், நதியின் கரையில் ஓடம் வந்திருப்பதைப்பார்த்து விட்டு மிகவும் வேகமாக ப்ரவஹிக்கின்ற கங்கா நதியைத் தாண்டவேணுமென்று எண்ணங்கொண்டு, இலக்குமணனைப் பார்த்து இவ்வாறு சொன்னார்.

आरोह त्वं नरव्याघ्र स्थितां नावमिमां शनैः ।
सीतां चारोपयान्वक्षं परिगृह्य मनस्विनीम् ॥ 75 ॥

स भ्रातुः शासनं श्रुत्वा सर्वमप्रतिकूलयन् ।
आरोप्य मैथिलीं पूर्वमारुरोहात्मवांस्ततः ॥ 76 ॥

अथाऽऽरुरोह तेजस्वी स्वयं लक्ष्मणपूर्वजः ।
ततो निषादाधिपतिर्गुहो ज्ञातीनचोदयत् ॥ 77 ॥

75. (ப - ரை) **हे नरव्याघ्र** - புருஷோத்தமனே! **स्थितां** - இதோ நிற்கின்ற, **इमां नावं** - இந்த ஓடத்தை, **परिगृह्य** - பிடித்துக்கொண்டு, **त्वं** - நீ, **शनैः** - மெள்ள, **आरोह** - ஏறு, **मनस्विनीम्** - பயந்த மனதையுடையவளான, **सीतां च** - ஸீதையையும், **अन्वक्षं** - பிறகு, **आरोपय** - ஏற்றிவிடு.

76. (ப - ரை) **आत्मवान्** - நல்ல மனதுடையவரான, **सः** - அந்த இலக்குமணன், **भ्रातुः** - ப்ராதாவினுடைய, **शासनं** - ஆஜ்ஞையை, **श्रुत्वा** - கேட்டு, **सर्वं** - முழுவதையும், **अप्रतिकूलयन्** - விரோதமில்லாமல் செய்துகொண்டு, **पूर्वं** - முன்னே, **मैथिलीं** - ஸீதையை, **आरोप्य** - ஏற்றிவிட்டு, **ततः** - பிறகு, **आरुरोह** - (தான்) ஏறினார்.

77. (ப - ரை) **अथ** - பிறகு, **तेजस्वी** - மிகுந்த தேஜஸ்ஸையுடைய, **लक्ष्मण-पूर्वजः** - இலக்குமணன் தமயனான ஸ்ரீராமன், **स्वयं** - தான், **आरुरोह** - ஏறினார், **ततः** - பிறகு, **निषादाधिपतिः** - வேடர்களுக்கு அதிபதியான, **गुहः** - குஹர், **ज्ञातीन्** - (தன்) பந்துக்களை, **अचोदयत्** - ஏவினார்.

---

75. (பொ - ரை) புருஷோத்தமா! இதோ முன்னால் நிற்கின்ற இந்த ஓடத்தை கெட்டியாகப் பிடித்துக்கொண்டு நீ ஏறு. பிறகு, மிகவும் பயந்தவளான ஸீதையை கை நுனியில் பிடித்துக்கொண்டு ஏற்றி விடு.

இதோ முன்னால் நிற்கின்ற இந்த ஓடத்தில் பயந்தவளான இந்த ஸீதையை முன்னே ஏற்றிவிட்டு பிறகு நீ ஏறு என்றும் சொல்லலாம்.

76. (பொ - ரை) சுத்தமான மனதையுடைய அந்த இலக்குமணன் ப்ராதாவின் உத்திரவைக் கேட்டு அது முழுவதையும் விரோதமில்லாதபடி செய்வதற்காக (செய்து கொண்டு) முன்னே ஸீதையை ஓடத்தில் ஏற்றிவிட்டு பிறகு தான் ஏறினார்.

77. (பொ - ரை) பிறகு, மிக்க தேஜஸ்ஸுடன் கூடிய இலக்குமணன் தமயனான ஸ்ரீராமன் தான் ஏறினார். அனந்தரம் வேடர்களுக்கு அதிபதியான குஹர் தம்முடைய ஆள்களை சீக்கிரமாக ஓடத்தை அக்கரைக்குக் கொண்டுபோகுங்கள் என்று கட்டளை யிட்டார்.

राघवोऽपि महातेजा नावमारुह्य तां ततः ।
ब्रह्मवत्क्षत्रवच्चैव जजाप हितमात्मनः ॥ 78 ॥

आचम्य च यथाशास्त्रं नदीं तां सह सीतया ।
प्राणमत्प्रीतिसंहृष्टो लक्ष्मणश्चामितप्रभः ॥ 79 ॥

अनुज्ञाय सुमन्त्रं च सबलं चैव तं गुहम् ।
आस्थाय नावं रामस्तु चोदयामास नाविकान् ॥ 80 ॥

78. (ப - ரை) **ततः** - பிறகு, **महातेजाः** - மிகுந்த தேஜஸ்ஸையுடைய, **राघवः अपि** - ராகவனும், **तां नावं** - அந்த ஓடத்தை, **आरुह्य** - ஏறி, **ब्रह्मवत्** - ப்ராம்மணர்களுக்குத் தகுந்ததாயும், **क्षत्रवत्** - க்ஷத்ரியர்களுக்குத் தகுந்ததாயும், **आत्मनः** - தமக்கு, **हितं च एव** - ஹிதமுமான 'சில மந்த்ரத்தை' **जजाप** - ஜபித்தார்.

79. (ப - ரை) **यथाशास्त्रं** - சாஸ்த்ரப்படி, **आचम्य च** - ஆசமனம் செய்து, **प्रीतिसंहृष्टः** - ப்ரீதியினால் ஸந்தோஷமுடையவராய்க் கொண்டு, **सीतया सह** - ஸீதையுடன் கூட, **तां नदीं** - அந்த நதியை, **रामः** - ஸ்ரீராமன், **प्राणमत्** - ஸேவித்தார். **अमितप्रभः** - அளவிறந்த தேஜஸ்ஸையுடைய, **लक्ष्मणः च** - இலக்குமணனும், (**प्राणमत्** - ஸேவித்தார்.)

80. (ப - ரை) **रामः तु** - ஸ்ரீராமனும், **सुमन्त्रं च** - ஸுமந்த்ரரையும், **सबलं** - ஸைன்யங்களோடு கூடிய, **तं गुहं च एव** - அந்த குஹரையும், **अनुज्ञाय** - அனுமதி செய்துவிட்டு, **नावं** - ஓடத்தை, **आस्थाय** - ஏறிக்கொண்டு, **नाविकान्** - ஓடக்காரர்
, **चोदयामास**

78. (பொ - ரை) பிறகு மிகுந்த தேஜஸ்ஸையுடைய ஸ்ரீராகவனும், அந்த ஓடத்திலேறிக்கொண்டு ப்ராமமணர்களும் க்ஷத்ரியர்களும் ஜபிக்கத்தகுந்ததாய் தமக்கும் ஹிதமான சில மந்த்ரங்களை ஜபித்தார்.

79. (பொ - ரை) ஸ்ரீராமன் சாஸ்த்ரப்படி ஆசமனம் செய்துவிட்டு ப்ரீதியினால் களிப்படைந்து ஸீதையுடன்கூட அந்த நதியை ஸேவித்தார். அளவிறந்த தேஜஸ்ஸையுடைய இலக்குமணனும் ஸேவித்தார்.

80. (பொ - ரை) ஸ்ரீராமனும் ஸாரதியான ஸுமந்த்ரருக்கும், ஸைன்யங்களுடன் கூடின அந்த குஹருக்கும், அனுமதி கொடுத்துவிட்டு ஓடத்திலேறிக்கொண்டு ஓடக்காரர்களுக்கு ஓடத்தைத் தள்ளும்படி கட்டளையிட்டார்.

ततस्तैश्चोदिता सा नौः कर्णधारसमाहिता ।
शुभस्फ्यवेगाभिहता शीघ्रं सलिलमत्यगात् ॥ 81 ॥
मध्यं तु समनुप्राप्य भागीरथ्यास्त्वनिन्दिता ।
वैदेही प्राञ्जलिर्भूत्वा तां नदीमिदमब्रवीत् ॥ 82 ॥
पुत्रो दशरथस्यायं महाराजस्य धीमतः ।
निदेशं पारयित्वेमं गङ्गे त्वदभिरक्षितः ॥ 83 ॥
चतुर्दश हि वर्षाणि समग्राण्युष्य कानने ।
भ्रात्रा सह मया चैव पुनः प्रत्यागमिष्यति ॥ 84 ॥
ततस्त्वां देवि सुभगे क्षेमेण पुनरागता ।
यक्ष्ये प्रमुदिता गङ्गे सर्वकामसमृद्धिनी ॥ 85 ॥

---

81. (ப - ரை) **ततः** - பிறகு, **कर्णधारसमाहिता (समाहित-कर्णधारा)** - மிகவும் ஜாக்கிரதையான ஓடக்காரர்களை உடையதான, **सा नौः** - அந்த ஓடமானது, **तैः** - அவர்களால், **चोदिता** - தள்ளப்பட்டதாய், **शुभ स्फ्य वेग अभिहता** - ச்ரேஷ்டங்களான, ஓடக்கோல்களால் வேகமாக தள்ளப்பட்டு, **शीघ्रं** - சீக்கிரமாக, **सलिलं** - ஜலத்தை, **अत्यगात्** - தாண்டினது.

82. (ப - ரை) **अनिन्दिता** - பழிப்பற்றவளான, **वैदेही** - ஸீதையானவள், **भागीरथ्याः** - கங்கையினுடைய, **मध्यं तु** - மத்ய ப்ரதேசத்தை, **समनुप्राप्य** - அடைந்து, **प्राञ्जलिः भूत्वा** - கைகூப்பிக்கொண்டு, **तां नदीं** - அந்த நதியைப் பார்த்து, **इदं अब्रवीत्** - இதைச் சொன்னாள்.

83-84-85. (ப - ரை) **हे गङ्गे** - கங்காதேவியே! **धीमतः** - மிகவும் புத்திசாலியான, **दशरथस्य महाराजस्य** - தசரத மஹாராஜருடைய, **अयं पुत्रः** - இந்த புத்திரரானவர், **त्वदभिरक्षितः** - உன்னால் காப்பாற்றப்பட்டவராய், **चतुर्दश वर्षाणि** - பதி

---

81. (பொ - ரை) மிகவும் ஜாக்கிரதையுள்ளவர்களான ஓடக்காரர்களோடு கூடின அந்த ஓடமானது ஓடக்காரர்களால் அழகான ஓடம தள்ளும் கோல்களால் தள்ளப்பட்டு சீக்கிரமாய் ஜலத்தைத் தாண்டிற்று.

82. (பொ - ரை) எல்லோராலும் புகழப்பெற்ற அந்த வைதேஹியானவள் கங்காநதியின் ஜலத்தின் நடுவில் வந்துகொண்டிருக்கும் பொழுது கை கூப்பிக் கொண்டு அந்த நதியைப்பார்த்து இதைச் சொன்னாள்.

83-84-85. (பொ - ரை) ஹே கங்காதேவி! மிகவும் ச்ரேஷ்டமான புத்தியையுடைய தசரத மஹாராஜரின் குமாரரான ஸ்ரீராமன் உன்னால் நன்றாகக் காப்பாற்றப்பட்டு பதினான்கு வருஷங்கள் முழுவதும வனத்தில் வாஸம் செய்து, தமக்கு

त्वं हि त्रिपथगा देवि ब्रह्मलोकं समीक्षसे ।
भार्या चोदधिराजस्य लोकेऽस्मिन्संप्रदृश्यसे ॥ 86 ॥
सा त्वां देवि नमस्यामि प्रशंसामि च शोभने
प्राप्तराज्ये नरव्याघ्रे शिवेन पुनरागते ॥ 87 ॥
गवां शतसहस्रं च वस्त्राण्यन्नं च पेशलम् ।
ब्राह्मणेभ्यः प्रदास्यामि तव प्रियचिकीर्षया ॥ 88 ॥

---

ளுக்கு வருஷங்களை, **समग्राणि** - பூர்ணங்களாக, **कानने** - வனத்தில், **उष्य** - வஸித்து, **इमं निदेशं** - இந்த பிதாவின் உத்திரவை, **पारयित्वा** - முடித்து விட்டு, **भ्रात्रा** - ப்ராதா வுடனும், **मया चैव** - என்னுடனும், **सह** - கூட, (**यदा** - எப்பொழுது) **पुनः** - திரும்பி, **प्रत्यागमिष्यति** - வருவாரோ, **ततः** - அப்பொழுது, **सुभगे** - சிறந்த கீர்த்தியை உடைய, **गङ्गे देवि** - கங்காதேவியே! **क्षेमेण** - க்ஷேமமாக, **पुनः आगता** - திரும்பி வந்த நான், **सर्वकाम समृद्धिनी** - மனோபீஷ்டங்களெல்லாம் நிறைந்தவளாய், **प्रमुदिता (सती)** - ஸந்தோஷமுடையவளாய்க்கொண்டு, **त्वां** - உன்னை, **यक्ष्ये** - பூஜிக்கப்போகிறேன்.

86. (ப - ரை) **हे देवि** - கங்காதேவியே! **त्वं** - நீ, **त्रिपथगा हि** - ஸ்வர்க்க லோகம், பூலோகம், பாதாளலோகம் என்னும் இம்மூன்று வழிகளில் போகின்றாய், **ब्रह्मलोकं** - ப்ரம்ம லோகத்தை, **समीक्षसे** - பார்க்கின்றாய், **उदधिराजस्य** - ஸமுத்திர ராஜனுக்கு, **भार्या च** - பார்யையாகவும், **अस्मिन् लोके** - இந்த உலகத்தில், **संप्रदृश्यसे** - காணப்படுகிறாய்.

87—88. (ப - ரை) **शोभने** - சுபகரியான, **देवि** - கங்காதேவியே, **सा** - அப்படிப்பட்ட நான், **त्वां** - உன்னை, **नमस्यामि** - நமஸ்கரிக்கின்றேன், **प्रशंसामि च** -

---

பிதா செய்திருந்த ஆஜ்ஞையை க்ரமமாக முடித்துவிட்டு, ப்ராதாவான இலக்குமணனுடனும், என்னுடனும் கூட திரும்பி எப்பொழுது வருவாரோ, அப்பொழுது மிகவும் கீர்த்தி பெற்ற கங்காதேவியே! அவருடன் க்ஷேமமாய் திரும்பி வருகின்ற நான் எல்லா இஷ்டபோகங்களும் நிறைந்து பரம ஸந்தோஷத்துடன் உன்னை பூஜிக்கப்போகின்றேன்.

86. (பொ - ரை) அம்மா கங்காதேவி! நீ, ஸ்வர்க்கம், பூமி, பாதாளம் என்னும் இம்மூவுலகங்களிலும் போகின்றாய். ப்ரம்மலோகத்தையும் பார்த்துக்கொண்டேயிருக்கிறாய். இவ்வுலகத்திலும் ஸமுத்ரராஜனுக்கு பார்யையாகவும் காணப்படுகிறாய்.

87—88. (பொ - ரை) அம்மா கங்காதேவி! நான் உன்னை ஸேவிக்கிறேன், பலபடியாக ஸ்தோத்திரமும் செய்கிறேன். புருடோத்தமரான ஸ்ரீராமன் க்ஷேம

सुराघटसहस्रेण मांसभूतौदनेन च ।
यक्ष्ये त्वां प्रयता देवि पुरीं पुनरुपागता ॥ 89 ॥

यानि त्वत्तीरवासीनि दैवतानि वसन्ति च ।
तानि सर्वाणि यक्ष्यामि तीर्थान्यायतनानि च ॥ 90 ॥

---

ஸ்தோத்ரமும் செய்கிறேன், **नरव्याघ्रे** - புருடோத்தமரான ஸ்ரீராமன், **शिवेन** - க்ஷேமமாக, **पुनः आगते** - திரும்பி வந்தவராய், **प्राप्तराज्ये (सति)** - ராஜ்யத்தை அடைந்தவளவில், **तव** - உனக்கு, **प्रियचिकीर्षया** - ப்ரியத்தைச் செய்ய ஆசையினால், **गवां** - பசுக்களுடைய, **शतसहस्रं च** - நூறாயிரத்தையும், **वस्त्राणि** - வஸ்த்ரங்களையும், **पेशलम्** - மிகவும் ருசியுள்ளதான. **अन्नं च** - அன்னத்தையும் **ब्राह्मणेभ्यः** - ப்ராம்மணர்களின் பொருட்டு, **प्रदास्यामि** - கொடுக்கப்போகின்றேன்.

89. (ப - ரை) **हे देवि** - கங்காதேவி! (**अहं** - நான்), **पुनः** - மறுபடியும், **पुरीं** - பட்டணத்தை, **उपागता** - அடைந்தவளாய், **प्रयता** - நியமமுடையவளாய், **सुराघटसहस्रेण** - ஆயிரம் கள்ளுக்குடங்களாலும், **मांसभूत ओदनेन च** - மாம்ஸரூபமான அன்னத்தினாலும், **त्वां** - உன்னை, **यक्ष्ये** - பூஜிக்கபோகிறேன்.

90. (ப - ரை) **यानि दैवतानि** - யாதொரு தேவதைகள், **त्वत्तीरवासीनि** - உன் கரையில் வஸித்துக்கொண்டு, **वसन्ति च** - இருக்கின்றனவைகளோ, **तानि सर्वाणि** - அவைகள் முழுவதையும், **तीर्थानि** - புண்ய தீர்த்தங்களையும், **आयतनानि च** - புண்ய க்ஷேத்திரங்களையும், **यक्ष्यामि** - பூஜிக்கபோகிறேன்.

மாகத் திரும்பி வந்து ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் செய்துகொண்ட பிறகு உனக்கு ப்ரியம் செய்ய வேணுமென்கிற ஆசையினால் நூறாயிரம் பசுக்களையும், வஸ்த்ரங்களையும், ச்ரேஷ்டமான அன்னதானமும் ப்ராம்மணர்களுக்குக் கொடுக்கப் போகிறேன்.

89. (பொ - ரை) கங்காதேவி! நான் மறுபடியும் பட்டணம வந்து சேர்ந்து, ரொம்பவும் பக்தியுடன், ஆயிரம் கள்ளுக்குடங்களாலும், மாம்ஸபூதமான ஆஹாரங்களாலும், உன்னைப் பூஜிக்கப்போகிறேன்.

90. (பொ - ரை) உன் கரையில் வஸிக்கின்ற தெய்வங்கள் எல்லாவற்றையும், மணிகர்ணிகை முதலான ஸகல தீர்த்தங்களையும், காசி முதலான புண்ய க்ஷேத்திரங்களையும் நான் பூஜிக்கப்போகிறேன்.

पुनरेव महाबाहुर्मया भ्रात्रा च सङ्गतः ।
अयोध्यां वनवासात्तु प्रविशत्वनघोऽनघे ॥ 91 ॥

तथा संभाषमाणा सा सीता गङ्गामनिन्दिता ।
दक्षिणा दक्षिणं तीरं क्षिप्रमेवाभ्युपागमत् ॥ 92 ॥

तीरं तु समनुप्राप्य नावं हित्वा नरर्षभः ।
प्रातिष्ठत सह भ्रात्रा वैदेह्या च परंतपः ॥ 93 ॥

91. (ப - ரை) **हे अनघे** - குற்றமற்ற கங்கா நதியே! **अनघः** - பாபமற்றவராயும், **महाबाहुः** - பெரும் தோள்களையுடையவருமான ஸ்ரீராமன், **मया** - என்னோடும், **भ्रात्रा च** - தம்பியுடனும், **सङ्गतः** - கூடியவராய், **वनवासात्** - வனவாஸத்திலிருந்து, **पुनः एव** - மறுபடியும், **अयोध्यां** - அயோத்திமாநகரத்தை, **प्रविशतु** - ப்ரவேசிக்கட்டும்.

92. (ப - ரை) **अनिन्दिता** - பழிப்பில்லாதவளும், **दक्षिणा** - ஸமர்த்தையுமான, **सा सीता** - அந்த ஸீதை, **गङ्गां** - கங்கா நதியைப் பார்த்து, **तथा** - அவ்வாறு, **संभाषमाणा (सती)** - பேசிக்கொண்டே, **दक्षिणं तीरं** - தென்கரையை, **क्षिप्रं एव** - சீக்கிரமாகவே, **अभ्युपागमत्** - சேர்ந்தாள்.

93. (ப - ரை) **नरर्षभः** - புருடோத்தமனும், **परंतपः** - சத்ருக்களை வெல்லுகின்றவருமான ஸ்ரீராமன், **तीरं तु** - அக்கரையை, **समनुप्राप्य** - அடைந்து, **नावं** - ஓடத்தை, **हित्वा** - விட்டுவிட்டு, **भ्रात्रा** - ப்ராதாவுடனும், **वैदेह्या च** - ஸீதையுடனும், **प्रातिष्ठत** - புறப்பட்டார்.

---

91. (பொ - ரை) குற்றமற்ற கங்கா நதியே! பாபமில்லாதவரும், பெரும் தோள்களையுடையவருமான ஸ்ரீராமன், என்னுடனும், தம்பியுடனும் கூட வனவாஸத்திலிருந்து, மறுபடியும் அயோத்யா பட்டணத்தில் ப்ரவேசிக்கவேண்டும்.

92. (பொ - ரை) பழிப்பில்லாதவளும், மிகவும் சதுரையுமான அந்த ஸீதா தேவி, கங்கா நதியைப்பார்த்து அவ்வாறு ஸம்பாஷணம் செய்துகொண்டே, சீக்கிரமாக, தென்கரை சேர்ந்து விட்டாள்.

93. (பொ - ரை) சத்ருக்களை வெல்லும் ஸ்வபாவமுடைய அந்த புருடோத்தமனும் தென்கரை போய்ச்சேர்ந்து ஓடத்தை விட்டுவிட்டு, ப்ராதாவுடனும், ஸீதையுடனும் புறப்பட்டார்.

अथाब्रवीन्महाबाहुः सुमित्रानन्दवर्धनम् ।
भव संरक्षणार्थाय सजने विजनेऽपि वा ॥ 94 ॥

अवश्यं रक्षणं कार्यमदृष्टे विजने वने
अग्रतो गच्छ सौमित्रे सीता त्वामनुगच्छतु ॥ 95 ॥

पृष्ठतोऽहं गमिष्यामि त्वां च सीतां च पालयन् ।
अन्योन्यस्येह नो रक्षा कर्तव्या पुरुषर्षभ ॥ 96 ॥

---

94. (ப - ரை) **अथ** - பிறகு, **महाबाहुः** - பெரும் தோள்களையுடைய ஸ்ரீராமன், **सुमित्रानन्दवर्धनं** - ஸுமித்ராதேவிக்கு ஆனந்தத்தை வ்ருத்தி செய்கின்ற இலக்குமணனைப் பார்த்து. **सजने** - ஜனமுள்ள விடத்திலும், **विजने अपि वा** - ஜனமில்லாத விடத்திலும், **संरक्षणार्थाय** - (ஸீதையினுடைய) ரக்ஷணத்திற்காக, **भव** - (கவனமுள்ளவனாய்) இரு, **इति** - என்று, **अब्रवीत्** - சொன்னார்.

95. (ப - ரை) **हे सौमित्रे** - இலக்குமணா! **अदृष्टे** - நாம் காணாததும், **विजने** - ஜனமில்லாததுமான. **वने** - வனத்தில், **अवश्यं** - அவச்யமாக. **रक्षणं** - காவல், **कार्यं** - செய்யத்தகுந்தது. (**तत्** - ஆதலால்), **अग्रतः** - முன்னே, **गच्छ** - போ, **सीता** - ஸீதையானவள், **त्वां अनु** - உன் பின்னால், **गच्छतु** - போகட்டும்.

96. (ப - ரை) **अहं** - நான். **त्वां च** - உன்னையும், **सीतां च** - ஸீதையையும், **पालयन् (सन्)** - ரக்ஷித்துக்கொண்டு. **पृष्ठतः** - பின்னால், **गमिष्यामि** - போகப்போகிறேன். **हे पुरुषर्षभ** - புருஷோத்தமா! **इह** - இந்த வனத்தில், **नः** - நமக்கு, **अन्योन्यस्य** - ஒருவருக்கொருவர். **रक्षा** - ரக்ஷணமானது, **कर्तव्या** - செய்துகொள்ளத் தகுந்தது.

94. (பொ - ரை) பிறகு, மஹாபாஹுவான ஸ்ரீராமன், ஸுமித்ராதேவிக்கு ஸந்தோஷத்தை வ்ருத்தி செய்துகொண்டிருக்கும் இலக்குமணனைப் பார்த்து, அப்பா! ஜனங்கள் இருக்குமிடமாகிலும் ஸரி, இல்லாமலிருக்குமிடமாகிலும் ஸரி, ஸீதையை ரக்ஷிக்கும் கார்யத்தில் மிகவும் ஸாவதானமாக இரு என்று சொன்னார்.

95. (பொ - ரை) இலக்குமணா! ஒரு நாளும் நாம் பார்த்திராததும், ஜனஸஞ்சாரமுமில்லாத இந்த வனத்தில் அவச்யம் காவல் செய்யவேண்டியது. ஆதலால் நீ முன்னே போ, ஸீதை உன் பின்னால் போகட்டும்.

96. (பொ - ரை) உன்னையும், ஸீதையையும் ரக்ஷிப்பதற்காக, நான் உங்களிருவர்களின் பின்னால் போவேன், புருஷோத்தமா! இவ்விடத்தில் நாம் ஒருவருக்கொருவர் ரக்ஷணம் செய்துகொள்ள வேண்டியது.

न हि तावदतिक्रान्ता सुकरा काचन क्रिया ।
अद्य दुःखं तु वैदेही वनवासस्य वेत्स्यति ॥ 97 ॥

प्रनष्टजनसंबाधं क्षेत्रारामविवर्जितम् ।
विषमं च प्रपातं च वनं ह्यद्य प्रवेक्ष्यति ॥ 98 ॥

श्रुत्वा रामस्य वचनं प्रतस्थे लक्ष्मणोऽग्रतः ।
अनन्तरं च सीताया राघवो रघुनन्दनः ॥ 99 ॥

97. (ப - ரை) **अतिक्रान्ता** - காலம் தவறியதான, **काचन क्रिया** - ஒரு கார்யமும், **न सुकरा हि** - ஸுலபமாக செய்ய முடியாதல்லவா, **वैदेही** - ஸீதையானவள், **अद्य तु** - இப்போதுதான், **वनवासस्य** - வனவாஸத்தினுடைய, **दुःखं** - துக்கத்தை, **वेत्स्यति** - அறியப்போகிறாள்.

98. (ப - ரை) **प्रनष्टजनसंबाधं** - ஜனங்களின் கூட்டமில்லாததாயும், **क्षेत्र आराम विवर्जितं** - நிலங்களும், தோட்டங்களுமில்லாததாயும், **विषमं च** - மேடுபள்ளமுள்ளதாயும், **प्रपातं च** - குழி உள்ளதுமாயிருக்கிற, **वनं** - வனத்தை, **अद्य** - இப்பொழுது, **प्रवेक्ष्यति** - ப்ரவேசிக்கப்போகிறாள்.

99. (ப - ரை) **रामस्य** - ராமனுடைய, **वचनं** - வார்த்தையை, **श्रुत्वा** - கேட்டு, **लक्ष्मणः** - இலக்குமணன், **अग्रतः** - முன்னே, **प्रतस्थे** - புறப்பட்டார். **सीतायाः** - ஸீதையினுடைய, **अनन्तरं च** - பின்னால், **रघुनन्दनः** - ரகு குலத்து குமாரரான, **राघवः** - ராகவன், (**प्रतस्थे** - புறப்பட்டார்.)

97. (பொ - ரை) எந்த கார்யமும் செய்யவேண்டிய ஸமயம் தவறிவிட்டால், மறுபடி ஸுலபமாக செய்து முடிப்பது கஷ்டமல்லவா, விதேஹராஜன் புத்ரியான ஸீதை இப்பொழுதுதான் வனவாஸத்தின் கஷ்டத்தை அறியப்போகிறாள்.

98. (பொ - ரை) ஜனக்கூட்டங்களில்லாததும், நிலம், தோட்டம் இவைகளில்லாததும், மேடுபள்ளமுமாயும், பெரும் குழிகளையுள்ளதுமான வனத்தில் இப்பொழுதுதான் ப்ரவேசிக்கப்போகிறாள்; ஆதலால் வனவாஸ கஷ்டம் இப்பொழுதுதான் ஸீதைக்குத் தெரியப்போகிறது.

99. (பொ - ரை) இவ்வாறு, ஸ்ரீராமன் சொல்லியதைக்கேட்டு, இலக்குமணன் முன்னே புறப்பட்டார். அவர் பின்னால் ஸீதையும், அவள் பின்னால் ரகு குலத்து குமாரரான ஸ்ரீராகவனும் புறப்பட்டார்.

गतं तु गङ्गापरपारमाशु रामं सुमन्त्रः प्रततं निरीक्ष्य ।
अध्वप्रकर्षाद्विनिवृत्तदृष्टिर्मुमोच बाष्पं व्यथितस्तपस्वी ॥ 100 ॥
स लोकपालप्रतिमप्रभाववांस्तीर्त्वा महात्मा वरदो महानदीम् ।
ततः समृद्धाञ्छुभसस्यमालिनः क्रमेण वत्सान्मुदितानुपागमत् ॥ 101 ॥

100. (ப - ரை) **आशु** - சீக்கிரமாக, **गङ्गापरपारं** - கங்கையின் அக்கரையை, **गतं** - அடைந்திருக்கிற, **रामं तु** - ராமனை, **सुमन्त्रः** - ஸுமந்த்ரரானவர், **प्रततं** - இடைவிடாமல், **निरीक्ष्य** - பார்த்துக்கொண்டிருந்து, **अध्वप्रकर्षात्** - மார்க்கம் தூரமாகிவிட்டபடியால், **विनिवृत्तदृष्टिः** - திரும்பிய கண்களையுடையவராய், **व्यथितः** - துக்கமுடையவராய், **तपस्वी** - ஸந்தாபமுடையவராய், **बाष्पं** - கண்ணீரை, **मुमोच** - விட்டார்.

101. (ப - ரை) **लोकपालप्रतिमप्रभाववान्** - லோகபாலர்களுக்கு ஸமானமான ப்ரபாவத்தையுடையவரும், **वरदः** - வேண்டியவரங்களைக் கொடுக்கின்றவரும், **महात्मा** - மஹாத்மாவுமான, **सः** - அந்த ஸ்ரீராமன், **महानदीम्** - பெரிய நதியை, **तीर्त्वा** - தாண்டி, **ततः** - பிறகு, **समृद्धान्** - செழிப்புள்ளதாயும், **शुभ सस्यमालिनः** - அழகான பயிர்களின் வரிசையை யுடையதாயும், **मुदितान्** - ஸந்தோஷமுடைய ஜனங்களுள்ளதாயுமிருக்கிற, **वत्सान्** - வத்ஸ தேசங்களை, **क्रमेण** - க்ரமமாக, **उपागमत्** - அடைந்தார்.

100. (பொ - ரை) சீக்கிரமாக கங்கையின் அக்கரை போய்ச் சேர்ந்த ராமனை, ஸுமந்த்ரர் இடைவிடாமல் பார்த்துக்கொண்டே யிருந்து ஸ்ரீராமன் வெகுதூரம் போய்விட்டபடியால் பார்ப்பதையும் நிறுத்திவிட்டு, மிகவும் துக்கமுடையவராய் மனக்கொதிப்புடன் கண்களில் நீரைப் பெருக்கினார்.

101. (பொ - ரை) இந்திராதி லோகபாலர்களுக்கு ஸமானமான ப்ரபாவமுடையவராய் வேண்டிய வரங்களைக் கொடுக்கின்றவராய் மஹா ப்ரபாவமுடையவருமான அந்த ஸ்ரீராமன், கங்கா நதியைத் தாண்டி, பிறகு, செழிப்புடையதாய், அழகான பயிர்களையுடைய விளை நிலங்களையுடையதாய், மிகவும் ஸந்தோஷமுடைய ஜனங்களையுடையதுமான வத்ஸ தேசத்திற்கு க்ரமமாகப் போய்ச் சேர்ந்தார்.

तौ तत्र हत्वा चतुरो महामृगान्वराहमृश्यं पृषतं महारुरुम् ।
आदाय मेध्यं त्वरितं बुभुक्षितौ वासाय काले ययतुर्वनस्पतिम् ॥ 102 ॥

**इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे द्विपञ्चाशः सर्गः ॥ 52 ॥**

102. (ப - ரை) **तौ** - அந்த ராம லக்ஷ்மணர்கள், **बुभुक्षितौ** (**सन्तौ**) - பசியுடையவர்களாய், **तत्र** - அங்கு, **मेध्यं** - பரிசுத்தமான, **वराहं** - பன்றி, **ऋश्यं** - சமரி மான், **पृषतं** - கலைமான், **महारुरुम्** - கருப்பு மான் என்கிற, **चतुरः** - நான்கு, **महामृगान्** - பெரிய ம்ருகங்களை, **हत्वा** - கொன்று, **आदाय** - எடுத்துக்கொண்டு, **काले** - ஸாயங்காலத்தில், **वासाय** - வஸிப்பதற்கு, **त्वरितं** - சீக்கிரமாக, **वनस्पतिम्** - ஓர் மரத்தை, **ययतुः** - அடைந்தார்கள்.

102. (பொ - ரை) அந்த ராமலக்ஷ்மணர்களிருவரும் ஸீதையை ஓர் மரத்து அடியில் உட்காரவைத்து விட்டு, மாம்ஸம் கொண்டுவருவதற்காக வனத்திற்குச் சென்று அங்கு பன்றி, சமரிமான், கலைமான், மஹாருரு என்கிற யாகார்ஹமான நான்கு பெரிய ம்ருகங்களை அடித்து எடுத்துக்கொண்டு மிகவும் பசியுடன் ஸாயங்காலத்தில் வஸிப்பதற்காக ஸீதை உட்கார்ந்திருக்கும் மரத்து அடிக்குச் சென்று விட்டார்கள்.

त्रिपञ्चाशः सर्गः ॥ 53 ॥

स तं वृक्षं समासाद्य संध्यामन्वास्य पश्चिमाम् ।
रामो रमयतां श्रेष्ठः इति होवाच लक्ष्मणम् ॥ 1 ॥

अद्येयं प्रथमा रात्रिर्याता जनपदाद्बहिः ।
या सुमन्त्रेण रहिता तां नोत्कण्ठितुमर्हसि ॥ 2 ॥

जागर्तव्यमतन्द्रिभ्यामद्यप्रभृति रात्रिषु ।
योगक्षेमं हि सीताया वर्तते लक्ष्मणावयोः ॥ 3 ॥

---

1. (ப - ரை) **रमयतां** - ஸந்தோஷப்படுத்துகிறவர்களுக்குள், **श्रेष्ठः** - சிறந்தவரான, **सः रामः** - அந்த ராமன், **तं वृक्षं** - அந்த மரத்தை, **समासाद्य** - அடைந்து, **पश्चिमां संध्यां** - ஸாயம் ஸந்தியை, **अन्वास्य** - உபாஸனம் செய்துவிட்டு, **लक्ष्मणम्** - இலக்குமணனைப் பார்த்து, **इति** - இவ்விதம், **उवाच ह** - சொன்னார்.

2. (ப - ரை) **इयं** - இந்த, **प्रथमा रात्रिः** - முதல் இரவானது, **जनपदात् बहिः** - தேசத்திற்கு வெளியில், **याता** - வந்து விட்டது. **या** - யாதொரு இரவானது, **सुमन्त्रेण** - ஸுமந்த்ரரால், **रहिता** - பிரிந்திருக்கிறதோ, **तां** - அந்த இரவை, **अद्य** - இப்பொழுது, **उत्कण्ठितुं** - துக்கப்படுவதற்கு, **न अर्हसि** - தகுந்தனவல்ல.

3. (ப - ரை) **हे लक्ष्मण** - இலக்குமணா! **अद्यप्रभृति** - இன்று முதல், **रात्रिषु** - ராத்ரிகளில், **अतन्द्रिभ्यां** - சோம்பலில்லாதவர்களாய், **जागर्तव्यं** - விழித்திருக்க வேண்டியது. **हि** - ஏனென்றால், **सीतायाः** - ஸீதையினுடைய, **योगक्षेमं** - ரக்ஷணமானது, **आवयोः** - நம்மிருவர்களிடத்திலும், **वर्तते** - இருக்கின்றது.

1. (பொ - ரை) மநிதர்களுக்கு ஸந்தோஷத்தை செய்பவர்களில் சிறந்தவரான அந்த ஸ்ரீராமன், அந்த மரத்து அடியில் சேர்ந்து ஸாயம் ஸந்தியாவந்தனம் செய்துவிட்டு, இலக்குமணனைப் பார்த்து மேல் வருமாறு சொன்னார்.

2. (பொ - ரை) நாம் வனவாஸம் செய்ய ஆரம்பித்ததில் முதல் இரவு இன்று தேசத்திற்கு வெளியில் நேர்ந்திருக்கிறது. ஸுமந்த்ரரும் இல்லாமலிருக்கிறார். ஆதலால் பட்டணத்தையும், பந்து ஜனங்களையும் விட்டுவிட்டோமே யென்று நீ மனதில் வருத்தப்பட வேண்டாம்.

3. (பொ - ரை) இலக்குமணா! நாம் இன்றுமுதல் இராக்காலங்களில் சோம்பலில்லாமல் விழித்திருக்கவேண்டும். ஏனென்றால் ஸீதையை காப்பாற்றுவது நம்மிருவர்களுடைய ஸ்வாதீனமல்லவா.

रात्रिं कथंचिदेवेमां सौमित्रे वर्तयामहे ।
उपावर्तामहे भूमावास्तीर्य स्वयमार्जितैः ॥ 4 ॥

स तु संविश्य मेदिन्यां महार्हशयनोचितः ।
इमाः सौमित्रये रामो व्याजहार कथाः शुभाः ॥ 5 ॥

ध्रुवमद्य महाराजो दु:खं स्वपिति लक्ष्मण ।
कृतकामा तु कैकेयी तुष्टा भवितुमर्हति ॥ 6 ॥

4. (ப - ரை) हे **सौमित्रे** - இலக்குமணா! **इमां रात्रिं** - இந்த இரவை, **कथंचित् एव** - கொஞ்சம் ச்ரமப்பட்டாவது, **वर्तयामहे** - இருந்து விடுவோம், **स्वयं** - தானாகவே, **आर्जितैः** - ஸம்பாதிக்கப்பட்ட (தழை முதலியவைகளால்), **भूमौ** - பூமியில், **आस्तीर्य** - பரப்பி, **उपावर्तामहे** - படுத்துக்கொள்ளுவோம்.

5. (ப - ரை) **महार्हशयनोचितः** - மிகவும் ச்ரேஷ்டமான படுக்கையில் படுத்துக் கொள்ளத் தகுந்தவரான, **सः रामः तु** - அந்த ஸ்ரீராமனோ வென்றால், **मेदिन्यां** - பூமியில், **संविश्य** - படுத்துக்கொள்ள நினைத்துக்கொண்டு, **सौमित्रये** - இலக்குமணன் பொருட்டு, **इमाः** - இந்த, **शुभाः** - அழகான, **कथाः** - கதைகளை, **व्याजहार** - சொல்லத் துடங்கினார்.

6. (ப - ரை) **लक्ष्मण** - இலக்குமணா! **अद्य** - இப்பொழுது, **महाराजः** - தசரத மஹாராஜரானவர், **दुःखं** - துக்கமாக, **स्वपिति** - தூங்குகிறார். **ध्रुवं** - நிச்சயம். **कैकेयी तु** - கைகேயியோ வென்றால், **कृतकामा** - ஆசைப்பட்டது முடிந்தவளாய், **तुष्टा** - ஸந்தோஷமுடையவளாக, **भवितुं** - ஆவதற்கு, **अर्हति** - தகுந்தவள்.

4. (பொ - ரை) இலக்குமணா! படுக்கை முதலியவைகள் ஸம்பாதிக்க காலமில்லாதபடியால் இந்த இரவில் எப்படியாவது இருந்துவிடுவோம். நாமே ச்ரமப்பட்டு ஸம்பாதித்த தழை முதலியவைகளை பூமியில் பரப்பி அதிலே படுத்துக்கொண்டு விடுவோம்.

5. (பொ - ரை) மிகவும் விலைபெற்ற உத்தமமான படுக்கையில் படுத்துக் கொள்ளத் தகுந்தவரான அந்த ஸ்ரீராமன், தரையில் படுத்துக்கொள்ள ஸங்கல்பித்துக்கொண்டு, இலக்குமணனைப் பார்த்து மேல் வருமாறு அழகான சில வார்த்தைகளைச் சொன்னார்.

6. (பொ - ரை) இலக்குமணா! இப்பொழுது மஹாராஜர் வருத்தத்துடன் தூங்குகிறார். இது நிச்சயம். கைகேயியானவள் தான் எண்ணியபடி காரியம் நிறைவேறியபடியால் ஸந்தோஷமுடையவளாக இருக்கவேண்டும்.

सा हि देवी महाराजं कैकेयी राज्यकारणात् ।
अपि न च्यावयेत्प्राणान्दृष्ट्वा भरतमागतम् ॥ 7 ॥

अनाथश्च हि वृद्धश्च मया चैव विनाकृतः ।
किं करिष्यति कामात्मा कैकेयीवशमागतः ॥ 8 ॥

इदं व्यसनमालोक्य राज्ञश्च मतिविभ्रमम् ।
काम एवार्थधर्माभ्यां गरीयानिति मे मतिः ॥ 9 ॥

7. (ப - ரை) **सा** - அந்த, **कैकेयी देवी** - கைகேயி தேவியானவள், **राज्यकारणात्** - ராஜ்யத்திற்காக, **भरतं आगतं** - பரதன் வந்திருக்கிறதை, **दृष्ट्वा** - பார்த்து, **महाराजं** - மஹாராஜரை, **प्राणान्** - ப்ராணன்களை, **अपि न च्यावयेत्** - நழுவும்படி செய்யாமல் இருக்கவேண்டுமே.

8. (ப - ரை) **अनाथः च** - அநாதராயும், **वृद्धः च** - கிழவராயும், **मया च एव** - என்னால், **विनाकृतः** - பிரிந்தவருமா், **कामात्मा** - காமஸ்வபாவமுள்ளவரும், **कैकेयी वशं** - கைகேயியின் ஸ்வாதீனத்தை, **आगतः** - அடைந்தவருமான, (**महाराजः** - மஹாராஜர்) **किं करिष्यति** - என்ன செய்வாரோ.

9. (ப - ரை) **इदं** - இந்த, **व्यसनं** - (எனது) கஷ்டத்தையும், **राज्ञः** - அரசனுடைய, **मति विभ्रमम् च** - புத்தியின் ப்ரமத்தையும், **आलोक्य** - பார்த்து, **अर्थ धर्माभ्यां** - அர்த்தத்தையும், தர்மத்தையும் காட்டில், **काम एव** - காமம் தான், **गरीयान्** - மிகவும் பெரியது, **इति** - என்று, **मे मतिः** - என்னுடைய அபிப்ராயம.

7. (பொ - ரை) அந்த கைகேயிதேவி, ராஜ்யத்தை உறுதிப்படுத்திக் கொள்ளுவதற்காக பரதன் வந்திருப்பதை அறிந்துகொண்டு மஹாராஜருடைய ப்ராணனை போக்காமலிருப்பாளா!

8. (பொ - ரை) நம் மஹாராஜர் அநாதராயும், கிழவராயுமிருக்கிறார். அத்துடன் என்னையும் விட்டுப் பிரிந்திருக்கிறார். காமஸ்வபாவமுள்ளவர். இப்பொழுது கைகேயியின் வசத்தில் அகப்பட்டுக்கொண்டு என்ன செய்வாரோ.

9. (பொ - ரை) எனக்கு நேர்ந்த இந்த கஷ்டத்தையும், அரசன் அர்த்த தர்மங்களை விட்டு, காம புருஷார்த்தத்தை கைக்கொள்ளுகையாகிற இந்த புத்திப்ரமத்தையும் பார்த்து, அர்த்தம், தர்மம் இவைகளைவிட, காம புருஷார்த்தமே மேலானதென்று நான் எண்ணுகிறேன்.

को ह्यविद्वानपि पुमान्प्रमदायाः कृते त्यजेत् ।
छन्दानुवर्तिनं पुत्रं तातो मामिव लक्ष्मण ॥ 10 ॥

सुखी बत सभार्यश्च भरतः कैकयीसुतः ।
मुदितान्कोसलानेको यो भोक्ष्यत्यधिराजवत् ॥ 11 ॥

स हि सर्वस्य राज्यस्य मुखमेकं भविष्यति ।
ताते च वयसाऽतीते मयि चारण्यमास्थिते ॥ 12 ॥

10. (ப - ரை) **लक्ष्मण** - இலக்குமணா! **अविद्वान् अपि** - மூடனாயிருந்த போதிலும், **कः पुमान्** - எந்த புருஷன்தான், **तातः** - என் பிதா, **मां इव** - என்னை (விட்டது) போல, **छन्दानुवर्तिनं** - தன் எண்ணப்படி நடக்கிற, **पुत्रं** - பிள்ளையை, **प्रमदायाः कृते** - ஒரு ஸ்த்ரீயின் காரணமாக, **त्यजेत्** - விட்டுவிடுவன்.

11. (ப - ரை) **मुदितान्** - ஸந்தோஷமுள்ள ஜனங்களையுடைய, **कोसलान्** - கோஸல தேசங்களை, **यः** - யாதொருவன், **एकः** - ஒருவனாயிருந்து, **अधिराजवत्** - பெரிய அரசன்போல், **भोक्ष्यति** - ஆளப்போகிறானோ, **कैकयीसुतः** - கைகேயியின் புத்திரனை, **सभार्यः च** - பார்யையுடன் கூடிய, **(सः) भरतः** - அந்த பரதன், **सुखी** - ஸுகமுள்ளவன், **बत** - ஸந்தோஷம்.

12. (ப - ரை) **ताते च** - தகப்பனாரும், **वयसा अतीते** - வயது சென்றவராயும், **मयि च** - நானும், **अरण्यं** - அரண்யத்தை, **आस्थिते (सति)** - அடைந்தவனாயும் இருக்குமளவில், **स हि** - அவன்தான், **सर्वस्य राज्यस्य** - ராஜ்யம் முழுவதற்கும், **एकं मुखं** - ஒரு முகமாக, (ப்ரதானமாக) **भविष्यति** - ஆகப்போகிறான்.

10. (பொ - ரை) இலக்குமணா! மிகவும் மூடனாயிருந்தாலும் எந்த புருடன் தான், நம் பிதா என்னை விட்டுவிட்டதுபோல், தன்னுடைய இஷ்டப்படி நடந்து வருகிற புத்திரனை ஒரு ஸ்த்ரீயின் வார்த்தைக்காக விட்டுவிடுவன்.

11. (பொ - ரை) மிகவும் ஸந்தோஷமுள்ள கோஸல தேசங்களை தான் ஒருவனாகவேயிருந்து மேலான அரசன்போல் ஆளப்போகின்ற கைகேயியின் புத்திரனை அந்த பரதன் ஒருவன் தான் பார்யையுடன் கூட ஸுகப்படுகிறவன்.

12. (பொ - ரை) பிதாவும் வயது சென்றவராய், நானும் அரண்யம் போயிருக்கும் காலத்தில், அந்த பரதன் தான் ராஜ்யம் முழுவதற்கும் ப்ரதானமான அரசனாகப்போகிறான்.

अर्थधर्मौ परित्यज्य यः काममनुवर्तते ।
एवमापद्यते क्षिप्रं राजा दशरथो यथा ॥ 13 ॥

मन्ये दशरथान्ताय मम प्रव्राजनाय च ।
कैकेयी सौम्य संप्राप्ता राज्याय भरतस्य च ॥ 14 ॥

अपीदानीं न कैकेयी सौभाग्यमदमोहिता ।
कौसल्यां च सुमित्रां च संप्रबाधेत मत्कृते ॥ 15 ॥

13. (ப - ரை) **यः** - யாதொருவன், **अर्थधर्मौ** - அர்த்தத்தையும், தர்மத்தையும், **परित्यज्य** - விட்டுவிட்டு, **कामं** - காமம் ஒன்றையே, **अनुवर्तते** - அநுஸரிக்கின்றானோ, (**सः** - அவன், **दशरथः राजा यथा** - தசரத மஹாராஜரைப்போல், **एवं** - இவ்வாறு, **क्षिप्रं** - சீக்கிரமாக, **आपद्यते** - ஆபத்தை அடைகின்றான்.

14. (ப - ரை) **हे सौम्य** - ஸௌமுகனான இலக்குமணா! **दशरथ अन्ताय** - தசரதருடைய முடிவிற்காகவும், **मम** - என்னுடைய, **प्रव्राजनाय च** - வனவாஸத்திற்காகவும், **भरतस्य** - பரதனுடைய, **राज्याय च** - ராஜ்யத்திற்காகவும், **कैकेयी** - கைகேயியானவள், **संप्राप्ता** - வந்திருக்கிறாள், (**इति** - என்று, **मन्ये** - எண்ணுகிறேன்.

15. (ப - ரை) **कैकेयी** - கைகேயியானவள், **सौभाग्यमदमोहिता (सती)** - தான் சிறந்த பாக்யமுடையவள் என்கிற கர்வத்தினால் மோஹமடைந்தவளாய், **कौसल्यां च** - கௌஸல்யையையும், **सुमित्रां च** - ஸுமித்ரையையும், **मत्कृते** - எனக்காக, **इदानीं** - இப்பொழுது, **अपि न संप्रबाधेत** - பீடிக்காமலிருப்பாளா.

13. (பொ - ரை) யாதொருவன், அறம், பொருள், இன்பம் என்ற மூன்று புருஷார்த்தங்களில், அறம், பொருள் இவைகளைத் தள்ளிவிட்டு, இன்பத்தை மாத்திரம் அநுஸரிக்கின்றானோ, அவன் நம் பிதாவான தசரதமஹாராஜரைப்போல், சீக்கிரமாக ஆபத்தை அடைந்துவிடுவான்.

14. (பொ - ரை) அப்பா இலக்குமணா! தசரதரை அழிப்பதற்காகவும், என்னைக் காட்டிற்குத் துரத்துவதற்காகவும், பரதனுக்கு ராஜ்யத்தை வாங்கிக்கொடுப்பதற்காகவும் கைகேயி நம்ம வம்சத்திற்கு வந்தாளென்று நினைக்கிறேன்.

15. (பொ - ரை) அப்பா! கைகேயி தான் மிகவும் பாக்யமுடையவள் என்ற மதங்கொண்டு மோஹமடைந்து கௌஸல்யா தேவியையும், ஸுமித்ரா தேவியையும் நமக்காக இப்பொழுது பீடிக்காமலிருப்பாளா.

मा स्म मत्कारणाद्देवी सुमित्रा दुःखमावसेत् ।
अयोध्यामित एव त्वं काल्ये प्रविश लक्ष्मण ॥ 16 ॥

अहमेको गमिष्यामि सीतया सह दण्डकान् ।
अनाथाया हि नाथस्त्वं कौसल्याया भविष्यसि ॥ 17 ॥

क्षुद्रकर्मा हि कैकेयी द्वेष्यमन्याय्यमाचरेत् ।
परिदद्या हि धर्मज्ञे भरते मम मातरम् ॥ 18 ॥

16. (ப - ரை) **हे लक्ष्मण** - இலக்குமணா! **सुमित्रा देवी** - ஸுமித்ராதேவி யானவள், **मत्कारणात्** - என்னுடைய நிமித்தமாக, **दुःखं** - துக்கப்பட்டுக்கொண்டு, **मा स्म आवसेत्** - இருக்கவேண்டாம். (**अतः** - ஆதலால்), **त्वं** - நீ, **इतः एव** - இங்கிருந்தே, **काल्ये** - காலையில், **अयोध्यां** - அயோத்யா நகரத்தை, **प्रविश** - ப்ரவேசிக்க வேண்டும்.

17. (ப - ரை) **अहं एकः** - நான் ஒருவனே, **सीतया सह** - ஸீதையுடன் கூட, **दण्डकान्** - தண்டகா வனங்களைக் குறித்து, **गमिष्यामि** - போகப்போகிறேன். **अनाथायाः** - ரக்ஷகனில்லாமலிருக்கிற, **कौसल्यायाः** - கௌஸல்யா தேவிக்கு, **त्वं** - நீ, **नाथः** - ரக்ஷகனாக, **भविष्यसि** - ஆவாய்.

18. (ப - ரை) **क्षुद्रकर्मा** - இழிவான கார்யத்தையுடைய, **कैकेयी** - கைகேயி, **द्वेष्यं** - த்வேஷத்திற்குத் தகுந்த, **अन्याय्यं** - ந்யாயமல்லாத கார்யத்தை, **आचरेत्** - செய்வாள். (**तस्मात्** - ஆதலால் ; **धर्मज्ञे** - தர்மம் தெரிந்தவனான, **भरते** - பரதனிடத்தில், **मम** - என்னுடைய, **मातरम्** - தாயாரை, **परिदद्याः हि** - காப்பாற்றுவதற்காக

16. (பொ - ரை) இலக்குமணா! உன் தாயாரான ஸுமித்ராதேவி எனக்காக என் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கவேண்டும், ஆதலால் நீ, இங்கிருந்தே புறப்பட்டு அயோத்திமாநகரம் போய் சேர்ந்துவிடு.

17. (பொ - ரை) நான் ஒருவனே ஸீதையுடன்கூட தண்டகாவனம் போகிறேன். ரக்ஷகனில்லாத கௌஸல்யா தேவிக்கும் நீ ரக்ஷகனாக இருக்கலாம்.

18. (பொ - ரை) கைகேயி மிகவும் அல்பமான கார்யங்களைச் செய்யும் ஸ்வபாவமுடையவளாகையால் என் தாயாரிடத்தில் அவள் வைத்திருக்கிற த்வேஷத்திற்குத் தக்கபடி அவமதிப்பு முதலான அக்ரமங்களைச் செய்வாள். ஆதலால் அவைகளொன்றும் நேராமலிருக்கும்படி தர்மத்தின் அருமையை அறிந்தவனான பரதனிடத்தில் என் தாயாரை பரிபாலிக்கும்படி நீ ஒப்பித்துவிடு.

नूनं जात्यन्तरे कस्मिन्स्त्रियः पुत्रैर्वियोजिताः ।
जनन्या मम सौमित्रे तस्मादेतदुपस्थितम् ॥ 19 ॥

मया हि चिरपुष्टेन दुःखसंवर्धितेन च ।
विप्रायुज्यत कौसल्या फलकाले धिगस्तु माम् ॥ 20 ॥

मा स्म सीमन्तिनी काचिज्जनयेत्पुत्रमीदृशम् ।
सौमित्रे योऽहमम्बाया दद्मि शोकमनन्तकम् ॥ 21 ॥

19. ப - ரை) **हे सौमित्रे** - இலக்ஷ்மணா! **कस्मिन् जात्यन्तरे** - எதோ ஒரு ஜன்மத்தில், **मम जनन्या** - என் தாயாரால், **स्त्रियः** - ஸ்த்ரீகள், **पुत्रैः** - பிள்ளைகளால், **वियोजिताः** - பிரிக்கப்பட்டிருக்க வேண்டும். **नूनं** - இது நிச்சயம். **तस्मात्** - அதினால், **एतत्** - இது, **उपस्थितम्** - நேர்ந்திருக்கிறது.

20. ப - ரை **चिरपुष्टेन** - வெகுநாளாக போஷிக்கப்பட்டும், **दुःख संवर्धितेन च** - வருந்தப்பட்டு வளர்த்தப்பட்டிருக்கிற **मया** - என்னாலே, **कौसल्या** - கௌஸல்யா தேவியானவள், **फलकाले** - பலர் அனுபவிக்குங்காலத்தில், **विप्रायुज्यत** - விட்டுப் பிரியப்பட்டாள். **माम्** - எனக்கு, **धिक्** - நிந்தையானது, **अस्तु** - உண்டாகட்டும்.

21. ப - ரை **हे सौमित्रे** - இலக்ஷ்மணா! **यः अहं** - யாதொரு நான், **अम्बायाः** - மாதாவுக்கு, **अनन्तकम्** - முடிவில்லாத, **शोकं** - துக்கத்தை, **दद्मि** - கொடுக்கிறேனோ, **ईदृशं पुत्रं** - இப்படிப்பட்ட பிள்ளையை, **काचित् सीमन्तिनी** - ஒரு ஸ்த்ரீயும், **मा स्म जनयेत्** - பெறாதிருக்கவே

19. பொ - ரை இலக்ஷ்மணா! என் தாயார் எதோ ஒரு ஜன்மத்தில் தாய்மார்களை விட்டு பிள்ளைகளைப் பிரித்திருக்கவேண்டும். இது நிச்சயம். அதனால் தான் அவள் இவ்வாறு என்னைப் பிரிந்திருக்கும்படி நேர்ந்திருக்கிறது.

20. பொ - ரை) என் தாயாரான கௌஸல்யை வெகு நாளாக கஷ்டப்பட்டு வளர்த்தின என்னை, புத்திரன் பிறந்ததின் ப்ரயோஜனமான சுச்ரூஷை செய்யுங்காலத்தில் என்னைவிட்டுப் பிரிந்துவிட்டாள். ஆகலால் என்னை நிந்திக்கவேண்டும்.

21. பொ - ரை) இலக்ஷ்மணா! மாதாவுக்கு அளவில்லாத துக்கத்தைக் கொடுக்கின்ற என்னைப்போன்ற பிள்ளையை உலகத்தில் ஒரு ஸ்த்ரீயும் பெற்றிருக்கவே மாட்டாள்.

मन्ये प्रीतिविशिष्टा सा मत्तो लक्ष्मण शारिका ।
यस्यास्तच्छ्रूयते वाक्यं शुक पादमरेर्दश ॥ 22 ॥

22. (ப - ரை) **हे लक्ष्मण** - இலக்குமணா! **सा शारिका** - அந்த சாரிகை யானது (பெண் பக்ஷி) **मत्तः** - என்னைக்காட்டிலும், **प्रीतिविशिष्टा** - (கௌஸல்யை யினிடத்தில்) அதிகமான ப்ரீதியுள்ளது (**इति** - என்று), **मन्ये** - நினைக்கின்றேன். **हे शुक** - கிளியே! **अरेः** - சத்ருவான பூனையினுடைய, **पादं** - காலை, **दश** - கடி, (**इति** - என்று), **यस्याः** - யாதொரு சாரிகையினுடைய, **तत् वाक्यं** - அந்த வார்த்தை யானது, **श्रूयते** - கேட்கப்படுகின்றதோ.

நம் தாயார் வளர்க்கின்ற திர்யக்ஜந்துவுக்கு நம் கௌஸல்யையி னிடத்தில் இருக்கிற ப்ரீதிகூட எனக்கு இல்லாமல் போய்விட்டது என்கிறார்.

22. (பொ - ரை) இலக்குமணா! நம் கௌஸல்யையின் க்ருஹத்தில் வளர்க் கப்பட்டு வருகிற சாரிகை என்னும் பக்ஷி என்னைவிட கௌஸல்யையினிடத்தில் அதிகமான அன்புடையது என்று நினைக்கிறேன். ஏனென்றால் அந்த பக்ஷி தன் னோடுகூட இருக்கிற கிளியைப்பார்த்து சத்ருவான பூனையின் காலை கடி என்று சொல்லுகின்றதை நாம் அடிக்கடி கேட்டிருந்ததில்லையா. ஆதலால் கௌஸல்யை என்னையும் அந்த பக்ஷியையும் வளர்த்திருக்க அந்த சாரிகை சொல்லுவதுபோல் சத்ருவைத் தள்ளவேணுமென்கிற வார்த்தைகூட சொல்லாமலிருக்கிற என்னுடைய ஜன்மம் வீண் என்று தாத்பர்யம். இந்த ப்ரகரணத்தினால் பகவானை ஆச்ரயிப் பதைக்காட்டிலும் ஆசார்யனை ஆச்ரயிப்பது ஸுலபமான உபாயம் என்று காட்டப் படுகிறது. அதாவது:—சாரிகா பெண் பக்ஷி, பக்ஷிகள் உயரப் பரப்பதற்கு இரண்டு இரக்கைகள் வேண்டியதாகையால், ஜ்ஞான, கர்ம என்கிற இரண்டு ஸாத னத்தை உடைய ஆசார்யனைக் குறிக்கிறது. ஸ்த்ரீ லிங்கத்தினால் "**स्त्रीप्रायमितरत्सर्वं**" என்று சொல்லப்பட்ட பகவத் பாரதந்த்ர்யம் சொல்லப்படுகிறது. ஆசார்யன் பகவானைவிட மோக்ஷானந்தத்தைக் கொடுப்பதில் மேலானவர். அதாவது, ஸுகர மான உபாயமென்றபடி. அப்படிப்பட்ட ஆசார்யன் யார் என்றால் அதை சொல்லு கிறது மேல். **यस्याः** - யாதொரு ஆசார்யனிடத்திலிருந்து, **तत्**-அப்படிப்பட்ட, **वाक्यं** - வாக்யமானது, பகவான் முதல் குருபரம்பரையினால் க்ரமமாக உபதேசம் பெற்ற ரஹஸ்ய மந்த்ர ரூபமான வாக்யமென்றபடி. **हे शुक**-கிளிக்கு ஸமான மான வர்ணமுடைய பகவானே, **अरेः** - விரோதியான ஸம்ஸாரத்திற்கு, **पादं** - ஆதார மான அஹங்கார மமகாரங்களை, **दश** - கழிக்கவேண்டும் என்கிற இவ்விதமான வாக் யம் ஆசார்யரிடமிருந்து சிஷ்யர்களால் கேட்கப்படுகிறபடியால் அந்த ஆசார்யன் என்னைவிட மேலானவன் என்று பகவானுடைய அபிப்ராயம். இந்த ப்ரகரணத் தினாலும், இவ்வாறு அர்த்தம் தோன்றுகின்றது. அயோத்யை என்கிற வைகுண்டத் திலிருந்து புறப்பட்டு விரஜா நதியைத்தாண்டி ஸம்ஸாரமாகிற வனத்தில் ப்ரவேசித்து ஜீவனோடுகூட சரீரமென்னும் ஒரு வ்ருக்ஷத்தில் வஸித்து கர்ம பலத்தை ஜீவனுக்கு அனுபவிக்கக் கொடுத்து, தான் அவ்வாறு அனுபவிக்காமல் ஸ்வானுபவத்தை இழந்த நித்யஸூரிகளை எப்பொழுது பார்க்கப்போகிறோம் என்று பேராசைகொண்டு தாம் ஸம்ஸாரிகளிடத்தில் வந்த ப்ரயோஜனத்தையும் அடையாமல் சரமோபாயமான ஆசார்ய ஸமாச்ரயணத்தையே மேலாக தீர்மானித்தார் என்று சொல்லப்படுகிறது.

शोचन्त्या अल्पभाग्याया न किंचिदुपकुर्वता ।
पुत्रेण किमपुत्राया मया कार्यमरिंदम ॥ 23 ॥

अल्पभाग्या हि मे माता कौसल्या रहिता मया ।
शेते परमदुःखार्ता पतिता शोकसागरे ॥ 24 ॥

एको ह्यहमयोध्यां च पृथिवीं चापि लक्ष्मण ।
तरेयमिषुभिः क्रुद्धो ननु वीर्यमकारणम् ॥ 25 ॥

---

23. ப-ரை. **हे अरिन्दम** - சத்ருக்களை அடக்குகின்றவனே! **अल्पभाग्यायाः** - அல்பமான பாக்ய முடையவளாய், **अपुत्रायाः** - புத்திரனைப் பெற்ற ப்ரயோஜன மில்லாதவளாய், **शोचन्त्याः** - துக்கப்பட்டுக்கொண்டிருக்கிற தாயாருக்கு, **किंचित् अपि** - கொஞ்சமும், **न उपकुर्वता** - உபகாரம் செய்யாதவனான, **पुत्रेण मया** - புத்திரனான என்னால், **किं कार्यं** - என்ன ப்ரயோஜனம்.

24. ப-ரை. **मे माता** - என் தாயாரான, **कौसल्या** - கௌஸல்யையானவள், **अल्पभाग्या** - அல்பமான அத்ருஷ்ட முடையவள், **हि** - ஏனென்றால், **मया** - என்னால், **रहिता** - விட்டுப் பிரிந்தவளாய், **परमदुःखार्ता** - மிகவும் துக்கத்தினால் பீடிக்கப்பட்டு, **शोकसागरे** - துக்கக்கடலில், **पतिता** - விழுந்தவளாய், **शेते** - படுத்திருக்கின்றாள்.

25. ப-ரை. **हे लक्ष्मण** - இலக்குமணா! **अहं** - நான் **क्रुद्धः** - கோபங்கொண்டவனாய், **एको हि** - ஒருவனாகவே, **अयोध्यां च** - அயோத்திமா நகரத்தையும், **पृथिवीं चापि** - பூலோகத்தையும், **इषुभिः** - பாணங்களினால், **तरेयं** - தாண்டுவேன் (ஸ்வாதீனம் செய்து கொள்ளுவேன்). **वीर्यं** - ஸாமர்த்யமானது, **अकारणं ननु** - காரணமில்லாமல் இருக்கக் கூடாதல்லவா.

---

23. பொ-ரை. சத்ருக்களை வெல்லக்கூடிய இலக்குமணா! அல்ப பாக்ய முடையவளாய் புத்திரனைப் பெற்ற ப்ரயோஜனத்தை இழந்தவளாய் அதனால் எப்பொழுதும் வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிற என் தாயாருக்கு ஒரு உபகாரமும் செய்யாத நான், பிள்ளையாகப் பிறந்து என்ன ப்ரயோஜனம்.

24. (பொ-ரை. என் தாயாரான கௌஸல்யாதேவி மிகவும் அல்பமான பாக்யமுடையவள். ஏனென்றால் என்னை விட்டுப்பிரிந்து அதிகமான துக்கத்தினால் பீடிக்கப்பட்டு, துக்கமாகிற ஸமுத்திரத்தில் முழுகியிருக்கிறாள்.

25. (பொ-ரை) இலக்குமணா! எனக்குக் கோபம் வந்துவிட்டால் ஒருவனாகவே இந்த அயோத்திமா நகரத்தையும், பூமண்டலம் முழுவதையும் பாணங்களினால் ஸ்வாதீனம் செய்துகொண்டு விடுவேன். ஆகிலும், தர்மஹானியைச் செய்யக் கூடிய கார்யத்தில் நம்முடைய ஸாமர்த்யத்தை உபயோகப் படுத்தக் கூடாதல்லவா.

अधर्मभयभीतश्च परलोकस्य चानघ ।
तेन लक्ष्मण नाद्याहमात्मानमभिषेचये ॥ 26 ॥

एतदन्यच्च करुणं विलप्य विजने वने ।
अश्रुपूर्णमुखो रामो निशि तूष्णीमुपाविशत् ॥ 27 ॥

विलप्योपरतं रामं गतार्चिषमिवानलम् ।
समुद्रमिव निर्वेगमाश्वासयत लक्ष्मणः ॥ 28 ॥

---

26. (ப - ரை) **हे अनघ लक्ष्मण** - குற்றமில்லாத இலக்குமணா! **अहं** - நான், **अधर्मभयभीतः** - அதர்மத்தினாலுண்டான பயத்தினால், பயப்பட்டவனாயும், **परलोकस्य** - பரலோகத்தினுடைய, **नाशात्** - நாசத்திலிருந்தும், **भीतः** - பயப்பட்டிருக்கிறேன். **तेन** - அதனால், **अद्य** - இப்பொழுது, **आत्मानं** - என்னை, **न अभिषेचये** - பட்டாபிஷேகம் செய்து கொள்ளவில்லை.

27. (ப - ரை) **रामः** - ஸ்ரீராமன், **अश्रुपूर्णमुखः (सन्)** - கண்ணீர் நிறைந்த முகமுடையவராய், **एतत्** - இவ்வாறும், **अन्यच्च** - இன்னும் வேறு விதமாகவும், **विजने** - ஜனமில்லாத, **वने** - வனத்தில், **करुणं (यथा तथा)** - பரிதாபப்படும்படியாக, **विलप्य** - கதறி, **निशि** - இரவில், **तूष्णीं** - மௌனமாக, **उपाविशत्** - இருந்தார்.

28. (ப - ரை) **विलप्य** - அழுது, **उपरतं** - ஓய்ந்தவராய், (**अत एव** - ஆகையினால்) **गतार्चिषं** - ஜ்வாலை அடங்கிய, **अनलं इव स्थितं** - அக்நிபோன்றவராயும், **निर्वेगं** - வேகமடங்கிய, **समुद्रं इव** - ஸமுத்ரம் போன்றவராயுமிருக்கிற, **रामं** - ஸ்ரீராமனை, **लक्ष्मणः** - இலக்குமணன், **आश्वासयत** - ஸமாதானப்படுத்தினார்.

---

26. (பொ - ரை) குற்றமில்லாத இலக்குமணா! நான் அதர்மத்தினால் லோகாபவாதம் வந்துவிடுமென்றும், பரலோகமும் நமக்குக் கிடையாமல் போய்விடும் என்றும பயத்தினால் இப்பொழுது எனக்குப் பட்டாபிஷேகம் செய்து கொள்ளவில்லை.

27. (பொ - ரை) ஸ்ரீராமன், கண்ணீர் நிறைந்த முகமுடையவராய், முன் சொல்லிய விதமாகவும், இன்னும் வேறு விதமாகவும், ஜனஸஞ்சாரமில்லாத அந்த வனத்தில் கேட்டவர்களும், ஐயோ! என்று பரிதாபப்படும்படியாக அழுதுகொண்டு அன்று இரவில் ஒன்றும் பேசாமலிருந்து விட்டார்.

28. (பொ - ரை) இவ்வாறு கதறி ஓய்ந்து ஜ்வாலை அடங்கின அக்நி போலவும், அலை எறிந்து வேகமடங்கின ஸமுத்ரம் போன்று மிருக்கிற ஸ்ரீராமனுக்கு, இலக்குமணன் சில ஸமாதான வார்த்தைகளைச் சொன்னார்.

ध्रुवमद्य पुरी राजन्नयोध्याऽऽयुधिनां वर ।
निष्प्रभा त्वयि निष्क्रान्ते गतचन्द्रेव शर्वरी ॥ 29 ॥

नैतदौपयिकं राम यदिदं परितप्यसे ।
विषादयसि सीतां च मां चैव पुरुषर्षभ ॥ 30 ॥

न च सीता त्वया हीना न चाहमपि राघव ।
मुहूर्तमपि जीवावो जलान्मत्स्याविवोद्धृतौ ॥ 31 ॥

29. (ப - ரை) **हे राजन्** - ராஜனே! **आयुधिनां वर** - ஆயுதம் பிடித்தவர்களில் உத்தமரே! **त्वयि** நீர், **निष्क्रान्ते (सति)** - புறப்பட்டு வந்தவளவில், **अद्य** - இப்பொழுது, **अयोध्या पुरी** - அயோத்திமா நகரமானது, **गतचन्द्रा** - சந்திரனில்லாத, **शर्वरी इव** - இரவுபோல், **निष्प्रभा** - ஒளி இழந்ததாக, **भवेत्** - ஆய்விடும், **ध्रुवं** - நிச்சயம்.

30. (ப - ரை) **हे राम** - ராமா! **पुरुषर्षभ** - புருடோத்தமா! **त्वं** - நீர்), **परितप्यसे इति एत्** - வருத்தப்படுகிறீர் என்பது யாதொன்றுண்டோ, **सीतां च** - ஸீதையையும், **मां चैव** - என்னையும், **विषादयसि इति एत्** - துக்கப்படுத்துகிறீர் என்பது யாதொன்றுண்டோ, **एतत्** - இது, **औपयिकं न** - யுக்தமன்று.

31. (ப - ரை) **हे राघव** - ராமா! **सीता** - ஸீதை, **त्वया हीना** - உன்னோடு பிரிந்தவளாய், **न** - உயிருடனிருக்க மாட்டாள். **अहं अपि** - நானும், (**त्वया हीनः** - உம்மைவிட்டுப் பிரிந்தவனாய்), **न च** - ஜீவிக்கவே மாட்டேன். **जीवावः अपि** - ஜீவிப்போமேயானால், **जलात्** - ஜலத்திலிருந்து, **उद्धृतौ** - மேலே எடுக்கப்பட்ட, **मत्स्यौ इव** - மீன்கள்போல. **मुहूर्तं** - க்ஷணகாலம் தான், **जीवावः** - ஜீவித்திருப்போம்.

---

29. (பொ - ரை) ஆயுதம் தரித்தவர்களுக்குள் ச்ரேஷ்டரான மஹாராஜரே! இப்பொழுது நீர் புறப்பட்டு வந்தபடியால் அந்த அயோத்திமா நகரமானது சந்திரனில்லாத இரவுபோல் ஒளி இழந்திருக்கும்; இது நிச்சயம்.

30. (பொ - ரை) புருடோத்தமா! ஸ்ரீராமா! நீர் இவ்வாறு வருத்தப்படுவதும், என்னையும், ஸீதையையும் வருந்தப்படுத்துவதும் யுக்தமன்று.

31. (பொ - ரை) ராகவா! உம்மை விட்டுப் பிரிந்த காலத்தில் பிராட்டியும் பிழைத்திருக்கமாட்டாள். நானும் பிழைத்திருக்க மாட்டேன். அப்படி பிழைத்திருப்பதாயிருந்தாலும் ஜலத்திலிருந்து மேலே எடுத்த மீன் அந்த நீர் நசை இருக்குமளவும் ஜீவித்திருப்பது போல், நில் என்று சொன்ன வார்த்தை உம்முடைய திருவுள்ளத்திலும் உண்டென்று அறியுமளவும் நாங்கள் ஜீவித்திருப்பது.

न हि तातं न शत्रुघ्नं न सुमित्रां परंतप ।
द्रष्टुमिच्छेयमद्याहं स्वर्गं वापि त्वया विना ॥ 32 ॥

ततस्तत्र सुखासीनौ नातिदूरे निरीक्ष्य ताम् ।
न्यग्रोधे सुकृतां शय्यां भेजाते धर्मवत्सलौ ॥ 33 ॥

स लक्ष्मणस्योत्तमपुष्कलं वचो निशम्य चैवं वनवासमादरात् ।
समाः समस्ता विदधे परंतपः प्रपद्य धर्मं सुचिराय राघवः ॥ 34 ॥

32. (ப - ரை) **हे परंतप** - சத்ருக்களை வெல்லும் சக்தியுடையவரே! **अहं** - நான், **अद्य** - இப்பொழுது, **त्वया विना** - உம்மை விட்டுவிட்டு, **तातं** - தகப்பனுரை, **द्रष्टुं** - பார்ப்பதற்கு, **न हि इच्छेयं** - ஆசைப்பட மாட்டேன். **शत्रुघ्नं** - சத்ருக்னனை, **न** - பார்ப்பதற்கும் ஆசைபபட மாட்டேன். **सुमित्रां** - ஸுமித்ரையை, **न** - பார்ப்ப தற்கும் ஆசைப்படமாட்டேன். **स्वर्गं वा अपि** - ஸ்வர்க்கலோகத்தையும், (**न इच्छेयं** - ஆசைப்பட மாட்டேன்).

33. (ப - ரை) **ततः** - பிறகு, **तत्र** - அந்த மரத்து அடியில், **सुखासीनौ** - ஸுகமாக உட்கார்ந்து கொண்டிருக்கிற, **धर्मवत्सलौ** - தர்மத்தில் மிக அன்புள்ளவர்களான அந்த ஸீதையும் ராமனும், **नातिदूरे** - ஸமீபத்தில், **न्यग्रोधे** - ஆலமரத்து அடியில், **सुकृतां** - நன்ருக அமைக்கப்பட்டிருக்கிற, **तां शय्यां** - அந்தப் படுக்கையை, **निरीक्ष्य** - பார்த்து, **भेजाते** - அடைந்தார்கள்.

34. (ப - ரை) **परंतपः** - சத்ருக்களை வெல்லுகின்ற, **सः राघवः** - அந்த ஸ்ரீ ராகவன், **लक्ष्मणस्य** - இலக்குமணனுடைய, **उत्तमपुष्कलं** - உத்தமமாயும், நிறைந்துமிருக்கிற, **एवं वचः** - இவ்விதமான வார்த்தையை, **निशम्य** - கேட்டு, **आदरात्** - அன்

---

32. (பொ - ரை) சத்ருக்களை வெல்லுகின்றவரே! நான் இப்பொழுது உம்மை விட்டுவிட்டு, தகப்பனுரையோ, சத்ருக்னனையோ, என் தாயாரான ஸுமித்ரையையோ, பார்க்கவேணு மென்று ஆசைப்படவில்லை. ஸ்வர்க்க லோகம் கிடைத்தாலும் அதையும் நான் ஆசைப்பட மாட்டேன்.

33. (பொ - ரை) இவ்வாறு இலக்குமணன் சொல்லிய வார்த்தைகளைக் கேட்டு பிறகு, முன்னிருந்த மரத்து அடியில் ஸுகமாக உட்கார்ந்து கொண்டிருந்த தர்மிஷ்டர்களான அந்த ஸீதையும் ராமனும், ஆலமரத்து அடியில் ஸமீபத்தில் இலக்குமணனுல் தளிர்களை முறித்து நன்ருகப் போடப்பட்டிருக்கிற அந்தப் படுக்கையைப் பார்த்து, அதற்குப் போனுர்கள்.

34. (பொ - ரை) சத்ருக்களை வெல்லும் ஸாமர்த்யமுள்ள அந்த ராகவன், ப்ராதாவான தன்னிடத்தில், அன்பினுல் சொல்லப்பட்டபடியால் உத்தமமாயும் சொல்ல வேண்டிய விஷயங்களெல்லாம் நிறைந்துமிருக்கிற அந்த இலக்குமணனு

ततस्तु तस्मिन्विजने वने तदा महाबलौ राघववंशवर्धनौ ।
न तौ भयं संभ्रममभ्युपेयतुर्यथैव सिंहौ गिरिसानुगोचरौ ॥ 35 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध்யाकाण्डे
त्रिपञ्चाशः सर्गः ॥ 53 ॥

---

பினால், **धर्मं** - (வானப்ரஸ்த) தர்மத்தை, **प्रपद्य** - அடைந்து, **समस्ताः समाः** - எல்லா வருஷங்களும், **वनवासं** - இலக்குமணனுடனே வனத்தில் வஸிப்பதை, **विदधे** - செய்ய விரும்பினார்.

35. (ப - ரை) **ततः** - பிறகு, **राघववंशवर्धनौ** - ரகுவம்சத்தை வ்ருத்தி செய்கின்ற, **महाबलौ** - மிகுந்த பலமுடைய, **तौ** - அவ்விருவர்களும், **विजने** - ஜனமில்லாத, **तस्मिन् वने** - அந்த வனத்தில், **गिरि सानु गोचरौ** - மலையின் தாழ்வரையில் ஸஞ்சரிக்கின்ற, **सिंहौ यथा एव** - ஸிம்மங்களைப் போலவே, **तदा** - அப்பொழுது, **भयं** - பயத்தையும் **संभ्रमं** - பதற்றத்தையும், **न अभ्युपेयतुः** - அடையவில்லை.

டைய வார்த்தையை அன்புடன் இவ்வாறு கேட்டு வானப்ரஸ்த தர்மத்துடன் பதினான்கு வருஷமும் இலக்குமணனுடனே வனவாஸம் செய்யவேணுமென்று விரும்பினார்.

35. (பொ - ரை) பிறகு, ரகு குலத்தை பெருமைப்படுத்துகின்ற மஹா பலிஷ்டர்களான அந்த ராம லக்குமணர்கள் இருவர்களும், ஜன ஸஞ்சாரமில்லாத அந்த வனத்தில, மலையின் தாழ்வரையில வஸிக்கின்ற இரண்டு சிங்கம் போல், அப்பொழுது பயத்தையும், பதற்றத்தையும் அடையவில்லை.

## चतुःपञ्चाशः सर्गः ॥ 54 ॥

ते तु तस्मिन्महावृक्ष उषित्वा रजनीं शिवाम् ।
विमलेऽभ्युदिते सूर्ये तस्माद्देशात्प्रतस्थिरे ॥ 1 ॥
यत्र भागीरथीं गङ्गां यमुनाऽभिप्रवर्तते ।
जग्मुस्तं देशमुद्दिश्य विगाह्य सुमहद्वनम् ॥ 2 ॥
ते भूमिभागान्विविधान्देशांश्चापि मनोरमान् ।
अदृष्टपूर्वान्पश्यन्तस्तत्र तत्र यशस्विनः ॥ 3 ॥
यथा क्षेमेण गच्छन्स पश्यंश्च विविधान्द्रुमान् ।
निवृत्तमात्रे दिवसे रामः सौमित्रिमब्रवीत् ॥ 4 ॥

1. (ப - ரை) **ते तु** - அவர்கள், **तस्मिन्** - அந்த, **महावृक्षे** - பெரிய மரத்து அடியில், **शिवाम्** - க்ஷேமகரமான, **रजनीं** - இரவை, **उषित्वा हि** - வஸித்து விட்டு, **सूर्ये** - ஸூர்யன், **विमले** - ஸ்பஷ்டமாக, **अभ्युदिते (सति)** - உதயமான வளவில், **तस्मात् देशात्** - அந்த இடத்திலிருந்து, **प्रतस्थिरे** - புறப்பட்டார்கள்.

2—3. (ப - ரை) **यशस्विनः** - சிறந்த கீர்த்தியையுடையவர்களான, **ते** - அவர்கள், **अदृष्टपूर्वान्** - முன்னே பார்க்கப் படாதவைகளாய், **मनोरमान्** - அழகான, **विविधान्** - பலவிதங்களான, **भूमिभागान्** - வனப்ரதேசங்களையும், **देशान् चापि** - தேசங்களையும், **तत्र तत्र** - அங்காங்கு, **पश्यन्तः (सन्तः)** - பார்த்துக்கொண்டு, **सुमहत् वनम्** - பெரிய அரண்யத்தை, **विगाह्य** - ப்ரவேசித்து, **यत्र** - எந்த இடத்தில், **यमुना** - யமுனா நதி, **भागीरथीं गङ्गां** - பகீரதன் கொண்டுவந்த கங்கையை, **अभिप्रवर्तते** - சேருகின்றதோ, **तं देशं** அந்த தேசத்தை, **उद्दिश्य** - குறித்து, **जग्मुः** - சென்றார்கள்.

4. (ப - ரை) **सः रामः** - அந்த ராமன், **विविधान्** - பலவிதங்களான. **द्रुमान्** -

1. (பொ - ரை) அம்மூவர்களும், அப் பெரிய மரத்து அடியில் இரவு முழுவதும் ஸுகமாக விருந்து விட்டு, காலையில் நன்றாய் ஸூர்ய உதயமான பிறகு அந்த இடத்திலிருந்து புறப்பட்டார்கள்.

2—3. (பொ - ரை) சிறந்த புகழுடைய அவர்கள், ஒரு நாளும் முன் பார்த்திராத அழகான பலவிதங்களான வனப்ரதேசங்களையும், வத்ஸ தேசத்தில் உட்பிரிவு தேசங்களையும் ஆங்காங்கு பார்த்துக்கொண்டே, பெரிய காட்டில் நுழைந்து, எந்த இடத்தில் கங்காநதியில், யமுனை வந்து சேருகின்றதோ அந்த இடத்தைக் குறித்துச் சென்றார்கள்.

4. (பொ - ரை) அந்த ஸ்ரீராமன், க்ஷேமமாக, நானாவிதமான வ்ருக்ஷங்களை

प्रयागमभितः पश्य सौमित्रे धूममुन्नतम् ।
अग्नेर्भगवतः केतुं मन्ये सन्निहितो मुनिः ॥ 5 ॥

नूनं प्राप्ताः स्म संभेदं गङ्गायमुनयोर्वयम् ।
तथाहि श्रूयते शब्दो वारिणो वारिघट्टितः ॥ 6 ॥

दारूणि परिभिन्नानि वनजैरुपजीविभिः ।
भरद्वाजाश्रमे चैते दृश्यन्ते विविधा द्रुमाः ॥ 7 ॥

வ்ருக்ஷங்களை, **पश्यन्** - பார்த்துக்கொண்டு, **यथा क्षेमेण** - க்ஷேமத்திற்குக் குறைவில்லாமல், **गच्छन्** - சென்றுகொண்டு, **दिवसे** - பகல், **निवृत्तमात्रे (सति)** - கழிந்தவளவில், **सौमित्रिं** - இலக்குமணனைப் பார்த்து, **अब्रवीत्** - சொன்னார்.

5. (ப - ரை) **हे सौमित्रे** - இலக்குமணா! **प्रयागं अभितः** - ப்ரயாக க்ஷேத்திரத்தைச் சுற்றிலும், **अग्नेः भगवतः** - அக்நி பகவானுக்கு, **केतुं** - அடையாளமான, **उन्नतं धूमं** - உயர்ந்த புகையை, **पश्य** - பார். **अत्र** - இங்கு, **मुनिः** - ரிஷி, **संनिहितः** - இருக்கிறார், **इति** - என்று, **मन्ये** - எண்ணுகிறேன்.

6. (ப - ரை) **वयं** - நாம், **गङ्गायमुनयोः** - கங்கையும், யமுனையும், **संभेदं** - சேருமிடத்தை, **प्राप्ताः स्म** - அடைந்து விட்டோம், **नूनं** - நிச்சயம், **तथाहि** - அப்படித்தான், **वारिघट्टितः** - ஜலத்தினால் மோதப்பட்ட, **वारिणः शब्दः** - ஜலத்தினுடைய சப்தமானது, **श्रूयते** - கேட்கப்படுகின்றது.

7. (ப - ரை) **भरद्वाजाश्रमे** - பரத்வாஜருடைய ஆச்ரமத்தில், **वनजैः** - வனத்திலுண்டான காய் கிழங்குகளால், **उपजीविभिः** - ஜீவனம் செய்கின்றவர்களால், **परिभिन्नानि** - பிளக்கப்பட்ட, **दारूणि** - கட்டைகளும், **विविधाः** - பலவிதங்களான, **द्रुमाः च** - வ்ருக்ஷங்களும், **एते दृश्यन्ते** - இதோ காணப்படுகின்றன.

---

பார்த்துக்கொண்டே சென்று, அந்த மண்டலமான ஸமயத்தில் இலக்குமணனைப் பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

5. (பொ - ரை) இலக்குமணா! இதோ பார், ப்ரயாகத்தைச் சுற்றிலும் அக்நி பகவான் இருப்பதற்கு அடையாளமான புகை உயர்ந்து பரவுகிறது. ஆதலால் இங்கு பரத்வாஜ ரிஷி இருக்கிறார் என்று எண்ணுகிறேன்.

6. (பொ - ரை) நாம் கங்கையும் யமுனையும் சேருமிடம் வந்துசேர்ந்து விட்டோம், நிச்சயம். இதோ இங்கு ஜலம் ஒன்றோடொன்று மோதுகின்ற சப்தம் கேட்கப்படுகிறது

7. (பொ - ரை) பரத்வாஜருடைய ஆச்ரமத்தில் வனத்திலுண்டான காய் கிழங்கு முதலானவைகளால் ஜீவனம் செய்கின்ற ஜனங்கள் வெட்டிய கட்டைகளும் பலவிதங்களான வ்ருக்ஷங்களும் இதோ காணப்படுகின்றன.

धन्विनौ तौ सुखं गत्वा लम्बमाने दिवाकरे ।
गङ्गायमुनयोः संधौ प्रापतुर्निलयं मुनेः ॥ 8 ॥

रामस्त्वाश्रममासाद्य त्रासयन्मृगपक्षिणः ।
गत्वा मुहूर्तमध्वानं भरद्वाजमुपागमत् ॥ 9 ॥

ततस्त्वाश्रममासाद्य मुनेर्दर्शनकाङ्क्षिणौ ।
सीतयाऽनुगतौ वीरौ दूरादेवावतस्थतुः ॥ 10 ॥

---

8. (ப - ரை) **तौ** - அந்த ராம லக்ஷ்மணர்கள், **धन्विनौ (सन्तौ)** - வில் பிடித்தவர்களாய்க்கொண்டு, **दिवाकरे** - ஸூர்யன், **लम्बमाने (सति)** - தொங்குகிறவர்போல் காணப்படுமளவில், **गङ्गायमुनयोः** - கங்கையினுடையவும், யமுனையினுடையவும், **संधौ** - சேருமிடத்தில் (இருக்கின்ற), **मुनेः** - பரத்வாஜ ரிஷியினுடைய, **निलयं** - ஆச்ரமத்தின் ஸமீபத்தை, **प्रापतुः** - அடைந்தார்கள்.

9. (ப - ரை) **रामः तु** - ஸ்ரீராமனும், (**लक्ष्मणेन सह** - இலக்குமணனுடன் கூட), **आश्रमं** - ஆச்ரமத்தின் ஸமீபத்தை, **आसाद्य** - அடைந்து, **मृगपक्षिणः** - ம்ருகங்களையும், பக்ஷிகளையும், **त्रासयन् (सन्)** - பயமுறுத்திக்கொண்டு, **मुहूर्तं अध्वानं** - கொஞ்ச தூரம் வழியை, **गत्वा** - சென்று, **भरद्वाजं** - பரத்வாஜரின் (ஆச்ரமத்தை), **उपागमत्** - அடைந்தார்.

10. (ப - ரை) **ततः** - பிறகு, **वीरौ** - வீரர்களான ராமலக்ஷ்மணர்கள், **सीतया** - ஸீதையினால், **अनुगतौ** - பின் செல்லப்பட்டவர்களாய், **आश्रमं** - ஆச்ரமத்தை, **आसाद्य** - அடைந்து, **मुनेः** - முனியினுடைய, **दर्शनकाङ्क्षिणौ (सन्तौ)** - தர்சநத்தை எதிர்பார்த்துக் கொண்டவர்களாய், **दूरात् एव** - வெகு தூரத்திலேயே. **अवतस्थतुः** - இருந்தார்கள்.

8. (பொ - ரை) அந்த ராம லக்ஷ்மணர்கள், கையிற் வில்லைத் தறித்துக்கொண்டு ஸூர்யன் அஸ்தமனமாகுங் காலத்தில், கங்கா, யமுனைகள் சேருமிடத்திலிருக்கிற பரத்வாஜரிஷியின் ஆச்ரமத்தின் ஸமீபம் சென்றார்கள்.

9. (பொ - ரை) ஸ்ரீராமனும், இலக்குமணனுடன் கூட ஆச்ரமத்தின் ஸமீபம் சென்று, ஒருநாளும் பாராத மனிதர்களாகையால், ம்ருகங்களும், பக்ஷிகளும் பயந்து ஓடும்படி கொஞ்ச தூரம் வழி நடந்து பரத்வாஜருடைய ஆச்ரமம் நெருங்கிவிட்டார்.

10. (பொ - ரை) பிறகு, வீரர்களான அந்த ராம லக்ஷ்மணர்கள் ஸீதையுடன் கூட ஆச்ரமத்தை யடைந்து பரத்வாஜரிஷியின் தரிசனத்தை எதிர் பார்த்துக் கொண்டு தூரத்திலேயே நின்றுகொண்டிருந்தார்கள்.

स प्रविश्य महात्मानमृषिं शिष्यगणैर्वृतम् ।
संशितव्रतमेकाग्रं तपसा लब्धचक्षुषम् ॥ 11 ॥

हुताग्निहोत्रं दृष्ट्वैव महाभागं कृताञ्जलिः ।
रामः सौमित्रिणा सार्धं सीतया चाभ्यवादयत् ॥ 12 ॥

न्यवेदयत चात्मानं तस्मै लक्ष्मणपूर्वजः ।
पुत्रौ दशरथस्याऽऽवां भगवन्रामलक्ष्मणौ ॥ 13 ॥

भार्या ममेयं वैदेही कल्याणी जनकात्मजा ।
मां चानुयाता विजनं तपोवनमनिन्दिता ॥ 14 ॥

11—12. (ப - ரை) **सः रामः** - அந்த ஸ்ரீராமன், **प्रविश्य** - (ஆச்ரமத்தில்) ப்ரவேசித்து, **महात्मानं** - மஹாத்மாவாயும், **शिष्यगणैः** - சிஷ்யர்களின் கூட்டங்களால், **वृतं** - சூழப்பட்டவராயும், **संशितव्रतं** - மிகவும் தீக்ஷ்ணமான வ்ரதமுடையவராயும், **एकाग्रं** - த்யாநத்தில் நிலை நின்றவராயும், **तपसा** - தவத்தினால், **लब्ध चक्षुषम्** - ஞானம் பெற்றவராயும், **हुताग्निहोत्रं** - அக்நிஹோத்ரம் செய்தவராயும், **महाभागं** - மஹாபாக்யமுடையவருமான, **ऋषिं** - பரத்வாஜ ரிஷியை, **दृष्ट्वा एव** - பார்த்த மாத்திரத்திலேயே, **सौमित्रिणा** - இலக்குமணனோடும், **सीतया च** - ஸீதையோடும், **सार्धं** - கூட, **कृताञ्जलिः (सन्)** - கைகூப்பிக்கொண்டு, **अभ्यवादयत्** - நமஸ்காரம் செய்தார்.

13—14. (ப - ரை) **भगवन्** - ஸ்வாமின்! **आवां** - நாங்கள், **दशरथस्य** - தசரத மஹாராஜருடைய, **पुत्रौ** - பிள்ளைகள், **रामलक्ष्मणौ** - ராமலக்குமணர்கள், **इयं** - இவள், **मम** - என்னுடைய, **भार्या** - பார்யை, **वैदेही** - விதேஹகுலத்திற் பிறந்

11—12. (பொ - ரை) அந்த ஸ்ரீராமன் தற்செயலாக உள்ளேயிருந்து வந்த சிஷ்யர் மூலமாய் ஆச்ரமத்திற்குள் சென்று மஹாத்மாவாய், சிஷ்யர்களின் கூட்டங்களால் சூழப்பட்டவராய், மிகவும் தீக்ஷ்ணமான வ்ரதமுடையவராய் த்யாநத்தில் நிலை நின்றவராய், தபோ மஹிமையினால் பூதபவிஷ்யத் வர்த்தமான என்கிற த்ரிகால ஜ்ஞானமுடையவராய், அக்நிஹோத்ரம செய்து மஹா பாக்யசாலியான பரத்வாஜ மஹரிஷியைக் கண்டு உடனே கைகூப்பிகொண்டு, இலக்குமணனுடனும், ஸீதையுடனும் கூட நமஸ்கரித்தார்.

13—14. (பொ - ரை) ஸ்வாமின்! நாங்கள் தசரத மஹாராஜருடைய பிள்ளைகள், ராமனென்றும், இலக்குமணனென்றும் பெயர் உடையவர்கள், இவள் என்

पित्रा प्रव्राज्यमानं मां सौमित्रिरनुजः प्रियः ।
अयमन्वगमद्भ्राता वनमेव दृढव्रतः ॥ 15 ॥
पित्रा नियुक्ता भगवन्प्रवेक्ष्यामस्तपोवनम् ।
धर्ममेव चरिष्यामस्तत्र मूलफलाशनाः ॥ 16 ॥

---

தவள், **कल्याणी** - பதிவ்ரதை, **जनकात्मजा** - ஜனகமஹாராஜர் பெண், **अनिन्दिता** - பழிப்பில்லாதவள், **विजनं** - ஜனமில்லாத, **तपोवनं** - தபோவனத்தைக் குறித்து, **मां** - என்னை, **अनुयाता च** - பின்சென்று வந்தாள், **इति** - என்று, **लक्ष्मणपूर्वजः** - இலக்குமணனுடைய மூத்தவரான ஸ்ரீராமன், **आत्मानं** - தன்னை, **तस्मै** - அந்த பரத்வாஜரின் பொருட்டு, **न्यवेदयत च** - தெரிவித்தார்.

15. (ப - ரை) **अनुजप्रियः** - பின் பிறந்தவனும், ப்ரியனுமான, **सौमित्रिः** - ஸௌமித்திரையின் புத்திரனை, **अयं भ्राता** - இந்த ப்ராதாவானவன், **दृढव्रतः एव** - த்ருடமான வ்ரதமுடையவனாகவே, **पित्रा** - பிதாவினாலே, **वनं** - வனத்தைக் குறித்து, **प्रव्राज्यमानं** - அனுப்பப்பட்டிருக்கிற, **मां** - என்னை, **अन्वगमत्** - பின் சென்றான்.

16. (ப - ரை) **हे भगवन्** - ஸ்வாமி! **पित्रा** - பிதாவினால், **नियुक्ताः** - ஏவப்பட்டவர்களாய், **तपोवनं** - தபோவனத்தை, **प्रवेक्ष्यामः** - ப்ரவேசிக்கப் போகிறோம், **तत्र** - அங்கு, **मूलफलाशनाः** - வேறுகளையும், பழங்களையும், ஆஹாரம் செய்து கொண்டு, **धर्मं एव** - தர்மத்தையே, **चरिष्यामः** - செய்யப்போகிறோம்.

---

னுடைய, பார்யை, விதேஹ குலத்திற் பிறந்தவள், பதிவ்ரதை, ஜனகமஹாராஜருடைய பெண், ஒருவிதமான பழிப்புமில்லாதவள், ஜனசூன்யமான தபோவனத்திற்கு என்னுடன் வந்திருக்கிறாள் என்று இலக்குமணனுடைய ஜேஷ்ட ப்ராதாவான ஸ்ரீ ராமன் அந்த பரத்வாஜருக்கு தம்மை விஜ்ஞாபனம் செய்து கொண்டார்.

15. (பொ - ரை) ஸௌமித்திரையின் புத்திரனாய் என்னிடம் அன்புள்ளவனுமான இந்த என் கனிஷ்டப்ராதா, ஜேஷ்ட ப்ராதாவை அநுஸரிக்கவேண்டியது என்கிற வ்ரதத்தையே உறுதியாகக் கைப்பிடித்து பிதாவினால் வனத்திற்கு அனுப்பப்பட்ட என்னுடன் கூட வனத்திற்கு வந்து விட்டான்.

16. (பொ - ரை) ஸ்வாமி! நாங்கள் பிதாவினால், ஆஜ்ஞாபிக்கப்பட்டு, தபோவனம் சென்று, அங்கு கிழங்கு, வேறு, பழம் இவைகளைப் புஜித்துக்கொண்டு பித்ரு வாக்ய பரிபாலன மென்கிற தர்மத்தையே செய்யப்போகிறோம் என்று அந்த பரத்வாஜரிஷிக்கு தம்மைத் தெரிவித்தார் என்று 13-வது ச்லோகத்தோடு அன்வயம்.

तस्य तद्वचनं श्रुत्वा राजपुत्रस्य धीमतः ।
उपानयत धर्मात्मा गामर्घ्यमुदकं ततः ॥ 17 ॥

नानाविधानन्नरसान्वन्यमूलफलाश्रयान् ।
तेभ्यो ददौ तप्ततपा वासं चैवाभ्यकल्पयत् ॥ 18 ॥

मृगपक्षिभिरासीनो मुनिभिश्च समन्ततः ।
राममागतमभ्यर्च्य स्वागतेनाऽऽह तं मुनिः ॥ 19 ॥

17. (ப - ரை) **ततः** - பிறகு, **धर्मात्मा** - தர்மாத்மாவான பரத்வாஜர், **धीमतः** - சிறந்த புத்தியுடைய, **तस्य राजपुत्रस्य** - அந்த ராஜ குமாரருடைய, **तत् वचनं** - அந்த வார்த்தையை, **श्रुत्वा** - கேட்டு, **गां** - எருதையும், **अर्घ्यं** - அர்க்யத்தையும், **उदकं** - தீர்த்தத்தையும், **उपानयत** - கொண்டுவந்தார்.

18. (ப - ரை) **तप्ततपाः** - தபஸ்ஸுகளை செய்தவரான அந்த பரத்வாஜர், **तेभ्यः** - அவர்களுக்கு, **नानाविधान्** - நானாவிதங்களாயும், **वन्यमूलफलाश्रयान्** - காட்டிலுண்டான கிழங்கு பழம் இவைகளால் உண்டாக்கப் பட்ட, **अन्नरसान्** - சாப்பிடக்கூடிய ரஸ பதார்த்தங்களையும், **ददौ** - கொடுத்தார், **वासं चैव** - இருக்கு மிடத்தையும், **अभ्यकल्पयत्** - ஏற்படுத்தினார்.

19. (ப - ரை) **समन्ततः** - சுற்றிலும், **मृगपक्षिभिः** - மிருகங்களோடும், பக்ஷி களோடும், **मुनिभिः च** - முனிகளோடும், **आसीनः** - உட்கார்ந்திருக்கிற, **मुनिः** - பரத் வாஜரிஷி, **आगतं** - வந்திருக்கிற, **रामं** - ஸ்ரீராமனை, **अभ्यर्च्य** - பூஜித்து, **तं** - அவரை, **स्वागतेन आह** - நல்வரவைக் கேட்டார்.

17. (பொ - ரை) பிறகு தர்மாத்மாவான பரத்வாஜரிஷி, மஹாபுத்திமானை அந்த ராஜபுத்திரருடைய வார்த்தையைக் கேட்டு, மது பர்க்கத்திற்கு அங்கமான, எருதையும், பூஜைக்கு அங்கமான அர்க்யத்தையும் தீர்த்தத்தையும் கொண்டுவந்தார்.

18. (பொ - ரை) சிறந்த தவம் செய்தவரான அந்த மஹரிஷி, அவர்களுக்கு காட்டிலுண்டான கிழங்குகளிலும், வேறுகளிலும், காய்கனிகளிலுமிருந்து உண் டாக்கப்பட்ட பலவிதமான ருசியுள்ள பதார்த்தங்களையும் கொடுத்து வஸிக்கவேண் டிய இடத்தையும் ஏற்படுத்தினார்.

19. (பொ - ரை) அந்த பரத்வாஜமுனி, மிருகங்களும், பக்ஷிகளும், ரிஷி களும் சுற்றிலும் சூழ உட்கார்ந்து கொண்டு அதிதியாக வந்திருக்கிற ஸ்ரீராமனை, ஸௌக்யமா, வந்தீரா ! என்று நல்வரவு விசாரித்தார்.

प्रतिगृह्य च तामर्चामुपविष्टं स राघवम् ।
भरद्वाजोऽब्रवीद्वाक्यं धर्मयुक्तमिदं तदा ॥ 20 ॥

चिरस्य खलु काकुत्स्थ पश्यामि त्वामिहागतम् ।
श्रुतं तव मया चेदं विवासनमकारणम् ॥ 21 ॥

अवकाशो विविक्तोऽयं महानद्योः समागमे ।
पुण्यश्च रमणीयश्च वसत्विह भवान्सुखम् ॥ 22 ॥

20. (ப - ரை) **तां अर्चां** - அந்தப் பூஜையை, **प्रतिगृह्य** - பெற்றுக்கொண்டு, **उपविष्टं** - உட்கார்ந்திருக்கிற, **राघवं** - ஸ்ரீராகவனை (ப்பார்த்து), **तदा** - அப்பொழுது, **सः भरद्वाजः** - அந்த பரத்வாஜரிஷி, **धर्मयुक्तं** - தர்மத்தோடு கூடிய, **इदं वाक्यं** - இந்த வார்த்தையை, **अब्रवीत्** - சொன்னார்.

21. (ப - ரை) **हे काकुत्स्थ** - ராமா! **चिरस्य खलु** - வெகுநாள் கழிந்து, **त्वां** - உம்மை, **इह** - இங்கு, **आगतं** - வந்திருப்பவராக, **पश्यामि** - பார்க்கிறேன், **अकारणं** - காரணமில்லாத, **इदं** - இந்த, **तव विवासनं** - உம்மைக் காட்டிற்கு அனுப்பியதும், **मया** - என்னால், **श्रुतं च** - கேட்கப்பட்டுமிருக்கிறது.

22. (ப - ரை) **महानद्योः**- கங்கை, யமுனை என்கிற மஹா நதிகளின், **समागमे** - ஸங்கமத்தில், **अयं अवकाशः** - இந்த இடமானது, **विविक्तः** - ஏகாந்தமானது, **पुण्यः च** - புண்யமாயும், **रमणीयः च** - அழகாயும் (இருக்கிறது), **इह** - இவ்விடத்தில், **भवान्** - நீர், **सुखं** - ஸுகமாக, **वसतु** - வஸிக்கவேண்டும்.

---

20. (பொ - ரை) பரத்வாஜர் செய்த பூஜையை அங்கீகரித்து உட்கார்ந்திருக்கும் அந்த ராகவனைப் பார்த்து, அந்த பரத்வாஜரிஷி அப்பொழுது தர்மத்துடன் கூடிய இந்த வார்த்தையைச் சொன்னார்.

21. (பொ - ரை) ககுத்ஸ்த குலத்தில் அவதரித்தவரே! வெகு நாள் கழிந்து நீர் இங்கு வந்ததைப் பார்த்தேன். நிஷ்காரணமாக உம்மைக் காட்டிற்கு அனுப்பி விட்ட ஸங்கதியையும் நான் கேட்டிருக்கிறேன்.

22. (பொ - ரை) இதோ, கங்காயமுனா ஸங்கமத்தில் இந்த இடமானது மிகவும் ஏகாந்தமாய் புண்யகரமாய் அழகாயு மிருக்கிறது. இவ்விடத்தில் நீர் ஸுகமாக வஸிக்கவேண்டும்.

एवमुक्तस्तु वचनं भरद्वाजेन राघवः ।
प्रत्युवाच शुभं वाक्यं रामः सर्वहिते रतः ॥ 23 ॥
भगवन्नित आसन्नः पौरजानपदो जनः ।
सुदर्शमिह मां प्रेक्ष्य मन्येऽहमिममाश्रमम् ॥ 24 ॥
आगमिष्यति वैदेहीं मां चापि प्रेक्षको जनः ।
अनेन कारणेनाहमिह वासं न रोचये ॥ 25 ॥
एकान्ते पश्य भगवन्नाश्रमस्थानमुत्तमम् ।
रमेत यत्र वैदेही सुखार्हा जनकात्मजा ॥ 26 ॥

23. (ப - ரை) **सर्वहिते** - எல்லோருக்கும் நன்மை செய்வதில், **रतः** - ஆசையுள்ள, **राघवः** - ரகு குலத்திற் பிறந்த, **रामः** - ஸ்ரீராமன், **भरद्वाजेन** - பரத்வாஜ மஹரிஷியினுல், **एवं वचनं** - இவ்வாறு வார்த்தையை, **उक्तः तु** - சொல்லப்பட்டவராய், **शुभं वाक्यं** - அழகான வார்த்தையை, **प्रत्युवाच** - பதில் சொல்லுகிறார்.

24—25. (ப - ரை) **हे भगवन्** - ஸ்வாமின்! **पौरजानपदः जनः** - பட்டணத்து ஜனமும், தேசத்து ஜனமும், **इतः** - இந்த ஆசிரமத்திற்கு, **आसन्नः** - ஸமீபித்திருக்கிறது. **इह** - இங்கு, **मां** - என்னை, **सुदर्शं** - ஸுலபமாக பார்க்கக்கூடியவனாக, **प्रेक्ष्य** - எண்ணி, **वैदेहीं** - ஸீதையையும், **मां चापि** - என்னையும், **प्रेक्षकः** - பார்க்கவேண்டுமென்கிற, **जनः** ஜனமானது, **इमं आश्रमं** - இந்த ஆச்ரமத்தைக் குறித்து, **आगमिष्यति** - வந்துவிடும், **इति** - என்று, **अहं** - நான், **मन्ये** - எண்ணுகிறேன். **अनेन कारणेन** - இந்தக் காரணத்தினுல், **अहं** - நான், **इह** - இங்கு, **वासं** - வாஸத்தை, **न रोचये** - விரும்பவில்லை.

26. (ப - ரை) **हे भगवन्** - ஸ்வாமின், **जनकात्मजा** - ஜனகரின் குமாரியா

23. (பொ - ரை) ஸர்வ ப்ராணிகளுக்கும் ஹிதம் செய்வதிலேயே ஊக்கமுள்ளவராய், ரகு குலத்தில் அவதரித்தவருமான ஸ்ரீராமன் இவ்வாறு பரத்வாஜரிஷி சொல்லக்கேட்டு அவரைப்பார்த்து அழகாக ஒரு வார்த்தை பதில் சொல்லுகிறார்.

25—24. (பொ - ரை) ஸ்வாமின்! இங்கு ஆச்ரமம் ஏற்படுத்திக் கொண்டிருந்தால் இது பட்டணத்து ஜனங்களுக்கும், தேசத்து ஜனங்களுக்கும் மிகவும் ஸமீபமானபடியால், என்னை இங்கு ஸுலபமாகப் பார்க்கலாமென்று எண்ணிக்கொண்டு என்னையும், ஸீதையையும் பார்க்கவேண்டுகின்ற ஜனங்கள் இந்த ஆசிரமத்திற்கு வந்துவிடும். இந்தக் காரணத்தினுல் இங்கு வஸிப்பதற்கு நான் விரும்பவில்லை.

26. (பொ - ரை) ஸ்வாமின்! விதேஹ குலத்திற் பிறந்தவளாய், ஸுகாது

एतच्छ्रुत्वा शुभं वाक्यं भरद्वाजो महामुनिः ।
राघवस्य ततो वाक्यमर्थग्राहकमब्रवीत् ॥ 27 ॥
दशक्रोश इतस्तात गिरिर्यस्मिन्निवत्स्यसि ।
महर्षिसेवितः पुण्यः सर्वतः सुखदर्शनः ॥ 28 ॥
गोलाङ्गूलानुचरितो वानरर्क्षनिषेवितः ।
चित्रकूट इति ख्यातो गन्धमादनसन्निभः ॥ 29 ॥

யும், **सुखार्हा** - ஸுகத்தை அநுபவிக்கத் தகுந்தவளுமான, **वैदेही** - ஸீதை, **यत्र** - எந்த இடத்தில், **रमेत** - ஸந்தோஷப்படுவளோ, (**तत्** - அப்படிப்பட்ட), **उत्तमं आश्रमस्थानं** - உத்தமமான ஆச்ரமத்தின் ஸ்தாநத்தை, **एकान्ते** - ஏகாந்தமான ப்ரதேசத்தில், **पश्य** - பாரும்.

27. (ப - ரை) **भरद्वाजः महामुनिः** - பரத்வாஜ மஹரிஷி, **राघवस्य** - ஸ்ரீராகவனுடைய, **एतत्** - இந்த, **शुभं वाक्यं** - அழகான வார்த்தையை, **श्रुत्वा** - கேட்டு, **ततः** - பிறகு, **अर्थग्राहकं** - அநேக அர்த்தங்களையுடைய, **वाक्यं** - வார்த்தையை, **अब्रवीत्** - சொன்னார்.

28—29. (ப - ரை) **हे तात** - அப்பா! **यस्मिन्** - யாதொரு மலையில், **निवत्स्यसि** - நீர் வஸிக்கப்போகிறீரோ, **महर्षिसेवितः** - மஹரிஷிகளால் அடையப்பட்டும், **पुण्यः** - புண்யகரமாயும், **सर्वतः** - சுற்றிலும், **सुखदर्शनः** - பார்ப்பதற்கு அழகாயும், **गोलाङ्गूलानुचरितः** - கொண்டமுஸுருகளால் ஸஞ்சரிக்கப்பட்டும், **वानर ऋक्ष निषेवितः** - குரங்குகளாலும், கரடிகளாலும் அடையப்பட்டும், **गन्धमादन सन्निभः** - கந்தமாதன பர்வதத்திற்கு ஸமானமாயும், **चित्रकूटः इति** - சித்திரகூடம் என்று, **ख्यातः** - ப்ரஸித்தமான, **सः गिरिः** - அந்த மலையானது, **इतः** - இங்கிருந்து, **दशक्रोशः** - பத்து கூப்பிடு தூரம் உள்ளது.

---

பவத்திற்கே தகுந்தவளுமான ஜனகராஜ புத்ரி எந்த இடத்தில், வஸித்தால் ஸந்தோஷப்படுவாளோ அப்படிப்பட்ட உத்தமமான ஆச்ரம ஸ்தானம் ஒன்றை ஏகாந்தமான இடத்தில் தேவரீர் பார்த்துச் சொல்லவேண்டும்.

27. (பொ - ரை) பரத்வாஜ மஹரிஷி, ராகவனுடைய அழகான இவ் வார்த்தையைக் கேட்டு, பிறகு ராமனைப் பார்த்து, அநேக அர்த்தங்கள் நிறைந்த ஒரு வார்த்தை சொன்னார்.

28—29. (பொ - ரை) அப்பா! ரிஷிகளால் வாஸம் பண்ணப்பட்டு, புண்யகரமாய், எங்கும் பார்ப்பதற்கு அழகாய், கொண்டமுஸர், குரங்கு, கரடி இவைகள் நிறைந்து, கந்தமாதன பர்வதத்திற்கு ஸமானமாய், சித்திரகூடமென்று ப்ரஸித்தமான ஒரு பர்வதம் இங்கிருந்து பத்து கூப்பிடு தூரத்திலிருக்கின்றது. அந்த மலையில் நீர் ஆச்ரமம் கட்டிக்கொண்டு வஸிக்கலாம்.

यावता चित्रकूटस्य नरः शृङ्गाण्यवेक्षते ।
कल्याणानि समाधत्ते न पापे कुरुते मनः ॥ 30 ॥

ऋषयस्तत्र बहवो विहृत्य शरदां शतम् ।
तपसा दिवमारूढाः कपालशिरसा सह ॥ 31 ॥

प्रविविक्तमहं मन्ये तं वासं भवतः सुखम् ।
इह वा वनवासाय वस राम मया सह ॥ 32 ॥

---

30. (ப - ரை) **नरः** - மனிதன், **चित्रकूटस्य** - சித்திரகூட மலையினுடைய, **शृङ्गाणि** - சிகரங்களை, **यावता** - எந்த ஸமயத்தில், **अवेक्षते** - பார்க்கின்றானோ, (**तावता** - அந்த ஸமயத்திலேயே), **कल्याणानि** - புண்ய கார்யங்களை, **समाधत्ते** - அடைகின்றான், **पापे** - கெட்ட கார்யத்தில், **मनः** மனதை, **न कुरुते** - வைக்கிறதில்லை.

31. (ப - ரை) **तत्र** - அங்கு, **बहवः ऋषयः** - அநேகம் ரிஷிகள், **शरदां शतं** - அநேக வருஷகாலம், **तपसा** - தவத்தினால், **विहृत्य** - விளையாடிவிட்டு, **कपालशिरसा सह** - மண்டை ஓடு மாத்திரம் மிகுந்த சிரஸுடன்கூட, **दिवं** - ஸ்வர்க்கத்தை, **आरूढाः** - ஏறியிருக்கின்றார்கள்.

32. (ப - ரை) **हे राम** - ராமா! **प्रविविक्तं** - மிகவும் ஏகாந்தமான, **तं वासं** - அந்த வாஸஸ்தலத்தை, **भवतः** - உமக்கு, **सुखं** - ஸுகமானதாக, **अहं** - நான், **मन्ये** - எண்ணுகிறேன். **इह वा** - இவ்விடத்திலாவது, **वनवासाय** - வனவாஸம் செய்வதற்காக, **मया सह** - என்னுடன்கூட, **वस** - நீ வாஸம் செய்யும்.

---

30. (பொ - ரை) ஒரு மனிதன், சித்திரகூட மலையின் சிகரங்களைப் பார்க்கும்பொழுதே, புண்ய கார்யங்களைச் செய்கிறான். பாபகார்யங்களில் மனதைச் செலுத்துகிறதில்லை. அப்படியிருக்க, அதில் வாஸம் பண்ணுகிறவர்களுக்குப் புண்யம் உண்டு என்பதைச் சொல்ல வேண்டுவானேன்.

31. (பொ - ரை) இந்த மலையில் அநேக ரிஷிகள், அநேகம் வருஷகாலம் விளையாடுவதுபோல் தபஸ் செய்து, கபால மாத்திரம் மிச்சமான தலையுடன் கூட (அதாவது ஸசரீரமாக) ஸ்வர்க்கலோகம் ஏறி இருக்கிறார்கள்.

32. (பொ - ரை) ராமா! அந்த இடம் மிகவும் ஏகாந்தமானதால் உமக்கு ஸுகமாயிருக்குமென்று எண்ணுகிறேன். அல்லது இவ்விடத்திலாவது வனவாஸத்திற்காக என்னுடன்கூட நீர் வஸிக்கலாம்.

स रामं सर्वकामैस्तं भरद्वाजः प्रियातिथिम् ।
सभार्यं सह च भ्रात्रा प्रतिजग्राह धर्मवित् ॥ 33 ॥

तस्य प्रयागे रामस्य तं महर्षिमुपेयुषः ।
प्रपन्ना रजनी पुण्या चित्राः कथयतः कथाः ॥ 34 ॥

सीतातृतीयः काकुत्स्थः परिश्रान्तः सुखोचितः ।
भरद्वाजाश्रमे रम्ये तां रात्रिमवसत्सुखम् ॥ 35 ॥

---

33. (ப - ரை) **धर्मवित्** - தா்மத்தை அறிந்தவரான, **सः भरद्वाजः** - அந்த பரத்வாஜரிஷி, **प्रियातिथिम्** - அன்புள்ள அதிதியான, **तं रामं** - அந்த ராமனே, **सभार्यं** - பார்யையுடனும், **भ्रात्रा च सह** - ப்ராதாவுடனும் கூட, **सर्वकामैः** - இஷ்டமான எல்லா வஸ்துக்களாலும், **प्रतिजग्राह** - பூஜித்தார்.

34. (ப - ரை) **प्रयागे** - ப்ரயாக க்ஷேத்திரத்தில், **तस्य रामस्य** - அந்த ராமன், **तं महर्षिं** - அந்த பரத்வாஜ மஹரிஷியை, **उपेयुषः** - அடைந்தவராய், **चित्राः** - விசித்திரங்களான, **कथाः** - கதைகளே, **कथयतः** (**सतः**) - சொல்லிக்கொண்டிருக்கும் பொழுது, **पुण्या** - புண்யகரமான, **रजनी** - இரவு, **प्रपन्ना** - வந்துவிட்டது.

35. (ப - ரை) **सुखोचितः** - ஸுகாநுபவத்திற்குத் தகுந்தவரான, **काकुत्स्थः** - ஸ்ரீராமன், **परिश्रान्तः** - மிகவும் ச்ரமத்துடன், **रम्ये** - அழகான, **भरद्वाजाश्रमे** - பரத்வாஜருடைய ஆச்ரமத்தில், **सीतातृतीयः** - ஸீதையுடன் மூன்றாவது ஆனவராய், **तां रात्रिं** - அந்த இரவை, **सुखम्** - ஸுகமாக, **अवसत्** - வாஸம் செய்தார்.

---

33. (பொ - ரை) தா்மங்களே அறிந்தவரான அந்த பரத்வாஜ மஹரிஷி அன்புள்ள அதிதியான அந்த ஸ்ரீராமனே பார்யையான ஸீதையுடனும், தம்பியான இலக்குமணனுடனும், ஸகல போக்ய வஸ்துக்களினால் உபசரித்தார்.

34. (பொ - ரை) அந்த ராமன் ப்ரயாகையில், அந்த பரத்வாஜ மஹரிஷியினிடம் ஆச்சர்யமான கதைகளேச் சொல்லிக்கொண்டிருக்கும் பொழுது, புண்யமான இரவும் வந்துவிட்டது.

35. (பொ - ரை) ஸுகம் அநுபவிப்பதே வழக்கமாயுள்ள காகுஸ்த்தரும், மிகவும் சிரமத்துடன் அழகான அந்த பரத்வாஜருடைய ஆச்ரமத்தில் ஸீதை, இலக்குமணன் இவர்களுடன் அன்று இரவு ஸுகமாக வாஸம் செய்தார்.

प्रभातायं रजन्यां तु भरद्वाजमुपागमत् ।
उवाच नरशार्दूलो मुनिं ज्वलिततेजसम् ॥ 36 ॥

शर्वरीं भगवन्नद्य सत्यशील तवाश्रमे ।
उषिताः स्मेह वसतिमनुजानातु नो भवान् ॥ 37 ॥

रात्र्यां तु तस्यां व्युष्टायां भरद्वाजोऽब्रवीदिदम् ।
मधुमूलफलोपेतं चित्रकूटं व्रजेति ह ॥ ॥ 38 ॥

---

36. (ப - ரை) **रजन्यां** - இரவு, **प्रभातायां (सत्यां)** - விடிந்த வளவில், **नरशार्दूलः** - புருடோத்தமன், **ज्वलित तेजसम्** - ஜ்வலிக்கின்ற தேஜஸ்ஸையுடையவரான, **भरद्वाजं मुनिं** - பரத்வாஜ மஹரிஷியை, **उपागमत्** - அடைந்தார், **उवाच** - ஒரு வார்த்தையும் சொன்னார்.

37. (ப - ரை) **हे सत्यशील** - ஸத்ய ஸ்வபாவமுடைய, **भगवन्** - ஸ்வாமி, **अद्य शर्वरीं** - இன்று இரவை, **तव** - உம்முடைய, **आश्रमे** - ஆச்ரமத்தில், **उषिताः स्म** - வாஸம் செய்தோம், **इह** - இங்கு, **वसतिं** - முன் குறித்த வாஸஸ்தலத்தைக் குறித்து, **नः** - எங்களுக்கு, **भवान्** - நீர், **अनुजानातु** - போக அனுமதி கொடுக்க வேண்டும்.

38. (ப - ரை) **तस्यां रात्र्यां तु** - அந்த இரவானது, **व्युष्टायां (सत्यां)** - விடிந்த வளவில், **मधुमूलफलोपेतं** - தேன், கிழங்கு, பழங்கள் இவைகளோடுகூடிய, **चित्रकूटं** - சித்ரகூட மலையை (க்குறித்து), **व्रज** - நீர் போம், **इति** - என்று, **भरद्वाजः** - பரத்வாஜ மஹரிஷி, **इदं** - இந்த வார்த்தையை, **ह** - ஸந்தோஷத்துடனும், **अब्रवीत्** - சொன்னார்.

36. (பொ - ரை) அன்றிரவு விடிந்தவுடன், புருடோத்தமனான ஸ்ரீராமன் ஜ்வலிக்கின்ற தேஜஸ்ஸையுடைய, பரத்வாஜ மஹரிஷியின் ஸமீபம் சென்று ஒரு வார்த்தை சொன்னார்.

37. (பொ - ரை) ஸத்யஸ்பாவமுடைய ஸ்வாமி! இன்று இரவு உம்முடைய ஆச்ரமத்தில் வாஸம் செய்தோம், இங்கிருந்து முன் குறிப்பிட்ட இடத்திற்கு போக வேண்டியதற்கு நீர் எங்களுக்கு அனுமதி கொடுக்கவேண்டும்.

38. (பொ - ரை) அன்று இரவு நன்றாய் விடிந்த பிறகு பரத்வாஜ ரிஷி ராமனைப் பார்த்து, தேன், கிழங்கு, பழங்கள் இவைகள் நிறைந்த சித்ரகூட மலைக்கு நீர் போம் என்று சொன்னார்.

वासमौपयिकं मन्ये तव राम महाबल ।
नानानगगणोपेतः किन्नरोरगसेवितः ॥ 39 ॥
मयूरनादाभिरुतो गजराजनिषेवितः ।
गम्यतां भवता शैलश्चित्रकूटः स विश्रुतः ॥
पुण्यश्च रमणीयश्च बहुमूलफलायुतः ॥ 40 ॥
तत्र कुञ्जरयूथानि मृगयूथानि चाभितः ।
विचरन्ति वनान्तेऽस्मिंस्तानि द्रक्ष्यसि राघव ॥ ॥ 41 ॥

39—40. (ப - ரை) **हे महाबल** - மஹா பலமுடையவரான, **राम** - ராமா, (**तत्र** - அங்கு), **तव** - உம்முடைய, **वासं** - வாஸத்தை, **औपयिकं** - உசிதமாக, **मन्ये** - எண்ணுகிறேன். **नाना नग गणोपेतः** - பலவித வ்ருக்ஷங்களின் கூட்டத்தோடு கூடியதாய், **किन्नर उरगसेवितः** - கின்னர ஜாதிகளாலும், ஸர்ப்ப ஜாதிகளாலும் அடையப் பட்டதாய், **मयूर नादाभिरुतः** - மயில்களின் சப்தத்தினால் சப்தமுடையதாய், **गज-राजनिषेवितः** - உத்தம கஜங்களால் அடையப்பட்டதாய், **पुण्यः च** - மிகவும் புண்ய கரமாய், **रमणीयः च** - அழகாய், **बहुमूलफलायुतः** - அநேக வேர் பழங்கள் இவை களோடு கூடினதாய், **विश्रुतः** - ப்ரஸித்தமான, **चित्रकूटः** - சித்ரகூடமென்கிற, **सः शैलः** - அந்த மலையானது, **भवता** - உம்மால், **गम्यतां** - அடையப்படலாம்.

41. (ப - ரை) **हे राघव** - ராகவா! **तत्र** - அவ்விடத்தில், **अस्मिन् वनान्ते** - இந்த வனப்ரதேசத்தில், **कुञ्जरयूथानि** - யானைக் கூட்டங்களும், **मृगयूथानि च** - மான் கூட்டங்களும், **अभितः** - நாற்புறங்களிலும், **विचरन्ति** - ஸஞ்சரிக்கின்றன. **तानि** - அவைகளை, **द्रक्ष्यसि** - நீர் பார்க்கப்போகிறீர்.

39—40. (பொ - ரை) மஹா பலமுடைய, ராமா! நீர் அங்கு வாஸம் பண்ணுவதுதான் தகுந்ததென்று எண்ணுகிறேன். பலவிதங்களான மரங்களின் கூட்டமுடையதாய் கின்னரஜாதிகளாலும், ஸர்ப்ப ஜாதிகளாலும் அடையப்பட்ட தாய் மயில்களின் சப்தங்களுடையதாய், உயர்ந்த யானைகள் சேர்ந்ததாய், புண்யகர மாய் பார்ப்பதற்கு அழகாய் பலவிதங்களான வேர்கள், கிழங்குகள், பழங்கள் இவைகளுடன் கூடியதாய் உலக ப்ரஸித்தமான அந்த சித்ரகூட மலைக்கு நீர் போக வேண்டும்.

41. (பொ - ரை) அவ்விடத்தில் அந்த வனப்ரதேசங்களில் யானைக் கூட்டங் களும், மான் கூட்டங்களும் சுற்றிலும் ஸஞ்சரிக்கின்றன. அவைகளை நீர் பார்க்கப் போகிறீர்.

सरित्प्रस्रवणप्रस्थान्दरीकन्दरनिर्दरान् ।
चरतः सीतया सार्धं नन्दिष्यति मनस्तव ॥ 42 ॥

प्रहृष्टकोयष्टिककोकिलस्वनैर्विनादितं तं वसुधाधरं शिवम् ।
मृगैश्च मत्तैर्बहुभिश्च कुञ्जरैः सुरम्यमासाद्य समावसाश्रमम् ॥ 43 ॥

**इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे**
**चतुःपञ्चाशः सर्गः ॥ 54 ॥**

42. (ப - ரை) **सरित्प्रस्रवणप्रस्थान्** - நதிகள், சிறு ஆறுகள், மலையின் தாழ் வரைகள் இவைகளையும், **दरीकन्दरनिर्दरान्** - கல்லுகள் பொருந்தியிருக்கும் இடங்களையும், குஹைகளையும், கல்வெடிப்பு சந்துகளையும், **सीतया सार्धं** - ஸீதையுடன் கூட, **चरतः** - ஸஞ்சரிக்கின்ற, **तव** - உம்முடைய, **मनः** - மனது, **नन्दिष्यति** - ஸந்தோஷிக்கப்போகிறது.

43. (ப - ரை) **प्रहृष्टकोयष्टिक कोकिलस्वनैः** - மிகவும் களிப்புடைய சிட்டுக் குருவி, குயில் இவைகளின் சப்தங்களால், **विनादितं** - நன்றாய் சப்திக்கப்பட்டதும், **मृगैः** - மான்களாலும், **मत्तैः** - மதங்கொண்ட, **बहुभिः** - அநேகங்களான, **कुञ्जरैः च** - யானைகளாலும், **सुरम्यं** - மிகவும் அழகானதாய், **शिवं** - மங்களகரமான, **तं वसुधाधरं** - அந்தப் பர்வதத்தை, **आसाद्य** - அடைந்து, **आश्रमं** - ஆச்ரமத்தில், **समावस** - வஸித்திருங்கள்.

42. (பொ - ரை) அந்த மலையில நதிகளிலும், சிறு ப்ரவாஹங்களிலும், தாழ் வரைகளிலும், கல்லுகள் ஒன்றோடொன்று சேர்ந்திருக்கும் இடங்களிலும், குஹைகளிலும், கல்பிளவு சந்துகளிலும், ஸீதையுடன் கூட நீர் ஸஞ்சரிக்கும் காலத்தில் உம்முடைய மனது ஸந்தோஷப்படும்.

43. (பொ - ரை) மிகவும் ஸந்தோஷமுடைய, சிட்டுக் குருவிகளுடையவும், குயில்களுடையவும் சப்தங்கள் நிறைந்தும், மான்களாலும், மதங்கொண்ட அநேகம் யானைகளாலும், மிகவும் அழகாய் பரிசுத்தமுமான, அந்த சித்ரகூட மலையில் ஆச்ரமம் செய்துகொண்டு நீர் வஸிக்கவேண்டும்.

## पञ्चपञ्चाशः सर्गः ॥ 55 ॥

उषित्वा रजनीं तत्र राजपुत्रावरिंदमौ ।
महर्षिमभिवाद्याथ जग्मतुस्तं गिरिं प्रति ॥ 1 ॥

तेषां चैव स्वस्त्ययनं महर्षिः स चकार ह ।
प्रस्थितांश्चैव तान्प्रेक्ष्य पिता पुत्रानिवान्वगात् ॥ 2 ॥

ततः प्रचक्रमे वक्तुं वचनं स महामुनिः ।
भरद्वाजो महातेजा रामं सत्यपराक्रमम् ॥ 3 ॥

1. (ப - ரை) **अरिंदमौ** - சத்ருக்களை அடக்குகிறவர்களான, **राजपुत्रौ** - அந்த ராஜகுமாரர்கள், **तत्र** - அந்த பரத்வாஜர் ஆச்ரமத்தில், **रजनीं** - இரவை, **उषित्वा** - வஸித்துவிட்டு, **अथ** - பிறகு, **महर्षिं** - பரத்வாஜரிஷியை, **अभिवाद्य** - ஸேவித்து விட்டு, **तं गिरिं प्रति** - அந்த மலையைக் குறித்து, **जग्मतुः** - புறப்பட்டார்கள்.

2. (ப - ரை) **सः महर्षिः** - அந்த மஹரிஷியும், **तेषां** - அவர்களுக்கு, **स्वस्त्ययनं च एव** - ஆசீர்வாதத்தையும், **ह** - ஸந்தோஷத்துடன், **चकार** - செய்தார். **प्रस्थितान्** - புறப்படுகின்ற, **तान्** - அவர்களை, **प्रेक्ष्य** - பார்த்து, **पिता** - பிதாவானவன், **पुत्रान् इव** - புத்திரர்களை, பின் செல்லுவதுபோல், **अन्वगात् चैव** - பின் சென்றார்.

3. (ப - ரை) **ततः** - பிறகு, **महातेजाः** - மஹாப்ரபாவமுடைய, **भरद्वाजः** - பரத்வாஜர் என்கிற, **सः महामुनिः** - அந்த மஹரிஷியானவர், **सत्यपराक्रमम्** - உண்மையான பராக்ரமமுடைய, **रामं** - ராமனைப் பார்த்து, **वचनं वक्तुं** - ஒரு வார்த்தை சொல்ல, **प्रचक्रमे** - ஆரம்பித்தார்.

1. (பொ - ரை) சத்ருக்களை வெல்லும் ஸ்வபாவமுடைய அந்த ராஜகுமாரர்கள், பரத்வாஜ மஹரிஷியின ஆச்ரமத்தில் அன்றிரவு வாஸம்செய்து பிறகு காலையில் எழுந்து, பரத்வாஜ ரிஷியை ஸேவித்து விட்டு, சித்திரகூட மலையைக் குறித்து புறப்பட்டார்கள்.

2. (பொ - ரை) அந்த பரத்வாஜ மஹரிஷி அவர்களுக்கு ஆசீர்வாதத்தையும் செய்து விட்டு அவர்கள் புறப்பட்டுப்போகும் பொழுது, பிதா, புத்திரனுடன் செல்வதுபோல் அவர்களுடன் சென்று வழி அனுப்பினார்.

3. (பொ - ரை) பிறகு, மஹாப்ரபாவமுடைய அந்த ப்ரத்வாஜ மஹா முனிவர், ஸத்யமான பராக்ரமமுடைய ராமனைப் பார்த்துச் சொல்ல ஆரம்பித்தார்.

गङ्गायमुनयोः संधिमासाद्य मनुजर्षभौ ।
कालिन्दीमनुगच्छेतां नदीं पश्चान्मुखाश्रिताम् ॥ 4 ॥
अथासाद्य तु कालिन्दीं शीघ्रस्रोतसमापगाम् ।
तस्यास्तीर्थं प्रचरितं पुराणं प्रेक्ष्य राघवौ ॥
तत्र यूयं प्लवं कृत्वा तरतांऽऽशुमतीं नदीम् ॥ 5 ॥
ततो न्यग्रोधमासाद्य महान्तं हरितच्छदम्
विवृद्धं बहुभिर्वृक्षैः श्यामं सिद्धोपसेवितम् । ॥ 6 ॥
तस्मै सीताऽञ्जलिं कृत्वा प्रयुञ्जीताऽऽशिषः शिवाः
समासाद्य तु तं वृक्षं वसेद्वातिक्रमेत वा । ॥ 7 ॥

4. (ப - ரை) **हे मनुजर्षभौ** - புருஷோத்தமர்களே! **गङ्गायमुनयोः** - கங்கையினுடையவும், யமுனையினுடையவும், **संधि** - சங்கம ஸ்தலத்தை, **आसाद्य** - அடைந்து, **पश्चान्मुखाश्रिताम्** - மேற்கு முகமாகப் போகின்ற, **कालिन्दीं नदीं** - யமுனா நதியை, **अनुगच्छेतां** - அநுஸரித்துச் செல்லுங்கள்.

5. (ப - ரை) **हे राघवौ** - ரகு குலத்து குமாரர்களே. **अथ** - பிறகு, **शीघ्रस्रोतसं** - வேகமாக ஓடுகின்ற ப்ரவாஹமுடைய, **कालिन्दीं आपगां** - யமுனா நதியை, **आसाद्य तु** - அடைந்து, **प्रचरितं** - ஜனங்களால் நடக்கப்பட்ட, **पुराणं** - பழையதான, **तस्याः तीर्थं** - அந்த யமுனையின் துறையை, **प्रेक्ष्य** - பார்த்து, **तत्र** - அங்கு, **यूयं** - நீங்கள், **प्लवं** - தெப்பத்தை, **कृत्वा** - செய்து, **आंशुमतीं नदीं** - யமுனா நதியை, **तरत** - தாண்டுங்கள்.

6—7. (ப - ரை) **ततः** - பிறகு, **हरितच्छदं** - பசுமையான இலைகளையுடையதாய், **बहुभिःवृक्षैः** - அநேகம் மரங்களோடு, **विवृद्धं** - வளர்ந்ததாய், **सिद्धोपसेवितं** -

---

4. (பொ - ரை) புருஷ ச்ரேஷ்டர்களே! கங்கையும் யமுனையும் சேரும் இடம் சென்று அங்கு கங்கா நதியின் வேகத்தினால் அடிபட்டு, கொஞ்சம் மேற்கு முகமாகச் செல்லுகின்ற யமுனா நதியை அநுஸரித்து நீங்களும் மேற்கு முகமாகச் செல்லுங்கள்.

5. (பொ - ரை) ராகவர்களே! வேகமாக ஓடும் ப்ரவாஹமுடைய யமுனா நதிக்குச் சென்று வெகுகாலமாக ஜனங்களின் போக்குவரத்தினால் நன்றாய் மிதிபட்டிருக்கிற அந்த யமுனா நதியின் பழைய துறையைப் பார்த்து, அவ்விடத்தில் நீங்கள் தெப்பம் கட்டி அதனால் யமுனா நதியைத் தாண்டுங்கள்.

6—7. (பொ - ரை) பிறகு, அநேக வ்ருக்ஷங்களோடு வளர்ந்து ஸித்தர்களால் வாஸம் பண்ணப்பட்டு, பசுமையான இலைகளையுடையதான ச்யாம மென்கிற

क्रोशमात्रं ततो गत्वा नीलं द्रक्ष्यथ काननम् ।
पलाशबदरीमिश्रं रम्यं वंशैश्च यामुनैः ॥ 8 ॥

स पन्थाश्चित्रकूटस्य गतः सुबहुशो मया ।
रम्यो मार्दवयुक्तश्च वनदावैर्विवर्जितः ॥ 9 ॥

---

ஸித்தர்களால் ஸேவிக்கப்பட்டதாய், **श्यामं** - ச்யாம மென்று பெயருடையதாய், **महान्तं** - பெரியதான, **न्यग्रोधं** - ஆலமரத்தை, **आसाद्य** - அடைந்து, **तस्मै** - அதன் பொருட்டு, **सीता** - ஸீதை, **अञ्जलिं कृत्वा** - கை கூப்பி, **शिवाः** - மங்களகரங்களான, **आशिषः** - ப்ரார்த்தனைகளை, **प्रयुञ्जीत** - செய்து கொள்ளவேண்டும். **तं वृक्षं** - அந்த வ்ருக்ஷத்தை, **समासाद्य तु** - அடைந்து, **वसेत् वा** - வஸித்தாலும் வஸிக்கலாம், **अतिक्रमेत वा** - அல்லது தாண்டிப்போனாலும் போகலாம்.

8. (ப - ரை) **ततः** - பிறகு, **क्रोशमात्रं गत्वा** - கூப்பிடுதூரம் போய், **पलाश बदरी मिश्रं** - பலாச மரங்களோடும், இலந்தை மரங்களோடும் கூடினதாயும், **यामुनैः** - யமுனைக் கரையிலுண்டான, **वंशैः** மூங்கில்களால், **रम्यं च** - அழகாயும், **नीलं** - கருப்பாயுமிருக்கிற, **काननं** - வனத்தை, **द्रक्ष्यथ** - பார்ப்பீர்கள்.

9. (ப - ரை) **सः** - அது, **चित्रकूटस्य** - சித்திரகூடத்திற்கு, **पन्थाः** - போகும் வழி, **मया** - என்னால், **सुबहुशः** - அநேகம்தடவை, **गतः** - போகப்பட்டிருக்கின்றது. **रम्यः** - அழகானது, **मार्दवयुक्तः च** - மென்மையோடுங் கூடியது. **वनदावैः** - காட்டுத் தீகளால், **विवर्जितः** - விடப்பட்டுமிருக்கிறது.

---

ஆலமரத்தின் ஸமீபம் சென்று அந்த மரத்தினிடத்தில் ஸீதை கை கூப்பிக்கொண்டு தனக்கு வேண்டிய மங்களகரங்களான ப்ரார்த்தனைகளைச் செய்து கொள்ளவேண்டும். ஒருக்கால் ஸீதைக்கு வழி நடந்துவந்த இளைப்பு இருந்தால் கொஞ்ச நேரம் அந்த மரத்து அடியிலேயே வாஸம் பண்ணினாலும் பண்ணலாம், இல்லாவிடில் அதைத் தாண்டிப் போகலாம்.

8. (பொ - ரை) பிறகு, கூப்பிடு தூரம் சென்று அங்கு பலாச மரங்களும், இலந்தை மரங்களும் நிறைந்து யமுனையின் கரையிலுண்டான மூங்கில்களால் அழகாயும், கருப்பாயுமிருக்கிற ஒரு வனத்தைப் பார்ப்பீர்கள்.

9. (பொ - ரை) அதுதான் சித்திரகூடத்திற்குப் போகும் வழி. நானும் பல தடவைகளில் அந்த வழியாகவே போயிருக்கிறேன். அது மிகவும் அழகானது. முள் முதலியவைகள் இல்லாமல், கால் வைப்பதற்கு ம்ருதுவான இளம் மணல்களோடும் கூடினது. அந்த வழியில் காட்டுத் தீ ஒருநாளும் கிடையாது.

इति पन्थानमावेद्य महर्षिः संन्यवर्तत ।
अभिवाद्य तथेत्युक्त्वा रामेण विनिवर्तितः ॥ 10 ॥

उपावृत्ते मुनौ तस्मिन्रामो लक्ष्मणमब्रवीत् ।
कृतपुण्याः स्म सौमित्रे मुनिर्यन्नोनुकम्पते ॥ 11 ॥

इति तौ पुरुषव्याघ्रौ मन्त्रयित्वा मनस्विनौ ।
सीतामेवाग्रतः कृत्वा कालिन्दीं जग्मतुर्नदीम् ॥ 12 ॥

10. (ப - ரை) **इति** என்று, **सः महर्षिः** - அந்த மஹரிஷியானவர், **पन्थानं** - வழியை, **आवेद्य** - தெரிவித்து, **तथा इति** - அப்படியே ஆகட்டுமென்று, **उक्त्वा** - சொல்லி, **रामेण** - ராமனால், **अभिवाद्य** - ஸேவித்து, **विनिवर्तितः** - திருப்பப்பட்டவராய், **न्यवर्तत** - திரும்பினார்.

11. (ப - ரை) **तस्मिन् मुनौ** - அந்த மஹரிஷியானவர், **उपावृत्ते (सति)** - திரும்பிப் போன வளவில், **सौमित्रे** - இலக்குமணா, **मुनिः** - ரிஷி, **नः** - நம்மை, **यत्** - யாதொரு காரணத்தினால், **अनुकम्पते** - அநுக்ரஹிக்கின்றாரோ, (**तत्** - ஆதலால்) **कृतपुण्याः स्म** - (நாம்) பாக்யம் செய்திருக்கிறோம், **इति** - என்று, **रामः** - ஸ்ரீராமன், **लक्ष्मणं** - இலக்குமணனைப் பார்த்து, **अब्रवीत्** - சொன்னார்.

12. (ப - ரை) **मनस्विनौ** - திருடமான மனதுடைய, **तौ पुरुषव्याघ्रौ** - அந்த புருடசரேஷ்டர்கள். **इति** - இவ்வாறு, **मन्त्रयित्वा** - சொல்லிக்கொண்டு, **सीतां** - ஸீதையை, **अग्रतः एव कृत्वा** - முன்னேயே நடத்திக்கொண்டு, **कालिन्दीं नदीम्** - யமுனா நதியை, **जग्मतुः** - அடைந்தார்கள்.

10. (பொ - ரை) இவ்வாறு அந்த பரதவாஜ மஹரிஷியும், ஸ்ரீராமனுக்கு வழியைக் காண்பித்துவிட்டு, அப்படியே என்று ராமனும் அங்கீகரித்து, நமஸ்காரம் பண்ணி, நாங்கள் போகிறோம். நீர் ஆச்ரமத்திற்கு எழுந்தருளவேண்டுமென்று சொல்லி ஸ்ரீராமனால் திருப்பப்பட்டார்.

11. (பொ - ரை) இவ்விதம் சொல்லிவிட்டு, பரத்வாஜ மஹரிஷியும ஆச்ரமத்தைக் குறித்துத் திரும்பி வந்தவளவில், அப்பா! இலக்குமணா! இந்த மஹரிஷி நம்மிடத்தில் பூர்ணமாக அநுக்ரஹம் செய்கின்றபடியால் நாம், மிக்க பாக்யசாலிகளாக விருக்கிறோம் என்று இலக்குமணனைப்பார்த்து ஸ்ரீராமன் சொன்னார்.

12. (பொ - ரை) திருடமான மனதையுடைய அந்த புருடோத்தமர்களிருவரும், இவ்வாறு சொல்லிக்கொண்டு. ஸீதையையும் முன்னாலே நடத்திக்கொண்டே யமுனா நதிக்குச் சென்றார்கள்.

अथाऽऽसाद्य तु कालिन्दीं शीघ्रस्रोतोवहां नदीम् ।
चिन्तामापेदिरे सर्वे नदीजलतितीर्षवः ॥ 13 ॥

तौ काष्ठसंघाटमथो चक्रतुः सुमहाप्लवम् ।
शुष्कैर्वंशैः समास्तीर्णमुशीरैश्च समावृतम् ॥ 14 ॥

ततो वेतसशाखाश्च जम्बूशाखाश्च वीर्यवान् ।
चकार लक्ष्मणश्छित्वा सीतायाः सुखमासनम् ॥ 15 ॥

13. (ப - ரை) **अथ** - பிறகு, **सर्वे** - எல்லோரும், **शीघ्रस्रोतोवहां** - வேகமாக ஓடுகின்ற ப்ரவாஹத்தை உடைய, **कालिन्दीं नदीम्** - யமுனை நதியை, **आसाद्य तु** - அடைந்து, **नदीजलतितीर्षवः** - நதியின் ஜலத்தைத் தாண்ட எண்ண முடையவர்களாய், **चिन्तां** - சிந்தையை, **अपेदिरे** - அடைந்தார்கள்.

14. (ப - ரை) **अथो** - பிறகு, **तौ** - அவர்கள், **काष्ठसंघाटं** - கட்டைகளின் கூட்டத்தை, **शुष्कैः** - உலர்ந்த, **वंशैः** - மூங்கில்களால், **समास्तीर्णं** - நன்றாய் பரப்பப் பட்டும், **उशीरैः** - விலாமிச்சம் வேர்களால், **समावृतं च** - நன்றாய் பரப்பப்பட்டுமிருக்கிற, **सुमहाप्लवं** - பெரிய தெப்பமாக, **चक्रतुः** - செய்தார்கள்.

15. (ப - ரை) **ततः** - பிறகு, **वीर्यवान्** - பராக்ரமசாலியான, **लक्ष्मणः** - இலக்குமணன், **वेतसशाखाः च** - நீர்வஞ்சி கிளைகளையும், **जम्बूः शाखाः च** - நாவல் கிளைகளையும், **छित्वा** - முறித்து, **सीतायाः** - ஸீதைக்கு, **सुखं आसनं** - ஸுகமான ஆஸனத்தை, **चकार** - செய்தார்.

---

13. (பொ - ரை) பிறகு, ராமன், லக்குமணன், ஸீதை இவர்கள், வேகமாக ஓடுகின்ற ப்ரவாஹமுடைய யமுனை நதிக்குச் சென்று அந்த நதியைத் தாண்ட வேண்டுமென்று எண்ணங்கொண்டு, எவ்விதமாகத் தாண்டுவோம் என்று மனதில் கொஞ்சம் விசாரங் கொண்டார்கள்.

14. (பொ - ரை) பிறகு, ராமனும் இலக்குமணனும், அங்கிருக்கும் உலர்ந்த மரக்கட்டைகளை ஒன்றுசேர்த்து கட்டி, அதில் உலர்ந்த மூங்கில்களையும் பரப்பி உட்காருவதற்கு மெதுவாயிருப்பதற்காக விலாமிச்சவேர்களையும் பரப்பி பெரிய ஒரு தெப்பமாகச் செய்துவிட்டார்கள்.

15. (பொ - ரை) பிறகு, ஸமர்த்தரான இலக்குமணன், நீர்வஞ்சிக்கிளைகளையும் நாவல்கிளைகளையும் முறித்து அவைகளால், ஸீதைக்கு ஸுகமான ஆஸனத்தைச் செய்தார்.

तत्र श्रियमिवाचिन्त्यां रामो दाशरथिः प्रियम् ।
ईषत्संलज्जमानां तामध्यारोपयत प्लवम् ॥ 16 ॥

पार्श्वे च तत्र वैदेह्या वसने भूषणानि च ।
प्लवे कठिनकाजं च रामश्चक्रे सहाऽऽयुधैः ॥ 17 ॥

आरोप्य प्रथमं सीतां संघाटं परिगृह्य तौ ।
ततः प्रतेरतुर्यत्तौ वीरौ दशरथात्मजौ ॥ 18 ॥

16. (ப - ரை) **तत्र** - அப்பொழுது, **दाशरथिः** - தசரத குமாரரான, **सः रामः** - ஸ்ரீராமன், **श्रियं इव** - லக்ஷ்மியைப்போல், **अचिन्त्यां** - அளவிறந்த அழகுடையவளாய், **ईषत्** - கொஞ்சம், **लज्जमानां** - வெட்கப்பட்டுக் கொண்டிருக்கிற, **प्रियां** - தன் இஷ்ட நாயகியை, **प्लवं** - தெப்பத்தை **अध्यारोपयत** - ஏற்றினார்.

17. (ப - ரை) **तत्र प्लवे** - அந்தத் தெப்பத்தில் **वैदेह्याः** - ஸீதையினுடைய, **पार्श्वे च** - பக்கத்தில், **वसने** - வஸ்த்ரங்களையும், **भूषणानि च** - ஆபரணங்களையும், **कठिनक आजं च** - களைக்கொட்டு மண்வெட்டி, ஆட்டுத்தோல் தைப்த்த சிறு பெட்டி இவைகளையும், **आयुधैः सह** - ஆயுதங்களுடன் கூட, **रामः** - ஸ்ரீராமன், **चक्रे** - வைத்தார்.

18. (ப - ரை) **ततः** - பிறகு, **तौ दशरथात्मजौ** - அந்த தசரத குமாரர்களான, **वीरौ** - வீரர்கள், **प्रथमं** - முன்னம், **सीतां** - ஸீதையை, **आरोप्य** - ஏற்றிவிட்டு, **संघाटं** - தெப்பத்தை, **परिगृह्य** - பிடித்துக்கொண்டு, **यत्तौ** - ஜாக்ரதையுள்ளவர்களாய் **प्रतेरतुः** - தாண்டினார்கள்.

---

16. (பொ - ரை) அப்பொழுது தசரதகுமாரரான அந்த ஸ்ரீராமன், மஹாலக்ஷ்மியைப்போல் அளவிறந்த அழகுடையவளாய் தான் கைப்பிடித்தபடியால் கொஞ்சம் வெட்கப்பட்டுக் கொண்டிருக்கிற அந்த ஸீதையை தெப்பத்தில் ஏற்றினார்.

17. (பொ - ரை) ராமன், அந்தத் தெப்பத்தில் ஸீதையின் பக்கத்தில் அவள் வஸ்த்ரங்களையும், ஆபரணங்களையும் காய்கிழங்கு வெட்டுவதற்காகக் கொண்டுவந்த மண்வெட்டியையும், ஆட்டுத்தோலால் மூடப்பட்டு தைத்திருக்கிற சிறு புட்டில் கூடையையும், ஆயுதங்களுடன் வைத்தார்.

18. (பொ - ரை) பிறகு வீரர்களான அந்த தசரத குமாரர்கள் மிகவும் ஜாக்ரதையுடன் முன்னே ஸீதையை தெப்பத்தில் ஏற்றிவிட்டு, தாங்களும் அதைப் பிடித்துக்கொண்டு தெப்பத்தில் ஏறினார்கள்.

कालिन्दीमध्यमायाता सीतात्वेनामवन्दत ॥ 18½ ॥
स्वस्ति देवि तरामि त्वां पारयेन्मे पतिर्व्रतम् ॥ 19 ॥
यक्ष्ये त्वां गोसहस्रेण सुराघटशतेन च ।
स्वस्ति प्रत्यागते रामे पुरीमिक्ष्वाकुपालिताम् ॥ 20 ॥
कालिन्दीमथ सीता तु याचमाना कृताञ्जलिः ।
तीरमेवाभिसंप्राप्ता दक्षिणं वरवर्णिनी ॥ 21 ॥

---

18½. (ப - ரை) **सीता तु** - ஸீதையானவள், **कालिन्दीमध्यं** - யமுனையின் மத்தியில், **आयाता (सती)** - வந்துகொண்டு, **एनां** - இந்த யமுனையை, **अवन्दत** - நமஸ்கரித்தாள்.

19—20. (ப - ரை) **हे देवि** - அம்மா! **त्वां** - உன்னை, **स्वस्ति** - க்ஷேமமாக, **तरामि** - தாண்டுகிறேன், **मे पतिः** - என்னுடைய பர்த்தா, **व्रतं** - வனவாஸ வ்ரதத்தை, **पारयेत्** - முடிக்கவேண்டும், **रामे** - ஸ்ரீராமன், **इक्ष्वाकुपालितां** - இக்ஷ்வாகு வம்சத்து அரசர்களால் ஆளப்பட்ட, **पुरीं** - நகரத்தைக் குறித்து, **स्वस्ति** - க்ஷேமமாக, **प्रत्यागते (सति)** - திரும்பிவந்தவளவில், **त्वां** - உன்னை, **गोसहस्रेण** - ஆயிரம் பசுமாடுகளாலும், **सुराघटशतेन च** - நூறு மத்யபாண்டங்களாலும், **यक्ष्ये** - பூஜிப்பேன்.

21. (ப - ரை) **इति** - என்று, **वरवर्णिनी** - உத்தமையான, **सीता तु** - ஸீதையானவள், **कृताञ्जलिः (सती)** - கைகூப்பினவளாய்க்கொண்டு, **कालिन्दीं** - யமுனா நதியை, **याचमाना** - வேண்டிக்கொண்டு, **अथ** - பிறகு, **दक्षिणं तीरं एव** - தென்கரையையே, **अभिसंप्राप्ता** - வந்து சேர்ந்துவிட்டாள்.

18½. (பொ - ரை) ஸீதை, தெப்பம் ஏறி யமுனா நதியின் நடுவில் வந்துகொண்டிருக்கும்பொழுது அந்த நதியை நமஸ்கரித்தாள்.

19—20. (பொ - ரை) அம்மா, நான் உன்னை க்ஷேமமாக தாண்டுகிறேன். என்னுடைய பர்த்தாவான ஸ்ரீராமன் பதிநான்கு வருஷம் வனவாஸ வ்ரதத்தை, க்ரமமாக முடித்துவிட்டு, இக்ஷ்வாகு வம்சத்து அரசர்கள் ஆண்டுவந்த அயோத்திமா நகரத்தைக் குறித்து க்ஷேமமாகத் திரும்பி வந்தால நான் உன்னுடைய கரையில் உன்னைக் குறித்து ஆயிரம் கோதானங்களையும், ப்ராம்மணர்களுக்கு தானம் செய்து, அநேகம் கள் குடங்களும் உனக்கு நைவேத்யம் செய்து உன்னை ஆராதிப்பேன்.

21. (பொ - ரை) இவ்வாறு உத்தமையான ஸீதை கைகூப்பி யமுனா நதியை வேண்டிக்கொண்டு தென் கரைக்கே வந்து சேர்ந்து விட்டாள்.

ततः प्लवेनांऽऽशुमतीं शीघ्रगामूर्मिमालिनीम् ।
तीरजैर्बहुभिर्वृक्षैः संतेरुर्यमुनां नदीम् ॥ 22 ॥

ते तीर्णाः प्लवमुत्सृज्य प्रस्थाय यमुनावनात् ।
श्यामं न्यग्रोधमासेदुः शीतलं हरितच्छदम् ॥ 23 ॥

न्यग्रोधं तमुपागम्य वैदेही वाक्यमब्रवीत् ॥ 24 ॥

---

22. (ப - ரை) **ततः** - பிறகு, **शीघ्रगां** - வேகமாய் ஓடுகின்றதாயும், **ऊर्मिमालिनीं** - அலைகளின், வரிசையை உடையதாய், **तीरजैः** - கரையில் முளைத்திருக்கின்ற, **बहुभिः वृक्षैः** - அநேகம் வ்ருக்ஷங்களோடு (கூடியதாய்), **आंशुमतीं** - (**अंशुमतः इमां**) ஸூர்யனுடைய பெண்ணுமான, **यमुनां नदीं** - யமுனா நதியை, **प्लवेन** - தெப்பத்தினுல், **संतेरुः** - தாண்டினுர்கள்.

23. (ப - ரை) **तीर्णाः** - யமுனையை (தாண்டின), **ते** - அவர்கள், **प्लवं** - தெப்பத்தை, **उत्सृज्य** - விட்டுவிட்டு, **यमुनावनात्** - யமுனையின் கரையிலிருக்கும் வனத்திலிருந்து, **प्रस्थाय** - புறப்பட்டு, **शीतलं** - குளிர்ந்ததாய், **हरितच्छदम्** - பசுத்த இலைகளை யுடையதுமான, **श्यामं न्यग्रोधं** - ச்யாமம் என்கிற ஆலமரத்தை, **आसेदुः** - அடைந்தார்கள்.

24. (ப - ரை) **तं न्यग्रोधं** - அந்த ஆலமரத்தை, **उपागम्य** - ஸமீபத்தில் அடைந்து, **वैदेही** - ஸீதையானவள், **वाक्यं** - ஒரு வார்த்தையை, **अब्रवीत्** -

22. (பொ - ரை) பிறகு வேகமாய் ஓடுகின்றதாய், அலைகளின் வரிசை நிறைந்ததாய், கரைகளில் முளைத்த அநேகம் வ்ருக்ஷங்களோடு கூடினதாய், ஸூர்யனுடைய புத்ரியுமான, யமுனா நதியை ஓடத்தினுல் தாண்டினுர்கள்.

23. (பொ - ரை) அவர்கள், யமுனையைத் தாண்டி ஓடத்திலிருந்து இறங்கி யமுனைக் கரையில் இருக்கும் வனத்திலிருந்து புறப்பட்டு பசுத்த இலைகளுடையதாய் குளிர்ந்திருக்கிற ச்யாமம் என்கிற ஆலமரத்திற்கு வந்து சேர்ந்தார்கள்.

24. (பொ - ரை) அந்த ஆலமரத்தின் ஸமீபத்திற்கு வந்ததும் ஸீதை ஒரு வார்த்தை சொன்னுள்.

नमस्तेऽस्तु महावृक्ष पारयेन्मे पतिर्व्रतम् ।
कौसल्यां चैव पश्येयं सुमित्रां च यशस्विनीम् ॥
इति सीताऽञ्जलिं कृत्वा पर्यगच्छद्वनस्पतिम् ॥ 25 ॥

*अवलोक्य ततः सीता मायाचन्तीमनिन्दिताम् ।
दयितां च विधेयां च रामो लक्ष्मणमब्रवीत् ॥ 26 ॥

25. (ப - ரை) **हे महावृक्ष** - மிகவும் மஹிமை பொருந்திய வ்ருக்ஷமே! **ते** - உமக்கு, **नमः अस्तु** - நமஸ்காரம் உண்டாகட்டும். **मे पतिः** - என்னுடைய பர்த்தா, **व्रतम्** - வனவாஸ வ்ரதத்தை, **पारयेत्** - முடிக்க வேண்டும், **कौसल्यां चैव** - கௌஸல்யையையும், **यशस्विनीम्** - கீர்த்தியையுடையவளான, **सुमित्रां च** - ஸுமித்ரையையும், **पश्येयं** - நான் பார்க்கவேண்டும். **इति** - என்று (சொல்லிவிட்டு), **सीता** - ஸீதை, **अञ्जलिं कृत्वा** - கை கூப்பிக்கொண்டு, **वनस्पतिम्** - அந்த வ்ருக்ஷத்தை, **पर्यगच्छत्** - ப்ரதக்ஷிணம செய்தாள்.

26. (ப - ரை) **ततः** - பிறகு, **अनिन्दितां** - பழிப்பில்லாதவளாயும், **दयितां च** - இஷ்டையாயும், **विधेयां च** - தனக்கு வசப்பட்டவளாயும், **आयाचन्तीं** - கோரிக்கையை வேண்டுகின்ற, **सीतां** - ஸீதையை, **अवलोक्य** - பார்த்து, **रामः** - ராமன், **लक्ष्मणं** - இலச்சுமணனைக் குறித்து, **अब्रवीत्** - சொன்னார்.

25. (பொ - ரை) மஹாப்ரபாவமுடைய வ்ருக்ஷமே! உமமை நான் நமஸ்கரிக்கிறேன். என்னுடைய பர்த்தா வனவாஸ வ்ரதத்தைக் குறைவில்லாமல் முடிக்க வேண்டும். கௌஸல்யா தேவியையும், பெரும் கீர்த்தியுடைய ஸுமித்ரா தேவியையும் நான் பார்க்கவேண்டும், என்று இவ்வாறு சொல்லிவிட்டு ஸீதை கை கூப்பிக்கொண்டு அந்த ஆலமரத்தை ப்ரதக்ஷிணம் செய்தாள்.

26. (பொ - ரை) பிறகு, ஸ்ரீராமன் பழிப்பில்லாதவளாய், தனக்கு மிகவும் இஷ்டமானவளாய், தான் சொன்னபடி நடக்கத் தகுந்தவளாய் ஆலமரத்தினிடத்தில் தன் மனோரதங்களை வேண்டிக்கொண்டிருக்கின்ற ஸீதையைப் பார்த்து விட்டு இலக்குமணனை நோக்கிசொன்னார்.

---

* **अवलोक्य** - பார்த்து. அதாவது ஸீதை வழிநடந்த சரமத்தினால் இங்கேயே கொஞ்ச நேரம் தங்கியிருக்க வேண்டுமென்று நினைக்கிறாளா அல்லது தங்காமல் நேராகவே போகலாம் என்று நினைக்கிறாளா என்று அவள் அபிப்ராயத்தை அறிந்து என்று அர்த்தம்.

सीतामादाय गच्छ त्वमग्रतो भरताग्रज ।
पृष्ठतोऽहं गमिष्यामि सायुधो द्विपदां वर ॥ 27 ॥

यद्यत्फलं प्रार्थयते पुष्पं वा जनकात्मजा ।
तत्तत्प्रदद्या वैदेह्या यत्रास्या रमते मनः ॥ 28 ॥

गच्छतोस्तु तयोर्मध्ये बभूव जनकात्मजा ।
मातङ्गयोर्मध्यगता शुभा नागवधूरिव ॥ 29 ॥

27. (ப - ரை) **हे भरताग्रज (भरत: अग्रज: यस्य सः)** - பரதனை தமயனாக உடையவனே ! **द्विपदां वर** - மனிதர்களுக்குள் சிறந்தவனே, **त्वं** - நீ, **सीतां** - ஸீதையை, **आदाय** - அழைத்துக்கொண்டு, **अग्रतः** - முன்னே, **गच्छ** - போ, **अहं** - நான், **सायुधः** - ஆயுதமுடையவனாய், **पृष्ठतः** - பின்னால், **गमिष्यामि** - வருவேன்.

28. (ப - ரை) **जनकात्मजा** - ஸீதை, **यत् यत् फलं** - எந்த எந்த பழத்தையோ, **पुष्पं वा** - புஷ்பத்தையோ, **प्रार्थयते** - கேட்கிறாளோ, **यत्र** - எந்த வஸ்துவில், **अस्याः वैदेह्याः** - இந்த ஸீதையின், **मनः** - மனது, **रमते** - ஆசைப்படுகிறதோ, **तत् तत्** - அதனை, **प्रदद्याः** - கொடு.

29. (ப - ரை) **गच्छतोः तु** - போய்க்கொண்டிருக்கிற, **तयोः** - அவர்களுடைய, **मध्ये** - நடுவில், **जनकात्मजा** - (போகின்ற) ஸீதையானவள், **मातङ्गयोः** - இரண்டு யானைகளுடைய, **मध्यगता** - நடுவில் போகின்ற, **शुभा** - அழகான, **नागवधूः इव** - பெண் யானை போல், **बभूव** - இருந்தாள்.

27. (பொ - ரை) பரதன் தம்பியான புருடோத்தமா ! நீ ஸீதையை அழைத்துக்கொண்டு முன்னே போ, நான் ஆயுதத்துடன் உங்கள் பின்னால் வருகின்றேன்.

28. (பொ - ரை) ஜனகராஜன் புத்ரியான ஸீதை எந்த எந்த பழத்தையும், புஷ்பத்தையும் கேட்பாளோ, எந்த வஸ்துவை இவளது மனது ஆசைப்படுகிறதோ அதனை நீ அவளுக்குக் கொடுக்கவேண்டும்.

29. (பொ - ரை) அந்த ராம லக்ஷ்மணர்கள் இரண்டு பேரும் போகும் பொழுது அவர்கள் நடுவில் போகின்ற ஜனக ராஜன் புத்ரியைப் பார்த்தால், இரண்டு யானைகள் நடுவில் போகின்ற அழகான பெண் யானை போலிருந்தது.

एकैकं पादपं गुल्मं लतां वा पुष्पशालिनीम् ।
अदृष्टपूर्वां पश्यन्ती रामं पप्रच्छ साऽबला ॥ 30 ॥

रमणीयान्बहुविधान्पादपान्कुसुमोत्कटान् ।
सीतावचनसंरब्ध आनयामास लक्ष्मणः ॥ 31 ॥

विचित्रवालुकजलां हंससारसनादिताम् ।
रेमे जनकराजस्य तदा प्रेक्ष्य सुता नदीम् ॥ 32 ॥

---

30. (ப - ரை) **सा अबला** - அந்த ஸ்த்ரீயானவள், **एकैकं** - ஒவ்வொரு, **पादपं** - வ்ருக்ஷத்தையோ, **गुल्मं** - புதரையோ, **पुष्पशालिनीम्** - புஷ்பங்களோடு கூடியதாய், **अदृष्टपूर्वां** - இதற்குமுன் பார்த்திராததுமான கொடியையோ, **पश्यन्ती** - பார்த்தவளாய், **रामं** - ராமனை, **पप्रच्छ** - கேட்டாள்.

31. (ப - ரை) **लक्ष्मणः** - இலக்குமணன், **सीतावचनसंरब्धः** - ஸீதையின் வார்த்தையினால் பரபரப்புடையவராய், **कुसुमोत्कटान्** - புஷ்பங்களால் நிறைந்ததாய், **रमणीयान्** - அழகுள்ளதாய், **बहुविधान्** - பலவிதங்களான, **पादपान्** - வ்ருக்ஷங்களின் கிளைகளை, **आनयामास** - கொண்டுவந்தார்.

32. (ப - ரை) **तदा** - அப்போது, **जनकराजस्य सुता** - ஜனக மகா ராஜரின் திருக்குமாரியான ஸீதையும், **विचित्रवालुकजलां** - ஆச்சர்யமான மணலையும், ஜலத்தையும் உடையதாய், **हंस सारस नादिताम्** - ஹம்ஸங்களினாலும், ஸாரஸ பக்ஷிகளினாலும் சபதிக்கப்பட்டதுமான, **नदीम्** - அந்த யமுனா நதியை, **प्रेक्ष्य** - பார்த்து, **रेमे** - ஸந்தோஷித்தாள்.

30. (பொ - ரை) அந்த ஸீதை ஒவ்வொரு மரத்தையோ, புதரையோ, புஷ்பங்கள் நிறைந்ததாய் இதற்குமுன் தான் பார்த்திராததுமான கொடிகளையோ கண்டால் ராமா! இது என்ன மரம், இது என்ன புதர், இது என்ன கொடி என்று கேட்டுக் கொண்டே வருவாள்.

31. (பொ - ரை) இலக்குமணன் ஸீதையின் வார்த்தையினால் மிக பரபரப்புடன் பூங்கொத்துக்களையுடைய அழகான பலவிதங்களான வ்ருக்ஷங்களின் கிளைகளை கொண்டுவந்தார்.

32. (பொ - ரை) அப்பொழுது ஜனகராஜரின் குமாரியான ஸீதை, அழகான மணல்களும், ஜலங்களுமுள்ளதாய், ஹம்ஸங்களும், ஸாரஸ பக்ஷிகளும் சப்தித்துக் கொண்டிருக்கின்ற அந்த யமுனா நதியைப் பார்த்து ஸந்தோஷ மடைந்தாள்.

क्रोशमात्रं ततो गत्वा भ्रातरौ रामलक्ष्मणौ ।
बहून्मेध्यान्मृगान्हत्वा चेरतुर्यमुनावने ॥ 33 ॥
विहृत्य ते बर्हिणपूगनादिते शुभे वने वानरवारणायुते ।
समं नदीवप्रमुपेत्य संमतं निवासमाजग्मुरदीनदर्शनाः ॥ 34 ॥

**इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे**
**पञ्चपञ्चाशः सर्गः ॥ 55 ॥**

33. (ப - ரை) **ततः** - பிறகு, **भ्रातरौ** - ப்ராதாக்களான, **रामलक्ष्मणौ** - அந்த ராம லக்ஷ்மணர்கள், **क्रोशमात्रं** - கூப்பிடு தூரம், **गत्वा** - சென்று, **मेध्यान्** - பரிசுத்தங்களான, **बहून् मृगान्** - அநேகம் ம்ருகங்களை, **हत्वा** - கொன்று, **यमुना वने** - யமுனைக்கரையின் வனத்தில், **चेरतुः** - பக்ஷித்தார்கள்.

34. (ப - ரை) **ते** - அவர்கள், **बर्हिणपूगनादिते** - மயில்களின் கூட்டங்களால் சப்திக்கப்பட்ட, **वानरवारण** - **आयुते** - வாநரங்களோடும், யானைகளோடும் கூடினதான, **शुभे वने** - அழகான வனத்தில், **विहृत्य** - ஸஞ்சாரம் செய்துகொண்டு, **समं** - மேடு பள்ளமில்லாத, **नदीवप्रं** - நதியினுடைய கரையை, **उपेत्य** - அடைந்து, **अदीनदर्शनाः (सन्तः)** - தைன்யமில்லாத பார்வையையுடையவர்களாய்க் கொண்டு, **संमतं** - (ஸீதையின் மனதிற்கு) ஒப்பினதான, **निवासं** - வஸிக்குமிடத்தைக் (குறித்து), **आजग्मुः** - வந்தார்கள்.

33. (பொ - ரை) பிறகு, ப்ராதாக்களான ராம லக்ஷ்மணர்கள், கூப்பிடு தூரம் சென்று பரிசுத்தங்களான அநேகம் ம்ருகங்களை அடித்து யமுனா நதிக்கரையின் வனத்தில் ஸீதையுடன் புஜித்தார்கள்.

34. (பொ - ரை) அம்மூன்று பேர்களும் மயில் கூட்டங்கள் சப்தித்தும், வாநரங்களும், யானைகளும் நிறைந்துமிருக்கிற அழகான அந்த வனத்தில் விளையாடுவதுபோல் ஸஞ்சரித்து மேடுபள்ளமில்லாமல் ஸமபூமியான நதியின் கரைக்குச் சென்று, மஹா உத்ஸாஹத்துடன் ஸீதையின் மனதிற்குப பிடித்ததான வஸிக்குமிடத்தைக் குறித்துச் சென்றார்கள்.

षट्पञ्चाशः सर्गः ॥ 56 ॥

अथ रात्र्यां व्यतीतायामवसुप्तमनन्तरम् ।
प्रबोधयामास शनैर्लक्ष्मणं रघुनन्दनः ॥ 1 ॥

सौमित्रे शृणु वन्यानां वल्गु व्याहरतां स्वनम् ।
संप्रतिष्ठामहे कालः प्रस्थानस्य परंतप ॥ 2 ॥

स सुप्तः समये भ्रात्रा लक्ष्मणः प्रतिबोधितः ।
जहौ निद्रां च तन्द्रीं च प्रसक्तं च पथि श्रमम् ॥ 3 ॥

---

1. (ப - ரை) **अथ** - பிறகு, **रात्र्यां** - இரவு, **व्यतीतायां** - கழிந்தவளவில், **अनन्तरम्** - (தான் விழித்த) பிறகு, **अवसुप्तं** - கொஞ்சம் தூங்கிக்கொண்டிருக்கிற, **लक्ष्मणं** - இலக்குமணனை, **रघुनन्दनः** - ராகவன், **शनैः** - மெள்ள, **प्रबोधयामास** - எழுப்பினார்.

2. (ப - ரை) **परंतप** - சத்ருக்களைத் தபிக்கச் செய்கின்ற, **सौमित्रे** - இலக்குமணா! **वल्गु** - அழகாய், **व्याहरतां** - கூவுகின்ற, **वन्यानां** - காட்டிலிருக்கிற கிளி, குயில் முதலியவைகளுடைய, **स्वनम्** - சப்தத்தை, **शृणु** - கேள். **प्रस्थानस्य** - புறப்படுவதற்கு, **कालः** - காலமானது, (**प्राप्तः** - வந்துவிட்டது), **संप्रतिष्ठामहे** - புறப்படுவோம்.

3. (ப - ரை) **सुप्तः** - தூங்கிக்கொண்டிருந்த, **सः लक्ष्मणः** - அந்த இலக்குமணன், **समये** - தகுந்த காலத்தில், **भ्रात्रा** - தமயனால், **प्रतिबोधितः (सन्)** - எழுப்பப்பட்டவராய், **निद्रां च** - தூக்கத்தையும், **तन्द्रीं च** - சோம்பலையும், **पथि** - வழியில், **प्रसक्तं** - நேர்ந்ததான, **श्रमं च** - இளைப்பையும், **जहौ** - விட்டார்.

---

1. (பொ - ரை) பிறகு, இரவு கழிந்தவுடன், ஸ்ரீரகுநந்தனன் விழித்துக் கொண்டு, அதன் பிறகு கொஞ்சமாக தூங்கிக்கொண்டிருக்கிற இலக்குமணனை மெள்ள எழுப்பினார்.

2. (பொ - ரை) சத்ருக்களை வெல்லுகின்ற இலக்குமணா! அழகாய் சப்திக்கின்ற காட்டிலுள்ள, கிளி குயில் முதலான பக்ஷிகளின் சப்தத்தைக் கேள். நாம் புறப்படும் காலம் வந்துவிட்டது. இனி புறப்படுவோம்.

3. (பொ - ரை) தூங்கிக் கொண்டிருந்த அந்த இலக்குமணன் விழித்துக் கொள்ளவேண்டிய ஸமயத்தில் தமயனால் எழுப்பப்பட்டு, தூக்கத்தையும், சோம்பலையும், வழியில் நேர்ந்த ச்ரமத்தையும் விட்டுவிட்டார்.

தூங்கிக் கொண்டிருக்கிற இலக்குமணனை ஸ்ரீராமன் எழுப்பின பிறகு இலக்குமணன் விழித்துக்கொண்டு, அன்று முதல் தூங்குவதையும், சோம்பலாயிருப்பதையும், வழி நடந்து உண்டான ச்ரமத்திற்கு உபசாரம் செய்து கொள்ளுவதையும் விட்டு விட்டாரென்றும் சொல்லலாம்.

तत उत्थाय ते सर्वे स्पृष्ट्वा नद्याः शिवं जलम् ।
पन्थानमृषिणाऽऽदिष्टं चित्रकूटस्य तं ययुः ॥ 4 ॥

ततः संप्रस्थितः काले रामः सौमित्रिणा सह ।
सीतां कमलपत्राक्षीमिदं वचनमब्रवीत् ॥ 5 ॥

आदीप्तानिव वैदेहि सर्वतः पुष्पितान्नगान् ।
स्वैः पुष्पैः किंशुकान्पश्य मालिनः शिशिरात्यये ॥ 6 ॥

4. (ப - ரை) **ततः** - பிறகு, **ते सर्वे** - அவர்களெல்லோரும், **उत्थाय** - எழுந்து, **शिवं** - சுத்தமான, **नद्याः जलम्** - நதியின் ஜலத்தை, **स्पृष्ट्वा** - ஸ்பர்சித்து (ஸ்நானம் முதலியவைகளைச் செய்துவிட்டு), **ऋषिणा** - பரத்வாஜ மஹரிஷியினால், **आदिष्टं** - தெரிவிக்கப்பட்ட, **चित्रकूटस्य** - சித்திரகூட மலையினுடைய, **तं पन्थानं** - அந்த வழியை, **ययुः** - அடைந்தார்கள்.

5. (ப - ரை) **ततः** - பிறகு, **रामः** - ஸ்ரீராமன், **काले** - காலத்தில், **सौमित्रिणा सह** - இலக்குமணனோடு கூட, **संप्रस्थितः (सन्)** - புறப்பட்டவனாய், **कमलपत्राक्षीं** - தாமரை இதழ்போன்ற கண்களையுடைய, **सीतां** - ஸீதையை (ப்பார்த்து), **इदं वचनं** - இந்த வார்த்தையை, **अब्रवीत्** - சொன்னார்.

6. (ப - ரை) **हे वैदेहि** - ஸீதே! **शिशिर - अत्यये** - சிசிரருது கழிந்த பிறகு (வஸந்த காலத்தில்), **सर्वतः** - நாற்புறங்களிலும், **पुष्पितान्** - புஷ்பங்களுள்ளவைகளாய், **आदीप्तान् इव (स्थितान्)** - எறிகின்றவைகள் போலும், **स्वैः पुष्पैः** - தங்கள் புஷ்பங்களால், **मालिनः** - மாலை அணிந்துகொண்டவைகள் போலுமிருக்கின்ற, **किंशुकान् नगान्** - பலாச வ்ருக்ஷங்களை, **पश्य** - பார்.

4. (பொ - ரை) பிறகு, அவர்களெல்லோரும் எழுந்து பரிசுத்தமான யமுனை ஜலத்தில் ப்ராதஸ்நானம் முதலியவைகளைச் செய்துவிட்டு, பரத்வாஜ மஹரிஷி காட்டிய சித்திரகூடம் போகவேண்டிய வழியில் சென்றார்கள்.

5. (பொ - ரை) பிறகு ஸ்ரீராமன், காலையில் இலக்குமணனுடன் புறப்பட்டுச் சென்றுகொண்டு தாமரை இதழ்போல் அழகாய கண்களையுடைய ஸீதையைப் பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

6. (பொ - ரை) ஸீதே! இந்த வஸந்தருதுவில், நன்றாய்ப் புஷ்பித்து அந்த புஷ்பங்களால் தலையில் மாலை சூட்டிக்கொண்டு இருக்கிறதுபோன்ற பலாச வ்ருக்ஷங்களைப்பார். நாற்புறங்களிலும் நெருப்புப் பிடித்து எறிகின்றது போலிருக்கின்றன.

पश्य भल्लातकान्फुल्लान्नरैरनुपसेवितान् ।
फलपत्रैरवनतान्नूनं शक्ष्यामि जीवितुम् ॥ 7 ॥

पश्य द्रोणप्रमाणानि लम्बमानानि लक्ष्मण ।
मधूनि मधुकारीभिः संभृतानि नगे नगे ॥ 8 ॥

एष क्रोशति नत्यूहस्तं शिखी प्रतिकूजति ।
रमणीये वनोद्देशे पुष्पसंस्तरसंकटे ॥ 9 ॥

---

7. (ப - ரை) **फुल्लान्** - மலர்ந்த புஷ்பமுள்ளவைகளாய், **फलपत्रैः** - பழங்களாலும், இலைகளாலும், **अवनतान्** - வணங்கியவைகளாய், **नरैः** - மனிதர்களால், **अनुपसेवितान्** - ஸமீபத்தில் போக முடியாதவைகளான, **भल्लातकान्** - சேரா மரங்களை, **पश्य** - பார். **जीवितुं** - (இப்படிப்பட்ட விசித்திரங்களைப் பார்த்து) பிழைத்திருக்க, **शक्ष्यामि** - நான் சக்தியுள்ளவனு யிருக்கிறேன்; **नूनं** - நிச்சயம்.

8. (ப - ரை) **लक्ष्मण** - இலக்குமணு! **नगे नगे** - வ்ருக்ஷங்கள் தோறும், **मधुकारीभिः** - தேனீக்களால், **संभृतानि** - சேகரிக்கப் பட்டும், **लम्बमानानि** - தொங்குகின்ற, **द्रोणप्रमाणानि** - மரக்கால் அளவுள்ளதான, **मधूनि** - தேன் அடைகளை, **पश्य** - பார்.

9. (ப - ரை) **पुष्पसंस्तरसंकटे** - புஷ்ப மயமான கீழ் விரியால் நெருங்கிய, **रमणीये** - அழகான, **वनोद्देशे** - வனப்ரதேசத்தில், **एषः** - இதோ, **नत्यूहः** - நத்யூஹம் என்னும் பக்ஷி, **क्रोशति** - கூவுகின்றது. **तं** - அதைப்பார்த்து, **शिखी** - மயில், **प्रतिकूजति** - பதில் கூவுகிறது.

7. (பொ - ரை) ஸீதே! இதோ புஷ்பங்கள் மலர்ந்து, பழங்களாலும், __ களாலும், கிளைகள் தாழ்ந்து மனிதர்கள் கிட்ட நெருங்க முடியாமலிருக்கிற சேரா மரங்களைப் பார். இவ்விதமான விசித்திர வ்ருக்ஷங்களையும், புஷ்பங்களையும், பழங்களையும் பார்த்து ஆனந்தப்பட்டுக் கொண்டு நான் ஜீவிக்க முடியும்.

அதாவது :—ராஜ்யத்தை விட்டு ஒரு நாளும் காணாத வனத்தில் வஸித்து நாம் எவ்விதம் ஜீவித்திருக்கப்போகிறோ மென்று எண்ணி யிருந்தேன். இவ்விதங்களான, மரங்களையும் செடிகளையும் பார்த்ததினால் இனி நாம் ஸந்தோஷத்துடன் ஜீவித்திருக்கலாம் என்று எண்ணுகிறேன்.

8. (பொ - ரை) இலக்குமணு! இதோ பார், ஒவ்வொரு மரங்களிலும் தேன் ஈக்கள் சேகரித்து வைத்த தேன் கூடுகள் தொங்குகின்றன. ஒவ்வொரு தேன் அடைகளிலும், ஒரு மரக்கால் அளவு தேன் நிறைந் திருக்கின்றது.

9. (பொ - ரை) புஷ்பித்த மரங்களிலிருந்து பாய் விரித்ததுபோல் புஷ்பங்கள் அடர்ந்து விழுந்து. அழகான இந்த வனப்ரதேசத்தில் நத்யூஹ மென்னும் பக்ஷியானது கூவுகின்றது. அதைப்பார்த்து மயில் ப்ரதியாகக் கூவுகின்றது.

मातङ्गयूथानुसृतं पक्षिसङ्घानुनादितम् ।
चित्रकूटमिमं पश्य प्रवृद्धशिखरं गिरिम् ॥ 10 ॥

समभूमितले रम्ये द्रुमैर्बहुभिरावृते ।
पुण्ये रंस्यामहे तात चित्रकूटस्य कानने ॥ 11 ॥

ततस्तौ पादचारेण गच्छन्तौ सह सीतया ।
रम्यमासेदतुः शैलं चित्रकूटं मनोरमम् ॥ 12 ॥

10. (ப - ரை) **मातङ्गयूथानुसृतं** - யானைக் கூட்டங்கள் நிறைந்ததாய், **पक्षिसङ्घानुनादितम्** - பக்ஷிகளின் கூட்டங்களால் தொடர்ச்சியாக சப்திக்கப் பட்டிருக்கிற, **प्रवृद्धशिखरं** - உயர்ந்த கொடிமுடிகளையுடைய, **चित्रकूटं** - சித்திர கூடமென்கிற, **इमं गिरिं** - இந்த மலையை. **पश्य** - பார்.

11. (ப - ரை) **तात** - அப்பா! **समभूमितले** - ஸமமான தரைகளையுடையதாய், **बहुभिः** - அநேகங்களான, **द्रुमैः** - வ்ருக்ஷங்களால், **आवृते** - சூழப்பட்ட, **रम्ये** - அழகாய, **पुण्ये** - பரிசுத்தமான, **चित्रकूटस्य कानने** - சித்திரகூட மலையின் வனத்தில், **रंस्यामहे** - நாம் வஸித்து ஸந்தோஷித்துக்கொண் டிருப்போம்.

12. (ப - ரை) **ततः** - பிறகு, **तौ** - அவர்கள், **पादचारेण** - கால் நடையாக, **सीतया सह** - ஸீதையுடன் கூட, **गच्छन्तौ (सन्तौ)** - நடந்து கொண்டு, **रम्यं** - கண்ணிற்கு அழகாய், **मनोरमम्** - மனதிற்கு ஒப்பினதான, **चित्रकूटं शैलं** - சித்திர கூட மலையை, **आसेदतुः** - அடைந்தார்கள்.

---

10. (பொ - ரை) யானைக் கூட்டங்கள் நிறைந்து பக்ஷிகள் கூட்டங் கூட்டமாக சப்தித்துக்கொண்டு, உயர்ந்த சிகரங்களோடு கூடிய, சித்திரகூட மென்னும் இந்த மலையைப் பார்.

11. (பொ - ரை) மேடுபள்ள மில்லாமல் ஸமமான தரையுடையதாய், அநேக வ்ருக்ஷங்களால் சூழப்பட்டதாய், பார்க்க அழகுள்ளதாய் பரிசுத்தமுமான இந்த சித்திரகூட மலையின் வனத்தில் நாம் வஸித்துக்கொண்டு ஸந்தோஷமா யிருப்போம்.

12. (பொ - ரை) பிறகு அவர்கள் ஸீதையுடன் கூடவே கால் நடையாக நடந்து பார்ப்பதற்கும் அழகாய், மனதிற்கும் ஒப்பினதான சித்திரகூட மலைக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

तं तु पर्वतमासाद्य नानापक्षिगणाऽऽयुतम् ।
बहुमूलफलं रम्यं संपन्नं सरसोदकम् ॥ 13 ॥

मनोज्ञोऽयं गिरिः सौम्य नानाद्रुमलताऽऽयुतः ।
बहुमूलफलो रम्यः स्वाऽऽजीवः प्रतिभाति मे ॥ 14 ॥

मुनयश्च महात्मानो वसन्त्यस्मिञ्शिलोच्चये ।
अयं वासो भवेत्तावदत्र सौम्य रमेमहि ॥ 15 ॥

13. (ப - ரை) **नानापक्षिगणायुतं** - பலவித பக்ஷிக் கூட்டங்களோடு கூடியதும், **बहुमूलफलं** - அதிகமான கிழங்குகளும், பழங்களுமுடையதாய், **संपन्नं** - எல்லாம் நிறைந்ததாய், **सरसोदकम्** - ருசியுள்ள தீர்த்தமுடையதாய், **रम्यं** - அழகான, **तं पर्वतं तु** - அந்த மலையை, **आसाद्य** - அடைந்து,

14. (ப - ரை) **हे सौम्य** - அப்பா! **अयं गिरिः** - இந்த பர்வதமானது, **नाना-द्रुमलतायुतः** - பலவிதங்களான வ்ருக்ஷங்களோடும், கொடிகளோடும் கூடியிருக்கிறது. **बहुमूलफलः** - நிறைந்த கிழங்குகளோடும் பழங்களோடும் கூடியிருக்கிறது, **रम्यः** - பார்ப்பதற்கு அழகாயுமிருக்கிறது, **सु - आजीवः** - ஸுகமாக ஜீவித்திருப்பதற்குத் தகுந்ததாயுமிருக்கிறது (ஆகலால்), **मे** - எனக்கு, **मनोज्ञः** - மனதிற்குப் பிடித்ததாக, **प्रतिभाति** - தோன்றுகிறது.

15. (ப - ரை) **सौम्य** - அப்பா! **अस्मिन्-शिलोच्चये** - இந்தப் பர்வதத்தில், **महा-त्मानः** - மஹா ப்ரபாவமுள்ளவர்களான, **मुनयः च** - ரிஷிகளும், **वसन्ति** - வஸிக்கிறார்கள், **तावत्** - ஆதலால், **अयं** - இந்த மலைதான், **वासः** - வஸிப்பதற்கு (யோக்யமாக) **भवेत्** - ஆகும், **अत्र** - இங்கு, **रमेमहि** - ஸந்தோஷத்துடனிருப்போம்.

---

13. (பொ - ரை) பலவிதங்களான பக்ஷிக் கூட்டங்களுடன் கூடியதாய், வெகுவான கிழங்குகளும் பழங்களுமுடையதாய், ருசியுள்ள தீர்த்தங்களுடையதாய், எல்லா வஸ்துக்களும் நிறைந்த அழகான அந்த சித்திரகூட மலையை அடைந்து,

14. (பொ - ரை) அப்பா! இலக்குமணா! இந்த மலை பலவித வ்ருக்ஷங்களுடன் கூடியிருப்பதாலும், ஏதேஷ்டமான கிழங்குகளும், பழங்களும் உடையதாயிருப்பதாலும், பார்ப்பதற்கு அழகாயிருப்பதாலும், மனதிற்கு மிகவும் ஒப்பியிருக்கிறபடியாலும், இங்கு நாம் வஸித்தால் ஸுகமாக ஜீவித்துக் கொண்டிருக்கலாமென்று எனக்குத் தோன்றுகிறது.

15. (பொ - ரை) அப்பா! இந்தப் பர்வதத்தில் மஹாத்மாக்களான ரிஷிகளும் வஸிக்கிறார்கள். ஆதலால் இதுதான் நாம் வஸிப்பதற்குத் தகுந்ததாயிருக்க வேண்டும். இங்கு வஸித்தால் ஸந்தோஷமாயுமிருக்கலாம்,

इति सीता च रामश्च लक्ष्मणश्च कृताञ्जलिः ।
अभिगम्याऽऽश्रमं सर्वे वाल्मीकिमभिवादयन् ॥ 16 ॥

तान्महर्षिः प्रमुदितः पूजयामास धर्मवित् ।
आस्यतामिति चोवाच स्वागतं तु निवेद्य च ॥ 17 ॥

ततोऽब्रवीन्महाबाहुर्लक्ष्मणं लक्ष्मणाग्रजः ।
संनिवेद्य यथान्यायमात्मानमृषये प्रभुः ॥ 18 ॥

16. (ப - ரை) **इति** - என்று சொல்லிக் கொண்டு, **सीता च** - ஸீதையும், **रामः च** - ராமனும், **लक्ष्मणः च** - இலக்குமணனும், **कृताञ्जलिः** - கை கூப்பிக் கொண்டு, **सर्वे** - எல்லோரும், **आश्रमं** - (வால்மீகியின்) ஆச்ரமத்தை, **अभिगम्य** - அடைந்து, **वाल्मीकिं** - வால்மீகி மஹரிஷியை, **अभिवादयन्** - ஸேவித்தார்கள்.

17. (ப - ரை) **धर्मवित्** - தர்மம் தெரிந்தவரான, **महर्षिः** - வால்மீகி மஹரிஷி, **प्रमुदितः (सन्)** - ஸந்தோஷமுடையவராய்க் கொண்டு, **तान्** - அவர்களை, **पूजयामास** - பூஜித்தார், **स्वागतं तु** - நல்வரவையும், **निवेद्य च** - விஞ்ஞாபனம் செய்து கொண்டு, **आस्यतां** - உட்காரலாம், **इति च** - என்றும், **उवाच** - சொன்னார்.

18. (ப - ரை) **ततः** பிறகு, **महाबाहुः** - பெரிய தோள்களையுடைய, **प्रभुः** - ப்ரபுவான, **लक्ष्मणाग्रजः** - இலக்குமணன் தமயனுரான ஸ்ரீராமன், **ऋषये** - ரிஷியின் பொருட்டு, **यथान्यायं** - க்ரமப்படி, **आत्मानं** - தன்னை, **संनिवेद्य** - நன்றாகத் தெரிவித்து விட்டு, **लक्ष्मणं** - இலக்குமணனைப் பார்த்து, **अब्रवीत्** - சொன்னார்.

16. (பொ - ரை) இவ்வாறு தீர்மானம் செய்து கொண்டு, ஸீதை, ராமன், லக்குமணன் இவர்களெல்லோரும் கை கூப்பிக்கொண்டு, வால்மீகி மஹரிஷியின் ஆச்ரமம் சென்று அந்த மஹரிஷியை ஸேவித்தார்கள்.

17. (பொ - ரை) அதிதி பூஜா தர்மத்தை நன்றாய் அறிந்தவரான, வால்மீகி ரிஷி, அளவிறந்த ஸந்தோஷத்துடன் அவர்களைப் பூஜித்து, ஸௌக்யமாக வந்தீர்களா? வென்று நல்வரவையும் விசாரித்து உட்காருங்களென்றும் சொன்னார்.

18. (பொ - ரை) பிறகு, பெரும் தோள்களையுடைய ப்ரபுவான ஸ்ரீராமன், தான் இன்னுருடைய பிள்ளையென்றும், இவன் என்னுடைய ப்ராதா வென்றும், இவள் என்னுடைய பார்யை யென்றும், இன்ன கார்யத்திற்கு இங்கு வந்திருக்கிறோம், என்றும் க்ரமமாக வால்மீகி ரிஷியினிடம் விஞ்யாபனம் செய்து விட்டு இலக்குமணனைப் பார்த்துச் சொன்னார்.

लक्ष्मणाऽऽनय दारूणि दृढानि च वराणि च ।
कुरुष्वाऽऽवसथं सौम्य वासे मेऽभिरतं मनः ॥ 19 ॥

तस्य तद्वचनं श्रुत्वा सौमित्रिर्विविधान्द्रुमान् ।
आजहार ततश्चक्रे पर्णशालामरिंदमः ॥ 20 ॥

तां निष्ठितां बद्धकटां दृष्ट्वा रामः सुदर्शनाम् ।
शुश्रूषमाणमेकाग्रमिदं वचनमब्रवीत् ॥ 21 ॥

19. (ப - ரை) **सौम्य लक्ष्मण** - அப்பா இலக்குமணு! **दृढानि च** - உறுதியுள்ளதாயும், **वराणि च** - உத்தமங்களுமான. **दारूणि** - மரக்கட்டைகளை, **आनय** - கொண்டுவா, **आवसथं** - க்ருஹத்தை, **कुरुष्व** - செய், **मे मनः** - என் மனது, **वासे** - இங்கு வஸிப்பதில், **अभिरतं** - மிகவும் ஆசையுள்ளதாயிருக்கிறது.

20. (ப - ரை) **अरिंदमः** - சத்ருக்களை வெல்ல வல்லவரான, **सौमित्रिः** - இலக்குமணன், **तस्य** - அவருடைய, **तत् वचनं** - அந்த வார்த்தையை, **श्रुत्वा** - கேட்டு, **विविधान् द्रुमान्** - பலவிதங்களான மரங்களை, **आजहार** - கொண்டுவந்தார். **ततः** - பிறகு, **पर्णशालां** - பர்ணசாலையையும், **चक्रे** - செய்தார்.

21. (ப - ரை) **निष्ठितां** - அசையாததாய், **बद्धकटां** - பாய்கள் கட்டியதாய், **सुदर्शनाम्** - பார்ப்பதற்கு மிகவும் அழகாயுமிருக்கிற, **तां** - அந்த பர்ணசாலையை, **रामः** - ஸ்ரீராமன், **दृष्ट्वा** - பார்த்து, **शुश्रूषमाणं** - பணிவிடை செய்துகொண்டும், **एकाग्रं** - ஒன்றிலேயே நோக்கமுள்ளவருமான, இலக்குமணனைப்பார்த்து, **इदं** - இந்த வார்த்தையை, **अब्रवीत्** - சொன்னார்.

---

19. (பொ - ரை) அப்பா இலக்குமணு! உறுதியாயும், க்ருஹம் கட்டுவதற்குத் தகுந்ததுமான நாவல் முதலான மரக்கட்டைகளைக் கொண்டுவந்து ஒரு ஆச்ரமத்தை நிர்மாணம் செய். இவ்விடமே வாஸம செய்யவேண்டு மென்று என் மனது ஆசைப்படுகின்றது.

20. (பொ - ரை) சத்ருக்களை வெல்லும் ஸ்வபாவமுடைய, ஸௌமித்திரையின் குமாரரான இலக்குமணன், அந்த ராமனுடைய வார்த்தையைக் கேட்டு, பல விதங்களான மரங்களைக் கொண்டுவந்து, பர்ணசாலை நிர்மாணம் செய்துவிட்டார்.

21. (பொ - ரை) பெரும் காற்றடித்தாலும் அசையாமல் நான்குபுறமும் சுவர்போட்டு நன்றாகக்கட்டி மேலேயும் பாய்கள்கட்டி பார்ப்பதற்கு மிகவும் அழகாயிருக்கிற அந்த பர்ணசாலையை ஸ்ரீராமன் பார்த்து, தன்னை சிச்ருஷிப்பதில் ஒன்றிலேயே கவனம் வைத்து பணிவிடை செய்துகொண்டிருக்கின்ற இலக்குமணனைப் பார்த்து, இந்தவார்த்தை சொன்னார்.

ऐणेयं मांसमाहृत्य शालां यक्ष्यामहे वयम् ।
कर्तव्यं वास्तुशमनं सौमित्रे चिरजीविभिः ॥ 22 ॥

मृगं हत्वाऽऽनय क्षिप्रं लक्ष्मणेह शुभेक्षण ।
कर्तव्यः शास्त्रदृष्टो हि विधिर्धर्ममनुस्मर ॥ 23 ॥

भ्रातुर्वचनमाज्ञाय लक्ष्मणः परवीरहा ।
चकार स यथोक्तं च तं रामः पुनरब्रवीत् ॥ 24 ॥

22. (ப - ரை) **हे सौमित्रे** - இலக்ஷ்மணா! **वयं** - நாம், **ऐणेयं मांसं** - மான் மாம்ஸத்தை, **आहृत्य** - கொண்டுவந்து, **शालां** - பர்ணசாலையின் (தேவதைகளை) **यक्ष्यामहे** - பூஜிக்கவேண்டும், **चिरजीविभिः** - தீர்க்காயுஸ்ஸாய் இருக்க விரும்புமவர்களால், **वास्तुशमनं** - வாஸ்து சாந்தி, **कर्तव्यं** - செய்யத் தகுந்தது.

23. (ப - ரை) **हे शुभेक्षण** - சுபகாரியத்தில் நோக்கமுடைய, **लक्ष्मण** - இலக்ஷ்மணா! **क्षिप्रं** - சீக்கிரமாக, **मृगं** - மானை, **हत्वा** - அடித்து, **इह** - இங்கு, **आनय** - கொண்டுவா, **शास्त्रदृष्टः** - சாஸ்த்ரங்களில் தீர்மானிக்கப்பட்ட, **विधिः** - விதியானது, **कर्तव्यः हि** - செய்யவேண்டுமல்லவா, **धर्मं** - தர்மசாஸ்த்ரத்தை, **अनुस्मर** - கவனித்துப்பார்.

24. (ப - ரை) **परवीरहा** - சத்ருவீரர்களை கொல்லவல்ல, **सः लक्ष्मणः** - அந்த இலக்ஷ்மணன், **भ्रातुः** - ப்ராதாவினுடைய, **वचनं** - வார்த்தையை, **आज्ञाय** - அறிந்துகொண்டு, **यथोक्तं** - அவர் சொன்னபடியே, **चकार** - செய்தார். **तं** - அவரைப்பார்த்து, **पुनः** - மறுபடியும், **रामः** - ஸ்ரீராமன், **अब्रवीत्** - சொன்னார்.

---

22. (பொ - ரை) அப்பா இலக்ஷ்மணா! நாம மான் மாம்ஸம் கொண்டுவந்து பர்ணசாலையின் அதிஷ்டான தேவதைகளை பூஜைசெய்யவேண்டும், சிரஞ்சீவிகளாய் இருக்கவேண்டுமென்று வலிப்பவர்கள் அவச்யம் வாஸ்து சாந்தியும் செய்யவேண்டும்.

23. (பொ - ரை) சுபமான கார்யங்களைச் செய்வதில் நோக்கங்கொண்ட இலக்ஷ்மணா! சீக்கிரம்போய் மானை அடித்து இங்கு கொண்டுவா, சாஸ்த்ரங்களில் செய்யவேண்டியதாகத் தீர்மானித்திருக்கிற விதியை நாம் செய்யவேண்டும், அதற்கு வேண்டிய தர்மசாஸ்த்ரத்தை நன்றாக நினைத்துப்பார்.

24. (பொ - ரை) சத்ருவீரர்களைக் கொல்லும் வல்லமையுள்ள அந்த இலக்ஷ்மணன், ப்ராதாவினுடைய வார்த்தையை அறிந்துகொண்டு, இவர் சொல்லியபடியே செய்துவிட்டார். அவரைப் பார்த்து மறுபடியும் ஸ்ரீராமன் ஒரு வார்த்தை சொன்னார்.

ऐणेयं श्रपयस्वैतच्छालां यक्ष्यामहे वयम् ।
त्वर सौम्य मुहूर्तोऽयं ध्रुवश्च दिवसोऽप्ययम् ॥ 25 ॥

स लक्ष्मणः कृष्णमृगं हत्वा मेध्यं प्रतापवान् ।
अथ चिक्षेप सौमित्रिः समिद्धे जातवेदसि ॥ 26 ॥

तं तु पक्वं समाज्ञाय निष्टप्तं छिन्नशोणितम् ।
लक्ष्मणः पुरुषव्याघ्रमथ राघवमब्रवीत् ॥ 27 ॥

---

25. (ப - ரை) **हे सौम्य** - அப்பா! **एतत्** - இந்த, **ऐणेयं** - மான் மாம்ஸத்தை, **श्रपयस्व** - பசனம் செய், **वयम्** - நாம, **शालां** - பர்ணசாலேயின் தேவதைகளை, **यक्ष्यामहे** - பூஜிக்கவேண்டும், **अयं मुहूर्तः** - இந்த முகூர்த்தமும், **ध्रुवः** - ஸ்திரமானது, **अयं दिवसः अपि** - இந்த தினமும், **ध्रुवः** - ஸ்திரமானது (ஆதலால்), **त्वर** - த்வரையுடன் செய்.

26. (ப - ரை) **प्रतापवान्** - பராக்கிரமசாலியான, **सौमित्रिः** - ஸுமித்திரையின் புத்திரனை, **सः लक्ष्मणः** - அந்த இலக்குமணன், **मेध्यं** - பரிசுத்தமான, **कृष्णमृगं** - க்ருஷ்ணஸாரமென்கிற மானை, **हत्वा** - அடித்து, **अथ** - பிறகு, **समिद्धे** - ஜ்வலித்துக் கொண்டிருக்கிற, **जातवेदसि** - அக்நியில், **चिक्षेप** - போட்டார்.

27. (ப - ரை) **तं तु** - அந்த க்ருஷ்ணம்ருகத்தை, **पक्वं** - பக்குவமாகவும், **छिन्नशोणितम्** - ரக்தம் இல்லாததாகவும், **निष्टप्तं** - கொஞ்சம் உஷ்ணமானதாகவும், **लक्ष्मणः** - இலக்குமணன், **समाज्ञाय** - தெரிந்து கொண்டு, **अथ** - பிறகு, **पुरुषव्याघ्रं** - புருஷோத்தமனை, **राघवं** - ராமனைப்பார்த்து, **अब्रवीत्** - சொன்னார்.

---

25. (பொ - ரை) அப்பா இலக்குமணு! இந்த மான் மாம்ஸத்தை பக்குவம் செய். நாம் பர்ணசாலேயின் அந்தந்த திக்கில் வஸிக்கின்ற அதிஷ்டான தேவதைகளைப் பூஜிக்கவேண்டும், இந்த முகூர்த்தமும் ஸ்திரமாயிருக்கிறது, சுபமான நக்ஷத்திரத்தோடும், திதியோடும் கூடிய இந்த தினமும் ஸ்திரமானது. ஆதலால் தாமதமில்லாமல் கார்யங்களை த்வரையாய்ச் செய்.

26. (பொ - ரை) மிகவும் ப்ரதாப முடையவராய், ஸுமித்திரையின் புத்திரனுமான அந்த இலக்குமணன், பரிசுத்தமான க்ருஷ்ண ம்ருகத்தை அடித்து நன்ருய் ஜ்வலித்துக்கொண்டிருக்கிற அக்நியில் போட்டு பசனம் செய்தார்.

27. (பொ - ரை) இலக்குமணன், அக்நியில் போட்ட அந்த க்ருஷ்ண ம்ருகம் நன்ருகப் பக்குவமாய் ரக்தங்களும் வற்றி, கொஞ்சம் உஷ்ணமா யிருப்பதைத் தெரிந்துகொண்டு, பிறகு புருஷோத்தமனை ஸ்ரீராமனைப் பார்த்துச் சொன்னார்,

अयं कृष्णः समाप्ताङ्गः शृतः कृष्णमृगो यथा ।
देवतां देवसंकाश यजस्व कुशलो ह्यसि ॥ 28 ॥

रामः स्नात्वा तु नियतो गुणवाञ्जप्यकोविदः ।
सङ्ग्रहेणाकरोत्सर्वान्मन्त्रान्सत्रावसानिकान् ॥ 29 ॥

इष्ट्वा देवगणान्सर्वान्विवेशाऽऽवसथं शुचिः ।
बभूव च मनोह्लादो रामस्यामिततेजसः ॥ 30 ॥

---

28. (ப - ரை) **हे देवसंकाश** - தேவர்களுக்கு ஸமானமானவரே! **अयं कृष्णः** - இந்த க்ருஷ்ண ம்ருகமானது, **समाप्ताङ्गः** - பூர்ணமான அவயவங்களையுடையதாய், **शृतः** - பக்குவம் செய்யப்பட்டதாய், **कृष्णमृगः यथा** - உயிருடனிருக்கும் க்ருஷ்ண ம்ருகம்போல் இருக்கிறது, **देवतां** - தேவதையை, **यजस्व** - (நீர்) பூஜை செய்யும், **हि** - ஏனென்றால், **कुशलः** - ஸமர்த்தராக, **असि** - இருக்கிறீர்.

29. (ப - ரை) **गुणवान्** - (பரிசுத்தி முதலிய) குணமுடையவராய், **जप्यकोविदः** - ஜபம் செய்யவேண்டிய மந்த்ரங்களை அறிந்தவருமான, **रामः** - ஸ்ரீராமன், **नियतः** - நியம முடையவராய், **स्नात्वा तु** - ஸ்நானம் செய்துவிட்டு, **सत्रावसानिकान्** - வாஸ்து யாகத்தை முடிப்பதற்காகச் செய்யவேண்டிய, **सर्वान्** - எல்லா மந்த்ரங்களையும், **सङ्ग्रहेण** - சுருக்கமாக, **अकरोत्** - ஜபித்தார்.

30. (ப - ரை) **सर्वान् देवगणान्** - எல்லா தேவக் கூட்டங்களையும், **इष्ट्वा** - பூஜித்துவிட்டு, **शुचिः** - பரிசுத்தராக, **आवसथं** - பர்ணசாலையை, **विवेश** - ப்ரவேசித்தார், **अमिततेजसः** - அளவிறந்த தேஜஸ்ஸையுடைய, **रामस्य** - ஸ்ரீராமனுக்கு, **मनोह्लादः** - மனதில் ஸந்தோஷமும், **बभूव च** - உண்டாயிற்று.

---

28. (பொ - ரை) தேவர்களுக்கு ஸமானமானவரே, இந்த க்ருஷ்ண ம்ருகமானது பூர்ணமான அவயவங்களுடன் நன்றாக பக்குவம் செய்யப்பட்டு உயிருடனிருக்கும் க்ருஷ்ண ம்ருகம் போலிருக்கிறது. இனி பர்ணசாலையின் தேவதைகளைக் குறித்து ஹோமம் செய்யவேண்டும்; ஏனென்றால், தேவரீர் எல்லா கார்யங்களிலும் கெட்டிக்காரரா யிருக்கிறீர்.

29. (பொ - ரை) பரிசுத்தராய், வாஸ்து ஹோமத்திற்கு ஜெபிக்கவேண்டிய மந்த்ரங்களை நன்றாய்த் தெரிந்தவரான ஸ்ரீராமன் நியமத்துடன் ஸ்நானம் செய்துவிட்டு வாஸ்து ஹோமம் செய்து முடிக்கவேண்டிய மந்த்ரங்க ளெல்லாவற்றையும் ஸங்க்ரஹமாகச் செய்தார்.

30. (பொ - ரை) வாஸ்து ஹோம தேவகணங்களெல்லாவற்றையும் குறித்து ஹோமம் செய்துவிட்டு, பரிசுத்தராய் பர்ணசாலையில் ப்ரவேசித்தார். அதிக ப்ரபாவமுடையவரான ஸ்ரீராமனுக்கு மனதில் ஒரு களிப்பும் உண்டாச்சுது.

वैश्वदेवबलिं कृत्वा रौद्रं वैष्णवमेव च ।
वास्तुसंशमनीयानि मङ्गलानि प्रवर्तयन् ॥ 31 ॥
जपं च न्यायतः कृत्वा स्नात्वा नद्यां यथाविधि ।
पापसंशमनं रामश्चकार बलिमुत्तमम् ॥ ॥ 32 ॥
वेदिस्थलविधानानि चैत्यान्यायतनानि च ।
आश्रमस्यानुरूपाणि स्थापयामास राघवः ॥ 33 ॥
वन्यैर्माल्यैः फलैर्मूलैः पक्वैर्मांसैर्यथाविधि ।
अद्भिर्जपैश्च वेदोक्तैर्दर्भैश्च ससमित्कुशैः ॥ 34 ॥
तौ तर्पयित्वा भूतानि राघवौ सह सीतया ।
तदा विविशतुः शालां सुशुभां शुभलक्षणौ ॥ 35 ॥

31—32. (ப - ரை) **रामः** - ஸ்ரீராமன், **नद्यां** - நதியில், **यथाविधि** - சாஸ்த்ரப் படி, **स्नात्वा** - ஸ்நானம் செய்துவிட்டு, **जपंच** - ஜபத்தையும், **कृत्वा** - செய்து, **वैश्वदेवबलिं** - வைச்வதேவ பலியையும், **रौद्रं** - ருத்ர பலியையும், **वैष्णवं एव च** - விஷ்ணுவின் யாகத்தையும், **न्यायतः** - ந்யாயமாக, **कृत्वा** - செய்து, **वास्तुसंशमनीयानि** - க்ருஹத்தின் அநிஷ்டங்களைப் போக்குகின்ற, **मङ्गलानि** - மங்களகரங்களான கார்யங்களை, **प्रवर्तयन् (सन्)** - நடத்திக்கொண்டு, **पापसंशमनं** - பாபத்தைப் போக்குகின்ற, **उत्तमं बलिं** - ச்ரேஷ்டமான பலியை, **चकार** - செய்தார்.

33. (ப - ரை) **राघवः** - ஸ்ரீராமன், **वेदिस्थलविधानानि** - மேடைகளின் அமைப்புக்களையும், **चैत्यानि** - தேவர்களின் ஸ்தானங்களையும், **आयतनानि च** - ஹோமஸ்தானங்களையும், **आश्रमस्य** - ஆச்ரமத்திற்கு, **अनुरूपाणि** - தகுந்தவைகளாக, **स्थापयामास** - ஸ்தாபித்தார்.

34—35. (ப - ரை) **तदा** - அப்பொழுது, **शुभलक्षणौ** - சுபமான லக்ஷணங்களை

---

31—32. (பொ - ரை) ஸ்ரீராமன், நதியில் விதிப்படி ஸ்நானம் செய்துவிட்டு நியாயமாக ஜபமும் செய்துவிட்டு, வைச்வதேவ பலியையும், ருத்ரதேவதையைக் குறித்த பூஜையையும், விஷ்ணுவைக் குறித்த பூஜையையும் செய்து விட்டு, க்ருஹத்திற்கு அநிஷ்டங்களைப் போக்குகின்ற புண்யாஹவாசனம், சாந்தி ஜபம் முதலான மங்கள கார்யங்களையும் செய்து கொண்டு (மிகவும் பாபமுடைய) பகலிலும் இரவுகளிலும் ஸஞ்சரிக்கின்ற க்ரூரமான பூதங்களை சமனம் பண்ணக்கூடிய உத்தமமான பூஜையையும் செய்தார்.

33. (பொ - ரை) ஸ்ரீராமன், பலிகள் வைக்கவேண்டியதற்காக மேடைகளையும், கந்தர்வர்கள் முதலான தேவர்கள் வஸிக்கும் இடங்களையும், அக்னி வைக்க வேண்டிய சாலைகளையும் ஆச்ரமத்திற்குத் தகுந்தபடி சிறியதாய் ஏற்படுத்தினார்.

34—35. (பொ - ரை) அப்பொழுது சுபமான லக்ஷணங்களையுடைய அந்த

तां वृक्षपर्णच्छदनां मनोज्ञां यथाप्रदेशं सुकृतां निवाताम् ।
वासाय सर्वे विविशुः समेताः सभां यथा देवगणाः सुधर्माम् ॥ 36 ॥
अनेकनानामृगपक्षिसंकुले विचित्रपुष्पस्तवकैर्द्रुमैर्युते ।
वनोत्तमे व्यालमृगानुनादिते तदा विजह्रुः सुसुखं जितेन्द्रियाः ॥ 37 ॥

---

புடைய, **तौ राघवौ** - அந்த ரகுகுலத்திற் பிறந்தவர்கள், **वन्यैः** - வனத்திலுண்டான, **माल्यैः** - புஷ்பமாலைகளாலும், **फलैः** - பழங்களாலும், **मूलैः** - கிழங்குகளாலும், **पक्वैः** - பக்குவங்களான, **मांसैः** - மாம்ஸங்களாலும், **अद्भिः** - தீர்த்தங்களாலும், **वेदोक्तैः** - வேதங்களில் சொல்லப்பட்ட, **जपैः** - ஜபங்களாலும், **ससमित्कुशैः** - ஸமித்துக்களோடும், குசங்களோடும் கூடிய, **दर्भैः च** - தர்பங்களாலும், **भूतानि** - பூதங்களை, **तर्पयित्वा** - த்ருப்தி செய்வித்து, **सीतया सह** - ஸீதையுடன் கூட, **सुशुभां** - மிகவும் சுபமான, **शालां** - பர்ணசாலையை, **विविशतुः** - ப்ரவேசித்தார்கள்.

36. (ப - ரை) **वृक्षपर्णच्छदनां** - வ்ருக்ஷங்களின் இலைகளால் மேலே போர்த்தப்பட்டதாய், **मनोज्ञां** - அழகாய், **यथाप्रदेशं** - அந்தந்த இடங்களின் க்ரமப்படி, **सुकृतां** - நன்றாய் செய்யப்பட்டதாய், **निवाताम्** - அதிக காற்று இல்லாததாயுமிருக்கிற, **तां** - அந்த பர்ணசாலையை, **देवगणाः** - தேவகணங்கள், **सुधर्माम् सभां यथा** - ஸுதர்மம் என்னும் ஸபையில் ப்ரவேசித்ததுபோல், **समेताः** - ஒன்று சேர்ந்து, **वासाय** - வஸிப்பதற்காக, **सर्वे** - எல்லோரும், **विविशुः** - ப்ரவேசித்தார்கள்.

37. (ப - ரை) **अनेकनानामृगपक्षिसंकुले** - பலவிதங்களான அநேகம் மிருகங்களாலும், பக்ஷிகளாலும் நிறைந்ததாய், **विचित्रपुष्पस्तवकैः** - விசித்திரமான பூங்

---

ரகு குலத்து குமாரர்கள் காட்டிலுண்டான புஷ்ப மாலைகளாலும், பழங்களாலும், கிழங்குகளாலும், பக்குவமான மாமஸங்களாலும், தீர்த்தங்களாலும், வேதத்தில் சொல்லிய மந்த்ர ஜபங்களாலும், ஸமித்து, குசம், தர்பம் இவைகளாலும், பூதங்களுக்கு திருப்தி செய்து விட்டு ஸீதையுடன் மிகவும் சுபமான பர்ணசாலையில் ப்ரவேசித்தார்கள்.

36. (பொ - ரை) வ்ருக்ஷங்களின் இலைகளால் மேலே போர்த்தப்பட்டு, அழகாய் எங்கெந்த இடங்களில் எங்கெந்த அறைகள் வைக்கவேண்டுமோ அந்த க்ரமம் தவறாமல் நன்றாக நிர்மாணம் செய்யப்பட்டு, அதிகமாகக் காற்றடிக்காமல் இருக்கின்ற அந்த பர்ணசாலையில் தேவகணங்கள் ஸுதர்மை யென்னும் ஸபையில் ப்ரவேசிப்பதுபோல் இவர்களெல்லோரும் ஒன்று சேர்ந்து வஸிப்பதற்காக ப்ரவேசித்தார்கள்.

37. (பொ - ரை) நானாவிதங்களான அநேக மிருகங்களும், பக்ஷிகளும் நிறைந்து, விசித்திரமான பூங்கொத்துக்களுள்ள வ்ருக்ஷங்களோடுகூடி, யானைகளும்,

सुरम्यमासाद्य तु चित्रकूटं नदीं च तां माल्यवतीं सुतीर्थाम् ।
ननन्द हृष्टो मृगपक्षिजुष्टां जहौ च दुःखं पुरविप्रवासात् ॥ 38 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
षट्पञ्चाशः सर्गः ॥ 56 ॥

கொத்துக்களையுடைய, **द्रुमैः** - வ்ருக்ஷங்களோடு, **युते** - கூடியதாய், **व्यालमृगानुनादिते** - யானைகளுடையவும், மிருகங்களுடையவும், சப்தங்களையுடையதான, **वनोत्तमे** - ச்ரேஷ்டமான அந்த வனத்தில், **जितेन्द्रियाः** - ஜிதேந்த்ரியர்களாய், **सुसुखं** - மிகவும் ஸுகமாய், **तदा** - அப்பொழுது, **विजह्रुः** - விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

38. (ப - ரை) **सुरम्यं** - மிகவும் அழகான, **चित्रकूटं** - சித்திரகூட மலையையும், **सुतीर्थाम्** - அழகான துறைகளையுடைய, **मृगपक्षिजुष्टां** - மிருகங்களாலும், பக்ஷிகளாலும் அடையப்பட்ட, **तां** - அந்த, **माल्यवतीं नदीं च** - மால்யவதீ யென்னும் நதியையும், **आसाद्य तु** - அடைந்து, **हृष्टः** - மயிர்க் கூச்சலெரிய, **ननन्द** - ஸந்தோஷித்தார். **पुरविप्रवासात्** - பட்டணத்தை விட்டு வந்ததினால் (உண்டான), **दुःखं च** - துக்கத்தையும், **जहौ** - விட்டு விட்டார்.

மிருகங்களும் சப்திக்கின்ற அந்த உத்தமமான வனத்தில் அப்பொழுது அம் மூவர்களும் ஜிதேந்த்ரியர்களாய் ஸுகமாய் விளையாடிக்கொண் டிருந்தார்கள்.

38. (பொ - ரை) அந்த ஸ்ரீராமன் மிகவும் அழகான அந்த சித்திரகூட மலையை அடைந்து, அங்கிருக்கும் அழகான இறங்குத் துறைகளை யுடையதாய், மிருகங்களும், பக்ஷிகளும் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கிற அந்த மால்யவதீ என்னும் நதியையும் பார்த்து, மயிர்க் கூச்சலெரியும் படியாக ஸந்தோஷ மடைந்தார். பட்டணத்தை விட்டு வந்ததினாலுண்டான துக்கத்தையும் விட்டுவிட்டார்.

सप्तपञ्चाशः सर्गः ॥ 57 ॥

कथयित्वा सुदुःखार्तः सुमन्त्रेण चिरं सह ।
रामे दक्षिणकूलस्थे जगाम स्वगृहं गुहः ॥ 1 ॥

भरद्वाजाभिगमनं प्रयागे च सहासनम् ।
आ गिरेर्गमनं तेषां तत्रस्थैरभिलक्षितम् ॥ 2 ॥

अनुज्ञातः सुमन्त्रोऽथ योजयित्वा हयोत्तमान् ।
अयोध्यामेव नगरीं प्रययौ गाढदुर्मनाः ॥ 3 ॥

---

1. (ப - ரை) **गुहः** - குஹன், **रामे** - ஸ்ரீராமன், **दक्षिणकूलस्थे (सति)** - தென் கரையில் இருந்த ஸமயத்தில், **सुदुःखार्तः (सन्)** - மிகவும் துக்கத்தினால் பீடிக்கப் பட்டவராய்க் கொண்டு, **सुमन्त्रेण सह** - ஸுமந்த்ரருடன்கூட, **चिरं** - வெகு காலம், **कथयित्वा** - பேசிக்கொண்டிருந்து விட்டு, **स्वगृहं** - தன் க்ருஹத்தைக் குறித்து, **जगाम** - சென்றார்.

2. (ப - ரை) **तेषां** - அவர்களுடைய, **भरद्वाजाभिगमनं** - பரத்வாஜ ரிஷியின் இடம் சென்றதும், **प्रयागे** - ப்ரயாக க்ஷேத்திரத்தில், **सह आसनं च** - (பரத்வாஜருடன்) கூட இருந்ததும், **आ गिरेः गमनं** - (சித்திர கூட) பர்வதம் வரையில் சென்றதும், **तत्रस्थैः** - அங்கு இருப்பவர்களால், **अभिलक्षितम्** - (ஸுமந்த்ரருக்கு) தெரிவிக்கப்பட்டது.

3. (ப - ரை) **अथ** - பிறகு, **सुमन्त्रः** - ஸுமந்த்ரர், **अनुज्ञातः (सन्)** - அனுமதி செய்யப்பட்டவராய், **हयोत्तमान्** - உத்தமமான குதிரைகளை, **योजयित्वा** - தேரில் பூட்டிக் கொண்டு, **गाढदुर्मनाः (सन्)** - அதிகமன வருத்தமுடையவராய், **अयोध्यां नगरीं एव** - அயோத்திமா நகரத்தைக் குறித்தே, **प्रययौ** - ப்ரயாணம் செய்தார்.

---

1. (பொ - ரை) ஸ்ரீராமன் கங்கையின் தென்கரை போய்ச் சேர்ந்த பிறகு குஹன் மிக வருத்தத்துடன் ஸுமந்த்ரருடன் வெகுநேரம் வரை ஸ்ரீராமனுடைய குணங்களைச் சொல்லிக்கொண்டு, ஸ்ரீராமன் கண்ணுக்கு மறைகிற வரையில் அங்கேயே இருந்து பார்த்துக்கொண்டு, பிறகு ஸுமந்த்ரருடன் தன் க்ருஹம் சென்றார்.

2. (பொ - ரை) இராமன், இலக்குமணன், ஸீதை இம் மூவர்களும் ப்ரயாகையில் பரத்வாஜரை ஸேவிக்கச் சென்றதும், அவரிடம் பேசிக்கொண்டிருந்ததும், அதன் பிறகு சித்திரகூட பர்வதம் வரைச் சென்றதும், அங்கிருக்கும் குஹனுடைய சாரர்களால் ஸுமந்த்ரருக்குத் தெரிவிக்கப்பட்டது.

3. (பொ - ரை) ஸுமந்த்ரர் ஸ்ரீராமன் முதலானவர்களுடைய வ்ருத்தாந்தங்களைக் கேட்ட பிறகு, இனி நாம் இங்கிருந்து செய்யவேண்டிய தொன்றுமில்லை என்று எண்ணி, குஹனிடம் அனுமதி பெற்றுக்கொண்டு குதிரைகளைத் தேரில் கட்டி மிக மன வருத்தத்துடன் அயோத்திமா நகரத்தைக் குறித்துப் புறப்பட்டார்.

स वनानि सुगन्धीनि सरितश्च सरांसि च ।
पश्यन्नतिययौ शीघ्रं ग्रामाणि नगराणि च ॥ 4 ॥

ततः सायाह्नसमये तृतीयेऽहनि सारथिः ।
अयोध्यां समनुप्राप्य निरानन्दां ददर्श ह ॥ 5 ॥

स शून्यामिव निःशब्दां दृष्ट्वा परमदुर्मनाः ।
सुमन्त्रश्चिन्तयामास शोकवेग समाहतः ॥ 6 ॥

---

4. (ப - ரை) **सः** - அந்த ஸுமந்த்ரர், **सुगन्धीनि** - மிகவும் புஷ்ப வாஸனையுள்ளதான, **वनानि** - காடுகளையும், **सरितः च** - நதிகளையும், **सरांसि च** - தடாகங்களையும், **पश्यन् (सन्)** - பார்த்துக் கொண்டே, **ग्रामाणि (ग्रामान्)** - க்ராமங்களையும், **नगराणि च** - பட்டணங்களையும், **शीघ्रं** - சீக்கிரமாக, **अति ययौ** - தாண்டிச் சென்றார்.

5. (ப - ரை) **ततः** - பிறகு, **सारथिः** - ஸாரதியானவர், **तृतीये अहनि** - மூன்றுவது தினத்தில், **सायाह्न समये** - ஸாயங்காலத்தில், **अयोध्यां** - அயோத்திமா நகரத்தை, **समनुप्राप्य** - அடைந்து, **निरानन्दां** - ஆனந்தமில்லாத அந்நகரத்தை, **ददर्श** - பார்த்தார், **ह** - கஷ்டம்.

6. (ப - ரை) **सः सुमन्त्रः** - அந்த ஸுமந்த்ரர், **शून्यां इव** - பாழ் அடைந்தது போல், **निःशब्दां** - சப்தமில்லாமலிருக்கும் அயோத்தியை, **दृष्ट्वा** - பார்த்து, **परमदुर्मनाः** - மிகவும் நொந்த மனமுடையவராய், **शोकवेग समाहतः** - சோகவேகத்தினால் அடிக்கப்பட்டவராய்க் கொண்டு, **चिन्तयामास** - (இவ்வாறு) எண்ணினார்.

4. (பொ - ரை) அந்த ஸுமந்த்ரர், நன்றாகப் புஷ்பித்து வாஸனையுள்ளதான வனங்களையும், நதிகளையும், குளங்களையும், க்ராமங்களையும், நகரங்களையும் பார்த்துக் கொண்டே விரைவில் தாண்டிச் சென்றார்.

5. (பொ - ரை) பிறகு, ஸாரதியான ஸுமந்த்ரர், குஹனுடைய ச்ரிங்கிபேர நகரத்தை விட்டுப் புறப்பட்ட மூன்றாவது தினத்தில் ஸாயங்கால வேளையில், அயோத்திமா நகரம் வந்து சேர்ந்து, அந்நகரம், ஆனந்த மில்லாமலிருப்பதைப் பார்த்தார். அஹோ கஷ்டம்!

6. (பொ - ரை) அந்த ஸுமந்த்ரர், பாழ் அடைந்தது போல் சப்தமில்லாமலிருக்கும் அந்நகரத்தைப் பார்த்து மிகவும் மனவருத்த முடையவராய் துக்கத்தின் வேகத்தினால் நன்றாய் அடிக்கப்பட்டு இவ்வாறு மனதில் எண்ணினார்.

कच्चिन्न सगजा साश्वा सजना सजनाधिपा ।
रामसंतापदुःखेन दग्धा शोकाग्निना पुरी ॥ 7 ॥

इति चिन्तापरः सूतो वाजिभिः शीघ्रपातिभिः ।
नगरद्वारमासाद्य त्वरितः प्रविवेश ह ॥ 8 ॥

सुमन्त्रमभियान्तं तं शतशोऽथ सहस्रशः ।
क्व राम इति पृच्छन्तः सूतमभ्यद्रवन्नराः ॥ 9 ॥

---

7. (ப - ரை) **सगजा** - யானைகளோடு கூடியதாய், **साश्वा** - குதிரைகளோடு கூடியதாய், **सजना** - ஜனங்களோடு கூடியதாய், **सजनाधिपा** - அரசனோடு கூடியதுமான, **पुरी** - இந்த அயோத்திமா நகரமானது, **रामसंतापदुःखेन** - ஸ்ரீராமனுடைய ஸந்தாபத்தினாலுண்டான துக்கத்தினால் (நேர்ந்த), **शोकाग्निना** - சோகமாகிற நெருப்பினால், **न दग्धा कच्चित्** - எரிந்து விடாமலிருக்க வேணுமே.

8. (ப - ரை) **सूतः** - ஸாரதியானவர், **इति** - இவ்வாறு, **चिन्तापरः** - கவலையுடையவராய், **शीघ्रपातिभिः** - வேகமாக வருகின்ற, **वाजिभिः** - குதிரைகளோடு, **नगरद्वारं** - நகரத்தின் கோட்டை வாசலை, **आसाद्य** - அடைந்து, **त्वरितः** - மிகவும் பரபரப்பு உடையவராய், **प्रविवेश** - உள்ளே நுழைந்தார், **ह** - கஷ்டம் !

9. (ப - ரை) **अभियान्तं** - நகரத்திற்கு வருகின்ற, **तं सुमन्त्रं** - அந்த ஸுமந்த்ரரைப் பார்த்து, **नराः** - பட்டணத்து ஜனங்கள், **शतशः** - நூற்றுக்கணக்காகவும், **अथ सहस्रशः** - ஆயிரக்கணக்காகவும், **रामः क्व** - ராமன் எங்கே, **इति** - என்று, **पृच्छन्तः सन्तः** - கேட்டுக்கொண்டு, **सूतं** - அந்த ஸாரதியான ஸுமந்த்ரரை, **अभ्यद्रवन्** - எதிர்நோக்கி ஓடினார்கள்.

7. (பொ - ரை) இவ்வளவு ஏராளமான யானைகளோடும், குதிரைகளோடும், ஜனங்களோடும், அரசனுடனும் கூடிய இந்த அயோத்திமா நகரமானது ராமனுடைய கஷ்டத்தினாலுண்டான துக்கமாகிற நெருப்பினால் எரிந்து விடாமலிருக்க வேணுமே.

8. (பொ - ரை) என்று ஸுமந்த்ரர், இவ்வாறு மனக்கவலையுடன் அதிவேகமாகப் போகின்ற குதிரைகள் பூட்டிய தேரை ஓட்டிக்கொண்டு நகரத்தில் கோபுர வாசலை அணுகி, மிக பரபரப்புடன் உள்ளே சென்றார்.

9. (பொ - ரை) இவ்வாறு வருகின்ற ஸுமந்த்ரரைப் பார்த்து பட்டணத்து ஜனங்கள் நூற்றுக்கணக்காகவும், ஆயிரக்கணக்காகவும் ஒன்று சேர்ந்து கொண்டு, ஸ்ரீராமன் எங்கே என்று கேட்டுக்கொண்டே அவருக்கு எதிராக ஓடிவந்தார்கள்.

तेषां शशंस गङ्गायामहमापृच्छ्य राघवम् ।
अनुज्ञातो निवृत्तोऽस्मि धार्मिकेण महात्मना ॥ 10 ॥
ते तीर्णा इति विज्ञाय बाष्पपूर्णमुखा जनाः ।
अहो धिगिति निश्वस्य हा रामेति च चुक्रुशुः ॥ 11 ॥
शुश्राव च वचस्तेषां बृन्दं बृन्दं च तिष्ठताम् ।
हताः स्म खलु ये नेह पश्याम इति राघवम् ॥ 12 ॥
दानयज्ञविवाहेषु समाजेषु महत्सु च ।
न द्रक्ष्यामः पुनर्जातु धार्मिकं राममन्तरा ॥ 13 ॥
किं समर्थं जनस्यास्य किं प्रियं किं सुखावहम् ।
इति रामेण नगरं पितृवत्परिपालितम् ॥ 14 ॥

---

10. (ப - ரை) **अहं** - நான், **गङ्गायां** - கங்கைக் கரையில், **राघवम्** - ஸ்ரீ ராகவனை, **आपृच्छ्य** - கேட்டுக் கொண்டு, **धार्मिकेण** - தர்மிஷ்டரான, **महात्मना** - அந்த மஹாத்மாவினால், **अनुज्ञातः** - அனுமதி செய்யப்பட்டு, **निवृत्तः अस्मि** - திருப்பப்பட்டவனாக ஆகிறேன், (**इति** - என்று), **तेषां** - அவர்களுக்கு, **शशंस** - சொன்னார்.

11. (ப - ரை) **ते** - அவர்கள், **तीर्णाः** - தாண்டிச் சென்று விட்டார்கள், **इति** - என்று, **जनाः** - அந்த ஜனங்கள், **विज्ञाय** - தெரிந்துகொண்டு, **बाष्पपूर्णमुखाः** - கண்ணீரால் நிறைந்த முகம் உடையவராய், **अहो** - ஐயோ! **धिक्** - நம்மைச் சுடவேண்டும், **इति** - என்று, **निश्वस्य** - பெருமூச்சுவிரிந்துகொண்டு, **हा राम इति च** - ஐயோ! ராமா! என்றும், **चुक्रुशुः** - கதறினார்கள்.

12, 13, 14. (ப - ரை) **ये** - யாதொரு நாம், **इह** - இந்தத்தேரில், **राघवम्** -

---

10. (பொ - ரை) நான் கங்கைக் கரையில் அந்த ஸ்ரீராமனிடம் சொல்லிக் கொண்டு, தர்மிஷ்டரான அந்த மஹாநுபாவரிடம் அனுமதி பெற்றுக்கொண்டு திரும்பி வந்து விட்டேன் என்று தன்னைக்கேட்ட ஜனங்களுக்கு அவர் பதில் சொன்னார்.

11. (பொ - ரை) இவ்வாறு அந்த ஜனங்கள் ஸுமந்த்ரருடைய சொல்லைக் கேட்டு, ஸ்ரீராமன், இலக்குமணன் ஸீதை இம் மூவர்களும் வெகுதூரம் சென்று விட்டார்கள், இனி இப்பொழுது திரும்பி வரமாட்டார்களென்று தெரிந்துகொண்டு கண்ணீர் நிறைந்த முக முடையவர்களாய் ஐயோ ராமனை இழந்து விட்டோம், சீ! சீ! என்று பெருமூச்சு விட்டுக்கொண்டு ஹா ராம! என்று கதறினார்கள்.

12, 13, 14. (பொ - ரை) இந்தத் தேரில் இப்பொழுது நாம் ஸ்ரீராமனைப் பாராத

वातायनगतानां च स्त्रीणामन्वन्तरापणम् ।
रामशोकाभितप्तानां शुश्राव परिदेवनम् ॥ 15 ॥

---

ராகவனை, **न पश्यामः** - பார்க்க வில்லையோ, **इति** - இந்த காரணத்தினால், **हताः स्म खलु** - நாம் அழிந்து விட்டோம், **दान यज्ञ विवाहेषु** - தானத்திலும், யஜ்ஞயத்திலும், விவாஹத்திலும், **महत्सु** - பெரிதான, **समाजेषु च** - ஸபைகளிலும், **अन्तरा** - நடுவில், **धार्मिकं** - தார்மிஷ்டரான, **रामं** - ஸ்ரீராமனை, **पुनः** - மறுபடியும், **जातु** - ஒரு காலத்திலும், **न द्रक्ष्यामः** - பார்க்காமலே இருந்து விடுவோமோ, **अस्य जनस्य** - இந்த ஜனத்திற்கு, **किं समर्थं** - எது க்ஷேமகரமானது, **किं प्रियं** - எது ப்ரியமானது, **किं सुखावहम्** - எது ஸுகத்தை உண்டுபண்ணக்கூடியது, **इति** - என்று, **नगरं** - நகரமானது, **रामेण** - ஸ்ரீராமனால், **पितृवत्** - பிதாவினாலேபோல், **परिपालितम्** - பரிபாலனம் செய்யப்பட்டது, **इति** - என்று, **बृन्दं बृन्दं च** - கூட்டம் கூட்டமாக, **तिष्ठताम्** - நிற்கின்ற, **तेषां** - அந்த ஜனங்களுடைய, **वचः** - வார்த்தையையும், **शुश्राव च** - (ஸுமந்த்ரர்) கேட்டார்.

15. (ப - ரை) **अनु** - பிறகு, **रामशोकाभितप्तानां** - ராமனுடைய சோகத்தினால் தபித்துக் கொண்டும், **वातायनगतानां** - ஜன்னல்களை அடைந்துமிருக்கின்ற, **स्त्रीणां** -

---

படியால் இனி நாம் அழிந்து விட்டோம், இந்நகரத்தில் யாராவது தானம் செய்வதாக விருந்தால் அந்த ஸமயத்தில் அந்த இடத்திற்கு ஸ்ரீராமன் சென்று உசிதகாலத்தில் தகுந்த பாத்திரத்தில் அந்த தானத்தை கொடுப்பிக்கிறது, யஜ்ஞம் நடந்தால் அந்த இடம் சென்று நியாயமாக ஸம்பாதித்த தநத்தைக்கொண்டு மந்த்ரலோப, தந்த்ரலோபம் முதலானதுகள் இல்லாமலிருக்கும்படி அந்த யாகத்தை நிறைவேற்றி வைப்பார், ஒருவர் க்ருஹத்தில் விவாஹம் நடந்தால் அந்த இடத்திற்குத் தானாகவே சென்று விவாஹம் முடியும் வரையிலிருந்து ஸம்பந்திகளுக்கு ஒருவருக்கொருவர் உண்டாகும் மனஸ்தாபம் முதலானவைகளை பரிஹரித்து விவாஹத்தையும் சாஸ்த்ரீயமாக நடத்தி வைப்பார், இதுவுமல்லாமல் தீர்க ஸத்ரம் முதலானதுகளிலும் மற்ற அத்ருஷ்டமான கார்யங்களிலும் இவ்வாறே ஸ்ரீராமனை மறுபடியும் எந்தக்காலத்திலாவது பார்க்காமலே இருந்து விடுவோமோ, தவிரவும், பிதாவானவன் தன் ப்ரஜைகளைப் பரிபாலனம் செய்வதுபோல் நம் நகரத்திலிருக்கும் ஜனங்களுக்கு எந்த கார்யம் செய்தால் க்ஷேமம் உண்டாகும், எது ப்ரியமாயிருக்கும், எது ஸுகத்தைக் கொடுக்கும் என்று மிக அன்புடன் பரிபாலனம் செய்து வந்தார் என்று அந்த ஜனங்கள் கூட்டம் கூட்டமாக நின்றுகொண்டு சொல்லும் பேச்சுக்களையும் ஸுமந்த்ரர் கேட்டு கொண்டே சென்றார்.

15. (பொ - ரை) ஸ்ரீராமனை விட்டுப் பிரிந்த துக்கத்தினால் பரிதபித்துக் கொண்டிருக்கிற அந்நகரத்து ஸ்த்ரீகள், ஸுமந்த்ரர் வருவதைத் தெரிந்துகொண்டு, ஒரு ஸமயம் ஸ்ரீராமனும் வந்து விட்டாரோ என்று பார்ப்பதற்காக அவரவர்கள்

स राजमार्गमध्येन सुमन्त्रः पिहिताननः ।
यत्र राजा दशरथस्तदेवोपययौ गृहम् ॥ 16 ॥

सोऽवतीर्य रथाच्छीघ्रं राजवेश्म प्रविश्य च ।
कक्ष्याः सप्ताभिचक्राम महाजनसमाकुलाः ॥ 17 ॥

हर्म्यैर्विमानैः प्रासादैरवेक्ष्याथ समागतम् ।
हाहाकारकृता नार्यो रामादर्शनकर्शिताः ॥ 18 ॥

ஸ்த்ரீகளுடைய, **परिदेवनम् च** - அழுகையையும், **अन्तरापणम्** - கடை வீதியின் நடுவே, **शुश्राव** - கேட்டார்.

16. (ப - ரை) **सः सुमन्त्रः** - அந்த ஸுமந்த்ரர், **पिहिताननः (सन्)** - முகத்தை மூடினவராய்க் கொண்டு, **राजमार्गमध्येन** - ராஜ மார்க்கத்தின் நடுவாக, **यत्र** - எந்த க்ருஹத்தில், **दशरथः राजः** -தசரத மஹாராஜர், (**अस्ति** - இருக்கிறாரோ), **तत् गृहं एव** - அந்த க்ருஹத்தையே, **उपययौ** - அடைந்தார்.

17. (ப - ரை) **सः** - அவர், **रथात्** - தேரிலிருந்து, **अवतीर्य** - இறங்கி, **शीघ्रं** சீக்கிரமாக, **राजवेश्म** - அரசன் அரண்மனையை, **प्रविश्य च** - ப்ரவேசித்து, **महाजनसमाकुलाः** - ஜனங்களின் பெரும் கூட்டத்தால் சூழப்பட்ட, **सप्त कक्ष्याः** - ஏழு கட்டுகளையும், **अभिचक्राम** - கடந்து சென்றார்.

18. (ப - ரை) **अथ** - பிறகு, **नार्यः** - ஸ்த்ரீகள், **समागतम्** - வந்திருக்கும் அவரை, **अवेक्ष्य** - பார்த்து, **राम अदर्शन कर्शिताः** - ராமனைக் காணாமல் இளைத்தவர்களாய், **हर्म्यैः** - தனிகர்களின் க்ருஹங்களாலும், **विमानैः** - அடுக்கு மாளிகை

---

ஜன்னல் வழியாகப் பார்த்து, ஸ்ரீராமன் இல்லாத படியால் கதறிக்கொண்டு இருப்பதையும், ஸுமந்த்ரர் கடைத் தெருவின் நடுவே போகும்பொழுது கேட்டுக்கொண்டே போனார்.

16. (பொ - ரை) அந்த ஸுமந்த்ரர் ஜனங்களின் முகத்தைப் பார்க்கப் பிடிக்காமல், தன் முகத்தை மூடிக்கொண்டு, ராஜ வீதியின் நடுவாக, தசரத மஹாராஜர் இருக்கும் க்ருஹத்தையே சென்று சேர்ந்தார்.

17. (பொ - ரை) அவர் தேரிலிருந்து இறங்கி சீக்கிரமாக அரசன் அரண்மனையில் நுழைந்து ஜனங்களின் பெரும் கூட்டம் நிறைந்திருக்கும் ஏழு கட்டுகளையும் கடந்து சென்றார்.

18. (பொ - ரை) பிறகு, ராமனைக் காணாமல் இளைத்திருக்கும் அந் நகரத்து ஸ்த்ரீகள் ராமன் இல்லாமல் வந்திருக்கும் ஸுமந்த்ரரைப் பார்த்து ப்ரபுக்களின்

आयतैर्विमलैर्नेत्रैर श्रुवेगपरिप्लुतैः ।
अन्योन्यमभिवीक्षन्तेऽव्यक्तमार्ततराः स्त्रियः ॥ 19 ॥
ततो दशरथस्त्रीणां प्रासादेभ्यस्ततस्ततः ।
रामशोकाभितप्तानां मन्दं शुश्राव जल्पितम् ॥ 20 ॥
सह रामेण निर्यातो विना राममिहागतः ।
सूतः किं नाम कौसल्यां शोचन्तीं प्रतिवक्ष्यति ॥ 21 ॥
यथा च मन्ये दुर्जीवमेवं न सुकरं ध्रुवम् ।
आच्छिद्य पुत्रे निर्याते कौसल्या यत्र जीवति ॥ 22 ॥

களோடும், **प्रासादैः** - அரசர்களுக்குறிய க்ருஹங்களோடும் (கூடிக்கொண்டு), **हाहा-कारकृताः (कृत हाहाकाराः)** - ஹா! ஹா! காரங்கள் செய்துகொண் டிருந்தார்கள்.

19. (ப - ரை) **विमलैः** - நிர்மலங்களாய், **अश्रुवेगपरिप्लुतैः** - கண்ணீர்களின் வேகத்தினால் நிறைந்திருக்கிற. **आयतैः** - விசாலமான, **नेत्रैः** - கண்களால், **स्त्रियः** - பெண்டுகள், **आर्ततराः (सत्यः)** - மிகவும் துக்கமுடையவர்களாய், **अन्योन्यं** - ஒருவருக் கொருவர், **अव्यक्तं** - ப்ரகாச மில்லாமல், **अभिवीक्षन्ते** - பார்த்துக் கொள்ளுகிறார்கள்.

20. (ப - ரை) **ततः** - பிறகு, **राम शोक अभितप्तानां** - ராமனை விட்டுப்பிரிந்த துக்கத்தினால் பரிதபிக்கப் பட்டிருக்கிற, **प्रासादेभ्यः** - மாடிகளிலிருந்து, (**अवतीर्णा-नाम्**-இரங்கி வந்திருக்கின்ற), **दशरथस्त्रीणां**-தசரத மஹாராஜரின் பெண்டுகளுடைய, **मन्दं** - மெதுவான, **जल्पितम्** - பேச்சை, **ततस्ततः** - அங்கங்கு, **शुश्राव** - கேட்டார்.

21—22—23. (ப - ரை) **रामेण सह** - ராமனுடன் கூட, **निर्यातः** - புறப்

மெத்தைகளிலும், அடுக்கு மாளிகைகளிலும், அரசர்களுக்கு உறிய உப்பரிகை களிலு மிருந்துகொண்டு ஹா ஹாகாரம் செய்தார்கள்.

19. (பொ - ரை) அந்த ஸ்த்ரீகள். ராமனைக் காணாத வருத்தத்தினால் மிக வும் பீடிக்கப் பட்டு, மை பூசாமையால் நிர்மலங்களாயும், கண்ணீர் ததும்பிக் கொண்டும், விசாலங்களுமான கண்களால் இன்னது செய்ய வேண்டுமென்று ஒன்றும் தோன்றாமையால் ப்ரகாச மில்லாமல் ஒருவருக் கொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

20. (பொ - ரை) பிறகு ஸ்ரீராமனை விட்டுப் பிரிந்த துக்கத்தினால் பரிதபித் துக் கொண்டிருக்கும் அந்த தசரதருடைய ஸ்த்ரீகள், ஸுமந்த்ரர் வந்ததைத் தெரிந்து கொண்டு மாடிகளிலிருந்து இரங்கி வந்து, அரசர் ஸமீபத்திலிருப்பதால் மெதுவாக பேசிக் கொண்டிருப்பதை ஸுமந்த்ரர் காதால் கேட்டார்.

21—22—23. (பொ - ரை) ராமனுடன், வனத்திற்குச் சென்ற ஸுமந்த்ரர்

सत्यरूपं तु तद्वाक्यं राज्ञः स्त्रीणां निशामयन् ।
प्रदीप्तमिव शोकेन विवेश सहसा गृहम् ॥ 23 ॥

स प्रविश्याष्टमीं कक्ष्यां राजानं दीनमातुरम् ।
पुत्रशोकपरिद्यूनमपश्यत्पाण्डुरे गृहे ॥ 24 ॥

பட்டுப் போய், **रामं विना** - ராமனை விட்டு, **इह** - இங்கு, **आगतः** - வந்த **सूतः** - ஸாரதி, **शोचन्तीं** - துக்கப்பட்டுக்கொண்டிருக்கிற, **कौसल्यां** - கௌஸல்யை யைப் பார்த்து, **किं नाम** - எதை, **प्रतिवक्ष्यति** - பதில் சொல்லப்போகிறாரோ, **यथा** - எவ்விதமாக, (**अस्मत्जीवितम्** - நம்முடைய பிழைப்பை), **दुर्जीवं** - கஷ்டப் பிழைப்பாக, **मन्ये** - எண்ணுகிறேனோ, **एवं** - இவ்வாறு, **कौसल्या** - கௌஸல்யா தேவி, **पुत्रे** - புத்திரனை ஸ்ரீராமன், **निर्याते** (**सति**) - புறப்பட்டுப் போனவளவில், **आच्छिद्य** - பலாத்காரமாக, **जीवति यत्र** - பிழைத்திருக்கிறாள் என்பது யாதொன்று உண்டோ, **तत्** - அது, (**न सुकरं** - ஸுகமாகச் செய்யமுடியாது.) **ध्रुवम्** - நிச்சயம், **मन्ये** - இவ்வாறு எண்ணுகிறேன், (**इति** - என்று), **राज्ञः स्त्रीणां** - ராஜ ஸ்த்ரீகளு டைய, **सत्यरूपं** - மிகவும் உண்மையான, **तत् वाक्यं** - அந்த வார்த்தையை, **निशा-मयन्** (**सन्**) - கேட்டுக்கொண்டே, **शोकेन** - சோகத்தினால், **प्रदीप्तं इव** - எரிந்து கொண்டிருப்பது போன்ற, **गृहम्** - ராஜ க்ருஹத்தை, **सहसा** - சீக்கிரமாக, **विवेश** - ப்ரவேசித்தார்.

24. (ப - ரை) **सः** - அந்த ஸுமந்த்ரர், **अष्टमीं कक्ष्यां** - எட்டாவது கட்டை, **प्रविश्य** - ப்ரவேசித்து, **पाण्डुरे** - வெளுமையான, **गृहे** - க்ருஹத்தில், **पुत्रशोकपरि-द्यूनं** - புத்திர சோகத்தினால் இளைத்தவராய், **दीनं** - மனம் நொந்தவராய், **आतुरम्** - வ்யாதியினால் பீடிக்கப்பட்டவர் போன்ற, **राजानं** - அரசனை, **अपश्यत्** - பார்த்தார்.

---

ராமனில்லாமல் இங்கு வந்திருக்கிறார். இவரைப் பார்த்து கௌஸல்யா தேவி, ராமன் எங்கே என்று கேட்டால் அந்த அம்மாளுக்கு இவர் என்ன பதில் சொல்லப் போகிறாரோ தெரியவில்லை. ராமனை விட்டுப் பிரிந்து நாம் உயிருடன் இருப்பதே கஷ்ட மாயிருக்க, ஔரஸ புத்திரனை அந்த ராமன் காட்டிற்குச் சென்ற பிறகு அவனை விட்டு கௌஸல்யா தேவி உயிருடன் இருப்பது என்பது மிகவும் செய்யக்கூடாத கார்யம். இது நிச்சயம்தான் என்று இவ்வாறு அவ்வரசனுடைய ஸ்த்ரீகள் உண்மையாகப் பேசிக்கொண்டிருக்கும் பேசசைக் கேட்டுக்கொண்டே துக்கத்தி னால் நெருப்புப் பற்றி எரிந்துகொண்டு இருப்பது போன்ற அவ்வரசன் அரண் மனைக்குள் விரைவில் சென்றார்.

24. (பொ - ரை) அந்த ஸுமந்த்ரர் எட்டாவது கட்டில் நுழைந்து, ராஜ லக்ஷ்மி இல்லாமலிருக்கும் அந்த அரண்மனையில் புத்திர சோகத்தினால் இளைத்து மனம் நொந்து நோயாளி போலிருக்கும் அவ்வரசனைக் கண்டார்,

अभिगम्य तमासीनं नरेन्द्रमभिवाद्य च ।
सुमन्त्रो रामवचनं यथोक्तं प्रत्यवेदयत् ॥ 25 ॥
स तूष्णीमेव तच्छ्रुत्वा राजा विभ्रान्तचेतनः ।
मूर्च्छितो न्यपतद्भूमौ रामशोकाभिपीडितः ॥ 26 ॥
ततोऽन्तःपुरमाविद्धं मूर्च्छिते पृथिवीपतौ ।
उद्धृत्य बाहू चुक्रोश नृपतौ पतिते क्षितौ ॥ 27 ॥

---

25. (ப - ரை) **सुमन्त्रः** - ஸுமந்த்ரர், **आसीनं** - உட்கார்ந்து கொண்டிருக்கும், **तं नरेन्द्रं** - அவ்வரசனை, **अभिगम्य** - ஸமீபத்தில் சென்று, **अभिवाद्य च** - நமஸ்காரமும் செய்து, **रामवचनं** - ஸ்ரீராமன் சொன்ன வார்த்தையை, **यथोक्तं** - அவர் சொன்ன படியே, **प्रत्यवेदयत्** - தெரிவித்தார்.

26. (ப - ரை) **सः राजा** - அந்த அரசன், **तत्** - அந்தச் சொல்லை, **श्रुत्वा** - கேட்டு, **तूष्णीं एव** - பேசாமலே யிருந்து, **विभ्रान्तचेतनः** - ப்ரமித்த புத்தியுடையவராய், **रामशोक अभिपीडितः** - ராமன் சோகத்தினால் நன்றாய் பீடிக்கப்பட்டவராய், **मूर्च्छितः** - மூர்ச்சை யடைந்து, **भूमौ** - தரையில், **न्यपतत्** - விழுந்தார்.

27. (ப - ரை) **ततः** - பிறகு, **पृथिवीपतौ** - அரசன், **मूर्च्छिते (सति)** - மூர்ச்சை யடைந்தவளவில், **अन्तः पुरं** - அந்தப்புரமானது, **आविद्धं** - துக்கத்தினால் பீடிக்கப்பட்டதாக, **(अभूत्** - ஆகசுது) **नृपतौ** - அரசன், **क्षितौ** - தரையில், **पतिते (सति)** - விழுந்த வளவில், **बाहू** - கைகளை, **उद्धृत्य** - தூக்கிக்கொண்டு, **चुक्रोश** - அழுதது.

25. (பொ - ரை) அந்த ஸுமந்த்ரர், அவ்வாறு உட்கார்ந்து கொண்டிருக்கும் அவ்வரசன் ஸமீபம் சென்று அவரை நமஸ்கரித்து விட்டு, ராமன் சொன்ன வார்த்தையை உள்ளபடியே அரசனிடம் தெரிவித்தார்.

26. (பொ - ரை) அவ்வரசன், ஸுமந்த்ரர் சொன்ன அவ்வார்த்தையைக் கேட்டு, சற்று நேரம் பேசாமலே யிருந்து, புத்தி ப்ரமித்து, ராம சோகத்தினால் அதிகமாக பீடையுண்டு மூர்ச்சித்து தரையில் விழுந்துவிட்டார்.

27. (பொ - ரை) அம்மன்னவர், அவ்வாறு மூர்ச்சை யடைந்தவுடன் அந்தப்புரத்திலிருக்கும் ஸ்த்ரீகள் எல்லோரும் மிகவும் சோகத்தை அடைந்தார்கள். அவர் தரையில் விழுந்தவுடன் தோள்களை உயரத் தூக்கிக்கொண்டு கதறினார்கள்.

सुमित्रया तु सहिता कौसल्या पतितं पतिम् ।
उत्थापयामास तदा वचनं चेदमब्रवीत् ॥ 28 ॥

इमं तस्य महाभाग दूतं दुष्करकारिणः
वनवासादनुप्राप्तं कस्मान्न प्रतिभाषसे ॥ 29 ॥

अद्येममनयं कृत्वा व्यपत्रपसि राघव ।
उत्तिष्ठ सुकृतं तेऽस्तु शोके न स्यात्सहायता ॥ 30 ॥

---

28. (ப - ரை) **तदा** - அப்பொழுது, **कौसल्या तु** - கௌஸல்யா தேவி, **सुमित्रया** - ஸுமித்ரா தேவியுடன், **सहिता** - கூடியவளாய், **पतितं** - (தரையில்) விழுந்திருக்கிற, **पतिम्** - கணவனை, **उत्थापयामास** - எடுத்தாள், **इदं वचनं च** - இந்த வார்த்தையையும், **अब्रवीत्** - சொன்னாள்.

29. (ப - ரை) **महाभाग** - பெரும் பாக்யமுடையவரே! **दुष्करकारिणः** - (மற்றவர்) செய்ய முடியாத கார்யத்தைச் செய்தவரான, **तस्य** - அந்த ராமனுடைய, **दूतं** - தூதனை, **वनवासात्** - வனவாஸத்திலிருந்து, **अनुप्राप्तं** - வந்திருக்கிற, **इमं** - இந்த ஸுமந்த்ரரை, **कस्मात्** - ஏன், **न प्रतिभाषसे** - (பார்த்து) 'பேசாமலிருக்கின்றீர்.

30. (ப - ரை) **राघव** - ரகு குலத்தில் பிறந்தவரே! **इमं अनयं** - இந்த அக்ரமத்தை, **कृत्वा** - செய்து விட்டு, **अद्य** - இப்பொழுது, **व्यपत्रपसि** - வெட்கப்படுகின்றீர், **उत्तिष्ठ** - எழுந்திரும், **ते** - உமக்கு, **सुकृतं** - புண்யம், **अस्तु** - உண்டாகட்டும், **शोके** - துக்கத்தின் விஷயத்தில், **सहायता** - ஒத்தாசையானது, **न स्यात्** - உண்டாகக் கூடாது.

---

28. (பொ - ரை) அரசன் தரையில் விழுந்தவுடனே, கௌஸல்யா தேவி, ஸுமித்ரையுடன் கூட அவரை எடுத்து உட்கார்த்திவிட்டு, அவரைப்பார்த்து ஒரு வார்த்தையையும் சொன்னாள்.

29. (பொ - ரை) பெரும் பாக்யமுடையவரே! மற்றொருவராலும் செய்ய முடியாத கார்யத்தைச் செய்த அந்த ராமனுடைய தூதனை, வனவாஸத்திலிருந்து வந்திருக்கிற இந்த ஸுமந்த்ரரைப் பார்த்து நீர் ஏன் ஒன்றும் பேசாமலிருக்கிறீர்.

30. (பொ-ரை) ராகவா! ராமனைக் காட்டிற்குத் துரத்துவதாகிற இவ்விதமான அக்ரமத்தைச் செய்து விட்டு இப்பொழுது ஏன் வெட்கப்படுகிறீர். எழுந்திரும். உமக்குப் புண்யம் உண்டாகட்டும். சோகத்திற்கு உதவியாயிருந்து அதை வளர்த்த வேண்டாம்.

देव यस्या भयाद्रामं नानुपृच्छसि सारथिम् ।
नेह तिष्ठति कैकेयी विस्रब्धं प्रतिभाष्यताम् ॥ 31 ॥

सा तथोक्त्वा महाराजं कौसल्या शोकलालसा ।
धरण्यां निपपाताऽऽशु बाष्पविप्लुतभाषिणी ॥ 32 ॥

एवं विलपतीं दृष्ट्वा कौसल्यां पतितां भुवि ।
पतिं चावेक्ष्य ताः सर्वाः सुस्वरं रुरुदुः स्त्रियः ॥ 33 ॥

31. (ப - ரை) **हे देव** - ப்ரபோ! **यस्याः** - எவளிடமிருந்து, **भयात्** - பயத்தினால், **रामं** - ஸ்ரீராமனைப்பற்றி, **सारथिम्** - ஸாரதியை, **न अनुपृच्छसि** - கேட்காமலிருக்கிறீரோ, **कैकेयी** - அந்த கைகேயியானவள், **इह** - இங்கு, **न तिष्ठति** - இல்லை, **विस्रब्ध** - கூசாமல், **प्रतिभाष्यताम्** - கேட்கப்படலாம்.

32. (ப - ரை) **सा कौसल्या** - அந்த கௌஸல்யை யானவள், **महाराजं** - மஹாராஜரைப் பார்த்து, **तथा** - அவ்வாறு, **उक्त्वा** - சொல்லி விட்டு, **शोकलालसा** - சோகத்தினால் மிகவும் வருத்தமுடையவளாய், **बाष्प विप्लुत भाषिणी** - கண்ணீரால் தழுதழுத்த வார்த்தையோடு கூடியவளாய், **आशु** - சீக்கிரமாக, **धरण्यां** - தரையில், **निपपात** - விழுந்தாள்.

33. (ப - ரை) **एवं** - இவ்வாறு, **विलपतीं** - கதறிக்கொண்டும், **भुवि** - தரையில், **पतितां** - விழுந்துமிருக்கிற, **कौसल्यां** - கௌஸல்யா தேவியையும், **दृष्ट्वा** - பார்த்து, **पतिं** - பர்த்தாவையும், **अवेक्ष्य च** - பார்த்து, **ताः स्त्रियः** - அந்த ஸ்த்ரீகள், **सर्वाः** - எல்லோரும், **सुस्वरं (यथा तथा)** - பெருங்குரலோடு, **रुरुदुः** - அழுதார்கள்.

31. (பொ - ரை) ஸ்வாமி! யாதொரு கைகேயி யினிடம் பயத்தினால் ராமனைப் பற்றி ஸுமந்த்ரரை கேட்காமலிருக்கின்றீரோ, அந்த கைகேயி இங்கு இல்லை. ஆதலால் பயமில்லாமல் ஸுமந்த்ரரைக் கேட்கலாம்.

32. (பொ - ரை) அந்த கௌஸல்யை, மஹாராஜரைப் பார்த்து அவ்வாறு சொல்லிவிட்டு, மிகவும் சோகத்தினால் பீடிக்கப் பட்டவளாய் கண்டத்தில் உள்ளடங்கிய கண் ஜலத்தினால் தழுதழுத்த வார்த்தையுடையவளாய் திடீரென்று தரையில் விழுந்து விட்டாள்.

33. (பொ - ரை) இவ்வாறு, தரையில் விழுந்து கதறிக் கொண்டிருக்கும் கௌஸல்யா தேவியையும், பர்த்தாவையும் பார்த்து அந்த ஸ்த்ரீக ளெல்லோரும் பெரும் கூக்குரலுடன் அழுதார்கள்.

ततस्तमन्तःपुरनादमुत्थितं समीक्ष्य वृद्धास्तरुणाश्च मानवाः ।
स्त्रियश्च सर्वा रुरुदुः समन्ततः पुरं तदासीत्पुनरेव संकुलम् ॥ 34 ॥

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे
सप्तपञ्चाशः सर्गः ॥ 57 ॥

---

34. (ப - ரை) **ततः** - பிறகு, **उत्थितं** - அதிகமாக உண்டான, **तं** - அந்த, **अन्तःपुरनादं** - அந்தப்புரத்தின் சப்தத்தை, **समीक्ष्य** - கேட்டு, **वृद्धाः** - கிழவர்களும், **तरुणाः च** - வாலிபர்களுமான, **मानवाः** - மனிதர்களும், **सर्वाः स्त्रियः च** - எல்லா ஸ்த்ரீகளும், **रुरुदुः** - அழுதார்கள், **तदा** - அப்பொழுது, **पुरं** - அந் நகரமானது, **पुनः एव** - மறுபடியும், **समन्ततः** - நாற்புரங்களிலும், **संकुलम्** - கலங்கினதாக, **आसीत्** - ஆயிற்று.

---

34. (பொ - ரை) பிறகு, அதிகமாக உண்டான அந்த அந்தப்புர ஸ்த்ரீகளின் கூக்குரலைக் கேட்டு வ்ருத்தர்களும், வாலிபர்களும், மற்ற ஸ்த்ரீக ளெல்லோரும் அழத் தொடங்கினார்கள். அப்பொழுது அந் நகரமானது ராமன் காட்டிற்குப் புறப் படுங்காலத்தில் கலங்கியது போல் மறுபடியும் நாற்புரங்களிலும் கலங்கிவிட்டது.

---

अष्टपञ्चाशः सर्गः ॥ 58 ॥

प्रत्याश्वस्तो यदा राजा मोहात्प्रत्यागतः पुनः ।
अथाऽऽजुहाव तं सूतं रामवृत्तान्तकारणात् ॥ 1 ॥

अथ सूतो महाराजं कृताञ्जलिरुपस्थितः ।
राममेवानुशोचन्तं दुःखशोकसमन्वितम् ॥ 2 ॥

वृद्धं परमसंतप्तं नवग्रहमिव द्विपम् ।
विनिश्वसन्तं ध्यायन्तमस्वस्थमिव कुञ्जरम् ॥ 3 ॥

1. (ப - ரை) **यदा** - எப்பொழுது, **राजा** - அரசன், **मोहात्** - மூர்ச்சையி லிருந்து, **प्रत्याश्वस्तः** - தேறுதல் செய்யப்பட்டவராய், **पुनः** - மறுபடி, **प्रत्यागतः** - (ஸாரதிக்கு) எதிராக விருந்துகொண்டு, **अथ** - பிறகு, **तं सूतं** - அந்த ஸாரதியை, **रामवृत्तान्त कारणात्** - ஸ்ரீராமனுடைய வ்ருத்தாந்தத்தைக் கேட்பதின் காரணமாக, **आजुहाव** - அழைத்தார்.

2—3. (ப - ரை) **अथ** - பிறகு, **सूतः** - ஸாரதி, **रामं एव** - ராமனைக் குறித்தே, **अनुशोचन्तं** - துக்கித்துக் கொண்டும், **दुःखशोकसमन्वितम्** - துக்கத் தோடும், சோகத்தோடும் கூடினவராயும், **नवग्रहं** - புதிதாகப்பிடிக்கப்பட்ட, **द्विपं इव** - யானையைப்போல், **परम संतप्तं** - மிகவும் தபித்துக்கொண்டும், **विनिश्वसन्तं** - பெரு மூச்சு விட்டுக் கொண்டும், **ध्यायन्तं** - சிந்தித்துக் கொண்டும், **अस्वस्थं** - ஸ்வஸ்த மில்லாமலிருக்கிற, **कुञ्जरं इव** - யானை போன்றும் இருக்கிற, **वृद्धं** - கிழவரான, **महाराजं** - மஹாராஜரை, **कृताञ्जलिः** - கைகூப்பினவராய், **उपस्थितः** - ஸமீபத்தில் சென்றார்.

1. (பொ - ரை) பிறகு, அம்மஹாராஜர், மூர்ச்சை தெளிந்து எழுந்து ஸாரதியின் எதிரே நின்று, வனத்திலிருக்கும் ஸ்ரீராமன் முதலானவர்களுடைய வ்ருத்தாந்தத்தைக் கேட்பதற்காக அந்த ஸாரதியை அழைத்தார்.

2—3. (பொ - ரை) பிறகு, ஸாரதியான ஸுமந்த்ரர், ராமனைப் பற்றியே சோகித்துக் கொண்டும், துக்கத்துடனும், சோகத்துடனும் கூடினவராய் புதிதாகப் பிடித்துக்கொண்டு வரப்பட்ட யானைபோல் மிகவும் பரிதபித்து பெருமூச்சு விட்டுக் கொண்டு, மனதில் கவலை கொண்டு, வ்யாதியினால் பீடிக்கப்பட்ட யானை போலிருக் கும் கிழவரான அம்மஹாராஜர் ஸமீபத்திற்குக் கை கூப்பிச் சென்றார்.

राजा तु रजसा सूतं ध्वस्ताङ्गं समुपस्थितम् ।
अश्रुपूर्णमुखं दीनमुवाच परमार्तवत् ॥ 4 ॥

क्व नु वत्स्यति धर्मात्मा वृक्षमूलमुपाश्रितः ।
सोऽत्यन्तसुखितः सूत किमशिष्यति राघवः ॥ 5 ॥

दुःखस्यानुचितो दुःखं सुमन्त्र शयनोचितः ।
भूमिपालात्मजो भूमौ शेते कथमनाथवत् ॥ 6 ॥

4. (ப - ரை) **राजा तु** - அரசனும், **रजसा** - புழுதியினல், **ध्वस्त अङ्गं** - அழுக்கு அடைந்த சரீர முடையவராய், **अश्रुपूर्णमुखं** - கண்ணீர் நிறைந்த முக முடையவராய், **दीनं** - தீனராய், **समुपस्थितम्** - ஸமீபத்திற்கு வந்திருக்கிற, **सूतं** - ஸாரதியைப் பார்த்து, **परमार्तवत्** - மிகவும் துக்கமுடையவராய், **उवाच** - சொன்ஞர்.

5. (ப - ரை) **हे सूत** - ஸாரதியே! **धर्मात्मा** - தர்மிஷ்டரான, **राघवः** - ராகவன், **क्व नु** - எங்கே, **वत्स्यति** - வஸிக்கிறுன், **अत्यन्तसुखितः** - மிகவும் ஸுகப்பட்டுக் கொண்டிருந்த, **सः** - அவன், **वृक्षमूलं** - மரத்தின் அடியே, **उपाश्रितः** - அடைந்தவனுய், **किं अशिष्यति** - எதை புஜிக்கிறுன்.

6. (ப - ரை) **हे सुमन्त्र** - ஸுமந்த்ரரே! **दुःखस्य** - துக்கத்திற்கு, **अनुचितः** - தகாதவனுயும், **शयनोचितः** - (ஸுகமான) படுக்கைக்குத் தகுந்தவனுயும், **भूमिपालात्मजः** - ராஜ குமாரனுமான அந்த ராகவன், **अनाथवत्** - திக்கற்றவன் போல், **भूमौ** - தரையில், **दुःखं** - துக்கமாக, **कथं** - எவ்வாறு, **शेते** - படுத்துக்கொண் டிருக்கிறுன்.

---

4. (பொ - ரை) அரசனும், புழுதி படிந்த சரீரத்துடனும், கண்ணீர் நிறைந்த முகத்துடனும் தீனமாய் தன் ஸமீபத்தில் வந்திருக்கும் ஸாரதியைப் பார்த்து, மிகவும் துக்கமுடையவராய் ஒரு வார்த்தை சொன்ஞர்.

5. (பொ - ரை) ஸாரதி! தர்மாத்மாவான அந்த ராகவன், இப்பொழுது எங்கே வஸிக்கிறுன்? மிகவும் ஸுகத்திலிருந்த அவன் இப்பொழுது மரத்து அடியில் உட்கார்ந்து கொண்டு எதை சாப்பிடுகிறுன்?

6. (பொ - ரை) ஹே ஸுமந்த்ரரே! துக்கப்படுவதற்குத் தகாதவனுய் விலை உயர்ந்த படுக்கைகளில் படுத்துக்கொள்ளத் தகுந்தவனுமான அந்த ராஜ குமாரன் ஒரு அநாதன்போல் எவ்வாறு தரையில் கஷ்டப்பட்டு படுத்துக்கொண்டிருக்கிறுன்?

यं यान्तमनुयान्ति स्म पदातिरथकुञ्जराः ।
स वत्स्यति कथं रामो विजनं वनमाश्रितः ॥ 7 ॥

व्यालैर्मृगैराचरितं कृष्णसर्पनिषेवितम् ।
कथं कुमारौ वैदेह्या सार्धं वनमुपस्थितौ ॥ 8 ॥

सुकुमार्या तपस्विन्या सुमन्त्र सह सीतया ।
राजपुत्रौ कथं पादैरवरुह्य रथाद्गतौ ॥ 9 ॥

7. (ப - ரை) - **यान्तं** - போகின்ற, **यं** - யாதொரு ராமனை, **पदातिरथकुञ्जराः** - காலாட்களும், தேர்களும், யானைகளும், **अनुयान्ति स्म** - பின் சென்றனவோ, **सः रामः** - அந்த ராமன், **विजनं** - ஜனமில்லாத, **वनं** - காட்டை, **आश्रितः** - அடைந்தவனாய், **कथं** - எப்படி, **वत्स्यति** - வஸிப்பான்.

8. (ப - ரை) **व्यालैः** - மலைப் பாம்புகளாலும். **मृगैः** - புலி முதலான ம்ருகங்களாலும், **आचरितं** - ஸஞ்சரிக்கப்பட்டும், **कृष्णसर्पनिषेवितम्** - கரு நாகங்களால் அடையப்பட்டுமிருக்கிற, **वनं** - வனத்தை, **कुमारौ** - (என்னுடைய) குமாரர், **वैदेह्या सार्धं** - ஸீதையுடன் கூட, **कथं** - எவ்வாறு, **उपस्थितौ** - அடைந்தார்கள்.

9. (ப - ரை) **हे सुमन्त्र** - ஸுமந்த்ரரே! **राजपुत्रौ** - ராஜ புத்திரர்கள், **सुकुमार्या** - மெல்லிய சரீரமுடைய, **तपस्विन्या** - தபஸ்ஸையுடைய, **सीतया सह** - ஸீதையுடன் கூட, **रथात्** - தேரிலிருந்து, **अवरुह्य** - இறங்கி, **कथं** - எப்படி, **पादैः** - கால்களால், **गतौ** - நடந்து போனார்கள்?

7. (பொ - ரை) யாதொரு ராமன், வெளியில் புறப்படும்பொழுது காலாட்கள், தேர்கள், யானைகள் பின் சென்றனவோ, அப்படிப்பட்ட ராமன் ஜன ஸஞ்சாரமில்லாத வனம் சென்று எவ்வாறு வஸிப்பான்?

8. (பொ - ரை) மலைப் பாம்புகளும், புலி, ஸிம்மம் முதலான துஷ்ட ம்ருகங்களும் ஸஞ்சரிக்கின்ற வனத்திற்கு என் குமாரர்கள் ஸீதையுடன் கூட எவ்வாறு சென்றார்கள்?

9. (பொ - ரை) ஸுமந்த்ரரே! அந்த ராஜ புத்திரர்கள், மிகவும் ம்ருதுவான சரீரமுடையவளாய், பதிவ்ரதா தர்மமென்கிற சிறந்த தபஸ்ஸை உடையவளுமான ஸீதையுடன் கூட, தேரிலிருந்து இறங்கி எப்படி கால் நடையாக வனத்தில் சென்றார்கள்?

सिद्धार्थः खलु सूत त्वं येन दृष्टौ ममाऽऽत्मजौ ।
वनान्तं प्रविशन्तौ तावश्विनाविव मन्दरम् ॥ 10 ॥

किमुवाच वचो रामः किमुवाच च लक्ष्मणः ।
सुमन्त्र वनमासाद्य किमुवाच च मैथिली ॥ 11 ॥

आसितं शयितं भुक्तं सूत रामस्य कीर्तय ।
जीविष्याम्यहमेतेन ययातिरिव साधुषु ॥ 12 ॥

---

10. (ப - ரை) **हे सूत** - ஸாரதியே, **मन्दरम्** - மந்தர மலையை, **अश्विनौ इव** - அச்வனீதேவதைகள் (ப்ரவேசிப்பது) போல, **वनान्तं** - வனப்ரதேசத்தை, **प्रविशन्तौ** - ப்ரவேசிக்கின்ற, **तौ** - அந்த, **मम आत्मजौ** - என்னுடைய குமாரர்கள், **येन त्वया** - யாதொரு உம்மால், **दृष्टौ** - காணப்பட்டார்களோ, (**सः** - அப்படிப்பட்ட), **त्वं** - நீர், **सिद्धार्थः खलु** - க்ருதார்த்தர் அல்லவா!

11. (ப - ரை) **हे सुमन्त्र** - ஸுமந்த்ரரே! **रामः** - ராமன், **किंवचः** - என்ன வார்த்தையை, **उवाच** - சொன்னான், **लक्ष्मणः** - இலக்குமணன், **किं** - என்ன வார்த்தையை, **उवाच च** - சொன்னான், **मैथिली च** - ஸீதையும், **वनं** - வனத்தை, **आसाद्य** - அடைந்து, **किं उवाच च** - என்ன சொன்னாள்?

12. (ப - ரை) **हे सूत** - ஸாரதியே! **रामस्य** - ராமனுடைய, **आसितं** - உட்கார்ந்திருப்பதையும், **शयितं** - படுத்துக் கொண்டிருப்பதையும், **भुक्तं** - போஜனத்தையும், **कीर्तय** - சொல்லும், **एतेन** - இதனால், **साधुषु** - நல்லவர்களிடத்தில், **ययातिः इव** - யயாதி மஹாராஜன் போல், **अहं** - நான், **जीविष्यामि** - பிழைத்திருப்பேன்.

---

10. (பொ - ரை) ஸாரதியே! அச்வனீதேவதைகள் மந்தர மலையில் ப்ரவேசிப்பது போல், என்னுடைய குமாரர்கள் இருவரும், வன மத்யத்தில் ப்ரவேசிக்கும் பொழுது நீர் அவர்களை அந்த ஸமயத்தில் பார்த்தீரல்லவா! ஆதலால் நீர் மிகவும் க்ருதார்த்தர்.

11. (பொ - ரை) ஸுமந்த்ரரே! ராமன் என்ன சொன்னான், இலக்குமணன் என்ன சொன்னான், மிதிலா நகரத்து அரசன் பெண்ணான ஸீதா தேவி வனம் சென்று என்ன சொன்னாள்.

12. (பொ - ரை) ஸாரதியே! வனத்தில் ராமன் உட்கார்ந்திருந்ததையும், படுத்துக் கொண்டிருந்ததையும், சாப்பிட்டதையும் எனக்குச் சொல்லும். நான் இதைக் கேட்டாவது யயாதி மஹாராஜன் ஸாதுக்களின் கூட்டத்தில் விழுந்து ஜீவத்ததுபோல் ஜீவித்திருப்பேன்.

---

குறிப்பு :—யயாதி மஹாராஜர் தேவலோகம் சென்று அங்கிருந்து இந்திரனால் கபடமாக கீழே தள்ளப்படுங்காலத்தில் என்னை ஸாது கோஷ்டியில் விழும்படியாக நீர் அனுக்ரஹிக்க வேண்டுமென்று இந்திரனைப் ப்ரார்த்தித்து, அவ்வாறே, ஸாதுக் கூட்டத்தில் விழுந்து தன்னுடைய துக்கம் நீங்கியிருந்தார் என்று பாரதத்தில் கதை.

इति सूतो नरेन्द्रेण चोदितः सज्जमानया ।
उवाच वाचा राजानं स बाष्पपरिरब्धया ॥ 13 ॥

अब्रवीन्मां महाराज धर्ममेवानुपालयन् ।
अञ्जलिं राघवः कृत्वा शिरसाऽभिप्रणम्य च ॥ 14 ॥

सूत मद्वचनात्तस्य तातस्य विदितात्मनः ।
शिरसा वन्दनीयस्य वन्द्यौ पादौ महात्मनः ॥ 15 ॥

---

13. (ப - ரை) **इति** - இவ்வாறு, **बाष्पपरिरब्धया** - கண்ணீரால் தடுக்கப்பட்ட, **सज्जमानया** - தழுதழுத்த, **वाचा** - வார்த்தையினுல், **नरेन्द्रेण** - அரசனுல், **चोदितः** - ஏவப்பட்ட, **सः सूतः** - அந்த ஸாரதி, **राजानं** - அரசனைப் பார்த்து, **उवाच** - சொன்னுர்.

14. (ப - ரை) **हे महाराज** - மஹாராஜரே! **धर्मं एव** - தர்மத்தையே, **अनुपालयन्** - பரிபாலனம் செய்கின்ற, **राघवः** - ஸ்ரீராமன், **अञ्जलिं** - அஞ்ஜலியை, **कृत्वा** - செய்து, **शिरसा** - தலையினுல், **अभिप्रणम्य च** - நமஸ்காரமும் செய்து, **मां** - என்னைப் பார்த்து, **अब्रवीत्** - சொன்னுர்.

15. (ப - ரை) **हे सूत** - ஸாரதியே! **विदित आत्मनः** - ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்தவராய், **महात्मनः** - மஹா ப்ரபாவ முடையவராய், **वन्दनीयस्य** - எல்லோராலும் வந்தனம் செய்யத் தகுந்தவரான, **तस्य तातस्य** - அந்த என் பிதாவினுடைய, **पादौ** - பாதங்கள், **मत् वचनात्** - என் வார்த்தையினுல், **वन्द्यौ** - வந்தனம் செய்யத் தகுந்தது.

---

13. (பொ - ரை) இவ்வாறு, துக்கத்தினுல் கண்டத்தில் தங்கியிருக்கும் ஜலத்தினுல் தடைப்பட்டு தழுதழுத்த வார்த்தையுடன் அரசனுல் ஏவப்பட்ட அந்த ஸாரதி அரசனைப் பார்த்து ஒரு வார்த்தை சொன்னுர்.

14. (பொ - ரை) மஹா ராஜரே! எப்பொழுதும் தர்மத்தையே பாதுகாத்து வருகின்ற உம்முடைய ராகவன் உமக்காக அஞ்ஜலி செய்து தலையால் வணங்கி என்னிடம் சொன்னுர்.

15. (பொ - ரை) ஸுமந்த்ரரே! ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்தவராய் எல்லோராலும் புகழக்கூடியவராய், மஹாப்ரபாவ முடையவரான என் பிதாவினுடைய சரணங்களை நான் சொன்னதாகச் சொல்லி நீர் எனக்காக வந்தனம் செய்யவேண்டும்.

सर्वमन्तःपुरं वाच्यं सूत मद्वचनात्त्वया ।
आरोग्यमविशेषेण यथार्हं चाभिवादनम् ॥ 16 ॥

माता च मम कौसल्या कुशलं चाभिवादनम् ।
अप्रमादं च वक्तव्या ब्रूयाश्चैनामिदं वचः ॥ 17 ॥

धर्मनित्या यथाकालमग्न्यागारपरा भव ।
देवि देवस्य पादौ च देववत्परिपालय ॥ 18 ॥

---

16. (ப - ரை) **हे सूत** - ஸாரதியே! **सर्वं अन्तःपुरं** - அந்தப்புரம் முழுவதும், **अविशेषेण** - வித்யாஸமில்லாமல், **आरोग्यं** - க்ஷேமத்தையும், **यथार्हं** - அவரவர்களுக்குத் தக்கபடி, **अभिवादनं च** - நமஸ்காரத்தையும், **मत् वचनात्** - என்னுடைய வார்த்தையினுல், **त्वया** - உம்மால், **वाच्यं** - சொல்லத் தகுந்தது.

17. (ப - ரை) **कुशलं** - க்ஷேமத்தையும், **अभिवादनं च** - நமஸ்காரத்தையும், **अप्रमादं च** - (தர்மத்தில்) ஏமாந்திராமையும், **मम माता** - என் தாயாரான, **कौसल्या च** - கௌஸல்யா தேவியும், **वक्तव्या** - சொல்லத் தகுந்தவள், **एनां** - இவளைக் குறித்து, **इदं वचः** - இந்த வார்த்தையையும், **ब्रूयाः च** - (நீர்) சொல்ல வேண்டும்.

18. (ப - ரை) **हे देवि**-அம்மா! **धर्मनित्या** - தர்மத்தை நித்யமாக உடையவளாய், **यथाकालं** - காலம் தவருமல், **अग्न्यागार परा** - அக்னிசாலையில் கவனமுள்ளவளாக, **भव** - இரு, **देवस्य** - அரசனுடைய, **पादौ** - பாதங்களை, **देववत् (देवस्य इव)** - ஸ்வாமியினுடைய (பாதங்களைப்) போல், **परिपालय च** - பரிபாலனம் செய்து வாரும்.

---

16. (பொ - ரை) ஸாரதியே! அந்தப்புர ஸ்த்ரீகள் எல்லோரிடமும், வித்யாஸமில்லாமல், நான் க்ஷேமம் விசாரித்ததையும், அவரவர்களுக்குத் தக்கபடி நமஸ்காரத்தை செய்ததாகவும் எனக்காக நீர் சொல்லவேணும்.

17. (பொ - ரை) என் தாயாரான கௌஸல்யா தேவியிடம், நான் க்ஷேமம் விசாரித்து அபிவாதனம் செய்ததாகவும், தர்ம கார்யத்திலும் பர்த்தா விஷயத்திலும் தவருமலிக்கும்படி கேட்டதாகவும் நீர் சொல்லவேண்டும். அதுவுமல்லாமல் இன்னெரு வார்த்தையை நான் சொன்னதாகவும் சொல்ல வேண்டும்.

18. (பொ - ரை) அம்மா! தர்மத்தில் நித்யமாக நிலை நின்றவராய், காலம் தவருமல் அக்னிஹோத்திரம் செய்யும் சாலையில் வஸித்தமாக விருக்கவேண்டும். அரசனுடைய பாதங்களை தெய்வத்தின் பாதங்களைப் போல் பூஜையும் செய்து வாரும்.

अभिमानं च मानं च त्यक्त्वा वर्तस्व मातृषु ।
अनु राजानमार्यां च कैकेयीमम्ब कारय ॥ 19 ॥

कुमारे भरते वृत्तिर्वर्तितव्या च राजवत् ।
अर्थज्येष्ठा हि राजानो राजधर्ममनुस्मर ॥ 20 ॥

भरतः कुशलं वाच्यो वाच्यो मद्वचनेन च ।
सर्वास्वेव यथान्यायं वृत्तिं वर्तस्व मातृषु ॥ 21 ॥

19. (ப - ரை) **हे अम्ब** - அம்மா ! **अभिमानं च** - குலத்தின் பெருமையையும், **मानं च** - பட்ட மஹிஷி என்கிற பெருமையையும், **त्यक्त्वा** - விட்டுவிட்டு, **मातृषु** - என்னுடைய தாய்மார்களிடத்தில், **वर्तस्व** - நடந்து கொள்ளும், **राजानं** - அரசனையும், **आर्यां** - பூஜிக்கத் தகுந்த, **कैकेयीं च** - கைகேயியையும், **अनु** - ஸமானமாக, **कारय** - உபசரியும.

20. (ப - ரை) **कुमारे** - ராஜ குமாரனான, **भरते** - பரதனிடத்தில், **राजवत्** (**राज्ञि इव**) - அரசனிடத்தில் போல, **वृत्तिः** - வ்யாபாரமானது, **वर्तितव्या** - செய்யத் தகுந்தது, **हि** - ஏனென்றால், **राजानः** - அரசர்கள், **अर्थज्येष्ठाः** - செல்வத்தினால் பெரியவர்கள் (ஆதலால்), **राजधर्मं** - ராஜ தர்மத்தை, **अनुस्मर** - நினைத்துக் கொண்டிரும்.

21. (ப - ரை) **भरतः** - பரதன், (**त्वया** - உம்மால்), **कुशलं** - க்ஷேமத்தை, **वाच्यः** - சொல்லத் தகுந்தவன், **सर्वासु एव मातृषु** - தாய்மார்கள் எல்லோரிடத்திலுமே, **यथान्यायं** - ந்யாயப்படி, **वृत्तिं वर्तस्व** - சிச்ருஷை செய், (**इति च** - என்றும்), **मत् वचनेन** - என்னுடைய வார்த்தையினால், **वाच्यः** - சொல்லத் தகுந்தவன்.

---

19. (பொ - ரை) அம்மா! நான் உயர்ந்த குலத்தில் பிறந்தவள் என்னும் கர்வத்தையும், அரசனுக்கு ஜேஷ்ட பத்தினி என்னும் கர்வத்தையும் விட்டுவிட்டு, என் தாய்மார்கள் விஷயத்தில் நீர் நடந்துகொள்ள வேண்டும். ராஜாவையும், பூஜ்யையான கைகேயியையும் ஸமமாகப் பாவித்து உபசரிக்கவேண்டும்.

20. (பொ - ரை) மஹாராஜர் விஷயத்தில் உபசாரம் செய்வது போல், குமாரனான பரதன் விஷயத்தில் உபசாரம் செய்யவேண்டும். ஏனென்றால், அரசர்கள் செல்வத்தினால் பெரியவர்களே தவிர, வயதினால் பெரியவர்களல்ல. ஆதலால் அந்த ராஜ நீதியை அடிக்கடி நினைத்துக் கொண்டிரும்.

21. (பொ - ரை) பரதனை நீர் க்ஷேம ஸமாசாரத்தை விசாரித்து விட்டு, நம் தாய்மார்கள் எல்லோரிடத்திலுமே, நீதி தவறாமல் சிச்ருஷை செய்துகொண்டு வா என்று நான் சொன்னதாகவும் சொல்லவேண்டும்.

वक्तव्यश्च महाबाहुरिक्ष्वाकुकुलनन्दनः ।
पितरं यौवराज्यस्थो राज्यस्थमनुपालय ॥ 22 ॥

अतिक्रान्तवया राजा मा स्मैनं व्यवरोरुधः ।
कुमारराज्ये जीव त्वं तस्यैवाज्ञाप्रवर्तनात् ॥ 23 ॥

अब्रवीच्चापि मां भूयो भृशमश्रूणि वर्तयन् ।
मातेव मम माता ते द्रष्टव्या पुत्रगर्द्धिनी. ॥ 24 ॥

22. (ப - ரை) (**त्वं** - நீ) **यौवराज्यस्थः** - இளவரசில் இருந்துகொண்டு, **राज्यस्थं** - பெரிய அரசனாக விருக்கிற, **पितरं** - பிதாவை, **अनुपालय** - நன்றாகக் காப்பாற்ற வேண்டும், (**इति** - என்று), **महाबाहुः** - பெரிய தோள்களை யுடையவனும், **इक्ष्वाकुकुलनन्दनः** - இக்ஷ்வாகு வம்சத்து புத்திரனுன பரதன், **वक्तव्यः च** - சொல்லத் தகுந்தவன்.

23. (ப - ரை) **राजा** - அரசன், **अतिक्रान्तवयाः** - முதிர்ந்த வயது உடையவர், **एनं** - இவரை, **मा स्म व्यवरोरुधः** - கட்டுப் படுத்தாதே, **तस्य** - அவருடைய, **आज्ञाप्रवर्तनात् एव** - உத்திரவை நடத்திக்கொண்டே, **कुमारराज्ये** - யௌவ ராஜ்யத்தில், **जीव** - ஸுகமாக வாழ்ந்து கொண்டிரு.

24. (ப - ரை) **पुत्रगर्द्धिनी** - புத்திர வாத்ஸல்ய முடையவளான, **मम माता** - என் தாயார், **माता इव** - உன் தாயார்போல, **ते** - உன்னால், **द्रष्टव्या** - பார்க்கத் தகுந்தவள், **इति** - என்று, **भृशं** - மிகவும், **अश्रूणि** - கண் ஜலங்களை, **वर्तयन्** - பெருக்கிக் கொண்டு, **मां** என்னை (ப்பார்த்து) **भूयः अपि** - மறுபடியும், **अब्रवीत् च** - சொன்னார்.

---

22. (பொ - ரை) நீ, யௌவராஜ்யத்தி லிருந்துகொண்டு, பெரிய அரசனாக விருக்கும் நம் பிதாவை நன்றாக பரிபாலனம் செய்து வா என்று நான் சொன்னதாக பெரிய தோள்களை யுடையவனும் இக்ஷ்வாகு குலத்துக் குமாரனுன பரதனிடம் சொல்லவேண்டும்.

23. (பொ - ரை) அரசன் மிகவும் முதிர்ந்த வயது உடையவராதலால், ஒரு விதத்திலும் அவரைக் கட்டுப்படுத்தாதே, அவர் எவ்விதமாக உத்திரவு செய்தாலும் அதன்படியே நடந்துக்கொண்டு இளவரசு பட்டத்தில் இருந்து ஸுகமாக போகங்களை நீ அனுபவித்து வரவும்.

24. (பொ - ரை) புத்திர வாத்ஸல்ய முடையவளான என் தாயாரை உன் தாயாரைப்போல் பார்த்துக் கொள்ளவேண்டும் என்றும் சொல்லிவிட்டு மறுபடியும் கண் ஜலங்களைப் பெருக்கிக் கொண்டு என்னைப் பார்த்துச் சொன்னார்.

इत्येवं मां महाराज ब्रुवन्नेव महायशाः ।
रामो राजीवताम्राक्षो भृशमश्रूण्यवर्तयत् ॥ 25 ॥

लक्ष्मणस्तु सुसंक्रुद्धो निःश्वसन्वाक्यमब्रवीत् ।
केनायमपराधेन राजपुत्रो विवासितः ॥ 26 ॥

राज्ञा तु खलु कैकेय्या लघु त्वाश्रित्य शासनम्
कृतं कार्यमकार्यं वा वयं येनाभिपीडिताः ॥ 27 ॥

---

25. (ப - ரை) **हे महाराज** - மஹாராஜரே! **महायशाः** - பெரிய கீர்த்தியையுடைய, **रामः** - ஸ்ரீராமன், **इति** - என்று, **एवं** - இவ்வாறு, **ब्रुवन् एव** - சொல்லிக் கொண்டே, **राजीव ताम्राक्षः** - செந்தாமரை மலர்போல் சிவந்த கண்களையுடையவராய், **भृशं** - மிகவும், **अश्रूणि** - கண் ஜலங்களை, **अवर्तयत्** - பெருக்கினார்.

26. (ப - ரை) **लक्ष्मणः तु** - இலக்குமணனோவென்றால், **सुसंक्रुद्धः** - மிகவும் கோப முடையவராய், **निःश्वसन् (सन्)** - பெருமூச்சு எறிந்துகொண்டு, **वाक्यं** - வார்த்தையை, **अब्रवीत्** - சொன்னார், **अयं राजपुत्रः** - இந்த ராஜகுமாரர், **केन अपराधेन** - எந்தக் குற்றத்தினால், **विवासितः** - காட்டிற்குத் துறத்தப்பட்டார்.

27. (ப - ரை) - **येन** - யாதொரு கார்யத்தினால், **वयं** - நாங்கள், **अभि पीडिताः** - பீடிக்கப்பட்டோமோ, (**तत्** - அது), **अकार्यं तु** - செய்யத்தகாத கார்யம் தான், **राज्ञा तु** - அரசனால், **कैकेय्याः** - கைகேயியினுடைய, **लघु** - அல்பமான, **शासनम्** - ஆக்ஞையை, **आश्रित्य** - அடைந்து, **कार्यं वा** - செய்யத்தகுந்த கார்யம் போல், **कृतं खलु** - செய்யப்பட்டது அல்லவா!

---

25. (பொ - ரை) மஹாராஜரே! பெரிய கீர்த்தியையுடைய ஸ்ரீராமன், என்று இவ்வாறு என்னிடம் சொல்லிக்கொண்டே, செந்தாமரை மலர்போல் கண் சிவந்து அதிகமாக கண்ணீரைப் பெருக்கிக் கொண்டிருந்தார்.

26. (பொ - ரை) இலக்குமணன் மாத்திரம், ஸ்ரீராமனைப் போல் மனதை அடக்கமுடியாமல், மிகவும் கோபத்துடன் பெருமூச்செறிந்து கொண்டு ஒரு வார்த்தை சொன்னார். அதாவது:—என்ன அபராதத்தினால் இந்த ராஜ குமாரனை காட்டிற்குத் துறத்திவிட்டார்.

27. (பொ - ரை) அவர் செய்த இந்தக் கார்யத்தினால் நாங்கள் மூவரும், இவ்வாறு கஷ்டப்படும்படி நேர்ந்து விட்டது, இது அவர் செய்யத் தகுந்த கார்யமல்ல. ஆகிலும் கைகேயியினுடைய அல்பமான ஆக்ஞையை ஒப்புக் கொண்டு அதற்காக செய்யத் தகுந்த கார்யம் போல் செய்து விட்டார்.

यदि प्रव्राजितो रामो लोभकारणकारितम् ।
वरदाननिमित्तं वा सर्वथा दुष्कृतं कृतम् ॥ 28 ॥

इदं तावद्यथाकाममीश्वरस्य कृते कृतम् ।
रामस्य तु परित्यागे न हेतुमुपलक्षये ॥ 29 ॥

असमीक्ष्य समारब्धं विरुद्धं बुद्धिलाघवात् ।
जनयिष्यति संक्रोशं राघवस्य विवासनम् ॥ 30 ॥

28. (ப - ரை) **रामः** - ஸ்ரீராமன், **प्रव्राजितः यदि (प्रव्राजित इति यत्)** - காட்டிற்குத் துறத்தப்பட்டார் என்கிற இது, **लोभकारणकारितम्** - பேராசை என்னும் காரணத்தினால் செய்விக்கப்பட்டது, **वा** - அல்லது, **वरदाननिमित्तं** - (கைகேயியிக்கு) வரன் கொடுத்த காரணத்தினால் உண்டானது, **सर्वथा** - எல்லா விதத்தாலும், **दुष्कृतं** - கெட்ட கார்யம்தான், **कृतं** - செய்யப்பட்டது.

29. (ப - ரை) **इदं** - இது, **ईश्वरस्य** - ஸ்வதந்த்ரனுடைய, **कृते** - கார்யத்தில், **(स्थितेन** - எறிக்கின்ற, **राज्ञा** - அரசனால்), **यथा कामं तावत्** - தன்னுடைய இஷ்டப்படியே, **कृतम्** - செய்யப்பட்டது, **रामस्य** - ராமனுடைய, **परित्यागे** - பரித்யாகத்தில், **हेतुं** - காரணத்தை, **न उपलक्षये** - நான் காணவில்லை.

30. (ப - ரை) **विरुद्धं** - லோக விருத்தமாயும், **असमीक्ष्य** - ஆலோசிக்காமல், **बुद्धिलाघवात्** - அல்பமான புத்தியினால், **समारब्धं** - செய்யப்பட்டதுமான, **राघवस्य विवासनम्** - ராமனைக் காட்டிற்குத் துறத்தின இது, **संक्रोशं** - துக்கத்தை, **जनयिष्यति** - உண்டுபண்ணுகிறது.

---

28. (பொ - ரை) மஹாராஜர், ஸ்ரீராமனைக் காட்டிற்குத் துறத்தினது, பரதனுக்கு நாம் ராஜ்யத்தைக் கொடுக்கவேணும், ராமனுக்கு அதைக் கொடுத்தது பிசகு. அதை எவ்விதத்தினாலாவது வாங்கிவிட வேணுமென்று பேராசையினால் செய்திருக்க வேண்டும் என்று சொன்னாலும், அல்லது கைகேயிக்கு வரன் கொடுத்த படியினால் அவள் கேட்டுக்கொண்டபடி காட்டிற்குத் துறத்திவிட்டார் என்று சொன்னாலும் ஸரி, எவ்விதத்தாலும் அவர் செய்த இந்தக் கார்யம் பிசகுதான்.

29. (பொ - ரை) ஸ்ரீராமனைக் காட்டிற்குத் துறத்தும் விஷயத்தில் ஒருவித காரணமும் காணப்பட வில்லை, ஆனால் நாம் ஸ்வதந்த்ரனா யிருக்கிறோம், நம்மை ஒருவரும் கேட்பார் இல்லை, நாம் எதைச் செய்தாலும் செய்யலாம் என்று தன்னுடைய மனதிற்குத் தோன்றியபடி செய்தாரே தவிர வேறில்லை.

30. (பொ - ரை) ஸ்வதந்த்ர ராகையால் தன் இஷ்டப்படி செய்து விட்டார், என்று சொன்னால் பச்சாத்தாபம் உண்டாகுமா வென்று சொன்னால், லோக விருத்தமான கார்யத்தை முன்பின் ஆலோசியாமல் செய்து விட்டபடியால் பின்னால் பச்சாத்தாபப்படுகிறார்.

अहं तावन्महाराजे पितृत्वं नोपलक्षये ।
भ्राता भर्ता च बन्धुश्च पिता च मम राघवः ॥ 31 ॥
सर्वलोकप्रियं त्यक्त्वा सर्वलोकहिते रतम् ।
सर्वलोकोऽनुरज्येत कथं त्वाऽनेन कर्मणा ॥ 32 ॥
सर्वप्रजाभिरामं हि रामं प्रव्राज्य धार्मिकम् ।
सर्वलोकं विरुद्ध्येमं कथं राजा भविष्यसि ॥ 33 ॥

31. (ப - ரை) **अहं तावत्** - நான் மாத்திரம், **महाराजे** - மஹாராஜரிடத்தில், **पितृत्वं** - பிதா என்னும் முறைமையை, **न उपलक्षये** - எண்ணவில்லை, **राघवः** - ஸ்ரீ ராகவன்தான், **मम** - எனக்கு, **भ्राता** - கூடப்பிறந்தவர், **भर्ता च** - ஸ்வாமியுமானவர், **बन्धुः च** - பந்துவுமானவர், **पिता च** - பிதாவுமானவர்.

32. (ப - ரை) **सर्वलोकप्रियं** - ஸர்வலோகங்களுக்கும் ப்ரியனும், **सर्वलोकहिते** - ஸர்வலோகங்களுக்கும் நன்மை செய்வதில், **रतम्** - ஊக்கமுடையவனுமான, (**रामं** - ஸ்ரீராமனை), **त्यक्त्वा** - விட்டு, **अनेन कर्मणा** - இந்த கார்யத்தோடு (கூடியிருக்கிற), **त्वा** - உம்மை, **सर्वलोकः** - எல்லா ஜனமும், **कथं अनुरज्येत** - எப்படி ஆசைப்படும்.

33. (ப - ரை) † **सर्वप्रजाभिरामं** - ஸர்வ ஜனங்களுக்கும் ஸந்தோஷகரனாய், **धार्मिकम्** - தார்மிஷ்டனுமான, **रामं** - ஸ்ரீராமனை, **प्रव्राज्य** - காட்டிற்குத் துறத்திவிட்டு, **इमं सर्वलोकम्** - இந்த ஸர்வ ஜனத்தையும், **विरुद्ध्य** - விரோதித்துக் கொண்டு, **कथं** - எவ்வாறு, **राजा** - அரசனாக, **भविष्यसि** - இருக்கப்போகிறீர்.

---

31. (பொ - ரை) நான் மஹாராஜாவை பிதாவென்று எண்ணுகிறதேயில்லை, ராகவன் தான் எனக்கு ப்ராதாவும், ஸ்வாமியும், ஸர்வ வித பந்துவும் பிதாவும்.*

32. (பொ - ரை) ஸர்வ லோகங்களுக்கும் ப்ரியனாய், ஸர்வ லோகத்திற்கும் நன்மை செய்வதில் ஊக்க முள்ளவனுமான ஸ்ரீராமனை, காட்டிற்குத் துறத்திவிட்ட உம்மிடம், இந்த அக்ரமமான கார்யம் செய்த படியால் ஸர்வ ஜனமும் எப்படி ஆசைவைக்கும்.

33. (பொ - ரை) ஸர்வ ஜனங்களுக்கும் ஆனந்தத்தை விளைவிக்கின்ற தார்மிஷ்டனை ஸ்ரீராமனைக் காட்டிற்குத் துறத்திவிட்டு, இதனால் ஸர்வ ஜனத்தையும் விரோதித்துக் கொண்டு நீர் எவ்வாறு அரசனாகவிருக்கப் போகிறீர்.

---

* இதனால் பரமைகாந்திக்கு ப்ராக்ருதர்களான ப்ராதா முதலானவர்கள் உத்தேச்யரல்ல வென்றும், பகவான் தான் நிருபாதிகமான பிதா, ஸ்வாமி, பந்து, என்றும் சொல்லப்பட்டது.

† **सर्वलोकाहिते रतम्** என்று பாடமானால் ஸர்வ லோகத்திற்கும் ப்ரியமான ராமனைக் காட்டிற்குத் துறத்திவிட்டு ஸர்வ லோகத்திற்கு அநிஷ்டம் செய்வதிலே ஊக்கமுள்ளவரான உம்மிடம் என்று தாத்பர்யம்

जानकी तु महाराज निश्वसन्ती तपस्विनी ।
भूतोपहतचित्तेव विष्ठिता विस्मिता स्थिता ॥ 34 ॥

अदृष्टपूर्वव्यसना राजपुत्री यशस्विनी ।
तेन दुःखेन रुदती नैव मां किंचिदब्रवीत् ॥ 35 ॥

उद्वीक्षमाणा भर्तारं मुखेन परिशुष्यता ।
मुमोच सहसा बाष्पं मां प्रयान्तमुदीक्ष्य सा ॥ 36 ॥

---

34. (ப - ரை) **हे महाराज** - மஹாராஜரே ! **जानकी तु** - ஸீதையோ வென்றால் * **तपस्विनी** - மிகவும் சோகிக்கத்தகுந்தவளாய், **निश्वसन्ती** - பெருமூச்சு எரிந்து கொண்டு, **भूत उपहतचित्ता इव** - பிசாசு பிடித்த மனமுடையவள்போல், **विष्ठिता** - ஸ்தப்தையாய், † **विस्मिता** - ஆச்சர்ய முடையவள் போல், **स्थिता** - நிற்கின்றாள்.

35. (ப - ரை) **यशस्विनी** - சிறந்த கீர்த்தியுடையவளான, **राजपुत्री** - ராஜ குமாரியானவள், **अदृष्टपूर्वव्यसना** - முன் ஒருக்காலும் வ்யஸனத்தைக்காணாதவள், **तेन दुःखेन** - அந்த (பர்த்தாவின்) துக்கத்தினால், **रुदती (सती)** - அழுது கொண்டு, **मां** - என்னைக்குறித்து, **किंचित् एव** - ஒன்றுமே, **न अब्रवीत्** - சொல்லவில்லை.

36. (ப - ரை) **सा** - அந்த ஜானகீ, **परिशुष्यता** - வாடியிருக்கின்ற, **मुखेन** - முகத்தோடு, **भर्तारं** - பர்த்தாவை, **उद्वीक्षमाणा** - பார்த்துக்கொண்டும், **प्रयान्तं** - புறப்

34. (பொ - ரை) மஹாராஜரே ! ஸீதையானவள் பார்க்கின்றவர்களுக்கு ஐயோ ! வென்று பரிதாபப்படக் கூடியவளாய் பெருமூச்சு எரிந்து கொண்டு பிசாசு பிடித்தவள் போல் தன் மனம் தனக்கு ஸ்வாதீன மில்லாதவளாய் ஒரு ஆச்சர்யத்தைக் கண்டவள் போல் கண்களை மலர விழித்துக் கொண்டு திகைத்து நிற்கின்றாள்.

35. (பொ - ரை) மஹா பதிவ்ரதை யென்று சிறந்த புகழ்பெற்றவளான அந்த ராஜ குமாரி, இதற்கு முன் ஒருக்காலத்திலும் வ்யஸனத்தைத் தானும் அனுபவித்திராததாலும், பிறர்கள் அனுபவித்ததைப் பார்த்திராததாலும் இப்பொழுது பர்த்தாவுக்கு நேர்ந்திருக்கும் துக்கத்தைப் பார்த்து அழுதுகொண்டு என்னிடம் ஒன்றுமே சொல்லவில்லை.

36. (பொ - ரை) பிறகு அந்த ஸீதை, தன்னுடைய பர்த்தாவைப் பார்த்து

---

* **तपस्विनी** என்கிறதற்கு **मनस्विनी** என்று பாடாந்திரம்.

† **विस्मिता** என்கிறதற்கு சிறிப்பு இல்லாதவள் என்று வ்யாக்யானாந்தரம்.

तथैव रामोऽश्रुमुखः कृताञ्जलिः स्थितोऽभवल्लक्ष्मणबाहुपालितः ।
तथैव सीता रुदती तपस्विनी निरीक्षते राजरथं तथैव माम् ॥ 37 ॥

**इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे**
**अष्टपञ्चाशः सर्गः ॥ 58 ॥**

---

படுகின்ற, **मां** - என்னை, **उद्वीक्ष्य** - பார்த்து, **सहसा** - திடீரென்று, **बाष्पं** - கண்ணீரை, **मुमोच** - பெருக்கிவிட்டாள்.

37. (ப - ரை) **तथा एव** - அவ்வாறே, **रामः** - ஸ்ரீராமனும், **अश्रुमुखः** - கண்ணீர் நிறைந்த முகமுடையவராய், **कृताञ्जलिः** - கை கூப்பினவராய், **लक्ष्मणबाहुपालितः** - இலக்குமணனுடைய தோள்களால் பரிபாலிக்கப்பட்டவராய், **स्थितः अभवत्** - நின்றுகொண்டிருந்தார், **तथा एव** - அவ்வாறாகவே, **तपस्विनी** - தபஸ்ஸை உடையவளான, **सीता** - ஸீதையும், **रुदती (सती)** அழுதுகொண்டே, **राजरथं** - அரசன் தேரையும், **तथा एव** - அவ்வாறே, **मां** - என்னையும், **निरीक्षते** - பார்த்துக்கொண்டு நின்றாள்.

விட்டு, அயோத்திக்கு புறப்படுகின்ற என்னைப் பார்த்து வாடிய முகத்துடன் திடீரென்று கண்ணீரைப் பெருக்கினாள்.

இதற்கு ஸீதையின் அபிப்ராயம்:—ஸுமந்த்ரர் தேரை ஓட்டிக்கொண்டு போய்விட்டால், கற்களும் முட்களும் நிறைந்த இந்த காடுகளில் ஸ்ரீராமன் ம்ருதுவான தம்முடைய கால்களால் எவ்விதம் ஸஞ்சரிப்பார் என்று எண்ணம் உண்டாகி அதைப் பொருக்க முடியாதவளாய் மளமள வென்று அவள் கண்களிலிருந்து நீர் பெருக்கினாள்.

37. (பொ - ரை) அப்படியே ஸ்ரீராமனும், கண்ணீர் நிறைந்த முகமுடையவராய் கை கூப்பிக்கொண்டு, இலக்குமணனால் சிச்ருஷிக்கப் பட்டு நின்றார். பதிவ்ரதா தர்மமென்னும் பெரும் தவமுடைய ஸீதா தேவியும் அவ்வாறே அழுதுகொண்டு, தேரையும், என்னையும் பார்த்துக் கொண்டே நின்றாள்.

## एकोनषष्टितमः सर्गः ॥ 59 ॥

[ इति ब्रुवन्तं तं सूतं सुमन्त्रं मन्त्रिसत्तमम् ।
ब्रूह्यशेषं पुनरिति राजा वचनमब्रवीत् ॥ 1 ॥

तस्य तद्वचनं श्रुत्वा सुमन्त्रो बाष्पविक्लबः ।
कथयामास भूयोऽपि रामसंदेशविस्तरम् ॥ 2 ॥

जटाः कृत्वा महाराज चीरवल्कलधारिणौ ।
गङ्गामुत्तीर्य तौ वीरौ प्रयागाभिमुखौ गतौ ॥ 3 ॥

---

1. (ப - ரை) **इति** - இவ்வாறு, **ब्रुवन्तं** - சொல்லுகின்ற, **मन्त्रिसत्तमम्** - மந்த்ரி ச்ரேஷ்டரும், **सूतं** - ஸாரதியுமான, **तं सुमन्त्रं** - அந்த ஸுமந்த்ரரைப் பார்த்து, **राजा** - அரசன், **पुनः** - மறுபடியும், **अशेषं** - முழுவதையும், **ब्रूहि** - சொல்லும், **इति वचनं** - என்கிற வார்த்தையை, **अब्रवीत्** - சொன்னர்.

2. (ப - ரை) **तस्य** - அவருடைய, **तत् वचनं** - அந்த வார்த்தையை, **श्रुत्वा** - கேட்டு, **सुमन्त्रः** - ஸுமந்த்ரர், **बाष्पविक्लबः** - கண்ணீருடன் தீனராய், **रामसंदेशविस्तरम्** - விரிவான ராமனுடைய வ்ருத்தாந்தத்தை, **भूयः अपि** - மறுபடியும், **कथयामास** - சொல்ல ஆரம்பித்தார்.

3. (ப - ரை) **महाराज** - மஹாராஜரே ! **तौ वीरौ** - அந்த வீரர்கள், **जटाः** - சடைகளை, **कृत्वा** - செய்து கொண்டு, **चीरवल्कल धारिणौ** - மரவுரிகளைத்தரித்துக் கொண்டு, **गङ्गां** - கங்கா நதியை, **उत्तीर्य** - தாண்டி, **प्रयागाभिमुखौ** - ப்ரயாகத்தின் எதிர்முகமாக, **गतौ** - சென்றார்கள்.

---

1. (பொ - ரை) இவ்வாறு சொல்லுகின்ற, ஸாரதியும் மந்த்ரி ச்ரேஷ்டரு மான அந்த ஸுமந்த்ரரைப் பார்த்து அரசன் ஸுமந்த்ரரே ? மறுபடியும் முழுவதை யும் நன்றாய்ச் சொல்லு மென்று கேட்டார்.

2. (பொ - ரை) அவ்வாறு அரசனுடைய வார்த்தையைக் கேட்டு ஸுமந்த்ரர் கண்களால் நீரைப் பெருக்கிக் கொண்டு மிக்க துக்கத்துடன் ஸ்ரீராமனுடைய வ்ருத்தாந்தத்தை விரிவாக மறுபடியும் சொல்லத் துடங்கினர்.

3. (பொ - ரை) மஹாராஜரே ! அந்த வீரர்களிருவரும் சடை போட்டுக் கொண்டு, மரவுரிகளையும் தரித்துக் கொண்டு கங்கா நதியைத் தாண்டி ப்ரயாக க்ஷேத்திரத்தை நோக்கிச் சென்றார்கள்.

अग्रतो लक्ष्मणो यातः पालयन्रघुनन्दनम् ।
अनन्तरं च सीताऽथ राघवो रघुनन्दनः
तांस्तथा गच्छतो दृष्ट्वा निवृत्तोऽस्म्ययवशस्तदा ॥ 4 ॥]
मम त्वश्वा निवृत्तस्य न प्रावर्तन्त वर्त्मनि ।
उष्णमश्रु प्रमुञ्चन्तो रामे संप्रस्थिते वनम् ॥ 1 ॥
उभाभ्यां राजपुत्राभ्यामथ कृत्वाऽहमञ्जलिम् ।
प्रस्थितो रथमास्थाय तद्दुःखमपि धारयन् ॥ 2 ॥

---

4. (ப - ரை) **लक्ष्मणः** - இலக்குமணன், **रघुनन्दनम्** - ஸ்ரீராமனை, **पालयन्** - ரக்ஷிப்பதற்காக, **अग्रतः** - முன்னே, **यातः** - சென்றார், **अनन्तरं** - அதன் பிறகு, **सीता** - ஸீதை, **याता** - சென்றாள், **अथ** - பிறகு, **रघुनन्दनः** - ரகுகுலத்துக் குமாரரான, **राघवः** - ராகவனும், **यातः** - போனார், **तथा** - அவ்வாறு, **गच्छतः** - போகின்ற, **तान्** - அவர்களை, **दृष्ट्वा** - பார்த்து, **तदा** - அப்பொழுது, **अवशः** - பரவசனாய், **निवृत्तः अस्मि** - திரும்பினேன்.

1. (ப - ரை) **रामे** - ஸ்ரீ ராமன், **वनं** - வனத்தைக்குறித்து, **संप्रस्थिते** (**सति**) - புறப்பட்டவளவில், **ममतु** - நான், **निवृत्तस्य** (**सतः**) - திரும்பின வளவிலும், **अश्वाः** - குதிரைகள், **उष्णं अश्रु** - சூடான கண்ணீரை, **प्रमुञ्चन्तः** (**सन्तः**) - பெருக்கிக் கொண்டு, **वर्त्मनि** - வழியில், **न प्रावर्तन्त** - திரும்பவில்லை.

2. (ப - ரை) **अथ** - பிறகு, **अहं** - நான், **उभाभ्यां राजपुत्राभ्यां** - இரண்டு ராஜகுமாரர்களின் பொருட்டு, **अञ्जलिम्** - அஞ்ஜலியை, **कृत्वा** - செய்துவிட்டு, **तत् दुःखं अपि** - அந்த துக்கத்தையும், **धारयन्** (**सन्**) - அடக்கிக்கொண்டு, **रथं** - தேரை, **आस्थाय** - ஏறி, **प्रस्थितः** - புறப்பட்டுவிட்டேன்.

---

4. (பொ - ரை) ராகவனை பரிபாலிப்பதற்காக இலக்குமணன் முன்னே புறப்பட்டார், அதன் பிறகு ஸீதையும், அதன் பிறகு ரகுகுலத்துக் குமாரரான ஸ்ரீராகவனும் புறப்பட்டார்கள். அவ்வாறு புறப்பட்டுப் போகும் அவர்களைப் பார்த்து நான் பரவசனாய்த் திரும்பிவிட்டேன்.

1. (பொ - ரை) ஸ்ரீராகவன் வனத்திற்குப் புறப்பட்டவுடன் நான் குதிரைகளைத் தேரில் பூட்டி திருப்பியும வழிக்கு ஸரியாக வரவில்லை. கண்களில் உஷ்ணமான நீர்களைப் பெருக்கிக் கொண்டு நின்று விட்டன.

2. (பொ - ரை) பிறகு நான், அந்த ராஜ குமாரர்களிருவருக்கும் அஞ்ஜலி செய்து விட்டு அவ்வளவு துக்கத்தையும் மனதில் அடக்கிக் கொண்டு தேரின்மேல் ஏறி புறப்பட்டேன்.

गुहेन सार्धं तत्रैव स्थितोऽस्मि दिवसान्बहून् ।
आशया यदि मां रामः पुनः शब्दापयेदिति ॥ 3 ॥
विषये ते महाराज रामव्यसनकर्शिताः ।
अपि वृक्षाः परिम्लानाः सपुष्पाङ्कुरकोरकाः ॥ 4 ॥
उपतप्तोदका नद्यः पल्वलानि सरांसि च ।
परिशुष्कपलाशानि वनान्युपवनानि च ॥ 5 ॥

---

3. (ப - ரை) **रामः** - ஸ்ரீராமன், **मां** - என்னை, **पुनः** - மறுபடியும், **शब्दापयेत् इति** - கூப்பிடுவாரோ என்னும் ஆசையினால், **गुहेन सार्धं** - குஹரோடு கூட, **तत्र एव** - அங்கேயே, **बहून् दिवसान्** - அநேக தினங்களை, **स्थितः अस्मि** - இருந்து விட்டேன்.

4. (ப - ரை) **हे महाराज** - மஹாராஜரே ! **ते विषये** - உம்முடைய தேசத்தில், **वृक्षाः अपि** - மரங்களும், **रामव्यसनकर्शिताः** - ராமனுடைய வ்யஸனத்தினால் இளைத்ததாய்க்கொண்டு, **सपुष्पाङ्कुरकोरकाः** - புஷ்பங்களோடும், முளைகளோடும், மொக்குகளோடும் கூடியவைகளாய், **परिम्लानाः** - நன்றாக வாடிவிட்டன.

5. (ப - ரை) **नद्यः** - நதிகளும், **पल्वलानि** - குட்டைகளும், **सरांसि च** - தடாகங்களும், †**उपतप्तोदकाः** - நன்றாக கொதித்துக் கொண்டிருக்கும் ஜலங்களை உடைய

---

3. (பொ - ரை) ஸ்ரீராமன் மறுபடியும் என்னைக் கூப்பிடுவாரோ என்னும் ஆசையினால் குஹருடன் கூட அந்த கங்கா நதியின் வடகரையிலேயே அநேக நாள் நின்று விட்டேன்.*

4. (பொ - ரை) கைகேயியின் ப்ரீதிக்காக முன்பின் ஆலோசியாமல் நீர் செய்த கார்யத்தினால், ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அசேதனங்களுக்கும் கூட வந்திருக்கும் அனர்த்தத்தைக் கேளுமென்று ஸுமந்த்ரர் அரசனிடம் சொல்லுகிறார்.

மஹா ராஜரே, உம்முடைய தேசத்தில் வ்ருக்ஷங்களும், செடிகளும், கொடிகளும் ராமனை விட்டுப் பிரிந்த துக்கத்தினால் இளைத்து புஷ்பங்களோடும், தளிர்களோடும், மொக்குகளோடும் மிகவும் வாடிவிட்டன.

5. (பொ - ரை) நதிகளும் குட்டைகளும் தடாகங்களும் ராமனை விட்டுப் பிரிந்த வ்யஸனத்தினால் நன்றாகக் கொதித்த நீரை உடையவைகளாய் ஆகிவிட்டன.

---

* ஸுமந்த்ரர் குஹருடன் மூன்று தினங்கள் தான் தங்கியிருந்தார். ஆகிலும் ஸ்ரீராமனை விட்டுப் பிரிந்த துக்கத்தினால் அநேக நாள் இருந்ததாக அவருக்குத் தோன்றிய படியால் இப்படிச் சொன்னார்.

† **उप** - என்கிற பதத்தினால் நதிமுதலானதுகளின் ஜலம் வெய்யிலினால் கொதித்திருக்கும் பக்ஷத்தில் கையினால் தொட்டால் உஷ்ணமாயிருக்கும். இது ராமனுடைய விட்டுப் பிரிவா லுண்டான துக்கமானதால் பக்கத்திற்குப் போகும் காலத்திலேயே அதின் உஷ்ணம நன்றாய்த் தெரிகின்றது என்று.

न च सर्पन्ति सत्वानि व्याला न प्रचरन्ति च ।
रामशोकाभिभूतं तन्निष्कूजमभवद्वनम् ॥ 6 ॥
लीनपुष्करपत्राश्च नरेन्द्र कलुषोदकाः ।
संतप्तपद्माः पद्मिन्यो लीनमीनविहंगमाः ॥ 7 ॥
जलजानि च पुष्पाणि माल्यानि स्थलजानि च ।
नाद्य भान्त्यल्पगन्धीनि फलानि च यथापुरम् ॥ 8 ॥

துகளாய் (ஆகிவிட்டன). **वनानि** - காடுகளும், **उपवनानि च** - பூந்தோட்டங்களும், **परिशुष्कपलाशानि** - நன்றாக உலர்ந்த இலைகளை உடையவைகளாய் (ஆகிவிட்டன).

6. (ப - ரை) **सत्वानि च** - ஜந்துக்களும், **न सर्पन्ति** - ஸஞ்சரிக்கவில்லை, **व्यालाः च** - துஷ்ட ஜந்துக்களும், **न प्रचरन्ति** - ஸஞ்சரிக்கவில்லை, **तत् वनम्** - அந்த வனம், **राम शोकाभिभूतं ( सत् )** - ராமனுடைய துக்கத்தினால் ஆக்ரமிக்கப்பட்டு, **निष्कूजं** - சப்தமே யில்லாததாக, **अभवत्** - ஆகிவிட்டது.

7. (ப - ரை) **हे नरेन्द्र** - மஹாராஜரே! **पद्मिन्यः** - தாமரைக் குளங்கள், **लीन-पुष्करपत्राः च** - ஜலத்தில் அமிழ்ந்த தாமரை இலைகளையுடையதாயும், **कलुषोदकाः** - கலங்கின நீரை உடையவையாயும், **संतप्तपद्माः** - தாபமுள்ளதான தாமரைப் புஷ்பங்களை உடையவையாயும், **लीनमीन विहंगमाः** - நீரில் பதுங்கின மீன்களையும், நீர் பக்ஷிகளையும் உடையவை யாயுமிருக்கின்றன.

8. (ப - ரை) **जलजानि** - ஜலத்திலுண்டான, **पुष्पाणि च** - புஷ்பங்களும், **स्थलजानि** - தரையிலுண்டான, **माल्यानि च** - புஷ்பங்களும், **फलानि च** - பழங்

ஒருவரும் நீர் பாய்ச்சாமல் மழை பெய்து வளர்ந்திருக்கின்ற காடுகளும் எப்பொழுதும் நீர் பாய்த்து வளர்க்கப்பட்ட பூந்தோட்டங்களும் நன்றாக உலர்ந்து விட்டன.

6. (பொ - ரை) ஒரு ஜந்துக்களும் நகரவில்லை, எப்பொழுதும் திரிந்து கொண்டிருக்கும் ஸ்வபாவமுடைய புலி முதலான துஷ்ட ஜந்துக்களோ, யானைகளோ ஒன்றுமே ஸஞ்சரிக்க வில்லை. அந்த வனமும் ராமனுடைய சோகத்தில் அகப்பட்டுக்கொண்டு நிச்சப்தமாயிருந்து விட்டது.

7. (பொ - ரை) அரசனே! தாமரை ஓடைகள் வாடி தண்ணீரில் அமிழ்ந்த தாமரை இலைகளையுடையவை யாயும், கலங்கின ஜலம் உடையவையாயும், மிகவும் தபிக்கின்ற தாமரை புஷ்பங்களை உடையவையாயும், ஜலத்தில் பதுங்கிய மீன்களையும், நீர் பக்ஷிகளையும் உடையவையாயும் இருக்கின்றன.

8. (பொ - ரை) ஜலத்தில முளைத்திருக்கின்ற தாமரை முதலான புஷ்பங்க

अत्रोद्यानानि शून्यानि प्रलीनविहगानि च ।
न चाभिरामानारामान्पश्यामि मनुजर्षभ ॥ 9 ॥

प्रविशन्तमयोध्यां मां न कश्चिदभिनन्दति ।
नरा राममपश्यन्तो निःश्वसन्ति मुहुर्मुहुः ॥ 10 ॥

களும், **अल्पगन्धीनि (सन्ति)** - கொஞ்சமான வாஸனை உடையவைகளாய், **अद्य** - இப்பொழுது, **यथापुरम्** - முன்போல, **न भान्ति** - விளங்கவில்லை.

9. (ப - ரை) **हे मनुजर्षभ** - புருடோத்தமரே! **अत्र** - இப்பொழுது, **उद्यानानि** - உத்யான வனங்கள், **शून्यानि** - ஜன ஸஞ்சாரமில்லாதவையாயும், **प्रलीन विहगानि च** - (கூடுகளில்) பதுங்கியிருக்கும் பக்ஷிகளை உடையவையாயு மிருக்கின்றன, **आरामान्** - உத்யான வனங்களை, **अभिरामान्** - அழகுள்ளவைகளாயும், **न पश्यामि च** - நான் பார்க்கவில்லை.

10. (ப - ரை) **अयोध्यां** - அயோத்திமா நகரத்தை, **प्रविशन्तं** - ப்ரவேசிக்கின்ற, **मां** - என்னை (ப் பார்த்து), **कश्चित्** - ஒருவனும், **न अभिनन्दति** - ஸந்தோஷப படவில்லை, **नराः** - மனிதர்கள், **रामं** - ராமனை, **अपश्यन्तः (सन्तः)** - பாராதவர் களாய்க்கொண்டு, **मुहुर्मुहुः** - அடிக்கடி, **निःश्वसन्ति** - பெருமூச்சு எறிகின்றார்கள்.

ளும், பூமியில் முளைத்திருக்கின்ற மல்லிகை முல்லை முதலான புஷ்பங்களும், மாம் பழம், பலாப்பழம் முதலான பழங்களும் இப்பொழுது முன்போல விளங்கவில்லை. அதாவது :—புஷ்பங்கள் வாஸனை குறைந்தும், பழங்கள் ருசி குறைந்தும் இருக்

9. (பொ - ரை) புருடோத்தமரே! இப்பொழுது உம்முடைய தேசத்திலிருக்கும் உத்யான வனங்கள் முழுவதும் ஜன ஸஞ்சார மில்லாதவைகளாயும், கூடுகளிலேயே மூர்ச்சையடைந்து பதுங்கியிருக்கும் பக்ஷிகளை உடையவைகளாயு மிருக்கின்றன. எந்தத் தோட்டங்களைப் பார்த்த போதிலும் கண்ணுக்கு அழகாகவே காணப்படவில்லை.

10. (பொ - ரை) நான் இந்த அயோத்தியில் நுழையும் பொழுது என்னைப் பார்த்து ஒருவரும் ஸந்தோஷப்படவே யில்லை. சில மனிதர்கள் ஓடிவந்து தேரைப் பார்த்து அதில் ராமனைக் காணுமையால் அந்த துக்கத்தினுல் அடிக்கடி பெருமூச்சு எறிகின்றார்கள்.

देव राजरथं दृष्ट्वा विना राममिहागतम् ।
दुःखादश्रुमुखः सर्वो राजमार्गगतो जनः ॥ 11 ॥

हर्म्यैर्विमानैः प्रासादैरवेक्ष्य रथमागतम् ।
हाहाकारकृता नार्यो रामादर्शनकर्शिताः ॥ 12 ॥

आयतैर्विमलैर्नेत्रैरश्रुवेगपरिप्लुतैः ।
अन्योन्यमभिवीक्षन्तेऽव्यक्तमार्ततराः स्त्रियः ॥ 13 ॥

11. (ப - ரை) **हे देव** - ஸ்வாமி! **रामं विना** - ராமனை விட்டு, **इह** - இங்கு, **आगतम्** - வந்திருக்கின்ற, **राजरथं** - மஹாராஜரின் தேரை, **दृष्ट्वा** - பார்த்து, **राजमार्गगतः** - ராஜ வீதியிலிருக்கின்ற, **जनः सर्वः** - ஜனம் முழுவதும், **दुःखात्** - துக்கத்தினால், **अश्रुमुखः** - கண்ணீரை முகத்தில் உடையதாய் (இருக்கிறது).

12. (ப - ரை) **आगतम्** - (ராமனில்லாமல்) வந்திருக்கும், **रथं** - தேரை, **राम अदर्शन कर्शिताः** - ராமனைக்காணாமையாலே இளைத்திருக்கின்ற, **नार्यः** - ஸ்த்ரீகள், **हर्म्यैः** - மெத்தைகளாலும், **विमानैः** - விமானங்களாலும், **प्रासादैः** - மஹாராஜா உப்பரிகைகளாலும், **अवेक्ष्य** - பார்த்து, **हाहाकार कृताः** - ஹா ஹாகாரத்தைச் செய்கின்றார்கள்.

13. (ப - ரை) **स्त्रियः** - ஸ்த்ரீகள், **आर्ततराः (सत्यः)** - மிகவும் துக்க முடையவர்களாய்க் கொண்டு, **अश्रुवेगपरिप्लुतैः** - கண்ணீரின் வேகத்தினால் வ்யாப்த்தமாயும், **विमलैः** - நிர்மலங்களாயும், **आयतैः** - விசாலங்களுமான, **नेत्रैः** - கண்களினால், **अन्योन्यं** - ஒருவருக்கொருவர், **अव्यक्तं** - ப்ரகாசமில்லாமல், **अभिवीक्षन्ते** - பார்க்கின்றார்கள்.

---

11. (பொ - ரை) ஸ்வாமி! ஸ்ரீராமன் இல்லாமல் இங்கு வந்திருக்கும் மஹாராஜரின் ரதத்தைப் பார்த்து, ராஜ வீதியில் நின்றிருக்கும் ஜனம் முழுவதும் வ்யஸனத்தினால், கண்களில் நீரைப் பெருக்கிக் கொண்டிருக்கிறது.

12. (பொ - ரை) ராமனைக் காணாமல் இளைத்திருக்கும் நம் அயோத்திமா நகரத்து ஸ்த்ரீகள், ராமனில்லாமல் வந்திருக்கும் நம்முடைய தேரை, மாடிகளிலும், விமானங்களிலும், அரசர்கள் உப்பரிகைகளிலும் இருந்து பார்த்து ராமனில்லாத படியால் ஹா ஹா என்று கதறினார்கள்.

13. (பொ - ரை) நகரத்து ஸ்த்ரீகளெல்லோரும், மிகவும் துக்கமுடையவர்களாய், கண்களில் நீர் நிறைந்தபடியால் மை அழிந்து நிர்மலங்களாயும், விசாலங்களுமான கண்களோடு ஒருவருக்கொருவர் ப்ரகாசமில்லாமல் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

नामित्राणां न मित्राणामुदासीनजनस्य च ।
अहमार्ततया किंचिद्विशेषमुपलक्षये ॥ 14 ॥

अप्रहृष्टमनुष्या च दीननागतुरङ्गमा ।
आर्तस्वरपरिम्लाना विनिःश्वसितनिः स्वना ॥ 15 ॥

निरानन्दा महाराज रामप्रव्राजनातुरा ।
कौसल्या पुत्रहीनेव अयोध्या प्रतिभाति मा ॥ 16 ॥

14. (ப - ரை) **अमित्राणां** - (உம்முடைய) சத்ருக்களுக்கும், **मित्राणां** - ஸ்நேஹிதர்களுக்கும், **उदासीनजनस्य च** - மத்யஸ்தமான ஜனத்திற்கும், **आर्ततया** - துக்கித்திருப்பதினால், **विशेषं** - பேதத்தை, **किंचित्** - கொஞ்சமும், **अहं** - நான், **न उपलक्षये** - காணவில்லை.

15—16. (ப - ரை) **हे महाराज** - மஹாராஜரே! **अयोध्या** - அயோத்திமா நகரமானது, **अप्रहृष्टमनुष्या च** - ஸந்தோஷமில்லாத மனிதர்களை யுடையதாய், **दीननाग तुरङ्गमा** - வ்யஸனமடைந்த யானைகளையும், குதிரைகளையுமுடையதாய், **आर्तस्वरपरिम्लाना** - அழுகைக் குரலோடு வாட்டமுடையதாய், **विनि:श्वसित निःस्वना** - பெருமூச்சின் சப்தத்தை உடையதாய், **निरानन्दा** - ஆனந்த மில்லாததாய், **रामप्रव्राजनातुरा** - ராமன் காட்டிற்குப் போனபடியால் பீடிக்கப்பட்டதாய், **पुत्रहीना**- புத்திரனை விட்டுப் பிரிந்த, **कौसल्या इव** - கௌஸல்யா தேவிபோல, **मा** - என்னைக் குறித்து, **प्रतिभाति** - தோன்றுகிறது.

14. (பொ - ரை) நகரத்திலிருக்கும் ஜனங்கள் எல்லோரும் ஒரே மாதிரியாக ராமனை விட்டுப்பிரிந்து துக்கித்துக் கொண்டிருக்கிற படியால் இவர்கள் உமக்கு (ஒருவருக்கொருவர்) தோழர்களென்றும், சத்ருக்களென்றும் இரண்டு மில்லாத உதாஸீனர்களென்றும் வித்யாஸம் எனக்கு ஒன்றும் தெரியவில்லை.

15—16. (பொ - ரை) மஹாராஜரே! ஸ்ரீராமன் காட்டிற்குப் போன துக்கத்தினால் பீடிக்கப்பட்டு ஸந்தோஷமில்லாத மனிதர்களை உடையதாய், மிகவும் தீனமான யானைகளையும், குதிரைகளையு முடையதாய், மிகவும் தீனமான ஸ்வரத்துடன் வாட்டமுடையதாய் பெருமூச்சின் சப்தம் மிகுந்ததாய் மனக்களிப்பு இல்லாததாய் இருக்கிற இந்த அயோத்திமா நகரத்தைப் பார்க்கும் பொழுது, புத்திரன் இல்லாமல் வ்யஸனப் பட்டுக் கொண்டிருக்கும் கௌஸல்யா தேவிபோல் எனக்குத் தோன்று

सूतस्य वचनं श्रुत्वा वाचा परमदीनया ।
बाष्पोपहतया राजा तं सूतमिदमब्रवीत् ॥ 17 ॥

कैकेय्या विनियुक्तेन पापाभिजनभावया ।
मया न मन्त्रकुशलैर्वृद्धैः सह समर्थितम् ॥ 18 ॥

न सुहृद्भिर्न चामात्यैर्मन्त्रयित्वा च नैगमैः ।
मयाऽयमर्थः संमोहात्स्त्रीहेतोस्सहसा कृतः ॥ 19 ॥

---

17. (ப - ரை) **राजा** - அரசன், **सूतस्य** - ஸூதருடைய, **वचनं** - வார்த்தையை, **श्रुत्वा** - கேட்டு, **बाष्प उपहतया** - கண்ணீரால் தடுக்கப்பட்ட, **परमदीनया** - மிகவும் தீனமான, **वाचा** - வாக்குடன், **तं सूतं** - அந்த ஸாரதியைப் பார்த்து, **इदं** - இந்த வார்த்தையை, **अब्रवीत्** - சொன்னார்.

18. (ப - ரை) **पाप अभिजन भावया** - பாபமுள்ளதான பிறப்பு இடத்தை அநுஸரித்த எண்ண முள்ளவளான, **कैकेय्या** - கைகேயி யினால், **विनियुक्तेन** - நன்றாகத் தூண்டப பட்ட, **मया** - என்னால், **मन्त्रकुशलैः** - ஆலோசனையில் தேர்ந்தவர்களான, **वृद्धैः सह** - பெரியோர்களுடன் கூட, **न समर्थितम्** - நன்றாக ஆலோசனை செய்யப்பட வில்லை.

19. (ப - ரை) **सुहृद्भिः** - ஸ்நேஹிதர்களோடு, **न मन्त्रयित्वा** - ஆலோசிக்காமலும், **अमात्यैः नैगमैः च** - மந்திரிகளோடும், நகரத்து ஜனங்களோடும், **न मन्त्रयित्वा च** - ஆலோசிக்காமலும், **अयं अर्थः** - இந்தக் காரியமானது, **संमोहात्** - அஜ்ஞானத்தினால், **स्त्रीहेतोः** - ஒரு ஸ்த்ரீ நிமித்தமாக, **सहसा** - திடீரென்று, **मया** - என்னால், **कृतः** - செய்யப்பட்டது.

17. (பொ - ரை) அரசன், ஸுமந்த்ரருடைய வார்த்தையைக் கேட்டு கண்ணீருடன் தழதழத்து மிகவும் தீனமான குரலோடு அந்த ஸாரதியைப் பார்த்து இந்த வார்த்தையைச் சொன்னார்.

18. (பொ - ரை) குலத்திற்குத் தகுந்த கெட்ட எண்ண முடையவளான கைகேயியின் பேச்சைக் கேட்டு ஆலோசனையில் ஸமர்த்தர்களான பெரியோர்களுடன் கலந்து ஆலோசிக்கப்படவில்லை.

19. (பொ - ரை) தோழர்களுடனும், மந்த்ரிகளுடனும், பட்டணத்து ஜனங்களுடனும் கலந்து ஆலோசிக்காமல், அஜ்ஞானத்தினால் ஒரு ஸ்த்ரீ நிமித்தமாக திடீரென்று ராமனைக் காட்டிற்கு அனுப்பும் இந்தக் காரியத்தை நான் செய்து விட்டேன்.

भवितव्यतया नूनमिदं वा व्यसनं महत् ।
कुलस्यास्य विनाशाय प्राप्तं सूत यदृच्छया ॥ 20 ॥

सूत यद्यस्ति ते किंचिन्मया तु सुकृतं कृतम् ।
त्वं प्रापयाऽऽशु मां रामं प्राणाः संत्वरयन्ति मां ॥ 21 ॥

यद्यद्यापि ममैवाज्ञा निवर्तय तु राघवम् ।
न शक्ष्यामि विना रामं मुहूर्तमपि जीवितुम् ॥ 22 ॥

---

20. (ப - ரை) **हे सूत** - ஸாரதியே! **वा (अथवा)** - அல்லது, **इदं** - இந்த, **महत् व्यसनं** - பெரிய துக்கமானது, **यदृच्छया** - தற்செயலாக, **भवितव्यतया** - ஜென்மாந்தர பாபத்தினால், **अस्य कुलस्य** - இந்த குலத்தினுடைய, **विनाशाय** - நாசத்தின் பொருட்டு, **प्राप्तं** - நேர்ந்திருக்கலாம், **नूनं** - நிச்சயம்.

21. (ப - ரை) **हे सूत** - ஸாரதியே! **ते** - உமக்கு, **मया** - என்னால், **किंचित् सुकृतं** - எதுவாகிலும் உபகாரம், **कृतम्** - செய்யப்பட்டிருந்ததாக, **अस्ति यदि** - இருக்குமேயானால், **त्वं** - நீர், **मां** - என்னை, **रामं** - ராமனை, **आशु** - சீக்கிரமாக, **प्रापय** - அடைவிக்கவேணும், **प्राणाः** - ப்ராணன்கள், **मां** - என்னைக் குறித்து, **संत्वरयन्ति** - அவஸரப்படுகின்றன.

22. (ப - ரை) **अद्यापि** - இந்த ஆபத்திலும், **मम,** - என்னுடைய, **आज्ञा** - உத்திரவானது, **यदि** - **(प्रवर्तते)** - நடக்குமேயானால், **राघवम्** - ராமனை, **निवर्तय तु** - திருப்பிக் கொண்டே வாரும், **रामं विना** - ராமனை விட்டு, **मुहूर्तं अपि** - சற்று நேரம் கூட, **जीवितुम्** - பிழைத்திருக்க, **न शक्ष्यामि** - சக்தனாக ஆகமாட்டேன்.

---

20. (பொ - ரை) ஸாரதி! அல்லது இந்த பெரிய துக்கமானது வெளிக் காரணங்களொன்று மில்லாமல் நாம் அனுபவித்தே தீரவேண்டு மென்கிற முன் செய்த கர்மத்தினால் நம் குலத்தை அழிப்பதற்காக நேர்ந்திருக்கிறது. இது நிச்சயம்.

21. (பொ - ரை) ஸுமந்த்ரரே! நான் உமக்கு எதுவாகிலும் ஒரு உபகாரம் செய்திருந்தேனேயானால், என்னை இப்பொழுதே ஸ்ரீராமனிடம் கொண்டு சேர்த்து விடும். என்னுடைய ப்ராணன்கள், சரீரத்தை விட்டுப் போக த்வரையுடையதாயிருக்கின்றன.

22. (பொ - ரை) ஸாரதி! இந்த ஆபத்துக் காலத்திலும் என்னுடைய உத்திரவு பழுதுபோகாமல் செல்லும் பக்ஷத்தில் ராமனை வனத்திலிருந்து நீர் இங்கு அழைத்துவர வேண்டியது. ராமன் இல்லாமல் ஒரு முகூர்த்த காலம்கூட உயிருடனிருக்கத் துணியமாட்டேன்,

अथवाऽपि महाबाहुर्गतो दूरं भविष्यति ।
मामेव रथमारोप्य शीघ्रं रामाय दर्शय ॥ 23 ॥

वृत्तदंष्ट्रो महेष्वासः क्वासौ लक्ष्मणपूर्वजः ।
यदि जीवामि साध्वेनं पश्येयं सीतया सह ॥ 24 ॥

लोहिताक्षं महाबाहुमामुक्तमणिकुण्डलम् ।
रामं यदि न पश्येयं गमिष्यामि यमक्षयम् ॥ 25 ॥

23. (ப - ரை) **अथवा** - அல்லது, **महाबाहुः** - பெரும் தோள்களுடைய ஸ்ரீ ராமன், **दूरं गतः** - வெகு தூரம் சென்றவனாக, **भविष्यति अपि** - இருப்பனேயானால், **मां एव** - என்னையே, **रथं** - தேரை, **आरोप्य** - ஏற்றிவைத்து, **शीघ्रं** - சீக்கிரமாக, **रामाय** - ராமன் பொருட்டு, **दर्शय** - காட்டும்.

24. (ப - ரை) **वृत्तदंष्ट्रः** - அரும்பு போன்ற பற்களை உடையவராய், **महेष्वासः (महा इष्वासः)** - பெருத்த வில்லையுடைய, **लक्ष्मणपूर्वजः** - இலக்குமணனுக்கு முன் பிறந்தவனான, **असौ** - இந்த ராமன், **क्व** - எங்கே, **एनं** - இவனை, **सीतया सह** - ஸீதையுடன் கூட, **साधु** - நன்றாக, **पश्येयं यदि** - பார்ப்பேனே யானால், **जीवामि** - பிழைப்பேன்.

25. (ப - ரை) **लोहिताक्षं** - சிவந்த கண்களை யுடையவனும், **महाबाहुं** - பெரிய தோள்களையுடையவனும், **आमुक्त मणिकुण्डलम्** - அணிந்து கொள்ளப் பட்ட ரத்தின குண்டலங்களை உடையவனுமான, **रामं** - ஸ்ரீராமனை, **न पश्येयं यदि** - பாராமலிருப்பேனே யானால், **यमक्षयम्** - யமலோகத்தை, **गमिष्यामि** - அடைந்து விடுவேன்.

23. (பொ - ரை) அல்லது, பெருந் தோளனான ஸ்ரீராமன், வெகுதூரம் சென்றிருக்கும் பக்ஷத்தில் என்னையே தேரில் ஏற்றிக்கொண்டு சீக்கிரம் ராமனிடம் கொண்டுபோய் காட்டும்.

24. (பொ - ரை) மல்லிகை அரும்புபோன்ற அழகான பற்களை உடையவனும், பெருத்த வில்லை உடையவனும், இலக்குமணனுக்கு முன் பிறந்தவனான அந்த ராமன் எங்கே! இப்பொழுதே உயிரை விடும் நிலைமையிலிருக்கின்ற நான் எங்கே! அந்த ராமனுடைய தரிசனம் எனக்கு நேர வழியே இல்லை, அந்தக் குழந்தையை நான் ஸீதையுடன் நன்றாகப் பார்ப்பேனேயானால் பிழைத்திருப்பேன்.

25. (பொ - ரை) செந்தாமரைபோல் சிவந்த கண்களையுடையவனும், பெரும் தோள்களை யுடையவனும், ரத்தின குண்டலங்களை அணிந்து கொண்டவனுமான ஸ்ரீராமனை நான் பாராமலிருப்பேனேயானால், யமலோகம் சென்றுவிடுவேன்.

अतो नु किं दुःखतरं योऽहमिक्ष्वाकुनन्दनम् ।
इमामवस्थामापन्नो नेह पश्यामि राघवम् ॥ 26 ॥

हा राम रामानुज हा हा वैदेहि तपस्विनि ।
न मां जानीत दुःखेन म्रियमाणमनाथवत् ॥ 27 ॥

स तेन राजा दुःखेन भृशमर्पितचेतनः ।
अवगाढः सुदुष्पारं शोकसागरमब्रवीत् ॥ 28 ॥

26. (ப - ரை) **यः अहं** - யாதொரு நான், **इमां अवस्थां** - இந்த அவஸ்தையை, **आपन्नः** - அடைந்தவனுயிருந்தும், **इह** - இங்கு, **इक्ष्वाकुनन्दनम्** - இக்ஷ்வாகு குலத்து குமாரனுன, **राघवम्** - ஸ்ரீராமனை, **न पश्यामि (इति यत्)** - பார்க்க வில்லை என்பது யாதொன்றுண்டோ, **अतः** - இதைக் காட்டிலும், **दुःखतरं** - மிகவும் துக்கமானது, **किं नु** - என்ன !

27. (ப - ரை) **हा राम** - ஐயோ ராமா ! **हा रामानुज** - ராமனுடைய தம்பியே ! **तपस्विनि** - சிறந்த தபஸ்ஸையுடைய வளான, **हा वैदेहि** - விதேஹ ராஜன் குமாரியே ! **अनाथवत्** - திக்கற்றவன் போல், **दुःखेन** - துக்கத்திஞல், **म्रियमाणं** - மறிக்கின்ற, **मां** - என்னை, **न जानीत** - அறியமாட்டீர்களா.

28. (ப - ரை) **सः राजा** - அந்த மஹாராஜர், **तेन दुःखेन** - அந்த துக்கத்திஞல், **भृशं** - மிகவும், **अर्पितचेतनः** - சூழப்பட்ட புத்தியை யுடையவராய், **सुदुष्पारं** - மிகவும் வருத்தப்பட்டும், அடைய முடியாத அக்கரையை உடையதான, **शोकसागरं** - துக்க ஸமுத்ரத்தை, **अवगाढः** - ப்ரவேசித்தவராய், **अब्रवीत्** - சொன்னர்.

---

26. (பொ - ரை) நான் இந்த நிலைமையிலிருந்தும் இக்ஷ்வாகு குலத்துக் குமாரனுன ஸ்ரீராமனைப் பார்க்காம லிருக்கின்றேனே ; இதை விட மிகவும் சோகத்தை உண்டு பண்ணக் கூடியது எது ? ஒன்றுமே இல்லை யல்லவா !

27. (பொ - ரை) ஐயோ ராமா ! ஹா ராமானுஜா ! பதிவ்ரதைகளில் சிறந்தவளான விதேஹ மஹாராஜரின் குமாரியே ! நான் ஒரு திக்கற்றவன்போல் துக்கத்திஞல் மரண மடைகின்றேன் உங்களுக்குத் தெரியவில்லையா !

28. (பொ - ரை) அவ்வரசன் அந்த துக்கத்திஞல் நன்ருக சூழப்பட்ட புத்தியையுடையவராய் கஷ்டப்பட்டும் தாண்ட முடியாத துக்கமாகிற ஸமுத்ரத்தில் மூழ்கிக்கொண்டு சொன்னர்.

रामशोकमहाभोगः सीताविरहपारगः ।
श्वसितोर्मिमहाऽऽवर्तो बाष्पफेनजलाविलः ॥ 29 ॥
बाहुविक्षेपमीनौघो विक्रन्दितमहास्वनः ।
प्रकीर्णकेशशैवालः कैकेयीबडवामुखः ॥ 30 ॥
ममाऽश्रुवेगप्रभवः कुब्जावाक्यमहाग्रहः
वरवेलो नृशंसायाः रामप्रव्राजनाऽऽयतः ॥ 31 ॥
यस्मिन्बत निमग्नोऽहं कौसल्ये राघवं विना ।
दुस्तरो जीवता देवि मयायं शोकसागरः ॥ 32 ॥

---

29—30—31—32. (ப - ரை) **हे कौसल्ये देवि** - கௌஸல்யா தேவியே ! **राघवं विना** - ராமனை விட்டுப்பிரிந்து, **यस्मिन्** - யாதொரு துக்கக்கடலில், **अहं** - நான், **निमग्नः** - முழுகியிருக்கின்றேனோ, **अयं शोकसागरः** - இந்த துக்க ஸமுத்ரமானது, **राम शोक महा आभोगः** - ராமனுடைய சோகமாகிற பெரிய பரப்பை உடையது, **सीता विरह पारगः** - ஸீதையை விட்டுப் பிரிந்ததாகிற கரையை அடைந்தது, **श्वसित ऊर्मि महा आवर्तः** - பெருமூச்சாகிற அலைகளையும், பெரிய சுழல்களையுமுடையது, **बाष्प फेन जल आविलः** - கண்ணீராகிற நுரையையும், கலங்கிய ஜலத்தையுமுடையது, **बाहु विक्षेप मीन ओघः** - கைகளை அசைப்பதாகிற மீன் கூட்டங்களையுடையது, **विक्रन्दित महास्वनः** - அழுகையாகிற பெரும் கோஷத்தையுடையது, **प्रकीर्णकेश शैवालः** - அவிழ்ந்து கலைந்திருக்கிற தலை மயிர்களாகிற பாசிகளை உடையது, **कैकेयी बडवामुखः** - கைகேயியாகிற வடவாக்னியை உடையது, **मम** - என்னுடைய, **अश्रुवेगप्रभवः** - கண்ணீரின் வேகத்திற்கு ஆதி காரணமாயிருக்கின்றது, **कुब्जा वाक्य महा ग्रहः** - கூனியின் பேச்சாகிற பெரிய முதலையை உடையது, **नृशंसायाः** - கொடியவளான (கைகேயியினுடைய) **वरवेलः** - வரங்களாகிற கொந்த

---

29—30—31—32. (பொ - ரை) தான் அனுபவிக்கும் துக்கமானது அளவில்லாமலிருக்கிறபடியால் அதை ஸமுத்ரமாக நிரூபித்துக் காட்டுகிறார்.

கௌஸல்யா தேவி ! ராமனுடைய சோகத்தை பெரிய பரப்பாகவுடையதும், ஸீதையைப் பிரிந்ததாகிற அக்கரை உடையதும், பெருமூச்சாகிற அலைகளையும், பெரும் சுழல்களையுமுடையதும், கண்ணீராகிற நுரையையும் கலங்கின நீரையுமுடையதும், அங்குமிங்கும் துக்கத்தினால் கைகளை ஆட்டுகிறதாகிற மீன் கூட்டங்களையுடையதும், அழுகைக் குரலாகிற பெரும் கோஷத்தையுடையதும், அவிழ்ந்து விரிந்த தலைமயிராகிற பாசிக் கொத்துகளையுடையதும், கைகேயியாகிற படவாக்னியை உடையதும், என் கண்ணிலிருந்து துக்கத்தினால் வேகமாக நீர் பெருகுவதற்கு மூலகாரணமாயும், கூனியின் பேச்சுக்களாகிற பெரிய முதலைகளையுடையதும், கொடியவளான கைகேயியின் இரண்டு வரங்களாகிற கொந்தளிப்பை யுடையதும்,

अशोभनं योऽहमिहाऽद्य राघवं दिदृक्षमाणो न लभे सलक्ष्मणम् ।
इतीव राजा विलपन्महायशाः पपात तूर्णं शयने स मूर्च्छितः ॥ 33 ॥
इति विलपति पार्थिवे प्रणष्टे करुणतरं द्विगुणं च रामहेतोः ।
वचनमनुनिशम्य तस्य देवी भयमगमत्पुनरेव राममाता ॥ 34 ॥

**इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे एकोनषष्टितमः सर्गः ॥ 59 ॥**

---

விப்பை உடையது, **रामप्रव्राजनायत:** - ராமனைக் காட்டிற்குத் துறத்துவதாகிற நீட்சியை உடையது, **जीवता** - உயிருடனிருக்கிற, **मया** - என்னால், **दुस्तर:** - (இது) தாண்ட முடியாதது.

33. (ப - ரை) **य: अहं** - யாதொரு நான், **अद्य** - இப்பொழுது, **इह** - இங்கு, **सलक्ष्मणम्** - இலக்குமணனுடன் கூடிய, **राघवं** - ஸ்ரீ ராகவனை, **दिदृक्षमाण:** - பார்க்க விருப்ப முடையவனாக விருந்தும், **न लभे** - (அதை) அடையவில்லை, (**इति यत्** - என்பது யாதொன்றுண்டோ), (**इदं** - இது), **अशोभनं** - (என்னுடைய) பாபம், **इति इव** - என்று இவ்வாறு போல, **महायशा:** - பெருங்கீர்த்தியுடைய, **स: राजा** - அந்த அரசன், **विलपन् (सन्)** - கதறிக்கொண்டு, **मूर्च्छित:** - மூர்ச்சை அடைந்தவராய், **तूर्णं** - உடனே, **शयने** - படுக்கையில், **पपात** - விழுந்து விட்டார்.

34. (ப - ரை) **इति** - இவ்வாறு, **पार्थिवे** - அரசன், **रामहेतो:** - ஸ்ரீ ராமன் நிமித்தமாக, **करुणतरं (यथा तथा)** - மிகவும் தீனமாயிருக்கும்படி, **द्विगुणं च** - இரட்டிப்பாகவும், **विलपति** - கதறிக் கொண்டு, **प्रणष्टे (सति)** - மூர்ச்சை அடைந்த வளவில், **तस्य** - அவருடைய, **वचनं** - வார்த்தையை, **अनुनिशम्य** - கேட்டு, **राममाता** - ஸ்ரீ ராமனுடைய தாயாரான, **देवी** - கௌஸல்யா தேவி, **पुन: एव** - மறுபடியும், **भयं** - பயத்தை, **अगमत्** - அடைந்தாள்.

---

ராமனுடைய வனவாஸமாகிற நீழ்ச்சியை (நீளத்தை) யுடையதுமான இந்த துக்கமாகிற ஸமுத்ரத்தில் ஸ்ரீ ராமனை விட்டுப் பிரிந்தபடியால் மூழ்கி அமிழ்ந்து விட்டேன். இனி நான் இதை உயிருடன் தாண்ட முடியாது.

33. (பொ - ரை) இந்த ஸமயத்தில் இலக்குமணனுடன் ராகவனைப் பார்க்க நான் ஆசைப்பட்டும் எனக்கு அது கிடைக்காததற்குக் காரணம் என்னுடைய பாபம்தான் என்று இவ்வாறாக பெரும் கீர்த்தி படைத்த அவ்வரசன் அழுது கொண்டு மூர்ச்சை அடைந்து திடீரென்று படுக்கையில் விழுந்துவிட்டார்.

34. (பொ - ரை) அரசன், ஸ்ரீ ராமன் நிமித்தமாக மிகவும் தீனமாக இரட்டிப்பாக இவ்வாறு அழுது கொண்டு மூர்ச்சித்து கீழே விழுந்தவுடன் ஸ்ரீ ராமன் மாதாவான கௌஸல்யா தேவி, அவருடைய வார்த்தையையும், அந்த நிலைமையையும் பார்த்து, முன் ஸ்ரீ ராமனுக்கு என்ன நேர்ந்து விடுமோ வென்று பயப்பட்டதுபோல இப்பொழுது பர்த்தாவுக்கு என்ன நேர்ந்து விடுமோ வென்று மறுபடியும் பயத்தை அடைந்தாள்.

षष्टितमः सर्गः ॥ 60 ॥

ततो भूतोपसृष्टेव वेपमाना पुनः पुनः ।
धरण्यां गतसत्वेव कौसल्या सूतमब्रवीत् ॥ 1 ॥

नय मां यत्र काकुत्स्थः सीता यत्र च लक्ष्मणः ।
तान्विना क्षणमप्यत्र जीवितुं नोत्सहे ह्यहम् ॥ 2 ॥

निवर्तय रथं शीघ्रं दण्डकान्नय मामपि ।
अथ तान्नानुगच्छामि गमिष्यामि यमक्षयम् ॥ 3 ॥

---

1. (ப - ரை) **ततः** - பிறகு, **कौसल्या** - கௌஸல்யா தேவி, **भूत उपसृष्टा इव** - பிசாசத்தினால் பிடிக்கப்பட்டவள் போல, **धरण्यां** - தரையில், **पुनः पुनः** - அடிக்கடி, **वेपमाना** - (விழுந்து) நடுங்கிக் கொண்டு, **गतसत्वा इव** - ப்ராணன் போனவள் போல, **सूतं** - ஸுமந்த்ரரைப் பார்த்து, **अब्रवीत्** - சொன்னாள்.

2. (ப - ரை) **यत्र** - எந்த இடத்தில், **काकुत्स्थः** - ஸ்ரீராமனும், **यत्र** - எந்த இடத்தில், **सीता** - ஸீதையும், **लक्ष्मणः च** - இலக்குமணனும், (**सन्ति** - இருக்கிறார்களோ), (**तत्र** - அந்த இடத்தை), **मां** - என்னை, **नय** - அழைத்துக்கொண்டுபோய் விடும், **हि** - ஏனென்றால், **तान् विना** - அவர்களை விட்டு, **अहं** - நான், **अत्र** - இங்கு, **क्षणं अपि** - க்ஷணகாலம் கூட, **जीवितुं** - பிழைத்திருக்க, **न उत्सहे** - மாட்டேன்.

3. (ப - ரை) **शीघ्रं** - சீக்கிரமாக, **रथं** - தேரை, **निवर्तय** - திருப்பும், **मां अपि** - என்னையும், **दण्डकान्** - தண்டகாவனத்தை, **नय** - கொண்டு போய் விடும், **तान्** - அவர்களை, **अथ न अनुगच्छामि** - பின் செல்லாமலிருப்பேனேயானால், **यमक्षयम्** - யமனுடைய க்ருஹத்தைக் குறித்து, **गमिष्यामि** - போய் விடுவேன்.

---

1. (பொ - ரை) பிறகு கௌஸல்யா தேவி, பிசாசம் பிடித்தவள் போல் தரையில் விழுந்து அடிக்கடி புரண்டு கொண்டு, ப்ராணனை இழந்தவள் போலிருந்து ஸுமந்த்ரரைப் பார்த்துச் சொன்னாள்.

2. (பொ - ரை) காகுத்ஸ்தனும், ஸீதையும், இலக்குமணனும் எங்கு இருக்கின்றார்களோ அங்கு என்னையும் அழைத்துக் கொண்டுபோய் விடும். ஏனென்றால், அம்மூவர்களையும் விட்டுவிட்டு நான் இங்கு க்ஷண காலங் கூட பிழைத்திருக்க மாட்டேன்.

3. (பொ - ரை) சீக்கிரமாகத் தேரைத் திருப்பும், என்னையும் தண்டகாவனத்திற்குக் கொண்டுபோய் விடும், அவர்களுடன் நான் போகாமலிருப்பேனே யானால் இப்பொழுதே யமனுடைய க்ருஹம் சென்று விடுவேன்.

बाष्पवेगोपहतया स वाचा सज्जमानया ।
इदमाश्वासयन्देवीं सूतः प्राञ्जलिरब्रवीत् ॥ 4 ॥

त्यज शोकं च मोहं च संभ्रमं दुःखजं तथा ।
व्यवधूय च संतापं वने वत्स्यति राघवः ॥ 5 ॥

लक्ष्मणश्चापि रामस्य पादौ परिचरन्वने ।
आराधयति धर्मज्ञः परलोकं जितेन्द्रियः ॥ 6 ॥

4. (ப - ரை) **सः सूतः** - அந்த ஸாரதி, **बाष्प वेग उपहतया** - கண்ணீரின் வேகத்தால் தடுக்கப்பட்டும், **सज्जमानया** - தழதழத்து மிருக்கிற, **वाचा** - வாக்கோடு (கூடிய), **देवीं** - கௌஸல்யாதேவியை, **आश्वासयन् (सन्)** - தேற்றிக்கொண்டு, **प्राञ्जलिः** - கை கூப்பினவராய், **इदं अब्रवीत्** - இதைச் சொன்னார்.

5. (ப - ரை) **शोकंच** - சோகத்தையும், **मोहंच** - மயக்கத்தையும், **दुःखजं** - துக்கத்தினலுண்டான, **संभ्रमं तथा** - பதற்றத்தையும், **त्यज** - விட்டுவிடும், **राघवः** - ஸ்ரீராகவன், **संतापं च** - தாபத்தையும், **व्यवधूय** - தள்ளிவிட்டு, **वने** - வனத்தில், **वत्स्यति** - வஸிக்கப் போகிறார்.

6. (ப - ரை) **धर्मज्ञः** - தர்மங்களை அறிந்தவரான, **लक्ष्मणः च अपि** - இலக்குமணனும், **वने** - வனத்தில், **रामस्य** - ஸ்ரீராமனுடைய, **पादौ** - திருவடிகளை, **परिचरन् (सन्)** - சிச்ரூஷை செய்து கொண்டு, **जितेन्द्रियः** - இந்த்ரியங்களை ஜயித்தவராய், **परलोकं** - பரலோகத்தை, **आराधयति** - ஸாதிக்கிறார்.

---

4. (பொ - ரை) அந்த ஸுமந்த்ரர், கண்ணீரின் வேகத்தினல் தடைப்பட்டு, தழதழத்துப் பேசுகின்ற அந்த கௌஸல்யா தேவிக்கு ஸமாதானம் செய்து கொண்டு கைகூப்பி இதைச் சொன்னார்.

5. (பொ - ரை) அம்மா! நீர், சோகத்தையும், ராமனுக்கு வனத்தில் என்ன கஷ்டம் நேர்ந்து விடுமோ என்கிற அஜ்ஞானத்தையும் விட்டுவிடும், ஸ்ரீராமன் ஸந்தாபத்தை விட்டு விட்டு வனத்தில் வஸிக்கப்போகின்றார்.

6. (பொ - ரை) ஸகல தர்மங்களையும் அறிந்த இலக்குமணனும், ஜிதேந்த்ரியராயிருந்து வனத்தில் ஸ்ரீராமனுடைய திருவடிகளை சிச்ரூஷித்துக்கொண்டு பரலோகத்தை ஸாதிக்கிறார் (தன் வசமாக்கிக் கொள்ளுகிறார்).

विजनेऽपि वने सीता वासं प्राप्य गृहेष्विव ।
विस्रम्भं लभतेऽभीता रामे संन्यस्तमानसा ॥ 7 ॥

नाऽस्या दैन्यं कृतं किंचित्सुसूक्ष्ममपि लक्ष्यते ।
उचितेव प्रवासानां वैदेही प्रतिभाति मा ॥ 8 ॥

नगरोपवनं गत्वा यथा स्म रमते पुरा ।
तथैव रमते सीता निर्जनेषु वनेष्वपि ॥ 9 ॥

---

7. (ப - ரை) **सीता** - ஸீதையும், **गृहेषु इव** - க்ருஹங்களிலேபோல, **विजने** - ஜன சூன்யமான, **वने अपि** - வனத்திலும், **वासं** - வாஸத்தை, **प्राप्य** - அடைந்து, **रामे** - ஸ்ரீ ராமனிடத்தில், **संन्यस्तमानसा** - நன்ருக வைக்கப்பட்ட மனம் உடைய வளாய், **अभीता** - (ஆதலால்) பயமற்றவளாய், **विस्रम्भं** - ப்ரீதியை, **लभते** - அடைகின்ருள்.

8. (ப - ரை) **अस्याः** - இவளுக்கு, **कृतं** (**वनवास कृतं**) - வனவாஸத்தினுலுண் டான, **किंचित् दैन्यं** - ஒரு துக்கமும், **सुसूक्ष्मं अपि** - கொஞ்சம் கூட, **न लक्ष्यते** - காணப்படவில்லை, **वैदेही** - ஸீதையானவள், **प्रवासानां** - வனவாஸங்களுக்கு, **उचिता इव** - தகுந்தவள்போல, **मा** - என்னைக் குறித்து, **प्रतिभाति** - தோன்று

9. (ப - ரை) **सीता** - ஸீதை, **पुरा** - முன்னே, **नगर उपवनं** - பட்டணத்து உத்யான வனத்தை, **गत्वा** - அடைந்து, **यथा** - எவ்வாறு, **रमते स्म** - விளையாடிக் கொண்டிருந்தாளோ, **निर्जनेषु** - ஜனங்களில்லாத, **वनेषु अपि** - வனங்களிலும், **तथा एव** - அவ்வாறே, **रमते** - விளையாடிக்கொண் டிருக்கிருள்.

---

7. (பொ - ரை) ஸீதையும், க்ருஹத்தில் வாஸம் பண்ணுவதுபோல் ஜன ஸஞ்சாரமில்லாத வனத்தில் வாஸம் செய்து கொண்டு, ஸ்ரீ ராமனிடத்திலேயே நன்ருய் மனம் வைத்து அதனுல் பயமற்றவளாய் ப்ரீதியுடனிருக்கின்ருள்.

8. (பொ - ரை) இந்த ஸீதைக்கு வனவாஸத்தினுல் ஒருவித துக்கமும், கொஞ்சமேனும் காணப்படவில்லை. இவ்வாறு இவள் வனத்தில் வாஸம் பண்ணு வதைப் பார்த்தால் நெடுநாளாக வனவாஸம் செய்து பழகினவள்போல் எனக்குத் தோன்றுகிறது.

9. (பொ - ரை) ஸீதை நகரத்திலிருக்கும்பொழுது, நகரத்தைச் சேர்ந்த பூந் தோட்டத்திற்குப் போய் எவ்வாறு விளையாடிக் கொண்டிருந்தாளோ, அவ்வாறே, ஜன ஸஞ்சாரமில்லாத காடுகளிலும் விளையாடிக் கொண்டிருக்கிருள்.

अध्वना वातवेगेन संभ्रमेणाऽऽतपेन च ।
न विगच्छति वैदेह्याश्चन्द्रांशुसदृशी प्रभा ॥ 16 ॥
सदृशं शतपत्रस्य पूर्णचन्द्रोपमप्रभम् ।
वदनं तद्वदान्याया वैदेह्या न विकम्पते ॥ 17 ॥
अलक्तरसरक्ताभावलक्तरसवर्जितौ ।
अद्यापि चरणौ तस्याः पद्मकोशसमप्रभौ ॥ 18 ॥

**देव्याः** - கௌஸல்யா தேவிக்கு, **ह्लादनं** - ஸந்தோஷகரமாய், **मधुरं** - இனிதான, **वचनं** - வார்த்தையை, **अब्रवीत्** - சொன்னர்.

16. (ப - ரை) **अध्वना** - வழி நடப்பதினுலும், **वातवेगेन** - காற்றின் வேகத்தினுலும், **संभ्रमेण** - பதற்றத்தினுலும், **आतपेन च** - வெய்யிலினுலும், **चन्द्रांशु सदृशी** - நிலவுக்கு ஒப்பான, **वैदेह्याः** - ஸீதையின், **प्रभा** - தேஹத்தின் ஒளியானது, **न विगच्छति** - விகாரப்படவில்லை.

17. (ப - ரை) **शतपत्रस्य** - தாமரை புஷ்பத்திற்கு, **सदृशं** - ஸமானமாயும், **पूर्णचन्द्र उपम प्रभम्** - பூர்ணிமா சந்திரனுக்கு ஸமானமான காந்தியை யுடையதுமான, **वदान्यायाः** - இனிய பேச்சையுடைய, **वैदेह्याः** - ஸீதையின், **तत् वदनं** - அந்த முகமானது, **न विकम्पते** - அசைகிறதில்லை. (வர்ணம் மாறுகிறதில்லை.)

18. (ப - ரை) **अलक्तरस रक्ताभौ** - செம்பஞ்சு குழம்புபோல் சிவந்த காந்தியையுடைய, **तस्याः** - அந்த ஸீதையினுடைய, **चरणौ** - பாதங்கள், **अलक्तरसवर्जितौ** - செம்பஞ்சு குழம்பு இல்லாமலிருந்தும், **अद्यापि** - இந்த ஸமயத்திலும், **पद्म कोशसमप्रभौ** - தாமரை மொக்குக்கு ஸமானமான காந்தியை உடையவைகளாயிருக்

விட்டு கௌஸல்யா தேவிக்கு ஸந்தோஷகரமாய் இனிதான வேறு வார்த்தையைச் சொல்லத் துடங்கினர்.

16. (பொ - ரை) வழி நடப்பதாலும் காற்று அடிப்பதாலும், புலி முதலான துஷ்ட ஜந்துக்களைக் கண்டு பயப்படுவதாலும், வெய்யிலாலும், நிலவுபோன்ற ஸீதையின் சரீர காந்தி மாறுகிறதே யில்லை.

17. (பொ - ரை) தாமரை மலரை ஒத்ததாயும், பூர்ண சந்திரனைப் போன்ற காந்தியுடையதுமான அந்த அழகான பேச்சையுடைய விதேஹ ராஜ குமாரியான ஸீதையின் முகம் இயற்கையான காந்தியை ஒருக்காலும் விடுகிறதில்லை.

18. (பொ - ரை) செம்பஞ்சு குழம்புபோல் சிவந்த காந்தியையுடைய ஸீதையின் பாதங்கள் இரண்டும் இப்பொழுது வனவாஸம் செய்யுங்காலத்தில் செம்பஞ்சு குழம்பு பூசப்படாமலிருந்தும், தாமரைப் புஷ்பத்திற்கு துல்யமான காந்தியையுடையவைகளா யிருக்கின்றன.

नूपुरोद्धुष्टहेलेव खेलं गच्छति भामिनी ।
इदानीमपि वैदेही तद्रागान्न्यस्तभूषणा ॥ 19 ॥

गजं वा वीक्ष्य सिंहं वा व्याघ्रं वा वनमाश्रिता ।
नाहारयति संत्रासं बाहू रामस्य संश्रिता ॥ 20 ॥

---

19. (ப - ரை) **तत् रागात्** - அந்த பூஷணங்களில் ஆசையினால், **न्यस्तभूषणा** - அணிந்து கொள்ளப்பட்ட பூஷணங்களையுடைய, **वैदेही** - விதேஹராஜகுமாரியான, **भामिनी** - அந்தப் பெண், **इदानीं अपि** - இப்பொழுதும், **नूपुर उद्धुष्ट हेला इव** - தண்டையின் சப்தத்தை அனுஸரித்த விளையாட்டை உடையவள்போல், **खेलं** - ஒய்யாரமாக, **गच्छति** - ஸஞ்சரிக்கின்றாள்.

पाठभेद:

**तत् रागात्** - ராமனுடன் செல்லுவதில் ஆசையினால், **न्यस्तभूषणा** - தள்ளப்பட்ட தண்டைகளை உடைய வளாயிருந்தும், **नूपुर उत्कृष्ट हेला इव** - தண்டையினால் உண்டான ஒய்யார நடை உடையவள் போல்.

20. (ப - ரை) **रामस्य** - ஸ்ரீராமனுடைய, **बाहू** - தோள்களை, **संश्रिता** - அடைந்திருக்கின்ற ஸீதை, **वनं** - வனத்தை, **आश्रिता (सती)** - அடைந்தவளாய்க்

19. (பொ - ரை) ஆபரணங்கள் அணிந்து கொள்வதில் மிகவும் விருப்பமுள்ளவளாதலால், எப்பொழுதும் சரீரங்களில் ஆபரணங்களை அணிந்து கொண்டேயிருக்கும் அந்த விதேஹராஜ குமாரியான ஸீதை, பாதங்களில் தண்டைகள் அணிந்துகொண்டு நடக்கும்பொழுதும் அதில் உண்டான சப்தங்களை அனுஸரித்து ஒய்யாரமாகவே இந்த வனவாஸத்திலும் கூட நடக்கின்றாள்.

பாடபேதம்:—ராமனுடன் வனம் போவதில் மிகவும் ஆசையினால் தண்டை முதலான ஆபரணங்களைக் கழற்றிவிட்டு வனவாஸம் செய்யும்பொழுதும் அவள் இனிதாக நடக்கும் நடையைப் பார்த்தால் தண்டை முதலானதுகள் அணிந்து கொண்டு ஒய்யாரமாக நடக்கிறாள் போலிருக்கின்றது.

20. (பொ - ரை) இந்த ஸீதை வனத்தில் பார்த்த மாத்திரத்தில், பயங்கரமான பெரிய சரீரமுடைய யானையையாவது, அதற்கும் பெரிதான ஸிம்மத்தையாவது,

न शोच्यास्ते न चात्मानः शोच्यो नापि जनाधिपः ।
इदं हि चरितं लोके प्रतिष्ठास्यति शाश्वतं ॥ 21 ॥
विधूय शोकं परिहृष्टमानसा महर्षियाते पथि सुव्यवस्थिताः ।
वने रता वन्यफलाशनाः पितुः शुभां प्रतिज्ञां परिपालयन्ति ते ॥ 22 ॥

கொண்டு, **गजं वा** - யானையையாவது, **सिंहं वा** - ஸிம்மத்தையாவது, **व्याघ्रं वा** - புலியையாவது, **वीक्ष्य** - பார்த்து, **संत्रासं** - பயத்தை, **न आहारयति** - அடைகின்றதில்லை.

21. (ப - ரை) **ते** - அவர்கள், **न शोच्याः** - துக்கப்படத் தகுந்தவர்களல்ல, **आत्मानः च** - நாமும், **न शोच्याः** - துக்கப்படத் தகுந்தவர்களல்ல, **जनाधिपः अपि** - அரசனும், **न शोच्यः** - துக்கப்படத் தகுந்தவரல்ல, **हि** - ஏனென்றால், **इदं चरितं** - இந்த சரித்ரமானது, **लोके** - உலகத்தில், **शाश्वतं** - சாச்வதமாக, **प्रतिष्ठास्यति** - நிலைத்திருக்கப் போகின்றது.

22. (ப - ரை) **ते** - அவர்கள், **शोकं** - துக்கத்தை, **विधूय** - தள்ளிவிட்டு, **परिहृष्टमानसाः** - மிகவும் ஸந்தோஷமுள்ள மனதுடையவர்களாய், **महर्षियाते** - மஹரிஷிகளால் போகப்பட்ட, **पथि** - வழியில், **सुव्यवस्थिताः** - நிலைபுள்ளவர்களாய், **वन्य फलाशनाः** - காட்டிலிருக்கும் பழங்களைப் புஜித்தவர்களாய், **वने** - வனவாஸத்தில், **रताः** - ஊக்கமுள்ளவர்களாகவிருந்து, **शुभां** - சுபகரமான, **पितुः प्रतिज्ञां** - பிதாவின் ப்ரதிஜ்ஞையை, **परिपालयन्ति** - பரிபாலித்து வருகின்றார்கள்.

ப்ராணி ஸாமான்யங்களை ஹிம்ஸிக்கிறபடியால் ஸிம்மத்தைக் காட்டிலும் மிகவும் க்ரூரமான புலியையாவது, பார்த்தபோதிலும் ஸ்ரீராமனுடைய கைகளை ஆச்ரயித்திருக்கிறபடியால் பயப்படுகிறதே யில்லை.

21. (பொ - ரை) ஆதலால் ஸ்ரீராமனையும் ஸீதையையும், இலக்குமணனைப் பற்றியும், நம்மைப்பற்றியும், அரசனைப்பற்றியும் துக்கிக்க வேண்டியதேயில்லை, ஏனென்றால், பித்ருவசன பரிபாலனமென்கிற இந்த ஸச்சரித்திரமானது உலகத்தில் சந்திர ஸூர்யர்கள் உள்ளவரையில் சாச்வதமாய் நடக்கப்போகின்றது.

22. (பொ - ரை) அம்மூவர்களும் துக்கத்தைத் தள்ளிவிட்டு மனக்களிப்பு உடையவர்களாய், மஹரிஷிகள் நடந்த வழியில் நிலை நின்று வனவாஸம் செய்து கொண்டு வனத்திலிருக்கும் பழம், காய், கிழங்கு முதலியவைகளை புஜித்துக்கொண்டு உலகங்களுக்கும் தங்களுக்கும் க்ஷேமகரமான பிதாவின் ப்ரதிஜ்ஞையைக் காப்பாற்றி வருகின்றார்கள்.

तथाऽपि सूतेन सुयुक्तवादिना निवार्यमाणा सुतशोककर्शिता ।
न चैव देवी विरराम कूजितात्प्रियेति पुत्रेति च राघवेति च ॥ 23 ॥

**इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये अयोध्याकाण्डे**
**षष्टितमः सर्गः ॥ 60 ॥**

---

23. (ப - ரை) **सुतशोक कर्शिता** - புத்திர சோகத்தினால் இளைத்த, **देवी** - கௌஸல்யா தேவி, **सुयुक्तवादिना** - மிகவும் உசிதமான வார்த்தையைச் சொல்லுகின்ற, **सूतेन** - ஸாரதியினால், **तथा** - அவ்வாறு, **निवार्यमाणा अपि** - தடுக்கப்பட்டிருந்தும், **प्रिय इति** - அன்பனே! என்றும், **पुत्र इति च** - குழந்தாய்! என்றும், **राघव इति च** - ராகவா! என்றும், **कूजितात्** - கதறுவதில் நின்றும், **न विरराम एव च** -

23. (பொ - ரை) புத்திர சோகத்தினால் இளைத்த அந்த கௌஸல்யா தேவி, மிகவும் உசிதமான இவ்வார்த்தைகளைச் சொல்லி ஸுமந்த்ரரால் ஸமாதானம் செய்யப்பட்டும், என் அன்பனே! என் குழந்தாய்! அப்பா ராகவா! என்றும் ஓயாமல் கதறிக்கொண்டேயிருந்தாள்.

## एकषष्टितमः सर्गः ॥ 61 ॥

वनं गते धर्मपरे रामे रमयतां वरे ।
कौसल्या रुदती स्वार्ता भर्तारमिदमब्रवीत् ॥ 1 ॥

यद्यपि त्रिषु लोकेषु प्रथितं ते महद्यशः ।
सानुक्रोशो वदान्यश्च प्रियवादी च राघवः ॥ 2 ॥

कथं नरवरश्रेष्ठ पुत्रौ तौ सह सीतया ।
दुःखितौ सुखसंवृद्धौ वने दुःखं सहिष्यतः ॥ 3 ॥

1. (ப - ரை) **रमयतां** - ஸந்தோஷப் படுத்துகிறவர்களுக்குள், **वरे** - உத்தமராயும், **धर्मपरे** - தர்மத்தை முக்யமாக உடையவருமான, **रामे** - ஸ்ரீராமன், **वनं गते (सति)** - வனம் சென்றவளவில், **कौसल्या** - கௌஸல்யாதேவி, **रुदती** - அழுது கொண்டு, **स्वार्ता (सती)** - மிகவும் துக்கமுடையவளாய், **भर्तारं** - பர்த்தாவைக் குறித்து, **इदं** - இந்த வார்த்தையை, **अब्रवीत्** - சொன்னாள்.

2. (ப - ரை) **राघवः** - தசரதர், **सानुक्रोशः** - கருணையுடன் கூடியவர், **वदान्यः च** - மிகவும் தாதா, **प्रियवादी च** - இனிதாகப் பேசும் ஸ்வபாவமுள்ளவர், (**इति** - என்று), **ते** - உமக்கு, **महत् यशः** - பெரிய கீர்த்தி, **त्रिषु लोकेषु** - மூவுலகங்களிலும், **प्रथितं यद्यपि** - ப்ரஸித்தமாகத் தானிருக்கின்றது, (**तथा अपि** - அப்படி யிருந்தும், **अतिशयित आप यशस्करं** - மேலான அபகீர்த்தியைக் கொடுக்கக் கூடிய, **कृत्यं** - கார்யமானது, **कृतं** - உம்மால் செய்யப்பட்டது).

3. (ப - ரை) **हे नरवरश्रेष्ठ** - உத்தம மனிதர்களில் சிறந்தவரே! **सुखसंवृद्धौ** - ஸுகமாகவளர்ந்த, **तौ पुत्रौ** - அந்த பிள்ளைகள் இருவரும், **सीतया सह** - ஸீதை

1. (பொ - ரை) பிறர்களுக்கு ஆனந்தத்தை செய்யுமவர்களில் உத்தமராயும், தார்மிஷ்டருமான அந்த ஸ்ரீராமன் வனம் சென்ற பிறகு, கௌஸல்யாதேவி அழுது கொண்டு மிகவும் துக்கத்துடன் பர்த்தாவை நோக்கி இதைச் சொன்னாள்.

2. (பொ - ரை) தசரத மஹாராஜர் மிகவும் கருணையுள்ளவர், கேட்டவர்களுக்கு யதேஷ்டமாகக் கொடுக்கும் ஸ்வபாவமுடையவர், இனிதாகப் பேசும் தன்மையுடையவர் என்று மூவுலகங்களிலும் உமக்கு பெரிய கீர்த்தி ப்ரஸித்தமாகத்தான் இருக்கிறது. ஆகிலும் இப்பொழுது நீர் செய்த கார்யம் மிகவும் அபகீர்த்தியை விளைவிக்கக் கூடியதாயிருக்கிறது.

3. (பொ - ரை) ஆகிலும், ஸுகமாக வளர்ந்த அந்த குமாரர்கள் இருவரும் ஸீதையுடன் கூட வழியில் வருத்தப்பட்டு நடந்து கொண்டு வனத்தில் கஷ்டங்களை

सा नूनं तरुणी श्यामा सुकुमारी सुखोचिता ।
कथमुष्णं च शीतं च मैथिली प्रसहिष्यते ॥ 4 ॥
भुक्त्वाशनं विशालाक्षी सूपदंशान्वितं शुभम् ।
वन्यं नैवारमाहारं कथं सीतोपभोक्ष्यते ॥ 5 ॥

யுடன் கூட, **दुःखितौ (सन्तौ)** - (மார்க்கத்தில்) துக்கப்பட்டுக்கொண்டு, **वने** - வனத்தில், **दुःखं** - துக்கத்தை, **कथं** - எவ்வாறு, **सहिष्यतः** - ஸஹிக்கப் போகின்றார்கள்.

4. (ப - ரை) **तरुणी** - யௌவனமுடையவளாய், **श्यामा** - யௌவன மத்தியில் இருப்பவளும், **सुकुमारी** - ம்ருதுவான சரீரமுடையவளும், **सुखोचिता** - ஸுகத்திற்கே தகுந்தவளுமான, **सा मैथिली** - அந்த ஸீதை, **उष्णं च** - வெய்யிலையும், **शीतं च** - குளிரையும், **कथं प्रसहिष्यते** - எவ்வாறு ஸஹிப்பாள், **नूनं** - நிச்சயம்.

5. (ப - ரை) **विशालाक्षी** - அகன்ற கண்களையுடைய, **सीता** - ஸீதை, **सु उपदंश अन्वितं** - நல்ல வ்யஞ்ஜனங்களோடு கூடிய, **शुभम्** - உத்தமமுமான, **अशनं** - அன்னத்தை, **भुक्त्वा** - சாப்பிட்டு விட்டு, (**अद्य** - இப்பொழுது), **वन्यं** - வனத்திலுண்டான, **नैवारं** - செந்நெல் அரிசியால் செய்த, **आहारं** - அன்னத்தை, **कथं** - எவ்வாறு, **उपभोक्ष्यते** - சாப்பிடுவாள்.

---

எவ்வாறு ஸஹிப்பார்களோ? தசரத மஹாராஜர் வார்த்தகத்தில் பலவிதமான வ்ரத உபவாஸம் முதலான ச்ரமகரங்களான கார்யங்களைச் செய்து பெற்று எடுத்த ஜ்யேஷ்ட குமாரனையும், பட்டாபிஷேக காலத்தில் வனத்திற்கு அனுப்பிவிட்டு தம்முடைய ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றி விட்டார் என்றும், ராகவன் உதாரனாயிருப்பதாலும் கருணையுடன் கூடியிருப்பதாலும் எல்லோரிடமும் ப்ரியமாகப் பேசும் ஸ்வபாவ முடையவராதலாலும், தசரத மஹாராஜர் தனக்கு முன் கொடுத்த ராஜ்யத்தைக் கொடுக்க மாட்டேனென்று சொல்லுவதற்கு மனமில்லாதபடியால் கைகேயியின் வார்த்தைக்கு இணங்கி ராஜ்யத்தை பரதனுக்குக் கொடுத்து விட்டான் என்று இவ்வாறு உங்களிருவர்களுக்கும் பெரிய கீர்த்தி மூவ்வுலகங்களிலும் பரவி விட்டது. இது ஸரி, ஆகிலும் அந்தக் குழந்தைகளிருவரும் ஸீதையுடன் கூட நகரத்தில் ஸுகமாக வளர்ந்தவர்கள், இப்பொழுது காட்டு வழியில் கஷ்டப்பட்டு நடந்து வனத்தில் நேரும் துக்கங்களை எவ்வாறு ஸஹிப்பார்கள்.

4. (பொ - ரை) யௌவனப் பருவம் ஆரம்பித்து அதன நடுநிலையில் நிற்கின்றவளும், மெல்லிய சரீரமுடையவளும், ஸுகானுபவத்திலேயே பழக்க முடையவளுமான அந்த மைதில ராஜன் குமாரி வனத்தில் வெய்யிலையும், குளிரையும் எவ்வாறு ஸஹிப்பாள், இது நிச்சயம்.

5. (பொ - ரை) விசாலமான கண்களையுடைய ஸீதை நல்ல வ்யஞ்சனங்களுடன் ச்லாக்யமான செம்பா அரிசி அன்னத்தை புஜித்தவள், இப்பொழுது வனத்திலுண்டான செந்தாமை அரிசியினால் ஆக்கப்பட்ட அன்னத்தை எவ்வாறு புஜிப்பாள்.

गीतवादित्रनिर्घोषं श्रुत्वा शुभमनिन्दिता ।
कथं क्रव्यादसिंहानां शब्दं श्रोष्यत्यशोभनम् ॥ 6 ॥

महेन्द्रध्वजसंकाशः क्वनु शेते महाभुजः ।
भुजं परिघसंकाशमुपधाय महाबलः ॥ 7 ॥

पद्मवर्णं सुकेशान्तं पद्मनिःश्वासमुत्तमम् ।
कदा द्रक्ष्यामि रामस्य वदनं पुष्करेक्षणम्" ॥ 8 ॥

6. (ப - ரை) **अनिन्दिता** - பழிப்பில்லாதவளான ஸீதை, **गीत वादित्र निर्घोषं** - கானத்தினுடையவும், வாத்யத்தினுடையவும் சப்தத்தை, **श्रुत्वा** - கேட்டுவிட்டு, **क्रव्यादसिंहानां** - மாம்ஸத்தைத் தின்னும் ஸிம்ஹங்களுடைய, **अशोभनम्** - பயங்கரமான, **शब्दं** - சப்தத்தை, **कथं** - எவ்வாறு, **श्रोष्यति** - கேட்கப்போகிருள்.

7. (ப - ரை) **महेन्द्रध्वज संकाशः** - இந்திரனுடைய த்வஜத்திற்கு ஸமானராயும், **महाभुजः** - பெரிய தோள்களையுடையவரும், **महाबलः** - மிக்க பலமுடையவருமான அந்த ராமன், **परिघसंकाशं** - உழலைத்தடிக்கு ஒப்பான, **भुजं** - தோளை, **उपधाय** - தலையணையாக வைத்துக்கொண்டு, **क्व नु शेते** - எங்கே படுத்துக்கொண்டிருக்கிருரோ!

8. (ப - ரை) **पद्मवर्णं** - தாமரை இதழின் வர்ணமுடையதாய், **सुकेशान्तं** - அழகான தலைமயிர்களின் நுனியை உடையதாய், **पद्मनिःश्वासं** - தாமரைப் புஷ்பத்தின் வாஸனை போன்ற மூச்சுக்காற்று உடையதும், **पुष्करेक्षणम्** - தாமரைப் புஷ்பம் போன்ற கண்களை உடையதும், **उत्तमम्** - சிறந்ததுமான, **रामस्य** - ராமனுடைய, **वदनं** - முகத்தை, **कदा** - எப்பொழுது, **द्रक्ष्यामि** - பார்க்கப் போகிறேனே!

---

6. (பொ - ரை) பழிப்பில்லாத நடத்தையுடைய ஸீதை பாட்டினுடையவும், வாத்யத்தினுடையவும் சப்தத்தைக் கேட்டு ஆனந்தங் கொண்டிருந்தவள், இப்பொழுது வனத்தில் மாம்ஸங்களைத் தின்னும் ஸிம்மம் முதலான ஜந்துக்களுடைய பயங்கரமான சப்தத்தை எவ்வாறு கேட்கப்போகிருள்.

7. (பொ - ரை) இந்திரனுடைய த்வஜத்திற்கு ஸமானனாய், பெரும் தோள்களை உடையவனாய், அதிக பலம் உடையவனுமான அந்த ராமன், உழலைத்தடிக்கு ஸமானமான தோள்களைத் தலை அணையாக வைத்துக்கொண்டு எங்கே படுத்துக் கொண்டிருக்கிருனோ!

8. (பொ - ரை) தாமரை இதழ் போன்ற வர்ணமுடையதாய், அழகான நுனி மயிர்களையுடையதாய், தாமரை வாஸனை போன்ற வாஸனையுடைய மூச்சுக் காற்று உடையதாய், செந்தாமரை மலர்போன்ற கண்களை உடையதாய், உத்தமமான அந்த ராமனுடைய முகத்தை நான் எப்பொழுது பார்ப்பேன்?

वज्रसारमयं नूनं हृदयं मे न संशयः ।
अपश्यन्त्या न तं यद्वै फलतीदं सहस्रधा ॥ 9 ॥

यत्त्वयाऽकरुणं कर्म व्यपोह्य मम बान्धवाः ।
निरस्ताः परिधावन्ति सुखार्हाः कृपणा वने ॥ 10 ॥

यदि पञ्चदशे वर्षे राघवः पुनरेष्यति ।
जह्याद्राज्यं च कोशं च भरतेनोपभुज्यते ॥ 11 ॥

---

9. (ப - ரை) **यत्** - யாதொரு காரணத்தினால், **तं** - அந்த ராமனை, **अपश्यन्त्याः** - பாராமலிருக்கின்ற, **मे** - என்னுடைய, **इदं हृदयं** - இந்த நெஞ்சானது, **सहस्रधा** - ஆயிரம் சில்லாக, **न फलति वै** - வெடிக்காமலிருக்கின்றதோ, **तत्** - ஆதலால், **वज्र - सारमयं** - மிகவும் த்ருடமான வஜ்ஜிரத்தினால் செய்யப்பட்டது, **नूनं** - நிச்சயம், **न संशयः** - ஸந்தேகமேயில்லை.

10. (ப - ரை) **सुखार्हाः** - ஸுகத்திற்குத் தகுந்த, **मम** - என்னுடைய, **बान्धवाः** - பந்துக்களான ராமன் முதலானவர்கள், **त्वया** - உம்மால், **निरस्ताः** - துறத்தப்பட்டவர்களாய், **व्यपोह्य** - (நகரத்தை) விட்டு, **कृपणाः** - தீனர்களாய், **वने** - வனத்தில், **परिधावन्ति** - ஓடிக்கொண்டிருக்கிறார்கள், (**इति**) **यत्** - என்று யாதொன்று உண்டோ, **तत्** - அது, **अकरुणं कर्म** - கருணையில்லாத உம்முடைய கார்யம்.

11. (ப - ரை) **राघवः** - ஸ்ரீராமன், **पञ्चदशे वर्षे** - பதினைந்தாவது வருஷத்தில், **पुनः** - திரும்பவும். **एष्यति यदि** - வருவானேயானால், **राज्यं च** - ராஜ்யத்தையும், **कोशं च** - பொக்கிஷத்தையும், **जह्यात्** - தள்ளி விடுவன் (என்னென்றால்), **भरतेन** - பரதனால், **उपभुज्यते** - (அது) அனுபவிக்கப்படுகின்றது.

---

9. (பொ - ரை) ராமனைக் காணாமல் என்னுடைய நெஞ்சு அப்பொழுதே ஆயிரம் சில்லாக வெடித்துப்போக வேண்டியிருக்க அப்படி யில்லாமலிருப்பதால் இந்த நெஞ்சு மிகவும் த்ருடமான வஜ்ஜிரத்தினால் செய்யப்பட்டது, இது நிச்சயம் தான், ஸம்சயமேயில்லை.

10. (பொ - ரை) ஸுகானுபவத்திற்கு ஏற்றவர்களான ராமன் முதலான என்னுடைய பந்து ஜனங்கள், உம்மால் துறத்தப்பட்டு மிகவும் தீனர்களாய் வனத்தில் ஓடித்திரிந்து கொண்டிருப்பது, நீர் செய்த கருணையில்லாத கார்யம்.

11. (பொ - ரை) பரதன் இப்பொழுது ராஜ்யத்தையும, பொக்கிஷத்தையும், அனுபவித்துக் கொண்டிருந்து, பதினைந்தாவது வருஷ ஆரம்பத்தில் ராமன் திரும்பி வந்த பொழுது அவனிடம் இவ்விரண்டையும் கொடுத்து விட்டாலும், அவைகளை ராமன் விட்டு விடுவான்.

भोजयन्ति किल श्राद्धे केचित्स्वानेव बान्धवान् ।
ततः पश्चात्समीक्षन्ते कृतकार्या द्विजर्षभान् ॥ 12 ॥

तत्र ये गुणवन्तश्च विद्वांसश्च द्विजातयः ।
न पश्चात्तेऽभिमन्यन्ते सुधामपि सुरोपमाः ॥ 13 ॥

ब्राह्मणेष्वपि तृप्तेषु पश्चाद्भोक्तुं द्विजर्षभाः ।
नाभ्युपैतुमलं प्राज्ञाः शृङ्गच्छेदमिवर्षभाः ॥ 14 ॥

---

12. (ப - ரை) **केचित्** - சிலர், **स्वान्** - தங்களுடைய, **बान्धवान् एव** - பந்துக்களையே, **श्राद्धे** - ச்ரார்த்தத்தில், **भोजयन्ति किल** - போஜனம் செய்விக்கின்றார்கள், **ततः पश्चात्** - அதன் பிறகு, **कृतकार्याः** - ச்ரார்த்த கார்யத்தை முடித்தவர்களாய், **द्विजर्षभान्** - ப்ராம்மணோத்தமர்களை, **समीक्षन्ते** - (போஜனம் செய்விக்க) எதிர்பார்க்கிறார்கள்.

13. (ப - ரை) **तत्र** - அப்பொழுது, **ये** - யாதொரு, **गुणवन्तः च** - குணமுடையவர்களாயும், **विद्वांसः च** - வித்வான்களாயும், **सुरोपमाः** - தேவர்களுக்கு ஸமானருமான, **द्विजातयः** - ப்ராம்மணர்கள் இருக்கின்றார்களோ, **ते** - அவர்கள், **पश्चात्** - பிறகு, **सुधां अपि** - அம்ருதத்தையும், **न अभिमन्यन्ते** - ஒப்புக்கொள்ளுகிறதில்லை.

14. (ப - ரை) **तृप्तेषु** - த்ருப்தி அடைந்தவர்கள், **ब्राह्मणेषु अपि** - ப்ராம்மணர்களாயிருந்தும், **प्राज्ञाः** - பண்டிதர்களான, **द्विजर्षभाः** - ப்ராம்மணோத்தமர்கள்,

---

12. (பொ - ரை) பரதன் அனுபவித்தபடியால் பதினைந்தாவது வருஷத்தில் திரும்பி வந்த ஸ்ரீராமன், ராஜ்யத்தையும், பொக்கிஷத்தையும் கைக்கொள்ள மாட்டார் என்பதற்கு த்ருஷ்டாந்தம் சொல்லுகிறார் மேல் மூன்று சலோகங்களால்.

சில ப்ராம்மணர்கள், வித்தையினாலும், குணங்களாலும், வயதினாலும் சிறந்தவர்களான ப்ராம்மணர்களிருக்க, அவர்களை விட்டுவிட்டு தாங்கள் செய்யும் ச்ரார்த்தத்தில் கொடுக்கக் கூடிய விசேஷ த்ரவ்யம் தங்களுடைய பந்துக்களுக்குச் சேரவேண்டுமென்ற எண்ணத்தினால், தங்களுடைய பந்துக்களையே ச்ரார்த்தத்தில் நிமந்த்ரணம் செய்விக்கிறார்கள். பிறகு ச்ரார்த்தத்தை முடித்து விட்டு மற்ற உத்தம ப்ராம்மணர்களை இஷ்ட பங்க்தியில் போஜனம் செய்ய அழைக்கின்றார்கள்.

13. (பொ - ரை) அப்பொழுது, குணமுள்ளவர்களாய், வித்வான்களாய் தேவர்களுக்கு ஸமானர்களுமான அந்த ப்ராம்மணோத்தமர்கள் ச்ரார்த்தம் முடிந்த பிறகு இஷ்ட பங்க்தியில் அம்ருதத்திற்கு ஸமானமான அன்னங்களைப் பருமாறின போதிலும் அதை ஆதரிக்க மாட்டார்கள்.

14. (பொ - ரை) முதலில் ச்ரார்த்தம் புஜித்தவர்கள் ப்ராம்மணர்களாயிருந்தும் இஷ்ட பங்க்தியில் போஜனம் செய்ய அழைக்கப்பட்ட ப்ராஜ்ஞரான ப்ராம்

एवं कनीयसा भ्रात्रा भुक्तं राज्यं विशांपते ।
भ्राता ज्येष्ठो वरिष्ठश्च किमर्थं नावमंस्यते ॥ 15 ॥

न परेणाहृतं भक्ष्यं व्याघ्रः खादितुमिच्छति ।
एवमेव नरव्याघ्रः परलीढं न मन्यते ॥ 16 ॥

हविराज्यं पुरोडाशाः कुशा यूपाश्च खादिराः ।
नैतानि यातयामानि कुर्वन्ति पुनरध्वरे ॥ 17 ॥

**ऋषभाः**- காளை மாடுகள், **शृङ्गच्छेदं इव** - கொம்பை முறிப்பதை (ஸம்மதிக்காதது) போல், **पश्चात्** - பிற்பாடு, **भोक्तुं** - புஜிப்பதற்கு, **अभ्युपैतुं** - ஒப்புக்கொள்ள, **न अलं** - பொருக்கமாட்டார்கள்.

15. (ப - ரை) **हे विशांपते** - அரசனே! **एवं** - இதைப்போல், **कनीयसा** - இளையவனை, **भ्रात्रा** - ப்ராதாவினால், **भुक्तं** - அனுபவிக்கப்பட்ட, **राज्यं** - ராஜ்யத்தை, **ज्येष्ठः** - ஜேஷ்டனும், **वरिष्ठःच** - ச்ரேஷ்டனுமான, **भ्राता** - ப்ராதா, **किमर्थं** - ஏன், **न अवमंस्यते** - அவமதிக்க மாட்டான்.

16. (ப - ரை) **व्याघ्रः** - புலியானது, **परेण** - இதர ஜந்துவினால், **आहृतं** - கொண்டுவரப்பட்ட, **भक्ष्यं** - ஆஹாரத்தை, **खादितुं** - தின்பதற்கு, **न इच्छति** - ஆசைப்படுகிறதில்லை, **एवं एव** - இவ்வாறே தான், **नरव्याघ्रः** - புருடோத்தமன், **परलीढं** - பிறரால் அனுபவிக்கப்பட்டதை, **न मन्यते** - ஒப்புக்கொள்ளுகிறதில்லை.

17. (ப - ரை) **हविः** - ஹவிஸ், **आज्यं** - நெய், **पुरोडाशाः** - புரோடாசங்கள், **कुशाः** - குசங்கள், **खादिराः** - கருங்காலி மரத்தால் செய்யப்பட்ட, **यूपाः च** - யூபஸ்தம்பங்கள் என்ன, **यातयामानि** - முன் உபயோகப் பட்டிருந்த, **एतानि** - இவைகளை, **अध्वरे** - யாகத்தில், **पुनः** - மறுபடியும், **न कुर्वन्ति** - உபயோகப் படுத்துகிறதில்லை

மனுத்தமர்கள், காளை மாடுகள் கொம்பை முறிக்க ஸம்மதப் படாததுபோல், இஷ்ட பங்க்தியில் போஜனம் செய்ய ஒப்புக்கொள்ள மாட்டார்கள்.

15. (பொ - ரை) மஹாராஜரே! இவ்வாறு முன் சொன்ன ப்ராம்மணர்களைப் போல் கனிஷ்ட ப்ராதா அனுபவித்து வந்த ராஜ்யத்தை எல்லா குணங்களினாலும் உயர்ந்தவனான ஜேஷ்டப்ராதா எதற்காக திரஸ்கரியாமலிருப்பான்.

16. (பொ - ரை) செந்நாய் முதலான இதர ஜந்துக்கள் பக்ஷித்து மிகுந்திருந்த மாம்ஸத்தை புலி தின்பதற்கு விரும்பாதது போல், புருடோத்தமனான ராமனும் பிறர் அனுபவித்ததை அனுபவிக்க ஸம்மதிக்க மாட்டான்.

17. (பொ - ரை) ஒரு யாகத்தில் உபயோகிக்கப் பட்டிருந்த சரு முதலான ஹவிஸ், நெய், மாவினால் செய்யப்பட்ட புரோடாசங்கள், தர்பத்தின் பேதமான குசங்கள், கருங்காலி முதலான மரங்களால் செய்யப்பட்ட யூபஸ்தம்பங்கள் முதலானவைகளை, இன்னொரு யாகத்தில் மறுபடியும் உபயோகப்படுத்த மாட்டார்கள்.

तथा ह्यात्तमिदं राज्यं हृतसारां सुरामिव ।
नाभिमन्तुमलं रामो नष्टसोममिवाध्वरम् ॥ 18 ॥

[न चेमां धर्षणां रामः संगच्छेदत्यमर्षणः ।
दारयेन्मन्दरमपि स हि क्रुद्धः शितैः शरैः ॥ 1 ॥
त्वां तु नोत्सहते हन्तुं महात्मा पितृगौरवात् ॥ 1½ ॥
ससोमार्कग्रहगणं नभस्ताराविचित्रितम् ॥ 2 ॥
पातयेद्यो दिवं क्रुद्धः सत्वां न व्यतिवर्तते ।
[illegible] ॥ ३ ॥]

---

18. (ப - ரை) **तथा हि** - அவ்வாறாக, **आत्तं** - (பரதனால்) அனுபவிக்கப்பட்டும், **हृतसारां** - ஸாராம்ச மெடுக்கப்பட்ட, **सुरां इव** - கள்போல இருக்கிற, **इदं राज्यं** - இந்த ராஜ்யத்தை, **नष्टसोमं** - ஸோமபான மில்லாததான, **अध्वरं इव** - யாகத்தைப் போல், **रामः** - ஸ்ரீராமன், **अभिमन्तुं** - ஆசைப்பட, **न अलं** - மாட்டான்.

1. (ப - ரை) **अत्यमर्षणः** - மிகவும் ரோஷமுடையவரான, **रामः** - ஸ்ரீராமன் **इमां धर्षणां** - இந்த அவமானத்தை, **न संगच्छेत्** - ஸஹிக்கமாட்டான், **हि** - ஏனெனில், **सः** - அவன், **क्रुद्धः** - கோபங்கொண்டவனாய், **शितैः** - கூரான, **शरैः** - பாணங்களால், **मन्दरं अपि** - மந்தர பர்வதத்தையும், **दारयेत्** - பிளந்துவிடுவன்.

1½. .(ப - ரை) **किंतु** - ஆனால், **महात्मा** - மஹாத்மாவான அவன், **पितृ गौरवात्** - பிதாவென்னும் மதிப்பினால், **त्वां** - உம்மை, **हन्तुं** - கொல்ல, **न उत्सहते** - துணியாமலிருக்கிறான்.

2—3. (ப - ரை) **यः**- யாதொருவன், **क्रुद्धः** - கோபமுடையவனாய். **ससोम**

---

18. (பொ - ரை) அவ்வாறாகவே பரதனால் முன் அனுபவிக்கப் பட்டு ஸாராம்சத்தை யெடுத்த கள் போலிருக்கும் இந்த ராஜ்யத்தை ஒருவன் யாகம் செய்து ஸோமபானம் பண்ணிய பிறகு மறுபடி வேறொருவன் அந்த யாகத்தை ஆசைப்பட்டது போல் ஸ்ரீராமன் ஆசைப்பட மாட்டான்.

1. (பொ - ரை) ராமன் மிகவும் ரோஷமுள்ளவனாதலால் இந்த அவமானத்தைப் பொருக்கவே மாட்டான். அவன் கோபங்கொண்டு விட்டால் கூரான பாணங்களினால் மந்தர பர்வதத்தையுங் கூட பிளந்து விடுவன்.

1½. (பொ - ரை) ஆனாலும், மஹாத்மாவான அந்த ராமன், பிதாவென்னும் கௌரவத்தினால் உம்மைக் கொல்லாமலிருக்கிறான்.

2—3. (பொ - ரை) அந்த ராமன் கோபங் கொண்டால், சந்திரனோடும் ஸூர்யனோடும் மற்ற க்ரஹ கூட்டங்களோடும் கூடியதாய், நக்ஷத்திரங்களால் விசி

नैवंविधमसत्कारं राघवो मर्षयिष्यति ।
बलवानिव शार्दूलो वालधेरवमर्शनम् ॥ 19 ॥

नैतस्य सहिता लोका भयं कुर्युर्महामृधे ।
अधर्मं त्विह धर्मात्मा लोकं धर्मेण योजयेत् ॥ 20 ॥

**ग्रहगणं** - சந்திரன் ஸூர்யன், மற்ற க்ரஹங்களின் கூட்டம் இவைகளோடு கூடிய
தாய், **ताराविचित्रितम्** - நக்ஷத்திரங்களால் விசித்திரமான, **नभः** - ஆகாயத்தையும்,
**दिवं** - ஸ்வர்க்க லோகத்தையும், **पातयेत्** - கீழே விழும்படி செய்வானே, **शैलशता-
चितां** - அநேக மலைகளால் நிறைந்த, **महीं** - பூமியை, **प्रक्षोभयेत्** - கலக்கிவிடுவானே,
**दारयेत् वा** - தடுத்து விடுவானே (அழித்து விடுவானே); **सः** - அவன், **त्वां** - உம்மை,
**व्यतिवर्तते** - மீறி நடக்கிறதில்லை.

19. (ப - ரை) **बलवान्** - மிக்க பலமுள்ள, **शार्दूलः** - புலி, **वालधेः** - வாலி
லுடைய, **अवमर्शनम्** - மிதிச்சலை, **इव** - (பொருக்கமாட்டாதது) போல், **राघवः** -
ராமன், **एवं विधं** - இப்படிப்பட்ட, **असत्कारं** - அனாதரத்தை (அவமானத்தை), **न
मर्षयिष्यति** - பொருக்கமாட்டான்.

20. (ப - ரை) **महामृधे** - பெரிய யுத்தத்தில், **लोकाः** - லோகங்கள், **सहिताः
(अपि)** - ஒன்றாய் சேர்ந்தாலும், **एतस्य** - இவனுக்கு, **भयं** - பயத்தை, **न कुर्युः** -
செய்யமாட்டாது; **धर्मात्मा** - தார்மிஷ்டரான இவன், **इहतु** - இவ்வுலகில், **अधर्मे** -
அதர்மத்திலிருக்கும், **लोकं** - ஜனத்தை, **धर्मेण** - தர்மத்துடன், **योजयेत्** - சேர்த்து
விடுவன்.

ரங்களாயுமிருக்கிற ஆகாயத்தை கீழே விழ்த்தினாலும் வீழ்த்திவிடுவன், அநேகம்
மலைகளோடு கூடின இந்த பூமியை கலக்கினாலும் கலக்குவான், ஒன்றுமே யில்லாமல்
அழித்தாலும் அழிப்பான். அவ்வளவு ஸாமர்த்ய முடையவன். அப்படி யிருந்தும்
உம்மை மீறமாட்டான்.

19. (பொ - ரை) பலமுள்ள புலியின் வாலை மிதித்தால அது எப்படிப்
பொருக்காதோ அவ்வாறு இவ்விதமான அவமானத்தை ராமன் பொருக்க மாட்டான்.

20. (பொ - ரை) பதினான்கு உலகத்திலுமிருக்கிற தேவாஸுர முதலான
வர்கள் ஒன்று சேர்ந்து வந்தாலும், யுத்தத்தில் இந்த ராமனுக்கு பயத்தை விளைக்க
மாட்டார்கள். ஆனால் அதர்ம மார்க்கத்திலிருக்கும் ஜனத்தை தர்ம மார்க்கத்தில் ப்ர
வர்த்திக்கும் வழியில் செய்வான்.

नन्वसौ काञ्चनैर्बाणैर्महावीर्यो महाभुजः ।
युगान्त इव भूतानि सागरानपि निर्दहेत् ॥ 21 ॥

स तादृशः सिंहबलो वृषभाक्षो नरर्षभः ।
स्वयमेव हतः पित्रा जलजेनात्मजो यथा ॥ 22 ॥

द्विजातिचरितो धर्मः शास्त्रदृष्टः सनातनः ।
यदि ते धर्मनिरते त्वया पुत्रे विवासिते ॥ 23 ॥

---

21. (ப - ரை) **महावीर्यः** - மஹாவீர்ய முடையவனும், **महाभुजः** - பெரிய தோள்களையுடையவனுமான, **असौ** - இந்த ராமன், **भूतानि** - பஞ்சபூதங்களையும், **युगान्तः इव** - ப்ரளயகாலமானது தஹிப்பது போல, **सागरान् अपि** - ஸமுத்ரங்களையும், **काञ्चनैः** - ஸ்வர்ணமயங்களான, **बाणैः** - பாணங்களால், **निर्दहेत् ननु** - கொளுத்தி விடுவானல்லவா ?

22. (ப - ரை) **सिंहबलः** - ஸிம்மம் போன்ற பலமுடையவனும், **वृषभाक्षः** - காளைபோல் கண்களையுடையவனும், **तादृशः** - அப்படிப்பட்ட, **सः नरर्षभः** - அந்த புருஷச்ரேஷ்டன், **आत्मजः** - குட்டி மீனானது, **जलजेन यथा** - பெரிய மீனால் (தின்னப்பட்டது) போல, **स्वयं एव** - தானாகவே, **पित्रा** - பிதாவான உம்மால், **हतः** - கொல்லப்பட்டான் (கெடுக்கப்பட்டான்).

23. (ப - ரை) **धर्मनिरते** - தர்மத்தில் ஊக்கமுள்ள, **पुत्रे** - பிள்ளையானவன், **त्वया** - உம்மால், **विवासिते (सति)** - காட்டிற்குத் துறத்தப்பட்டவளவில், **शास्त्रदृष्टः** - சாஸ்த்ரத்தில் காணப்பட்டு, **द्विजातिचरितः** - ப்ராம்மணர்களால் அனுஷ்டிக்கப் பட்ட, **सनातनः** - அனாதியான, **धर्मः** - தர்மமானது, **ते** - உமக்கு, **यदि** - இருக்கிறதா ?

21. (பொ - ரை) மஹா வீர்யனும், பெரும் தோள்களையுடையவனுமான இந்த ராமன் ப்ரளயகாலமானது பஞ்ச பூதங்களையும் தஹித்து விடுவதுபோல் ஸ்வர்ணமயங்களான தன் பாணங்களால், ஏழு கடல்களையும் தஹித்து விடுவன்.

22. (பொ - ரை) ஸிம்மம்போல் பலமுள்ளவனும், காளைபோல் கண்ணோக்க முடையவனும், அப்படிப்பட்ட அந்த புருடோத்தமனை ராமன், சிறிய மீன், பெரிய மீனால் தின்னப்பட்டது போல், பிதாவான உம்மால் கெடுக்கப்பட்டான்.

23. (பொ - ரை) தர்மத்தில் ஊக்கமுள்ள புத்திரனை நீர் காட்டிற்குத் துறத்தின பிறகு சாஸ்த்ரத்தினால் அறியப்பட்டு, ப்ராம்மணர், க்ஷத்ரியர், வைசியர், என்னும் த்ரைவர்ணிகர்களாலும் அனுஷ்டிக்கப் பட்டு வருகிற அனாதியான தர்மமே உமக்குக் கிடையாது.